*Contents*

## கிட்கிந்தா காண்டம்

*கிட்கிந்தையில்நடைபெற்ற கதை நிகழ்ச்சிகளைக் கூறும் பகுதியாதலின் கிட்கிந்தா காண்டம் எனப்பட்டது. முன் ஆரணிய காண்டத்தில் கவந்தனும் சவரியும் கூறியவண்ணம் இராமலக்குவர், சுக்கிரீவன் தங்கியிருந்த உருசியமுகமலையை அடைந்ததுமுதல் சுக்கிரீவன் ஆணையால் வானரவீரர்கள் பல இடங்களில் அலைந்து இறுதியில் மகேந்திரமலையை அடைவது வரையிலுள்ள வரலாற்றை இக்காண்டத்தில் காணலாம்.*

*இராமலக்குவர்மதங்கமுனிவரின் தவப்பள்ளியைவிட்டு நீங்கி, சுக்கிரீவனைக் காணச்செல்லும் வழியில், பம்பைக்கரையை அடைந்தனர். அங்குக் கண்ட காட்சிகளால் சீதையின் நினைவு மிகுதியாக இராமன் கலங்கி, ஒருவாறு தேறி இளவலுடன் உருசியமுக மலைப்பகுதியை அடைந்தான். அவர்கள் வருகையைக் கண்டு, வாலியால் அனுப்பப்பெற்ற பகைவர்களோ என அஞ்சி, சுக்கிரீவன் ஓடி ஒளிய, அவன் ஏவலால் அனுமன் உண்மைநிலை அறிய இராமலக்குவரை அணுகினான். உள்ளநிலையை உணர்ந்ததும், சுக்கிரீவனிடம் இராமலக்குவரின் பெருமைகளைக்கூறி, அவனை இராமலக்குவரிடம் அழைத்து வந்தான். வாலி இழைத்த தீமைகளை அறிந்த இராமன் சுக்கிரீவனுக்கு அபயம் அளித்து, வாலியை வென்று நாட்டையும் தருவதாக உறுதியளித்தான்; அம்பு ஒன்றால் ஏழு மராமரங்களையும் துளைத்துத் தன் ஆற்றலையும் புலப்படுத்தினான்.*

*இராமன்துணைப்பெற்ற ஊக்கத்தால் சுக்கிரீவன் வாலியைப் போருக்கு அழைக்க, இருவர்க்கிடையே கடும்போர் நடைபெற்றது. அப்போரில் இராமன் எய்த அம்பால் வாலி உயிரிழக்க, இராமன் சொற்படி இலக்குவன் சுக்கிரீவனுக்கு முடிசூட்டினான்.*

*கார்காலம்முடிந்ததும் படையுடன் தம்மைக் காணுமாறு கூறி, இராமலக்குவர் வேறு மலைப்பகுதிக்குச் சென்றனர் கார்காலக்காட்சிகளைக் கண்ட இராமன் சீதையை நினைந்து வருந்த இலக்குவன் தேறுதல் கூறுகிறான்.*

*கார்காலம்முடிந்தும் சுக்கிரீவன் படையுடன் வராததால் இலக்குவன் கிட்கிந்தை சென்று வினவ, சுக்கிரீவன் தன் பிழைபொறுக்குமாறு வேண்டினான். அவன் படைகள் இராமன் முன்னர் அணிவகுத்து நின்றன. சுக்கிரீவன் கட்டளைப்படி வானரவீரர்கள் சீதையைத் தேட பலதிசைகளில் பிரிந்து சென்றனர். இராமன் அனுமனுக்குச் சீதையின் அடையாளங்களைக் கூறி, மோதிரம் அளித்து விடைகொடுக்க அனுமன் முதலியோர் தென்திசை நோக்கிச் சென்றனர். வானரர்கள் பிலத்தில் நுழைந்துவிட, அனுமன் பேருருக்கொண்டு பிலத்தைப் பிளக்க அனைவரும் உயிர்தப்பினர்.*

*சம்பாதிஎன்ற கழுகு அரசனால் சீதை இலங்கையில் சிறைவைக்கப்பெற்றிருக்கும் செய்தியை அறிந்தனர் வானரர்கள். கடலைக் கடக்கத் தக்க வன் அனுமனே எனக்கூறிச் சாம்பவான் அவன் ஆற்றலைப் புகழ்ந்தான். அனுமனும் இலங்கை செல்ல உடன்பட்டு, மகேந்திரமலையின் உச்சிக்குச் சென்று கடல் தாவப் பேருருவம் எடுத்து நின்றான். ஆரணியகாண்டத்தின் இறுதியில் இராமன் - சீதை பிரிவு தொடங்குகிறது; யுத்த காண்ட இறுதியிலேதான் இவருடைய சந்திப்பு நேர்கிறது. கிட்கிந்தா காண்டத்தில் பிராட்டியுடனில்லாத இராமபிரான் நிலையும்,*

சுந்தர காண்டத்தில் இராமபிரானைப் பிரிந்த பிராட்டியின் நிலையும் விளக்கமாகக் கவிஞரால் சித்திரிக்கப்படுகின்றன.

## கடவுள் வாழ்த்து

கலிவிருத்தம்

***3708. மூன்று உரு எனக் குணம்***
***மும்மை ஆம் முதல்,***
***தோன்று உரு எவையும்,***
***அம் முதலைச் சொல்லுதற்கு***
***ஏன்று உரு அமைந்தவும்,***
***இடையில் நின்றவும்,***
***சான்றவர் உணர்வினுக்கு***
***உணர்வும், ஆயினான்.***

***மூன்று உரு என -*** *மூன்று உருவங்கள் உடைமைபோல;* ***மும்மைக்குணம்ஆம் -*** *மூன்று குணங்களை உடைய;* ***முதல் -*** *முழுமுதற் கடவுள்;* ***தோன்று உரு எவையும் -*** *தோன்றிய தத்துவங்கள் அனைத்துமாய்;* ***அம்முதலைச் சொல்லுதற்கு -*** *அந்த முதற்கடவுளை (பெயரும் உருவமும் கொடுத்து)ச் சொல்லும்படி;* ***ஏன்று உரு அமைந்தவும் -*** *பொருந்தி, வடிவமைந்த உலகங்களாய்;* ***இடையில் நின்றவும் -*** *அவ்வுலகிடைப் புகுந்துநின்ற உயிர்களாய் (ஆனவன்);* ***சான்றவர் -*** *சான்றோர் (ஞானிகளின்);* ***உணர்வினுக்கு - : உணர்வும் ஆயினான் -*** *உணரப்படும் பொருளும் ஆனவன்.*

*அனைத்துமாய் விளங்கும் இறை இயல்பு ஈண்டு உணர்த்தப்பட்டது. மூன்று உரு என்பது பிரமன், திருமால், சிவபிரான் என்னும் தெய்வங்களைக் குறிக்கும். மும்மைக்குணம் - மூன்று குணங்கள் - சாத்துவிகம், இராசதம், தாமதம் என்பன. மூன்று உரு அமைந்து மும்மைக் குணங்களுடன் விளங்கும் இறைநிலையை "மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ?" (3682) என்ற கவந்தன் கூற்றாலும் "மூவகை உலகுமாய், குணங்கள் மூன்றுமாய்" (6251) "மூன்று அவன் குணங்கள், செய்கை மூன்று, அவன் உருவம் மூன்று" (6310) என்ற பிரகலாதன் உரைகளாலும் கம்பர் முன்னரும் பின்னரும் கூறுதல் காண்க.*

*'தானும் சிவனும் பிரமனுமாகிப் பணைத்த தனி முதலை' என்பர் நம்மாழ்வார். (திருவாய்மொழி 8-8-4). யாவையும் எவருமாய் விளங்கும் இறைவன் இயல்பை "அனைத்தும் நீ அனைத்தின் உட்பொருளும் நீ" எனப் பரிபாடலும் (3-68) 'உடல் மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துள்ளான் (திருவாய்மொழி 1-1-7) என நம்மாழ்வார் கூறுவதும் ஒப்பு நோக்கத்தக்கன.*

*'முப்பரம் பொருளுக்கு முதல்வன்' (314) என்றும், 'மூவருந்திருந்திடத் திருத்தும் அத்திறலோன்' (1349) என்றும் இராமனைப் போற்றும் கம்பர். இராமனே மும்மூர்த்தியும் ஒன்றாய் அமைந்த பரம்பொருள் என்றும் உணர்த்துவார். 'சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை, ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்" (5884) என்பது அனுமன் கூற்றாகும்.*

*இறைவன் தன்னை உணரவல்ல அடியார்க்கு உணரப்படும் பொருளாதலை "என் ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற" (திருவாய்மொழி- 8.8.4) என்பதாலும் அறியலாம். "சித்து என அருமறைச் சிரத்தின் தேறிய, தத்துவம் அவன், அது தம்மைத் தாம் உணர்வித்தகர் அறிகுவர்" (6249) என்னும் பிரகலாதன் கூற்று காண்க.*

*திரிமூர்த்திகள் பரம்பொருளின் அம்சம் என்பதும், தத்துவங்களும், உலகங்களும், உயிர்களும் பரம்பொருளின் உண்மையைத் தெரிவிப்பனவே என்பதும் பாடற்பொருளாகும்.*

*'உரு' என்னும் சொல் பாடலில் பல இடங்களில் வருவதால் சொற்பின் வருநிலை அணியாகும்.*

## பம்பை வாவிப்படலம்.

இராமபிரானும் இலக்குவனும் பம்பை என்னும் பொய்கையை அடைந்து, அங்குள்ள காட்சிகளைக்காணும் செய்திகளைக் கூறுவதால் இப்படலம் 'பம்பை வாவிப்படலம்' எனப்பட்டது. பம்பை என்பது மானிடர் ஆக்காத ஒரு பெரிய பொய்கை. அது கிட்கிந்தை நகரத்திற்கு அருகில் இரலை என்னும் குன்றின்கீழ் அமைந்துள்ளது.

இனிய நீர்நிலையாய்ப் பல்வேறு சிறப்புகளைக் கொண்டதாய்ப் பம்பை விளங்கிற்று. அங்குள்ள மலர்கள், பறவைகள், மீன்கள், களிறுகள் முதலிய இயற்கைக் காட்சிகளைக் கண்ட இராமபிரான் சீதையின் நினைவால் வருந்தினான். பின்னர் இலக்குவன் வேண்டுகோளுக்கு இணங்கிப் பம்பையில் நீராடி மாலை வழிபாடுகளைச் செய்தான். அன்றிரவு இருவரும் அங்கே தங்கி, அடுத்த நாள் காலை சீதையைத் தேடிச் சென்றனர்.

பம்பைப் பொய்கையின் தோற்றம்

கலிவிருத்தம்

***3709 . தேன் படி மலரது;செங்***
***கண், வெங்கைம்மா -***
***தான் படிகின்றது;***
***தெளிவு சான்றது;***
***மீன்படி மேகமும்***
***படிந்து, வீங்கு நீர்,***
***வான் படிந்து, உலகிடைக்***
***கிடந்த மாண்பது;***

**தேன்படி மலரது -** (அப்பொய்கை) தேன் பொருந்திய மலர்களை உடையது; **செங்கண் வெங்கைம்மா -** சிவந்த கண்களையும் வலிமை பொருந்திய கையினையும் உடைய யானைகள்; **தான் படிகின்றது -** தன்னிடத்தே மூழ்கித் திளைக்கப் பெற்றது; **தெளிவு சான்றது -** தெளிவு மிக்கது; **மீன்படி -** விண்மீன்கள் பொருந்திய; **மேகமும் படிந்து -** வானத்து மேகங்களும் தன்னிடம் தங்கப் பெற்றதுமான; **வீங்கு நீர் வானம் -** மிகுதியான நீரையுடைய ஆகாயமே; **உலகிடைப் படிந்து கிடந்த -** இவ்வுலகில் வந்து கிடக்கின்றது என்று சொல்லக்கூடிய; **மாண்பது -** சிறப்பினை உடையது.

ஆரணிய காண்டத்தின் இறுதியில் 'பாம்பையாம் பொய்கை புக்கார்' என்று கூறியுள்ளதால், இதுமுதல் பதினைந்து பாடல்களுக்கு 'அப்பொய்கை' எனத் தோன்றா எழுவாய் வருவித்து முடிக்க. நீர்நிறைந்த பொய்கைக்கு வீங்குநீர் வானமும், பொய்கையில் மலர்ந்துள்ள மலர்களுக்கு வானில் உள்ள மீன்களும், அப்பொய்கையில் மூழ்கித் திளைக்கும் யானைகளுக்கு மேகங்களும் உவமை. 'மீன் படி மேகமும் படிந்து' என்னுந்தொடர் சிலேடைப் பொருளில் வானிற்கும் பொய்கைக்கும் பொருந்துவதையும் காணலாம். விண்மீன்களையும் மேகத்தையும் கொண்டது வானம் எனில் மீன்களையும், கடலெனக் கருதி நீர்முகக்க வந்து மேகம்படியும் நீரையும்

*பெற்றது பொய்கையாகும். யானை மதம் கொண்ட நிலையில் அதன் கண்கள் சிவப்புறுதலும், கை வெதும்புதலும் இயல்பாதலின் 'செங்கண் வெங்கைம்மா என்றார். யானைகள் மூழ்கித் திளைத்த நிலையிலும் கலங்காத பொய்கையின் நிலையைத் 'தெளிவு சான்றது' என உரைத்தார்; இதனால் பொய்கையின் ஆழமுடைமைகூறப்பட்டது. 1*

***3710. ஈர்ந்த நுண் பளிங்கு எனத்***
***தெளிந்த ஈர்ம் புனர்***
***பேர்ந்து, ஒளிர் நவ மணி***
***படர்ந்த பித்திகை***
***சேர்ந்துழிச் சேர்ந்துழி***
***நிறத்தைச் சேர்தலால்,***
***ஓர்ந்து உணர்வு இல்லவர்***
***உள்ளம் ஒப்பது;***

***ஈர்ந்த நுண்பளிங்கென -*** *அறுத்துச் செம்மை செய்யப் பெற்ற நுண்ணிய பளிங்கு போல;* ***தெளிந்த ஈர்ம்புனல் -*** *தெளிவாக உள்ள (அப்பொய்கையில்) குளிர்ந்த நீர்;* ***பேர்ந்து, ஒளிர் -*** *இடை விட்டு ஒளி வீசுகின்ற;* ***நவமணி படர்ந்த*** *- நவமணிகளும் வைத்து இழைக்கப்*

*பட்டுள்ள;* ***பித்திகை -*** *படித்துறைச் சுவர்களில்;* ***சேர்ந்துழிச் சேர்ந்துழி -*** *படியுந்தொறும் படியுந்தொறும்;* ***நிறத்தைச் சேர்தலால்-*** *அந்தந்த மணிகளின் நிறத்தைப் பெறுவதால்;* ***ஓர்ந்து உணர்வு இல்லவர் -*** *(அப்பொய்கை) பல நூல்களை ஆராய்ந்தும் உண்மைப் பொருளை உணரும் அறிவில்லாதவரின்;* ***உள்ளம் ஒப்பது -*** *மனம் ஒத்து விளங்கியது.*

*பொய்கையின் நீர் தெளிவுமிக்கது என்பதைக் கூற ஈர்ந்த நுண்பளிங்கை உவமையாகக் கூறினார். பளிங்குபோலத் தனக்கென ஒரு நிறமில்லாமல் தெளிந்த பொய்கையின்நீர், தான் சார்ந்த மணிகளின் நிறம் பெற்றமைக்கு, எவர் கூறும் பொருளையும் உண்மைப் பொருளென ஏற்கும் மெய்யறிவில்லார் உள்ளம் உவமை. தெளிந்த புனல் சார்ந்த மணிகளின் நிறத்தைப் பெறுவதாகக் கூறுவதால் 'பிறிதின் குணம் பெறலணி'யுமாம்.*

*பளிங்கு, தன்னை அடுத்த பொருளின் நிறம்பெறும் என்பதை 'அடுத்தது காட்டும் பளிங்கு' என்னும் திருக்குறளாலும் (706) அறியலாம். "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு." என்னும் குறள் (423) உண்மை அறிவின் இலக்கணம் கூறுவதைக் காண்க. ஓர்ந்தும் - உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. இப்பாடல் ஆய்ந்து அறியும் அறிவில்லார் இயல்பைப் பொய்கையுடன் இயைத்துக்கூறுவது. 2*

***3711. குவால் மணித் தடம்தொறும்***
***பவளக் கோல் இவர்***
***கவான் அரசுஅன்னமும்,***
***பெடையும் காண்டலின்,***

***தவா நெடு வானகம்***
  ***தயங்கு மீனொடும்,***
***உவா மதி, உலப்பு இல***
  ***உதித்தது ஒப்பது;***

***குவால் மணித் தடம்தொறும்-*** *குவியலாக மணிகளைப் பெற்றிருக்கும் பொய்கையின் இடமெல்லாம்;* ***பவளக்கோல் இவர் கவான் -*** *பவளத்தாலான கோல் போன்ற சிவந்து நீண்ட கால்களையுடைய;* ***அரசு அன்னமும் -*** *அரச அன்னங்களும்;* ***பெடை அன்னமும்-*** *பெண் அன்னங்களும்;* ***காண்டலின் -*** *(சேர்ந்து) காணப்படுவதால்;* ***தவா நெடு வானகம் -*** *அழியாத பெரிய ஆகாயத்திடை;* ***தயங்கு மீனொடு -*** *விளங்குகின்ற விண்மீன்களோடு;* ***உவாமதி உலப்பு இல -*** *அளவற்ற நிறைமதிகள்;* ***உதித்தது ஒப்பது -*** *தோன்றியதைப் போல (அப்பொய்கை) விளங்கியது.*

*அன்னப்பறவைகளில் சிறந்தது அரச அன்னம். காற்று, நெருப்பு, நீர், நிலம் என்னும் நான்கு பூதங்களுக்கு முன்னர்த் தோன்றி. அவை அழியுமளவும் தான் அழியாமல் இருத்தலால் வானிற்குத் 'தவா' என்னும் அடைமொழி தரப்பட்டது. 'உவாமதி உலப்புஇல' என்பதால் இல்பொருள் உவமை அணி.*

*பெடைகளால் சூழப்பட்டு விளங்கும் அரச அன்னம்; அசுவனி முதலிய விண்மீன்கள் சூழத்தோன்றும் முழுநிலவை ஒத்து விளங்கிற்று. அன்னத்திற்கு வெண்மதியும், பெடை அன்னங்களுக்கு அசுவனி முதலிய விண்மீன்களும் பொய்கைக்கு வானமும் உவமை. அசுவனி முதலிய இருபத்தேழு நட்சத்திரங்களும் சந்திரனுக்கு மனைவியர் என்பது புராணக் கொள்கை. 3*

***3712. ஓத நீர் உலகமும்,***
  ***உயிர்கள் யாவையும்,***
***வேதபாரகரையும், விதிக்க***
  ***வேட்ட நாள்,***
***சீதம் வீங்கு உவரியைச்***
  ***செகுக்குமாறு ஒரு***
***காதி காதலன் தரு***
  ***கடலின் அன்னது;***

***ஒரு*** *- ஒப்பற்ற;* ***காதி காதலன்-*** *காதி என்னும் அரசனின் மகனாகிய விசுவாமித்திரர்;* ***ஓதநீர் உலகமும் -*** *குளிர்ந்த கடலால் சூழப் பட்ட உலகத்தையும்;* ***உயிர்கள் யாவையும் -*** *அவ்வுலகில் வாழும் உயிர்களையும்;* ***வேத பாரகரையும் -*** *வேதங்களைக் கரைகண்டவர்களான முனிவர்களையும்;* ***விதிக்க வேட்ட நாள் -*** *(திரிசங்கு அரசனுக்காக) படைக்க விரும்பிய காலத்தில்;* ***சீதம் வீங்கு உவரியை -*** *(நான்முகன் படைத்த) குளிர்ச்சி மிக்க உப்புக்கடலை;* ***செருக்குமாறு -*** *வெல்லுமாறு;* ***தரு கடலின் அன்னது -*** *படைத்த நன்னீர்க்கடலை ஒத்திருக்கும்.*

*பொய்கை இனிய நீரைப் பெற்றிருத்தலால் உப்புக்கடலுக்கு மாறாகப் பூமியினிடைப் படைத்த நன்னீர்க்கடலை ஒத்தது எனப்பட்டது.*

*காதி காதலன் - காதியின் அன்பிற்கு உரியவன்; விசுவாமித்திரர். வேதபாரகர் - வேதங்களை ஐயந்திரிபறக் கற்றுப் பிறர்க்கு ஓதுவிக்கவும் வல்லவர். முன்னர் 'உவரி' என்றமையால் பின்னர் வரும் கடல் 'நன்னீர்க் கடல்' என்னும் பொருளில்வந்தது.*
*4*

***3713. 'எல் படர் நாகர்தம்***
***இருக்கை ஈது' எனக் -***
***கிற்பது ஓர் காட்சியது***
***எனினும், கீழ் உற,***
***கற்பகம் அனைய அக்***
***கவிஞர் நாட்டிய***
***சொற் பொருள் ஆம் எனத்***
***தோன்றல் சான்றது;***

***எல்படர் நாகர்தம் இருக்கை -*** *(அப்பொய்கை) ஒளி படர்ந்த நாகர்களின் இருப்பிடம்;* ***ஈது என -*** *இதுதான் என்று;* ***கிற்பது -*** *சுட்டிக்காட்டும்;* ***ஓர் காட்சியது எனினும் -*** *ஒரு தோற்றத்தை உடையதாயினும் (ஆழமுடையதாயினும்);* ***கற்பகம் அனைய -*** *கற்பகத்தரு போன்ற;* ***அக் கவிஞர் -*** *அந்தச் சிறந்த கவிஞர்கள்;* ***நாட்டிய சொற் பொருளாம் என -*** *நிலை நிறுத்திய சொற்களின் பொருள் போல;* ***கீழ்உற-*** *கீழ்உலகம் வரையிலும்;* ***தோன்றல் சான்றது*** *- காணும் தெளிவுடையது;*

*பொய்கை நாகர் உலகம் தெரிகின்ற அளவு ஆழம் உடையதென்றார். கவிஞர்கள் கூறும் சொற்பொருள்போலத் தெளிவும் ஆழமும் பெற்றிருந்தது. (வடிவிலே தெளிவு; கருத்திலே ஆழம்).*

*கற்பகத்தரு வேண்டுவார்க்கு வேண்டியன அளித்தல் போல உயர்ந்த கவிஞர்களும் பயில்வார் விரும்பத்தகு நலமிகு கருத்துக்களைக் கொடுக்க வல்லவர்களாதலின் 'கற்பகம் அனையர்' எனப்பட்டனர். 'அக்கவிஞர்' என்பதில் அகரச் சுட்டு, புலவர்களின் புகழை உணர்த்தும். கவிஞர்கள் இயற்றிய நூல்கள் ஆழ்ந்த பொருள் கொண்டதாயினும் பயில்வார்க்குத் தெளிவாக விளங்கவைத்தல் போலப் பொய்கை ஆழமுடையதாயினும் தெளிந்தஇயல்புடையதாயும் விளங்குகிறது; உவமை அணி. 'சான்றோர் கவியெனக்கிடந்த கோதாவரி' என்று நதிக்குச் சான்றோர் கவிதையை உவமைகூறியிருத்தலை ஆரணிய காண்டத்தும் காணலாம். (2732)     5*

***3714. களம் நவில் அன்னமே முதல,***
***கண் அகன்***
***தள மலர்ப் புள் ஒலி***
***தழங்க, இன்னது ஓர்***
***கிளவி என்று அறிவு***
***அருங் கிளர்ச்சித்து; ஆதலின்,***
***வள நகர்க் கூலமே***
***போலும் மாண்பது.***

***கண் அகன் -*** *இடமகன்ற;* ***தளமலர் -*** *இதழ்களையுடைய தாமரை மலர்களில் இருக்கின்ற;* ***களம் நவில் -*** *இனிதாகக் கூவுகின்ற;* ***அன்னமே முதல -*** *அன்னங்கள்*

*முதலான;* ***புள்ளொலி -*** *பறவைகளின் ஒலி;* ***தழங்க-*** *மிகுதியாக ஒலிக்க;* ***இன்னது ஓர் கிளவி என்று -*** *இன்ன பறவையின் ஒலி இஃது என்று;* ***அறிவு அரும் கிளர்ச்சித்து -*** *அறிய முடியாத எழுச்சியினை உடையது;* ***ஆதலின் -*** *அதனால்;* ***வளநகர்க் கூலமே போலும் -*** *(அப்பொய்கை) செல்வம் மிக்க பெரிய நகரங்களில் காணப்படும் கடைவீதியை ஒத்திருக்கும்;* ***மாண்பது -*** *சிறப்பினை உடையது.*

*பொய்கைக்கு வளநகர்க்கூலமும், பொய்கையில் எழுந்த பறவைகளின் ஒலிக்கு நகரக்கடைத்தெருக்களில் கொள்வாரும் கொடுப்பாருமாய் எழுப்பும் ஒருங்கெழுந்த பேச்சொலியும் உவமைகளாம்; உவமை அணி.*

*களம்; இன்னோசை. 'களங்கொள் திருநேரிசை' (திருநாவுக்கரசர் 337) என்பது பெரியபுராணம். சிறப்புக்கருதி 'மலர்' என்பது தாமரையைக் குறித்தது. ஏகாரம் இரண்டும் இசைநிறை. "பல்வேறு புள்ளின் இசை எழுந்தற்றே, அல்லங்காடி அழிதரு கம்பலை" (மதுரைக்காஞ்சி. 543 - 544), 'பலவும் எண்ணில குழீ இச், சிரம் சிறிதசைத்தும், சிறகையடித்தும் அந்தியங்காடியின் சந்தம் காட்டி' (மனோன்-2-1-122-124) என்ற அடிகள் ஒப்புநோக்கத்தக்கன. 6*

***3715. அரி மலர்ப் பங்கயத்து***
***அன்னம், எங்கணும்,***
***'புரிகுழல் புக்க இடம்***
***புகல்கிலாத யாம்,***
***திருமுகம் நோக்கலாம்; இறந்து***
***தீர்தும்' என்று,***
***எரியினில் புகுவன எனத்***
***தோன்றும் ஈட்டது;***

***எங்கணும் -*** *(அப்பொய்கை) எல்லாப் பக்கத்திலும்;* ***அரிமலர்ப் பங்கயத்து அன்னம் -*** *செந்தாமரை மலர்களில் உள்ள அன்னங்கள்;* ***புரிகுழல் புக்க இடம் -*** *'சுருண்ட கூந்தலையுடைய சீதை சென்ற இடத்தை;* ***புகல்கிலாத யாம் -*** *(அறிந்து) கூற இயலாத நாங்கள்;* ***திரு முகம் நோக்கலம்-*** *இராமபிரானின் அழகிய திருமுகத்தைப் பாரோம்;* ***இறந்து தீர்தும் என்று -*** *இறந்து ஒழிவோம்' என்று;* ***எரியினில் புகுவன என -*** *நெருப்பில் புகுவனபோல;* ***தோன்றும் ஈட்டது -*** *காணப்படும் தன்மை உடையது;*

*தமக்கும் சீதைக்கும் தங்குமிடம் தாமரைமலராக விளங்கவும் தம்மால் சீதையிருக்குமிடத்தைக் கண்டறிந்து உரையாமையாகிய குற்றம் தம்மீது இருப்பதாகக் கருதி அன்னங்கள் நெருப்பில் புகுவன போலக் காணப்பட்டன. அன்னங்கள் மீது கவிஞர்தம் கருத்தையேற்றிக் கூறுதலின் இது தற்குறிப்பேற்ற அணியாம். நெருப்பை உவமை கூறியதனால் அரிமலர் எனப்பட்டது. அரி - செம்மை. அலர்ந்த தாமரைக்கு எரியும் நெருப்பு உவமை. "சேறார் சுனைத்தாமரை செந்நீ மலரும்" (திருவாய்மொழி-6-10.2), 'புண்டரிகம் தீ எரிவது போல விரிய' (நளவெண்பா-1-126) என்னும் அடிகள் ஒப்பு நோக்கத்தக்கன. பங்கயம் - பங்கஜம்; சேற்றில் முளைப்பது; புரிகுழல் - அன்மொழித்தொகை 7*

***3716. காசு அடை விளங்கிய***
***காட்சித்து ஆயினும்,***
***மாசு அடை பேதைமை***
***இடை மயக்கலால்,***
***'ஆசு அடை நல் உணர்வு***
***அனையது ஆம்' என,***
***பாசடை வயின்தொறும்***
***பரந்த பண்பது;***

***காசு அடை விளங்கிய -*** *(அப்பொய்கை) அடியில் கிடக்கும் மணிகளைக் காட்டவல்ல;* ***காட்சித்து ஆயினும் -*** *தெளிந்த தோற்றத்தை உடையதாயினும்;* ***மாசு அடை பேதைமை-*** *குற்றம் பொருந்திய அஞ்ஞானம்;* ***இடை மயக்கலால் -*** *இடையே தோன்றி மயக்குவதால்;* ***ஆசு அடை நல் உணர்வு -*** *குற்றத்தின் வயப்பட்டு மயங்கும் மெய்யறிவு;* ***அனையது ஆம் என*** *-போல்வது என்று சொல்லும்படி;* ***பாசடை -*** *பசுமையான இலைகள்;* ***வயின்தொறும் -*** *இடந்தொறும்;* ***பரந்த பண்பது -*** *பரவி விளங்கும் தன்மையை உடையது.*

*மெய்யறிவு தான் மாசற்றதாக இருந்தாலும், முக்குண வயப்பட்டுச் சில போது மாசடைந்து மயக்கமுறுகின்றது. அஞ்ஞானம் இடைஇடையே தோன்றி மெய்யறிவை மயக்குதல்போலத் தெளிவுமிக்க நீரில் தாமரை முதலியவற்றின் பசிய இலைகள் இடை இடையே பரவிப் பொய்கையிலுள்ள பொருள்களை மறைக்கின்றன என்பதாம். உவமை அணி. பொய்கை நீர் தெளிந்த நிலைக்கு நல்லுணர்வும், அந்நீர் தாமரை இலை முதலியவற்றால் மறைப்புண்ட நிலைக்குப்பேதைமையால் மயங்கிய நல் உணர்வும் உவமை. நல்உணர்வு - மெய்யறிவு.பிறப்பு, வீடு பற்றி ஐயம் திரிபின்றித் தெளியும் அறிவு நல் உணர்வாகும்.உண்மையல்லதை உண்மை என மயங்கும் நிலையே பேதைமையாகும்.ஆசடைதல் - பழைய பயிற்சி வயத்தால் புலன்களின் மேல் ஒரோவழி நினைவுசென்று கெடுதல்.*

*பாசடை - பண்புத்தொகை. "பாசிபடு குட்டத்தின். . . . அகலும் பின் அணுகும்" (சித்தியார் - 8. 39); 'பாசி களைந்து நன்னீர் காணும் நல்லோர், சொல்லுணரின் ஞானம் வந்து தோன்றும் பராபரமே" (தாயுமானவர்- பராபரக் கண்ணி) என்னும் அடிகள் ஒப்பு நோக்கத்தக்கன.* *8*

***3717. 'களிப் படா மனத்தவன்***
***காணின், "கற்பு எனும்***
***கிளிப் படா மொழியவள்***
***விழியின் கேள்" என,***
***துளிப் படா நயனங்கள்***
***துளிப்பச் சோரும்' என்று,***
***ஒளிப் படாது, ஆயிடை***
***ஒளிக்கும் மீனது;***

***களிப்படா மனத்தவன் -*** *(சீதையைப் பிரிந்ததால்) மகிழ்ச்சி இல்லாத மனத்தையுடைய இராமன்;* ***காணின் -*** *தம்மைக் கண்டால்;* ***கற்பு எனும் கிளிப்படா மொழியவள் -*** *கற்பின் வடிவமாகத் திகழும் கிளியினிடமும் அமையாத இனிய மொழிகளை உடைய சீதையின்;* ***விழியின் கேள் என -*** *கண்களுக்கு உறவானவை (ஒப்பாவன) என எண்ணி;* ***துளிப்படா நயனங்கள்*** *- முன்னர் ஒருபோதும் நீர் துளிக்காத கண்களில்;* ***துளிப்ப -*** *நீர் துளிக்க;* ***சோரும் என்று -*** *கலங்குவான் என்று;* ***ஒளிப்படாது -*** *வெளிப்படாது;* ***ஆயிடை -*** *அவ்விடத்தில்;* ***ஒளிக்கும் மீனது*** *- மறைந்துகொள்ளும் மீன்களை உடையது.*

*கிளியின்மொழி மகளிர் மொழிக்கு இனிமையால் ஒப்புமை ஆயினும், சீதையின் மொழி கிளிமொழியினும் இனிமை பொருந்தியது என்பதால் 'கிளிப்படா மொழியவள்' என்றார். நீரிடை மீன்கள் மறைதல் இயல்பு எனினும், தம்மைக் காணநேரின் இராமபிரானுக்குச் சீதையின் கண்கள் நினைவிற்குவர வருந்துவானாதலின், அதைத்தவிர்க்க மீன்கள் மறைந்து ஒளிவதாகக் கற்பித்துக் கூறியதால் இஃது ஏதுத்தற்குறிப்பேற்ற அணியாம். கற்பின் வடிவமாகச் சீதை திகழும் நிலையைச் சுந்தரகாண்டத்தும் கம்பர் 'கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்' (6035) என்பர்.*

*'துளிப்படா நயனங்கள் துளிப்பச் சோரும்' என்றது இராமன் உலகியல் மனிதனாகத் துன்பங்களை அனுபவிப்பான் என்பதைஉணர்த்துகிறது. 9*

***3718. கழை படு முத்தமும்,***
***கலுழிக் கார் மத***
***மழை படு தரளமும்,***
***மணியும், வாரி, நேர்***
***இழை படர்ந்தனைய நீர்***
***அருவி எய்தலால்,***
***குழை படு முகத்தியர்***
***கோலம் ஒப்பது;***

***கழைபடு முத்தமும் -*** *மூங்கிலிலிருந்து பெறும் முத்துக்களையும்;* ***கலுழிக் கார்மதம்*** *- கலங்கலாகிய கரிய மதநீர்ப் பெருக்கை உடைய;* ***மழைபடு தரளமும்-*** *மேகம் போன்ற யானையின் தந்தத்திலிருந்து தோன்றும் முத்துக்களையும்;* ***மணியும் -*** *(பிற) மணிகளையும்;* ***வாரி -*** *வாரிக்கொண்டு;* ***நேர்இழை படர்ந்தனைய -*** *தக்க அணிகலன்கள் தன்மேல் பரவிப் படிந்தது போன்ற;* ***நீர் அருவி எய்தலால்-*** *மலையருவி வந்து கலத்தலால்;* ***குழைபடு முகத்தியர் -*** *(அப்பொய்கை) காதணிகள் பொருந்திய முகத்தையுடைய மகளிரின்;* ***கோலம் ஒப்பது -*** *ஒப்பனையை ஒத்து விளங்கும்.*

*மூங்கிலிடமிருந்தும் யானைத்தந்தத்திடமிருந்தும் கிடைத்த முத்துக்களையும், மணிகளையும் வாரிக் கொணரும் அருவி நீர் தன்னிடத்துச் சேர்வதால், பொய்கையானது மகளிர் முத்தும், மணியும் பூண்டு கோலம் கொள்வதை ஒத்து விளங்கியது. உவமை அணி. மூங்கிலும் யானையும் முத்துப்பிறக்கும் இடங்கள் என்பது கவிமரபு. வெள்ளமானது முத்து, மணி முதலியவற்றை ஈர்த்து வரும் என்பதை ஆற்றுப்படலத்தும் (18) காணலாம். 10*

***3719. பொங்கு வெங் கட கரி,***
***பொதுவின் ஆடலின், -***
***கங்குலின், எதிர் பொரு***
***கலவிப் பூசலில்***
***அங்கம் நொந்து அலசிய,***
***விலையின் ஆய் வளை***
***மங்கையர் வடிவு என, -***
***வருந்தும் மெய்யது;***

***பொங்கு வெங்கடகரி*** *- (அந்நீர்நிலை) மிக்க வெம்மை வாய்ந்த மதநீரையுடைய யானைகள்;* ***பொதுவின் ஆடலின்*** *- பொதுவாக (நீரில்) மூழ்கித் திளைத்தலால்;* ***கங்குலின் எதிர்பொரு*** *- இரவுக் காலத்தில் தம்முள் எதிர்ப்பட்டுச் செய்கின்ற;* ***கலவிப் பூசலில்*** *- புணர்ச்சிப் போரினால்;* ***அங்கம் நொந்து*** *- உறுப்புகள் வருந்தி;* ***அலசிய*** *- சோர்ந்த;* ***ஆய்வளை விலையின் மங்கையர்*** *- ஆய்ந்தெடுத்த வளையல்களை அணிந்த விலைமகளிரது;* ***வடிவு என*** *- உடம்பு போல;* ***வருந்தும் மெய்யது*** *- வருந்தும் வடிவுடையது.*

*பொருள் கொடுப்பவர்க்கெல்லாம் தம்மை அளிக்கும் விலைமகளிரை உவமை கூறுதற்கு ஏற்ப, 'பொதுவின் ஆடலின்' எனப்பட்டது. மதயானைகள் பல தனித்தனியே இறங்கித் திளைத்தலால் கலங்கிய பொய்கை, ஆடவர் பலரின் புணர்ச்சிப் போரால் வருந்திய விலைமகளிரின் சோர்ந்து மெலிந்த உடம்பு போன்று காணப்பட்டது: எனவே உவமை அணி. எதிர்ந்து என்னும் வினையெச்சம் பகுதி மாத்திரையாய் நின்றது. அலசுதல் - வருந்திச் சோர்தல்: 'திரு உடம்பு அலச நோற்கின்றான்'(2749)*
*11*

***3720. விண் தொடர் நெடு***
***வரைத் தேனும், வேழத்தின்***
***வண்டு உளர் நறு***
***மத மழையும் மண்டலால்,***
***உண்டவர் பெருங் களி***
***உறலின், ஓதியர்***
***தொண்டைஅம் கனி இதழ்த்***
***தோன்றல் சான்றது;***

***விண்தொடர் நெடுவரை*** *- விண்ணளாவிய பெரிய மலைகளிலிருந்து;* ***தேனும்*** *- பெருகிவரும் தேனின் பெருக்கும்;* ***வேழத்தின்*** *- யானைகளின்;* ***வண்டு உளர்*** *- வண்டுகள் மொய்க்கும்;* ***நறுமத மழையும்*** *- மணமுடைய மதநீர்ப்பெருக்கும்;* ***மண்டலால்*** *- (மிக்குவந்து) நிறைந்ததால்;* ***உண்டவர்*** *- (பொய்கையின்) நீரைப்பருகியவர்கள்;* ***பெருங்களி உறலின்*** *- மிக்க களிப்பை அடைவதால்;* ***ஓதியர்*** *- (அப்பொய்கை) கூந்தலழகுடைய மகளிரின்;* ***தொண்டை அம்கனி இதழ்*** *- கோவைப்பழம் போன்ற சிவந்த உதடுகள் போல;* ***தோன்றல் சான்றது*** *- தோன்றல் அமைந்தது.*

*மலைத்தேனும் மதநீர்ப்பெருக்கும் பொய்கையில் வந்து கலந்துவிடுவதால் அப்பொய்கைநீர் உண்டவர்க்குக் களிப்பைத் தந்தது. அதனால் உண்டவர்க்குக் (முத்தமிடுவார்க்குக்)களிப்பைத்தரும் மகளிர் இதழ்களை ஒத்து விளங்கியது பொய்கை - உவமை; மகளிர் இதழ்க்குத் தொண்டைக்கனி உவமை; எனவே உவமையணி. 'விண்தொடர் நெடுவரை'- உயர்வு நவிற்சி அணியாகும்; வரை - இருமடி ஆகுபெயர். 12*

***3721. ஆரியம் முதலிய பதினெண் பாடையில்***
***பூரியர் ஒரு வழிப் புகுந்தது ஆம் என,***
***ஓர்கில கிளவிகள் ஒன்றோடு ஒப்பு இல,***
***சோர்வு இல, விளம்பு புள் துவன்றுகின்றது;***

***ஆரியம் முதலிய -** வடமொழி முதலான; **பதினெண் பாடையில் -** பதினெட்டு மொழிகளில்; **பூரியர்-** புலமை இல்லாத புல்லறிவாளர்; **ஒருவழி-** ஓரிடத்தில்; **புகுந்தது ஆம் என -** கூடி ஆரவாரிப்பது போல; **ஓர்கில கிளவிகள் -** (இன்ன பறவையின் குரல் என) ஆராய்ந்து அறிதற்கியலாத ஒலிகள்; **ஒன்றோடு ஒப்பு இல-** ஒன்றோடொன்று தொடர்பு இல்லாதவனாய்; **சோர்வு இல விளம்பும் -** ஓய்தலின்றி ஒலிக்கும்; **புள் துவன்றுகின்றது -** பறவைகள் நெருங்கியிருக்கப் பெற்றது. (அப்பொய்கை).*

*ஆரியம் முதலிய மொழிகளில் புலமை இல்லாதவர்கள் ஓரிடத்திலிருந்து எவர்க்கும் புரியாத வகையில் ஆரவாரிப்பது போலப் பல்வேறு பறவைகள் பொய்கையில் ஒருங்கிருந்து பிரித்து உணர முடியாத வகையில் ஓய்வில்லாது ஒலித்தன; உவமை அணி; பல பறவைகளின் குரல் தெளிவாகப் பிரித்து அறிய முடியாது இருப்பதால், பலபகுதிகளிலிருந்து பல மொழி பேசுவோரின் ஆரவாரத்தை உவமையாக்கினார். ஆரியம் - வடமொழி; பாடை - பாஷா என்னும் வட சொல்லின் திரிபு; கிளவி - பேச்சு - ஒலி; விளம்புதல் - பேசுதல்- ஒலித்தல்; புள் - பறவை. பறவைகளின் ஒலிகளுக்கு மொழிகள் ஒலிகள்(சீவக 93) பூரியர் - தம்மைப் பெரியராய்க் கருதும் அற்பர். 'சிறுமை அணியுமாம் தன்னை வியந்து' என்பது குறள் (978) 13*

***3722. தான் உயிர் உறத்***
***தனி தழுவும் பேடையை,***
***ஊன் உயிர் பிரிந்தென,***
***பிரிந்த ஓதிமம்,***
***வான் அரமகளிர்தம்***
***வயங்கு நூபுரத்***
***தேன் உகு மழலையைச்***
***செவியின் ஓர்ப்பது;***

***தான் உயிர்உற -** தன்னை உயிர்போல (நினைத்து); **தனி தழுவும் பேடையை -** சிறப்பாகத் தழுவிக் கொள்ளும் பெண் அன்னத்தை; **ஊன் உயிர் பிரிந்தென-** உடலிலிருந்து உயிர் பிரிந்தாற்போல; **பிரிந்த ஓதிமம் -** பிரிந்த ஆண் அன்னம்; **வான் அரமகளிர்தம் -** (நீராட வரும்) தேவ மகளிரின்; **வயங்கு நூபுரம் -** விளங்குகின்ற காற் சிலம்பணிகளின்; **தேன் உகு மழலையை -** தேன் போன்ற இனிய ஓசையை; **செவியின்***

***ஓர்ப்பது*** - *(தன் பெடையின் குரல் என்று) செவி கொண்டு கூர்ந்து கேட்பதற்கு (அப்பொய்கை) இடமாயது.*

*பெண் அன்னத்தைப் பிரிந்த சேவல் அன்னம் பொய்கையில் நீராடவரும் தெய்வமங்கையரின் சிலம்பொலியைத் தனது பெடையின் குரலென மயங்கிக் கேட்கும் என்பது கருத்து. மயக்க அணி. சீதையைப் பிரிந்த இராமனும் அவளை நினைவு படுத்தக்கூடிய குரலைக் கேட்கின் மயங்குவதை இக்காட்சி குறிப்பாக உணர்த்துகிறது.*

*தான் என்றது சேவல் அன்னத்தினை; ஊன் - தசை - உடம்பிற்கு ஆகுபெயர்; நூபுரம் - சிலம்பு; மழலை - இனிய மெல்லோசை; ஓர்த்தல் - நுணித்தறிதல்; அன்பில் சிறந்தது அன்னப்பறவை 'ஆதரம் பெருகுகின்ற அன்பினால் அன்ன மொத்தும்' (சீவக. 189) என்ற அடிகளைக் காண்க. அன்னத்தின் ஒலிக்கு மகளிர் சிலம்பொலி உவமையாதல் 'அரங்கின் ஆடுவார் சிலம்பின் அன்னம் நின்று இரங்கு வார்புனல் சரயு' என முன்னரும் (335) கவிஞர் கூறியுள்ளார்.* *14*

***3723. ஈறு இடல் அரிய மால் வரை***
***நின்று ஈர்த்து இழி***
***ஆறு இடு விரை அகில்***
***ஆரம் ஆதிய***
***ஊறிட, ஒள் நகர்***
***உரைத்த ஒண் தளச்***
***சேறு இடு பரணியின்***
***திகழும் தேசது.***

***ஈறு இடல் அரிய*** - *(அப்பொய்கை) எல்லை கூற இயலாத;* ***மால்வரை நின்று*** - *பெரிய மலையிலிருந்து;* ***ஈர்த்து இழி*** - *இழுத்துக் கொண்டு இறங்கிவரும்;* ***ஆறு இடு*** - *அருவிகள் இட்ட;* ***விரை அகில்*** - *மணம் மிக்க அகில்;* ***ஆரம் ஆதிய*** - *சந்தனம் முதலிய (வாசனை மரங்கள்);* ***ஊறிட*** - *(நீரில்) ஊறப்பெறுதலால்;* ***ஒள்நகர் உரைத்த*** - *செல்வம் மிக்க நகரமக்கள் அரைத்த;* ***ஒண்தளச்சேறு*** - *ஒள்ளிய சந்தனக்குழம்பை;* ***இடு பரணியின்*** - *இட்டு நிரப்பிய சந்தனக்கிண்ணம் போன்று;* ***திகழும் தேசது*** - *விளங்கும் ஒளியுடையது.*

*மலை அருவிகளால் கொண்டுவரப்பட்ட மரங்கள் தேய்ந்து ஊறியதால் அப்பொய்கை கலவைச்சந்தனம் கூட்டி வைத்திருக்கும் கிண்ணத்தை ஒத்து விளங்கியது; இஃது உவமை அணி. பொய்கைக்குப் பரணியும், அதிலுள்ள மரங்களின் தேய்வையால் குழம்பிய நீர்க்குச் சந்தனக் குழம்பும் உவமைகளாம். நகரத்திற்கு உரிய சந்தனம் என்பதால் 'ஒள்நகர் உரைத்த' எனப்பட்டது. செல்வமுடைய நகரமக்களே சந்தனம் முதலிய மணப்பொருள்களைக் கொண்டு இன்பம் நுகர்வர்.*

*பரணி - சந்தனக் கிண்ணம்; நகர் - இடவாகுபெயர். தளம் - சீதளம் என்பதன் முதல் குறை, ''வெண்டளக் கலவைச்சேறு' என்பது நாட்டு வருணனை.(43)*
*15*

*பொய்கையில் நிகழும் செயல்கள்*

*கலித்துறை*

***3724. நவ்வி நோக்கியர் இதழ் நிகர்***
***குமுதத்து நறுந் தேன்வவ்வு மாந்தரின் களி***
***மயக்கு உறுவன, மகரம்;***
***எவ்வம் ஓங்கிய இறப்பொடு பிறப்பு***
***இவை என்ன,***
***கவ்வு மீனொடு முழுகின,***
***எழுவன, கரண்டம்.***

***மகரம் -*** *(அப்பொய்கையிலுள்ள) மீன்கள்;* ***நவ்வி நோக்கியர் -*** *மான் நோக்குப்போலும் பார்வையை உடைய மகளிரின்;* ***இதழ் நிகர்-*** *இதழ்போன்ற;* ***குமுதத்து நறுந்தேன் -*** *செவ்வாம்பல் மலர்களிலுள்ள நல்ல தேனை;* ***வவ்வு மாந்தரின் -*** *குடித்து, (மகளிர் இதழ் அமுதம்பருகிய) ஆடவர் போல;* ***களிமயக்கு உறுவன -*** *களிப்பால் மயக்கம் அடைவனவாயின;* ***கரண்டம் -*** *நீர்க்காக்கைகள்;* ***எவ்வம் ஓங்கிய -*** *துன்பம் நிறைந்த;* ***இறப்பொடு பிறப்பு -*** *இறப்பும் பிறப்பும்;* ***இவை என்ன -*** *இத்தன்மையன என உணர்த்த;* ***கவ்வு மீனொடு -*** *வாயில் கவ்விய மீன்களோடு;* ***முழுகின எழுவன -*** *நீரில் முழுகி எழுவனவாயின.*

*பொய்கையில் மீன்கள், மகளிர் இதழ் பருகிக் களிப்படையும் ஆடவர் போன்று ஆம்பல் மலர்களிலுள்ள தேனை உண்டு மயங்கின. நீர்க்காக்கைகள் மாறிவரும் இறப்பையும் பிறப்பையும் உணர்த்துவன போல அடிக்கடி நீரில் மூழ்கி எழுவனவாய் உள்ளன. பாடலின் முன் இரண்டடியில் உவமை அணியும் பின்னிரண்டு அடிகளில் நீர்க்காக்கைகளின் இயல்பான செயலில் கவிஞன் தன் கருத்தை ஏற்றிக் கூறுவதால் தற்குறிப்பேற்ற அணியும் அமைந்துள்ளன. நீர்க்காக்கைகள் தம் செய்கையால் பிறப்பு. இறப்பின் தத்துவத்தைக் கூட உணர்த்தியதால் காட்சி அணி எனினும் அமையும். 'பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்' (மணி - 2. 64); 'ஆதலும் அழிவும் எல்லாம் அவை பொருட்கு இயல்புகண்டாய்' (சிந்தா - 269) என்பன காண்க. நவ்வி - மான்; வவ்வுதல் - கவர்தல்; எவ்வம் - துன்பம்; மகரம் - மீன்; கரண்டம் - காரண்டவம்; வடமொழி - இறப்பொடு என்பதில் ஒடு எண்ணுப்பொருளிலும், மீனொடு என்பதில் ஒடு உடனிகழ்ச்சிப் பொருளிலும் வந்துள்ளன. மகரம், கரண்டம் என்பன பால்பகா அஃறிணைப் பெயர்கள். 16*

***3725. கவள யானை அன்னாற்கு, 'அந்தக்***
***கடி நறுங் கமலத் -***
***தவளை ஈகிலம்; ஆவது செய்தும்'***
***என்று அருளால்,***
***திவள அன்னங்கள் திரு நடை***
***காட்டுவ; செங் கண்***
***குவளை காட்டுவ; துவர் இதழ்***
***காட்டுவ குமுதம்.***

***கவள யானை அன்னாற்கு -*** *கவளங் கவளமாக உண்ணும் இயல்புடைய யானையை ஒத்த இராமபிரானுக்கு;* ***அந்தக் கடிநறும் கமலத்தவளை -*** *அந்த மணம்மிக்க செந்தாமரை மலரிலுள்ள திருமகளை (சீதையை);* ***ஈகிலம் -*** *கொண்டு வந்து சேர்க்கும் திறமை இல்லோம்;* ***ஆவது செய்தும் -*** *(எனினும்) இயன்ற உதவியைச் செய்வோம் என்று;* ***அருளால் -*** *இரக்கத்தால்;* ***அன்னங்கள் -*** *(அப் பொய்கையில் உள்ள) அன்னங்கள்;* ***திவள -*** *துவளும்படியாக;* ***திரு நடை காட்டுவ -*** *(சீதையின்) நடையழகைக் காட்டுவனவாயின;* ***குவளை -*** *குவளை மலர்கள்;* ***செங்கண் காட்டுவ -*** *செவ்விய கண்களின் அழகைக் காட்டுவனவாயின;* ***குமுதம் -*** *குமுதமலர்கள்;* ***துவர் இதழ் காட்டுவ -*** *செந்நிறம் வாய்ந்த இதழின் அழகைக் காட்டுவனவாயின.*

*சீதையைக் கொண்டு வந்து சேர்க்கும் திறன் இல்லாததால், இயன்ற உதவியைச் செய்வோம் எனக்கருதி அன்னங்கள் சீதையின் நடையழகையும், குவளை விழியழகையும், குமுதம் இதழழகையும் காட்டின.*

*யானை அன்னான் - இராமன். கம்பீரமான தோற்றம், நடை, வலிமை பற்றி யானை உவமையாயிற்று. திருமகளே சீதையாக அவதரித்ததால் 'கமலத்தவள்' எனப்பட்டனள். "போதினை வெறுத்து அரசர் பொன்மனை புகுந்தாள்" என்றார் முன்னரும். (1151) கவளம் : வாயளவு கொண்ட உணவுத்திரள். பாடல் தற்குறிப்பேற்ற அணி.*
*17*

***3726. பெய் கலன்களின் இலங்கு***
***ஒளி மருங்கொடு பிறழ,***
***வைகலும் புனல் குடைபவர்***
***வான் அரமகளிர்;***
***செய்கை அன்னங்கள் ஏந்திய***
***சேடியர் என்னப்***
***பொய்கை அன்னங்கள் ஏந்திய பூங்***
***கொம்பர் பொலிவ.***

***பெய்கலன்களின் இலங்கு ஒளி -*** *தான் அணிந்திருந்த அணிகலன்களின் விளங்குகின்ற ஒளியானது;* ***மருங்கொடு பிறழ -*** *எல்லாப்பக்கங்களிலும் ஒளி வீச;* ***வைகலும் புனல்குடைபவர் -*** *நாள்தொறும் புனலில் துளைந்து நீராடுபவாகளாகிய;* ***வாள் அர மகளிர் -*** *தேவ மகளிரின்;* ***செய்கை அன்னங்கள் -*** *(விளையாடுவதற்காகச்) செய்யப்பட்ட செய்கை அன்னங்களை;* ***ஏந்திய சேடியர் என்ன -*** *கைகளில் ஏந்தி நிற்கும் தோழியர் போல;* ***பொய்கை அன்னங்கள் -*** *பொய்கையிலுள்ள அன்னங்களை;* ***ஏந்திய பூங்கொம்பர் -*** *ஏந்தி நிற்கின்ற மலர்க்கொம்புகள்;* ***பொலிவ -*** *விளங்கின.*

*தேவமகளிர் புனலில் குடைந்து ஆடியதால் அஞ்சி பொய்கை அன்னங்கள் அஞ்சி எழுந்து அருகில் உள்ள மலர்க்கொம்புகளில் தங்கின. அதனால் செயற்கை அன்னங்களைக் கையில் ஏந்திய தேவமகளிரின் தோழியர்போல மலர்க்கொம்புகள் காட்சி அளித்தன. பொய்கை அன்னத்திற்குச் செய்கை அன்னமும் கரையிலுள்ள மலர்க்கொம்புகளுக்கு தோழியரும் ஒப்பு. இஃது உவமை அணியாம்.*

*பெய்தல் -அணிதல்; கலன்கள் - அணிகலன்; செய்கை அன்னம் - செயற்கை அன்னம் - விளையாடுதற்குரிய பதுமை; வானரமகளிர் நாள்தொறும் வந்து நீராடுவர் என்றதனால் பம்பையின் பெருமைபுனலாம்.* 18

***3727. ஏலும் நீர் நிழல், இடை***
***இடை எறித்தலின், படிகம்***
***போலும் வார் புனல் புகுந்துளவாம்***
***எனப் பொங்கி,***
***ஆலும் மீன் கணம் அஞ்சின***
***அலம்வர, வஞ்சிக்***
***கூல மா மரத்து, இருஞ் சிறை***
***புலர்த்துவ - குரண்டம்.***

***ஏலும் நீர் -*** *பொருந்திய நீரில்;* ***நிழல் இடை இடை எறித்தலின் -*** *(மரங்களிலுள்ள கொக்குகளின்) நிழல் இடையிடையே விளங்குதலாலே;* ***படிகம் போலும் வார்புனல் -*** *பளிங்கு போன்று விளங்கும் மிக்க நீரினுள்;* ***புகுந்துளவாம் என -*** *(கொக்குகள் தம்மை உண்ணப்) புகுந்துள்ளன என்று எண்ணி;* ***பொங்கி ஆலும் மீன்கணம் -*** *(இயல்பாகத்) துள்ளி விளையாடும் மீன் கூட்டங்கள்;* ***அஞ்சின அலம்வர -*** *அஞ்சி வருத்தமடையுமாறு;* ***குரண்டம் -*** *கொக்குகள்;* ***வஞ்சிக் கூலமா மரத்து -*** *கரையிலுள்ள பெரிய வஞ்சி மரத்திடை;* ***இருஞ்சிறை புலர்த்துவ -*** *(தம்) பெரிய சிறகுகளை உலர்த்திக் கொண்டிருப்பனவாயின.*

*கரையருகே உள்ள மரங்களில் கொக்குகள் தம் சிறகுகளை உலர்த்திக் கொண்டிருக்க, அவற்றின் நிழல் நீரில்பட, அந்நிழலைக்கண்ட மீன்கள் தம்மை உண்பதற்காக நீரினுள் கொக்குகள் புகுந்துவிட்டன என்றெண்ணி மயங்கின என்பதாம்; மயக்க அணி.*

*தெளிவுடைமை பற்றிப் பளிங்குபோலும் புனல் என்றார். குரண்டம் - கொக்கு; கூலம் - கரை; வஞ்சி - மரவகையுள் ஒன்று.* 19

***3728. அங்கு ஓர் பாகத்தில், அஞ்சனமணி***
***நிழல் அடைய,***
***பங்கு பெற்று ஒளிர் பதுமராகத்து***
***ஒளி பாய,***
***கங்குலும் பகலும் மெனப்***
***பொலிவன கமலம்;***
***மங்கைமார் தட முலை எனப்***
***பொலிவன, வாளம்.***

***அங்கு ஓர் பாகத்தில் -*** *அப்பொய்கைக் கரையின் ஒரு பக்கத்தில்;* ***அஞ்சன மணி நிழல் அடைய -*** *நீலமணியின் ஒளி படிவதாலும்;* ***பங்கு பெற்ற ஒளிர் பதுமராகத்து ஒளி பாய -*** *மற்றொரு பகுதியில்*

*பதுமராகத்தின் ஒளி பாய்வதாலும்;* ***கமலம் -*** *தாமரை மலர்கள்;* ***கங்குலும் பகலும் எனப் பொலிவன -*** *இரவு போலவும் பகல் போலவும் (ஒரே சமயத்தில்) அழகுடன் விளங்கின;* ***வாளம் -*** *இணையாக உள்ள சக்கரவாகப் பறவைகள்;* ***மங்கையர் தடமுலை எனப் பொலிவன -*** *பெண்களின் பெரிய தனங்களைப் போல அழகுபெற்றன.*

*இருளில் குவிவதும், ஒளியில் மலர்வதும் தாமரையின் இயல்பு; நீல மணியின் காரொளி படும் பகுதியில் குவிந்தும், பதுமராகத்தின் செவ்வொளி படும் பகுதியில் மலர்ந்தும் தாமரைகள் விளங்கின என்கிறார். இணை பிரியாத் தன்மை கொண்ட சக்கரவாகப் பறவைகள் மகளிர் மார்பகம் போலப் பொலிந்தன என்கிறார்.*

*பகலும்மென - விரித்தல் விகாரம். 20*

***3729. வலி நடத்திய வாள் என***
***வாளைகள் பாய,***
***ஒலி நடத்திய திரைதொறும்***
***உகள்வன, நீர்நாய்***
***கலிநடக் கழைக் கண்ணுளர்***
***என நடம் கவின,***
***பொலிவு உடைத்து என,***
***தேரைகள் புகழ்வனபோலும்.***

***வலி நடத்திய வாள் என-*** *வலிமையோடு வீசிய வாளாயுதம் போன்று;* ***வாளைகள் பாய-*** *(அப்பொய்கையில்) வாளை மீன்கள் பாய்ந்து செல்ல;* ***ஒலி நடத்திய திரைதொறும்-*** *ஒலித்துக் கொண்டு செல்வதாகிய அலைகளிடையே;* ***உகள்வன நீர்நாள்*** *- உருண்டு செல்வனவாகிய நீர் நாய்கள்;* ***கலி நட -*** *(சதங்கை) ஒலிக்கும் நடையுடைய;* ***கழைக் கண்ணுளர் என -*** *கழைக்கூத்தாடிகள் போல;* ***நடம் கவின -*** *(அவ்வாளைமீன்களின் மேல்) நடனத்தை அழகியதாகச் செய்ய;* ***தேரைகள் -*** *அதைக்கண்ட) தவளைகள்;* ***பொலியுடைத்தென*** *-நடனம் நன்றாய் இருக்கின்றதென;* ***புகழ்வன போலும்-*** *புகழ்ந்து பேசுவன போன்றன.*

*வாளைகள் பாய்தலும் நீர்நாய்கள் அலைகளிடையே உருண்டு செல்லுதலும், தவளைகள் ஒலித்தலும் ஆகிய நிகழ்ச்சிகளால் பொய்கை, கழைக்கூத்து நடைபெறும் இடம்போல் விளங்கிற்று. அலை கயிற்றுவடமாகவும், நீர்நாய்கள் கயிற்றின் மேல் நடக்கும் கழைக்கூத்தாடிகளாகவும், வாளை பாய்தல் கழைக்கூத்தாடிகள் வீசும் வாளின் வீச்சாகவும், தவளைகளின் ஒலி பாராட்டுரையாகவும் கற்பனை செய்யப்பட்டன. தவளையின் ஒலி பாராட்டுரையாகத் தோன்றியது தற்குறிப்பேற்ற அணியாகும். வாளை பாய்தலுக்கு வாள் வீச்சு உவமையாதல் 'வாளென வாளை பாய்வன' (1180) 'வாளென வாளைபாய' (2583) எனச் சிந்தாமணியும் 'வாளை வாளிற் பிறழ' (390) என நற்றிணையும் உரைப்பதில்காண்க. 21*

*சீதையின் நினைவால் இராமன் புலம்பல்*

***3730. அன்னது ஆகிய அகன் புனல்***
***பொய்கையை அணுகி,***
***கன்னி அன்னமும் கமலமும்***
***முதலிய கண்டான்;***
***தன்னின் நீங்கிய தளிரியற்கு***
***உருகினன் தளர்வான்,***
***உன்னும் நல் உணர்வு***
***ஒடுங்கிட, புலம்புதலுற்றான்:***

***அன்னது ஆகிய*** *- அத்தன்மையுடையதான;* ***அகன்புனல் பொய்கையை*** *- மிக்க நீரைஉடைய பொய்கையை;* ***அணுகி*** *- நெருங்கி;* ***கன்னி அன்னமும்*** *- இளமையான அன்னங்கள்;* ***கமலமும் முதலிய*** *- தாமரை மலர்கள் முதலானவற்றையும்;* ***கண்டான்*** *- (இராமன்) கண்டு;* ***தன்னின் நீங்கிய*** *- தன்னைப் பிரிந்து சென்ற;* ***தளிர் இயற்கு*** *- இளந்தளிர் போன்ற மென்மையை உடைய சீதை பொருட்டு;* ***உருகினன் தளர்வான்*** *- மனம் உருகி வருந்துபவனாய்;* ***உன்னும் நல் உணர்வு*** *- ஆராய்ந்தறிதற்கு உரிய நல்லறிவு;* ***ஒடுங்கிட*** *- ஒடுங்கிவிட;* ***புலம்புதல் உற்றான்*** *- புலம்பத் தொடங்கினான்.*

*அன்னமும் கமலமும் சீதையின் நடையழகையும், முகப்பொலிவினையும் நினைவுபடுத்தியதால் இராமன் புலம்பத் தொடங்கினான். அன்னமும் கமலமும் கொண்டு நடை, முகம் கூறிய கவிஞர் அவளது பிற உறுப்புக்களை நினைவுபடுத்தும் குவளை, கொடி முதலியவற்றை 'முதலிய' என்றதால் பெறவைத்தார். இராமபிரான் திருமாலின் அவதாரமாக இருந்தும் மானிடப் பிறவியை ஏற்றதால் இவ்வாறு புலம்பலானான் என்க. தளிரியல் - உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; முதலிய - பலவின்பால் பெயர்.* *22*

*அறுசீர் ஆசிரியவிருத்தம்*

***3731. 'வரிஆர் மணிக் கால் வாளமே! மட***
***அன்னங்காள்! எனை நீங்கத்***
***தரியாள் நடந்தாள்; இல்லளேல்***
***தளர்ந்த போதும் தகவேயோ?***
***எரியாநின்ற ஆர் உயிருக்கு இரங்கினால்,***
***ஈது இசை அன்றோ?***
***பிரியாது இருந்தேற்கு ஒரு மாற்றம் பேசின்,***
***பூசல் பெரிது ஆமோ?***

***வரி ஆர்*** *- வரிகள் பொருந்திய;* ***மணிக்கால் வாளமே*** *- அழகிய கால்களை உடைய சக்கரவாகப் பறவைகளே!;* ***மட அன்னங்காள்*** *- இளமையான அன்னங்களே!;* ***என்னை நீங்கத் தரியாள்*** *- என்னை*

*விட்டுப் பிரிந்திருக்க ஆற்றாதவளாகிய சீதை;* ***நடந்தாள்*** *- பிரிந்தாள்;* ***இல்லளேள்*** *- இங்கில்லை என்பதை உணர்ந்தும்;* ***தளர்ந்த போதும்*** *- பிரிவால் நான் வருந்துகின்ற சமயத்தும்;* ***தகவேயோ*** *- (நீங்கள் இரங்காமலிருப்பது) தகுதி தானா?* ***எரியா நின்ற***

***ஆருயிர்க்கு*** - *பிரிவால் வாடுகின்ற எனது அரிய உயிர்க்கு;* ***இரங்கினால்*** - *இரக்கம் காட்டுவீராயின்;* ***ஈது இசை அன்றோ*** - *இஃது உங்கட்குப் புகழை அன்றோ தரும்?* ***பிரியாது இருந்தேற்கு*** - *இதுகாறும் சீதையைப் பிரியாதிருந்த எனக்கு;* ***ஒரு மாற்றம் பேசின்*** - *(ஆறுதலாக) ஒரு வார்த்தை பேசினால்;* ***பூசல் பெரிது ஆமோ*** - *(உங்களுக்கு அதனால்) பெரிய பொல்லாங்கு உண்டாகுமோ?*

*சீதை அருகில் இருந்தால் அவள் உறுப்புகட்குத் தோற்ற சக்கரவாகப் பறவைகளும், அன்னங்களும் இராமன் முன் தோன்றத் தயங்கலாம்; அவள் இப்பொழுது அருகில் இல்லாததால் இராமன் முன்னர் வரத் தயங்க வேண்டுவதில்லை. நேரில் வந்து ஆறுதல் கூறி உதவலாம் என்றபடி.*

***'நாளங்கொள் நளினப் பள்ளி நயனங்கள் அமையநேமி வாளங்கள் உறைவ கண்டு மங்கைதன் கொங்கை நோக்கும் (2735)***

*என்றும், 'ஓதிமம் ஒதுங்கக்கண்ட உத்தமன் உழையள் ஆகும். சீதை தன் நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான்" (2739) என்றும் சூர்ப்பணகைப் படலத்தில் சக்கரவாகப் பறவையும் அன்னமும் முறையே சீதையின் தனத்திற்கும் தோற்றொளித்து ஓடுவதை குறிப்பதைக் காண்க. 23*

***3732. 'வண்ண நறுந் தாமரை மலரும்,***
***வாசக் குவளை நாள்மலரும்,***
***புண்ணின் எரியும் ஒரு நெஞ்சம் பொதியும்***
***மருந்தின், தரும் பொய்காய்!***
***கண்ணும் முகமும் காட்டுவாய்;***
***வடிவும் ஒருகால் காட்டாயோ?***
***ஒண்ணும் என்னின், அஃது***
***உதவாது, உலோவினாரும் உயர்ந்தாரோ?'***

***வண்ண நறுந்தாமரை மலரும்*** - *அழகிய மணம் மிக்க தாமரை மலர்களையும்;* ***வாசக் குவளை நாள் மலரும்*** - *வாசனை பொருந்திய அன்றலர்ந்த குவளை மலர்களையும்;* ***புண்ணின் எரியும்*** - *புண்போல் எரிகின்ற;* ***ஒரு நெஞ்சம்*** - *(சீதையின் பிரிவால்) தனிமையுற்றுக் கலங்கும் நெஞ்சிற்கு;* ***பொதியும் மருந்தின்***- *மேலே தடவுகின்ற மருந்து போல;* ***தரும் பொய்காய்*** - *காட்டுகின்ற பொய்கையே!* ***கண்ணும் முகமும்*** - *(சீதையின்) கண்களையும் முகத்தையும்;* ***காட்டுவாய்*** - *காட்டுகின்ற நீ;* ***வடிவும் ஒருகால் காட்டாயோ*** -*அவள் முழுவடிவத்தையும் ஒருமுறையேனும் காட்டமாட்டாயா?* ***ஒண்ணும் என்னின்*** - *தம்மால் உதவ இயலுமாயின்;* ***அஃது உதவாது*** - *அவ்வுதவியைச் செய்யாமல்;* ***உலோவினாரும் உயர்ந்தாரோ*** - *உலோபம் செய்பவர்களும் உயர்ந்தவர்கள் ஆவரோ? (ஆகார்).*

*பொய்கையில் மலர்ந்துள்ள தாமரையும் குவளையும் பிராட்டியின் கண் போல் இருந்ததால் இராமனின் புண்பட்ட நெஞ்சிற்கு மருந்து போலாகிச் சிறிது துன்பமாற்றின. கண்ணையும் முகத்தையும் காட்டுகின்ற பொய்கை முழு வடிவையும் காட்ட வேண்டும் என வேண்டினான். தாமரை மலர், குவளை மலர் என்று உவமானப் பொருள்களைக் கூறியதற்கேற்ப, முகமும் கண்ணும் என்னாது, கண்ணும் முகமும்*

*எனக் கூறியது எதிர்நிரல்நிறை அணியாகும். உலோவினோர்- விணையாலணையும் பெயர்; ஓகாரம் எதிர்மறை. "உளப்பரும் பிணிப்பறா உலோபம் ஒன்றுமே அளப்பருங்குணங்களை அழிக்கும்" (363) என்பதால் உலோபிகள் உயர்ந்தோர் ஆகார் என்பது புலனாகும். 24*

***3733. விரிந்த குவளை, சேதாம்பல், விரை மென்***
***கமலம், கொடி வள்ளை,***
***தரங்கம், கெண்டை, வரால், ஆமை***
***என்று இத்தகையதமை நோக்கி,***
***'மருந்தின் அனையாள் அவயவங்கள் அவை***
***நிற் கண்டேன்; வல் அரக்கன்,***
***அருந்தி அகல்வான் சிந்தினவோ? ஆவி!***
***உரைத்திஆம் அன்றே! '***

***விரிந்த குவளை*** *- மலர்ந்த கருங்குவளை மலர்களும்;* ***சேதாம் பல்-*** *செவ்வாம்பல் மலர்களும்;* ***விரைமென் கமலம்*** *- மணம்மிக்க மென்மையான தாமரை மலர்களும்;* ***கொடி வள்ளை -*** *வள்ளைக் கொடியின் இலைகளும்;* ***தரங்கம் -*** *அலைகளும்;* ***கெண்டை -*** *கெண்டைமீன்களும்;* ***வரால் -*** *வரால் மீன்களும்;* ***ஆமை -*** *ஆமைகளும்;* ***என்று இத்தகையதமை*** *- என்னும் இத்தன்மையானவாகிய பொருள்களை;* ***நோக்கி -*** *(இராமன்) பார்த்து;* ***ஆவி-*** *பொய்கையோ!;* ***மருந்தின் அனையாள் -*** *அமுதம் போன்ற சீதையின்;* ***அவயவங்கள்*** *- (கண், வாய், முகம், காது, வயிற்று, மடிப்பு, கணைக்கால், புறவடி ஆகிய) உறுப்புகளை;* ***நின் கண்டேன் -*** *உன்னிடத்துப் பார்த்தேன்;* ***அவை -*** *அவ்வுறுப்புகள்;* ***வல்லரக்கன் -*** *கொடிய அரக்கனாகிய இராவணன்;* ***அருந்தி -*** *உண்டு;* ***அகல்வான் -*** *(பரந்த ஆகாயத்தில்) செல்கையில்;* ***சிந்தினவோ*** *- சிந்தினவைகளோ?* ***உரைத்தி -*** *உரைப்பாயாக.* ***(ஆம், அன்று, ஏ -*** *அசைகள்.)*

*குவளை, ஆம்பல், கமலம், வள்ளை, அலை, கெண்டைமீன், வரால்மீன், ஆமை என்பன முறையே கண், வாய், முகம், காது, வயிற்றுமடிப்பு, கணைக்கால், புறஅடிக்கு உவமையாயின. கொடியும் வள்ளையும் என இரண்டாகக் கொள்ளின் கொடியால் இடையும் வள்ளையால் காதும் குறிக்கப்படும். பொய்கை மலர்களைப் பெண்கள் உறுப்புகளுக்குச் சொல்வதைப் "பைங்குவளைக் கார்மலரால்" (திருவெம்பாவை 13) என்ற அடியும் உணர்த்தும். குவளை முதலியவற்றைச் சீதையின் உறுப்புகளாக மயங்கினன் என்பதால் மயக்க அணி. குவளை முதலியவற்றை அரக்கன் உண்கையில் சிந்திய சீதையின் அவயவங்களாகக் கருதினன் என்பதால் தற்குறிப்பேற்ற அணி. சீதையின் அருமை பற்றி 'மருந்தின் அனையாள்' என்றார். 25*

***3734. 'ஓடாநின்றகளி மயிலே! சாயற்கு***
***ஒதுங்கி, உள் அழிந்து,***
***கூடாதாரின் திரிகின்ற நீயும்,***
***ஆகம் குளிர்ந்தாயோ?***
***தேடாநின்ற என் உயிரைத் தெரியக்***
***கண்டாய்; சிந்தை உவந்து***

***ஆடாநின்றாய்; ஆயிரம் கண் உடையாய்க்கு***
***ஒளிக்குமாறு உண்டோ?***

***ஓடாநின்ற களிமயிலே*** - *ஓடி மகிழ்கின்ற மயிலே!* ***சாயற்கு ஒதுங்கி*** - *(சீதையின்) சாயலுக்குத் தோற்று;* ***உள் அழிந்து*** - *மனம் வருந்தி;* ***கூடாதாரின்*** - *பகைவரைப்போல;* ***திரிகின்ற நீயும் -*** *திரிகின்ற நீயும்;* ***ஆகம் குளிர்ந்தாயோ*** - *(இப்போது சீதை இல்லாமை பற்றி) மனம் குளிர்ந்தனையோ?* ***தேடா நின்ற என் உயிரை -*** *தேடிக்கொண்டிருக்கும் என் உயிர்போன்ற சீதையை;* ***தெரியக் கண்டாய் -*** *(முன்பு) கண்ணாரக் கண்டிருப்பாய்;* ***சிந்தை உவந்து ஆடா நின்றாய்*** - *(எனினும் இப்போது என் நிலைகண்டு மனமிரங்காது) மனம் மகிழ்ந்து ஆடுகின்றாய்;* ***ஆயிரம்கண் உடையாய்க்கு-*** *ஆயிரம் கண்களை உடைய உனக்கு;* ***ஒளிக்கும் ஆறு உண்டோ? -*** *(தெரியாமல்) மறையும் வழியும் உண்டோ? (இல்லை).*

*ஒதுங்குதல் - தோல்வியுறுதல்; கண் - பீலிக்கண்கள். ஆயிரம் என்றது பல என்னும் பொருளைத் தந்தது. இயற்கையில் மயில் மகிழ்ந்து ஆடுதற்குச் சீதை பிரிந்து போனதை அறிந்தும் இரங்காது மகிழ்ந்ததாகக் கூறியது தற்குறிப்பேற்ற அணியாம். "நாணின தொகுபீலி கோலின நடம் ஆடல், பூணியல் நின சாயல் பொலிவது பல கண்ணின் காணிய எனல் ஆகும். களிமயில் - இவை காணாய்" (2002) என்ற அடிகளை ஒப்புநோக்குக. 26*

***3735. 'அடையீர்எனினும் ஒரு மாற்றம் அறிந்தது***
***உரையீர்; - அன்னத்தின்***
***பெடையீர்! - ஒன்றும் பேசீரோ?***
***பிழையாதேற்குப் பிழைத்தீரோ?***
***நடை நீர் அழியச் செய்தாரே நடு***
***இலாதார்; நனி அவரோடு***
***உடையீர் பகைதான்; உமை நோக்கி***
***உவக்கின்றேனை முனிவீரோ?***

***அன்னத்தின் பெடையீர் -*** *பெண் அன்னங்களே!* ***அடையீர் எனினும்-*** *என்னிடத்து வரமாட்டீராயினும்;* ***ஒரு மாற்றம் அறிந்தது உரையீர் -*** *(சீதையைப்பற்றி) நீங்கள் அறிந்ததொரு வார்த்தையாயினும் சொல்லுங்கள்;* ***ஒன்றும் பேசீரோ -*** *(என்னிடம்) ஒன்றும் பேச மாட்டீர்களோ?;* ***பிழையாதேற்கு*** - *உங்களுக்கு ஒரு குற்றமும் புரியாத*

*எனக்கு;* ***பிழைத்தீரோ -*** *பிழை செய்வீர்களோ?;* ***நடு இலாதார் -*** *இடையில்லாத சீதாபிராட்டியாரே;* ***நடை நீர் அழியச் செய்தாரே*** - *நீங்கள் நடையழகில் தோல்வியடையுமாறு செய்தார்;* ***அவரோடு தான் நனி பகை உடையீர்*** - *அவரோடுதான் நீங்கள் மிக்க பகைமை உடையவர் ஆவீர்;* ***உமை நோக்கி உவக்கின்றேனை -*** *உங்களை நோக்கி (உங்கள் நடை சீதை நடையை ஒக்கும் என்றெண்ணி) மகிழ்கின்ற என்னை;* ***முனிவீரோ -*** *வெறுப்பீர்களோ?*

*மாற்றம் - சொல்; நடை - நடையழகு.*

*உங்கள் நடையைத் தன் நடையழகால் தோற்கச் செய்த சீதை மாட்டுப் பகைமை கொள்வது முறையாகும். ஒரு பிழையும் செய்யாமல் உங்கள் நடையை நோக்கி மகிழ்கின்ற என்னிடத்தும் பகைமைகொண்டு அருகில் வராதாதும், ஆறுதலாக ஒன்றும் பேசாததும் தகுதியாமோ என்பதாம். பெடையார் - திணைவழுவமைதி. சீதையின் இடை பற்றி "மருங்கு இலா நங்கை", "இல்லையே நுகப்பு" என முன்னரும். (517, 728) கூறுவர். 27*

***3736. 'பொன்பால் பொருவும் விரை அல்லி***
***புல்லிப் பொலிந்த பொலந்தாது***
***தன்பால் தழுவும் குழல் வண்டு,***
***தமிழ்ப்பாட்டு இசைக்கும் தாமரையே!***
***என்பால் இல்லை; அப் பாலோ***
***இருப்பார் அல்லர்; விருப்புடைய***
***உன்பால் இல்லை என்றபோது***
***ஒளிப்பாரோடும் உறவு உண்டோ?***

**பொன்பால் பொருவும் -** *பொன்னின் இயல்பை ஒத்திருக்கும்;* **விரை அல்லி புல்லி-** *மணம் மிக்க அகஇதழ்களைச் சார்ந்து;* **பொலிந்த பூந்தாது-** *அழகிய மகரந்தத்தை;* **தன்பால் தழுவும் -** *தன்னிடத்தே கொண்ட;* **குழல்வண்டு -** *குழல்போலும் இசைபாடும் வண்டுகள்;* **தமிழ்ப் பாட்டு இசைக்கும் -** *(தங்கி) இனிய பாடல்கள் பாடும்;* **தாமரையே-** *தாமரை மலரே!* **என்பால் இல்லை -** *(சீதை) என்னிடத்தில் இல்லை;* **அப்பாலோ இருப்பர் அல்லர் -** *வேறிடத்தும் இருப்பவர் அல்லர்;* **விருப்புடைய உன்பால் -** *விருப்பமுடைய உன்னிடத்தும்;* **இல்லை என்றபோது** *- இல்லையென்று நீயும் கூறினால்;* **ஒளிப்பாரோடும் உறவு உண்டோ -** *தன்னிடத்துள்ளதை மறைக்கும் உன்னோடு எனக்கு உறவு உண்டோ?*

*சீதாபிராட்டி தன்னிடம் இல்லையென்பதும், பிற இடங்களில் தங்கமட்டார் என்பதும் அறிந்த செய்தி. ஆதலால் பிறந்த இடமாகிய தாமரையில்தான் தங்கியிருத்தல் வேண்டும். அதைக்கூறாது தாமரை சீதையை ஒளித்து வைத்திருப்பதாக எண்ணி, இராமன் தாமரையை வெறுத்து உரைத்தனன் என்க.*

*அல்லி - அகஇதழ்; தமிழ் - இனிமை. 'தமிழ் தழீஇய சாயலவர் (சீவக சிந்தாமணி 2026) என்னுமிடத்து இப்பொருள் காண்க. தாமரையைக் கேட்பது போலக் கூறியது மரபுவழுவமைதி. 28*

***3737. 'ஒருவாசகத்தை வாய் திறந்து இங்கு***
***உதவாய், பொய்கைக் குவிந்து ஒடுங்கும்***
***திரு வாய் அனைய சேதாம்பற்கு***
***அயலே கிடந்த செங் கிடையே!***
***வெருவாது எதிர் நின்று அமுது உயிர்க்கும்***
***வீழிச் செவ்விக் கொழுங் கனி வாய்***
***தருவாய்; அவ் வாய் இன் அமுதும்,***
***தண்ணென் மொழியும் தாராயோ?***

***ஒரு வாசகத்தை வாய் திறந்து*** - *ஒரு வார்த்தையினையும் வாயைத்திறந்து சொல்லி;* ***இங்கு உதவாய்*** - *இங்கு (எனக்கு) உதவாமல்;* ***பொய்கை குவிந்து ஒடுங்கும்*** - *பொய்கையில் குவிந்து ஒடுங்கிக் கிடக்கும்;* ***திரு வாய் அனைய*** - *சீதையின் வாயைப்போன்ற;* ***சேதாம்பற்கு*** - *செவ்வாம்பல் மலர்க்கு;* ***அயலே கிடந்த செங்கிடையே-*** *அருகில் கிடக்கும் நெட்டியே!* ***வெருவாது எதிர்நின்று-*** *அஞ்சாமல் என் எதிரில் வந்து;* ***அமுது உயிர்க்கும்*** - *அமுதம் போன்ற சொற்களைப் பேசும்;* ***செவ்வி வீழிக் கொழுங்கனிவாய்*** - *அழகிய செழுமையான வீழிக்கனிபோன்ற சீதையின் வாயை;* ***தருவாய்*** - *காட்டுவாய்;* ***அவ்வாய் இன்னமுதும்*** - *அந்த வாயில் ஊறும் இனிய அமுதத்தையும்;* ***தண்ணென் மொழியும்*** - *குளிர்ந்த சொல்லினையும்;* ***தாராயோ*** - *தரமாட்டாயோ?*

*'நீ ஆம்பல் மலரைப்போல் இல்லாது சீதையின் வாயைப்போன்று வெளி வந்து காட்டுகின்றனை. அதிலுள்ள இனிய அமுதச்சுவையினையும், இனிய பேச்சுக்களையும் தரலாகாதோ' என இராமன் நெட்டியிடம் புலம்பிக் கூறியது. ஒடுங்கும் சேதாம்பல் - பகற்பொழுது ஆதலின் செவ்வாம்பல் குவிந்து காணப்பட்டது. சிவந்த நெட்டி வாயிதழ்க்கு உவமை ஆயிற்று. நெட்டி, வடிவத்தால் வாயினை ஒத்தும், வாயின் இன்னமுதும் தண்ணென் மொழியும் தராத வேற்றுமையும் கொண்டிருப்பதால் வேற்றுமை அணி அமையும். ஒரு வாசகத்தை என்னுமிடத்து இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. 29*

***3738. 'அலக்கண் உற்றேற்கு உற்று உதவற்கு,***
***அடைவு உண்டு அன்றோ? - கொடி வள்ளாய்!***
***மலர்க் கொம்பு அனைய மடச் சீதை***
***காதே; மற்று ஒன்று அல்லையால்;***
***பொலக் குண்டலமும், கொடுங் குழையும்,***
***புனை தாழ் முத்தின் பொன்- தோடும்,***
***விலக்கி வந்தாய்; காட்டாயோ?***
***இன்னும் பூசல் விரும்புதியோ?***

**கொடிவள்ளாய்** - வள்ளைக் கொடியே! **மலர்க்கொம்பு அனைய** - பூங்கொம்பைப் போன்ற; **மடச் சீதை** - மடமைக் குணம் பொருந்திய சீதையின்; **காதே** - காதே ஆவாய்; **மற்று ஒன்று அல்லை ஆல்** - *பிறிதொன்றில்லை; ஆதலால்;* **அலக்கண் உற்றேற்கு** - *(சீதையைப் பிரிந்து)* துன்புறும் எனக்கு; **உற்று உதவற்கு** - நெருங்கிய உதவுதற்கு; **அடைவு உண்டு அன்றோ** - இயைபு உண்டு அல்லவா? **பொலக்குண்டலமும்** - *(அங்ஙனமிருக்கவும்)* பொன்னால்செய்த குண்டலத்தையும்; **கொடுங்குழையும்-** வளைந்த காதணியையும்; **புனை தாழ்முத்தின் பொன்தோடும்** - *அழகிய தொங்குகின்ற முத்துக்களை உடைய பொன்தோட்டினையும்;* **விலக்கி வந்தாய்** - நீக்கி வந்தாய்; **காட்டாயோ?** - *(அவற்றை அணிந்து) காட்டமாட்டாயா?;* **இன்னும் பூசல் விரும்புதியோ** - மேலும் பகையினை *விரும்புவாயோ?*

*'நீ வடிவத்தால் சீதையின் காதை ஒத்திருப்பதால் குண்டலம், குழை, தோடு ஆகியவற்றை அணிந்திருப்பின், நான் உன்னைக் கண்டு ஒருவாறு ஆறுதல் அடைந்திருப்பேன். நீ அவற்றை நீக்கி வந்தாய்; காதுகளால் சீதை உனது அழகை அழித்தாள் என்ற பழம் பகைமைகொண்டு துன்புற்று வருந்தும் எனக்கு உதவாமல் இருப்பது விரும்பத்தக்கதன்று' என்று இராமன் வள்ளைக்கொடியொடு வருந்தினான்.*

*அலக்கண் - துன்பம்; சீதையின் பிரிவால் ஏற்பட்டது; மலர்க்கொம்பு - கொம்பு மேனிக்கும், மலர் - கண், கை, கால், முகம் முதலிய உறுப்புக்களுக்கும் உவமை; மடமை - எல்லாம் அறிந்தும் அறியாதது போலிருக்கும் தன்மை; குண்டலம், குழை, தோடு என்பன மகளிர் காதணிகள். குழை - தளிர் வடிவமான காதணி. தொங்கட்டான்என்பர். 30*

***3739. 'பஞ்சு பூத்த விரல், பதுமம்***
***பவளம் பூத்த அடியாள், என்***
***நெஞ்சு பூத்த தாமரையின் நிலையம்***
***பூத்தாள், நிறம் பூத்த***
***மஞ்சு பூத்த மழைய அனைய குழலாள்,***
***கண்போல் மணிக் குவளாய்!***
***நஞ்சு பூத்ததாம் அன்ன நகையால்***
***என்னை நலிவாயோ?'***

***பஞ்சு பூத்த விரல்*** *- செம்பஞ்சுக்குழம்பு ஊட்டிய விரல்களால்;* ***பதுமம் பவளம் பூத்த*** *- செந்தாமரை மலரில் பவளம் பொருந்தியது போன்ற;* ***அடியாள் -*** *அடிகளை உடையவளும்;* ***என் நெஞ்சு பூத்த தாமரையின் நிலையம்*** *- என் மனமென்னும் மலர்ந்த தாமரை மலராகிய நிலையத்தில்;* ***பூத்தாள் -*** *(எப்பொழுதும்)விளங்குபவளும்;* ***நிறம் பூத்த -*** *கருநிறத்தால் சிறந்து விளங்கும்;* ***மஞ்சு பூத்த மழை அனைய குழலாள் -*** *அழகுமிக்க மேகம் போன்ற கூந்தலை உடையவளுமான சீதையின்;* ***கண்போல் -*** *கண்களைப்போன்று விளங்கும்;* ***மணிக்குவளாய் -*** *அழகிய குவளை மலரே!* ***நஞ்சு பூத்ததாம் அன்ன -*** *நஞ்சு*

*படர்ந்தது போல;* ***நகையால் -*** *(நின்) சிரிப்பால்;* ***என்னை நலிவாயோ -*** *என்னை வருத்துவாயோ?*

*எப்போதும் என் மனத்தாமரையில் தங்கியிருக்கும் சீதையின் கண்களை நீ ஒத்திருத்தலால், அவள் என்னிடம் அன்புகாட்டுதல் போல் நீயும் அன்புகாட்ட வேண்டியதிருக்க, என் துன்பங்கண்டு பரிகசித்து மகிழ்தல் தக்கதன்று என்பதாம். திருமகள் தங்குமிடம் தாமரை ஆதலாலும், இராமன் மனத்தில் அவள் என்றும் இருப்பதாலும் 'என் நெஞ்சு பூத்த தாமரையின் நிலையம்' என்றார். சீதையின் திருவடிகள் தாமரை மலராகவும், செம்பஞ்சூட்டிய விரல்கள் தாமரையில் பூத்த பவளமாகவும் கொள்ளத்தகும். "பாற்கடல் பிறந்த செய்ய பவளத்தைப் பஞ்சியூட்டி "மேற்பட மதியஞ் சூட்டி விரகுற நிரைத்த - மெய்ய - காற்றகை விரல்கள், (4479)' பஞ்சியூட்டிய பரட்டிசை கிண்கிணிப்பதுமச் செஞ்செவிச் செழும் பவளத்தின் கொழுஞ்சுடல் (4838) என்பனவும் காணத்தகுவன. 'பூத்த' என்ற சொல் பலமுறை பயின்றமையால் சொற்பின்வருநிலை அணியாகும். 'நகுதல்' என்பது இங்கு மலர்தல். (பரிகாசமாகச்) சிரித்தல் எனும் ஒரு பொருளையும் தந்தது. மலரின் இயல்பான மலர்ச்சியைப் பரிகாசச் சிரிப்பாகக் கொண்டது தற்குறிப்பேற்ற அணியாகும். நஞ்சு வருத்துவதாலும் கருநிறத்தாலும் குவளைக்கு உவமை. 'நஞ்சினும் கொடிய நாட்டம்' (896) என்றது காண்க. சீதை கூந்தலுக்கு மழை உவமையாதல் 'மழையேந்திய குழலாள்' (1931) என்ற அடியும் உணர்த்தும். 31*

கலிவிருத்தம்

***3740. என்று அயா உயிர்க்கின்றவன்,***
***ஏடு அவிழ்***
***கொன்றை ஆவிப்புறத்து இவை***
***கூறி, 'யான்***
***பொன்ற, யாதும்***
***புகல்கிலை போலுமால்,***
***வன் தயாவிலி!'***
***என்ன வருந்தினான்;***

***என்று இவை கூறு*** - *என்று இத்தகைய வார்த்தைகளைப் பேசி;* ***அயா உயிர்க்கின்றவன்*** - *பெருமூச்சு விடுகின்றவனாகிய இராமபிரான்;* ***ஏடு அவிழ் கொன்றை*** - *இதழ்கள் மலர்ந்த கொன்றை மரங்களை உடைய;* ***ஆவிப்புறத்து*** - *பொய்கையின் கரையில் இருந்து;* ***யான் பொன்ற*** - *(கொன்றையை நோக்கி) "சீதையின் பிரிவால் நான் அழிந்துபடுதலைக் கண்டும்;* ***யாதும் புகல்கிலை போலுமால்*** - *ஒன்றும் ஆறுதலாகக் கூறாது இருக்கின்றாய் (ஆதலால்);* ***வன் தயாவிலி*** - *வன்மைக் குணமுடைய அருளற்ற கொடியை";* ***என்ன வருந்தினான்*** - *என்று வருந்திப் பேசினான்.*

*பிரிந்தவர்கள் கொன்றையை நோக்கி வருந்துதல் நூல்மரபு. 'கொன்றைக் கொடியாய் கொணர்கின்றலையோ? என்றைக்கு உறவாக இருந்தனையோ?' என்று பின்னரும் (4205) கொன்றவை நோக்கி இராமன் பேசுவதைக் காண்க. 32*

***3741. வார் அளித் தழை மாப்***
***பிடி வாயிடை,***
***கார் அடிளக் கலுழிக் கருங்***
***கைம் மலை***
***நீர் அளிப்பது***
***நோக்கினன், நின்றனன் -***
***பேர் அளிக்குப் பிறந்த***
***இல் ஆயினான்.***

***பேர் அளிக்கு*** - *மிக்க கருணைக்கு;* ***பிறந்த இல் ஆயினான்*** - *பிறப்பிடமாக உள்ள இராமபிரான்;* ***கார் அளி*** - *கரிய வண்டுகள் மொய்க்கப்பெற்ற;* ***கலுழிக் கருங்கைம்மலை*** - *மதநீர்ப்பெருக்கையுடைய கரிய ஆண்யானைகள்;* ***வார் அளித்தழை*** - *நீண்ட குளிர்ந்த தழைகளை;* ***மாப்பிடி வாயிடை*** - *(உண்ணும்) பெரிய பெண் யானைகளின் வாயில்;* ***நீர் அளிப்பது*** - *தண்ணீரை முகந்து கொடுத்து ஊட்டுவதை;* ***நோக்கினன் நின்றான்*** - *நோக்கி நின்றான்.*

*இராமன் கருணையின் பிறப்பிடமானவன் என்று கம்பர் பின்னரும் 'கருணையின் நிலையும் அன்னான்' (6975) என்று கூறுவார். கைம்மலை - யானை; முன்னே பிடி கூறப்பட்டதால் 'கைம்மலை' என்பது ஆண்யானையைக் குறித்தது. மதநீர்ப்பெருக்குடைய களிறும் தன் பிடி வருந்தா வண்ணம் நீரூட்டி அன்பு*

*காட்டுவதைக் கண்ட இராமன், அறிவும் ஆண்மையும் மிக்க தன்னால் சீதையின் துயர் நீக்கிப் பாதுகாக்க இயலாமை எண்ணி வருந்தி நின்றான். 'துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப், பிடியூட்டிப் பின் உண்ணுங் களிறு" (கலி. பாலை. 11.) என்ற அடிகள் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கன. 33*

*மாலைக் கடன் முடித்தல்*

***3742. ஆண்டு, அவ், வள்ளலை, அன்பு***
***எனும் ஆர் அணி***
***பூண்ட தம்பி,***
***'பொழுது கழிந்ததால்;***
***ஈண்டு இரும் புனல் தோய்ந்து,***
***உன் இசை என***
***நீண்டவன் கழல் தாழ்,***
***நெடியோய்! ' என்றான்.***

***ஆண்டு** - அப்பொழுது; **அன்பு எனும் ஆர் அணிபூண்டதம்பி** - அன்பு என்னும் அரிய அணிகலனை அணிந்த தம்பியாகிய இலக்குவன்; **அவ்வள்ளலை** - வள்ளலாகிய இராமனைப் பார்த்து; **'நெடியோய்** - பெரியோய்! **பொழுது கழிந்தது ஆல்** - பொழுது போயிற்று ஆதலால்; **ஈண்டு இரும்புனல் தோய்ந்து** - இப்பொழுது*

*இப்பொய்கை நீரில் மூழ்கி; **உன் இசையென நீண்டவன்** - உன் புகழைப் போல வளர்ந்த திருமாலின்; **கழல் தாழ்** - திருவடிகளை வணங்குவாயாக'; **என்றான்** - என்று வேண்டினான்.*

*பொழுது கழிந்தது அறியாது இராமன் வருந்த, இலக்குவன் இவ்வாறு கூறினான். பிற அணிகள் உடம்பை அழகு செய்ய, அன்பு எனும் அணி உயிரை அழகு செய்கிறது. அணி - காரணப்பொதுப்பெயர். 34*

***3743. அரைசும், அவ் வழி நின்று***
***அரிது எய்தி, அத்***
***திரை செய் தீர்த்தம், முன்***
***செய் தவம் உண்மையால்,***
***வரை செய் மா மத***
***வாரணம் நாணுற,***
***விரை செய் பூம் புனல்***
***ஆடலை மேயினான்.***

***அரைசும்** - இராமபிரானும்; **அவ்வழி நின்று அரிதுஎய்தி** - அந்த இடத்திலிருந்து அரிதாகச்சென்று; **அத்திரை செய் தீர்த்தம்** - அலைமோதும் அந்த பம்பைப் பொய்கை நீர்; **முன்செய்தவம் உண் மையால்** - முன்செய்த தவமுடைமையால்; **வரைசெய் மாமத வாரணம் நாணுற** - மலை போன்றதும் பெரும் மதப்பெருக்குடையதுமான யானையும்*

*நாணும்படி;* ***விரைசெய் பூம்புனல் -*** *மணம் கமழும் மலர்கள் நிறைந்த நீரில்;* ***ஆடல் மேயினான்*** *- நீராடுதலை மேற்கொண்டான்.*

*தானும் தூயதாய்த் தன்னிடம் நீராடுவார் துயர்நீக்கித் தூய்மை நல்கும் சிறப்புடையது தீர்த்தமாகும். அத்தகைய சிறப்புடைய பொய்கை இராமன்மேனி முழுவதும் படியப்பெறும் சிறப்பினைப் பெற்றது. அதற்கு முன் செய்த தவப்பயன் காரணம் என்பதால் 'திரைசெய் தீர்த்தம் முன் செய் தவம் உண்மையால்' என்றார். இராமன் நீராடியதற்கு ஒரு மதயானை நீரில் ஆடியது ஒப்பாகும்.*

*அரைசு - அரசு என்பதன் போலி. 35*

***3744. நீத்த நீரில் நெடியவன் மூழ்கலும்,***
***தீத்த காமத் தெறு கதிர்த் தீயினால்,***
***காய்த்து இரும்பை, கருமகக் கம்மியன்,***
***தோய்த்த தண் புனல் ஒத்தது, அத் தோயமே.***

**நெடியவன் -** *இராமன்;* ***நீத்தம் நீரில்*** *- பொய்கையின் வெள்ள நீரில்;* ***மூழ்கலும்*** *- முழுகின அளவில்;* ***தீத்த -*** *(அவன் திருமேனியை) வெதுப்பிய;* ***காமத் தெறுகதிர்த்தீயினால் -*** *காமமாகிய அழிக்கின்ற சுடர்விட்டு எரியும் நெருப்பினால்;* ***அத்தோயம் -*** *அப்பொய்கை நீர்;* ***கருமகக்கம்மியன் -*** *இரும்பு வேலை செய்பவனாகிய கருமான்;*

***காய்த்து இரும்பை*** *- இரும்பைக் காய்ச்சி;* ***தோய்த்த -*** *தோய்த்ததான;* ***தண்புனல் ஒத்தது*** *- குளிர்ந்த நீரை ஒத்தது.*

*சீதையைப் பிரிந்து வருந்தும் இராமபிரான் நீராடிய மாத்திரத்தில் அவன் மேனியின் வெப்பத்தால் அத்தண்ணீர் கொல்லன் உலையில் காய்ச்சிய இரும்பைத் தோய்த்த நீர்போலக் கொதித்தது என்பதாம்; உவமையணி. காமமும் கனலும் தாம் சேர்ந்த இடத்தைச் சுட்டெரிக்கும் தன்மையன ஆதலால் 'தீத்த காமத்தெறுகதிர்த்தீ' என்றார்; உருவக அணி. உலகத்து நீர் நெருப்பை அவிக்க, இக்காமத்தீ அந்நீரையும் கொதிக்கச் செய்யும் இயல்புடையதென வேற்றுமைப்பட வருதலின் வேற்றுமை அணியாகும்.*

*கருமகக்கம்மியன் - கருமக(கருமா)னாகிய கம்மியன்;இரு பெயரொட்டு. நீத்தம் - வெள்ளம்; நீந்தப்படுவது என்னும் பொருளது. 36*

***3745. ஆடினான், அன்னம் ஆய் அரு***
***மறைகள் பாடினான்,***
***நீடு நீர்; முன்னை நூல் நெறி***
***முறையின், நேமி தாள்***
***சூடினான்; முனிவர்தம் தொகுதி***
***சேர் சோலைவாய்,***
***மாடுதான் வைகினான்; எரி***
***கதிரும் வைகினான்.***

***அன்னமாய்* -** *அன்னப்பறவையின் வடிவெடுத்து;* ***அருமறைகள் பாடினான்* -** *அறிவதற்கு அரிய வேதங்களை (நான்முகனுக்கு) உபதேசம் செய்த திருமாலின் அவதாரமான இராமபிரான்;* ***நீடுநீர் ஆடினான்* -** *(அப்பொய்கையில்) மிக்க நீரில் நீராடி;* ***முன்னை நூல்நெறி முறையின்* -** *பழைய வேதங்களில் கூறிய நெறிப்படி;* ***நேமிதாள் சூடினான்* -** *திருமாலின் பாதங்களை வணங்கி;* ***முனிவர்தம் தொகுதிசேர்* -** *முனிவர்களின் கூட்டம் பொருந்திய;* ***சோலைவாய் மாடுதான்* -** *சோலையின் ஒருபக்கத்தில்;* ***வைகினான்* -** *தங்கியிருந்தான்;* ***எரிகதிரும் வைகினான்* -** *எரிக்கும் கதிர்களையுடைய கதிரவனும் மறைந்தான்.*

*திருமால் தன் திருவடிகளைத் தானே சூடினான் என்பது திருமால் தான் எடுத்த மானிடத்தோற்றத்திற்கு ஏற்றபடி, தன்னைத்தான் வணங்கினான் என்க. 'அன்னமாய் அருமறைகள் அறைந்தாய் நீ' என்று முன்னரும் (2575) கூறப்பட்டது. ''அன்னமாய் நூல் பயந்தாற் காங்கிதனைச் செப்புமினே' (பெரிய. திருமொழி. 9-4-2) எனும் தொடரை ஒப்புநோக்குக. இராமன் திருமாலின் அமிசமாதலின் திருமாலின் செயல்கள் இராமன் செயல்களாகக் கூறப்பட்டன.* *37*

*சந்திரன் உதயம்*

***3746. அந்தியாள் வந்து தான்***
***அணுகவே, அவ் வயின்***
***சந்த வார் கொங்கயாள்***
***தனிமைதான் நாயகன்***
***சிந்தியா, நொந்து தேய் பொழுது,***
***தெறு சீத நீர்***
***இந்து வான் உந்துவான், எரி***
***கதிரினான் என.***

***அந்தியாள்* -** *அந்திப்பொழுதாகிய பெண்;* ***வந்துதான் அணுகவே* -** *வந்து சேரவே;* ***அவ் வயின்* -** *அப்போது;* ***சந்தவார் கொங்கையாள்* -** *அழகிய கச்சணிந்த தனங்களை உடைய சீதை;* ***தனிமைதான்*** *- பிரிந்து தனியே இருக்கும் நிலையினை;* ***நாயகன் சிந்தியா*** *- இராமன் நினைத்து;* ***நொந்து தேய்பொழுது*** *- மனம்வருந்தி வாடும் போது;* ***தெறுசீத நீர் இந்து-*** *வருததுகின்ற குளிர்ந்த தன்மையை உடைய சந்திரன்;* ***எரி கதிரினான் என-*** *வெய்ய கதிர்களை உடைய சூரியன் போல;* ***வான் உந்துவான் -*** *வானத்தில் எழுவானாயினான்.*

*அந்தியாள் - மாலைக்காலமாகிய பெண்;*

*'அந்தியென்னும் பசலை மெய்யாட்டி' என்பது மணிமேகலை. (5-140). பிரிந்தார்க்குக் குளிர்ந்த பொருள்களுக்கு வெப்பம் தருமாதலின் சந்திரனும் சூரியன்போல வெப்பமுண்டாகத் தோன்றினான் என்றார். 'காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலைமலரும் இந்நோய்' (குறள் 1227) என்றபடி மாலையில் ஆசை மிகுதியால் இராமனுக்குத் தனிமைத்துன்பம் அதிகமாயிற்று. என - உவம உருபு.*
*38*

*3747.* ***பூஒடுங்கின; விரவு புள்***
***ஒடுங்கின, பொழில்கள்;***
***மா ஒடுங்கின; மரனும் இலை***
***ஒடுங்கின; கிளிகள்***
***நா ஒடுங்கின; மயில்கள் நடம்***
***ஒடுங்கின; குயில்கள்***
***கூ ஒடுங்கின; பிளிறு குரல்***
***ஒடுங்கின, களிறு.***

***பூ ஒடுங்கின -*** *(இரவு வருதலும்) மலர்கள் குவிந்தன;* ***பொழில்கள் -*** *சோலைகளில்;* ***விரவுபுள் ஒடுங்கின -*** *வந்து கலந்த பறவைகள் தத்தம் இடங்களில் போய் அடங்கின;* ***மா ஒடுங்கின -*** *விலங்குகள் தம் செயல் அடங்கின;* ***மரனும் இலை ஒடுங்கின -*** *மரங்களும் இலைகள் குவியப் பெற்றன;* ***கிளிகள் நா ஒடுங்கின*** *- கிளிகள் பேசுதல் இன்றி அடங்கின;* ***மயில்கள் நா ஒடுங்கின -*** *மயில்கள் ஆடுதல் ஒழிந்தன;* ***குயில்கள் கூ ஓடுங்கின*** *- குயில்கள் இனிமையாகக் கூவுதலை நிறுத்தின;* ***களிறு பிளிறு குரல் ஒடுங்கின*** *- யானைகள் பிளிறுதலாகிய பேரொலி அடங்கின.*

*ஒடுங்குதல் - உறக்கம் கொண்டு ஒடுங்குதல்; ஒடுங்குதல் என்ற சொல் ஒரே பொருளில் பலமுறை வந்ததால் சொற்பொருள் பின்வரு நிலையணியாகும். மரனும் என்றஇழிவு சிறப்பும்மை அதன் ஓரறிவுடைமையைக் குறித்தது. கூ - முதனிலைத் தொழிற்பெயர்; பிளிறு குரல் - வினைத்தொகை; இப்பாடல் சுந்தரகாண்டம் 158 ஆம்பாடலை ஒத்திருத்தல் காண்க.(4992) 39*

*3748.* ***மண் துயின்றன; நிலைய மலை***
***துயின்றன; மறு இல்***
***பண் துயின்றன; விரவு பணி***
***துயின்றன; பகரும்***
***விண் துயின்றன; கழுதும் விழி***
***துயின்றன; பழுது இல்***
***கண் துயின்றில, நெடிய கடல்***
***துயின்றன களிறு.***

***மண் துயின்றன*** *- பூமியில் வாழும் உயிரினங்கள் தூங்கின;* ***நிலைய மலை துயின்றன*** *- அசையாத நிலையை உடைய மலையில் உள்ள உயிர்கள் உறங்கின;* ***மறுஇல் பண் துயின்றன*** *- குற்றமற்ற நீர் நிலைகள் தூங்கின;* ***விரவு பணி துயின்றன*** *- (நாகலோகத்தில்) பொருந்திய பாம்புகள் உறங்கின;* ***பகரும் விண் துயின்றன*** *- பெருமையாகச் சொல்லப்படும் விண்மிசை உயிர்கள் தூங்கின;* ***கழுதும் விழி துயின்றன*** *- பேய்களும் கண் உறக்கம் கொண்டன;* ***நெடிய கடல் துயின்றன களிறு -*** *பெரிய திருப்பாற்கடலில் உறங்குவனவாகிய இராமலக்குவராகிய யானைகள்;* ***பழுது இல் கண்துயின்றில -*** *குற்ற மற்ற கண்களை மூடவில்லை.*

*மண், மலை, பண், பணி, விண், பேய், ஆகிய அனைத்தும் உறங்க, இராமலக்குவர் உறக்கம் கொள்ளவில்லை. இராமன் பிராட்டியைப் பிரிந்த வருத்தத்தாலும்,*

*இலக்குவன் எப்போதும் விழித்திருந்து இராமனைக் காக்கும் இயல்புடையனாதலாலும் இருவரும் உறங்கவில்லை.*

*மண், மலை, விண் என்பவை ஆகுபெயராய் அவற்றிலுள்ள உயிர்களை உணர்த்தின. பண் - நீர்நிலை. (திருக்குற்றாலப்புராணம்: திருநதி - 12). பண்ணை என்பதன் விகாரம். "நடுராத்திரியில் ஒரு முகூர்த்த காலம் நீர் தூங்கும்" என்பர். இரவில் அலைந்து திரியும் பேய் சிறிது போது தூங்கும். 'பேயும் துயின்றதால் பேரியாமம்'; "உயிர்புறம்பே தோன்றும் கழுதும் துயின்றதே" (நள-262, 114) என்ற அடிகளை ஒப்பு நோக்குக. களிறு உவமை ஆகுபெயராய் இராமலக்குவரை உணர்த்திற்று. 40*

*சீதையைத் தேடி, மேலும் நடத்தல்*

***3749. பொங்கி முற்றிய உணர்வு***
***புணர்தலும், புகையினொடு***
***பங்கம் உற்றனைய வினை பரிவுறும்படி,***
***முடிவு இல்***
***கங்குல் இற்றது; கமலம் முகம்***
***எடுத்தன; - கடலின்***
***வெங் கதிர்க் கடவுள் எழ, விமலன்***
***வெந் துயரின் எழ.***

***விமலன் -*** *குற்றமற்றவனாகிய இராமபிரான்;* ***வெந்துயரின் எழ -*** *கொடிய துன்பத்தினின்று நீங்கும்படி;* ***கடலின் வெங்கதிர்க்கடவுள் -*** *கடலில் வெய்யகதிர்களை உடைய கதிரவன்;* ***எழ -*** *உதிக்க;* ***பொங்கி முற்றிய உணர்வு -*** *நிரம்பி முதிர்ந்த மெய்யறிவு;* ***புணர்தலும் -*** *வந்து சேர்கையில்;* ***புகையினொடு*** *- புகையுடன்;* ***பங்கம் உற்று அனைய வினை -*** *சேறும் சேர்ந்தாற்போன்ற தீவினைகள்;* ***பரிவுறும்படி -*** *துன்பமடைந்து நீங்குவது போல;* ***முடிவுஇல்*** *- முடிவில்லாத;* ***கங்குல் இற்றது-*** *இரவு கழிந்தது;* ***கமலம் -*** *தாமரை மலர்கள்;* ***முகம் எடுத்தன*** *- மலர்ந்தன.*

*கதிரவன் தோன்றிய அளவில் இருள் நீங்குதலுக்கு மெய்யுணர்வு வந்து சேர்ந்த நிலையில் வினைகள் அழிந்தொழிதல் உவமம்; உவமை அணி. இரவுக் காலத்தில் மிக்கிருந்த துன்பம் பகற்காலத்தில் குறைவுபடுவதாலும், இராமன் அன்றையநாள் சுக்கிரீவன் நட்பைப் பெற இருப்பதாலும் 'விமலன் வெந்துயரின் எழ' என்றார். புகையும் சேறும் கலந்தாற்போன்ற வினை என்றது - பாவத்தைக் கருநிறமுடையதாகக் காட்டும் மரபை நோக்கும். புகை மேலிருப்பது, சேறு அடியிலிருப்பது. எனவே மேலும் கீழும் குற்றம் பொருந்திய தீவினைக்கு உவமையாயிற்று. பிரிந்திருப்பார்க்கு இரவு நீட்டித்ததாகத் தோன்றுமாதலின் 'முடிவில் கங்குல்' எனப்பட்டது. இராமனின் துயர் இனி நீங்குமாதலின் தாமரை தலை நிமிர்ந்து மலர்ந்தது எனலாம். விமலன் வெந்துயராவது - பிராட்டியைப் பிரிந்தமையால் உண்டான துன்பமாகும்.*
*41*

***3750. காலையே கடிது நெடிது ஏகினார்***
***கடல் கவினு***
***சோலை ஏய் மலை தழுவு கான***

***நீள் நெறி தொலைய,***
***ஆலை ஏய் துழனி அகநாடர்,***
***ஆர்கலி அமுது***
***போலவே உரைசெய் புன மானை***
***நாடுதல் புரிஞர்.***

***ஆலை ஏய் துழனி -*** *கரும்பாலைகளால் நிறைந்த ஓசையை யுடைய;* ***அகல் நாடர் -*** *பரந்த கோசலநாட்டிற்குரிய இராமலக்குவர்;* ***ஆர்கலி அமுதுபோலவே -*** *ஒலிக்கும் பாற்கடலில் தோன்றிய அமுதம் போல;* ***உரைசெய் -*** *இனிமையாகப் பேசுகின்ற;* ***புன மானை -*** *காட்டில் உள்ள பெண்மானை ஒத்த சீதையை;* ***நாடுதல் புரிஞர் -*** *தேடுபவர்களாய்;* ***கடல் கவினு சோலை ஏய்*** *- கடல்போன்ற சோலைகள் பொருந்தியதும்;* ***மலை தழுவும் -*** *மலைகள் தழுவப் பெற்றதுமான;*

***கான நீள்நெறி -*** *காட்டின் நீண்ட வழிகள்;* ***தொலைய -*** *நீங்குமாறு;* ***கடிதுநெடிது ஏகினார்*** *- விரைந்து நெடுந்தூரம் சென்றனர்.*

*கரும்பாலைகளின் ஒலிமிகுதியைக் கூறியதால் கோசலநாட்டின் வளம் புலனாயிற்று. 'ஆலை பாய் அமலை, ஆலைச் சாறுபாய் ஓதை(34) என நாட்டு வர்ணனையில் கூறியுள்ளார். இப்போது ஆலையிட்ட கரும்புபோல இராமலக்குவர் துன்பங்கள் அனுபவித்தாலும், பின்னர்க் கரும்பிலிருந்து பெறும் சக்கரை போல அரக்கர்களை வென்று அறத்தை நிலைநாட்டி இன்பம் அளிப்பர் என்பது குறிப்பாகும். சீதையின் சொல்லுக்கு அமுது உவமை. 'அஞ்சொற்கள் அமுதில் அள்ளிக்கொண்டவள்' என்றார் முன்னரும். (3136) குளிர்ச்சியாலும், நிறத்தாலும், பரப்பாலும் சோலை கடலை ஒக்கும்.*

*துழனி - ஒலி; ஆர்கலி - அன்மொழித்தொகை.* *42*

## அனுமப் படலம்

அனுமன் இராமனைச் சந்தித்த வரலாற்றைக் கூறுவது அனுமப்படலமாகும். இராமலக்குவர் வருவதைக் கண்ட சுக்கிரீவன் அஞ்சி ஓடி ஒளிந்தான். அனுமன் அவனுக்குத் தேறுதல் வார்த்தைகள் கூறி, மாணவ வடிவம் கொண்டு, இராமலக்குவரை அணுகி மறைந்து நின்று, அவர்கள் நிலையை உய்த்துணர்ந்தான். 'இவர்களே தருமம்' என்று துணிந்ததும் அவர்களை அடைந்து சுக்கிரீவனைப் பற்றியும் தன்னைப் பற்றியும் உரைக்க, இலக்குவனும் தங்கள் நிலையை உரைத்தான். அனுமன் தன் பேருருவைக் காட்ட, இராமன் அனுமனைப்பற்றி இலக்குவனிடம் வியந்து பேசினான். சுக்கிரீவனை அழைத்துவர அனுமன் விடை பெற்றுச் சென்றான்.

இராமலக்குவரைக் கண்ட சுக்கிரீவன் ஓடி ஒளிதல்

கலிவிருத்தம்

**3751. எய்தினார், சவரி, நெடிது, ஏய**
**மால் வரை எளிதின்;**
**நொய்தின் ஏறினர், அதனின்; நோன்மை**
**சால் கவி அரசு,**
**செய்வது ஓர்கிலன்; அனையர் தெவ்வர்**
**ஆம் என வெருவி,**
**'உய்தும் நாம்' என, விரைவின்**
**ஓடினான், மலை முழையின்.**

**எய்தினார் -** காடும் மலையும் கடந்து சென்ற இராமலக்குவர்; **சவரி நெடிது ஏய -** சபரி என்பவள் விரிவாக வழிசொல்லி அனுப்பிய; **மால்வரை-** பெரிய ருசியமுகம் என்னும் மலைமீது; **எளிதின் நொய்தின் ஏறினர் -** எளிதில் விரைவாக ஏறிச் சென்றனர்; **அதனின் -** அம்மலையில் இருந்த; **நோன்மை சால்கவி அரசு -** வலிமை மிக்க குரங்கினத்து அரசனாகிய சுக்கிரீவன்; **அனையர் தெவ்வர் ஆம் என -** வருகின்ற இவர்கள் நம் பகைவராவர் என்று; **வெருவி -** அஞ்சி; **செய்வது ஓர்கிலன் -** செய்வது இன்னதென்று அறியாதவனாய்; **'உய்தும் நாம்' என -** 'நாம் இப்பொழுது தப்பிப் பிழைப்போம்' என்று கருதி; **மலை முழையின்-** அம்மலையின் குகை ஒன்றினுள்; **விரைவின் ஓடினான் -** வேகமாய் ஓடினான்.

சுக்கிரீவன் வாழும் ருசியமுகம் என்னும் மலைக்குப் போகும் வழியெல்லாம் நினைந்து சொல்லி ஏவியவள் சபரி. அதனால் 'சவரி நெடிதுஏய மால்வரை' என்றார். 'வினையறு நோன்பினாளும் மெய்ம்மையின் நோக்கி வெய்ய, துனைபரித் தேரோன் மைந்தன் இருந்தஅத் துளக்கில் குன்றம், நினைவு அரிது ஆயற்கு ஒத்த நெறி எலாம் நினைந்து சொன்னாள்' (3704) என்பதைக் காண்க. கடத்தற்கரிய மலையை இராமலக்குவர் தம் ஆற்றலால் எளிதில் கடந்தனர். கவந்தனும் சபரியும் புகழ்ந்து பேசிய சுக்கிரீவனைக் காணும் ஆர்வத்தால் விரைந்து ஏறினர் என்பதால் 'நொய்தின் ஏறினர்' என்றார். சுக்கிரீவன் அரசனாகும் நிலை பெறுவான் ஆதலின் 'கவியரசு' எனப்பட்டான். 1

*3752. 'காலின் மா மதலை! இவர்*
*காண்மினோ; கறுவு உடைய*
*வாலி ஏவலின் வரவினார்கள்*
*தாம்; வரி சிலையர்;*
*நீல மால் வரை அனையர்;*
*நீதியா நினைதி' என,*
*மூலம் ஓர்கிலர் மறுகி*
*ஓடினார், முழைஅதனின்.*

***மூலம் ஓர்கிலர் -*** இராமலக்குவர் வரும் காரணத்தை உணராத வானரர்கள்; ***காலின் மாமதலை-*** காற்றின் புதல்வனாகிய அனுமனே! ***இவர்-*** இவர்கள்; ***கறுவு உடைய வாலி*** - நம்மிடம் பகைமை கொண்ட வாலியின்; ***ஏவலின் வரவினார்கள் -*** ஏவலால் நம்மை வருத்த வருகின்றவர்களாவர்; ***வரிசிலையர் -*** கட்டமைந்த வில்லையுடையராய் உள்ளனர்; ***நீலமால்வரை அனையர் -*** நீலநிறமுடைய மலை போன்ற தோற்றத்தை உடையவர்கள்; ***காண்மின் -*** (இவர்களைக்) காண்பாய்; ***நீதியா நினைதி என -*** முறையாக இவர்களை ஆராய்வாயாக என்று கூறிவிட்டு; ***மறுகி -*** மனங்கலங்கி; ***முழை அதனின் ஓடினார்*** - மலைக்குகைக்குள்ளே ஓடினார்கள்.

*முன் பாடலில் சுக்கிரீவன் ஓடியதைக் கூறியவர் இப்பாடலில் அவனது அமைச்சர் முதலாயினோர் ஓடியதைக் கூறுகின்றார். அமைச்சர்களில் நுண்ணறிவும் சூழ்ச்சியும் மிக்கோன் அனுமன் ஆதலின் அவனையே வந்திருப்போரை ஆராயுமாறு பணித்தனர். சாபத்தால் வாலி ருசியமுகம் என்னும் மலைக்கு வராது தனக்குப் பதிலாக வீரர்களை ஏவியிருக்கலாம் எனக் கருதியதால் 'கறுவுடைய வாலி ஏவலின் வரவினார்கள்' என்றார். நீலமால் வரை இராமன் மேனிக்கு ஏற்ற உவமையயகிறது. இலக்குவனுக்குக் கூறுங்கால், இராமனின் திருமேனி ஒளி இளையவன்மீது படுதலால், பொன்னொளி அடங்கி நீல ஒளியுடையதாகக் காணப்பட்டதாகப் பொருந்திக் கொள்ளலாம். சுக்கிரீவன் சென்ற குகையினுள்ளே அமைச்சர்களும் சென்றனர் என்பது தோன்ற 'முழை அதனின்' எனப்பட்டது.*

*காலின் மாமதலை - அனுமன்; வாயுவின் அருளால் அஞ்சனா தேவியிடத்தில் பிறந்தவன். இதனை அவனே சொல்கின்றான் (3765). வாலி என்பதற்கு வாலில் வலியுள்ளவன் என்பதும், வாலினின்று பிறந்தவன் என்பதும்பொருள்.*

*சாபத்தால் பெண் வடிவடைந்த வானர அரசனின் வாலின் அழகைக் கண்டு மயங்கிய இந்திரன் அருளால் தோன்றியவன் வாலி; கழுத்தின் அழகைக்கண்டு காதலித்த சூரியன் அருளால் தோன்றியவன் சுக்கிரீவன். மதலை - அண்மை விளி; ஓ - அச்சப்பொருளில் வந்தது; தாம் - அசைச்சொல் தேற்றப்பொருளில் வந்தது.*
*2*

*இராமலக்குவரை அனுமன் அணுகி, மறைய நின்று சிந்தித்தல்*

*3753. அவ் இடத்து, அவர் மறுகி, அஞ்சி,*
*நெஞ்சு அழி அமைதி,*
*வெவ் விடத்தினை மறுகு*

***தேவர், தானவர், வெருவல்***
***தவ்விட, தனி அருளு தாழ்***
***சடைக் கடவுள் என,***
***'இவ் இடத்து இனிது இருமின்; அஞ்சல்'***
***என்று இடை உதவி,***

***அவ்இடத்து -*** *அந்தக் குகையில்;* ***அவர் மறுகி -*** *சுக்கிரீவன், அமைச்சர் முதலியோர் மனம் கலங்கி;* ***அஞ்சி -*** *பயந்து;* ***நெஞ்சு அழி அமைதி -*** *மனவுறுதி இழந்து நிற்கும் சமயத்தில்;* ***வெவ்விடத்தினை*** *- கொடிய ஆலகால நஞ்சைக்கண்டு;* ***மறுகு -*** *கலங்கிய;* ***தேவர், தானவர் -*** *தேவர்களும் அசுரர்களும்;* ***வெருவல் தவ்விட*** *- அஞ்சுதல் நீங்கும்படி;* ***தனி அருளு -*** *தனித்து வந்து அருள்செய்த;* ***தாழ்சடைக் கடவுளென*** *- தாழ்ந்த சடையினையுடைய சிவபிரான்போல;* ***இவ் இடத்து இனிது இருமின் -*** *(வானரர்களை நோக்கி) 'இந்த இடத்தில் இனிதாக இருங்கள்;* ***அஞ்சல் என்று -*** *அஞ்ச வேண்டாம்' என்று;* ***இடை உதவி -*** *இடை நின்று ஆறுதல் கூறி;*

*வெவ்விடம் - பாற்கடல் கடைந்தபோது வாசுகியால் தோன்றிய ஆலகால நஞ்சு. கரிய நிறங்கொண்ட நஞ்சைக் கண்டு அஞ்சிய வானவர்களைப்போலக் கருநிற வண்ணனாம் இராமமனக் கண்டு வானரர்கள் அஞ்ச, சிவபிரான் வானவர்களின் துன்பம் நீக்கியது போல அனுமான் அஞ்சற்க என ஆறுதல் கூறினான். இஃது உவமை அணியாம். தாழ்சடைக் கடவுள் - சிவபிரான். 'நஞ்சட எழுதலும் நடுங்கி நாண்மதிச் செஞ்சடைக் கடவுளை அடையும் தேவர்போல' (442) என முன்னரும் கூறப்பட்டுள்ளது. அனுமன் சிவபிரானின் அம்சம்; ஆதலால் சிவபிரானை அனுமானுக்கு ஒப்பிட்டார். 'புராரி 'மற்று யானும் காற்றின் சேய்' எனப்புகன்றான்' (206) என்றது காண்க. அஞ்சல் - அல்லீற்று வியங்கோள்வினைமுற்று. 3*

***3754. அஞ்சனைக்கு ஒரு சிறுவன்,***
***அஞ்சனக் கிரி அனைய***
***மஞ்சனைக் குறுகி, ஒரு***
***மாணவப் படிவமொடு,***
***'வெஞ் சமத் தொழிலர், தவ மெய்யர்,***
***கைச் சிலையர்' என,***
***நெஞ்சு அயிர்த்து, அயல் மறைய***
***நின்று, கற்பினின் நினைவும்:***

***அஞ்சனைக்கு ஒரு சிறுவன்-*** *அஞ்சனாதேவியின் ஒப்பற்ற மகனான அனுமன்;* ***ஒரு மாணவப் படிவமொடு -*** *ஒரு மாணாக்கன் வடிவம் தாங்கி;* ***அஞ்சனக்கிரி அனைய -*** *நீலமலையைப் போன்ற;* ***மஞ்சனைக்குறுகி -*** *மைந்தனாம் இராமனை நெருங்கி;* ***அயல் மறைய நின்று*** *- அருகில் மறைவாக நின்று;* ***'வெஞ்சமத் தொழிலர்*** *- (அவர்களை நோக்கி) இவர்கள் கொடிய போர்த்தொழில் உடையர்;* ***தவ மெய்யர் -*** *தவவேடம் தாங்கிய உடம்பினர்;* ***கைச்சிலையர் -*** *கையில் வில்லேந்தியுள்ளனர்';* ***என நெஞ்சு அயிர்த்து -*** *என்று மனத்தில் ஐயங்கொண்டு;* ***கற்பினின் நினையும் -*** *தனது கல்விஅறிவால் அவர்களைப் பற்றிச் சிந்தித்தான்;*

*அனுமன் உண்மை அறிதற் பொருட்டுத் தன் வடிவத்தை மாற்றிக்கொண்டு மாணாக்க வேடத்தோடு இராமனை அணுகினான். அஞ்சனை - அனுமனின் தாய்; அஞ்சனை மகன் ஆஞ்சனேயன். மஞ்சன் - மைந்தன் என்பதன் போலி. தயரதன் மகன் என்னும் கருத்தால் மஞ்சன் என்றார். மைந்தன் - வலிமையுடையவன் என்றும் கொள்ளலாம். போர்த்தொழில் உடையராயும், வில்லேந்தியவராயும் விளங்கியவர்கள் தவவேடம் கொண்டவராயும் தோன்றியதால் அனுமன் ஐயங்கொண்டான். இவ்வாறே சடாயுவும் இராமலக்குவரைக் கண்டபோது "வினையறு நோன்பினர் அல்லர்; வில்லினர்; புனை சடை முடியினர்; புலவரோ" (2700) எனஅயிர்த்தான். 4*

***3755. 'தேவருக்கு ஒரு தலைவர் ஆம்***
***முதல் தேவர் எனின்,***
***மூவர்; மற்று, இவர் இருவர்;***
***மூரி வில் கரர்; இவரை***
***யாவர் ஒப்பவர், உலகில்? யாது,***
***இவர்க்கு அரிய பொருள்?***
***கேவலத்து இவர் நிலைமை தேர்வது***
***எக் கிழமை கொடு?***

**தேவருக்கு -** *தேவர்களுக்கெல்லாம்;* **ஒரு தலைவர் ஆம் -** *ஒப்பற்ற தலைவர்களாகிய;* **முதல் தேவர் எனின் -** *முதன்மையான தேவர்களோ என்றால்;* **மூவர் -** *அவர்கள் மூவராவர்;* **இவர் இருவர் -** *இவர்கள் இருவராய் இருக்கின்றனர்;* **மூரிவில்கரர் -** *(அவர்கள் சூலம், திகிரி, வேதம் ஏந்தியிருக்க) இவர்கள் வில்லைத் தாங்கிய சுரத்தினர்;* **இவரை ஒப்பவர் -** *இவர்களை ஒத்தவர்கள்;* **உலகில் யாவர் -** *உலகில் யாருளர்?;* **இவர்க்கு அரிய பொருள் -** *இவர்களுக்குச் செய்தற்கு அரிய செயல்தான்;* **யாது -** *யாது உளது?;* **கேவலத்து -**

*எளிதாக;* **இவர் நிலைமை -** *இவர்கள் நிலைமையை;* **எக்கிழமை கொடு** *- எந்தத் தகுதியைக் கொண்டு;* **தேர்வது -** *தெளிவது?*

*மும்மூர்த்திகட்கும் இராமலக்குவர்க்கும் உள்ள வேற்றுமை கூறப்பட்டது. முத்தேவர் அல்லாதவராயினும் யாவர்க்கும் மேலானவர்களாகத் தோன்றியதால் 'இவரை ஒப்பார் யார்? யாது இவர்க்கு அரிய பொருள்' என அனுமன் கருதினான். உணர்தற்கரிய பெரியர் ஆதலின் எக்கிழமை கொண்டு தேர்வது என மயங்கினான். இப்பாடலால் இராமலக்குவர் தமக்கு நிகர் இல்லாதவர். செயற் கருஞ்செயல் புரிபவர்; உயிர்களால் உணர்தற்கரிய இயல்பினர் என்பன புலப்படுகின்றன.*
*5*

***3756. 'சிந்தையில் சிறிது துயர்***
***சேர்வுற, தெருமரலின்***
***நொந்து அயர்த்தவர் அனையர்; நோ***
***உறச் சிறியர் அலர்;***
***அந்தரத்து அமரர் அலர்; மானிடப்***
***படிவர்; மயர்***

***சிந்தனைக்கு உரிய பொருள்***
***தேடுதற்கு உறு நிலையர்;***

***சிந்தையில் -*** *(இவர்கள்) மனத்தில்;* ***சிறிது துயர் சேர்வுற -*** *சிறிது துன்பம் வந்து அடைய;* ***தெருமரலின் -*** *அத்துன்பத்தால்;* ***நொந்து அயர்த்தவர் அனையர் -*** *மனம் வருந்திச் சோர்ந்தவர்கள் போன்று காணப்படுகின்றனர்;* ***நோவுற -*** *(அவ்வாறு) எளிதில் துன்பம் அடைவதற்கு;* ***சிறியர் அலர் -*** *எளியவர்கள் அல்லர்;* ***அந்தரத்து-*** *தேவலோகத்து வாழும்;* ***அமரர் அலர் -*** *தேவர்கள் அல்லர்;* ***மானிடப் படிவர் -*** *மானிட வடிவமுடையார்;* ***மயர் சிந்தனைக்கு*** *- மயங்கத்தக்க மனத்திற்கு;* ***உரிய பொருள் -*** *ஏற்ற ஒரு சிறந்த பொருளை;* ***தேடுதற்கு -*** *தேடுவதற்கு;* ***உறும் நிலையர் -*** *பொருந்திய நிலைமையினை உடையராக விளங்குகின்றனர்.*

*மானிட வடிவம் என அறிந்ததால் தேவர் அல்லர் இவர்கள் எனத் தெளிய முடிந்தது. கண்ணிமைத்தல், கால்நிலம்தோய்தல் முதலிய அடையாளங்களால் மானிடர் என அறிந்தான். எளிதில் துன்புறும் சிறியர் அலர் என்றதால். அவர்கள் துயர்க்குரிய காரணம் பெரியதாய் இருக்கவேண்டும் என்பது பெறப்பட்டது.*

*தெருமரல் - தெருமா - பகுதி; மயர்சிந்தனை - வினைத்தொகை 6*

***3757. 'தருமமும் தகவும், இவர்; தனம்***
***எனும் தகையர், இவர்;***
***கருமமும் பிறிது ஓர் பொருள் கருதி***
***அன்று; அது கருதின்,***
***அரு மருந்து அனையது, இடை***
***அழிவு வந்துளது; அதனை,***
***இருமருங்கினும், நெடிது***
***துருவுகின்றனர், இவர்கள்.***

***தருமமும் தகவும் இவர் -*** *தருமமும் நல்லொழுக்கமுமாகவே இவர்கள் கொள்ளத்தக்கவர்;* ***தனம் எனும் தகையர் -*** *தமக்குரிய செல்வமாக தருமத்தையும் தகவையும் எண்ணும் தன்மையுடையவர்கள்;* ***இவர் கருமமும் -*** *இவர்களது செயலும்;* ***பிறிது ஓர் பொருள் -*** *வெறோருபொருளை;* ***கருதி அன்று -*** *கருதியது அன்று;* ***அது கருதின் -*** *அது குறித்து ஆராய்ந்து பார்த்தால்;* ***அருமருந்து அனையது -*** *பெறுதற்கரிய அமிழ்தம் போன்ற பொருளிற்கு;* ***இடை அழிவு வந்துளது -*** *இடையிலே அழிவு வந்திருக்கின்றது;* ***அதனை -*** *அந்த அரிய பொருளையே;* ***இவர்கள் - . ;*** ***இருமருங்கிலும் -*** *இரண்டு பக்கங்களிலும்;* ***நெடிது துருவுகின்றனர் -*** *நெடிதாகப் பார்வையைச் செலுத்தித் தேடுகிறார்கள்.*

*அனுமன் சூரியனிடம் எல்லாக்கலைகளையும் கற்றவனாதலின் இராமலக்குவரின் முகக்குறிப்புகளால் அவர்களின் நிலையை ஊகித்து அறிந்தனன்.*

*தருமமும் தகவும் செல்வமாகும் என்பதை 'அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை' (குறள் - 32) என வள்ளுவரும் குறித்தார். அருமருந்து - கிடைத்தற்கரிய தேவ அமுதம்;*

*சீதை அம்மருந்து போன்றவள். 'மருந்து அனையதேவி' (5350) என்றது காண்க.*
*7*

***3758. 'கதம் எனும் பொருண்மை இலர்;***
***கருணையின் கடல் அனையர்;***
***இதம் எனும் பொருள் அலது, ஓர்***
***இயல்பு உணர்ந்திலர் இவர்கள்;***
***சதமன் அஞ்சுறு நிலையர்;***
***தருமன் அஞ்சுறு சரிதர்;***
***மதனன் அஞ்சுறு வடிவர்;***
***மறலி அஞ்சுறு விறலர்.'***

***இவர்கள்-** -; **கதம் எனும்-** கோபம் என்னும்; **பொருண்மை இலர்-** பொருளின் தன்மையில்லாதவர்கள்; **கருணையின் -** கருணையால்; **கடல் அனையர் -** கடலை ஒத்தவர்கள்; **இதம் எனும் பொருள் அலது -** நன்மை என்கின்ற பொருளை அல்லாமல்; **ஓர் இயல்பு உணர்ந்திலர் -** வெறோரு பொருளை (தீமையை) அறிந்தவர்கள் அல்லர்; **சதமன்-** இந்திரனும்; **அஞ்சுறு நிலையர் -** அஞ்சத்தக்க தோற்றம் உள்ளவர்கள்; **தருமன் -** தரும தேவதையும்; **அஞ்சுறு சரிதர் -** அஞ்சத்தக்க ஒழுக்கம் உடையவர்கள்; **மதனன் -** மன்மதனும்; **அஞ்சுறு வடிவர் -** அஞ்சத்தக்க வடிவழகு பொருந்தியவர்கள்; **மறலி -** யமனும்; **அஞ்சுறுவிறலர் -** அஞ்சத்தக்க ஆற்றல் நிறைந்தவர்கள்.*

*கோபம் இல்லாமை மட்டுமன்றி, அதற்குரிய தன்மையும் இவர்கள்மாட்டு இல்லாமையால் ''கதமெனும் பொருண்மையிலர்'' என்றான். தோற்றப்பொலிவில் இந்திரனைவிட, நல்லொழுக்கத்தில் அறக்கடவுளைவிட, வடிவழகில் மன்மதனைவிட, ஆற்றலில் யமனைவிட இராமலக்குவர் மேம்பாட்டு விளங்கினர் என அனுமன் உணர்ந்தான். கருணை மிகுதியை உணர்த்தவே 'கருணையின் கடல் அனையர்' என நினைந்தான். சதமகன் என்பது சதமன் என மருவியது; நூறு யாகங்களைச் செய்தவன் ஆதலின் இந்திரன் சதமகன் எனப்பட்டான். (சதம் - நூறு; மகம் - யாகம்) மதனன் - களிப்பை உண்டாக்குபவன்; மறல் - கொடுமை, அதை உடையவன் மறலி. 8*

*அனுமன் இவர்களே தருமம் என்று துணிதல்.*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3759. என்பன பலவும் எண்ணி,***
***இருவரை எய்த நோக்கி,***
***அன்பினன், உருகுகின்ற***
***உள்ளத்தன், ஆர்வத்தோரை***
***முன்பிரிந்து, அனையர்தம்மை முன்னினான்***
***என்ன நின்றான் -***
***தன் பெருங்குணத்தால் தன்னைத்***
***தான்அலது ஒப்பு இலாதான்.***

***தன் பெருங்குணத்தால்-*** *தனது சிறந்த குணங்களால்;* ***தன்னைத் தான் அலது -*** *தனக்குத்தானே ஒப்பாவதன்றி;* ***ஒப்பு இலாதான் -*** *வேறு ஒப்புமை இல்லாதவனாகிய அனுமன்;* ***என்பன பலவும் எண்ணி*** *- மேற்கூறியவாறு பலவற்றையும் எண்ணி;* ***இருவரை எய்த நோக்கி -*** *அவ்விருவரையும் உற்றுப்பார்த்து;* ***அன்பினன் உருகுகின்ற -*** *அன்பால் உருகுகின்ற;* ***உள்ளத்தன் -*** *உள்ளம் கொண்டவனாய்;* ***ஆர்வத்தோரை -*** *அன்புடையவர்களை;* ***முன் பிரிந்து -*** *முன்னர் ஒரு காலத்தில் விட்டுப்பிரிந்து;* ***அனையர்தம்மை -*** *அவர்களை;* ***முன்னினான் என்ன -*** *மீண்டும் எதிர்ப்பட்டான் போல;* ***நின்றான் -*** *(அன்பு கொண்டு) நின்றான்.*

*முன்பு ஒருகாலும் காணாத இராமலக்குவர் அனுமனுக்கு முன்னரே பழகியவர் போலவே காணப்பட்டதால் 'ஆர்வத்தோரை முன்பிரிந்து அனையர் தம்மை முன்னினான் என்ன' என்றார். வீடணன் இராமனைக் காண நினைத்த போதே, 'முன்புறக் கண்டிலேன், கேள்வி முன்பிலேன், அன்புறக் காரணம் அறியகிற்றிலேன், என்புறக் குளிரும் நெஞ்சுருகும்' என்று உருகியதைக் காணலாம். (6384)*

*தன்னில் தான் அலது ஒப்பிலாதான் என்றது பொது நீங்குவமை. அனுமன் தனக்கு உவமை இல்லாதவன் என்பது பெறப்பட்டது. "தன்னலது ஒரு பொருள் தனக்கு மேலிலான்" (3626) என இராமனும் கூறப்பட்டிருத்தல் காண்க.*
*9*

***3760. 'தன்கன்று கண்ட அன்ன***
***தன்மைய, தறுகண் பேழ் வாய்***
***மின் கன்றும் எயிற்றுக் கோள்மா,***
***வேங்கை, என்று இனையவேயும்,***
***பின்சென்று, காதல் கூரப்***
***பேழ்கணித்து இரங்குகின்ற;***
***என்கன்றுகின்றது, எண்ணிப்***
***பற்பல இவரை? அம்மா!***

***தறுகண் -*** *கொடிய கண்ணையும்;* ***பேழ்வாய் -*** *பெரிய வாயினையும்;* ***மின்கன்றும் எயிற்று -*** *மின்னலும் ஒளிகுன்றி வருந்தும் படியான பற்களையும் உடைய;* ***கோள்மா -*** *சிங்கம்;* ***வேங்கை -*** *புலி;* ***என்று இனைய ஏயும்*** *- என்ற இவைபோன்ற கொடிய விலங்குகளும் (இராமலக்குவரைக் கண்டு);* ***தன் கன்று -*** *தத்தம் கன்றுகளை;* ***கண்ட அன்ன தன்மையை -*** *கண்டாற்போன்ற தன்மையனவாய்;* ***பின்சென்று காதல்கூர -*** *இவர்கள் பின்னால் சென்று காதல் மேலிட;* ***பேழ் கணித்து இரங்குகின்ற -*** *மருண்டு விழித்து உள்ளம் உருகுகின்றன;* ***இவரைப் பற்பல எண்ணி -*** *(இங்ஙனம் இருக்க) இவர்களைப் பகைவர்களாகப் பலவாறு எண்ணி;* ***கன்றுகின்றது ஏன்? -*** *வருந்துவது ஏன்?*

*கொடிய விலங்குகளும் தம் கொடுமை நீங்கி, இராமலக்குவர் மாட்டு அன்புகாட்டி உருகுமாயின், இவர்களைப் பகைவர்களாக எண்ணி அஞ்சுவதற்குக் காரணம் இல்லை என்பது பெறப்படுகிறது. கொடிய விலங்குகளும் தம் கன்றுகளுக்கு அன்பு காட்டல் இயல்பு ஆதலின் இராமன்மாட்டு அன்புகாட்டும் விலங்குகளுக்கு அவற்றை உவமை*

*கூறினார். இதனால் இராமலக்குவரின் உயர்வு புலனாகிறது. 'தன் கன்று கண்ட அன்ன தன்மைய' என்றது ஒருமை பன்மை மயக்கம். அம்மா - வியப்பிடைச்சொல். 10*

***3761. 'மயில் முதல் பறவை எல்லாம்,***
***மணி நிறத்து இவர்கள் மேனி***
***வெயில் உறற்கு இரங்கி, மீதா,***
***விரி சிறைப் பந்தர் வீசி,***
***எயில் வகுத்து எய்துகின்ற; இன***
***முகில் கணங்கள், எங்கும்***
***பயில்வுற, திவலை சிந்தி,***
***பயப்பயத் தழுவும், பாங்கர்.***

***மயில் முதல் பறவை எல்லாம்-*** *மயில் முதலான பறவைகள் எல்லாம்;* ***மணி நிறுத்து இவர்கள் மேனி -*** *மணிபோன்ற நிறத்தினை யுடைய இவர்கள் மேனியில்;* ***வெயில் உறற்கு இரங்கி -*** *வெயில் படுவதற்கு மனம் வருந்தி;* ***மீதா, விரிசிறைப் பந்தர் வீசி -*** *இவர்கள் மீது*

*விரிந்த சிறகுகளைப் பந்தலாகப் பரப்பி,* ***எயில் வகுத்து -*** *மதில் போலச் சுற்றிலும் வளைத்துக்கொண்டு;* ***எய்துகின்ற -*** *தொடர்ந்து வருகின்றன;* ***இனமுகில் கணங்கள்-*** *இனமாகிய மேகக் கூட்டங்கள்;* ***எங்கும் பயில்வுற -*** *எல்லா இடங்களிலும் நெருக்கமாக;* ***திவலை சிந்தி -*** *நீர்த்துளிகளைச் சிந்திக்கொண்டு;* ***பாங்கர் -*** *இவர்கள் பக்கத்தில்;* ***பயப்பயத்தழுவும்-*** *மெல்ல மெல்லத் தொடர்ந்து வருகின்றன;*

*மயில் முதலிய பறவைகள் நிழல் செய்ய, மேகங்கள் நீர்த்துளிகளைச் சிந்தி வெப்பம் தாக்காது இருவரையும் காக்க முயன்றன. இராமன் நிறத்திற்கு நீலமணியும், இலக்குவன் நிறத்திற்கு மாணிக்க மணியும் உவமையாகக் கொள்ளலாம். உயர்ந்தோர்க்குப் பறவைகள் இங்ஙனம், சிறை விரித்து நிழல் செய்யும் என்பதை "ஆஅயெயினன் --- மயங்கமர் வீழ்ந்தென--- ஒண்கதிர் தெறாமைச் சிறகரில் கோலி நிழல் செய்து' (அகம். 208-5-12) என்பதால் அறியலாம். முகிற்கூட்டங்கள் நீர்த்துளிகளைச் சிந்திச் செல்வதைப் 'பனிபுரை துளிமேகம் புயல்தர. . . வழியினியன போனார்' (2000) என்பதில் காண்க. பந்தர், பாங்கர் - போலிகள். பையப் பைய என்பன பயப்பய எனப் போலியாய் அடுக்கின. 11*

***3762. 'காய் எரி கனலும் கற்கள்,***
***கள்ளுடை மலர்களேபோல்,***
***தூய செங் கமல பாதம் தோய்தொறும்,***
***குழைந்து தோன்றும்;***
***போயின திசைகள்தொறும், மரனொடு***
***புல்லும் எல்லாம்***
***சாய்வுறும், தொழுவபோல்; இங்கு,***
***இவர்களோ தருமம் ஆவார்?***

***காய்எரி கனலும் கற்கள் -*** *சுடும் நெருப்புப்போல வருத்துகின்ற பரற்கற்கள்;* ***தூய செங்கமல பாதம் -*** *தூய்மையான (இவர்களது) செந்தாமரை மலர் போன்ற திருவடிகள்;* ***தோய்தொறும் -*** *படும்போ தெல்லாம்;* ***கள்ளுடை மலர்களே போல் -*** *தேன் பொருந்திய புதிய மலர்களைப் போல;* ***குழைந்து தோன்றும் -*** *மென்மையாகக் குழைந்து விளங்குகின்றன;* ***போயின திசைகள் தோறும் -*** *(இவர்கள்) சென்ற இடங்களில் எல்லாம்;* ***மரனொடு புல்லும் எல்லாம் -*** *மரங்களோடு புல் முதலிய யாவும்;* ***தொழுவபோல்-*** *(இவர்களை) வணங்குவன போல;* ***சாய்வுறும் -*** *சாய்ந்து நிற்கின்றன;* ***இங்கு -*** *இதனால்;* ***தருமம் ஆவார் -*** *தருமதேவதைகள் ஆவார்;* ***இவர்களோ -*** *இவர்கள் தாமோ?*

*இவர்களின் திருவடிகள் பட்டமாத்திரத்தில் சுடுகின்ற பரற்கற்கள் மென்மையாகின்றன; இவர்களைக் கண்டபோது ஓரறிவுடைய மரமும் புல்லும் வணங்குகின்றன என்று இவர்களின் கடவுள் தன்மையைக் குறித்து அனுமன் வியந்தான். மரமும் புல்லும் சாய்வுறும் தொழுவபோல் என்றது தற்குறிப்பேற்ற அணியாம். "மரங்கள் நின்று மதுத்தாரைகள் பாயும், மலர்கள் வீழும் வளர் கொம்புகள் தாழும், இரங்கும் கூம்பும் திருமால் நின்ற பக்கம் நோக்கி அவை*

*செய்யும் குணமே" (பெரியாழ்வார் - 3 - 6 - 284) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. 'வறுத்து வித்திய அனையன வல்லயில் பரல்கள், பறித்து வித்திய மலரெனக் குளிர்ந்தன' (2038) என முன்னரும் வருதல் காண்க.*

*இவர்களோ - ஓகாரம் வியப்புப் பொருள்.* *12*

***3763 . துன்பினைத் துடைத்து, மாயத் தொல்***
***வினை தன்னை நீக்கி,***
***தென் புலத்து அன்றி, மீளா***
***நெறி உய்க்கும் தேவ்ரோதாம்?***
***என்பு எனக்கு உருகுகின்றது; இவர்கின்றது***
***அளவு இல் காதல்;***
***அன்பினுக்கு அவதி இல்லை; அடைவு***
***என்கொல்? அறிதல் தேற்றேன்.***

***துன்பினைத் துடைத்து -*** *பிறவித் துன்பங்களைப் போக்கி;* ***மாயத்தொல்வினை தன்னை நீக்கி -*** *(அத்துன்பங்களுக்குக் காரணமான) மயக்கத்தால் உண்டாகின்ற பழவினை தன்னைப் போக்கி;* ***தென்புலத்து அன்றி*** *- தெற்குத் திசையிலுள்ள யமலோகத்தில் அல்லாமல்;* ***மீளா நெறி உய்க்கும் -*** *(சென்றவர்கள்) மீண்டு வருதலில்லா முத்திநெறியில் செலுத்துகின்ற;* ***தேவரோதாம் -*** *கடவுளரோ இவர்கள்?;* ***எனக்கு என்பு உருகுகின்றது -*** *(இவர்கள்மாட்டு) என் எலும்பும் உருகுகின்றது;* ***அளவு இல்காதல் இவர்கின்றது -*** *அளவு இல்லாத காதல் மேன்மேலும் மிகுகின்றது;* ***அன்பினுக்கு அவதி இல்லை -*** *(இவர்களிடம் எனக்குத் தோன்றும்) அன்பிற்கு எல்லை இல்லை;* ***அடைவு என்கொல் -*** *(அவ்வாறு ஆவதற்குக்) காரணம் யாதோ?;* ***அறிதல் தேற்றேன் -*** *அறிய இயலாதவனாக இருக்கின்றேன்.*

*துன்பு என்றது பிறவித்துன்பங்களை; அவையாவன தன்னைப்பற்றி வரும் தலைவலி முதலாகிய ஆதியாத்மிகம், பிற உயிர்களால் வரும் ஆதிபெளதிகம். தெய்வத்தால் நிகழும் ஆதிதெய்விகம் எனப்படுவன. வினை அநாதி காலந்தொட்டு வருதலின் தொல்வினை எனப்பட்டது; நல்வினை, தீவினைகளாய பழவினை எனப்பொருள்படும். 'இருள் சேர் இருவினை' என்றார் வள்ளுவர். (குறள். 5); மீளாநெறி - மீண்டும் பிறப்பின்கண் வாராத முக்திநெறி. இராமனால் சரபங்கனும் சபரியும் பிறப்புநீங்கி முக்தியடைவதைக் காணலாம். 'இவர்களோ தருமம் ஆவர்' என்றுமுன்னர் வினவியவன் இந்தப்பாடலில் மீளாநெறியுய்க்கும் தேவரோ என்று வியப்பதனால் வந்திருப்பவர்களின் மேன்மையை அனுமன் உணர்ந்து கொண்டான் என அறியமுடிகிறது. இறைவனைக் காண்கையில் எலும்பு உருகும் என்பதை 'இரும்பு மனத்தேனை ஈர்த்து ஈர்த்து என் என்புருக்கி' (திருவாசகம் 544) என்ற மணிவாசகர் வாக்கும் உணர்த்தும். அனுமன் உருகியதுபோல வீடணனும் 'என்புறக் குளிரும் நெஞ்சுருகும் மேலவன், புன்புலப் பிறவியின் பகைஞன் போலுமால்" (6384) என்று கூறுவதைக் காணலாம். மீளாநெறி உய்க்கும் தேவர்க்கன்றித் தன்னுள்ளம் அன்பு செலுத்தி உருகாது என்பதையும் அனுமன் உணர்த்தினான் என்க.*
*13*

*அனுமன் எதிர் சென்று வரவேற்றலும்'நீ யார்' என இராமன் வினாவுதலும்*

***3764. இவ் வகை எண்ணி, ஆண்டு,***
***அவ் இருவரும் எய்தலோடும்,***
***செவ் வழி உள்ளத்தானும், தெரிவுற***
***எதிர் சென்று எய்தி,***
***'கவ்வை இன்றாக, நுங்கள்***
***வரவு! ' என, கருணையோனும்,***
***'எவ் வழி நீங்கியோய்? நீ யார்'***
***என, விளம்பலுற்றான்:***

***இவ்வகை எண்ணி** - இவ்வாறு ஆலோசித்து; **செவ்வழி உள்ளத் தானும் -** செம்மை பொருந்திய மனமுடையவனாகிய அனுமனும்; **ஆண்டு** - அவ்விடத்தில்; **அவ்இருவர் எய்தலோம் -** அவ்விரண்டு பேரும் வந்த அளவில்; **தெரிவுற எதிர்சென்று எய்தி -** அவர்களுக்குத் தெரியுமாறு எதிரில்சென்று அடைந்து; **நுங்கள் வரவு** - "உங்கள் வருகை; **கவ்வை இன்றாகஎன** - துன்பம் இல்லாதது ஆகுக" என வரவேற்க; **கருணையோனும் -** அருள் உடையவனாகிய இராமனும்; **எவ்வழி நீங்கியோய்? -** நீஎவ்விடத்திலிருந்து வருகின்றாய்? **யார் நீ -** நீ யார் **என விளம்பலுற்றான் -** என்று வினவ (அனுமன்) சொல்லத் தொடங்கினான்.*

*முன்பு மறைய நின்று இராமலக்குவரின் இயல்புகளை ஆராய்ந்து அறிந்தவனாதலால், அவர்கள் தானிருக்கும் இடத்தை அடைந்தபோது மறைந்து நில்லாமல் அவர்கள் காண எதிரில் சென்றான் என்பதால் 'தெரிவுற எதிர் சென்று எய்தி' என்றார். அனுமன் நேர்வழியில் செல்பவன் ஆதலால் 'செவ்வழி உள்ளத்தான்' எனப்பட்டான். பின் இதே படலத்தில் சுக்கிரீவனைச் செவ்வழி உள்ளத்தான் என இராமன் குறிக்கிறான் (3770). இராமன் வருகையால் துன்பம் ஏற்படும் என்று சுக்கிரீவன் முதலியோர் கருதியதால் 'கவ்வை இன்றாக நுங்கள் வரவு' என அனுமன்*

*வரவேற்றான். "தீதுஇல் வரவுஆக திரு! நின் வரவு" (2769) என இராமன் சூர்ப்பணகையிடம் கூறியதை ஒப்புநோக்கலாம். புதிதாக வருபவரை இங்ஙனம் கூறி வரவேற்றல் இயல்பு. கருணையோன் என்றது இராமனை. 14*

அனுமன் விடை

***3765. 'மஞ்சு எனத் திரண்ட கோல***
***மேனிய! மகளிர்க்கு எல்லாம்***
***நஞ்சு எனத் தகைய ஆகி, நளிர்***
***இரும் பனிக்குத் தேம்பாக்***
***கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய***
***கண்ண! யான் காற்றின் வேந்தற்கு***
***அஞ்சனை வயிற்றில் வந்தேன்; நாமமும்***
***அனுமன் என்பேன்;***

**மஞ்சு எனத்திரண்ட** - *மேகம் போல நீலநிறமுடையதாய்த் திரண்டு அமைந்த;* **கோல மேனிய -** *அழகிய மேனியை உடையவனே!;* **மகளிர்க்கு எல்லாம் -** *பெண்கள் யாவர்க்கும்;* **நஞ்சு எனத்தகைய ஆகி-** *நஞ்சு என்று சொல்லத்தக்க தன்மையை உடையனவாகி;* **நளிர் இரும் பனிக்கு -** *குளிர்ச்சி மிக்க பனிக்கு;* **தேம்பாக் கஞ்சம் ஒத்து -** *வாடாத தாமரை மலர்களுக்கு ஒப்பாக;* **அலர்ந்த -** *மலர்ந்து விளங்குகின்ற;* **செய்ய கண்ண -** *சிவந்த கண்களை உடையவனே!;* **யான் -** *யான்;* **காற்றில் வேந்தற்கு -** *வாயுதேவனுக்கு;* **அஞ்சனை வயிற்றில் -** *அஞ்சனாதேவியின் வயிற்றில்;* **வந்தேன் -** *பிறந்தேன்;* **நாமமும் -** *என் பெயரும்;* **அனுமன் என்பேன் -** *அனுமன் என்று அழைக்கப்பெறுவேன்.*

*நீலமேகம் நிறத்தாலும், குளிர்ச்சியாலும், அழகாலும் இராமன் மேனிக்கு உவமையாயிற்று. தன்னைக் காணும் மகளிர்க்கு இன்பம் அளிக்காமல் காமநோயை உண்டாக்கி வருத்துவதால் 'நஞ்சு எனத் தகைய ஆகி' எனப்பட்டது. "ஏழையர் ஆவியுண்ணும் இணைக்கூற்றம் கொல்லோ அறியேன். அழியங் கண்ணபிரான் திருக்கண்கள் கொலோ அறியேன்" (திருவாய்மொழி 7.7) என்பது ஒப்புநோக்கத்தக்கது. பனிக்குத் தேம்பாக் கஞ்சம் இராமன் கண்களுக்கு இல்பொருள் உவமை. இராமனின் அழகிய மேனியிலும், சிவந்த கண்களிலும் அனுமன் ஈடுபாடு கொண்டதைக் 'கோலமேனிய,' செய்யகண்ண' என்னும் தொடர்கள்உணர்த்தும். 15*

***3766. 'இம்மலை இருந்து வாழும்***
***எரி கதிர்ப் பரிதிச் செல்வன்***
***செம்மலுக்கு ஏவல் செய்வேன்;***
***தேவ! நும் வரவு நோக்கி***
***விம்மல் ஊற்று அனையன் ஏவ,***
***வினவிய வந்தேன்' என்றான்***
***எம் மலைக் குலமும் தாழ,***
***இசை சுமந்து, எழுந்த தோளான்.***

**எம்மலைக் குலமும் -** *எந்த மலைக்கூட்டமும்;* **தாழ-** *தாழ் வுறும்படி;* **இசை சுமந்து -** *புகழைச் சுமந்து கொண்டு;* **எழுந்த தோளான் -** *உயர்ந்த தோள்களை உடையவனாகிய*

*அனுமன்;* ***இம்மலை இருந்து வாழும் -*** *"இந்த ருசிய முகம் என்னும் மலையில் தங்கியிருந்து வாழ்ந்து வரும்;* ***எரிகதிர்ப் பரிதிச் செல்வன் -*** *எரிகின்ற ஒளிக்கதிர்களை உடைய சூரிய தேவனின் மகனாகிய;* ***செம்மலுக்கு -*** *தலைவனாகிய சுக்கிரீவனுக்கு;* ***ஏவல்செய்வேன் -*** *ஏவிய பணிகளைச் செய்பவனாவேன்;* ***தேவ நும்வரவு நோக்கி-*** *நும்முடைய வருகையைப் பார்த்து;* ***விம்மல் உற்று -*** *உள்ளப்பூரிப்பு அடைந்து;* ***அனையன் -*** *அந்தச் சுக்கிரீவன்;* ***ஏவ -*** *(உங்களை யாரென்று அறிந்து வருமாறு) ஏவியதால்;* ***வினவிய வந்தேன் -*** *விசாரித்து அறிந்து செல்ல வந்தேன்";* ***என்றான் -*** *என்றான்.*

*தோள்கள் மலைக்கூட்டத்தினும் உயர்ந்தும் வலிமையுடையனவாயும் இருத்தலால் 'எம்மலைக் குலமும்' தாழ எனப்பட்டது. புகழ் ஆகிய சுமையைச் சுமந்தும் தாழாமல் உயர்ந்த தோள் என்று மேலும் தோள்களின் சிறப்பை உணர்த்த, 'இசை சுமந்து எழுந்த' என அடைமொழி தரப்பட்டது. 'இம்மலை' என்ற அண்மைச்சுட்டால் இராமன் வந்துள்ள இடம் ருசியமுகம் என்பது பெறப்படுகிறது.*

*தேவ, நும் என்றது ஒருமைபன்மை மயக்கம். முன்னை செய்யுளில் "கோலமேனிய, செய்ய கண்ண!" எனப் புறஅழகில் ஈடுபட்ட அனுமன் இப்பாடலில் 'மீளா நெறியுய்க்கும் தேவரோதாம்' என எண்ணியதற்கேற்பத் "தேவ" என விளித்தான். 'பரிதிச் செல்வன் செம்மல்' என்பதால் சுக்கிரீவன் பெருமையும் 'இசை சுமந்து எழுந்த தோளான்' என்பதில் அனுமன் பெருமையும் இப்பாடலில்உணர்த்தப்பட்டுள்ளன.* *16*

*அனுமனை இராமன் பாராட்டி, இலக்குவனுக்கு உரைத்தல்*

***3767. மாற்றம்அஃது உரைத்தலோடும்,***
***வரிசிலைக் குரிசில் மைந்தன்***
***தேற்றம் உற்று, இவனின் ஊங்கு***
***செவ்வியோர் இன்மை தேறி***
***'ஆற்றலும், நிறைவும், கல்வி***
***அமைதியும், அறிவும் என்னும்***
***வேற்றுமை இவனோடு இல்லையாம்'***
***என, விளம்பலுற்றான்.***

***மாற்றம் அஃது -*** *அந்த மறுமொழியை;* ***உரைத்தலோடும்-*** *அனுமன் சொன்ன அளவில்;* ***வரிசிலைக்குரிசில் மைந்தன் -*** *கட்ட மைந்த வில்லை உடைய வலியோனாகிய இராமன்;* ***தேற்றம் உற்று-*** *தெளிவடைந்து;* ***இவனின் ஊங்கு -*** *இவ்வனுமனைக் காட்டிலும்;* ***செவ்வியோர் இன்மைதேறி -*** *செம்மைக் குணம் உடையோர் பிறர் இன்மையைத் தெளிந்து;* ***ஆற்றலும் -*** *திறமையும்;* ***நிறைவும் -*** *நிறைந்த குணங்களும்;* ***கல்வி அமைதியும் -*** *கல்வியால் வரும் அடக்கமும்;* ***அறிவும் -*** *அறிவும்;* ***என்னும் -*** *என்று சொல்லக் கூடியன அனைத்தும்;* ***வேற்றுமை இவனோடு இல்லையாம் -*** *இவனோடு வேறுபாடு உடையனவாக இல்லை;* ***என -*** *என்று நினைத்து;* ***விளம்பலுற்றான் -*** *(இலக்குவனுக்குச்) சொல்லத் தொடங்கினான்.*

*அனுமனைவிட நற்குணம் உடையார் இல்லையெனவும், எல்லா மேன்மைப் பண்புகளும் அவனிடம் அமைந்திருத்தலும் தெளிவாக அறிந்தான் இரரமன் என்பதைத் 'தேற்றமுற்று' என்ற தொடர் புலப்படுத்துகிறது. ஆற்றல், அருங்குணங்கள், கல்வி, அறிவு ஆகியவற்றின் வடிவமாகவே அனுமனை இராமன் கண்டான். அறிவு என்பது இயற்கை அறிவு. கல்வி என்பது செயற்கையால் வந்த அறிவாகும். 'புலமிக்கவரைப் புலமை தெரிதல், புலமிக்கவர்க்கே புலனாம்' (பழமொழி 7) என்றவாறு இராமன் அனுமனை அறிந்து கொண்டான். 17*

***3768. '"இல்லாத உலகத்து எங்கும், இங்கு***
***இவன் இசைகள் கூரக்***
***கல்லாத கலையும், வேதக் கடலுமே"***
***என்னும் காட்சி***
***சொல்லாலே தோன்றிற்று அன்றே?***
***யார்கொல் இச் சொல்லின்செல்வன்? -***
***வில் ஆர்தோள் இளைய***
***வீர! - விரிஞ்சனோ? விடைவலானோ?***

***வில்லார் தோள் இளைய வீர -*** *வில் அமைந்த தோளைஉடைய இளைய வீரனே!* ***இங்கு இவன் இசைகள் கூர -*** *இங்கு இவன் புகழ் மிகும்படி;* ***கல்லாத கலையும் -*** *கற்றுக்கொள்ளாத கலைகளும்;* ***வேதக் கடலும் -*** *வேதமாகிய கடலும்;* ***உலகத்து எங்கும் இல்லாத -*** *உலகத்தில் எங்கும் இல்லாதனவே;* ***என்னும் காட்சி -*** *என்று சொல்லுமாறு (இவன் பெற்றிருக்கும்) அறிவுத்தெளிவு;* ***சொல்லாலே -*** *இவன் பேசிய சொல்லாலேயே;* ***தோன்றிற்று அன்றே -*** *வெளிப்பட்டதன்றோ?;* ***இச்சொல்லின் செல்வன் -*** *இத்தகைய சொல்லின் செல்வனாக விளங்கும் இவன்;* ***விரிஞ்சனோ-*** *நான்முகனோ?;* ***விடைவலானோ-*** *விடை ஏறி நடத்த வல்ல சிவனோ?* ***யார்கொல் -*** *யாராக இருத்தல் கூடும்.*

*இவன் கல்லாத கலையும் வேதக்கடலும் உலகத்து இல்லாதனவே என்றதால் அனுமன் எல்லாக்கலைகளையும் எல்லா வேதங்களையும் நன்கு கற்றவன் என்பது புலனாம். வேதத்தின் விரிவைப்புலப்படுத்த வேதக்கடல் என உருவகம் அமைந்தது. இராமனுக்கு இடையூறு நேரிடுமோ என எப்போதும் கவனத்தோடு இருப்பது பற்றி 'வில்லார் தோள் இளைய! வீர' - என இராமன் விளித்தான் என்க. 'வில்லை ஊன்றி கையோடும் வெய்துயிர்ப்போடும் வீரன். . . . கங்குல் எல்லை காண்பளவும் நின்றான், இமைப்பிலன் நயனம் (2344) என்பது காண்க. பிரமனின் அமிசமாகவோ, உருத்திரனின் அமிசமாகவோ இருந்தாலன்றி இத்தகைய சொல்லின் செல்வம் பெற இயலாது. எனவே இச்செல்வம் பெற்ற அனுமன் அவ்விருவருள் யார் அமிசமாவான் என வியந்து இராமன் பாராட்டியதாகும். திருமூர்த்திகளுள் இராமபிரான் திருமால் அவதாரமாதலின், தன்னை விடுத்து மற்ற இருவருள் யாரோ என ஐயுற்றான் என்றும்கூறுவர். 18*

***3769. 'மாணிஆம் படிவம் அன்று, மற்று***
***இவன் வடிவம்; மைந்த!***
***ஆணி இவ் உலகுக்கு எல்லாம்***
***என்னலாம் ஆற்றற்கு ஏற்ற***

***சேண் உயர் பெருமைதன்னைச்***
***சிக்கு அறத் தெளிந்தேன்; பின்னர்க்***
***காணுதி மெய்ம்மை' என்று,***
***தம்பிக்குக் கழறி, கண்ணன்,***

***மைந்தா -*** *வலிமையை உடைய இலக்குவ!* ***இவன் வடிவம் -*** *இவனது வடிவம்;* ***மாணி ஆம் படிவம் அன்று -*** *இப்போது காணப்பெறும் சாதாரண பிரமச்சாரி வடிவம் அன்று;* ***மற்று-*** *பின் யாதெனில்;* ***இவ்வுலகுக்கு எல்லாம் -*** *இந்த உலகங்களுக்கு எல்லாம்;* ***ஆணி என்னலாம் -*** *அச்சாணி என்று சொல்லக்கூடிய;* ***ஆற்றற்கு ஏற்ற -*** *(இவன்) திறமைக்கு ஏற்றதாகிய;* ***சேண் உயர் பெருமை தன்னை -*** *மிகவும் மேம்பட்ட சிறப்புக்களை;* ***சிக்கு அறத் தெளிந்தேன்-*** *(நான்) ஐயமின்றித் தெரிந்து கொண்டேன்;* ***பின்னர்க் காணுதி மெய்ம்மை -*** *அஃது உண்மையாதலை நீயும் பின்பு காண்பாய்;* ***என்று, தம்பிக்கு -*** *என்று தம்பியாகிய இலக்குவனுக்கு;* ***கண்ணன் கழறி -*** *இராமபிரான் இடித்துக் கூறி . . . .*

*குளகச்செய்யுள்; - அடுத்த பாடலில் 'என்றான்' என்பதோடு முடியும். காட்சியால் சாதாரண மாணியாகத் தோன்றினாலும் செயல்திறமையில் இவ்வுலகுக்கெல்லாம் அச்சாணி எனத் தக்கவன் அனுமன் என்பதால் 'ஆணி இவ்வுலகுக் கெல்லாம்' என்றார். 'ஆகவே இவனது உருவம் கண்டு குறைத்து மதித்திடலாகாது என்றதாயிற்று. 'உருவு கண்டெள்ளாமை வேண்டும் உருள் பெருந்தேர்க்கு அச்சாணி அன்னார் உடைத்து' என்னும் (குறள் 667) திருவள்ளுவரின் சொற்பொருள் இச்செய்யுளில் அமைந்தமை உணர்க. சேண் உயர் - ஒரு பொருட்பன்மொழி; கண்ணன் - என்றது இராமனை. அழகிய கண்களை உடையவன், கண்ணோட்டம் மிக்கவன்; கருநிறமுடையவன் எனப்பல பொருள் கூறுவர். ஆற்றலும் நிறைவும் கல்வி அமைதியும் அறிவும் கொண்ட சொல்லின் செல்வன் என, விரிஞ்சனோ? விடை வலானோ? என வியந்தும் பலவாறாக அனுமனது பெருமைகளை எடுத்துக் கூறியும் அதைக்கேட்டும் கேளாதவன் போல் - குறிப்பறியாதவன் போல் இடித்த புளியாக நின்ற இலக்குவனை இடித்துக் கூறினான் இராமன் என்பதைக் 'கழறி' என்ற சொல்லால் கம்பர் குறித்துள்ள நயம் காணத்தக்கதாகும். 19*

*சுக்கிரீவனைக் காட்டுக என இராமன் வேண்டுதல்*

***3770 . 'எவ்வழி இருந்தான், சொன்ன***
***கவிக் குலத்து அரசன்? யாங்கள்,***
***அவ் வழி அவனைக் காணும்***
***அருத்தியால் அணுக வந்தேம்;***
***இவ்வழி நின்னை உற்ற எமக்கு,***
***நீ இன்று சொன்ன***
***செவ் வழி உள்ளத்தோனைக்***
***காட்டுதி, தெரிய' என்றான்.***

***சொன்ன கவிக்குலத்து அரசன் -*** *(அனுமனை நோக்கி) "நீ சொன்ன குரங்குக் கூட்டத்தின் அரசனாகிய சுக்கிரீவன்;* ***எவ்வழி இருந்தான் -*** *எவ்விடத்தில் உள்ளான்?*

***யாங்கள்*** *- நாங்கள்;* ***அவ் வழி அவனைக் காணும்*** *- அவ்விடத்திற்குச் சென்று அவனைக் காணும்;* ***அருத்தியால்*** *- விருப்பத்தோடு;* ***அணுக வந்தேம்*** *-*

*அவனைச்சார வந்தோம்;* ***இவ்வழி****- இந்த இடத்தில்;* ***நின்னை உற்ற எமக்கு*** *- உன்னை எதிர்ப்பட்ட எங்களுக்கு;* ***நீ இன்று சொன்ன*** *- நீ இப்போது கூறிய;* ***செவ்வழி உள்ளத்தோனை*** *- செந்நெறியில் செல்லும் உள்ளம் உடைய சுக்கிரீவனை;* ***தெரியக் காட்டுதி*** *- (நாங்கள் தெரிந்து கொள்ளுமாறு) காட்டுவாயாக";* ***என்றான்*** *- என்று கூறினான்.*

*அனுமன் தன் தலைவனைப் 'பரிதிச் செல்வன் செம்மல்' (3766) என்று குறிப்பிட, இராமன் 'கவிக்குலத்து அரசன்' எனச் சுக்கிரீவன் பெருமை தோன்றப் பேசினான். அரசனாதலின் அவன் இருக்கும் இடத்தில் சென்று காண்பதே முறையாதலின் 'செவ்வழி உள்ளத்தோனைத் தெரியக் காட்டுதி' என்றான்.*
*20*

*அனுமன் விடை*

***3771. 'மாதிரப் பொருப்போடு ஓங்கு வரம்பு***
***இலா உலகில், மற்றுப்***
***பூதரப் புயத்து வீரர் நும்***
***ஒக்கும் புனிதர் யாரே?***
***ஆதரித்து அவனைக் காண்டற்கு அணுகினிர்***
***என்னின், அன்னான்,***
***தீது அவித்து அமையச் செய்த, செய்***
***தவச் செல்வம் நன்றே!***

***மாதிரப் பொருப்போடு*** *- திசைகளின் எல்லைகளில் உள்ள சக் கரவாளகிரி என்னும் மலையோடு;* ***ஓங்கு****- உயர்ந்து;* ***வரம்பு இலா உலகில்****- எல்லையில்லாமல் விரிந்து கிடக்கும் உலகத்தில்;* ***பூதரப் புயத்து வீரர்*** *- பூமியைத் தாங்கும் மலைபோன்ற (உலகத்தைத் தாங்கும்) தோள்களையுடைய வீரர்களாகிய;* ***நும் ஒக்கும்*** *- உங்களை ஒத்து விளங்கும்;* ***புனிதர் யாரே*** *- தூயவர் வேறு யாருளர்? (எவருமிலர்);* ***அவனை ஆதரித்து*** *- அச்சுக்கிரீவனிடத்து அன்பு காட்டி;* ***காண்டற்கு அணுகினிர் என்னின்*** *- அவனைக் காண்பதற்க நீங்கள் இங்கு வந்தீர்கள் என்றால்;* ***அன்னான்*** *- அச்சுக்கிரீவன்;* ***தீது அவித்து*** *- தீமைகளைச் செய்யும் ஐம்பொறிகளை அடக்கி;* ***அமையச் செய்த*** *- பொருத்தமுறச் செய்த;* ***செய்தவச் செல்வம்*** *- செய்தவமாகிய செல்வம்;* ***நன்றே*** *- சிறப்புடையதாகும்.*

*மாதிரப் பொருப்பு என்றது, சக்கரவாளகிரியை. திசைகளின் எல்லையில் இருப்பதால் அப்பெயர்பெற்றது. பூதரம் - மலை, பூமியைத் தாங்குவது என்ற காரணம் பற்றி வந்தது. வலிமையினாலும், உயர்வாலும், நில உலகை நிலை பெறச் செய்தலினாலும் மலை தோள்களுக்கு உவமை ஆயிற்று. வாலியினை வெல்ல வேண்டும் என்ற நோக்கம் உடையவன் ஆதலின் தோளின் பெருமையை அனுமன் பேசினான். புனிதர் யாரே - ஏகாரம் எதிர்மறை. பெருந்தவம் செய்திருந்தாலன்றி இராமபிரானைக் காணும் பேறு பெறாமையின் 'தீது அவித்து அமையச் செய்த செய்தவச் செல்வம் நன்றே'என்றான். 21*

***3772 . 'இரவிதன் புதல்வன் தன்னை,***
***இந்திரன் புதல்வன் என்னும்***
***பரிவுஇலன் சீற, போந்து,***
***பருவரற்கு ஒருவன் ஆகி,***
***அருவிஅம் குன்றில், என்னொடு***
***இருந்தனன்; அவன்பால் செல்வம்***
***வருவது ஓர் அமைவின் வந்தீர்;***
***வரையினும் வளர்ந்த தோளீர்!***

***வரையினும் வளர்ந்த தோளீர் -*** *மலையினும் பெரிதாக வளர்ந்த தோள்களை உடையவர்களே!* ***இரவிதன் புதல்வன்தன்னை -*** *சூரியன் மகனாகிய சுக்கிரீவனை;* ***இந்திரன் புதல்வன் என்னும் -*** *இந்திரன் மகன் என்று கூறப்படும்;* ***பரிவு இலன்-*** *இரக்கமற்றவனாகிய வாலி என்பவன்;* ***சீறப் போந்து -*** *சினந்து துரத்தியதால் அஞ்சி வந்து;* ***பருவரற்கு ஒருவன் ஆகி-*** *துன்பத்தை அனுபவிக்கத் தான் ஒருவனே ஆகி;* ***அருவி அம் குன்றில் -*** *அருவிகள் பாய்கின்ற அழகிய ருசியமுகம் என்னும் இம் மலையில்;* ***என்னோடு இருந்தனன் -*** *என்னோடு தங்கியிருக்கிறான்;* ***அவன்பால் -*** *அவனிடத்து;* ***செல்வம் வருவது ஓர் அமைவின் -*** *செல்வம் வருதற்குரிய ஒரு தன்மையினால்;* ***வந்தீர் -*** *(நீங்கள் இங்கு) வந்தீர்கள்.*

*இராமலக்குவர் வந்ததால் இனிச் சுக்கிரீவன் இழந்த செல்வத்தைப் பெறுவன் என்பதாம். வாலியை வெல்வது அனுமன் கருத்தாதலின் இங்கும் தோள் வலிமையைச் சுட்டிப் பேசினான் எனலாம். சுக்கிரீவன் தமையன் எனக்கூறாது வாலியை 'இந்திரன் புதல்வன்' என அன்னியன் போல் குறித்தது, உடன் பிறந்தார் இருவரிடை ஏற்பட்டுள்ள வேறுபாட்டாலாகும். துன்பத்தைத் தான் ஒருவனாகி அனுபவிப்பதால் சுக்கிரீவன் 'பருவரற்கு ஒருவனாகி' நின்றான். மனைவியையும் வாலி கவர்ந்து கொண்டான் என்பதைக் குறிப்பித்தவாறு. 22*

***3773 . 'ஒடுங்கல் இல் உலகம் யாவும்***
***உவந்தன உதவி வேள்வி***
***தொடங்கி, மற்றும், முற்றத் தொல்***
***அறம் துணிவர் அன்றே;***
***கொடுங் குலப் பகைஞன் ஆகிக்***
***கொல்லிய வந்த கூற்றை***
***நடுங்கினர்க்கு, அபயம் நல்கும் அதனினும்,***
***நல்லது உண்டோ?***

***ஒடுங்கல் இல் -*** *கருங்குதல் இல்லாது விரிந்துள்ள;* *உலகம்* ***யாவும்-*** *உலகத்தில் உள்ள உயிர்களெல்லாம்;* ***உவந்தன உதவி -*** *விரும்பியனவற்றைத் தானம் செய்து;* ***தொடங்கின வேள்வி -*** *தொடங்கின யாகங்களையும்;* ***மற்றும்- மற்றுமுள்ள தவம் முதலியவற்றையும்*** *;*

***முற்ற -*** *நிறைவேற்ற;* ***தொல்அறம் துணிவர் அன்றே*** *- (சான்றோர்கள்) தொன்று தொட்டு வரும் அறங்களைச் செய்யத் துணிவார்கள் அல்லவா?* ***கொடுங்குலப்***

***பகைஞன் ஆகி*** - தன் குலத்திற்கே கொடிய பகைவனாகி; ***கொல்லிய வந்த -*** கொல்வதற்காக வந்த; ***கூற்றை -*** யமன் போன்ற பகைவனை எண்ணி; ***நடுங்கினார்க்கு-*** அஞ்சியவர்களுக்கு; ***அபயம் நல்கும் அதனினம் -*** 'அஞ்சாதே' என அபயம் கொடுக்கும் அறத்தைக் காட்டிலும்; ***நல்லது உண்டோ -*** மேம்பட்டதோர் அறம் உண்டோ? (இல்லை).

*வேள்வி முதலாய பல்வேறு அறங்களுள், அஞ்சிச் சரண் அடைந்தவர்களுக்கு அபயம் அளிப்பதே சிறந்த அறம் ஆதலால் சுக்கிரீவனுக்கு அபயம் அளித்து அருளுதல் வேண்டும் என்பது அனுமனின் வேண்டுகோளாகும். 'உடைந்தவர்க்கு உதவானாயின், உள்ளதொன்றீயானாயின் அடைந்தவர்க்கு அருளானாயின், அறம் என்னாம்? ஆண்மை என்னாம்?" (6472) என்ற இராமன் கூற்று ஒப்பு நோக்கத்தக்கது. அபயம் - பயம் இல்லாது செய்தல் கொல்லிய - செய்யிய என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்; கூற்று - உவமைஆகுபெயர். 23*

***3774 . "எம்மையே காத்திர்" என்றல் எளிது***
***அரோ? இமைப்பு இலாதோர் -***
***தம்மையே முதல் இட்டு, ஆன்ற***
***சராசரம் சமைந்த ஆற்றல்***
***மும்மை ஏழ் உலகும் காக்கும்***
***முதல்வர் நீர்; முருகற் செவ்வி***
***உம்மையே புகல் புக்கேமுக்கு, இதின்***
***வரும் உறுதி உண்டோ?***

***இமைப்பு இலாதோர் தம்மையே முதல் இட்டு-*** கண்கள் இமைத்தல் இல்லாத தேவர்களை முதலாகக் கொண்டு; ***ஆன்ற சராசரம்*** - உயர்ந்த அசையும் பொருள்களையும் அசையாப்பொருள்களையும்; ***சமைந்த ஆற்றல் -*** படைத்த ஆற்றலை உடைய; ***மும்மை ஏழ் உலகும் காக்கும் -*** மூன்று வகைப்பட்ட ஏழு உலகங்களையும் பாதுகாக்கும்; ***முதல்வர் நீர் -*** தலைவர் நீங்கள் (ஆதலால்); ***எம்மையே காத்திர் -*** எளியராகிய எங்களைமாத்திரமே காப்பாற்றுவீர்; ***என்றல் -*** என்று கூறுதல்; ***எளிது -*** (உங்களுக்கு) எளிமைத் தன்மையைக் கற்பிப்பது ஆகும்; ***முருகற் செவ்வி*** - முருகனைப் போன்ற சிறப்பினை உடைய; ***உம்மையே புகல்புக்கேமுக்கு*** - உங்களையே புகலிடமாகக் கொண்டு அடைக்கலம் அடைந்த எங்களுக்கு; ***இதின் வரும் உறுதி உண்டோ -*** இதைக் காட்டிலும் வந்தடையக்கூடிய நன்மை வேறு உளதோ? (இல்லை),

*இராமலக்குவரின் சிறப்பை அறிந்து, அவர்தம் ஆற்றலைப்புகழ்ந்து பேசித் தமக்கு அடைக்கலம் கொடுத்துக் காக்குமாறு அனுமன் வேண்டினான். முருகன் - முருகை உடையவன்; அழகும் இளமையும் தெய்வத் தன்மையும் உடையவன். எம்மையே தம்மையே - ஏகாரங்கள் பிரிநிலை; அரோ - அசைநிலை. 24*

*இலக்குவன் தங்கள் நிலையை அனுமனுக்கு உரைத்தல்*

***3775. 'யார் என விளம்புகேன் நான்,***
***எம் குலத் தலைவற்கு, உம்மை?***
***வீர! நீர் பணித்திர்! ' என்றான்,***

*மெய்ம்மையின் வேலி போல்வான்;*
*வார்கழல் இளைய வீரன்,*
*மரபுளி, வாய்மை யாதும்*
*சோர்வு இலன், நிலைமை*
*எல்லாம் தெரிவுறச் சொல்லலுற்றான்:*

***மெய்ம்மையின் வேலி போல்வான் -*** *மெய்ம்மையைப் பாதுகாக்க அமைந்த வேலி போல்பவனாகிய அனுமன், (இராமலக்குவரைப் பார்த்து);* ***வீர-*** *'வீரர்களே!* ***எம்குலத்தலைவற்கு -*** *எங்கள் குலத் தலைவனாகிய சுக்கிரீவனுக்கு;* ***உம்மை நான் -*** *உங்களை நான்;* ***யார் என விளம்புகேன்-*** *யாவர் என்று சொல்வேன்?* ***நீர்பணித்திர் -*** *நீங்கள் சொல்லுங்கள்';* ***என்றான்- - ;*** ***வார்கழல் இளையவீரன் -*** *நீண்ட வீரக்கழல் அணிந்த இளையவீரனாகிய இலக்குவன்;* ***மரபுளி -*** *முறைப்படி;* ***வாய்மை யாதும் -*** *உண்மைநிகழ்ச்சிகள் யாவற்றையும்;* ***சோர்வு இலன் -*** *சோர்வு இல்லாதவனாய்;* ***நிலைமை எல்லாம் -*** *தங்களுக்கு நேர்ந்த நிலைமை களையெல்லாம்;* ***தெரிவுறச் சொல்லலுற்றான் -*** *நன்றாய் விளங்குமாறு சொல்லத்தொடங்கினான்.*

*'நீங்கள் யார்'? என வினவாமல் 'யாரென விளம்புகேன் நான் என் குலத்தலைவற்கு உம்மை' என்ற தொடரால் அனுமன் வினவியது. அனுமனின் அடக்கத்தை நாகரிகமாய் விளக்குதல் காணலாம்; எப்போதும் உண்மையே பேசுபவன் ஆதலின் மெய்ம்மை காப்பதற்கு அவதரித்த இராமபிரானுக்குக் காவல் ஆவான் என்பது தோன்ற, அனுமன் 'மெய்ம்மையின் வேலி போல்வான்' எனப்பட்டான். உளி - மூன்றாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. நாடு நீங்கியது, சீதையை இழந்தது என எல்லா நிகழ்ச்சிகளையும் விடாது உரைத்தனன் ஆதலின் 'வாய்மை யாதும் சோர்விலன் நிலைமை எல்லாம் தெரிவுற' என்றார். விளக்கமாகக் கூறியதைத் 'தெரிவுற' என்ற சொல் புலப்படுத்தும். விளம்புகேன் - ககர ஒற்று இடைநிலை - எதிர்காலம் காட்டியது. குகனுக்கும் சடாயுவிற்கும் இலக்குவனே தம் வரலாறு கூறியது இங்கு நினைக்கத் தகும்.*
*25*

*3776 . 'சூரியன்மரபில் தோன்றி,*
*சுடர் நெடு நேமி ஆண்ட*
*ஆரியன்; அமரர்க்காக*
*அசுரரை ஆவி உண்ட*
*வீரியன்; வேள்வி செய்து*
*விண் உலகோடும் ஆண்ட*
*காரியன்; கருணை அன்ன*
*கண்ணன் அக் கவிகை மன்னன்;*

***'அக் கவிகை மன்னன் -*** *அந்த வெண்கொற்றக் குடையை உடைய அரசன்;* ***சூரியன் மரபில் தோன்றி-*** *சூரிய குலத்தில் தோன்றி;* ***சுடர் நெடு நேமி -*** *ஒளி மிகுந்த பெரிய ஆணைச் சக்கரத்தை உடையவனாய்;* ***ஆண்ட ஆரியன்-*** *உலக முழுவதும் ஆட்சி செலுத்திய உயர்ந்தோன்;* ***அமரர்க்காக-*** *தேவர்கள் பொருட்டு;* ***அசுரரை ஆவி உண்ட*** *- சம்பரன் முதலிய அசுரர்களை வென்று உயிரைப் பறித்த;* ***வீரியன்*** *- வீரம் உடையவன்;* ***வேள்வி செய்து -*** *பல வேள்விகளைச் செய்து;* ***விண் உலகோடும் ஆண்ட-*** *மண்ணுலகத்தோடு விண்ணுலகத்தையும் ஆட்சி புரிந்த;* ***காரியன்-*** *செயல்திறம் படைத்தவன்;* ***கருணை அன்ன -*** *அருளே வடிவு எடுத்தாற்போன்ற;* ***கண்ணன் -*** *கண்ணோட்டம் உடையவன்;*

*அக்கவிகை மன்னன். . . . . தயரதன் என அடுத்த செய்யுளில் முடியும். தேவர் வேண்ட, சம்பரன் முதலிய அசுரர்களை வென்று மீட்ட விண்ணுலகத்தைத் தயரதன் இந்திரனுக்குக் கொடுத்த சிறப்புப் பற்றி 'விண்ணுலகோடும் ஆண்ட' எனப்பட்டான். இச் செய்தி 'இன்தளிர்க் கற்பக நறுந்தேன்' எனத் தொடங்கும் பாடலிலும் (322) விசுவாமித்திரரால் உணர்த்தப்பட்டது.*

*கண்ணன் என்றது இங்குக் கண்ணோட்டத்தைக் குறிக்கும். நேமி - சக்கரம் ஆணையைச் சக்கரமாகக் குறிப்பது மரபு. கவிகை - கவிந்திருப்பது; காரணப்பெயர். 26*

***3777 . 'புயல் தரு மதத் திண் கோட்டுப்***
***புகர் மலைக்கு இறையை ஊர்ந்து,***
***மயல் தரும் அவுணர் யாரும்***
***மடிதர, வரி வில் கொண்ட,***
***இயல் தரும் புலமைச் செங்கோல்***
***மனு முதல் யாரும் ஒவ்வாத்***
***தயரதன்; கனக மாடத் தட***
***மதில் அயோத்தி வேந்தன்; ****

***புயல் தரு மதம் -** மேகம் போலப் பொழியும் மதத்தையும்; **திண் கோடு -** வலிமையான தந்தங்களையும்; **புகர் -** (முகத்தில்) புள்ளி களையும் உடைய; **மலைக்கு இறையை ஊர்ந்து -** மலைகள் போன்ற யானைகளுக்குத் தலைவனாகிய பட்டத்து அரச யானையை ஏறிச் செலுத்தி; **மயல் தரும் அவுணர் யாரும் -** மதி மயக்கம் கொண்ட அசுரர்கள் எல்லாம்; **மடிதர -** அழியும்படி; **வரிவில் கொண்ட -** கட்டமைந்த வில்லைக் கொண்டு போர் செய்த; **இயல்தரும் புலமைச் செங்கோல் -** இயல்பாகப் பொருந்திய அறிவினையும் செங்கோலையும் உடைய; **மனு முதல் யாரும் ஒவ்வா-** மனு முதலான எந்த அரசர்களும் நிகர் ஆகமாட்டாத; **தயரதன் -** தயரதன் என்பான்; **கனக மாடம் -** பொன் மயமான மாளிகைகளையும்; **தட மதில் -** பெரிய மதிலையும் உடைய; **அயோத்தி வேந்தன் -** அயோத்தி நகரத்திற்கு வேந்தனாவான்.*

*மதத்தின் மிகுதி புலப்பட 'புயல் தரு மதம்' என்றார். 'முதல்' என்றதனால் குறிக்கப்பட்டவர் மாந்தாதா, ககுஸ்தன், சகரன், பகீரதன் முதலியோர். "வெஞ்சினத்து அவுணர் தேர் பத்தும் வென்றுளேற்கு (1631) எனத் தயரதன் கூறியது காண்க. புயல் தரு மதம் - தரு 'உவம உருபு. புகர்மலை - யானையைக் குறித்ததால் உவம ஆகுபெயர். 27*

***3778 . 'அன்னவன்சிறுவனால், இவ்***
***ஆண்தகை; அன்னை ஏவ,***
***தன்னுடைய உரிமைச் செல்வம்***
***தம்பிக்குத் தகவின் நல்கி,***
***நல் நெடுங் கானம் சேர்ந்தான்;***
***நாமமும் இராமன் என்பான்;***

**இந் நெடுஞ் சிலைவலானுக்கு ஏவல்**
**செய் அடியென் யானே.'**

**இவ் ஆண்தகை-** *இந்த வீரர்களிற் சிறந்தவன்;* **அன்னவன் சிறுவன்-** *அந்தத் தயரத சக்கரவர்த்தியின் மகனாவான்;* **அன்னை ஏவ-** *தன் சிற்றின்னையின் கட்டளையால்;* **தன்னுடைய உரிமைச் செல்வம்** *- மூத்த மகனாகிய தனக்கு உரிமையுடைய ஆட்சிச் செல்வத்தை;* **தம்பிக்குத் தகவின் நல்கி -** *தன் தம்பியாகிய பரதனுக்குப் பெருந்தன் மையோடு கொடுத்து விட்டு;* **நல்நெடுங் கானம் -** *நல்ல நெடிய காட்டை;* **சேர்ந்தான் -** *அடைந்தான்;* **நாமமும் இராமன் என்பான்-** *பெயரும் இராமன் எனப்படுபவன்;* **இந்நெடும் சிலை வலானுக்கு -** *இது நீண்ட வில்லாற்றால் பொருந்தியவனுக்கு;* **ஏவல் செய் -** *குற்றேவல் செய்கின்ற;* **அடியென் யானே -** *அடியவன் யான்'*

*இம்மூன்று பாடல்களால் தன் தமையனைப் பற்றியும் தன்னைப் பற்றியும் உணர்த்தினான் இலக்குவன். இராமன் புருடோத்தமன் என்ற கருத்தை 'ஆண்டகை' என்ற சொல் உணர்த்துகிறது. அன்னை - சிற்றன்னையாகிய கைகேயி. தந்தையின் விருப்பத்தால் அன்று, தாய் உரைத்த உரையால நிகழ்ந்தது என்பதைப் புலப்படுத்த 'அன்னை ஏவ' என்றான். 'தரையளித்த தனி நேமித் தயரதன் தன் புதல்வர் யாம்; தாய் சொல் தாங்கி விரை யளித்த கான்புகுந்தேம் (2867) என இரரமன் முன்னர் உரைத்ததையும் காண்க. மூத்தவர்க்கு உரித்து அரசு என்பதால் 'தன்னுடைய உரிமைச் செல்வம்' என்றான். தம்பி - பரதன். கடத்தற்கரிய பெரிய கானமாதலின் 'நெடுங்கானம்' என்றும் முனிவர்கள் வாழும் கானமாதலின் 'நற்கானம்' எனவும் உரைத்தனன். தன்னை இராமனின் தம்பி என்னாது 'ஏவல் செய்அடியென்' என்கிறான். 'மகனே இவன்பின் செல், தம்பி என்னும் படி அன்று, அடியாரின் ஏவல் செய்தி' (1752) எனச் சுமத்திரை கூறியாங்கு இலக்குவன் நடந்துகொள்வதைக் காண்கிறோம்.*
*28*

*இராமன் திருவடிகளை அனுமன் வணங்குதல்*

***3779 . என்று,அவன் தோற்றம் ஆதி***
***இராவணன் இழைத்த மாயப்***
***புன்தொழில் இறுதி ஆக,***
***புகுந்த உள பொருள்கள் எல்லாம்,***
***ஒன்றும் ஆண்டு ஒழிவுறாமல்,***
***உணர்த்தினன்; உணர்த்தக் கேட்டு***
***நின்ற அக்காலின் மைந்தன், நெடிது***
***உவந்து, அடியில் தாழ்ந்தான்.***

**என்று** *- என்று இவ்வாறு;* **அவன் தோற்றம் ஆதி -** *இராமபிரானின் பிறப்பு முதல்;* **இராவணன் இழைத்த** *- இராவணன் செய்த;* **மாயப் புன்தொழில் இறுதி ஆக -** *வஞ்சனையாகிய கீழ்த்தரமான செயல் ஈறாக;* **புகுந்து உள பொருள்கள் எல்லாம் -** *நடந்துள்ள செய்திகளையெல்லாம்;* **ஒன்றும் ஆண்டு ஒழிவு உறாமல் -** *எந்த ஒரு நிகழ்ச்சியும் விடுபட்டுப் போகாமல்;* **உணர்த்தினன் -** *எடுத்துரைத்தான்;* **உணர்த்த -** *அவ்வாறு சொல்ல;* **கேட்டு நின்ற-** *கேட்டுக் கொண்டு நின்ற;* **அக்காலின் மைந்தன்-**

*காற்றின் மைந்தனாகிய அந்த அனுமான்;* ***நெடிது உவந்து-*** *பெரிதும்மகிழ்ந்து;* ***அடியில் தாழ்ந்தான் -*** *இராமபிரான் திருவடிகளில் விழுந்து வணங்கினான்.*

*இராவணன் இழைத்த மாயப் புன்தொழில் - வஞ்சனையால் சீதையைக் கவர்ந்த செயல். சீதையைக் கவர்ந்த செயலைக் கூறவும் விரும்பாததால் கம்பர் 'மாயப்புன் தொழில்' எனக் குறித்தார். இலக்குவன் கூறிய வரலாற்றால் இராமன் வணங்கத்தக்க குணங்களை உடையவன் என அனுமன் அறிந்ததால் நெடிது மகிழ்ந்து அவனது திருவடிகளில்வணங்கினான். 29*

*'மறைவனாகிய அனுமன் வணங்குவது முறையோ'? என்ற இராமனுக்கு அனுமன் மறுமொழி*

***3780. தாழ்தலும்,'தகாத செய்தது***
***என்னை, நீ? தருமம் அன்றால்;***
***கேள்வி நூல் மறைவலாள!'***
***என்றனன்; என்னக் கேட்ட***
***பாழி அம் தடந் தோள் வென்றி***
***மாருதி, 'பதுமச் செங்கண்***
***ஆழியாய்! அடியனேனும்***
***அரிக் குலத்து ஒருவன்' என்றான்.***

***தாழ்தலும் -*** *(அனுமன் தன்னை) வணங்கிய அளவில்;* ***கேள்வி நூல் மறை வலாள -*** *(இராமன் அனுமனை நோக்கி) கேட்டறிந்த சாத்திரங்களிலும் வேதங்களிலும் வல்ல அந்தணனே!* ***நீ - - ; தகாத செய்தது என்னை? -*** *செய்யத்தகாத காரியத்தைச் செய்தது ஏன்?* ***தருமம் அன்று -*** *(அந்தணன் அரசனை வணங்குதல்) தருமம் அன்று;* ***என்றனன் -*** *என்று கூறினனாக;* ***என்னக் கேட்ட -*** *அவ்வாறு கூறியதைக் கேட்ட;* ***பாழி அம் தடந்தோள்-*** *வலிமையான அழகிய பெரிய*

*தோள்களை உடைய;* ***வென்றி மாருதி -*** *வெற்றிமிக்க அனுமன்;* ***பதுமச் செங்கண் ஆழியாய் -*** *'செந்தாமரை மலர்போன்ற சிவந்த கண்களையும் ஆணைச் சக்கரமும் உடையவனே!* ***அடியனேனும் -*** *அடியனாகிய யானும்;* ***அரிக்குலத்து ஒருவன் -*** *குரங்குக் குலத்தில் தோன்றிய ஒருவனே யாவேன்;* ***என்றான் -*** *என்று கூறினான்.*

*நால்வகை வருணத்தோருள் அந்தணர் உயர்ந்தோராகக் கருதப்பட்டதால் அந்தணனாகிய அனுமன் அரசனாகிய தன்னை வணங்குதல் தகாது; தருமம் ஆகாது என்றனன் இராமன். அனுமன் அந்தணன் வேடத்தில் இருந்தமையால் இராமன் இங்ஙனம் கூறினான்.*

*கேள்வி நூல் - வேதம்; சுருதி. செவி வழியாக மட்டும் கேட்கப்படுதலின் வேதத்தைக் கேள்வி நூல் என்பது பழ மரபு. கேட்டற்கரிய நூற்பொருளைக் கற்றறிந்தார் வழிக்கேட்டலும் ஆம். 'கற்றிலனாயினும் கேட்க' என்றார் வள்ளுவரும். (குறள். 414). மறை - வேதம். மருத்துவின் மகனாதலின் 'மாருதி' என்பது அனுமன் பெயராயிற்று. ஆழியாய் - ஆணைச் சக்கரம் உடையவனே என்பது பொருள். தயரத சக்கரவர்த்தியின் மகனாதலின் காடாளும் இராமனை இங்ஙனம் அனுமன் விளித்தான்.*

*அடியேன் தானும் - உம்மை இறந்தது தழீஇய எச்ச உம்மை. சுக்கிரீவனே அன்றி யானும் எனப் பொருள்படும். ஆல் - அசை.* *30*

*அனுமன் தன் பெரிய வானர உருவத்துடன் நிற்றல்*

***3781 . மின்உருக் கொண்ட வில்லோர்***
***வியப்புற, வேத நல் நூல்***
***பின் உருக்கொண்டது என்னும் பெருமை***
***ஆம் பொருளும் தாழ,***
***பொன் உருக் கொண்ட மேரு,***
***புயத்திற்கும் உவமை போதாத்***
***தன் உருக்கொண்டு நின்றான்,***
***தருமத்தின் தனிமை தீர்ப்பான்.***

***தருமத்தின் தனிமை தீர்ப்பான்*** *- (துணையின்றி வருந்தும்) தருமத்தின் தனிமையைப் போக்க வந்தவனாகிய அனுமன்;* ***மின் உருக் கொண்ட -*** *மின்னலின் வடிவத்தைத் தன்பால் கொண்டாற்போன்ற ஒளிபொருந்திய;* ***வில்லோர் வியப்புற-*** *வில்லேந்திய இராமலக்குவர் வியப்படையுமாறு;* ***வேத நல்நூல் -*** *வேதம் முதலான சாத்திரங்களே;* ***பின் உருக் கொண்டது என்னும் -*** *பின்னர் ஒரு வடிவம் எடுத்து வந்தது என்று;* ***பெருமை ஆம் பொருளும் தாழ -*** *சிறப்பித்துச் சொல்லும் பாராட்டுரையும் சிறுமையுறும்படி;* ***பொன் உருக் கொண்ட மேரு -*** *பொன் மயமான வடிவங் கொண்ட மேருமலையும்;* ***புயத்திற்கு உவமை போதா -*** *தன் தோள்களுக்கு உவமையில் ஒப்பாகாத;* ***தன் உருவக்கொண்டு நின்றான் -*** *தன்னுடைய பேருருவத்தைக் கொண்டு நின்றான்.*

*'இவர்களோ தருமம் ஆவார்' (3762) என்ற தொடர்களில் இராமலக்குவர் குறிக்கப்பட்டனர். அவர்களின் தனிமை தீர்ப்பவன் ஆதலின், அனுமன் தரு*

*மத்தின் தனிமை தீர்ப்பான் ஆயினான். அரக்கர்களால் அழிய இருந்த தருமம் அனுமன் உதவியால் நிலைபெறும் என்பதால் 'தருமத்தின் தனிமை தீர்ப்பான்' என்றும் விளக்கலாம். அனுமன் தருமத்திற்குத் துணையாவன் என்பதை 'மெய்ம்மையின் வேலி போல்வான்'' (3775), அறத்துக்கு ஆங்கொரு தனித்துணையென நின்ற அனுமன். (5804) என்ற அடிகளாலும் உணரலாம். அனுமன் தான் வானர குலத்தைச் சார்ந்தவன் என உரைத்ததும், தன்னிடத்தில் அவர்களுக்கு மதிப்பு உண்டாகுமாறு தன் பேருருவம் எடுத்து நின்றனன். அவன் வேத நன்னூல்களே ஓர் உருக்கொண்டு வந்தது போன்றவன் என்றால், அவ்வுரை தாழ்வுடைத்து என்பதாம். இதனால் அவன் வேத சாத்திரங்களிலும் மேம்பட்ட ஞானி ஆவான் என்க. 'தன்னுரு' என்றமையால் அப்பேருருவமே அனுமனுக்குரிய உருவம் எனவும் கொள்ளத்தகும்.* *31*

***3782 . கண்டிலன்,உலகம் மூன்றும்***
***காலினால் கடந்து கொண்ட***
***புண்டரீகக் கண் ஆழிப் புரவலன்,***
***பொலன் கொள் சோதிக்***
***குண்டல வதனம் என்றால்,***
***கூறலாம் தகைமைத்து ஒன்றோ,***

***பண்டை நூல் கதிரோன் சொல்ல,***
***படித்தவன் படிவம்? அம்மா!***

***உலகம் மூன்றும் -*** *விண், மண், பாதாளம் என்னும் மூன்று உலகங்களையும்;* ***காலினால் கடந்து கொண்ட -*** *(திரிவிக்கிரம அவதாரத் தில்) தனது திருவடியால் அளந்து தனதாக்கிக்கொண்ட;* ***புண்டரீகக் கண் -*** *தாமரை மலர் போன்ற கண்களையும்;* ***ஆழி -*** *சக்கரப் படையையும் உடைய;* ***புரவலன்-*** *காத்தற்கடவுளாகிய திருமாலின் அமிசமான இராமபிரான்;* ***பொலன் கொள் சோதி -*** *பொன்னாலாகிய ஒளி பொருந்திய;* ***குண்டல வதனம் -*** *குண்டலங்களை அணிந்த (அனுமனின்) முகத்தை;* ***கண்டிலன் என்றால் -*** *காண முடியாதவன் ஆனான் என்றால்;* ***பண்டை நூல் -*** *பழமையான இலக்கணம் முதலிய நூல்களை;* ***கதிரோன் சொல்ல -*** *சூரியன் கற்பிக்க;* ***படித்தவன் படிவம் -*** *கற்றவனான அனுமனின் பேருருவம்;* ***கூறலாம் தகைமைத்து ஒன்றோ -*** *இத்தன்மைத்து என ஒருவரால் கூறத்தக்க தன்மையுடைய தொன்று ஆகுமோ? (ஆகாது)*

*முன்பு திரிவிக்கிரமனாக வடிவங்கொண்ட திருமாலான இராமபிரானே அனுமானின் முகத்தைக் காண இயலவில்லையெனில், அப்பேருருவத்தின் பெருமையைக் கூற எங்ஙனம் இயலும் என்பது கருத்து. திரிவிக்கிரமனாக உலகளந்த திருமாலே இராமனாக வந்துள்ளமையால் 'உலக மூன்றும் காலினால் கடந்து கொண்ட புண்டரிகக் கண் ஆழிப் புரவலன்' என்றார். "மூவுலகும் ஈரடியால் முறை நிரம்பா வகை முடியத் தாவிய சேவடி" எனச் சிலப்பதிகாரம் (ஆய்ச்சியர் குரவை) உலகளந்த செய்தியைக் கூறுகிறது. கதிரவனின் மாணவனாய், அவனை நெருங்கிப் பாடம் கேட்கும் பெரும் வடிவுடையனாய் விளங்கிய தன்மை புலப்படக் 'கதிரோன் சொல்லப் படித்தவன் படிமம்' என்றார்.*

*அம்மா - வியப்பிடைச்சொல். அனுமனின் பேருருவ (விசுவரூப) வர்ணனையைச் சுந்தரக்காண்டத்தும் (5326 - 5332) காணலாம். 32*

*அனுமனைப் பற்றி இலக்குவனிடம் இராமன் வியந்து பேசுதல்*

***3783 . தாள்படாக்கமலம் அன்ன தடங்***
***கணான், தம்பிக்கு, 'அம்மா!***
***கீழ்ப் படாநின்ற நீக்கி, கிளர்***
***படாது ஆகி, என்றும்***
***நாட்படா மறைகளாலும், நவை***
***படா ஞானத்தாலும்,***
***கோட்படாப் பதமே, ஐய!***
***குரக்கு உருக்கொண்டது' என்றான்.***

***தாள்படாக்கமலம் அன்ன -*** *தண்டில் பொருந்தாத தாமரை மலர் போன்ற;* ***தடங்கணான் -*** *பெரிய கண்களை உடைய இராமன்;* ***தம்பிக்கு -*** *தம்பியாகிய இலக்குவனிடம்;* ***ஐய -*** *ஐயனே!* ***கீழ்ப்படா நின்ற நீக்கி -*** *கீழ்மைப்பட்டு நின்ற இராஜச, தாமச குணங்கள் நீங்கப் பெற்று;* ***கிளர்படாது ஆகி -*** *ஞான ஒளி கெடாதது ஆகி;* ***என்றும் -*** *எப்பொழுதும்;* ***நாட்படா மறைகளால் -*** *காலவரையறைக்கு உட்படாத வேதங்களாலும்;* ***நவைபடா ஞானத்தாலும் -*** *குற்றம் பொருந்தாத தத்துவ*

*ஞானத்தாலும்;* **கோட்படாப் பதமே -** *அறியப்படாத பரம்பொருள் தத்துவமே;* **குரக்கு உருக் கொண்டு-** *குரங்கின் வடிவத்தைக் கொண்டது;* **என்றான் -** *என்று உரைத்தான்.*

*மலரைத் தாங்கும் நாளம் போல இராமன் கண்களைத் தாங்குவன இல்லையாதலால் 'தாள் படா கமலம் அன்ன' என்றார். இஃது இல்பொருள் உவமை, ஐய - என்றது அன்பு பற்றிய விளி. நாட்படா மறைகள் என்றதற்கு - அழியாது நிலைத்து நிற்கும் வேதங்கள் என்பது கருத்து. வேதங்களுக்கும் ஞானத்திற்கும் அப்பாற்பட்டு நிற்பது பரம்பொருள் தத்துவம் ஆதலின் 'மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும் கோட்படாப் பதம்' என்றார். இதனால் பரம்பொருள் தத்துவமே குரங்கின் வடிவத்தைக் கொண்டது என அனுமனின் சிறப்புப் புலப்படுத்தியதாகிறது. பரமனாகிய இராமனே அனுமனைப் பரம்பொருள் எனக் குறிப்பது ஆழ்ந்த கருத்துடையது. எல்லை கடந்த ஒன்று (Infinitive) தன் கூறாகிய அனுமனை இளங்காட்டுகிறது. 'எல்லையொன்றின்மை எனும்' பொருளதனைக் கம்பன் குறிகளால் காட்டிட முயன்ற முயற்சியைக் கருதியும், தமிழச்சாதி அமரத்துவம் வாய்ந்தது என்றிருந்தேன் என்ற மகாகவி பாரதியார் கூற்றினை ஒப்பிட்டு ஆழம உணர்க. அம்மா - வியப்பிடைச்சொல். குரங்கு + உரு - குரக்குஉரு. 33*

*3784 .* **'நல்லனநிமித்தம் பெற்றேம்;**
**நம்பியைப் பெற்றேம்; நம்பால்**
**இல்லையே, துன்பம் ஆனது;**
**இன்பமும் எய்திற்று; இன்னும்,**
**வில்லினாய்! இவனைப் போலாம் கவிக்**
**குலக் குரிசில் வீரன்**
**சொல்லினால் ஏவல் செய்வான்;**
**அவன் நிலை சொல்லற்பாற்றோ?'**

**நல்லன நிமித்தம் பெற்றேம் -** *முன்னர் நல்லனவாகிய சகுனத்தைப் பெற்றோம்;* **நம்பியைப் பெற்றேம் -** *அதனால் அனுமனாகிய இந்நம்பியை இங்கு அடையப் பெற்றோம்;* **நம்பால் -** *(இனி) நம்மிடத்து;* **துன்பம் ஆனது இல்லையே -** *துன்பம் என்பது இல்லை;* **இன்பமும் எய்திற்று -** *இன்பமும் வந்தடைந்தது;* **இன்னும் -** *மேலும்;* **வில்லினாய் -** *வில்லைஉடையவனே!* **இவனைப் போலாம் வீரன் -** *இவனைப்போன்ற வீரன்;* **கவிக்குலக் குரிசில் சொல்லினால் -** *குரங்குக் கூட்டத்திற்குத் தலைவனாகிய சுக்கிரீவன் கட்டளையால்;* **ஏவல் செய்வான் -** *குற்றவேல் செய்வான் (என்றால்);* **அவன் நிலை -** *அச் சுக்கிரீவனது நிலை;* **சொல்லற் பாற்றோ -** *சொல்லும் தரத்ததோ? (அன்று).*

*நல்லவர் துணை பெற்றமையால் துன்பம் நீங்கலும். இன்பம் பெறலும் உறுதி என்பது உணர்த்தப்பட்டது. வீரனாகிய அனுமன் ஏவல் செய்வான் எனில் இவனை ஏவலனாகக் கொண்ட சுக்கிரீவன் நிலை அனுமனினும் மேம்பட்டது என்பது பெறப்படும். கண்ட அனுமனைக் கொண்டு காணாத சுக்கிரீவன் பெருமையை இராமன் ஊகித்தான். அதனால் சீதையை மீட்டல் தப்பாது எனக் கருதி 'நம்பால் இல்லையே துன்பமானது இன்பமும் எய்திற்று' என்றான். 34*

*சுக்கிரீவனை அழைத்துவர, அனுமன் விடைபெற்றுச் செல்லுதல்*

***3785 . என்று,அகம் உவந்து, கோல***
***முகம் மலர்ந்து, இனிதின் நின்ற***
***குன்று உறழ் தோளினாரை நோக்கி,***
***அக் குரக்குச் சீயம்,***
***'சென்று, அவன் தன்னை, இன்னே***
***கொணர்கின்றேன்; சிறிது போது,***
***வென்றியிர்! இருத்திர்' என்று***
***விடைபெற்று, விரைவில் போனான்.***

***என்று -*** *என்று சொல்லி;* ***அகம் உவந்து*** *- மனம் மகிழ்ந்து;* ***கோல முகம் மலர்ந்து -*** *(அதனால்) அழகிய முகமும் மலர்ச்சி பெற்று;* ***இனிதின் நின்ற -*** *மகிழ்ச்சியோடு இருந்த;* ***குன்று உறழ் தோளினாரை நோக்கி -*** *மலைபோன்ற தோள்களை உடைய இராமலக்குவரை நோக்கி;* ***அக்குரக்குச் சீயம் -*** *அந்த அனுமனாகிய சிங்கம்;* ***வென்றியிர்*** *- வெற்றியை உடையவர்களே!* ***சென்று அவன் தன்னை -*** *யான் சென்று சுக்கிரீவனை;* ***இன்னே கொணர்கின்றேன் -*** *இப்பொழுதே அழைத்துக் கொண்டு வருகின்றேன்;* ***சிறிது போது இருத்திர் -*** *சிறிது*

*நேரம் இங்கே இருங்கள்;* ***என்று விடைபெற்று-*** *என்று கூறி, அவர்கள் பால் விடை பெற்றுக்கொண்டு;* ***விரைவில் போனான் -*** *விரைந்து சென்றான்.*

*ஆண்களில் சிறந்தோனை ஆண்சிங்கம் என்பது போலக்குரங்கினத்தில் சிறந்தோனாகிய அனுமனைக் 'குரக்குச் சீயம்' என்றார். சீயம் - சிங்கம். சீயம்- ஸிம்ஹம் என்னும் வடசொல்லின் திரிபு. தோற்றத்தால் குரங்காக இருப்பினும்நோக்கத்தில் சிங்கம் போல்வானாதலின் குரக்குச் சீயமானான் எனலாம்.முன்னும் பின்னும் நோக்கும் சிங்கம் போல அனுமனும் இராமலக்குவரின்வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகளையும், நடைபெற உள்ளனவற்றையும் நோக்கி,அவர்களால் தமக்கு வரும் நன்மைகளை ஆராய்ந்து சுக்கிரீவனை நட்புக்கொள்ளச் செய்த திறம் புலனாகிறது. 'வென்றியிர்!' என அவன் விளித்தலில்வாலியை வெல்லும் திறமும் அடங்கியுள்ளது. நட்பாக்கிக் கொள்ளும்ஆர்வத்தை 'விரைவில் போனான்' என்ற தொடர் உணர்த்துகிறது.* *35*

## நட்புக் கோட் படலம்

*இராமனும் சுக்கிரீவனும் நட்புகொண்ட நிகழ்ச்சியைக் கூறும் பகுதியாதலின் 'நட்புக்கோட்படலம்' எனப்பெயர் பெறுகின்றது.*

*அனுமன் சுக்கிரீவனிடம் சென்று இராமன் சிறப்புகளைக்கூறி இராமனிடம் அழைத்துவந்தான். இராமன் சுக்கிரீவனை வரவேற்று உபசரித்துத் தாங்கள் வந்த காரியத்தை உரைத்தான். சுக்கிரீவனின் பெருமைகளை அனுமன் உரைத்து, வாலி சுக்கிரீவனிடம் பகைமை கொண்ட காரணத்தையும் அறிவித்தான். வாலிக்கு அஞ்சி, சுக்கிரீவன் வாழ்வதை அறிந்த இராமன் வாலியைக் கொன்று வானரத்தலைமையினையும் பெற்றுத்தருவதாக உறுதி கூறினான். பின்னர்ச் சுக்கிரீவன் தன் அமைச்சர்களுடன் ஆலோசனை நடத்தினான். மராமரங்கள் எழனுள் ஒன்றை அம்புகொண்டு துளைக்கச் செய்து இராமன் திறமையை அறியலாம் என அனுமன் கூறச் சுக்கிரீவன் அதனை ஏற்று இராமனிடம் சென்று, தான் சொல்வது ஒன்று உண்டு எனக்கூற, இராமனும் அதைச்சொல்லுமாறு பணித்தான்.*

*அனுமன், சுக்கிரீவனிடம் இராமன் சிறப்புகளைக் கூறுதல்*

*கலிவிருத்தம்*

***3786 . போன, மந்தர மணிப் புய***
***நேடும் புகழினான், -***
***ஆன தன் பொரு சினத்து***
***அரசன் மாடு அணுகினான் -***
***'யானும், என் குலமும, இவ்***
***உலகும், உய்ந்தனம்' எனா,***
***மானவன் குணம் எலாம்***
***நினையும் மா மதியினான்.***

***போன -** (அவ்வாறு) சென்ற; **மந்தர மணிப்புயம் -** மந்தர மலை போன்ற அழகிய தோள்களால விளைந்த; **நெடும்புகழினான் -** மிக்க புகழையும் உடைய அனுமன்; **மானவன் குணம் எலாம் -** மனுக்குலத்துப் பிறந்த இராமனுடைய குணங்கள் எல்லாவற்றையும்; **நினையும் மாமதியினான் -** (எப்போதும்) சிந்திக்கும் பேரறிவு உடையவனாய்; **யானும், என் குலமும் -** 'நானும், எனது குலத்தினரும்; **இவ்வுலகும் உய்ந்தனம் -** இந்த உலகும் பிழைத்தோம்'; **எனா -** என்று சொல்லிக் கொண்டே; **தன் ஆன -** தன் தலைவனாகிய; **பொருசினத்து அரசன்***

***மாடு -** போர்செய்தற்குரிய சீற்றத்தை உடைய மன்னன் சுக்கிரீவனிடம்; **அணுகினான் -** வந்தடைந்தான்.*

*அனுமன் தான் சென்ற காரியம் செவ்வனே முடிந்தது என்பதைக் குறிக்கும் வகையில் 'யானும் என் குலமும் இவ்வுலகும் உய்ந்தனம்' என்றான். தான் முதலில் சென்று இராமலக்குவரைக் கண்ட சிறப்பால் 'யானும்' என முதலில் தன்னைத் தனியே*

*கூறினான். வாலியை வென்று வானரக் கூட்டத்தைப் பிழைக்கச் செய்வான் என்பதால் 'என் குலமும்' என்றும் அரக்கர் அழிதல் உறுதி என்பது தோன்ற 'இவ்வுலகும் உய்ந்தனம்' என்றும் கூறிச் சென்றான்.*

*அன்பு, அருள், இன்சொல், நேர்மை, அழகு என இராமனிடம் அனுமன் கண்ட குணங்கள் பலவாதலின் 'குணமெலாம்' என்றார். அவற்றையே நினைத்துக் கொண்டமையால் 'நினைந்து' என்றும், நல்ல பண்புகளை மறவாது நினைக்கும் நல்ல அறிவு உடையனாதலின் 'மாமதியினான்' என்றும் கூறினார். மனுவின் வழித் தோன்றல் இராமன் ஆதலின் 'மானவன்' எனக்குறித்தார். அனுமனின் தோளுக்கு மந்தரமலை உவமை ஆதலை 'தேவருக்கு அமுதல் ஈந்த குன்றென . . . குவவுத்தோளான் (4934) என்ற அடியும் அவன் 'நெடும்புகழினான்' என்பதை 'ஊழிதோறும் புதிதுஉறுஞ் சீர்த்தியான்' (5168) என்ற அடியும் உணர்த்தும். அனுமனை 'நல்லறிவாளன் எனப் பின்வரும் கூறுவது காண்க. (4808).*

*அரசன் மாடு - மாடு ஏழனுருபு இடப்பொருளில் வந்தது.* *1*

***3787 . மேலவன்,திருமகற்கு உரை***
***செய்தான், 'விரை செய் தார்***
***வாலி என்ற அளவு இலா***
***வலியினான் உயிர் தெறக்***
***காலன் வந்தனன்; இடர்க்***
***கடல் கடந்தனம்' எனா,***
***ஆலம் உண்டவனின் நின்று,***
***அரு நடம் புரிகுவான்.***

***ஆலம் உண்டவனின் நின்று -*** *(அனுமன்) ஆலகால நஞ்சு உண்ட சிவபெருமானைப்போல நின்று;* ***அருநடம் புரிகுவான் -*** *அரிய நடனம் ஆடுபவனாய்;* ***விரை செய் தார்*** *- வாசனை மிக்க மாலையை உடைய;* ***வாலி என்ற அளவு இலா -*** *வாலி என்று சொல்லப்படும் அளவில்லாத;* ***வலியினான்-*** *வலிமை உடையவனின்;* ***உயிர்தெற-*** *உயிரை அழிக்க;* ***காலன் வந்தனன் -*** *யமன் வந்துவிட்டான்;* ***இடர்க்கடல் கடந்தனம் -*** *(ஆதலால்) நாம் துன்பக்கடலைக் கடந்து விட்டோம்;* ***எனா -*** *என்று;* ***மேலவன் திருமகற்கு*** *- வானத்தில் செல்லும் சூரியனின் மகனான சுக்கிரீவனுக்கு;* ***உரை செய்தான் -*** *உரைத்தான்.*

*சூரியன் விண்ணில் இயங்கும் சிறப்புப்பற்றி 'மேலவன்' எனப்பெற்றான். வாலியின் ஏவலின் வருபவராக எண்ணியதற்கு மாறாக, அவனைக் கொல்லும் யமன் போன்று இராமலக்குவர் வந்துள்ள செய்தியை மகிழ்ச்சியால்ஆடிக் கொண்டே அனுமன் சொன்னான் என்பதாம். அவன் சிவபெருமான் அமிசமாய் அவதரித்தவன் ஆதலின் 'ஆலம் உண்டவனின் நின்று' என்றார். முன்னரும் அனுமனைத் 'தனி அருளும் தாழ்சடைக் கடவுள்' (3753) எனக் கூறியது காண்க. வாலி இதுவரை போரில் வென்று வெற்றிமாலைக்கு உரியவன் ஆதலின் 'விரை செய் தார் வாலி' என்றான். சுக்கிரீவன் முதலானாரோடு போர்செய்யத் தும்பை சூடி வருதலின் 'விரை செய் தார் வாலி' எனவும் கொள்ளலாம். தன்னோடு போர்செய்வாரின் வலிமையில் பாதியைத் தன் வலிமையோடு பெற்றுவிடுவான் ஆதலின் 'அளவிலா வலியினான்' எனப்பட்டான்.*

*வாலி பிறந்தபோது, இந்திரன் வந்து பொன்மாலையை அணிவித்து, யார் எதிர்த்தாலும் எதிர்த்தார். வலிமையில் பாதி வாலிக்கு வருவதாக என வரம் அளித்தான் என்பது கதை. 'வாலி என்ற அளவு இல் ஆற்றல் வன்மையான்' (10124) என மேல் வருதலும் காண்க.*

*காலன் - உவமை ஆகுபெயராய் இராமனை உணர்த்திற்று. இடர்க்கடல்- உருவகம். 2*

***3788. 'மண்உளார், விண்உளார்,***
***மாறு உளார், வேறு உளார்,***
***எண் உளார், இயல் உளார்,***
***இசை உளார், திசை உளார்,***
***கண் உளார் ஆயினார்; பகை***
***உளார், கழி நெடும்***
***புண்உளார், ஆர் உயிர்க்கு***
***அமுதமேபோல் உளார்.***

***மண் உளார் -*** *(இராமலக்குவர்) மண்ணுலகத்தில் உள்ள மனிதர்களும்;* ***விண் உளார் -*** *விண்ணுலகத்துள்ளோராகிய தேவர்களும்;* ***மாறு உளார் -*** *இவ்விரண்டு உலகங்களுக்கும் மாறான பாதாள உலகத்து நாகரும்;* ***வேறு உளார் -*** *அவற்றிற்கும் வேறான உலகங்களில் இருப்பவர்களும்;* ***திசை உளார்-*** *எட்டுத்திசையிலும் உள்ளவர்களும்;* ***எண் உளார் -*** *(ஆகிய இவர்களின்)மனத்தில் உள்ளவர்களும்;* ***இயல் உளார் -*** *செயலிலே இருப்பவர்களும்;* ***இசை உளார் -*** *சொல்லிலே உள்ளவர்களும்;* ***கண் உளார் ஆயினார் -*** *கண்ணிலே இருப்பவர்களும் ஆவார்கள்;* ***பகை உளார் -*** *தமக்குப்பகைவர்களே உடையவர்களும்;* ***கழிநெடும் புண் உளார் -*** *அப்பகைவர்களால் உண்டாக்கப்பட்ட மிகப்பெரிய புண்களை உடையவர்களுமாய்;* ***ஆர் உயிர்க்கு -*** *தம்மை அடைந்தவர்களின் அரிய உயிர்க்கு;* ***அமுதமே போல் உளார் -*** *அமிழ்தத்தைப் போன்றவரும் ஆவர்.*

*இராமலக்குவரின் தெய்வத்தன்மையும் வீரமும் கருணையும் இப்பாடலில் உணர்த்தப்பட்டன. 'மண் உளார், விண் உளார், மாறு உளார், வேறு உளார், எண் உளார், இயல் உளார், இசை உளார், திசை உளார்' என்றதால் இராமலக்குவரின் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள தெய்வத்தன்மை விளங்கும். 'பகை உளார், புண் உளார் ஆர்உயிர்க்கு அமுதமே போல் உளார்' என்றதால் அவர்கள் தம்மை அடைந்தோரின் பகையழித்துக் காக்கும் வீரமும், கருணையும் புலனாகின்றன. 'கண்ணுளார்' என்றது உறுப்புக்களில் சிறந்ததாகிய கண்ணுள் இருப்பவர்*

*எனக் கண்ணின் சிறப்பை உணர்த்திற்று. 'கண்ணாவான் என்றும், மண்ணோர் விண்ணோர்க்குத் தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே' என்பது திருவாய்மொழி (1-8-3). பேரின்பத்தை அளிக்க வல்லவராதலின் இவர்களுக்கு அமிழ்தம் உவமை ஆயிற்று. 'அச்சமுற்று அடைந்தார்க்கு அமிழ்து அன்னவன்' என்றார் சிந்தாமணியாரும். (சீவக. 157) 'கழிநெடும்புண்' என்ற தொடரில் கழி மிகுதிப்பொருள் உணர்த்தும்உரிச்சொல். 3*

***3789 . 'சூழிமால் யானையார்***
***தொழு கழல் தயரதன்,***
***பாழியால் உலகு எலாம் ஒரு***
***வழிப் படர வாழ்***
***ஆழியான், மைந்தர்; பேர்***
***அறிவினார்; அழகினார்;***
***ஊழியார்; எளிதின் நிற்கு***
***அரசு தந்து உதவுவார்.***

***பாழியால் -*** *தன் வலிமையால்;* ***உலகு எலாம்-*** *எல்லா உலகங்களும்;* ***ஒரு வழிப் படர-*** *தன் ஒரு குடைக்கீழ் நடக்க;* ***வாழ் ஆழியான் -*** *ஆட்சி செய்து வாழும் ஆணைச்சக்கரத்தை உடையவனும்;* ***சூழிமால் யானையார் -*** *முகபடாம் அளிந்த யானைப்படையை உடைய அரசர்கலெல்லாம்;* ***தொழு கழல் தயரதன் -*** *வந்து தொழுகின்ற கழல் அணிந்த அடிகளையும் உடையவனான தசரதனின்;* ***மைந்தர் -*** *புதல்வர்கள்;* ***பேர் அறிவினார் -*** *பேரறிவினையுடையவர்கள்;* ***அழகினார் -*** *பேரழகு உடையவர்கள்;* ***ஊழியால் எளிதின் -*** *முறைமையாக எளிதில்;* ***நிற்கு அரசு தந்து -*** *உனக்கு அரசாட்சியை அளித்து;* ***உதவுவார் -*** *உதவி செய்வார்கள்.*

*நால்வகைப்படையில் யானைப்பபடையே சிறந்தது ஆதலின் 'யானையார்' எனக் கூறப்பட்டது. எனினும் இனம்பற்றித் தேர், குதிரை, காலாட்படையும் அடங்கும். தயரதன் அரசர்கள் வணங்கும் கழல்களை உடையவன். "திறையோடும் அரசு இறைஞ்சும் செறிகழற்கால் தசரதன்" (660), என்று முன்னர்க் கூறியது காண்க. தோள் வலிமையால் சம்பரனை வென்று விண்ணுலகையும் தன்னடிப்படுத்தி ஆண்டமையால் 'உலகெலாம்' என்றான். தன் ஆணையின் கீழ் நிற்க ஆள்வதே 'ஒரு வழிப்படர்'தலாகும். 'கோவுடை நெடுமணி மகுடகோடியால், சேவடி அடைந்த பொன் கழலும் தேயுமால்'. (175) என்ற அடியால் தயரதன் உலகமுழுதுடையான் என்பதை உணர்த்தும்.*

*இராமலக்குவரின் பேரழகினை 'உலகொடு மூன்றும் தம் உடைமை ஆக்குறும், அலகு அறும் இலக்கணம் அமைந்த மெய்யினர்' (2703) என்று சடாயுவும், 'எழுத அரு மேனியாய்' (2779) என்று சூர்ப்பணகையும் "ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்" (4020) என்று வாலியும் பேசும் இடங்கள் ஒப்புநோக்கத்தக்கன. வாலியைக் கொன்று அரசளிப்பது இராமலக்குவர்க்கு அரிய செயலன்று என்பதால் 'எளிதின் நிற்கு அரசு தந்து உதவுவார்' என்றான்.*

*இராமலக்குவரின் குலச்சிறப்பும், அறிவும், அழகும் ஆற்றலும் கூறப்பட்டுச் சுக்கிரீவன் அடையக்கூடிய பயனும் உணர்த்தப்படுகிறது. சுக்கிரீவன் குறிக்கோள்*

*அரசு பெறுதல் ஆதலின் அவன் அடையும் பயனாக 'அரசு'வலியுறுத்திக் கூறப்பட்டது.*
*4*

***3790. 'நீதியார்; கருணையின்***
***நெறியினார்; நெறிவயின்***
***பேதியா நிலைமையார்;***

*எவரினும் பெருமையார்;*
*போதியாது அளவு இலா*
*உணர்வினார்; புகழினார்;*
*காதி சேய் தரு நெடுங்*
*கடவுள் வெம் படையினார்.*

***நீதியார் -*** *(அவர்கள்) நீதியை மேற்கொண்டவர்கள்;* ***கருணையின் நெறியினார் -*** *அருள் நெறியில் ஒழுகுகின்றவர்கள்;* ***நெறிவயின்-*** *அந்த நீதி வழியினின்றும்;* ***பேதியா நிலைமையார் -*** *மாறுபடாத உறுதியை உடையவர்கள்;* ***எவரினும் பெருமையார் -*** *எல்லோரைக் காட்டிலும் மிக்க பெருமை உடையவர்கள்;* ***போதியாது*** *- எவராலும் கற்பிக்கப்படாமல்;* ***அளவுஇலா உணர்வினர் -*** *இயல்பாகவே அமைந்த அளவில்லாத அறிவினைப் பெற்றவர்கள்;* ***புகழினார் -*** *பெரும்புகழ் வாய்ந்தவர்கள்;* ***காதி சேய் தரு -*** *காதி என்பானின் மகனாகிய விசுவாமித்திரர் கொடுத்த;* ***நெடுங்கடவுள் வெம்படையினார் -*** *தெய்வத்தன்மை பொருந்திய கொடிய படைக்கலங்களைப் பெற்றவர்கள்.*

*சுக்கிரீவனுக்கு நீதி வழங்கலே முதலில் வேண்டியது ஆதலின் அதைத்தரவல்லாரை 'நீதியார்' என முதலில் குறிப்பிட்டான். "ஆர் அறத்தினொடு அன்றி நின்றார் அவர் வேர் அறுப்பென், வெருவன்மின் நீர்' என (2652) இராமன் முனிவர்களிடம் கூறியது நோக்குக.*

*வாலியின் வலிமை அறிந்தபின்னர் மாறிவிடுவரோ என்ற ஐயத்தைப் போக்கும் வகையில் 'நெறிவயின் பேதியா நிலைமையார்' என்றான். எவரினும் வலிமை படைத்த வாலியை வெல்லும் ஆற்றல் உடையர் என்பதை உணர்த்த 'எவரினும் பெருமையார்' என உரைததான். அறிவும், புகழும் பெற்றிருத்தலோடு படைக்கலங்களும் பெற்றவர்களாதலின் 'வெம்படையினார்' என்றான். விசுவாமித்திரர் இராமனுக்குப் படைக்கலங்கள் தந்தமை "மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்து அன சடையன் வெண்ணெய் அண்ணல் தன் சொல்லே அன்ன, படைக்கலம் அருளினானே (394) எனப் பாலகாண்டத்தில் கூறியதால் அறியலாம். அப்படைகளின் மிகுதியும், தெய்வத்தன்மையும், ஆற்றலும் புலப்பட "நெடுங்கடவுள் வெம்படை" எனப்பட்டது. முனிவர் அளித்த படைக்கலங்கள் உடையராதலின் வாலியை வெல்வது எளிது என்பதும் குறிப்பு.* *5*

*3791 . 'வேல் இகல் சினவு தாடகை*
*விளித்து உருள, வில்*
*கோலி, அக் கொடுமையாள் புதல்வனைக்*
*கொன்று, தன்*
*கால்இயல் பொடியினால், நெடிய*
*கற் படிவம் ஆம்*
*ஆலிகைக்கு, அரிய பேர்*
*உரு அளித்தருளினான்.*

***வேல் இகல் சினவு தாடகை*** *- (அவ்விருவருள் முன்னவனாம் இராமன்) சூலாயுதத்தை ஏந்தி மாறுபட்டவளாய்ச் சினந்து வருகின்ற தாடகை;* ***விளிந்து உருள -***

*இறந்து தரையில் உருளுமாறு;* ***வில் கோலி -*** *வில்லை வளைத்து;* ***அக்கொடுமையாள்*** *- அக்கொடியவளின்;* ***புதல்வனைக் கொன்று-*** *மகனான சுபாகுவைக் கொன்று;* ***தன்கால் இயல் பொடியினால்*** *- தன் கால்களில் பொருந்திய தூளியினால்;* ***நெடிய கல் படிவம் ஆம்-*** *நீண்ட கல் வடிவமாகக்கிடந்த;* ***ஆலிகைக்கு -*** *அகலிகைக்கு;* ***அரிய பேர் உரு -*** *பெறுதற்கரிய சிறந்த உருவத்தை;* ***அளித்து அருளினான்-*** *கொடுத்து அருள் செய்தான்.*

*'நல்லுறுப்பு அமையும் நம்பியரில் முன்னவர்' என அடுத்த பாடலில் வருவது இடைநிலை விளக்காய் இப்பாடலுக்கு எழுவாயாய் நின்றது. 6*

***3792 . 'நல்உறுப்பு அமையும் நம்பியரில்***
***முன்னவன் - நயந்து,***
***எல் உறுப்பு அரிய பேர்***
***எழு சுடர்க் கடவுள்தன்***
***பல் இறுத்தவன் வலிக்கு***
***அமை தியம்பகம் எனும்***
***வில் இறுத்தருளினான் - மிதிலை***
***புக்க அனைய நாள்.***

***நல் உறுப்பு அமையும் -*** *நல்ல உறுப்பிலக்கணம் அமைந்த;* ***நம்பி யரில் முன்னவன் -*** *அவ்ஆண் மக்களுள் முன் பிறந்தவனான இராமன்;* ***மிதிலை புக்க அனைய நாள் -*** *மிதிலை நகரத்துள் புகுந்த அந்த நாளில்;* ***எல் உறுப்பு -*** *ஒளி வீசும் கதிர்களை உறுப்பாக உடைய;* ***அரிய பேரி எழுசுடர்க் கடவுள்தன் -*** *அரிய பெரிய சூரிய பகவானின்;* ***பல் இறுத்தவன்-*** *பற்களை உதிர்த்தவனாகிய சிவபிரானின்;* ***வலிக்கு அமை -*** *வலிமைக்குஏற்ப அமைந்த;* ***தியம்பகம் எனும்வில் -*** *'திரியம்பகம்' என்று சொல்லப்பெறும் வில்லை;* ***நயந்து -*** *(வளைக்க) விரும்பி;* ***இறுத்து அருளினான் -*** *ஒடித்து அருளினான்.*

*அரச குமாரர்களுக்கு ஏற்ற உறுப்பிலக்கணம் பெற்றவராதலின் 'நல் உறுப்பு அமையும் நம்பியர்' என்றார். ஆடவரில் சிறந்தோர் 'நம்பியர்' எனப்படுவர். எரிசுடர்க்கடவுள் பல்லிறுத்தது - வீரபத்திரனாகச் சிவபிரான் தக்கன் யாகத்தில் மற்ற தேவர்களோடு வந்திருந்த சூரியனின் பற்களைத் தகர்த்ததாகக் கூறப்படும் வரலாறு. 'சூரியனார் தொண்டை வாயினில் பற்களை, வாரி நெரித்தவா உந்தீபற' (திருவாசகம் - திருவுந்தி - 15) என்றது காண்க.*

*தியம்பகம் - திரியம்பகம் என்பதன் திரிபு; சிவதனுசுவின் பெயர். மூன்று கண்களை உடையதால் திரியம்பகம் எனப்பட்டது. சுடர்மிகு கதிரவனின் பற்களைத் தகர்த்த சிவபிரானின் வில்லை முறித்த இராமனுக்கு வாலியை வெல்வது எளிய செயலே எனச் சுக்கிரீவனுக்கு இங்குக் குறிப்பாக உணர்த்தப்பட்டது. 7*

***3793 . 'உளைவயப் புரவியான் உதவ***
***உற்று, ஒரு சொலால்,***
***அளவு இல் கற்பு உடைய***
***சிற்றவை பணித்தருளலால்,***
***வளையுடைப் புணரி சூழ்***

*மகிதலத் திரு எலாம்*
*இளையவற்கு உதவி, இத்*
*தலை எழுந்தருளினான்.*

***உளை வயப் புரவியான்*** - *பிடரி மயிரை உடைய குதிரைப்படை கொண்ட தசரதன்;* ***உதவ*** - *அரசை அளிக்க;* ***உற்று*** - *ஏற்றுக் கொண்டு;* ***ஒருசொலால்*** - *(பின்னர்) சொல் ஒன்றால்;* ***அளவு இல் கற்பு உடைய சிற்றவை***- *அளவில்லாத (உயர்ந்த) கற்புடைய சிற்றன்னையாகிய கைகேயி;* ***பணித்தருளலால்*** - *கட்டளையிட்டு அருளியதால்;* ***வளையுடைப் புணரி சூழ்***- *சங்குகளை உடைய கடலால் சூழப்பட்ட;* ***மகிதலத் திரு எலாம்*** - *நிலவுலகை ஆளும் செல்வம் எல்லாம்;* ***இளையவற்கு உதவி*** - *இளையவனாகிய பரதனுக்கு அளித்து;* ***இத்தலை எழுந்தருளினான்*** - *இக்காட்டிற்கு வந்துள்ளான்.*

*இராமன் பெற்றோர் சொற்கேட்டமையும், பரதனுக்கு நாடளித்த செயலும் அவன் உயர்பண்பை உணர்த்துவன. இதனால் அவனுக்குச் செல்வத்தில் பற்றின்மையும் புலப்படுகிறது. சிற்றன்னை 'பரதன் நாடாள நீ காடாள்க' எனச் சொன்ன ஒரு சொல்லிலே இராமன் நாடளித்த எளிமை நோக்கி 'ஒரு சொலால் பணித்தருள' என்றான். விடுதற்கு அரிய செல்வம் ஆதலின் 'மகிதலத் திரு எலாம்' எனப்பட்டது. வாலியைக்கொன்ற பின்னர், கிட்கிந்தையரசை இராமன் கொள்வானோ என்ற ஐயம் சிறிதும் சுக்கிரீவனுக்கு ஏற்படக்கூடாது என்பதற்காக இராமன் நாடு கொடுத்த செய்தி இங்குக் கூறப்படுகிறது. தனக்குரிய நாட்டையே தம்பிக்கு அளித்தவன் இவ்வரசைப் பெற விழையான் என்பது இதனால் உறுதி செய்யப் பெறுகிறது. கைகேயியை 'அளவுஇல் கற்புடைய சிற்றவை' என்று குறித்தும், அவள் சொல்லியதைப் 'பணித்து அருளலால்' என்று குறித்தும் கூறிய நயம் சிந்தனைக்கு உரியது. 8*

*3794 . 'தெவ் இரா வகை, நெடுஞ்*
*சிகை விரா மழுவினான்*
*அவ் இராமனையும், மா வலி*
*தொலைந்து அருளினான்,*
*இவ் இராகவன்; வெகுண்டு எழும்*
*இரா அனையன் ஆம்*
*அவ்விராதனை*
*இரா வகை துடைத்தருளினான்.*

***இவ் இராகவன்*** - *இந்த இராமன்;* ***தெவ் இரா வகை*** - *பகைவர்களே இல்லாதபடி செய்த;* ***நெடுஞ்சிகை விரா மழுவினான்*** - *மிக்க சுவாலை பொருந்திய மழுவாயுதத்தை உடையவனாகிய;* ***அவ் இராமனையும்*** - *அந்தப் பரசுராமனையும்;* ***மாவலி தொலைத்து*** - *(அவனுடைய) மிக்க வலிமையை அழித்து;* ***அருளினான்*** - *(அவனைக் கொல்லாது) அருள் செய்தான்;* ***வெகுண்டு எழும்*** - *சினந்து எதிர்த்து வந்த;* ***இரா அனையன் ஆம்*** - *இருளைப் போன்றவனாகிய;* ***அவ்விராதனை*** - *அந்த விராதனையும்;* ***இரா வகை*** - *இவ்வுலகத்தில் இல்லாதபடி;* ***துடைத்து அருளினான்*** - *அழித்து அருளினான்.*

*பரசுராமன், தன் தந்தை ஜமதக்னி முனிவரைக் கொன்ற கார்த்த வீரியார்ச்சுனன் மக்களைக் கொன்று, அது முதல் அரசு குலத்தினர் மீது சினங்கொண்டு மன்னர்*

*குலத்தை வேர் அறுத்தவனாதலின் 'தெவ் இரா வகை' என்றும், பரசுராமன் மழுப்படையையே தன் ஆயுதமாகக் கொண்டதனால் 'மழுவினான் அவ்இராமனையும்' என்றும் இராமனிடம் தோற்றுத் தன் தவவலிமை முழுவதும் அளித்துச் சென்றதால் 'மாவலி தொலைத்து' என்றும், பரசுராமன் தவவிரதம் பூண்டவனாதலின் அவன் உயிரைக் கொல்லாது தவத்தை மட்டும் பெற்று விடுவித்ததால் 'அருளினான்' என்றும் கூறினான். விராதன் - மிகுதியாய்த் துன்பம் செய்பவன் என்பது பொருள். குபேரன் சாபத்தால் அரக்கனாகி வனத்தில் திரிந்து வந்தவன். 'தங்கு திண் கரிய காளிமை தழைந்து தவழ' எனவும் 'கங்குல் பூசி வருகின்ற கலி காலம் எனவே' எனவும் ஆரணிய காண்டத்தில் (2529) கூறியாங்கு இங்கு 'இரா அனையன்' எனப்பட்டான். பகைவரை அழித்தலும் மறக்கருணையால் நிகழ்தலின் 'தொலைத்தருளினான்', 'துடைத்தருளினான்' என்றான். இராமன் பரசுராமன், விராதன் ஆகியோர் வலி தொலைத்தவனாதலின் அவன் வலியன் என்பதை விளக்கிச் சுக்கிரீவனின் அச்சம் தவிர்த்து நம்பிக்கை ஊட்டினான் அனுமன் என்க. "அவ்விராமனையும்" - 'அ' உலகறிசுட்டு; உம்மை உயர்வுசிறப்பு. பரசுராமனை அழித்த பால காண்ட நிகழ்ச்சியும் விராதனைத் தொலைத்த ஆரணிய காண்ட நிகழ்ச்சியும் இப்பாடலில் இடம்பெறுகின்றன. 9*

***3795. 'கரன் முதல் கருணை***
***அற்றவர், கடற்படையொடும்***
***சிரம் உகச் சிலை குனித்து***
***உதவுவான்; திசை உளார்***
***பரம் உகப் பகை துமித்தருளுவான்;***
***பரமர் ஆம்***
***அரன் முதல் தலைவருக்கு***
***அதிசயத் திறலினான்;***

***கரன் முதல் கருணை அற்றவர் -*** *(இந்த இராமன்) கரன் முதலான இரக்கமற்ற அரக்கர்களுடைய;* ***கடற் படையொடும் -*** *கடல்*

*போன்ற பதினாலாயிரம் படை வீரர்களோடும்;* ***சிரம் உக -*** *(அவர்கள்) தலைகள் சிதறி விழ;* ***சிலை குனித்து -*** *வில்லை வளைத்து;* ***உதவுவான் -*** *(முனிவர்க்கு) உதவி செய்தவனாவான்;* ***திசை உளார் -*** *இந்திரன் முதலிய திசை காப்பவர்களின்;* ***பரம் உக -*** *துன்பச் சுமை குறையுமாறு;* ***பகை துமித்தருளுவான்*** *- (அறத்திற்குப்) பகையாய் உள்ளவர்களை அழித்து அருளுவான்;* ***பரமர் ஆம் -*** *மேம்பட்டவர்களாகிய;* ***அரன் முதல் தலைவருக்கு*** *- சிவபிரான் முதலான தேவர்களுக்கும்;* ***அதிசயத் திறலினான்-*** *வியக்கத்தக்க வலிமையுடையவனுமாவான்.*

*கரன் - கடுமை உள்ளவன் என்பது பொருள். 'கரன் முதல் கருணை அற்றவர்' என்பது - தூடணன், திரிசிரசு என்னும் இருவரையும் உள்ளடக்கிய அரக்கர் கூட்டம் ஆம். அரக்கர் கருணையற்றவர் என்பதை 'இரக்கம் என்றொரு பொருள் இலாத நெஞ்சினர் அரக்கர்' (2642) என்ற அடியும் உணர்த்தும். இந்திரன் முதலிய திசைக் காவலர் இராவணனால் படும் துன்பமிகுதி தோன்றப் 'பரம்' என்றான். பாரம் - பரம் எனக் குறுகியது. இராமன் 'அரன் முதலான தேவர்களினும் மேம்பட்ட திறல் உடையவன் என்பதால் 'அதிசயத் திறலினான்' என்றான். 'சூரறுத்தவனும் சுடர்நேமியும், ஊரறுத்த*

*ஒருவனும் ஓம்பினும் . . . . . வேரறுப்பென் வெருவன்மின்' (2652) என இராமனே கூறியுள்ளது காண்க. கடற்படை - உவமை. அறத்திற்குப் பகையாய் உள்ளவர்களை அழிக்கவல்ல பேராற்றல் படைத்தவன் இராமன் என்பதை உணர்த்தி, அறத்திற்குப் பகையான வாலியை அழிப்பதும் உறுதி என்பதைச் சுக்கிரீவனுக்குப்புலப்படுத்தினான். 10*

***3796. 'ஆயமால் நாகர்***
***தாழ் ஆழியானே அலால்,***
***காயமான் ஆயினான்***
***யாவனே? காவலா!***
***நீ அம் மான் நேர்தியால்;***
***நேர் இல் மாரீசன் ஆம்***
***மாய மான் ஆயினான்***
***மா யமான் ஆயினான்.***

***காவலா** - அரசே; **காயமான் ஆயினான்** - மானிட உடம்பில் தோன்றும் இந்த இராமன்; **ஆயமால் நாகர் தாழ்** - கூட்டமாகவுள்ள பெருமை பொருந்திய தேவர்கள் வணங்குகின்ற; **ஆழியானே அலால்** - திருப்பாற்கடலில் யோக நித்திரை செய்தருளும் திருமாலே அல்லாது; **யாவனே**- வேறு யாரவன்? **நீ அம்மான் நேர்தி** - நீ அப்பெருமைக்குரியவனுடன்நட்புக் கொள்வாயாக; **நேர்இல்** - நிகரில்லாத வலிமையுடைய; **மாரீசன் ஆம்**- மாரீசன் என்கின்ற; **மாயமான் ஆயினான்** - மாயமானாய் வந்தஅரக்கனுக்கு; **மா யமான் ஆயினான்** - (இந்த இராமன்) பெரிய யமனாகநின்று அழித்தவனாவான்.*

*காயம் - உடம்பு; மான் - மனிதன். உடம்பால் மனிதனாகத் தோன்றியவன் என்பதால், தன்மையால் தெய்வம் என்பது பெறப்படும். யாவனே - ஏ, எதிர்*

*மறை, வேறு எவனுமாகான்; இராமன் திருமாலே என்பதை வற்புறுத்த வந்தது. யமான் - யமன் என்பதன் நீட்டல் விகாரம். 11*

***3797. உக்கஅந்தமும், உடல் பொறை***
***துறந்து உயர் பதம்***
***புக்க அந்தமும், நமக்கு உரை***
***செயும் புரையவோ -***
***திக்கு அவம் தர, நெடுந்***
***திரள் கரம், சினவு தோள்,***
***அக் கவந்தனும், நினைந்து***
***அமரர் தாழ் சவரிபோல்?***

***திக்கு அவம் தர** - எல்லாத் திசைகளிலும் உள்ள உயிர்களெல்லாம் அழிவு அடையும்படி; **நெடும் திரள் கரம்** - நீண்ட திரண்ட கைகளையும்; **சினவு தோள்** - சினந்து பாய்கின்ற தோள்களையும் உடைய; **அக்கவந்தனும்** - அந்தக் 'கவந்தன்' என்னும் அரக்கனும்; **உக்க அந்தமும்** - (இவர்கள் கையால்) இறந்துபட்ட முடிவும்;*

***உடல்பொறை துறந்து** - (பின்னர்) நிலத்திற்குச் சுமையான தன் உடலை விட்டு; **சவரி போல்** - சபரி என்பவளைப் போல; **நினைந்து அமரர் தாழ்** - தேவர்களெல்லாம் மதித்து வணங்குகிற; **உயர்பதம் புக்க அந்தமும்** - உயர்ந்த பரமபதத்தை அடைந்த அழகும்; **நமக்கு** - எம் போல்வாருக்கு; **உரை செயும் புரையவோ** - சொல்லத்தகும் தன்மையை உடையனவோ?*

*இராமன் வீரத்தைக் கூறிய அனுமன் அவன் கருணைச் செயல்களையும் கூறலாயினன். கவந்தனை வென்ற இராமன் வீரமும், அக்கவந்தனுக்கு உயர் நிலை அளித்த அவன் கருணையும் இப்பாடலில் புலப்படுகின்றன. தவறு செய்த கவந்தனுக்கும், தவம் செய்த சவரிக்கும் ஒத்த நிலையில் அருள்புரிந்த இராமனின் பெருங்கருணையை அனுமன் விளக்கினான்.*

*கவந்தனின் சினத்தைத் தோள்மேல் ஏற்றிச் 'சினவு தோள்' என்றான். 'பிறப்பு அறுக்கலுற்றார்க்கு உடம்பும் மிகை' என்றாற்போல முக்தி பெறுவதற்கு, அதற்குக் கருவியாயிருந்த உடம்பும் தேவையற்ற சுமையாவதால் 'உடற்பொறை' எனல் தகும். சவரி தவத்தால் பெற்ற உயர்பதத்தைக் கவந்தன் கொலைத் தொழில் புரிந்தும் பெற்றான் எனின், இராமன் கருணையை வியப்பதன்றி வேறு கூற இயலாது என்பதால் 'நமக்கு உரைசெயும் புரையவோ' என்றான். அக்கவந்தனும் - 'அ' முன்னறி சுட்டு, உம்மை - இழிவு சிறப்பும்மை. 12*

***3798 . 'முனைவரும் பிறரும், மேல், முடிவு***
***அரும் பகல் எலாம்,***
***இனையர் வந்து உறுவர் என்று,***
***இயல் தவம் புரிகுவார்;***
***வினை எனும் சிறை துறந்து***
***உயர் பதம் விரவினார்***
***எனையர் என்று உரைசெய்கேன்? -***
***இரவிதன் சிறுவனே!***

***இரவிதன் சிறுவனே** - சூரியனின் மைந்தனே! **முனிவரும் பிறரும்** - முனிவர்களும் மற்றவர்களும்; **மேல் முடிவு அரும் பகல் எலாம்** - முற்காலம் தொடங்கி எல்லையில்லாத பல நாட்களாக; **இனையர் வந்து உறுவர் என்று** - இராமலக்குவராகிய இவர்கள் இவ்வனத்திற்கு வருவர் என்பதை உணர்ந்து; **இயல் தவம் புரிகுவார்** - தத்தமக்கு இயன்ற வண்ணம் தவங்களைச் செய்பவர்களாய்; **வினை எனும் சிறை துறந்து** - (தவத்தின் பயனாய் இவர்களைக் காணப்பெற்று) இருவினை என்கின்ற கட்டினின்று நீங்கி; **உயர்பதம் விரவினார்** - உயர்ந்த வீடுபேற்றை அடைந்தார்கள்; **எனையர் என்று** - (அதனால்) இராமலக்குவரை எத்தன்மையர் என்று; **உரை செய்கேன்** - நான் சொல்ல வல்லேன்? (சொல்ல இயலாது)*

*முனிவர் முதலியோர் இராமன் வருகைக்காகத் தவம் செய்து, கண்ட பின்னர் உயர்பதம் எய்தினர் என்பதால், இராமன் நல்லோரைக் காக்க வந்த முழு முதற்கடவுளே போலும் எனக் கூறினான் என்க. வீடுபேறு அடைவதற்கு நல்வினை, தீவினை ஆகிய இரண்டும் தடையாக இருத்தலால் 'வினை எனும் சிறை' எனப்பட்டது.*

*'இருள்சேர் இருவினையும் சேரா' (குறள் 5) என்றார் வள்ளுவரும். வினை நீங்கியதும் வீடுபேறு கிடைப்பது உறுதி ஆதலின் 'உயர்பதம் விரவினார்' என்றார்.*

*'எனையர் என்று உரை செய்கேன்' என்பதற்கு இங்ஙனம் உயர்பதம் அடைந்தோர் எத்தனை பேர் என்று யான் எடுத்துரைப்பேன்' எனவும் பொருள் கொள்ளலாம். முனைவரும் பிறரும் - சரபங்கர், சவரி முதலியோர். "நீ இவண் வருகுதி" எனும் நினைவு உடையேன்; போயின இருவினை" (2626) என்ற சரபங்கர் கூற்றை ஒப்புநோக்குக. இராமனோடு நட்புக்கொண்டால் புறப்பகையாகிய வாலியை அழிப்பதோடு, அகப்பகையாகிய குற்றங்களையும் நீக்கி உயர் பதம் அடையலாம் என உணர்த்தப்பட்டது. 13*

***3799. 'மாயையால், மதி இலா***
***நிருதர்கோன், மனைவியைத்***
***தீய கான் நெறியின்***
***உய்த்தனன்; அவள் - தேடுவார்,***
***நீ, ஐயா, தவம் இழைத்து***
***உடைமையால், நெடு மனம்***
***தூயையா உடையையால்***
***உறவினைத் துணிகுவார்.***

***ஐயா** - தலைவனே! **மதி இலா நிருதர் கோன்** - அறிவில்லாத அரக்கர் தலைவனாகிய இராவணன்; **மனைவியை** - இந்த இராமனுடைய தேவியை; **மாயையால்** - வஞ்சனையால்; **தீய கான் நெறியின்** - கொடிய காட்டின் வழியிலே; **உய்த்தனன்** - கவர்ந்து சென்றான்;*

***அவள் தேடுவார்** - அவளைத் தேடுபவர்களாய் வந்த இராமலக்குவர்; **நீ** - நீ; **தவம் இழைத்து உடைமையால்** - முன் தவம் செய்திருத்தலாலும்; **நெடுமனம் தூயையா உடையையால்** - சிறந்த மனத்தில் தூய்மை உடையனாய் இருத்தலாலும்; **உறவினை** - உன்னொடு நட்புக் கொள்ள; **துணிகுவார்** - துணிவாராயினர்.*

*அனுமன், இராமலக்குவரின் வருகைக்குரிய காரணத்தை இங்குக் கூறினான். இராமனது வலிமையை அறியாமையாலும் பிறர் மனை விழைதல் தவறு என உணராமையாலும் 'மதியிலா நிருதர்கோன்' என்றான். மாய மானை அனுப்பியும், தவவேடத்தில் சென்றும் சீதையைக் கவர்ந்ததால் 'மாயையால்' என்றான். 'அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை நின்றாரின் பேதையாரில்' (குறள்-142) என்றார் வள்ளுவர். முனிவர்களை அரக்கர் வருத்திய இடமாய் இருத்தலால் கானம் 'தீயகான்' ஆயிற்று. இராமன் சுக்கிரீவனை நாடி வந்தது, அவன் முன் செய்த தவப்பயனாலும, அவனுடைய மனத்தூய்மையாலுமே ஆகும். 'பொய்யுடை உள்ளத்தார்க்குப் புலப்படாப் புலவ' (4092) என வாலியும், 'அடியேன் அருந்தவத்தால் அணுகுதலால் (2576) என விராதனும், 'ஆயிரம் முகம் உள தவம் அயர்குவென், யான்' (2626) எனச் சரபங்கரும் இராமனை நோக்கிக் கூறியவற்றால் மனத்தூய்மை உடையாரே இராமனைக் காண்பர் என்பது தெரியலாகும். சீதையைத் தேடுகின்றவர்கள் வழியில் சுக்கிரீவனைக் கண்டு உறவு கொள்ள நினைத்தார் என்பதால் இராமலக்குவருக்குச் சுக்கிரீவன் துணையின்றியும் வெற்றிபெற முடியும் என்பதையும் உணர்த்தினான்.*

*இங்ஙனம் அனுமான் இராமன் வரலாற்றைக் கூறியதில் அவனது சொல்வன்மையும் அறிவாற்றலும், எதிரது நோக்கும் நுண்ணறிவும் புலனாவதைக்காணலாம்.*
*14*

***3800. 'தந்திருந்தனர்அருள்; தகை***
***நெடும் பகைஞன் ஆம்***
***இந்திரன் சிறுவனுக்கு இறுதி,***
***இன்று இசைதரும்;***
***புந்தியின் பெருமையாய்! போதரு' என்று***
***உரை செய்தான் -***
***மந்திரம் கெழுமு நூல்***
***மரபு உணர்ந்து உதவுவான்.***

***புந்தியின் பெருமையாய் -*** *அறிவில் மேம்பட்டவனே!* ***அருள் தந் திருந்தனர் -*** *(இராமலக்குவர்) நம்மாட்டுக் கருணை வைத்துள்ளனர்;* ***தகை நெடும் பகைஞன் ஆம் -*** *(அதனால்) வலிமை மிக்க பகைவனா கிய;* ***இந்திரன் சிறுவனுக்கு -*** *இந்திரன் மகன் வாலிக்கு;* ***இறுதி-*** *அழிவு;* ***இன்று இசைதரும்*** *- இப்பொழுது நேரிடும்;* ***போதரு -*** *(அதனால் அவர்களோடு நட்புக் கொள்ளப்) புறப்பட்டு வருவாயாக;* ***என்று -*** *என்று;* ***மந்திரம் கெழுமுநூல் மரபு*** *- மன்னர்க்குரிய நீதி நூல்களின் மரபினை;* ***உணர்ந்து உதவுவான்-*** *உணர்ந்து சுக்கிரீவனுக்கு ஆலோசனை சொல்பவனாகிய அனுமன்;* ***உரைசெய்தான் -*** *சொன்னான்.*

*வாலியை வெல்ல, இராமன் நட்பைப் பெற்றுக் கொள்வதே தக்கது என்னும் அறிவு சுக்கிரீவனுக்கு உண்டு என்பது புலப்படப் 'புந்தியின் பெருமையாய்' என விளித்தான். புந்தி - புத்தி என்பதன் மெலித்தல் விகாரம்; போதர் - போதருக என்பதன் விகாரம். "போதர் கண்டாய் இங்கே போதர் கண்டாய்" (2-9-6) என்ற பெரியாழ்வார் பாசுரம் காண்க. அனுனுன் கூறும் ஆலோசனை, அரசியல் மரபிற்கேற்ப அமைந்திருக்கும் என்பதை 'மந்திரம் கெழுமு நூல் மரபு உணர்ந்து உதவுவான்' என்று கூறி அனுமனைச் சிறப்பித்தார்.* *15*

*சுக்கிரீவன் இராமனை வந்து காணுதல்*

***3801 . அன்னஆம் உரை***
***எலாம் அறிவினால் உணர்குவான்,***
***'உன்னையே உடைய எற்கு அரியது***
***எப் பொருள் அரோ?***
***பொன்னையே பொருவுவாய்! போது'***
***என, போதுவான்,***
***தன்னையே அனையவன் சரணம்***
***வந்து அணுகினான்.***

***அன்ன ஆம் உரை எலாம் -*** *(அனுமான் கூறிய) அத்தன்மையன வாகிய சொற்களை எல்லாம்;* ***அறிவினால் உணர்குவான் -*** *தன் அறிவால் அறிந்துணர்ந்த சுக்கிரீவன்;*

***பொன்னையே பொருவுவாய் -*** *(அனுமனை நோக்கி) 'பொன் போன்றவனே';* ***உன்னையே உடைய எற்கு -*** *அறிவில் சிறந்த உன்னையே துணையாக உடைய எனக்கு;* ***அரியது எப்பொருள் -*** *எந்தச் செயல்தான் அரியது?* ***போது -*** *வருவாயாக;* ***எனப் போதுவான் -*** *என்று புறப்பட்டவனாய்;* ***தன்னையே அனையவன் -*** *(தனக்கு வேறு எவரும் ஒப்பில்லாமையால்) தன்னையே ஒப்பவனாகிய இராமனுடைய;* ***சரணம் வந்து அணுகினான் -*** *திருவடிகளை வந்தடைந்தான்.*

*அனுமன் கூறியதற்கு இசைந்து அவனையும் அழைத்துக்கொண்டு இராமன் இருக்கும் இடத்தைச் சுக்கிரீவன் அடைந்தான். அறிவுடைய அனுமனை அமைச்சனாகப் பெற்ற சுக்கிரீவனுக்கு அரிய செயல் இல்லையாதலின் 'அரியது எப்பொருள்' என்றான். பொன்னையே பொருவுவாய் - அருமை, பெருமை, நயம், ஒளி என்ற சிறப்புகளால் பொன் உயர்வுள்ளதால் அனுமனுக்குப் பொன் உவமை ஆயிற்று. 'பொன் உருக்கொண்ட மேரு' (3781) என அனுமன் குறிக்கப்பட்டது காண்க. 'பொன்னையே பொருவுவாய்' என்பதற்குத் தேவேந்திரனுக்குக் குருவும் அமைச்சனுமாகிய பிரகஸ்பதி போன்றவனே எனப் பொருள் கொள்ளுதலும் தகும். பெரியோரை அடைந்தான் என்னும் பொருளில் திருவடிகளை அடைந்தான் என்பது மரபு. இராமனைச் சரண் அடைந்தான் என்ற குறிப்பும்புலனாகிறது. 16*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3802 . கண்டனன்என்ப மன்னோ -***
***கதிரவன் சிறுவன், காமர்***
***குண்டலம்துறந்த கோல***
***வதனமும், குளிர்க்கும் கண்ணும்,***
***புண்டரிகங்கள் பூத்துப் புயல்***
***தழீஇப் பொலிந்த திங்கள்***
***மண்டலம் உதயம் செய்த***
***மரகதக் கிரி அனானை.***

***கதிரவன் சிறுவன் -*** *சூரியன் மகனான சுக்கிரீவன்;* ***காமர் குண்டலம் துறந்த -*** *அழகிய குண்டலங்களை நீக்கிய;* ***கோல வதனமும் -*** *அழகிய முகமும்;* ***குளிர்க்கும் கண்ணும் -*** *(கருணையால்) குளிர்ந்து நோக்கும் கண்ணும்;* ***புண்டரிகங்கள் பூத்து -*** *தாமரை மலர்கள் மலரப் பெற்று;* ***புயல் தழீஇ -*** *கருமேகம் தழுவப்பெற்று;* ***பொலிந்த திங்கள் மண்டலம் -*** *விளங்குகின்ற சந்திர மண்டலம்;* ***உதயம் செய்த -*** *உதிக்கப் பெற்ற;* ***மரகதக் கிளி அனானை -*** *மரகத மலையை ஒத்தவனான இராமனைக்;* ***கண்டனன் -*** *கண்டான்.*

*தாமரை மலர்கள் - கை, கால் முதலிய உறுப்புகளுக்கும், புயல் கரிய முடிக்கும் - திங்கள் மண்டலம் - முகத்திற்கும், மரகதக்கிரி - நீலமேனிக்கும் உவமை. தாமரை பூத்து, மேகம் தழுவிய சந்திர மண்டலம் உதயம் செய்யும் மரகத மலையாண்டும் இன்மையால் இல் பொருள் உவமை அணியாயிற்று. தவ வேடம் மேற்கொண்டமையால் குண்டலம் துறந்த வதனமாயிற்று. எனினும், அழகு குறையாமையால் கோல வதனமாயிற்று. "கருமுகில் தாமரைக் காடு பூத்து" (191), 'திருவடியும் கையும் திருவாயும் செய்ய கரியவனை" (சிலம்பு - ஆய்ச்சியர் குரவை) என்பன இராமன் அழகை உணர்த்துவன. இத்தகைய அழகனைக் கண்ட வியப்பால்*

*'கண்டனன் என்ப, மன், ஓ எனப் பல அசைச் சொற்கள் பெற்று வந்தது இப்பாடல், இராமபிரான் திருக்கோலத்தை நினைந்து ஆழ்வார்கள்போல் கம்பர் பக்திச் சுவை ததும்பப் பாடியதுஇப்பாட்டு. 17*

*சுக்கிரீவன் நினைப்பு*

***3803.* நோக்கினான்;நெடிது நின்றான்; 'நொடிவு**
**அருங் கமலத்து அண்ணல்**
**ஆக்கிய உலகம் எல்லாம்,**
**அன்றுதொட்டு இன்று காறும்,**
**பாக்கியம் புரிந்து எல்லாம் குவிந்து,**
**இரு படிவம் ஆகி,**
**மேக்கு உயர் தடந் தோள்பெற்று,**
**வீரர் ஆய் விளைந்த' என்பான்.**

**நோக்கினான் -** *(அவ்வாறு சுக்கிரீவன் இராமலக்குவரை)* நோக்கி; **நெடிது நின்றான் -** *(அவர்கள் அழகில் ஈடுபட்டு)* நீண்ட நேரம் நின்றவனாய்; **நொடிவு அரும் -** அழிவு இல்லாத; **கமலத்து அண்ணல் -** தாமரையில் தோன்றிய நான்முகன்; **ஆக்கிய உலகம் எல்**

**லாம் -** படைத்த உலகில் உள்ள உயிர்கள் எல்லாம்; **அன்று தொட்டு** - படைப்புக் காலந் தொட்டு; **இன்று காறும் -** இன்று வரையிலும்; **புரிந்த பாக்கியம் எல்லாம் -** செய்த நல்வினைகள் எல்லாம்; **குவிந்து -** திரண்டு; **இருபடிவம் ஆகி -** இரண்டு திருவுருவமாய்; **மேக்கு உயர் -** மேலே உயர்ந்த; **தடந்தோள் பெற்று** - பெரிய தோள்களைப் பெற்று; **வீரர் ஆய் விளைந்த -** இவ்வீரர்களாய்த் தோன்றின; **என்பான் -** என்று எண்ணுபவன் ஆவான்.

படைப்புக் காலந் தொட்டு இன்று வரையிலும் உலகம் செய்த பாக்கியமெல்லாம் சேர்ந்து இருவடிவமாகிப் பெருந்தோளும் பெற்று இராமலக்குவராய்த் தோன்றினர் எனச் சுக்கிரீவன் கருதினான். *'அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான்' (1349),* என்றும் *வீர, நின்குல மைந்தனை, வேதியர் முதலோர், யாரும் 'யாம் செய்த நல்லறப்பயன்' என இருப்பார் (1351)* என்னும் வசிட்டர் கூறுவது காண்க. சுக்கிரீவன் வேண்டுவது வாலியைத் தொலைக்கும் வீரத்தையேயாதலால் அழகு, அறிவு முதலியன பற்றிக் கூறாது 'வீரராய் விளைந்த' என்றான். நொடிவு - சொல்லுதல் என்றுமாம். இது தொழிற்பெயர். *18*

***3804 .* தேறினன்- 'அமரர்க்கு எல்லாம் தேவர்**
**ஆம் தேவர் அன்றே,**
**மாறி, இப் பிறப்பில் வந்தார்**
**மானிடர் ஆகி மன்னோ;**
**ஆறு கொள் சடிலத்தானும், அயனும்,**
**என்று இவர்கள் ஆதி**
**வேறு உள குழுவை எல்லாம்,**
**மானுடம் வென்றது' அன்றே!**

***அமரர்க்கு எல்லாம் -*** *தேவர்களுக்கு எல்லாம்;* ***தேவர் ஆம் தேவர்-*** *கடவுளாகிய முதற்கடவுளே (திருமாலே);* ***மாறி-*** *தம் உருவம் மாறி;* ***இப்பிறப்பில் -*** *இந்தப் பிறவியை எடுத்து;* ***மானிடர் ஆகி வந்தார் -*** *மானிடராக வந்துள்ளார்;* ***ஆறுகொள் சடிலத்தானும் -*** *(அதனால்) கங்கையைச் சடையில் கொண்ட சிவபிரானும்;* ***அயனும் -*** *நான்முகனும்;* ***என்று இவர்கள் ஆதி -*** *என்று இவர்கள் முதலாக;* ***வேறு உள குழுவை எல்லாம் -*** *வெவ்வேறாக உள்ள தேவர் கூட்டத்தையெல்லாம்;* ***மானுடம் வென்றது -*** *மனித குலம் வென்றுவிட்டது;* ***அன்றே -*** *அல்லவா?* ***தேறினன்-*** *என்று தெளிந்தான்.*

*தேவர்களுக்குள் முதல்வனான திருமாலே மானிடனாகப் பிறந்துவிட்டதால் பிரமன் முதலான தேவர்கூட்டத்தை மானுடன் வென்றதாகக் கூறினான். திருமால் இராமனாகவும் ஆதிசேடன் இலக்குவனாகவும் பிறந்தார் என்பதைத் 'திரு அவதாரப்படலத்தில் காணலாம். அமரர்க்கெல்லாம் தேவராம் தேவர் திருமால் என்பதை 'முதலாவார் மூவரே அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர் வண்ணம்' (முதல் திருவந்தாதி 15) என்ற பொய்கையாழ்வார் பாசுரம் உணர்த்தும். இராமன் மனிதனாகப் பிறந்ததால் மனித குலத்திற்கு பெருமை உண்டாயிற்று என்பது கருத்தாகும். பெருமானைக் கண்ட அளவிலேயே உணர்வின்*

*எல்லை கடந்த பக்தி வயப்பட்ட சுக்கிரீவன் அனுபவத்தினை அனுமன் கண்ணப்பர் ஆகியோர் அனுபவத்தோடு ஒப்பிட்டு உணர்தல் நலம். 19*

இராமன் சுக்கிரீவனை வரவேற்றல்

***3805. என நினைந்து,இனைய எண்ணி,***
***இவர்கின்ற காதல் ஓதக்***
***கனை கடல் கரைநின்று ஏறா,***
***கண் இணை களிப்ப நோக்கி,***
***அனகனைக் குறுகினான்; அவ்***
***அண்ணலும், அருத்தி கூர,***
***புனை மலர்த் தடக்கை நீட்டி,***
***'போந்து இனிது இருத்தி' என்றான்.***

***என இனைய நினைந்து -*** *(சுக்கிரீவன்) என்று இத்தன்மையானவற்றை ஆலோசித்து; எண்ணி - -;* ***இவர்கின்ற-*** *மேன்மேலும் பெருகுகின்ற;* ***காதல்-*** *அன்பாகிய;* ***ஓதக்கனை கடல் நின்று*** *- வெள்ளத்தை உடைய ஒலிக்கின்ற கடலினின்றும்;* ***கரை ஏறா -*** *கரை ஏறாமல்;* ***கண் இணை -*** *கண்கள் இரண்டும்;* ***களிப்ப நோக்கி*** *- பெரு மகிழ்ச்சி அடையுமாறு பார்த்து;* ***அனகனை -*** *குற்றமற்றவனான இராமனை;* ***குறுகினான் -*** *அணுகினான்;* ***அவ் அண்ணலும் -*** *அந்தப் பெருமை பொருந்திய இராமனும்;* ***அருத்தி கூர -*** *அன்பு மிக;* ***புனை மலர்த் தடக்கை நீட்டி*** *- அழகிய தாமரை மலர் போன்ற பெரிய கைகளை நீட்டி;* ***போந்து -*** *'இங்குவந்து;* ***இனிது இருத்தி -*** *இனிதாக இருப்பாய்';* ***என்றான் -*** *என்று உபசரித்தான்.*

*சுக்கிரீவன் இராமனை மிக்க அன்போடு அணுக. இராமனும் சுக்கிரீவனைக் கருணையுடன் வரவேற்று உபசரித்தான் என்க. இங்கு இருத்தி என்று காட்ட இராமன் கைநீட்டினான், இஃது உபசாரக் குறிப்பு. அச்சம் இன்றி இருக்கலாம் என்பதால்*

*'இனிது இருத்தி' என்றான். காதல் ஓதக் கனை கடல் - உருவகம்; அனகன் - குற்றமற்றவன்; இராமன்; அருத்தி - ஆசை. வாலியை மறைவிடத்திலிருந்து கொல்லப்போகும் பெருமானைக் 'குற்றமற்றவன்' என்று இங்கேயே கூறத் தொடங்கும் கவிஞர் கருத்தினைஓர்க.        20*

***3806. தவாவலி அரக்கர் என்னும்***
***தகா இருள் பகையைத் தள்ளி,***
***குவால் அறம் நிறுத்தற்கு ஏற்ற***
***காலத்தின் கூட்டம் ஒத்தார்;***
***அவா முதல் அறுத்த சிந்தை***
***அனகனும், அரியின் வேந்தும்,***
***உவா உற வந்து கூடும்,***
***உடுபதி, இரவி, ஒத்தார்.***

***அவாமுதல் அறுத்த** - ஆசையை வேரோடு களைந்த; **சிந்தை அனகனும் -** மனத்தையுடைய குற்றமற்றவனாகிய இராமனும்; **அரியின் வேந்தும் -** குரங்கினத்து அரசனாகிய சுக்கிரீவனும் (ஒன்று கூடியவராய்); **தவா வலி அரக்கர் என்னும்** - அழியாத வலிமையை உடைய அரக்கர் என்கின்ற; **தகா இருள் பகையை -** தகுதியில்லாத இருளாகிய பகைவர்களை; **தள்ளி -** ஒழித்து; **குவால் அறம் நிறுத்தற்கு -** பலவகைப்பட்ட அறங்களை நிலைபெறச் செய்வதற்கு; **ஏற்ற காலத்தின் -** தக்காய் வந்த காலத்தின்; **கூட்டம் ஒத்தார் -** சேர்க்கையை ஒத்திருந்தார்கள்; **உவா உற -** (மேலும் அவர்கள்) அமாவாசை நேர; **வந்து கூடும் -** ஒன்றாக வந்து சேர்கின்ற; **உடுபதி இரவி -** சந்திரனையும் சூரியனையும்; **ஒத்தார் -** ஒத்து விளங்கினர்.*

*முதல் - வேரினைக் குறிக்கும். நீங்குதற்கரிய ஆசைகளை வென்றவனாதலின் இராமபிரானை 'அவா முதல் அறுத்த சிந்தை அனகன்' என்றார். 'மெய்த்திருப்பதம் மேவென்றபோதினும், 'இத்திரு துறுந்து ஏகு' என்ற போதினும், சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை யொத்திருக்கும் முகத்தன் (5088) என்ற அடிகள் இராமனது பற்றற்ற தன்மையை உணர்த்தும். 'அவா முதல் அறுத்த' என்பதற்குக் காமம் முதலிய குற்றங்களைப் போக்கிய' எனவும் பொருள் கொள்ளலாம். சுக்கிரீவன் அரசன் ஆவது உறுதி ஆதலின் 'அரியின் வேந்து' என்றார்.*

*அரக்கர் என்னும் இருட்பகையைத் தள்ளுதற்குரிய காலமும், அறத்தை நிலை நாட்டுதற்குரிய காலமும் இணைந்தது போலச் சுக்கிரீவனும் இராமனும் ஒன்று சேர்ந்தனர். சுக்கிரீவன், இராமன் சேர்ந்த நட்பு இராவணன் முதலிய அரக்கர்கள் அழிவிற்கும் அறம் நிலைபெறுவதற்கும் மூலகாரணமாய் முடிதலால் 'தவா வலி . . . . காலத்தின் கூட்டம் ஒத்தார்' என்றார். அறங்கள் பலவாக இருப்பதால் 'குவால் அறம்' என்றார். குவால் - தொகுதி. அமாவாசை - சூரியனும் சந்திரனும் கூடி உறைவது என்ற பொருள் உடையது; 'இந்துவோடு இரவு கூட்டம் அமாவாசையும் என்ப' (சூடா.நிகண்டு.1-85). இரவி - சூரியன்; இங்கு இராமனுக்கு உவமை. 'கரு நாயிறு போல்பவர்' (1163) என்றனள் சீதை. 'இருளுடைவைகலெம் இரவி தோன்றினாய்' (2646) எனத் தண்டகவனத்து முனிவர் இராமனைச் சூரியனாகக் கூறினர். உடுபதி - சந்திரன். குரங்குகளை நட்சத்திரங்களாகவும், சுக்கிரீவனை நட்சத்திரக் கூட்டத் தலைவன் சந்திரனாகவும் கொள்க. தன் கலைகளை இழந்த சந்திரன் சூரியனை அடைந்து அவனால் கலைகளாகிய ஒளி வளரப்பெறுவது போல, சுக்கிரீவனும் இராமபிரானை அடைந்ததால் அரசியல் செல்வம் முதலிய நலன்கள் பெறுவது உறுதியாதலின் 'உவா*

*வுற வந்து கூடும் உடுபதி இரவி ஒத்தார்' என்றார். வெண்ணிறத்தாலும் சந்திரனுக்குச் சுக்கிரீவன் ஒப்பாவான். 'அரியின் வேந்தும் அனகனும் உடுபதி இரவி ஒத்தார்' என மாற்றிப் பொருள் காண்க.*

*இராம சுக்கிரீவர் நட்பைக் காலத்தின் சேர்க்கையாகத் தத்துவப்படுத்தியும், சூரிய சந்திர சேர்க்கையாகக் காட்சிப் பொருளாக்கியும் கம்பர் காட்டியுள்ள நயம் சிறப்புடையது. இஃது உவமை அணி பொருந்திய பாடல். முதல் இரண்டு அடிகளில், அரக்கரை இருளாக உருவகித்ததற்கு ஏற்ப, அறத்தை வெளிச்சமாக உருவகம் செய்யப் பெறாமையால் ஏகதேச உருவக அணி, உவமை அணிக்கு அங்கமாய் நின்றது என்க.*
*21*

***3807. கூட்டம்உற்று இருந்த வீரர்,***
***குறித்தது ஓர் பொருட்கு முன்நாள்***

***ஈட்டியதவமும், பின்னர்***
***முயற்சியும் இயைந்தது ஒத்தார்;***
***மீட்டும், வாள் அரக்கர் என்னும்***
***தீவினை வேரின் வாங்க,***
***கேட்டு உணர் கல்வியோடு***
***ஞானமும் கிடைத்தது ஒத்தார்.***

***கூட்டம் உற்ற இருந்த வீரர் -*** *நட்பாய் ஒன்றிக் கூடியிருந்த இராம சுக்கிரீவர்;* ***குறித்தது ஓர் பொருட்கு -*** *குறிப்பிட்டு நினைத்த காரியம் நிறைவேறுவதற்கு;* ***முன்நாள் ஈட்டிய தவமும்-*** *முற் பிறப்பில் செய்து தேடிக் கொண்ட தவமும்;* ***பின்னர் முயற்சியும் -*** *பின்பு (இப்பிறப்பில் தவப்பயனை அடைய) எடுத்துக் கொள்ளும் முயற்சியும்;* ***இயைந்தது ஒத்தார் -*** *ஒன்று சேர்ந்ததை ஒப்பவர் ஆனார்;* ***மீட்டும் -*** *மேலும்;* ***வாள் அரக்கர் என்னும் தீவினை -*** *கொடிய அரக்கர்கள் என்னும் தீவினையை;* ***வேரின் வாங்க -*** *வேரோடு அழிக்க;* ***கேட்டு உணர் கல்வியோடு -*** *ஆசிரியர்பால் கேட்டு அறிந்த கல்வியோடு;* ***ஞானமும்-*** *தத்துவ ஞானமும்;* ***கிடைத்தது ஒத்தார் -*** *வந்து கூடியதை ஒத்தவரானார்.*

*இராமனும் சுக்கிரீவனும் சேர்ந்திருந்த தோற்றத்திற்கு அழகிய இரண்டு கருத்துவமைகள் இப்பாடலில் உள்ளன. குறித்த பொருளை அடைவதற்கு முன்னர்ச் செய்த தவமும், இப்பொழுது மேற்கொள்ளும் முயற்சியும் ஒன்று கூடிப் பயன் தருவது போலவும், கல்வியும் ஞானமும் கூடிய வழித் தீவினை ஒழிதல் போலவும் இராம சுக்கிரீவர் நட்பால் அரக்கர் அழிவு நடைபெறும் என்பது கருத்தாகும். 'ஆகூழால் தோன்றும் அசைவின்மை'. (குறள் - 371) என்பதால் 'ஈட்டிய தவமும் பின்னர் முயற்சியும்' என அமைத்தார். பல்காலும் கேட்டு அறிய வேண்டுதலின் 'கேட்டு உணர் கல்வி' என்றார்.*

*'தவமும் முயற்சியும்' முறையே அனகனுக்கும் அரியின் வேந்தனுக்கும் நேர் நிரல்நிறையாகவும், ''கல்வியும் ஞானமும்'' என்பதனை எதிர்நிரல் நிறையாகவும் கொள்க. 22*

*சுக்கிரீவன் - இராமன் உரையாடல்*

***3808. ஆயது ஒர் அவதியின் கண்,***
***அருக்கன் சேய், அரசை நோக்கி,***
***'தீவினை தீய நோற்றார் என்னின்***
***யார்? செல்வ! நின்னை,***
***நாயகம் உலகுக்கு எல்லாம் என்னல்***
***ஆம் நலம் மிக்கோயை,***
***மேயினென்; விதியே நல்கின், மேவல்***
***ஆகாது ஏன்'? என்றான்.***

***ஆயது ஓர் அவதியின்கண் -*** *அவ்வாறு ஒருங்கு கூடியிருந்த சமயத்தில்;* ***அருக்கன் சேய்*** *- சூரியன் மகனான சுக்கிரீவன்;* ***அரசை***

***நோக்கி -*** *இரா◌ானைப் பார்த்து;* ***செல்வ -*** *"எல்லாச் செல்வமும் உடையவனே!* ***உலகுக்கு எல்லாம் -*** *உலகம் அனைத்திற்கும்;* ***நாயகம் என்னல் ஆம் -*** *தலைமையான பொருள் என்று சொல்லுதற்கு ஏற்ற;* ***நலம் மிக்கோயை -*** *நல்ல குணங்களை உடையவனான;* ***நின்னை -*** *உன்னை;* ***மேயினென் -*** *யான் வந்து சேர்ந்தேன்;* ***தீவினை தீய நோற்றார்-*** *(எனவே) தீவினை ஒழியுமாறு தவம் செய்தவர்கள்;* ***என்னின் யார்? -*** *என்னைக் காட்டிலும் யார் இருக்கிறார்கள்? (ஒருவரும் இலர்);* ***விதியே நல்கின் -*** *ஊழ்வினையே இவ்வாறு கூட்டி அருளுமாயின்;* ***மேவல் ஆகாது என் -*** *அடைய முடியாதது யாதுளது? (ஒன்றுமில்லை).*

*சுக்கிரீவன் இராமனை அடைந்தது, தான் முன் பிறவியில் செய்த நல்வினையாலும், ஊழின் செயலாலுமாம் எனக் கூறினான். தீவினை நீங்கத் தவம் செய்தார்க்கு அன்றி இராமனை அடைய முடியாது என்பதால் "தீவினை தீய நோற்றார் என்னின் யார்?" என்றான். நல்லூழ் தனக்கு அப்பேற்றை நல்கியது எனக் கூறுவான். அதைப் பொதுப் பொருளாக்கி 'விதியே நல்கின் மேவல் ஆகாது என்?' என்றான். இது வேற்றுமைப் பொருள் வைப்பு அணி. 'புண்ணியம் பயக்கின்றுழி அரியது எப்பொருளே' (3681) என்ற அடியை ஒப்பு நோக்குக. 'ஆகாதது என்ற சொல் செய்யுள் நோக்கி ஆகாது என நின்றது. 23*

***3809 . 'மைஅறு தவத்தின் வந்த சவரி,***
***இம் மலையில் நீ வந்து***
***எய்தினை இருந்த தன்மை,***
***இயம்பினள்; யாங்கள் உற்ற***
***கை அறு துயரம், நின்னால்***
***கடப்பது கருதி வந்தேம்;***
***ஐய! நின் தீரும்' என்ன, அரிக்குலத்து***
***அரசன் சொல்வான்;***

***ஐய -*** *(இராமன் சுக்கிரீவனை நோக்கி) ஐயனே!* ***மை அறு தவத் தின்வந்த -*** *குற்றமற்ற தவமுடையவளாய் வந்த;* ***சவரி -*** *சவரியானவள்;* ***இம்மலையில் நீ வந்து*** *- இந்த ருசியமுக மலையில் நீ வந்து;* ***எய்தினை இருந்த தன்மை*** *- பொருந்தி இருந்த நிலையை;* ***இயம்பினள் -*** *சொன்னாள்;* ***யாங்கள் உற்ற -*** *நாங்கள் அடைந்துள்ள;* ***கையறு துயரம் -***

*செயலற்று வருந்தும் பெருந்துன்பத்தை;* ***நின்னால் கடப்பது கருதி -*** *உன்னால் நீக்குவதுகருதி;* ***வந்தேம் -*** *இங்கு வந்தோம்;* ***நின் தீரும் -*** *அத்துன்பம் உன்னாலேயேதீர்வதாகும்';* ***என்ன -*** *என்று கூற (அதைக்கேட்ட);* ***அரிக்குலத்து அரசன் -*** *குரங்கினத்திற்கு அரசனாகிய சுக்கிரீவன்;* ***சொல்வான் -*** *சொல்லத்தொடங்கினான்.*

*சுக்கிரீவன் இருந்த மலையை அறிந்தது எவ்வாறு என்பதை அறிவிக்கச் 'சவரி . . . . இயம்பினள்' என்றான் இராமன். தான் வந்த காரணத்தையும் 'கையறு துயரம் நின்னால் கடப்பது கருதி வந்தேம்' என உரைத்தான். மை - குற்றம்; தவத்திற்குக் குற்றம் - காமம், வெகுளி, மயக்கம் இடை இடையே நிகழ்வது. 'வந்து*

*எய்தினை இருந்த தன்மை' என்பதால் ருசியமுகமலை சுக்கிரீவனுக்கு உரிய மலையன்று என்பதும், வாலிக்கு அஞ்சியே அங்கே தங்கியிருந்தால் என்பதும் பெறப்படுகின்றன.* *24*

***3810 . 'முரணுடைத் தடக் கை ஓச்சி,***
***முன்னவன், பின்வந்தேனை,***
***இருள்நிலைப் புறத்தின்காறும், உலகு***
***எங்கும், தொடர இக் குன்று***
***அரண் உடைத்து ஆகி உய்ந்தேன்;***
***ஆர் உயிர் துறக்கலாற்றேன்;***
***சரண் உனைப் புகுந்தேன்; என்னைத்***
***தாங்குதல் தருமம்' என்றான்.***

***முன்னவன்-*** *எனக்கு அண்ணனாகிய வாலி;* ***பின் வந்தேனை*** *- பின் பிறந்த தம்பியாகிய என்னை (அடிக்க);* ***முரண் உடை -*** *வலிமையுள்ள;* ***தடக்கை ஓச்சி*** *- பெரிய கையை ஓங்கிக் கொண்டு;* ***இருள் நிலை புறத்தின் காறும் -*** *இருட்டுக்கு இருப்பிடமாகிய இவ்வுலகத்திற்கு அப்புறம் வரையிலும்;* ***உலகு எங்கும் தொடர -*** *எல்லா உலகங்களிலும் பின்தொடர்ந்து துரத்த;* ***இக்குன்று அரண் உடைத்துஆகி -*** *இம்மலையையே பாதுகாவலாகக்கொண்டு;* ***உய்ந்தேன் -*** *உயிர் பிழைத்தேன்;* ***ஆர் உயிர் துறக்கலாற்றேன் -*** *அரிய உயிரை விடுவதற்கும் முடியாதவனாகிய நான்;* ***சரண் உனைப் புகுந்தேன் -*** *உன்னை அடைக்கலமாக அடைந்தேன்;* ***என்னைத் தாங்குதல் -*** *என்னைக் காப்பாற்றுதல்;* ***தருமம் என்றான்*** *- நினக்குரிய தருமமாகும் என்றான்.*

*தம்பி என்ற உறவும் பாராது, வலிமை குறைந்தவன் என்ற போர் முறையையும் நோக்காது, அஞ்சி ஓடியவனைத் துரத்தி ஓடுதல் போர்முறைக்குப் பழியாகும் என்பதையும் உணராது வாலி, சுக்கிரீவனை வருந்தினான் என அவ்வாலியின் முறையற்ற செயலைச் சுக்கிரீவன் உணர்த்தினான். மதங்க முனிவர் சாபத்தால் ருசியமுகமலையில் வாலி வந்தால் அவன் தலை வெடித்து இறப்பான் ஆதலால் 'இக்குன்று அரண் உடைத்து ஆகி உய்ந்தேன்' என்றான்.*

*இருள் நிலை புறத்தின் காறும் - அண்டத்தின் இறுதியில் சக்கரவாளகிரி இருக்கின்றது என்றும், அதற்கு அப்புறம் இருள்நிலைப்புறம் (அந்தகாரம்) உள்ளது என்றும் கூறுவது புராண மரபு. தனக்கு உயிர்மேல் உள்ள காதலை 'ஆர் உயிர் துறக்கலாற்றேன்' என உணர்த்தினான். தன் இயலாமையை உணர்த்தும் முகத்தான்*

*'சரண் உனைப் புகுந்தேன்; என்னைத் தாங்குதல் தருமம்' என்றான். தன்னைத் தாங்காது விடுவானோ எனும் அச்சத்தாலும் 'என்னைத் தாங்குதல் தருமம்' என்றான். இதனால் வாலியை அழித்துத் தன்னைக் காக்க வேண்டும் எனச் சுக்கிரீவன் கருதுவது புலப்படும். 25*

***3811 . என்றஅக் குரக்கு வேந்தை,***
***இராமனும் இரங்கி நோக்கி,***
***'உன்தனக்குஉரிய இன்ப துன்பங்கள்***
***உள்ள, முன்நாள்***
***சென்றன போக, மேல் வந்து***
***உறுவன தீர்ப்பல்; அன்ன***
***நின்றன, எனக்கும் நிற்கும் நேர்'***
***என மொழியும் நேரா,***

***என்ற அக் குரக்கு வேந்தை -*** *என்று கூறிய அந்தக் குரங்கினத்து அரசனாகிய சுக்கிரீவனை;* ***இராமனும் இரங்கி நோக்கி -*** *இராமனும் மனம் இரங்கிப் பார்த்து;* ***உன்தனக்கு உரிய -*** *உனக்கு உரிய;* ***இன்ப துன்பங்கள் உள்ள-*** *இன்ப துன்பங்களாக உள்ளனவற்றில்;* ***முன்நாள் சென்றன போக-*** *இதற்கு முன் நீ அனுபவித்துக் கழிந்தன தவிர;* ***மேல் வந்து உறுவன -*** *இனி வந்து சேரும் துன்பங்களை;* ***தீர்ப்பல்-*** *நான் நீக்குவேன்;* ***அன்ன நின்றன-*** *இனி வருவனவாகிய இன்பதுன்பங்கள்;* ***எனக்கும் நிற்கும் -*** *எனக்கும் உனக்கும்;* ***நேர் -*** *சமமாகும்";* ***என மொழியும் நேரா -*** *என்று உறுதிமொழியும் கொடுத்து.*

*'நேரா' என்னும் ஈற்றுச்சொல் (வினையெச்சம்) மேற்கவியில் 'என்றான்' என்பதனோடு முடியும்.*

*வாலிக்கு அஞ்சிச் சரண்புக்க சுக்கிரீவன் நிலை கண்டு இராமன் இரக்கம் கொண்டவனாதலின் 'இரங்கி நோக்கி' என்றார். நட்பிற்குச் சிறந்த இலக்கணம் இன்பதுன்பங்களில் பங்கு கொள்வதாகும் என்பதை உணர்த்தும் வகையால் "அன்ன நின்றன எனக்கும் நிற்கும் நேர்" என்றான். உடுக்கை இழந்தவன் கை போல் ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு. (குறள் - 788) என்றதற்கேற்ப 'மேல் வந்துறுவன தீர்ப்பல்' என இராமன் கூறினான். குரக்கு வேந்தை - வேற்றுமையில் மென்தொடர் வன்தொடராயிற்று. தீர்ப்பல் - தன்மை ஒருமை வினைமுற்று, நினக்கு என்பது நிற்கு எனத் திரிந்தது. 26*

***3812 . 'மற்று,இனி உரைப்பது என்னே?***
***வானிடை, மண்ணில், நின்னைச்***
***செற்றவர் என்னைச் செற்றார்;***
***தீயரே எனினும், உன்னோடு***
***உற்றவர் எனக்கும் உற்றார்; உன்***
***கிளை எனது; என் காதல்***
***சுற்றம், உன்சுற்றம்; நீ என்***
***இன் உயிர்த் துணைவன்' என்றான்.***

***மற்று இனி உரைப்பது என்னே*** - மேலும் நான் இனிச் சொல் லக்கூடியது யாது உளது? ***வானிடை*** - விண்ணுலகிலும்; ***மண்ணில்*** - மண்ணுலகிலும்; ***நின்னைச் செற்றவர்*** - நின்னை வருத்தியவர் ; ***என்னைச் செற்றார்*** - என்னை வருத்தியவராவர்; ***தீயரே எனினும்*** - தீயவராகவே இருந்தாலும்; ***உன்னோடு உற்றவர்*** - உன்னோடு நட்புக்

கொண்டவர்கள்; ***எனக்கும் உற்றார்*** - எனக்கும் நண்பராவர்; ***உன் கிளை*** - உன் உறவினர்; ***எனது*** - என் உறவினராவர்; ***என் காதல் சுற்றம்*** - என் அன்புள்ள சுற்றத்தினர்; ***உன் சுற்றம்*** - உன் சுற்றத்தினராவர்; ***நீ என் இன் உயிர்த்துணைவன்*** - நீ எனது இனிய உயிர் போன்ற நண்பன்'; ***என்றான்*** - என்றான்.

*இராமன் சுக்கிரீவனைத் தன் உயிர் நண்பனாகக் கொண்டமையால் அவனுடைய பகைவர்களும் நண்பர்களும் சுற்றத்தினரும் தனக்கும் முறையே பகைவர், நண்பர், சுற்றத்தினர் ஆவர் எனக்கூறித் தன் நட்பின் உறுதித் தன்மையை உணர்த்தினான். 'தீயரே எனினும் உன்னோடு உற்றவர் எனக்கும் உற்றார்' என்று மேலும் தன் நட்பின் வலிமையை உரைத்தான். சுக்கிரீவனின் உற்றார் நல்லவராக இருந்து, பின்னர்த் தீயராக மாறினும் அவர்களை உற்றாராகக் கொள்வதன்றி விட்டு நீங்குதல் இல்லை என இராமன் உறுதி கூறினான். ''என் உயிர் அனையாய் நீ; இளவல் உன் இளையான்' என்று இராமன் குகனிடம் கூறியதை (1994) ஒப்பு நோக்கலாம். கிளை - உவமை ஆகுபெயர்; எனது - ஒன்றன்பால் குறிப்பு முற்று; உயிர்த் துணைவன் - உவமைத்தொகை; தீயரே - 'ஏ' தேற்றம்; எனினும் - உம்மை இழிவு சிறப்பு.* 27

***3813. ஆர்த்ததுகுரக்குச் சேனை;***
***அஞ்சனை சிறுவன் மேனி,***
***போர்த்தன, பொடித்து உரோமப்***
***புளகங்கள்; பூவின் மாரி***
***தூர்த்தனர், விண்ணோர், மேகம்***
***சொரிந்தென, அனகன் சொன்ன***
***வார்த்தை, எக் குலத்துளோர்க்கும், மறையினும்***
***மெய் என்று உன்னா.***

***அனகன் சொன்ன வார்த்தை***- குற்றமற்றவனாகிய இராமன் சொன்ன சொல்; ***எக்குலத்துளோர்க்கும்*** - எல்லாக் குலத்தில் தோன்றியவர்க்கும்; ***மறையினும்*** - வேதவாக்கைக் காட்டிலும்; ***மெய் என்று உன்னா*** - உண்மையானதாகும் என்று எண்ணி; ***குரக்குச் சேனை ஆர்த்தது*** - குரங்குக் கூட்டம் ஆரவாரம் செய்தது; ***அஞ்சனை சிறுவன்*** - அஞ்சனையின் புதல்வனான அனுமன்; ***மேனி*** - மேனியை; ***உரோமப் புளகங்கள்*** - மயிர்ச்சிலிப்புகள்; ***பொடித்துப் போர்த்தன*** - அரும்பி மறைத்து விட்டன; ***விண்ணோர்*** - தேவர்கள்; ***பூவின்மாரி தூர்த்தனர்*** - மலர் மழையால் பூமியை நிரப்பினர்; ***மேகம் சொரிந்தன*** - மேகங்கள் மழையைப் பொழிந்தன.

*இராமன் கூறிய உரைகளால் வாலிவதம் உறுதி என்ற மகிழ்ச்சியாலும், யாரினும் சிறந்த இராமன் நட்புக்கிடைத்த களிப்பாலும் குரங்குச் சேனை மகிழ்ந்தது எனலுமாம். தான் இராமனிடத்துத் தூதுபோய் வந்தது பயன்பெற்றதனால் அனுமன் மேனி பொடித்தனன். இராவண வதம் நடைபெறும்; தங்கள் துன்பம் நீங்க வழி ஏற்பட்டது*

*என்ற மகிழ்ச்சியால் வானவர் பூமாரி பொழிந்தனர். இந்த நட்பால் நல்ல பயன் என்பதற்கு நன்னிமித்தமாக மேகம் மழை பொழிந்தது எனலாம். 28*

***3814. ஆண்டுஎழுந்து, அடியில் தாழ்ந்த***
***அஞ்சனை சிங்கம், 'வாழி!***
***தூண் திரள் தடந் தோள்***
***மைந்த! தோழனும் நீயும் வாழி!***
***ஈண்டு, நும் கோயில் எய்தி,***
***இனிதின் நும் இருக்கை காண***
***வேண்டும்; நும் அருள் என்?'***
***என்றான்; வீரனும், 'விழுமிது' என்றான்.***

***ஆண்டு எழுந்து -*** *அப்பொழுது எழுந்திருந்து;* ***அடியில் தாழ்ந்த -*** *இராமனது திருவடிகளில் விழுந்து வணங்கிய;* ***அஞ்சனை சிங்கம் -*** *அஞ்சனை ஈன்ற சிங்கம் போன்ற அனுமன்;* ***தூண்திரள் தடந்தோள் மைந்த -*** *தூணைப்போலத் திரண்ட பெரிய தோள்களை உடைய தசரதனின் மகனே!* ***வாழி -*** *வாழ்க!* ***தோழனும் நீயும் வாழி -*** *தோழனாகிய சுக்கிரீவனும் நீயும் வாழ்க!* ***ஈண்டு -*** *இப்பொழுது (நீங்கள்);* ***நும் கோயில் எய்தி -*** *உமது மாளிகையை அடைந்து;* ***இனிதின் -*** *இன்பமாக;* ***நும் இருக்கை காண -*** *நுமது இருக்கையில் எழுந்தருளியிருத்தலைக் காண;* ***வேண்டும் -*** *விரும்புகிறோம்;* ***நும் அருள் என்-*** *தங்கள் திருவுள்ளம் யாது?* ***என்றான்-; வீரனும் -*** *வீரனாகிய இராமனும்;* ***விழுமிது என்றான்-*** *'சிறந்தது' என்று கூறி உடன்பட்டான்.*

*இராம சுக்கிரீவர் நட்புக் கொண்டமைக்கு அனுமன் மகிழ்ந்து வாழ்த்துக் கூறிச் சுக்கிரீவன் இருப்பிடத்திற்கு வரவேண்டும் என்று வேண்ட, இராமனும் அதற்கு உடன்பட்டான். மேலோரிடம் பேசுகையில் முதலில் வாழ்த்துக் கூறிப் பின்னர்ச் செய்தி கூறல் முறையாதலின் அனுமன் 'வாழி' என வாழ்த்திப் பின்பு பேசத் தொடங்கினான். சுக்கிரீவனும் இராமனும் நட்புரிமையோடுநெடுங் காலம் வாழவேண்டும் என்ற விருப்பத்தால் 'தோழனும் நீயும் வாழி' என வாழ்த்தினான். உரிமை பற்றிச் சுக்கிரீவன் மாளிகையை 'நும்கோயில்' என இராமனை உளப்படுத்திக் கூறினான். அஞ்சனை சிங்கம் - அனுமன். முன், பின் நிகழ்ச்சிகளை எண்ணிச் சிங்க நோக்குப் போல் செயல்படுபவன் ஆதலின், அவனைச் சிங்கம் என்று உவமை ஆகுபெயரால் கூறினார். 29*

*எல்லோரும் மலர்ச் சோலை சென்றடைதல்*

***3815 . ஏகினர்- இரவி சேயும்,***
***இருவரும், அரிகள் ஏறும்,***
***ஊக வெஞ்சேனை சூழ, அறம் தொடர்ந்து***
***உவந்து வாழ்த்த -***
***நாகமும் , நரந்தக் காவும்***
***நளின வாவிகளும் நண்ணி,***
***போக பூமியையும் ஏசும் புது***
***மலர்ச் சோலை புக்கார்.***

***இரவி சேயும் -*** *சூரியன் மகனாகிய சுக்கிரீவனுக்கும்;*

***இருவரும் -*** *இராமலக்குவரும்;* ***அரிகள் ஏறும் -*** *குரங்குகளுக்குச் சிங்கம் போன்றவனான அனுமனும்;* ***வெம் ஊகச் சேனைசூழ -*** *கொடிய வானரச் சேனைகள் சூழ்ந்து வர;* ***அறம் தொடர்ந்து -*** *தருமதேவதை பின் தொடர்ந்து வந்து;* ***உவந்து வாழ்த்த -*** *மகிழ்ந்து வாழ்த்தவும்;* ***நாகமும்*** *- சுரபுன்னை மரங்களும்;* ***நரந்தக்காவும்*** *- நரந்தம் என்னும் மரங்களின் சோலையும்;* ***நளின வாவிகளும் -*** *தாமரை பொய்கைகளும்;* ***நண்ணி -*** *பொருந்தி;* ***போக பூமியையும் ஏசும் -*** *இன்பத்தை அனுபவிக்கும் போக பூமியாகிய சுவர்க்க லோகத்தையும் இகழ்கின்ற;* ***புது மலர்ச் சோலை புக்கார் -*** *அன்றலர்ந்த மலர்கள் நிறைந்த சோலையை அடைந்தனர்.*

*அழிந்து போவதாய் இருந்த தன்னை இராமசுக்கிரீவர் நட்புக் காக்க இருப்பதால், தருமதேவதை அவர்களைப் பின்தொடர்ந்து வாழ்த்தியது. சுவர்க்க லோகத்தில் பெறும் இன்பத்தினும் சிறந்த இன்பம் தரும் இடமாதலின் 'போக பூமியையும் ஏசும் புதுமலர்ச்சோலை' என்றார். தன் மாளிகைக்கு அழைத்துச் செல்வோன் ஆதலின் 'சுக்கிரீவனை முன்னவரும், விருந்தினர்களாகச் செல்வதால் இராமலக்குவரை அடுத்தும், அன்பும் அடக்கமும் கொண்டு இராமலக்குவர் பின் செல்லும் அனுமனை அவ்விருவர்க்குப் பின்னும், ஏனைய வானரங்களை அனுமனுக்குப் பின்னும் செல்லுமாறு வைத்துள்ள வைப்பு முறை நயம் பொருந்தியதாகும்.*
*30*

***3816 . ஆரமும்அகிலும் துன்றி, அவிர்***
***பளிக்கு அறை அளாவி,***
***நாரம் நின்றன போல் தோன்றி,***
***நவ மணித் தடங்கள்நீடும்***
***பாரமும், மருங்கும், தெய்வத் தருவு,***
***நீர்ப்பண்ணை ஆடும்***
***சூர் அரமகளிர் ஊசல்***
***துவன்றிய கம்மைத்து அன்றே.***

***ஆரமும் அகிலும் துன்றி -*** *(அச்சோலை) சந்தன மரங்களும் அகில் மரங்களும் நெருங்கப் பெற்று;* ***அவிர் பளிக்கு அறை அளாவி -*** *விளக்கம் மிக்க படிகப் பாறைகள் பொருத்தப்பெற்று;* ***நாரம் நின்றன போல் -*** *அவை தண்ணீர் நிறைந்து நின்றவை போல;* ***தோன்றி -*** *காணப்பட்டு (விளங்க);* ***நவமணித் தடங்கள் -*** *நவமணிகளால் அமைந்த பள்ளமான இடங்களின்;* ***நீடும் பாரமும் -*** *நீண்டகரைகளிலும்;* ***மருங்கும் -*** *பக்கங்களிலுமுள்ள;* ***தெய்வத்தருவு -*** *தெய்வத் தன்மையுடைய மரங்களில்;* ***நீர்ப்பண்ணை ஆடும்-*** *நீர் விளையாட்டைச் செய்யும்;* ***சூர் அர மகளிர் -*** *தெய்வ மகளிர்தம்;* ***ஊசல் துவன்றி -*** *ஊஞ்சல்கள் நெருங்கிய;* ***கம்மைத்து -*** *ஆரவாரத்தைஉடையது.*

*சந்தனம் முதலிய சிறந்த மரங்களும், பளிக்கறைகளும் பொருந்தி, தேவமகளிர் இங்குள்ள நீர்நிலைகளில் நீராடி, மரங்களில் ஊஞ்சல் விளையாடப் பெற்ற*

*சிறப்பினை உடையது அச்சோலை எனப்பட்டது. பளிக்கு - பளிங்கு; அறை - பாறை; நாரம் - தண்ணீர். இது வடசொல்; பாரம் - கரை; பண்ணை - மகளிர் விளையாட்டு; தரு - தருவு என உகரச்சாரியை பெற்று வந்தது, கம்மைத்து - ஒன்றன்பால்*

*குறிப்புவினைமுற்று. தேவ மகளிர் ஊசலாடும் இயல்பினர் என்பதை 'வானவர் மகளிராடும் வாசம் நாறுசல் கண்டார்' (862) என்பதாலும் அறியலாம்.*
*31*

கலிவிருத்தம்

***3817 . அயர்வுஇல் கேள்வி சால்***
***அறிஞர் - வேலை முன்,***
***பயில்வு இல் கல்வியார் பொலிவு***
***இல் பான்மை போல்,***
***குயிலும் மா மணிக்***
***குழுவு சோதியால்,***
***வெயிலும், வெள்ளி வெண்***
***மதியும், மேம்படா.***

***அயர்வுஇல் கேள்விசால் -*** *தளர்வு இல்லாத கேள்வியால் நிரம் பப்பெற்ற;* ***அறிஞர் வேலைமுன் -*** *அறிஞர்களின் கடல்போன்ற கூட்டத்திற்கு முன்;* ***பயில்வு இல் கல்வியார் -*** *கல்விப் பயிற்சி இல்லாதவர்கள்;* ***பொலிவு இல் பான்மை போல் -*** *மேன்மையில்லாது; விளங்குதல் போல;* ***குயிலும் மாமணிக் குழுவும் சோதியால் -*** *அச்சோலையில் பாதிக்கப்பட்ட சிறந்த மணிகளின் திரண்ட ஒளியால்;* ***வெயிலும் -*** *சூரிய ஒளியும்;* ***வெள்ளி வெண் மதியும்*** *- வெள்ளி போன்ற வெண்திங்களின் ஒளியும்;* ***மேம்படா -*** *மேம்பட்டுத் தோன்றவில்லை.*

*இதனால் அங்குள்ள இரத்தினங்களின் ஒளி சூரிய சந்திரர்களின் ஒளியினுக்கு மிக்க விளங்குவது அறியப்படுகிறது. அயர்வு - ஐயம்திரிபு. கேள்வியானது கல்வி அறிவைப் பெருக்குதலால் 'கேள்விசால் அறிஞர்' என்றார். வேலை - கடல்; கடல் போன்ற அவையை உணர்த்திற்று; உவமை ஆகுபெயர். கற்றார் முன் கல்லார் போல என்பது உவமை. "வாசகம் வல்லார் முன்னின்று யாவர் வாய் திறக்க வல்லார்" (895) "எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும் எழுத்தறிவார்க் காணின் இலையாம்" (நன்னெறி - 21) என்பன ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன. 32*

இராமன் சுக்கிரீவனோடு விருந்துண்ணுதல்

***3818. ஏய அன்னது ஆம் இனிய சோலைவாய்,***
***மேய மைந்தரும், கவியின் வேந்தனும்,***
***தூய பூ அணைப் பொலிந்து தோன்றினார்,***
***ஆய அன்பினோடு அளவளாவுவார்.***

***ஏய அன்னது ஆம் -*** *இத்தகைய சிறப்புக்கள் பொருந்திய;* ***இனிய சோலைவாய் -*** *இனிமைமிக்க சோலையிடத்து;* ***மேய மைந்தரும் -***

*சென்றடைந்த இராமலக்குவரும்;* ***கவியின் வேந்தனும் -*** *வானரத் தலைவனாகிய சுக்கிரீவனும;* ***தூய பூ அணை -*** *தூய்மையான மல ரணைமீது;* ***பொலிந்து தோன்றினார்-***

*சிறக்க வீற்றிருந்தவர்களாய்;* ***ஆய அன்பினோடு-*** *பொருந்தியுள்ள அன்போடு;* ***அளவளாவுவார் -*** *பேசலாயினர்.*

*சோலையிலுள்ள மலர்களால் ஆன பூ அனை பிறவற்றினும் பொலிவு மிக்கதாக விளங்கியதால் 'பூ அணைப் பொலிந்து தோன்றினார்' என்றார்.*

*அளவளாவுதல்- நெஞ்சம் கலந்து பேசுதல், சோலைவாய் - வாய் ஏழன் உருபு. இராமலக்குவரும் சுக்கிரீவனும் மலரணையில் ஒருங்கமர்ந்து அன்பொடு உரையாடியமை இப்பாடலில் புலப்படுகிறது. 33*

***3819 . கனியும்,கந்தமும், காயும் தூயன***
***இனிய யாவையும் கொணர, யாரினும்***
***புனிதன் மஞ்சனத் தொழில் புரிந்து, பின்***
***இனிது இருந்து, நல் விருந்தும் ஆயினான்.***

***கனியும் -*** *பழங்களும்;* ***கந்தமும் -*** *கிழங்குகளும்;* ***காயும்-*** *காய்களும்;* ***தூயன இனிய யாவையும் -*** *தூய்மையாயும் இனிமையாயும் உள்ள யாவற்றையும்;* ***கொணர -*** *(வானரர்கள்) கொண்டுவர;* ***யாரினும் புனிதன் -*** *யாவரினும் தூய்மையானவன் ஆகிய இராமன்;* ***மஞ்சனத் தொழில் புரிந்து*** *- நீராடுதலைச் செய்து;* ***பின் இனிது இருந்து -*** *பின்னர் இனிமையாக இருந்து;* ***நல் விருந்தும் ஆயினான் -*** *சுக்கிரீவற்கு நல்ல விருந்தாளியும் ஆனான். (விருந்துண்டான்).*

*சுக்கிரீவன் தன் பரிவாரங்களைக் கொண்டு விருந்து அளிக்க, இராமன் நீராடி விருந்துண்டான். கந்தம் - கிழங்கு - வடசொல். விருந்து- புதுமை - விருந்தினர்களைக் குறித்ததால் உவம ஆகுபெயர். விருந்தும் - உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை - நண்பன் ஆனதை உடன் தழுவியது. 34*

*'நீயும் மனைவியைப் பிரிந்துள்ளாயோ?' என இராமன் சுக்கிரீவனை வினாவுதல்*

***3820. விருந்தும் ஆகி, அம்***
***மெய்ம்மை அன்பினோடு***
***இருந்து, நோக்கி, நொந்து,***
***இறைவன், சிந்தியா,***
***'பொருந்து நன் மனைக்கு***
***உரிய பூவையைப்***
***பிரிந்துளாய்கொலோ நீயும்***
***பின்?' என்றான்.***

***அம்மெய்ம்மை அன்பினோடு இருந்து*** *- அத்தகைய உண்மையான அன்புடனே இருந்து;* ***இறைவன் -*** *இராமன்;* ***விருந்தும் ஆகி -***

*(வானரர்க்குச்) சிறந்த விருந்தினனாகி;* ***நோக்கி -*** *தனக்கு அவர்கள் விருந்து நடத்தியதைப் பார்த்து;* ***நொந்து -*** *(சுக்கிரீவன் மனைவியைக் காணாமையால்) மனம் வருந்தி;* ***சிந்தியா -*** *ஆலோசித்து;* ***பின் -*** *பின்னர்;* ***பொருந்தும் நல்மனைக்கு*** *-*

*(சுக்கிரீவனைப் பார்த்து) பொருந்திய நல்ல இல்லற வாழ்க்கைக்கு;* ***உரிய பூவையை*** *உரியவளான மனைவியை;* ***நீயும் பிரிந்துளாய் கொல் -*** *(என்னைப்போல) நீயும் பிரிந்துள்ளாயோ?* ***என்றான் -*** *என்று வினவினான்.*

*விருந்தினனாகிய தன்னைச் சுக்கிரீவன் மனைவி இல்லாமல் உபசரிப்பதைக் கண்டு 'நன்மனைக்குரிய பூவையைப் பிரிந்துளாய் கொல்' என இராமன் வினவினான். மனையாள் இல்லாத இடத்து விருந்தோம்புதல் சிறக்காது என்பர். மகளிரும் விருந்தோம்புதலைத் தலையாய கடனாகக் கொண்டனர் என்பதை 'வைகலும் விருந்தும் அன்றி விளைவன யாவையே?' (67) என்ற அடிகள் உணர்த்தும். "விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை" (சிலம்பு - 2 - 16 - 73) என்ற கண்ணகியின் வருத்தமும் விருந்தோம்பலில் மகளிர் பங்கை உணர்த்தும். மனை - இல்லற வாழ்க்கை; இடவாகுபெயர்; பூவை - உவமை ஆகுபெயர்; நீயும் - உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை. 35*

*சுக்கிரீவன் நிலையை அனுமன் உரைத்தல்*

***3821 . என்றவேலையில்***
***எழுந்து, மாருதி,***
***குன்று போல நின்று,***
***இரு கை கூப்பினான் -***
***'நின்ற நீதியாய்!***
***நெடிது கேட்டியால்!***
***ஒன்று, யான் உனக்கு***
***உரைப்பது உண்டு' எனா:***

***என்ற வேலையில் -*** *என்று இராமன் சுக்கிரீவனை வினவிய பொழுதில்;* ***மாருதி -*** *அனுமன்;* ***குன்று போல எழுந்து நின்று -*** *மலை போல எழுந்து நின்று;* ***இருகை கூப்பினான் -*** *இரண்டு கைகளையும் கூப்பியவனாய்;* ***நின்ற நீதியாய் -*** *(இராமனை நோக்கி) 'நிலை பெற்ற நீதியை உடையவனே!* ***யான் உனக்கு -*** *நான் உனக்கு;* ***உரைப்பது ஒன்று உண்டு -*** *சொல்ல வேண்டுவது ஒன்று உண்டு;* ***நெடிது கேட்டி -*** *அதனைத் தொடக்கம் முதல் இறுதி வரை கேட்பாயாக';* ***எனா -*** *என்று கூறி . . . .*

*தன் மனைவியை இழந்த செய்தியைச் சுக்கிரீவன் தானே கூறுதல் தகுதி அன்று என்று கருதி, அனுமன் அதைக் கூறினான். விருந்தினரை மனைவியுடன் இருந்தே உபசரித்தல் இல்வாழ்வானுக்கு முறை என்பதை உணர்ந்தே இராமன் வினாவினான் என்பதைக் குறிப்பிட 'நின்ற நீதியாய்' என விளித்தான். 'என்று கூறி' (எனா) என்ற எச்சம் மேல்வரும் அனுமன் கூற்றுகை நோக்கி நின்றது. 36*

*வாலியின் சிறப்பு*

***3822 . 'நாலுவேதம் ஆம்***
***நவை இல் ஆர்கலி***
***வேலி அன்னவன்,***
***மலையின்மேல் உளான்,***

சூலிதன் அருள்
துறையின் முற்றினான்,
வாலி என்று உளான்,
வரம்பு இல் ஆற்றலான்.

**நாலு வேதம் ஆம் -** நான்கு வேதங்களாகிய; **நவை இல் ஆர்கலி -** குற்றமற்ற கடலுக்கு; **வேலி அன்னவன் -** வேலியைப் போலப் பாதுகாவலாய் உள்ளவனும்; **மலையின் மேல் உளான் -** கைலாய மலையின்மேல் வீற்றிருப்பவனுமாகிய; **சூலி தன் -** சூலப்படையுடைய சிவபிரானின்; **அருள் துறையின் -** கருணையின் வழியில்; **முற்றினான் -** முதிர்ந்தவனாகிய; **வரம்பு இல் ஆற்றலான் -** எல்லையற்ற வலிமை உடையவனாய்; **வாலி என்று உளான் -** வாலி என்று ஒருவன் உள்ளான்.

பரப்பாலும் பேரொலியாலும் வேதங்கள் ஆர்கலி எனப்பட்டன. சிவபிரான் நான்கு வேதங்களாகவும், வேதப் பொருளாகவும் விளங்கி, வேதங்களைக் காப்பதால் நான்கு வேதங்களுக்கும் வேலி அன்னவன் என்றார். 'நால் வேதன் காண்' (தேவாரம்-6-8-3), 'மந்திரமும் மறைப்பொருளும் ஆனான் தன்னை' (தேவாரம்-6-3-4) என்ற அடிகளைக் காண்க. சூலி - சூலாயுதத்தை உடையவன். அருள்துறையின் முற்றினான் - சிவபிரானின் அருளைப் பெற்றவன் என்பது பொருள். வாலி சிவபக்தன் என்பதை, 'அட்ட மூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்' (3625) "பஞ்சின் மெல்லடியாள் பங்கன் பாதுகம் அலாது யாதும், அஞ்சலித்து அறியாச் செங்கை ஆணையாய்" (4086) என்ற அனுமன், அங்கதன் கூற்றுகளாலும், தாரை புலம்பலிலும் (4101) காணலாம். திருவடகுரங்காடு துறை, திருக்குரங்கணில் முட்டம் என்னும் தலங்களில் வாலி சிவபிரானை வழிபட்டதாக அத் தல புராணங்கள்உணர்த்துகின்றன. 37

3823. 'கழறுதேவரோடு, அவுணர் கண்ணின் நின்று,
உழலும் மந்தரத்து உருவு தேய, முன்,
அழலும் கோள் அரா அகடு நீ விட,
சுழலும் வேலையைக் கடையும் தோளினான்.

**கழறு தேவரோடு** - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற தேவர் களோடு; **அவுணர் -** அவுணர்களின்; **கண்ணின் நின்று -** கண்முன் நின்று; **உழலும் மந்தரத்து** - (மத்தாகிச்) சுழல்கின்ற மந்தரமலையின்; **உருவுதேய -** வடிவம் தேயவும்; **அழலும் கோள் அரா -** சீறிக்கோபிக்கும் வலிய (கடைகயிறாகிய) வாசுகியென்னும் பாம்பின்; **அகடு தீ விட -** வயிறு நெருப்பைக் கக்கவும்; **சுழலும் வேலையை -** அலைகின்ற

திருப்பாற்கடலை; **முன் -** முற்காலத்தில்; **கடையும் தோளினான் -** (தான் ஒருவனாகக்) கடைந்த தோளினை உடையவன்.

வலிமையும் வரங்களும் பெற்று தேவ அசுரர்களால் செய்ய முடியாத செயலை வாலி தான் ஒருவனாகவே செய்து முடித்தான் என்பதால் அவனது பெருவலி பெறப்படுகிறது. திருப்பாற்கடலில் அமுதம் எடுக்க முனைந்த அமரரும் அசுரரும் முயன்று வலியிலராய் நிற்க, அங்கு வந்த வாலி, அவர்கள் வேண்டுதலால் தான் ஒருவனாகவே பாற்கடலைக் கடைந்து அமுதெழச் செய்தான் என்பது வரலாறு. இச்செயலைப் பின்னரும் "வேலையை விலங்கல் மத்தில், சுற்றிய நாகம் தேய அமுது

*எழக் கடைந்த தோளான்" (5257) என்று அனுமன் புகழ்ந்து பேசுவதைக் காணலாம். இவ்வரலாறு காஞ்சிப்புராணத்து மணிகண்டேசுரப் படலத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.* *38*

***3824. 'நிலனும்,நீருமாய் நெருப்பும்,***
***காற்றும், என்று***
***உலைவு இல் பூதம்***
***நான்கு உடைய ஆற்றலான்;***
***அலையின் வேலை சூழ்***
***கிடந்த ஆழி மா***
***மலையின்நின்றும்***
***இம் மலையின் வாவுவான்;***

***நிலனும் -*** *நிலமும்;* ***நீரும் -*** *நீரும்;* ***நெருப்பும் -*** *நெருப்பும்;* ***காற்றும்-*** *காற்றும்;* ***என்று ஆய் -*** *என்று பொருந்திய;* ***உலைவு இல் பூதம் -*** *அழிதல் இல்லாத பூதங்கள்;* ***நான்கு உடைய -*** *நான்கினுடைய;* ***ஆற்றலான் -*** *ஆற்றலைத் தான் ஒருவனே பெற்றவன்;* ***அலையின் வேலை -*** *அலைகளைஉடைய எல்லைப்புறக் கடல்கள்;* ***சூழ் கிடந்த -*** *சூழ்ந்து கிடந்ததான;* ***ஆழிமாமலையின் நின்றும் -*** *பெரிய சக்கரவாளகிரி என்னும் மலையிலிருந்து;* ***இம்மலையின் வாவுவாம் -*** *இங்குள்ள மலையில் தாவும் தன்மையுடையவன்.*

*நிலம் முதலிய நான்கு பூதங்களின் ஆற்றலோடு, சக்கர வாளகிரியினின்று இங்குள்ள மலையில் தாவும் வல்லமையுடையவன் வாலி என்பது உணர்த்தப்பட்டது. பூமியைச் சூழ்ந்துள்ள எல்லாக்கடல்கட்கும் அப்பால் வட்டவடிவமான சக்கரவாள மலை சூழ்ந்துள்ளது என்பது புராண மரபு. நிலத்திற்கு நீரும், நீர்க்கு நெருப்பும், நெருப்புக்குக் காற்றும், காரணமாதலால் அம்முறைப்படி வைத்தார். ஐந்து பூதங்களுள் ஆகாயத்தைக் கூறாது விடுத்தது, அதற்கு வடிவமும் ஆற்றலும் புலப்படத் தோன்றாமையின் என்க.*

*வாலி நான்கு பூதங்களின் ஆற்றல் ஒரு சேரத் தன்னிடம் அமையப்பெற்றவன் என்பது 'நீரும், நீர்தரு நெருப்பும், வன்காற்றும், கீழ்நிவந்த பாரும் சார்வலி படைத்தவன்' எனப் பின்னரும் கூறப்பெறுவான். (4000). இம்மலை - இந்த ருசியமுக மலை - மதங்காச்சிரமத்தின் அருகே வாலி வரின் தலைவெடித்துத் தூளாகிவிடும் என வந்த சாப நிகழ்ச்சிக்கு முன், சக்கரவாளகிரியிலிருந்து இம் மலைக்குத் தாண்டிக் குதிப்பவன் என்று கொள்ளுதல் வேண்டும்.* *39*

***3825 . 'கிட்டுவார்பொரக் கிடைக்கின், அன்னவர்***
***பட்ட நல் வலம் பாகம் எய்துவான்;***
***எட்டு மாதிரத்து இறுதி, நாளும் உற்று,***
***அட்ட மூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்;***

***கிட்டுவார் பொரக் கிடைக்கின் -*** *போர்கருதி தன் எதிரே வருபவர் கிடைக்கப்பெற்றால்;* ***அன்னவர் பட்ட நல்வலம்-*** *அவர்களிடம் உள்ள நல்ல வலிமையில்;* ***பாகம் எய்துவான் -*** *பாதியைத் தான் அடைவான்;* ***எட்டு மாதிரத்து இறுதி -*** *எட்டுத் திக்கு எல்லையிலும்;* ***நாளும் உற்று -*** *நாள்தோறும் சென்று;* ***அட்ட மூர்த்தி -***

*அட்டமூர்த்தியாய் விளங்கும் சிவபிரானின்;* ***தாள்பணியும் -*** *திருவடிகளை வணங்குகிற;* ***ஆற்றலான் -*** *ஆற்றலையுடைவன்.*

*வாலி, தன்னொடு போர்செய்வார் வலிமையில் பாதி தனக்கு வருமாறு சிவன்பால் வரம்பெற்றிருந்தான். இதனை 'இரங்கியான் நிற்ப என் வலி அவன் வயின் எய்த வரம் கொள் வாலிபால் தோற்றனென்' (6177) என்ற இராவணன் கூற்றாலும் அறியலாம். அட்டமூர்த்திகள் - பஞ்ச பூதங்கள், சூரியன், சந்திரன், இயமானன் என்பன. இவ்வெட்டையும் திருமேனியாய்க் கொண்டவனாதலின்; சிவபிரான் 'அட்ட மூர்த்தி' எனப்பட்டான். நாளும் எட்டுத் திசைகளுக்குச் சென்று சிவன்தான் பணிந்து வரும் ஆற்றலை உடையவனாதலின் 'ஆற்றலான்' என்றார். வாலிக்குள்ள வரபலமும், தெய்வபக்தியும் இப்பாடலால் உணர்த்தப்படுகின்றன.* *40*

***3826 . 'கால்செலாது அவன் முன்னர்;***
***கந்த வேள்***
***வேல் செலாது அவன்***
***மார்பில்; வென்றியான்***
***வால் செலாத வாய்***
***அலது, இராவணன்***
***கோல் செலாது; அவன்***
***குடை செலாது அரோ.***

***அவன் முன்னர் -*** *அந்த வாலியின் வேகத்திற்கு முன்னதாக;* ***கால் செலாது -*** *காற்றுச் செல்லாது;* ***அவன் மார்பில் -*** *அவ்வாலியின் மார்பில்;* ***கந்தவேள் வேல் செலாது -*** *முருகப்பிரானின் வேலும் நுழையாது;* ***வென்றியான் -*** *வெற்றியை உடையவனான அவ்வாலியின்;* ***வால் செலாத வாய் அலது-*** *வால் செல்லாத இடத்தில் அல்லாமல் (வால் சென்ற இடத்தில்);* ***இராவணன் கோல் செலாது -*** *இராவணனது ஆட்சி செல்லாது;* ***அவன் குடை செலாது -*** *அவ்விராவணனது வெற்றிக் குடையும் செல்லாது.*

*வாலியின் விரைந்த செலவையும், அவனது வன்மை, வென்றிகளையும் இப்பாடல் உணர்த்துகிறது. கால் - காற்று. வலிமையில் சிறந்தவன் வாயுதேவன்.*

*அந்தக் காற்றும் வேகத்தில் வாலியின் வேகத்திற்குத் தோற்றுவிடும் என்பது கருத்து. சரவணப் பொய்கையில் ஆறு உருவங்களாய்க் கிடந்து பார்வதிதேவியால் ஒருருவம் ஆக்கப்பட்டமையால் 'கந்தன்' எனப் பெயர்பெற்றான். கந்தவேள் - இருபெயரொட்டு; கந்தனாகிய வேள். வேள் - வேட்கையை உண்டு பண்ணுபவன். இச்சொல் மன்மதனுக்கும் பெயர் ஆதலால் அதனை விலக்குதற்குக் 'கந்தவேள்' என்றார். கிரவுஞ்சம் என்னும் மலையைப் பிளந்த முருகன் வேலும் வாலியின் மார்பைத் துளைக்காது என்பதால் வாலியுடைய மார்பின் வன்மை புலப்படும்.*

*வென்றியான் - வாலி - இந்திரன் முதலிய எல்லாத் தேவர்களையும் வென்ற இராவணனது கோலும் குடையும் வாலியின் வாலி சென்ற இடத்துச் செல்லாது என வாலியின் வீரமிகுதி கூறப்பட்டது. முன் அவ்வாலியின் வாலில் கட்டுண்டு இராவணன் இடர்ப்பட்டவனாதலின், அவ்வாலுக்கு அஞ்சி அவ்விடம் செல்லமாட்டான்; அவ்வாலுக்கே அஞ்சுபவன் வாலியின் தோள்வலிக்கு*

*எதிர்நிற்கமாட்டான் என்பது கருத்து. வாலியின் வாலுக்கு இராவணன் அஞ்சுபவன் என்பதை "வெஞ்சின வாலி மீளான், வாலும் போய் விளிந்தது அன்றே" (5888), 'நிறையடிக் கோல வாலின் நிலைமையை நினையுந்தோறும் பறையடிக்கின்ற அந்தப் பயம்மிகப் பறந்ததன்றே' (4084) என்ற அனுமன், அங்கதன் கூற்றுகளால் முறையே அறியலாம். 'வரங்கொள் வாலிபால் தோற்றனென்' (6177) என்று இராவணன் கூறுவதும் காண்க. பின்னர் வாலியும் இராவணனும் நட்புக்கொண்டனராதலின் இராவணனைக் கொல்வதற்கு வாலியைக் கொல்வது இன்றியமையாதது என்பது புலப்படுகிறது.*
*41*

### *3827 . 'மேருவே முதல் கிரிகள் வேரொடும்*
### *பேருமே, அவன் பேருமேல்; நெடுங்*
### *காரும், வானமும், கதிரும், நாகமும்,*
### *தூருமே, அவன் பெரிய தோள்களால்.*

***அவன் -*** *அவ்வாலி;* ***பேருமேல் -*** *இடம் பெயர்ந்து எழுவானானால் (அந்த அதிர்ச்சியில்);* ***மேருவே முதல் கிரிகள் -*** *மேரு முதலிய பெரிய மலைகளெல்லாம்;* ***வேரொடும் பேருமே -*** *வேரொடு இடம் விட்டுப் பெயர்ந்து போகும்;* ***அவன் பெரிய தோள்களால் -*** *அவனது பெரிய தோள்களால்;* ***நெடுங்காரும், வானமும் -*** *பெரிய மேகங்களும், ஆகாயமும்;* ***கதிரும் நாகமும்*** *- சூரிய, சந்திரர்களும், விண்ணுலகமும்;* ***தூருமே -*** *மறைந்து போய்விடும்.*

*வாலி இயல்பாக அடிவைத்துச் செல்லுகையில் அவ்வதிர்ச்சியைத் தாங்காது பெரிய மலைகளும் நிலைகுலைந்துவிடும் என அவனது வேகத்தின் பெருமை கூறப்பட்டது. அவனுடைய தோள்கள் மிக உயர்ந்து நிற்றலால், மேகம் முதலியன அத்தோள்களில் மறையும் என அத்தோள்களின் பருமையும் நெடுமையும் உயர்வுநவிற்சி உத்தியால் உணர்த்தப்பட்டன.*

*'பெயருமேல் நெடும்பூதங்கள் ஐந்தொடும் பெயரும்' (6201) என்ற இரணியன் ஆற்றலை ஒப்பிட்டுக்காண்க. மேருவே - ஏகாரம் உயர்வு சிறப்பு; பேரும் - பெயரும் என்பதன் மரூஉ. 42*

### *3828. . 'பார் இடந்த வெம் பன்றி, பண்டை நாள்*
### *நீர் கடைந்த பேர் ஆமை, நேர் உளான்;*
### *மார்பு இடந்த மா எனினும், மற்றவன்*
### *தார் கிடந்த தோள் தகைய வல்லதோ!*

***பண்டை நாள் -*** *முன்பு;* ***பார் இடந்த -*** *பூமியைத் தன் கொம்பால் குத்தி எடுத்த;* ***வெம்பன்றி -*** *சினம்மிகுந்த வராகத்தையும்;* ***நீர் கடைந்த -*** *(மந்தர மலையாகிய மத்தை அமுத்தாமல் தாங்கியிருந்து) கடலைக் கடந்த;* ***பேர் ஆமை -*** *பெரிய கூர்மத்தையும்;* ***நேர் உளான்*** *- வலிமையால் நிகர்ப்பவன்;* ***மார்பு இடந்த -*** *இரணியனின் மார்பினைப் பிளந்த;* ***மா எனினும் -*** *நரசிங்கமே வந்ததாயினும்;* ***அவன் -*** *அவ்வாலியின்;* ***தார்கிடந்த தோள் -*** *மாலையணிந்த தோள்களை;* ***தகைய வல்லதோ -*** *அடக்கக் கூடிய வலிமையுடையதாகுமோ? (ஆகாது).*

*வாலி பூமியைப் பெயர்க்கும் ஆற்றலும், மலையைத் தாங்கும் வன்மையும், கடலைக்கடையும் திறலும் உடையவன் என்பது இதனால் பெறப்பட்டது. 'பண்டை நாள்' என்பது இடைநிலை விளக்காய் முன்னும் சென்று பொருந்தியது. இரணியன் மார்பைப் பிளந்த நரசிங்கத்திற்கும் வாலியின் தோள் வலிமையை அடக்க இயலாது என வாலியின் தோளாற்றலைக் கம்பர் எடுத்துரைக்கிறார். திருமாலின் அவதாரமான இராமனும் வாலிக்கு எதிர்நின்று போர் புரியாது மறைந்து நின்று வெல்வது ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.* *43*

***3829. 'படர்ந்த நீள் நெடுந் தலை பரப்பி, மீது***
***அடர்ந்து பாரம் வந்து உற, அனந்தனும்***
***கிடந்து தாங்கும் இக் கிரியை மேயினான்,***
***நடந்து தாங்கும், இப் புவனம், நாள் எலாம்.***

***அனந்தனும் -*** *ஆதிசேடனும்;* ***படர்ந்த நீள்நெடும் தலைபரப்பி -*** *ஆயிரமாகப் படர்ந்த நீண்ட பெரிய தலைகளைப் பரப்பிக்கொண்டு;* ***மீது -*** *அத்தலைகளின் மேலே;* ***அடர்ந்து பாரம் வந்துஉற -*** *நெருங்கிப் பாரம் மிகுதியாகப் பொருந்தியிருக்க;* ***இடந்து -*** *(நின்று தாங்க முடியாமல்) கீழே கிடந்து;* ***இப்புவனம் நாள்எலாம் -*** *இப் பூமியை நாளெல்லாம் (எக்காலத்தும்);* ***தாங்கும் -*** *தாங்குவான்;* ***இக்கிரியை மேயினான் -*** *இந்தக் கிட்கிந்தை மலையில் வாழும் வாலியோ;* ***நடந்து தாங்கும்*** *- நடந்து கொண்டே அப்பூமியைத் தாங்கக்கூடிய ஆற்றலை உடையவன்.*

*பூமியின் பாரத்தைத் தாங்கமாட்டாமல் ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேடன் வருந்திக் கிடந்து தாங்கிக் கொண்டிருக்க, ஒரு தலை உடைய வாலி நடந்து கொண்டு எளிதாகத் தாங்குவான் எனக்கூறி ஆதிசேடனை விட வாலி வலிமை மிக்கவன் என்பது உணர்த்தப்பட்டது. இது வேற்றுமை அணி பொருந்தியது. கிட்கிந்தை அருகில் தோன்றுவதால் 'இக்கிரி' என்றான். அனந்தனும் - உம்மை உயர்வுசிறப்பு.*
*44*

***3830 . 'கடல் உளைப்பதும், கால் சலிப்பதும்,***
***மிடல் அருக்கர் தேர் மீது செல்வதும்***
***தொடர மற்றவன் சுளியும் என்று அலால், -***
***அடலின் வெற்றியாய்! - அயலின் ஆவவோ?***

***அடலின் வெற்றியாய் -*** *வலிமையால் பெற்ற வெற்றி உடையவனே!* ***தொடர -*** *இடைவிடாமல்;* ***கடல் உளைப்பதும் -*** *கரை கடவாமல் கடல் ஒலித்துக் கொண்டிருப்பதும்;* ***கால் சலிப்பதும் -*** *காற்றுவீசிக் கொண்டிருப்பதும்;* ***மிடல் அருக்கர் -*** *வலிமைமிக்க சூரியர்கள்;* ***தேர்மீது செல்வதும்*** *- தேர் மீதேறிச் செல்வதும்;* ***அவன் -*** *அவ்வொலி;* ***சுளியும் என்று அலால் -*** *சினம் கொள்வான் என்ற அச்சத்தினால் நிகழ்வதன்றி;* ***அயலின் ஆவவோ -*** *பிறிதொரு காரணத்தால் நிகழ்வனவோ? (அல்ல).*

*இது வாலியின் கோபத்தை உணர்த்தியது. கடல் முதலியனவெல்லாம் அவன் கோபத்திற்கு அஞ்சியே நடக்கின்றன என்பதாம். உளைப்பது - மேன்மேலும் பொங்கி எழாமல் ஒரு நிலையில் அடங்கிநிற்றல்; சலிப்பது - எப்போதும் இயங்கிக் கொண்டிருப்பது; தேர்மீது செல்வது - தோன்றியும் மறைந்தும் அந்தந்தக்*

*காலத்திற்கேற்ப நடந்து கொள்ளல். வாலி சினத்திற்கு அஞ்சியே இயற்கையில் செயல்கள் நடைபெறுவதாகக் கூறியதால் ஏதுத்தற்குறிப்பேற்ற அணி. மாதந்தோறும் வெவ்வேறாகச் சூரியர் பன்னிருவர் தோன்றுவர் என்பதால் 'அருக்கர்' எனப் பன்மையால் கூறினான். தொடர - இச்சொல் இறுதிநிலை விளக்கணியாய் ஒலிப்பதும், சலிப்பதும், செல்வதும் என்பவற்றோடு இயையும். இறைவனுக்குக் கட்டுப்படும் இயற்கை, வாலிக்கும் கட்டுப்பட்டு இயங்கும் என்பதால் வாலி இறைவன் போன்ற வரம்பில் ஆற்றலுடையவன் என்பது விளங்கும்.*

*அல்லால் - அலால் எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது. 45*

***3831 . 'வெள்ளம் ஏழு***
***பத்து உள்ள, மேருவைத்***
***தள்ளல் ஆன தோள்***
***அரியின் தானையான்;***
***உள்ளம் ஒன்றி எவ்***
***உயிரும் வாழுமால், -***
***வள்ளலே! - அவன்***
***வலியின் வன்மையால்.***

***ஏழுபத்து வெள்ளம் உள்ள** - (அவ்வாலி) எழுபது வெள்ளம் என்கின்ற அளவு உள்ளதும்; **மேருவைத் தள்ளல் ஆன** - மேருமலையைத் தள்ளக்கூடியதுமான; **தோள் அரியின் தானையான்** - தோள் வலிமை உள்ளதுமான வானரப்படையை உடையவன்; **வள்ளலே** - வள்ளல்தன்மை உடையவனே! **அவன்** - அவ்வாலி; **வலியின் வன்மையால்** - வலிமையின் மிகுதியால்; **உள்ளம் ஒன்றி** - மனம் ஒன்று பட்டு; **எவ்வுயிரும் வாழும்** - எல்லா உயிர்களும் வாழ்கின்றன;*

*வாலியின் சேனைச் சிறப்பும் ஆட்சிச் சிறப்பும் இங்குக் கூறப்பட்டுள்ளன. வள்ளல் என்பது இங்கு இராமனைக் குறிக்கும். வெள்ளம் என்றது பேரெண். யானை ஒன்றும், தேரொன்றும், குதிரை மூன்றும் காலாள் ஐந்தும் கொண்டது- பக்தி; பக்தி மூன்று கொண்டது சேனாமுகம்; சேனாமுகம் மூன்று கொண்டது குடமம்; குடமம் மூன்று கொண்டது கணம்; கணம் மூன்று கொண்டது வாகினி; வாகினி மூன்று கொண்டது பிரதனை; பிரதனை மூன்று கொண்டது சமூ; சமூ மூன்று கொண்டது அநீகினி; அநீகினி பத்துக் கொண்டது அக்குரோணி; அக்குரோணி எட்டுக் கொண்டது ஏகம்; ஏகம் எட்டுக் கொண்டது கோடி; கோடி எட்டுக் கொண்டது சங்கம்; சங்கம் எட்டுக் கொண்டது விந்தம்; விந்தம் எட்டுக் கொண்டது குமுதம்; குமுதம் எட்டுக் கொண்டது பதுமம்; பதுமம் எட்டுக் கொண்டது நாடு; நாடு எட்டுக் கொண்டது சமுத்திரம்; சமுத்திரம் எட்டுக் கொண்டது வெள்ளம் என்பர். 46*

***3832. மழைஇடிப்பு உறா; வய***
***வெஞ் சீய மா***
***முழை இடிப்பு உறா;***
***முரண் வெங்காலும் மென்***
***தழை துடிப்புறச் சார்வு***
***உறாது; - அவன்***

**விழைவிடத்தின்மேல்,**
**விளிவை அஞ்சலால்.**

***விளிவை அஞ்சலால் -*** *(வாலி சினம் கொண்டால்) தமக்கு அழிவு நேருமே என்று அஞ்சுவதால்;* ***அவன் -*** *அவ்வாலி;* ***விழைவு இடத்தின் மேல்*** *- விரும்பித் தங்கியிருக்கும் இடத்திற்கு எதிராக;* ***மழை இடிப்பு உறா -*** *மேகம் இடித்து ஒலிக்கமாட்டா;* ***வய வெம் சீயமா -*** *வலிமை மிக்க கொடிய சிங்கமாகிய விலங்குகள்;* ***முழை இடிப்பு உறா -*** *குகையில் இடிபோல் முழங்கமாட்டா;* ***முரண் வெம் காலும்*** *- வலிய கொடிய காற்றும்;* ***மென் தழை துடிப்புற -*** *அங்குள்ள மெல்லிய இலைகள் நடுக்கம் கொள்ள;* ***சார்வு உறாது -*** *அவற்றின் பக்கத்தில் வராது.*

*வாலி இருக்கும் இடத்தில் தன் வல்லமையைக் காட்டினால் தமக்கு இறுதி நேரிடும் என்று அவனது வலிமைக்கு அஞ்சி மேகமும், சிங்கமும், காற்றும் அடங்கி நடக்கும் என்பதால் வாலியின் பெருவலி உணர்த்தப்பட்டது. வாலி விரும்பித் தங்கும் இடத்தே இடியோ, இடிபோன்ற முழக்கமோ கேளா; காற்று மென்மையாக வீசும் என அறிய முடிகிறது. 'அவன் கடியுடை வியன்புலம், உருமு முரறாது அரவும் தப்பா கட்டுமாவும் உறுகண் செய்யா (பெரும்பாண் - 42 - 44) என்ற அடிகள் தொண்டைமான் இளந்திரையன் ஆட்சிச் சிறப்பை உணர்த்துவதுடன் இதனையும் ஒப்பிடலாம். 'கறங்கு கால் புகா; கதிரவன் ஒளிபுகா; மறலி மறம் புகாது' (4857) என்பன முதலாக இராவணன் ஆணைமிக்க ஆட்சி எல்லையைக் கம்பர் குறிப்பதும் ஒப்பிட்டுணரத்தக்கது.*

*சீயம் மா - சீயமாகிய மா. இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 47*

***3833. 'மெய்க்கொள் வாலினால், மிடல் இராவணன்***
***தொக்க தோள் உறத் தொடர்ப்படுத்த நாள்,***
***புக்கிலாதவும், பொழி அரத்த நீர்***
***உக்கிலாத வேறு உலகம் யாவதோ?***

***மெய்க் கொள் வாலினால்-*** *தன் உடம்பில் உள்ள வாலினால்;* ***மிடல் இராவணன் -*** *வலிமை மிக்க இராவணனின்;* ***தொக்க தோள் -*** *இருபதாகச் சேர்ந்து விளங்கிய தோள்களை;* ***உற -*** *ஒரு சேரப் பொருந்தும்படி;* ***தொடர்ப்படுத்த நாள் -*** *கட்டிப் பிணித்த அந்நாளில்;* ***புக்கிலாதவும் -*** *அவன் செல்லாததும்;* ***பொழி அரத்த நீர்-*** *அவ் இராவணன் உடம்பினின்று சொரிந்த இரத்த வெள்ளம்;* ***உக்கிலாத -*** *சிந்தாததும் ஆகிய;* ***வேறு உலகம் யாவதோ -*** *வேறு உலகம் யாது உள்ளதோ?*

*'புக்கிலாத உலகம், அரத்த நீர் உக்கிலாத உலகம் வேறு யாவது' என்ற வினா. யாதும் இல்லை என்ற மறுதலைப் பொருளைத் தந்தது. நீர்ப்பொருள் ஒற்றுமைப்பற்றி 'அரத்த நீர்' எனப்பட்டது. வாலில் கட்டுண்ட இராவணன் வாலி சென்ற எல்லா உலகங்களிலும் புகுந்தான். அவன் குருதி எல்லா உலகங்களிலும் சிந்தியது என்பதாம். இதனால் இராவணனை வென்ற வீரமுடையவன் வாலி என்பது பெறப்பட்டது. சிவபூசை செய்து கொண்டிருந்த வாலியை இராவணன் பின்புறமாக வந்து பற்ற எண்ணியபோது, வாலி அவனை வாலினால் கட்டிக் கொண்டு எல்லா உலகங்களிலும் அவன் இரத்தம் சிந்துமாறு சுற்றிவந்து, பின்னர் அவன் வருந்தி வேண்டியதால் விடுத்தான் என்பது வரலாறு. இராவணன் வாலியின் வாலில் கட்டுண்ட நிலையை 'ஓர்*

*இராவணன் என்பான் தன்னை, சுந்தரத்தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றி, சிந்துரக் கிரிகள் தாவித் திரிந்தனன்' (6997) என்ற அடிகளும் இதனை உணர்த்தும். 48*

***3834 . 'இந்திரன்தனிப் புதல்வன்,***
***இன் அளிச்***
***சந்திரன் தழைத்தனைய***
***தன்மையான்,***
***அந்தகன் தனக்கு***
***அரிய ஆணையான்,***
***முந்தி வந்தனன்,***
***இவனின் - மொய்ம்பினோய்!***

***மொய்ம்பினோய் -*** *வலிமை உடையவனே!* ***இந்திரன் தனிப் புதல்வன்-*** *இந்திரனின் ஒப்பற்ற மைந்தனாகிய அவ்வாலி;* ***இன் அளிச் சந்திரன் -*** *இனிமையும் குளிர்ச்சியும் கொண்ட சந்திரன்;* ***தழைத்தனைய தன்மையாள் -*** *அனைத்துக் கலைகளுடன் வளர்ச்சி பெற்றது போன்ற வெண்ணிறத்தைஉடையவன்;* ***அந்தகன் தனக்கு -*** *யமனுக்கும்;* ***அரிய ஆணையான் -*** *கடத்தற்கரிய ஆணையை இடுபவன்;* ***இவனின் -*** *இந்தச் சுக்கிரீவனுக்கு;* ***முந்திவந்தனன் -*** *முன்னே தமையனாகப் (ஒரு தாய் வயிற்றில்) பிறந்தவன்.*

*இதனால் வாலியின் மேனிநிறத்தையும், ஆணைச் சிறப்பையும் உணர்த்தினான். எமனும் வாலியின் ஆணை வழியன்றிச் செயல்படான் என்பதால் வாலியின் ஆற்றல் புலப்பட்டது. வாலி சுக்கிரீவர்க்குத் தாய் ஒருத்தி; தந்தையர் இந்திரனும் சூரியனுமாகிய இருவர். அந்தகன் தனக்கும் - உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது; தழைத்தனைய என்பதை தழைத்தாலனைய என எச்சத் திரிபாகவாவது; தழைத்ததனைய என்பதன் விகாரமாகவாவது கொள்க. தம் வரலாற்றைத் தாமே கூறிக் கொள்வது தகுதியன்று என்று கருத்துடன், இராமபிரான் வரலாற்றை இலக்குவன் வாயிலாகவும், சுக்கிரீவன் வரலாற்றை அனுமன் வாயிலாகவும் கம்பர் அமைத்துள்ள நயம் காண்க. 49*

*சுக்கிரீவனோடு வாலி பகைமை கொண்ட காரணம்கூறுதல்*

***3835. 'அன்னவன்எமக்கு***
***அரசன் ஆகவே,***
***இன்னவன் இளம் பதம்***
***இயற்றும் நாள்,***
***முன்னவன் குலப்***
***பகைஞன், - முட்டினான் -***
***மின் எயிற்று வாள்***
***அவுணன், வெம்மையான்.***

***அன்னவன் -*** *அத்தகையோனாகிய வாலி;* ***எமன் அரசன் ஆகவே*** *- எங்களுக்கு அரசனாக இருக்க;* ***இன்னவன் -*** *இச்சுக்கிரீவன்;* ***இளம்பதம் இயற்றும் நாள் -*** *இளவரசுப் பதவியைத் தாங்கி ஆட்சி புரிந்த நாளில்;* ***முன் அவன் குலப் பகைஞன் -*** *முன்னமே*

*வாலியின் குலப்பகைவனாய் உள்ளவனான;* ***மின் எயிற்று வாள் அவுணன் -*** *மின்னல் போன்று ஒளி வீசும் பற்களை உடைய வாள் போன்ற கொடிய மாயாவி என்னும் அசுரன்;* ***வெம்மையான் -*** *சினம் கொண்டவனாய் (வாலியை);* ***முட்டினான் -*** *எதிர்த்தான்.*

*மாயாவி: 'மயன் குமரன். துந்துபியின் சகோதரன். மந்தோதரி உடன் பிறந்தவன்.*

*இவனே வாலியை யுத்தத்திற்கு அழைத்தவனாயிருக்கலாம்' - அபிதானசிந்தாமணி.*
*50*

***3836. 'முட்டி நின்று, அவன்***
***முரண் உரத்தின் நேர்***
***ஒட்ட, அஞ்சி, நெஞ்சு***
***உலைய ஓடினான்;***
***''வட்ட மண்டலத்து அரிது***
***வாழ்வு'' எனா,***
***எட்ட அரும் பெரும்***
***பிலனுள் எய்தினான்.***

***முட்டி நின்று-*** *(அவ்வரக்கன்) அவ்வாறு வாலியோடு எதிர்த்துப் போர் செய்த;* ***அவன் முரண் உரத்தின் நேர் -*** *அவனது வலிய ஆற்றலுக்கு எதிரில்;* ***ஒட்ட அஞ்சி -*** *நின்ற போர்செய்வதற்கு அஞ்சி;* ***நெஞ்சு உலைய ஓடினான் -*** *மனம் நடுங்கத் தப்பி ஓடினான்;* ***வட்ட மண்டலத்து -*** *வட்ட வடிவமாகிய பூமியில்;* ***வாழ்வு அரிது -*** *உயிர் வாழ்தல் அரிது;* ***எனா -*** *என்று எண்ணி;* ***எட்ட அரும் பெரும்பிலனுள் -*** *எவரும் செல்லுதற்கரிய பெரிய பிலத்துவாரத்துள்;* ***எய்தினான் -*** *புகுந்தான்.*

*வாலியுடன் போரிடுகையில் மாயாவி தன் வலிமை குறைந்து, வாலியின் வன்மை மிகுவதைக் கண்டதும் புறமுதுகு காட்டி ஓடிப் பின் பிலத்தினுள் நுழைந்து ஒளித்தான். மாயாவி நுழைந்த பிலத்தின் அருமை புலப்பட 'எட்டரும் பெரும்பிலன்' என்றான். பிலம் - பூமிக்குள் செல்லும் சுரங்கவழி. பிலன் - பிலம் என்பதன் ஈற்றுப்போலி.*
*51*

***3837. 'எய்து காலை, அப்பிலனுள்***
***எய்தி, ''யான்***
***நொய்தின் அங்கு அவற்***
***கொணர்வென்; - நோன்மையாய்! -***
***செய்தி, காவல், நீ,***
***சிறிது போழ்து'' எனா,***
***வெய்தின் எய்தினான்,***
***வெகுளி மேயினான்.***

***எய்து காலை -*** *(அவ்வாறு மாயாவி) பிலத்தினுள் நுழைந்த போது;* ***வெகுளி மேயினான் -*** *சினங்கொண்டவனாகிய வாலி;* ***நோன்மையாய் -*** *(சுக்கிரீவனை நோக்கி) வலிமை உடையவனே!* ***அப்பிலனுள் எய்தி -*** *அவன் நுழைந்த பிலத்தினுள் நுழைந்து;* ***யான்-*** *நான்;* ***நொய்தின் அங்கு-*** *விரைவில் அங்குள்ள;* ***அவற் கொணர் வென்-***

*அவனைப் பிடித்துக் கொணர்வேன்;* ***நீ சிறிது போழ்து -*** *நீ சிறிது நேரம்;* ***காவல் செய்தி -*** *இப்பிலத்திலிருந்து வேறுவகையில் அவன் தப்பித்துச் செல்லாதவாறு காவல் செய்வாய்;* ***எனா -*** *என்று கூறி;* ***வெய்தின் எய்தினான்*** *- விரைவாக அப்பிலத்துள் சென்றான்.*

*மாயாவி பிலத்தினுள் புகுந்ததைக் கண்ட வாலி, மிக்க சினங்கொண்டு தம்பியை அப்பிலவாயிலில் காவல் வைத்து மாயாவியைத் தொடர விரைந்து சென்றான் என்பதாம். காவல் காக்கும் வலிமையுடையனாதலின் தம்பியை 'நோன்மையாய்' என விளித்தான். நொய்து, வெய்து என்பன விரைவுப் பொருள்.*

*அவற்கொணர்வென் - இரண்டாம் வேற்றுமைத்தொகையாதலின் இயல்பாக வேண்டிய அவன் என்னும் உயர்திணைப்பெயர் விகாரமாயிற்று. முன் செய்யுளோடு இச்செய்யுள் அந்தாதித்தொடையாகத் தொடர்ந்தது கருதத்தக்கது.*
*52*

***3838. 'ஏகி, வாலியும் இருது ஏழொடு ஏழ்***
***வேக வெம் பிலம் தடவி, வெம்மையான்***
***மோக வென்றிமேல் முயல்வின் வைகிட,***
***சோகம் எய்தினன், துணை துளங்கினான்.***

***வாலியும் -*** *வாலியும்;* ***ஏகி -*** *சென்று;* ***இருது ஏழொடு ஏழ் -*** *பதினான்கு பருவகால வரையிலும்;* ***வேகம் -*** *வேகத்தோடு;* ***வெம்பிலம் தடவி-*** *கொடிய பிலத்தினுள்ளே தேடிப் பார்த்து;* ***வெம்மையான் -*** *கொடுந்தன்மையுடைய அசுரனை;* ***மோக வென்றி மேல் -*** *(வெல்லுதலாகிய) விரும்பத்தக்க வெற்றிமேல் கருத்துடையவனாய்;* ***முயல்வின் வைகிட -*** *அம்முயற்சியின் ஈடுபட்டிருக்க;* ***துணை -*** *தம்பியான சுக்கிரீவன்;* ***சோகம் எய்தினன் -*** *துன்பம் அடைந்தவனாய்;* ***துளங்கினான் -*** *கலங்கினான்.*

*பிலத்துள் சென்ற வாலி அசுரனைத் தேடுதலும், தேடிக்கொண்டு பிடித்தலும், பிடித்துப் போர்செய்தலும் ஆகிய செயல்களில் ஈடுபட்டு இருபத்தெட்டு மாதங்கள் வெளிவராததனால் 'வாலிக்கு என்ன இடுக்கண் நேர்ந்ததோ' எனக் காவல் காத்து நின்ற சுக்கிரீவன் கலங்கினான். இருது - இரண்டு மாத காலங்களைக் கொண்டது. ஏழொடு ஏழ் - பதினான்கு பருவங்கள் - இருபத்தெட்டு மாதகாலம். துணை - சுக்கிரீவன். இருபத்தெட்டு மாதங்கள் கழிந்தமையால் வாலி இறந்திருப்பானோ என்ற ஐயம் சுக்கிரீவனுக்கு ஏற்படலாயிற்று. வெற்றிமேல் கொண்ட மோகத்தால் 'மோகவென்றி' ஆயிற்று.*

*53* ***3839. 'அழுதுஅழுங்குறும்***
***இவனை, அன்பினின்***
***தொழுது இரந்து, "நின்***
***தொழில் இது; ஆதலால்***
***எழுது வென்றியாய்! அரசு***
***செய்க! " என,***
***"பழுது இது" என்றனன்,***
***பரியும் நெஞ்சினான்.***

***அழுது அழுங்குறும்*** - *புலம்பி வருந்துகின்ற;* ***இவனை -*** *இச்சுக் கிரீவனை;* ***அன்பினில் தொழுது இரந்து -*** *(நாங்கள்) அன்போடு வணங்கி வேண்டி;* ***எழுது வென்றியாய் -*** *நூல்களில் எழுதத்தக்க வெற்றியை உடையவனே!* ***நின்தொழில் இது ஆதலால் -*** *இளவரசனாகிய நினக்குரிய தொழில் இவ்வரசு செய்தலே ஆதலின்;* ***அரசு செய்க -*** *அரசாட்சியை ஏற்றுக்கொள்வாயாக;* ***என -*** *என்று சொல்ல;* ***பரியும் நெஞ்சினான்*** - *(வாலியின் பிரிவால்) வருந்துகின்ற மனமுடையவனான சுக்கிரீவன்;* ***இது பழுது-*** *இது குற்றமாகும்;* ***என்றனன் -*** *என்று உரைத்தான். இரத்தல் - வேண்டுதல் பொருளில் வந்தது. நெடுநாள் கழிந்தும் வாலி மீண்டுவராததால், வாலிக்கு ஏதேனும் தீங்கு நேரிட்டதோ எனக் கருதியவராய், இளவரசனே அரசனுக்குப் பின்னர் அரசு பெற வேண்டும் என்ற முறைமை கருதி 'நின் தொழில் இது ஆதலால்' என்றனர். பழுது இது என்றது - வாலிக்கரிய அரசைத் தான் ஆளுதல் குற்றம் என்றது. இதனால் சுக்கிரீவனுக்கு அரசு புரியும் விருப்பமின்மை புலப்படும்.*

*எழுது வென்றியாய் - வெற்றித் தூண்களில் எழுதத்தக்க வென்றியை உடையவனே எனவும் பொருள் கொள்ளலாம். 'பழுது இது' என்று சுக்கிரீவன் கூறிய சுருக்கமான விடை 'சுருங்கச்சொல்லல்' எனும் அழகைச்சார்ந்தது. 54*

***3840. 'என்று,தானும், ''அவ்***
***வழி இரும் பிலம்***
***சென்று, முன்னவன் -***
***தேடுவேன்; அவற்***
***கொன்றுளான்தனைக் கொல்வன்;***
***அன்று எனின்,***
***பொன்றுவேன்'' எனா,***
***புகுதல் மேயினான்,***

***என்று -*** *என்று சொல்லி;* ***தானும் -*** *சுக்கிரீவனும்;* ***அவ்வழி -*** *வாலி சென்ற அவ்வழியே;* ***இரும்பிலம் சென்று -*** *அநதப் பெரிய பிலத்தினுள் சென்று;* ***முன்னவன் தேடுவேன் -*** *வாலியாம் என் தமையனைத் தேடிப் பார்ப்பேன்;* ***அவற் கொன்றுளான் தனை -*** *(அவன் இறந்து போயிருந்தால்) அவனைக் கொன்றவனாகிய மாயாவியை;* ***கொல்வன் -*** *(போர்செய்து) கொல்வேன்;* ***அன்று எனின் -*** *கொல்ல இயலவில்லை எனின்;* ***பொன்றுவேன்-*** *(போரில்) இறப்பேன்;* ***எனா -*** *என்று கூறி;* ***புகுதல் மேயினான் -*** *அப்பிலத்தில் நுழையப் புகுந்தான்.*

*முன்னவன் என்றது வாலியை. வாலி சென்ற பிலத்தினுள் புகுந்து வாலியைத் தேடுவது, அசுரன் வாலியைக் கொன்றிருப்பின் அவனைக் கொல்வது, அது இயலாவிடின் மடிவது எனச் சுக்கிரீவன் தன் மனத்துணிவை வெளிப்படுத்தினான். பிலத்தினுள் நுழைய மேயது வாலிமாட்டு அவன் கொண்டுள்ள அன்பையும் எடுத்துக் காட்டியது. அவற் கொன்றுளான் என உயர்திணை ஈறு இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலின் விகாரம் உற்றது.*

*55* ***3841. 'தடுத்து, வல்லவர் தணிவு***
***செய்து, நோய்***
***கெடுத்து, மேலையோர்***

*கிளத்து நீதியால்*
*அடுத்த காவலும்,*
*அரிகள் ஆணையால்*
*கொடுத்தது உண்டு; இவன்*
*கொண்டனன் கொலாம்?*

***வல்லவர் -*** *அறிவும் சொல்வன்மையும் உடைய அமைச்சர்கள்;* ***தடுத்து-*** *சுக்கிரீவன் பிலத்தினுள் நுழையாதவாறு தடுத்து;* ***தணிவு செய்து-*** *அவனைச் சமாதானப்படுத்தி;* ***நோய் கெடுத்து -*** *அவன் துயரமாகிய நோயைப்போக்கி;* ***மேலையோர் கிளத்து நீதியால் -*** *முன்னையோர் கூறியுள்ள நீதிமுறையைக் கொண்டு;* ***அடுத்த காவலும் -*** *அடுத்து வரத்தக்க அரசாட்சியை;* ***அரிகள் ஆணையால்*** *- மற்ற வானரர்களின் கட்டளைப்படி;* ***கொடுத்தது உண்டு-*** *இவனுக்குக் கொடுத்தது உண்டு;* ***இவன் கொண்டனன் கொலாம் -*** *(ஆட்சியை) இவன் விரும்பித் தானாக கைக்கொண்டானோ? (இல்லை).*

*நோய் - அண்ணனுக்கு யாது ஆயிற்றோ என்ற கலக்கத்தால் ஏற்பட்ட மனத்துயரம்; வல்லவர்களின் கட்டளையை மீற முடியாமல் சுக்கிரீவன் அரசை ஏற்றுக்கொண்டானேயன்றி, அரசு பெறவேண்டும் என்ற வேட்கையால் அன்று எனக் கூறிச் சுக்கிரீவனது தவறின்மையைத் தெளிவாகக் காட்டினான். சுக்கிரீவன் விரும்பி நாட்டைப் பெற்றதாக வாலி நினைத்து அவனைத் துன்புறுத்தியதை எண்ணி, 'இவன் கொண்டனன் கொலாம்' என்றான். இவன் கொண்டதில்லை என்பது கருத்தாகும்.*
*56*

*3842 . 'அன்ன நாளில், மாயாவி,*
*அப் பிலத்து,*
*இன்ன வாயினூடு எய்தும்*
*என்ன, யாம்,*
*பொன்னின் மால் வரைப்*
*பொருப்பு ஒழித்து, வேறு*
*உன்னு குன்று எலாம்*
*உடன் அடுக்கினேம்.*

***அன்ன நாளில் -*** *அங்ஙனம் சுக்கிரீவன் அரசேற்றுக் கொண்ட அந்த நாளில்;* ***மாயாவி -*** *மாயாவி;* ***அப்பிலத்து -*** *அந்தப் பிலத்திலிருந்து;* ***இன்ன வாயில் ஊடு*** *- இவ்வாயில் வழியாக;* ***எய்தும் என்ன -*** *இங்கு வருவான் என்று அஞ்சி;* ***யாம் -*** *நாங்கள்;* ***பொன்னின் மால் வரை பொருப்பு -*** *பொன் மயமான பெரிய மேருமலையாகிய மலையை மட்டும்;* ***ஒழித்து -*** *விடுத்து;* ***வேறு உன்னு குன்று எலாம் -*** *வேறு மனத்தால் எண்ணக்கூடிய மலைகள் அனைத்தையும்;* ***உடன் அடுக்கினேம் -*** *ஒன்று சேரக் கொண்டுவந்து அப்பில வாயிலில் ஒன்றின்மேல் ஒன்றாய் அடுக்கினோம்.*

*வாலியைக் கொன்ற மாயாவி, சுக்கிரீவனையும் கொல்ல இவ்வாயில் வழியே வருவான் என்ற அச்சத்தால் அவன் வராவண்ணம் பிலவாயிலை அடைத்துவிட்டோம் என்று வாயில் அடைத்ததற்குரிய காரணத்தைக் கூறினான்அனுமன்.*

*வாலி, தான் வராமல் இருக்கவேண்டி அடைத்ததாகக் குற்றம் சாட்டினான் ஆதலின், இது கூற வேண்டியதாயிற்று.*

*மேரு மலை நீங்கலாகப் பிறமலைகளை எல்லாம் அடுக்கியதாகக் கூறியது உயர்வு நவிற்சி அணியாகும். 57*

***3843. 'சேமம் அவ் வழிச் செய்து, செங் கதிர்க்***
***கோமகன்தனைக் கொண்டுவந்து, யாம்***
***மேவு குன்றின்மேல் வைகும் வேலைவாய்,***
***ஆவி உண்டனன் அவனை, அன்னவன்.***

***அவ்வழிச் சேமம் செய்து** - அந்தப் பிலத்து வழியை (குன்றுகளால் அடைத்து) பாதுகாவலைச் செய்து; **செங்கதிர்க் கோமகன்தனை** - சிவந்த கதிர்களை உடைய சூரியன் மைந்தனாம் சுக்கிரீவனை; **கொண்டு வந்து** - அழைத்துக்கொண்டு வந்து; **யாம்** - நாங்கள்; **மேவு குன்றின் மேல்** - எங்கள் இருப்பிடமாகிய கிட்கிந்தை மலைமேல்; **வைகும் வேலைவாய்** - தங்கியிருந்த காலத்தில்; **அவனை** - அந்த மாயாவியை; **அன்னவன்** - அவ்வாலி; **ஆவி உண்டனன்** - கொன்றான்.*

*வழியை அடைத்த பின்னர்ச் சுக்கிரீவன் அரசனாக்கிக் கிட்கிந்தையில் தங்கியிருந்தபோது வாலி மாயாவியைக் கொன்றிட்டான் என்பதாம். சேமம் - பாதுகாவல்; உயிரை உண்டனன்- உண்ணப் பெறாததை உண்டதாகக் கூறுவது இலக்கணை. 58*

***3844. 'ஒளித்தவன் உயிர்க் கள்ளை***
***உண்டு, உளம்***
***களித்த வாலியும்,***
***கடிதின் எய்தினான்;***
***விளித்து நின்று, வேறு***
***உரை பெறான்; ''இருந்து***
***அளித்தவாறு நன்று,***
***இளவலார்! '' எனா,***

***ஒளித்தவன்** - (பிலத்தில் புகுந்து) ஒளித்தவனாகிய மாயாவியின்; **உயிர்க் கள்ளை உண்டு** - உயிராகிய கள்ளை உண்டு; **உளம் களித்த வாலியும்** - மனம் களிப்படைந்த வாலியும்; **கடிதின் எய்தினான்** - விரைவாகப் பிலத்து வாயிலை அடைந்து; **விளித்து நின்று** - (வாயில் அடைபட்டிருந்ததால்) சுக்கிரீவனை அழைத்து நின்று; **வேறு உரை பெறான்**- மறுமொழி ஒன்றும் பெறாதவனாய்; **இளவலார்** - 'என் தம்பியார்; **இருந்து** - வாயிலில் இருந்து; **அளித்தவாறு நன்று**- காவல் செய்தவிதம் நன்று; **எனா**- என்று சொல்லி. . . .*

*கள் உண்டார்க்குக் களிப்பை உண்டாக்குதல் போல மாயாவியைக் கொன்ற வெற்றியும் களிப்பைத் தந்ததால் மாயாவியின் உயிரைக் கள்ளாக உருவகித்தான். அந்தக் கள்ளை உண்டால் வாலியின் மனமும் போதையுற்றது. சுக்கிரீவனுடைய உண்மைநிலை அறியாது மயங்கி உணர்ந்தமைக்கு இக்களிப்பே காரணம் என்பதை*

*உணர்த்தவே 'களித்த வாலியும்' என்றான். இளவலார் - பண்படியாகப் பிறந்த பெயர்; அல் - பெயர்விகுதி. இகழ்ச்சி பற்றிப் பலர்பாலாக வந்தது. 'நன்று' என்பதும் நன்றன்று என்ற குறிப்பையே உணர்த்தியது. 'செய்தி காவல் நீ சிறிது போழ்து' என்ற வாலியின் கட்டளைக்குப் பணிந்திருக்க வேண்டியவன், காவலை விட்டதோடு, வாயிலையும் அடைத்தது பொருந்தாத செயல் எனக்கருதியதால் 'இருந்து அளித்தவாறு நன்று' என இகழ்வுபடப் பேசினான்வாலி. 59*

***3845. வாலி விசைத்து, வான்***
***வளி நிமிர்ந்தெனக்***
***கால் விசைத்து, அவன்***
***கடிதின் எற்றலும்,***
***நீல் நிறத்து விண்***
***நெடு முகட்டவும்,***
***வேலை புக்கவும், பெரிய***
***வெற்பு எலாம்.***

***அவன்-*** *அவ்வாலி;* ***வால் விசைத்து-*** *தன் வாலை வேகமாகத் தூக்கி;* ***வான் வளி நிமிர்ந்தென -*** *வானத்தின்கண் பெருங் காற்று எழுந்தாற்போல;* ***கால் விசைத்து -*** *தன் காலை வீசி;* ***கடிதின் என்றலும்*** *- வேகமாய் உதைத்த அளவில்;* ***பெரிய வெற்பு எலாம் -*** *(பிலத்தை அடைத்திருந்த) பெரிய மலைகள் எல்லாம்;* ***நீல் நிறத்து -*** *நீல நிறமுடைய;* ***விண் நெடு முகட்டவும் -*** *ஆகாயத்தின் உயர்ந்த உச்சியை அடைந்தனவும்;* ***வேலை புக்கவும் -*** *கடலில் விழுந்தனவும் ஆயின.*

*ஆயின எனும் வினை வருவித்துக்கொள்ளப் பட்டது. விசை - வேகம். நீலம் - நீல் என்றது கடைக்குறை. முட்ட, புக்க என்பன பலவின்பால் குறிப்பு வினை - யாலணையும் பெயர்கள்.*

*வாலியின் காலால் உதைக்கப்பட்ட மலைகளில் உயரச் சென்றவை விண்ணின் உச்சியை அடையவும், தாழச் சென்றவை கடலிலும் விழுந்தன.*

*விசையுடன் ஒன்றைத் தாக்குகையில் விலங்குகள் தம் வாலை வேகமாக நிமிர்த்துக்கொள்ளும் இயல்பு இங்குக் கூறப்பெற்றது. 60*

***3846. 'ஏறினான் அவன்;***
***எவரும் அஞ்சுறச்***
***சீறினான்; நெடுஞ்***
***சிகரம் எய்தினான்; வேறுஇல், ஆதவன்***
***புதல்வன், மெய்ம்மை ஆம்***
***ஆறினானும், வந்து***
***அடி வணங்கினான்.***

***அவன் -*** *வாலி;* ***ஏறினான் -*** *(பிலத்தினின்று) ஏறியவனாய்;* ***எவரும் அஞ்சுற -*** *எல்லோரும் அஞ்சும்படி;* ***சீறினான் -*** *கோபத்தால் சீறிக்கொண்டு;* ***நெடுஞ்சிகரம்***

***எய்தினான்*** - *பெரிய மலை உச்சியை அடைந்தான்;* ***வேறு இல் -*** *மனத்தில் வேறுபாடு இல்லாத;* ***ஆதவன் புதல்வன் -*** *சூரியன் மைந்தனும்;* ***மெய்ம்மை ஆம் ஆறினானும் -*** *உண்மை நெறியில் நடப்பவனுமான சுக்கிரீவன்;* ***வந்து அடிவணங்கி னான் -*** *(தமையன்) முன்வந்து அவன் பாதங்களில் வணங்கினான்.*

*வாலி வேகத்தோடு மலைகளைத் தள்ளிச் சினத்தொடு கிட்கிந்தையை அடைந்தபோது, மனத்தில் களங்கம் இல்லாத காரணத்தால் சுக்கிரீவன் வாலியின் பாதங்களை வணங்கினான். வல்லார் கூறிய நெறிப்படியே ஆட்சியை ஏற்றவன் ஆதலின் 'மெய்ம்மை ஆம் ஆறினான்' என்றார். சுக்கிரீவன் வாலிக்கு அஞ்சி ஒளிய வேண்டிய காரணம் இன்மையால் எதிர்வந்து வணங்கினான்.*

*வேறுஇல் - மனத்தில் வேறுபாடு இல்லாத; களங்கமற்ற என்பது கருத்து; தான் வேறு, வாலி வேறு என்றிலாத ஒருமித்த மனமுடையவன் எனலும் பொருந்தும்.*
*61*

***3847. 'வணங்கி, ''அண்ணல்! நின்***
***வரவு இலாமையால்,***
***உணங்கி, உன் வழிப்***
***படர உன்னவேற்கு,***
***இணங்கர் இன்மையால்,***
***இறைவ! நும்முடைக்***
***கணங்கள், 'காவல், உன்***
***கடன்மை'' 'என்றனர்.***

***வணங்கி -*** *அவ்வாறு வணங்கி;* ***அண்ணல் -*** *அண்ணலே;* ***இறைவ*** *- தலைவா!* ***நின் வரவு இலாமையால் -*** *நீண்டகாலம் உன் வருகை இல்லாததால்;* ***உணங்கி -*** *மனம் வருந்தி;* ***உன் வழிப்படர -*** *உன் பின்னர்ப் பிலத்துவழிச் செல்ல;* ***உன்னுவேற்கு -*** *கருதிய எனக்கு;* ***நும்முடைக்கணங்கள் -*** *நும் அமைச்சராகிய வானரக் கூட்டத்தார்;* ***இணங்கர் இன்மையால்*** *- சம்மதிக்காமையோடு;* ***காவல் உன் கடன்மை -*** *'எங்களை ஆட்சி புரிந்து பாதுகாப்பது உனது கடமையாகும்';* ***என்றனர் -*** *என்று கூறினர்.*

*இச்செய்யுளில் 'அண்ணல்' என்றது முதல் அடுத்த செய்யுளில் 'பொறாய்' என்னும் அளவும், முன்னே வாலியினிடத்துச் சுக்கிரீவன் பேசியதை அனுமன் அறிந்து கூறியதாகும்.*

*தன்னினும் முன்னவனாதலின் 'அண்ணல்' என்றும், யாவர்க்கும் அரசனாதலின் 'இறைவ' என்றும் சுக்கிரீவன் விளித்தான். சுக்கிரீவன் நேர்மையான வழியில் செல்பவனாதலின், வாலி கேட்பதற்கு முன்னரே தன்மீது குற்றம் இல்லை என்பதை உணர்த்துதற்கு நடந்த நிகழ்ச்சிகளை உள்ளவாறு வாலியிடம் கூறலாயினன். வாலிக்கு அமைச்சராய் இருந்தோர் கூறியதால் அரசேற்க நேர்ந்தது என்பதால் 'நும்முடைக் கணங்கள்' என்றான். தான் உண்மையில் வாலி சென்ற வழியிலே செல்ல நினைத்ததை 'உன் வழிப் படர உன்னுவேற்கு' என்ற தொடரால் உணர்த்தினான். இணங்கர் - இணங்கு என்னும் குற்றியலுகரம் 'அர்' என்னும் ஈறுபெற்றுப்*

*போலியாயிற்று. இறைவ நும்முடை - ஒருமை பன்மை மயக்கம்; மரியாதை பற்றி வந்ததால் வழுவமைதி.* *62*

## *3848. "ஆணை அஞ்சி, இவ் அரசை எய்தி வாழ்*
## *நாண் இலாத என் நவையை, நல்குவாய்;*
## *பூண் நிலாவு தோளினை! பொறாய்! " என,*
## *கோணினான், நெடுங் கொடுமை கூறினான்.*

***பூண் நிலாவு தோளினை -*** *அணிகள் அசைந்து விளங்கும் தோள்களை உடையவனே!* ***ஆணை அஞ்சி -*** *வானரர்களின் கட்டளையை மறுப்பதற்கு அஞ்சி;* ***இவ் அரசை எய்தி -*** *இந்த அரசாட்சியை ஏற்று;* ***வாழ் -*** *வாழ்ந்து வந்த;* ***நாண் இலாத -*** *நாணம் இல்லாத;* ***என் நவையை -*** *என் குற்றத்தை;* ***பொறாய் -*** *பொறுத்துக் கொள்வாய்;* ***நல்குவாய் -*** *அருள்வாய்;* ***என -*** *எனச் சுக்கிரீவன் வேண்டவும்;* ***கோணினான் -*** *(வாலி) மனம் மாறுபட்டவனாய்;* ***நெடுங்கொடுமை கூறினான் -*** *மிகக் கடுமையான சொற்களைச் சொன்னான்.*

*வானரர்களின் விருப்பப்படி நடந்துகொண்ட செயல் அண்ணன் தன்னைத் தவறாக நினைப்பதற்கு இடம் அளித்ததால் 'நாணிலாத' என்றான். 'தகாதன செய்தற்கண் உள்ளம் ஒடுங்குதல்' எனப் பரிமேலழகர் நாணத்திற்கு இலக்கணம் சொன்னது கருத்தக்கது. சிறிது காலம் வாலிக்குரிய அரசை ஆண்டதால் 'நவை' என்று குறிப்பிட்டான். தன்னையும் அறியாது நிகழ்ந்த செயலைக் கூறிப் 'பொறாய், நல்குவாய்' என மன்னிப்பு வேண்டினான். இங்ஙனம் நிகழ்ந்தது கூறி வேண்டியும் வாலி சினம் கொண்டான் ஆதலின் குற்றம் வாலியுடையது என்பதை அனுமன் உணர்த்தினான்.* *63*

## *3849. 'அடல் கடந்த தோள் அவனை அஞ்சி, வெங்*
## *குடல் கலங்கி, எம் குலம் ஒடுங்க, முன்*
## *கடல் கடைந்த அக் கரதலங்களால்,*
## *உடல் கடைந்தனன்; இவன் உலைந்தனன்.*

***அடல் கடந்த தோள் -*** *பகைவரின் வலிமையைப் போரில் கடந்து வெற்றிபெற்ற தோள்களை உடைய;* ***அவனை அஞ்சி -*** *வாலிக்குப் பயந்து;* ***வெங்குடல் கலங்கி*** *- கொடிய குடல் கலங்கி;* ***எம் குலம் ஒடுங்க -*** *எம் வானர இனம் முழுமையும் அஞ்சி ஒடுங்கிநிற்க;* ***முன் கடல் கடைந்த*** *- முன்பு திருப்பாற்கடலைக் கடைந்த;* ***அக்கரதலங்***

***களால்*** *- அந்தக் கைகளால்;* ***உடல் கடைந்தனன்*** *- (சுக்கிரீவனது) உடலைத் தாக்கிக் கலக்கினான் (வாலி);* ***இவன் உலைந்தனன் -*** *சுக்கிரீவன் பெரிதும் வருந்தினான்.*

*வாலியின் சினத்திற்குக் குரக்கினம் முழுவதும் குடல் கலங்கி அஞ்சி நடுங்கின. பாற்கடலைக் கடைந்த வாலியின் கைகளுக்குச் சுக்கிரீவன் உடம்பைக் கலக்குதல் எளிது. ஆதலின் 'கடல் கடைந்த அக்கரதலங்களால் உடல் கடைந்தனன்' என்றான். உடல் கடைதல் - உடம்பைத் தாக்கி உறுப்புகள் கலங்குமாறு செய்தல். கொடுமையான வார்த்தைகளைப் பேசியதோடு வாலி சுக்கிரீவனைத் தாக்கவும்*

*செய்தான் என அவன் கொடுமையை இராமனுக்கு அனுமன் உணருமாறு கூறினான். உடல் கடைதல்; இதன்கண் அமைந்த (வினைப்) படிமம்கருதத்தக்கது. 64*

### *3850. 'பற்றி, அஞ்சலன் பழியை - வெஞ் சினம்*
### *முற்றி நின்ற, தன் முரண் வலிக் கையால்,*
### *எற்றுவான் எடுத்து எழுதலும், பிழைத்து,*
### *அற்றம் ஒன்று பெற்ற, இவன், அகன்றனன்.*

***பற்றி -*** *வாலி சுக்கிரீவனைப் பிடித்துக் கொண்டு;* ***பழியை அஞ்சலன் -*** *(தம்பியை வருத்துவதால் ஏற்படும்) பழிக்க அஞ்சாதவனாய்;* ***வெஞ்சினம் முற்றிநின்ற -*** *கொடிய கோபம் மிக்கு நின்ற;* ***தன் முரண் வலிக்கையால் -*** *தனது மிக்க வலிமையுடைய கையால்;* ***எற்றுவான் -*** *மோதுவதற்கு;* ***எடுத்து எழுதலும் -*** *உயரத் தூக்கி எழுந்த அளவில்;* ***அற்றம் ஒன்று பெற்று -*** *அவன் சோர்ந்திருக்கும் சமயம் ஒன்று பெற்று;* ***இவன் பிழைத்து -*** *இந்தச் சுக்கிரீவன் தப்பிப்பிழைத்து;* ***அகன்றனன் -*** *அவ்விடம் விட்டு அகன்று ஓடினான்.*

*வாலி, தன்னைப் பழிப்பரே என்ற எண்ணம் சிறிதுமின்றித் தன் தம்பியை மோதிக் கொல்ல, உயரே எடுத்த அளவில் சுக்கிரீவன் வாலி சிறிது அயர்ந்திருந்த சமயம் நோக்கித் தப்பி ஓடி வந்துவிட்டான் என்பதாம். முரண் வலி - ஒரு பொருட்பன்மொழி. மிக்க வலிமை. சுக்கிரீவனின் அச்சத்தைப் பிழைத்தால் போதுமென ஓடி அகன்ற நிலை உணர்த்தும். பழிக்கு அஞ்சாத வாலியின் கொடுமை உணர்த்தப்பட்டது. 65*

*வாலிக்கு அஞ்சிய, சுக்கிரீவன் இரலை மலையில் வாழ்தல்*

### *3851. 'எந்தை! மற்று அவன்*
### *எயிறு அதுக்குமேல்,*
### *அந்தகற்கும் ஓர்*
### *அரணம் இல்லையால்;*
### *இந்த வெற்பின் வந்து*
### *இவன் இருந்தனன் -*
### *முந்தை உற்றது ஓர்*
### *சாபம் உண்மையால்.*

***எந்தை -*** *எம் ஐயனே!* ***அவன் -*** *அவ்வாலி;* ***எயிறு அதுக்குமேல் -*** *தன் பற்களைக் கடித்துக் கோபிப்பானாயின்;* ***அந்தகற்கும் -*** *யமனுக்கும்;* ***ஓர் அரணம் -*** *(பிழைத்துவாழ) பாதுகாப்பான ஓர் இடம்;* ***இல்லை -*** *இல்லை;* ***முந்தை உற்றது -*** *முன்னே (மதங்கமுனிவரால்) அடைந்ததாகிய;* ***ஓர் சாபம் உண்மையால் -*** *ஒரு சாபம் உள்ளதாதலின்;* ***இந்த வெற்பின் வந்து -*** *இந்த மலையில் வந்து;* ***இவன் இருந்தனன் -*** *சுக்கிரீவன் இருப்பானாயினன்.*

வாலியின் சினத்திற்கு இலக்கானவர் யாவரேயாயினும் தப்பிப் பிழைப்பதற்கு உரிய இடமில்லை. எல்லா உயிர்களையும் கவரும் யமனுக்கும் பிழைக்க இயலாது என்பதால் வாலியின் வலிமை உணர்த்தப்பட்டது. அந்தகற்கும் - உம்மை, உயர்வு சிறப்பும்மை. எயிறு அதுக்குதல் - கோபக்குறியை உணர்த்தும் மெய்ப்பாடு. காரியம் காரணத்தின் மேல் நின்றது. வாலி, மதங்க முனிவரால் பெற்ற சாபத்தில் இம்மலைப் பகுதிக்கு வரஇயலாது. அதனால் சுக்கிரீவன் இம்மலையை அரணாகக் கொண்டு இதுகாறும் உயிர் பிழைத்திருந்தான் என்பதை உணர்த்தினான் அனுமன். வாலிக்கு மதங்க முனிவர் இட்ட சாபத்தைத் துந்துபிப் படலத்தால் அறியலாம். அந்தகன் - உயிர்கட்கு அழிவைச் செய்பவன்; யமன். 66

**3852. 'உருமை என்று இவற்கு**
**உரிய தாரம் ஆம்**
**அரு மருந்தையும்,**
**அவன் விரும்பினான்;**
**இருமையும் துறந்து,**
**இவன் இருந்தனன்;**
**கருமம் இங்கு இது; எம்**
**கடவுள்!' என்றனன்.**

**எம் கடவுள் -** எம் தெய்வமே! **உருமை என்று -** உருமை என்று பெயர்பெற்று; **இவற்கு உரிய -** இச்சுக்கிரீவனுக்கு உரிய; **தாரம் ஆம் -** மனைவியாய் இருந்த; **அருமருந்தையும் -** கிடைத்தற்கரிய தேவாமிர்தம் போன்றவளையும்; **அவன் - விரும்பினான் -** அவ்வாலி விரும்பிக் கவர்ந்து கொண்டான்; **இவன் -** சுக்கிரீவன்; **இருமையும் துறந்து -** அரசச் செல்வத்தையும் மனைவியையும் இழந்து; **இருந்தனன் -** இம்மலையில் இருந்தான்; **இங்கு இது கருமம் -** இங்குக் கூறிய இதுவே நடந்த செய்தியாகும்; **என்றனன் -** என்று அனுமன் உரைத்தான்.

உருமை - சுக்கிரீவன் மனைவி. வாலி சுக்கிரீவர்களுக்கு மாமனும், தேவகுருவாகிய பிரகஸ்பதியின் மகனுமான தாரன் என்னும் வானர வீரனின் மகள். ருமை என்னும் வடசொல் தமிழில் உருமை ஆயது. அருமருந்தையும் - உம்மை உயர்வு சிறப்பொடு இறந்தது தழுவிய எச்சப்பொருளும் அமைந்தது. வாலி தனக்குரிய ஆட்சியை எடுத்துக் கொண்டதோடு, சுக்கிரீவனுக்கே உரிய மனைவியையும் கவர்ந்தான் என வாலியின் கொடுமை கூறப்பட்டது. அருமருந்து - கிடைத்தற்கரிய தேவாமிர்தம். உவமை ஆகுபெயராய் உருமையைக் குறித்தது. இருமை - அரசாட்சியையும் இல்லற வாழ்வையும் குறிக்கும். இருமையும் - உம்மை முற்றும்மை

'பூவையைப் பிரிந்துளாய் கொலோ' (3820) என இராமன் வினவிய தற்கு விடையாக 'ஒன்று யான் உனக்கு உரைப்பது உண்டு' (3821) எனக் கூறத் தொடங்கிய செய்திகள் இந்தப் பாடலொடு முடிகின்றமையின் 'கருமம் இங்கு இது' என உரைத்தான்.

வாலி சுக்கிரீவன் மனைவியைக் கவர்ந்த செய்தியை 'அருமை உம்பிதன் ஆருயிர்த் தேவியைப் பெருமை நீங்கினை' (4043) என்ற அடியும் உணர்த்தும்.
67

*இராமன் சினந்து, வாலியைக் கொல்வதாகச் சூளுரைத்தல்*

*கலித்துறை*

***3853. பொய் இலாதவன் வரன்முறை***
***இம் மொழி புகல,***
***ஐயன், ஆயிரம் பெயருடை***
***அமரர்க்கும் அமரன்,***
***வையம் நுங்கிய வாய் இதழ்***
***துடித்தது; மலர்க் கண் -***
***செய்ய தாமரை, ஆம்பல் அம்***
***போது எனச் சிவந்த.***

***பொய் இலாதவன் -*** *பொய் கூறுதலை அறியாத அனுமன்;* ***வரன் முறை -*** *கூறவேண்டிய முறைப்படி;* ***இம்மொழி புகல -*** *சுக்கிரீவனைப் பற்றிய செய்திகளைக் கூற;* ***ஐயன் -*** *தலைவனும்;* ***ஆயிரம் பெயருடை*** *- ஆயிரம் திருநாமங்களை உடைய;* ***அமரர்க்கும் அமரன் -*** *தேவர்களுக்கு எல்லாம் மேம்பட்ட தேவனுமான இராமபிரானின்;* ***வையம் நுங்கிய -*** *(முன்பு பிரளய காலத்தில்) உலகம் முழுவதையும் விழுங்கிய;* ***வாய் இதழ் துடித்தது -*** *வாயின் உதடுகள் கோபத்தால் துடித்தன;* ***கண்கள் -*** *அவனது கண்களாகிய;* ***செய்ய தாமரை மலர்*** *- சிவந்த தாமரை மலர்கள்;* ***ஆம்பல் அம்போது என -*** *செவ்வாம்பல் மலர் போல;* ***சிவந்த*** *- சிவந்தன.*

*வாலி சுக்கிரீவனின் மனைவியைக் கவர்ந்த செய்தியினையும் மறைக்காது உரைத்தமையால் 'பொய் இலாதவன்' என்றார். 'மெய்ம்மை பூண்டான்' (4801) என்று பின்னரும் அனுமன் கட்டப்படுவான். அறத்திற்கு மாறாக வாலி நடந்து கொண்டான் என அறிந்ததும் தாமரை மலர்க்கண்கள் மேலும் சிவந்ததால் 'ஆம்பல் போது எனச்சிவந்த' என்றார். தாமரை மலரின் செம்மையினும் செவ்வாம்பல் மலர் செம்மை மிக்கது என அறிய முடிகிறது.*

*வையம் நுங்கிய - பிரளய காலத்தில் எல்லா உலகங்களுக்கும் அழிவில்லாதவாறு திருமால் தன் வயிற்றில் உலகங்களை வைத்துக் காத்தார் என்பது புராணக்கதை. இராமபிரான் வடிவு கொண்ட திருமால் ஆயிரம் பெயருடையவன்; 'ஆயிரம் நாமச் சிங்கம்' (1258) என முன்னும் கூறினார். அமரர்க்கு அமரனாக இராமபிரான் விளங்கியதை 'தேவதேவனைத் தென்னிலங்கை எரியெழச் செற்ற வில்லியை' (திருவாய்மொழி.3.6-2) என்று நம்மாழ்வாரும் போற்றுவார். திருமால் வையம் நுங்கியதை இராமபிரான் மேல் ஏற்றிக்கூறியுள்ளார்.*

*இதனை 'அண்டமும் முற்றும் அகண்டமும் மேல்நாள் உண்டவன் ஆம்' (418) என முன்னரும் குறித்தார். 'உலகுண்ட ஒருவா' (பெரியதிருமொழி - 7. 7. 1) "மண்ணும் மலையும் மறிகடலும் மாருதமும், விண்ணும் விழுங்கியது மெய்யென்பர்" (முதல்திருவந்தாதி - 10) என்ற அடிகள் ஈண்டு ஒப்புநோக்கத் தக்கன. ஆம்பல் அம் போது - அம் சாரியை.*

*'ஆயிரம் பெயருடை அமரன்' எனவும் 'அமரர்க்கு அமரன்' எனவும் கூட்டுக. அனுமன் கூறியதைக் கேட்டதும் இராமனிடம் நிகழ்ந்த மெய்ப்பாடுகள் இச் செய்யுளில் அமைந்துள்ளன. இராமனின் ஆற்றலும் வெகுளியின் வேகமும் பாடலில் புலப்படுகின்றன. 68*

***3854. ஈரம் நீங்கிய சிற்றவை***
***சொற்றனள் என்ன,***
***ஆரம் வீங்கு தோள் தம்பிக்குத்***
***தன் அரசு உரிமைப்***
***பாரம் ஈந்தவன், 'பரிவு இலன்,***
***ஒருவன் தன் இளையோன்***
***தாரம் வெளவினன்' என்ற***
***சொல் தரிக்குமாறு உளதோ?***

***ஈரம் நீங்கிய -*** *அன்பு நீக்கிய;* ***சிற்றவை -*** *சிறிய தாயாகிய கைகேயி;* ***சொற்றனள் என்ன -*** *சொன்னாள் என்று;* ***ஆரம் வீங்கு தோள் -*** *முத்துமாலை அணிந்த பருத்த தோள்களை உடைய;* ***தம்பிக்கு -*** *தம்பியாகிய பரதனுக்கு;* ***தன் அரசு உரிமைப் பாரம் -*** *தனக்கே உரித்தான அரசபாரத்தை;* ***ஈந்தவன் -*** *அளித்தவனான இராமன்;* ***பரிவு இலன் ஒருவன் -*** *''அன்பில்லாத ஒருவன்;* ***தன் இளையோன் தாரம் -*** *தன் தம்பியின் மனைவியை;* ***வெளவினன்*** *- கவர்ந்து கொண்டான்;* ***என்ற சொல் -*** *என்ற வார்த்தையை;* ***தரிக்குமாறு உளதோ -*** *(கேட்டுப்)பொறுத்திருக்கும் தன்மை உண்டாகுமோ? (ஆகாது).*

*இராமன் மாட்டு இயல்பாக அன்பு கொண்ட கைகேயி கூனியின் சூழ்ச்சியால் மாறியதால் 'ஈரம் நீங்கிய சிற்றவை' என்றார். ஆட்சியுரிமை மூத்தவனான இராமனுக்கே உரித்து ஆதலின் 'தன் அரசுரிமை' எனப்பட்டது. இச்செய்யுளால் தம்பி மாட்டு அன்பில்லாது, அவன் தாரத்தையும் கவர்ந்த கொடிய செயலே மனைவியை இழந்த இராமன் வாலிபால் கொண்ட பகைமைக்கு முதன்மைக் காரணமாய் முன்னின்றது என்பதாம்.*

*இப்பாடல்கவிக்கூற்று. 69*

***3855. 'உலகம் ஏழினோடு ஏழும் வந்து***
***அவன் உயிர்க்கு உதவி***
***'விலகும் என்னினும், வில்லிடை***
***வாளியின் வீட்டி,***
***தலைமையோடு, நின் தாரமும்,***
***உனக்கு இன்று தருவென்;***
***புலமையோய்! அவன் உறைவிடம்***
***காட்டு' என்று புகன்றான்.***

***உலகம் ஏழினோடு ஏழும் -*** *பதினான்கு உலகில் உள்ளோர் யாவரும்;* ***வந்து -*** *திரண்டு வந்து;* ***அவன் உயிர்க்கு உதவி -*** *வாலியின் உயிரைக் காப்பதற்கு உதவிபுரிந்து;* ***விலகும் என்னினும் -*** *என்னைத் தடுக்குமாயினும்;* ***வில்லிடை வாளியின் -*** *என் வில்லில் பூட்டிய*

*அம்பினால்;* ***வீட்டி -*** *அவனை அழித்து;* ***தலைமையோடு -*** *வானரங்களுக்குத் தலைவனாகும் அரசாட்சியோடு;* ***நின் தாரமும் -*** *உனது மனைவியையும்;* ***உனக்கு இன்று தருவேன் -*** *உனக்கு இப்பொழுதே மீட்டுத் தருவேன்;* ***புலமையோய் -*** *அறிவில் சிறந்தவனே!* ***அவன் உறைவிடம் காட்டு -*** *அவன் வசிக்கும் இடத்தைக் காண்பிப்பாய்;* ***என்று புகன்றான் -*** *என்று (சுக்கிரீவனிடம் இராமன்) கூறினான்.*

*பதினான்கு உலகில் உள்ளார் வந்து தடுப்பினும் வாலியைக் கொன்று ஆட்சியையும், மனைவியையும் மீட்டுத் தருவது உறுதி என இராமன் சுக்கிரீவனுக்கு உரைத்தான். முன் தண்டக வனத்து முனிவர்களிடத்தும் 'சூர் அறுத்தவனும், சுடர்நேமியும், ஊர் அறுத்த ஒருவனும் ஓம்பினும், ஆர் அறத்தினொடு அன்றி நின்றார் அவர், வேர் அறுப்பென், வெருவன்மின் நீர்' (2652) என இராமன் கூறியுள்ளமை காணலாம். அரச நீதிக்கு ஏற்பத் துணையையும் காலத்தையும் நோக்கி அடங்கியிருந்த சுக்கிரீவன் அறிவுடைமை பற்றிப் 'புலமையோய்' என விளித்தான். உலகம் - இடவாகுபெயர்; விலக்கும் என்பது எதுகை நோக்கி 'விலகும்' என விகாரப்பட்டு நின்றது. 'இன்று தருவென்' என்றது கால வழுவமைதி; உறுதி குறித்தது. 'இன்றே தந்தேன்' என்று சொல்லியிருந்தாலும் அதுவே.* *70*

***3856. எழுந்து, பேர் உவகைக் கடற்***
***பெருந் திரை இரைப்ப,***
***அழுந்து துனபினுக்கு அக்***
***கரை கண்டனன் அனையான்,***
***'விழுந்ததே இனி வாலி தன்***
***வலி!' என, விரும்பா,***
***மொழிந்த வீரற்கு, 'யாம் எண்ணுவது***
***உண்டு' என மொழிந்தான்.***

***பேர் உவகைக் கடல் -*** *(இராமன் கூறியதைக் கேட்ட மாத்திரத்தில்) பெரிய மகிழ்ச்சியாகிய கடல்;* ***பெருந்திரை எழுந்து -*** *பெரிய அலைகளோடு பொங்கி எழுந்து;* ***இரைப்ப -*** *ஒலிக்க;* ***அழுந்து துன்பினுக்கு -*** *தான் அழுந்திடக் கிடந்த துயரமாகிய கடலுக்கு;* ***அக்கரை கண்டனன் -*** *எல்லை கண்டவனை;* ***அனையான் -*** *ஒத்து விளங்கும்*

*சுக்கிரீவன்;* ***இனி, வாலிதன் வலி -*** *"இனி வாலியின் வலிமை;* ***வீழ்ந்ததே-*** *அழிந்ததேயாம்";* ***என விரும்பா*** *- என்று விருப்பமுற்று;* ***மொழிந்த வீரற்கு-*** *(தன்னிடம்) பேசிய இராமனிடம்;* ***யாம் எண்ணுவது உண்டு*** *- 'நாங்கள் ஆலோசிக்க வேண்டுவது ஒன்றுளது';* ***என மொழிந்தான் -*** *என்று சொன்னான்.*

*இராமன் சொல்லைக் கேட்டதும் சுக்கிரீவன் பெரிதும் மகிழ்ந்தான் என்பதால் 'பேருவகைக்கடல் பெருந்திரை இரைப்ப' என்றார். பேருவகைக்கடல் என்பது உருவகம். 'அக்கரை' என்றதால் துயரமாகிய கடலுக்கு என உருவமாகக் கொள்ளல் வேண்டும். இராமன் உரையால் வாலியை இறந்துபட்டவனாகவே சுக்கிரீவன் உணர்ந்ததால் 'விழுந்ததே வாலி தன் வலி' எனப்பேசினான். விழுந்ததே - தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாய் வந்த கால வழுவமைதி.*

*'எண்ணித் துணிக கருமம்' என்பதால் சுக்கிரீவன் இராமனிடம் 'யாம் எண்ணுவது உண்டு' என்றான். 'யாம்' என்று அனுமனை உள்ளிட்ட அமைச்சர்களை உளப்படுத்திக் கூறியதாகும்.*

*விழுந்ததே - ஏகாரம்தேற்றம். 71*

*அமைச்சர்களோடு கூடிச் சுக்கிரீவன் சிந்திக்க, அனுமன் பேசுதல்*

***3857. அனைய ஆண்டு உரைத்து,***
***அனுமனே முதலிய அமைச்சர்,***
***நினைவும், கல்வியும், நீதியும்,***
***சூழ்ச்சியும் நிறைந்தார்***
***எனையர், அன்னவரோடும் வேறு***
***இருந்தனன், இரவி***
***தனையன்; அவ் வழி,***
***சமீரணன் மகன் உரைதருவான்:***

***இரவி தனையன் -** சூரியன் மகனாகிய சுக்கிரீவன்; **அனைய ஆண்டு உரைத்து -** அவ்வாறு அங்குச் சொல்லிவிட்டு; **நினைவும் கல்வியும் -** எண்ணமும் கல்வியும்; **நீதியும் சூழ்ச்சியும்** - நீதிநெறிகளும் ஆய்வுத்திறமும்; **நிறைந்தார்** - நிறைந்தவர்களாகிய; **அனுமனே முதலிய அமைச்சர் -** அனுமன் முதலான அமைச்சர்கள்; **எனையர் -** எத்துணைபேர் இருந்தனரோ; **அன்னவரோடும் -** அத்தனை பேருடனும்; **வேறு இருந்தனன்** - வேறிடத்தில் (ஆலோசனை செய்ய) இருந்தான்; **அவ்வழி -** அப்பொழுது; **சமீரணன் மகன் -** வாயு மைந்தனாகிய அனுமன்; **உரைதருவான் -** பேசலாயினான்.*

*வாலியைக் கொல்லும் ஆற்றல் இராமனுக்கு உண்டோ, இல்லையோ எனச் சுக்கிரீவன் ஐயுற்று அதைப்பற்றி ஆலோசிக்க அனுமன் முதலிய அமைச்சர்களை அழைத்துக் கொண்டு தனியிடத்தே சென்றான். அமைச்சர்களுக்குச் செயல்படுவதற்கேற்ற எண்ணமும், அறிவுத்திறனும், நீதிநெறியும், அரசன் ஆக்கத்திற்குத் தக்க சூழ்ச்சியும் வேண்டுதலின் அந்நான்கினையும் உடைய அமைச்சர் என்றார். அனுமனே - ஏகாரம் தேற்றப்பொருளில் மற்றையோரினும் அவனுக்குள்ள*

*சிறப்பை உணர்த்துவதாகும். "ஆற்றலும் நிறைவும் கல்வி அமைதியும் அறிவும் என்னும், வேற்றுமை இவனோடு இல்லையாம்" (3767) என்ற இராமன் கூற்றாலும் 'அறிவும் ஈதே, உரு ஈதே, ஆற்றல் ஈதே. . . . நீதி ஈதே நினக்கு' (5338) என்ற சீதா பிராட்டியின் சொற்களாலும் அனுமனின் நிறம் விளங்குதல் காண்க.*

*நினைவும் கல்வியும் நீதியும் சூழ்ச்சியும் - எண்ணும்மை. சமீரணன் - காற்று. நன்றாகச் சஞ்சரிக்க வல்லவன் எனும் காரணம்பற்றி வந்த பெயர். சுக்கிரீவன் ஐயத்தைக் குறிப்பால் உணர்ந்த அனுமன் அவன் ஐயம் நீங்கச் சொல்லத் தொடங்கினான் என்க. தனயன் - எதுகை நோக்கித் தனையன் எனத் திரிந்தது. 72*

*3858.* ***'உன்னினேன், உன்தன் உள்ளத்தின்***
***உள்ளதை, உரவோய்!***
***''அன்ன வாலியைக் காலனுக்கு***
***அளிப்பது ஓர் ஆற்றல்***
***இன்ன வீரர்பால் இல்லை'' என்று***
***அயிர்த்தனை; இனி, யான்***
***சொன்ன கேட்டு, அவை கடைப்பிடிப்பாய்'***
***எனச் சொன்னான்.***

***உரவோய் -*** *வலிமை உடையவனே!* ***உன்தன் உள்ளத்தின் -*** *உன் மனத்தில்;* ***உள்ளதை -*** *உள்ள கருத்தை;* ***உன்னினேன் -*** *(யான்) ஊகித்து அறிந்து கொண்டேன்;* ***அன்ன வாலியை -*** *அத்தகைய வலிமை வாய்ந்த வாலியை;* ***காலனுக்கு அளிப்பது ஓர் ஆற்றல் -*** *யமனுக்குக் கொடுக்கும்படியான ஒப்பற்ற வலிமை;* ***இன்ன வீரர்பால் இல்லை -*** *இந்த வீரர்களிடத்தில் இல்லை;* ***என்று அயிர்த்தனை -*** *என்று ஐயம் கொண்டாய்;* ***இனி யான் சொன்ன கேட்டு*** *- இனி யான் சொல்லும் வார்த்தைகளைக் கேட்டு;* ***அவை கடைப்பிடிப்பாய் -*** *அவற்றை உறுதியாகக் கொள்வாய்;* ***எனச் சொன்னான் -*** *என்று சொல்வானாயினன்.*

*உற்றது கொண்டு மேல்வந்து உறுபொருள் உணரவல்ல அனுமன் தன் அறிவால் சுக்கிரீவன் மனத்தில் கொண்ட ஐயத்தை உணர்ந்துகொண்டான். காலனுக்கு அளிப்பது - கொல்வது என்னும் பொருளைத் தருவது. அன்ன வாலி என்றது. எதிர்த்தார் வலிமையில் பாதியைத் தான் பெறுதற்குரிய வரம் பெற்ற வாலி என அவன் பெருமையைக் கூறியதாகும். இன்ன வீரர் - இங்கு வந்துள்ள இராமலக்குவரைக் குறிக்கும்.*

*யான் சொன்ன என்பதில் சொன்ன காலவழுவமைதி.* *73*

*3859.* ***'சங்கு சக்கரக் குறி உள,***
***தடக் கையில், தாளில்;***
***எங்கும் இத்தனை இலக்கணம்***
***யாவர்க்கும் இல்லை;***
***செங் கண் விற் கரத்து***
***இராமன், அத் திரு நெடு மாலே;***
***இங்கு உதித்தனன், ஈண்டு அறம்***
***நிறுத்துதற்கு; இன்னும்,***

***தடக்கையில் -*** *(இராமனது) பெரிய கைகளிலும்;* ***தாளில் -*** *பாதங்களிலும்;* ***சங்கு சக்கரக் குறி உள -*** *சங்கு சக்கரங்களின் ரேகைகள் உள்ளன;* ***இத்தனை இலக்கணம் -*** *இத்தனைச் சிறந்த இலக்கணம்;* ***எங்கும் யாவர்க்கும் இல்லை -*** *எவ்வுலகத்திலும் யார்க்கும் இருந்த தில்லை;* ***செங்கண் வில் கரத்து -*** *சிவந்த கண்களையும், வில்லேந்திய கரத்தையும் உடைய;* ***இராமன் - ;*** ***அத்திரு நெடுமாலே -*** *அப்பரம் பொருளாகிய திருமாலே ஆவன்.* ***ஈண்டு -*** *இப்பொழுது;* ***அறம் நிறுத்துதற்கு -*** *அறத்தை*

*நிலைநிறுத்துவதற்கு;* ***இங்கு உதித்தனன் -*** *இவ்வுலகத்தில் அவதரித்துள்ளான்;* ***இன்னும் -*** *மேலும் . . . .*

*இப்பாடலில் 'மேலும்' என்பது அடுத்த பாடலொடு இயைந்து பொருள் முடிபு கொள்ளும். கைகளிலும் கால்களிலும் சங்கு, சக்கர ரேகைகள் அமைவது உத்தம இலக்கணமாகும். அத்தகைய இலக்கணம் திருமாலுக்கே அமைவதாலும், இராமனிடத்தும் எல்லா நல்இலக்கணங்களும் பொருந்தி இருந்தமையாலும், அத் திருமாலே இராமனாக அறத்தை நிலைநாட்டும் பொருட்டு இவ்வுலகில் தோன்றினன் என ஊகித்து உணரலாம் எனக் கூறினன். "நேமியோடு வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை" (முல்லைப்பாட்டு 1 - 2) எனத் திருமாலும் 'நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய, கைத்தலங்கள் வந்து காணீரோ' (பெரியாழ்வார் திருமொழி 1-2-12). 'சங்கு ரேகையும் சக்கர ரேகையும் அங்கையுள்ளன ஐயற்காதலால், சங்க பாணியான் சக்கராயுதம் அங்கை ஏந்தும் என்று அறையல் வேண்டுமோ?' (சூளாமணி - குமார காலப் - 45) எனப் பிறநூல்களும் விளக்குதல் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.*

*இராமன் சங்கு, சக்கர ரேகை உடையவன் என்பது 'சங்கொடு சக்கரம் தரித்த செங்கை அச்சிங்க ஏறு' (670) எனவும், அவன் அறத்தை நிலைநாட்டத் தோன்றியவன் என்பது 'நல்லறம் நிறுத்தத் தோன்றினான்' (1769) எனவும் முன்னரும் கூறப்பட்டன. இராம அவதாரத்தின் நோக்கத்தை இப்பாடல் உணர்த்துகிறது. இந்நோக்கத்தை அனுமனே இராவணனிடம் உரைப்பதை "அறம் தலை நிறுத்தி - பிறப்பு அறுப்பான்" (5885) என்ற பாடலும் உணர்த்தும். 74*

***3860. 'செறுக்கும் வன்திறல் திரிபுரம்***
***தீ எழச் சினவிக்***
***கறுக்கும், வெஞ் சினக் காலன்தன்***
***காலமும் காலால்***
***அறுக்கும் புங்கவன் ஆண்ட பேர்***
***ஆடகத் தனி வில்***
***இறுக்கும் தன்மை, அம்***
***மாயவற்கு அன்றியும் எளிதோ?***

**செறுக்கும் வன்திறல் -** *யாவரையும் வருத்துகின்ற மிக்க வலி மையை உடைய;* **திரிபுரம் -** *முப்புரங்களும்;* ***தீ எழச் சினவி -*** *நெருப்புப் பற்றி எரியும்படி சினங்கொண்டு;* **கறுக்கும் வெஞ்சினக் காலன் தன் -** *கோபித்து (மார்க்கண்டேயன் மீது) கொடிய சினங்கொண்ட யமனுடைய;* **காலமும் -** *ஆயுள் காலத்தையும்;* **காலால் அறுக்கும் -** *காலினால் உதைத்து அழித்துவிட்ட;* **புங்கவன் -** *மேலோனான சிவபிரான்;* **ஆண்ட -** *கையாண்ட;* **பேர் ஆடகத்தனி வில் -** *பெரிய பொன்மயமான ஒப்பற்ற வில்லை;* **இறுக்கும் தன்மை -** *முறிக்கின்ற செயல்;* **அம்மாயவற்கு அன்றியும் -** *அத்திருமாலுக்கு அல்லாது;* **எளிதோ -** *பிறர்க்கு எளிதாமோ? (ஆகாது).*

*திரிபுரம் அழித்து, காலனையும் உதைத்த சிவபிரான் பற்றிய வில் என அவ்வில்லின் வலிமையும் பெருமையும் கூறி, அதனை வளைத்தவன் என இராமன் பெருமை கூறியவாறு. சீதையை மணக்க இராமன் வளைத்த வில் சிவன் வில். திரிபுரம் என்னும் கோட்டை அமைந்த மூன்று நகரங்களின் அழிக்கும் வலிமை தெரிய 'செறுக்கும் வன்திறல் திரிபுரம்' என்றான். மார்க்கண்டேயனைப் பற்றிய யமனது சினம் தோன்றக்*

*'கறுக்கும் வெஞ்சினக் காலன்' என்றான். சிவபிரான் அவனை அழித்த எளிமை தோன்றக் 'காலால் அறுக்கும்' என உணர்த்தினான்.75*

***3861. 'என்னை ஈன்றவன், ''இவ்***
***உலகு யாவையும் ஈன்றான் -***
***தன்னை ஈன்றவற்கு அடிமை செய்;***
***தவம் உனக்கு அஃதே;***
***உன்னை ஈன்ற எற்கு உறு***
***பதம் உளது'' என உரைத்தான்;***
***இன்ன தோன்றலே அவன்;***
***இதற்கு ஏது உண்டு; - இறையோய்!***

***இறையோய் -*** *தலைவனே!* ***என்னை ஈன்றவன் -*** *என்னைப் பெற்ற தந்தையாகிய வாயுதேவன்;* ***இவ்வுலகு யாவையும் -*** *(என்னை நோக்கி) ''இவ்வுலகங்களையெல்லாம்;* ***ஈன்றான் தன்னை -*** *படைத்த பிரமனை;* ***ஈன்றவதற்கு -*** *(தன் உந்திக்கமலத்தில்) ஈன்றவனாகிய திருமாலுக்கு;* ***அடிமை செய் -*** *தொண்டு செய்வாய்.* ***தவம் உனக்கு அஃதே*** *- அதுவே உனக்குத் தவமாகும்;* ***உன்னை ஈன்ற எற்கு -*** *உன்னைப் பெற்ற எனக்கும்;* ***உறுபதம் உளது -*** *சிறந்த பதவி கிடைப்பதாகும்'';* ***என உரைத்தான் -*** *என்று சொன்னான்;* ***இன்ன தோன்றலே -*** *இந்த இராமனே;* ***அவன் -*** *அந்தத் திருமாலாகும்.* ***இதற்கு ஏது உண்டு -*** *இவ்வாறு யான் கூறுவதற்கு வேறொரு காரணமும் உண்டு.*

*என்னை ஈன்றவன் என்றது வாயு தேவனை; யாவையும் ஈன்றான் - நான்முகன்; ஈன்றான் தன்னை ஈன்றவன் - திருமால். இங்கு இராமனைக் குறித்தது. 'மூன்றுலகும் ஈன்றானை முன்னீன்றானை' (2366) என முன் கூறியுள்ளதும்*

*காண்க. மக்கள் செய்யும் நல்ல செயல் தந்தைக்கும் உரியதாய்ப் பெருமை சேர்க்கும் என்பதை 'உன்னை ஈன்ற எற்கு உறுபதம் உளது' என்ற தொடர் உணர்த்தும். வாயு தன் மைந்தனாகிய அனுமனை நோக்கித் 'திருமாலுக்கு அடிமை செய்' எனக் கூறிய செய்தி இப்பாடலில்குறிப்பிடப்படுகிறது. 76*

***3862. 'துன்பு தோன்றிய பொழுது,***
***உடன் தோன்றுவன்; ''எவர்க்கும்***
***முன்பு தோன்றலை அறிதற்கு முடிவு***
***என்?'' என்று இயம்ப,***
***''அன்பு சான்று'' என உரைத்தனன்;***
***ஐய! என் ஆக்கை,***
***என்பு தோன்றல உருகின***
***எனின், பிறிது எவனோ?***

***ஐய -*** *தலைவனே!* ***முன்பு -*** *முன்னே (அக்காலத்தில் யான் என் தந்தையை நோக்கி);* ***தோன்றலை அறிதற்கு -*** *அப்பெருமானை நான் அறிந்து கொள்வதற்கு;* ***முடிவு என் -*** *உறுதியான உபாயம் யாது?* ***என்று இயம்ப -*** *என்று கேட்க;* ***எவர்க்கும் துன்பு தோன்றிய பொழுது -*** *(அவர்) ''யாவர்க்கும் துன்பம் ஏற்படும் காலத்தில்;* ***உடன் தோன்றுவன் -***

*உடனே அத்துன்பம் தீர்க்க எதிரில் வந்து தோன்றுவான்;* ***அன்பு சான்று -*** *அப்பரமனைக் கண்டதும் உனக்கு அவன்மாட்டு அன்பு உண்டாவதே தக்க சான்றாகும்"* ***என உரைத்தனன் -*** *என்று சொன்னான்;* ***என் யாக்கை - -*** *(அதற்கேற்ப இப்பெருமானைக் கண்ட மாத்திரத்தில்) என் உடல்;* ***என்பு தோன்றல -*** *எலும்புகள் உருத் தோன்றாதனவாக;* ***உருகின எனில் -*** *உருகின என்றால்;* ***பிறிது எவனோ -*** *இதற்கு மேல் வேறு சான்று எதற்கு?*

*முன்னர்ச் செய்யுளில் 'இதற்கு ஏது உண்டு' என்று கூறியதன் விளக்கம் இங்குத் தரப்பட்டுள்ளது. வாயுதேவன் கூறியபடி இராமனைக் கண்டவுடன் அனுமனின் எலும்பு உருகியதால் இராமன் திருமாலே எனத் துணியலாம் என்பது அனுமனின் கருத்தாகும். இதற்குமேல் ஆதாரம் வேண்டுவதில்லையாதலின் 'பிறிது எவனோ?' என்றான். உலகில் துன்பங்கள் தோன்றுகையில் அவன் உடனே அவதரிப்பான் என்பது புலப்பட 'உடன் தோன்றுவன்' என்றான். துன்பம் ஏற்படுகையில் கடவுளின் திருவருள் கிட்டும் என்ற உண்மை புலப்படுத்தப்படுகிறது. என்பு தோன்றல உருகின - எலும்பு வலுவானது. அவை வலிமை தோன்றாமல் உருகின போல உடல் நெகிழ்ந்தது என்பதாம். அனுமனுக்கு இவ்வுணர்ச்சி இராமனைக் கண்டவுடன் ஏற்பட்டதை 'என்பு எனக்கு உருகுகின்றது; இவர்கின்றது அளவில் காதல்' (3763) என்ற கூற்றாலும் உணரலாம். இராமனைக் கண்ட அளவில் "என்பு உருகி நெஞ்சு உருகி, யார் உருக கில்லார்" (1588) என மக்கள் உருகி நின்றனர். இங்ஙனமே வீடணனும் இராமனை எண்ணிய மாத்திரத்தில் 'என்பு உறக் குளிரும்; நெஞ்சு உருகுமேல், அவன் புன்புறப் பிறவியின் பகைஞன் போலும்' என (6384) உருகி நின்றான். உள்ளம் உருகுங்கால் 'என்பு உருகுதல்' இயல்பாதலின் 'என்பு தோன்றல்' என்றான்.* *77*

*இராமனின் ஆற்றலைக் கண்டறிய அனுமன் உரைத்த உபாயம்*

***3863. 'பிறிதும், அன்னவன் பெரு***
***வலி ஆற்றலை, பெரியோய்!***
***அறிதி என்னின், உண்டு உபாயமும்;***
***அஃது அரு மரங்கள்***
***நெறியில் நின்றன ஏழில், ஒன்று***
***உருவ, இந் நெடியோன்***
***பொறி கொள் வெஞ் சரம் போவது***
***காண்!' எனப் புகன்றான்.***

***பெரியோய் -*** *சுக்கிரீவப் பெரியோனே!* ***பிறிதும்-*** *மற்றும்;* ***அன்னவன் பெருவலி ஆற்றலை -*** *அந்த இராமனுடைய பெரிய வலிமைச் சிறப்பை;* ***அறிதி என்னின் -*** *அறிய விரும்புவாயானால்;* ***உபாயமும் உண்டு -*** *அதற்கு ஒரு வழி உள்ளது.;* ***அஃது -*** *அவ் உபாயமாவது;* ***நெறியில் நின்றன -*** *நாம் போகும் வழியில் நிற்பனவான;* ***அருமரங்கள் ஏழில் -*** *எய்துதற்கரிய மராமரங்கள் ஏழிற்;* ***ஒன்று உருவ -*** *ஒன்றைத் துளைக்கும்படி;* ***இந்நெடியோன் -*** *இந்த நெடியோனாகிய இராமனது;* ***பொறி கொள் வெஞ்சரம் -*** *நெருப்புப்பொறி கொண்ட கொடிய அம்பொன்று;* ***போவது காண் -*** *செல்வதே ஆகும்;* ***எனப் புகன்றான் -*** *என்று சொன்னான்.*

*மராமரங்கள் ஏழில் ஏதேனும் ஒரு மரத்தை ஊடுருவும் ஆற்றல் இராமன் அம்புக்கு உண்டாயின. அவ்வம்பு வாலியின் மார்பைத் துளைக்கும் ஆற்றலை உடையது என்பதைத் தெளியலாம் என்று சுக்கிரீவன் தெளியுமாறு சிறந்த உபாயத்தை அனுமன் உரைத்தனன். வலியாற்றல் - ஒரு பொருட்பன்மொழி;*
*78*

*சுக்கிரீவன், இராமனை அணுகித் தன் கருத்தைக் கூறுதல்*

***3864. 'நன்று நன்று' எனா, நல்***
***நெடுங் குன்றமும் நாணும்***
***தன் துணைத் தனி***
***மாருதி தோளிணை தழுவி,***
***சென்று, செம்மலைக் குறுகி,***
***'யான் செப்புவது உளதால்,***
***ஒன்று உனக்கு' என, இராமனும்,***
***'உரைத்தி அஃது' என்றான்***

***நன்று நன்று எனா -** (அனுமன் கூறியதைக் கேட்ட சுக்கீரிவன்) 'நீ சொன்னது நல்லது நல்லது' என்று மகிழ்ந்து; **தன் தனித் துணை மாருதி -** தனது ஒப்பற்ற துணையாக விளங்கும் அனுமனின்; **நல் நெடுங்குன்றமும் நாணும் -** நல்ல பெரிய மலைகளும் நாணும்படியான; **தோளினை தழுவி -** தோள்கள் இரண்டையும் தழுவிக்*

*கொண்டு; **செம்மலைச் சென்று குறுகி -** இராமனைச் சென்றடைந்து; **யான்- - உனக்குச் செப்புவது -** உனக்குச் சொல்வது; **ஒன்று உளது என -** ஒரு செய்தி உள்ளது" என்று சொல்ல; **இராமனும் - - ; அஃது உரைத்தி -** "அதனைச் சொல்வாய்"; **என்றான் -** என்று சொன்னான்.*

*அனுமன் கூறிய உபாயம் தனக்கும் ஏற்புடைத்தாக இருந்தமையால் அவனது அறிவின் திறம்பாராட்டும் வகையில் 'நன்று, நன்று' என்று கூறியதோடு அமையாது அவன் தோள்களைத் தழுவியும் தன் மகிழ்ச்சியைச் சுக்கிரீவன் புலப்படுத்தினான்.*

*அமைச்சர் பலருள் சுக்கிரீவனுக்கேற்ற ஒப்பற்ற துணையாய் இருப்பவன் ஆதலின் அனுமனைத் "தன் துணைத் தனிமாருதி' என்றார். அனுமன் தோளினை 'எம் மலைக் குலமும் தாழ இசை சுமந்தெழுந்த தோளான்" (3766) என்றது காண்க. நன்று நன்று - அடுக்கு வியப்பைக் குறிப்பது. குன்றமும் - உயர்வு சிறப்பும்மை.*
*79*

## *மராமரப் படலம்*

*இராமபிரான் ஏழு மராமரங்களை ஓர் அம்பால் துளைத்த செய்தியைக் கூறுவதால் இது மராமரப்படலம் எனப் பெயர் பெற்றது.*

*சுக்கிரீவன் இராமனை அழைத்துச் சென்று ஏழு மராமரங்களுள் ஒன்றை அம்பொன்றால் எய்யுமாறு வேண்டினான். மராமரங்கள் அளக்கலாகாப் பருமையும், உயர்வும் கொண்டு விளங்கின. இராமன் மரங்களின் அருகில் சென்று, வில்லில் நாணேற்றி, அம்பு தொடுக்க, அஃது ஏழு மரங்களையும் துளைத்து இராமனிடம் திரும்பியது. சுக்கிரீவன் மகிழ்ந்து இராமனைப் போற்ற, வானர வீரர்கள் ஆடிப் பாடி மகிழ்ந்தனர்.*

*இராமனின் வில்லாற்றலை இப்படலத்தில் காணலாம்.*

*மராமரங்களுள் ஒன்றைஅம்பினால் எய்யுமாறு இராமனை வேண்டுதல்*

*கலித்துறை*

***3865. 'ஏகவேண்டும் இந் நெறி' என,***
**இனிது கொண்டு ஏகி,**
**'மாகம் நீண்டன குறுகிட**
**நிமிர்ந்தன மரங்கள்**
**ஆக ஐந்தினோடு இரண்டின் ஒன்று**
**உருவ, நின் அம்பு**
**போகவே, என்தன் மனத்து இடர்**
**போம்' எனப் புகன்றான்.**

**இந்நெறி ஏகவேண்டும் என** - *(சுக்கிரீவன்) 'இவ்வழியாகச் செல்ல வேண்டும்' என்று சொல்லி;* **இனிது கொண்டு ஏகி** - *(இராமலக்குவரை) இனிமையாக அழைத்துச் சென்று;* **நீண்டன மாகம்** - *'நீண்டதான ஆகாயமும்;* **குறுகிட நிமிர்ந்தன** - *குறுகித் தோன்றுமாறு உயர்ந்துள்ளனவாகிய;* **மரங்கள்** - *மராமரங்கள்;* **ஐந்தினோடு இரண்டின் ஆக** - *ஏழாக உள்ளனவற்றில்;* **ஒன்று உருவ** - *ஒன்றைத் துளைக்குமாறு;* **நின் அம்பு போகவே** - *உனது அம்பொன்று சென்ற அளவில்;* **என்தன் மனத்து** - *எனது மனத்திலுள்ள;* **இடர் போம்** - *துன்பம் போகும்;* **எனப்புகன்றான்** - *என்று சொன்னான்.*

*மராமரங்கள் ஏழனுள் ஒன்றை அம்பெய்து துளைத்தால் இராமன் வாலியின் மார்பையும் துளைத்து வெல்ல வல்லவன் என்ற நம்பிக்கையில் தன்மனத்துயர் நீங்குமெனச் சுக்கிரீவன் உரைத்தான். எனவே, இராமனது வலிமையைத் தெளிவாக அறிந்து கொள்ள இராமன் அம்பு தொடுத்து ஒரு மரத்தையேனும் துளைக்க வேண்டும் என அவன் உரைத்தான். மாகம் - ஆகாயம். நீண்டன மாகம் என்றது ஒருமை பன்மை மயக்கம். வாலியிடத்துத் தனக்குள்ள அச்சத்தால் சுக்கிரீவன் ஐயமுற்று வருந்தி இங்ஙனம் இராமனிடம் கேட்டான் எனக் கொள்க. 'மாகம் நீண்டன குறுகிட நிமிர்ந்தன மரங்கள்' என்றது உயர்வு நவிற்சி அணி.* *1*

***3866. மறு இலான் அது கூறலும்,***
***வானவர்க்கு இறைவன்,***
***முறுவல் செய்து, அவன்***
***முன்னிய முயற்சியை உன்னி,***
***எறுழ் வலித் தடந் தோள்களால்***
***சிலையை நாண் ஏற்றி,***
***அறிவினால் அளப்ப அரியவற்று***
***அருகு சென்று, அணைந்தான்.***

***மறுஇலான் -*** *(மனத்தில்) குற்றம் இல்லாதவனாம் சுக்கிரீவன்;* ***அது கூறலும் -*** *அவ்வார்த்தையைச் சொன்னதும்;* ***வானவர்க்கு இறைவன் -*** *தேவர்களுக்கெல்லாம் தலைவனாகிய இராமபிரான்;* ***அவன் முன்னிய முயற்சியை உன்னி -*** *சுக்கிரீவன் எண்ணிய காரியத்தை அறிந்து கொண்டு;* ***முறுவல் செய்து -*** *புன் முறுவல் செய்து;* ***எறுழ் வலித் தடந் தோள்களால் -*** *மிக்க வலிமையுடைய பெரிய கைகளால்;* ***சிலையை நாண் ஏற்றி -*** *வில்லை எடுத்து நாண் ஏற்றி;* ***அறிவினால் அளப்பு அரியவற்று -*** *அறிவினால் அளவிட்டு அறிய முடியாத அம்மரங்களின்;* ***அருகு சென்று -*** *அருகில் சென்று;* ***அணைந்தான் -*** *சேர்ந்தான்.*

*சுக்கிரீவன் தன் உள்ளத்தில் ஏற்பட்ட ஐயத்தை மறைக்காமல் வெளியிட்டமையால் 'மறுவிலான்' எனச் சிறப்பிக்கப்பட்டான். இராமன் தேவர்களுக்குத் தலைவனாகிய திருமாலின் அவதாரம் ஆதலின் 'வானவர்க்கு இறைவன்' என்றார். இராமனைத் 'தெய்வநாயகன்' (6994) என அங்கதனும், "தேவதேவனைத் தென்னிலங்கை எரியெழச் செற்றவில்லியை" (திருவாய்மொழி - 3-6-2) என நம்மாழ்வாரும் கூறியமை காண்க. இராமன் வலிமைக்கு மராமரம் துளைத்தல் மிக எளிய காரியமாதலின், சுக்கிரீவன் மனத்தில் அச்சத்தால் ஏற்பட்ட ஐயத்தை உய்த்துணர்ந்து இராமன் முறுவல் செய்தான். எறுழ் - வலிமை; எறுழ் வலி - ஒரு பொருட்பன்மொழி. அரியவற்று - 'அற்று' - சாரியை. மராமரங்களின் உயர்வும், பருமையும், பரப்பும் மக்கள் அறிவால் அளக்க முடியாதன ஆதலின் 'அறிவினால் அளப்பரியவற்று' என்றார். 2*

*மராமரங்கள் நின்ற காட்சி*

***3867. ஊழி பேரினும் பேர்வில;***
***உலகங்கள் உலைந்து***
***தாழும் காலத்தும், தாழ்வில;***
***தயங்கு பேர் இருள் சூழ்***
***ஆழி மா நிலம் தாங்கிய***
***அருங் குலக் கிரிகள்***
***ஏழும், ஆண்டுச் சென்று ஒரு***
***வழி நின்றென, இயைந்த;***

***ஊழி பேரினும் -*** *(அம் மராமரங்கள்) யுகங்கள் மாறினாலும்;* ***பேர்வு இல -*** *தம் நிலைமாறுதல் இல்லாதவை;* ***உலகங்கள் -*** *எல்லா உலகங்களும்;* ***உலைந்து தாழும் காலத்தும்-*** *அழிந்து போகும் காலத்திலும்;* ***தாழ்வு இல-*** *விழுந்து தாழ்வடைவன அல்ல;*

***தயங்கு பேர் இருள் சூழ் -*** *திகைத்தற்குக் காரணமான மிக்க இருளினால் சூழப்பெற்ற;* ***ஆழிமா நிலம் -*** *கடல் சூழ்ந்த பெரிய பூமியை;* ***தாங்கிய அருங் குலக் கிரிகள் ஏழும்-*** *தாங்குகின்ற அரிய குல மலைகள் ஏழும்;* ***ஆண்டுச் சென்று -*** *அவ்விடத்தில் வந்து;* ***ஒரு வழி நின்றென -*** *ஒரு சேர நின்றது போல;* ***இயைந்த -*** *அமைந்திருந்தன.*

*அழியாது நிலைத்து நிற்க வல்லன; பெருந்தோற்றமும் வன்மையும் கொண்டன என மராமரங்கள் ஏழின் சிறப்புகள் கூறப்பட்டன. முன்னிரண்டடிகள் உயர்வு நவிற்சி அணி பொருந்தியது. பற்பல இடங்களில் உள்ள ஏழு மலைகளும் ஒரிடத்தில் வந்து நின்றன என்று சொல்லத்தக்க வகையில் மரங்கள் விளங்கியதால் பெருங்கிரிகள் ஏழும் ஆண்டுச் சென்று ஒரு வழி நின்றென' என்றார். ஏழுமலைகளும் ஓரிடத்தில் நிற்றல் இல்லையாதலின் பின்னிரண்டடிகள் இல்பொருள் உவமையணி அமைந்தது. கிரிகள் ஏழு - கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், கந்தமாதநம் என்பன. மலைகள் பூமிக்கு மேலும் கீழும் பொருந்தித் தாங்குவதால், 'மாநிலம் தாங்கிய அருங்குலக்கிரிகள்' எனப்பட்டன. ஊழி பேரினும் தாழும் காலத்தும் - உம்மை உயர்வு சிறப்பு; ஏழும் - முற்றும்மை.* *3*

***3868. கலை கொண்டு ஓங்கிய***
***மதியமும், கதிரவன்தானும்,***
***'தலைகண்டு ஓடுதற்கு அருந்***
***தவம் தொடங்குறும் சாரல்***
***மலை கண்டோம்' என்பது***
***அல்லது, மலர்மிசை அயற்கும்,***
***இலை கண்டோம்' என, தெரிப்ப***
***அருந் தரத்தன ஏழும்;***

***ஏழும் -*** *அம்மராமரங்கள் ஏழும்;* ***கலை கொண்டு ஓங்கிய மதியமும் -*** *பதினாறு கலைகளையும் கொண்டு வளர்ந்த சந்திரனும்;* ***கதிரவன் தானும்-*** *சூரியனும்;* ***தலை கண்டு ஓடுதற்கு -*** *தன் உச்சியைக் கண்டு தாண்டிச் செல்வதற்கு;* ***அருந்தவம் தொடங்குறும் -*** *அரிய தவத்தைச் செய்யத் தொடங்கி;* ***மலை கண்டோம் -*** *மலைச்சாரலைப்*

*பார்த்தோம்;* ***என்பது அல்லது -*** *என்று சொல்வதே அல்லாமல்;* ***மலர்மிசை அயற்கும்*** *- தாமரை மலர் மேலிருக்கும் பிரமனுக்கும்;* ***இலை கண்டோம் -*** *இம்மரங்களின் இலைகளைக் கண்டுவிட்டோம்;* ***எனத் தெரிப்பு அரும் -*** *என்று சொல்லுதற்கரிய;* ***தரத்தன -*** *சிறப்புத் தன்மையை உடையன.*

*சந்திர சூரியர்கள் வானில் இம்மரங்களின் உச்சியைக் கடந்து செல்ல முடியாமல், அவ்வாறு கடந்து செல்ல அருந்தவம் செய்வர். அம்மரங்களைக் கண்ட நான்முகனும் 'ஒரு மலைச்சாரலைக் கண்டேன்' என்று சொல்வதல்லது 'அம் மரங்களின் உச்சியில் உள்ள இலைகளைப் பார்த்தேன்' என்று சொல்ல முடியாத உயரம் உடையன அம்மரங்கள் என்பது பொருளாகும். அதனால் சூரிய, சந்திரர் தம் இயக்கம் தடைப்பட்டு அம்மரங்களின் அடிப்பகுதியிடைத் தங்கி விட, அதைக் காணும் நான்முகன் அப்பகுதியைச் சூரிய, சந்திரர் தவம்புரியத் தங்குமிடம் என்று கருதினான். இச்செய்யுள் உயர்வு நவிற்சி அணியின் பாற்படும்.* *4*

***3869. ஒக்க நாள் எலாம் உழல்வன,***
***உலைவு இல ஆக,***
***மிக்கது ஓர் பொருள் உளது என***
***வேறு கண்டிலமால் -***
***திக்கும், வானமும், செறிந்த அத்***
***தரு நிழல் சீதம்***
***புக்கு நீங்கலின், தளர்வு இல,***
***இரவி தேர்ப் புரவி;***

**திக்கும் வானமும் -** *எல்லாத் திசைகளிலும் வானத்திலும்;* **செறிந்த அத்தரு -** *நெருங்கிப் பரந்த அம்மரங்களின்;* **சீத நிழல்-** *குளிர்ந்த நிழலை;* **புக்கு நீங்கலின் -** *அடைந்து செல்வதால்;* **இரவி தேர்ப்புரவி** *- சூரியனது தேரில் கட்டப் பெற்ற குதிரைகள்;* **தளர்வு இல -** *தளர்ச்சியில்லாதனவாம்;* **ஒக்க நாள் எலாம் -** *நாள் முழுவதும் ஒரே விதமாக;* **உழல்வன -** *ஓடிக் கொண்டிருப்பன;* **உலைவு இல ஆக** *- (எனினும்) வருத்தம் இல்லாதனவாய் இருப்பதற்கு;* **மிக்கது ஓர் பொருள்** *- மேம்பட்டதொரு காரணம்;* **உளது என-** *உண்டு என்று;* **வேறு கண்டிலம் -** *வேறு கண்டோமில்லை.*

*சூரியனது தேர்க்குதிரைகள் நாள் முழுவதும் ஓடுவனவாய் இருந்தும் தளர்வு அடையாமைக்குக் காரணம், ஒவ்வொரு நாளும் இளைப்பு நீங்க அம்மரங்களின் குளிர்நிழலில் தங்கிச் செல்வதே காரணமாகும் என்று கூறியவாறு. இச்செய்யுள் ஏதுத்தற்குறிப்பேற்ற அணி. இதனால் அம்மரங்களின் இலையடர்ந்த உச்சிக் கிளைகள் சூரிய மண்டலத்திற்கும் மேலே உயர்ந்திருந்தன என்பது புலனாகும். முந்திய செய்யுளில் கதிரவன், மரங்களின் நுனி கண்டோட இயலாமை கூறி, இச் செய்யுளில் அவன் அவற்றின் குளிர்ந்த நிழலுள் புகுந்தோடியது கூறப்பெற்றது. புரவி - பால்பகா அஃறிணைப் பெயர்.* *5*

***3870. நீடு நாள்களும், கோள்களும்,***
***என்ன, மேல் நிமிர்ந்து***
***மாடு தோற்றுவ மலர்***
***எனப் பொலிகின்ற வளத்த;***
***ஓடு மாச் சுடர் வெண்***
***மதிக்கு, உட்கறுப்பு, உயர்ந்த***
***கோடு தேய்த்தலின், களங்கம் உற்று***
***ஆம் எனும் குறிய;***

**நீடு நாள்களும் -** *(அவ்வேழு மரங்களும்) நெடுங்காலமாக உள்ள நட்சத்திரங்களும்;* **கோள்களும் -** *கிரகங்களும்;* **என்ன -** *என்று;* **மேல் நிமிர்ந்து -** *விண்ணில் உயர்ந்து;* **மாடு தோற்றுவ -** *பக்கங்களில் விளங்குவன;* **மலர் என -** *(இம்மரங்களின்) மலர்கள் என்னும்படி;* **பொலிகின்ற வளத்த -** *விளங்குகின்ற செழுமையை உடையன;* **ஓடு மாச்சுடர் வெண் மதிக்கு -** *(வானில்) செல்லுகின்ற மிக்க ஒளியை உடைய வெண்மதிக்கு;* **உட்கறுப்பு -** *அதனுள் அமைந்துள்ள கறை;* **உயர்ந்த கோடு தேய்த்தலின்** *- (இம்மரங்களின்) உயர்ந்த கிளைகள் தேய்த்ததால்;* **களங்கம் உற்று ஆம் -** *களங்கம் என்று ஏற்பட்டது ஆகும்;* **எனும் குறிய -** *என்று குறிக்கத்தக்கவை.*

*மரங்களின் கிளைகள் அருகில் காணப்பட்ட நட்சத்திரங்களும் கிரகங்களும் மரங்களில் மலர்ந்த மலர்கள் போலக் காணப்பட்டன. இம்மரங்களின் கிளைகள் சந்திரனை உராய்ந்து தேய்த்ததால் ஏற்பட்ட தழும்புகளே களங்கம் என்று சொல்லப்படுகின்றன என்று மரங்களின் வளர்ச்சி கூறப்பட்டுள்ளது. சந்திரனின் மறு, மரக்கிளைகளின் உராய்வால் ஏற்பட்ட தழும்பு எனக் கூறியதால் ஏதுத்தற்குறிப்பேற்ற அணியாகும். கோள்கள் - சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், பிரகஸ்பதி, சுக்கிரன், சனி, ராகு, கேது என ஒன்பதாம்.* 6

***3871. தீது அறும் பெருஞ்***
***சாகைகள் தழைக்கின்ற செயலால்***
***வேதம் என்னவும் தகுவன;***
***விசும்பினும் உயர்ந்த***
***ஆதி அண்டம் முன்பு அளித்தவன்***
***உலகின், அங்கு அவன் ஊர்***
***ஓதிமம், தனி பெடையொடும்***
***புடை இருந்து உறைவ.***

***தீது அறம் -*** *(அம்மரங்கள்) அழிதல் இல்லாத;* ***பெரும் சாகைகள் -*** *பெரிய கிளைகள்;* ***தழைக்கின்ற செயலால் -*** *செழித்து வளர்கின்ற செயலால்;* ***வேதம் என்னவும் -*** *வேதங்கள் என்று சொல்லவும்;* ***தகுவன -*** *தகுதியுடையன;* ***விசும்பினும் உயர்ந்த -*** *(அவை) வான மண்டலத்தினும் உயர்ந்து விளங்குவன;* ***ஆதி அண்டம் முன்பு அளித்த***

***வன் -*** *பழமையான அண்டங்களை முன்னே படைத்தளித்த பிரமனுடைய;* ***உலகின் அங்கு -*** *சத்தியலோகமாகிய அவ்விடத்தில்;* ***அவன் ஊர் -*** *அவன் ஏறிச் செல்கின்ற;* ***ஓதிமம் -*** *அன்னப்பறவை;* ***தனிப் பெடையோடும்*** *- தனது ஒப்பற்ற பெடை அன்னத்தோடு;* ***புடை இருந்து உறைவ*** *- அம்மரங்களின் ஒரு பக்கத்தே இருந்து வாழ இடமாவன.*

*வேதங்களின் சாகைகள் அழிவற்றனவாயும், அளவற்றனவாயும் இருத்தல் போல மரங்களின் கிளைகளும் அழிவற்றும், அளவற்றும் விளங்குகின்றன என்றார். சாகை என்னும் சொல்லிற்கு வேதங்களின் கிளைப் பகுதி, மரக்கிளை, என்றும் பொருள்கள் உள்ளன. ஆதலால் 'சாகைகள் தழைக்கின்ற செயலால் வேதமென்னத் தகுவன' என்றார். செம்மொழிச் சிலேடை அணி பொருந்தியது. விசும்பின் - இன் எல்லைப் பொருளது. பிரமனுக்குரிய அன்னப் பறவை தங்கிய இடம் என்றதால் அம்மரங்கள் பிரமலோகத்திற்கும் மேல் உயர்ந்து வளர்ந்திருந்தன என்பதாம். இஃது உயர்வு நவிற்சி அணி. 7*

***3872. நாற்றம் மல்கு போது, அடை,***
***கனி, காய், முதல் நானா***
***வீற்று, மண்தலத்து யாவையும்***
***வீழ்கில, யாண்டும்***
***காற்று அலம்பினும்; கலி***
***நெடு வானிடைக் கலந்த***

***ஆற்றின் வீழ்ந்து போய், அலை***
***கடல் பாய்தரும் இயல்ப;***

***காற்று அலம்பினும் -*** *காற்று அசைத்தாலும்;* ***நாற்றம் மல்கு போது*** *- நறுமணம் மிக்க மலர்களும்;* ***அடை கனி காய் முதல் -*** *இலைகளும், பழங்களும், காய்களும் முதலிய;* ***நானா வீற்று யாவையும் -*** *பலவகைப்பட்ட அனைத்தும்;* ***மண் தலத்து -*** *மண்ணுலகில்;* ***யாண்டும் வீழ்கில -*** *எவ்விடத்திலும் விழாதனவாய்;* ***கலி நெடு வானிடை-*** *ஆரவாரத்தை உடைய பெரிய வானுலகத்தில்;* ***கலந்த -*** *பொருந்திய;* ***ஆற்றின் வீழ்ந்து போய் -*** *ஆகாய கங்கையில் விழுந்து (அதன் வழியாகச்) சன்று;* ***அலைகடல் பாய்தரும் -*** *அலைகளை உடைய கடலில் சேர்கின்ற;* ***இயல்ப-*** *தன்மையை உடையன.*

*இதனால் அம்மரங்கள் ஆகாய கங்கையினும் உயர்ந்துள்ளன என்றவாறு; உயர்வு நவிற்சி அணி. நாற்றம் - இங்கு நறுமணம்; ஆறு - ஆகாய கங்கை. 'நறுமணம் மிக்க மலர், இலை, கனி, காய் முதலிய பல்வகைப்பட்ட அனைத்தும் எக்காலத்தும் வெவ்வேறு மண்டலங்களில் வீழ்வன அல்ல; காற்றடித்து வீழ்ந்தாலும் ஆரவாரமுடைய ஆகாயத்தில் பொருந்திய ஆகாய கங்கையில் விழுந்து கடலைச் சேர்வன' என்றும் இப்பாடலுக்கு விளக்கம்கூறுவர். 8*

***3873. அடியினால் உலகு அளந்தவன்***
***அண்டத்துக்கு அப்பால்***
***முடியின்மேல் சென்ற முடியன***
***ஆதலின், முடியா***
***நெடிய மால் எனும்***
***நிலையன; நீரிடைக் கிடந்த***
***படியின்மேல் நின்ற மேரு***
***மால் வரையினும், பரிய;***

***அடியினால் -*** *தன் திருவடியினால்;* ***உலகு அளந்தவன் -*** *உலகங் களை அளந்தவனான திருமாலின்;* ***அண்டத்துக்கு அப்பால் -*** *அண் டத்திற்கு அப்பால் உள்ள;* ***முடியின் மேல் சென்ற -*** *உச்சி முகட்டின் மேலாக வளர்ந்து சென்ற;* ***முடியன ஆதலின் -*** *உச்சியினை உடையன ஆதலால்;* ***முடியா -*** *அளவிட முடியாத;* ***நெடிய மால் எனும் -*** *(விக் கிரமாவதாரங் கொண்ட) நெடிய திருமால் என்று சொல்லத் தக்க;* ***நிலையன-*** *நிலைமையை உடையன.* ***நீர் இடைக்கிடந்த -*** *கடல் நீரில் கிடந்த -* ***படியின் மேல் நின்ற-*** *பூமியின் நடுவில் நிற்கின்ற;* ***மேரு மால் வரையினும் -*** *பெரிய மேருமலையைக் காட்டிலும்;* ***பரிய -*** *பருமையை உடையன.*

*மரங்கள் திருமாலுக்குரிய உலகினையும் கடந்து வளர்ந்து இருந்தமையால், அவை திரிவிக்கிரமனாய் வளர்ந்த திருமாலை ஒத்து விளங்கின. திரிவிக்கிரமனின் பெருமையை 'படிவட்டத் தாமரை பண்டுலகம் நீரேற்று, அடிவட்டத்தால் அளப்ப நீண்ட - முடிவட்டம், ஆகாயம் ஊடறுத்து அண்டம் போய் நீண்டதே, மாகாயமாய் நின்ற மாற்கு' என்று பாடுவர் பேயாழ்வார் (மூன்றாந் திருவந்தாதி - 13) நீரிடைக் கிடந்தபடி - நீரிடத்தில் தோன்றிய பூமி என்பதன் பொருள். பூமியின் நடுவில் பொன்மயமாய் மேருமலை நிற்பதாகவும் சூரியன் உதயமும் மறைவும்*

*அம்மலையால் ஏற்படுகின்றன என்றும் பௌராணிகர் உரைப்பர். அத்தகைய மேருமலையினும் பரிய எனக் கூறி மரங்களின் பருமை உணர்த்தப்பட்டது. 9*

***3874. வள்ளல் இந்திரன் மைந்தற்கும்,***
***தம்பிக்கும் வயிர்த்த***
***உள்ளமே என, ஒன்றின் ஒன்று***
***உள் வயிர்ப்பு உடைய;***
***தெள்ளு நீரிடைக் கிடந்த***
***பார் சுமக்கின்ற சேடன்***
***வெள்ளி வெண் படம் குடைந்து***
***கீழ் போகிய வேர;***

***வள்ளல் இந்திரன் மைந்தற்கும்-*** *வள்ளலாகிய இந்திரன் மைந்தனான வாலிக்கும்;* ***தம்பிக்கும் -*** *அவன் தம்பி சுக்கிரீவனுக்கும்;* ***வயிர்த்த உள்ளமே என -*** *பகைமை முற்றிய மனம் போல;* ***ஒன்றின் ஒன்று -*** *அம்மரங்கள் ஒன்றைவிட மற்றொன்று;* ***உள் வயிர்ப்பு உடைய -*** *உள்ளே வயிரம் பாய்ந்தவை;* ***தெள்ளு நீரிடைக் கிடந்த -*** *தெளிவான நீரையுடைய கடலினிடையே தங்கிய;* ***பார் சுமக்கின்ற -*** *பூமி*

*யைச் சுமக்கின்ற;* ***சேடன் -*** *ஆதி சேடன் என்னும் பாம்பின்;* ***வெள்ளி வெண் படம் -*** *வெள்ளி போன்ற வெண்மையான படத்தை;* ***குடைந்து -*** *துளைத்துக் கொண்டு;* ***கீழ் போகிய -*** *கீழே ஊன்றிச் சென்ற;* ***வேர -*** *வேர்களை உடையன.*

*பாற்கடலைக் கடைந்து அமுதைத் தான் கொள்ளாமல் தேவர்களுக்கு அளித்தவன் ஆதலின் 'வள்ளல்' என, சிறப்பிக்கப்பட்டான். இருபொருள்பட 'வயிர்ப்பு' என்னும் சொல்லைக் கையாண்டு, 'வாலி சுக்கிரீவர் மனத்தில் வயிரம் வளர்த்துக் கொண்டது போல மரங்கள் உள்ளே வயிரத்தன்மை பெற்றன எனக் கூறியதால் இது செம்மொழிச் சிலேடையுடன் கூடிய உவமை அணியாகும். சேடன் - யாவும் அழிந்த போதும் தான் அழியாது எஞ்சி நிற்பவன், காரணப்பெயர், மரங்களை வருணித்த கவிஞர், தாம் சொல்லும் கதைப் பகுதியையேஉவமையாக்கினார். 10*

***3875. சென்று திக்கினை அளந்தன,***
***பணைகளின்; தேவர்,***
***'என்றும் நிற்கும்' என்று இசைப்பன;***
***இரு சுடர் திரியும்***
***குன்றினுக்கு உயர்ந்து அகன்றன;***
***ஒன்றினும் குறுகா;***
***ஒன்றினுக்கு ஒன்றின் இடை,***
***நெடிது யோசனை உடைய.***

***பணைகளின் -*** *கிளைகளால்;* ***சென்று -*** *(அம்மரங்கள்) வளர்ந்து போய்;* ***திக்கினை அளந்தன -*** *எல்லாத் திசைகளையும் அளந்தன;* ***என்றும் நிற்கும் என்று -*** *எக்காலத்தும் அழியாமல் நிற்பவை என்று;* ***தேவர் -*** *தேவர்களால்;* ***இசைப்பன -*** *சொல்லத்தக்கன;* ***இருசுடர் -*** *சூரிய சந்திரர்;* ***திரியும் குன்றினுக்கு*** *- வலம் வரும் மேருமலையை விட;*

***உயர்ந்து, அகன்றன -*** *உயர்ந்தும், அகன்றும் விளங்கின;* ***ஒன்றினும் குறுகா -*** *ஒரு வகையிலும் குறைவு படாதன;* ***ஒன்றினுக்கு ஒன்றின் இடை -*** *ஒரு மரத்திற்கும் மற்றொரு மரத்திற்கும் இடையிலே;* ***நெடிது யோசனை உடைய*** *- பல யோசனை தூரம் இடைவெளி உள்ளவை.*

*உயர்ந்தும் பரந்தும் வளர்ந்த மரங்கள் நெருக்கமாக இன்றி இடைவெளி விட்டு வளர்ந்திருக்கின்றன. திக்கினை அளந்தன என்பதற்குத் திசைகளின் எல்லை அளவும் பரந்துள்ளன என்பது பொருள். யோசனை ஒரெல்லை அளவைக் குறிக்கும். நான்கு காததூரம் என்றுகூறுவர். 11*

*இராமன் நாண் எறிந்து, அம்பு செலுத்துதல்*

***3876. ஆய மா மரம் அனைத்தையும்***
***நோக்கி நின்று, அமலன்,***
***தூய வார் கணை துரப்பது***
***ஓர் ஆதரம் தோன்ற,***
***சேய வானமும், திசைகளும்,***
***செவிடு உற, தேவர்க்கு***
***ஏய்வு இலாதது ஓர் பயம்***
***வர, சிலையின் நாண் எறிந்தான்.***

***அமலன்-*** *குற்றமற்றவனாகிய இராமன்;* ***ஆய மாமரம் அனைத்தையும்-*** *அத்தன்மையனவான பெரிய மராமரங்கள் யாவற்றையும்;* ***நோக்கி நின்று -*** *பார்த்து நின்று;* ***தூய வார் கணை -*** *தூய்மையான நீண்ட தன் அம்பை;* ***துரப்பது -*** *செலுத்துதற்கு ஏற்ற;* ***ஓர் ஆதாரம் தோன்ற*** *- ஒரு விருப்பம் உண்டாக;* ***சேய வானமும் திசைகளும் -*** *நெடுந்தொலைவில் உள்ள வானத்திலும் எல்லாத் திசைகளிலும் உள்ள உயிர்கள்;* ***செவிடு உற -*** *செவிடு படவும்;* ***தேவர்க்கு -*** *தேவர்களுக்கு;* ***ஏய்வு இலாதது ஓர் -*** *(இதுகாறும்) ஏற்படாததொரு;* ***பயம் வர -*** *அச்சம் உண்டாகுமாறும்;* ***சிலையின் -*** *வில்லில் பூட்டிய;* ***நாண் எறிந்தான் -*** *நாணைத் தெறித்து ஓசையை எழுப்பினான்.*

*இங்கு நாணின் ஒலிச் சிறப்புக் கூறப் பெற்றது. சுக்கிரீவனுக்குத் தன் வலிமையைக் காட்ட, ஏழு மரங்களையும் ஒரே அம்பால் ஒரு சேரத் துளைக்க விரும்பி வானமும் திசைகளும் செவிடுபட, தேவர்கள் நடுங்க இராமபிரான் நாணொலி எழுப்பினான் என்பதாம். தீயவர்களை அழித்தலும், குறித்த இலக்குத் தப்பாமையும் கணைக்குத் தூய்மையாகும். தேவர்கள் முன் கேட்டிராத நாணொலி யாதலின் அச்சம் எய்துவர் என்பதால் 'ஏய்வு இலாததோர் பயம் வர' என்றார். தூய, சேய - குறிப்புப் பெயரெச்சங்கள், வானம், திசை - இடவாகு பெயர். 12*

***3877. ஒக்க நின்றது, எவ் உலகமும்***
***அங்கு அங்கே ஓசை;***
***பக்கம் நின்றவர்க்கு உற்றது***
***பகர்வது எப்படியோ?***
***திக்கயங்களும் மயங்கின;***
***திசைகளும் திகைத்த;***

***புக்கு, அயன் பதி சலிப்புற***
***ஒலித்தது, அப் பொரு வில்.***

***ஓசை -*** *அந்நாண் ஒலியானது;* ***எவ் உலகமும் -*** *எல்லா உலகங்களிலும்;* ***அங்கு அங்கே -*** *அவ்வவ் விடங்களிலே;* ***ஒக்க நின்றது -*** *ஒரே தன்மைத்தாய்ப் போய் பரவி நின்றது;* ***பக்கம் நின்றவர்க்கு -*** *(என்றால்) அருகில் நின்றவர்களுக்கு;* ***உற்றது பகர்வது -*** *ஏற்பட்ட நிலையைச் சொல்வது;* ***எப்படியோ -*** *எவ்வாறோ?* ***திக்கயங்களும் மயங்கின -*** *(அந்நாண் ஒலியால்) எட்டு திக்கு யானைகளும் மயக்கம் உற்றன;* ***திசைகளும் திகைத்த -*** *எல்லாத் திசைகளும் கலக்கம் அடைந்தன;* ***அப்பொரு வில் -*** *பொருதற்குரிய அந்த வில்லின் நாணொலி;* ***அயன்பதி சலிப்புற -*** *பிரமலோகம் அதிர்ச்சியடையும்படி;* ***புக்கு ஒலித்தது -*** *புகுந்து ஒலித்தது.*

*இதனால் நாணொலியின் மிகுதியைத் தெரிவித்தவாறு. சேய்மையில் உள்ள வெவ்வேறு உலகங்களில் ஒலித்த நாணொலி அவ்வவ்விடத்தில் தோன்றியது போலப் பேரோசை பெற்றிருந்தது என்றால், அருகில் நின்றவர்களுக்குக் கேட்ட ஓசையின் மிகுதி சொல்லுந்தரமன்று. மேலும் திக்கயங்களும் திசைகளும் கலங்க, அயன்பதியும் சலிப்புற ஒலித்தது என்றதால் ஒலியின் மிகுதியை அறியலாம். எப்படியோ - ஓகாரம் எதிர்மறை; எவ்வுலகமும் - உம்மை முற்று; திக்கயங்கள் - ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சார்வ பௌமம், சுப்ரதீகம் என்பன. நாண் ஒலியின் மிகுதியைக் குறித்ததால் தொடர்பு உயர்வு நவிற்சிஅணி. 13*

***3878. அரிந்தமன் சிலை நாண்***
***நெடிது ஆர்த்தலும், அமரர்***
***இரிந்து நீங்கினர், கற்பத்தின்***
***இறுதி என்று அயிர்த்தார்;***
***பரிந்த தம்பியே பாங்கு***
***நின்றான்; மற்றைப் பல்லோர்***
***புரிந்த தன்மையை உரைசெயின்,***
***பழி, அவர்ப் புணரும்.***

***அரிந்த மன் -*** *பாவத்தைப் போக்குவோனாகிய இராமனுடைய;* ***சிலை நாண் -*** *வில்லின் நாண்;* ***நெடிது ஆர்த்தலும் -*** *மிகுதியால் ஆரவாரிக்கவும்;* ***அமரர் -*** *தேவர்கள்;* ***கற்பகத்தின் இறுதி என்று -*** *கல்ப காலத்தின் முடிவு இப்பொழுது என்று;* ***அயிர்த்தார் -*** *ஐயம் கொண்ட வர்களாய்;* ***இரிந்து நீங்கினர் -*** *தத்தம் இடங்களிலிருந்து நிலை கெட்டு நீங்கினர்;* ***பரிந்த தம்பியே*** *- இராமன் மாட்டு அன்பு கொண்ட தம்பி இலக்குவன் மட்டுமே;* ***பாங்கு நின்றான் -*** *இராமன் அருகே நின்றவன் ஆனான்;* ***மற்றைப் பல்லோர் -*** *மற்றுமுள்ள சுக்கிரீவன் அனுமன் முதலிய பலரும்;* ***புரிந்த தன்மையை*** *- அடைந்த நிலையை;* ***உரை செயின் -*** *சொல்லத் தொடங்கினால்;* ***பழி அவர்ப் புணரும் -*** *அவர்களுக்குப் பழிவந்து சேரும்.*

*இராமன் வில்லின் நாணொலி தேவர்களையும் அச்சுறுத்தியதால், அவர்கள் யுகமுடிவு வந்துற்றதோ என ஐயுற்று அஞ்சி ஓடினர். வானரர்களோ ஒலியைக் கேட்ட மாத்திரத்தில் நிலை குலைந்து அஞ்சிய நிலை சொல்ல முடியாத அளவில் இருந்தது. எள்ளற்குரிய நிலைகளை அவர்கள் அடைந்தமையால் அவற்றைக் கவிஞர் சொல்லாது*

*விடுத்தார். இராமன் தொடுக்கும் வில்லின் நாண் ஒலியைப் பன்முறை கேட்டிருப்பதாலும் வீரமுடையவன் ஆதலினாலும் இலக்குவன் அஞ்சாது இராமன் அருகே நின்றனன் என்க. நாண் ஒலியின் சிறப்பை 'ஆண்தகை நாண் இனிது ஏற்றினான், நடுங்கிற்று உம்பரே' (725), "சிலை கொள் நாண் நெடிய கோதை ஒலி ஏறு, திரை நீர், மலைகள், நீடுதலம், நாகர்பிலம், வானம் முதல் ஆம் உலகம் ஏழும் உரும் ஏறு என ஒலித்து உறறவே" (2539) என்ற அடிகளும் உணர்த்தும். அரிந்தமன் - பகைவர்களை அடக்குபவன் என்றும் பொருள் கொள்வர். தம்பியே - ஏகாரம்பிரிநிலை.* *14*

***3879. 'எய்தல் காண்டும்கொல், இன்னம்?' என்று,***
***அரிதின் வந்து எய்தி,***
***பொய் இல் மாருதி***
***முதலினோர் புகழ்வுறும் பொழுதில்,***
***மொய் கொள் வார் சிலை***
***நாணினை முறை உற வாங்கி,***
***வெய்ய வாளியை, ஆளுடை***
***வில்லியும், விட்டான்.***

***பொய் இல் மாருதி முதலினோர் -*** *பொய்மையில்லாத அனுமன் முதலானவர்கள்;* ***இன்னம் -*** *'இன்னமும்;* ***எய்தல் காண்டும் கொல் -*** *அம்பு எய்தலைக் காணுதல் வேண்டும் போலும்';* ***என்று -*** *என்று சொல்லிக் கொண்டு;* ***அரிதின் வந்து எய்தி -*** *அரிதாக வந்து இராமன் பால் சேர்ந்து;* ***புகழ்வுறும் பொழுதில் -*** *இராமனின் வில்லாற்றலைப் புகழ்ந்து கொண்டிருக்கையில்;* ***மொய் கொள் -*** *வலிமையைக் கொண்ட;* ***வார் சிலை நாணினை -*** *நீண்ட வில்லின் நாணினை;* ***முறை உற வாங்கி -*** *முறைப்படி நன்றாக இழுத்து;* ***வெய்ய வாளியை -*** *கொடிய அம்பை;* ***ஆளுடை வில்லியும் -*** *எல்லா உயிர்களையும் அடிமையாகக் கொண்ட வில்லாற்றல் மிக்க இராமனும்;* ***விட்டான் -*** *தொடுத்தான்.*

*மற்றவர்கள் நாணொலி கேட்டு நடுங்கிக் கலங்க, அனுமன் முதலிய ஒரு சில வீரர்கள் ஒருவாறு தேறி அரிதின் முயன்று இராமன் பக்கம் வந்தனர் என்பதால் 'அரிதின் வந்து எய்தி' என்றார். அனுமன் உண்மை தவறாதவன் என்பதால் 'பொய்யில் மாருதி' என்றார் 'பொய்யிலாதவன்'. (3853) என்றமையும் 'மெய்ம்மை பூண்டான்' (4801) என்றமையும் காண்க. ஆளுடை வில்லி என்று இப்பாடலில் இராமனைக் குறிப்பிடும் கம்பர் 'என்னை ஆளுடை நாயகன்" "ஆண்டநாயகன்" (5207, 5778) என்று இராமனைக் குறிப்பிடல் காண்க.* *15*

***3880. ஏழு மாமரம் உருவி, கீழ்***
***உலகம் என்று இசைக்கும்***
***ஏழும் ஊடு புக்கு உருவி,***
***பின் உடன் அடுத்து இயன்ற***
***ஏழ் இலாமையான் மீண்டது,***
***அவ் இராகவன் பகழி;***

***ஏழு கண்டபின், உருவுமால்;***
***ஒழிவது அன்று, இன்னும்.***

***அவ் இராகவன் பகழி-*** *(அவ்வாறு தொடுக்கப்பட்ட) அந்த இராமனின் அம்பு;* ***ஏழு மாமரம் உருவி -*** *ஏழு பெரிய மராமரங்களைத் துளைத்துச் சென்று;* ***கீழ் உலகம் என்று இசைக்கும் -*** *கீழ் உலகம் என்று சொல்லப்படுகின்ற;* ***ஏழும் ஊடு புக்கு உருவி -*** *ஏழையும்*

*நடுவே துளைத்துச் சென்று;* ***பின் -*** *பின்பு;* ***உடன் அடுத்து இயன்ற -*** *அவற்றைத் தொடர்ந்து பொருந்தியுள்ள;* ***ஏழ் இலாமையால் -*** *ஏழு என்னும் தொகை கொண்ட பொருள் இல்லாமையால்;* ***மீண்டது -*** *(அந்த அம்பு) திரும்பி வந்து விட்டது.* ***இன்னும் -*** *இன்னமும்;* ***ஏழு கண்டபின் -*** *ஏழென்னும் தொகையை உடைய பொருளைக் காணுமாயின்;* ***உருவும் -*** *துளைத்து விடும்;* ***ஒழிவது அன்று*** *- துளைக்காமல் விடுவதில்லை.*

*இராமன் தொடுத்த அம்பு ஏழு மராமரங்களையும் துளைத்து, கீழ் உலகங்கள் ஏழையும் துளைத்துச் சென்றமையால் ஏழென்னும் எண்ணிக்கை கொண்ட பொருள்களையெல்லாம் அவன் அம்பு துளைக்கும் என்பது தெளிவாகிறது. கீழ் உலகங்கட்கு அப்பால் ஏழென்னும் எண்ணமைந்த பொருள்கள் இல்லாமையால் அம்பு திரும்பி வந்தது என்று காரணத்தைக் கற்பித்துக் கூறியதால் 'ஏதுத்தற்குறிப்பேற்ற அணியாம்'. மேலும் ஏழு என்னும் எண்ணிக்கைக்கு உரியது எதையேனும் கண்டால் இராமன் கணை ஊடுருவாது விடாது என்றது ஆன்மாக்களின் ஏழு பிறப்பைக் குறித்ததாகலாம். அவனைச் சரணடையும் பாகவதர்களின் ஏழு பிறப்பை நீக்கும் திறனுடையது பெருமான் கணை. இராமபிரான் கணையால் தாக்குண்டவர்கள் வீடு பேறடைந்த குறிப்புடையது இராம காதை. கீழுலகங்கள் ஏழாவன; அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம் என்பன. ஏழ் இலாமையால், ஏழு கண்டபின் என்பதில் வரும் ஏழு - ஆகுபெயர். கண்ட பின் - பின் ஈற்று எதிர்கால வினையெச்சம்; இராமன் அம்பு மராமரங்களைத் துளைத்த செய்தியைப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார், 'மாதவரும்பர் பெருமாள் அரங்கர் வலியுணரா தாதவன் மைந்தன் அயிர்த்த அந்நாளிலக் காயநெடும் பாதவ மேழும் உடனே நெடுங்கணை பட்டுருவப் பூதல மேழும் ஏழு பாதாலங்களும் புண்பட்டவே' (திருவரங்கத்து மாலை - 41) என்று பாடியுள்ளார். இராமன் மராமரங்களின் மீது தொடுத்த அம்பு ஸப்த ஜாதி என்பர். இராமன் அம்பின் வேகமும் குறி தவறாமையும் ஈண்டுப் புலப்படுகின்றன. சுக்கிரீவன் குறித்தது ஒரு மரம்; இராகவன் கணை துளைத்தது ஏழு மரம்.*
*16*

***3881. ஏழு வேலையும், உலகம்***
***மேல் உயர்ந்தன ஏழும்,***
***ஏழு குன்றமும், இருடிகள்***
***எழுவரும், புரவி***
***ஏழும், மங்கையர் எழுவரும்,***
***நடுங்கினர் என்ப -***
***'ஏழு பெற்றதோ இக் கணைக்கு***
***இலக்கம்?' என்று எண்ணி,***

***ஏழு வேலையும்-*** *ஏழு கடல்களும்;* ***உயர்ந்தன மேல் உலகம் ஏழும்-*** *மேலே உயர்ந்துள்ளனவான உலகங்கள் ஏழும்;* ***ஏழு குன்றமும் -*** *ஏழு குல மலைகளும்;* ***இருடிகள் எழுவரும்*** *- ஏழு முனிவர்களும்;* ***புரவி ஏழும் -*** *சூரியன் தேரை இழுத்துச் செல்லும் ஏழு குதிரைகளும்;* ***மங்கையர் எழுவரும்-*** *ஏழு கன்னியர்களும்;* ***இக்கணைக்கு இலக்கம் -*** *இந்த அம்பிற்குக் குறி;* ***ஏழு பெற்றதோ -*** *ஏழு என்னும்*

*தொகைப் பொருள் அனைத்துமோ?* ***என்று எண்ணி -*** *என்று நினைத்து;* ***நடுங்கினர் -*** *அஞ்சி நடுங்கினர்.*

*ஏழு வேலை : உவர்நீர், கருப்பஞ்சாறு, மது, நெய், தயிர், பால், நன்னீர் இவற்றை உடைய கடல்கள்; மேல் ஏழு உலகம் : பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் ஐநலோகம், மஹாலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்பன; ஏழு குன்றம் : கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஹேமகூடம், கந்தமாதனம் என்பன. இருடிகள் எழுவர் - அத்திரி, பிருகு, குத்ஸவர், வசிட்டர், கௌதமர், காசியபர், ஆங்கிரஸர் எனப்படுவோர்; புரவி ஏழு - காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதி என்னும் பேத சந்தசுகள். மங்கையர் ஏழுவர் : பிராஹ்மி, மாகேச்வரி, கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, சாமுண்டி எனப்படுபவர். இப்பாடலில் அஃறிணையும் உயர்திணையும் கலந்து எண்ணப்பட்டு உயர்திணையின் சிறப்பு நோக்கி உயர்திணை முடிபு வந்தது. இராமனின் அன்பின் திறத்தை 'அலை உருவ. . . மண் உருவிற்று ஒரு வாரி' (662) என்ற பாடலும் உணர்த்தும். இராமன் மராமரம் ஏழினையும் துளைத்த செய்தியை ''மராமரம் ஏழும் எய்த வாங்குவில் தடக்கை, வல்வில், இராமனை வெல்ல வல்லவன் என்ப திசையலால் கண்டதில்லை (சீவக. 1643) என்று திருத்தக்கதேவர் பாராட்டுவர். இவ்வாறு ஒரே அம்பால் பலவற்றைத் தாக்கும் வில் தொழிலை 'வல்வில் வேட்டம்' என்பர். 'வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி, பேழ்வாய் உழுவையைப் பெரும் பிறிது உறீஇப், புழற்றலைப் புகர்க்கலை உருட்டி உரறலைக், கேழற் பன்றி வீழ அயலது, ஆழற் புற்றத்து உடும்பின் செற்றும், வல்வில் வேட்டம் வலம்படுத்திருந்தோன்' (புறம் - 152) என்ற அடிகள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன.*

*இப்பாடலில் ஏழு என்னும் எண்ணால் தொகுதியாய் உள்ள பொருள்களை ஒன்று கூட்டிக் கூறியது ஒப்புமைக் கூட்ட அணி. 'ஏழு' என்ற ஒரே பொருளை உடைய சொல் மீண்டும் மீண்டும் வருவதால் சொற்பொருள்பின் வருநிலை அணியும் பொருந்தியது. 'என்ப' என்பது அசை.* *17*

***3882. அன்னது ஆயினும், அறத்தினுக்கு***
***ஆர் உயிர்த் துணைவன்***
***என்னும் தன்மையை நோக்கினர்***
***யாவரும், எவையும்;***
***பொன்னின் வார் கழல் புது***
***நறுந் தாமரை பூண்டு,***
***சென்னிமேல் கொளூஉ அருக்கன் சேய்,***
***இவை இவை செப்பும்:***

***அன்னது ஆயினும் -*** *அவ்வாறு அச்சம் உண்டானாலும்;* ***அறத் தினுக்கு-*** *(இராமன்) அறத்திற்கு;* ***ஆர் உயிர்த் துணைவன்-*** *அரிய உயிர்த் துணைவனாய் இருப்பான்;* ***என்னும் தன்மையை -*** *என்னும் இயல்பை;* ***யாவரும் எவையும் -*** *எல்லோரும் யாவையும்;* ***நோக்கினர் -*** *நோக்கி அச்சம் நீங்கினர்;* ***பொன்னின் வார்கழல் -*** *(அப்பொழுது) பொன்னால் ஆகிய நீண்ட வீரக்கழல் அணிந்த;* ***புது நறுந்தாமரை -*** *அன்றலர்ந்த நறுமணமிக்க தாமரை மலர்போன்ற இராமன் திருவடி*

*களை;* ***பூண்டு -*** *ஏற்று;* ***சென்னை மேல் கொளூஉ -*** *தலைமேல் கொண்டு;* ***அருக்கன் சேய் -*** *சூரியன் மகனான சுக்கிரீவன்;* ***இவை இவை செப்பும் -*** *இன்னின்ன வார்த்தைகளைச் சொல்லலானான்.*

*இராமன் அறம் அல்லதைச் செய்யான் என்ற நம்பிக்கையால் அவர்களது அச்சம் நீங்கியது. அவன் அறத்திற்குத் துணையாயிருப்பவன், அறத்தை நிலை நாட்ட வல்லன் என்பதை "அறம் தரு வள்ளல்" "மெய்யற மூர்த்தி", அறந்தரு சிந்தை என் ஆவி நாயகன்" என்னும் தொடர்களும் (3372, 5882, 5102) உணர்த்தும். "உண்டு எனும் தருமமே உருவமா உடையநிற் கண்டு கொண்டேன்" (4066). 'அறைகழல் இராமனாகி அறநெறி நிறுத்த வந்தது" (4073) என்னும் வாலியின் கூற்றும் ஒப்பு நோக்கத்தக்கன. யாவரும் எவையும் நோக்கினர்: உயர்திணையோடு சேர்ந்த அஃறிணைப் பொருளும் உணர்திணை வினை கொண்டது. கழல் தாமரை - கழலணிந்த தாமரை போன்ற அடி. இஃது இல்பொருள் உவமை. தாமரை இங்கு உவமை ஆகுபெயர். கொளூஉ - செய்யூ என்னும் வாய்ப்பாட்டு இறந்தகால வினையெச்சம்; இவை, இவை - அடுக்குத் தொடர்; மிகுதியும் பல் வகைமையும்குறித்தது. 18*

*சுக்கிரீவன் இராமனைப் புகழ்ந்துரைத்தல்*

*கலிவிருத்தம்*

***3883. 'வையம் நீ! வானும் நீ!***
***மற்றும் நீ! மலரின்மேல்***
***ஐயன் நீ! ஆழிமேல் ஆழி***
***வாழ் கையன் நீ!***
***செய்ய தீ அனைய அத்***
***தேவும் நீ! நாயினேன்,***
***உய்ய வந்து உதவினாய்,***
***உலகம் முந்து உதவினாய்!***

***வையம் நீ -*** *நிலமும் நீயே!* ***வானும் நீ -*** *ஆகாயமும் நீயே!* ***மற்றும் நீ -*** *ஒழிந்த பூதங்களாகிய நீர், காற்று, தீ என்பனவும் நீயே!* ***மலரின் மேல் ஐயன் நீ -*** *தாமரை மலரின் மேல் விளங்கும் பிரமதேவனும் நீயே!* ***ஆழிமேல் -*** *பாற்கடல் மேல் பள்ளி கொண்ட!* ***ஆழிவாய் கையன் நீ -*** *சக்கரப்படை தாங்கிய கையுடைய திருமாலும் நீயே!* ***செய்ய தீ அனைய*** *- சிவந்த நெருப்பினை ஒத்த;* ***அத்தேவும் நீ -*** *அந்த சிவபிரானும் நீயே!* ***உலகம் முந்து உதவினாய் -*** *உலகங்களை எல்லாம் முற்காலத்தில் படைத்தருளினாய்;* ***நாயினேன் உய்ய -*** *நாய் போன்றவனாகிய நான் நற்கதி அடையும் பொருட்டு;* ***வந்து உதவினாய் -*** *என்னை நாடி வந்து அருள் புரிந்தாய்.*

இராமனின் வில்லாற்றலை நேரில் கண்ட சுக்கிரீவன் 'இவன் அனுமன் கூறியாங்கு முழுமுதற் கடவுளாகிய திருமாலின் அவதாரமே' எனத் தெளிந்து இராமனைப் பலவாறு போற்றலாயினன். இராமன் மும்மூர்த்தியாய் விளங்கும் பரம்பொருளே என்பதைத் தண்டகாரணியத்து முனிவர்கள், விராதன், இந்திரன், கவந்தன், சவரி, வாலி ஆகியோர் இராமனைப் போற்றும் பாடல்களில் காண

லாம். வையம் நீ, வானும் நீ எனப் பஞ்சபூதங்களுள் முதலதையும், இறுதியதையும் கூறிப் பிறவற்றை 'மற்றும்' என்பதனால் பெற வைத்தார். 'நாயினேன்' என்றதில் சுக்கிரீவன் அடக்கம் புலனாகிறது. இறைவனின் கருணைத் திறத்தை 'வந்து உதவினாய்' என்ற தொடர் உணர்த்தும். 19

***3884. 'என் எனக்கு அரியது, எப்பொருளும்***
***எற்கு எளிது அலால்?***
***உன்னை இத் தலை***
***விடுத்து உதவினார், விதியினார்;***
***அன்னை ஒப்புடைய உன்***
***அடியருக்கு அடியென யான்;***
***மன்னவர்க்கு அரச!' என்று***
***உரைசெய்தான் - வசை இலான்.***

***மன்னவர்க்கு அரச*** - அரசர்களுக்கு அரசனே! ***விதியினார்*** - (முற்பிறப்பில் யான் செய்த) நல்லூழானது; ***உன்னை இத்தலை விடுத்து*** - உன்னை இவ்விடத்தே கொண்டு வந்து; ***உதவினார்*** - (எனக்கு) அளித்தது; ***எப்பொருளும் எற்கு*** - எந்த காரியமும் எனக்கு; ***எளிது அலால்*** - (செய்து முடித்தற்கு) எளிதாகுமேயன்றி; ***எனக்கு அரியது என்*** - எனக்குச் செய்வதற்கு அரிதாக இருக்கக் கூடியது யாது உளது? ***அன்னை ஒப்புடைய*** - (அதனால்) தாய்க்கு நிகரான; ***உன் அடியருக்கு*** - உனது அடியார்களுக்கு; ***அடியென் யான்*** - யான் அடியவனாவேன்; ***என்று*** - என்று; ***வசைஇலான்*** - பழியற்றவனாகிய சுக்கிரீவன்; ***உரைசெய்தான்*** - உரைத்தான்.

தனது ஊழ்வினை, பரம்பொருளாகிய இராமனைத் தன்னிடத்தில் சேர்த்து விட்டதனால் தனக்குச் செயற்கரியதாக எந்தச் செயலும் இல்லை என மகிழ்ந்த சுக்கிரீவன், இராமன் பெருமையை உணர்ந்தவனாய் இங்ஙனம் போற்றலாயினன். ஊழ்வினை தனக்குச் செய்த நன்மை கருதி 'விதியினார்' என்று பலர்பால் விகுதி கொடுத்துக் கூறினான். இது திணை வழுவமைதியோடு எண் வழுவமைதியும் ஆகும். ''அடியருக்கு அடியென்' - 'யான் இனி உன் அடியார்க்கு அடியனால் இருந்து பணிபுரிவேன்'' என்பதைச் சுக்கிரீவன் புலப்படுத்தினான். 20

வானரர்களின் மகிழ்ச்சி

***3885. ஆடினார்; பாடினார்; அங்கும்***
***இங்கும் களித்து***
***ஓடினார்; உவகை இன் நறவை***
***உண்டு உணர்கிலார்; -***
***'நேடினாம் வாலி காலனை'***

**எனா, நெடிது நாள்**
**வாடினார் தோள் எலாம் வளர,**
**மற்று அவர் எலாம்.** **நெடிது நாள் வாடினார் -** *(வாலியின் கொடுமையால்) நெடுங்காலமாக வருந்தியிருந்தவர்களான;* **மற்ற அவர் எலாம் -** *சுக்கிரீவனைச் சேர்ந்த மற்ற வானரர்கள் எல்லோரும்;* **வாலி காலனை-** *'வாலிக்கு யமனை;* **நேடினோம்-** *தேடிக் கொண்டேயிருந்து (அடைந்தோம்)';* **எனா -** *என்று;* **உவகை இன் நறவை உண்டு -** *மகிழ்ச்சியாகிய இனிய கள்ளை அருந்தி;* **உணர்கிலார் -** *தம்மை மறந்தவர்களாய்;* **தோள் எலாம் வளர -** *தோள்களெல்லாம் மகிழ்ச்சியால் பூரிக்கப் பெற்று;* **ஆடினார், பாடினார் -** *ஆடினார்கள், பாடினார்கள்;* **அங்கும் இங்கும் -** *அங்குமிங்குமாக;* **களித்து ஓடினார் -** *மகிழ்ந்து ஓடினார்கள்.*

*வாலியால் துன்புற்ற வானரர்கள் இராமனது வலிமையைக் கண்டதும், வாலி அழிவது திண்ணம் என்ற மகிழ்ச்சியால் ஆடியும், பாடியும், ஓடியும் மகிழ்ந்தனர். ஆடுதல் முதலியன உவகையின் மெய்ப்பாடுகள். "ஆடினர், பாடினர் அங்கும் இங்குமாய், ஓடினர் உவகை மாநறவு உண்டு ஓர்கிலார்" (193) "ஓடுவார் விழுவார் உகந்தாலிப்பார், நாடுவார் நம்பிரான் எங்குற்றான் என்பார், பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்றாடுவார்களும் ஆயிற்றாய்ப் பாடியே" (பெரியாழ்வார் - 1 - 1 - 2) என்பன ஈண்டு ஒப்புநோக்கத்தக்கன. தம்மை மெய்ம் மறக்கும்படி செய்தலால் மகிழ்ச்சியை நறவாகக் கூறினார். மகிழ்ச்சி மிகுதியால் ஆடுதல் முதலிய செயல்களை ஒன்றுபடக் கூறியதால் ஒப்புமைக் கூட்ட அணியாம். உவகையின் நறவு - உருவகம்.* *21*

## துந்துபிப் படலம்

வாலியால் கொல்லப்பட்ட துந்துபி என்னும் அரக்கனின் உலறிய உடம்பை இராமன் ஏவலால் இலக்குவன் கால் விரலால் உந்திய செய்தியை இப்படலம் உரைக்கிறது. மயன் மைந்தனாகிய துந்துபி வாலியிடம் வலிந்து சென்று போரிட்டு மாண்டான். வாலி அவன் உடலை வீசி எறிய, அது ருசியமுக மலையில் மதங்க முனிவர் இருக்கையருகே விழுந்தது. தாம் வாழும் இடம் மாசுற்றதாகக்கருதி வாலிக்கு அம்முனிவர் சாபமளிக்க வாலி அதனால் அவ்வெல்லைக்கு வர இயலாமல் போயிற்று. சுக்கிரீவனுடன நட்புக் கொண்ட இராமன் மராமரங்கைதை துளைத்த பின்னர் அவ்வரக்கனது எலும்புக் கூட்டருகே வந்தனர். சுக்கிரீவன் துந்துபியின் வரலாற்றைக் கூற, இராமன் ஏவ இலக்குவன் தன் கால் விரலால் அவ்வுடலை உந்தினான். அது பிரமலோகத்தை அடைந்து திரும்பி வந்து விழுந்தது. இலக்குவனுடைய திறமையினையும் இப்பொழுது கண்டதால் வானரக் கூட்டம் பெரிதும் மகிழ்ந்தது.

துந்துபியின் வறண்ட உடலைப் பார்த்து, இரரமன் வினவுதல்

கலிவிருத்தம்

*3886.* **அண்டமும், அகிலமும் அடைய,**
**அன்று அனலிடைப்**
**பண்டு வெந்தன நெடும்**
**பசை வறந்திடினும், வான்**
**மண்டலம் தொடுவது, அம்**
**மலையின்மேல் மலை எனக்**
**கண்டனன், துந்துபி, கடல்**
**அனான், உடல்அரோ!**

**நெடும்பசை வறந்திடினும் -** மிக்க ரத்தப்பசை வற்றியிருந்தாலும்; **அண்டமும் -** அண்ட கோளங்களும்; **அகிலமும் -** (அவற்றில் அடங்கிய) எல்லா உலகங்களும்; **அடைய -** ஒருங்கே; **அன்று -** அந்நாளில் (ஊழி முடிவில்); **பண்டு-** முன்னே; **அனலிடை-** ஊழித் தீயில்பட்டு; **வெந்து அன-** வெந்தாற் போன்றதும்; **வான் மண்டலம் தொடுவது -** ஆகாய மண்டலத்தைப் போய்த் தொடுவதுமான; **கடல் அனான் துந்துபி உடல் -** கடல் போன்றவனான துந்துபி என்னும் அரக்கனின் உடல்; **அம்மலையின் மேல் -** அந்த ருசியமுக மலையின் மீது; **மலை**

**என** - மற்றொரு மலை போல் கிடப்பதை; **கண்டனன் -** இராமன் கண்டான்.

ஊழிக்கால இறுதியில் அண்டங்களும் உலகங்களும் வெந்ததை ஒத்தும், மலையின் மேல் மற்றொரு மலை இருப்பது போன்றும், வான மண்டலத்தைத் தொட்டும் கடல்போல் பரந்தும் துந்துபியின் உடலின் எலும்புக்கூடு கிடந்தது என்க. பசை வறந்திடினும் தோல், நிணம், தசை முதலியவற்றுடன் இருந்த நிலையில் அரக்கன் உடலின் பருமனும், உயரமும், வலிமையும் எங்ஙனம் இருக்குமோ என்பதை உணர வைத்தது. 'பசை வறந்திடினும்' என்னுந் தொடர் மத்திம தீபமாய் முன்னும் பின்னும்

*இயையும். துந்துபி - துந்துபி என்னும் பேரிகை போல் பெருமுழக்கம் செய்பவன். ஆரவாரம், பெருமை, கருமை காரணமாகத் துந்துபிக்குக் கடல் உவமைஆயிற்று.*
*1*

***3887.** **'தென் புலக் கிழவன் ஊர்***
***மயிடமோ? திசையின் வாழ்***
***வன்பு உலக் கரி***
***மடிந்தது கொலோ? மகரமீன்***
***என்பு உலப்புற உலர்ந்தது***
***கொலோ? இது எனா,***
***அன்பு உலப்பு அரிய நீ,***
***உரை செய்வாய்' என, அவன்,***

***இது -** இந்த வறண்ட உடல்; **தென்புலக் கிழவன் -** தெற்குத் திசைக்குத் தலைவனான யமன்; **ஊர் மயிடமோ -** வாகனமாக ஏறிச் செலுத்துகின்ற எருமைக் கடாவோ? **திசையின் வாழ் -** திசைகளில் வாழ்கின்ற; **வன்பு உலக் கரி -** வலிமை பொருந்திய கல் போன்ற யானைகளுள் ஒன்று; **மடிந்தது கொலோ -** மடிந்து கிடக்கிறதோ? **மகர மீன் -** மகரம் என்னும் பெரிய மீன்; **உலப்பு உற -** இறந்து படி; **என்பு உலர்ந்தது கொலோ -** அதன் எலும்பு உலர்ந்து கிடக்கின்றதோ? **எனா -** என்று வியந்து; **அன்பு உலப்பரிய நீ -** 'அன்பு குறைவுபடாதவனாகிய நீ; **உரை செய்வாய் -** சொல்வாய்; **என -** என்று (இராமன் கேட்க); **அவன் -** அந்தச் சுக்கிரீவன். . .*

*'அவன்' என்னும் சுட்டுப் பெயர் பதினான்காம் பாடலில் 'உரை செய்தான்' என்பதனோடு முடியும். மகரம் - சுறா எனும் மீன். இது மரக்கலத்தையும் கவிழ்க்க வல்லது. உலம் திரண்டகல்; கொலோ - கொல் ஐயப்பொருள் இடைச்சொல். துந்துபியின் எலும்புக் கூட்டைப் பல வகையாய் ஐயயேமற் கொண்டு கூறியதாதலின் ஐய அணியின் பாற்படும். 2*

*துந்துபியின் வரலாறு*

***3888.** **'துந்துபிப் பெயருடைச் சுடு***
***சினத்து அவுணன், மீது***
***இந்துவைத் தொட நிமிர்ந்து***
***எழு மருப்பு இணையினான்,***
***மந்தரக் கிரி எனப்***
***பெரியவன், மகர நீர்***
***சிந்திட, கரு நிறத்து***
***அரியினைத் தேடுவான்.***

***மீது இந்துவைத் தொட -** மேலே (வானில்) உள்ள சந்திரனைத் தொடும்படியாக; **நிமிர்ந்து எழு -** மேலெழுந்து வளர்ந்துள்ள; **மருப்பு இணையினான் -** இரண்டு கொம்புகளை உடையவனும்; **மந்தரக்கிரி எனப் பெரியவன் -** மந்தர மலை போன்ற பெரிய உருவத்தை உடைய வனுமான; **துந்துபிப் பெயருடை -** துந்துபி என்னும்*

*பெயருடைய;* ***சுடு சினத்து அவுணன் -*** *தீப்போல் சுடுகின்ற கோபத்தை உடைய அசுரன்;* ***மகர நீர் சிந்திட -*** *கடலில் உள்ள நீர் சிதறும் படியாக;* ***கரு நிறத்து அரியினை -*** *கரிய நிறத்தை உடைய திருமாலை;* ***தேடுவான் -*** *தேடிச் சென்றான்.*

*முன் பாடலில் 'மயிடமோ' என்றதாலும் இங்கு 'மருப்பிணையினான்' என்றதாலும் 'துந்துபி' எருமை வடிவினன் என்பது புலனாகும். 'மகரநீர் சிந்திட' என்றதால் கடலைக் கலக்கிக் கொண்டு தேடினான்' என்பது பெறப்படுகிறது. எருமையின் இயல்பிற்கேற்ப நீரைக் கலக்கினான் என அறியலாம். 3*

***3889. 'அங்கு வந்து அரி எதிர்ந்து,***
***"அமைதி ஏன்? " என்றலும்,***
***"பொங்கு வெஞ் செருவினில்***
***பொருதி" என்று உரைசெய,***
***"கங்கையின் கணவன், அக்***
***கறை மிடற்று இறைவனே***
***உங்கள் வெங் கத வலிக்கு***
***ஒருவன்" என்று உரை செய்தான்.***

***அங்கு -*** *அவ்விடத்தில்;* ***அரி வந்து எதிர்ந்து -*** *திருமால் எதிரில் வந்து;* ***அமைதி என் என்றலும் -*** *'நீ இங்கு வந்த காரணம் யாது' என்று வினவிய அளவில்;* ***பொங்கு வெஞ் செருவினில் -*** *சீற்றம் கொண்டு செய்கின்ற கொடிய போரில்;* ***பொருதி என்று உரை செய் -*** *'என்னோடு போர் செய்வாயாக என்று துந்துபி கூற;* ***கங்கையின் கணவன் -*** *(அதற்குத் திருமால்) 'கங்கா தேவியின் கணவனான;* ***அக்கறை மிடற்று இறைவனை -*** *நஞ்சுண்டதால் கறுத்த கண்டத்தை உடைய அந்தச் சிவபெருமானே;* ***உங்கள் வெம்கதம் வலிக்கு -*** *உங்ககளப் போன்றவர்களின் கோபமிக்க வலிமைக்கு;* ***ஒருவன் -*** *போரிடக்கூடிய ஒருவன் ஆவான';* ***என்று உரை செய்தான் -*** *என்று உரைத்தான்.*

*வாலியால் துந்துபி கொல்லப்படவேண்டும் என்பது ஊழ்வினையாதலால், திருமால் அவனொடு போர் செய்து கொல்லாது இங்ஙனம் கூறினார் எனக்*

*கொள்க. கங்கையைச் சிவபிரான் தன் தலையில் கொண்டமையால் 'கங்கையின் கணவன்' எனப்பட்டான். இறைவனே ஏகாரம் பிரிநிலை. 4*

***3890. 'கடிது சென்று, அவனும்,***
***அக் கடவுள்தன் கயிலையைக்***
***கொடிய கொம்பினின் மடுத்து***
***எழுதலும், குறுகி, "முன்***
***நொடுதி; நின் குறை***
***என்?" என்றலும், நுவன்றனன்அரோ,***
***"முடிவுஇல் வெஞ்செரு, எனக்கு அருள்***
***செய்வான் முயல்க!" எனா,***

***அவனும் கடிது சென்று -*** *அந்த அரக்கனும் விரைந்து சென்று;* ***அக்கடவுள் தன் கயிலையைக் -*** *அந்தச் சிவபிரானின் கைலை மலையை;* ***கொடிய கொம்பினின் -*** *தன் கொடிய கொம்புகளால்;* ***மடுத்து எழுதலும் -*** *முட்டிப் பாய்ந்து எழுகையில்;* ***முன் குறுகி -*** *(சிவபிரான்) அவன் எதிரில் வந்து;* ***நின் குறை என் -*** *"உனக்கு வேண்டுவது என்ன?* ***நொடிதி -*** *சொல்வாய்";* ***என்றலும் -*** *என்று கேட்டதும்;* ***எனக்கு -*** *(துந்துபி) 'எனக்கு;* ***முடிவுஇல் வெஞ் செரு -*** *முடிவு இல்லாத கொடிய போரினை;* ***அருள் செய்வான் முயல்க -*** *அளிக்க முயல்வாயாக;* ***எனா நுவன்றனன் -*** *என்று சொன்னான்.*

*'என்னோடு இடைவிடாது போர் செய்ய வேண்டும்'. என்று துந்துபி தான் வந்த காரணத்தைச் சிவபிரானிடம் அறிவித்தான். 5*

***3891. "மூலமே, வீரமே***
***மூடினாயோடு, போர்***
***ஏலுமே? தேவர்பால் ஏகு"***
***எனா, ஏவினான் -***
***"சால நாள் போர் செய்வாய்***
***ஆதியேல், சாரல்; போர்***
***வாலிபால் ஏகு" எனா - வான்***
***உளோர் வான் உளான்.***

**மூலமே -** *(அது கேட்ட சிவபிரான்) பண்டு தொட்டே;* **வீரமே மூடினாயோடு -** *வீரச் செயலிலேயே மூழ்கிக் கிடக்கும் உன்னோடு;* **போர் ஏலுமே -** *போரிடுவது முடியுமா? (முடியாது);* **தேவர் பால் ஏகு -** *(ஆதலால்) நீ தேவர்களிடம் போர் செய்யப் போவாயாக;* **எனா ஏவினான் -** *என்ற சொல்லி அனுப்பினான்;* **வான் உளோர் வான் உளான் -** *(அவனும் சென்று தேவர்களைப் போருக்கு அழைக்க) அந்தத் தேவலோகத்தில் உள்ள தேவர்களுக்குத் தலைவனான இந்திரன்;*

***சால நாள்-*** *(துந்துபியிடம்) 'நீ நீண்டகாலம்;* **போர் செய்வாய் ஆதியேல்-** *போர் செய்ய விரும்புவாயாயின்;* ***சாரல் -*** *இங்கு வராதே;* **போர் வாலி பால் ஏகு -** *போர் செய்வதில் வல்ல வாலியிடம் செல்வாய்;* ***எனா -*** *என்று. . . .*

*எனா என்பது அடுத்த பாடலில் 'விட' என்பதோடு முடியும். ஏலுமே - ஏகாரம் எதிர்மறை. சிவபிரான் துந்துபியைத் தேவர்களிடம் அனுப்பப் தேவர் தலைவனாம் இந்திரன் அவனை வாலியிடம் அனுப்பிவைத்தான். 6*

***3892. 'அன்னவன் விட, உவந்து அவனும்***
***வந்து, "அரிகள்தம்***
***மன்னவன்! வருக! போர்***
***செய்க!" எனா, மலையினைச்***
***சின்ன பின்னம் படுத்திடுதலும்,***
***சினவி, என்***
***முன்னவன், முன்னர் வந்து***
***அனையவன் முனைதலும்,***

***அன்னவன் விட* -** *அத்தேவேந்திரன் அனுப்பிவிட;* ***அவனும் உவந்து வந்து* -** *அந்தத் துந்துபியும் மகிழ்ந்து கிட்கிந்தைக்கு வந்து;* ***அரிகள் தம் மன்னவன்* -** *குரங்குகளுககு அரசனே!* ***வருக போர் செய்க* -** *வந்து என்னோடு போர் செய்வாயாக;* ***எனா* -** *என்று சொல்லிக் கொண்டு;* ***மலையினை* -** *அம்மலையை;* ***சின்ன பின்னம் படுத்திடுதலும்* -** *பலவாறு நாசப்படுத்துகையில்;* ***என் முன்னவன் சினவி* -** *என் தமையனான வாலி சினங் கொண்டு;* ***முன்னர் வந்து* -** *எதிரில் வந்து;* ***அனையவன் முனைதலும்* -** *அந்த அசுரனோடு போர் செய்த அள*

*வில். . . .*

*'முனைதலும்' என்பது அடுத்த பாடலில் வரும் 'உணர்ந்திலர்' என்பதனோடு முடியும் அன்னவன் - அகரச்சுட்டு அடியாக வந்த சொல். தேவேந்திரன் சொற்படியே துந்துபி வாலியிடம் சென்று போருக்கு அழைக்க இருவரும் போர் புரியலாயினர் என்பதாம்.*
*7*

***3893. 'இருவரும் திரிவுறும் பொழுதின்***
***இன்னவர்கள் என்று***
***ஒருவரும் சிறிது***
***உணர்ந்திலர்கள் ; எவ்உலகினும்,***
***வெருவரும் தகைவுஇலர், விழுவர்,***
***நின்று எழுவரால் ;***
***மருவஅருந்தகையர்,***
***தானவர்கள் வானவர்கள்தாம்.*** **இருவரும்-** *வாலி, துந்துபி ஆகிய இருவரும்;* **திரிவுறும் பொழுதின் -** *இடசாரி, வலசாரியாகச் சுழலும் போதில்;* **இன்னவர்கள் என்று** *- இவர்கள் இன்னார் என்று;* **ஒருவரும் சிறிது உணர்ந்திலர்கள் -** *எவரும்சிறிதும் அறிந்திலர்;* **எவ் உலகினும் -** *எந்த உலகிலும்;* **வெருவரும் தகைவு இலர் -** *(எவரைக் கண்டும்) அஞ்சும் தன்மையில்லாத இவர்கள்;* **விழுவர் -** *கீழே விழுவார்கள்;* **நின்று எழுவர் -** *(மீண்டும்) எழுந்து நிற்பார்கள்;* **தானவர் -** *அசுரர்களும்;* **வானவர்கள் தாம் -** *தேவர்களும்;* **மருவ அருந்தகையர் -** *அருகே நெருங்கவும் முடியாத தன்மையினர் ஆயினர்.*

*இன்னவர்கள் என்று சிறிதும் உணர்ந்திலர்கள் - இவன் தான் வாலி, என்றும் இவன் தான் துந்துபி என்றும் அறிய முடியாமையை உணர்த்திற்று. அவ்விருவரின் உருவத்தின் பெருமையாலும் போரிடும் வேகத்தாலும் இட, வலமாகச் சுழல்வதாலும் அடையாளம் தெரிந்திலது. உணர்ந்திலர்கள் - விகுதி மேல் விகுதி (அர், கள்). துந்துபியின் இனத்தவர் ஆதலின் 'தானவர்' முன்னர்க் கூறப்பட்டனர்.*
*8*

***3894. 'தீ எழுந்தது, விசும்புற;***
***நெடுந் திசை எலாம்***
***போய் எழுந்தது, முழக்கு;***
***உடன் எழுந்தது, புகை;***
***தோய நன் புணரியும்,***
***தொடர் தடங் கிரிகளும்,***

***சாய் அழிந்தன; -***
***அடித்தலம் எடுத்திடுதலால்.***

***அடித்தலம் எடுத்திடுதலால் -*** *(அவர்கள்) கால்களைத் தூக்கி வைத்ததால்* ***; தீ விசும்புற எழுந்தது -*** *நெருப்பு வானத்தை அடையுமாறு மேலெழுந்தது;* ***முழக்கு -*** *(அவர்கள் செய்த) ஆரவாரம்;* ***நெடுந்திசை எலாம் போய் -*** *நீண்ட திசைகளெங்கும் சென்று;* ***எழுந்தது -*** *ஒலித்தது;* ***புகை -*** *(அந்நெருப்பின்) புகையும்;* ***உடன் எழுந்தது -*** *கூடவே பரவிற்று;* ***தோய நல் புணரியும் -*** *நீரினை உடைய நல்ல கடலும்;* ***தொடர் தடங்கிரிகளும்*** *- பெரிய மலைத் தொடர்களும்;* ***சாய் அழிந்தன -*** *அழகு கெட்டன.*

*தீ - அடிகள் படுவதால் ஏற்படும் உராய்வில் நிலத்தினின்று எழுந்தது. கடலும் மலையும் தன் நிலை கெட்டன என்பதால் போரின் கடுமை புலனாகும். தோயம் - நீர். 'எழுந்தது' என்ற சொல் ஒரே பொருளில் பலமுறை வந்ததால் இப்பாடல் சொற்பொருள்பின் வருநிலையணிஅமைந்தது.* *9*

***3895. 'அற்றது ஆகிய செருப்***
***புரிவுறும் அளவினில்,***
***கொற்ற வாலியும், அவன்,***
***குலவு தோள் வலியொடும்***
***பற்றி, ஆசையின் நெடும் பணை***
***மருப்பு இணை பறித்து,***
***எற்றினான்; அவனும், வான்***
***இடியின் நின்று உரறினான்.***

***அற்றது ஆகிய-*** *அத்தன்மைத் தான;* ***செருப் புரிவுறும் அளவினில்-*** *போரினைச் செய்கின்ற பொழுதில்;* ***கொற்ற வாலியும் -*** *வெற்றியை உடைய வாலியும்;* ***குலவு தோள் வலியொடும்*** *- திரண்ட தன் தோள்களின் வலிமையோடு;* ***அவன் -*** *அவ்வரக்கனது;* ***ஆசையின் நெடும் பணை மருப்பு இணை*** *- திசைகளை அளாவி நீண்ட பருத்த இரண்டு கொம்புகளையும்;* ***பற்றி-*** *பிடித்து;* ***பறித்து -*** *பிடுங்கி எடுத்து;* ***எற்றினான் -*** *(அவற்றைக் கொண்டேஅவனை) அடித்தான்;* ***அவனும் -*** *அவ்வரக்கனும்;* ***வான் இடியின் -*** *வானில்உண்டாகும் இடியைப் போல;* ***நின்று உரறினான் -*** *முழங்கி நின்றான்.*

*இருவரும் வெற்றி தோல்வியின்றிப் பொருது வருகையில் வாலி வலிமை மிக்கவனாய், அவ்வரக்கனது கொம்புகளைப் பிடுங்கி அடிக்க, அவன் வலி தாளாது முழக்கமிட்டான். கொம்புகளை வேரொடு பறித்ததால் ஏற்பட்ட துன்பமும் அடிபட்டதால் நேர்ந்த துன்பமும் சேர அரக்கன் கலங்கிக் கதறினான்.*
*10*

***3896. 'தலையின்மேல் அடி பட, கடிது***
***சாய் நெடிய தாள்***
***உலைய, வாய் முழை திறந்து***
***உதிரஆறு ஒழுக, மா***

***மலையின் மேல் உரும்***
    ***இடித்தென்ன, வான் மண்ணொடும்***
***குலைய, மா திசைகளும்***
    ***செவிடுற, - குத்தினான்.****

***தலையின் மேல் அடிபட*** *- தலை மீது அடிபடும் படியும்;* ***கடிது சாய் நெடிய தாள் -*** *விரைவில் விழுந்து நீண்ட கால்கள்;* ***உலைய*** *- ஒடியும் படியும்;* ***முழை வாய் திறந்து -*** *மலைக்குகை போன்ற வாய் திறந்து;* ***உதிர ஆறு ஒழுக -*** *குருதி ஆறு பெருகவும்;* ***மா மலையின் மேல் -*** *பெரிய மலையின் மீது;* ***உரும் இடித்தென்ன*** *- இடி இடித்தாற் போன்று;* ***வான் மண்ணொடும் குலைய -*** *விண்ணுலகமும நிலவுலகமும் நடுங்கவும்;* ***மாதிசைகளும் செவிடுற -*** *பெரிய திசைகள் எல்லாம் செவிடுபடவும்;* ***குத்தினான் -*** *குத்தினான்.*

*விண்ணுலகமும் மண்ணுலகமும் நடுங்க, திசைகள் செவிடுபட, அசுரன் கால் ஒடிந்து விழ, வாய்வழியே குருதி பெருக்கெடுத்தோட, மலைமீது இடி விழுந்தாற்போல அவ்வரக்கன் தலைமேல் வாலி குத்தினான் என்பது பொருளாகும். வாலி கொடுத்த குத்தின் வலிமை இதனால் புலப்படும்.    11*

*3897.* ***'கவரி இங்கு இது என,***
    ***கரதலம்கொடு திரித்து***
***இவர்தலும், குருதி பட்டு***
    ***இசைதொறும் திசைதொறும்,***
***துவர் அணிந்தன என, பொசி***
    ***துதைந்தன - துணைப்***
***பவர் நெடும் பணை மதம்***
    ***பயிலும் வன் கரிகளே.***

***இங்கு இது கவரி என -*** *இவ்விடத்தில் வாலி கையில் கொண்டி ருக்கின்ற இது சாமரம் ஆகும் என்று கண்டோர் கூறும்படி;* ***கரதலம் கொடு -*** *(வாலி துந்துபியை) கையினால் (எடுத்து);* ***திரித்து இவர்தலும் -*** *சுழற்றிக் கொண்டு உலாவியபொழுது;* ***குருதி பட்டு இசைதொறும் -*** *(அத்துந்துபியின்) இரத்தம் துளித்துப் படும்போதெல்லாம்;* ***திசை தொறும் -*** *ஒவ்வொரு திசையிலும் உள்ள;* ***துணை பவர் நெடும்பணை -*** *ஒன்றுக் கொன்று துணையாய் உள்ள நெருங்கிய நீண்ட தந்தங்களை உடைய;* ***மதம் பயிலும் -*** *மதம் பொழிகின்ற;* ***வன் கரிகளே -*** *வலிய யானைகள்;* ***துவர் அணிந்தன என -*** *சிவப்பு நிறம் பூசப்பட்டன போல;* ***பொசி துதைந்தன -*** *உதிரக் கசிவு அடர்ந்து படியப் பெற்றன.*

*வாலி துந்துபியைத் தூக்கிக் கையால் சுழற்ற, அவ்வரக்கனது வாயிலிருந்து சிந்திய இரத்தம் திசை யானைகள்மீது தெறித்து விழ, அவை செந்நிறம் பூசப்பட்டன போல விளங்கின என்பதால் எல்லாத் திசைகளிலும் அரக்கன் குருதிபட்டது என்பது புலனாகிறது. 'கவரி இங்கு இது என' என்பதற்கு இஃது ஓர் எருமை என்றெண்ணி' எனவும் பொருள் கொள்ளலாம். கவரி - சாமரையும், எருமையும் என இருபொருள்பட அமைந்த சொல்லாகும்.    12*

***3898. 'புயல் கடந்து, இரவிதன் புகல்***
    ***கடந்து, அயல் உளோர்***
***இயலும் மண்டிலம் இகந்து,***
    ***எனையவும் தவிர, மேல்***
***வயிர வன் கரதலத்து அவன்***
    ***வலித்து எறிய, அன்று***
***உயிரும் விண் படர, இவ்***
    ***உடலும் இப் பரிசுஅரோ!***

***அவன் -*** *அந்த வாலி;* ***புயல் கடந்து -*** *மேக மண்டலத்தைத் தாண்டி;* ***இரவிதன் புகல் கடந்து*** *- சூரியன் இருக்கும் இடத்தையும் தாண்டி;* ***அயல் உளோர் இயலும் மண்டிலம் -*** *மற்றைய தேவர்கள் பொருந்தி வாழ்கின்ற மண்டலங்களை;* ***இகந்து -*** *கடந்து;* ***எனையவும்***

***தவிர -*** *மற்றும் எல்லா மேலிடங்களையும் கடக்கும்படி;* ***வயிர வன் கரதலத்து -*** *உறுதியான வலிய கையினால்;* ***மேல் வலிந்து எறிய -*** *(அவ்வரக்கனை) மேலே வலிமையோடு வீச;* ***அன்று -*** *அப்பொழுது;* ***உயிரும் விண் படர -*** *அவன் உயிர் மேலுலகத்திற்குச் செல்ல;* ***இவ்வுடலும் -*** *இந்த உடலும்;* ***இப்பரிசு -*** *இவ்விதமாயிற்று. (கீழே விழுந்து இங்கே கிடந்தது).*

*"வாலி துந்துபி உடலை மேலே வீசி எறிய, அவன் உயிர் பிரிய, உடல் கீழே விழுந்தது என்றான். வான மண்டலங்கள் பலவற்றைக் கடந்து வீசப்பட்ட உடல் சென்றதாகக் கூறப்பட்டுள்ளது. 13*

***3899. 'முட்டி, வான் முகடு சென்று***
    ***அளவி, இம் முடை உடற்***
***கட்டி, மால் வரையை***
    ***வந்து உறுதலும், கருணையான்***
***இட்ட சாபமும், எனக்கு***
    ***உதவும்' என்று இயல்பினின்,***
***பட்டவா முழுவதும்,***
    ***பரிவினால் உரைசெய்தான்.***

***இம்முடை உடற்கட்டி-*** *இந்த முடை நாற்றமுடைய இவ்வுடற் பிண்டம்;* ***வான் முகடு முட்டிச் சென்று -*** *ஆகாயத்தின் உச்சியைத் தாக்கிச் சென்று;* ***அளவி -*** *அங்குப் படிந்து;* ***மால் வரையை -*** *பெரிய இந்த மலையை;* ***வந்து உறுதலும் -*** *வந்து அடைந்ததால்;* ***கருணையான் -*** *கருணை மிக்கவரான மதங்க முனிவர்;* ***இட்ட சாபமும் -*** *(வெகுண்டு வாலிக்குக்) கொடுத்த சாபமும்;* ***எனக்கு உதவும் என்று -*** *எனக்கு இப்பொழுது உதவியாக இருக்கின்றது' என்று;* ***இயல்பினின் -*** *இவ்விதமாக;* ***பட்டவா முழுவதும் -*** *நடந்த வரலாறு முழுமையும்;* ***பரிவினால் உரை செய்தான் -*** *அன்பொடு சொன்னான் (சுக்கிரீவன்).*

*மால்வரை - சுக்கிரீவன் தங்கியிருக்கும் ருசியமுகமலை. வாலி எறிந்த துந்துபி உடல் ருசியமுகமலையில் மதங்க முனிவர் தவஞ்செய்து கொண்டிருந்த ஆசிரமத்தில் விழுந்து அதன் தூய்மையைக் கெடச் செய்ததால் முனிவர் வாலிமேல் சினங்கொண்டு சாபமிட்டார். வாலி இம்மலைப்பகுதிக்கு வரின் தலை வெடித்து இறக்கக்கடவன் என்பதும், அவனைச் சேர்ந்த நண்பர்கள் வரின் கல்வடிவமாகக் கடவர் என்பதும் அவரிட்ட சாபமாகும். மதங்க முனிவர் வாலிக்கு இட்ட சாப வரலாறு, முன் இராமனுக்கு அனுமன் உரைத்த (3851) பாடலாலும் அறியக் கிடக்கும். இங்ஙனம் அவ்வெலும்பின் வரலாற்றையும், தான் அம்மலையில் வாழும் காரணத்தையும் சுக்கிரீவன் இராமனுக்கு உரைத்தான்.* *14*

*இலக்குவன் தந்துபின் உடலை உந்துதல்*

***3900. கேட்டனன், அமலனும்,***
***கிளந்தவாறு எலாம்,***
***வாள் தொழில் இளவலை,***
***'இதனை, மைந்த! நீ***
***ஓட்டு' என, அவன்***
***கழல் விரலின் உந்தினான்;***
***மீட்டு, அது விரிஞ்சன்***
***நாடு உற்று மீண்டதே!***

***அமலனும் -*** *இராமனும்;* ***கிளந்தவாறு எலாம் கேட்டனன் -*** *(சுக்கிரீவன்) சொன்ன வரலாறு முழுமையும் கேட்டு;* ***வாள் தொழில் இளவலை -*** *வாளேந்திப் போர் செய்யும் தொழிலுடைய தம்பியாய் இலக்குவனை (நோக்கி);* ***மைந்த -*** *'வீரனே!* ***இதனை நீ ஓட்டு என -*** *இந்த உடலை நீ அப்பால் தள்ளு' என்று கூற;* ***அவன் -*** *அந்த இலக்குவன்;* ***கழல் விரலின் உந்தினான் -*** *தன் கால் விரல்களால் தள்ளி எறிந்தான்;* ***அது -*** *அவ்வெலும்புக்கூடு;* ***மீட்டு விரிஞ்சன் நாடு*** *- மறுபடியும் பிரமலோகத்தை;* ***உற்று மீண்டதே -*** *அடைந்து திரும்பி வந்து வீழ்ந்தது.*

*மராமரத்தை எய்து தன் வலிமையைக் காட்டிய இராமன், தன் இளவலின் ஆற்றலைச் சுக்கிரீவனுக்குக் காட்டத் துந்துபியின் உடலைத் தூக்கி எறியுமாறு கூறினன். முன்பு வாலி தூக்கி எறிந்த போது ஒரு முறை, பிரமலோகம் வரை சென்று வந்ததால் இங்கு 'மீட்டு' என்றார். வாலி கையால் சுழற்றி எறிந்த உடல் எச்சத்தை இலக்குவன் கால் விரலால் எற்றி வலிமைப் பெருமிதத்தைப் புலப்படுத்தினான் என்பதை உணர்க. இச்செய்கையால், இலக்குவனும் இராமன் போலவே வலியவன் என்பதை உணர்த்தியவாறு.*

*மைந்த - அன்பினால் வந்த மரபு வழுவமைதி எனலுமாம்.* *15*

## *கலன் காண் படலம்*

*சுக்கிரீவன் சீதையின் அணிகலன்களைக் காட்ட இராமன் அவற்றைக் கண்டு வருந்துவதை இப்படலம் கூறுகிறது.*

*இராமன் சோலையில் இருக்கச் சுக்கிரீவன் சீதை நிலத்திலிட்ட அணிகல முடிப்பை இராமனிடம் காட்டினான். அணிகலன்களைக் கண்ட இராமன் மகிழ்ச்சியும் துயரமும் மாறிமாறி எழ ஒருநிலைப்படாது தளர்ந்தான். சுக்கிரீவன் ஆறுதல் மொழிபல கூறித் தேற்றினான். தன்னை நம்பியவளின் துயர்போக்க இயலாமையைக் கூறி இராமன் வருந்தினான். பழி நீங்க இறந்துபடுவதே செய்யத்தக்கது என்றான். எனினும், சுக்கிரீவன் குறையைத் தீர்த்த பின்னரே வேறு செய்வது என உரைத்தான். அந்நிலையில் அனுமன் இராமனை நோக்கி வாலியைக் கொன்று, சுக்கிரீவனை அரசனாக்கிப் படை பெருக்கி, எல்லா இடங்களிலும் ஒரே சமயத்தில் சீதையைத் தேடச் செய்வதே ஏற்றதெனக் கூற, அனைவரும் அக்கருத்தை ஏற்று வாலி இருக்கும் இடத்திற்குச் சென்றனர்.*

*இராமனிடம், சுக்கிரீவன் சில செய்திகளைத் தெரிவித்தல்*

*கலிவிருத்தம்*

***3901. ஆயிடை, அரிக்குலம் அசனி அஞ்சிட***
***வாய் திறந்து ஆர்த்தது வள்ளல், ஓங்கிய***
***தூய நல் சோலையில் இருந்த சூழல்வாய்,***
***'நாயக! உணர்த்துவது உண்டு நான்' எனா.***

***ஆயிடை** - அப்பொழுது; **அரிக்குலம் -** குரங்குக் கூட்டம்; **அசனி அஞ்சிட -** இடியும் அச்சம் அடையுமாறு; **வாய் திறந்து ஆர்த்தது -** வாய்விட்டு ஆரவாரித்தது; **வள்ளல் -** இராமன்; **ஓங்கிய தூய நல் சோலையில் -** உயர்ந்த தூய்மையான அழகிய சோலையில்; **இருந்த சூழல்வாய் -** வந்து தங்கியிருந்த சமயத்தில்; **நாயக -** (சுக்கிரீவன் இராமனை நோக்கித்) 'தலைவனே!' **நான் உணர்த்துவது -** நான் சொல்லவேண்டுவது; **உண்டு எனா -** (ஒன்று) உளது என்று -*

*'எனா' என்னும் வினையெச்சம் இப்படலத்தின் நான்காம் பாடலில் வரும். 'காட்டினன்' என்னும் வினைமுற்றைக் கொண்டு முடியும்.*

*மராமரங்களைத் துளைத்தும், துந்துபியை உந்தியும் தம் வலிமையைக் காட்டிச்சுக்கிரீவனுக்கு நம்பிக்கையும் ஆறுதலும் அளித்தமையால் மகிழ்ச்சி மிகுதியால்அரிக்குலம் வாய்திறந்து ஆர்த்தது. 1*

***3902. 'இவ் வழி, யாம் இயைந்து***
***இருந்தது ஓர் இடை,***
***வெவ் வழி இராவணன்***
***கொணர, மேலைநாள்,***
***செவ் வழி நோக்கி,***

*நின் தேவியே கொலாம்,*
*கவ்வையின் அரற்றினள், கழிந்த*
*சேண் உளாள்?*

***மேலை நாள் -*** *முன்னொரு நாளில்;* ***இவ்வழி யாம் -*** *இந்த இடத்தில் நாங்கள்;* ***இயைந்து இருந்தது ஓர்இடை -*** *கூடியிருந்த ஒரு சமயத்தில்;* ***வெவ்வழி இராவணன் -*** *கொடிய வழியில் செல்பவனாகிய இராவணன்;* ***கொணர -*** *எடுத்து வரும் போது;* ***நின் தேவியே கொலாம் -*** *(அவன் கையகப்பட்டுச் செல்கின்றவள்) நின் தேவியான சீதை தானோ?* ***கழிந்த சேண் உளாள் -*** *நெடுந்தூரத்தில் வானத்தில் உள்ளவனாய்;* ***செவ்வழி நோக்கி -*** *(இக்காடு, மலைகளில் உள்ள) நேரான வழியைப் பார்த்து;* ***கவ்வையின் அரற்றினன் -*** *துன்பத்தால் கதறி அழுதாள்.*

*நெடுந்தூரத்தில் வானத்தில் செல்பவளாக இருந்ததால் திருமேனி அடையாளம் கண்டு உறுதியாகக் கூற முடியாமையின் 'நின் தேவியை கொலாம்' என்றான். கண்ணுக்குத் தெளிவாகப் புலப்படவில்லையெனினும் அழுகை ஒலியால் பெண் என அறி முடிந்தது. இப்போது அந்தப் பெண் சீதையாக இருக்கலாமோ என்று ஊகிக்கிறேன்'என்றான். 2*

*3903. " உழையரின் உணர்த்துவது உளது"*
*என்று உன்னியோ?*
*குழை பொரு கண்ணினாள்*
*குறித்தது ஓர்ந்திலம்;*
*மழை பொரு கண்*
*இணை வாரியோடு தன்*
*இழை பொதிந்து இட்டனள்;*
*யாங்கள் ஏற்றனம்.*

***உழையரின் -*** *தூதர்களைப் போல;* ***உணர்த்துவது -*** *(தன்னிலையை நினக்குத்) தெரிவிக்கக் கூடியது;* ***உளது என்று -*** *உண்டு என்று;* ***உன்னியோ-*** *நினைந்தோ?* ***குழை பொரு கண்ணினாள் -*** *காதணியோடு போரிடும் நீண்ட கண்ணினை உடையவளான அவள்;* ***குறித்தது ஓர்ந்திலம் -*** *கருதியதனை அறிந்தோம் இல்லை;* ***தன் இழை பொதிந்து -*** *தன் ஆபரணங்களை முடிந்து;* ***மழை பொரு கண் இணை -*** *மழை போன்ற இரு கண்களினின்று;* ***வாரியொடு -*** *பெருகிய கண்ணீரோடு;* ***இட்டனள் -*** *கீழே போட்டனள்;* ***யாங்கள் ஏற்றனம் -***

*(அம்முடிப்பை அது தரையில் விழுவதற்கு முன்) நாங்கள் கைகளில் ஏந்திக் கொண்டோம்.*

*காட்டிற்கு வருகையில் இராமன் கூறியாங்குத் தன் அணிகலன்களில் பெரும்பாலானவற்றை அந்தணர்களுக்குச் சீதை தானம் செய்து விட்டாள். பிறகு அத்திரி முனிவரின் ஆசிரமத்தில் அவர் மனைவியான அனசூயையால் அளிக்கப்பட்ட அணிகலன்களை அணிந்து கொண்டிருந்தனள் என்பது இங்கு அறியத்தக்கது.*

*உழையரின் - தூதர்கள் போல; அணிகலன்கள் தன்னிலையினைத் தூதர்கள் போல நினக்குத் தெரிவிப்பது உண்டு என்று நினைந்தோ என்ற பொருளை முதலடி உணர்த்தும். கருநிறத்தாலும் நீர்பொழிதலாலும் மழை கண்ணிற்கு உவமை ஆயிற்று. கண்ணீரின் மிகுதி தோன்ற 'வாரி' என்றான். குழை பொரு கண் - கண்கள் காதளவு நீண்டிருத்தல் உத்தம இலக்கணம் உணர்த்தியதாகும். சீதை தன் அணிகலன்களை நிலத்திலிட்ட செய்தி 'கடுந்தெறல் இராமன் உடன் புணர் சீதையை, வலித்தகை அரக்கன் வவ்விய ஞான்றை, நிலம் சேர் மதரணி' (378) என்று புறநானூற்றிலும கூறப்பட்டுள்ளது.* 3

*சீதையின் அணிகலன்களைக் கண்ட இராமன் நிலை*

***3904. 'வைத்தனம் இவ் வழி; -***
***வள்ளல்! - நின் வயின்***
***உய்த்தனம் தந்த போது***
***உணர்தியால் எனா***
***கைத்தலத்து அன்னவை***
***கொணர்ந்து காட்டினான்; -***
***நெய்த்தலைப் பால்***
***கலந்தனைய நேயத்தான்.***

***நெய்த்தலை -*** *தேனில்;* ***பால் கலந்தனைய -*** *பால் கலந்தாற் போன்ற;* ***நேயத்தான் -*** *இனிய நட்பினை உடைய சுக்கிரீவன்;* ***வள்ளல் -*** *(இராமனை நோக்கி) 'வள்ளலே!* ***இவ்வழி வைத்தனம் -*** *அந்த அணிகல முடிப்பை இங்கே பாதுகாப்பாக வைத்துள்ளோம்;* ***நின்வயின் -*** *நின்னிடத்து;* ***உய்த்தனம் தந்த போது -*** *கொண்டு வந்து தரும் போது;* ***உணர்தி -*** *உண்மையை அறிவாய்';* ***எனா -*** *என்று கூறி;* ***கைத்தலத்து -*** *கையில்;* ***அன்னவை கொணர்ந்து -*** *அந்த அணிகலன்கள்களைக் கொண்டு வந்து;* ***காட்டினான்--*** *;*

*நெய் - தேன்; நெய்த்தலைப் பால் கலந்தனைய நேயம் என்றது வெவ்வேறு சுவையுடைய தேனும் பாலும் கலக்கையில் புதிய இனிய சுவை பயப்பது போல் வேறுவேறு இயல்பினரான இராம சுக்கிரீவர் நட்பால் புதிய உறவு ஏற்பட்டு இனிமை பயக்கும் என்றவாறு. நெய்த்தலை - தலை ஏழனுருபு; கலந்தத்தனைய என்பது கலந்தனைய எனவிகாரமாயிற்று.* 4

***3905. தெரிவுற நோக்கினன்,தெரிவை***
***மெய் அணி; எரிகனல் எய்திய***
***மெழுகின் யாக்கைபோல்***
***உருகினன் என்கிலம்; உயிருக்கு***
***ஊற்றம் ஆய்ப்***
***பருகினன் என்கிலம்; பகர்வது***
***என்கொல் யாம்?***

***தெரிவை மெய் அணி*** - *சீதையின் மேனியில் முன்னர் அணிந்திருந்த அணிகலன்களை;* ***தெரிவுற நோக்கினன்*** - *(இராமன்) நன்றாகப் பார்த்தான்;* ***எரிகனல் எய்திய*** - *(பார்த்த அளவில்) எரிகின்ற நெருப்பில் சேர்ந்த;* ***மெழுகின்*** - *மெழுகினாலான;* ***யாக்கை போல்*** - *உடம்பு போல;* ***உருகினன் என்கிலம்*** - *உருகினான் என்று சொல்ல வல்லோம் அல்லேம்;* ***உயிர்க்கு*** - *(அவ்வணிகலன்களாகிய அமுதைத்) தன் உயிர்க்கு;* ***ஊற்றம் ஆய்*** - *வலிமை தருவதாகக் கருதி;* ***பருகினன் என்கிலம்*** - *பருகினான் என்றும் சொல்ல வல்லோம் அல்லேம்;* ***யாம் பகர்வது என் கொல்*** - *நாங்கள் (இராமன் அடைந்த நிலையைப் பற்றிச்) சொல்லக் கூடியது யாது உளது?*

*இராமன் அணிகலன்களைக் கண்ட மாத்திரத்தே சீதையின் அணிகலன்கள் என அறிந்துகொண்டதால் நெருப்பிலிட்ட மெழுகு போல உடல் உருகி, அவற்றைத் தனது உயிர்க்கு ஆதாரமாகவும் கொண்டனன். இருவகையினுள் ஒன்றைத் துணிந்து கூறமுடியாமையால் கம்பர் 'என்கிலம்' என இரண்டிடத்தும் பயன்படுத்தினார். இராமன் அடைந்த உணர்வு நிலை எம்மனோரால் சொல்லக்கூடியதாயில்லை என்பது கருத்து. 'பருகினன்' என்றதால் அணிகலன்களாகிய அமுது என உரை விரிக்கப்பட்டது. ஆபரணங்களைக் கண்ட இராமன் நிலையை அனுமன் சீதையிடம் "கொற்றவற்கு, ஆண்டுக் காட்டிக் கொடுத்த போடு, அடுத்த தன்மை, பெற்றியின் உணர்தற்பாற்றோ? உயிர்நிலை பிறிதும் உண்டோ?" (5262) எனக் கூறியுள்ளமையும் காண்க. ஆய் - ஆக; எச்சத்திரிபு. பருகினன் - பருக முடியாததைப் பருகினன் என்றது இலக்கணை. தெரிவை - 'பெண்' என்னும் பொது நிலையில் சீதையைக் குறித்தது. இவ்வாறு இன்றித் 'தெரிவைப்பருவம் உடைய சீதை' எனக் கொள்வாரும்உளர்.* 5

***3906. நல்குவதுஎன் இனி? நங்கை கொங்கையைப்***
***புல்கிய பூணும், அக் கொங்கை போன்றன;***
***அல்குலின் அணிகளும், அல்குல் ஆயின;***
***பல் கலன் பிறவும், அப் படிவம் ஆனவே.***

***நங்கை***- *பிராட்டியின்;* ***கொங்கையைப் புல்கிய பூணும்*** - *தனங்களைத் தழுவியவாறு அணியப்பெற்றிருந்த ஆரம் முதலிய அணிகலன்களும்;* ***அக்கொங்கை போன்றன*** - *(இராமபிரானுக்கு) அப்பிராட்டியின் தனங்கள் போலத் தோன்றின;* ***அல்குலின் அணிகளும்*** - *அல்குலின்மீது அணியப் பெற்ற மேகலை முதலிய அணிகலன்களும்;* ***அல்குல் ஆயின*** - *அல்குல் போன்றன ஆயின;* ***பல்கலன் பிறவும்*** - *மற்ற அவயவங்களில் அணிப்பெற்ற பிற அணிகலன்களும்;* ***அப் படிவம்***

***ஆனவே*** - *அந்தந்த அவயவங்களாகவே தோன்றின;* ***இனி நல்குவது என்*** - *மேலும் அந்த அணிகலன்கள் இராமனுக்குச் செய்யக்கூடியது யாது?*

*ஆரம், மேகலை முதலிய அணிகலன்களைப் பார்த்த போது அவறறை அணிந்த சீதையின் அவயவங்கை நேரிற் கண்டாற் போன்ற ஆறுதலை இராமன் அடைந்தான் என்பது கருத்தாகும். 'என்' என்னும் வினா இங்கே இன்மை குறித்தது. இப்பாடலில் அணிகலன்கள் அவயவங்களாகவே தோன்றினமையால் மயக்கவணி.* 6

***3907 . விட்டபேர் உணர்வினை***
***விளித்த என்கெனோ?***
***அட்டன உயிரை அவ்***

***அணிகள் என்கெனோ?***
***கொட்டின சாந்து எனக்***
***குளிர்ந்த என்கெனோ?***
***சுடடன என்கெனோ?***
***யாது சொல்லுகேன்?***

***அவ் அணிகள்-*** *அந்த அணிகலன்கள்;* ***விட்ட பேர் உணர்வினை-*** *(இராமனை) விட்டு நீங்கியிருந்த சிறந்த அறிவினை;* ***விளித்த என்கெனோ?-*** *திரும்பி அழைத்தன என்று சொல்வேனோ?* ***உயிரை அட்டன என்கெனோ-*** *(அவனது) உயிரைக் கொன்றன என்று சொல்வேனோ?* ***கொட்டின சாந்து என -*** *(அவன் மீது) மிகுதியாகக் கொட்டப் பெற்ற சந்தனம் போல;* ***குளிர்ந்த என்கெனோ -*** *குளிச்சி செய்தன என்று சொல்வேனோ?* ***சுட்டன என்கெனோ -*** *பிரிவுத் துயரை அதிகமாக்கிச் சுட்டன என்பேனோ?* ***யாது சொல்லுகேன் -*** *என்னவென்று சொல்லுவேன்?*

*அணிகலன்களைக் கண்டதும் இராமன் அடைந்த மாறுபட்ட உணர்ச்சிகளை இப்பாடலில் காணலாம். சீதையின் பிரிவால் இராமனின் பேரறிவு அவனை விட்டு நீங்கியிருந்தது. அவளது அணிகலன்களைக் கண்ட மாத்திரத்தில் அப்பேரறிவு மீண்டு வரலாயிற்று. எனினும் அவ்வணிகலன்கள் அவளை நினைவுபடுத்தித் துன்புறுத்தியதால் அவனை வருத்தி உயிரைக் கொன்றனவாயின. மீண்டும் அவை அப்பிரிவுத் துயரைத் தணித்தனவாகவும் விளங்கின. துயரை அதிகப் படுத்திச் சுடுவனவாயும் விளங்கின. இங்ஙனம் இன்னபடி என்று ஒன்றைத் துணிந்து கூறமுடியாத காரணத்தால் 'யாது சொல்லுகேன்' என்றார். பிரிந்த காலத்தில் பிரிந்த பொருளொடு தொடர்புடையனவற்றைக் காண்கையில் ஒரு கால் தளர்தலும், ஒரு கால் தளர்வு அகன்றிருத்தலும் இயல்பாகும்.*

*சீதையின் அணிகலன்களைக் கண்ட இராமன் அடைந்த மெய்ப்பாடுகளைக் கணையாழி பெற்ற சீதை அடைந்த மகிழ்ச்சிக்கான மெய்ப்பாடுகளோடு ஒப்பிட்டுக் காணலாம். 'மறந்தவர் அறிந்து உணர்வு வந்தனர் கொல் என்கோ. . . . திறம் தெரிவது என்னை கொல், இந்நல் நுதலி செய்கை?" (5291) என்ற அடிகளைக் காண்க. அட்டன, குளிர்ந்த, சுட்டன - பலவின்பால் வினைமுற்று; இப்பாடலில் வந்துள்ள என்கெனோ தன்மை ஒருமை வினைமுற்று நான்கிலும், சொல்கேன் என்ற தன்மை ஒருமை வினைமுற்றிலும் ககர ஒற்று எதிர்கால இடைநிலை. 7*

***3908 . மோந்திட, நறுமலர் ஆன; மொய்ம்பினில்***
***ஏந்திட, உத்தரியத்தை ஏய்ந்தன;***
***சாந்தமும் ஆய், ஒளி தழுவ, போர்த்தலால்,***
***பூந் துகில் ஆய, அப் பூவை பூண்களே.***

***அப்பூவை பூண்கள் -*** *நாகணவாய்ப் பறவை போன்று இனிமையாகப் பேசும் அந்தச் சீதை அணிந்த அணிகலன்கள்;* ***மோந்திட -*** *(இராமன்) முகர்ந்து பார்த்தபோது;* ***நறுமலர் ஆன -*** *நறுமணம் வீசும மலர்கள் போலாயின;* ***மொய்ம்பினில் ஏந்திட -*** *அவற்றைத் தோள்களில் தாங்கிக் கொண்ட போது;* ***உத்தரியத்தை ஏய்ந்தன -*** *மேலாடையை ஒத்தன;* ***ஒளி தழுவ -*** *அவற்றின் ஒளி (இராமன் மீது) படிவதால்;* ***சாந்தமும் ஆய் -*** *சந்தனம்*

*போலவும் ஆகி;* ***போர்த்தலால் -*** *(ஒளியால் உடம்பை) போர்த்தியமையால்;* ***பூந்துகில் ஆய -*** *அழகிய போர்வையும் ஆயின.*

*பிராட்டியின் இயற்கை நறுமணம் மிக்க மேனியில் விளங்கிய அணிகலன்களாதலின், இராமபிரான் அவற்றை முகர்ந்து பார்க்கையில் மணமிகு மலர்களால் இன்பம் செய்தன என்பார், 'மோந்திட நறுமலரான' என்றும், அவற்றை மேலாடை போல இராமன் தோளிலிட்டு மகிழ்ந்தனன் என்பார், 'ஏந்திட உத்தரியத்தை ஏய்ந்தன' என்றும், அவற்றைத் தன் உடலில் எங்கும் படுமாறு தழுவிய தால் சந்தனம் பூசியது போல் விளங்கியது என்பார், 'சாந்தமும் ஆய்' என்றும், அவற்றின் ஒளி மேனி முழுவதும் பரவி போர்வை போர்த்தது போல விளங்கியது என்பார், 'போர்த்தலால் பூந்துகில் ஆய' என்றும் கூறினார். அந்த அணிகலன்கள் பல வகையாய் விளங்கி இராமனுக்கு ஆறுதலின்பம் விளைவித்தமையைக் காணலாம். பூவை - உவமை ஆகுபெயர்; பூந்துகில் - அழகிய சித்திர வேலைப்பாடு அமைந்த துகில் என்றும் கொள்ளலாம். துகில் - ஆடை; இங்கே மேற்போர்வை. 8*

***3909. ஈர்த்தன, செங்கண்***
***நீர் வெள்ளம், யாவையும்;***
***போர்த்தன, மயிர்ப் புறம்***
***புளகம்; பொங்கு தோள்,***
***வேர்த்தன என்கெனோ?***
***வெதும்பினான் என்கோ?***
***தீர்த்தனை, அவ் வழி,***
***யாது செப்புகேன்?***

***செங்கண் நீர் வெள்ளம் -*** *(இராமனின்) சிவந்த இரண்டு கண்களினின்றும் பெருகிய கண்ணீர் வெள்ளம்;* ***யாவையும் ஈர்த்தன -*** *அங்குள்ள எல்லாப் பொருள்களையும் இழுத்துச் சென்றன;* ***மயிர்ப் புளகம்*** *- மயிர்ச் சிலிர்ப்புகள்;* ***புறம் போர்த்தன -*** *மேனி முழுமையும் மூடின;* ***பொங்கு தோள் -*** *பூரிக்கின்ற அவன் தோள்கள்;* ***வேர்த்தன என்கெனோ -*** *வியர்த்தன என்று சொல்வேனோ?* ***வெதும்பினான்***

***என்கோ -*** *பிரிவுத் துயரால் வெப்பமுற்று வாடினான் என்று சொல்வேனோ?* ***அவ்வழி -*** *அப்பொழுது;* ***தீர்த்தனை யாது செப்புகேன் -*** *தூயவனான இராமன் நிலை பற்றி என்ன சொல்வேன்?*

*மயிர்ப்புளகம் புறம் போர்த்தலும், தோள் பொங்குதலும் மகிழ்ச்சியாலும், வியர்த்தலும் வெதும்பலும் துன்பத்தாலும், கண்ணீர் வெள்ளம் பெருகுதல் இரண்டினாலும் விளையக்கூடிய மெய்ப்பாடுகளாம். அவையனைத்தையும் இராமன் ஒருங்கே பெற்றதால் அவன் மகிழ்ந்தானா? அல்லது துன்புற்றானா என ஒன்றைத் துணிந்து கூற இயலாமல் போனதால் 'யாது செப்புகேன்' என்றார். தீர்த்தன் - தூயவன். இராமனைத் 'தீர்த்தன்' என்று அனுமனும் குறித்தல் (5415) காண்க. இப்பாடலில் முதலடி உயர்வு நவிற்சி அணி பொருந்தியது. இறுதி இரண்டு அடிகளில் ஐய அணிஅமைந்துள்ளது. 9*

சுக்கிரீவன் தேற்றுதல்

*3910.* ***விடம் பரந்தனையது ஓர்***
***வெம்மை மீக்கொள,***
***நெடும் பொழுது, உணர்வினோடு***
***உயிர்ப்பு நீங்கிய***
***தடம் பெருங் கண்ணனைத்***
***தாங்கினான், தனது***
***உடம்பினில் செறி மயிர்***
***சுறுக்கென்று ஏறவே.***

***விடம் பரந்து அனையது ஓர் வெம்மை -*** *(உடம்பில்) நஞ்சு பரவினால் போன்றதொரு வெப்பம்;* ***மீக்கொள -*** *மிகுதலால்;* ***நெடும் பொழுது -*** *நீண்ட நேரம்;* ***உணர்வினோடு உயிர்ப்பு*** *- அறிவும் மூச்சும்;* ***நீங்கிய -*** *நீங்கிக் (கீழே விழுபவனான);* ***தடம் பெருங் கண்ணனை -*** *மிகப்பெரிய கண்களை உடைய இராமனை;* ***தனது உடம்பினில் -*** *தனது உடம்பில்;* ***செறிமயிர் சுறுக்கென்று ஏறவே -*** *பொருந்திய முடி சுருக்கென்று அவன் உடம்பில் தைக்கும்படி;* ***தாங்கினான் -*** *(சுக்கிரீவன்) தாங்கிக் கொண்டான்.*

*நஞ்சு பரவுதல் விரைவில் நடைபெறுவதுபோல், பிரிவுத் துயரால் ஏற்பட்ட வெப்பம் விரைந்து தாக்கியதால் இராமன் உணர்வும், உயிர்ப்பும் நீங்கிய நிலையை அடையலுற்றான், சுக்கிரீவன் உடம்பிலுள்ள மயிர்களின் வன்மையும் இராமனது மென்மையும் பற்றித் 'தனது உடம்பினில் செறிமயிர் சுருக்கென்று ஏற' என்றார். பரந்தது அனையது என்பது பரந்தனையது என்று விகாரமாயிற்று. தடம் பெரும் - ஒரு பொருட்பன்மொழி. 10*

*3911.* ***தாங்கினன்இருத்தி, அத்***
***துயரம் தாங்கலாது***
***ஏங்கிய நெஞ்சினன்,***
***இரங்கி விம்முவான் -***
***'வீங்கிய தோளினாய்!***
***வினையினேன் உயிர்***
***வாங்கினென், இவ் அணி***
***வருவித்தே' என.***

***தாங்கினன் இருத்தி -*** *(அங்ஙனம் சுக்கிரீவன் இராமனைத்) தாங் கிக்கொண்டு உட்காரவைத்து;* ***அத்துயரம் தாங்கலாது -*** *(அப்பெருமா னுக்கு ஏற்பட்ட) அத்துன்பத்தைக் கண்டு பொறுக்கமாட்டாமல்;* ***ஏங்கிய நெஞ்சினன் -*** *வருந்திய மனத்தினனாய்;* ***வீங்கிய தோளினாய் -*** *(இராமனை நோக்கி) 'பருத்த தோள்களை உடையவனே!* ***வினையினேன் -*** *தீவினையுடையேனாகிய நான்;* ***இவ் அணி வருவித்தே -*** *இந்த அணிகலன்களை உம்மிடம் கொண்டு வரச்செய்து;* ***உயிர் வாங்கினென் -*** *உமது உயிரைப் போக்கினேன்';* ***எனா -*** *என்ற கூறி;* ***இரங்கி விம்முவான் -*** *இரங்கி விம்மலுற்று வருந்தினான்.*

*சீதையின் அணிகலன்களைக் கொணர்ந்து காட்டியமையால்தான் இராமன் இவ்வளவு துன்பம் அடைந்தான் ஆதலின், அத்துன்பத்திற்குக் காரணமான தன்னைத்*

*'தீவினையுடையேன்' எனக் குறிப்பிட்டு வருந்தினான் சுக்கிரீவன். தாங்கினன் - முற்றெச்சம்.* *11*

***3912. அயனுடை அண்டத்தின்அப் புறத்தையும்***
***மயர்வு அற நாடி என் வலியும் காட்டி, உன்***
***உயர் புகழ்த் தேவியை உதவற்பாலெனால்;***
***துயர் உழந்து அயர்தியோ, சுருதி நூல் வலாய்?***

***சுருதி நூல் வலாய்*** *- வேதநூல் வல்லோனே!* ***அயனுடை அண் டத்தின்*** *- பிரமாண்டத்திற்கு;* ***அப்புறத்தையும் -*** *அப்பாற்பட்ட இடங்களையும்;* ***மயர்வு அற நாடி -*** *மயக்கம் இல்லாமல் நன்றாகத் தேடி;* ***என் வலியும் காட்டி -*** *என் வலிமையையும் தெரியப்படுத்தி;* ***உன் உயர் புகழ்த் தேவியை -*** *உன் சிறந்த புகழை உடைய தேவியை;* ***உதவற்பா லென்-*** *மீட்டு உன்னிடம் சேர்ப்பிக்கக் கடவேன்;* ***துயர் உழந்து அயர்தியோ -*** *(ஆகவே) துன்பம் அடைந்து தளர்வடைவாயோ? (தளர வேண்டாம்);*

*இராவணன் சீதையை இந்த அண்ட கோளத்திற்கு அப்பால் ஒளித்து வைத்திருந்தாலும் அங்கும் சென்று தேடத் தயாராக இருப்பதை 'அப்புறத்தையும் மயர்வற நாடி' என்றதால் உணர்த்தினான். ஒளித்தவன் யாவனாயினும் அவனை வெல்லும் திறம் தனக்கிருப்பதை 'வலியும் காட்டி' என்று அறிவித்தான். தேடி, வலிமை காட்டிச் சீதையை மீட்டுத் தரத் தானிருக்க இராமன் துன்புற்று வருந்த வேண்டா எனச் சுக்கிரீவன் உரைத்தான்.*

*அயனுடை அண்டம் - பிரமதேவனால் படைக்கப்பெற்ற அண்ட கோளம். 'அண்டத்தின் அப்புறத்தையும்' என்று கூறியதால் அதற்கு உட்பட்ட உலகங்களில் தேடுதல் என்பது சொல்லாமல் பெறப்படுகிறது. 'உயர்புகழ்த்தேவி' எனச் சுக்கிரீவன் குறிப்பிட்டது போலப் 'பெரும்புகழ்ச் சனகியோ நல்லள்' (1352) என வசிட்டரும், 'உயர் புகழ்க்கு ஒருத்தி' (6034) என அனுமனும் கூறினமை காண்க.*

*உடைய என்னும் எச்சம் ஈறு கெட்டு உடை என நின்றது. சுருதி நூல் - சுருதியாகிய நூல் எனப் பண்புத் தொகையாம்.* *12*

***3913. 'திருமகள் அனைய அத்***
***தெய்வக் கற்பினாள்***
***வெருவரச் செய்துள***
***வெய்யவன் புயம்***
***இருபதும், ஈர் ஐந்து***
***தலையும் நிற்க; உன்***
***ஒரு கணைக்கு ஆற்றுமோ,***
***உலகம் ஏழுமோ?***

***திருமகள் அனைய -*** *இலக்குமியை ஒத்த;* ***அத்தெய்வக் கற்பினாள் -*** *தெய்வத்தன்மை பொருந்திய கற்புடைய சீதை;* ***வெருவர செய்து உள -*** *அஞ்சுமாறு அவளுக்குத் தீங்கு செய்துள்ள;* ***வெய்யவன் -*** *கொடியவனான இராவணனுடைய;* ***புயம் இருபதும் -*** *இருபது தோள்களும்;* ***ஈர் ஐந்து தலையும் -*** *பத்துத் தலைகளும்;* ***நிற்க -*** *கிடக்கட்டும்;*

***உன் ஒரு கணைக்கு -*** *உனது ஓர் அம்பிற்கு;* ***உலகம் ஏழும் ஆற்றுமோ -*** *ஏழு உலகங்களும் சேர்ந்தாலும் ஏற்றுத் தாங்கும் வலிமையுடையன ஆகுமோ? (ஆகாது என்றபடி).*

*முன் பாடலில் தன் ஆற்றலைக் கூறிய சுக்கிரீவன், தன் எளிய நிலையுணர்ந்து இராமனின் ஆற்றலை எடுத்துக் கூறுகிறான். சீதை அஞ்சுமாறு தீங்கு செய்த இராவணனின் இருபது தோள்களும், பத்துத்தலைகளும் இராமனது ஒருகணை முன் நிற்கவல்லன அல்ல எனக் கூறினான். தெய்வக் கற்பினாள் - சீதை. ''கற்பெனும் பெயரது ஒன்றும் களி நடம் புரியக் கண்டேன்'', 'வான் உயர் கற்பினாள்' என்று (6035, 6038). பின்னரும் அனுமன் குறித்தமை காண்க. 'கற்புக் கடம் பூண்ட இத்தெய்வம் அல்லது, பொற்புடைத் தெய்வம் யாங்கண்டிலம்' (சிலப் - 12 - 15) என்ற அடிகள் ஒப்பு நோக்கத்தக்கன. 'தெய்வக் கற்பினாள்' என்றதால் சீதைக்கு எந்தத் தீங்கும் வராது' என்றும் சுக்கிரீவன் ஆறுதல் கூறினன்எனலாம். 13*

***3914. 'ஈண்டு நீ இருந்தருள்;***
***ஏதொடு ஏழ் எனாப்***
***பூண்ட பேர் உலகங்கள்***
***வலியின் புக்கு, இடை***
***தேண்டி, அவ் அரக்கனைத்***
***திருகி, தேவியைக்***
***காண்டி; யான் இவ்***
***வழிக் கொணரும் கைப்பணி.***

***ஈண்டு நீ இருந்தருள் -*** *இங்கேயே நீ இருந்தருள்வாய்!* ***ஏழொடு ஏழ் எனாப் பூண்ட -*** *பதினான்கு என்னும் தொகை கொண்ட;* ***பேர்***

***உலகங்கள் -*** *பெரிய உலகங்களிலெல்லாம்;* ***வலியின் புக்கு -*** *வலிமையினால் புகுந்து;* ***இடை தேண்டி -*** *அவ்விடங்களில் எல்லாம் பிராட்டியைத் தேடி;* ***அவ் அரக்கனைத் திருகி -*** *அந்த அரக்கனான இராவணனைத் தலை முறித்து;* ***தேவியை இவ்வழிக் கொணரும் -*** *தேவியாகிய பிராட்டியை இவ்விடம் யான் கொண்டு வந்து சேர்க்கும்;* ***கைப்பணி -*** *என் குற்றேவல் தொழிலை;* ***காண்டி -*** *காண்பாயாக.*

*பெருவலி படைத்த சிறந்த வீரனான இராமன் இச்சிறிய செயலைச் செய்வதற்குச் செல்ல வேண்டுவதில்லை அவன் இவ்விடமே இருக்கலாம் என்பதால், 'ஈண்டு நீ இருந்தருள்' என்றான். இராவணன் எங்கிருப்பினும் அவனைக் கண்டு பிடித்து, அவனைக் கொன்று சீதையை மீட்டுக் கொணர்தல் தன்னால் இயலும் என்பதாலும் 'ஈண்டு நீ இருந்தருள் என்றான். இந்தச் செயல் தன் ஆற்றலுக்கு எளிதே என்பதால் 'கைப்பணி' என்றான். கைப்பணி- சிறுதொண்டு, குற்றேவல், இராமனுக்குச் செய்யும் கைங்கர்யம் எனும்பொருளில் வருவது. 'கைத்தொழில் செய்வேன் என்று கழல் இணை வணங்குங் காலை' (4142) என்ற அனுமன் கூற்று ஈண்டு நோக்கத்தக்கது. கை- சிறுமையை உணர்த்தும் சொல். இடை - இடம், தேண்டி - தேடி என்பதன்விரித்தல் விகாரம்; காண்டி -ஏவலொருமை. 14*

*3915 . 'ஏவல் செய் துணைவரேம்,*
*யாங்கள் ; ஈங்கு, இவன்,*
*தா அரும் பெரு வலித்*
*தம்பி; நம்பி! நின்*
*சேவகம் இதுஎனின், சிறுக*
*நோக்கல் ஏன்?*
*மூவகை உலகும் நின்*
*மொழியின் முந்துமோ?*

**நம்பி** - ஆடவரில் சிறந்தவனே! **யாங்கள்** - நாங்கள்; **ஏவல்செய் துணைவரேம்** - நின் ஏவல் வழியில் பணி செய்யும் தோழர்களாக உள்ளோம்; **ஈங்கு இவன்** - இங்கே உள்ள இலக்குவனோ; **தா அரும் பெரு வலித்தம்பி**- அழித்தற்கரிய பெரிய வலிமை படைத்த தம்பியாக உள்ளான்; **நின் சேவகம்**- உனது வீரம்; **இது எனில்** - இத்தன்மைத்து என்றால்; **சிறுக நோக்கல் என்**- (உன்னை நீ) குறைபடக் கருதுவது ஏனோ? **மூவகை உலகும்** - மூன்றுஉலகங்களும்; **நின் மொழியின் முந்துமோ** - நின் கட்டளையைக்கடக்குமோ? (கடவாது).

ஏவிய பணியைச் செய்ய வானரர்கள் இருக்க, தம்பி அளத்தற்கரிய வலிமையுடையவனாய் அருகே இருக்க, உலகமேழும் தன் ஒரு கணைக்கு ஆற்றா வலிமை தன்னிடம் இருக்க, இராமன் வலியற்றான் போலவும், துணையில்லாதவன் போலவும் சோர்வடைதல் தகாது என்று சுக்கிரீவன் உரைத்தான் என்க. சேவகம் - வீரம். ஏழுமராமரங்களையும் ஒரம்பால் துளைத்த செயல் நினைந்து 'இது' எனப் பேசினான். வீரன் என்ற பொருளில் இராமனைச் 'சேவகன்' என்றே பல இடங்களில் கம்பர் கூறுவது காண்க. 'தீராய் ஒரு நாள் வலி சேவகனே' என்ற சீதையின் கூற்றும் (5232)

'சேவகன்தேவி' என்ற அனுமன் உரையும் (5861) காண்க. துணைவரேம் - தன்மைப் பன்மை விகுதி பெற்று வந்தது; சிறுக நோக்கல்' - எளியவனாகப் பாவித்தல், மூவகை உலகு - விண், மண், பாதலம் என மூவகைப்பட்டன. உலகு - இடவாகுபெயர். 15

*3916. 'பெருமையோர் ஆயினும்,*
*பெருமை பேசலார்;*
*கருமமே அல்லது பிறிது*
*என் கண்டது?*
*தருமம், நீ அல்லது*
*தனித்து வேறு உண்டோ?*
*அருமை ஏது உனக்கு*
*நின்று அவலம் கூர்தியோ?*

**பெருமையோர் ஆயினும்** - பெருமைக்கு உரியவர்கள் ஆனாலும்; **பெருமை பேசலார்** - தங்கள் பெருமையைத் தாங்களே பேச மாட்டார்கள்; **கருமமே அல்லது** - அவர்கள் தம் கடமையைச் செய்வதல்லது; **பிறிது என் கண்டது** - அறிந்தது வேறு என்ன? (ஒன்றுமில்லை); **தருமம் நீ அல்லது** - தருமம் என்பது உன்னையன்றி; **தனித்து வேறு**

***உண்டோ* -** *தனியாக வேறொன்று உளதோ? (இல்லை);* ***உனக்கு அருமை ஏது* -** *உனக்குச் செய்தற்கரிய செயல் எது? (ஒன்றும் இல்லை);* ***நின்று அவலம் கூர்தியோ* -** *இவ்வாறாகவும், திகைத்து நின்று துயர் மிகுந்து வருந்தக் கடவையோ?*

*பெரியோர்கள் தம் ஆற்றலைச் செயலில் காட்டுவரே அன்றிப் பேசமாட்டார்கள். ஆதலின் இராமன் தன் பெருமையைச் செயலால் காட்ட வேண்டுமேயன்றி அவலம் கூர்தல் ஏற்றதன்று என்றான், சுக்கிரீவன். 'பணியுமாம் பெருமை' என்பதால் பெரியவர்கள் அடக்கத்தால் தம் பெருமையைத் தாமே பேசுதல் இல்லை. அவர்கள் சிந்தை காரியத்தில் மட்டுமே இருக்குமாதலின் அவர்கள் வேறு எதனையும் நோக்குதல் இல்லை. அனுமன் தன் பெருமை பேசாமையை 'விளம்பான் தான்தன் வென்றியை உரைப்ப வெள்கி' (6015) என்ற அடி உணர்த்தும். 'தருமமே நீ அல்லது வேறுண்டோ?' என்ற கருத்தை 'அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான்' (1249) என்ற வசிட்டர் கூற்றிலும், "உண்டு எனும் தருமமே உருவமா உடைய நின்கண்டு கொண்டேன்" (4066) என்ற வாலி கூற்றிலும் காண்க.*

*பெருமையோர் ஆயினும் - உயர்வு சிறப்பும்மை, கூர்தியோ என்பதில் 'கூர்' மிகுதிப் பொருளை உணர்த்தும் உரிச்சொல். 16*

***3917. 'முளரிமேல் வைகுவான், முருகன்***
***தந்த அத்***
***தளரியல் பாகத்தான், தடக்***
***கை ஆழியான்,***
***அளவிஒன்று ஆவரே***
***அன்றி, - ஐயம் இல்***
***கிளவியாய்! - தனித் தனி***
***கிடைப்பரோ துணை?***

***ஐயம் இல் கிளவியோய்* -** *சந்தேகத்திற்கு இடமில்லாத சொற்களைப் பேசும் ஐயனே!* ***முளரி மேல் வைகுவான்* -** *தாமரை மலர்மீது வாழும் நான்முகன்;* ***முருகன் தந்த* -** *முருகக் கடவுளை அளித்த ;* ***அத்தளிரியல் பாகத்தான்* -** *அழகிய தளிர் போன்ற இயல்புடைய பார்வதியை ஒரு பக்கத்திலே உடையவனான சிவபிரான்;* ***தடக்கை ஆழியான்* -** *தன் பெரிய கையில் சக்கரத்தை உடைய திருமால்;* ***ஒன்று அளவி* -** *(ஆகிய மூவரும்) ஒன்றாக இணைந்து;* ***ஆவரே அன்றி* -** *நினக்கு ஒப்பாவரே யன்றி;* ***தனித்தனி*-** *ஒவ்வொருவராகத் தனித்து;* ***துணைக் கிடப்பரோ* -** *ஒப்பாக அமைவார்களோ? (அமைய மாட்டார்கள்).*

*இப்பாடலில் இராமபிரான் மும்மூர்த்திகளுள் ஒருமித்த பரம்பொருள் என்பது பெறப்படுகிறது. 'முப்பரம் பொருளுக்கு முதல்வன்' (313). 'முப்பரம் பொருளிற்குள் முதலை (1227); என்ற அடிகளாலும் விராதன், கவந்தன், வாலி முதலானோர் வாழ்த்துக்களாலும் இக்கருத்து வலியுறுதல் காணலாம். கடவுள் மூவர் தனித்தனியே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில் புரிய இராமன் மூன்று தொழில்களையும் ஒருங்கே இயற்றும் ஆற்றலுடையவன் எனச் சுக்கிரீவன் இராமனைப் பாராட்டினான் என்க. 'ஐயமில் கிளவியாய்' எனுந் தொடர் இராமனது சொல்லாற்றலைப் புலப்படுத்தும். இராமனைப் பொறுத்தவரை ஒரு சொல், ஒரு இல்,*

*ஒரு வில் உடையவன் என்ற கூற்று பிற இலக்கியங்களில் காணக்கிடக்கின்றது. முளரி - தாமரை, முதலாகுபெயராய்ப் பூவை உணர்த்திற்று. முட்களை அடியில் உடையது என்னும் பொருளில் தாமரையைக் குறிப்பதால் இது காரண இடுகுறிப்பெயருமாம். அத்தளிரியல் - அ உலகறிசுட்டு. தளிரியல் - உவமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; கிடைப்பரோ - ஓகாரம்எதிர்மறை. 17*

***3918 . 'என்னுடைச்சிறு குறை***
***முடித்தல் ஈண்டு ஒரீஇப்***
***பின்னுடைத்து ஆயினும்***
***ஆக! பேதுறும்***
***மின் இடைச் சனகியை***
***மீட்டு, மீள்துமால் -***
***பொன்னுடைச் சிலையினாய்! -***
***விரைந்து போய்' என்றான்.***

***பொன்னுடைச் சிலையினாய் -*** *அழகிய வில்லை உடையனே!* ***என்னுடைச் சிறுகுறை -*** *என்னுடைய சிறிய குறையை;* ***முடித்தல் -*** *நிறைவேற்றுதல் என்பதை;* ***ஈண்டு ஒரீஇ -*** *இப்பொழுது தவிர்ந்து;* ***பின்னுடைத்து ஆயினும் ஆக -*** *பின்னர் மேற்கொள்ளப் படுவதாயினும்*

*ஆகட்டும்;* ***விரைந்து போய் -*** *விரைந்து சென்று;* ***பேதுறும்மின் இடைச் சனகியை -*** *இராவணனால் துன்புற்று வருந்தும் மின்னல் போன்ற இடையை உடைய சீதையை;* ***மீட்டு மீள்தும் -*** *(அவனிடமிருந்து) மீட்டுக் கொண்டு திரும்புவோம்;* ***என்றான் -*** *என்று (சுக்கிரீவன்) சொன்னான்.*

*சிறுகுறை என்றது வாலியை வென்ற தன் மனைவி உருமையை மீட்டுத் தருதலை. இராமலக்குவரின் திறமையைக் கண்டதால் வாலியை வெல்லும் செயல் அவர்களுக்கு எளிதாகும் திறத்தால் 'சிறுகுறை' எனக் குறித்தான். தன் துயரினும் இராமன் துயரம் பெரிது எனக் கருதியதாலும் தன் குறையைப் பின்னர் மேற் கொள்ளக்கூடிய 'சிறுகுறை' எனவும் கருதினான் எனலாம். இராமனின் துயரம் போக்குதலே தான் முதலில் செய்ய வேண்டியது என்ற சுக்கிரீவனின் கருத்து இங்கு நோக்கத்தக்கது. மின்இடை - ஒளியாலும், மெல்லிய வடிவாலும் இடைக்கு மின்னல் உவமை. ஒரீஇ - சொல்லிசை அளபெடை; மீள்துமால் - ஆல் அசை. 18*

*இராமன் சிறிது தெளிந்து, பேசுதல்*

***3919. எரி கதிர்க் காதலன்***
***இனைய கூறலும்,***
***அருவி அம் கண்***
***திறந்து, அன்பின் நோக்கினான்;***
***திரு உறை மார்பனும்,***
***தெளிவு தோன்றிட,***

***ஒருவகை உணர்வு வந்து,***
***உரைப்பது ஆயினான்:***

***எரிகதிர்க் காதலன் -*** *சுடுகின்ற கதிர்களை உடைய சூரியன் மக னான சுக்கிரீவன்;* ***இனைய கூறலும் -*** *இவ்வாறான வார்த்தைகளைச் சொன்ன அளவில்;* ***திரு உறை மார்பனும் -*** *இலக்குமியாம் திருமகள் தங்கிய மார்பினை உடைய இராமனும்;* ***தெளிவு தோன்றிட -*** *தெளிவு பிறக்க;* ***ஒரு வகை உணர்வு வந்து -*** *ஒருவாறு தன் நினைவு வரப் பெற்று;* ***அருவி அம் கண்திறந்து -*** *அருவிபோல் கண்ணீர் பெருக்கும் தன் அழகிய கண்களைத் திறந்து;* ***அன்பின் நோக்கினான் -*** *அன்போடு (சுக்கிரீவனைப்) பார்த்து;* ***உரைப்பது ஆயினான் -*** *பின்வருமாறு பேசலுற்றான்.*

*சோர்வடைந்து கண்களை மூடியவண்ணம் இருந்த இராமன் சுக்கிரீவன் கூறியவற்றைக் கேட்டதும் கண்களைத் திறந்து, அன்பொடு பார்த்துப் பேசலானான் என்பதாம். திரு உறை மார்பன் - திருமகள் தங்கிய மார்பினை உடைய திருமாலின் அவதாரமான இராமபிராமன். 'அகல கில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பா' என்பது திருவாய்மொழி (6-10-10). எரிகதிர் - சூரியன் - வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. காதலன் -மகன். 19*

***3920. 'விலங்கு எழில்தோளினாய்,***
***வினையினேனும், இவ்***
***இலங்கு வில் கரத்திலும்,***
***இருக்கவே, அவள்***
***கலன் கழித்தனள்; இது***
***கற்பு மேவிய***
***பொலன் குழைத் தெரிவையார்***
***புரிந்துளோர்கள் யார்?***

***விலங்கு எழில் தோளினாய் -*** *மலை போன்ற அழகிய தோள்களை உடையவனே!* ***வினையினேனும் -*** *தீவினை உடையேனாகிய யானும்;* ***இவ் இலங்கு வில்லும் -*** *விளங்குகின்ற இந்த வில்;* ***கரத்தில் இருக்கவே -*** *என் கரங்களில் இருக்கும் போதே;* ***அவள் -*** *அந்த சீதை;* ***கலன் கழித்தனள் -*** *தன் அணிகலன்களை நீக்கினாள்;* ***கற்பு மேவிய -*** *கற்பு நெறியை மேற்கொண்ட;* ***பொலன் குழைத் தெரிவையர் -*** *பொன்னாலான குழையணிந்த மகளிருள்;* ***இது புரிந்துளோர்கள் யார் -*** *இத்தகைய செயல் செய்தவர்கள் யார்? (எவருமில்லை).*

*கணவன் உயிருடன் இருக்கையில் கற்புடைய மகளிர் தம் அணிகலன்களைக் களைதல் இல்லை. அங்ஙனமிருக்கவும் சீதை கலன் களைந்த நிலைக்கு இராமன் பெரிதும் வருந்தினான். தன்னைத் தானே வெறுத்துக்கொண்ட நிலையில் 'வினையினேன்' என்றனன். இராமன், கடவுள்நிலையில் வினைத்தொடர்பற்றவனாயினும், இம்மனித உருவில் சீதையைப் பிரிந்த துயரால், மானிட உணர்விற்கு ஏற்ப 'வினையினேன்' என உரைத்தனன். தன் கையில் வில் பெற்றும், சீதை துயர் களைய முடியாது போனமையின் 'இலங்கு வில் கரத்தில் இருக்க' என்று தன்னை இழித்துக் கூறிக் கொண்டான்.*

*மகளிர் கலன் கழித்தல் மங்கலமற்ற செயல் எனினும், பிராட்டி கலன்களை நீக்கியது அவளுக்கு மங்கலமாக முடிந்ததை அனுமன் "இற்றை நாள் அளவும், அன்னாய்! அன்று நீ இழித்து நீத்த மற்றை நல் அணிகள் காண், உன் மங்கலம் காத்த மன்னோ!" (5262) என்ற சிறப்பமையக் கூறியது ஈண்டுக் கருதத்தக்கது. விலங்கு - மலை, அவள் என்றதுசீதையை. 20*

***3921. 'வாள் நெடுங்கண்ணி என்***
***வரவு நோக்க, யான்,***
***தாள் நெடுங் கிரியோடும்,***
***தடங்கள் தம்மொடும்,***
***பூணொடும், புலம்பினென் பொழுது***
***போக்கி, இந்***
***நாண் நெடுஞ் சிலை சுமந்து,***
***உழல்வென்; நாண் இலேன்.***

***வாள் நெடுங்கண்ணி** - வாள் போன்ற கூர்மையும் ஒளியும் படைத்த நீண்ட கண்களை உடைய சீதை; **என் வரவு நோக்க** - யான் வந்து மீட்பேன் என்று என் வரவுநோக்கி வருந்தியிருக்க; **யான்** - யானோ; **தாள்நெடும் கிரியொடும்** - அடிவாரங்களை உடைய நெடிது உயர்ந்த மலைகளொடும்; **தடங்கள் தம்மொடும்** - நீர்நிலைகளொடும்; **பூணொடும்** - அவள் களைந்து இட்ட அணிகலன்களோடும்; **புலம்பினென் பொழுது போக்கி** - புலம்பியவனாய்ப் பொழுதைக் கழித்து; **நாண் நெடுஞ் சிலை சுமந்து** - நாணொடு விளங்கும் நெடிய வில்லைச் சுமந்து கொண்டு; **உழல்வென்** - திரிபவனாய்; **நாண் இலேன்** - வெட்கமில்லாதவனானேன்.*

*தன்னை மீட்க இராமன் எப்படியும் வருவான் என்ற நம்பிக்கையுடன் எதிர் நோக்குவாள் என்பதால் 'என் வரவு நோக்க' என்றான். "சுருதி நாயகன், வரும் வரும்' என்பது ஓர் துணிவால், கருதி மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள்' (5077) எனப் பின்னர் வருவது காண்க. மலைகளொடும், நீர்நிலைகளொடும், அணிகலன்களொடும் புலம்பிப் பொழுதை வீணாகக் கழித்துக் கொண்டு, வில்லைப் பெற்றும் சீதையை மீட்காமல் இருத்தலால் 'நாணிலேன்' எனத் தன்னையே இழித்துக் கூறிக்கொண்டான், பகைவரை வெல்லப் பயன்படவில்லையெனில் நாணடை வில்லும் வீரர்க்குச் சுமையாகும் என்பதால் 'சுமந்து' என்றான். நாண் - முன்னது வில்லின் நாண்; பின்னது நாணம் என்னும் பண்பைக் குறிக்கும். நாணிலாதவன் என்றதால் நாணுடை வில்லும் சுமையாயிற்று என்பதில் உள்ள சொல் நயம் காண்க. 'வன்தாள் சிலை ஏந்தி, வாளிக் கடல் சுமந்து, நின்றேனும் நின்றேன்; நெடுமரம்போல் நின்றேனே"; 'வில் உடையேன் சடாயு முன்னர் இராமன் புலம்புவதும் காண்க. வில் சுமையாவதை 'வில்லும் சுமக்கப் பிறந்தேன்' (1740) என்ற இலக்குவன் கூற்றும் உணர்த்தும். சீதையின் பிரிவால் இராமன் மலையொடு புலம்பி இருந்தமை 'குன்றே கடிது ஓடினை; கோமளக் கொம்பர் அன்ன என் தேவியைக் காட்டுதி' (5313) என்பதாலும், தடங்களோடு புலம்பி இருந்தமை, "வண்ண நறுந் தாமரை மலரும், வாசக் குவளை நாள் மலரும், புண்ணின் எரியும் ஒரு நெஞ்சம் பொதியும் மருந்தின், தரும் பொய்காய்! கண்ணும் முகமும் காட்டுவாய்; வடிவும் ஒரு கால் காட்டாயோ? (3732) என்பதனாலும் அறியலாம்.*

*உழல்வென் - வெளிப்படையாய் எங்கும் சுற்றித் திரிதலை உணர்த்தும். தாள் - மலையின் அடிவாரம். நாண் என்ற சொல்லை வேறொரு பொருளில் மீண்டும் பயன்படுத்தியதால் ஈற்றடி சொல்பொருள் பின்வருநிலைஅணி. 21*

***3922. 'ஆறுடன் செல்பவர், அம்***
***சொல் மாதரை***
***வேறு உளார் வலி செயின்,***
***விலக்கி, வெஞ் சமத்து***
***ஊறுற, தம் உயிர்***
***உகுப்பர்; என்னையே***
***தேறினள் துயரம்,***
***நான் தீர்க்ககிற்றிலேன்.***

***ஆறு உடன் செல்பவர் -*** *வழியில் உடன் செல்பவர்களான;* ***அம் சொல் மாதரை -*** *அழகிய மொழியினை உடைய மகளிரை;* ***வேறு உளார் வலி செயின் -*** *வேறு எவரேனும் இடையில் வந்து துன்பம் செய்வார்களாயின்;* ***விலக்கி -*** *அதனை விலக்கி;* ***வெம்சமத்து ஊறு உற -*** *(அவ்வாறு விலக்குவதால்) ஏற்படும் கொடிய போரில் அவர்களுக்கு ஆபத்து உண்டாக;* ***தம் உயிர் உருப்பர் -*** *தமது உயிரையும் அளிப்பர்;* ***என்னையே தேறினள் துயரம் -*** *(உலக இயல்பு அங்ஙனம் இருக்க) என்னையே நம்பியவளான சீதையின் துயரத்தை;* ***நான் தீர்க்ககிற்றிலேன் -*** *நான் தீர்க்கும் ஆற்றல் இல்லாதவனாய் உள்ளேன்.*

*தொடர்பில்லாதவராயினும் மகளிர்க்குப் பிறரால் துன்பம் வரின் தம் உயிரையும் பொருட்படுத்தாது உதவுதல் நல்லார் கடமையாகக் கொண்டிருக்க, தொடர்புடையவளாய் இராமனையே நம்பி வந்திருக்கும் சீதையின் துயர் களையும் ஆற்றல் இல்லாது நிற்கும் நிலை குறித்து அவன் இவ்வாறு வருந்திப் பேசினான். பிறரால் துன்புறுத்தப்படும் மகளிரைக் காக்கும் ஆடவரின் சிறப்பிற்கு ஓர் உதாரணமாகச் 'சடாயு' விளங்கினான். 'தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு' (5305) என அனுமனாலும் 'சரண் எனக்கு யார்கொல்?' என்று சானகி அழுது சாம்ப, 'அரண் உனக்கு ஆவென்; வஞ்சி! அஞ்சல்!' என்று அருளின் எய்தி, முரணுடைக் கொடியோன் கொல்ல, மொய்யமர் முடித்து, தெய்வ மரணம் என்தாதை பெற்றது என் வயின் வழக்கு அன்று ஆமோ? (6477) என இராமனாலும் சடாயு சிறப்பிக்கப்படுவதைக் காண்கிறோம். வழியில் மகளிர்க்கு வரும் இடுக்கண் நீக்காமை பழிக்குரிய செயலாவதை 'ஆறு தன்னுடன் வரும் அம் சொல் மாதரை, ஊறுகொண்டு அலைக்க, தன் உயிர் கொண்டு ஓடினோன்' என்ற பரதன் கூற்று உணர்த்தும் (2207).*

*ஊறு - துன்பம், ஆபத்து; முதனிலை திரிந்த தொழிற் பெயர். தீர்க்க கிற்றிலேன் - இதில் 'கில்' என்பது ஆற்றலை உணர்த்தும் இடைநிலை. 22*

***3923. 'கருங் கடல் தொட்டனர்; கங்கை தந்தனர்;***
***பொரும் புலி மானொடு புனலும் ஊட்டினர்;***
***பெருந் தகை என் குலத்து அரசர்; பின், ஒரு***
***திருந்திழை துயரம் நான் தீர்க்ககிற்றிலேன்.***

***பெருந்தகை -*** *பெருமைக்குரிய குணங்களை உடைய;* ***என் குலத்து அரசர் -*** *என் குலத்து முன்னோராய அரசர்கள்;* ***கருங்கடல் தொட்டனர் -*** *பெரிய கடலைத்*

*தோண்டினர்;* ***கங்கை தந்தனர் -*** *வானிலிருந்து நிலவுலகிற்குக் கங்கையைக் கொண்டு வந்து தந்தனர்;* ***பொரும் புலி மானொடு -*** *போர் செய்யும் புலியோடு மானையும்;* ***புனலும் ஊட்டினர் -*** *ஒரு துறையில் பகைமையின்றி நீர் உண்ணச் செய்தனர்;* ***பின் நான் -*** *அத்தகைய அரசர்களுக்குப் பின்னர் வந்த நானோ;* ***ஒரு திருந்திழை துயரம் -*** *திருந்திய நகைகளை அணிந்த ஒரு பெண்ணின் துயரத்தை;* ***தீர்க்க கிற்றிலேன் -*** *நீக்கும் திறமையற்றவனானேன்.*

*தன் குலத்து முன்னோர்கள் கடலைத் தோண்டுதலும், கங்கையைக் கொணர்தலும், புலியும் மானும் ஒரு நீர்த்துறையில் நீர் உண்ணச் செய்தலும் ஆகிய அரிய செயல்களைச் செய்திருக்க, அத்தகு மரபில் வந்த தானோ தன் மனைவியின் துயர்*

*கூடப் போக்கமுடியாது இருப்பதை எண்ணி இராமன் இரங்கிப் பேசினன் என்க. கடல் தொட்டவர் சகரர். புலி மானொடு ஊட்டியவன் - சூரிய குல அரசன் மாந்தாதா.*

*குலமுன்னோர் பெருமை இந்நூலிலே குலமுறை கிளத்து படலத்தும் பேசப்பட்டது. "இவர் குலத்தோர் உவரி நீர்க்கடல் தோட்டார் எனின், வேறு கட்டுரையும் வேண்டுமோ?"; 'பூ நின்ற மவுலியையும் புக்கு அளைந்த புனல் கங்கை, வான் நின்று கொணர்ந்தானும், இவர் குலத்து ஓர் மன்னவன் காண்!"; "புலிப்போத்தும் புல் வாயும், ஒரு துறையில் நீர் உண்ண உலகு ஆண்டான் உளன் ஒருவன்" (644, 645, 641) என்ற அடிகளைக் காண்க. இராமன் முன்னோர்களைச் சோழர்குல முன்னோர்களாகக் கருதி, மேற்கண்ட அருஞ்செயல்ளைச் சோழ முன்னோர் செயல்களாகப் பாராட்டிப் பேசுவதைக் கலிங்கத்துப் பரணி, மூவருலா, ஆகிய நூல்களிலும், சோழர் காலக் கல்வெட்டுக்களிலும், சேப்பேடுகளிலும் காணலாம். திருந்திழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்தஅன்மொழித்தொகை.* *23*

***3924. 'இந்திரற்கு உரியதுஓர்***
***இடுக்கண் தீர்த்து, இகல்***
***அந்தகற்கு அரிய போர்***
***அவுணன் - தேய்த்தனன்,***
***எந்தை; மற்று, அவனின் வந்து***
***உதித்த யான், உளேன்,***
***வெந் துயர்க் கொடும்***
***பழி வில்லின் தாங்கினேன்.***

***என் தந்தை-*** *எனது தந்தை (தசரத சக்கரவர்த்தி);* ***இந்திரற்கு உரியது ஓர் இடுக்கண் -*** *இந்திரனுக்கு நேரிட்டதொரு பெரிய துன்பத்தை;* ***தீர்த்து -*** *நீக்கி;* ***அந்தகற்கு இகல் அரிய -*** *யமனும் எதிர்த்து நிற்க அரியவனான;* ***போர் அவுணன் -*** *போரில் வல்ல சம்பரன் எனும் அரக்கனை;* ***தேய்த்தனன்-*** *அழித்திட்டான்;* ***அவனின் வந்து உதித்த யான் -*** *அவனிடத்து வந்துதோன்றிய யானோ;* ***வெந் துயர்க் கொடும் பழி*** *- பெரிய துன்பத்தைத் தரும்கொடும் பழியை;* ***வில்லின் -*** *வில்லுடனே;* ***தாங்கினேன் உளேன் -*** *சுமந்தவனாய் இருக்கின்றேன்.*

*தசரதன் வெல்லுதற்கரிய சம்பரன் எனும் அரக்கனைக் கொன்று இந்திரன் துயர் போக்க, அவன் மகனான தன்னால் அரக்கனைக் கொன்று சீதை துயர் துடைக்க இயலவில்லையே என இராமன் வருந்தினான். பயன்படாது சுமையான வில்லுடன் கொடும்பழியும் சுமையாயிற்று என்றவாறு. இடுக்கண் தீர்த்து அவுணன் தேய்த்தான் என்பது அவுணனைத் தேய்த்து இடுக்கண் தீர்த்தான் என்ற பொருளில் அமையும். 'கொடும்பழி வில்லின் தாங்கினேன்' என்றது 'நாண் நெடுஞ்சிலை சுமந்து உழல்வென்' என முன்னர் வந்தமை (3921) போன்றது. தசரதன் சம்பரனை வென்ற இந்திரன் துயர் நீக்கிய செய்தியைக் "குன்று அளிக்கும் குல மணித் தோள் சம்பரனைக் குலத்தோடும் தொலைத்து நீ கொண்டு அன்று அளித்த அரசுஅன்றோ புரந்தரன் இன்று ஆள்கின்றது அரச!" என்று விசுவாமித்திரரும் (322); 'சம்பரப்போர்த்தனவனைத் தள்ளி, சதமகற்கு, அன்று, அம்*

*பரத்தின் நீங்கா அரச அளித்த ஆழியாய்!" என்று இராமனும் (2437) "தயிர் உடைக்கும் மத்து என்ன உவகை நல சம்பரனைத் தடிந்த அந்நாள்" (2712) என்று சடாயுவும் குறிப்பிடுதல் காண்க. அந்தகன் - கண்ணில்லாதவன் (கருணையற்றவன்) யமன். 24*

***3925. '"விரும்பு எழில் எந்தையார்***
***மெய்ம்மை வீயுமேல்,***
***வரும் பழி" என்று,***
***யான் மகுடன் சூடலேன்;***
***கரும்பு அழி சொல்லியைப்***
***பகைஞன் கைக் கொள,***
***பெரும் பழி சூடினேன்;***
***பிழைத்தது என் அரோ?'***

***விரும்பு எழில் -** யாவரும் விரும்பத்தக்க அழகுடைய; **எந்தையார் -** என் தந்தையாரின்; **மெய்ம்மை வீயுமேல் -** சத்தியம் அழியுமானால்; **வரும் பழி என்று -** அதனால் எனக்குப் பழியுண்டாகும் என்று; **யான் மகுடம் சூடலேன் -** நான் முடிசூடிக் கொள்ளவில்லை; **கரும்பு அழி சொல்லியை -** கரும்பைச் சுவையில் அழியச் செய்யும் இனிமை மிகு சொற்களை உடைய சீதையை; **பகைஞன் கைக்கொள -** பகைவனான இராவணன் கவர்ந்து செல்ல (இப்போது); **பெரும்பழி சூடினேன் -** பெரிய பழியை அணிந்து கொண்டேன்; **பிழைத்தது என் -** நான் பழியினின்று நீங்கியது எவ்வாறு?*

*வாய்மை தவறினால் தந்தைக்கு உண்டாகும் பழிக்கஞ்சி மகுடம் சூடாது வனத்திற்கு வர, வனத்தில் சீதையை அரக்கன் பற்றிச் செல்லத் தனக்குப் பெரும் பழி ஏற்பட்டது என இராமன் வருந்தினான். ஒரு பழி வராமல் தடுக்க முயன்றவனுக்கு மற்றொருவகையில் பழி வந்துற்றதால் பழி பெறுவதனின்று தன்னால் தப்பிக்க இயலாதோ என்பதால் 'பிழைத்தது என்?' என்றான்.*

*தன்குல முன்னோர் அருமையை நினைக்கும் இராமன் குலப்பெருமையைக் காப்பதில் கருத்துடையவனாக இருந்தான் என்பதை அறியமுடிகிறது. அதனால் தான் 'பரிதி வானவன் குலத்தையும், பழியையும் பாரா, சுருதி நாயகன் வரும் வரும்" எனச் (5077) சீதையும் நம்பிக்கையுடன் இருந்தாள். கரும்பு அழி சொல்லி - சீதையைக்*

*குறித்தது. இராவணன் சீதையைக் 'கரும்பு உண்ட சொல் மீள்கிலன்' (3420) என்றமையும் காண்க.*

*அரோ - ஈற்றசை. 25*

இராமன் துயரால் மீண்டு சோர்ந்தது கண்டு சுக்கிரீவன் தேற்றம்

***3926. என்ன நொந்து, இன்னன***
***பன்னி, ஏங்கியே***
***துன்ன அருந்***
***துயரத்துச் சோர்கின்றான்தனை,***
***பன்னஅருங் கதிரவன்***
***புதல்வன், பையுள் பார்த்து,***
***அன்ன வெந் துயர்***
***எனும் அளக்கர் நீக்கினான்.***

***என்ன நொந்து -*** *என்று மனம் வருந்தி;* ***இன்னன பன்னி -*** *இத்தகைய வார்த்தைகளைச் சொல்லி;* ***ஏங்கி -*** *ஏக்கம் உற்று;* ***துன்ன அரும் துயரத்து -*** *அடைதற்கரி துன்பத்தால்;* ***சோர்கின்றான் தனை -*** *மனம் தளர்கின்ற இராமனை;* ***பன்ன அரும் கதிரவன் புதல்வன் -*** *புனைந்து கூறுதற்கரிய கதிர்களை உடைய சூரியன் மகனான சுக்கிரீவன்;* ***பையுள் பார்த்து -*** *(அவன் அடைந்த) துன்பத்தைப் பார்த்து;* ***அன்ன வெந்துயர் எனும் அளக்கர் -*** *அத்தகைய கொடிய துன்பம் என்கின்ற கடலினின்று;* ***நீக்கினான் -*** *கரை ஏற்றினான்.*

*பையுள் - துன்பம், அளக்கர் - கடல். அளத்தற்கரியது எனும் பொருள் தரும். துயரெனும் அளக்கர் - உருவக அணி; பன்னுதல் - திரும்பத்திரும்பச் சொல்லுதல். 26*

*'நின் குறை முடித்தன்றி வேறு யாதும் செய்கலேன்' என இராமன் கூறுதல்*

***3927. 'ஐய,நீ ஆற்றலின்***
***ஆற்றினேன் அலது,***
***உய்வெனே? எனக்கு இதில்***
***உறுதி வேறு உண்டோ?***
***வையகத்து, இப் பழி***
***தீர மாய்வது***
***செய்வேன்; நின்குறை முடித்து***
***அன்றிச் செய்கலேன்.'***

***ஐய-*** *அன்பனே!* ***நீ ஆற்றலின்-*** *நீ ஆறுதல் கூறியதால்;* ***ஆற்றினேன் அலது -*** *(எனது துன்பத்தை ஒருவாறு) தணித்துக் கொண்டேனே அல்லாமல்;* ***உய்வென -*** *(இப்பழி வந்தபின்) உயிர் தாங்கியிருப்பேனோ?* ***எனக்கு இதில் உறுதி -*** *எனக்குச் சாவினும் நல்லது;* ***வேறு உண்டோ -*** *வேறு உண்டோ (இல்லை);* ***வையகத்து இப்பழி தீர -***

*இவ்வுலகத்தில் எனக்கு ஏற்படும் இப்பழி நீங்க;* ***மாய்வது செய்வென் -*** *இறந்து போவேன்;* ***நின்குறை முடித்தன்றி -*** *(ஆனால்) உன்னுடைய குறையை முடித்துத் தராமல்;* ***செய்கலேன் -*** *(அவ்வாறு செய்யமாட்டேன்.*

*பழி நீங்க இறந்து படுதல் தன்னைப் பொறுத்தவரையில் ஏற்றது எனினும், சுக்கிரீவனுக்கு வாக்குக் கொடுத்தபடி அவன் மனைவியைக் கவர்ந்தவனைக் கொன்று அவளை மீட்டுத் தந்த பிறகே அச்செயலைச் செய்வதாகக் கூறுவது இராமன் கொண்ட வாய்மைப் பெருமையை உணர்த்தும். சுக்கிரீவன் இராமன்*

*குறை தீர்த்தலையே முதன்மையாகக் கருதியது போல (3918) இராமனும் சுக்கிரீவன் துயர் நீக்க எண்ணியது நல்ல நட்பின் இயல்பை உணர்த்துகிறது.*

*அன்பின் முதிர்ச்சியால் இராமன் சுக்கிரீவனை 'ஐய'! என்று விளித்தான்; இலக்குவனை 'ஐய' (1736) என்றது போல. இப்பழி என்றது, சீதையின் துயரம் போக்காமையால் தனக்கு வரக்கூடிய பழியை. நின்குறை என்பது சுக்கிரீவன் அடைந்த துன்பம். வாலி, மனைவியையும் ஆட்சியினையும் கவர்ந்து கொண்ட நிலை. அக்குறை முடித்தலாவது - வாலியைக் கொன்று, சுக்கிரீவன் மனைவியையும் அரசுரிமையினையும் மீட்டுத் தருதலாகும். உய்தல் - உயிர் தாங்கியிருத்தல்; உறுதி - நல்லது. உய்வெனே, உண்டோ - ஏகார ஓகாரம் எதிர்மறைப் பொருளன. பிறர் துயர் நோக்கும் சான்றோர் பண்பை இப்பாடல் உணர்த்துகிறது.* *27*

*அனுமன், இராமனை நோக்கிப் பேசுதல்*

***3928. என்றனன் இராகவன்;***
***இனைய காலையில்,***
***வன் திறல் மாருதி***
***வணங்கினான்; 'நெடுங்***
***குன்று இவர் தோளினாய்!***
***கூற வேண்டுவது***
***ஒன்று உளது; அதனை நீ***
***உணர்ந்து கேள்!' எனா,***

***என்றனன்இராகவன் -*** *என்று கூறினான் இராமன்;* ***இனைய காலையில்-*** *இந்தச் சமயத்தில்;* ***வன்திறல் மாருதி -*** *மிக்க வலிமை வாய்ந்த அனுமன்;* ***வணங்கினான் -*** *(இராமனைத்) தொழுது;* ***நெடுங் குன்று இவர் தோளினாய்-*** *பெரிய மலையை ஒத்த தோள்களை உடையவனே!* ***கூற வேண்டுவது -*** *'நான் உன்னிடம் கூற வேண்டியது;* ***ஒன்று உளது -*** *ஒன்று உண்டு;* ***அதனைநீ உணர்ந்து கேள் எனா -*** *அதை நீ கவனித்துக் கேட்பாயாக' என்று . . . .*

*இது முதல் 34வது பாடல் முடியக் குளகமாய் ஒரு தொடராய் இயைந்து வினை முடிபு கொள்ளும். வல்திறல் - ஒரு பொருட் பன்மொழி; இவர்தல் - ஒத்தல். தான் சொல்ல இருப்பது மிகவும் கவனிக்கத்தக்கது என்பதால் 'உணர்ந்து கேள்' என்றான்.*
*28*

*3929. 'கொடுந் தொழில் வாலியைக்*
*கொன்று, கோமகன்*
*கடுங் கதிரோன் மகன்*
*ஆக்கி, கை வளர்*
*நெடும் படை கூட்டினால்*
*அன்றி, நேட அரிது,*
*அடும் படை அரக்கர்தம்*
*இருக்கை - ஆணையாய்!*

**ஆணையாய் -** எங்கும் செல்லத்தக்க ஆணைச் சக்கரத்தை உடையவனே! **கொடுந்தொழில் வாலியைக் கொன்று -** கொடிய வலிமையை உடைய வாலியை (முதலில்) கொன்று; **கடுங் கதிரோன் மகன் -** வெப்பம் மிக்க கதிர்களை உடைய சூரியன் மகனான சுக்கிரீவனை; **கோமகன் ஆக்கி -** அரசனாகச் செய்து; **கைவளர் நெடும்படை -** செயல்திறம் மிக்க பெரிய படையினை; **கூட்டினால் அன்றி -** சேர்த்தால் அல்லாது; **அடும்படை -** அழிக்கும் படைகளை உடைய; **அரக்கர்தம் இருக்கை -** அரக்கர்கள் வாழும் இடம்; **நேட அரிது -** தேடிக் கண்டு பிடிக்க அரிதாகும்.

உலகம் முழுவதும் ஆட்சி செலுத்தும் திறம் இராமனுக்கே உரியது என்பதால் 'ஆணையாய்' என விளித்தான். சீதையைத் தேடுதற்குப் பெரிய படை தேவையாதலால், அதற்குச் சுக்கிரீவனை அரசனாக்கினால், அவன் கிட்கிந்தை ஆட்சியின் பெரும்படையைப் பணிகொள்ளமுடியும். செயல்திறம் மிக்க கிட்கிந்தைப் படையை ஏவிச் சீதையைக் கண்டு பிடிக்கலாம் என்பது அனுமன் கருத்து.
*29*

*3930. 'வானதோ? மண்ணதோ?*
*மற்று வெற்பதோ?*
*ஏனை மா நாகர்தம் இருக்கைப்*
*பாலதோ? -*
*தேன் உலாம் தெரியலாம்! -*
*தெளிவது அன்று, நாம்,*
*ஊன் உடை மானிடம்*
*ஆனது உண்மையால்!*

**தேன் உலாம் தெரியலாய் -** வண்டுகள் மொய்க்கின்ற மலர் மாலை அணிந்தவனே! **வானதோ -** (இராவணன் முதலிய அரக்கர் உள்ள இடம்) வானத்தில் உள்ளதோ? **மண்ணதோ -** மண்ணுலகத்தில் உள்ளதோ? **மற்று வெற்பதோ -** (அன்றி) வேறு மலைகளிடத்து உள்ளதோ? **ஏனை மாநாகர்தம்-** இவற்றினும் வேறான பெரிய நாகர்கள் வாழும்; **இருக்கைப் பாலதோ -** பாதாள உலகில் உள்ளதோ? **நாம் - - ; ஊனுடை மானிடம் ஆனதுஉண்மையால் -** ஊனால் ஆய மனிதப் பிறவியினராய் இருப்பதால்; **தெளிவதுஅன்று** - (இன்ன இடத்தது என்று) தெளிவாக அறிந்து கொள்ளக் கூடியதன்று.

மனிதர்களுக்குத் தேவர்களைப்போல இருந்த இடத்திலிருந்து பிற உலகங்களில் நிகழ்வன பற்றி அறிந்து கொள்ளும் திறம் இல்லாமையால் 'மானுடமானது உண்மையால தெளிவது அன்று' என்றான். எனவே, பலர் பல இடங்களுக்குச் சென்று தேட வேண்டியிருப்பதால் பெரும்படை வேண்டும் எனக் குறிப்பாக உணர்த்தினான்.

*வானரரையும் மனித இனத்தின் ஒரு வகையினர் என்ற கருத்தால் 'நாம் ஊனுடை மானுடன்' என இணைத்துக் கூறினான். உருவத்தால் வானரங்களாக இருப்பினும் பேச்சு, செயல் ஆகியவற்றில் மனிதர்களாக இருப்பதாலும் இங்ஙனம் கூறினன் எனலாம். "விலங்கு அலாமை விளங்கியது; ஆத*

*லால் அலங்கலார்க்கு, ஈது அடுப்பது அன்று ஆம் அரோ" (4049) என இராமன் வாலியிடம் உரைப்பதை ஒப்பு நோக்கலாம். 'ஊனுடை' என்பதற்குக் 'குறைபாடு உடைய' என்றும் பொருள் கொள்வர். 30*

***3931. 'எவ் உலகங்களும் இமைப்பின் எய்துவர்,***
***வவ்வுவர், அவ் வழி மகிழ்ந்த யாவையும்;***
***வெவ் வினை வந்தென வருவர், மீள்வரால்;***
***அவ் அவர் உறைவிடம் அறியற்பாலதோ?***

***இமைப்பின் -** (அவ்வரக்கர்கள்) கண் இமைக்கும் நேரத்தில்; **எவ் உலகங்களும் -** எல்லா உலகங்களையும்; **எய்துவர் -** சென்று அடைவர்; **அவ்வழி -** தான் சென்ற அவ்விடங்களில்; **மகிழ்ந்த யாவையும் -** தாம் விரும்பிய பொருள்கள் எல்லாவற்றையும்; **வவ்வுவர் -** வலிந்து கவர்ந்து கொள்வர்; **வெவ்வினை வந்தென -** (செய்த செயல்களுக்கேற்பப் பயனூட்ட வரும்) கொடிய வினை வந்தது போல; **வருவர் -** (வருத்த)வருவர்; **மீள்வர் -** அவ்வினை, பயனை ஊட்டியபின் செல்வது போல, உயிர்களை வருத்திய பின்னர்த் திரும்பிச் செல்வர்; **அவ் அவர் உறைவிடம் -** அத்தன்மையை உடைய அரக்கர்கள் வாழும் இருப்பிடம்; **அறியற்பாலதோ -** நம்மால் அறியக்கூடியதோ? (அன்று).*

*அரக்கர் தாம் வேண்டும் இடத்திற்கு வேண்டியபோது சென்று பிறரை வருத்தி மீளும் இயல்பினராதலின் அவர்கள் தங்குமிடம் கணித்தற்கரிதாகின்றது. 'இமைப்பின்' என்பது காலவிரைவைக் காட்டிற்று; இமைப்பு - கண் இமைக்கும் கால அளவு. உயிர்களை அவை செய்தவினை தொடரும் என்பதைச் 'செல்லுறுகதியின் செல்லும் வினை எனச் சென்றதன்றோ' (28); என முன்னும் கூறப்பட்டது. 'தொல்லைப் பழவினையும் அன்ன தகைத்தே தற்செய்த கிழவனை நாடிக் கொளற்கு' என்பது (101) நாலடியார். இங்கு அரக்கர்க்கு வெவ்வினை உவமையாயிற்று. 31*

***3932. 'ஒரு முறையே பரந்து***
***உலகம் யாவையும்,***
***திரு உறை வேறு***
***இடம் தேரவேண்டுமால்;***
***வரன்முறை நாடிட, வரம்பு***
***இன்றால் உலகு;***
***அருமை உண்டு, அளப்ப அரும்***
***ஆண்டும் வேண்டுமால்.***

***உலகு வரம்பு இன்று -** உலகம் எல்லையற்றதாக விரிந்துள்ளது; **வரன்முறை நாடிட -** (அரக்கர்களை) வரிசைப்படி ஒவ்வோர் இடமாகத் தேடுவதில்; **அருமை உண்டு -***

*இடர்ப்பாடு உண்டு;* ***அளப்ப அரும் ஆண்டும் வேண்டும் -*** *(அவ்வாறு தேடுதற்கு) அளவற்ற ஆண்டுகள்*

*வேண்டும்;* ***ஒரு முறையே -*** *(அதனால்) ஒரே சமயத்தில்;* ***உலகம் யாவை யும் பரவி -*** *எல்லா உலகங்களுக்கும் சென்று பரவி;* ***திருஉறை -*** *சீதை தங்கியிருக்கின்ற;* ***வேறு இடம் -*** *வேறிடத்தை;* ***தேர வேண்டும் -*** *தேடி அறிய வேண்டும்.*

*அரக்கர்கள் கணப்போதில் பல உலகங்களுக்குச் சென்று திரும்புவர் ஆதலின், ஒரு புறத்தே சென்று சீதையைத் தேடுகையில் அவர்கள் வேறுபுறம் கொண்டு மறைப்பார். ஒவ்வோர் இடமாய்த் தேடிச் செல்ல உலகமும் பெரிது; தேடுதற்கு ஆண்டுகள் பலவாகும். எனவே, ஒரே நேரத்தில் உலகெங்கும் பிரிந்து சென்று தேடுதல் வேண்டும் என்று அனுமன் உரைத்தான்.*

*திரு என்றது சீதாபிராட்டியை; வரன்முறை - வரிசைப்படி; யாவையும் - முற்றும்மை. 32*

***3933. 'ஏழு பத்து ஆகிய***
***வெள்ளத்து எம் படை,***
***ஊழியில் கடல் என***
***உலகம் போர்க்குமால்;***
***ஆழியைக் குடிப்பினும், அயன்***
***செய் அண்டத்தைக்***
***கீழ் மடுத்து எடுப்பினும்,***
***கிடைத்த செய்யுமால்.***

***ஏழு பத்து ஆகிய வெள்ளத்து-*** *எழுபது வெள்ளம் என்ற அளவினை உடைய;* ***எம்படை -*** *எங்கள் வானரப் படை;* ***ஊழியில் கடல் என -*** *யுக முடிவுக் காலத்தில் பொங்கி எழும் கடல் போல;* ***உலகம் போர்க்கும் -*** *உலகம் முழுவதும் பரவி மூடவல்லது;* ***ஆழியைக் குடிப்பினும் -*** *(மற்றும்அது) கடலைக் குடிக்க வேண்டுமென்றாலும்;* ***அயன் செய் அண்டத்தை -*** *நான்முகனால் படைக்கப் பெற்ற பிரமாண்டத்தை;* ***கீழ் மடுத்து எடுப்பினும் -*** *கீழே கையைச் செலுத்திப் பெயர்த்து எடுக்க வேண்டுமென்றாலும்;* ***கிடைத்த செய்யும் -*** *இட்ட கட்டளையை ஏற்றுச் செய்யும்.*

*வானரப்படையின் மிகுதியும், ஆற்றலும் கட்டுப்பாடும் இப்பாடலில் உணர்த்தப்பட்டன.*

*வெள்ளம் - ஒரு பேரெண். இவ்வெண்ணிக்கை முன்னரும் 'வெள்ளம் ஏழு பத்து உள்ள' (3831) என அனுமனால் குறிக்கப்பட்டது. வானரப் படைகள் எதையும் செய்யவல்லன என அனுமன் உரைப்பது 'மலை அகழ்க்குவனே, கடல் தூர்க்குவனே, வான் வீழ்க்குவனே, வளி மாற்றுவனே' எனும் (பட்டினப் 271 - 273) கரிகாலன் வீரச்செயலோடு ஒப்பிடத்தக்கது. 33*

வாலி இருக்கும் இடத்திற்குச் செல்லுதல்

***3934. 'ஆதலால், அன்னதே அமைவது***
***ஆம் என,***
***நீதியாய்! நினைந்தனென்'***
***என, நிகழ்த்தினான்;***
***'சாது ஆம்' என்ற, அத்***
***தனுவின் செல்வனும்,***
***'போதும் நாம் வாலிபால்'***
***என்ன, போயினார்.***

***ஆதலால் -*** *'ஆதலால்';* ***நீதியால் -*** *நீதிநெறியை உடையவனே!* ***அன்னதே -*** *முன்னர் வாலியைக் கொன்று வானரப் படைகளைக் கொண்டு சீதையைத் தேடி அறிவதே;* ***அமைவது ஆம் என -*** *பொருத்தமான செயலாகும் என்று;* ***நினைந்தனென்-*** *எண்ணுகிறேன்';* ***என நிகழ்த்தினான்-*** *என்று அனுமன் கூறினான்;* ***சாது ஆம் என்ற -*** *நின் கருத்து ஏற்கத் தக்கதே என்று கூறிய;* ***அத்தனுவின் செல்வனும் -*** *அந்த வில்வீரனாகிய இராமனும்;* ***நாம் வாலி பால் போதும் -*** *'நாம் வாலி இருக்குமிடம் போவோம்';* ***என்ன-*** *என்று கூற;* ***போயினர் -*** *அவர்கள் அனைவரும் அங்குச் சென்றார்கள்.*

*மேலே 29வது பாடலில் கூறிய செய்தியையே இப்பாடலில் 'அன்னது' எனச் சுட்டப்பட்டது. வாலியைக் கொன்று, படை திரட்டிச் சீதையைத் தேடுதலே ஆண்டுச் சுட்டிய பொருளாகும். சாது - நல்லது, ஏற்கத்தக்கது, உடன்பட்ட எனும் பொருளில் அமைவது. "சாதுவாய் நின் புகழின் தகையல்லால் பிறிதில்லை" (திருவாய்மொழி. 3-1-6). "சாது என்று உணர்கிற்றியேல்" (5895) எனப் பின்னரும் கூறுவார். தனுவின் செல்வன் - இராமன். இராமன் வில்லாற்றலைக் குறிக்கும் தொடர். முதலடி முற்றுமோனை.* *34*

## *வாலி வதைப் படலம்*

*இராமன் கிட்கிந்தையின் மன்னனான வாலியைக் கொன்ற நிகழ்ச்சியைக் கூறும் பகுதியாகும்.*

*இராமன், இலக்குவன், சுக்கிரீவன், அனுமன் ஆகிய நால்வரும் பிற வானர வீரர்களோடு கிட்கிந்தையை அடைந்து, வாலியைக் கொல்லுதற்குரிய வழியை ஆராய்ந்தனர். போர் நடக்கையில் தான் வேறுபுறம் நின்று வாலி மீது அம்பு தொடுப்பதாக இராமன் கூற, சுக்கிரீவன் அதை ஏற்றுக்கொண்டு, வாலியை வலியப் போருக்கழைத்தான். வாலியும் போருக்குப் புறப்படத் தாரை இராமன் துணையொடு சுக்கிரீவன் போரிட வந்துள்ளமையைச் சுட்டிப் போருக்குச் செல்வதைத் தடுத்தாள். வாலி, இராமனது அறபபண்புகளைத் தாரைக்கு உணர்த்திவிட்டுப் போரை விரும்பிக் குன்றின் புறத்தே வந்தான்.*

*பேராற்றல் படைத்த வாலி சுக்கிரீவர்களை இராமன் வியந்து பேச, இலக்குவன் சுக்கிரீவனை ஐயுற்றுப் பேசினான். நட்புக் கொள்வாரிடம் உள்ள நற்குணங்களை மட்டுமே ஏற்றுக்கொள்ளவேண்டுமென இராமன் இலக்குவனுக்கு மறுமொழி உரைத்தான். வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் இடையே போர் கடுமையாக நடந்தது. வாலி, சுக்கிரீவனை யானையைச் சிங்கம் அழிப்பது போல அவன் வலிமை தளர்ந விழும்படி செய்ய, சுக்கிரீவன் இராமனை அடைந்து உதவி வேண்டினான். இராமன் சுக்கிரீவனைக் கொடிப் பூ அணிந்து, போர் புரியச் சொல்ல, அவ்வாறே சென்று சுக்கிரீவன் வாலியோடு மோதினான். வாலி சுக்கிரீவனை மேலே தூக்கிக் கீழே எறிந்து கொல்ல முயன்றபோது, இராமன் வாலியின் மார்பில் அம்பினைச் செலுத்த வாலி மண்ணில் சாய்ந்தான். தன்மீது அன்பு செலுத்தியவன் யார் என அறிய, வாலி அம்பைப் பறிக்க, அதனால் குருதி வெள்ளம் பெருக, அதைக் கண்டு உடன்பிறந்த பாசத்தால் சுக்கிரீவன் கண்களில் நீர்மல்க நிலமிசை வீழ்ந்தான்.*

*வாலி தன் மார்பில் தைத்த அம்பில் 'இராமன்' என்னும் நாமத்தைக் கண்டான். இராமன் அறமற்ற செயலைச் செய்துவிட்டதாக இராமனைப் பலவாறு இகழ்ந்த்ான். இராமன் தான் செய்தது முறையான செயலே எனத் தெளிவுபடுத்தினான்; வாலி தன்னை விளங்கெனக் கூறிக்கொள்ளம் முகத்தான் தன்பால் சிறிதும் குற்றம் இல்லை என உணர்த்த, உருவத்தால் விலங்காயினும் நல்லறிவு பெற்ற வாலி செய்த செயல் குற்றமுடைத்து என இராமன் விளக்கினான். அதனைக் கேட்ட வாலி, தகாத வகையில் மறைந்து நின்று எய்யக் காரணம் யாது என வினவ, அதற்கு இலக்குவன் விடையளித்தான். இராமனைச் சுக்கிரீவன் முதலில் சரணடைந்துவிட்டதால், அவனைக் காக்க வேண்டி இராமன் இவ்வாறு செய்ய நேரிட்டது என்று உரைத்தான்.*

*'சிறியன சிந்தியாதா'னாகிய வாலி மனம் மாறி இராமனிடம் தன்னை மன்னிக்குமாறு வேண்டி, அவன் பெருமை கூறித் துதித்தான். தன் தம்பி சுக்கிரீவன்*

*தவறு செய்யின் அவன்மீது அம்பு தொடுக்க வேண்டாம் என ஒரு வரம் வேண்டினான். அனுமனின் ஆற்றலை இராமனுக்கு வாலி எடுத்துரைத்தான். சுக்கிரீவனுக்குப் பல அறிவுரைகள் கூறி, அவனை இராமனிடத்தில் அடைக்கலப்படுத்தினான்.*

*போர்க்களம் வந்த அங்கதன், குருதி வெள்ளத்தில் தந்தையைக் கண்டு அரற்ற, வாலி அவனைத் தேற்றி, இராமன் பெருமைகளை அறிவுறுத்தினான். அவனை இராமனிடம் கையடைப்படுத்த, இராமன் அங்கதனுக்கு உடைவாள் அளித்து ஏற்க, வாலி வீடு பேறு அடைந்தான். வாலி மார்பில் தைத்த அம்பு இராமனிடம் மீண்டது. வாலிக்கு ஏற்பட்ட துயர் கேட்டுத் தாரை போர்க்களம் உற்று, வாலியின் மேல் வீழ்ந்து புலம்பினாள். அவளை அந்தப்புரம் செலுத்தி, அனுமன் வாலிக்குரிய இறுதிக் கடன்களை அங்கதனைக் கொண்டு செய்வித்தான்.*

*அந்நிலையில் கதிரவன் மறைய இருள் சூழ்ந்தது. இராமன் சீதையின் நினைவோடு இரவுக்கடலை அரிதில் நீந்தினான்.*

*இராமன் முதலியோர் சென்ற மலைவழி*

*எழுசீர் ஆசிரிய விருத்தம்*

***3935. வெங் கண் ஆளிஏறும், மீளி***
***மாவும், வேக நாகமும்,***
***சிங்கஏறு இரண்டொடும் திரண்ட***
***அன்ன செய்கையார்,***
***தங்கு சாலம், மூலம் ஆர்***
***தமாலம், ஏலம் மாலைபோல்***
***பொங்கு நாகமும், துவன்று,***
***சாரலூடு போயினார்.***

***வெங்கண் ஆளி ஏறும் -*** *அச்சத்தைத் தரும் கொடிய கண்களை உடைய ஆண் யாளியும்;* ***மீளி மாவும் -*** *வலிமை மிக்க புலியும்;* ***வேக நாகமும் -*** *விரைந்து செல்லும் யானையும்;* ***சிங்க ஏறு இரண்டொடும் -*** *இரண்டு ஆண் சிங்கங்களுடன்;* ***திரண்ட அன்ன செய்கையார் -*** *ஒன்று கூடிச் சென்றன போன்ற செய்கையரான சுக்கிரீவன் முதலான வானர வீரர்கள்;* ***தங்கு சாலம் -*** *நிலை பெற்ற ஆச்சா மரங்களும்;* ***மூலம் -*** *மூலம் என்னும் மரங்களும்;* ***ஆர் -*** *ஆத்தி மரங்களும்;* ***தமாலம் -*** *பச்சிலை மரங்களும்;* ***ஏலம் -*** *ஏலமும்;* ***மாலை போல் பொங்கு நாகமும் -*** *மாலைகளைப் போல மலர்கள் நிறைந்து விளங்கும் சுரபுன்னை மரங்களும்;* ***துவன்று -*** *நெருங்கி;* ***சாரலூடு போயினார் -*** *மலைச் சாரல்கள் வழியாகச் செல்லலானார்கள்.*

*வீரர்களுள் சிறந்தவர்கள் இராமலக்குவராதலின் இருவரும் 'சிங்க ஏறு இரண்டு' எனக் குறிக்கப்பட்டனர். வெங்கண் ஆளி ஏறு என்றது சுக்கிரீவனை. மீளிமா என்றது அனுமனை. வேக நாகம் என்றது நளன், நீலன், தாரன் ஆகிய வானர வீரர்களைக் குறிக்கும். இராமலக்குவரை இரண்டு சிங்கங்களாகத் திரிசடை*

*தன் கனவில் கண்டதைக் கூறுதல் காண்க. "வன் துணைக் கோள் அரி இரண்டு" (5118).*

*இப்பாடலில் 'சிங்க ஏறு இரண்டொடு' என்ற தொடரில் வரும் 'இரண்டு' என்னும் எண்ணினை "மீளிமா" என்பதனோடும், 'வேக நாகம்' என்பதனோடும் தனித்தனியே*

*கூட்டி மீளிமா இரண்டு, வேக நாகம் இரண்டு எனவும் பொருள் கொள்வர், ''மீளிமா இரண்டு'' என்றது நளன், நீலன் என்ற இருவரையும், 'வேக நாகம்' என்றது அனுமன், தாரன் என்ற இருவரையும் குறிக்கும் என்றும் விளக்கம் கூறுவர். 'தமாலம்' என்பதற்கு 'மூலம் ஆர்' என்பதை அடை மொழியாக்கி 'வேரூன்றிய பச்சிலை மரங்கள்' என்றும் பொருள் கொள்வர். ஏலம் - ஏலக்காய்ச் செடி; இதனைச் 'சடாமஞ்சில்' என்னும் ஒருவகை மரம் எனக் கொள்வாரும் உளர். 'துவன்று நிறைவாகும்' (உரியியல் - 34) என்பது தொல்காப்பியம். 1*

***3936. உழை உலாம் நெடுங் கண்***
***மாதர் ஊசல்; ஊசல் அல்லவேல்,***
***தழை உலாவு சந்து அலர்ந்த***
***சாரல்; சாரல் அல்லவேல்,***
***மழை உலாவு முன்றில்; அல்ல,***
***மன்றல் நாறு சண்பகக்***
***குழை உலாவு சோலை; சோலை அல்ல,***
***பொன் செய் குன்றமே.***

**உழை உலாம் நெடுங்கண் -** *(அந்த வழி எங்கும்) மான் போலும் பார்வையினை உடைய;* **மாதர் ஊசல் -** *மகளிர் ஆடும் ஊஞ்சல்களும்;* **ஊசல் அல்லவேல் -** *ஊஞ்சல்கள் இல்லாத இடங்களில்;* **தழை உலாவு -** *தழைகள் காற்றில் அசைந்தாடும்;* **சந்து அலர்ந்த சாரல் -** *சந்தன மரங்கள் மலர்ந்து விளங்கும் மலைச்சாரல்களும்;* **சாரல் அல்லவேல் -** *மலைச் சாரல்கள் இல்லையெனின்;* **மழை உலாவு முன்றில் -** *மேகங்கள் தவழ்கின்ற மலைகளின் முற்பகுதிகளும்;* **அல்ல -** *அவையல்லாத இடங்களில்;* **மன்றல் நாறு -** *மணம் கமழ்கின்ற;* **குழை உலாவும் சண் பகச் சோலை -** *தளிர்கள் அசையும் சண்பகச் சோலைகளும்;* **சோலை அல்ல -** *சோலைகள் இல்லாத இடங்களில்;* **பொன் செய் குன்றமே -** *பொன் போன்ற அழகிய குன்றுகளுமே(மிகுந்து காணப்பெற்றன).*

*இராமலக்குவர் சென்ற நீண்ட வழியெங்கும் ஊஞ்சல்களும், சந்தன மலைச் சாரல்களும், மேகங்கள் தவழ்கின்ற மலை முற்றங்களும், சண்பகச் சோலைகளும், அழகிய குன்றுகளும் இருந்தன என அந்நாட்டின் வளம் உணர்த்தியவாறு. ஊசல், ஊசல் அல்ல சாரல், சாரல் அல்ல முன்றில், அவையல்ல சோலை, சோலை அல்ல குன்றம் எனத் தொடர்புபடுத்திக் கூறியதால் மாலை அணியின் பாற்படும். 'உலாம்' - உலாவும் என்பதின் விகாரம். முன்றில் - இலக்கணப் போலி; பொன் செய் - செய் உவம உருபு; (பொன் போல). பொன் செய் குன்றம் - பொன்னை விளைவிக்கும் மலை, எனவும் பொன்னால் இயற்றப்பட்ட செய் குன்று எனவும் பொருள் கொள்வாரும்உளர். 2*

***3937. அறங்கள் நாறும் மேனியார்,***
***அரிக் கணங்களோடும், அங்கு***
***இறங்கு போதும், ஏறு போதும்,***
***ஈறு இலாத ஓதையால்,***
***கறங்கு வார் கழல் கலன்***
***கலிப்ப, முந்து கண் முகிழ்த்து***

***உறங்கு மேகம், நன்கு உணர்ந்து,***
***மாக மீது உலாவுமே.***

***அறங்கள் நாறும் மேனியார்*** *- தருமங்கள் தோன்றுதற்குரிய திரு மேனியினராகிய இராமலக்குவர்;* ***அரிக்கணங்களோடும்*** *- வானரக் கூட்டங்களோடு;* ***அங்கு*** *- அம்மலைச் சாரல் வழியில்;* ***இறங்கு போதும்****- இறங்குகின்ற பொழுதும்;* ***ஏறு போதும்*** *- ஏறுகின்ற பொழுதும்;* ***ஈறு இலாத ஓதையால்*** *- எல்லையில்லாத ஓசையோடு;* ***கறங்கு வார்கழல்கலன்*** *- ஒலிக்கும் இயல்புடைய நீண்ட வீரக்கழல்களாகிய அணிகள்;* ***கலிப்ப*** *- ஒலித்ததால்;* ***முந்து கண் முகிழ்த்து*** *- முன்பு (அம்மலைகளில்) கண்மூடி;* ***உறங்கு மேகம்*** *- உறங்கிக் கொண்டிருந்த மேகங்கள்;* ***நன்கு உணர்ந்து*** *- நன்றாக விழித்தெழுந்து;* ***மாக மீது உலாவுமே*** *- வானில் எழுந்து சஞ்சரிக்கும்.*

*அறங்கள் நாறும் மேனியர் என்றது இராமலக்குவர்களை. உலகில் நல்லறங்களை நிலை நாட்ட அவதரித்தவர்களாதலின் 'அறங்கள் நாறும் மேனியர்' எனப்பட்டனர். 'அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான்' (1349); 'வேதமும் அறனும் சொல்லும் மெய்யற மூர்த்தி வில்லோன்'' (5882) என்பன காண்க. நாறுதல்; தோன்றுதல், விளங்குதல்.*

*இவர்கள் ஏறியும் இறங்கியும், கழலணிகள் ஒலிக்க நடந்து வருதலால் மலைச் சாரல்களில் படிந்து கிடந்த மேகங்கள் சிதறின என்பதை மேகம் உறக்கம் விழித்து வானில் உலவியதாகக் கூறுவது தற்குறிப்பேற்ற அணி. கறங்குதல், கலித்தல் என்பன ஒலித்தல் எனும் பொருளன. 3*

***3938. நீடு நாகமூடு மேகம் ஓட,***
***நீரும் ஓட, நேர்***
***ஆடு நாகம் ஓட, மான் யானை ஓட,***
***ஆளி போம் -***
***மாடு நாகம் நீடு சாரல்,***
***வாளை ஓடும் வாவியூடு***
***ஓடு நாகம் ஓட, வேங்கை***
***ஓடும், யூகம் ஓடவே.***

***நீடு நாகம் ஊடு மேகம் ஓட*** *- நீண்ட மலைகளின் வழியே மேகங்கள் ஓடவும்;* ***நீரும் ஓட*** *- (மேகங்கள் பொழியும்) நீர் பெருகிப் பாயவும்;* ***நேர் ஆடு நாகம் ஓட*** *- (எதிரில்) படமெடுத்தாடும் பாம்புகள்*

*அஞ்சி ஓடவும்;* ***மான், யானை ஓட*** *- மான்களோடு யானைகள் ஓடவும்;* ***ஆளி போம்*** *- அவற்றொடு சிங்கங்களும் செல்லும்;* ***மாடு நாகம் நீடு சாரல்*** *- பக்கங்களில் சுரபுன்னை மரங்கள் வளரப்பெற்ற மலைச் சாரல்களில்;* ***வாவியூடு*** *- சுனைகளிலே;* ***வாளை ஓடும்*** *- வாளை மீன்களோடும்;* ***ஓடு நாகம் ஓட*** *- ஓடும் இயல்புள்ள நீர்ப்பாம்புகளும் அஞ்சி ஓட;* ***வேங்கை ஓடும்*** *- வேங்கைப் புலிகளுடன்;* ***யூகம் ஓடவே*** *- கருங்குரங்குகளும் ஓடுவனவாயின.*

*நாகம் என்பது பல பொருள் ஒரு சொல்; அச்சொல் 'நீடு நாகம்' என்கையில் மலையினையும், 'ஆடுநாகம்' என்கையில் பாம்பினையும், 'நாகம் நீடு சாரல்'*

என்கையில் சுரபுன்னை மரத்தையும்; 'ஓடு நாகம்' என்கையில் நீர்ப்பாம்பையும் குறித்தது. அம்மலைவழியில் வலியனவும் மெலியனவும் ஆகிய உயிர்கள் இராமலக்குவரின் விரைந்த செலவினால் அச்சமுற்று விலகின என்பதைப் பாடல் புலப்படுத்துகிறது. அச்சத்தால் தடுமாறி ஓடுகையில் தம்மில் பகையுடையனவும் ஒன்றாகச் சேர்ந்து ஓடுதல் இயல்பு. அதனால் புலியுடன் குரங்கும், மீன்களோடு நீர்ப் பாம்புகளும் ஓடுகின்றன. வாலியை அழிக்கச் செல்லும் இராமலக்குவரின் நடையில் சினம் இருப்பதையும் உணரமுடிகிறது. 'ஓட' என்னும் சொல் ஒரே பொருளில் பல இடங்களில் வருவதால் 'சொற்பொருள் பின் வருநிலை' அணியாகும்.

யூகம் என்று இப்பாடலில் குரங்குகள் குறிக்கப்பட்டன. சுக்கிரீவன் முதலியோர் வடிவப் பாங்கில் ஒருசால் குரங்குத் தோற்றத்தினரேனும் மானிடராகவே கொள்ளத் தக்கார். 3930 ஆம் பாடலில் அனுமன் தன் இனத்தவரை மானிடம்' என்று குறித்தது காண்க. 4

**3939. மருண்ட மாமலைத் தடங்கள் செல்லல்**
**ஆவ அல்ல - மால்**
**தெருண்டிலாத மத்த யானை**
**சீறி நின்று சிந்தலால்,**
**இருண்ட காழ் அகில், தடத்தொடு**
**இற்று வீழ்ந்த சந்த வந்த**
**ஒழுக்கு பேர் இழுக்கினே!**

**மால் தெருண்டிலாத -** மயக்கம் தெளியாத; **மத்த யானை -** மதம் பொருந்திய யானைகள்; **சீறி நின்று சிந்தலால் -** சினங்கொண்டு நின்று தாக்கியதால்; **இருண்ட காழ் அகில் தடத்தோடு -** இருள் நிறம் கொண்ட வயிரம் பற்றிய அகில் கட்டைகளோடு; **இற்று வீழ்ந்த சந்து -** ஒடிந்து விழுந்த சந்தன மரங்கள்; **வந்து உருண்டபோது -** (மேலிருந்து) உருண்டு வந்த விழுந்த போது; **அழிந்த தேன்-** சிதைந்த தேன்; **ஒழுக்கு பேர் இழுக்கின் -** ஒழுகுதலினால் ஏற்பட்ட மிக்க வழுக்கலினால்; **மருண்ட மாமலைத் தடங்கள் -** யாவர்க்கும் மருட்சியை உண்டாக்கும் பெரிய அம்மலைகளின் வழிகள்; **செல்லல் ஆவ அல்ல -** எளிதில் கடந்து செல்லக் கூடியன அல்ல.

பலர்க்கும் அச்சத்தை விளைவிக்கும் மலையாதலின் 'மருண்ட மாமலை' எனப்பட்டது. 'குறவரும் மருளும் குன்றம்' என்பது மலைபடுகடாம். (275). யானையின் சீற்றம் வழிச்செல்வார்க்குப் பாதையை அரிதாக்கிவிடுகிறது என்றாலும், அம்மலைப்பகுதியிலுள்ள அகில், சந்தனம், தேன் என்ற வளமே உணர்த்தப்படுகிறது. யானைகள் சீற்றம் கொள்வதால் மரங்கள் முறிந்து விழுந்தன; மரங்கள் விழுவதால் தேன் கூடுகள் சிதைந்தன; அவை சிதைந்ததால் தேன் ஒழுகி வழிகள் வழுக்கல் உடையனஆயின. 5

**3940. மினல் மணிக் குலம் துவன்றி,**
**வில் அலர்ந்து, விண் குலாய்,**
**அனல் பரப்பல் ஒப்ப, மீது**
**இமைப்ப, வந்து அவிப்பபோல்**
**புனல் பரப்பல் ஒப்பு இருந்த**

***பொன் பரப்பும் என்பரால் -***
***இனைய வில் தடக் கை***
***வீரர் ஏகுகின்ற குன்றமே.***

***வில் தடக்கை வீரர் -*** *வில்லேந்திய பெரிய கைகளையுடை (இராமலக்குவராகிய) வீரர்கள்;* ***ஏகுகின்ற இனைய குன்றமே -*** *ஏறிச் செல்லும் இவ்வியல்பினதாகிய மலை;* ***மினல் மணிக்குலம் -*** *மின்னுதலையுடைய இரத்தினங்களின் தொகுதி;* ***துவன்றி -*** *நிறைந்து;* ***வில் அலர்ந்து -*** *ஒளி பரப்பி;* ***விண்குலாய் -*** *விசும்பளவும் பொருந்தி;* ***அனல் பரப்பல் ஒப்ப -*** *நெருப்பைப் பரவச் செய்தல் போல;* ***மீது இமைப்ப -*** *அம்மலை மீது ஒளி வீச;* ***வந்த அவிப்ப போல -*** *(அந்நெருப்பை விரைந்து) வந்து அவிப்பன போல;* ***புனல் பரப்பல் ஒப்பு இருந்த -*** *நீரைச் சொரிந்து பரப்புதலை ஒத்து இருந்த;* ***பொன் பரப்பும் என்பர் -*** *பொன் ஒளியைப் பரவச் செய்யும் என்று கூறுவர்.*

*அம்மலைகளில் இரத்தினங்கள் நெருப்புப்போல ஒளிவீச, அந்நெருப்பை அவிக்கும் நீர்போலப் பொன்னொளி வீசும். இது தொடர்பு நவிற்சி அணியில் வந்த தற்குறிப்பேற்றஅணி. மினல் : மின்னல் - இடைக்குறை; பொன்னும், மணியும் நிறைந்து, பொன்னொளி தன்னுள் மணிகளின் ஒளியைத் தன்னிலடக்கி மேற்பட்டு விளங்கும் மலை வளம்கூறப்பட்டது.* *6*

***3941. மருவி ஆடும் வாவிதோறும் வான***
***யாறு பாயும், வந்து;***
***இருவி ஆர் தடங்கள்தோறும்***
***ஏறு பாயுமாறுபோல்,***
***அருவி பாயும்; முன்றில், ஒன்றி***
***யானை பாயும்; ஏனலில்,***
***குருவி பாயும்; ஓடி, மந்தி கோடு***
***பாயும் - மாடு எலாம்.***

***மாடு எலாம் -*** *மலைப்பக்கங்களிலெல்லாம்;* ***மருவி ஆடும் வாவிதொறும் -*** *யாவரும் (வந்து) பொருந்தி ஆடும் சுனைகளில்;* ***வானயாறு வந்து பாயும் -*** *ஆகாய கங்கை வந்து பாயும்;* ***இருவி ஆர் தடங்கள் தோறும் -*** *கதிர் அறுக்கப்பெற்ற தினைத்தாள்கள் பொருந்திய புனங்கள் தோறும்;* ***ஏறு பாயுமாறு போல -*** *காளை பாய்வது போல;* ***அருவி பாயும் -*** *மலையருவிகள் பெருகிப் பாயும்;* ***முன்றில்-*** *அம்மலைத் தடத்து முற்றங்களில்;* ***யானை ஒன்றிப் பாயும் -*** *யானை பொருந்திப் பாயும்;* ***ஏனலில் குருவி பாயும்*** *- தினைக்கதிர்களில் குருவிகள் பாயும்;* ***மந்தி ஓடி -*** *குரங்குகள் தாவி;* ***கோடு பாயும் -*** *மரக்கிளைகளில் பாயும்.*

*மலையின் பல்வேறு சிறப்புகளை இப்பாடல் உணர்த்தும். "வாவி தோறும் வான யாறு பாயும்" என்றதனால் மலையின் உயர்ச்சி தோன்றும், 'இருவி ஆர் தடங்கள் தோறும் ஏறுபாயுமாறு போல அருவி பாயும்' என்றதால் மலைவாழ் மக்களின் தொழில், காளையின் உள்ளக் கிளர்ச்சி, மலையின் நீர் வளம் புலப்படும். 'முன்றில் யானை ஒன்றிப் பாயும்' என்பதில் அருவி வளத்தோடு யானையின் இன்ப விளையாட்டும் காண்க. 'ஏனலில் குருவி பாயும்' என்பதால் மலை வாழ்நர் குருவிகளை விலக்கவேண்டா அளவு மலைக்கண் கிடைக்கக்கூடிய உணவுப் பெருக்கமும் 'மந்தி கோடு பாயும்' என்பதால் கனிகளை உண்டு மகிழ்ந்து தாவி விளையாடும் அளவிற்கேற்பக் கிடைக்கும் கனி வளமும் புலப்படும். மேலே 3938*

*ஆம் பாடலில் 'யூகம்' என்பதற்குத் தந்த விளக்கத்தை இப்பாடலின் 'மந்தி'க்கும் கொள்க. அனைவரும் மகிழ்வதற்கேற்ற இடமாக மலை விளங்கியது. இருவி - கதிர் அறுக்கப்பெற்ற தினைத்தாள்; ஏனல் - தினை. 'பாயும்' என்னும் சொல் ஒரே பொருளில் பல இடங்களில் வந்தமையால் 'சொற்பொருள் பின்வருநிலை அணி.*
*7*

***3942. தேன் இழுக்கு சாரல் வாரி***
***செல்ல, மீது செல்லும் நாள் -***
***மீன் இழுக்கும்; அன்றி, வானவில்***
***இழுக்கும்; வெண் மதிக்***
***கூன் இழுக்கும்; மற்று உலாவு***
***கோள் இழுக்கும்; என்பரால் -***
***வான் இழுக்கும் ஏல் வாச***
***மன்றல் நாறு குன்றமே.***

***வான் இழுக்கும் -*** *வானில் உள்ள தேவர்களையும் (நறுமணத்தால் விரும்பி வருமாறு) இழுக்கின்ற;* ***ஏல வாச மன்றல் நாறு -*** *ஏலக் காய்களின் நறுமணம் வீசப்பெற்ற;* ***குன்றம் -*** *அம்மலை (தன்பால்);* ***தேன் இழுக்கு சாரல்-*** *தேன் பெருக்கால் வழுக்கும் இயல்புடைய சாரல்களில்;* ***வாரி செல்ல -*** *நீர்வெள்ளம் பெருகியதனால்;* ***மீது செல்லும் நாள்மீன் -*** *வானத்தில்செல்கின்ற விண்மீன்களை;* ***இழுக்கும் -*** *(கீழே) இழுக்கும்;* ***அன்றி வானவில்இழுக்கும் -*** *அல்லாமல், வானில்*

*காணப்படும் இந்திரவில்லையும் இழுக்கும்;* ***வெண்மதிக் கூன் இழுக்கும் -*** *வெண்ணிறப் பிறைத் திங்களையும் இழுக்கும்;* ***மற்று உலாவு கோள் இழுக்கும் -*** *மேலும் வானத்தில் இயங்குகின்ற கிரகங்களையும் இழுக்கும்;* ***என்பர் -*** *என்று கூறுவர்.*

*அம்மலைகளில் வளரும் ஏலம் முதலிய வாசனைப் பொருள்கள் வானில் உள்ள தேவர்களையும் அங்கு இறங்கி வரச்செய்யும். மலைச்சாரல்களில் பெருகி ஓடும் தேன் வெள்ளத்தால், வானிலுள்ள விண்மீன்களும், வானவில்லும், பிறைமதியும், மற்று முள்ள கிரகங்களும் இழுக்கப்பெறும் என்று சிறப்பிக்கப்படுகிறது. அம்மலைகளின் உயர்வும், அவற்றில் பெருகுகின்ற நீர்ப் பெருக்கின் மிகுதியையும் கூறுவதால் இது தொடர்வு உயர்வு நவிற்சி அணியாம். 'இழுக்கும்' எனப் பலமுறை ஒரே பொருளில் வருதலால் சொற்பொருள் பின் வருநிலை அணியும் அமைந்தது. வான் - இடவாகுபெயர், நாள் மீன் - நட்சத்திரம்; பிறை வளைவுடையதாதலின் 'வெண்மதிக்கூன்' என்றார். வாச மன்றல் - ஒரு பொருட்பன்மொழி. 8*

*வாலியின் இருப்பிடம் சார்ந்து, ஆலோசித்தல்*

***3943. அன்னது ஆய குன்றின் ஆறு,***
***சென்ற வீரர், ஐந்தொடு ஐந்து***
***உன்னல் ஆய யோசனைக்கும்***
***உம்பர் ஏறி, இம்பரில்***
***பொன்னின் நாடு இழிந்தது அன்ன,***
***வாலி வாழ் பொருப்பு இடம்***

***துன்னினார்கள்; 'செய்வது என்னை?'***
***என்று நின்று சொல்லுவார்:***

***அன்னது ஆய** - அத்தன்மையத்தான; **குன்றின் ஆறு** - மலை வழி யிலே; **சென்ற வீரர்** - சென்ற இராமன் முதலிய வீரர்கள்; **ஐந்தொடு ஐந்து உன்னல் ஆய** - ஐந்தும் ஐந்தும் பத்து என்று எண்ணுதற்குரிய; **யோசனைக்கும் உம்பர் ஏறி** - யோசனை தூரத்திற்கும் மேலாக மலை மீது ஏறிச் சென்று; **இம்பரில்** - இவ்வுலகில்; **பொன்னின் நாடு இழிந்தது அன்ன**- பொன்மயமான தேவர் உலகம் இறங்கி வந்தாற்போன்ற; **வாலி வாழ்பொருப்பு இடம்** - வாலி வாழ்கின்ற (கிட்கிந்தை) மலையின் இடத்தை; **துன்னினார்கள்** - அடைந்தவர்களாய்; **செய்வது என்னை** - இனிச் செய்ய வேண்டுவது என்ன? **என்று நின்று சொல்லுவார்** - என்று நின்று (தமக்குள்) பேசிக் கொள்வாராயினர்.*

*வாலியின் ஆட்சியிலுள்ள கிட்கிந்தை பல வளங்களைப் பெற்றதாயும். காட்சிக்கினியதாயும் விளங்கியதால் தேவர் உலகமே இவ்வுலகில் வந்து இறங்கியதனை ஒத்து விளங்கியது என்றார். ருசியமுக மலையினின்று கிட்கிந்தைக்கு நீண்ட தூரம் மலைவழி நடந்தனர் என்பதை 'ஐந்தொடு ஐந்து உன்னலாய யோசனைக்கும் உம்பர் ஏறி'என்றார். 9*

*இராமன் வெளியிட்ட கருத்துரை*

***3944. அவ் இடத்து, இராமன், நீ***
***அழைத்து, வாலி ஆனது ஓர்***
***வெவ் விடத்தின் வந்து போர்***
***விளைக்கும் ஏல்வை, வேறு நின்று***
***எவ்விடத் துணிந்து அமைந்தது; என்***
***கருத்து இது' என்றனன்;***
***தெவ் அடக்கும் வென்றியானும்,***
***'நன்றிஇது' என்று சிந்தியா.***

***அவ் இடத்து** - அப்போது; **இராமன்** - இராமபிரான்; **நீ அழைத்து** - (சுக்கிரீவனை நோக்கி) "நீ வலிய (போர்க்கு) அழைத்து; **வாலி ஆனது ஓர் வெவ்விடத்தின்** - வாலி என்னும் ஒப்பற்ற கொடிய நஞ்சுடன்; **வந்து** - எதிர்வந்து; **போர் விளைக்கும் ஏல்வை** - போர் செய்யும் பொழுது; **வேறு நின்று** - வேறாக (ஓரிடத்தில் நான்) நின்று; **எவ்விட** - அம்பு தொடுப்பதாக; **துணிந்து அமைந்தது இது என் கருத்து** - துணிந்தேன்; இச்சூழ்நிலைக்கு இக்கருத்தே பொருந்துவதாகும்; **என்றனன்** - என்று கூறினன்; **தெவ் அடக்கும்** - பகைவனைப் பொருதழிக்கும்; **வென்றியானும்** - வெற்றியை விரும்புபவனாகிய சுக்கிரீவனும்; **இது நன்று** - 'இச் செயல் நல்லதாகும்'; **என்று சிந்தியா** - என்று சிந்தித்து. . . .*

*ஆலகால நஞ்சினை ஒத்துப் பிறர் உயிர் கவரும் கொடுஞ் செயல் குறித்து 'வாலி ஆனதோர் வெவ்விடம்' என்றான். வேறு நிற்றல் - பிறா அறியாத வகையில் மறைந்து நிற்றல். "நானும் நீயும் வேறித்திருக்க வேண்டும்" (பெரிய புராணம் - மெய்ப்பொருள் 13) என்ற இடத்து 'வேறு' என்பது பிறர் அறிய முடியாததனியிடம் என்ற பொருளில் வருதல் காண்க. ஏ + விட = எவ்விட என எதுகை நோக்கிக் குறுகி நின்றது. 'துணிந்து*

*அமைந்தது' என்ற தொடரினை 'எண்ணித் துணிக கருமம்' என்ற குறளின் (467) தொடரோடு ஒப்பிட்டு உணர்க. இராமபிரான் திட்டமிட்டுத் துணிந்தமை நினைவுகொள்ளத் தக்கது. வாலியை அடக்கி வெற்றி பெறுதலையே எண்ணிக் கொண்டிருந்த சுக்கிரீவனுக்கு இராமன் கூறிய வழி நல்லோர் உபாயமாகத் தோன்றியது என்பதால் 'தெவ் அடக்கும் வென்றியானும், 'நன்று இது' என்று சிந்தியா' என்றார். இனி, 'தெவ் அடக்கும் வென்றி யானும்' என்ற தொடர்க்கு இராமன் எனப் பொருள் கொண்டு 'இராமன் இது நன்று எனச் சிந்தித்துச் சுக்கிரீவனிடத்து 'நீ வாலியை வலியப் போருக்கழைத்துப் போர் செய்கையில் நான் வேறிடத்திலிருந்து அம்பு தொடுப்பது என் கருத்து' எனக் கூறியதாம். 10*

*சுக்கிரீவன் வாலியைப் போருக்கு அழைத்தல்*

***3945. வார்த்தை அன்னது ஆக, வான்***
***இயங்கு தேரினான் மகன்,***
***நீர்த் தரங்க வேலை அஞ்ச,***
***நீல மேகம் நாணவே,***
***வேர்த்து மண்உளோர் இரிந்து,***
***விண்உளோர்கள் விம்ம, மேல்***
***ஆர்த்த ஓசை, ஈசன் உண்ட***
***அண்டம் முற்றும் உண்டதே.***

***வார்த்தை அன்னது ஆக -** இராமன் கூறிய வார்த்தை அவ்வாறாக; **வான் இயங்கு தேரினான் மகன் -** (அது கேட்டு) வானத்தில் இடைவிடாது செல்கின்ற தேரை உடைய சூரியன் மைந்தனாகிய சுக்கிரீவன்; **நீர்த் தரங்க வேலை அஞ்ச -** நீர் நிறைந்த அலைகளை உடைய கடல் அஞ்சும் படியாகவும்; **நீல மேகம் நாண -** நீல நிறமுள்ள மேகங்கள் வெட்கமடையும் படியாகவும்; **மண் உளோர் வேர்த்து இரிந்து-** மண்உலகத்தில் உள்ளவர்கள் உடல் வியர்த்து ஓடவும்; **விண் உளோர் விம்ம -** வானுலகத்தவராய தேவர்கள் கலங்கும் படியாகவும்; **மேல் ஆர்த்த ஓசை -** மிகுதியாக ஆரவாரம் செய்த ஓசையானது; **ஈசன் உண்ட -** ஈசனாகிய திருமாலால் உட்கொள்ளப் பெற்ற; **அண்டம் முற்றும் உண்டது -** அண்டப் பரப்பு முழுமையினையும் தன்னகத் தடக்கி மேலோங்கியது.*

*வார்த்தை - முன் பாடலில் இராமன் கூறிய மொழி; சுக்கிரீவன் எழுப்பிய பேரொலி, அலைகடல் முழக்கத்தையும் இடி முழக்கத்தையும் கீழ்ப்படுத்தி மேலோங்கியதால் 'நீர்த்தரங்க வேலை அஞ்ச, நீல மேகம் நாணவே ஆர்த்த ஓசை' என்றார், சுக்கிரீவன் ஆரவாரத்தைக் கேட்ட மண்ணுளோரும் விண்ணுளோரும் உடல் வியர்த்து நடுங்கி ஓடினர் என்பதை 'வேர்த்து மண்ணுளோர் அரிந்து விண்ணுளோர்கள் விம்ம' என்றார். ஊழி இறுதியில் திருமாலால் உட்கொள்ளப் பெற்ற அண்டங்கள் முழுவதிலும் அவன் பேரொலி நிரப்பியதால் 'ஈசன் உண்ட அண்டம் முற்றும் உண்டது' என்றார். நீலமேகம்- நீருண்டதால் கறுத்து விளங்கும் மேகம்; வியர்த்தல், இரிந்தோடுதல், விம்முறல் ஆகியன அச்சத்தால் உண்டாகும் மெய்ப்பாடுகள். இரிந்து - இரிய; எச்சத்திரிபு. ஈசன் - இங்குத் திருமாலைக் குறித்தது. பாசத்து அன்பினைப் பற்று அற நீக்கலும், ஈசற்கே கடன் (10187) என்ற இடத்து இராமனை ஈசன் என்ற பெயரால் குறித்தது காணக். ஓசை*

*அண்டம் முற்றும் உண்டது - உண்ண முடியாததை உண்டது போலச் சொன்ன மரபு வழுவமைதி.* *11*

***3946.* இடித்து, உரப்பி, 'வந்து போர்**
**எதிர்த்தியேல் அடர்ப்பென்' என்று,**
**அடித்தலங்கள் கொட்டி, வாய் மடித்து,**
**அடுத்து, அலங்கு தோள்**
**புடைத்து நின்று, உளைத்த பூசல்**
**புக்கது என்ப - மிக்கு இடம்**
**துடிப்ப, அங்கு உறங்கு வாலி**
**திண் செவித் துளைக்கணே.***

**வந்து போர் எதிர்த்தியேல் -** *'என்னுடன் நீ போரில் எதிர்த்து வருவாயானால்;* **அடர்ப்பென் என்று -** *யான் உன்னைக் கொல்வேல்*

*என்று;* **இடித்து உரப்பி -** *அதட்டிக் கூறி;* **அடித்தலங்கள் கொட்டி -** *தன் கால்களால் ஓசை உண்டாகுமாறு தரையில் மிதித்து;* **வாய் மடித்து -** *சினத்தால் வாய் உதடுகளை மடித்துக் கொண்டு;* **அடுத்து அலங்கு தோள் புடைத்து -** *அடுத்து விளங்குகின்ற தன் தோள்களைத் தட்டிக் கொண்டு;* **நின்று உளைத்த பூசல் -** *நின்று வலியப் போருக்கு அழைத்த (சுக்கிரீவனின்) ஆரவாரம்;* **அங்கு -** *கிட்கிந்தை நகரத்தில்;* **இடம் மிக்குத் துடிப்ப -** *இடத் தோளும் இடக்கண்ணும் துடிக்க;* **உறங்கு வாலி** *- உறங்கிக் கொண்டிருக்கும் வாலியின்;* **திண்செவித் துளைக்கண் -** *வலிய செவித்துளையிலே;* **புக்கது என்ப -** *சென்று புகுந்தது என்பர்.*

*அடித்தலம் கொட்டுதல் - பாதங்களைத் தரையில் தட்டி மிகுத்து ஓசை உண்டாகும்படி நடத்தல்: வாய்மடித்தல் - வெகுளியின் மெய்ப்பாடு. ஆடவர்க்கு இடப்பக்கம் துடித்தல் தீ நிமித்தத்திற்கு அறிகுறி என்பர். சுக்கிரீவனின் ஆரவாரம் வாலியின் செவியில் படுகையில், அவனது அழிவைக் குறிக்கும் வகையில் அவனது இடப்பக்கம் 'துடித்த' செய்தி கூறப்பட்டது. 'மின்னின் அன்ன புருவமும் விண்ணினைத், துன்னு தோளும், இடம் துடியா நின்றான்' (7348). 'செயிரில் தீர்ந்த செழுந்தாமரைக் கண் இடனாடலும் (சிந்தா. 1156), "இடுக்கண் தருதற் கேதுவாகி, இடக்கண் ஆடலும்" (பெருங்கதை. 2-18- 32-33) என்னும் இடங்கள் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கன. பூசல் - போர் ஆரவாரம். முதல் 12 பாடல்களை நான்கு சீரடிகளாய்ப் பிரித்து கலிவிருத்தம் என்றும்கொள்வதுண்டு.* *12*

வாலி போருக்கு எழுதல்

கலிவிருத்தம்

***3947.* மால் பெருங் கட கரி முழக்கம் வாள் அரி**
**ஏற்பது செவித்தலத்து என்ன, ஓங்கிய**
**ஆர்ப்பு ஒலி கேட்டனன் - அமளிமேல் ஒரு**
**பாற்கடல் கிடந்ததே அனைய பான்மையான்.***

***அமளி மேல் -*** *படுக்கையின் மேல்;* ***ஒரு பாற்கடல் கிடந்ததே அனைய -*** *ஒப்பற்ற பாற்கடல் படுத்திருந்தது போன்ற;* ***பான்மை யான் -*** *தன்மையை உடையவனாகிய வாலி;* ***மால்பெரும் கடகரி முழக்கம் -*** *மயக்கம் கொண்ட பெரிய மதயானையின் முழக்கத்தை;* ***வாள் அரி செவித்தலத்து -*** *கொடிய சிங்கம் தன் காதுகளில்;* ***ஏற்பது என்ன -*** *ஏற்றுக் கொண்டாற்போல;* ***ஓங்கிய ஆர்ப்பு ஒலி -*** *மிகுதியாக எழுந்த (அச்சுக்கிரீவனின்) கர்ச்சனை ஒலியை;* ***கேட்டனன் -*** *கேட்டான்.*

*மலை முழையினுள் படுத்து உறங்கிக் கொண்டிருக்கும் ஒரு சிங்கம் மதயானையின் பிளிறலைக் கேட்டது போலத் தன் அரண்மனையில் உறங்கிக் கொண்டிருந்த வாலி சுக்கிரீவனின் போர்முழக்கத்தைக் கேட்டான். உவமை அணி. வாலி கம்பீரமான தோற்றமும் வெண்ணிறமும் கொண்டவனாதலின் 'பாற் கடல் கிடந்ததே அனைய பான்மையான்' எனப்பட்டான். வாலி வெண்ணிற மேனியன் என்பதை 'இந்திரன் தனிப்புதல்வன், இன்னனிச் சந்திரன் தழைத்தனைய தன்மையான்' (3834). "பாரில் திரியும் பனி மால் வரை அன்ன பண்பார்' (3979)*

*என்ற அடிகளும் உணர்த்தும். இராவணன் அமளியில் படுத்திருந்ததை 'மால் பெருங்கடல் வதிந்ததே அனையதோர் வனப்பினர் துயில்வானை" (5040). என்று கூறியிருத்தலை ஒப்பிட்டுக் காணலாம். வாலியைக் கரி முழக்கம் கேட்ட அரிக்கு உவமித்தமையால் வாலி எளிதில் அழிக்கத்தக்கவன் அல்லன் என்று அவன் வலிமை மிகுதியே உணர்த்தப்பட்டுள்ளது. ஆர்ப்பு ஒலி - ஒரு பொருட் பன்மொழி.*
*13*

***3948. உருத்தனன் பொர எதிர்ந்து***
***இளவல் உற்றமை,***
***வரைத் தடந் தோளினான்,***
***மனத்தின் எண்ணினான்;***
***சிரித்தனன்; அவ் ஒலி,***
***திசையின் அப் புறத்து***
***இரித்தது, அவ் உலகம்***
***ஓர் ஏழொடு ஏழையும்.***

***வரைத் தடந் தோளினான் -*** *மலையினை ஒத்த பெரிய தோள்களை உடைய வாலி;* ***இளவல் -*** *தன்தம்பியாகிய சுக்கிரீவன்;* ***உருத்தனன் -*** *சினம் கொண்டவனாய்;* ***பொர எதிர்ந்து உற்றமை -*** *தன்னுடன் போர்செய்ய எதிர்த்து வந்ததை;* ***மனத்தில் எண்ணினான் -*** *தன் மனத்தில் நினைந்தவனாய்;* ***சிரித்தனன் -*** *சிரித்தான்;* ***அவ்வொலி -*** *அச்சிரிப்பொலி;* ***அவ்வுலகம் ஓர் ஏழொடு ஏழையும் -*** *அந்தப் பதினான்கு உலகங்களையும் கடந்து;* ***திசையின் அப்புறத்து -*** *திசைகளின் எல்லைக்கு அப்பால்;* ***இரித்தது -*** *அஞ்சி ஓடும்படி செய்தது.*

*போரில் பல முறை தன்னிடம் தோற்ற சுக்கிரீவன் வலியப்போருக்கு அழைத்ததை எண்ணி இகழ்ச்சியால் வாலி சிரித்தான். எள்ளல் பற்றி வந்த நகை. அவன் சிரிப்பொலி பதினான்கு உலகங்களையும் நிலை கலங்கி ஓடச் செய்தது என்பது உயர்வுநவிற்சி அணி. உலகம் - இடவாகுபெயரால் அங்கு வாழ்பவரைக் குறிக்கும். இரித்தது - பிறவினை.* *14*

***3949. எழுந்தனன், வல் விரைந்து***
***இறுதி ஊழியில்***
***கொழுந் திரைக் கடல்***
***கிளர்ந்தனைய கொள்கையான்;***
***அழுந்தியது, அக் கிரி; அருகில்***
***மால் வரை***
***விழுந்தன, தோள் புடை***
***விசித்த காற்றினே.***

***ஊழி இறுதியில் -*** *ஊழி இறுதியாகிய யுக முடிவில்;* ***கொழுந் திரைக்கடல் -*** *பெரிய அலைகளோடு கூடிய கடல்;* ***கிளர்ந்தனைய -***

*பொங்கி எழுந்தாற்போன்ற;* ***கொள்கையான் -*** *செருக்குடையவனாய் (வாலி);* ***வல் விரைந்து எழுந்தனன் -*** *(சுக்கிரீவனை அழிக்கும் பொருட்டு) மிகவிரைந்து எழுந்தான்;* ***அக்கிரி அழுந்தியது-*** *(அவன் எழுந்த வேகத்தால்) அந்தக் கிட்கிந்தைமலை நிலத்தினுள்ளே அழுந்தியது;* ***தோள்புடை விசித்த காற்றின் -*** *(அவன்) தோள்களைப் பக்கங்களில் அசைத்து எழுப்பிய காற்றினாய்;* ***அருகில் மால்வரை -*** *(அந்த மலையின்) அருகில் இருந்து பெரிய மலைகள்;* ***விழுந்தன -*** *நிலை பெயர்ந்து கீழே விழுந்தன.*

*இறுதி ஊழியில் என்பதனை ஊழி இறுதியில் எனக் கொள்க. கொள்கை யான் - வீரமிகுதி, செருக்கு உடையான். வல் - விரைவை உணர்த்தும் இடைச் சொல். வல்விரைந்து - ஒரு பொருட் பன்மொழி. நிலத்தில் கிரி அழுந்துதலும், மால்வரைகள் விழுதலும் வாலியின் சினமிகுதியினையும் ஆற்றலையும் உணர்த்தும். உயர்வு நவிற்சி அணி.* *15*

***3950. போய்ப் பொடித்தன மயிர்ப்***
***புறத்த, வெம் பொறி;***
***காய்ப்பொடு உற்று எழு வட***
***கனலும் கண் கெட,***
***தீப் பொடித்தன, விழி;***
***தேவர் நாட்டினும்***
***மீப் பொடித்தன புகை,***
***உயிர்ப்பு வீங்கவே.***

***வெம்பொறி -*** *(வாலியின் சினத்தால்) கொடிய தீப்பொறிகள்;* ***மயிர்ப்புறத்த போய்ப் பொடித்தன -*** *மயிர்க்கால் தொறும் தோன்றிப் பக்கங்களில் சென்று சிதறின;* ***விழி -*** *(வாலியின்) கண்கள்;* ***காய்ப்பொடு உற்று எழு -*** *கோபத்தோடு பொருந்தி மேல் நோக்கி எழுகின்ற;* ***வடகனலும் கண்கெட -*** *வடவைத் தீயும் காணின் கண் ஒளி கெடும்படி;* ***தீப் பொடித்தன-*** *தீயைச் சிந்தின;* ***உயிர்ப்பு வீங்க -*** *(அவனுடைய) மூச்சுக்காற்றுப் பெரிதாய்எழ;* ***புகை -*** *அதிலிருந்து எழுந்த புகைகள்;* ***தேவர் நாட்டினும் மீப்பொடித்தன -*** *தேவர்கள் வாழும் வானுலகினும் மேலோங்கிப் பரவின.*

*மயிர்க்கால்தொறும் தீப்பொறிகள் தோன்றிச் சிதறின என்றும், வடவைத் தீயின் கண் பார்வையும் கெடுமாறு வாலியின் விழிகள் சினம் கக்கின என்றும், மூச்சுக் காற்றில் எழுந்த புகைக் கூட்டம் விண்ணுலகையும் தாண்டிச் சென்றது என்றும் கூறி, வாலியின் சினமிகுதியைக் கவிஞர் புலப்படுத்திய திறம் நயம் மிக்கது. வட கனல் - வடவைக் கனல். கடலில் பெண்குதிரை முக வடிவில் உள்ள கொடிய தீப் பிழம்பு. "வடவை தீதர" (201). 'மா வடவைக் கனல் ஆனதால்' (1404), சுடர்க் குதிரையின் வாய் முகத்திடை நிமிர்ந்து வடவேலை பருகும். (2541) என்னும் அடிகளில் வடவைத் தீபற்றிய குறிப்புக் காணலாம். 16*

***3951. கைக் கொடு கைத்தலம் புடைப்ப, காவலின்***
***திக் கயங்களும் மதச் செருக்குச் சிந்தின;***
***உக்கன உரும்இனம்; உலைந்த உம்பரும்;***
***நெக்கன, நெரிந்தன, நின்ற குன்றமே.***

***கைக் கொடு கைத்தலம் புடைப்பு -*** *(வாலி சினத்தால்) ஒரு கையினைக் கொண்டு மற்றொரு கையினைத் தட்ட;* ***காவலின் திக்கயங்களும்-*** *(அதனால் எழுந்த ஓசையால்) உலகினைத் தாங்கி நின்று காவல் புரியும்எட்டுத்திசை யானைகளும்;* ***மதச் செருக்குச் சிந்தின -*** *மதக் களிப்பாகியசெருக்கினை நீங்கின;* ***உரும் இனம் உக்கன -*** *இடியின் கூட்டங்கள் (தம்வலிமை குறைந்து) உதிர்ந்தன;* ***உம்பரும் உலைந்த -*** *தேவர் உலகங்களும்வருந்தின;* ***நின்ற குன்றம் -*** *(பெயர்தலின்றி) நிலை பெற்றிருந்த மலைகளும்;* ***நெக்கன நெரிந்தன -*** *பிளவுபட்டு நொறுங்கின.*

*வாலி தன் இரு கரங்களைத் தட்டி எழுப்பிய ஒலியால் வலிமை வாய்ந்ததிக்கு யானைகளும், இடியின் கூட்டமும், மலைகளும் நிலைகலங்கின என்பதால் வாலியின் வலிமை மிகுதி உணர்த்தப்படுகிறது. நெக்குதல் - நெகிழ்ந்து பிளவுபடல். "நெட்டிருப்புப் பாறைக்கு நெக்கு விடாப் பாறை, பசு மரத்து வேருக்கு நெக்கு விடும்" என்பது நல்வழி.(33). 17*

***3952. 'வந்தெனன்! வந்தெனன்!' என்ற வாசகம்***
***இந்திரி முதல் திசை எட்டும் கேட்டன;***
***சந்திரன் முதலிய தாரகைக் குழாம்***
***சிந்தின, மணி முடிச் சிகரம் தீண்டவே.***

***வந்தனென்! வந்தனென்!-*** *'வந்து விட்டேன், வந்து விட்டேன்';* ***என்ற வாசகம் -*** *என்று வாலி கூறிய சொற்கள்;* ***இந்திரி முதல் -*** *இந்திரனுக்குரிய கிழக்குத் திசை முதல்;* ***திசை எட்டும் கேட்டன -*** *எட்டுத் திசைகளிலும் கேட்டன;* ***மணி முடிச்சிகரம் தீண்டவே -*** *(அவன் போருக்குக் கிளர்ந்து எழுந்தபோது) அவனது மணிகள் இழைக்கப்பெற்ற முடியின் உச்சி தம் மேல் பட்டதால்;* ***சந்திரன் முதலிய -*** *(வானத்தில்) சந்திரனைத் தம் தலைவனாகக் கொண்ட;* ***தாரகைக் குழாம் சிந்தின -*** *விண்மீன் தொகுதிகள் கீழே சிதறி விழ்ந்தன.*

*வந்தனென், வந்தனென் - வெகுளியின் வந்த அடுக்குத் தொடர். இந்திரி - இந்திரனது திசையாகிய கிழக்கு. 'திசை எட்டும் கேட்டன' என்பது அவனது உரத்த குரலையும் 'மணிமுடிச் சிகரம் தீண்டத் தாரகைக் குழாம் சிந்தின' என்பது அவன் வடிவத்தின்*

*உயர்வையும் பெருமையினையும் குறித்தன. சந்திரன் நட்சத்திரங்களின் தலைவனாதலின் 'சந்திரன் முதலிய தாரகைக் குழாய்' என்றார். தாரகாபதி, உடுபதி என்னும் பெயர்கள் சந்திரனுக்கு உரியன. உயர்வு நவிற்சி அணி.* *18*

***3953. வீசின காற்றின் வேர் பறிந்து, வெற்புஇனம்***
***ஆசையை உற்றன; அண்டப் பித்திகை***
***பூசின, வெண் மயிர் பொடித்த வெம் பொறி;***
***கூசினன் அந்தகன்; குலைந்தது உம்பரே.***

***வீசின காற்றின் -*** *(வாலி எழுந்த வேகத்தால்) வீசின காற்றினால்;* ***வெற்பு இனம் -*** *மலைக் கூட்டங்கள்;* ***வேர் பறிந்து -*** *நிலை பெயர்ந்தவனாய்;* ***ஆசையை உற்றன -*** *திசையின் எல்லையை அடைந்து வீழ்ந்தன;* ***வெண்மயிர் பொடித்த வெம்பொறி -*** *(மேனியில் அடர்ந்துள்ள) வெண்மை வாய்ந்த மயிர்க்கால் தொறும் தோன்றிய வெம்மையுடைய அனற்பொறிகள்;* ***அண்டப் பித்திகை பூசின-*** *அண்டப்பரப்பின் மதிற் சுவரை மறைத்தன;* ***அந்தகன் கூசினன் -*** *(இவ்வாறு சினத்துடன் வரும் வாலியைக்காண) யமனும் கண் கூசினான்;* ***உம்பர் குலைந்தது -*** *தேவர்களும் நிலை குலைந்தனர்.*

*இப்பாடல் வாலியின் வேகத்தையும் சினமிகுதியையும் விளக்கும். வெண் மயிர் பொடித்த வெம்பொறி - மயிர்க்கால்களில் இருந்து எழுந்த தீப்பொறிகள். 'அண்டப் பித்திகை பூசின' என்றதால் அண்டச்சுவர்கள் வரை இவன் சினத்தீப் பொறிகள் சென்று ஒளி வீசின என்பதாம். உம்பர் - மேல் உலகம்; இடவாகு பெயராய்த் தேவர்களைக் குறிக்கும். அந்தகன். உயிர்கட்கு அந்தத்தைச் செய்வோனாகிய இயமன்.*
*19*

***3954. கடித்த வாய் எயிறு உகு***
***கனல்கள் கார் விசும்பு***
***இடித்த வாய் உகும்***
***உரும் இனத்தின் சிந்தின;***
***தடித்து வீழ்வன எனத்***
***தகர்ந்து சிந்தின,***
***வடித்த தோள் வலயத்தின்***
***வயங்கு காசு அரோ.***

***கடித்த வாய் எயிறு உரு -*** *(வாலி வெகுண்டு) கடித்த வாயிலிலுள்ள பற்களினின்று வெளிப்பட்ட;* ***கனல்கள் -*** *தீப்பொறிகள்;* ***கார்விசும்பு இடித்தவாய்*** *- கரிய மேகங்கள் விசும்பிடத்து ஒன்றோடொன்று மோதிய நிலையில்;* ***உகும் உரும் இனத்தின் -*** *விழும் இடிகளின் கூட்டம் போல;* ***சிந்தின -*** *எங்கும் சிதறின.* ***வடித்த தோள் வலயத்தின் -*** *(அவன் தோள்தட்டி ஆர்த்த நிலையில்) சிறந்த அவன் தோள் வளைகளில்;* ***வயங்கு காசு*** *- விளங்குகின்ற இரத்தினங்கள்;* ***தடித்து வீழ்வன என -*** *மின்னல்கள் கீழே விழுந்தாற்போல;* ***தகர்ந்து சிந்தின -*** *சிதறி வீழ்ந்தன.*

*எயிறு தோன்றப் பற்களைக் கடித்தல் - வெகுளியில் தோன்றும் மெய்ப்பாடு. காசு - இரத்தினம். 'தப்பின மணி, காசும், சங்கமும் மயிலன்னார்' (1189)*

*'திறம் செய் காசு ஈன்ற சோதி' (1129) என்னும் இடங்களில் இரத்தினம் எனும் பொருளில் 'காசு' ஆளப்பட்டுள்ளமை காண்க. தடித்து - மின்னல். வாலியின் வெகுளி மிகுதியை உயர்வு நவிற்சியால் கூறிய பாடல். அரோ -அசை. 20*

***3955. ஞாலமும், நால் திசைப் புனலும், நாகரும்,***
***மூலமும், முற்றிட முடிவில் தீக்கும் அக்***
***காலமும் ஒத்தனன்; கடலில் தான் கடை***
***ஆலமும் ஒத்தனன், எவரும் அஞ்சவே.***

***எவரும் அஞ்ச*** *- (அப்பொழுது வாலி) காண்பவர் எவரும் அஞ்சும்படியாக;* ***ஞாலமும்*** *- நிலவுலகமும்;* ***நால்திசைப் புனலும்*** *- நான்கு திசைகளிலும் உள்ள கடல்களும்;* ***நாகரும்*** *- தேவர்களும்;* ***மூலமும்*** *- எல்லாவற்றிற்கும் ஆதி காரணமான தத்துவங்களும்;* ***முற்றிட*** *- அழியும்படி;* ***முடிவில் தீக்கும்*** *- யுகமுடிவில் அனைத்தையும் எரிக்கும்;* ***அக்காலமும்*** *- அந்த ஊழிக்காலத்தீயினையும்;* ***ஒத்தனன்*** *- ஒத்து விளங்கினான்.* ***கடலில் தான் கடை*** *- (முன்பு) தன்னால் கடையப்பெற்ற பாற்கடலில் தோன்றிய;* ***ஆலமும் ஒத்தனன்*** *- ஆலகால நஞ்சையும் ஒத்து விளங்கினான்.*

*வாலியின் கொடுந்தோற்றமும் வெகுளியும் புலப்பட, ஊழித்தீப் போலவும், தான் கடைந்தபோது பாற்கடலினின்று வெளிப்பட்ட ஆலகால நஞ்சு போலவும் விளங்கினான் என்றார். நாகர் - தேவர்கள், நாகர்கள் என இருவரையும் குறிக்கும் சொல். பாற்கடல் கடைகையில் தேவர்களும் அசுரர்களும் தளர்ச்சி உற்ற போது வாலி தன் இரு கரங்களால் கடைந்தான் ஆதலின் 'தான் கடை கடலில்' என்றார். இச் செய்தி 'சுழலும் வேலையைக் கடையும் தோளினான்' (3823) என்னும் இடத்தும் கூறப்பட்டது. பாற்கடலில் வெளிப்பட்ட ஆலகால நஞ்சு யாவரையும் அஞ்சி ஓடச் செய்ததுபோல வாலியும் தன்னைக் கண்டார் யாவரும் அஞ்சி ஓடுமாறு வெளிப்பட்டான் என்பதாம். காலம் - காலாக்கினிக்கு (ஊழிக்காலத்தீ) ஆகுபெயர். 21*

*தாரை விலக்கலும், வாலி மறுத்துக் கூறலும்*

***3956. ஆயிடை,தாரை என்று அமிழ்தின் தோன்றிய***
***வேயிடைத் தோளினாள், இடை விலக்கினாள்;***
***வாயிடைப் புகை வர, வாலி கண் வரும்***
***தீயிடை, தன் நெடுங் கூந்தல் தீகின்றாள்.***

***ஆயிடை*** *- அப்பொழுது;* ***தாரை என்று*** *- தாரை என்று பெயர் கூறப்பட்டு;* ***அமிழ்தின் தோன்றிய*** *- அமுதம் போலக் காணப்படுகின்ற;* ***வேயிடைத் தோளினாள்*** *- மூங்கிலின் தன்மையைத் தன்னிடத்தே கொண்ட தோள்களை உடையவள்;* ***வாயிடைப் புகைவர-*** *வாயினின்று சினத்தால் புகை வருமாறு;* ***வாலி*** *- வாலியின்;* ***கண் வரும் தீயிடை*** *- கண்களிலிருந்து வரும் சினத்தீயிடையே;* ***தன் நெடுங் கூந்தல் தீகின்றாள்*** *- தன் நீண்ட கூந்தல் எரியப் பெற்றவளாய்;* ***இடை விலக்கினாள்*** *- இடை நின்று (அவனைத் தடுத்து) விலக்கினாள்.*

*அ+இடை = ஆயிடை என அகரச்சுட்டு நீண்டது. ஐம்பொறிகட்கும் இனியளாதல் பற்றி அமுதம் போலத் தோன்றியவள் என்றார். அமிழ்தின் தோன்றிய*

*வேயிடைத் தோளினாள். முன் பாடலில் 'கடலில் தான் கடை ஆலமும் ஒத்தான்' என்றமையால், அதனை இங்குக் கொண்டு கூட்டினால், ஆலத்திற்குப் பிறகு கிடைத்த அமுதம் போன்றவள் வாலியின் மனைவி என்ற பொருள் நயம் கொள்ள முடிகிறது. வாலிக்கு ஆலமும் தாரைக்கு அமுதமும் உவமையாவது நயம். வாயிடைப் புகைவர - கண்களில் தோன்றிய சினத்தீயால் உண்டாய புகை வாயிடமாக வெளிவந்தது என்க. முன் வாலிக்கு இடம் துடித்ததோடு (3946) இப்பொழுது தாரை இடை விலக்கலும் அவன் கேட்டிற்கு அறிகுறியாயின. 'கூந்தல் தீகின்றாள்' என்னும் தொடரால் தாரைக்குப் பின்னர் வர இருக்கும் அமங்கல நிலை முன்னரே சுட்டப்படுகிறது எனலாம். இள மூங்கில் மகளிர் தோளுக்கு உவமையாம். 22*

***3957. 'விலக்கலை; விடு; விடு; விளித்துளான் உரம்***
***கலக்கி, அக் கடல் கடைந்து அமுது கண்டென,***
***உலக்க இன் உயிர் குடித்து, ஒல்லை மீள்குவல்,***
***மலைக் குல மயில்!' என, மடந்தை கூறுவாள்:***

***மலைக்குல மயில்! -*** *மலையில் வாழும் சிறந்த மயில் போன்ற வளே!* ***விலக்கலை -*** *என்னைத் தடை செய்யாதே;* ***விடு விடு*** *- என்னை விட்டுவிடு;* ***அக்கடல் கடைந்து -*** *அந்தப் பாற்கடலைக் கடந்து;* ***அமுது கண்டென -*** *அமுதை எடுத்தாற்போல;* ***விளித்துளான் உரம் கலக்கி -*** *என்னைப் போருக்கு அழைத்த அச்சுக்கிரீவனின் வலிமையைக் குலையச் செய்து;* ***உலக்க இன் உயிர் குடித்து -*** *(அவன்) அழகிய (அவனது) இனிய உயிரைப் பருகி;* ***ஒல்லை மீள்குவல் -*** *விரைவில் திரும்பி வருவேன்;* ***என -*** *என்று (வாலி) கூற;* ***மடந்தை கூறுவான் -*** *தாரை சொல்வாள்.*

*மயில் - உவமை ஆகுபெயராய்த் தாரையைக் குறித்தது. மயில் குறிஞ்சி நிலத்துப்பறவையாதலின், மலையில் வாழும் தாரைக்கும் ஏற்கும். மலைக்குல மயில் - அண்மைவிளி. விலக்கலை - எதிர்மறை ஏவல் வினைமுற்று; விடுவிடு- விரைவு பற்றி வந்த அடுக்குத் தொடர். உயிர் குடித்து - அச்செயலின் எளிமையைக் குறிக்கக் கூறப்பட்டது. உண்ணப்படாதது உண்ணப்படுவது போலச் சொல்லப்பட்டது மரபுவழுவமைதி. இலக்கணை என்றும் கூறலாம். அக்கடல் - அகரம் பண்டறிசுட்டு. 23*

***3958. 'கொற்றவ! நின் பெருங்***
***குவவுத் தோள் வலிக்கு***
***இற்றனன், முன்னை நாள்,***
***ஈடு உண்டு ஏகினான்;***
***பெற்றிலன் பெருந் திறல்;***
***பெயர்த்தும் போர் செயற்கு***
***உற்றது, நெடுந் துணை***
***உடைமையால்' என்றாள்.***

***கொற்றவ -*** *(தாரை வாலியை நோக்கி) வெற்றியை உடைய அரசனே!* ***நின்பெருங் குவவுத் தோள் -*** *உன்னுடைய பெருமை மிக்க திரண்ட தோள்களின்;* ***வலிக்கு -*** *வலிமைக்கு;* ***முன்னைநாள் -*** *முன்;* ***இற்றனன் -*** *வலிமை அழிந்து;* ***ஈடு உண்டு ஏகினான் -*** *வருத்தமுற்றுச் சென்றவனான சுக்கீவன்;* ***பெருந்திறல் பெற்றிலன் -*** *(நின்னை எதிர்த்துப் போர் செய்ய) பேராற்றலைப் புதிதாகப் பெற்றானில்லை;* ***பெயர்த்தும் போர்செயற்கு -*** *(அவ்வாறாக) மீண்டும் உன்னோடு*

*போர்செய்வதற்கு;* ***உற்றது -*** *வந்துற்றமை;* ***நெடுந்துணை உடைமையால்*** *- பெரிய ஒரு துணையினைப் பெற்றமையாலாகும்;* ***என்றாள் -*** *என்று சொன்னாள்.*

*நாட்டையும் ஆளும் தகுதியும் திறலும் உடையவனாதலின் தாரை வாலியைக் 'கொற்றவ' என விளித்தாள். குவவு - திரட்சி; ஈடு உண்டு - வருத்தமுற்று. ஈடு - வருத்தம். 'ஈடினால் இருந்தெண்ணி' என்பது சிந்தாமணி (1762). நெடுந்துணை - துன்பம் மிக்க காலத்திலும் நீங்காது நெடிது நின்று உதவும் துணை; ஈண்டு இராமனைக் குறிக்கும். பெயர்த்தும் போர்செயற்கு உற்ற காரணத்தை ஊகித்தறியும் தாரையின் அறிவுத்திறன் ஈண்டு நோக்கத்தக்கது.* 24

***3959. 'மூன்று என முற்றிய முடிவு***
***இல் பேர் உலகு***
***ஏன்று, உடன் உற்றன,***
***எனக்கு நேர் எனத்***
***தோன்றினும், தோற்று, அவை***
***தொலையும் என்றலின்***
***சான்று உள; அன்னவை -***
***தையல்! - கேட்டியால்:***

***தையல் -*** *(அதற்கு வாலி) பெண்ணே!* ***மூன்று என முற்றிய -*** *மேல், கீழ், நடு என மூன்றாக வகுக்கப்பெற்றுள்ள;* ***முடிவு இல் பேர் உலகு -*** *எல்லையற்ற பெரிய உலகங்கள் யாவும்;* ***ஏன்று உடன் உற்றன -*** *தம்முள் இயைந்து ஒன்று சேர்ந்தனவாய்;* ***எனக்கு நேர் என -*** *எனக்குப் பகையாக;* ***தோன்றினும் -*** *எதிர்த்து வந்து தோன்றினாலும்;* ***அவை தோற்றுத்தொலையும் -*** *அவையெல்லாம்தோற்று அழியும்;* ***என்றலின் -*** *என்று கூறுவதற்கு;* ***சான்று உள -*** *சான்றுகள் பல உள்ளன;* ***அன்னவை -*** *அவற்றை;* ***கேட்டி -*** *கேட்பாயாக!*

*தையல் - அழகுடையவள்; அண்மை விளி, உலகு - இடவாகுபெயரால் அங்குள்ள உயிர்களைக் குறித்தது. கேட்டி - முன்னிலை ஒருமை; ஆல் அசை வாலியின் போர்ச்செயலைக் கண்டு அறியும் வாய்ப்பில்லாதவளாய் கேள்வி மாத்திரத்தால் அறிந்தவளாதலின் 'கேட்டி' என வாலி உரைக்கலாயினன்.* 25

***3960. 'மந்தர நெடு வரை***
***மத்து, வாசுகி***
***அந்தம் இல் கடை கயிறு,***
***அடை கல் ஆழியான்,***
***சந்திரன் தூண், எதிர்***
***தருக்கின் வாங்குநர்,***
***இந்திரன் முதலிய***
***அமரர், ஏனையோர்;***

***மந்தர நெடுவரை -*** *மந்தரம் என்னும் பெயருடைய பெரிய மலையே;* ***மத்து -*** *மத்தாகவும்;* ***வாசுகி -*** *வாசுகி என்னும் பாம்பு;* ***அந்தம் இல் கடை கயிறு -***

*எல்லையில்லாது நீண்ட கடையும் கயிறாகவும்;* ***ஆழியான் -*** *சக்கரப்படையினை உடைய திருமால்;* ***அடைகல் -*** *(ஆமை வடிவாய் மத்தினைத் தாங்கும்) அடைகல்லாகவும்;* ***சந்திரன் -*** *சந்திரன்;* ***தூண் -*** *மத்தினை நிறுத்தும் தூணாகவும்;* ***எதிர் தருக்கின் வாங்குநர் -*** *எதிர் எதிலே நின்ற பெருமிதத்தோடு கயிற்றை இழுத்துக் கடைபவர்;* ***இந்திரன் முதலிய அமரர் -*** *இந்திரன் முதலான தேவர்களும்;* ***ஏனையோர் -*** *(அவர்களுக்கு மாறுபட்ட) அசுரர்களும் ஆயினர்.*

*இதுவும் அடுத்தபாடலும் வாலி பாற்கடல் கடைந்த வரலாற்றைக் கூறுவன. தேவர்களும் அசுரர்களும் மந்தர மலையை மத்தாக, வாசுகியைக் கயிறாகக் கொண்டு பாற்கடலைக் கடைந்தபோது மந்தரமலை ஆகிய மத்து கடலில் அழுந்தி விட, அப்போது திருமால் ஆமையுருக்கொண்டு அம்மலையின்கீழ் அடைகல்லாக நின்று தாங்கினார் என்பது புராணம். அடைகல் - சுமையைத் தாங்கிக் கொள்ளுதற்கேற்ற வன்மை பொருந்திய அடியில் பீடமாக அமைக்கும் கல். இது பட்டடைக்கல் எனவும் வழங்கும். "சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை" (குறள் 821). 'அட்ட வல் இரும்பு அடைகலைச் சுடுகலாததுபோல்' (5774). ஆழியான் - திருமால்; வாசுகி - எட்டு நாகங்களில் ஒன்று; ஏனையோர் - அவரினும் வேறுபட்டவராதலின் தேவர்க்குப் பகைவரான அசுரர்கள் ஆவர். 26*

***3961. 'பெயர்வுற வலிக்கவும், மிடுக்கு***
***இல் பெற்றியார்***
***அயர்வுறல் உற்றதை நோக்கி,***
***யான், அது***
***தயிர் எனக் கடைந்து,***
***அவர்க்கு அமுதம் தந்தது,***
***மயில் இயல் குயில்மொழி!***
***மறக்கல் ஆவதோ?***

***மயில் இயல் குயில் மொழி -*** *மயில் போன்ற சாயலையும் குயிலின் குரலை ஒத்த இனிய சொல்லையும் உடைய தாரையே!* ***பெயர்வுற வலிக்கவும்-*** *(மந்தர மலையாகிய மத்து) நிலைபெயர்ந்து சுழலுமாறு வலிந்து இழுக்கவும்;* ***மிடுக்குஇல் பெற்றியார் -*** *வலிமை இல்லாத தன் மையரான தேவ அசுரர்கள்;* ***அயர்வுறல் உற்றதை நோக்கி -*** *தளர்ச்சி*

*அடைந்ததைப் பார்த்து;* ***யான் -*** *நான்;* ***அது தயிர் எனக் கடைந்து -*** *அதனைத் தயிர் கடைவது போல் கடைந்து;* ***அவர்க்கு அமுதம் தந்தது -*** *அவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்த செயல்;* ***மறக்கல் ஆவதோ -*** *மறக்கக்கூடியது ஆகுமோ? (ஆகாது).*

*மயில் இயல், குயில்மொழி - உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அண்மைவிளி, மறக்கல் ஆவதோ? - வாலி கடல் கடைந்து அமுதளித்த பெருஞ்செயலைத் தாரை அறிந்ததே; எனவே, 'நீ மறக்கக்கூடியதா' எனத் தாரைக்கு உரைத்தனன். இச்செயலை உலகத்தார் மறக்கக்கூடியதா? என்று உலகினர் மறக்கமுடியாத அருஞ்செயலைச் செய்வதன் வாலி என்பதை நிறுவினன் எனவும் கொள்ளலாம் - ஆவதோ - ஓகாரம் எதிர்மறை. 27*

***3962. 'ஆற்றல் இல் அமரரும்,***
***அவுணர் யாவரும்,***
***தோற்றனர்; எனையவர்***
***சொல்லற்பாலரோ?***
***கூற்றும், என் பெயர் சொலக்***
***குலையும்; ஆர், இனி***
***மாற்றவர்க்கு ஆகி வந்து,***
***எதிரும் மாண்பினார்?***

***ஆற்றல் இல் அமரரும் -*** *வலிமையில்லாத தேவர்களும்;* ***அவுணர் யாவரும் -*** *அசுரர்கள் எல்லோரும்;* ***தோற்றனர் -*** *தோற்றுப் போனவர்கள்;* ***எனையவர் -*** *எத்தனை பேராவர்;* ***சொல்லற்பாலரோ? -*** *(என்று) சொல்லும் தன்மையர் ஆவரோ?* ***கூற்றும் -*** *யமனும்;* ***என் பெயர் சொல -*** *என் பெயரைப் பிறர் சொல்லக் கேட்டால்;* ***குலையும் -*** *நடுங்குவான்.* ***மாற்றவர்க்கு ஆகிவந்து -*** *(அதனால்) எனது பகைவனான சுக்கிரீவனுக்குத் துணையாகி வந்து;* ***எதிரும் மாண்பினார் -*** *என்னைப் போரில் எதிர்க்கும் திறமையுடையவர்;* ***இனி ஆர் -*** *இனியார் உள்ளனர்? (ஒருவரும் இலர்).*

*வாலி தன் வீரமிகுதியைத் தாரைக்கு உரைத்தனன். தேவர்களையும், அசுரர்களையும், யமனையும் அஞ்சுமாறு செய்யும் அவனை எதிர்க்கக்கூடியவர் எவரும் இரார் என்பதால் 'எதிரும் மாண்பினார் ஆர்?' எனத் துணிந்து பேசினான். கூற்றும் - உயர்வு சிறப்புஉம்மை. 28*

***3963. 'பேதையர் எதிர்குவர் எனினும், பெற்றுடை***
***ஊதிய வரங்களும், உரமும், உள்ளதில்***
***பாதியும், என்னதால்; பகைப்பது எங்ஙனம்?***
***நீ, துயர் ஒழிக!' என, நின்று கூறினான்.***

***பேதையர் -*** *(எனது வலிமையை உணராத) அறிவில்லாதவர்;* ***எதிர்குவர் எனினும் -*** *என்னை எதிர்த்துப் போர் புரிவார்கள் என்றாலும்;* ***பெற்றுடை -*** *அவர்கள் அடைந்துள்ள;* ***ஊதிய வரங்களும் -***

*சிறந்த வரங்களிலும்;* ***உரமும் -*** *வலிமையிலும்;* ***உள்ளதில் பாதியும் -*** *அவர்களிடம் உள்ளதில் சரிபாதி;* ***என்னதால் -*** *என்னுடையதாய் விடும். அதனால்;* ***பகைப்பது எங்ஙனம் -*** *அவர்கள் பகைமைகொண்டு என்னிடம் போரிடுவது எவ்வாறு?* ***நீ துயர் ஒழிக -*** *(நான் போர்க்குச் செல்வது குறித்து) 'நீ துன்பம் அடைதலை நீக்குக';* ***என நின்று கூறினான்-*** *என்று நிதானித்துத் தாரைக்கு ஆறுதல் மொழி கூறினான்.*

*தனக்கு இயல்பாக அமைந்துள்ள வலிமையோடு தன்னை எதிர்ப்போரின் வன்மையில் பாதியும் தனக்கு வந்து சேர்ந்துவிடுவதால் தன்னை எதிர்க்கக்கூடியவர் எவரும் இல்லையென்று கூறித் 'துயர்அடைய வேண்டாம்' எனத் தாரைக்கு வாலி ஆறுதல் கூறினான். பகைவர் வலிமையில் பாதி பெறும் வரம் சிவபிரான் வாலிக்கு அளித்தது; 'அரங்கில் ஆடுவார்க்கு அன்பு பூண்டு, உடை வரம் அறியேன்' (6177) என்றது காண்க. இராவணன் இங்ஙனம் பாதி வலிமை இழந்ததால் தோற்றதையும் 'என் வலி*

*அவன் வயின் எய்த வரங்கொள் வாலிபால் தோற்றனென்' (6177) என்ற அடிகள் உணர்த்தும். எதிர்குவர் - கு, சாரியை; ஒழிகென (ஒழிக என) - தொகுத்தல்விகாரம்.   29*

***3964. அன்னது கேட்டவள்,***
***'அரச!' ''ஆயவற்கு***
***இன் உயிர் நட்பு***
***அமைந்து இராமன் என்பவன்,***
***உன் உயிர் கோடலுக்கு***
***உடன் வந்தான்'' எனத்***
***துன்னிய அன்பினர்***
***சொல்லினார்' என்றாள்.***

***அன்னது கேட்டவள் -*** *அவ்வாறு வாலி சொல்லக் கேட்ட தாரை;* ***அரச -*** *(வாலியை நோக்கி) 'அரசே';* ***இராமன் என்பவன் -*** *இராமன், என்போன்;* ***ஆயவற்கு -*** *அந்தச் சுக்கிரீவனுக்கு;* ***இன் உயிர் நட்பு அமைந்து-*** *இனிய உயிர்த் துணைவனாகி;* ***உன் உயிர் கோடலுக்கு -*** *உனது உயிரைக் கொள்வதற்கு;* ***உடன் வந்தான் என -*** *அவனுடன் வந்துள்ளான் என்று;* ***துன்னிய அன்பினர் -*** *நம்மிடம் நெருங்கிய அன்புடையவர்கள்;* ***சொல்லினார் என்றாள் -*** *சொன்னார்கள் என்று சொன்னாள்.*

*துன்னிய அன்பினர் சொல்லினார் - நமக்கு நன்மை புரியும் உண்மை அன்புடையார் சிலர் சொல்லக் கேள்வியுற்றேன் என்று உரைத்தனள் தாரை. இக்கூற்றால் தாரை அரசியல் அறிவு கொண்டவளாய் ஆங்காங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளை அறிந்து வந்தனள் என்பது புலனாகிறது. தன்னை எதிர்ப்பவர் எவர் எனப் புறப்படும் வாலியிடம், மாற்றான் வலிமை குறைந்தவனாயினும், அவனுக்குத் துணையாகவரும் துணைவனது வலிமையை எண்ணித் துணிந்தபின் போருக்குச் செல்லுதல் நன்று எனக்கூறும் தாரையின் அரசியலறியும் ஈண்டு நினைக்கத்தக்கது. 'சொல்லினார்' என்பதால் செய்தியைத் தீர விசாரித்துப் பின்னர்ச் செயற்பட வேண்டும் என அறிவுத்திறமும் புலனாகின்றது.   30*

***3965. 'உழைத்த வல் இரு***
***வினைக்கு ஊறு காண்கிலாது***
***அழைத்து அயர் உலகினுக்கு***
***அறத்தின் ஆறு எலாம்***
***இழைத்தவற்கு, இயல்பு அல***
***இயம்பி என் செய்தாய்?***
***பிழைத்தனை; பாவி! உன்***
***பெண்மையால்' என்றான்.***

***பாவி -*** *தீவினை உடையவளே!* ***உழைத்த வல் இருவினைக்கு -*** *வருந்திச் சேர்த்த கொடிய இருவினைகளுக்கு;* ***ஊறு காண்கிலாது -*** *அழிவினைச் செய்யும் வழியினைக் காண முடியாமல்;* ***அழைத்து -*** *(இறைவனை அருள்வேண்டி) அழைத்து;* ***அயர் உலகினுக்கு -*** *வருந்துகின்ற உலக உயிர்களுக்கு;* ***அறத்தின் ஆறு எலாம் -*** *தருமத்தின் வழிகளையெல்லாம்;* ***இழைத்தவற்கு -*** *தன் நடைமுறையால் காட்டிய அந்த*

*இராமபிரானுக்கு;* ***இயல்பு அல இயம்பி -*** *பொருந்தாதவற்றைச் சொல்லி;* ***என் செய்தாய் -*** *என்ன தவறு செய்துவிட்டாய்!* ***உன் பெண்மையால் -*** *உன் பெண் தன்மைக்கேற்ற பேதைமையால்;* ***பிழைத்தனை என்றான் -*** *பெரிய பிழையைச் செய்து விட்டாய்' என்றான்.*

*நல்வினையும் தீவினையும் தொடர்ந்துவந்து பலன் அளிப்பன ஆதலின் 'வல் இருவினை' என்றார். ஊறு - உறு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். இராமபிரான் தருமத்தை வாழ்ந்து காட்டுபவனாதலின் 'அறத்தின் ஆறு எலாம் இழைத்தவற்கு' என்றான். 'மண்ணிடை யாவர் இராகவன் அன்றி மாதவம் அறத்தொடும் வளர்த்தார் (97) 'உண்டு எனும் தருமமே உருவமா உடைய நின் கண்டு கொண்டேன்' (4066); "அறைகழல் இராமன் ஆகி, அறநெறி நிறுத்த வந்தது" (4073) என்ற அடிகள் ஒப்பு நோக்கத்தக்கன. 'இயல்பு அல என்பது இராமனது பண்புக்கு ஒவ்வாத சொற்கள். தாரை இங்ஙனம் பிழைபடப் பேசியதற்குப் பெண்ணறிவாகிய பேதைமையால் என்கிறான். 'பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால்' என்று சீதை கூறுவதும் காண்க. (5356) உன் பெண்மையால் பிழைத்தனை என்ற தொடர் 'நீ பெண் ஆதலால் உயிர் தப்பினாய்' என்ற பொருளும் தந்து நிற்கிறது. தாரை கூறிய தவறான வார்த்தை கருதி அவளைப் 'பாவி' என விளித்தான் வாலி. 31*

***3966. 'இருமையும் நோக்குறும்***
***இயல்பினாற்கு இது***
***பெருமையோ? இங்கு இதில்***
***பெறுவது என்கொலோ?***
***அருமையின் நின்று, உயிர்***
***அளிக்கும் ஆறுடைத்***
***தருமமே தவிர்க்குமோ***
***தன்னைத் தான்அரோ?***

**இருமையும் நோக்குறும் -** *இம்மை, மறுமை என்னும் இரண்டின் பயன்களையும் பார்க்கும்;* **இயல்பினாற்கு -** *இயல்பினையுடைய இராமனுக்கு;* **இது பெருமையோ** *- நீ கூறியபடி செய்வது பெருமையாகுமா?* **இங்கு இதில் பெறுவது என்கொலோ** *- இங்கு இவ்வாறு செய்வதில் அவன் அடையக் கூடிய பயன் யாதோ?* **அருமையின் நின்று** *- அடைதற்கரிய பொருளாய் நின்று;* **உயிர் அளிக்கும்** *- உலக உயிர்களைப் பாதுகாக்கும்;* **ஆறுடைத் தருமமே** *- நெறியுடைய தருமமே;* **தன்னைத் தான் தவிர்க்குமோ** *- தன்னைத்தானே அழித்துக் கொள்ளுமோ?*

*இருவர்க்கிடையில் நடைபெறும் போரில் ஒருவர்க்கு உதவியாய் இருந்து மற்றொருவரைக் கொல்லுதலாகிய அறமல்லாத செயலை இராமன் செய்யமாட்டான் என்பது வாலியின் கருத்தாகும். இராமன் தருமமே உருவெடுத்து வந்தவனாதலின், தருமத்திற்கு மாறான செயல்களைச் செய்ய மாட்டான் என்பதால் 'தருமமே தவிர்க்குமோ தன்னைத்தான்' என்றான். 'அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான்' (1349) 'மெய்யற மூர்த்தி வில்லோன்' (5882) என்பன காண்க.*

*தவிர்க்குமோ - ஓகாரம் எதிர்மறைப்பொருள். இது பெருமையோ - பெருமையைத் தருவதாகுமோ என்றது பழியையே தரும் என்பதைக் குறிப்பால் உணர்ந்தும். தருமமே - ஏகாரம் சிறப்பு; முன்பாடலில் இராமனை 'அறத்தின் ஆறெலாம் இழைத்தவன்' எனக் கூறிய வாலி இப்பாடலில் 'தருமமே' எனக் குறிப்பிடுகிறான். 32*

***3967. 'ஏற்ற பேர் உலகு எலாம் எய்தி. ஈன்றவள்***
***மாற்றவள் ஏவ, மற்று, அவள்தன் மைந்தனுக்கு***
***ஆற்ற அரும் உவகையால் அளித்த ஐயனைப்***
***போற்றலை ; இன்னன புகறல்பாலையோ?'***

***ஏற்றபேர் உலகு எலாம்*** - *தன் தந்தை ஏற்று ஆண்டு வந்த பெரிய உலகின் ஆட்சி முழுவதையும்;* ***எய்தி*** - *(அவன் அளிக்க) தனக்கு உரிமையாகப் பெற்று;* ***ஈன்றவள் மாற்றவள் ஏவ*** - *தன் தாய்க்கு மாற்றாள் ஆகிய கைகேயி கட்டளையிட;* ***அவள்தன் மைந்தனுக்கு*** - *அவளது மகனான பரதனுக்கு;* ***ஆற்ற அரும் உவகையால்*** - *தாங்குதற்கரிய மகிழ்ச்சியோடு;* ***அளித்த ஐயனை*** - *(நாட்டாட்சியை) அளித்த பெரியோனாகிய இராமனை;* ***போற்றலை*** - *புகழ்ந்து பாராட்டாமல்;* ***இன்னன*** - *இத்தகைய பழிமொழிகளை;* ***புகறல் பாலையோ*** - *கூறத்தகுவையோ?*

*மூத்த மைந்தன் என்ற உரிமையால் நாடு பெற்றதால் 'எய்தி' என்றான். கைகேயியின் கொடுமை காரணமாக அவள் பெயரைக் கூற விரும்பாத வாலி 'மாற்றவள்' எனக் குறிப்பிடுகிறான். ஈன்றவள் - கோசலை; மாற்றவள்தன் மைந்தன் - கைகேயியின் மகன் பரதன். ஆற்றரும் உவகையால் அளித்தது - 'பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ?' (1604) என்ற இராமன் கூற்றாலும் "இப்பொழுது எம்மனோரால்" 'தெருளுடை மனத்து மன்னன்' (1602, 1603) எனத் தொடங்கும் பாடல்களாலும் அறியலாம். 'பாராளும் படர் செல்வம் பரத நம்பிக்கே அருளி' என்றார் குலசேகரர். (பெருமாள்திருமொழி-8-5) 33*

***3968. 'நின்று பேர் உலகு***
***எலாம் நெருக்கி நேரினும்,***
***வென்றி வெஞ் சிலை***
***அலால், பிறிது வேண்டுமோ?***
***தன் துணை ஒருவரும்,***
***தன்னில் வேறு இலான்,***
***புன் தொழில் குரங்கொடு***
***புணரும் நட்பனோ?***

***நின்ற பேர் உலகு எலாம்*** - *நிலைபெற்றுள்ள பெரிய உலகங்கள் யாவும்;* ***நெருக்கி நேரினும்*** - *ஒன்று சேர்ந்து எதிர்த்தாலும்;* ***வென்றி வெஞ்சிலை அலால்*** - *வெற்றியைத் தரும் அவனது கொடிய கோதண்டமே அல்லாமல்;* ***பிறிது வேண்டுமோ*** - *வேறொன்றைத் தனக்குத் துணையாக வேண்டுவதுண்டோ? (இல்லை);* ***தன் துணை தன்னில்*** - *தனக்கு நிகர் தானே அல்லாமல்;* ***வேறு ஒருவரும் இலான்*** - *வேறொருவரும் இல்லாத இராமன்;* ***புன்தொழில் குரங்கொடு*** - *அற்பச் செயலை உடைய ஒரு குரங்கினோடு;* ***புணரும் நட்பனோ*** - *சேரும் நட்பினை உடையவன் ஆவானோ?*

*தனக்கு நிகர் தானே ஆதலின் 'தன்துணை ஒருவரும் தன்னில் வேறிலான்' என்றான். 'தனக்கு உவமை இல்லாதான்' என்றார் வள்ளுவர். (குறள். 7) திருவிண்ணகர் கோயில் திருமாலுக்கு ஒப்பிலியப்பன் என்பது பெயராகும். 'தன் பெருங் குணத்தால் தன்னைத்தான் அலது ஒப்பு இலான்' (3759) என்று கம்பர் அனுமனையும் குறிப்பார். 'கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவ' (4023) என வாலியே இராமனை விளித்துப்*

*பேசுவதும் காண்க. இராமன் இழிதொழிலுக்கு மாறானவன் என்பதை உணர்த்த 'புன்தொழில் குரங்கொடு புணரும் நட்பனோ?' எனக் குறித்தான். ஓகாரம் இரண்டும் எதிர்மறை.* *34*

***3969. 'தம்பியர் அல்லது தனக்கு***
***வேறு உயிர்***
***இம்பரின் இலது என***
***எண்ணி ஏய்ந்தவன்,***
***எம்பியும் யானும் உற்று***
***எதிர்ந்த போரினில்***
***அம்பு இடை தொடுக்குமோ,***
***அருளின் ஆழியான்?***

***தம்பியர் அல்லது*** *- தன் தம்பிமார்களே அல்லாமல்;* ***தனக்கு வேறு உயிர்*** *- தனக்குத் தனியாக வேறோர் உயிர்;* ***இம்பரின் இலது என*** *- இவ்வுலகில் இல்லை என்று;* ***எண்ணி*** *- கருதி;* ***ஏய்ந்தவன்*** *- அவர்களோடு ஒன்றி நடப்பவனும்;* ***அருளின் ஆழியான்*** *- கருணைக் கடலுமான இராமன்;* ***எம்பியும் யானும் உற்று*** *- என் தம்பி சுக்கிரீவனும்*

*யானுமாகப் பொருந்தி;* ***எதிர்ந்த போரினில்*** *- எதிர்த்து நடத்தும் போரில்;* ***இடை அம்பு தொடுக்குமோ*** *- இடையே புகுந்து என் மேல் அம்பினைத் தொடுப்பானோ? (தொடுக்கமாட்டான்).*

*தம்பியரைத் தன் உயிரெனக் கருதும் இராமன், உடன் பிறந்தார்க்கிடை ஏற்பட்ட போரில், பகைமையை நீக்கி ஒன்றுபடுத்த முயல்வானேயன்றி ஒரு பக்கம் சார்ந்து தனக்கெதிரே அம்பினைத் தொடுக்க மாட்டான் என்ற நம்பிக்கையில் வாலி 'எம்பியும் யானும் உற்றெதிர்ந்த போரினில் அம்பு இடை தொடுக்குமோ' என்றான். 'தள்ளா வினையேன் தனி ஆர் உயிராய் உள்ளாய்' (3608) என்ற அடிகள் இராமன் தம்பியரை உயிரெனப் போற்றி ஒன்றி வாழ்ந்ததை உணர்த்துவன. அருளின் ஆழி - கருணைக்கடல். இராமனைக் 'கருணைக்கடல்' (1257) எனக் கம்பர் முன்னரும் குறிப்பிட்டுள்ளார்.* *35*

***3970. 'இருத்தி, நீ, இறை, இவண்;***
***இமைப்பு இல் காலையில்,***
***உருத்தவன் உயிர் குடித்து,***
***உடன் வந்தாரையும்***
***கருத்து அழித்து, எய்துவென்;***
***கலங்கல்' என்றனன்;***
***விரைக் குழல், பின்,***
***உரை விளம்ப அஞ்சினாள்.***

***நீ இறை இவண் இருத்தி*** *- 'நீ சிறிது பொழுது இங்கே இருப்பாயாக;* ***இமைப்பு இல் காலையில்*** *- கண்ணிமைக்கும் பொழுதும் இல்லாத நேரத்திற்குள்;* ***உருத்தவன் உயிர்குடித்து*** *- என்மீது வெகுண்டு வந்த சுக்கிரீவனின் உயிரைப்பருகி;* ***உடன் வந்தாரையும்*** *- அவனுடன் வந்தவர்களையும்;* ***கருத்து அழித்து*** *- (அவர்கள்) எண்ணம்*

*நிறைவேறாதவாறு அழித்து;* ***எய்துவென்*** *- மீண்டு வருவேன்.* ***கலங்கல் என்றனன்*** *- நீ கலங்க வேண்டா' என்று (தாரைக்கு வாலி) ஆறுதல் கூறினான்.* ***விரைக்குழல்*** *- வாசனைமிக்க கூந்தலை உடையவளான தாரை;* ***பின்*** *- அதற்குப் பிறகு;* ***உரை விளம்ப அஞ்சினாள்*** *- (வாலியின் கருத்திற்கு மாறாகப்) பேச அஞ்சினாள்.*

*இறை - மிகச் சிறியது. 'இறை ஒரு சங்கை இன்றி எண்ணுதி' (4073) என்னும் இடம் காண்க. தாரை, இராமலக்குவர் சுக்கிரீவனுக்குத் துணையாக வந்துள்ளனர் என்றபோதும், அவர்கள் துணையாக வரமாட்டார்கள் என்றும், அங்ஙனமே வரினும் அவர்கள் உடன்பிறந்தார் சண்டையில் தலையிட மாட்டார்கள் என்றும் வாலி நம்பியதால் துணைவந்தவர் வேறு யாவராகவேனும் இருக்கலாம் என்ற எண்ணத்துடன் 'கருத்து அழித்து எய்துவென்' என்றான். அல்லது இராமலக்குவரே வரினும் அவர்கள் கருத்தை அழிக்க முடியும் என்ற உறுதியுடன் 'உடன் வந்தாரையும் கருத்தழித்து எய்துவென்' என்று பேசியிருக்கலாம். விரைக்குழல் - தாரையைக் குறித்தது. அன்மொழித்தொகை.* *36*

*போரை விரும்பிய வாலி குன்றின் புறத்தே வருதல்*

*கலித்துறை*

***3971. ஒல்லை, செரு வேட்டு, உயர்***
**வன் புய ஓங்கல் உம்பர்**
**எல்லைக்கும் அப்பால்**
**இவர்கின்ற இரண்டினோடும்,**
**மல்லல் கிரியின்தலை வந்தனன்,**
**வாலி - கீழ்பால்,**
**தொல்லைக் கிரியின்தலை தோற்றிய**
**ஞாயிறு என்ன.**

***வாலி*** *- (இவ்வாறு தாரைக்கு ஆறுதல் கூறிய) வாலி;* ***ஒல்லை*** *- விரைவில்;* ***செருவேட்டு*** *- போரை விரும்பி;* ***உயர்*** *- (அப்போர் விருப்பத்தால்) உயர்ந்து;* ***உம்பர் எல்லைக்கும் அப்பால்*** *- தேவர் உலகின் எல்லைக்கு அப்பாலும்;* ***இவர்கின்ற*** *- கிளர்ந்து ஓங்கிய;* ***வன்புய ஓங்கல் இரண்டினோடும்*** *- வலிய தோள்களாகிய மலைகள் இரண்டினோடு;* ***கீழ்பால்*** *- கிழக்குத் திசையில்;* ***தொல்லைக் கிரியின்தலை*** *- பழமையான உதயகிரி என்னும் மலையின் உச்சியில்;* ***தோற்றிய ஞாயிறு என்ன*** *- தோன்றிய சூரியனைப் போல;* ***மல்லல் கிரியின்தலை*** *- வளம் பொருந்திய அந்த மலையின் மேல்;* ***வந்தனன்*** *- வந்து தோன்றினான்.*

*வீரர்களுக்குப் போர் என்று கேட்டதும் தோள்கள் பூரித்து விளங்குமாதலின் 'செருவேட்டு உயர் வல்புயம்' என்றார். 'போர் என்ன வீங்கும் பொருப்பு அன்ன பொலங்கொள் திண்தோள்' (907) என்றதும் காண்க. ஒல்லை - இடைச்சொல்; தோள்களாகிய இரண்டு மலைகளுடன் ஒரு மலையின் தலையில் உதயகிரியின் தலை தோன்றும் சூரியன் போலத் தோன்றினான் என நயம்படக் கூறியுள்ளமை காண்க. வாலிக்குச் சூரியன் உவமை. புய ஓங்கல் - தோளாகிய மலை, உருவகம். நாளும் தோன்றும் பழமையுடைய மலையாதலின் 'தொல்லைக் கிரி' எனப்பட்டது. பல*

*வளங்கள் கொண்டதாதலின் வாலிக்குரிய மலை 'மல்லல் கிரி' எனப்பட்டது. சூரியன் மைந்தன் எதிரே சூரியன் போல் வாலி தோன்றினான் என்ற முரண் நயம் நோக்கத்தக்கது.* *37*

***3972. நின்றான், எதிர் யாவரும்***
***நெஞ்சு நடுங்கி அஞ்ச,***
***தன் தோள் வலியால் தகை***
***மால் வரை சாலும் வாலி,***
***குன்றூடு வந்து உற்றனன் -***
***கோள் அவுணன் குறித்த***
***வன் தூணிடைத் தோன்றிய***
***மா நரசிங்கம் என்ன.***

***தன் தோள் வலியால்*** *- தனது தோள்களின் வலிமையால்;* ***தகைமால் வரை சாலும்*** *- சிறப்பு மிக்க பெரிய மலையை ஒத்து விளங்கும்;* ***வாலி*** *- வாலியானவன்;* ***கோள் அவுணன் குறித்த*** *- கொடிய அசுரனான இரணியன் சுட்டிக்காட்டிய;* ***வன் தூணிடைத் தோன்றிய*** *- வலிமை மிக்க தூணிடத்தே வெளிப்பட்டுத் தோன்றிய;* ***மாநரசிங்கம் என்ன*** *- பெருமைமிக்க நரசிங்க மூர்த்தி போல;* ***எதிர் யாவரும்*** *- தன்னைக் காண்கின்ற எல்லோரும்;* ***நெஞ்சு நடுங்கி அஞ்ச*** *- மனம் நடுங்கி அச்சம் கொள்ள;* ***குன்றூடுவந்து*** *- அம்மலையின் இடையே;* ***உற்றனன் நின்றான்*** *- வந்து சேர்ந்து நின்றான்.*

*வாலியின் தோள்களுக்கு மால்வரை உவமை. போருக்குக் கூவியழைத்த சுக்கிரீவன் எதிரே யாவரும் அஞ்சும் வகையில் தோன்றிய வாலிக்கு இரணியன் சுட்டிக்காட்டிய தூணிலிருந்து வெளிப்பட்ட நரசிங்கம் உவமை. 38*

***3973. ஆர்க்கின்ற பின்னோன்தனை நோக்கினன்;***
***தானும் ஆர்த்தான்;***
***வேர்க்கின்ற வானத்து உரும்ஏறு***
***வெறித்து வீழப்***
***போர்க்கின்றது, எல்லா உலகும்***
***பொதிர்வுற்ற பூசல் -***
***கார்க் குன்றம் அன்னான் நிலம்***
***தாவிய கால் இது என்ன.***

***ஆர்க்கின்ற பின்னோன்தனை*** *- போர் முழக்கம் செய்கின்ற தம்பியான சுக்கிரீவனை;* ***நோக்கினன்*** *- (வாலி) பார்த்தான்;* ***தானும் ஆர்த்தான்*** *- (வாலி) தானும் போர் முழக்கம் செய்தான்;* ***வேர்க்கின்ற வானத்து*** *- (அதனால்) அச்சத்தால் வேர்க்கின்ற வானத்திலுள்ள;* ***உரும் ஏறு வெறித்து வீழ*** *- பேரிடிகள் வேகமாய் விழ;* ***பொதிர்வுற்ற பூசல்*** *- பக்கங்களில் பரவிய அப்பேரொலியானது;* ***கார்க்குன்றம் அன்னான்*** *- கரிய மலையையொத்த திருமால்;* ***நிலம்தாவிய கால் இது என்ன*** *- திரிவிக்கிரமனாய் நிலத்தை தாவி அளந்த திருவடி இது என்று சொல்லும்படி;* ***எல்லா உலகும் போர்க்கின்றது*** *- எல்லா உலகங்களும் தனக்குள் அடங்குமாறு சூழ்ந்து போர்த்துக்கொண்டது.*

*வேர்க்கின்ற வானம் - மழை துளித்தல், வேர்த்தல் அச்சம் பற்றிய மெய்ப்பாடு. கரிய நிறமும் நெடிய வடிவும் உடைமைபற்றித் திருமாலைக் 'கார்க் குன்றன் அன்னான்' என்றார். 'மாயோன்அன்ன மால்வரை' (நற்றிணை - 32) என்றார் கபிலர். நிலந்தாவிய கால் - மாவலிபால் வாமனனாகி வந்து மூன்றடி மண் இரந்து வேண்டிய திருமால் தனக்கு வேண்டிய நிலத்தை அளத்தற்பொருட்டு உயர்த்திய திருவடி. திருமால் நிலம் அளக்கத் தாவிய சேவடி எல்லாவுலகங்களிலும் பரவிச் சென்று அவற்றின் மேம்பட்டு விளங்கினாற்போல, வாலியின் போர்ப்பூசலும் எல்லா உலகங்களிலும் பரவிச் சென்று மிகைப்பட்டு ஒலித்தது என்றவாறு. திருமால் உலகளந்த செய்தி பாலகாண்டம் வேள்விப்படத்தும் கூறப்பட்டுள்ளது.*

*முன் பாடலில் நரசிங்க அவதாரத்தையும், இப்பாடலில் திரிவிக்கிரம அவதாரத்தையும் ஒப்பிட்ட சிறப்பு நோக்கற்பாலது. உருமேறு விழுதல், ஒலி மிகுதியால் ஏற்பட்ட அதிர்ச்சியாலாகும். 39*

*வாலியையும் சுக்கிரீவனையும் வியந்து நோக்கிய இராமன் தம்பியிடம் கூறல்*

***3974. அவ் வேலை, இராமனும்,***
***அன்புடைத் தம்பிக்கு, 'ஐய!***
***செவ்வே செல நோக்குதி;***
***தானவர் தேவர் நிற்க,***
***எவ் வேலை, எம் மேகம், எக் காலொடு***
***எக் கால வெந் தீ,***
***வெவ் வேறு உலகத்து இவர்***
***மேனியை மானும்?' என்றான்.***

***அவ்வேலை** - அப்பொழுது; **இராமனும்** - இராமபிரானும்; **அன்புடைத் தம்பிக்கு** - அன்பு நிறைந்த தம்பியான இலக்குவனிடம்; **ஐய** - 'ஐயனே! **செவ்வே செல நோக்குதி** - நன்றாகக் கூர்ந்து நோக்குவாய்; **தானவர் தேவர் நிற்க** - அசுரர்களும் தேவர்களும் ஒரு புறம் நிற்கட்டும்; **எவ்வேலை** - எந்தக் கடல்; **எம் மேகம்** - எந்த மேகம்; **எக் காலொடு** - எந்தக் காற்றொடு; **எக்கால வெந்தீ** - எந்தக் கொடிய காலாக்கினி; **வெவ்வேறு உலகத்து** - வெவ்வேறு வகைப்பட்ட பல உலகங்களிடை; **இவர் மேனியை** - இந்த வாலி, சுக்கிரீவர் உடல்களுக்கு; **மானும் என்றான்** - ஒப்பாகும்?' என்று கூறினான்.*

*எந்த உலகிலும் உள்ளதான கடலும் மேகமும், காற்றும், காலாக்கினியும் வாலி சுக்கிரீவர் உடல்களுக்கு (வலிமையால்) நிகராகா என்பானாய் 'எவ்வேலை, எம்மேகம், எக்காலொடு, எக்கால வெந்தீ வெவ்வேறு உலகத்து இவர் மேனியை மானும்?' என்றான். ஆற்றல் மிக்க அவர்களுக்கு நிகராக அசுரர், தேவர்களைக் கூறமுடியாது ஆதலின் 'தானவர், தேவர் நிற்க' என அவ்விரு திறத்தாரையும் விலக்கிக் கூறினான். தம்பியை 'ஐய' என்றது அன்புபற்றி வந்த மரபு வழுவமைதி. தானவர் - தனு என்பாளுக்குக் காசிபர் மூலம் பிறந்த அசுரர்களாவர். தம்பிக்கு - வேற்றுமை மயக்கம்; காலொடு - ஒடு எண்ணுப் பொருளில்வந்தது. 40*

*இலக்குவன் சுக்கிரீவனை ஐயுற்றது*

***3975. வள்ளற்கு, இளையான் பகர்வான்,***
***'இவன், தம்முன் வாழ்நாள்***
***கொள்ள, கொடுங் கூற்றுவனைக்***
***கொணர்ந்தான்*** *;* **குரங்கின் எள்ளற்குறு போர் செய எண்ணினன் என்னும் இன்னல்**
***உள்ளத்தின் ஊன்ற,உணர்வு***
***உற்றிலென் ஒன்றும், என்றான்.***

***வள்ளற்கு இளையான் -*** *வள்ளலாகிய இராமனுக்கு இளையவனாகிய இலக்குவன்;* ***பகர்வான் -*** *மறுமொழி கூறுவானாய்;* ***இவன் -*** *'இந்தச் சுக்கிரீவன்;* ***தம்முன் -*** *தன் தமையனுடைய;* ***வாழ் நாள் கொள்ள -*** *ஆயுளைப் பறித்துக் கொள்வதற்காக;* ***கொடுங்கூற்றுவனைக் கொணர்ந்தான் -*** *கொடிய யமனை இங்கு அழைத்து வந்துள்ளான்;* ***குரங்கின் எள்ளற்குறுபோர் -*** *குரங்கினது பலரும் இகழ்தற்குரிய போர்த்தொழிலை;* ***செய எண்ணினன் -*** *செய்வதற்கு எண்ணினான்;* ***என்னும் இன்னல் -*** *என்பதனால் ஏற்பட்ட துன்பம்;* ***உள்ளத்தின் ஊன்ற -*** *மனத்தில் ஆழ்ந்து பதிய;* ***ஒன்றும் உணர்வு உற்றிலென் -*** *ஒன்றையும் உணரும் உணர்வின்றி உள்ளேன்.* ***என்றான் -*** *என்ற உரைத்தான்.*

*தனக்குரிய நாட்டைத் தன் தம்பி பரதனுக்கு உவந்து அளித்த வண்மை நோக்கி இராமனை 'வள்ளல்' எனக் குறித்தார். இராமனைப் பிரியாது தொண்டு செய்து வரும் தம்பி இலக்குவன், சுக்கிரீவன் தன் தமையனைக் கொல்லவே இராமனைத் துணையாக அழைத்து வந்துள்ளான் என்று எண்ணிக் கலங்கினான் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது. இராமனை அழைத்து வந்தது கூற்றுவனையே அழைத்து வந்து செயலாய் அமைந்தது என்பதால் 'இவன் தம்முன் வாழ்நாள் கொள்ள கொடுங்கூற்றுவனைக் கொணர்ந்தான்' என்றான். 'வாலி என்ற அளவிலா வலியினான் உயிர்தெறக் காலன் வந்தனன்' (3787) என நட்புக்கோட் படலத்தில் அனுமன் இராமனை வாலிக்குக் கூற்றுவனாகக் குறித்ததை நினைக. 'வாலிகாலன்' (3885) எனவும் முன்பு வந்தது. சுக்கிரீவன் மேற்கொண்டுள்ள போர் பலரும் இகழும்படியான குரங்குப் போராய் அமைந்துவிட்டதே என்பதால் 'குரங்கின் எள்ளற்க உறுபோர் செய எண்ணினன்' என்றான். தமையனைக் கொல்லும் இத்தீய செயலுக்குத் தன் தமையனாகிய இராமனது துணையை நாடியுள்ளானே என நினைகையில் கலக்கமுற்றதால் 'என்னும் இன்னல் உள்ளத்தின் ஊன்ற உணர்வுற்றிலென் ஒன்றும்' என்றான். 'இப்படியும் ஒரு தம்பியா' என்ற நினைப்பிலே கலங்கினான். இலட்சித்தம்பி. இலக்குவனது சகோதரப் பாசத்தின் மேம்பாட்டையும், அவன் சுக்கிரீவனைக் குறைத்து மதிப்பிடுவதையும், தாம் குரங்கோடு போர் செய்ய வந்த புன்மை குறித்து அவன் வருந்துவதையும் தெளிவாகப் பாடலில் காண முடிகிறது. கூற்றுவன் - உவமை ஆகுபெயர். 41*

***3976. ஆற்றாது, பின்னும் பகர்வான்,***
***'அறத்தாறு அழுங்கத்***
***தேற்றாது செய்வார்களைத் தேறுதல்***
***செவ்விது அன்றால்;***
***மாற்றான் எனத் தம்முனைக்***
***கொல்லிய வந்து நின்றான்,***

***வேற்றார்கள் திறத்து இவன் தஞ்சம்***
***என்? வீர!' என்றான்.***

***ஆற்றாது பின்னும் பகர்வான் -*** *(இலக்குவன்) மனம் பொறுக்காமல் மேலும் கூறுவானாய்;* ***வீர -*** *'பெரு வீரனே!* ***அறத்து ஆறு அழுங்க -***

*தரும நெறி கெட;* ***தேற்றாது செய்வார்களை -*** *தெளிவு பெறாது தீய காரியங்களைச் செய்பவர்களை;* ***தேறுதல் செவ்விது அன்று -*** *நம்புதல் நன்மை தருவதாகாது;* ***தம் முனை -*** *தன் தமையனையே;* ***மாற்றான் என -*** *பகைவன் என்று கொண்டு;* ***கொல்லிய வந்து நின்றான்*** *- கொல்லும் பொருட்டு வந்து நின்றுள்ள சுக்கிரீவன்;* ***வேற்றார்கள் திறத்து -*** *(உறவினரல்லாத) அயலால் திறத்தே;* ***இவன் தஞ்சம் என் -*** *உற்ற துணையாதல் எவ்வாறு?'* ***என்றான் -*** *என்று கேட்டான்.*

*தமையனையே கொல்லத் துணிந்தவன், உறவல்லாத அயலார்க்கு எங்ஙனம் துணையாவான் என்பதாலும், நமபிக்கைக்கு மாறான செயலைத் தன் தமையனுக்குச் செய்பவன் பிறர்க்கு நல்லது செய்யான் என்பதாலும் சுக்கிரீவனை நம்பக்கூடாது என்பது இலக்குவன் கருத்தாகும். 'ஆற்றாது' என்னும் சொல் இலக்குவனது சகோதர பாசத்தையும், நேர்மையான போர்நெறியினையும் உணர்த்தும். அறத்தை நிலை நாட்டும் வீர நெறியையே இராமன் பின்பற்றுவான் ஆதலின் அவனை 'வீர' என விளித்தான். கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவனாகிய உனக்கு இப்படி ஒரு துணை வேண்டுமா என்ற கருத்தொரு 'வீர' என விளித்தான் என்றும் கொள்ளலாம்.*

*முனை - முன்னை என்பதின் இடைக்குறை. கொல்லிய - எதிர்கால வினையெச்சம்.*
*42*

*இராமன் மறுமொழி*

***3977. 'அத்தா! இது கேள்' என,***
***ஆரியன் கூறுவான், 'இப்***
***பித்து ஆய விலங்கின்***
***ஒழுக்கினைப் பேசல் ஆமோ?***
***எத் தாயர் வயிற்றினும்,***
***பின் பிறந்தார்கள் எல்லாம்***
***ஒத்தால், பரதன் பெரிது***
***உத்தமன் ஆதல் உண்டோ?***

***அத்தா -*** *'ஐயனே!* ***இது கேள் என -*** *இதனைக் கேட்பாயாக' என்று;* ***ஆரியன் கூறுவான் -*** *மேலோனாகிய இராமன் (இலக்குவனை நோக்கி) பின்வருமாறு சொல்லத் தொடங்கினான்;* ***பித்து ஆய இவ் விலங்கின் -*** *(மக்கள் ஒழுக்கம் குறித்துப் பேசுவது போல) பைத்தியம் கொண்டது போன்ற விவேகமில்லாத இவ்விலங்குகளின்;* ***ஒழுக்கினைப் பேசலாமோ -*** *ஒழுக்க முறையை ஒரு பொருட்டாகப் பேசலாகுமா?* ***எத்தாயர் வயிற்றினும் -*** *(விலங்கினம் சார்ந்த சுக்கிரீவன் கிடக்க. மனிதரான உடன் பிறந்தாருள்ளும்) எத்தகைய தாயார் வயிற்றிலும்;* ***பின் பிறந்தார்கள் எல்லாம் -*** *பின்னர்ப்*

*பிறந்த தம்பியரெல்லாம்;* ***ஒத்தால் -*** *(தம் தமையன் மாரிடத்து அன்பும் பணிவும் கொள்வதில்) ஒரே மாதிரியானவராக நடப்பராயின்;* ***பரதன் பெரிது உத்தமன் -***

*பரதன் தன் உயர் குணங்களால் மிக உயர்ந்தவன் என்று;* ***ஆதல் உண்டோ -*** *போற்றப்படுதல் உளதாகுமோ?*

*அத்தன் - தந்தை. இராமன் அன்புமிகுதியால் தம்பியை 'அத்தா' என அழைத்தான். 'என் அத்த, என் நீ இமையோரை முனிந்திலாதாய்' (1727) என இலக்குவனை முன்னரும் விளித்தனை காண்க. ஐம்பொறிகளின் வழியே மயங்கித் திரியும் பகுத்தறிவில்லாத விலங்கினங்களின் ஒழுக்க முறையை மக்கள் நெறிபோலப் பேசுதல் பொருந்தாது என்னும் கருத்தால் 'இப் பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசுலாமோ?' என்றான். பகுத்துணரும் அறிவினை உடைய மனிதரிலும் எல்லாத் தம்பியரும் ஒரு நிகரினராக நடந்திருப்பாராயின் பரதன் மட்டும் யாவரினும் மேம்பட்டவன் என்ற சிறப்பை அடைந்திருக்க முடியாது என்பானாய்ப் பின் பிறந்தார்கள் எல்லாம் ஒத்தால் பரதன் பெரிது உத்தமன் ஆதல் உண்டோ?' என்றான். விலங்கு இயல்பாகிய பண்பாட்டுக் குறைவைத்தான் இராமன் குறித்தான் என்க.*

*தன்னையே பின் தொடர்ந்து வரும் இலக்குவனிடமே இராமன் பரதனைப் புகழ்ந்து பேசுகிறான். இராமன் மீது கொண்ட பேரன்பால் இலக்குவன் தவறு செய்த இடங்கள் உண்டு. இராமனைக் காணவந்த பரதன்மீது ஐயுற்றான் இலக்குவன். இங்கும் சரணடைந்த தம்பியைக் கொல்லவந்தவனும், தம்பி மனைவியைக் கவர்ந்தவனுமாகிய வாலியைக் கொல்வது அறம் என இராமன் நினைக்க, இலக்குவன் வேறு பார்வையில் காண்கிறான். ஆனால், பரதன் என்றும் அறநிலையிலிருந்து மாறாது தமையனுக்காக வாழ்ந்து வருவதால் 'பரதனை'ப் புகழ்ந்தான் இராமன் எனலாம். 'ஆயிரம் இராமன் நின் கேழ் ஆவரோ தெரியின் அம்மா' (2337) எனப் பாராட்டினான் குகன். கோசலை, வசிட்டர் பலர் பரதனைப் பாராட்டுகின்றனர். இதனால் இலக்குவனை இராமன் குறைத்து மதிப்பிட்டான் என்பது பொருளன்று. 'தாயோ நீயே; தந்தையும் நீயே; தவம் நீயே; சேயோ நீயே; தம்பியும் நீயே; திரு நீயே" (8646) என்ற இடம் இராமன் இலக்குவன் மாட்டுக் கொண்ட அன்பைப் புலப்படுத்தும். ஆரியன் - தீவினைகளிலிருந்து சேய்மையாய் விலகிச் செல்பவன் என்பது பொருள். பரதன் - எல்லாச் சுமைகளையும் நிர்வகிக்க வல்லவன், எனப் பொருள்படும்.*

*இப்பாடலால் பரதன் இராமன் வாக்கால் உடன்பிறந்தாருள் 'பெரிதும் உத்தமன்' என்று பாராட்டப் பெற்றமை குறிக்கத்தக்கது. 'துஞ்சா விரதம் தனைக் கொண்டு மெய்யன்பு பூண்ட, பரதனையும் ராமனையும் பார்' என்ற வரதுங்க பாண்டியரின் பாடல் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. 43*

***3978. 'வில் தாங்கு வெற்பு அன்ன***
***விலங்கு எழில் தோள! "மெய்யம்மை***
***உற்றார் சிலர்; அல்லவரே***
***பலர்" என்பது உண்மை.***
***பெற்றாருழைப் பெற்ற பயன்***
***பெறும் பெற்றி அல்லால்,***

***அற்றார் நவை என்றலுக்கு***
***ஆகுநர், ஆர்கொல்?' என்றான்.***

***வில் தாங்கு வெற்பு அன்ன*** *- வில்லை ஏந்திய மலையை ஒத்து;* ***விலங்கு எழில்தோள*** *- விளங்குகின்ற ஆழகமைந்த தோள்களை*

*உடைய இலக்குவனே!* ***மெய்ம்மை உற்றார் சிலர் -*** *(இவ்வுலகில்) தவறாத நல்லொழுப்பம் பொருந்தியவர் ஒரு சிலரே ஆவர்;* ***அல்லவரே பலர் -*** *அந் நல்லொழுக்கம் கடைப் பிடிக்காதவரே பலர்;* ***என்பது உண்மை -*** *என்பதுதான் உண்மையாகும்.* ***பெற்றார் உழை -*** *நம்மை நண்பராகப் பெற்றவரிடத்தில்;* ***பெற்ற பயன் -*** *பெறுதற்கேற்ற அளவில் காணப்படும் நல்ல பலனை;* ***பெறும் பெற்றி அல்லால் -*** *பெற்றுக் கொள்ளும் தன்மையல்லாமல்;* ***நவை அற்றார் என்றலுக்கு -*** *குற்றமற்றவர் என்று சொல்வதற்கு;* ***ஆகுநர் ஆர்கொல் -*** *உரியவர் யாருளர்?'* ***என்றான் -*** *என்று (இராமன்) கூறினான்.*

*உலகில் நல்லொழுக்கம் உடையார் சிலராகவும், அவ்வொழுக்கம் இல்லாதார் பலராகவும் இருப்பதால் நாம் நண்பர்களிடத்து உள்ள குறைகளை நோக்காது குணங்களை ஏற்றுக்கொண்டு பயன் அடைய வேண்டும் என்பது இராமனின் அறிவுரையாகும். 'குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை' என்ற பழமொழியினையும் 'நல்லார் எனத்தான் நனிவிரும்பிக் கொண்டாரை, அல்லால் எனினும் அடக்கிக் கொளல் வேண்டும், நெல்லுக்கு உமி உண்டு, நீர்க்கு நுரையுண்டு, புல்லிதழ் பூவிற்கு முண்டு' (நாலடி - 221) 'குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடி மிக்க கொளல்' (குறள் - 504); என்பனவற்றையும் காண்க.*

*வில்தாங்கு - வெற்பு - இல்பொருள் உவமை; ஆகுநல்; 'ந' - பெயரிடை நிலை. முன் இரண்டடிகளில் வேற்றுப் பொருள் வைப்பணி. பின் இரண்டடிகளில், பொதுவாகக் கூறிய கருத்து, சுக்கிரீவன் குற்றம் உடையவனாயினும் அவன் மாட்டுள்ள நற்குணத்தால் பெறக் கூடிய பயனைப் பெறுவதே செய்ய வேண்டுவது என்ற சிறப்புப் பொருளைத் தெரிவிப்பதால் பிறிதுமொழிதல் அணியாம். 44*

வாலி - சுக்கிரீவன் போர்

***3979. வீரத் திறலோர், இவை***
***இன்ன விளம்பும் வேலை,***
***தேரில் திரிவான் மகன், இந்திரன்***
***செம்மல், என்று இப்***
***பாரில் திரியும் பனி மால்***
***வரை அன்ன பண்பார்,***
***மூரித் திசை யானை***
***இரண்டு என, முட்டினாரே.***

***வீரத் திறலோர் -*** *வீரமும் போர்த்திறமும் வாய்ந்த இராலக்குவர்;* ***இன்ன இவை விளம்பும் வேலை -*** *இத்தன்மையனவான சொற்களைப் பேசிக்கொண்டிருக்கையில்;* ***தேரில் திரிவான் மகன் -*** *தேர் மீதேறி வானம் எங்கும் சுற்றித் திரிபவனான சூரியன்*

*மகனான சுக்கிரீவன்;* ***இந்திரன் செம்மல்-*** *இந்திரன் மகனான வாலி;* ***என்று -*** *எனக் கூறப்பெற்று;* ***இப் பாரில் திரியும்-*** *இந்த உலகில் சுற்றித் திரியும்;* ***பனிமால் வரை அன்ன -*** *குளிர்ந்த பெரியமலை போன்ற;* ***பண்பார் -*** *தன்மையினராய (சகோதரர்கள்);* ***மூரித்திசையானை இரண்டு என -***

*வலிமை மிக்க திசை யானைகள் இரண்டு எதிர்த்தாற்போல;* ***முட்டினார் -*** *ஒருவரோடொருவர் மோதிப் போர் புரிந்தனர்.*

*மலைபோல் பெருந்தோற்றமுடைய வாலி சுக்கிரீவர் திசை யானைகள் இரண்டு மோதிக் கொண்டது போல் மோதிக் கொண்டனர். மலையும், திசை யானைகளும் உவமை. தேரில் திரிவான் மகன் - சுக்கிரீவன், இந்திரன் செம்மல் - வாலி. இருவரும் வெண்ணிற மேனியராதலின் 'பனி மால் வரை அன்ன பண்பார்' என்றார். பாரில் திரியும் பனிமலை இருப்பின் அதை போன்ற பண்பார் என்பதில் இல்பொருள்உவமை. 45*

***3980. குன்றோடு குன்று ஒத்தனர்; கோள்***
***அரிக் கொற்ற வல் ஏறு***
***ஒன்றோடு சென்று, ஒன்று***
***எதிர் உற்றனவேயும் ஒத்தார்;***
***நின்றார்; திரிந்தார் நெடுஞ்***
***சாரி; நிலம் திரிந்த,***
***வன் தோள் குயவன் திரி***
***மட்கலத்து ஆழி என்ன,***

***குன்றோடு குன்று ஒத்தனர் -*** *(வாலி சுக்கிரீவராகிய) அவ்விரு வரும்) மலையோடு மலை (மோதினால்) போன்று ஒத்துப் போரிட்டனர்;* ***கோள் அரிக்கொற்ற வல் ஏறு -*** *உயிர்கொள்ள வல்ல திண்மையும் வெற்றியும் வாய்ந்த வலிய ஆண் சிங்கம்;* ***ஒன்றோடு சென்று ஒன்று எதிர் -*** *ஒன்றோடொன்று நேராகப் போய் எதிர்த்து;* ***உற்றனவேயும் ஒத்தார் -*** *பொருதனவற்றையும் ஒத்து விளங்கினார்கள்;* ***நின்றார் -*** *போர்செய்ய நெருங்கி நின்றனர்.* ***நெடுஞ்சாரி திரிந்தார் -*** *நெடுநேரம் வலமுறை, இடமுறையாகச் சுற்றித் திரிந்தார்கள்;* ***நிலம் -*** *(அதனால்) நிலவுலகம்;* ***வன்தோள் குயவன் -*** *வலிய தோள்களை உடைய குயவன்;* ***திரிமட்கலத்து ஆழி என்ன -*** *சுற்றி விட்ட மண் பாண்டத்தைவனையும் சக்கரம்போல;* ***திரிந்த -*** *சுழலலாயிற்று.*

*எதிர்த்து நின்ற நிலையில் குன்றோடு குன்று எதிர்ப்பது போலும். இருசிங்கங்கள் எதிர்ப்பன போலும் எதிர்த்தனர். சாரி திரிந்ததில், திரிந்த வேகத்தால் நிலமானது குயவன் திகிரிபோலச் சுழலலாயிற்று என்பதாம். உவமை அணி. 'பாரில் திரியும் பனிமால் வரை பண்பார்" (3979) என்றதும் காண்க. 'குலால் மகன் முடுக்கி விட்ட மட்கலத் திகிரி போல' (491); "கூட்டுற முடுக்கி விட்ட குயமகன் திகிரிபோல" (சீவக. 786) என்பன ஒப்புநோக்கத் தக்கன. சாரி - வட்டமாய் ஓடித்திரிகை; இது சாரிகை எனவும்படும். 46*

***3981. தோளோடு தோள் தேய்த்தலின், தொல்***
***நிலம் தாங்கல் ஆற்றாத்***

***தாளோடு தாள் தேய்த்தலின்,***
***தந்த தழல் பிறங்கல்,***
***வாளோடு மின் ஓடுவபோல்,***
***நெடு வானின் ஓடும் -***
***கோளோடு கோள் உற்றென***
***ஒத்து அடர்ந்தார், கொதித்தார்.***

***தோளோடு தோள் தேய்த்தலின் -*** *(அவ்விருவரும்) ஒருவர் தோளோடு மற்றொருவர் தோள் தாக்கி உராய்வதாலும்;* ***தொல்நிலம் தாங்கல் ஆற்றா -*** *பழைமையான நிலவுலகம் தாங்க முடியாதவாறு;* ***தாளோடு தாள் தேய்த்தலின் -*** *ஒருவர் காலோடு மற்றொருவர் காலைத் தேய்த்தலினாலும்;* ***தந்த தழல் பிறங்கல் -*** *உண்டான தீப்பிழம்புகள்;* ***வாளொடு மின் ஒடுவபோல் -*** *ஒளியோடு மின்னல்கள்ஓடுவன போலும்;* ***நெடுவானின் ஓடும்-*** *பரந்த வானத்தில் விரைந்து செல்லும்;* ***கோளொடு கோள் உற்றென ஒத்து-*** *(அவ்விருவரும்) கோள்கள் இரண்டு ஒன்றையொன்று தாக்கிக்கொண்டாற்போல;* ***அடர்ந்தார், கொதித்தார் -*** *நெருங்கிப் போரிட்டுக்(உள்ளம்) கொதிப்புற்றார்கள்.*

*அவ்வாலி, சுக்கிரீவர் தம்தோளொடு தோள் தாக்குறுவதாலும், தாளொடு தாள் தேய்ப்புறுவதாலும் உண்டான நெருப்புப் பிழம்பு வானில் மின்னல் ஓடுவ போல் ஓடின. அவர்கள் இரு கோள்கள் தாக்கிக் கொள்வன போலத் தாக்கிக் கொண்டனர் எனப் போரின் உக்கிரம் கூறப்பட்டது. கோள் - கிரகம். வானத்தில் வெள்ளி, வியாழன் முதலிய கோள்கள் ஒன்றோடொன்று மோதுதல் கோள் போர் எனவும், கிரகயுத்தம் எனவும் கூறப்படும். 'ஏலா வெண்பொன் போருறு காலை' என்பது புறநானூறு (புறம். 389). "ஆதிசான்ற மேதகு வேட்கையின், நாளும் கோளும் மயங்கிய ஞாட்பின், மதியமும் ஞாயிறும் பொருவன போல" (தொல் - புறத் - 17 பாரதப்பாட்டு மேற்கோள்) என வரும் நச்சினார்க்கினியர் உரை மேற்கோளில் கோள்களின் போர் குறிக்கப் பெற்றுள்ளது. நிலம் தாங்கல் ஆற்றாமை - வாலி சுக்கிரீவர் தாள்கொண்டு தாளைத் தேய்க்கும் வலி பொறுக்க முடியாமை. பரவும் தீப்பழம்பிற்கு ஓடும் மின்னலும், போரிடும் வாலி சுக்கிரீவர்க்குக் கோள்கள் இரண்டும் உவமையாயின.*
*47*

***3982. தம் தோள் வலி மிக்கவர்,***
***தாம் ஒரு தாய் வயிற்றின்***
***வந்தோர், மட மங்கை***
***பொருட்டு மலைக்கலுற்றார்;***
***சிந்து ஒடு அரி ஒண்***
***கண் திலோத்தமை காதல் செற்ற***
***சுந்தோபசுந்தப் பெயர்த்***
***தொல்லையினோரும் ஒத்தார்.***

***தம்தோள் வலி மிக்கவர் -*** *தமது தோள் வலிமையால் மேம்பட்ட வர்களும்;* ***தாம் ஒரு தாய் வயிற்றின் வந்தோர் -*** *தாம் ஒரு தாய் வயிற்றிலிருந்து பிறந்தவர்களும்;* ***மடமங்கை பொருட்டு -*** *இளம் பெண்ணின்*

போன்று ஊடுருவி நின்று இவ்வுலகினைத் தாங்கி நிற்கும் தன்மையது என்பதால் 'காவல் மேருத்திடல்' எனப்பட்டது. திடல் - மேடு; 'திடல் துடைத்தன தசமுகன் சரம்' *(7211)* என்ற இடம் காண்க. "மேரு, பூமிக்கு நாராசம் போலத் தென்துருவம் முதல் வடதுருவம் வரையும் உள்ளே வளர்ந்து வடதுருவத்தில் மேலோங்கியிருக்கும். பொன்மயமான மலை" என்ற புராண நூற் கொள்கை நோக்கத்தக்கது.
*49*

***3984.* ஊகங்களின் நாயகர் வெங்**
**கண் உமிழ்ந்த தீயால்,**
**மேகங்கள் எரிந்தன; வெற்பும்**
**எரிந்த; திக்கின்**
**நாகங்கள் நடுங்கின;**
**நானிலமும் குலைந்த;**
**மாகங்களை நண்ணிய விண்ணவர்**
**போய் மறைந்தார்.**

**ஊகங்களின் நாயகர் -** வானரத் தலைவர்களான அந்த வாலி சுக்கிரீவர்களுடைய; **வெங்கண் உமிழ்ந்த தீயால் -** கொடுமை மிக்க கண்கள் சொரிந்த நெருப்பினால்; **மேகங்கள் எரிந்தன -** மேகங்கள் எரிந்து கரிந்து போயின; **வெற்பும் எரிந்த -** மலைகளும் எரிந்தன; **திக்கின் நாகங்கள் நடுங்கின** - திசை யானைகள் அஞ்சி நடுங்கின; **நானிலமும் குலைந்த -** நால்வகைப்பட்ட நிலங்களும் தம் நிலையழிந்தன; **மாகங்களை நண்ணிய -** (போரைக்காணும் பொருட்டு) வானிடத்தைச் சார்ந்து நின்ற; **விண்ணவர்போய் மறைந்தார் -** தேவர்கள் (தமக்குப் பாதுகாவலான இடத்தை நாடி) ஓடி மறைந்தார்கள்.

நானிலம் - முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன. நானிலம் என்னும் சொல் பொதுவாகப் பூமிக்குக் கூறப்படுவதாயினும் குலைந்த என்ற பன்மை வினை கொண்டதால் நால்வகைப் பட்ட நிலங்கள் எனப் பொருள் கொள்ளப்பட்டது. நிலவுலகில் நிகழும் போர்களைக் காணத் தேவர்கள் வருதல் இயல்பாதலின் 'மாகங்களை நண்ணிய விண்ணவர்' எனப்பட்டனர். வானுலகம் பலவாதலின் மாகங்கள் எனப் பன்மையில் கூறப்பட்டது.

இப்பாடல் உயர்வு நவிற்சி அணி. 'விண்ணவர் போய் மறைந்தார்' என்பதால் போரின் கடுமை புலனாகும். *50*

***3985.* 'விண் மேலினரோ? நெடு**
**வெற்பின் முகட்டினாரோ?**
**மண் மேலினரோ? புற**
**மாதிர வீதியாரோ?**
**கண் மேலினரோ?' என,**
**யாவரும் காண நின்றார்,**
**புண்மேல் இரத்தம் பொடிப்ப,**
**கடிப்பார், புடைப்பார்.**

***விண் மேலினரோ -*** *(போர்புரியும் வாலி சுக்கிரீவர்) வானத்தில் மேல் உள்ளனரோ?* ***நெடுவெற்பின் முகட்டினாரோ -*** *நீண்டுயர்ந்த மலைகளின் சிகரங்களில் உள்ளனரோ?* ***மண் மேலினரோ -*** *நிலவுலகத்தில் உள்ளனரோ?* ***புறமாதிர வீதியாரோ -*** *புறத்தேயுள்ள திசைகளின் எல்லையில் உள்ளனரோ?* ***கண் மேலினரோ -*** *(அல்லது நமது) கண்களில் உள்ளனரோ?* ***என யாவரும் காண நின்றார் -*** *என்று எல்லோரும் காணும்படியாக எங்கும் திரிந்து நின்றவர்களாய்;* ***புண்மேல் இரத்தம் பொடிப்ப -*** *(அவர்கள்) உடல்களில் புண்கள் உண்டாகி அவற்றின் மேல் குருதி சிந்துமாறு;* ***கடிப்பார் புடைப்பார்-*** *ஒருவரையொருவர் கடிப்பாரும் குத்துவாரும் ஆனார்கள்.*

*அவ்வாலி சுக்கிரீவர் விண்மீதும், மலைகள்மீதும், திசைகளிலும் எல்லைகளிலும் சென்ற பொருதனர்; ஓரிடத்தில் இல்லாது பல இடங்களில் சுழன்று திரிந்து போர் செய்ததால், பார்ப்பவர் கண்கள் பட்ட இடங்களில் எல்லாம் காணப்பட்டனர். அதனால் 'கண்மேலினரோ' என ஐயம் கொள்ளுமாறு போர் செய்தனர் என்றார். அவர்கள் மிக்க விரைவோடு பல இடங்களுக்குச் சென்று போர் புரிந்தனர் என்பதை முதல் மூன்றடிகளால் உணரலாம். புடைத்தல் - கையினால் தாக்குதல். 51*

***3986. ஏழ் ஒத்து, உடன் ஆம்***
***திசை எட்டொடு இரண்டும் முட்டும்,***
***ஆழிக் கிளர் ஆர் கலிக்கு***
***ஐம் மடங்கு ஆர்ப்பின் ஓசை;***
***பாழித் தடந் தோளினம்***
***மார்பினும் கைகள் பாய,***
***ஊழிக் கிளர் கார் இடி***
***ஒத்தது, குத்தும் ஓதை.***

***ஆர்ப்பின் ஓசை -*** *(அவ்விருவரும்) ஆரவாரித்து எழுப்பிய பேரொலி;* ***ஏழ் ஒத்து உடன் ஆம் -*** *ஏழு கடல்களும் ஒருங்கு சேர்ந் தனவாய்;* ***திசை எட்டொடு இரண்டும் முட்டும் -*** *எட்டும் இரண்டுமாகிய பத்துத்திசைகளில் மோதும்போது;* ***ஆழிக்கிளர் ஆர்கலிக்கு -*** *கடல்களில் உண்டாகின்ற பேரொலிக்கு;* ***ஐம்மடங்கு -*** *ஐந்து மடங்கு மிக்கு ஒலிப்பதாயிற்று;* ***பாழித் தடந்தோளினும் -*** *வலிமை பொருந்திய பெரிய தோள்களிலும்;* ***மார்பினும் -*** *மார்பிலும்;* ***கைகள் பாய -*** *கைகள் விரைந்து செல்லுமாறு;* ***குத்தும் ஓதை -*** *(ஒருவரையொருவர்) குத்துதலால் ஏற்படும் ஓசை;* ***ஊழிக்கிளர் -*** *யுகமுடிவில் (உலகை அழிப்பதற்கு) எழுகின்ற;* ***கார் இடி ஒத்தது -*** *கருமேகங்களின் இடி முழக்கத்தை ஒத்திருந்தது.*

*போரிடுகையில் ஆரவாரித்தலும், ஒருவரை ஒருவர் கைகளால் தாக்கிக் கொள்ளுதலும் வீரர் இயல்பாகும். ஆர்ப்பு, குத்து இவற்றால் எழுந்த ஓசைகளின் கடுமை இப்பாடலில் விளக்கப்பெற்றது. அவர்களின் ஆர்ப்பொலி ஏழுகடல்களும் ஒன்று சேர்ந்து பத்துத்திசைகளில், பரவுகையில் ஏற்படும் ஓசையினும் பல மடங்கு அதிகமாயிற்று என்பது முதல் இரண்டடிகளின் பொருள். ஐம்மடங்கு என்பது மிகுதியைக் குறித்து நின்றது. திசைகள் பத்தாவன - எட்டுத் திசைகளுடன் மேலும், கீழும் ஆகிய இரு திசையும் சேர்ந்தவை. ஆர்கலிக்கு - ஆர்கலியினும். உருபுமயக்கம். 52*

*3987.* **வெவ் வாய எயிற்றால் மிடல்**
**வீரர் கடிப்ப, மீச் சென்று,**
**அவ் வாய் எழு சோரிஅது,**
**ஆசைகள்தோறும் வீச,**
**எவ் வாயும் எழுந்த கொழுஞ்**
**சுடர் மீன்கள் யாவும்,**
**செவ்வாயை நிகர்த்தன; செக்கரை**
**ஒத்த, மேகம்.**

**மிடல் வீரர் -** *வலிமையையுடைய வாலி சுக்கிரீவர்;* **மீச் சென்று -** *ஒருவர் மேல் ஒருவர் பாய்ந்து;* **வாய் வெம் எயிற்றால் கடிப்ப -** *தம் வாயிலுள்ள கொடிய பற்களால் ஒருவரையொருவர் கடித்ததால்;* **அவ்வாய் எழு சோரி அது -** *கடித்த அவ்விடங்களிலிருந்து பெருகிய இரத்தமானது;* **ஆசைகள் தோறும் வீச -** *எல்லாத் திசைகளிலும் தெறித்ததால்;* **எவ்வாயும் எழுந்த -** *வானத்தில் எல்லாவிடங்களிலும் தோன்றிய;* **கொழுஞ்சுடர் மீன்கள்யாவும் -** *மிக்க ஒளியையுடைய விண்மீன்கள் எல்லாம்;* **செவ்வாயை நிகர்த்தன -** *(தம்மீது குருதி பட்டதால் தம் இயல்பான நிறம் மாறி) செவ்வாய் என்னும் கோளினை ஒத்து விளங்கின;* **மேகம் செக்கரை ஒத்த -** *மேகங்கள் செவ்வானத்தை ஒத்து விளங்கின.*

*கடித்த இடங்களிலிருந்து பெருகிய குருதியின் மிகுதி கூறப்பெற்றது. செவ்வாய் - நவக்கிரங்களில் ஒன்று. சிவந்த நிறமுடையது. சோரி அது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. செக்கர் - செவ்வானம். இது செக்கல் என்ற சொல்லின் ஈற்றுப் போலி; பின் பண்பாகு பெயராய்ச் செவ்வானத்தைக் குறித்தது.*
*53*

*3988.* **வெந்த வல் இரும்பிடை**
**நெடுங் கூடங்கள் வீழ்ப்ப,**
**சிந்தி எங்கணும சிதறுவபோல்,**
**பொறி தெறிப்ப,**
**இந்திரன் மகன் புயங்களும்,**
**இரவி சேய் உரனும்,**
**சந்த வல் நெடுந் தடக்**
**கைகள் தாக்கலின், தகர்வ.**

**வெந்த வல் இரும்பிடை -** *(உலைக்களத்தில்) பழுக்கக் காய்ந்த வலிய இரும்பின் மீது;* **நெடுங்கூடங்கள் வீழ்ப்ப -** *பெரிய சம்மட்டிகளால் அடிக்க;* **சிந்தி எங்கணும் சிதறுவபோல -** *(அதனின்றும் தீப்பொறிகள்) சிந்தி எல்லாவிடத்தும் சிதறுவன போல;* **பொறி தெறிப்ப -** *தீப்பொறி பறக்க;* **இந்திரன் மகன் புயங்களும் -** *இந்திரன் மகனாகிய வாலியின் தோள்களும்;* **இரவி சேய் உரனும் -** *சூரியன் மைந்தனாகிய சுக்கிரீவன் மார்பும்;* **சந்த வல் நெடுந்தடக்கைகள் -** *அழகிய வலிய நீண்ட பெரிய கைகள்;* **தாக்கலின் தகர்வ -** *அறைவதனால் சிதைவுறுவன ஆயின.*

*கூடம் - சம்மட்டி. கொல்லர் இருவர் எதிர் எதிராக நின்று ஒவ்வொரு வரும் ஒரு சம்மட்டி கொண்டு மாறி, மாறி அடிப்பாராதலின் 'கூடங்கள்' எனப்பன்மையால் கூறப்பட்டுள்ளது. வாலியின் தோள்களுக்கும் சுக்கிரீவனது மார்புக்கும் இரும்பும், அவர்களது கைகளுக்கு இரும்பை அடிக்கும் சம்மட்டியும் உவமை. சுக்கிரீவனும் வாலியும் ஒருவர்க்கொருவர் கைக்கொண்டு தாக்க அவர்களது தோள்களினின்றும், மார்பினின்றும் நெருப்புப் பொறிகள் தெறித்தனஎன்பதாம். 54.*

***3989. உரத்தினால் மடுத்த உந்துவர்;***
***பாதம் இட்டு உதைப்பர்;***
***கரத்தினால் விசைத்து எற்றுவர்;***
***கடிப்பர்; நின்று இடிப்பர்;***
***மரத்தினால் அடித்து உரப்புவர்;***
***பொருப்புஇனம் வாங்கிச்***
***சிரத்தின்மேல் எறிந்து ஒறுக்குவர்;***
***தெழிப்பர்; தீ விழிப்பர்.***

***உரத்தினால் மடுத்து உந்துவர் -** (அவ்விருவரும் ஒருவரையொருவர்) தத்தம் மார்பினால் தாக்கித் தள்ளுவார்கள்; **பாதம் இட்டு உதைப்பர் -** கால்களால் உதைப்பார்கள்; **கரத்தினால் விசைத்த எற்றுவர் -** கைகளால் வேகமாய்த் தாக்குவார்கள்; **கடிப்பர் -** வாயினால் கடிப்பார்கள்; **நின்று இடிப்பர் -** ஒருவர்க்கொருவர் எதிர்நின்று இடிப்பார்கள்; **மரத்தினால்அடித்து உரப்புவர் -** மரங்களைக்கொண்டு அடித்துக் கொண்டு அதட்டுவார்கள்; **பொருப்பு இனம் வாங்கி -** மலைக்கூட் டங்களைப் பெயர்த்து; **சிரத்தின் மேல் எறிந்து -** தலை மேல் வீசி; **ஒறுக்குவர் -** தண்டிப்பர்; **தெழிப்பர் -** ஆரவாரிப்பார்கள்; **தீ விழிப்பர் -** (சினத்தால்) நெருப்புப் போல விழித்து நோக்குவர்.*

*உந்துதல், உதைத்தல், எற்றுதல், கடித்தல், இடித்தல், மரம் கொண்டு அடித்தல், உரப்புதல், ஒறுக்குதல், தெழித்தல் என வாலியும் சுக்கிரீவனும் போரிடும் வகைகள் கூறப்பட்டன. 55*

***3990. எடுப்பர் பற்றி; உற்று ஒருவரை***
***ஒருவர் விட்டு எறிவர்;***
***கொடுப்பர், வந்து, உரம்;***
***குத்துவர் கைத்தலம் குளிப்ப;***
***கடுப்பினில் பெருங் கறங்கு***
***எனச் சாரிகை பிறங்கத்***
***தடுப்பர்; பின்றுவர்; ஒன்றுவர்;***
***தழுவுவர்; விழுவர்.***

***எடுப்பர் பற்றி -** ஒருவரை ஒருவர் பிடித்துத் தூக்குவர்; **ஒருவரை ஒருவர் -** ஒருவர் மற்றொருவரை; **உற்றுப் பற்றி-** நெருக்கிப் பிடித்து; **விட்டு எறிவர் -** உயரத் தூக்கி வீசி எறிவர்; **வந்து உரம் கொடுப்பர் -** (அங்ஙனம் வீசி எறியப்பட்டவர்) தாமே வந்து எதிரிக்குத் தம் மார்பைக் காட்டுவர்; **கைத்தலம் குளிப்பக் குத்துவர் -** (அவ்வாறு*

*காட்டிய மார்பில்) மூடியகை புதையும்படி குத்துவார்கள்;* ***கடுப்பினில் பெருங்கறங்கு என -*** *விரைவுடன் பெரிய காற்றாடி போல;* ***சாரிகை பிறங்கத் தடுப்பர் -*** *வலசாரி, இடசாரி முறைகள் விளங்க ஒருவரை ஒருவர் மேற்சொல்ல விடாமல் தடுப்பார்கள்;* ***பின்றுவர் -*** *(விசையொடு தாக்குதல் பொருட்டு) பின்வாங்குவார்கள்;* ***ஒன்றுவர் -*** *இருவரும ஒன்றி நிற்பர்.* ***தழுவுவர் விழுவர் -*** *தழுவிக் கொண்டு கீழே விழுவார்கள்.*

*சாரிகை - வட்டமாக வளைந்தோடுதல். பின்றுதல் - தாக்குவதற்காகப் பின் வாங்குதல்.* *56*

***3991. வாலினால் உரம் வரிந்தனர்,***
***நெரிந்து உக வலிப்பர்;***
***காலினால் நெடுங் கால்***
***பிணித்து உடற்றுவர்; கழல்வர்;***
***வேலினால் அற எறிந்தென,***
***விறல் வலி உகிரால்,***
***தோலினால், உடன் நெடு வரை***
***முழை எனத் தொளைப்பர்.***

***வாலினால் உரம் வரிந்தனர் -*** *ஒருவரையொருவர் தம் வாலினால் மார்பினை இறுகப் பிணித்தவராய்;* ***நெரிந்து உக வலிப்பர்-*** *(எலும்புகள்) நொறுங்கிப் பொடியாகும்படி இழுப்பர;* ***காலினால் நெடுங்கால் பிணித்து -*** *தம் கால்களால் மற்றவர் நீண்ட கால்களை மாட்டி;* ***உடற்றுவர் -*** *இழுத்து வருத்துவர்;* ***கழல்வர் -*** *பின் அப்பிடிப்பினின்று கழன்று வெளிப்படுவர்;* ***வேலினால் அற எறிந்தென -*** *வேற்படையினால் உடலைத் தைக்குமாறு வீசி எறிந்தது போல;* ***விறல் வலி உகிரால் -*** *மிக்க வலிமை உடைய நகங்களால்;* ***தோலினால் உடல் -*** *தோலால் மூடப்பட்ட உடம்பினை;* ***நெடுவரை முழை என -*** *பெரிய*

*மலையிலுள்ள குகை என்னும்படி;* ***தொளைப்பர் -*** *அழமாகத் துளைப்பார்கள்.*

*எறிந்தென - எறிந்தது + என; இது தொகுத்தல் விகாரம் உகிருக்கு வேல் உவமை.* *57*

***3992. மண்ணகத்தன மலைகளும்,***
***மரங்களும், மற்றும்***
***கண்ணகத்தினில் தோன்றிய***
***யாவையும், கையால்,***
***எண் நகப் பறித்து***
***எறிதலின், எற்றலின், இற்ற,***
***விண்ணகத்தினை மறைத்தன; மறி***
***கடல் வீழ்ந்த.***

***மண்ணகத்தன மலைகளும்*** *- நிலத்தில் இருப்பனவாகிய மலை களையும்;* ***மரங்களும் -*** *மரங்களையும்;* ***மற்றும் கண்ணகத்தில் தோன்றிய -*** *மேலும் கண்களில் பட்ட;*

***யாவையும் -*** *எல்லாப் பொருள்களையும்;* ***கையால்-*** *(அவர்கள்) தத்தம் கைகளால்;* ***எண் நகப் பறித்து எறிதலின் -*** *வலிமை விளங்கப் பெயர்த்தெடுத்து வீசி எறிந்ததனாலும்;* ***எற்றலின் -*** *(அவற்றால்) தாக்கியதாலும்;* ***இற்ற -*** *(அம்மலை முதலியன) முறிந்தவனாய்;* ***விண்ணகத்தினை மறைத்தன-*** *விசும்பிடத்தை மறைத்தன;* ***மறிகடல் வீழ்ந்த-*** *மேலும் மடங்கி விழும் அலைகளை உடைய கடலில் அவை வீழ்ந்தன.*

*எண் - ஈண்டு உள்ளத்தின் திண்மையைக் குறித்து நின்றது. பறித்தல் - வேருடன் பெயர்த்தெடுத்தல். வானமெங்கும் பரவி நிறைதலால் 'விண்ணகத்தினை மறைத்தன' என்றார். 'மண்ணகத்தன' என்பதை மரங்களுக்கும் இயைக்கலாம். கண் அகத்தில் - கண் முன்னிலையில் என்றபடி.* *58*

***3993. வெருவிச் சாய்ந்தனர், விண்ணவர்;***
***வேறு என்னை விளம்பல்?***
***ஒருவர்க்கு ஆண்டு அமர்,***
***ஒருவரும் தோற்றிலர்; உடன்று***
***செருவில் தேய்த்தலின், செங் கனல்***
***வெண் மயிர்ச் செல்ல,***
***முரி புல் கானிடை எரி***
***பரந்தன என முனைவர்.***

***ஆண்டு அமர் -*** *அப்பொழுது நடந்த போரில்;* ***ஒருவர்க்கு ஒருவரும் தோற்றிலர் -*** *ஒருவர் மற்றொருவர்க்குத் தோல்வி அடையாதவராய்;* ***உடன்று செருவில் தேய்த்தலின்*** *- கடுமையாக எதிர்த்துப்*

*போரில் ஒருவரை மற்றொருவர் தேய்த்து வருத்துதலால்;* ***செங்கனல் வெண்மயிர்ச்செல்ல -*** *(உண்டான) சிவந்த கோபத்தீ வெண்மையான மயிர்க்கால் தொறும் வெறிப்பட;* ***முரிபுல் கானிடை -*** *உலர்ந்த புல் நிரம்பிய காட்டிடத்தே;* ***எரி பரந்தன என -*** *தீப்பற்றி எரிந்தது போல் தோன்ற;* ***முனைவார் -*** *(இருவரும்) போர் புரிவாராயினர்;* ***விண்ணவர் வெருவிச் சாய்ந்தனர் -*** *(அப்போரின் கடுமையைக் கண்டு) தேவர்கள் அஞ்சி நிலைகுலைந்தனர்;* ***என்னை வேறு விளம்பல் -*** *(போரின் கடுமை குறித்து) கூறத்தக்கது வேறு யாது உளது?*

*செங்கனல் - செம்மை வெகுளியைக் குறிப்பதால் கோபத்தீ எனக் கொள்ளப்பட்டது. கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள என்பது தொல்காப்பியம் (தொல். சொல். உரி. 74). முரிபுல்கானிடை எரி பரந்தன எனச் செங்கனல் வெண்மயிர்ச் செல்ல என்றது உவமை அணி. வானரர்களுக்கு உடம்பில் வெண்மயிர் அடர்ந்திருத்தலால் காய்ந்த புல் உவமையாயிற்று. அடர்த்தியையும் மிகுதியையும் குறிக்கக் 'கான்' என்றார். செங்கனல் வெண்மயிர்ச் செல்ல - முரண்தொடை.* *59*

***3994. அன்ன தன்மையர், ஆற்றலின்***
***அமர் புரி பொழுதின்,***
***வல் நெடுந் தடந் திரள்***
***புயத்து அடு திறல் வாலி,***
***சொன்ன தம்பியை, தும்பியை***

***அரி தொலைத்தென்ன,***
***தொல் நகங்களின், கரங்களின்,***
***குலைந்து, உக மலைந்தான்.***

**அன்ன தன்மையர் -** *அத்தகைய தன்மையையுடையவர்களான வாலி சுக்கிரீவர்;* **ஆற்றலின் அமர்புரி பொழுதில் -** *வலிமையோடு போர் செய்து கொண்டிருக்கையில்;* **வல்நெடுந் தடந்திரள் புயத்து -** *வலிய, நீண்ட, பெரிய திரண்ட தோள்களையும்;* **அடு திறல் வாலி -** *பகைவரை வெல்லும் வலிமையினையும் உடைய வாலி;* **சொன்ன தம்பியை -** *மேலே குறிப்பிட்ட தம்பியான சுக்கிரீவனை;* **தும்பியை அரி தொலைத்தென்ன -** *யானையைச் சிங்கம் அழிப்பது போன்று;* **கொல் நகங்களின் -** *கொல்லவல்ல நகங்களாலும்;* **கரங்களின் -** *கைகளாலும்;* **குலைந்து உக மலைந்தான் -** *வலிமை தளர்ந்து விழும்படி செய்தான்.*

*தும்பி - யானை - வாலிக்குச் சிங்கமும் சுக்கிரீவனுக்கு யானையும் உவமைகள். இதனால் வாலியின் ஆற்றல் மிகுதி கூறப்பெற்றது. அரி என்பது சங்கரிக்கும் அதாவது அழிக்கும் வலிமையுடையது என்னும் பொருளில் சிங்கத்தைக் குறித்தது. தொலைத்தென்ன - இது தொகுத்தல் விகாரம். நகங்களின், கரங்களின் என்புழி இன் ஏதுப் பொருளல்வந்தது. 60*

*சுக்கிரீவனைக் கொடிப் பூ அணிந்து சென்று போர் செய்யுமாறு இராமன் சொல்ல, அவ்வாறே சுக்கிரீவன் மலைதல்*

***3995. மலைந்தபோது இனைந்து, இரவி சேய்,***
***ஐயன்மாடு அணுகி,***
***உலைந்த சிந்தையோடு உணங்கினன்,***
***வணங்கிட, 'உள்ளம்***
***குலைந்திடேல்; உமை வேற்றுமை***
***தெரிந்திலம்; கொடிப் பூ***
***மிலைந்து செல்க; என விடுத்தனன்;***
***எதிர்த்தனன் மீட்டும்.***

**மலைந்த போது -** *(இவ்வாறு வாலி) கடுமையாகப் போர் செய்த பொழுது;* **இரவிசேய் இனைந்து -** *சூரியனின் மைந்தன் சுக்கிரீவன் மிக வருந்தி;* **ஐயன்மாடு அணுகி-** *இராமனிடம் வந்து;* **உலைந்த சிந்தையொடு** *- வருந்திய மனத்துடன்;* **உணங்கினன் வணங்கிட -** *வாட்ட முற்றவனாகி, (இராமனைப்) பணிந்து நிற்க;* **உள்ளம் குலைந்திடேல்** *- (இராமன் சுக்கிரீவனை நோக்கி) 'மனம் வருந்தாதே;* **உமை வேற்றுமை தெரிந்திலம் -** *உங்களிடை (இன்னான் வாலி, இன்னான் சுக்கிரீவன் என்று) வேறுபாடு அறியாமல் போனோம்;* **கொடிப் பூ மிலைந்து செல்க -** *(வேறுபாடு தெரியுமாறு) நீ கொடிப்பூவினைச் சூடிச் செல்வாயாக';* **என விடுத்தனன் -** *என்று சொல்லி (அவனை) அனுப்பினான்;* **மீட்டும் எதிர்த்தனன் -** *(அவ்வாறே கொடிப்பூவைச் சூடிச் சுக்கிரீவன்) மீண்டும் வாலியை எதிர்க்கலானான்.*

*வாலியும் சுக்கிரீவனும் நிறத்தாலும் வடிவத்தாலும் ஒத்து விளங்குவதால் போர் செய்கையில் இன்னின்னார் என்ற வேறுபாடு தெரியாமல் தவறிப்போய் அம்பு*

*சுக்கிரீவன்மீது பட்டுவிடுமோ என்ற ஐயத்தால் இராமன் அம்பு எய்யாமல் இருந்தான். வேறுபாடு தெரியக் கொடிப் பூவைச் சூட்டிக் கொண்டால் வாலி மேல் அம்பு தொடுக்கலாம் என இராமன் கூற, அவ்வாறே அடையாள மாலையைச் சூட்டி சுக்கிரீவன் மீண்டும் வாலியை எதிர்க்கலானான் என்க.* *61*

***3996. தயங்கு தாரகை நிரை***
***தொடுத்து அணிந்தன போல***
***வயங்கு சென்னியன், வயப் புலி***
***வான வல் ஏற்றொடு***
***உயங்கும் ஆர்ப்பினன், ஒல்லை வந்து,***
***அடு திறல் வாலி***
***பயம் கொளப் புடைத்து, எற்றினன்;***
***குத்தினன் பல கால்.***

***தயங்கு தாரகை*** *- விளங்குகின்ற விண்மீன்கள்;* ***நிரை தொடுத்து*** *- வரிசையாகத் (மாலையாகத்) தொடுக்கப்பெற்று;* ***அணிந்தன போல*** *-*

*அணியப்பெற்றன போல;* ***வயங்கு சென்னியன்*** *- (கொடிப்பூ) விளங்குகின்ற தலையினை உடையவனாகிய சுக்கிரீவன்;* ***வயப்புலி*** *- வலிமை பொருந்திய புலியும்;* ***வான வல ஏற்றொடு*** *- மேகத்திலுள்ள வலிய இடியேறும்;* ***உயங்கும் ஆர்ப்பினன்*** *- (கேட்டு) வருந்தும்படியான ஆரவாரத்தைச் செய்து கொண்டு;* ***ஒல்லை வந்து*** *- விரைந்து வந்து;* ***அடுதிறல் வாலி*** *- பகைவரை அழிக்கும் வலிமையுடைய வாலியும்;* ***பயம் கொளப் புடைத்து*** *- அச்சம் கொள்ளுமாறு அடித்து;* ***ஏற்றினன்*** *- மோதி;* ***பல்கால் குத்தினன்*** *- பலமுறை குத்தினான்.*

*அடையாளமாகச் சுக்கிரீவன் தலையில் சூட்டப் பெற்றுள்ள கொடிப்பூக்கள், வானத்து விண்மீன்களை ஒரு மாலையாகத் தொடுத்து அணிந்தாற் போல் விளங்கின. உவமை அணி. இராமனது வார்த்தைகளால் ஊக்கம் பெற்றவனாய்ச் சுக்கிரீவன் வாலியும் அஞ்சுமாறு புடைத்து, எற்றிக் குத்தினான். இவ்வளவு விரைவாகச் சுக்கிரீவன் வந்து தாக்குவான் என எதிர்பாராமையால் வாலி அஞ்சினான் என்றார்.* *62*

***3997. அயிர்த்த சிந்தையன், அந்தகன்***
***குலைகுலைந்து அஞ்ச,***
***செயிர்த்து நோக்கினன்; சினத்தொடு***
***சிறு நகை செய்யா,***
***வயிர்த்த கையினும், காலினும்***
***கதிர்மகன் மயங்க,***
***உயிர்த் தலந்தொறும் புடைத்தனன்;***
***அடித்தனன்; உதைத்தான்.***

***அயிர்த்த சிந்தையன்*** *- (தோற்றோடியவன் மீண்டும் வந்தது எப் படி என்று) ஐயுற்று மனத்தினனாகிய வாலி;* ***அந்தகன் குலை குலைந்து அஞ்ச*** *- யமனும் மனம் கலங்கி*

*அஞ்சுமாறு;* **செயிர்த்து நோக்கினன் -** *(சுக்கிரீவனை) வெகுண்டு நோக்கியவனாய்* **சினத்தொடு சிறுநகை செய்யா -** *கோபத்தோடு (இகழ்வாக) முறுவலித்துச் சிரித்து;* **வயிர்த்த கையினும் காலினும் -** *திண்மை மிக்க தன் கைகளாலும் கால்களாலும்;* **கதிர்மகன் மயங்க -** *கதிரவன் மகனாகிய சுக்கிரீவன் மயக்கமடையுமாறு;* **உயிர்த்தலந்தொறும் -** *(அவனது) உயிர் நிலையில் எல்லாம்;* **புடைத்ததன் -** *குத்தினான்;* **அடித்தனன் -** *அடித்தான்;* **உதைத்தான்**

*அயிர்த்த சிந்தையன் - தோற்றோடிய சுக்கிரீவன் மீண்டும் வந்து போர்புரியக் காரணம், தன்னை வெல்லுவதற்குப் பெருந்துணை வலிமை பெற்றமையாலோ என்று ஐயுற்று மனநிலையைக் குறிக்கும். குலை குலைதல் - மனம் நடு நடுங்கல். வயிர்த்த திண்மை, வயிரத்தின் தன்மைவாய்ந்த திண்மை. கதிர் - சூரியன்; கதிர் - ஒளி; பண்பாகுபெயராய்க் கதிரவனைக் குறித்தது. கையினும் காலினும் புடைத்தனன், அடித்தனன், உதைத்தான் என்பது நேர் நிரல் நிறை அணி. கையில் புடைத்தனன், அடித்தனன் எனவும் காலில் உதைத்தான் எனவும் நிரலே*

*இயைக்க. சிறுநகை இகழ்ச்சி பற்றியது. சிறுநகை செய்யா - சிரித்து; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 63*

***3998. கக்கினான்உயிர், உயிர்ப்பொடும்;***
***செவிகளின், கண்ணின்,***
***உக்கது, ஆங்கு, எரிப்***
***படலையோடு உதிரத்தின் ஓதம்;***
***திக்கு நோக்கினன், செங் கதிரோன்***
***மகன்; செருக்கிப்***
***புக்கு, மீக் கொடு***
***நெருக்கினன், இந்திரன் புதல்வன்.***

**ஆங்கு -** *அப்பொழுது;* **செங்கதிரோன் மகன் -** *சிவந்த கதிர்களை உடைய சூரிய மைந்தனாம் சுக்கிரீவன்;* **உயிர்ப்பொடும் உயிர் கக்கினான் -** *பெரு மூச்சுடனே உயிரைக் கக்கலானான்;* **செவிகளின் கண்ணின் -** *(அவனது) காதுகளிலிருந்தும் கண்களிலிருந்தும்;* **எரிப் படலையோடு -** *நெருப்புத் தொகுதியோடு;* **உதிரத்தின் ஓதம் -** *குருதி வெள்ளம்;* **உக்கது -** *சிந்தியது;* **திக்கு நோக்கினான் -** *(அதனால் செயலற்றவனாய் இராமன் உள்ள) திசையை நோக்கினான்;* **இந்திரன் புதல்வன் -** *இந்திரன் புதல்வனாகிய வாலி;* **செருக்கி -** *செருக்குற்று;* **புக்கு மீக் கொடு நெருக்கினன் -** *மேல்மேலும் தாக்கி வருத்திக் கொண்டிருந்தான்.*

*உயிர்ப்பொடும் உயிர் கக்கினான் - உயிர் போய் விடும் என்னும்படி பெருமூச்சு விடலானான் என்பதாம். வாலியை எதிர்த்து நிற்கும் ஆற்றல் இல்லாதவனாய் இராமனது உதவியை நாடி அவனுள்ள திசை நோக்கித் தன் நிலையைப் புலப்படுத்தவே 'திக்கு நோக்கினான்' என்றார். 64*

*சுக்கிரீவனை வாலி மேலே தூக்கலும், இராமன் அம்பு செலுத்தலும்*

*3999. 'எடுத்துப் பாரிடை எற்றுவேன்,*
*பற்றி' என்று, இளவல்*
*கடித்தலத்தினும், கழுத்தினும், தன்*
*இரு கரங்கள்*
*மடுத்து, மீக் கொண்ட வாலிமேல்,*
*கோல் ஒன்று வாங்கி,*
*தொடுத்து, நாணொடு தோள்*
*உறுத்து, இராகவன் துரந்தான்.*

***பற்றி எடுத்துப் பாரிடை எற்றுவென் -*** *(இவனைப்) பிடித்து எடுத்துத்தரையில் மோதுவேன்;* ***என்று -*** *என்று எண்ணி;* ***இளவல் -*** *தன் தம்பியான சுக்கிரீவனது;* ***கடித்தலத்தினும் -*** *இடையிலும்;* ***கழுத்தி***

***னும் -*** *கழுத்திலும்;* ***தன் இரு கரங்கள் மடுத்து -*** *தனது கைகள் இரண்டையும் செலுத்தி;* ***மீக் கொண்ட வாலிமேல் -*** *(அவனை) மேலே தூக்கியவாலியின் மேல்;* ***இராகவன் -*** *இரகு குலத் தோன்றலாகிய இராமன்;* ***கோல்ஒன்று வாங்கி -*** *அம்பொன்றை எடுத்து;* ***தொடுத்து -*** *வில்லில் பூட்டி;* ***நாணொடு தோள் உறுத்து -*** *வில்லின் நாணுடன் (தனது) தோளைப் பொருந்துமாறு செய்து;* ***துரந்தான் -*** *செலுத்தினான்.*

*இடையில் ஒரு கையினையும் கழுத்தில் ஒரு கையினையும் கொடுத்துச் சுக்கிரீவனை மேலே எடுத்துப் பூமியில் மோதிக் கொல்ல முயல்கையில் இராமன் வாலியின் மேல் அம்பைத் தொடுத்தான் என்பதில் சுக்கிரீவன் உயிரைக் காக்க வேண்டி தேவை இராமனுக்கு ஏற்பட்டதை உணரமுடிகிறது. இளவல் - தம்பி; அல் - பெயர் விகுதி. கடிதலம் என்பது எதுகை நோக்கி, தகரவொற்று இரட்டித்தது. கோல் - அம்பு.*
*65*

*4000. கார் உண் வார் சுவைக்*
*கதலியின் கனியினைக் கழியச்*
*சேரும் ஊசியின் சென்றது -*
*நின்றது என், செப்ப? -*
*நீரும், நீர் தரு நெருப்பும்,*
*வன் காற்றும், கீழ் நிவந்த*
*பாரும், சார் வலி படைத்தன்*
*உரத்தை அப் பகழி.*

***அப்பகழி -*** *(இராமன் தொடுத்து) அந்த அம்பானாது;* ***நீரும் -*** *நீரும்;* ***நீர்தரு நெருப்பும் -*** *அந்நீரை உண்டாக்கிய தீயும்;* ***வன் காற்றும் -*** *அந்நெருப்பை உண்டாக்கிய வலிய காற்றும்;* ***கீழ் நிவந்த பாரும் -*** *(இவற்றிற்கு ஆதாரமாய்க்) கீழே விளங்குகின்ற நிலமும்;* ***சார் வலி படைத்தன்-*** *(ஆகிய நாற்பெரும் பூதங்களைச்) சார்ந்த ஆற்றல்களை ஒரு சேரத்தன்னிடம் பெற்றவனான வாலியின்;* ***உரத்தை -*** *மார்பை;* ***கார் உண் வார்சுவை -*** *கனிந்த உண்ணத்தக்க மிக்க சுவையுடைய;* ***கதலியின் கனியினை -*** *வாழப் பழத்தை;* ***கழியச் சேரும் -*** *தைத்துச் செல்கின்ற;* ***ஊசியின் சென்றது-*** *ஊசியைப் போலச் சென்று*

*தைத்தது;* ***செப்ப நின்றது என் -*** *(அந்தஅம்பின் விரைவும் வன்மையும் பற்றிக்) கூற வேண்டியதாய் நின்றது யாதுஉளது? (ஒன்றுமில்லை என்ற படி).*

*வாலி நாற்பெரும் பூதங்களின் ஆற்றல் முழுவதும் ஒரு சேரத் தன்னிடம் அமையப் பெற்றவன் என்பதை 'நிலனும் நீருமாய், நெருப்பும் காற்றும் என்று உலைவு இல் பூதம் நான்கு உடைய ஆற்றலான்' (3824), 'வன் பெரும் பூதங்கள் நாலின் ஆற்றலும் ஆற்றுழி நண்ணினாய்' (4055) என்ற அடிகளிலும் காண்க. பூதங் கண்ணிய வலியெலாம் ஒரு தனி பொறுத்தான் (6189) என்று இரணியனைக் கவிஞர் குறித்ததையும் நினைக.*

*ஐம்பெரும் பூதங்களுள் முதலில் உள்ளதாம் வானத்திற்கு வடிவம் இல்லாமை பற்றி அதனை இங்குக் கூறவில்லை. நெருப்பிலிருந்து நீர் தோன்றிற்று என்பது வேதநூல். அம்முறைப்படி நெருப்பிலிருந்து நீர் தோன்றியதை 'நீர்தரு நெருப்பு' என்றார். காற்றின் வலிமை கருதி 'வன் காற்று' என்றும் ஏனைய பூதங்களுக்கெல்லாம் கீழதாய் இருப்பது நிலமாதலின் அதனைக் 'கீழ் நிவந்த பார் என்றும் குறிப்பிட்டார். பகழி வாழைப்பழத்தில் ஊசி செல்வது போல் தைத்தது என்பது உவமை அணி. 'வாழைப்பழத்தில் ஊசி நுழைவது போல' என்பது ஒரு பழமொழி. நான்கு பூதங்களின் வலிமை ஒரு சேரப் பெற்ற வாலி மார்பில் வாழைப் பழத்தில் ஊசி நுழைவது போலச் சென்றது என்றமையால் அம்பின் வலிமையினையும், விரைவினையும், செலுத்தியவன் ஆற்றலினையும் உணரலாம். இராமன் செலுத்திய அம்பு தாடகை நெஞ்சில் ஊடுருவிப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்றன்றே (388) என்று கூறும் நயத்தை ஈண்டு ஒப்புநோக்கலாம். 66*

*சாய்ந்தான் வாலி*

***4001. அலங்கு தோள் வலி அழிந்த***
***அத் தம்பியை அருளான்.***
**வலம் கொள் பாரிடை எற்றுவான்**
**உற்ற போர் வாலி,**
**கலங்கி, வல் விசைக் கால்**
**கிளர்ந்து எறிவுற, கடைக்கால்**
**விலங்கல் மேருவும் வேர்**
**பறிந்தாலென, வீழ்ந்தான்.***

**அலங்கு தோள் வலி அழிந்த -** *விளங்கும் தோள் வலிமை அழிந்து போன;* **அத்தம்பியை அருளான் -** *அந்தத் தம்பியின் மீது இரக்கம் கொள்ளாதவனாகி;* **வலம் கொள் பாரிடை -** *வலிமை கொண்ட நிலத்தில்;* **எற்றுவான் உற்ற -** *மோதிக் கொல்ல முற்பட்ட;* **போர்வாலி -** *போரிடுதலில் சிறந்த வாலியானவன்;* **கலங்கி -** *(அம்பு பட்டவுடன்) நிலை கலங்கி;* **கடைக்கால் -** *ஊழிக்கால இறுதியில்;* **வல் விசைக் கால் -** *வலிய வேகத்துடன் கூடிய பெருங்காற்று;* **கிளர்ந்து எறிவுற -** *எழுந்து வீசுவதால்;* **விலங்கல் மேருவும் -** *(நிலத்தினைத் தாங்கும்) மேரு என்னும் மலையும்;* **வேர் பறிந்தாலென -** *வேர் பறிக்கப்பெற்று விழுந்தது போல;* **வீழ்ந்தான் -** *(நிலத்தில்) விழுந்தான்.*

*கடைக்கால் - யுக முடிவாகிய ஊழிக்காலம். மேருவும் - உயர்வு சிறப்பும்மை. ஊழிக்காலக் காற்று இராமன் அம்பியின் வலிமைக்கும் வேகத்திற்கும், மேருமலை வாலியின் பருமனுக்கும் வலிமைக்கும் உவமைகள்.* *67*

***4002. சையம் வேரொடும் உரும்***
***உறச் சாய்ந்தென, சாய்ந்து,***
***வையம் மீதிடைக் கிடந்த போர்***
***அடு திறல் வாலி,***
***வெய்யவன் தரு மதலையை***
***மிடல் கொடு கவரும்***
***கை நெகிழ்ந்தனன்; நெகிழ்ந்திலன்,***
***கடுங் கணை கவர்தல்.***

***உரும் உற -*** *பேரிடி விழுதலால்;* ***சையம் வேரொடும் சாய்ந்தென -*** *மலை அடியோடு நிலைபெயர்ந்து விழுந்தாற்போல;* ***சாய்ந்து -*** *விழுந்து;* ***வையம் மீதிடைக் கிடந்த -*** *நிலத்தின் மேல் கிடந்த;* ***போர் அடு திறல் வாலி*** *- போரில் பகைவரை அழிக்கும் வலிமை உடைய வாலி;* ***வெய்யவன் தரு மதமலையை -*** *சூரியன் பெற்ற மைந்தனான சுக்கிரீவனை;* ***மிடல் கொடு கவரும் -*** *வலிமையுடன் இறுகப்பற்றிய;* ***கை நெகிழ்ந்தனன் -*** *கைகளின் பிடி நெகிழ்ந்து விட்டான்;* ***கடுங்கணை கவர்தல் -*** *(ஆனால் மார்பில் தைத்த) கொடுமை மிக்க அம்பினைப் பற்றுவதில்;* ***நெகிழ்ந்திலன் -*** *கை நெகிழாதவனாயினான்.*

*இராமன் தொடுத்த அம்பால் தளர்வுற்ற வாலி தன் கைகளைச் சுக்கிரீவனை இறுகப்பற்றிய பிடிப்பினின்று நெகிழ விட்ட நிலையிலும், தன் மார்பில் தைத்து ஊடுருவிய அம்பைப் புறத்தே போக விடாது வலிந்து பற்றிக் கொள்ளம் உறுதியும் வீரமும் படைத்தவனாய் விளங்கினான்.*

*இராமன் அம்பிற்கு இடியும், தரையில் விழுந்த வாலிக்கு அடியோடு நிலை பெயர்ந்து வீழ்ந்த மலையும் உவமைகள். கை நெகிழ்ந்தனன்; நெகிழ்ந்திலன் கடுங்கணை கவர்தல் - முரண்தொடை.* *68*

*அம்பினை வாலி வெளியில் எடுத்தல்*

***4003. எழுந்து, 'வான் முகடு இடித்து***
***உகப்படுப்பல்' என்று, இவரும்;***
***'உழுந்து பேரு முன், திசை***
***திரிந்து ஒறுப்பல்' என்று, உறுக்கும்;***
***'விழுந்து, பாரினை வேரொடும்***
***பறிப்பல்' என்று, ஓரும்;***
***'அழுந்தும் இச் சரம் எய்தவன்***
***ஆர்கொல்?' என்று, அயிர்க்கும்.***

***எழுந்து*** - *(சாய்ந்து வீழ்ந்த வாலி) எழுந்து;* ***வான் முகடு இடித்து*** - *'வானத்தின் மேல் முகட்டினை' இடித்து;* ***உகப்படுப்பல்*** - *'சிதைந்து விழச் செய்வேன்';* ***என்று இவரும்*** - *என்று கூறி மேலெழுவான்;* ***உழுந்து பெருமுன்*** - *'ஓர் உழுந்து நிலைபெயர்ந்து உருளும் நேரத்திற்கு முன்னரே;* ***திசை திரிந்து ஒறுப்பல்*** - *எல்லாத் திசைகளிலும் சுற்றித் திரிந்து அனைத்தையும் முறித்து அழிப்பேன்';* ***என்று உறுக்கும்*** - *என்று சினம் கொள்வான்;* ***விழுந்து பாரினை*** - *'கீழே பாய்ந்து இப்பூமியை;* ***வேரொடும் பறிப்பல்*** - *வேரொடு பெயர்த்தெடுப்பேன்';* ***என்று ஒரும்*** - *என்று நினைப்பான்;* ***அழுந்தும் இச்சரம்*** - *'(வலிய) என் மார்பில்*

*ஆழ்ந்து தைத்துள்ள இந்த அம்பினை;* ***எய்தவன் ஆர்கொல்*** - *தொடுத்தவன் யார்?'* ***என்று அயிர்க்கும்*** - *என்று ஐயுறுவான்.*

*அம்பு பட்டதால் தளர்ந்த வாலியின் பலவித எண்ணங்களை இப்பாடல் காட்டுகிறது. வானத்திலிருந்து அம்பு எய்யப்பட்டதா? திசைகளிலிருந்து விடுக்கப்பட்டதா? அன்றி நிலத்தின் கீழ்ப்பகுதியிலிருந்து தொடுக்கப்பட்டதா என அறியாது மூவுலகத்தாரையும் வருத்துவதாக வாலி சினங்கொண்டான். அதனால்தான் 'வான் முகடு இடித்து உகப்படுப்பல்', 'திசை திரிந்து ஒறுப்பல்', 'விழுந்து பாரினை வேரொடும் பறிப்பல்' என்றான். உழுந்து - இப்பொழுது 'உளுந்து' என வழங்கும். 'உழுந்து இட இடம் இலை' (754) 'நெய்யோடு மயக்கிய உழுந்து நூற்றன்ன' (ஐங்குறு - 211). உழுந்து விரைந்து உருண்டோடும் இயல்புடையதாதலின், மிகச் சிறிய கால எல்லைக்கு அளவாக உழுந்து உருளும் பொழுது எனக் கூறுவது வழக்கம். 'இலங்கும் ஆடி உழுந்து ஓடு காலத்திடை' (4791) என்றது காண்க.*

*தன்மீது அம்பு செலுத்த யாருக்கு வலிமையுண்டு என வாலி தனக்குள் ஐயம் கொண்டு மயங்கினான்.* *69*

***4004. எற்றும் கையினை நிலத்தொடும்;***
***எரிப் பொறி பறப்ப,***
***சுற்றும் நோக்குறும்; சுடு***
***சரம்தனைத் துணைக் கரத்தால்***
***பற்றி, வாலினும் காலினும்***
***வலி உற, பறிப்பான்***
***உற்று, உறாமையின் உலைவுறும்;***
***மலை என உருளும்.***

***கையினை நிலத்தொடும் எற்றும்*** - *(மேலும்) வாலி தன் கைகளை நிலத்தோடு மோதுவான்;* ***எரிப் பொறி பறப்ப*** - *(தன் கண்களிலிருந்து) நெருப்புப் பொறி பறக்கும்படி;* ***சுற்றும் நோக்குறும்*** - *நாற்புறமும் சுற்றிப் பார்ப்பான்;* ***சுடு சரம்தனை*** - *தன்னை வருத்திய அம்பினை;* ***துணைக் கரத்தால் பற்றி*** - *தனது இரண்டு கைகளால் பிடித்துக் கொண்டு;* ***வாலினும் காலினும்*** - *வாலினாலும கால்களினாலும்;* ***வலி உறப் பறிப்பான்*** - *வலிமையுறப் பறிக்க;* ***உற்று*** - *முயன்று;* ***உறாமையின்*** - *(அம்பைப்) பறிக்க முடியாமையால்;* ***உலைவுறும்*** - *வருந்துவான்;* ***மலை என உருளும்*** - *மலை புரள்வது போல் (வலி தாங்காமல்) நிலத்தில் புரள்வான்.*

*அம்புபட்ட நிலையில் வேதனை தாங்காமல் வாலி செய்யும் செயல்கள் இப்பாடலில் கூறப்பட்டுள்ளன. சுடுசரம் - நெருப்புப்போல் உட்புகுந்து எரிக்கும் அம்பு. தாடகை வதைப்படலத்தில் 'சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம்' (388) எனக் கூறப்பெறும். பறிப்பான் - பானீற்று வினையெச்சம். சுடுசரம் - வினைத்தொகை. 70*

***4005. 'தேவரோ?' என அயிர்க்கும்; 'அத்***
***தேவர், இச் செயலுக்கு***
***ஆவரோ? அவர்க்கு ஆற்றல்***
***உண்டோ?' எனும்; 'அயலோர்***
***யாவரோ?' என நகைசெயும்;***
***'ஒருவனே, இறைவர்***
***மூவரோடும் ஒப்பான், செயல்***
***ஆம்' என மொழியும்.***

***தேவரோ -*** *(இந்த அம்பினை எம்மேல் எய்துவர்) தேவர்களோ?* ***என அயிர்க்கும் -*** *என்று ஐயப்படுவான்;* ***அத்தேவர் -*** *'அந்தத் தேவர்கள்;* ***இச்செயலுக்கு ஆவரோ -*** *இத்தகைய செயல் செய்வார்களோ?* ***அவர்க்கு ஆற்றல் உண்டோ -*** *(அன்றியும்) அத்தேவர்களுக்கு என்னை எதிர்க்கும் வலிமை உண்டோ?* ***எனும் -*** *என்று கூறுவான்;* ***அயலோர் யாவரோ -*** *'(இது செய்தவர்) அயலார் வேறு யாவரோ?'* ***என நகை செயும் -*** *எனக்கூறி இகழ்ந்து சிரிப்பான்;* ***ஒருவனே -*** *தான் ஒருவனாக நின்று;* ***இறைவர் மூவரொடும் ஒப்பான் -*** *கடவுளர் மூவர்க்கும் ஒப்பாகின்றவனது;* ***செயல் ஆம் என மொழியும் -*** *செய்கையாகும் என்று கூறுவான்.*

*தேவர்க்கும் வாலிக்கும் பகையின்மையாலும், பாற்கடலைக் கடைந்து அமுதம் கொடுத்திருப்பதால் தன்னால் நன்மை பெற்றவர்களாதலாலும், இருவர் போரிடுகையில் இடையில் ஒருவர்மேல் அம்பு தொடுக்கும் அறமல்லாத செயலைத் தேவர்கள் செய்ய மாட்டார்கள் என்ற நம்பிக்கையாலும் வாலி 'தேவரோ என அயிர்க்கும்' என்றார். ஒருவேளை நன்றி மறந்து போரிட எண்ணினர் என்றாலும் வாலியை எதிர்க்கும் வலிமை அவர்களிடத்து இல்லையாதலின் 'அத்தேவர் இச்செயலுக்கு ஆவரோ? என வாலி நினைத்தான். தேவர் அல்லாத பிறர் இக்காரியத்தைச் செய்திருப்பரோ என்பதால் 'அயலோர் யாவரோ' என்றான். எவர் செயினும் இச்செயல் இகழ்ச்சிக்குரிய செயலாதலின் அதை எண்ணி வாலி சிரித்தான்.*

*திரிமூர்த்திகள் தனித்தனியே வந்தால் வாலியை வெல்ல இயலாது. திரிமூர்த்திகளும் ஒன்றாய் அமைந்த ஒப்பற்ற பரம்பொருளே இது செய்யவல்லவன் என்பதால் 'ஒருவனே, இறைவர் மூவரோடும் ஒப்பான் செயலாம்' என்றான். எனும், செயும் என்பன இடைக்குறைகள். 71*

***4006. 'நேமிதான் கொலோ? நீலகண்டன்***
***நெடுஞ் சூலம்,***
***ஆம் இது, ஆம் கொலோ? அன்று எனின்,***
***குன்று உருவு அயிலும்,***
***நாம இந்திரன் வச்சிரப்***

***படையும், என் நடுவண்***
***போம் எனும் துணை போதுமோ?***
***யாது?' எனப் புழுங்கும்.***

***ஆம் இது -*** *(என் மார்பில்பட்ட) இந்தப் படைக்கலம்;* ***நேமி தான் கொலோ -*** *திருமாலுடைய சுதர்சனம் என்னும் சக்கராயுதம் தானோ?* ***நீலகண்டன் நெடுஞ்சூலம் ஆம் கொலோ -*** *(விடமுண்டு) கறுத்த மிடற்றையுடைய சிவபிரானது நெடிய சூலாயுதம் இஃது ஆனதோ?* ***அன்று எனில் -*** *அவைஅல்ல என்றால்;* ***குன்று உருவு அயிலும் -*** *கிரவுஞ்சம் என்னும் மலையனைத் துளைத்துச் சென்ற முருகனது வேலாயுதமும்;* ***நாம இந்திரன் வச்சிரப்படையும்*** *- பகைவர்க்கு அச்சத்தைத் தரும் இந்திரனுடைய வச்சிரப்படையும்;* ***என் நடுவண் -*** *எனது மார்பில்;* ***போம் எனும் துணை போதுமா -*** *நுழைந்து செல்லும் என்று சொல்லத்தக்க வலிமை அமைந்ததோ?* ***யாது? -*** *இது யாதோ;* ***எனப் புழுங்கும் -*** *(தெரியவில்லையே) என்று மனம் தவிப்பான்.*

*முன்பாடலில் தன்மீது அம்பு எய்தவர் யாரோ என்று ஐயுற்றுக் கலங்கிய வாலி, இப்பாடலில் தன் மார்பில் தைத்த படைக்கலம் எத்தகையதோ என ஐயுற்று மனம் வெதும்பினான். சக்கரப்படையாயின் வட்ட வடிவினதாய், எதிர்ப்பட்டதை முழுதுவமாய் அறுத்துச் செல்லும் இயல்பினதேயன்றி மார்பில் தைத்து ஊடுருவிச் செல்லும் தன்மையதன்று; சூலப்படை மூவிலையும் நீண்ட காம்பும் கொண்ட தாய், உருவ அமைப்பிலேயே வேறுபட்டு நிற்கும். இவை இரண்டுமில்லையென்றால், கிரவுஞ்மலையைப் பிறந்த முருகனது வேலும், மலைச்சிறகரிந்த இந்திரனது வச்சிரப்படையும் மலையினும் வலிய தன் மார்பைத் தாக்கிச் செல்லும் அளவு வன்மை உடையன அல்ல. எனவே, தன் மார்பில் தைத்து வருத்தும் படைக்கலம் யாதாக இருக்கும் என வாலி மயங்கினான்.* *72*

***4007. 'வில்லினால் துரப்ப அரிது, இவ்***
***வெஞ் சரம்' என வியக்கும்;***
***'சொல்லினால் நெடு முனிவரோ***
***தூண்டினார்' என்னும்;***
***பல்லினால் பறிப்புறம்; பல***
***காலும் தன் உரத்தைக்***
***கல்லி ஆர்ப்பொடும் பறிக்கும்***
***அப் பகழியைக் கண்டான்.***

***பலகாலும் பல்லினால் பறிப்புறும் -*** *(மார்பில் பட்ட அம்பினைப்) பலமுறையும் பற்களினால் கடித்து இழுப்பான்;* ***தன் உரத்தைக் கல்லி -*** *தன் மார்பை அகழ்ந்து;* ***ஆர்ப்பொடும் பறிக்கும் -*** *பெரும் ஆரவாரத்தோடு பறிப்பவனானான்;* ***அப்பகழியைக் கண்டான் -*** *(அங்ஙனம் செய்கையில்) அந்த அம்பைக் கண்டவனான வாலி;* ***இவ்வெஞ்சரம் -*** *'இந்தக் கொடிய அம்பினை;* ***வில்லினால் துரப்ப அரிது -*** *வில்லினால் எய்வது அரியதாகும்;* ***என வியக்கும் -*** *என்று வியப்படைவான்;* ***சொல்லினால் -*** *(மந்திர) மொழிகளின் துணையால்;*

***நெடுமுனிவரோ தூண்டினார் -*** *பெருமைமிகு முனிவர்கள் இதனை ஏவினார்களோ?'* ***என்னும் -*** *என்று கருதுவான்.*

*அம்பு என்று அறிந்த நிலையில் வாலி கூறியது. பகழியைப் பறிக்கும் அவன் முயற்சி இப்பாடலில் கூறப்படுகிறது. எய்யப்பட்ட அம்பின் ஆற்றலைப் பற்றி எண்ணலானான். நெடுந்தூரத்திலிருந்து அல்லது கண்ணில் படாத நிலையிலிருந்து அம்பினை மிக அரியநிலையில் செலுத்தியது எண்ணி வியந்தான். மந்திர மொழிகளைக் கூறி முனிவர்கள் ஏவி இருப்பார்களோ என ஐயுற்றான். இதனால் வில்லம்பினும் சொல்லம்பின் வலிமை கூறப்பெற்றது. 'வில்லோர் உழலும் பகை கொளினும் கொள்ளற்க, சொல்லேர் உழவர் பகை' (872) என்னும் குறள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. 73*

***4008. 'சரம் எனும்படி தெரிந்தது; பல***
***படச் சலித்து என்?***
***உரம் எனும் பதம்,***
***உயிரொடும் உருவிய ஒன்றை,***
***கரம் இரண்டினும், வாலினும்,***
***காலினும், கழற்றி,***
***பரமன் அன்னவன் பெயர்***
***அறிகுவென்' என, பறிப்பான்.***

***சரம் எனும்படி தெரிந்தது -*** *(பகழியைக் கண்ட வாலி) இஃது ஓர் அம்பு என்ற நிலை தெரிந்தது;* ***பலபடச் சலித்து என் -*** *இனி யான் பலவிதமாக ஐயுற்று வருந்துவதால் என்ன பயன்?* ***உரம் எனும் பதம் -*** *மார்பு என்னும் இடத்தை;* ***உயிரொடும் உருவிய ஒன்றை -*** *என் மார்பைத் துளைத்துக் கொண்டு செல்ல முயலும் ஒப்பற்ற இந்த அம்பை;* ***கரம் இரண்டினும் -*** *(என்) இரண்டு கைகளாலும்;* ***வாலினும் காலினும் -*** *வாலினாலும், கால்களினாலும்;* ***கழற்றி -*** *மார்பினின்று நீக்கி;* ***பரமன் அன்னவன் -*** *மேலோனான அவனுடைய;* ***பெயர் அறிகுவென் -*** *பெயரைத் தெரிந்து கொள்வேன்;* ***எனப் பறிப்பான் -*** *எனக் கருதி (அம்பைப் பற்றி) பிடுங்குவானானான்.*

*பலவாறு எண்ணுவதால் பயனில்லை என்பதால் 'பலபடச் சலித்து என்?' என்றான். மார்பினைத் துளைத்ததோடு உயிரையும் வருத்தவல்ல கூர்மை வாய்ந்தது என்பதால் 'உரமெனும் பதம் உயிரொடும் உருவிய ஒன்று' என்றான். ஊன்றிய அம்பினை ஒரு கையால் எடுக்க முடியாமையால் இரண்டு கரங்களாலும், கால்களினாலும், வாலினாலும் பிடுங்க முற்பட்டான். வீரர்கள் செலுத்தும் அம்புகளில் பெயர் பொறிக்கப்பெறும் ஆதலால் எய்தவன் பெயரை அறிய வேண்டிப் 'பரமன் அன்னவன் பெயர் அறிவேன்' எனப் பறிக்க முயன்றான். தன் மார்பைத் துளைக்கும்படி அம்பு செலுத்தியவன் சிறந்தவனாக இருக்கவேண்டும் என்பது பற்றிப் 'பரமன்' எனக் குறித்தான்.*

*சரம் - சாப்பது, வருத்துவது அல்லது அழிப்பது என்னும் காரணத்தைக் கொண்ட தொழிற்பெயர் என்பர். இப்பாடலில் கரம், வால், கால் என்ற முறையால் வாலியின் முயற்சிகளையும், சரத்தின் வலிமையையும் ஒருமிக்கச் சித்திரித்துள்ள திறம் காண்க. 74*

*மார்பினின்று அம்பை வாலி பறித்தபோது இரத்த வெள்ளம் பெருகுதல்*

***4009. ஓங்கு அரும் பெருந்***
***திறலினும், காலினும், உரத்தின்***
***வாங்கினான், மற்று அவ்***
***வாளியை, ஆளிபோல் வாலி.***
***ஆங்கு நோக்கினர், அமரரும்***
***அவுணரும் பிறரும்,***
***வீங்கினார்கள் தோள்;-***
***வீரரை யார் வியவாதார்?***

***ஆளி போல் வாலி*** - *ஆண்சிங்கம் போன்ற வாலி;* ***ஓங்கு அரும் பெருந்திறலினும்*** - *உயர்ந்த, அரிய பெரிய ஆற்றலினாலும்;* ***காலினும்*** - *கால்களினைப் பயன்படுத்தியும்;* ***அவ்வாளியை*** - *அந்த அம்பினை;* ***உரத்தின் வாங்கினான்*** - *மார்பினின்று பிடுங்கினான்;* ***ஆங்கு நோக்கினர்*** - *அங்கு அதைப் பார்த்தவர்களான;* ***அமரரும் அவுணரும் பிறரும்*** - *தேவர்களும், அசுரர்களும், மற்றவர்களும்;* ***தோள் வீங்கினார்கள்*** - *தோள்கள் பூரிக்கப் பெற்றார்கள்;* ***வீரரை யார் வியவாதார்*** - *வீரர்களை வியந்து பாராட்டாதவர்கள் யார்? (யாருமில்லை என்றபடி).*

*இராம பாணத்தைப் பறித்தெடுத்த வாலியின் ஆற்றலை 'ஓங்கு அரும் பெருந்திறல்' எனக் கம்பர் பாராட்டுதல் காண்க. வீரர்களை வேறுபாடின்றி யாவரும் பாராட்டுவர் ஆதலின் 'வீரரை யார் வியவாதார்?' என்றார். வேற்றுப்பொருள் வைப்பணி. மற்று - அசை. 75*

***4010. மோடு தெண்திரை முரிதரு***
***கடல் என முழங்கி***
***ஈடு பேர் உலகு இறந்துளது***
***ஆம் எனற்று எளிதோ?***
***காடு, மா நெடு விலங்கல்கள்,***
***கடந்தது; அக் கடலின் -***
***ஊடு போதல் உற்றதனை***
***ஒத்து உயர்ந்துளது உதிரம்.***

***காடு, மாநெடும் விலங்கல்கள்*** - *காடுகளையும், மிகப் பெரிய மலைகளையும்;* ***கடந்தது*** - *தாண்டியதாய்;* ***அக்கடலின் ஊடு போதல்*** - *அந்தக் கடலில் சென்று சேர;* ***உற்றதனை ஒத்து*** - *தொடங்கியதைப் போன்று;* ***உயர்ந்துளது உதிரம்*** - *(வாலியின் மார்பினின்று) உயர்த்தெழுந்த இரத்தவெள்ளம்;* ***மோடு தெண் திரை*** - *உயர்ந்த தெளிந்த அலைகள்;* ***முரிதரு கடல் என முழங்கி*** - *மடங்கப் பெற்ற கடல் போல*

*ஆரவாரம் செய்து கொண்டு;* ***ஈடு பேர் உலகு*** - *வலிய, பெரிய (பல) உலகங்களை;* ***இறந்துளது ஆம் எனற்கு எளிதோ*** - *கடந்து சென்றதாம் என்று கூறுவதற்குரிய எளிமையுடையதாகுமோ?*

*வாலி அம்பினைப் பறித்து எடுத்த அளவில் மார்பினின்று பெருகிய குருதி வெள்ளம் காடு மலைகளைக் கடந்து சென்றது; கடல்போல் முழங்கிப் பல உலகங்களைக் கடந்து*

*சென்றது. குருதிப் பெருக்கின் மிகுதியைப் பாடல் புலப்படுத்துகிறது. உயர்வு நவிற்சி அணி. மோடு - உயர்ச்சி; ஈடு - பெருமை- அக்கடல் 'அ' உலகறி சுட்டு. 76*

*உடன்பிறப்புப் பாசத்தால் சக்கிரீவன் துயருறுதல்*

***4011. வாசத் தாரவன் மார்பு எனும்***
***மலை வழங்கு அருவி***
***ஓசைச் சோரியை நோக்கினன்;***
***உடன் பிறப்பு என்னும்***
***பாசத்தால் பிணிப்புண்ட அத்***
***தம்பியும், பசுங் கண்***
***நேசத் தாரைகள் சொரிதர,***
***நெடு நிலம் சேர்ந்தான்.***

***வாசத் தாரவன் -*** *மணம் மிக்க மலர் மாலையை அணிந்திருந்த வாலியின்;* ***மார்பு எனும் மலை -*** *மார்பு என்று சொல்லப்பெறும் மலை யினின்று;* ***வழங்கு அருவி -*** *பெருகிய அருவியாகிய;* ***ஓசைச் சோரியை -*** *ஆரவாரம் மிக்க குருதிப் பெருக்கை;* ***நோக்கினன் -*** *பார்த்து;* ***உடன் பிறப்பு என்னும் பாசத்தால் பிணிப்புண்ட -*** *உடன்பிறந்தான் என்னும் அன்பாகிய கயிற்றால் கட்டுண்ட;* ***அத்தம்பியும் -*** *அந்தத் தம்பியான சுக்கிரீவனும்;* ***பசுங்கண் நேசத் தாரைகள் -*** *பசுமையான தன் கண்களினின்று அன்பினால் கண்ணீர் ஒழுக்கு;* ***சொரிய -*** *பெருக;* ***நெடு நிலம் சேர்ந்தான் -*** *நீண்ட நிலத்தின் மீது வீழ்ந்தான்.*

*என்றும் மகிழ்ச்சியாக மணம் மிகு மாலைகளை அணிந்தவனாதலின் வாலியை 'வாசத் தாரவன்' என்றார். மார்பை மலை என்றதற்கேற்ப அதிலிருந்து பெருகிய இரத்தம் அருவி எனப்பட்டது. உருவக அணி. மலையிலிருந்து வீழும் அருவி ஓசையுடன் விளங்குதல்போல மார்பிலிருந்து பெருகிய குருதியும் ஓசையுடன் விளங்கியதால் 'ஓசைச் சோரி' எனப்பட்டது. பாசம் - பற்று. பிணிக்க வல்லது ஆதலின் கயிற்றுக்காயிற்று. உடன் பிறந்தார்கள் பல காரணங்களால் முரண்பட்டு நின்றாலும் இறப்பு வருகையில் பகைமை நீங்கி இயற்கையன்பு பெருகி வருந்துவது இயல்பு. இங்ஙனம் இராவணன் இறப்பைக் கண்டு வீடணன் வருந்துவதும் காண்க. சுக்கிரீவன் பாசத்தால் பிணிக்கப் பட்டதால் பகைமை மங்கி அன்பு பெருக அவன் கண்களின் சிவப்பு மாறிப் பசுமையாயிற்று என்பதால் 'பசுங்கண்' என்றார். நேசத் தாரை - அன்பினால் பெருகும் கண்ணீர். சுக்கிரீவன் விடுத்த கண்ணீர் போலியன்று, நேசத்தாரையே என்று உலகியல் போக்கில் கூறும் கவிஞர் திறம் போற்றத் தக்கது. 77*

*அம்பில் இராம நாமம் காணல்*

***4012. பறித்த வாளியைப் பரு வலித்***
***தடக் கையால் பற்றி,***
***'இறுப்பென்' என்று கொண்டு***
***எழுந்தனன், மேருவை இறுப்போன்;***
***'முறப்பென் என்னினும், முறிவது அன்று***

***ஆம்' என மொழியா,***
***பொறித்த நாமத்தை அறிகுவான்***
***நோக்கினன், புகழோன்.***

***மேருவை இறுப்போன் -*** *மேரு மலையை முறிக்க வல்லவனும்;* ***புகழோன் -*** *புகழ் மிக்கவனும் ஆகிய வாலி;* ***பறித்த வாளியை -*** *(தன் மார்பினின்று) பிடுங்கிய அம்பை;* ***பரு வலித் தடக்கையால் பற்றி*** *- தனது பருத்த வலிமை வாய்ந்த பெரிய கைகளால் பிடித்து;* ***இறுப்பென் -*** *'ஒடிப்பேன்';* ***என்று கொண்டு -*** *என்று கருதி;* ***எழுந்தனன் -*** *எழுந்து;* ***முறிப்பென் என்னினும் -*** *'இதனையான் முறிப்பேன் என்று முயன்றாலும்;* ***முறிவது அன்றுஆம் -*** *(இது) முறியக்கூடிய எளியமையுடையது அன்றாம்';* ***என மொழியா -*** *என்று சொல்லி;* ***பொறித்த நாமத்தை -*** *அந்த அம்பில் அடையாளமாக எழுதப்பட்டுள்ள பெயரை;* ***அறிகுவான் நோக்கினன் -*** *அறியும் பொருட்டுக் கூர்ந்து பார்த்தான்.*

*'மேருவை இறுப்போன்' என்றது வாலியின் வலிமையைக் காட்டியது. புகழோன் - வீரத்தால் புகழ் வாய்ந்தவன். இராம நாமத்தை நோக்கும் பேறு பெற்றவன். இராமனால் உயிர் இழக்கும் பேறு பெற்றவன் என்ற காரணங்களால் 'புகழோன்' எனக் குறிக்கப் பெற்றான் எனினும் பொருந்தும். அறிகுவான் - வானீற்று வினையெச்சம்.*
*78*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***4013. மும்மை சால் உலகுக்கு எல்லாம்***
***மூல மந்திரத்தை, முற்றும்***
***தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்***
***பெரும் பதத்தை, தானே***
***இம்மையே, எழுமை நோய்க்கும்***
***மருந்தினை, 'இராமன்' என்னும்***
***செம்மை சேர் நாமம்தன்னைக்***
***கண்களின் தெரியக் கண்டான்.***

***மும்மை சால் உலகுக்கு எல்லாம் -*** *மூன்று என்னும் தொகை பொருந்திய (வானம், பூமி, பாதாளம்) என்னும் உலகங்கள் யாவற்றிற்கும்;* ***மூல மந்திரத்தை -*** *ஆதாரமாய்ப் பொருந்திய மந்திரத்தை;* ***முற்றும் தம்மையே தமர்க்கு நல்கும் -*** *முழுவதுமாகத் தம்மையை வழிபடும்*

*அடியார்கட்கு அளிக்கும்;* ***தனிப் பெரும் பதத்தை -*** *ஒப்பற்ற சிறப்பு மிக்க சொல்லை;* ***தானே -*** *தான் தனித்தே;* ***இம்மையே -*** *இந்தப் பிறவியிலேயே;* ***எழுமை நோய்க்கும் மருந்தினை -*** *எழுவகைப் பிறப்புக்களாகிய நோய் வராமல் தடுக்கும் மருந்தை;* ***'இராமன்' என்னும் -*** *இராமன் என்கின்ற;* ***செம்மை சேர் நாமம் தன்னை -*** *சிறப்புப் பொருந்திய திருநாமத்தை;* ***கண்களின் தெரியக் கண்டான் -*** *தன் கண்களினால் (அவ்வம்பில்) தெளிவாகப் பார்த்தான்.*

*தாரக மந்திரம் என்று சிறப்பித்துக் கூறப்படும் 'இராம நாமத்தின் பெருமை இங்கு உணர்த்தப்பட்டது. மும்மைசால் உலகு - இப்பிறவி, முற்பிறவி, இனிவரும் பிறவி என மூன்று பிறவிகளுக்கு இடமான உலகில் வாழும் உயிர்கள் என்றும் பொருள் கொள்வர். முற்றும் தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும்பதம் - தம்மை வழிபட்டார்க்குத் தம்மையே முழுமையாக நல்குதல், இராம நாமத்தைச் சொன்னவர்கள் பெருமானின் வடிவம் கண்டு இன்ப அனுபவத்தில் ஆழ்ந்து பரமபதத்தை அடைவர் என்பது பொருளாகும். 'தம்மை' என்றது அப்பெயரின் பொருளான பெருமானைக் குறித்தது. அன்பர்களிடத்து எளியனாகும் இறை இயல்பு புலப்படுகிறது. எடுத்த இப்பிறவியிலேயே வினைவயத்தால் தொடரவல்ல எழுபிறப்புக்களாகிய நோயைப் போக்க வல்ல பெயர் ஆதலின் 'இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தை' என்றார். பிறவியை நோய் என்றதால் இராம நாமம் அந்நோய் தீர்க்கும் மருந்து எனப்பட்டது. நோவினையும் நோயினையும் நோய்செய் வினையினையும், வீ வினையினையும் தீர்த்தருளும் வேங்கடமே (திருவேங்கடமாலை - 14) என்ற அடிகளையும் ஈண்டு ஒப்பு நோக்கலாம்.*

*'எல்லீரும் அவ்இராம நாமமே சொல்லீ' (4695) என்ற வானரர்களைக் கூறச் சொல்லி, அந்நாமம் கேட்டுச் சம்பாதி தன் இழந்த சிறகுகளைப் பெற்றான் என்பதாலும் இராமநாமப் பெருமை புலனாகும். எட்டெழுத்துத் திருமந்திரத்தின் பெருமை, பெருமிதங்களையெல்லாம் இப்பாடலால் இராம நாமத்துக்குக் கவிச் சக்கரவர்த்தி ஆக்கினார். இராமன் பெயரை வாலி தன் கண்களால் பெயர் என்ற அளவில் ஐயமின்றிக் கண்டான் ஆதலின் 'கண்களின் தெரியக் கண்டான்' என்றார். இராமன் பரம்பொருள் என உணரும் பக்குவம் நெருங்கிவருவதை இஃது உணர்த்தும். தானே - ஏகாரம் பிரிநிலை, இம்மையே - ஏகாரம் தேற்றம். 'இராமன் ' என்னும் பெயரிடத்து மூன்று இயல்புகளைக் கூறியதால் பலபடப்புனைவணியாம். 79*

*இராமனை வாலி இகழ்தல்*

***4014. 'இல்லறம் துறந்த நம்பி,***
***எம்மனோர்க்காகத் தங்கள்***
***வில் அறம் துறந்த வீரன்***
***தோன்றலால், வேத நல் நூல்***
***சொல் அறம் துறந்திலாத***
***சூரியன் மரபும், தொல்லை***
***நல் அறம் துறந்தது' என்னா,***
***நகை வர நாண் உட்கொண்டான்.***

***இல்லறம் துறந்த நம்பி** - 'இல்லின்கண் மனைவியுடன் இருந்து*

*செய்தற்குரிய இல்வாழ்க்கையைத் துறந்து காட்டிற்கு வந்துள்ள சிறந்த ஆண்மகனும்;* ***எம்மனோர்க்காக** - (குரங்கினத்தாராகிய) எங்கள் பொருட்டு;* ***தங்கள் வில்லறம் துறந்த** - தங்கள் மரபுக்குரிய விற்போரின் தருமத்தை விட்டொழித்த;* ***வீரன்** - வீரனுமாகிய இராமன்;* ***தோன்றலால்** - பிறந்ததால்;* ***வேத நல்நூல்** - நல்ல வேத நூல்கள்;* ***சொல் அறம்** - சொல்கின்ற தருமங்களை;* ***துறந்திலாத சூரிய மரபும்** - கைவிடாமல் பின்பற்றிவந்த சூரிய குலமும்;* ***தொல்லை நல் அறம் துறந்தது** - தொன்று தொட்டு*

*வருகின்ற நல்ல அறநெறியை விட்டு நீங்குவதாயிற்று;* ***என்னா நகைவர -*** *என்று நினைத்து, சிரிப்பு வர;* ***நாண் உட்கொண்டான் -*** *மனத்தே நாணமுற்றான்.*

*இல்லறம் துறந்தது - மனைவியுடன் நடத்தும் இல்லற வாழ்க்கையைத் துறந்து வனத்தில் தவ வாழ்க்கையை மேற்கொண்டது. வில்லறம் துறந்தது இருவர் போரிடுகையில் மறைந்திருந்தது வாலியின்மீது அம்புதொடுத்தது. போர்நெறி தவறியதால் 'வில்லறம் துறந்த வீரன்' என்று பழிப்புப் புலப்பட எதிர்மறைக் குறிப்பால் கூறினான்.*

*தந்தையை மெய்யனாக்கித் தாய் சொல்கொண்டு இல்லற வாழ்க்கையைத் துறந்து, துறவறம் மேற்கொண்ட செவ்வி நோக்கி 'நம்பி' என்று போற்றியும், ஒரு குரங்கின் பொருட்டு விற்போரின் தருமத்தை விட்டதால் 'வீரன்' என இழித்தும் கூறினான். மனைவியைப் பிரிய நேரிட்டதால் வனத்தில் பேதுற்றவன் ஆயினன் என்ற இகழ்வுக் குறிப்பிலும் 'நம்பி' என்று குறிப்பிட்டான் எனலும் பொருந்தும்.*

*'எம்மனோர்க்காக' என்றது வானர குலத்தின் புன்மையைச் சுட்டியது. 'புன் தொழில் குரங்கொடு புணரும் நட்பனோ? (3968) என வாலியும் "எங்கள் வானரத் தொழிலுக்கு ஏற்ற புன்பகை காட்டும் யானோ?" (6934) எனச் சுக்கிரீவனும் கூறுதல் காண்க.*

*அறம் தவறாத குலம் சூரிய குலம் என்பதை 'வேதநல் நூல் சொல் அறம் துறந்திலாத சூரியன் மரபு' எனச் சிறப்பித்தார். இராமன் செய்த நெறிதவறிய செயலால் அக்குலத்தின் சிறப்புக் குன்றியது என எண்ணி நகைத்தான். இகழ்ச்சி பற்றி நகைத்தான் என்க.*

*நாண் உட்கொண்டான் - பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வந்ததாகவே கருதி நாணுதல் சான்றோர் இயல்பாதலின் இராமனுக்கு வரும் பழி கருதி நாணினான். 'பிறர் பழியும் தம் பழியும் நாணுவார், நாணுக்கு உறைபதி என்னும் உலகு' (குறள். 1015) என்பது குறள். இராமன் செயலால் போர்நெறி கெட்டது என எண்ணியதாலும், இச்செயலால் வீரர்கள் அனைவர்க்கும் ஏற்படும் இழிவு நோக்கியும், இராமனைப் பற்றித் தான் தாரையிடம் கூறிய வார்த்தைகள் தவறாயின என்பது குறித்தும், வாலி நாண் உட்கொண்டான் எனவும் கொள்ளலாம். இராமனது செயல்பற்றிய ஏளனம் நகையாக வெளிப்பட, அதன் விளைவான நாணத்தை வெளிக்காட்டாது அடக்கினான் என்பதை 'நகைவர நாணுட்கொண்டான்'என்றார்.* *80*

***4015. வெள்கிடும்; மகுடம் சாய்க்கும்;***
***வெடிபடச் சிரிக்கும்; மீட்டும்***
***உள்கிடும்; 'இதுவும்தான் ஓர் ஓங்கு***
***அறமோ?' என்று உன்னும்;***
***முள்கிடும் குழியில் புக்க மூரி***
***வெங் களி நல் யானை***
***தொள்கொடும் கிடந்தது என்ன, துயர்***
***உழந்து அழிந்து சோர்வான்.***

***வெள்கிடும் -*** *(வாலிதன் நிலையை எண்ணி) நாணம் கொள்வான்;* ***மகுடம் சாய்க்கும் -*** *(நாணத்தால்) கிரீடம் அணிந்த தலையைச் சாய்ப்பான்;* ***வெடிபடச் சிரிக்கும் -*** *வெடிப்பதுண்டது போல சிரிப்பான்;* ***மீட்டும் உள்கிடும் -*** *நடந்ததைக் குறித்து மீண்டும் சிந்திப்பான்;* ***இதுவும் நான் ஓர் ஓங்கு அறமோ -*** *'இப்படி அம்பு செலுத்துதலும் ஒரு சிறந்த தருமமாகுமோ?'* ***என்று உன்னும் -*** *என்று எண்ணுவான்.* ***முள்கிடும் குழியில் -*** *முழுகி அழுந்தத் தக்க படுகுழியில்;* ***புக்க மூரி வெங் களி நல் யானை -*** *(வீழ்ந்து) அகப்பட்டு கொண்ட வலிய கொடிய மதங் கொண்ட சிறந்த யானை;* ***தொள்கொடும் கிடந்தது என்ன -*** *சேற்றுடன் கிடந்தது போல;* ***துயர் உழந்து அழிந்து சோர்வான் -*** *துன்புற்று தன் வலிமை அழிந்து தளர்ச்சி அடைவான்.*

*வீழ்ந்த வாலியின் மனநிலையைப் பாடல் புலப்படுத்தும். இராமன் அறத்தின் வடிவம் என்று வாலி எண்ணியதால் 'இப்படி அம்பு செலுத்துவதும் ஒரு சிறந்த அறமாகுமா?' என எண்ணி மயங்கினான். முள்கிடுங்குழி - பெரும் பள்ளம், படுகுழி. யானை பிடிப்போர், பள்ளம் தோண்டிப் பழக்கிய பெண் யானையை ஒருபுறம் நிறுத்தி வைக்க, ஆண் யானை, பிடியைச் சேரும் ஆர்வத்தில் விரைந்து வந்து குழியில் விழ; அதனைப்பிணித்து மேலேற்றிச் செல்வர். அவ்வாறு இராமன் செய்த தந்திரத்தால் வாலி அகப்பட்டு வருத்தலாயினன். உவமை அணி. தொள்கு - சேறு; வலை எனலுமாம். முன் பாடலில் புன்சிரிப்புச் (நகை வர) சிரித்தவன் இங்கு வெடிபடச் சிரித்தான் என்றது காண்க.* *81*

இராமன் வாலியின் எதிர்வந்து தோன்றலும் அவனை வாலி இகழ்தலும்

***4016. 'இறை திறம்பினனால்; என்னே,***
***இழிந்துளோர் இயற்கை! என்னின்,***
***முறை திறம்பினனால்' என்று***
***மொழிகின்ற முகத்தான் முன்னர்,***
***மறை திறம்பாத வாய்மை***
***மன்னர்க்கு முன்னம் சொல்லும்***
***துறை திறம்பாமல் காக்கத்***
***தோன்றினான், வந்து தோன்ற,***

***இறை திறம்பினனால் -*** *தலைமைத் தன்மை உடைய இராமன் முறை தவறினன் என்றால் ;* ***இழிந்துளோர் இயற்கை என்னே -*** *(இனி) இழிந்தோராகிய சிறியார் இயல்பு என்னாகும்?* ***என்னின் முறை திறம் பின்னால் -*** *அதுவும் என் திறத்தின் நீதிமுறை தவறினானே!* ***என்று***

***மொழிகின்ற -*** *என்று சொல்கின்ற ;* ***முகத்தான் முன்னர் -*** *முகத்தினனாகிய வாலியின் முன்னே ;* ***மறை திறம்பாத -*** *வேத நெறியில் தவறாத ;* ***வாய்மை மன்னர்க்கு -*** *வாய்மை ஒழுக்கத்தினரான அரசர்களுக்கென்று ;* ***முன்னம் சொல்லும் துறை -*** *முன் மனு முதலிய நூல்களில் கூறப்பெற்ற அறநெறிகளை ;* ***திறம்பாமல் காக்க -*** *வழுவாமல் காத்தல் பொருட்டு ;* ***தோன்றினான் -*** *(உலகில்) தோன்றியவனான இராமன் ;* ***வந்து தோன்ற -*** *வந்து தோன்ற . . . .*

*இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடராய், இதன் கண் உள்ள 'தோன்ற' எனும் எச்சம் 'கண்ணுற்றான்' என அடுத்த பாடலில் வரும் வினை கொண்டு முடியும். மனு முதலிய அற நூல்கள் வேதத்தின் பொருளை ஒட்டியே எழுதப்படுவன. அரசர்களுக்குரிய நெறிமுறைகளைக் காக்கவே தோன்றியவன் இராமன். அறங்காக்கத் தோன்றியவன் என்பதை 'மண்ணிடை யாவர் இராகவன் அன்றி மாதவம் அறத்தொடும் வளர்த்தார்' (97) "அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான்" (1349), 'அறம் தலை நிறுத்தி வேதம் அருள் சுரந்து அறைத்த நீதித், திறம் தெரிந்து, உலகம் பூணச் செந்நெறி செலுத்தி, தீயோர் இறந்து உக நூறி, தக்கோர் வாலியின் முன்னர் இராமன் தோன்றியது, தான் வாலியைத் தண்டித்தது அறநெறிக்கு ஒத்த செயலே என்பதை உணர்த்தல் பொருட்டாகும். 82*

***4017. கண்ணுற்றான் வாலி, நீலக் கார்***
***முகில் கமலம் பூத்து,***
***மண் உற்று, வரி வில்***
***ஏந்தி, வருவதே போலும் மாலை;***
***புண் உற்றது அனையசோரி***
***பொறியொடும் பொடிப்ப, நோக்கி,***
***'எண்ணுற்றாய்! என் செய்தாய்!'***
***என்று ஏசுவான் இயம்பலுற்றான்:***

***நீலக் கார் முகில் -** நீலநிறமுள்ள கார்கால மேகம் **; கமலம் பூத்து -** தன்னிடம் பல தாமரை மலர்கள் மலரப்பெற்று; **வரிவில் ஏந்தி -** கட்டமைந்த வில்லை ஏந்தி; **மண் உற்று வருவதே போலும் -** நிலவுலகைப் பொருந்தி வருவது போலுள்ள; **மாலை -** திருமாலாகிய இராமனை; **வாலி கண்ணுற்றான்-** வாலி தன் கண்களால் கண்டான். **புண் உற்றது அனைய சோரி -** புண்ணிலிருந்து வெளிப்படுவது போன்ற குருதி; **பொறியொடும் பொடிப்ப -** நெருப்புப் பொறிகளொடு (தன்கண்களினின்று) வெளிப்பட; **நோக்கி -** (சினத்தோடு) பார்த்து; **எண்ணுற்றாய் -** 'எண்ணங்களில் நிறைந்து பொருந்தியவனே!' **என் செய்தாய் -** என்ன காரியம் செய்தாய்? **என்று ஏசுவான் -** என்று கூறிப் பழிப்பவனாய்; **இயம்பலுற்றான் -** சொல்லத் தொடங்கினான்.*

*இராமனது மேனி நிறத்திற்குக் கார்மேகமும், அவனுடைய முகம், கண், கை, கால் முதலிய உறுப்புக்களுக்குச் செந்தாமரை மலர்களும் உவமை. "நீலக் கார்*

*முகில் கமலம் பூத்து, வரிவில் ஏந்தி, மண்ணுற்ற வருவதே போலும் மாலை" என்றது இல்பொருள் உவமை அணியாம். 'கருமுகில் தாமரைக் காடு பூத்து' (191); 'கண்ணும் திருவடியும் கையும் திருவாயும் செய்ய' (சிலப் - 17 - 36). 'என்ன நினைந்து என்ன காரியம் செய்தாய்' எனவும் பொருள் கொள்ளலாம். 'என் செய்தாய்' என்பது மதிக்கத்தக்க நீ என்ன காரியம் செய்துவிட்டாய்? என இரங்கிக் கூறுவதாயும் உள்ளது. 83*

***4018. 'வாய்மையும், மரபும், காத்து, மன்***
***உயிர் துறந்த வள்ளல்,***
***தூயவன் மைந்தனே! நீ,***
***பரதன்முன் தோன்றினாயே!***

***தீமைதான், பிறரைக் காத்து, தான்***
***செய்தால் தீங்கு அன்று ஆமோ?***
***தாய்மையும் அன்றி, நட்பும்,***
***தருமமும், தழுவி நின்றாய்!***

***தாய்மையும் -*** *தாய் போன்ற அன்புடைமையையும்;* ***அன்றி நட்பும் -*** *அதுவுமன்றி நட்பாகும் பண்பினையும்;* ***தருமமும் -*** *அறத்தையும்;* ***தழுவி நின்றாய் -*** *மேற்கொண்டு நின்றவனே!* ***வாய்மையும் மரபும் காத்து -*** *உண்மையினையும் குலப் பெருமையினையும் காத்து;* ***மன் உயிர்துறந்த வள்ளல் -*** *(அவற்றின் பொருட்டுத்) தன் சிறந்த உயிரை விட்ட வள்ளலும்;* ***தூயவன் மைந்தனே -*** *தூயவனும் ஆன தசரத சக்கரவர்த்தியின் மகனே!* ***நீ பரதன் முன் -*** *நீ பரதனுக்கு முன்னர்;* ***தோன்றினாயே -*** *அவன் தமையனாகப் பிறந்தாயே!* ***பிறரை(த்) தீமை தான் காத்து -*** *மற்றவர்களைத் தீய செயல் செய்யாதவாறு விலக்கி;* ***தான் செய்தால் -*** *தான் தீய செயல் செய்தால்;* ***தீங்கு அன்று ஆமோ -*** *அது தீங்கு ஆகாது நன்மையாகுமோ? (ஆகாது).*

*இராமன் தாய் போன்று அன்பு காட்டும் இயல்பினன் என்பதை 'அன்னையே அனைய அன்பின் அறவோர்கள்' (2555) என்று சீதையும் 'தாய்வர, நோக்கிய கன்றின் தன்மையார்' (2635) எனத் தண்டக வனத்து முனிவர்களும் கூறியவற்றால் அறியலாம்.*

*'தோழமை' என்று அவர் சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ (2317) என்று குகன் கூற்று இராமனின் நட்பின் சிறப்பை உணர்த்தும். இராமன் தருமத்தை நிலைநாட்டவே தோன்றியவன் என்பதைக் காப்பியம் எங்கும் காணலாம். தாய்மை, நட்பு, அறம் ஆகிய அருங்குணங்களை உடையவன் இராமன் என்பதை வாலி நன்கறிந்திருந்தனன். இங்குத் தசரதன் பெருமையும் பேசப்படுகிறது. வாய்மையினையும் குல மரபையும் காத்தற்பொருட்டு உயிர்துறந்தவன் தசரதன். வள்ளல் - பிறருக்காக உயிர்துறப்பதிலும் வள்ளலாகத் திகழ்ந்தவன். தூயவன் - மனம், மொழி, செய்கையால் தூய்மை உடையவன். அத்தகைய அரசனுக்கு மகனாகப் பிறந்தாயே என ஏசினான். பரதனுக்கு முன்னவனாகப் பிறக்கத்தக்கவன் அல்லன் இராமன் என்றான். பரதனது சிறந்த குணங்களை வாலி அறிந்திருந்தான் என்பதும் இதனால் புலனாகிறது. 'எள்ள அரிய குணத்தாலும், எழிலாலும், இவ் இருந்த வள்ளலையே அனையானை, கேகயர்கோன் மகன் பயந்தாள்' (657)*

*என விசுவாமித்திரரும், "நிறை குணத்தவன், நின்னினும் நல்லனால்; குறைவு இலன்" (1609) எனக் கோசலையும், "மன்புகழ்ப் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்கள் எல்லாம் உன்புகழ் ஆக்கி கொண்டாய் உயர் குணத்து உரவுத்தோளாய்" (2338) எனக் குகனும் பரதனைப் பாராட்டுதல் காண்க. பிறர்தீமை செய்யாதபடி பாதுகாப்பவன் தானும் தீங்கு செய்யாமல் இருப்பதை தகுதியுடைத்தாதலின் 'தீமைதான் பிறரைக் காத்துத் தான் செய்தால் தீங்கன்றாமோ' என வினவினான்.*

*எல்லா உயிர்களிடத்தும் தாய்போல் அன்புகாட்ட வேண்டியவன் ஒருவனிடத்துக் கொண்ட நட்புக் காரணத்தால் தரும நெறிவழுவலாமோ என்பது கருத்தாகும்.*
*84*

***4019. 'குலம் இது; கல்வி ஈது;***
***கொற்றம் ஈது; உற்று நின்ற***

***நலம் இது; புவனம் மூன்றின்***
***நாயகம் உன்னது அன்றோ;***
***வலம் இது; இவ் உலகம் தாங்கும் வண்மை***
***ஈது; என்றால் - திண்மை***
***அலமரச் செய்யலாமோ,***
***அறிந்திருந்து அயர்ந்துளார்போல்?***

***குலம் இது -*** *நீ பிறந்த குலமோ (வாய்மையின்) வழாது மன்னுயிர் ஓம்பும் அரசர்கள் ஆண்ட) இத்தகைய பெருமை வாய்ந்தது;* ***கல்வி ஈது -*** *நீ கற்ற கல்வி (உயர்ந்தோர் மாட்டுக்கற்று அறியாரையும் அறிவுறுத்திப் பயனளிக்கும்) இத்தன்மை உடையது;* ***கொற்றம் ஈது -*** *உன்னுடைய வெற்றியோ (கானகத்தில் அரக்கர்களை வென்ற) இத்தகைய சிறப்புடைத்து;* ***உற்று நின்ற நலம் இது -*** *உன்னை வந்தடைந்த நற்பண்புகளின் இயல்போ (துன்பம் அகற்றி இன்புறுத்தும்) இவ்வியல்பானது;* ***புவனம் மூன்றின் நாயகம்-*** *மூவுலகங்களையும் ஆட்டிச் செய்யும் தலைமை;* ***உன்னது அன்றோ -*** *உன்னுடையதல்லவா?* ***வலம் இது -*** *உன் பேராற்றல் இத்தகைத்து;* ***இவ் வுலகம் தாங்கும் வண்மை ஈது -*** *இந்த உலகத்தைப் பாதுகாக்கும் வள்ளன்மை இது;* ***என்றால் -*** *என்று உன்னைச் சிறப்பித்து உலகம் சொல்வதானால்;* ***அறிந்திருந்து அயர்ந்துளார்போல -*** *எல்லாவற்றையும் அறிந்திருந்தும் மதிமயங்கி மறந்தவர் போல;* ***திண்மை அலமரச் செய்யலாமோ -*** *மேற்கூறிய உறுதிகள் யாவும் நிலைகலங்குமாறு தகுதியில்லாதனவற்றைச் செய்யலாமோ?*

*குலம், கல்வி, கொற்றம், நாயகம், வலம், வண்மை ஆகிய எல்லாச் சிறப்புக்களைப் பெற்றிருந்தும் அவற்றைக் காக்க மறந்தவன் போல மயங்கி நடந்து கொண்டாயே என வாலி கூறினன்.*

*குலம் இது - சூரிய குலம், இட்சுவாகு குலம், இரகு குலம் என உலகம் பாராட்டும் பெருமை உடையது. கடல் தோண்டினோர், கங்கையைக் கொணர்ந்தோர் எனச் சிறந்த அரசர்கள் ஆட்சி புரிந்த சிறப்பு உடைத்து. கல்வி ஈது - வசிட்டர், விசுவாமித்திரர் முதலியோர்பால் பெற்ற கல்வி, கொற்றம் ஈது - பதினாலாயிரக்*

*கணக்கான கரதூடணாதியரைத் தனித்து வென்ற சிறப்புக் கொண்டது. உற்று நின்ற நலம் இது. 'குணங்களால் உயர்ந்த வள்ளல்' (479) 'அந்தமில் பெருங்குணத்து இராமன்' (2159) என்ற அடிகளால் அறியலாம். புவனம் மூன்றின் நாயகம். விண், மண், பாதாளம் ஆகிய உலகின் நாயகன் இராமன் என்பதை வாலி அறிந்திருந்தான். வலம் இது - எதையும் எதிர்க்கும் பேராற்றல்; உலகம் தாங்கும் வண்மை ஈது. அருளால் உலகச் சுமையை ஏற்றுக்கொள்ளும் வள்ளல் தன்மை.*

*திண்மை அலமரச் செய்யலாமோ என்பதற்கு உன்பால் நான் கொண்ட வலிய நம்பிக்கைகள் சிதையத் தகுதியல்லனவற்றைச் செய்யலாமோ எனவும் பொருள் கொள்ளலாம். ஈது - இது என்பது நீண்டது, செய்யுள்விகாரம். 85*

***4020. 'கோ இயல் தருமம், உங்கள்***
***குலத்து உதித்தோர்கட்கு எல்லாம் -***
***ஓவியத்து எழுத ஒண்ணா***

***உருவத்தாய்! - உடைமை அன்றோ?***
***ஆவியை, சனகன் பெற்ற***
***அன்னத்தை, அமிழ்தின் வந்த***
***தேவியை, பிரிந்த பின்னை,***
***திகைத்தனை போலும், செய்கை!***

***ஓவியத்து எழுத ஒண்ணா*** *- சித்திரத்தில் எழுதிக் காட்டுதற்கு முடியாத;* ***உருவத்தாய்*** *- வடிவழகுடைய இராமனே;* ***கோ இயல் தருமம்*** *- அரசர்களுக்குரிய அறநெறியானது;* ***உங்கள் குலத்து*** *- உங்கள் குலத்தில்;* ***உதித்தோர்கட்கு எல்லாம்*** *- பிறந்தவர்கள் எல்லோர்க்கும்;* ***உடைமை அன்றோ*** *- உரியது அன்றோ?* ***ஆவியை*** *- (அங்ஙனமிருக்க) உன் உயிரானவளும்;* ***சனகன் பெற்ற அன்னத்தை*** *- சனகன் பெற்ற நடையில் அன்னம் போன்றவளும்;* ***அமிழ்தின் வந்த தேவியை*** *- அமுதம்போல் அருமையாகக் கிடைத்த தேவியுமான மனைவியை;* ***பிரிந்த பின்னை*** *- பிரிந்த பிறகு;* ***செய்கை திகைத்தனை போலும்*** *- செய்யும் செயலில் தடுமாற்றம் அடைந்துள்ளாய் போலும்.*

*இராமன் திருமேனி பேரழகு வாய்ந்தது என்பது 'ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்' என்ற தொடர் புலப்படுத்தும். 'ஓவியம் சுவை கெடப் பொலிவது ஓர் உருவொடே' (1050) என வந்தமை காண்க. 'எழுதரிய பெருமான் என்றெண்ணாது எழுதியிருந்தேனே' (திருவரங்கக் கலம்பகம் - 93) எனப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் உருகுதலும் காண்க.*

*உன் உருவச் சிறப்பிற்கேற்ற செயல் அமையவில்லையே என வாலி வருந்தி இரக்கத்தோடு ஏசுவதாகக் குறிப்பாக உணரலாம். இராமன் குலத்து முன்னோன் மனு. அரசநெறிகளைக் கூறும் மனுதர்ம சாத்திரம் எழுதியவன். அந்நூலில் கூறியுள்ள தருமநெறிகளைக் குலத்துச் செல்வமாகப் பெற்றவன் இராமன். அங்ஙனமிருந்தும் இத்தகைய இழிசெயலைச் செய்துவிட்டானே என்று வாலி இரக்கமுற்றுக் கூறினான். இராமன் மாட்டு அன்பு கொண்ட காரணத்தால், அவனது செயலுக்கு ஒரு காரியத்திற்கு ஒரு நியாயம் கற்பிப்பவன் போலத் 'தேவியைப் பிரிந்தததால் செய்கை திகைத்தனையோ' என்றான்.*

*ஆவியை - சீதையே இராமனது உயிர். இதனைக் கூறும் வகையில் "ஈண்டு நீ இருந்தாய் ஆண்டு அங்கு எவ் உயிர்விடும் இராமன்" (5304); "இன்னுயிர் இன்றி ஏகும் இயந்திரப் படிவமொப்பான்" (5305) என அனுமன் உரைத்தல் காண்க. அன்னம் - உவமை ஆகுபெயர். அமிழ்தின் வந்த தேவி - பாற்கடலில் அமுதத்தோடு பிறந்த திருமகளின் அவதாரமே சீதை என்பதைச் சிறப்பாகக் கூறியது. அமிழ்தம் - இனிமைக்கு மட்டுமன்றி அருமைக்கும் உவமை ஆயிற்று. உங்கள் - முன்னிலை இடத்து உளப்பாட்டுப் பன்மை. 'பகையுள்ளும் பண்புள பாடறிவார் மாட்டு' (குறள். 995) என்றவாறு வாலியின் பண்பு அமைந்துள்ளதுபுலனாகிறது.* *86*

***4021. 'அரக்கர் ஓர் அழிவு செய்து***
***கழிவரேல், அதற்கு வேறு ஓர்***
***குரக்கு இனத்து அரசைக் கொல்ல,***
***மனு நெறி கூறிற்று உண்டோ?***
***இரக்கம் எங்கு உகுத்தாய்? என்பால்***

*எப் பிழை கண்டாய்? அப்பா!*
***பரக்கழி இது நீ பூண்டால்,***
***புகழை யார் பரிக்கற்பாலார்?***

***அரக்கர் ஓர் அழிவு செய்து*** *- அரக்கரினத்தைச் சார்ந்த ஒருவர் உனக்கொரு தீங்கினைச் செய்து;* ***கழிவரேல்*** *- சென்றுவிட்டதால்;* ***அதற்கு*** *- அதற்காக;* ***வேறு ஓர் குரக்கு இனத்து*** *- (அவ்வரக்கரினும்) வேறுபட்ட குரங்கு இனத்தைச் சார்ந்த;* ***அரசைக் கொல்ல*** *- அரசனைக் கொல்லுமாறு;* ***மனுநெறி கூறிற்று உண்டோ*** *- மனுதர்ம நெறி சொன்னது உண்டோ?* ***இரக்கம் எங்கு உகுத்தாய்*** *- (உனக்குரிய) கருணை என்னும் பண்பினை எவ்விடத்துச் சிந்திவிட்டாய்?* ***என்பால் எப்பிழை கண்டாய்*** *- என்னிடத்தில் என்ன குற்றத்தை நீ பார்த்துவிட்டாய்?* ***அப்பா*** *- ஐயனே!* ***இது பரக்கழி*** *- இத்தகைய பெரும்பழியை;* ***நீ பூண்டால்*** *- நீயே ஏற்றுக்கொண்டால்;* ***புகழை யார் பரிக்கற்பாலார்*** *- புகழை வேறு யார் தாங்கிக் கொள்ளும் தன்மையுடையவராவர்?*

*அரக்கர் ஓர் அழிவு செய்தது, இராவணன் சீதையைக் கவர்ந்த செயலைக் குறிக்கும். அரக்கன் கெடுதி செய்ய, அவனுக்குத் தண்டனை அளிக்காமல் குரங்கினத் தலைவனைக் கொல்லும் இச்செயல், குற்றம் ஒருவன் செய்யத் தண்டனை வேறொருவர்க்குக் கொடுப்பது போலாகும் என்னும் கருத்தில் வாலி பேசினான். அவ்வவறு செய்தல் உன்குலத்து மனு கூறிய அரசியல் நெறிக்கும் ஒவ்வாது என்பது வாலி கருத்து. அருளாளனாகிய இராமன் தன் இயல்பான இரக்க குணத்தை - வழிவழியாகப் பெற்ற பண்பை எங்கே உகுத்துப் போக்கினான் என வினவ வேண்டி 'இரக்கம் எங்கு உகுத்தாய்?' என்றான். இராமன் குல முன்னோன் சிபி ஒரு புறவின் பொருட்டுத் தன் உடலையே அரிந்து கொடுத்தவன். பசுவின் பொருட்டுத் தன்னையே உணவாக்கிக் கொள்ளுமாறு சிங்கத்திடம் கூறியவன் திலீபன். இங்ஙனம் குல முன்னோர்க்கும் அவர்க வழி இராமனுக்கும் இயல்பாக அமைந்த இரக்கப் பண்பு. உகுத்தல் - வேண்டுமென்றே சிந்துதல். தீமை செய்த வரை ஒறுத்தல் அரசியல் நெறிமுறை என்றால், இரக்கமின்றித் தான் கொல்லப்*

*படத் தன்னிடத்துக் கண்ட குற்றம் யாது என அறிய விழைபவனாய் 'என்பால் எப்பிழை கண்டாய்' என வினவினான். பரித்தல் - சுமையுடையதாயினும் பொறுத்துச் சுமத்தல். பெரும்புகழைத் தாங்கக் கூடியவா இராமனைத் தவிரப் பிறர் இலர் என்ற கருத்தில் வாலி 'புகழை யார் பரிக்கற்பாலார்' என்றான். அப்பா - அன்பு, வியப்பு, இரக்கம், துன்பம் ஆகிய உணர்ச்சிகளை உணர்த்தும் சொல்.* *87*

***4022. 'ஒலி கடல் உலகம்தன்னில்***
***ஊர்தரு குரங்கின்மாடே,***
***கலியது காலம் வந்து கலந்ததோ? -***
***கருணை வள்ளால்! ?***
***மெலியவர் பாலதேயோ,***
***ஒழுக்கமும் விழுப்பம்தானும்?***
***வலியவர் மெலிவு செய்தால், புகழ்***
***அன்றி, வசையும் உண்டோ?***

***கருணை வள்ளால்!*** *- அருள் நிறைந்த வள்ளலே!* ***ஒலி கடல் உலகம் தன்னில் -*** *ஒலிக்கும் கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தில்;* ***ஊர்தரு குரங்கின் மாடே -*** *தாவித் திரியும் குரங்குகளிடத்துமட்டும்;* ***கலியது காலம் வந்து கலந்ததோ -*** *கலியினுடைய தீய காலம் வந்து கலந்துவிட்டதோ?* ***ஒழுக்கம் விழுப்பம் தானும் -*** *நல்லொழுக்கமும் அதனால் பெறத்தகும் சிறப்பம்;* ***மெலியவர் பலதேயோ -*** *வலிமை குறைந்தவர்களிடம் மட்டும் இருக்க வேண்டியனவோ?* ***வலியவர் மெலிவு செய்தால் -*** *வலிமையுடையவர்கள் இழி தொழிலைச் செய்வாராயின்;* ***புகழ் அன்றி வசையும் உண்டோ -*** *(அதனால்) அவர்களுக்குப் புகழ் ஏற்படுவதன்றிப் பழி ஏற்படுதலும் உண்டோ?*

*ஊர்தரு குரங்கு - மரங்களிலும் மலைகளிலும் தாவித் திரிகின்ற குரங்கு. கவியது காலம் - கலிபுருடன் காலன்; அறத்திற்கு மாறான தீய செயல்கள் ஓங்கி நிற்கும் காலம். இராமன் கதை திரேதாயுகத்தில் நடந்தது. அங்ஙனமிருக்கத் தீமைகள் நடைபெறும் கலியுகம் எங்ஙனம் வந்து சேர்ந்தது? எவ்வளவோ வலிமை உடைய உயிரினங்கள் இருக்க, எளிய குரங்கினமான தன்னிடம் மட்டும் இத்தகைய அறமற்ற செயல் அருளுடைய இராமனால் நிகழ்ந்து விட்டதே என்று வருந்தியவனாய் 'ஊர்தரு குரங்கின் மாடே கலியது காலம் வந்து கலந்ததோ' என்றான். அறமானது கிருதயுகத்தில் நான்கு பாதமும். திரேதாயுகத்தில் மூன்று பாதமும், துவாபர யுகத்தில் இரண்டு பாதமும், கலியத்தில் ஒரு பாதமும் ஆக நிகழ்ந்தது, அதன் முடிவில் அறம் குறைந்து தீமை பெருகும் என்பர்.*

*கருணை வள்ளால் - வஞ்சப்புகழ்ச்சி, 'நின் கருணையும் வள்ளன்மையும் இங்ஙனம் முடிந்ததோ' என ஏசுவானாய் அங்ஙனம் விளித்தான். வள்ளால் - வள்ளல் என்ற சொல்லின் விளி; ஈற்றயல் நீண்டது. ஒழுக்கமும் விழுப்பமும் வலியவர், மெலியவர் என்ற வேறுபாடின்றிக் கடைபிடிக்கத் தக்கனவாதலின் வாலி ஏளனமாக 'மெலியவர் பாலதேயோ ஒழுக்கமும் விழுப்பம் தானும்' என்றான். மெலியவர் - அறிவு, ஆண்மை, ஆற்றல் ஆகியவற்றில் குறைபாடு உடையவர் - அவற்றில் மிக்கவர் வலியவர். ஒழுக்கமும் விழுப்பந்தானும் - மெலியவர் பாலதேயோ - பன்மை ஒருமையில் முடிந்தது. பன்மை ஒருமை மயக்கம்.*

*'வலியவர் தவறு செய்தாலும் அவர்க்குப் பழி வராது புகழ் வருகின்றதே, இதென்ன அநீதி' என்ற பொருளில் வலியவர் மெலிவு செய்தால் புகழ் அன்றி வசையும் உண்டோ? என்றான். வல்லான் வகுத்ததே வாயக்கால்' என்ற பழமொழி இங்கு நினையத்தக்கது.* *88*

***4023. 'கூட்டு ஒருவரையும் வேண்டாக்***
***கொற்றவ! பெற்ற தாதை***
***பூட்டிய செல்வம் ஆங்கே***
***தம்பிக்குக் கொடுத்துப் போந்து,***
***நாட்டு ஒரு கருமம் செய்தாய்;***
***எம்பிக்கு, இவ் அரசை நல்கி,***
***காட்டு ஒரு கருமம் செய்தாய்;***
***கருமம்தான் இதன்மேல் உண்டோ?***

***கூட்டு ஒருவரையும் வேண்டா -*** *(பகைவரைப் போரில் வெல்வ தற்குத்) துணையாக ஒருவரையும் வேண்டாத;* ***கொற்றவ -*** *வெற்றியை உடையவனே!* ***பெற்ற தாதை -*** *பெற்ற தந்தையாகிய தசரத சக்கரவர்த்தி;* ***பூட்டிய செல்வம் -*** *(மூத்த மைந்தனான உன்னிடம்) தந்த அரசியல் செல்வத்தை;* ***ஆங்கே தம்பிக்குக் கொடுத்து -*** *அங்கே தம்பியாகிய பரதனுக்குக் கொடுத்து;* ***நாட்டு ஒரு கருமம் செய்தாய் -*** *நாட்டிலே ஓர் ஒப்பற்ற காரியத்தைச் செய்தாய்;* ***போந்து -*** *அதன் பின்னர்* ***இவ்அரசு நல்கி -*** *(எனக்குரிய) இவ்வரசாட்சியைக் கொடுத்து;* ***காட்டு ஒரு கருமம் செய்தாய் -*** *காட்டிலும் (வழக்கத்திற்க மாறான) ஒரு செயலைச் செய்தாய்;* ***இதன் மேல் கருமம் தான் உண்டோ? -*** *இதனினும் மேலான செயல் வேறு உண்டோ?*

*கூட்டு - துணை. பெரும்படையொடு தன்னை எதிர்த்த கரதூடணர்களை எவருடைய துணையுமின்றி இராமன் வென்றதால் 'கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவ' என விளித்தான். 'துணை இலாதவர்' (3694) எனக் கவந்தன் குறிப்பிடல் காண்க. 'தன் துணை ஒருவரும் தன்னில் வேறு இலான்' (3968) என வாலி கூறியதும் காண்க. இவ்வாறு வெல்லும் திறத்தைத் 'துணை வேண்டாச் செருவன்றி' (புறம் - 16) எனப் புறநானூறு குறிப்பிடும். தந்தையே வற்புறுத்தி அளித்த செல்வம் என்பதால், "பூட்டிய செல்வம்" எனவும் குறித்தான். "தெருளுடைய மனத்து மன்னன் ஏவலின் திறம்ப அஞ்சி, இருளுடை உலகம் தாங்கும் இன்னலுக்கு இயைந்து நின்றான்." (1603) என்ற இடம் நோக்குக.*

*நாட்டிலே தன்னலங் கருதாது பரதனுக்கு நாடளித்த நீ, காட்டிலே தன்னலங்கருதிச் சுக்கிரீவனுக்குத் துணையாகித் தவறு செய்யாத என்னைக் கொன்றாய். முன்னர்ச் செய்த செயலை விடச் சிறந்தது இல்லை. பின்னர்ச் செய்த செயலை விட இழிந்ததும் இல்லை. இங்ஙனம் ஒன்றிற்கொன்று முரண்பட்ட செயல்களைச் செய்வார் உன்னிலும் மேம்பட்டவர் யாரே? என்றும் பொருள் கூறுவர்.*
*89*

***4024. 'அறை கழல் அலங்கல் வீரர்***
***ஆயவர் புரிவது ஆண்மைத்***
***துறை எனல் ஆயிற்று அன்றே?***
***தொன்மையின் நல் நூற்கு எல்லாம்***
***இறைவ! நீ, என்னைச் செய்தது***
***ஈது எனில், "இலங்கைவேந்தன்***
***முறை அல செய்தான்" என்று,***
***முனிதியோ? - முனிவு இலாதாய்!***

***அறைகழல் அலங்கல் -*** *ஒலிக்கின்ற வீரக்கழலையும் வெற்றி மாலையும் அணிந்த;* ***வீரர் ஆயவர் -*** *வீரராய் உள்ளவர்கள்;* ***புரிவது ஆண்மைத் துறை -*** *செய்யும் செயல் (அறத்தோடு மாறுபட்டதாயினும்) ஆண்மையைப் புலப்படுத்தும் போர்த்துறை;* ***எனல் ஆயிற்று அன்றோ -*** *எனச் சிறப்பித்துக் கூறப்படுதல் ஆயிற்று அல்லவவ?* ***தொன்மையின் நல் நூற்கு எல்லாம் -*** *பழமையுடையனவாய்ச் சிறந்த நல்ல அற நூல் களுக்கெல்லாம்;* ***இறைவ -*** *தலைவனே!* ***நீ என்னைச் செய்தது ஈது எனில் -*** *நீ எனக்குச் செய்தது இத்தகைய செயல் என்றால்;* ***முனிவு இலாதாய் -*** *சினம் கொள்ளாத இயல்புடையவனே!* ***இலங்கை வேந்தன் -*** *இலங்கையின் வேந்தனாகிய இராவணன்;*

***முறை அல செய்தான் என்று -*** *நீதியில்லாத செயல்களைச் செய்துவிட்டான் என்று;* ***முனிதியோ -*** *கோபிக்கக் கடவையோ?*

*அறநெறியில் நின்று போரிடுபவரே வீரர் என்ற நிலை மாறி வீரர் எனப்படுவோர் செய்வது எதுவும் ஆண்மைச் செயல் என எண்ணுமாறு இராமன் செய்கை அமைந்து விட்டதென வாலி உரைத்தான். "வல்லான் ஆடியதே ஆட்டம்", கெரடி (சிலம்பம்) பழகுகிறவன் இடறி விழுந்தால் அதுவும் ஒரு வித்தை என்னும் பழமொழிகள் காண்க.*

*தொன்மையின் நல் நூற்கு எல்லாம் இறைவன் - 'நின் செய்கை கண்டு நினைந்தனவோ, நீள் மறைகள்? உன் செய்கை அன்னவைதான் சொன்ன ஒழுக்கினவோ' (3689) எனக் கவந்தன் இராமனைப் போற்றுதல் காண்க. அறநூல்களின் தலைவனாக விளங்கும் இராமன் தன் திறத்துத் தீங்கு செய்துவிட்டுத் தன் குற்றம் காணாது, இராவணன் தனக்கு அறமற்ற செயல்களைச் செய்து விட்டானே என்று பிறன்குற்றம் கண்டு அவன்மீது சினம் கொள்ள இடமுண்டோ என வினவினான் வாலி. இராவணனைச் சினக்க இராமனுக்குத் தகுதியில்லை என்ற கருத்தில் 'முனிதியோ முனிவிலாதாய்' என்றான். முறையல - சீதையைக் கவர இராவணன் கொண்ட துறவு வேடம், மாயமான் அனுப்பல் போன்ற செயல்கள். 90*

***4025. 'இருவர் போர் எதிரும்காலை,***
***இருவரும நல் உற்றாரே;***
***ஒருவர்மேல் கருணை தூண்டி,***
***ஒருவர்மேல், ஒளித்து நின்று,***
***வரி சிலை குழைய வாங்கி,***
***வாய் அம்பு மருமத்து' எய்தல்***
***தருமமோ? பிறிது ஒன்று ஆமோ?***
***தக்கிலது என்னும் பக்கம்.***

**இருவர் போர் எதிரும் காலை -** *இருவர் தம்முள் எதிர்த்துப் போர் செய்து கொண்டிருக்கும் நேரத்தில்;* **இருவரும் நல் உற்றாரே -** *அவ்விருவரும் (மூன்றாமவருக்கு) நல்ல உறவினரே யாவர்;* **ஒருவர் மேல் கருணை தூண்டி -** *(அவ்வாறிருக்க) அவ்விருவருள் ஒருவர் மீது அருளைச் செலுத்தி;* **ஒருவர் மேல் ஒளித்து நின்று -** *மற்றொருவர்மீது குழையும்படி வளைத்து;* **வாய் அம்பு மருமத்து எய்தல் -** *கூர்மையான நுனியுடைய அம்பினை மார்பில் செலுத்துதல்;* **தருமமோ -** *அறமாகுமா?* **பிறிது ஒன்று ஆமோ -** *அன்றி அறத்திற்கு மாறுபட்டதாகுமா?* **தக்கலிது என்னும் பக்கம்-** *அச்செயல் தகுதியில்லாதது என்னும் பக்கமே சேர்வதாகும்.*

*இருவர் மாறுபட்டுப் போர் செய்கையில் பொதுநிலையில் உள்ளவர். ஒருவர்மாட்டுக் கருணைகொண்டு, மற்றொருவர்மீது மறைந்து நின்று அம்பு செலுத்துதல் நடுநிலைமைக்குரிய செயலன்று என வாலி உரைத்தனன். தக்கிலது என்னும் பக்கம் - அறமாகுமோ, அறமாகாதோ என்பதில் ஐயமுண்டானாலுட், தக்கிலது என்பதில் ஐயமில்லை என்க. தகவிலது என்பது தக்கிலது என வந்தது. பக்கம் - பக்கம் ஆம் என ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. 91*

கலிவிருத்தம்

*4026. 'வீரம் அன்று; விதி*
*அன்று; மெய்ம்மையின்*
*வாரம் அன்று; நின்*
*மண்ணினுக்கு என் உடல்*
*பாரம் அன்று; பகை அன்று;*
*பண்பு அழிந்து*
*ஈரம் இன்றி, இது*
*என் செய்தவாறுஅரோ?*

***வீரம் அன்று -*** *(நீ செய்த இச்செயல்) வீரத்தைக் காட்டும் செயல் அன்று;* ***விதி அன்று -*** *அறநூல்களில் விதிக்கப்பெற்ற விதிமுறைக்கு ஒத்ததும் அன்று;* ***மெய்ம்மையின் வாரம் அன்று -*** *உண்மையைச் சார்ந்ததும் அன்று;* ***நின் மண்ணினுக்கு -*** *உனக்கு உரிய இப்பூமிக்க;* ***என் உடல் பாரம் அன்று-*** *என் உடல், சுமையும் அன்று;* ***பகை அன்று -*** *உனக்கு நான் பகைவனும்அல்லன்;* ***பண்பு அழிந்து -*** *(அங்ஙனமிருக்க), நீ உன் பெருமைக் குணம்நீங்கப் பெற்று;* ***ஈரம் இன்றி -*** *இரக்கம் இல்லாமல்;* ***இது செய்தவாறு என் -*** *இச்செயலைச் செய்தது எதற்காக?*

*இராமன் செய்த செயல் வீரத்திற்கோ, அறநெறி விதிக்கோ, உண்மையைச் சார்ந்த நிலைக்கோ பொருந்துவதன்று என வாலி பேசினான். நிலத்தின் சுமை குறையக் கொடியோரைக் கொல்வது அரச மரபு. ஆனால், தான் கொடியவன் அல்லன் ஆதலால் தன்னைக் கொன்றொழிக்க வேண்டியதில்லை என்பான் 'என்*

*உடல் பாரம் அன்று' என்றான். நின் மண்ணினக்கு - இராமன் தசரதனின் முதல் மைந்தனாதலின் நாடு அவனுக்கு உரியதாகிறது. இட்சுவாகு குல மன்னர்க்குப் பூமி முழுவதும் உரியது என்பர். "மன்னற்குப் பூமியும் அயோத்தி மாநகரம் போலுமே" (174) எனத் தசரதன் சிறப்பிக்கப் பெற்றமை காண்க. பண்பு - 'பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்' (கலி - 133) என்றமை நோக்குக. 92*

*4027. 'இருமை நோக்கி நின்று,*
*யாவர்க்கும் ஒக்கின்ற*
*அருமை ஆற்றல் அன்றோ,*
*அறம் காக்கின்ற*
*பெருமை என்பது? இது என்?*
*பிழை பேணல் விட்டு,*
*ஒருமை நோக்கி*
*ஒருவற்கு உதவலோ?*

***இருமை நோக்கி நின்று -*** *ஒரு பக்கத்தினர் செய்த செயல்களையும் வேறுபாடின்றி எண்ணிப் பார்த்து நடுநிலையில் நின்று;* ***யாவர்க்கும் ஒக்கின்ற -*** *உலகில் யார்க்கும் ஒத்த வகையில்;* ***அருமை ஆற்றல் அன்றோ -*** *அருமையான செயலைச் செய்வது அன்றோ. . .* ***அறம் காக்கின்ற பெருமை என்பது -*** *அறத்தைப் பாதுகாக்கின்ற பெருமைக்குரி யது என்பது?* ***பிழை பேணல் விட்டு -*** *தவறு தன்னிடம் நிகழாத வண்ணம் காத்தலை*

*விடுத்து;* ***ஒருமை நோக்கி -*** *ஒருவர் பக்கக் கருத்தி னையே ஏற்று;* ***ஒருவற்கு உதவலோ -*** *ஒருவனுக்கே உதவிபுரிதல்?* ***இது என் -*** *இது என்ன நியாயம்?*

*மாறுபட்ட இருவர் செய்த நன்றும் தீதும் சீர்தூக்கிப் பார்த்து, எல்லோர்க்கும் நடுநிலையில் நின்று, ஒரு செயலைச் செய்வதே அறத்தைக் காக்கின்ற பெருமையாகும்; ஒரு பக்கமாக உதவி புரிதல் அப்பெருமையைத் தராது என்கிறான் வாலி.*

*இருமை நோக்கி - இம்மை, மறுமைப் பயன்களைக் கருதிப் பார்த்து எனவும் பொருள் கொள்வர். நடுநிலையில் இருந்து யாவரும் ஏற்கும் வகையில் முறை செய்தல் எளிதன்று என்பதால் 'அருமை' என்றார். அவ்வகை நடுவுநிலைமையின் சிறப்பைத் 'தகுதியென ஒன்றும் நன்றே பகுதியால் பாற்பட்டு ஒழுகப் பெறின்' (குறள் 111) என்று குறள் விளக்கியது. 'இருமையும் நோக்குறும் இயல்பினாற்கு இது பெருமையோ' எனத் தாரையிடம் முன்பு வாலி கூறியதை நினைவு கூர்க. (3966)*
*93*

***4028. 'செயலைச் செற்ற பகை***
***தெறுவான் தெரிந்து,***
***அயலைப பற்றித் துணை***
***அமைந்தாய் எனின்,***
***புயலைப் பற்றும் அப் பொங்கு***
***அரி போக்கி, ஓர்***
***முயலைப் பற்றுவது***
***என்ன முயற்சியோ?***

***செயலைச் செற்ற -*** *(உங்கள்) பாதுகாவலை அழித்த;* ***பகை -*** *பகைவனான இராவணனை;* ***தெறுவான் தெரிந்து*** *- அழிக்கும் பொருட்டு ஆராய்ந்து;* ***அயலைப் பற்றி -*** *வேறொருவனைச் (சுக்கிரீவனைச்) சார்ந்து;* ***துணை அமைந்தாய் எனின் -*** *துணைவனான அவனைச் சேர்த்துக் கொண்டாய் என்றால்;* ***புயலைப் பற்றும் -*** *(அச்செயல்) மேகம் போன்ற யானையைப் பிடித்துக் கொல்ல வல்ல;* ***அப்பொங்கு அரி போக்கி -*** *அத்தகைய சினந்து எழும் சிங்கத்தைத் துணையாக்கிக் கொள்வதை விட்டு;* ***ஓர் முயலைப் பற்றுவது -*** *ஒரு முயலைத் துணையாகக் கொள்வது;* ***என்ன முயற்சியோ -*** *என்ன முயற்சியாகும்?*

*செயலைச் செற்ற செயல் - காவலை அழித்து மாரீசனாகிய மாயமானைக் கொண்டு சீதையைக் கவர்ந்து சென்றது. பகை - இராவணன். அயல் - அயலான். சுக்கிரீவன். இராவணனை எளிதில் வெல்ல வல்ல தன்னைத் துணையாக்கிக் கொள்ளாது. ஆற்றலில் குறைந்த சுக்கிரீவனைத் துணைவனாகக் கொண்டது யானையை அழிக்க, அதனை எளிதில் வெல்ல வல்ல சினம் மிக்க சிங்கத்தைத் துணைக் கொள்வதை விடுத்து எளிய முயலைத் துணைக் கொள்வது போலப் பயனில்லாத முயற்சியாகும் என வாலி கருதினான். புயல் - உவமை ஆகுபெயர். புயலைப் பற்றும் அப்பொங்கு அரி - விசையுடன் எழுந்து வானளாவப் பாய்ந்து மேகத்தைப் பிடிக்கும் கோபத்தோடு கூடிய அப்படிப்பட்ட சிங்கம் என்றும் பொருள் கொள்வர். தெறுவான் - வான் ஈற்றுவினையெச்சம்.* *94*

***4029. 'கார் இயன்ற நிறத்த களங்கம் ஒன்று***
***ஊர் இயன்ற மதிக்கு உளதாம் என,***
***சூரியன் மரபுக்கும் ஒர் தொல் மறு,***
***ஆரியன் பிறந்து ஆக்கினையாம்அரோ!***

***ஊர் இயன்ற மதிக்கு -*** *(வானத்தில்) ஊர்ந்து செல்லுதலைப் பொருந்திய சந்திரனுக்கு;* ***கார் இயன்ற நிறுத்த -*** *கருமை பொருந்திய நிறத்தை உடைய;* ***களங்கம் ஒன்று -*** *களங்கம் ஒன்று;* ***உளதாம் என -*** *உள்ளது என்று எண்ணி;* ***சூரியன் மரபுக்கும் -*** *சூரியன் குலத்திற்கும்;* ***ஓர் தொல் மறு -*** *தொன்மையுடையதாய்த் தொடரும் ஒரு களங்கத்தை;* ***ஆரியன் பிறந்து -*** *பெருமைக்குரிய நீ பிறந்து;* ***ஆக்கினை ஆம் -*** *உண்டாக்கிவிட்டாய் போலும்.*

*சூரிய வமிசம், சந்திர வமிசம் எனச் சிறப்பித்துக் கூறப்படும் அரச குலங்கள் இரண்டனுள், சந்திர குல முதல்வனான சந்திரனுக்குக் களங்கம் இருப்பது கருதி, நீ சூரியனுக்கும் அவன் வழியில் உள்ளார்க்கும் ஒரு களங்கத்தை உண்டாக்கி விட்டாய் போலும் என்றான். மறுவில்லாததாகிய சூரிய குலம் இராமன் பிறந்ததால் களங்கத்தைப் பெற்றது என்பது கருத்தாகும். இதனால் ஒருவன் செய்த குற்*

*றம் அவன் குலத்து முன்னோரையும், வழி வருவோரையும் சாரும் என்பது உணர்த்தப்பட்டது.*

*ஊர் - முதனிலைத் தொழிற்பெயர் - 'ஊர்தரு குரங்கின் மாடே' (4022); வானூர் மதியம் (சிலப் - 1 - 50) என்பன போல. சூரியன் மரபுக்கும், உம்மை உயர்வு சிறப்பு. ஆரியன் - வஞ்சப்புகழ்ச்சியாக இகழ்ந்துரைத்தது. 95*

***4030. 'மற்று ஒருத்தன் வலிந்து அறைகூவ வந்து***
***உற்ற என்னை, ஒளித்து, உயிர் உண்ட நீ,***
***இற்றையில், பிறர்க்கும் இகல் ஏறு என,***
***நிற்றிபோலும், கிடந்த நிலத்துஅரோ!***

***மற்று ஒருத்தன் -*** *(நினக்கு உறவினன் அல்லாத) அயலான் ஒரு வனான சுக்கிரீவன்;* ***வலிந்து அறை கூவ -*** *வலிந்து வந்து என்னைப் போருக்கழைக்க;* ***வந்து உற்ற என்னை -*** *(அதனால்) அவனோடு போர் புரிய வந்த என்னை -* ***ஒளித்து உயிர் உண்ட நீ -*** *மறைந்திருந்து அம்பு செலுத்தி என் உயிரைக் கவர்ந்த நீ;* ***இற்றையில் -*** *இப்பொழுது;* ***கிடந்த நிலத்து -*** *(உயிர் நீங்கும் நிலையில் வீழ்ந்து) கிடக்கின்ற இப்போர்க் களத்தில்;* ***பிறர்க்கும் இகல் ஏறு என -*** *பிறர்க்கெல்லாம் வலிமை மிக்க ஆண் சிங்கம் போல;* ***நிற்றி போலும் -*** *நிற்கின்றாய் போலும்.*

*மற்றொருத்தன் - சுக்கிரீவன். துணையெனக் கொள்ளத் தகாத அயலான் என்பதால் 'மற்றொருத்தன்' எனக் கூறினான். தான் முற்பட்டுவந்து செய்த போர் அன்று; சுக்கிரீவன் வலிந்து வந்து அழைத்ததால் போரிட நேர்ந்தது என்பான் 'வலிந்து அறைகூவ வந்து உற்ற என்னை' என்றான். மறைந்திருந்து உயிரைக் கவர்ந்த செயலைச் செய்ததோடு வீரா பலர்க்கு மேலாக இகல் ஏறு என நின்றனையே என இழித்துரைத்தான். வஞ்சித்துக் கொலை செய்த இராமன், வாலியின் முன்னின்று*

*மறைவதற்குப் பதில், நாணமின்றி நின்றனன் என இராமனைக்கடிந்துரைத்தான்.*
*96*

## *4031. 'நூல் இயற்கையும், நும் குலத்து உந்தையர்*
## *போல் இயற்கையும், சீலமும், போற்றலை;*
## *வாலியைப் படுத்தாய்அலை; மன் அற*
## *வேலியைப் படுத்தாய் - விறல் வீரனே!*

***விறல் வீரனே -*** *வெற்றியை உடைய வீரனே!* ***நூல் இயற்கையும் -*** *அற நூல்களின் விதி முறைகளையும்;* ***நும் குலத்து உந்தையர் போல் -*** *உங்கள் குலத்து மூதாதையரைப் போன்றவர்களது;* ***இயற்கையும் -*** *இயல்பையும்;* ***சீலமும் -*** *நல்லொழுக்கத்தையும்;* ***போற்றலை -*** *போற்றாது விட்டாய்.* ***வாலியைப் படுத்தாய் அலை -*** *(அதனால்) நீ வாலியை அழித்தாய் அல்லை;* ***மன் அற வேலியை -*** *அரச தருமத்தின் வேலியையே;* ***படுத்தாய் -*** *அழித்திட்டாய்.*

*விறல் வீரனே என்றது இகழ்ச்சிக் குறிப்பு. நூல் இயற்கை மனு முதலிய அறநூல்களில் கூறப்பட்ட விதி முறைகள். உந்தையர்போல் இயற்கை குலத்து*

*மூதாதையர் கடைப்பிடித்த நெறிமுறைகளைக் கடைப்பிடிக்கும் இயல்பு. 'வாலியை அழித்து விட்டதாக எண்ணாதே. அரச நீதி என்ற வேலியையே அழித்துவிட்டாய்' என இராமனது தகாத செயலைச் சுட்டிக் காட்டினான. 'வாலியைப் படுத்தாயலை' என உண்மையை ஒழித்ததால் விலக்கணி எனப்படும். மன் அறம் - நிலைபெற்ற தருமம் எனினும் அமையும். நும் - உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. ஈற்றடிகள் இரண்டும் நயமிகு அடிகளாம்.* *97*

## *4032. 'தாரம் மற்றும் ஒருவன் கொள, தன் கையில்*
## *பார வெஞ் சிலை வீரம் பழுதுற,*
## *நேரும் அன்று, மறைந்து, நிராயுதன்*
## *மார்பின் எய்யவோ, வில் இகல் வல்லதே?'*

***தாரம் -*** *உன் மனைவியை;* ***மற்று ஒருவன் கொள -*** *வேறொருவன் கவர்ந்து கொள்ள;* ***தன்கையில் -*** *(அவனைக் கொல்லாமல், வேறு ஒருவனைக் கொல்லுதலால்) உன் கையில்;* ***பார வெஞ்சிலை -*** *(ஏந்திய) சுமையான கொடிய வில்லின்;* ***வீரம் பழுதுற -*** *வீரம் கேடுறும் படி;* ***வில் இகல் வல்லது -*** *வில்லைக் கொண்டு போர் செய்வதில் வல்லவனானது;* ***நேரும் அன்று -*** *வெளிப்படையாக நேரிலேயும் வராமல்;* ***மறைந்து -*** *மறைந்து நின்று;* ***நிராயுதன் மார்பின் எய்யவோ -*** *ஆயுதம் இல்லாதவன் மார்பில் எய்வதற்குத்தானோ?*

*மனைவியை வஞ்சனையால் கவர்ந்து சென்ற இராவணனைக் கொல்லாமல் விடுத்ததும் வீரத்திற்க இழுக்கு; அதனினும் ஆயுதமில்லாத ஒருவன் மார்பில் மறைந்திருந்து அம்பு தொடுப்பது பேரிழிவு தரும் என வாலி உரைத்தனன். பகைவனைக் கொல்லுதற்குப் பயன்படாமல் கையில் சுமையாக இருப்பது பற்றிப் 'பார வெஞ்சிலை' என்றான். கையில் வில்லை வெறுமனே வைத்துக் கொள்ளக் கூடாது என்று நிராயுதன் மார்பில் அம்பினை எய்தனையோ? இத்தகைய செயல் வீரத்திற்கு*

*இழுக்கு ஆதலின் 'வீரம் பழுதுற' என்றான். நிராயுதன் - ஆயுதம் இல்லாதவன். சுக்கிரீவனைத் தரையில் மோதுவதற்காக இரு கரங்களிலும் அவனைத் தூக்கிய நிலையில் இராமன் அம்பு எய்தான்; அப்போது வாலி நிராயுதனாக இருந்தான் என்பதை (3999) நினைவு கூர்தல் வேண்டும். போரில் ஆயுதமில்லாதவனைப் பொருதல் அறம் அன்று என்பதைப் 'படையிட்டார். . . என்றும் அணுகாரே செவ்வகைச் சேவகர் சென்று' (சிறுபஞ்ச மூலம் - 41) என்றமை காண்க. இது பற்றியே 'இவனைக் கொன்றல் உன்னிலன், 'வெறுங்கை நின்றான்' எனக் கொள்ளா' (7266) என வருதல் காண்க. 98*

***4033. என்று, தானும் எயிறு பொடிபடத்***
***தின்று, காந்தி, விழிவழித் தீ உக,***
***அன்று அவ் வாலி, அனையன சொல்லினான்.***
***நின்ற வீரன், இனைய நிகழ்த்தினான்:***

***என்று -*** *என்று இவ்வாறு;* ***எயிறு பொடிபடத்தின்று -*** *சினத்தால் பற்கள் பொடியாகும்படிக் கடித்து;* ***காந்தி -*** *சினந்து;* ***விழி வழித் தீ உக -*** *கண்களின் வழியாகத் தீப்பொறி சிதற;* ***அன்று அவ் வாலி தானும் -*** *அப்பொழுது அந்த வாலியானவன்;* ***அனையன சொல்லி***

***னான் -*** *(மேற்கூறிய) அத்தன்மையனவான சொற்களைச் சொன்னான்;* ***நின்ற வீரன் -*** *(அவற்றைக் கேட்டு) எதிரில் நின்றிருந்த இராமன்;* ***இனைய நிகழ்த்தினான் -*** *இத்தகைய வார்த்தைகளைப் (பின்வருமாறு) சொல்லலானான்.*

*எயிறு பொடிபடத் தின்று, காந்தி, விழி வழித்தீ உக என்பது வாலியின் சினத்தை உணர்த்தும் மெய்ப்பாடுகளாகும். வீரன் என்ற கவிக் கூற்றால் இராமன் வீரத்துக்கு இழுக்கு இல்லை என்பதை நுட்பமாகச்சுட்டினார். 99*

*இராமன் தன் செய்கையில் தவறில்லை என மொழிதல்*

***4034. ' "பிலம் புக்காய் நெடு***
***நாள் பெயராய்" எனப்***
***புலம்புற்று, உன்***
***வழிப் போதலுற்றான்தனை,***
***குலம்புக்கு ஆன்ற முதியர்,***
***"குறிக் கொள் நீ -***
***அலம் பொன் தாரவனே! -***
***அரசு" என்றலும்,***

***பிலம்புக்காய் -*** *(முன்னாளில் மாயாவி என்னும் அரக்கனைத் தொடர்ந்து) பாதாள வழியினுள்ளே சென்ற நீ;* ***நெடுநாள் பெயராய் -*** *நெடுங்காலம் மீண்டு வாராமலே தங்கிவிட்டாய்;* ***எனப் புலம்புற்று -*** *என்று வருத்தமடைந்து;* ***உன் வழிப் போதலுற்றான் தனை -*** *நீ சென்ற பாதாள வழியிலேயே உன்னைத் தொடர்ந்து தேடிச் செல்ல முற்பட்ட உன் தம்பியாகிய சக்கிரீவனை (நோக்கி);* ***குலம்புக்கு ஆன்ற முதியர் -*** *(உங்கள்) குலத்தில் தோன்றி அறிவால் நிறைந்த பெரியோர்கள்;* ***அலம்பொன் தாரவனே -*** *அசைகின்ற*

*பொன் மாலையை அணிந்தவனே!* ***குறிக்கொள் -*** *(நாங்கள்) சொல்வதை ஊன்றிக் கேட்பாயாக;* ***நீ அரசு -*** *நீயே எமக்கு அரசனாவாய்;* ***என்றலும் -*** *என்று கூறிய அளவில். . . .*

*இதுவும் அடுத்துவரும் இரு பாடல்களும் குளகமாய் இயைந்து ஒருவினை கொண்டு முடியும். முதலில் சுக்கிரீவனிடத்துக் குற்றம் இல்லாமையினையும், வாலியிடத்துக் குற்றம் இருத்தலையும் இராமன் சுட்டிக் காட்டலானான். குலம் புக்கு ஆன்ற முதியர் - குலத்தாலும் அறிவாலும் சிறந்த பெரியோர். நெடு நாள் - இருபத்தெட்டு மாதம். வாலியைக் காணாது அவனைத் தேடிச் செல்ல முற்பட்ட சுக்கிரீவனை முதியவர்கள்தான் 'நீயும் பிலத்துவழியில் சென்று விட்டால் என்ன ஆவது? எங்களைக் காப்பாற்றுவார் யார்? நீயாவது ஆட்சி ஏற்ற எம்மைக் காப்பாய்' என வேண்டித் தடுத்து நிறுத்தினர் என்பதாம். சுக்கிரீவன் இறக்கத் துணிந்தமையை மனத்தில் கொண்டு இங்ஙனம் தடுத்து நிறுத்தினர் என்க. அலம்பு என்பது 'அலம்' எனக் குறைந்துவந்தது. 100*

***4035. ' "வானம் ஆள என்***
***தம்முனை வைத்தவன்***
***தானும் மாள, கிளையும்***
***இறத் தடிந்து,***
***யானும் மாள்வென்; இருந்து***
***அரசு ஆள்கிலென்;***
***ஊனம் ஆன உரை***
***பகர்ந்தீர்" என,***

***என் தம்முனை -*** *(அதைக் கேட்ட சுக்கிரீவன்) என் தமையனான வாலியை;* ***வானம் ஆள வைத்தவன் -*** *விண்ணுலகை ஆளும்படி செய்தவனாகிய மாயாவி;* ***தானும் மாள -*** *தானும் இறந்தொழியும்படியும்;* ***சினையும் இற -*** *(அவன்) சுற்றத்தவர்களும் அழியும்படியும்;* ***தடிந்து -*** *கொன்று;* ***யானும் மாள்வேன் -*** *நானும் இறப்பேன்;* ***இருந்து அரசு ஆள்கிலேன் -*** *(என் தமையன் இறந்த பின்னர் நான் மட்டும்) உயிருடன் இருந்து அரசாட்சி செய்யமாட்டேன்;* ***ஊனம் ஆன உரை -*** *(எனக்குப்) பழி தரும் சொற்களை;* ***பகர்ந்தீர் என -*** *சொன்னீர்கள் என்று கூற. . . .*

*அப்பிலத்தினுள்ளே மாயாவி வாலியைக் கொன்று விட்டான் எனத் தவறாகக் கருதியதால் 'என் தம் முனை வானமாள வைத்தவன்' என்றான். வீரர்கள் புகுவது விண்ணுலகு ஆதலின் 'வானம் ஆள' என்றான். தன் தமையனைக் கொன்றவனைச் சுற்றத்தோடு அழித்துத் தானும் இறப்பதே தனது கருத்து அன்றிப் பகைவனைக் கொல்லும் திறமின்றிப் பழிபயக்கும் இவ்வுடம்பினைத் தாங்கிக் கொண்டு ஆட்சி புரிவதன்று என்பதை 'இருந்து அரசு ஆள்கிலேன்' என்றான். வாலியைக் காணாது வருந்திய சுக்கிரீவனை அரசு ஏற்குமாறு வேண்டுதலும், சுக்கிரீவன் மாயாவியைத் தேடிக் கொன்று தானும் இறப்பதாகக் கூறுதலுமாகிய செய்திகள் 3838, 39, 40 பாடல்களாலும் கூறப் பெற்றமை காண்க. 101*

***4036. 'பற்றி, ஆன்ற படைத்***
***தலை வீரரும்,***

***முற்று உணர்ந்த***
***முதியரும், முன்பரும்,***
***''எற்றும் நும் அரசு***
***எய்துவையாம்'' என,***
***கொற்ற நன் முடி கொண்டது,***
***இக் கோது இலான்.***

***ஆன்ற படைத் தலை வீரரும் -*** *(அது கேட்டு) ஆற்றல் நிறைந்த படைத்தலைவர்களாகிய வீரர்களும்;* ***முற்று உணர்ந்த முதியரும் -*** *(அரசியல் நெறிகளை) முழுவதும் உணர்ந்த அமைச்சர் போன்ற அனுபவம் மிக்கவர்களும்;* ***முன்பரும் -*** *(மற்றுமுள்ள) பெரியோர்களும்;*

***எற்றும் -*** *''(நிகழ்ந்த செயல்) எத்தன்மைத்து ஆயினும்;* ***நும் அரசு எய் துவையாம் -*** *உங்கட்குரிய அரசாட்சியை நீ அடைவாயாக'';* ***என -*** *என்று கூறி வற்புறுத்த;* ***இக்கோது இலான் -*** *(அதனால்) குற்றமற்ற இந்தச் சுக்கிரீவன்;* ***கொற்ற நன்முடி கொண்டது -*** *வெற்றிக்கு அறிகுறியான மணிமுடியைச் சூட்டிக் கொள்ள நேர்ந்தது.*

*'நும்மரசை நீயே பெறுக' எனப் படைத்தலைவர் முதலியோர் வற்புறுத்தலே சுக்கிரீவன் அரசை ஏற்கவேண்டி வந்ததால் அவன்மீது குற்றமில்லை என இராமன் உணர்த்தினான். எற்றம் - வாலி, மாயாவி ஆகியோரின் செய்தி எவ்வாறாயினும் என்பது பொருள். நும் அரசு - வானரக் குலத்திற்குரிய அரசாட்சி. 'அரிகள் ஆணையால் கொடுத்தது உண்டு; இவன் கொண்டனன் கொலாம்?' (3841) என முன்னர்க் கூறியதும் காண்க. கொண்டது - தொழிற்பெயர் வினைமுற்றின் தன்மையடைந்தது. 'கோது இலான்' என இராமன் சுக்கிரீவனைக் குறித்தல் காண்க. 102*

***4037. 'வந்த உன்னை வணங்கி மகிழ்ந்தனன்;***
***''எந்தை! என்கண், இனத்தவர் ஆற்றலின்,***
***தந்தது உன் அரச'' என்ற தரிக்கிலான்***
***முந்தை உற்றது சொல்ல, முனிந்து நீ,***

***வந்த உன்னை -*** *(மாயாவியைக் கொன்று) மீண்டு வந்த உன்னைக் கண்டு;* ***வணங்கி மகிழ்ந்தனன் -*** *வணங்கிப் பெரிதும் மகிழ்ந்தவனாய்;* ***எந்தை -*** *எந்தையே;* ***என்கண் இனத்தவர் -*** *என்னிடத்தில் (நமது) இனத்தவர்களான வானரர்கள்;* ***ஆற்றலின் தந்தது -*** *வலியக் கொடுத்தது;* ***உன் அரசு -*** *இந்த உன்னடைய அரசாட்சி;* ***என்று -*** *என்று தொடங்கி;* ***தரக்கிலான் -*** *(தான் அவ்வரசினைத்) தாங்கியிருக்கப் பொறாதவனாய்;* ***முந்தை உற்றது சொல்ல -*** *முன்பு நடந்த நிகழ்ச்சிகளை (உனக்கு) எடுத்துக் கூறவும்;* ***நீ முனிந்து -*** *நீ (அதனை ஏற்றுக் கொள்ளாது) சினம் கொண்டு . . . .*

*இப்பாடலில் வரும் ''முனிந்து நீ'' என்ற தொடர் அடுத்த பாடலில் முதலில் வரும் 'கொல்லல் உற்றனை' எனும் வினையைக் கொண்டு முடியும். சுக்கிரீவனின் தூய இயல்பு இங்கும் வற்புறுத்தப் பட்டுள்ளது. தமையன் தந்தைக்கு ஒப்பானவன் என்பதால் 'எந்தை' என அழைத்தான் சுக்கிரீவன். இஃது அண்மை விளியாதலின் இயல்பாய் நின்றது. 'உனக்குரிய அரசை நான் விரும்பி ஏற்கவில்லை. வானரர்கள் வற்புறுத்தியதால் ஏற்றுக் கொண்ட ஆட்சி இது. இவ்வரசு உன்னுடையதே 'எனச்*

*சுக்கிரீவன் தான் அரசேற்ற சூழ்நிலையை விளக்கியும் வாலி அதனை ஏற்காது சினங்கொண்டது குற்றமாகும் என இராமன் வாலிக்கு எடுத்துரைத்தான் என்பதாம். ஆற்றலின் தந்தது - தமக்குள்ள ஆற்றலால் வற்புறுத்திக் கொடுத்தது. 103*

***4038. 'கொல்லல் உற்றனை, உம்பியை;***
***கோது அவற்கு***
***இல்லை என்பது***
***உணர்ந்தும், இரங்கலை;***
***''அல்லல் செய்யல்; உனக்கு***
***அபயம்; பிழை***
***புல்லல்'' என்னவும்,***
***புல்லலை, பொங்கினாய்.***

***அவற்கு -*** *அந்தச் சுக்கிரீவனிடத்து;* ***கோது இல்லை என்பது உணர்ந்தும் -*** *குற்றம் இல்லை என்பதை உணர்ந்த பின்னரும்;* ***உம்பியைக் கொல்லல் உற்றனை -*** *உன் தம்பியை நீயே கொல்ல முற்பட்டாய்;* ***இரங்கலை -*** *அவன் மீது இரக்கமும் காட்ட வில்லை.* ***அல்லல் செய்யல் -*** *(அவன் உன்னிடம்) 'எனக்குத் துன்பம் செய்ய வேண்டாம்;* ***உனக்கு அபயம்-*** *(நான்) உனக்கு அடைக்கலமானேன்;* ***பிழை புல்லல் -*** *என்மேல் குற்றத்தைச் சுமத்தாதே';* ***என்னவும் -*** *என்று பலவாறு கூறவும்;* ***புல்லலை பொங்கினாய் -*** *அவனை ஏற்றுக் கொள்ளாத சினம் கொண்டாய்.*

*தவறு தம்பியிடம் இல்லை என்பதறிந்தும் அவன் மீது இரக்கம் காட்டாது கொல்ல முற்பட்டது உடன் பிறந்தானை ஆதரிக்கும் கடப்பாட்டிலிருந்து தவறிய நிலையைக் காட்டுகிறது. 'என்னைக் காப்பாய்' என இரந்த போதும் பொறுமையைக் காட்ட வேண்டிய வாலி கோபமுற்றான். தவறு செய்யாதவனைத் தண்டிக்க முற்பட்டதும், அபயம் வேண்டியவன் மீது இரககம் காட்டாமல் சினம் கொண்டதும் வாலி செய்த குற்றங்கள் என இராமன் உணர்த்தினான். இஃது 'என்பால் எப் பிழை கண்டாய்' (4021) என்ற வாலியின் வினாவிற்கு விடையாகும். அவற்கு - உருபு மயக்கம்; செய்யல் - எதிர்மறை வியங்கோள் வினை முற்று. 104*

***4039. 'ஊற்றம் உற்று உடையான்,***
***''உனக்கு ஆர் அமர்***
***தோற்றும்'' என்று, தொழுது***
***உயர் கையனை,***
***''கூற்றம் உண்ணக் கொடுப்பேன்''***
***என்று எண்ணினாய்;***
***நால் திசைக்கும்***
***புறத்தையும் நண்ணினான்.***

***ஊற்றம் உற்று உடையான் -*** *வலிமை முழுவதும் நிரம்பப் பெற்றுடையான் ஆயினும்;* ***உனக்கு ஆர் அமர் தோற்றும் -*** *(உன்னோடு போரிடல் தகுதியன்று எனக் கருதி) 'வெல்லுதற்கரிய போரில் உனக்குத் தோற்றோம்' (யாம்);* ***என்று தொழுது உயர் கையனை -*** *என்று கூறி (உன்னை) வணங்கி உயர்த்திக் கூப்பிய கைகளையுடைய*

*சுக்கிரீவனை;* ***கூற்றம் உண்ணக் கொடுப்பென் -*** *'யமன் உண்ணும்படிக் கொடுப்பேன்';* ***என்று எண்ணினாய் -*** *என்று நினைத்தாய்;* ***நால் திசைக்கும் -*** *(அதனால் அவன் அஞ்சி) நான்கு திசைகளின்;* ***புறத்தையும் நண்ணினான் -*** *கடை எல்லைகளையும் விரைந்து அடைபவனானான்.*

*தோற்றும் - தன்னைச் சார்ந்தாரையும் உளப்படுத்திப் பன்மையால் கூறினான். உயர்கை - தலைமேல் உயர்த்திக் கூப்பிய கை; கூற்றம் - தொழிலாகு பெயராய் யமனைக் குறித்தது. எதிர்க்கும் வலிமையற்றோர், பிழைக்க எண்ணின் கை உயர்த்தித் தொழுதல் மரபாகும். கை கூப்பித் தொழுத தம்பியைக் கூற்றுவனுக்குக் கொடுக்க முற்பட்ட வாலியின் செயல் போர்நெறியில் பழிதரும் இழிசெயலாகும் என இராமன் எடுத்துரைத்தான் என்க. "அழிகுநர் புறக்கொடை அயில் வாளோச்சாக் கழிதறுகண்மை காதலித்து உரைத்தன்று" (பு. வெ. மாலை. வஞ்சி. தழிஞ்சி.20) என்ற போர் அறம் வாலியிடம் இல்லையே என்பது குறிப்பு. "பேராண்மை என்பதறுகண் ஒன்று உற்றக்கால் ஊராண்மை மற்றதன் எஃகு" (குறள் - 773) என்ற குறளும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.* *105*

***4040. 'அன்ன தன்மை***
***அறிந்தும், அருளலை;***
***பின்னவன் இவன்***
***என்பதும் பேணலை;***
***வன்னிதான் இடு***
***சாப வரம்புடைப்***
***பொன் மலைக்கு அவன்***
***நண்ணலின், போகலை;***

***அன்ன தன்மை அறிந்தும் -*** *அங்ஙனம் அவன் அஞ்சி ஓடி ஒளிந்து கொண்ட நிலையை அறிந்தும்;* ***அருளலை -*** *நீ அவன் மீது அருள் காட்டவில்லை.* ***இவன் பின்னவன் என்பது பேணலை -*** *இவன் (உனது) தம்பி என்பதையும் எண்ணிப் பேணாது விட்டாய்;* ***வன்னி தான் இடு -*** *மதங்க முனிவர் இட்ட;* ***சாப வரம்புடை -*** *சாபமாகிய தடை எல்லையை உடைய;* ***பொன் மலைக்கு -*** *அழகிய ருசிய முகமலைக்கு;* ***அவன் நண்ணலின் -*** *அச்சுக்கிரீவன் சென்ற சேர்ந்ததால்;* ***போகலை -*** *நீ அங்குச் செல்ல வில்லை. (அதனால் அவன் உயிர் பிழைத்தான் என்பதாம்).*

*அஞ்சி ஓடியவன்மீது அருள் காட்டாமையும், தம்பி என்ற உறவு கருதாது அன்பில்லாமல் நடந்து கொண்டதும் வாலிபால் காணப்படும் குற்றங்களாம் என இராமன் எடுத்துக் காட்டினான். சாபத்திற்கு அஞ்சி, அந்தச் சுக்கிரீவன் உள்ள இடத்திற்கு வாலி செல்லாததால் சுக்கிரீவன் உயிர்பிழைத்திருந்தான் என்பதையும் உணர்த்தினான். வன்னிசாபம் - 'இங்கு வாலி வந்தால் தலை வெடித்து இறப்பானாக' என்பது. 'இந்த வெற்பின் வந்து இவன் இருந்தனன் - முந்தை உற்றது ஓர் சாபம் உண்மையால்' (3851) என்றது காண்க. ஈண்டுப் பொன்மலை என்றது 'ருசியமுக பர்வதம்' என்னும் அழகிய மலையனை. பொன் - அழகு. அருளலை, பேணலை, போகலை என்பன முன்னிலை ஒருமைவினைமுற்றுக்கள்.* *106*

***4041. 'ஈரம் ஆவதும், இற் பிறப்பு ஆவதும்,
வீரம் ஆவதும், கல்வியின் மெய்ந் நெறி,
வாரம் ஆவதும், மற்று ஒருவன் புணர்
தாரம் ஆவதைத் தாங்கும் தருக்கு அதோ?***

***ஈரம் ஆவதும் -*** *அன்பின் செயல் ஆவதும்;* ***இற்பிறப்பு ஆவதும் -*** *நல்ல குலத்தில் பிறந்ததன் பயன் ஆவதும்;* ***வீரம் ஆவதும் -*** *வீரத்தன்மை ஆவதும்;* ***கல்வியின் மெய்ந்நெறி -*** *கல்வி கற்று உணர்ந்த உண்மை நெறியில்;* ***வாரம் ஆவதும் -*** *மேன்மை அடைவதும்;* ***மற்று ஒருவன் புணர்தாரம் ஆவதை -*** *மற்றொருவன் மணந்த மனைவியை;* ***தாங்கும் தருக்கு அதோ -*** *(அவளது கற்பிற்கு இழுக்கு வராதவாறு) மதித்துக் காக்கும் பெருமையே அன்றோ?*

*வாலி பிறன்மனை விரும்பிய பெருங்குற்றம் இங்குச் சுட்டப்படுகிறது. எல்லா நல்ல குணங்களையும் அழிக்கும் பெருங்குற்றமாக இது கருதப்படுகிறது. "பிறர்மனை நோக்குவேமை உறவு எனப் பெறுதி போலாம்" (7405) என்ற கும்பகர்ணன் கூற்றும், 'என்னொருவன் ஏதில் மனையாளை நோக்கு' (நாலடி.86) என்றதும் பிறர்மனைவியை நோக்குதலே குற்றம் என உணர்த்தல் காணக். 'பிறன் கடை நின்றாரின் பேதையார் இல்" (குறள். 142) 'பிறன்மனை நோக்காத பேராண்மை' (குறள். 148) என்றார் வள்ளுவர். தாரம் என்பது உயர்திணைப் பொருள் உணர்த்தும் அஃறிணைச் சொல்லாதலால், 'தாரம் ஆவது' எனப்பட்டது. அன்பு, நற்குடிப்பிறப்பு, வீரம், கல்வி, மேன்மை ஆகிய எல்லா நலங்களுக்கும் பெருமை சேர்ப்பது பிறன்மனை மதிக்கும் பண்பே என இராமன் வாலிக்கு அறிவுறுத்தினான் என்க. 'வீரம் அன்று' (4026) என வாலி கூறிய குற்றச்சாட்டிற்கு 'வீரமாவது இது' என இப்பாடலில் இராமன் உணர்த்தினான்.
107*

***4042. 'மறம் திறம்பல், "வலியம்"
எனா, மனம்
புறம் திறம்ப
எளியவர்ப் பொங்குதல்;
அறம் திறம்பல், அருங்
கடி மங்கையர்
திறம் திறம்பல்; - தெளிவு
உடையோர்க்கு எலாம்.***

***தெளிவு உடையோர்க்கு எலாம் -*** *தெளிந்த நல்லறிவினையுடைய பெரியோர்க்கெல்லாம்;* ***வலியம் எனா -*** *யாம் வலிமையுடையோம என்று கருதி;* ***மனம் புறம் திறம்ப -*** *மனம் அறத்திற்கு மாறான வழியில் சென்று;* ***எளியவர்ப் பொங்குதல் -*** *எளியவர் மீது சினம் கொள்ளுதல்;* ***மறம் திறம்பல் -*** *வீரத்தினின்று தவறுதலாகும்.* ***அருங்கடி மங்கையர் -*** *அரிய பாதுகாவலையுடைய மகளிரிடம்;* ***திறம் திறம் பல் -*** *கற்பு நிலைக்கு மாறாக நடந்து கொள்ளுதல்;* ***அறம் திறம்பல் -*** *அறநெறியிலிருந்து தவறுதலாகும்.*

*எளியவர் மீது சினம் கொள்ளாமையே உண்மையான் மறம்; மகளிரிடம் தவறாக நடந்து கொள்ளாமை அறம் என உணர்த்தப்பட்டது. தப்பியோடிய தம்பியைத்*

*துரத்திச் சென்று கொல்ல முயன்றதனாலும், அவன் மனைவியைக் கவர்ந்து கொண்டதாலும் தெளிவுடையோர் வெறுக்கத்தக்க மறம் திறம்பலும் அறம் திறம்பலுமாகிய குற்றங்களை வாலி செய்தான் என இராமன் உணர்த்தினான் என்க. (மனம்) புறம் திறம்ப மறம் திறம்பல், திறம் திறம்பல் அறம் திறம்பல் என அமைத்த தொடர் அமைப்புநயமிக்கதாகும். 108*

***4043. 'தருமம் இன்னது எனும்***
***தகைத் தன்மையும்,***
***இருமையும் தெரிந்து,***
***எண்ணலை; எண்ணினால்,***
***அருமை உம்பிதன் ஆர்***
***உயிர்த் தேவியை,***
***பெருமை நீங்கினை,***
***எய்தப் பெறுதியோ?***

***தருமம் இன்னது எனும் -** அறம் இத்தன்மையது என்று சொல்லப் பெறும்; **தகைத் தன்மையும் -** தகுதியையும்; **இருமையும் -** இம்மை, மறுமைப் பயன்களையும்; **தெரிந்து எண்ணலை -** ஆராய்ந்து எண்ணினாய் அல்லை. **எண்ணினால் -** நீ அவ்வாறு எண்ணியிருந்தால்; **அருமை உம்பிதன் -** பெறுதற்கரிய உன் தம்பியின்; **ஆர் உயிர்த் தேவியை -** அரிய உயிர் போன்ற மனைவியை; **பெருமை நீங்கினை -** உன் பெருமை நீங்கியவனாய்; **எய்தப் பெறுதியோ -** அடையப் பெறுவாயோ?*

*தருமத்தின் தகுதியினையும், இருமைப் பயன்களையும் எண்ணிப்பாராது அரிய தம்பியின் மனைவியைக் கவர்ந்தது பெருமைக்குரிய செயலன்று என்று வாலிக்கு இராமன் உணர்த்தினான். இருமை - இம்மையின் புகழும் மறுமையில் வீடுபேறும். பிறன் மனை நயத்தலாகிய தீய செயல் செய்கையால் இம்மையில் பழியும் மறுமையில் நரகமும் கிடைக்கும் என்பது உணர்த்தப்பட்டது. சுக்கிரீவனின் அருமையை உணர்த்த 'அருமை உம்பி' என்றான். 'அறம், புகழ், கேண்மை, பெருமை இந்நான்கும் பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா' (நாலடி - 82), பகை, பாவம், அச்சம், பழியென நான்கும் இகவாவாம் இல்லிறப்பான்கண்'' (குறள் - 146) என்றமையால் பிறன்மனை விழைவான் இழிவு கூறப்பெற்றமைகாண்க. 109*

***4044. 'ஆதலானும், அவன் எனக்கு ஆர் உயிர்க்***
***காதலான் எனலானும், நிற் கட்டனென்;***
***ஏதிலாரும், எளியர் என்றால், அவர்***
***தீது தீர்ப்பது என் சிந்தைக் கருத்துஅரோ.***

***ஆதலானும் -** (நீ இவ்வாறெல்லாம் செய்தாய்) ஆதலாலும்; **அவன் எனக்கு -** அந்தச் சுக்கிரீவன் எனக்கு; **ஆருயிர்க் காதலான் எனலானும் -** அரிய உயிர் போன்ற நண்பன் ஆனதாலும்; **நின் கட்டனென் -** உன் உயிரைப் பறித்தேன். **ஏதிலாரும் -** அயலாராயினும்;*

***எளியர் என்றால் -*** *(தீயோரால் துன்புறுத்தப்படும்) எளிய நிலையினர் என்றால்;* ***அவர் தீது தீர்ப்பது -*** *அவர்களது துன்பத்தைப் போக்குவது;* ***என் சிந்தைக் கருத்து -*** *என்னுடைய உள்ளக் கருத்தாகும்.*

*ஆதலான் என்றது முன் கூறியவற்றைக் குறித்தது. வாலி பெரும்பிழை செய்தமையாலும், சுக்கிரீவன் தன் நண்பன் ஆனதாலும், எளியோரைக் காப்பதைத் தான் கொள்கையாகக் கொண்டதாலும் சுக்கிரீவனைக் காக்க வாலியைக் கொல்ல வேண்டியதாயிற்று என்று இராமன் கூறினான். நிற் கட்டனென் - களை பறிப்பது போலப் பறித்ததைக் குறிக்கும். வாலி அறம் வளராமல் தடுக்கும் களையாக இருந்தமை புலப்படுத்தப் பெற்றது. நிற்கட்டனென் - இரண்டாம் வேற்றுமைத் தொகை.*

*'பிலம்புக்காய்' என்பது முதல், 'ஆதலானும்' என்னும் இப்பாடல் வரையுள்ள பதினொரு பாடல்களும், இராமன் தான் வாலியைக் கொன்ற செயல் அறத்தொடு பொருந்தியதே என்பதை வாலிக்கு உணர்த்தும் வகையில் அமைந்தனவாகும்.*
*110*

*வாலியின் எதிர்வாதம்*

***4045. 'பிழைத்த தன்மை இது' எனப் பேர் எழில்***
***தழைத்த வீரன் உரைசெய, தக்கிலாது***
***இழைத்த வாலி, 'இயல்பு அல, இத் துணை;***
***விழைத் திறம், தொழில்' என்ன விளம்புவான்:***

***பிழைத்த தன்மை இது என -*** *'(நீ) தவறு செய்த விதம் இது' என்று;* ***பேர்எழில் தழைத்த வீரன் -*** *மிக்க அழகு நிரம்பிய வீரனாகிய இராமன்;* ***உரை செய -*** *வாலிக்கு எடுத்துரைக்க;* ***தக்கிலாது இழைத்த வாலி -*** *தகாத செயலைச் செய்த வாலி;* ***இத்துணை -*** *(நீ கூறிய) இவ்வளவு நீதிகளும்;* ***இயல்பு அல -*** *வானங்களான எமக்குப் பொருந்துவன அல்ல;* ***விழைத்திறம் தொழில் -*** *விரும்பியவாறு தொழில் செய்வதே (எமக்கு உரியது);* ***என்ன -*** *என்று கூறி;* ***விளம்புவான் -*** *மேலும் சொல்பவனானான்.*

*பேரெழில் தழைத்தல் - செழித்து விளங்கும் பேரழகு. பேரெழில் தழைத்த வீரன் என்றது இராமனை. 'மானிடறக எண்ணுங்கால், இவ் இலக்கணம் எய்திட ஒண்ணுமோ (1088) என்றமை காண்க. தக்கிலாது - வினையாலணையும் பெயர். இயல்பல இத்துணை விழைத்திறம் என்பதற்கு - தகுதியில்லாதவனவாக நீ கூறிய இவ்வளவும் நாங்கள் விரும்பிச் செய்யத்தக்க தொழில்களாகும் எனவும் பொருள் கொள்வர். வாலி தன்மீது கூறப்பட்ட குற்றங்களை மறுக்க முயல்வதை இங்குக்காணலாம். 111*

***4046. 'ஐய! நுங்கள் அருங்***
***குலக் கற்பின், அப்***
***பொய் இல் மங்கையர்க்கு***
***ஏய்ந்த புணர்ச்சி போல்***
***செய்திலன், எமைத் தே***

***மலர் மேலவன்;***
***எய்தின் எய்தியது***
***ஆக, இயற்றினான்.***

***ஐய -*** *தலைவனே!* ***நுங்கள் அருங்குலக் கற்பின் -*** *உங்கள் அரிய மனித குலத்திற்கு ஏற்ற கற்பின் வழிப்பட்ட;* ***அப்பொய் இல் மங்கையர்க்கு -*** *அந்தப் பொய்ம்மை இல்லாத மகளிர்க்கு;* ***ஏய்ந்த புணர்ச்சி போல -*** *பொருந்திய திருமண முறையிலான சேர்க்கை போல;* ***எமை -*** *எங்களுக்கு;* ***தே மலர் மேலவன் செய்திலன் -*** *தேன் பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகன் அமைந்திலன்;* ***எய்தின் எய்தியது ஆக -*** *நேர்ந்தபோது நுகர்வது என்பதாக;* ***இயற்றினான் -*** *(எங்களைப்) படைத்துவிட்டான்.*

*கருத்தொருமித்து வாழும் கற்பு நிலை மனித இனமே கடைப்பிடிக்கும் அருமையுடைத்து ஆதலின் 'அருங்குலக் கற்பின்' என்றான். நுங்கள் குலம் என்பது மனித இனத்தை. பொய்யில் மங்கையர் - தம் ஒழுக்கத்தில் தவறாத மங்கையர். மனித இனத்திற்குரிய கற்பு நெறியைக் கடைப்பிடிக்கும் வகையில் விலங்கினமாகிய வானங்களை இறைவன் படைக்கவில்லை என்பானாய், 'தே மலர் மேலவன் செய்திலன்' என்றான். தே மலர். தெய்வத்தன்மை பொருந்திய மலர் எனினும் அமையும். திருமணத்தால் கொள்ளும் உறவு முறை உயர்திணைப் பகுப்பினராய மனிதர்க்குரியதன்றி அஃறிணைப் பகுப்பினராய குரங்கினத்தார்க்குப் பொருந்தாது என வாலி இராமனுக்கு உரைத்தான்என்க.* *112*

***4047. 'மணமும் இல்லை, மறை***
***நெறி வந்தன;***
***குணமும் இல்லை, குல***
***முதற்க ஒத்தன; -***
***உணர்வு சென்றுழிச் செல்லும்***
***ஒழுக்கு அலால் -***
***நிணமும் நெய்யும்***
***இணங்கிய நேமியாய்!***

***நிணமும் நெய்யும் -*** *பகைவர் உடற்கொழுப்பும் பூசிய நெய்யும்;* ***இணங்கிய நேமியாய் -*** *பொருத்திய சக்கராயுதத்தை உடையவனே;* ***உணர்வு சென்றுழி -*** *(எங்களுங்கு) மனம் சென்ற வழியே;* ***செல்லும் ஒழுக்கு அலால்-*** *செல்லுதலாகிய நடக்கையே அன்றி;* ***மறைநெறி வந்தன -*** *வேத நெறிப்படிவந்தவையான;* ***மணமும் இல்லை -*** *திருமண முறைகளும் சிறப்பிற்குஏற்றனவான;* ***குணமும் இல்லை -*** *நற்பண்புகளும் இல்லை.*

*வீரனின் ஆயுதங்களைச் சிறப்பிக்கும் போது அவற்றில் பகைவரது ஊன் தோய்ந்திருப்பதாகக் கூறுவது மரபாகும். அஃது வீரனின் வீரச்சிறப்பை உணர்த்தும். 'ஊன் செய்த சுடர் வடிவேல் உரோமபதன்' (239) என்றது காண்க. வேல் போன்ற படைகள் துருப்பிடிக்காமலிருக்க நெய் பூசுவர். நேமி என்பது இங்கு ஆயுதத்தைப் பொதுப்பெயரால் குறித்ததாகும். நேமியாய் என இராமனைச் சுட்டியதால் திருமாலே இராமன் என்ற உண்மை அவன் அறியாமலேயே வந்த வார்த்தையாகக் கொள்ள*

*வேண்டும். அரசன் காத்தற் கடவுளாகிய திருமாலின் அம்சம் எனக் கருதப்படுவதால் 'நேமியாய்' என்று இராமனை விளித்தான் எனவும் கொள்ளலாம். சென்றுழி - சென்ற உழி என்பதன் தொகுத்தல்விகாரம். 113*

***4048. 'பெற்றி மற்று இது;***
***பெற்றது ஓர் பெற்றியின்***
***குற்றம் உற்றிலன்; நீ,***
***அது கோடியால் -***
***வெற்றி உற்றது ஓர்***
***வெற்றியினாய்!' எனச்***
***சொற்ற சொல் துறைக்கு***
***உற்றது, சொல்லுவான்:***

**வெற்றி உற்றது ஓர் வெற்றியினாய் -** *என்னை வெற்றி கொண்ட தோர் ஒப்பற்ற வெற்றியை உடையவனே!* **பெற்றி இது -** *(எங்கள் பிறப்பிற்குரிய) தன்மை இது;* **பெற்றது ஓர் பெற்றியின் -** *நான் அடைந்துள்ள பிறவியின் தன்மைப்படி;* **குற்றம் உற்றிலன் -** *யாதொரு குற்றமும் செய்திலேன்;* **அது நீ கோடி -** *அதனை நீ மனத்தில் கொள்வாய்;* **என -** *என்று;* **சொற்ற சொல் துறைக்கு-** *வாலி சொன்ன சொற்களின் போக்கிற்கு;* **உற்றது சொல்லுவான் -** *பொருத்தமான மறுமொழியை (இராமன்) சொல்லத் தொடங்கினான்.*

*வெற்றி உற்றது ஓர் வெற்றியினாய் - வெற்றிகளுள்ளும் மேம்பட்ட வெற்றியை உடையவனே என்றும் பொருள் கொள்வர். எவராலும் வெல்ல முடியாத தன்னை இராமன் வென்றதால் அவ் வெற்றியைப் பெரு வெற்றியாகக் குறித்தான் என்க. 'கொள்தி' என்பது கோடி என நின்றது. கோடி - கொள் + தி. தி முன்னிலை ஏவல் விகுதி. மற்று. ஆல் என்பன அசைகள். தன் பிறப்பின் இயல்பு காட்டி வாலி, தான் குற்றமற்றவன் என உரைத்தான். 114*

*இராமனது மறுப்பு*

***4049. 'நலம் கொள் தேவரின்***
***தோன்றி, நவை அறக்***
***கலங்கலா அற நல்***
***நெறி காண்டலின்,***
***விலங்கு அலாமை***
***விளங்கியது; ஆதலால்,***
***அலங்கலார்க்கு, ஈது அடுப்பது***
***அன்று ஆம்அரோ.***

**நலங்கொள் தேவரின் தோன்றி -** *நன்மையை மேற்கொள்ளும் தேவர்கள் போலப் பிறந்து;* **நவை அற -** *குற்றங்கள் இல்லாதபடி;* **கலங்கலா-** *நிலை கலங்காமல்;* **அற நல் நெறி -** *அறத்தின் நல்ல வழியை;* **காண்டலின்-** *நீ அறிந்துள்ளமையால்;* **விலங்க அலாமை -** *(நீங்கள்) சாதாரணவிலங்கினத்தைச் சார்ந்தவர் அல்லீர்;* **விளங்கியது -**

*(என்பது) தெளிவாகத்தெரிகின்றது;* ***ஆதலால் -*** *ஆகையால்;* ***அலங்க லார்க்கு -*** *வெற்றி மாலைஅணிந்த வீரர்களாகிய உங்களுக்கு;* ***ஈது அடுப்பது அன்று ஆம் -*** *இவ்வாறுவிலங்கு என்று (சமாதானம்) கூறுவது பொருந்துவது அன்று ஆம்.*

*தேவரின் தோன்றி - தேவர் குலத்தில் தோன்றி என்றும் பொருள் கொள்வர். இது வாலி இந்திரன் அம்சமாகப் பிறந்தவன் என்பதை உட்கொண்டு கூறியதாகவும் கொள்ளலாம். 'தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவான், 'எனது கூறுமருவலர்க்கு அசனி அன்ன வாலியும் மகனும்' என்ன (205) என்றமை காண்க. வாலி, உடம்மை விட்டு உயிர் பிரியும் நிலையிலும் நல்லற நெறியின் இயல்பு இதுவெனக் குற்றமற உணர்ந்து பேசும் திறம்பெற்றிருத்தலால் 'நவை அறக் கலங்கா அறநல்நெறி காண்டலின்' என்றான். தேவரின் தோன்றலாலும். அறநெறி, தெரிந்திருத்தலாலும் வாலி விலங்கு என்ற பெயரில் அறம் மாறிய செயல்களைச் செய்தல் கூடாது என இராமன் விளக்கினான். அதனால் வடிவத்தால் மட்டும் ஒருவர் தாழ்நிலையான விலங்கு நிலை அடைவதில்லை என்பது புலனாகிறது. அவரவர் பண்புகளால் உயர்வு தாழ்வு குறிக்கப்படுகிறதேயன்றி, பிறப்பினால் அல்ல என்பதை இராமன் வற்புறுத்தினான் என்க. அதனால் எம்பால் குற்றம் காண்பது பொருந்தாது எனக்கூறிய வாலிக்கு 'இது அடுப்பது அன்று' என்றான். அலங்கலார்க்கு - படர்க்கைப் பெயர் முன்னிலைக்கண் வந்தது, அரோ - அசை.* *115*

***4050. 'பொறியின் யாக்கையதோ? புலன் நோக்கிய***
***அறிவின் மேலது அன்றோ, அறத்தாறுதான்?***
***நெறியும் நீர்மையும் நேரிது உணர்ந்த நீ***
***பெறிதியோ, பிழை உற்றுறு பெற்றிதான்?***

***அறத்து ஆறுதான் -*** *அறநெறி என்பது;* ***பொறியின் யாக்கையதோ -*** *ஐம்பொறிகளோடு பொருந்திய உடம்பைப் பற்றியதோ?* ***புலன் நோக்கிய -*** *ஐம்புலன்களால் நன்றும் தீதும் ஆராய்ந்து உணர்கின்ற;* ***அறிவின் மேலது அன்றோ -*** *அறிவைப் பற்றியது அல்லவா?* ***நெறியும் நீர்மையும் -*** *அறநெறியினையும் அதன் இயல்பினையும்;* ***நேரிது உணர்ந்த நீ -*** *செம்மையாக அறிந்து உணர்ந்த நீ;* ***பிழை உற்று -*** *தவறுகளைச் செய்து விட்டு;* ***உறு பெற்றிதான் பெறுதியோ -*** *(பிழையன்று, என் செயல் சரியானதென்று) சாதிக்கின்ற தன்மையைப் பெறக்கடவையோ?*

*பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. இப்பொறிகளை வாயிலாகக் கொண்டு நிகழும் புலன்களாவன ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்பன. நோக்குதல் - நன்றும் தீதும் கண்டறிதல், பொறிகள் எல்லா உயிர்களுக்கும் உண்டு. புலனறிவோ உயிர்களின் சிறப்பிற்கேற்றவாறு உயர்வு பெறும். வாலி அறிவு மிக்கவனாதலின் பொறிகளை மட்டும் கொண்டு தன்னை விலங்கினம் எனக் கூறிக் கொள்வதும் தவறுகள் செய்வதும் தகுதியுடையன அல்ல என்பதாம். தொல்காப்பிய மரபியலில் 'மக்கள் தாமே ஆறறிவுயிரே, பிறவுமுளவே அக் கிளைப் பிறப்பே' (தொல். மர - 33) என்ற நூற்பாவும்' பிறப்பென்றதனால், குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன எனப்படும் மன உணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவு உயிராய் அடங்கும் என்பது' என்ற உரையும் இங்குக் காணத்தக்கன. பிழை உற்றுறு பெற்றிதான் பெறுதியோ என்பதற்குத் தவறுகளை மிகுதியாகச் செய்கின்ற தன்மையைப் பெறக்கடவையோ என்றும் பொருள்கொள்ளலாம்.* *116*

***4051. 'மாடு பற்றி இடங்கர் வலித்திட,
கோடு பற்றிய கொற்றவற் கூயது ஓர்
பாடு பெற்ற உணர்வின் பயத்தினால்,
வீடு பெற்ற விலங்கும் விலங்குஅதோ?***

***இடங்கர் -*** *முதலை;* ***மாடு பற்றி வலித்திட -*** *(தன்னை) ஒரு பக்கத்தில் பற்றிக் கொண்டு இழுத்ததால்;* ***கோடு பற்றிய கொற்றவன் -*** *பாஞ்சசன்யம் என்னும் சங்கினைத் தாங்கிய திருமாலை;* ***கூயது -*** *கூவி அழைத்ததாகிய;* ***ஓர் பாடு பெற்ற -*** *ஒப்பற்ற பெருமை வாய்ந்த;* ***உணர்வின் பயத்தினால் -*** *நல்லறிவின் பயனாக;* ***வீடு பெற்ற விலங்கும் -*** *(முதலையின் வாயினின்று) விடுதலை பெற்று நற்கதி அடைந்த கசேந்திரனான யானையும்;* ***விலங்கு அதோ -*** *விலங்கு என எண்ணத் தக்கதோ? (அன்று).*

*இப்பாடலில் உயர்கதி பெற்ற ஒரு விலங்கு உதாரணமாகக் கூறப்பெற்றது. இடங்கர் - முதலை. வெற்றிக்கு அறிகுறியாகச் சங்கை ஊதுதலும், சங்கின் நாதத்தால் பகைவரை அச்சுறுத்தி வெல்லுதலும் தோன்ற 'கோடு பற்றிய கொற்றவன்' என்றான்.*

*கசேந்திரன் போலவே வாலியும் சாதாரண விலங்கு எனக் கொள்ளத்தக்கவன் அல்லன். ஆதலால் விலங்குச் செயலாகச் சுக்கிரீவன் மனைவியைக் கவர்ந்தது பெருந்தவறாகும் என்பதை இராமன் உணர்த்தினான்.*
*117*

***4052. 'சிந்தை, நல் அறத்தின் வழிச் சேறலால்,
பைந் தொடித் திருவின் பரிவு ஆற்றுவான்,
வெந் தொழில் துறை வீடு பெற்று எய்திய
எந்தையும், எருவைக்கு அரசு அல்லனோ?***

***நல்லறத்தின் வழி -*** *நல்ல அற நெறியில்;* ***சிந்தை சேறலால் -*** *மனம் சென்றதனால்;* ***பைந்தொடித் திருவின் -*** *பசிய (பொன்னாலான) தொடி என்னும் வளையல்களை அணிந்த திருமகள் போன்ற சீதையின்;*

***பரிவு ஆற்றுவான் -*** *துன்பத்தை நீக்குதல் பொருட்டு;* ***வெந்தொழில் துறை -*** *கொடிய போர்த்துறையை மேற்கொண்டு;* ***வீடு பெற்று எய்திய -*** *(உயிர்துறந்து) மோட்ச உலகை அடைந்த;* ***எந்தையும் -*** *எங்கள் பெரிய தந்தையாகிய சடாயுவும்;* ***எருவைக்கு அரசு அல்லனோ -*** *கழுகுகளுக்கு அரசன் அல்லனோ?*

*முன் பாடலில் விலங்காகிய ஒரு மதயானை அடைந்த உயர்நிலையினையும் இந்தப் பாடலில் பறவையாகிய ஒரு கழுகு அடைந்த நற்கதியையம் கூறுதல் காண்க. அருணன் மகனாகிய சடாயு, தயரதன் தோழன்; ஆதலால் சடாயுவைத் தன் தந்தை என்றான் இராமன். சடாயுகாண் படலம், சடாயு உயிர்நீத்த படலங்களில் சடாயு வரலாறு விரித்துரைக்கப் பெற்றது.*

*சடாயு போல வாலியும் சாதாரண விலங்கினத்தைச் சார்ந்தவன் அல்லன். எனவே வாலி செய்த குற்றம் பெரிது என இராமன் வற்புறுத்தினான். இராமன் சடாயுவை 'எந்தாயே' (3498) என முன்னரும் விளித்தது காண்க. சடாயு தன்னை இழிந்த*

*பிறப்பினனாக் கூறிக் கொண்டதை 'விலங்கு ஆனேன் ஆதலினால், விலங்கினேன்' (2711) என்ற தொடர் உணர்த்தும். முன்பாடலில் 'விலங்கும் விலங்கரோ' என்றும் இப்பாடலில் 'எருவைக்கு அரசு அல்லனோ?' என்றும் வினவும் முறையில் ஒரே கருத்தை வற்புறுத்திக் கூறும் முறை நயம் மிக்கதாகும். ஆற்றுவான் - வான் ஈற்று வினையெச்சம். எந்தையும் - உயர்வு சிறப்பும்மை.* *118*

***4053. 'நன்று, தீது, என்று இயல்***
***தெரி நல் அறிவு***
***இன்றி வாழ்வது அன்றோ,***
***விலங்கின் இயல்?***
***நின்ற நல் நெறி,***
***நீ அறியா நெறி***
***ஒன்றும் இன்மை, உன்***
***வாய்மை உணர்த்துமால்.***

***விலங்கின் இயல் -*** *விலங்குகளின் இயல்பாவது;* ***நன்று தீது என்று -*** *நல்லது இது, தீயது இது என்று;* ***இயல் தெரி -*** *அதனதன் இயல்புகளை உள்ளபடி உணர்கின்ற;* ***நல் அறிவு இன்றி -*** *நல்ல அறிவில்லாமல்;* ***வாழ்வது அன்றோ -*** *(மனம் போனவாறு) வாழ்வது அல்லவா?* ***நின்ற நல்நெறி -*** *நிலைபெற்ற நல்ல அற நெறிகளில்;* ***நீ அறியாநெறி -*** *நீ ஆராய்ந்து உணராத அறவழி;* ***ஒன்றும் இன்மை -*** *ஒன்றும் இல்லை என்பதை;* ***உன் வாய்மை உணர்த்தும் -*** *இப்பொழுது நீ பேசிய உன் வாய்மொழியே உணர்த்தும்.*

*நல்லறிவு - நல்லது. தீயதைப் பகுத்துணர வைத்துத் தீயநெறியினின்று விலக்கி நல்லவழியில் செலுத்துவதாகும். அறிவின் இலக்கணம் வகுக்கப்பட்டமை இங்குக் காண்க. "சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ நன்றின்பால் உய்ப்பதறிவு" (குறள். 422) என்றார் வள்ளுவர்.*

*எல்லா நன்னெறிகளையும் அறிந்தும் அறநெறிக்கு மாறாக நடந்து கொண்டது வாலியின் குற்றம் என உணர்த்தப்பட்டது. ஏனெனில் அவன் வாய்ச் சொற்களே*

*அவன் அறநெறி எது என்பதை நன்கு அறிந்தவன் என்பதைபுலப்படுத்தி விட்டது.* *119*

***4054. 'தக்க இன்ன, தகாதன இன்ன, என்று***
***ஒக்க உன்னலர் ஆயின், உயர்ந்துள***
***மக்களும் விலங்கே; மனுவின் நெறி***
***புக்கவேல், அவ் விலங்கும் புத்தேளிரே.***

***தக்க இன்ன -*** *ஏற்கத் தகுதியானவை இவை;* ***தகாதன இன்ன -*** *ஏற்கத் தகுதியில்லாதவை இவை;* ***என்று - ;*** ***ஒக்க -*** *நீதி நூல் முறைமைக்கு ஏற்ப;* ***உன்னலர் ஆயின் -*** *எண்ணாதவர்களானால்;* ***உயர்ந்துள மக்களும் -*** *உருவாலும் பிறப்பாலும் உயர்ந்துள்ள மனிதர்களும்;* ***விலங்கே -*** *விலங்குகளுக்கு ஒப்பானவரே ஆவர்;* ***மனுவின் நெறி புக்கவேல் -*** *மனுதர்மம் வகுத்த நன்னெறியில் நடக்குமாயின்;* ***அவ்விலங்கும் -***

*அஃறிணைப் பிறப்பினவாகிய விலங்குகளும்;* ***புத்தேளிரே -*** *தேவர்களுக்கு ஒப்பானவையே.*

*ஐம்பொறி உணர்வும், உணவு உறக்கம் போன்ற செயல்களும் மக்களுக்கும் விலங்குகளுக்கும் பொதுவாய் அமைந்தவை. நல்லவை இவை தீயவை இவை எனப் பகுத்துணர்ந்து வாழும் முறை விலங்குகளினும் மனிதர்களுக்கு இருப்பதால் மனித இனம் சிறப்புடைய இனமாகக் கருதப்படுகிறது. ஆதலால், மனிதராய்ப் பிறந்தும் பகுத்துணர்ந்து வாழும் அறவாழ்வு அமைத்துக் கொள்ளவில்லையானால் அம் மனிதர் விலங்கு நிலையில் எண்ணப்படுவர். விலங்காய்ப் பிறந்தும் நீதி நெறியோடு வாழுமாயின் விலங்கும் தேவர்கட்குச் சமமாக மதிக்கப்படும் என்பதாம். நன்று தீது உணர்ந்த விலங்குக்கு உள்ள சிறப்பு விளக்க 'விலங்கும் புத்தேளிரே' என்றார்.*

*மக்களும் - உம்மை உயர்வு சிறப்பு: விலங்கும் -இழிவு சிறப்பும்மை: ஏகாரங்கள் தேற்றம். 120*

***4055. 'காலன் ஆற்றல் கடிந்த கணிச்சியான் -***
***பாலின் ஆற்றிய, பத்தி பயத்தலால்,***
***மாலினால் தரு வன் பெரும் பூதங்கள்***
***நாலின் ஆற்றலும் ஆற்றுழி நண்ணினாய்.***

***காலன் ஆற்றல் கடிந்த -*** *யமனுடைய ஆற்றலை அழித்து வென்ற;* ***கணிச்சியான் பாலின் -*** *மழுவென்னும் ஆயுதத்தை உடைய சிவபிரான் திறத்து;* ***ஆற்றிய பத்தி -*** *நீ ஆற்றிய பக்தி;* ***பயத்தலால்-*** *பயன் தந்ததனால்;* ***மாலினால் தரு -*** *திருமாலால் படைக்கப்பட்ட;* ***வன் பெரு பூதங்கள்*** *- வலிய பெரிய பூதங்கள்;* ***நாலின் ஆற்றலும் -*** *நான்கிற்கும் உள்ள வலிமைகளையெல்லாம்;* ***ஆற்றுழி -*** *உனது வலிமையில்;* ***நண்ணினாய் -*** *பெற்றாய்.*

*காலன் - உயிர்களுக்கு விதிக்கப்பட்ட கால எல்லைப்படி உயிரை நீக்குபவன் ஆதலின் யமன் காலன் எனப்பட்டான். வாலி சிறந்த சிவபக்தன் என்பது 'எட்டு*

*மாதிரத்து இறுதி, நாளும் உற்று, அட்டமூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்' (3825) என முன்னரும் கூறப்பட்டது.*

*வாலி நான்கு பூதங்களின் வலிமை பெற்றவன் என்பதை 'நிலனும் நீரும் மாநெருப்பும், காற்றும் என்று உலைவு இல் பூதம் நான்குடைய ஆற்றலான்' (3824); "நீரும் நீர்தரு நெருப்பும் வன்காற்றும் கீழ் நிவந்த, பாரும் சார் வலி படைத்தவன்" (4000) என்பன உணர்த்தும்.*

*கணிச்சியான் காலன் ஆற்றல் கடிந்தவன் - மார்க்கண்டேயனைக் காத்தற் பொருட்டுச் சிவபிரான் காலனை வதைத்தது. "அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத அவனைக் காப்பது காரணமாக, வந்த காலன்தன் ஆருயிர் அதனை வவ்வினாய்" (தேவாரம் - சுந்தரர் - திருப்புன்கூர் - 1) என்றது காண்க. 121*

***4056. 'மேவ அருந் தருமத் துறை மேவினார்,***
***ஏவரும், பவத்தால் இழிந்தோர்களும்,***

*தா அருந் தவரும், பல தன்மை சால்*
*தேவரும், உளர், தீமை திருத்தினார்.*

***ஏவரும் -*** *குற்றமே செய்யும் இயல்புடையாரிலும்;* ***பவத்தால் இழிந்தோர்களும் -*** *பிறப்பினால் இழிந்த கீழோரிலும்;* ***மேவ அரும் தருமத்துறை -*** *அடைதற்கு அரிய அறவழியில்;* ***மேவினார் -*** *பொருந்தினார் உளர்;* ***தா அருந்தவரும் -*** *குற்றமில்லாத தவம் புரியும் முனிவர்களிலும்;* ***பல தன்மைசால் தேவரும்*** *- பல்வகைப்பட்ட குணங்களில் சிறந்த தேவர்களிலும்;* ***தீமை திருந்தினார் -*** *தீய செயல் செய்தவர்கள்;* ***உளர் -*** *உள்ளனர்.*

*இன்னார் நல்லனவே செய்வர்: இன்னார் தீயனவே செய்வர் எனக் கூற இயலாது என்பது உணர்த்தப்பட்டது. ஏவம் - குற்றம். அதனைச் செய்பவர் ஏவர்: ஏவம் செய்தவர் என்க. பவம் - பிறப்பு, பிறப்பால் உயர்ந்தவர்கள் தீமை செய்வதும் இழிந்தவர்கள் அறநெறியில் நிற்றலும் உலகில் காண்பனவே. விசுவாமித்திரர் மேனகையிடம் மயங்கியது; இந்திரன் அகலிகையை விரும்பியது என்பன முனிவர்களும், தேவர்களும் தவறு செய்வர் என்பதற்கு எடுத்துக்காட்டுக்களாகும். எளிய வேடர்குலம் எனினும், குகன் காட்டிய அன்பிற்கு அளவில்லை. எனவே உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்பது பிறப்பு, குலம் என்பவற்றால் அல்லாமல் செய்யும் செயல்வகைகளால் கருதப்படுவது என்பது கூறப்பட்டது. "மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும், கீழல்லர் கீழல்லவர்" (973) என்னும் குறள் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது. 122*

*4057. 'இனையது ஆதலின், எக் குலத்து யாவர்க்கும்,*
*வினையினால் வரும், மேன்மையும் கீழ்மையும்;*
*அனைய தன்மை அறிந்தும், அழித்தனை,*
*மனையின் மாட்சி' என்றான், மனு நீதியான்.*

***இனையது ஆதலின் -*** *உண்மை இத்தன்மையது ஆதலால்;* ***எக் குலத்து யாவர்க்கும் -*** *எந்தக் குலத்தில் பிறந்தவராயினும் அவர்கள் எல்லோர்க்கும்;* ***மேன்மையும் கீழ்மையும் -*** *உயர்வும், இழிவும்;* ***வினையினால் வரும் -*** *அவரவர் செய்யும் செயல்களால் வரும்.*
***அனைய***

***தன்மை அறிந்தும் -*** *அத்தன்மையை நீ உணர்ந்திருந்தும்;* ***மனையின் மாட்சி-*** *பிறன் மனையாளின் கற்பு மாண்பினை;* ***அழித்தனை -*** *அழித்தாய்;* ***என்றான் -*** *என்று உரைத்தான்;* ***மனு நீதியான் -*** *மனு நீதியில் தவறாதவனாகிய இராமன்.*

*நற்செயலால் மேன்மையும் தீச்செயலால் கீழ்மையும் வரும் என்க. மேன்மையும் கீழ்மையும் வினையினால் வரும் என்பது 'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக்கல்' (குறள் - 505) என்னும் குறள்வழி இருத்தல் காண்க. மாட்சி. பெருமை இங்கே சிறப்பினால் கற்பை உணர்த்திற்று. பாவங்கள் பலவற்றுள் பிறன்மனை நயத்தல் என்பது கொடிய பாவமாகும். அத்தகைய கொடிய பாவத்தை வாலி புரிந்ததால், தண்டிக்கத் தான் அம்பு தொடுத்தது குற்றமன்று என இராமன் உணர்த்தினான். 'அறத்தைக் காத்தலாகிய தொழிலில் மனு விதித்த நெறியிலிருந்து இராமன் தவறுபவன் அல்லன் என்பதை அறிவிக்கவே 'மனுநீதியான்' என உரைத்தார். 123*

*'மறைந்து எய்தது ஏன்?' என்ற வாலி வினாவுக்கு இலக்குவன் விடை*

*ஆசிரிய விருத்தம்*

***4058. அவ் உரை அமையக் கேட்ட***
***அரி குலத்து அரசும், 'மாண்ட***
***செவ்வியோய்! அனையது ஆக! செருக்***
***களத்து உருத்து எய்யாதே,***
***வெவ்விய புளிஞர் என்ன,***
***விலங்கியே மறைந்து, வில்லால்***
***எவ்வியது என்னை?' என்றான்;***
***இலக்குவன் இயம்பலுற்றான்:***

***அவ்உரை அமையக்கேட்ட -*** *(இராமபிரான் கூறிய) அம் மொழி களை மனத்தில் பதியுமாறு கேட்ட;* ***அரி குலத்து அரசும் -*** *வானரக் குலத்தின் தலைவனான வாலியும் (இராமனை நோக்கி);* ***மாண்ட செவ் வியோய் -*** *மாட்சிமை பொருந்திய நற்குணங்களை உடையவனே;* ***அனையது ஆக -*** *நீ கூறிய அனைத்தும் உண்மையாகவே ஆகட்டும்;* ***செருக்களத்து -*** *போர்க்களத்தில்;* ***உருத்து எய்யாதே -*** *என் முன் நின்று அம்பு தொடுக்காமல்;* ***வெவ்விய புளிஞர் என்ன -*** *கொடிய வேடர்கள் (மறைந்து நின்று விலங்குகள் மேல் அம்பு தொடுப்பது) போல;* ***விலங்கியே மறைந்து -*** *விலகி மறைந்து நின்று;* ***வில்லால் எவ்வியது -*** *வில்லைக் கொண்டு என் மேல் அம்பு செலுத்தியது;* ***என்னை? -*** *என்ன காரணத்தால்;* ***என்றான் -*** *என்று வினவினான்;* ***இலக்குவன் இயல்பலுற்றான் -*** *(அவ்வினாவிற்கு) இலக்குவன் மறுமொழி கூறத் தொடங்கினான்.*

*அவ்வுரை - குற்றம் புரிந்திலேன் எனக்கூறிய வாலிக்குச் செய்த குற்றம் இதுவென இராமன் கூறிய மறுமொழி; அமையக் கேட்டல் கூறும் சொற்களை மனத்தில் பதியுமாறு கேட்டுக் கொள்ளல். வாலி தான் செய்த குற்றத்தை ஏற்றுக்*

*கொண்டான் என்பதை இராமனை 'மாண்ட செவ்வியோய்' என விளிப்பதிலிருந்தும் 'அனையது ஆக' என்றமையாலும் புலனாகும். ஆக - ஆகுக என்பதன் தொகுத்தல் விகாரம்; வியங்கோள் வினைமுற்று. புளிஞர் மறைந்து அம்பு செலுத்துதல் என்பது 'புதல் மறைந்து வேட்டுவன் புள்சிமிழ்த்தற்று' (குறள் - 274) என்பதால் புலனாம்.*

*மறைந்திருந்து அம்பு தொடுப்பானேன் 'என வினவிய வாலிக்கு இலக்குவன் விடையளிப்பது சிந்திக்கத்தக்கது. கூறப்படும் காரணம் போலிச் சமாதானமாகப் பொருத்தமற்றதாக இருக்கப்போவதால் இலக்குவன் பேச்சாக ஆசிரியர் வைத்தார் என்பர். அறிவில் சிறந்த ஆதிசேடனின் அமிசமாதலின் அவனை விடை சொல்ல வைத்தார் என்றும் கூறுவர். விலங்குகளை வேடர்கள் மறைந்திருந்தும் வேட்டையாடுவார். விலங்காகிய வாலியை மறைந்திருந்து கொன்றது தவறில்லை என வான்மீக இராமன் அமைதி கூறுவான். கம்பர் வாலி வாக்கில் அக்கருத்தை ஓர்உவமையாக்கினார். 124*

***4059. 'முன்பு, நின் தம்பி வந்து***
***சரண் புக, ''முறை இலோயைத்***
***தென் புலத்து உய்ப்பென்'' என்று***
***செப்பினன்; செருவில், நீயும்,***
***அன்பினை உயிருக்கு ஆகி,***
***''அடைக்கலம் யானும்'' என்றி***
***என்பது கருதி, அண்ணல், மறைந்து***
***நின்ற எய்தது' என்றான்.***

***நின் தம்பி முன்பு வந்து -*** *உன் தம்பியான சுக்கிரீவன் முதலில் வந்து;* ***சரண்புக -*** *சரண் அடைய;* ***முறை இலோயை -*** *முறை தவறிய உன்னை;* ***தென் புலத்து உய்ப்பென் -*** *தென்திசையிலுள்ள யமனுலகில் செலுத்துவேன்;* ***என்று செப்பினன் -*** *என்று (என் தமையன்) உறுதிமொழி கூறினான்;* ***செருவில் -*** *போர்க்களத்தில்;* ***நீயும் உயிருக்கு அன்பினைஆகி -*** *நீயும் உன் உயிர்மீது பற்றுடையவனாகி;* ***யானும் என்றி -*** *'நானும் உனக்கு அடைக்கலமாவேன்' என்று கூறுவாய்;* ***என்பது கருதி -*** *என்பதையே எண்ணியே;* ***அண்ணல் -*** *பெருமைக்குரிய இராமன்;* ***மறைந்து நின்று -*** *உன் எதிரில் வராமல் மறைவாக நின்று;* ***எய்தது -*** *உன்மீது அம்பு செலுத்தியதாகும்;* ***என்றான் -*** *என்று (இலக்குவன் வாலிக்கு) விடை அளித்தான்.*

*சுக்கிரீவன் முதலில் வந்து சரண் வேண்டியதால் அவனைக் காக்கும் பொறுப்பும், முறையில செய்தமையால் வாலியைத் தண்டிக்கவேண்டிய பொறுப்பும் இராமனைச் சார்ந்தவனாயின. இந்நிலையில் வாலியும் அபயம் வேண்டின். அவனைத் தண்டிக்க முடியாமல் போவதோடு, தான் சுக்கிரீவனுக்குக் கொடுத்த வாக்கும் தவறிப்போம். அதனால் வாலியின் முன்னர் வரவில்லை என இலக்குவன் விளக்கினான். இராமன் வாலியோடு போர்செய்யவில்லை என்றும், அவன் செய்த தீச் செயலுக்கே தண்டனை அளித்தான் என்றும், தண்டனையை எந்த வகையிலும் நிறைவேற்றலாம் என்றும் உணர்த்தினான் என்பதாம். வாலியை 'முறை இலோயை' என்றது தம்பி மனைவியைக் கவர்ந்தமையாலாகும். தென்புலம்*

*தெற்குத் திசையிலுள்ள யமன் உலகம். என்றி - முன்னிலை ஒருமை வினைமுற்று - இகர விகுதி எதிர்காலம் காட்டிற்று. 125*

வாலியின் மனமாற்றம்

***4060. கவி குலத்து அரசும் அன்ன***
***கட்டுரை கருத்தில் கொண்டான்;***
***அவியுறு மனத்தன் ஆகி, 'அறத்***
***திறன் அழியச் செய்யான்***
***புவியுடை அண்ணல்' என்பது***
***எண்ணினன் பொருந்தி, முன்னே***
***செவியுறு கேள்விச் செல்வன்***
***சென்னியின் இறைஞ்சி, சொன்னான்:***

***கவி குலத்து அரசும் -*** *குரங்குகள் கூட்டத்திற்க அரசனுமான வாலி;* ***அன்ன கட்டுரை -*** *(முற்பாடல்களில் கூறப்பட்ட) உரையாடலை;* ***கருத்தில் கொண்டான் -*** *தன் மனத்தில கொண்டவனாய்;* ***அவியுறு மனத்தன் ஆகி -*** *அடங்கியொழுகும் உள்ளத்தனாகி;* ***புவியுடை அண்ணல் -*** *'உலகம் முழுதுமுடைய பெருமைக்குரிய இராமன்;* ***அறத்திறன் அழியச் செய்யான் -*** *அறநெறி அழியுமாறு செயல்களைச் செய்ய மாட்டான்';* ***என்பது எண்ணினேன் -*** *என்பதைக் கருதியவனாகி;* ***பொருந்தி -*** *மனம் பொருந்தி;* ***முன்னே செவியுறு கேள்விச்செல்வன் -*** *முன்னமே செவியிற் பொருந்தும் வேத நாயகனை;* ***சென்னியின் இறைஞ்சி -*** *தலையினால் வணங்கி;* ***சொன்னான் -*** *பின்வருமாறு சொல்பவனானான்.*

*கேள்வி - வேதம். வேதப் பொருள்களின் முடிவானவனாகிய இராமனைக் கேள்விச் செல்வன் என்றார். செவியுறு கேள்விச் செல்வன் எனச்சிறப்பிக்கப்பட்டவன் வாலி என்பாரும் உளர். கேள்விச் செல்வத்தால் அறிவு பெற்றமையால்தான் இராமன் கூறியவற்றைக் கருத்தில் கொள்ள முடிந்தது என்பது அவர்கள் விளக்கம். கேள்விச் செல்வம் உடைமையால் அவியுறு மனத்தனாயினன். இராமன் தவறு செய்யான் என எண்ணவும் இயன்றது அதனால் என்க. தவறு உணர்ந்த வாலி இராமன் பெருமையையும் உணர்ந்ததாலும் அடங்கி ஒழுகும் உள்ளம் பெற்றான் என்பதை 'அவியுறு மனத்தன் ஆகி' என்ற தொடர் உணர்த்தும். இராமன்மீது கொண்ட மதிப்பால், கீழே விழுந்து இராமனை வணங்க முடியாத நிலையில் தலையால் வணங்கினான். வாலி இராமனுடைய குணச்சிறப்புகளை முன்னரே ஒருவாறு அறிந்திருந்தாலும் தான் என்ற செருக்காலும், தன்னலத்தாலும் மறைக்கப்பட்டு இராமனை இழித்துரைத்தான். பின் இராமன் கூறிய மொழிகளால் அவனது அஞ்ஞானம் நீங்க நல்லறிவு பெற்றான் எனலாம். அன்ன கட்டுரை என்பதற்கு இலக்குவன் கூறிய சொற்கள் என்று கூறுவாரும் உளர் அப் பொருளில் சிறப்பு இன்மையை யாவரும் எளிதில் அறிய முடியும். இதனால் ஒருவன் எவ்வளவு அறிவுடையவனாக இருந்தாலும் ஒரு ஞானாசிரியரின் உபதேசம் பெற்றாலொழிய உண்மைத் தத்துவத்தை உணர முடியாது என்பது விளங்குதல் காண்க.* *126*

***4061. 'தாய் என உயிர்க்கு நல்கி,***
***தருமமும், தகவும், சால்பும்,***
***நீ என நின்ற நம்பி!***
***நெறியினின் நோக்கும் நேர்மை***
***நாய் என நின்ற எம்பால்,***
***நவை அற உணரலாமே?***
***தீயன பொறுத்தி' என்றான் -***
***சிறியன சிந்தியாதான்.***

***சிறியன சிந்தியாதான் -*** *அற்பத்தனமான எண்ணங்களை எண்ணாதவனாகிய வாலி;* ***தாய் என உயிர்க்கு நல்கி -*** *(இராமனை நோக்கி) 'தாய்போல எல்லா உயிர்களிடத்தும் அருள் காட்டி;* ***தருமமும் தகவும் சால்பும் -*** *அறமும் நடுவுநிலைமையும் நற்குண நிறைவும்;* ***நீ என நின்ற நம்பி -*** *நீயே என்று சொல்லும்படி நின்ற நம்பியே!* ***நெறியினின் நோக்கும் நேர்மை -*** *(அறநூல்கள் சொன்ன) நெறிப்படி (நீ) பார்க்கும் நேர்வழியை;* ***நாய் என நின்ற எம்பால் -*** *நாய் போன்ற இழிந்த நிலையினராய் எம்மிடத்து;* ***நவை அற உணரலாமே -*** *குற்றமற உணர்தல் இயலுமோ?* ***தீயன பொறுத்தி-*** *(அறியாமையால் நான்*

*செய்த) தீமைகளைப் பொறுத்தருள்வாய்'; **என்றான் -** என்று (இராமனிடம்) வேண்டினான்.*

*அறியாமை நீங்கப்பெற்று ஞானமடைந்து இராமனின் பெருமை உணர்ந்து பேசும் வாலியை இப்பாடலில் காண்கிறோம். கம்பரும் வாலியின் மனமாற்றத்தை அறிவிக்கும் வகையில் 'சிறியன சிந்தியாதான்' எனக்குறித்தது காண்க. பிறர் குணங்களைக் குற்றமாகக் கொள்ளுதல், தன்னலம் பற்றிய சிந்தனை, தருக்கு, சொல்லும் செயலும், மனமும் வேறாதல் முதலிய கீழ்மை இயல்புகள் இல்லாதவன் என்பது 'சிறியன சிந்தியாதான்' என்ற தொடரின் பொருள். சிறியன சிந்தியாதான் என்ற தொடர், இதுவரை அழியும் இயல்பினதாகிய அரசு, செல்வம் ஆகிய பொருள்களை மதித்து இராமனை நிந்தித்த வாலி, அந்நிலையைக் கடந்து 'பெரியன சிந்திக்கும்' நிலையை அடைந்தான் என்பதைக்குறிப்பாக உணர்த்துகிறது என்பர். தாயென உயிர்க்கு நல்கி - அன்பு காட்டுவதில் நிகரற்றவன் ஆதலின் 'தாயென' உரைக்கப்பட்டது. 'தாய் ஒக்கும் அன்பில்' (171) என்றதும் காண்க. இராமன் இன்றி உலகில் தருமமும் தகவும் சால்பும் இல்லையாதலின் அவற்றின் வடிவமாக நின்றவன் இராமன் என்பதால் 'தருமமும் தகவும் சால்பும் அவற்றின் வடிவமாக நின்றவன் இராமன் என்பதால் 'தருமமும் தகவும் சால்பும் நீ என நின்ற' என்றான். இஃது 'அருமையின் நின்று உயிர் அளிக்கும் ஆறுடைத் தருமமே தவிர்க்குமோ தன்னைத் தான்' (3966) என வாலி தாரைக்கு முன் கூறியதிலும் விளங்குவது காண்க. நம்பி - ஆடவரில் சிறந்தவன். அண்மைவிளி. தகவு - நடுவுநிலைமை. 'தக்கார் தகவிலர்' (144) என்ற குறளில் இப்பொருள் வருதல் காண்க. நாயென - இங்கு நாய் இழிந்த பிறவி என்பதைக் குறித்து நின்றது. 'நாய்க் குகன்' என்று எனை ஓதாரோ? (2316) எனக்குகனும் தன்னை நாயெனக் கூறிக் கொள்ளல் காண்க. தீயன என்றது பிறன் மனைவியைக் கவர்ந்து வந்தமையும் சரணடைந்த தம்பியைக் கொல்ல முற்பட்டதுமாகச் செய்த தீமைகளைக் குறிக்கும்.*

*'இராமபிரானால்' அடிபட்டு ஞானமடைந்த வாலியை நோக்கி, அவனுக்கு மறுபடியும் உயிரையும் உடலையும் அளிப்பதாகக் கூற வாலி அதனைமறுத்து அப்பெருமான் சந்நிதியில் இறந்து போவதையே பெருமையாகக் கொண்டான்' என்று 'இராமசரிதமானஸம்' என்னும் துளசிதாசர் இராமாயணம் கூறும். 127*

***4062. இரந்தனன் பின்னும்; 'எந்தை!***
***யாவதும் எண்ணல் தேற்றாக்***
***குரங்கு எனக் கருதி, நாயேன்***
***கூறிய மனத்துக் கொள்ளேல்;***
***அரந்தை வெம் பிறவி நோய்க்கும்***
***அரு மருந்து அனைய ஐயா!***
***வரம் தரும் வள்ளால்! ஒன்று***
***கேள்!' என மறித்தும் சொல்வான்:***

*__பின்னும் இரந்தனன் -__ (வாலி) பின்னும் இரந்து வேண்டுபவனாய்; __எந்தை -__ எந்தையே!' __யாவதும் எண்ணல் தேற்றா -__ நல்லது, தீயது என எதையும் எண்ணி அறியமாட்டாத; __குரங்கு எனக் கருதி -__ குரங்கு என் (உன் உள்ளத்தில்) என்னைக் கருதி; __நாயேன் கூறிய -__ நாய்போல் கடையப்பட்டவனாகிய நான் (உன்னைப்பற்றிச்) சொன்ன*

*சுடு சொற்களை;* ***மனத்துக் கொள்ளேல் -*** *உன் மனத்தில் கொள்ளாதே.* ***அரந்தை வெம் பிறவி நோய்க்கும் -*** *துன்பத்தைத் தருகின்ற கொடிய பிறவியாகிய நோய்க்கும்;* ***அரு மருந்து அனைய -*** *அரிய மருந்து போன்ற;* ***ஐயா -*** *ஐயனே!* ***வரம் தரு வள்ளால் -*** *விரும்பிய வரங்களை அளிக்கும் வள்ளல்தன்மை உடையவனே!* ***என மறித்தும் சொல்வான் -*** *என்று மீண்டும் சொல்பவனானான்.*

*இராமனைப் பழித்துரைத்தமைக்காகத் தன்னைப் பொறுத்தருள வேண்டுமென இப்பாடலில் வாலிவேண்டினான். குரங்கு நிலையிலாத சித்தத்தை உடையதால் 'யாவதும் எண்ணல் தேற்றாக் குரங்கு' எனக் குறித்தான். தன் பிறவியை நீக்கப் போவதாலும். அந்தமில் பேரின்ப வாழ்வை அளிக்கப் போவதாலும் இராமனைப் பிறவி நோய்க்கம் அரு மருந்தனைய ஐயா என்றும், வரம்தரும் வள்ளால் என்றும் அவன் கருணையை எண்ணித் துதித்தான். 'மரம்பொ தச்சரம் துரந்து வாலி வீழ முன்னொர்நாள், உரம்பொ தச்சரம் துறந்த உம்பரானி எப்பிரான் வரம் குறிப்பில் வைத்தவர்க் கலாது வானம் ஆளினம் நிரம்பு நீடு போகம் எத்திறத்தும் யார்க்கும் இல்லையே (திருச்சந்தவிருத்தம் - 73) என்றதும் காண்க. பிறவி நோய் நீக்கும் அருமருந்து இராமனே என்பது ஈண்டு உணர்த்தப்பட்டது. "மருள் உறு பிறவி நோய்க்கு மருந்தும் ஆம்; மாறிச் செல்லும் உருளுது சகட வாழ்க்கை ஒழித்து, வீடு அளிக்கும் அன்றே" (7410) என்ற வீடணன் கூற்றும் காண்க. 128*

இராமனைத் துதித்து, வாலி ஓர் வரம் வேண்டுதல்

கலிவிருத்தம்

***4063. 'ஏவு கூர் வாளியால்***
***எய்து, நாய் அடியனேன்***
***ஆவி போம் வேலைவாய்,***
***அறிவு தந்து அருளினாய்;***
***மூவர் நீ! முதல்வன் நீ!***
***முற்றும் நீ! மற்றும் நீ!***
***பாவம் நீ! தருமம் நீ!***
***பகையும் நீ! உறவும் நீ!***

***ஏவுகூர் வாளியால் -*** *'(வில்லில் தொடுத்துச்) செலுத்தப்படும் கூரிய அம்பை;* ***எய்து -*** *(என்மேற்) செலுத்தி;* ***நாய் அடியனேன் -*** *நாய் போன்ற சடைப்பட்டவனான அடியேனது;* ***ஆவிபோம் வேலை வாய் -*** *உயிர் நீங்கும் சமயத்தில்;* ***அறிவு தந்து அருளினாய் -*** *மெய்யுணர்வு தந்து அருள் செய்தாய்;* ***மூவர் நீ -*** *(நான்முகன், திருமால், உருத்திரன் எனும்) மும்மூர்த்திகளும் நீயே;* ***முதல்வன் நீ -*** *(அம்மூவர்க்கும் மேலோனாகிய) முழுமுதற் கடவுளும் நீயே;* ***முற்றும் நீ -*** *உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் நீயே;* ***மற்றும் நீ -*** *மற்றும் எல்லாமும் நீயே;* ***பாவம் நீ -*** *பாவமும் நீயே;* ***தருமம் நீ -*** *அறம் என்பதும் நீயே;* ***பகையும் நீ -*** *பகைவனும் நீயே;* ***உறவும் நீ -*** *உறவு உடையவனும் நீயே;*

*இராமன் வாலியை அம்பு செலுத்தித் தண்டித்தாலும் உயிர் போகும் நிலையில் மெய்யுணர்வை அளித்ததால் தன்னை நாயடியேன் எனத் தாழ்த்திக் கொண்டு*

*'ஆவிபோம் வேலைவாய் அறிவு தந்து அருளினாய்' என இராமன் கருணையைப் பாராட்டித் தொழத் தொடங்கினான். நாய் - தாழ்நிலை, நன்றியுடைமை இரண்டையும் ஈண்டுக் குறித்தது. தன்னையுடையவன் தன்னைத் தண்டித்த போதும் தொடரும் நாய் போல, வாலியும் இராமன் ஒறுத்த போதும் அவனையே பற்றுக் கோடாக் கொண்டனன். 'எறிந்த வேல் மெய்யதா வால் குழைக்கும் நாய்' (நாலடி - 213) என்பது காண்க.*

*உலகினைப் படைக்கும் நான்முகனாகவும், காத்தலைச் செய்யும் திருமாலாகவும், அழித்தலைச் செய்யும் உருத்திர மூர்த்தியாகவும் விளங்குபவன் பரம்பொருளாகிய இராமனே என்பான் 'மூவர் நீ' என்றான்; அம்மூவர்க்கும் முதல்வனாகிய முழுமுதற் கடவுள் எனத் தெளிந்து கொண்டதால் 'முதல்வன் நீ' என்றான். 'ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்' என்றபடி எல்லாப் பொருள்களின் உள்ளும் புறமும் கலந்து இருத்தலால் முற்றும் நீ மற்றும் நீ' என்றான். தமிழ்ச் சொல்லாகிய இறைவன் என்பதன் பகுதி 'இறு' எனக் கொண்டு, இதே பொருள் கொள்வர்? (விஷ்ணு என்ற சொல்லே எங்கும் நிறைந்தது என்னும் பொருள் உடையது.) இத்தொடர்க்கு 'அறியப்பட்ட பொருள்கள் அனைத்தும் நீயே, அறியப்படாத மற்றைப் பொருள்களும் நீயே' என்றும் பொருள் உரைப்பர். உயிர்கள் தீவினை செய்யும் நிலையில் பாவமாகவும், நல்வினை செய்கையில் புண்ணியமாகவும் இருந்து நுகர்விப்பவனும் இறைவனே; ஆதலின், 'பாவம் நீ, தருமம் நீ என்றான். குற்றம் புரிந்த தீவினையாளரைச் சினம் கொண்டு தண்டிக்கையில் பகைவனாகவும், நற்குணம் படைத்தாரிடத்து அருள் கொள்வதால் 'உறவினனாகவும் விளங்கும் இருவகைப் பண்பும் இராமனிடம் இருப்பதால், 'பகையும் நீ உறவும் நீ' என்றான். இறைவன் பகைவனாய் வந்து தண்டிப்பதும் அவன் குற்றம் நீக்கி அவனுக்க உறவாகி அருள் செய்தல் பொருட்டே; ஆதலால் முதலில் பகையைக் கூறி முடிந்த பயனாக உறவினைக் கூறிய நயம் காண்க. 'புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவென்றிவையாய்' (திருவாய்மொழி - 6.3.4), 'நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்*

*கமுமாய், வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய், பல் வகையும் பரந்த பெருமான்' (6-3-1) என்று நம்மாழ்வார் கூறுவன ஒப்புநோக்கத்தக்கன. இராமன் பெருமையை வாலி போற்றியது போல விராதன், கவந்தன் முதலானோர் போற்றியதும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன. "நீ ஆதி முதல் தாதை", "நீ ஆதி பரம்பரமும்" (2568, 69); ஆதிப் பிரமனும் நீ? ஆதிப் பரமனும் நீ! 'ஆதி எனும் பொருளுக்கு அப்பால் உண்டாகிலும் நீ' (3685) என்பன காண்க.*

*129*

***4064. 'புரம் எலாம் எரி செய்தோன்***
***முதலினோர் பொரு இலா***
***வரம் எலாம் உருவி, என்***
***வசை இலா வலிமை சால்***
***உரம் எலாம் உருவி, என்***
***உயிர் எலாம் நுகரும் நின்***
***சரம் அலால், பிறிது***
***வேறு உளதுஅரோ, தருமமே?***

***புரம் எலாம் எரி செய்தோன் முதலினோர்*** - திரிபுரங்கள் முழு வதனையும் எரித்துவிட்ட சிவபிரான் முதலிய தேவர்கள்; ***பொரு இலா வரம் எலாம்*** - ஒப்பில்லாத வரங்கள் எல்லாவற்றையும்; ***உருவி*** - ஊடுருவிச் சிதைத்து; ***என் வசை இலா*** - எனது குற்றமற்ற; ***வலிமை சால்*** - வலிமை மிக்க; ***உரம் எலாம் உருவி*** - மார்பு முழுவதும் துளைத்துச் சென்று; ***என் உயிர் எலாம் நுகரும்*** - என் உயிர் முழுதும் உட் கொண்ட; ***நின் சரம் அலால்*** - உனது அம்பே அல்லாமல்; ***தருமம் பிறிது வேறு*** - தருமம் என்பது வேறொன்று தனியாக; ***உளது*** - இருக்கின்றதோ? ***அரோ*** - அசை.

*தான் பெற்ற வரங்களையும் வலிமையினையும் அழித்து உயிரையும் கவர்ந்ததால் இராமனது அம்பினைத் தருமத்தின் வடிவம் என வாலி ஏற்றுக் கொண்டான். தீயன ஒழித்துத் தருமத்தை நிலைபெறச் செய்ததால் அதனைத் தருமம் என ஏற்ற வாலி, தான் செய்தது தவறு என்பதையும் உணர்ந்தான். "நாரம் கொண்டார், நாடு கவர்ந்தார் நடை அல்லா வாரம் கொண்டார், மற்று ஒருவற்காய் மனை வாழும் தாரம் கொண்டார்; என்ற இவர் தம்மைத் தருமம் தான் ஈரும் கண்டாய்" (3247) என்ற மாரீசன் கூற்றுக் காண்க.*

*புரமெலாம் எரிசெய்தோன் முதலினோர் என்றமை - வாலிக்குச் சிவபிரான், இந்திரன் முதலியோர் அளித்த வரங்களைக் குறித்தது. உரம் எலாம் - மார்பு முதலிய உயிர் நிலைகளை; வலிமைக்கு வசை - போரில் தோற்றல், புறமுதுகிடல் போன்றன; உயிர் நுகர்தல் - உயிரை உடம்பினின்று நீக்குதல்; இலக்கணை. உளது என்னும் முற்றுச்சொல் வினாப் பொருளில் வந்தது.* *130*

***4065. "யாவரும் எவையும் ஆய்,***
***இருதுவும் பயனும் ஆய்,***
***பூவும் நல் வெறியும் ஒத்து;***
***ஒருவ அரும் பொதுமையாய்***
***ஆவன் நீ ஆவது" என்று***
***அறிவினார் அருளினார்;***
***தா அரும் பதம்***
***எனக்கு அருமையோ? தனிமையோய்!***

***தனிமையோய்*** - ஒப்பற்ற தனி முதல்வனே; ***யாவரும்*** - எல்லா உயர்திணைப் பொருள்களும்; ***எவையும் ஆய்*** - எல்லா அஃறிணைப் பொருள்களும் ஆகி; ***இருதுவும் பயனும் ஆய்*** - அறுவகைப் பருவங்களும், அவற்றின் பயன்களம் ஆகி; ***பூவும் நல்வெறியும் ஒத்து*** - மலரும் அதனிடத்துள்ள நல் வாசனையும் ஒத்து; ***ஒருவ அரும் பொதுமையாய்*** - பிரிக்க இயலாத வகையில் கலந்து எல்லாப் பொருளிலும் பொதுவாயுள்ளவனே! ***நீ ஆவன் ஆவது என்று*** - நீ யாவன் என்பதும் நின் இயல்பு; எத்தகையது என்றும்; ***அறிவினார் அருளினார்*** - (என்னுள் தோன்றிய) நல்லறிவு எனக்கு விளங்க அறிவுறுத்தியருளியது. ***தா அரும் பதம்*** - (இனி) கெடுதல் இல்லாத கிடைத்தற்குரிய வீடு பேற்றின்பம்; ***எனக்கு அருமையோ*** - எனக்குக் கிடைப்பது அருமையாமோ? (ஆகாது).

*யாவரும் என்றது மக்கள், தேவர் நரகரையும், எவையும் என்றது மற்ற உயிர் உள்ளவற்றையும் உயிர் இல்லாதவற்றையும் குறிக்கும். இறைவன் உயிருடையன, உயிர் இல்லாதன ஆகிய எல்லாப் பொருள்களோடும் நீக்கமறக் கலந்து நிற்றலால்*

*'யாவரும் எவையும் ஆய்' என்றான். இருது - இரண்டு மாதம் கொண்ட காலப் பகுதி. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனிலைக் குறிக்கும் காரணங்களும் காரியங்களும் அவனே என்பதை 'இருதுவும் பயனும்' என்ற தொடர் உணர்த்தும். இறைவன் எல்லாமாய் இருக்கும் தன்மையை நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "யாவையும் எவரும் தானாய்" (3:4.10) எனப்ர். "பூவும் நல்வெறியும் ஒத்து ஒருவு அரு - மலரில் மணம் போல இறைவன் எல்லாப் பொருள்களிலும் எங்கும் பிரிக்கமுடியாமல் பரந்திருக்கும் நிலை. இழிந்த பொருளாயினும் உயர் பொருளாயினும் வேறுபாடின்றி ஒரு தன்மையனாய் இறைவன் இருத்தல் பற்றிப் 'பொதுமையாய்' எனப் போற்றினான். தன்னுடன் பகைமை நிலையில் வந்த இராமன் யாவன் என்பதும் அவனது உண்மை இயல்பு இத்தகைத்து என்றும் அவன் அருள் தன்னுள் இருந்த மெய்யுணர்வை இப்போது விளங்கிக்கொள்ள அறிவுறுத்தியதால் 'அறிவினார் அருளினார்' என்றான். அறிவின் சிறப்பு நோக்கி 'அறிவினார்' என உயர்திணையாக்கிக் கூறினான். இராமன் பரம்பொருள் என்னும் உண்மை அறிவைப் பெற்றதால் இனிப் பரமபதம் கிடைப்பது எளிது என்பானாய்த் 'தாவரும் பதம் எனக்கு அருமையோ?' என்றான் 'வான் நின்று இழிந்து, வரம்பு இகந்த மா பூதத்தின் வைப்பு எங்கும், ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறத்தும் உளன் என்ப' என்ற அயோதியா காண்டக் கடவுள் வாழ்த்துப் பாடலை ஈண்டு ஒப்பு நோக்கலாம். 131*

***4066. 'உண்டு எனும் தருமமே***
***உருவமா உடைய நிற்***
***கண்டு கொண்டேன்; இனிக்***
***காண என் கடவெனோ?***
***பண்டொடு இன்று அளவுமே***
***என் பெரும் பழவினைத்***
***தண்டமே; அடியனேற்கு உறு***
***பதம் தருவதே!***

***உண்டு எனும் -*** *(என்றும் அழிவற்றதாய்) உள்ளது என்று கூறப்படுகின்ற;* ***தருமமே -*** *அறத்தையே;* ***உருவமா உடைய -*** *வடிவமாகக் கொண்டு நின்ற;* ***நிற்கண்டு கொண்டேன்*** *- உன்னைக் (கண்களால்) கண்டு கொண்டேன்;* ***இனிக் காண என் கடவெனோ -*** *இனிமேல் காண்பதற்கு வேறொன்றை உடையவன் ஆவனோ? (வேறொன்றைக் காணக் கடவேன் அல்லன்);* ***என் பெரும் பழவினை -*** *பெரியதும் தொன்று தொட்டு வருவதுமான எனது வினை;* ***பண்டொடு இன்று அளவுமே -*** *முன்னே தொடங்கி இன்று வரையில் மட்டுமே உள்ளது; (இனி இல்லை);* ***தண்டமே -*** *(என் தீவினைச் செயலுக்கு) நீ அளித்த தண்டனையே;* ***அடியனேற்கு -*** *அடியேனாகிய எனக்கு;* ***உறுபதம் தருவதே -*** *வீடுபேறாகிய பெரும்பதத்தைத் தருவதாகும்.*

*இராமன் தருமத்தின் வடிவமாக வந்தவன், 'தருமமே தவிர்க்குமோ தன்னைத் தான் அரோ' (3966), 'மெய்யற மூர்த்தி வில்லோன்' (5882) என்ற வாலி, அனுமன் கூற்றுக்கள் காண்க. 'உயர்தனிப் பொருளாம் இராமனைக் கண்ட பின்னர் உலகில் காண்பதற்கு வேறொரு பொருள் இல்லையாதலின் 'நின் கண்டனென் மற்றினிக் காணக் கடவனோ?' என்றான். 'அண்டர்கோன் அண அரங்கன் என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' (அமலனாதி பிரான் - 10) என்பர்*

*திருப்பாணாழ்வார். பிறப்பு அநாதியாய் வருவதால் பல பிறப்புகளில் காரணகாரியத் தொடர்ச்சியாய்ச் செய்து சேர்க்கப்பட்ட வினைகள் 'பெரும் பழவினை' எனப்பட்டது. அனுபவித்த (ஸஞ்சிதம்), அனுபவிக்கின்ற (பிராப்தம்), அனுபவிக்கவிருக்கும் (ஆகாமியம்), வினைப் பயன்கள் அனைத்தும் இராமனைக் கண்டதும் கதிரவன் முன் பனிபோல் விலகியதால் 'பண்டொடு இன்றளவுமே என் பெரும் பழவினை' என்றான். தண்டம் - தண்டனை. நால்வகை உபாயங்களுள் இது நான்காவது. இறைவன் அளிக்கும் தண்டனையும் மறக்கருணையின் பாற்படுமாதலின், இறைவன் அளிக்கும் தண்டனையும் மறக்கரு ணையின் பாற்படுமாதலின், இறைவனால் கொல்லப்பட்டவர் வீடுபேறு அடைவர் என்னும் உறுதி பற்றித் 'தண்டமே அடியனேற்கு உறுபதம் தருவதே' என்றான். "கழிப்பருங் கணக்கில் தீமை வைகலும் புரிந்துளாரும் வான் உயர்நிலையை வள்ளல், எய்தவர் பெருவர்" (4075) என்ற அடிகளும் இவ் உண்மையை உணர்த்தும்.*

*தண்டமே - ஏகாரம் தேற்றம். உறுபதம் - உறு மிகுதிப் பொருளை உணர்த்தும்உரிச்சொல். 132*

ஆசிரியவிருத்தம்

***4067. 'மற்று இனி உதவி உண்டோ? -***
***வானினும் உயர்ந்த மானக்***
***கொற்றவ! - நின்னை, என்னைக்***
***கொல்லிய கொணர்ந்து, தொல்லைச்***
***சிற்றினக் குரங்கினோடும் தெரிவு***
***உறச் செய்த செய்கை,***
***வெற்று அரசு எய்தி, எம்பி,***
***வீட்டு அரசு எனக்கு விட்டான்.***

***வானினும் உயர்ந்த மானக் கொற்றவ -*** *வானத்தைக் காட்டிலும் உயர்ந்த பெருமையை உடைய வெற்றி வேந்தனே;* ***எம்பி -*** *என் தம்பியாகிய சுக்கிரீவன்;* ***என்னைக் கொல்லிய -*** *என்னைக் கொல்லுதல் பொருட்டு;* ***நின்னைக் கொணர்ந்து -*** *உன்னை அழைத்துக் கொண்டு வந்து;* ***தொல்லைச் சிற்றினக் குரக்கினோடும் -*** *தொன்று தொட்டுச் சிறுமையுடையதாய் வரும் குரங்கினத்தோடு;* ***தெரிவு உறச் செய்த செய்கை -*** *ஆலோசனை செய்த செயலால்;* ***வெற்று அரசு எய்தி -*** *பயனில்லாத அரசாட்சியைத் தான் அடைந்து;* ***வீட்டு அரசு எனக்கு விட்டான் -*** *(உயர்ந்த உலகமாகிய) வீட்டுலக அரசாட்சியை எனக்கு அளித்துவிட்டான்;* ***இனி மற்று உதவி உண்டோ -*** *இனிமேல் இதனினும் மேலான உதவி அவன் எனக்குச் செய்யக் கூடிய தொன்று உண்டோ?*

*மற்றுள்ள பூதங்கள் நான்கினும் பெருமையாலும், பழமையாலும், அப்பூதங்கள் உண்டாவதற்க இடமாய் நின்றமையாலும் உயர்வானதாகக் கருதப்படும் அத்தகைய வானத்தைக் காட்டிலும் இராமனது பெருமை சிறப்புடைத்து ஆதலின் 'வானினும் உயர்ந்த மானக் கொற்றவ' எனப் போற்றினான், மனித உணர்வின் எல்லை வானமே; அதனினும் உயர்வுடையதாய்ச் சிந்தையும் மொழியும் செல்லா நிலையுடைய பரம்பொருள் என்று எண்ணிப் பார்க்க வேண்டும். அறிவுக் குறைவும், நிலை திரிந்து துளங்கும் அறிவும், திரிபுணர்ச்சியும் ஆகிய சிறுமைப் பண்புகளைப் பண்டுதொட்டு*

*மாறாது பெற்றுள்ள குரங்கின் இனம் என்பதைக் குறிக்கத் 'தொல்லைச் சிற்றினக் குரங்கு' என்றான். தன் தம்பி பயனில்லாத ஆட்சியைப் பெற்றுத் தனக்கு அழிவில்லாத துறக்க உலக ஆட்சியைப் பெற்றுக் கொடுத்தான் என வாலி கூறியதனால் அவனுக்குத் தம்பியின் மீதிருந்த பகைமை மாறியது பெறப்பட்டது.*

*குற்றத்தைக் குணமாகக் கூறியதால் இலேச அணியும், வெற்றரசை ஏற்றுக் கொண்டு விட்டரசு கொடுத்தான் என வருதலால் பரிவருத்தனை அணியும் பாடலில் அமைந்துள்ளன.*

*மற்றினி உதவி உண்டோ என வாலி கூறியது போல "எம்முனார் எனக்குச் செய்த உதவி" (6499) என வீடணன் கூறுதல் காண்க. 133*

***4068. 'ஓவிய உருவ! நாயேன் உளது***
***ஒன்று பெறுவது உன்பால்;***
***பூ இயல் நறவம் மாந்தி,***
***புந்தி வேறு உற்றபோழ்தில்,***
***தீவினை இயற்றுமேனும், எம்பிமேல்***
***சீறி, என்மேல்***
***ஏவிய பகழி என்னும்***
***கூற்றினை ஏவல்' என்றான்.***

***ஓவிய உருவ** - சித்திரத்தில் வரைந்ததுபோல அழகிய வடிவம் உடையவனே! **நாயேன்** - நாய் போல் சிறுமையுடையேனாகிய நான்; **உன்பால் பெறுவது ஒன்று உளது** - உன்னிடத்தில் வேண்டிப் பெறுவதொன்று உள்ளது; **பூ இயல் நறவம் மாந்தி** - மலர்களில் உண்டாகும் மதுவைக் குடித்து; **புந்தி வேறு உற்ற போழ்தில்** - அறிவு திரிந்த நிலைமையில்; **தீவினை இயற்றுமேனும்** - செய்யத்தகாத தீய காரியங்களைச் செய்வானாயினம்; **எம்பிமேல் சீறி** - என் தம்பி மேல் சினங் கொண்டு; **என்மேல் ஏவிய** - என் மேல் செலுத்திய; **பகழி என்னும் கூற்றினை** - அம்பு என்கின்ற யமனை; **ஏவல்** - (அவன்மீது) செலுத்துதல் வேண்டா; **என்றான்** - என்று (இராமனிடம்) வேண்டினான்.*

*வாலிக்குத் தன் தம்பி மீதுள்ள அன்பையும் அவன் இயலபை அறிந்திருந்த தன்மையையும் இப்பாடல் உணர்த்தும். சுக்கிரீவன் தவறு செய்யினும் தன்மீது அம்பு செலுத்தியது போல் அவன்மீதும் செலுத்தவேண்டா என வேண்டுவது சிறியன சிந்தியாதானாகிய வாலியின் பெருந்தன்மையினையும் அன்பையும் காட்டுகிறது. இராமனின் பேரழகு 'ஓவிய உருவ' என்னும் தொடரில் உணர்த்தப்படுகிறது. நறவம் மாந்துதல் வானரங்களின் இயல்பாகும். பின்னர்ச் சுக்கிரீவன் கள்ளுண்டு களித்து இராமனுக்குக் கொடுத்த வாக்கை மறப்பதைக் காண்கிறோம். அதைமுன் கூட்டியே வாலி வழி அறிவிக்கும் நயம் காண்க. சுக்கிரீவன் இயல்பினால் எப்போழுதும் தீவினை செய்யமாட்டான் என்பதை, 'இயற்றுமேனும்' என்பதிலுள்ள உம்மை உணர்த்தும். உம்மை எதிர்மறை. வடிவத்தால் அம்பு போலத் தோன்றினாலும் அழிப்பதில் கூற்றுவவனப் போன்றதால் 'பகழி என்னும் கூற்றினை' என்றான். உருவக அணி. போழ்து - பொழுது என்பதன் விகாரம். 'சீறி' என்பது இடைநிலை விலக்கணியாகி, "என்மேல் சீறி", 'எம்பிமேல் சீறி' என இரண்டிடத்தும் இயைதற்கு உரியது. 134*

***4069. 'இன்னம் ஒன்று இரப்பது***
***உண்டால்; எம்பியை, உம்பிமார்கள்***
***''தன்முனைக் கொல்வித்தான்'' என்று***
***இகழ்வரேல், தடுத்தி, தக்கோய்!***
***முன்முனே மொழிந்தாய் அன்றே, இவன்***
***குறை முடிப்பது ஐயா!***
***பின் இவன் வினையின்***
***செய்கை அதனையும் பிழைக்கல்ஆமோ?***

***இன்னம் இரப்பது ஒன்று உண்டு -*** *இன்னமும் யான் உன்னிடம் வேண்டிப் பெறத்தக்கதோர் வரம் உள்ளது.* ***எம்பியை -*** *(அது யாதெனில்) என்னுடைய தம்பி சுக்கிரீவனை;* ***உம்பிமார்கள் -*** *உன்னுடைய தம்பியர்;* ***தன்முனைக் கொல்வித்தான் -*** *'இவன் தமையனைக் கொல்லச் செய்தவன்';* ***என்று இகழ்வரேல் -*** *என்று பழிப்பார்களானால்;* ***தடுத்தி -*** *நீ அவர்களைத் தடுப்பாயாக;* ***தக்கோய் -*** *மேன்மைக் குணம்*

*உடையவனே!* ***ஐயா -*** *ஐயனே!* ***இவன் குறை முடிப்பது -*** *இவனுக் குள்ள குறைகளை முடித்து வைப்பதாக;* ***முன்முனே மொழிந்தாய் அன்றே -*** *முன்னமே நீ உடன்பட்டுக் கூறியுள்ளாய் அல்லவா?* ***பின் -*** *(அதற்குப்) பிறகு;* ***இவன் வினையின் செய்கை அதனையும்*** *- இச் சுக்கிரீவன் (நினக்குச் செய்ய வேண்டிய) வினையின் செயற்பாடுகளை;* ***பிழைக்கல் ஆமோ -*** *செய்யாது விடலாகுமோ?*

*இராமனின் தம்பியர் தமையனாகிய இராமன்மாட்டு அன்பு கொண்டவர்களாதலின் அந்த அன்பு மனத்தால் தன்னைக் கொல்ல வைத்த சுக்கிரீவனைப் பழிக்கக் கூடும் என்று உணர்ந்து, அந்தப் பழிச் சொல்லும் தம்பிக்கு வரக்கூடாது என்பதால் 'எம்பியை உம்பிமார்கள் தம்முனைக் கொல்வித்தான் என்று இகழ்வரேல் தடுத்தி' என வேண்டினான். இதில் வாலியின் பெருந்தன்மை புலனாகிறது. தக்கோய் - நடுவுநிலை முதலிய நல்ல 'குணங்களை உடையவனே, ஐயா என்ற விளி இரந்து வேணடும் நிலையைப் புலப்படுத்தியது. இங்ஙனமே கும்ப கர்ணன் தன் தம்பி வீடணனுக்காக வேண்டிய பாடல் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.*

*''தம்பியென நினைந்து, இரங்கித் தவிரான், அத்தகவு இல்லா நம்பி! இவன்தனைக் காணின் கொல்லும். இறை நல்கானால் உம்பியைத் தான், உன்னைத் தான் அனுமனைத்தான், ஒரு பொழுதும் எம்பி பிரியானாக அருளுதி, யான் வேண்டினேன்''. (7627) இவன் குறை முடிப்பதாவது வாலியைக் கொன்று அரசளித்தலாகும். பின்பு - அக்குறையை முடித்தபின்பு. இவன் வினையின் செய்கை என்றது சீதை உள்ள இடம் தேடி, அவளை மீட்டற்குரிய செயல்களைச் செய்வதாகும். இராமன் சுக்கிரீவனுக்கு உறுதி கூறிய வண்ணம் உதவி செய்த பின்னர்ச் சுக்கிரீவனால் தனக்கு ஆகவேண்டிய காரியத்தையும் தவறவிடல் கூடாது என வாலி இராமனுக்குக் கூறினான். 135*

*அனுமன் ஆற்றல் பற்றி இராமனுக்குக் கூறுதல்*

***4070. 'மற்று இலேன் எனினும், மாய***
***அரக்கனை வாலின் பற்றி,***

***கொற்றவ! நின்கண் தந்து,***
***குரக்கு இயல் தொழிலும் காட்டப்***
***பெற்றிலேன்; கடந்த சொல்லின், பயன்***
***இலை; பிறிது ஒன்றேனும்,***
***"உற்றது செய்க!" என்றாலும், உரியன்***
***இவ் அனுமன் என்றான்.***

***கொற்றவ -*** *வெற்றியை உடையவனே!* ***மற்று இலேன் எனினும் -*** *உனக்கு வேறொரு பேருதவியைச் செய்யும் பேறு பெற்றிலேன் ஆயினும்;* ***மாய அரக்கனை -*** *வஞ்சனையில் வல்ல அரக்கனான இராவணனை;* ***வாலின் பற்றி-*** *என் வாலினால் சுற்றிப் பிடித்து;* ***நின்கண் தந்து -*** *உன்னிடம் கொணர்ந்துஒப்புவித்து;* ***குரக்கு இயல் தொழிலும் -*** *ஒரு குரங்காகிய எனக்கு இயன்றதொழிலையாவது;* ***காட்டப் பெற்றிலேன் -*** *செய்து காட்டும் பேறுபெறவில்லை;* ***கடந்த சொல்லின் -***

*நிகழ்ந்தது போனவற்றைச் சொல்வதால்;* ***பயன் இலை -*** *ஒரு பயனம் இல்லை;* ***உற்றது செய்க என்றாலும் -*** *நிகழும் இச்செயலைச் செய்வாயாக என்றாலும்;* ***பிறிது ஒன்றேனும் -*** *அன்றி வேறொரு செயலைச் செய்க என்றாலும்;* ***இவ் அனுமன் உரியன் -*** *(அதனைச் செய்து முடித்தற்கு) இந்த அனுமன் உரிய தகுதி உடையவன் ஆவான்;* ***என்றான் -*** *என்று வாலி இராமனுக்கு உறுதி கூறினான்.*

*இராவணனை வென்று அவனை வாலில் சுற்றி இராமனிடம் ஒப்படைக்க முடியாமைக்கு வாலி வருந்தினான். கழிந்த செயல்களுக்காக இரங்குதல் பயனற்றுப் போவதால் 'கடந்த சொல்லின் பயனில்லை' என்றான். குரக்கு இயல் தொழில் - விரைந்து தாவிச் சென்று பற்றி விடாப்பிடியாகக் கொணர்தல் - 'குரங்குப்பிடி' என்பது உலக வழக்கு. சுக்கிரீவன் மாட்டுப் பகைமை நீங்கி வாலி இரக்கம் கொண்டது போல, அனுமனின் திறமையை வெளிப்படுத்திப் பேசியதும் அவனது நல்ல பண்பைக் காட்டுகிறது. அனுமன் ஆற்றலை அவன் நன்கு அறிந்திருந்தனன் என்பதும்புலனாகிறது. 136*

***4071. 'அனுமன் என்பவனை - ஆழி***
***ஐய! - நின் செய்ய செங் கைத்***
***தனு என நினைதி; மற்று, என்***
***தம்பி நின் தம்பி ஆக***
***நினைதி; ஓர் துணைவர் இன்னோர்***
***அனையவர் இலை; நீ, ஈண்டு, அவ்***
***வனிதையை நாடிக் கோடி -***
***வானினும் உயர்ந்த தோளாய்!'***

***ஆழி ஐய -*** *சக்கராயுதத்தை உடைய தலைவனே!* ***வானினும் உயர்ந்த தோளாய் -*** *வானத்தை விட உயர்ந்த தோள்களை உடையவனே!* ***அனுமன் என்பவனை -*** *அனுமனை;* ***நின் செய்ய செங்கை -*** *உனது அழகிய சிவந்த கையில் ஏந்தியுள்ள;* ***தனு என நினைதி -*** *வில்லாகிய கோதண்டமே என நினைப்பாயாக.* ***மற்று -*** *மேலும்;* ***என் தம்பி நின் தம்பி ஆக நினைதி -*** *என் தம்பி சுக்கிரீவனை உன் தம்பியருள் ஒருவனாக நினைப்பாயாக;* ***இன்னோர் அனையவர் ஓர் துணைவர் இலை -*** *இவர்களைப்*

*போன்றவர்களாய் ஒப்பற்ற துணைவர்கள் வேறு பிறர் இலர்;* ***நீ*** *- ;* ***ஈண்டு*** *- இவர்களைத் துணையாகக் கொண்டு;* ***அவ்வனிதையை நாடிக் கோடி*** *- அந்தச் சீதாபிராட்டியைத் தேடிக் கொள்வாயாக.*

*ஆழி ஐய - ஆணைச் சக்கரத்தை உடைய தலைவனே எனப் பொருள் கொளலும் பொருந்தும். வானினும் உயர்ந்த தோளாய் என்ற தொடர்க்கு 'வானினும் உயர்ந்த மானக் கொற்றவ' (4067) என்ற இடத்துத் தந்த விளக்கத்தை நோக்குக. நின் தம்பியாக - என்றும் பிரியாத இலக்குவனாக எனவும் கொள்ளலாம். கையினின்று வில் நீங்காது நல்லோரைக் காத்து அல்லாரை அழித்துத் துணையாவது போல் அனுமன துணையாவன் என்பதால் 'அனுமன் என்பவனை நின் செய்ய செங்கைத் தனு என நினைதி' என்றான். தமையனைப் பிரிந்து சுக்கிரீவன் வருந்துவானாதலின்*

*அத்துன்பம் போக்க அவனையும் தம்பியாக ஏற்குமாறுவேண்டினான். அவர்கள் ஆற்றலையும் உணர்த்துவானாய் "ஓர் துணைவர் இன்னோர் அனையவர் இலை" என்றான். இங்கு அனுமனை இராமன் கைத்தனு எனக் கூறிய சிறப்பைக் காண்க.*
*137*

சுக்கிரீவனுக்கு வாலி புகன்ற அறவுரை

***4072. என்று, அவற்கு இயம்பி, பின்னர்,***
***இருந்தனன் இளவல் தன்னை***
***வன் துணைத் தடக் கை***
***நீட்டி வாங்கினன் தழுவி, 'மைந்த!***
***ஒன்று உனக்கு உரைப்பது உண்டால்;***
***உறுதி அஃது உணர்ந்து கோடி;***
***குன்றினும் உயர்ந்த தோளாய்!***
***வருந்தலை!' என்று கூறும்:***

***என்று அவற்கு இயம்பி*** *- என்று (வாலி) அந்த இராமனுக்குக் கூறி;* ***பின்னர்*** *- அவனுக்குப் பின்னே;* ***இருந்தனன் இளவல் தன்னை*** *- (வருத்தத்துடன்) இருந்தவனாகிய தன் தம்பி சுக்கிரீவனை;* ***வன் துணைத் தடக்கை நீட்டி*** *- வலிய இரண்டு பெரிய கைகளையும் நீட்டி;* ***வாங்கினன் தழுவி*** *- சேர்த்து அணைத்துக் கொண்டு;* ***'மைந்த*** *- மைந்தனே!* ***குன்றினும் உயர்ந்த தோளாய்!*** *- மலையினும் உயர்ந்த தோள்களை உடையவனே!* ***உனக்கு உரைப்பது*** *- உனக்குச் சொல்வதான;* ***உறுதி ஒன்று உண்டு*** *- நன்மை தரும் காரியம் ஒன்று உள்ளது;* ***அஃது உணர்ந்து கோடி*** *- அதனை நீ உணர்ந்து ஏற்றுக் கொள்வாயாக;* ***வருந்தலை*** *- (எனது இறப்பினை எண்ணி) வருந்தாதே';* ***என்று கூறும்*** *- என்று கூறி மேலும் கூறுவான்.*

*பின்னர் இருந்தனன். தன் செயலுக்கு வெட்கமுற்று முன் வரத் தயங்கி இருந்தனன் எனலாம். பின்னர் - அதன் பிறகு எனவும் பொருள் கொள்ளலாம். தமையன் தந்தையோடு ஒப்பவனாதால், மகனொடு ஒப்பவனான தம்பியை 'மைந்த' என அன்பின் மிகுதியால் விளித்தான். வருந்தலை - முன்னிலை எதிர்மறை வினைமுற்று.*
*138*

*4073.* ***'மறைகளும், முனிவர் யாரும்,***
***மலர்மிசை அயனும், மற்றைத்***
***துறைகளின் முடிவும், சொல்லும் துணி***
***பொருள், துணி வில் தூக்கி,***
***அறை கழல் இராமன் ஆகி,***
***அற நெறி நிறுத்த வந்தது;***
***இறை ஒரு சங்கை இன்றி***
***எண்ணுதி; எண்ணம் மிக்கோய்.***

***எண்ணம் மிக்கோய்*** - *ஆலோசனையில் சிறந்தவனே!* ***மறைகளும்*** - *வேதங்களும்;* ***முனிவர் யாரும்*** - *எல்லா முனிவர்களும்;* ***மலர்மிசை அயனும்***- *தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகனும்;* ***மற்றைத் துறைகளின் முடிவும்***- *மற்ற சாத்திரங்களின் முடிபுகளும்;* ***சொல்லும் துணி பொருள்*** - *சொல்லுகின்ற தேர்ந்த பொருளாகிய பரம்பொருள்;* ***துணிவில் தூக்கி*** - *(பகைவரைத்) தண்டிக்கும் வில்லை ஏந்திக் கொண்டு;* ***அறை கழல் இராமன் ஆகி*** - *ஒலிக்கின்ற கழலணிந்த இராம பிரானாகிய;* ***அறநெறி நிறுத்த வந்தது***- *உலகில் அறநெறியை நிலை நிறுத்துவதற்காக அவதரித்து உள்ளது.* ***இறைஒரு சங்கை இன்றி*** - *இவ்வுண்மையை ஒரு சிறிதும் சந்தேகம் இல்லாமல்;* ***எண்ணுதி*** - *மனத்தில் கொள்வாய்.*

*அழித்தற்கரிய தன்னைக் கொல்ல நல்ல துணைவனைச் சுக்கிரீவன் தன் ஆலோசனைத் திறத்தால் பெற்றவனாதலின் 'எண்ணம் மிக்கோய்' என வாலி விளித்தான். பரம்பொருளே இராமனாக வந்துள்ளான் என வாலி சுக்கிரீவனுக்கு உணர்த்தினான். இக்கருத்து நூலின் பல இடங்களில் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் உணர்த்தப்பட்டுள்ளது.*

***''காலமாக் கணிக்கும் நுண்மைக் கணக்கையும் கடந்து நின்ற மூலமாய் முடிவு இலாத மூர்த்தி இம் முன்பன்'' (1585)***

***''மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய காலமும் கணக்கும் நீத்த காரணன் - கை வில் ஏந்தி . . . . . அயோத்தி வந்தான்'' (5884)***

*என வரும் இந்நூலின் அடிகள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன. 139*

*4074.* ***'நிற்கின்ற செல்வம் வேண்டி நெறி***
***நின்ற பொருள்கள் எல்லாம்***
***கற்கின்றது இவன்தன் நாமம்;***
***கருதுவது இவனைக் கண்டாய்;***
***பொன் குன்றம் அனைய தோளாய்!***
***பொது நின்ற தலைமை நோக்கின்,***
***எற் கொன்ற வலியே சாலும்;***
***இதற்கு ஒன்றும் ஏது வேண்டா.***

***பொன் குன்றம் அனைய தோளாய் -*** *பொன் மயமான மேருமலை போன்ற தோள்களை உடையவனே!* ***நிற்கின்ற செல்வம் வேண்டி -*** *என்றும் அழியாமல் நிலைத்து நிற்கும் செல்வமான வீடுபேறு வேண்டி;* ***நெறி நின்ற பொருள்கள் எல்லாம் -*** *அதற்குரிய நல்லொழுக்க நெறியைக் கடைபிடித்து நின்ற உயிர்கள் யாவும்;* ***இவன்தன் நாமம் கற்கின்றது -*** *இவ்விராமனுடைய திருப்பெயரினையே நாவால் பயில்கின்றன;* ***இவனைக் கருதுவது -*** *இவ்விராமனையே மனத்தால் தியானிக்கின்றன;* ***கண்டாய் -*** *இதனை உணர்வாய்.* ***பொதுநின்ற தலைமை நோக்கின் -*** *பொதுவாக இவனுடைய சிறப்பை நோக்கினால்;* ***எற்***

***கொன்ற வலியே சாலும் -*** *என்னைக் கொன்ற வன்மையொன்றே சான்றாகப் போதும்;* ***இதற்கு ஒன்றும் ஏது வேண்டா -*** *இதற்குச் சான்று வேறொன்றும் வேண்டுவதில்லை.*

*பிற செல்வங்கள் போல் அல்லாது அழியாமல் நிலைத்து நிற்கும் சிறப்புடைத்தாதலின் 'நிற்கின்ற செல்வம்' என்றான். இதனைச் 'சிறு காலை இலா, நிலையோ திரியா, குறுகா, நெடுகா, குணம் வேறுபடா, உறுகால் கிளர்பூதம் எலாம் உகினும் மறுகா நெறி' (2606) எனச் சரபங்கர் குறிப்பிடுவர். சென்று அடையாத திரு என்று தேவாரம் கூறுவது இதுவே. நெறி நின்ற பெபருள்கள் - உயிர்கள். நெறி என்றது ஞானம், யோகம், பத்தி, பிரபத்தி எனவும் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவும் இவ்வாறு பகுத்துரைக்கப்படும் நல்லொழுக்க நெறிகளை, 'கற்கின்றது இவன்தன் நாமம்' என்று இராம நாமத்தின் பெருமை கூறப்பட்டது. 'கற்பார் இராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ' (திருவாய் மொழி 7.5.1) என்பர் நம்மாழ்வார். தான் பெற்ற நல் உணர்வைத் தன் தம்பியும் பெற விரும்பியதால் 'கருதுவது இவனைக் கண்டாய்' என உணர்த்தினான். இராமனை நினைப்போர் வீடுபேறு அடைவர் என்பதைவாலி வதையில் காண்பதோடு, விராடன், இந்திரன், கவந்தன், முதலானோர் துதிகளாலும் உணரலாம். இராமன் பரம்பொருளே என்பதை ஆங்காங்கே கவிச்சக்கரவர்த்தி நிலைநாட்டி அறிவுறுத்துவதையும் காணலாம். பரம்பொருளான இறைவன் அம்புமட்டுமே வாலியின் மார்பைத் துளைக்கவல்லது என்னும்போது வாலியின் வன்மைபுலனாகிறது. 140*

***4075. 'கைதவம் இயற்றி, யாண்டும் கழிப்ப***
***அருங் கணக்கு இல் தீமை***
***வைகலும் புரிந்துளாரும், வான்***
***உயர் நிலையை, வள்ளல்***
***எய்தவர் பெறுவர்என்றால், இணை***
***அடி இறைஞ்சி, ஏவல்***
***செய்தவர் பெறுவது, ஐயா! செப்பல்***
***ஆம் சீர்மைத்து ஆமோ?***

***ஐயா -*** *ஐயனே!* ***கைதவம் இயற்றி -*** *வஞ்சனைகள் பல செய்து;* ***யாண்டும் கழிப்ப அரும் -*** *எவ்விடத்தும் தீர்த்துக் கொள்வதற்கு அரிய;* ***கணக்கு இல் தீமை -*** *எண்ணற்ற பாவச் செயல்களை;* ***வைகலும் புரிந்துளாரும் -*** *நாள்தோறும் செய்தவர்களும்;* ***வள்ளல் எய்தவர் -*** *வள்ளல் தன்மையுடைய இராமனால் அம்பெய்து கொல்லப்பட்டவர்களா யின்;* ***வான் உயர் நிலைமை-*** *மிக உயர்ந்த நிலையான வீடுபேற்றை;* ***பெறுவர் என்றால்-***

*அடைவார்கள் என்றால்;* ***இணை அடி இறைஞ்சி -*** *அவ்விராமனதுஇரண்டு திருவடிகளை வணங்கி;* ***ஏவல் செய்தவர் -*** *அவனிட்ட பணிகளைச் செய்தவர்கள்;* ***பெறுவது -*** *பெறும் பேற்றின் சிறப்பு;* ***செப்பல் ஆம் சீர்மைத்து ஆமோ -*** *சொல்லக்கூடிய தன்மையையுடையதாகுமோ?*

*ஐய என்றது அன்பினால் வந்த மரபுவழு அமைதி யாண்டும் கழிப்பரும் கணக்கில் தீமை - எவ்விடத்தும் எத்தகைய பிராயச்சித்தங்களாலும் தீர்த்துக்*

*கொள்ள முடியாத பாவச் செயல். பெரும்பாவங்களை நாள்தொறும் செய்தவர்களும் இரமனால் கொல்லப்பட்டால் வீடுபேறு எய்துவர் என்பது விராடன், கவந்தன், கரன் முதலிய அரக்கர் பல்லாயிரவர் எனத் தீயோர் பலர் இராமன் செஞ்சரம் பட்டு உயர்கதி பெற்றமையால் அறியலாம். புரிந்துளாரும்- இழிவு சிறப்பும்மை. தன்னை யடைந்தாரின் தகுதி நோக்காது அனைவர்க்கும் வீடுபேறு அளித்தளின் இராமனை 'வள்ளல்' எனக் குறித்தான். தீவினை புரிந்தவர்களும் வீடுபேறு பெறுவர் என்றால், நல்வினைப் பயனால் அவன் இணையடி தொழுது ஏவல் புரிவார் பெறும் பேறு சொல்லுதற்கரிது எனக்கூறி, அத்தகைய பேற்றினைச் சுக்கிரீவன் பெற்றுள்ளான் என வாலி பாராட்டினான். 'தீமை வைகலும் புரிந்துளார்' என்புழித் தன்னையும் 'இணையடி இறைஞ்சி ஏவல் செய்தவர்' என்புழித் தன் தம்பி சுக்கிரீவனையும் உளப்படுத்திக் கூறிய நயம் காண்க. சரபங்கர் இராமனைக் கண்டு மகிழ்ந்து வீடுபேறு அடையும் நிலையில்,*

***'அண்டமும் அகிலமும் அறிவு அரு நெறியால் உண்டவன் ஒரு பெயர் உணர்குநர் உறுபேறு எண்தவ நெடிது எனின், இறுதியில் அவனைக் கண்டவர் உறு பொருள் கருதுவது எளிதோ? (2630)***

*எனப் போற்றுதல் காண்க.*

*இப்பாடல் ஒன்று உரைக்கப் புகுந்து அதனால் மற்றொன்றை விளங்கக் கூறல் என்னும் மரபு பற்றித் 'தொடர்நிலைச் செய்யுள் பொருட்பேறணி' என்பதில் அடங்கும். 141*

***4076. 'அருமை என், விதியினாரே***
***உதவுவான் அமைந்தகாலை?***
***இருமையும் எய்தினாய்; மற்று***
***இனிச் செயற்பாலது எண்ணின்,***
***திரு மறு மார்பன் ஏவல்***
***சென்னியின் சேர்த்தி, சிந்தை***
***ஒருமையின் நிறுவி, மும்மை***
***உலகினும் உயர்தி அன்றே.***

***விதியினாரே -*** *ஊழ்வினையே;* ***உதவுவான் அமைந்த காலை -*** *துணையாவதற்குப் பொருந்தும் பொழுது;* ***அருமை என் -*** *அடைதற்கு அருமையானது யாது உளது? (எதுவுமில்லை);* ***இருமையும் எய்தினாய் -*** *இம்மை, மறுமை இன்பங்களை எல்லாம் நீ அடைந்தாய்.* ***இனிச் செயற்பாலது எண்ணின் -*** *இனி நீ செய்யத்தக்கது யாதெனக்*

*கருதுமிடத்து;* ***திருமறு மார்பன் -*** *திருமகளையும் ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவினையும் மார்பில் கொண்ட திருமாலாகிய இராமனின்;* ***ஏவல் சென்னியில் சேர்த்தி -*** *கட்டளையைத் தலை மேற்கொண்டு;* ***சிந்தை ஒருமையின் நிறுவி -*** *மனத்தை (அவனுக்குக் குற்றவேல் புரிவதாகிய) ஒருமை நிலையில் நிறுத்தி;* ***மும்மை உலகினும் உயர்தி -*** *மூன்று உலகங்களிலும் சிறப்புற்று உயர்வாயாக.*

*விதியே வந்து உதவுகையில் கிடைத்தற்கரியது ஒன்றுமில்லை என்பது உலகறிந்த உண்மை. 'விதியே நல்கின் மேவல் ஆகாது ஏன்?' (3808) எனச் சுக்கிரீவன்*

*உரைத்தது காண்க. விதியினார் - உயர்வு கருதி உயர்திணைச்சொல்லால் கூறினான். திணை வழுவமைதி. விதியினாரே - ஏகாரம்தேற்றுப்பொருள். ஏவல் சென்னியில் சேர்த்தல் - கட்டளையைத் தலைமேற்கொண்டு பணிவுடன் செய்து முடித்தலைக் குறிக்கும் மற்று - வினைமாற்று. 142*

***4077. 'மத இயல் குரக்குச் செய்கை***
***மயர்வொடு மாற்றி, வள்ளல்***
***உதவியை உன்னி, ஆவி***
***உற்றிடத்து உதவுகிற்றி;***
***பதவியை எவர்க்கும் நல்கும்***
***பண்ணவன் பணித்த யாவும்***
***சிதைவு இல செய்து, நொய்தின்***
***தீர்வு அரும் பிறவி தீர்தி.***

***மத இயல் குரக்குச் செய்கை -*** *அறியாமையால் செருக்குறும் இயல்பாகிய குரங்கின் செயலையும்;* ***மயர்வொடு -*** *மயக்கத்தையும்;* ***மாற்றி -*** *அறவே போக்கி;* ***வள்ளல் உதவியை உன்னி -*** *வள்ளலாகிய இராமன் உனக்குச் செய்த உதவியை மறவாமல் உள்ளத்தில் கொண்டு;* ***உற்றிடத்து -*** *அவனுக்கு ஓர் இடையூறு ஏற்பட்ட காலத்தில்;* ***ஆவி உதவுகிற்றி -*** *உனது உயிரையும் கொடுத்து உதவிபுரிவாயாக.* ***பதவியை எவர்க்கும் நல்கும் -*** *உயர்பதவியாகிய வீடுபேற்றை எல்லோர்க்கும் வழங்கும்;* ***பண்ணவன் -*** *கடவுளாகிய இராமன்;* ***பணித்த யாவும் -*** *கட்டளையிட்ட செயல்களையெல்லாம்;* ***சிதைவு இல செய்து -*** *குறையில்லாதவனாய்ச் செய்து;* ***தீர்வு அரும் பிறவி -*** *எளிதில் நீக்குதற்கரிய பிறவியை;* ***நொய்தில் தீர்தி -*** *எளிதில் நீங்கப் பெறுவாய்.*

*'மத' என்பது மடமையினை உணர்த்தும் உரிச்சொல். அதன் காரியமாகிய 'செருக்கு' என்னும் பொருளில் இங்கு வந்தது. குரக்குச் செய்கை - அறிவுக்குறைவாலும், சபல புத்தியாலும், திரிபுணர்ச்சியாலும் செய்யும் குரங்கின் செயல்கள். மயர்பு - இயற்கைப் பேதைமையாலும் மதுபானத்தாலும் மனம் மயங்குதல். வள்ளல் உதவி - பகைவனைக் கொன்று, மனைவியை மீட்டு, நாட்டாட்சியினையும் கொடுத்தமை. உற்றிடத்து = உற்று + இடத்து தொகுத்தல் விகாரம். உதவுகிற்றி - ஏவல் ஒருமை வினைமுற்று. கில் என்பது ஆற்றலுணர்த்தும் இடைநிலை. செய்ந்நன்றி மறவாமை பற்றி வாலி கூறுதல் நோக்கத்தக்கது. 143*

***4078. 'அரசியல் பாரம் பூரித்து***
***அயர்ந்தனை இகழாது, ஐயன்***

***மரை மலர்ப் பாதம் நீங்கா***
***வாழுதி; மன்னர் என்பார்***
***எரி எனற்கு உரியார் என்றே***
***எண்ணுதி; எண்ணம் யாவும்***
***புரிதி; ''சிற்றடிமை குற்றம் பொறுப்பர்''***
***என்று எண்ணவேண்டா***

***அரசியல் பாரம் பூரித்து*** - *ஆட்சிப் பொறுப்பால் மனம் மிகக் களித்து;* ***அயர்ந்தனை இகழாது*** - *அறிவு மயங்கி இகழ்ச்சி செய்யாமல்;* ***ஐயன் மரை மலர்ப்பாதம்*** - *இராமனுடைய தாமரை மலர் போன்ற பாதங்களை;* ***நீங்கா வாழுதி*** - *விட்டு நீங்காமல் வாழ்வாயாக.* ***மன்னர் என்பார்*** - *அரசர்கள்;* ***எரி எனற்கு உரியார்*** - *பற்றி எரியும் நெருப்பு என்று உவமையாகக் கூறுதற்கு உரியவர்கள்;* ***என்றே எண்ணுதி*** - *என்றே நினைத்துக்கொள்;* ***எண்ணம் யாவும் புரிதி*** - *(இராமன்) நினைத்த காரியங்களை எல்லாம் (குறிப்பறிந்து) செய்வாய்.* ***சிற்றடிமை குற்றம் பொறுப்பர்*** - *அடித்தொண்டு புரியும் குற்றேவலாளர் செய்யும் குற்றங்களைப் பொறுத்துக் கொள்வார்கள்;* ***என்று எண்ண வேண்டா*** - *என்று நினைத்தல் வேண்டா.*

*குற்றேவல் செய்வார் அரசர்களிடம் பழக வேண்டிய முறை பற்றி வாலி உரைத்தனன். ஆட்சிப்பொறுப்பேற்ற மகிழ்ச்சியில் மதி மயங்கல் இயல்பு எனவும் புலனாகிறது. மன்னர் எரி எனக்கு உரியார் - 'அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க, இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகுவார்' (குறள் 691) என்றமை காண்க. பொறுப்பர் என அரசர் வெறுப்பன செய்யற்க என உரைக்கும் குறட்பாக்களின் (698, 699, 700) பொருள்களும், இங்குப் பொருந்துவன. ''அளையுறை பாம்பும் அரசும் நெருப்பும், முழையுறை சீயமும் என்றிவை நான்கும், இளைய, எளிய பயின்றன என்றெண்ணி இகழின் இழுக்கம் தரும்'' (ஆசாரக் கோவை - 84), ''பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார், கிழமை பிறிதொன்றும் கொள்ளார் வெகுளின் மன்'' (நாலடி - 46) ''கைவரும் வேந்தன் நமக்கு என்று காதலித்த, செவ்வி தெரியாது உரையற்க! ஒவ்வொரு கால், எண்மையனேனும், அரியன் பெரிது அம்மா; கண் இலன், உள் வெயர்ப்பினான்'' (நீதி நெறிவிளக்கம் 45) என்றமையம் காண்க. மரை - தாமரை என்பதன் முதற்குறை.* *144*

*சுக்கிரீவனை இராமனிடம் அடைக்கலப்படுத்தல்*

***4079. என்ன, இத்தகைய ஆய***
***உறுதிகள் யாவும், ஏங்கும்***
***பின்னவற்கு இயம்பி, நின்ற***
***பேர் எழிலானை நோக்கி,***
***'மன்னவர்க்கு அரசன் மைந்த!***
***மற்று இவன் சுற்றத்தோடும்***
***உன் அடைக்கலம்' என்று உய்த்தே,***
***உயர்கரம் உச்சி வைத்தான்.***

***என்ன இத்தகைய ஆய*** - *என்று இத்தகைய தன்மையனவான;* ***உறுதிகள் யாவும்*** - *நன்மை பயக்கும் அறிவுரைகளையெல்லாம்;* ***ஏங்கும் பின்னவற்கு இயம்பி*** - *(தன் இறப்பினை எண்ணி) வருந்தும் தம்பி சுக்கிரீவனுக்குச் சொல்லி;* ***நின்றபேர் எழிலானை***

***நோக்கி** - தன்முன் நின்ற பேரழகனான இரரமனை நோக்கி; **'மன்னவர்க்கு அரசன் மைந்த** - வேந்தர் வேந்தனாகிய தசரதன் புதல்வனே! **இவன் சுற்றத்தோடும் -***

*"சுக்கிரீவனாகிய இவன் தன் சுற்றத்தாருடன்; **உன் அடைக்கலம் -** உனக்கு அடைக்கலப் பொருளாவான்"; **என்று உய்த்தே -** என்று சொல்லி (சுக்கிரீவனை இராமன் பால்) செலுத்தி; **உயர் கரம் -** உயர்த்திய கைகளை; **உச்சி வைத்தான் -** தலைமேல் வைத்து வணங்கினான்.*

*ஏங்கும் பின்னவன் தமையன இறப்பிற்காகவும்; அந்த இறப்பிற்குத் தான் காரணமானதையும் எண்ணி வருந்தும் சுக்கிரீவன். பேரெழிலான் - உறுப்பு நலன்கள் அனைத்தையும் பெற்றவன். 'இவன் வடிவு என்பது ஓர் அழியா அழகுடையான்' (1926); 'அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும்' (2344), என இராமன் பேரழகு குறிக்கப்படல் காண்க.*

*உயர்கரம் உச்சி வைத்தான் என்பதற்கு இராமனுடைய கையைப் பற்றிச் சுக்கிரீவன் தலை உச்சியில் கை வைத்தான் என்றும் 'வாலி சுக்கிரீவன் தலையில் கை வைத்து அடைக்கலமாகக் கொடுத்தான் என்றும் பொருள் கூறுவாருளர்.*
*145*

*அங்கதன் வருகை*

***4080. வைத்தபின், உரிமைத் தம்பி மா***
***முகம் நோக்கி, 'வல்லை***
***உய்த்தனை கொணர்தி, உன்தன் ஓங்கு***
***அரு மகனை' என்ன,***
***அத் தலை அவனை ஏவி***
***அழைத்தலின், அணைந்தான் என்ப,***
***கைத்தலத்து உவரி நீரைக்***
***கலக்கினான் பயந்த காளை.***

***வைத்த பின் -** (சுக்கிரீவனைச் சுற்றத்தோடு அடைக்கலமாக ஏற்குமாறு) கையினைத் தலைமேல் வைத்த பிறகு; **தம்பி மாமுகம் நோக்கி -** தம்பி சுக்கிரீவனது துயரத்தால் பொலி விழந்த முகத்தைப் பார்த்து; **உன்தன் ஓங்கு அரு மகனை -** உன்னுடைய சிறந்த அரும்புதல்வனான அங்கதனை; **வல்லை உய்த்தனை கொணர்தி -** விரைவில் அழைதத்துக் கொண்டுவருவாய்; **என்ன -** என்று கூறி; **அத்தலை அவனை ஏவி அழைத்தலின் -** (அங்கதன் இருந்த) அவ்விடத்திற்குச் சுக்கிரீவனை அனுப்பி அழைத்தமையால்; **கைத்தலத்து உவரி நீரை -** தன் கைகளால் கடலை; **கலக்கினான் பயந்த காளை -** கடைந்த வாலி பெற்ற மகனாகிய அங்கதன்; **அணைந்தான் -** அங்கு வந்து சேர்ந்தான்.*

*வாலியின் உடன்பிறப்பு ஆதலின் சுக்கிரீவன் 'உரிமைத் தம்பி' எனக் குறிக்கப் பெற்றான். 'உன்தன்மகன்' என்றது; தனக்கும் தம்பிக்கும் வேறுபாடு நீங்கியமையானும், இனிச் சுக்கிரீவனை அங்கதனைத் தன் மகனாகக் காக்க வேண்டிய கடமை பற்றியும் கூறியதாகும். உவரி நீர் என்பது உப்பு நீரையுடைய கடலைக்*

*குறிப்பதெனினும், இங்கு வாலி கலக்கியது என்றதால், அது பாற்கடலைக் குறிக்கும். வாலி கடல் கடைந்ததைக் கவிச் சக்கரவர்த்தி (3955, 3957, 3960, 3961, 4085, 4106, 6997) பல பாடல்களில் கூறியுள்ளமை காண்க. காளை - உவமை ஆகுபெயர் என்ப -அசை.*
*146*

*அங்கதன் புலம்பல்*

***4081. சுடருடை மதியம் என்னத்***
***தோன்றினன்; தோன்றி, யாண்டும்***
***இடருடை உள்ளத்தோரை***
***எண்ணினும் உணர்ந்திலாதான்,***
***மடலுடை நறு மென் சேக்கை***
***மலை அன்றி, உதிர வாரிக்***
***கடலிடைக் கடந்த காதல்***
***தாதையை, கண்ணின் கண்டான்.***

***யாண்டும் -** எப்பொழுதும்; **இடருடை உள்ளத்தோரை -** துன்ப மடைந்த மனத்தாரை; **எண்ணினும் உணர்ந்திலாதான் -** மனத்தாலும் எண்ணி அறியப்பெறாதவனாகிய அங்கதன்; **சுடருடை மதியம் என்ன -** ஒளிபொருந்திய முழு நிலவு போல; **தோன்றினன் -** அங்கு வந்து சேர்ந்தனன்; **தோன்றி -** அங்ஙனம் வந்து; **மடலுடை நறுமென் சேக்கை மலை அன்றி -** பூவிதழ்களாகிய மணம் மிக்க மென்மையான படுக்கை யாகிய மலையின் மீதன்றி; **உதிரவாரிக் கடலிடை -** இரத்தப் பெருக்காகிய கடலிடை; **கிடந்த காதல் தாதையை -** கிடந்த தன் அன்பிற்குரிய தந்தையை; **கண்ணின் கண்டான் -** தன் கண்களால் கண்டான்.*

*அங்கதனின் வடிவ அழகிற்குக் கலைகள் நிறைந்த முழுமதி உவமை ஆயிற்று. சுடருடை மதி. ஒளிக் கற்றையாகிய கலைகள் நிறைந்த முழுமதி. வாலியின் ஆட்சியில் எவரும் எப்பொழுதும் துனப்ம் அடைந்தது இல்லையாதலின் அங்கதன் துன்புற்றார் நிலை இத்தகையது என மனத்தாலும் எண்ணி அறியும் வாய்ப்பினைப் பெறாதவனாதலின் 'எண்ணினும் உணர்ந்திலாதான்' என்றார். எண்ணினும் உணர்த்திலாதான் என்றதால் துன்புற்றாரை நேரில் கண்ட நிலையும், துன்புற்றார் அடையும் துன்பம் பற்றிக் கேட்டறியும் நிலையும் பெற்றிலன் என்பது பெறப்படுகிறது. அது வரை துன்பம் என்பதையே சிறிதும் உணராதபடி வளர்ந்து வந்த அங்கதன் சிறப்பு உணர்த்தப்பட்டது. எண்ணினும் இறந்தது தழீஇய எச்ச உம்மை. துன்பர் அறியாத அங்கதன் தந்தையை, நறுமென் மலர்களால் அமைக்கப் பெற்ற படுக்கை மலையிலன்றி, குருதிக் கடலில் காணவேண்டிய அவல நிலைக்கு உள்ளானான் என்ற இரக்கம் தோன்ற 'இடருடை உள்ளத்தாரை எண்ணினும் உணர்ந்திலாதான் மடலுடை நறுமென் சேக்கை மலையன்றி, உதிர வாரிக் கடலிடைக் கிடந்த காதல் தாதையைக் கண்ணின் கண்டான்' என்றார். நறுமலர்ப் படுக்கையாகிய மலை என்றதும், குருதிப் பெருக்காகிய கடல் என்றதும் உருவக அணியின் பாற்படும். இன்ப மலையில் காணாது தந்தையைத் துன்பக் கடலிடைக் கண்டான் என்று கூறிய நயம் காண்க. 147*

***4082. கண்ட கண் கனலும் நீரும்***
***குருதியும் கால, மாலை,***
***குண்டலம் அலம்புகின்ற குவவுத்***
***தோள் குரிசில், திங்கள்***
***மண்டலம் உலகில் வந்து கிடந்தது;***
***அம் மதியின் மீதா***
***விண்தலம் தன்னின் நின்று ஓர்***
***மீன் விழுந்தென்ன, வீழ்ந்தான்.***

***குண்டலம் அலம்புகின்ற -*** *குண்டலங்கள் அசைந்து ஒளிரப் பெற்ற;* ***மாலை குவவுத்தோள் -*** *மாலை அணிந்து திரண்டு உயர்ந்த தோள்களை உடைய;* ***குரிசில் -*** *நம்பியாகிய அங்கதன்;* ***கண்ட கண் -*** *(குருதி வெள்ளத்தில் தன் தந்தையைக்) கண்ட கண்கள்;* ***கனலும் நீரும் -*** *(வெகுளித்) தீயையும், கண்ணீரையும்;* ***குருதியும் கால -*** *இரத்தத்தையும் சொரிய;* ***திங்கள் மண்டலம் -*** *சந்திர மண்டலம்;* ***உலகில் வந்து கிடந்தது -*** *வானத்திலிருந்து மண்ணகத்தில் வந்து விழுந்து கிடந்ததாக;* ***அம்மதியின் மீதா -*** *(சந்திர மண்டலத்தின் நடுவே சந்திரன் ஒளி வட்டத்துடன் காட்சி தருவதுபோல தன் குண்டலங்களின் ஒளிவட்ட நடுவே கிடந்த) அந்தச் சந்திரன் போன்ற வாலி மீது;* ***விண்தலம் தன்னின் நின்று -*** *வானத்திலிருந்து;* ***ஓர் மீன் விழுந்தென்ன -*** *ஒரு நட் சத்திரம் விழுந்தது போல;* ***வீழ்ந்தான் -*** *வாலியின் உடல்மீது விழுந்தான்.*

*தன் தந்தையைக் கொன்ற பகைவன் மீதெழுந்த சினத்தால் தீயையும், தந்தையைக் குருதிக் கடலில் கண்டதால் ஏற்பட்ட துன்பத்தால் கண்ணீரையும், தந்தைக்கே இந்நிலை ஏற்பட்டதா என்ற அதிர்ச்சியால் குருதியையும் கண்கள் சிந்தின என்க. காதில் அணிந்த குண்டலங்கள் தோள் அளவும் தொங்குவதால் 'குண்டலம் அலம்புகின்ற குவவுத்தோள்' என்றார். சந்திரனைச் சுற்றி வட்டமான ஒளி கொண்டது சந்திர மண்டலம். தான் அணிந்திருந்த குண்டல ஒளியுடன் வாலி விழுந்த கிடந்த தோற்றம் சந்திர மண்டலத்திற்கும் வாலிக்குச் சந்திரனும் உவமையாயின. வாலி மீது அங்கதன் விழுந்தது விண்மீன் ஒன்று சந்திரன் மீது வீழ்ந்ததை ஒத்தும் காணப்பட்டது. இல்பொருள் உவமை அணி. மீன் - மின் என்னும் வினையடியாகப் பிறந்த பெயர். குரிசில் - ஆண்பால் சிறப்புப் பெயர்; விழுந்தென்ன - விழுந்ததென்ன என்பதன் தொகுத்தல் விகாரம்.* *148*

***4083. 'எந்தையே! எந்தையே! இவ் எழு***
***திரை வளாகத்து, யார்க்கும்,***
***சிந்தையால், செய்கையால், ஓர்***
***தீவினை செய்திலாதாய்!***
***நொந்தனை! அதுதான் நிற்க, நின்***
***முகம் நோக்கிக் கூற்றம்***
***வந்ததே அன்றோ, அஞ்சாது? ஆர்***
***அதன் வலியைத் தீர்ப்பார்?***

***எந்தையே எந்தையே -*** *(அங்கதன் தன் தந்தையை நோக்கி) என் தந்தையே! என் தந்தையே!* ***இவ்எழுதிரை வளாகத்து -*** *மேன்மேலும் எழுகின்ற அலைகளையுடைய*

*கடலால் சூழப்பட்ட உலகத்தில்;* ***யார்க்கும் சிந்தையால் செய்கையால் -*** *எவர்க்கும் மனத்தாலும் செயலாலும்;* ***ஓர் -***

***தீவினை செய்திலாதாய் -*** *ஒரு தீய காரியத்தையும் செய்யாதவனே!* ***நொந்தனை -*** *(அங்ஙனமிருந்தும்) நீ இவ்வாறு துன்பம் அடைந்தாய்;* ***அது தான் நிற்க -*** *அஃது ஒரு புறம் இருக்க;* ***நின் முகம் நோக்கி -*** *உன் முகத்தைப் பார்த்து;* ***கூற்றம் வந்ததே அன்றோ -*** *(அஞ்சாமல்) யமனும் (உன் உயிர் கொள்ளுதல் பொருட்டு) வந்து விட்டான் அல்லவா?* ***அஞ்சாது அதன் வலியைத் தீர்ப்பார் ஆர் -*** *இனி அச்சம் கொள்ளாமல் கூற்றுவனின் வலிமையை அழிக்க வல்லார் வேறு யாருளர்? (ஒருவரும் இலர்).*

*எந்தையே என்னும்அடுக்கு அவலம் பற்றியது. எழுதிரை வளாகம் என்பதற்கு இந்த ஏழு கடல்கள் சூழ்ந்த நிலப்பரப்பில் எனவும் பொருள் கொள்ளலாம். எழுதிரை - எழுகின்ற திரை எனின் வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழியாய் கடலைக் குறிக்கும். எழுதிரை - ஏழு கடல்கள் எனப் பண்புத்தொகையாயின் 'திரை' சினையாகுபெயராய்க் கடலைக் குறிக்கம். வாலி தனக்குப் பகைவராயினாரை வருத்துவானேயன்றி, தானாகப் பிறர்க்குத் துன்பம் செய்வதைச் சிந்திப்பதும் செய்வதும் இலன் என்பதால் 'சிந்தையும் செய்கையும் கூறப்பட்டதால் இனம் பற்றி 'மொழியும்' கொள்ளப்படவேண்டும். வாலி, சுக்கிரீவன் மீது பகைமை பாராட்டியதும், உருமையைக் கவர்ந்ததும் நீதியின் பாற்பட்ட செயலாகவே வாலியின் பக்கத்தில் கருதப்பட்டதால், அங்கதனும் அச்செயல்களைத் தவறு எனக் கருதிலன். அதனால் தன் தந்தை முக்கரணங்களாலும் தீங்கு செய்யாதவன் என எண்ணினான். 'கூற்றும் என் பெயர் சொலக்குலையும்' (3962) என வாலி கூற னானாக யமனும் நேர்நின்று உயிர்நீக்க வந்துவிட்டானே எனத் தந்தைக்கு நேரிட்ட எளிமை நிலை நோக்கி இரங்கினான். இனி யமனை வெல்வார் எவருமிலர் என்றதால் வாலியின் பெருவலி புலப்படுகிறது. 149*

***4084. 'தறை அடித்ததுபோல் தீராத் தகைய,***
***இத் திசைகள் தாங்கும்***
***கறையடிக்கு அழிவு செய்த***
***கண்டகன் நெஞ்சம், உன்தன்***
***நிறை அடிக் கோல வாலின்***
***நிலைமையை நினையும் தோறும்,***
***பறை அடிக்கின்ற அந்தப் பயம்***
***அறப் பறந்தது அன்றே?***

***தறை அடித்தது போல் -*** *(நிலத்துடன் சேர்த்து) ஆணி அறையப் பட்டாற் போன்று;* ***தீராத் தகைய -*** *இடம் விட்டுப் பெயராத தன்மையை உடையவனாய்;* ***இத்திசைகள் தாங்கும் -*** *இந்த எட்டுச் திசைகளையும் தாங்கிக் கொண்டிருக்கும்;* ***கறை அடிக்கு -*** *உரல் போன்ற அடிகளை உடைய எட்டுத் திக்கு யானைகளுக்கு;* ***அழிவு செய்த கண்டகன் நெஞ்சம் -*** *தோல்வியை உண்டாக்கிய கொடியவனான இராவணின் நெஞ்சம்;* ***உன்தன் நிறை அடிக்கோல வாலின் -*** *உன்னுடைய பருத்த அடியையுடைய அழகிய வாலின்;* ***நிலைமையை நினைவும் தோறும் -*** *வலிமையை நினைக்கும் போதெல்லாம்;* ***பறை அடிக்கின்ற***

*பறை அடித்துக் கொள்வது போலத் துடிக்கின்ற;* ***அந்தப் பயம் -*** *அந்த அச்சமானது;* ***அறப் பறந்தது அன்றே -*** *(இப்பொழுது நீ இறத்தலால்) முழுவதும் போய்விட்டதல்லவா?*

*தறையடித்தல் - ஆணி அறைதல். எட்டுத்திக்கு யானைகள் இடம் பெயராமல் நின்றமைக்குத் 'தறை அடித்தது போல்' என்றது உவமை. கறை அடி - உரல் போலும் அடிகளை உடையது என அன்மொழித் தொகையாய் யானையைக் குறித்தது. கண்டகன் - முள் போன்ற கொடிய செயலை உடைய இராவணன். அரக்கர்களைக் கண்டகர் எனக் கூறுவதை, 'கண்டகர்' இடிநிகர் வினையம்' (187). 'கண்டகர் மெய்க்குலம்' (2998), கண்டகர் உய்ந்தார் உவர் (3247) ஆகிய இடங்களிலும் காணலாம். தன்னைத் தாக்கிய எட்டுத் திசை யானைகளின் தந்தங்கள் தனது மார்பில் தாங்கி ஒடியும் படி அவ் யானைகளை வென்று அடக்கினான் ஆதலின் அவனைக் 'கறையடிக்கு அழிவு செய்த கண்டகன்' என்றான். நிறையடிக் கோல வால் - வாலின் அழகு பற்றியே அவனுக்கு 'வாலி' எனப் பெயர் வந்தது என்பது நோக்கத்தக்கது. அந்த வாலியின் எண்திசை யானைகளை வென்ற இராவணனைப் பிணித்தான் வாலி. அந்த வாலை நினைத்த மாத்திரத்தே இராவணன் நெஞ்சு பதறும். அங்ஙனம் இராவணன் வாலை நினைத்துப் பதைக்கும் இயல்பை அனுமன் நகைச்சுவையாக 'வெஞ்சின வாலி மீளான்; வாலும் போய் விளிந்ததன்றே' (5888) என்று கூறல் காண்க. இராவணன், வாலியின் வாலால் கட்டுண்ட செய்தியை 'இந்திரச் செம்மல் பண்டோர் இராவணன் என்பான் தன்னை, சுந்தரத் தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றிச், சிந்துரக் கிரிகள் தாவித் திரிந்தனன்' (6997) எனப் பின்னர் அங்கதன் உரைப்பதும் காண்க. 'நீலமா மணிநிறத் தரக்கனை இருபது கரத்தொடொல்க வாலினால் கட்டிய வாலியார்' (3-91-8) எனத் திருஞானசம்பந்தரும் பாராட்டுவார். இத்தகைய வாலியின் வால் வலிமை கூறி அங்கதன் வருந்தினான்.* *150*

***4085. 'குல வரை, நேமிக் குன்றம்,***
***என்ற வான் உயர்ந்த கோட்டின்***
***தலைகளும், நின் பொன் - தாளின்***
***தழும்பு, இனி, தவிர்ந்த அன்றே?***
***மலை கொளும் அரவும், மற்றும்,***
***மதியமும், பலவும் தாங்கி,***
***அலை கடல் கடைய வேண்டின்,***
***ஆர் இனிக் கடைவர்? - ஐயா!***

***ஐயா -*** *ஐயனே!* ***குலவரை -*** *(எட்டுத்திசைகளிலும் உள்ள) எட்டுக் குல மலைகள்;* ***நேமிக் குன்றம் -*** *சக்கரவாளகிரி;* ***என்ற வானுயர்ந்த -*** *என்று பெயர் சொல்லப்பெற்று வானோங்கிய;* ***கோட்டின் தலைகளும் -*** *மலையின் சிகரங்களும்;* ***நின் பொன் தாளின் தழும்பு -*** *நின் அழகிய பாதங்களை வைத்தால் பதியும் அடிச்சுவடாகிய தழும்பினை;* ***இனி, தவிர்ந்த அன்றே -*** *இனி நீங்கப் பெற்றன அல்லவா?* ***மலை கொளும் அரவும் -*** *மந்தர மலை எனும் மத்தினைச் சுற்றி வளைத்துக் கொள்ளவல்ல வாசுகி என்னும் பாம்பினையும்;* ***மதியமும் -*** *(அடை தூணாகிய) சந்திரனையும்;* ***பலவும் தாங்கி-*** *(அடைகல்லாகிய*

*ஆமை முதலிய) பிறவற்றையும் பொறுத்து;* ***அலை கடல் கடைய வேண்டின்-*** *(மீண்டும்) அலைகளை உடைய பாற்கடலைக் கடைய வேண்டிவரின்;* ***இனிஆர் கடைவர் -*** *இனி யார் வந்து கடைந்து அமுது அளிக்கவல்லவர்?(ஒருவரும் இலர்).*

*அங்கதன் இப்பாடலில் தன் தாதையின் தாள் வலிமையினையும் கைகளின் வலிமையினையும் கூறி வருந்தினான். "எட்டு மாதிரத்திறுதி, 'நாளும் உற்று அட்டமூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்" (3825) ஆதலின் வாலி எண்திசைகளுக்குத் தாவிச் செல்கையில் அவன் கால்கள் பட்ட சுவடுகள் எட்டுக் குல பர்வதங்களின் சிகரங்களிலும், சக்கரவாளகிரியின் சிகரத்திலும் தழும்புகளாகப் பதிந்தன. இப்போது வாலி இறந்தால் அத்தழும்புகள் இலவாகும் என்பதாம். பாற்கடலைக் கடைவதற்கு வேணடிய மந்தர மலை, வாசுகி முதலிய சாதனங்கள் இருந்தும் கடையும் ஆற்றல் பெற்ற வாலி இல்லாமையால் பாற்கடலைக் கடைந்து அமுது பெறமுடியாது என்று உரைத்தான். தேவர்களாலும் அசுரர்களாலும் கடைந்து எடுக்க முடியாத அமுதத்தைத் தனி ஒருவனே கடைந்த கொடுத்த வாலியின் கைவன்மை பின்னிரண்டடிகளில் கூறப்பட்டது. "சுழலும் வேலையைக் கடையும் தோளினான்" (3823) "தேவர் உண்ண மந்தரப் பொருப்பால் வேலை கலக்கினான்" (6997) என முறையே அனுமனும் அங்கதனும் உரைப்பதும் காண்க. நேமிக்குன்றம் - சக்கரவாளகிரி. இஃது இவ்வுலகத்தின் எல்லைகளைச் சுற்றி வளைந்து அமைந்திருக்கும் மலைத் தொடர் என்ப. வாலியின் கால்வன்மையும் கைவன்மையும் பாடலில் கூறிய நயம்காண்க. 151*

***4086. 'பஞ்சின் மெல் அடியாள் பங்கன்***
***பாதுகம் அலாது, யாதும்***
***அஞ்சலித்து அறியாச் செங் கை***
***ஆணையாய்! அமரர் யாரும்***
***எஞ்சலர் இருந்தார் உன்னால்; இன்***
***அமுது ஈந்த நீயோ,***
***துஞ்சினை; வள்ளியோர்கள், நின்னின்***
***யார் சொல்லற்பாலார்?'***

***பஞ்சின் மெல் அடியாள் பங்கன் -*** *பஞ்சைக் காட்டிலும் மென்மையான திருவடிகளை உடைய உமையம்மையை ஒரு பாகத்தே கொண்ட சிவபெருமானின்;* ***பாதுகம் அல்லது -*** *திருவடிகளை அல்லாது;* ***யாதும் அஞ்சலித்து அறியா -*** *வேறு எதையும் வணங்கி அறியாத;* ***செங்கை ஆணையாய் -*** *சிவந்த கைகளையும் ஆணைச்சக்கரத்தையும் உடையவனே!* ***உன்னால் -*** *(அமுதம் கொடுத்த) உன்னால்;* ***அமரர் யாரும் எஞ்சலர் இருந்தார் -*** *தேவர்கள் எல்லோரும் (இறந்து போய் எண்ணிக்கையில் குறையாமல்) நிலைத்து வாழ்கிறார்கள்;* ***இன் அமுது ஈந்த நீயோ -*** *இனிய அமுதத்தை அவர்களுக்கு வழங்கிய நீயோ;* ***துஞ்சினை -*** *இறந்தவனானாய்;* ***நின்னின் -*** *உன்னை விட;* ***வள்ளியோர் கள் -*** *வள்ளல் தன்மை உடையவர்கள் என்று;* ***சொல்லற் பாலார் யார் -*** *சொல்லத்தக்கவர் வேறு யார் இருக்கிறார்கள்? (ஒருவரும் இலர்).*

*தன் கைவன்மையால் பெற்று அமுதத்தைத் தான் உண்டு அழிவின்றி இராது, அதனைத் தேவர்களுக்கு அளித்து அவர்களை அமரர் ஆக்கிய வள்ளன்மையைக் கூறி அங்கதன் வருந்தினான். நெடிது நாள் வாழ வைக்கும் அரிய நெல்லிக்கனியைத் தான்*

*உண்ணாது ஈந்த அதிகமான் செயலை ஈண்டு ஒப்பிட்டுக் காணலாம். வாலியின் பூத உடல் அழிந்தாலும் வள்ளன்மைச் செயலால் அவன் புகழ் நிலைத்திருக்கும் என்பதுபெறப்படுகிறது. 152*

வாலியின் தேறுதல் மொழி

***4087. ஆயன பலவும் பன்னி,***
***அழுங்கினன் புழுங்கி, நோக்கி,***
***தீ உறு மெழுகின் சிந்தை***
***உருகினன் செங் கண் வாலி,***
***'நீ இனி அயர்வாய்அல்லை' என்று***
***தன் நெஞ்சில் புல்லி,***
***'நாயகன், இராமன், செய்த நல்வினைப்***
***பயன் இது' என்றான்.***

***ஆயன பலவும் பன்னி*** - *அவ்வாறாகிய பலவற்றையும் மீண்டும் மீண்டும் கூறி;* ***புழுங்கி அழுங்கினன்*** - *புலம்பி வருந்தியவனாய்;* ***நோக்கி*** - *(தன் தந்தையைப்) பார்த்து;* ***தீ உறு மெழுகின்*** - *அனலில் பட்ட மெழுகினைப் போல;* ***சிந்தை உருகினன்*** - *நெஞ்சம் உருகி வருந்தினான்.* ***செங்கண் வாலி*** - *(துன்பத்தால்) சிவந்த கண்களை உடைய வாலி;* ***'நீ இனி அயர்வாய் அல்லை*** - *(தன் மகனை நோக்கி) இனி நீ வருந்துதல் வேண்டா';* ***என்று*** - *என்று கூறி;* ***தன் நெஞ்சில் புல்லி*** - *அவனைத் தன் மார்போடு அணைத்துக்கொண்டு;* ***'நாயகன் இராமன்*** - *எல்லா உயிர்கட்கும் தலைவனான இராமன்;* ***செய்த இது*** - *செய்ததான இச்செயல்;* ***நல்வினைப் பயன் என்றான்-*** *யான் முன் செய்த புண்ணியத்தின் பயனாகும்' என்றான்.*

*பன்னுதல் - பலமுறை கூறுதல். சிந்தை உருகியமைக்கு நெருப்பில் பட்ட மெழுகு உவமையாம். நாயகன் இராமன் என்பதில் இராமனின் தலைமை உணர்த்தப்பட்டது. 'பூத நாயகன், நீர் சூழ்ந்த புலிக்கு நாயகன், அப்பூமேல் சீதை நாயகன், வேறு உள்ள தெய்வ நாயகன், நீ செப்பும் வேத நாயகன், மேல் நின்ற விதிக்கு நாயகன்' (6994) என அங்கதன் இராவணனுக்கு இராமனின் நாயகச் சிறப்பைக் கூறுவது காண்க. இராமன் எனக்குச் செய்த இச்செயல் தான் செய்த நல்வினைப் பயன்' என வாலி அங்கதனுக்க அறிவுறுத்தி ஆறுதல் கூறினான். 153*

***4088. 'தோன்றலும், இறத்தல்தானும், துகள்***
***அறத் துணிந்து நோக்கின்,***
***மூன்று உலகத்தினோர்க்கும், மூலத்தே***
***முடிந்த அன்றே?***
***யான் தவம் உடைமையால், இவ்***
***இறுதி வந்து இசைந்தது; யார்க்கும்***
***சான்று என நின்ற வீரன்***
***தான் வந்து, வீடு தந்தான்.***

***துகள் அறத் துணிந்து நோக்கின் -*** *குற்றங்கள் இல்லாமல் ஆராய்ந்து பார்க்குங்கால்;* ***தோன்றலும் இறத்தல்தானும் -*** *பிறந்தலும், இறத்தலும்;* ***மூன்று உலகத்தினோர்க்கும் -*** *மூன்று வகைப்பட்ட உலகங்களில் வாழ்வார்க்கும்;* ***மூலத்தே முடிந்த (அன்றே) -*** *தொடக்கத்தி லேயே வரையறுக்கப்பட்டு முடிவுபெற்ற செயல்களாகும்.* ***யான் தவம் உடைமையால் -*** *யான் முன்னர்ச் செய்த பெருந்தவம் உடைமையால்;* ***இவ் இறுதி வந்து இசைந்தது -*** *இத்தகைய நல்ல முடிவு வந்து சேர்ந்தது;* ***யார்க்கும் சான்று என நின்ற வீரன் -*** *அனைத்தும் தோன்றி மறைவதைத் தானழியாமல் கண்டு கொண்டு சாட்சியாய் நிற்கின்ற வீரனான இராமன்;* ***தான் வந்து வீடு தந்தான் -*** *தானே (என்பால் எழுந்தருளி) வீடு பேற்றைத் தந்தருளினான்.*

*மூன்று உலகத்தினோர்க்கும் என்றதால் மானிடர், தேவர், நரகர் ஆகியோர்க்குத் தாம் செய்யும் வினைப் பயன் காரணத்தால் பிறப்பும் இறப்பும் உண்டு என்பது பெறப்பெற்றது. 'மூன்று உலகத்தினோர்க்கும்' எனச் சிறப்புப் பற்றி உயர்திணைமேல் வைத்துக் கூறியிருப்பினும் இனம்பற்றி ஏனை அஃறிணை உயிர்களும் கொள்ளப்படும். பிறப்பும் இறப்பும் எல்லா உயிர்கட்கு இயல்பாய் வருவதால், தனக்கு ஏற்பட்ட இறப்புக் குறித்து வருந்த வேண்டா என மகனைத் தேற்றுகையில் யாக்கை நிலையாமையும், உலக இயல்பும் உணர்த்தினான். 'இறப்பு எனும் மெய்ம்மையை, இம்மை யாவர்க்கும், மறப்பு எனும் அதனின் மேல் கேடு மற்று உண்டோ?' (1333), ''இறக்குமாறு இது என்பான் போல் முன்னை நாள் இறந்தான், பின் நாள் பிறக்குமாறு இது என்பான் போல் பிறந்தனன் பிறவா வெய்யோன்'' (1976), 'உறங்குவது போலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு' (குறள் - 339), 'சாதலும் பிறத்தல் தானும் தன் வினைப் பயத்தினாகும்' (சீவக - 269) என்பன இங்கு ஒப்பு நோக்கத்தக்கன.*

*தான் முன்பு செய்த தவப்பயன் காரணத்தால் இத்தகைய மரணம் தனக்கு இராமனால் வந்தது என வாலி மகிழ்ந்தான். உலகத்து உயிர்கள் செய்யும் செயல்களையெல்லாம் எப்பொருளினும் உறைபவனாகிய இறைவன் அறிதலால் ''யார்க்கும் சான்று என நின்ற வீரன்'' எனக் குறித்தான். திருமாலின் ஆயிரம் பெயர்களுள் 'ஸாக்ஷி' என்பதும் ஒரு பெயராகும். கிடைத்தற்கரிய வீடுபேற்றினை இராமன் தானே எளியனாய்க் குற்றம் செய்த வாலி முன்னர்த் தோன்றி அளித்தான் என்பதில் இராமனின் பெருங்கருணை புலப்படுதல் காண்க. வாலி, தான் இனிப் பிறவாப் பேற்றினைத் தனக்கு உதவிய இராமனைப் போற்றினான்என்க.*
*154*

***4089. 'பாலமை தவிர் நீ; என்***
***சொல் பற்றுதிஆயின், தன்னின்***
***மேல் ஒரு பொருளும் இல்லா***
***மெய்ப்பொருள், வில்லும் தாங்கி,***
***கால் தரை தோய நின்று,***
***கட்புலக்கு உற்றது அம்மா!***
***''மால் தரும் பிறவி நோய்க்கு***
***மருந்து'' என, வணங்கு, மைந்த!***

***மைந்த -*** *மகனே!* ***பாலமை தவர்நீ -*** *சிறுபிள்ளைத்தனமாக அழுவதை நிறுத்துவாயாக;* ***என் சொல் பற்றுதி ஆயின் -*** *என் வார்த்தையை உறுதியெனக் கொள்வாயானால்;*

***தன்னின் மேல் ஒரு பொருளும் இல்லா -*** *தன்னைக் காட்டிலும் மேம்பட்டதொரு பொருளும் இல்லாத;* ***மெய்ப்பொருள் -*** *பரம்பொருள் தானே;* ***கால் தரை தோய நின்று -*** *தனது திருவடி மண்ணில் படும்படியாக (மனித வடிவங்கொண்டு) நின்று;* ***வில்லும் தாங்கி -*** *வில்லையும் கையில் ஏந்திக் கொண்டு;* ***கட்புலக்கு உற்றது -*** *நம் கண்களால் கண்டு கொள்ளும் வண்ணம் (இராமனாகி) வந்துள்ளது.* ***மால் தரும் பிறவி நோய்க்கு -*** *(எனவே) மயக்கத்தைத் தரும் பிறவி என்னும் நோயை அறவே நீக்குதற்குரிய;* ***மருந்தென வணங்கு -*** *அருமருந்தெனக் கருதி இராமனை வணங்குவாய்.*

*'மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருள் கால் தரை தோய நின்று' என்றது இறைவன் தன் பரத்துவத்தை விட்டுச் சௌலப்பியத்தை (எளிமை) மேற்கொண்ட நிலையை உணர்த்தும். வில்லும் தாங்கி என்றது - நினைத்த மாத்திரத்தில் எதையும் இயற்ற வல்ல பரம் பொருளாய் இருந்தும் நல்லோர் இடம் தீர்க்க, அல்லோரைத் தண்டிக்க மானிட வடிவம் எடுத்து அதற்கேற்ப வில்லையும் தாங்கிக் தயாராய் நிற்றலைக் காட்டும். கடவுளின் கால்கள் தரையில் தோயாச் சிறப்புடையவாயினும், நம் பொருட்டு அக்கடவுள் இராமபிரானாக அவதரித்துத் தன் கால்தரை தோய் நின்றான் என்பது கருத்து. 'எந்தாய்' இரு நிலத்தவோ, நின் இணை அடித் தாமரை தான்' (2613) என இந்திரன் துதித்தமை காண்க. ஞானியர், யோகியோர் போன்றோர் தம் ஞானக் கண்ணாலும் அறிதற்கரிய பரம்பொருள் இங்கு ஊனக் கண்ணால் காண்பதற்கும் காட்சிக்கு எளியவனாகி வந்த கருணையை வாலி பாராட்டினான் - அம்மா - வியப்பிடைச் சொல். புலக்கு - புலத்துக்கு - அத்துச் சாரியை தொக்கது. மந்திரம், மருந்து, தந்திரம் இவற்றால் தீர்க்க முடியாத பிறவி நோய்க்கு அருமருந்து இராமனே என்பதைத் தெளிந்த வாலி தன் மகனுக்கும் அதை உணர்த்தி அவனை வணங்குமாறு வேண்டினான். "வெந்திறல் அரக்கர் விடவேர் முதல் அறுப்பான் வந்தனன் மருத்துவன்" (2674) என அகத்தியர் இராமனைப் புகழ்தலை நோக்குக. கால்தரை, மால்தரும் என்பன எதுகை ஓசை நயம் நோக்கித் திரியாமல் இயல்பாய் நின்றன. பாலமை - சிறுபிள்ளைத் தன்மையால் அழுவது, விளையாட்டுத்தன்மை போன்றன. 155*

***4090. 'என் உயிர்க்கு இறுதி***
***செய்தான் என்பதை இறையும் எண்ணாது,***
***உன் உயிர்க்கு உறுதி செய்தி;***
***இவற்கு அமர் உற்றது உண்டேல்,***
***பொன் உயிர்த்து ஒளிரும் பூணாய்!***
***பொது நின்று, தருமம் நோக்கி,***
***மன்னுயிர்க்கு உறுதி செய்வான்***
***மலர்அடி சுமந்து வாழ்தி.'***

***பொன் உயிர்த்து ஒளிரும் பூணாய் -*** *பொன்னால் செய்யப்பட்டு ஒளி வீசும் அணிகலன்களை உடையவனே!* ***என் உயிர்க்கு இறுதி செய்தான் -*** *எனது உயிருக்கு (இந்த இராமன்) அழிவைச் செய்தான்;* ***என்பதை இறையும் எண்ணாது -*** *என்பதைச் சிறிதும் கருதாமல்;* ***உன் உயிர்க்கு உறுதி செய்தி -*** *உனது உயிர்க்கு நிலையான நன்மையைத் தரும் செயல்களைச் செய்வாயாக;* ***இவற்கு அமர் உற்றது உண்டேன் -*** *(அதாவது) இராமனுக்குப் பகைவரோடு போர் செய்யும் நிலைமை ஏற்படுமானால்;* ***பொது நின்று தருமம் போற்றி -*** *நடுவுநிலைமையில் பிறழாது நின்று அறத்தை*

*ஆதரித்து;* ***மன்னுயிர்க்கு உறுதி செய்வான் -*** *நிலைபெற்ற எல்லா உயிர்களுக்கும் நன்மை செய்பவனான இராமனது;* ***மலரடி சுமந்து வாழ்தி -*** *தாமரை மலர் போன்ற திருவடிகளைத்தலை மேற் கொண்டு - (அவன் ஏவிய தொண்டுகளைச் செய்து) வாழ்வாயாக.*

*உயிர்க்கு இறுதி - மரணம். உயிர்க்கு என்றும் அழிவில்லை யாதலின் 'மன்னுயிர்' எனப்பட்டது. இராமனுக்குத் தொண்டு செய்வதால் நிலையான ஆக்கங்கள் பெறுதல் உறுதி என்பதால் 'உன் உயிர்க்கு உறுதி செய்தி' என்றான். 'இராமன் தன் தந்தையைக் கொன்றவன் என்னும் எண்ணத்தை விட்டு உண்மையான தந்தையும் தெய்வமும் இனி இராமனே எனத் தெளிந்து அவன் இட்ட பணியை உவந்து செய்யுமாறு வாலி அங்கதனுக்கு அறிவுறுத்தினான். தருமம் காக்கவே இராமன் வந்துள்ளான் என்பதை வாலி அங்கதனுக்கு அறிவித்தலைக் காணலாம். இராமன் திருவடிகளின் அழகும் மென்மையும் கருதி 'மலரடி'என்றான். 156*

*வாலி அங்கதனை இராமனிடம் கையடைப்படுத்தல்*

***4091. என்றனன், இனைய ஆய***
***உறுதிகள் யாவும் சொல்லி,***
***தன் துணைத் தடக் கை***
***ஆரத் தனயனைத் தழுவி, சாலக்***
***குன்றினும் உயர்ந்த திண் தோள்***
***குரக்குஇனத்து அரசன், கொற்றப்***
***பொன் திணி வயிரப் பைம்***
***பூண் புரவலன்தன்னை நோக்கி.***

***என்றனன் -*** *என்று;* ***இனைய ஆய உறுதிகள் -*** *இத்தன்மையன வான நன்மை பயக்கும் செய்திகள்;* ***யாவும் சொல்லி -*** *எல்லாம் (அங் கதனுக்குச்) சொல்லி;* ***குன்றினும் சால உயர்ந்த -*** *மலைகளைவிட மிக உயர்ந்ததான;* ***திண்தோள் -*** *வலிய தோள்களை உடைய;* ***குரக்கு இனத்து அரசன் -*** *வானரக் கூட்டத்திற்கு அரசனாகிய வாலி;* ***தன் துணைத் தடக்கை -*** *தன்னுடைய இருபெரும் கரங்களால்;* ***தனயனை***

***ஆரத்தழுவி -*** *தன் மைந்தனான அங்கதனை இறுக அணைத்துக் கொண்டு;* ***கொற்றம் -*** *வெற்றியை உடைய;* ***பொன்திணி வயிர பைம் பூண் -*** *பொன்னால் செய்யப்பட்டு வயிரம் முதலிய மணிகள் பதிக்கப் பெற்ற பசும்(பொன்) அணிகலன்களை அணிந்த;* ***புரவலன் தன்னை நோக்கி -*** *அரசனான இராமனைப் பார்த்து . . . . 157*

***4092. 'நெய் அடை நெடு வேல் தானை***
***நீல் நிற நிருதர் என்னும்***
***துய் அடை கனலி அன்ன***
***தோளினன், தொழிலும் தூயன்;***
***பொய் அடை உள்ளத்தார்க்குப்***
***புலப்படாப் புலவ! மற்று***

***உன் கையடை ஆகும்' என்று,***
***அவ் இராமற்குக் காட்டும் காலை,***

***பொய் அடை உள்ளத்தார்க்கு -*** *பொய்ம்மை பொருந்திய மனத்தை உடையவர்க்கு;* ***புலப்படாப் புலவ -*** *அறியப்படாத தூய அறிவுடையவனே!* ***நெய் அடை நெடுவேல் தானை -*** *"(இவன்) நெய் பூசப்பெற்ற நீண்ட வேலேந்திய சேனைகளை உடைய;* ***நீல்நிற நிருதர் என்னும் -*** *கருமைநிறம் பொருந்திய அரக்கர்கள் என்னும்;* ***துய் அடை -*** *பஞ்ச மூட்டைக்கு;* ***கனலி அன்ன தோளினன் -*** *நெருப்புப் போன்ற தோள்களை உடையவன்;* ***தொழிலும் தூயன் -*** *செயலாலும் தூய்மை உடையவன்;* ***மற்று உன் கையடை ஆகும் -*** *இனி, இவன் உன் அடைக் கலப் பொருளாவான்;* ***என்று -*** *என்று கூறி;* ***அவ்இராமற்கு காட்டும் காலை -*** *(அங்கதனை) அந்த இராமபிரானுக்குக் காட்டிய பொழுது . . .*

*பொய் என்பது தன்னலம், தான் எனும் மாயையால் மனத்தில் தோன்றும் அஞ்ஞானம். அத்தகைய பொய்ம்மை நிறைந்த மனமுடையார்க்குப் புலப்படாது மறைந்தும், மெய்ம்மையுடையார் உள்ளத்தில் விழுமிய ஞானப் பொருளாய் வெளிப்பட்டும் அருள் புரிய வல்லன் இராமனே என்பதால் 'பொய் அடை உள்ளத்தார்க்குப் புலப்படாப் புலவ' எனப் போற்றினான். 'பொய்யர்தம் பொய்யினை மெய்யர் மெய்யை' (திருவாசகம்.206) எனவும் "மெய்யர்க்கே மெய்யனாகும் விதியிலா என்னைப் போலப் பொய்யர்க்கே பொய்யனாகும் புட்கொடி உடைய கோமான்" (திவ்யப்-886) எனவும் சான்றோர் பாடியமை காண்க. நெய் அடை நெடுவேல் - வேலுக்குத் துருப்பிடிக்காமல் இருக்க நெய் தடவுவர். நிருதர் சேனையைப் 'பஞ்சு' என உருவகம் செய்தமைக்கேற்ப அவர்களை அடியோடு அழிக்க வல்ல தோளினனாகிய அங்கதனைக் 'கனலியன்ன தோளினன்' என உவமைப்படுத்திக் கூறினான். நீல் - நீலம் என்பதன் குறை. நிருதர் - நிருதி என்பவளிடம் தோன்றியவர் - இது தத்திதாந்தம். கனலி - 'இ' சாரியை. மனத்தாலும் மொழியாலும் தூயனாதலோடு செயலாலும் தூயவன் என்பதைக் குறிக்கத்*

*'தொழிலும் தூயன்' என்றான். தொழிலும் - உம்மை எச்ச உம்மை. கையடை- கையில் ஒப்புவிப்பது; அதாவது அடைக்கலமாக்குவது. பகைவர்களை வெல்ல வல்ல அங்கதன் தோள் வலிமையினையும், குற்றமற்ற தூய்மை நிலையினையும் வாலி இராமனக்குஅறிவித்தான். 158*

*வாலி வீடு பெறுதல்*

***4093. தன் அடி தாழ்தலோடும்,***
***தாமரைத் தடங் கணானும்,***
***பொன் உடைவாளை நீட்டி, 'நீ***
***இது பொறுத்தி' என்றான்;***
***என்னலும், உலகம் ஏழும்***
***ஏத்தின; இறந்து, வாலி,***
***அந் நிலை துறந்து, வானுக்கு***
***அப் புறத்து உலகன் ஆனான்.***

***தன் அடி தாழ்தலோடும்*** - *(அங்கதன்) தன் திருவடிகளில் விழுந்து வணங்கி அளவில்;* ***தாமரைத் தடங்கணானும்*** - *தாமரை மலர் போன்ற பெரிய கண்களை உடைய இராமனும்;* ***பொன் உடை வாளை நீட்டி*** - *(அவனை அடைக்கலமாக ஏற்றுக்கொண்டமைக்கு அறிகுறியாகத்) தனது அழகிய உடைவாளை (அங்கதனிடம்) நீட்டி;* ***நீ இது பொறுத்தி*** - *'நீ இதனை ஏற்றுக்கொள்வாய்';* ***என்றான்*** - *எனப் பணித்தான்;* ***என்னலும்*** - *அவ்வாறு இராமன் சொன்ன அளவில்;* ***உலகம் ஏழும் ஏத்தின*** - *எழுவகைப்பட்ட உலகில் வாழும் உயிர்களெல்லாம் இராமனைத் துதித்தன;* ***வாலி*** - *(அப்போது) வாலியானவன்;* ***அந்நிலை துறந்து, இறந்து*** - *பூத உடலுடன் கூடிய அந்த நிலையை விட்டு, இறந்து;* ***வானுக்கு அப்புறத்து உலகன் ஆனான்*** - *வானுலகிற்கும் அப்பாற்பட்டதான உயர்ந்த வீட்டுலகினை அடைந்தவனானான்.*

*உலகம் ஏழும் ஏத்தின - சுக்கிரீவனுக்குக் கேடு இழைத்த கொடிய வாலிக்கும், அவன் மைந்தனுக்கும் அருள்புரிந்த இராமனது கருணைப் பெருக்கை வியந்து பாராட்டின என்க. ஆற்றல்மிகு வீரர் தம்மை அடைக்கலமாக அடைந்தாரை ஏற்றமைக்கு அடையாளமாகத் தம்மிடமுள்ள உடை வாளைக் கொடுப்பர் என்பது இராமன் அங்கதனுக்கு உடைவாள் கொடுத்த செயலால் உணரப்படுகிறது. இத்தகைய அடைக்கலச் சிறப்பால் இராமனது உடைவாளை ஏந்துதற்குரிய சிறப்புப் பெற்றவன் அங்கதன் ஒருவனே என்ற உண்மையை 'அரியணை அனுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்த' என வரும் (10327) பாடலிலும் கவிச்சக்கரவர்த்தி உணர்த்தியுள்ளமை நினைத்தற்குரியது.*

*அந்நிலை துறந்து - உலகத் தொடர்பாகிய பாசப் பிணிப்பை அறவே விட்டொழிந்து உயிர் தூய்மையாதல், குற்றம் களைந்து ஞானம் பெற்ற காரணத்தாலேயே வாலி வானுக்கு அப்புறத்து உலகன் ஆனான். யான், எனது என்னும் செருக்கு அறுப்பான். வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும் (குறள் - 346) என்றார் வள்ளுவர்.*

*அங்கதனை வாலி இராமனிடம் அடைக்கலமாக அளிப்பதும், அவனுக்கு இராமன் உடைவாள் அளித்ததுமாகிய செய்திகள் வான்மீகம், அத்யாத்மம் ஆகிய நூல்களில் இல்லை. வாலி அங்கதனைச் சுக்கிரீவனிடத்து ஒப்படைத்து உயிர்நீத்தான் என்று அந்நூல்கள் கூறும். கம்பர் அங்கதனைச் சிறப்பிக்க வேண்டி, இராமன் அவனக்கு அடைக்கலம் அளித்து உடைவாளைக் கொடுத்துத் தன் காப்பாளனாகவும் ஏற்றான் என்பர். அங்கதனின் வீரத்தையும், பணிசெய்யும் பாங்கினையும் உணர்த்த 'அங்கதன் தூதுப்படலம்' ன ஒரு தனிப்படலமே பாடியுள்ளார். 'வைதாரையும் வாழ்வித்து வைகுந்தம் சேர்க்கும் பிரான்' என்ற போற்றுதலுக்கேற்ப இராமன் வாலிக்கு வீட்டுலகம் கொடுத்து அருளினான்.* *159*

*இராமன் அம்பு மீள்தல்*

***4094. கை அவண் நெகிழ்தலோடும், கடுங்***
***கணை, கால வாலி***
***வெய்ய மார்பு அகத்துள் தங்காது உருவி,***
***மேக்கு உயர மீப் போய்,***
***துய்ய நீர்க் கடலுள் தோய்ந்து,***
***தூய் மலர் அமரர் சூட்ட,***

***ஐயன் வெந் விடாத கொற்றத்து***
***ஆவம் வந்து அடைந்தது அன்றே.***

***அவண் கை நெகிழ்தலோடும் -*** *அப்பொழுது, (தன் மார்பில் ஊடுருவிய இராமன் அம்பைப் பிடித்திருந்த) கை தளர்ந்த அளவில்;* ***கடுங்கணை -*** *அந்தக் கொடிய அம்பு;* ***கால வாலி வெய்ய மார்பு அகத்துள் தங்காது -*** *யமன் போன்ற வாலியின் கொடிய மார்பினுள் தங்காமல்;* ***உருவி -*** *துளைத்து ஊடுருவிக்கொண்டு;* ***மேக்கு உயர மீப்போய் -*** *மேல் நோக்கி உயரத்தில் எழுந்து சென்று;* ***துய்யநீர்க் கடலுள் தோய்ந்து -*** *தூய்மையான நீரை உடைய கடலுள் படிந்து நீராடி;* ***தூய் மலர் அமரர் சூட்ட -*** *தூய்மையான மலர்களைத் தேவர்கள் சூட்டி வழிபட;* ***ஐயன் -*** *இராமபிரானின்;* ***வெந் விடாத -*** *முதுகை விட்டு நீங்காதுள்ள;* ***கொற்றத்து ஆவம் -*** *வெற்றி பொருந்திய அம்பறாத்தூணியில்;* ***வந்து அடைந்தது -*** *வந்து சேர்ந்தது.*

*காலன் வாலி - வாலிக்கு யமன் உவமை. கூற்றுவனைப் போல எதிர்ப்பட்டார் உயிரைக் கவரும் பேராற்றல் படைத்தவன். வெய்ய மார்பு - எத்தகைய படைக்கலங்களையும் தடுத்து நிறுத்த வல்ல வலிய மார்பு; வீரர் விரும்பும் மார்பு எனலுமாம். துய்ய என்பது தூய என்பதன் திரிபு. துய்ய நீர் - நீராடியவர்களின் தீவினை தீர்த்துத் தூய்மையாக்கும் புண்ணிய நீர். வெற்றிதரும் அம்புகளை உடைய புட்டில் ஆதலால் 'கொற்றத்து ஆவம்' எனப்பட்டது.*

*இராமன் அம்பு தன் செயலைச் செய்த பின், அவனது அம்பறாத் தூணியை அடைவது இயல்பு. அதனால் இங்கும் அந்த அம்பு வாலி மார்பகத்துள் தங்காது, உருவி, உயரச்சென்று, தூய கடலில் தோய்ந்து ஆவம் வந்து அடைந்தது. 'கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது, அப்புறம் கழன்று, கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்று அன்றே' (388) எனத் தாடகை வதைப் படலத்தில் கூறிய கம்பர் இராவணன் வதைப்படலத்தில் 'மார்பில் புக்கு ஓடி உயிர்*

*பருகி, புறம் போயிற்று இராகவன்தன் புனித வாளி' (9899) என உரைப்பார். இராவணன் மார்பில் பட்ட அம்பு பாற்கடலில் தூய் நீராடி, மீண்டும் அம்பறாத் தூணியை அடைந்தது (9900) என அதற்கு அடுத்த பாடலில் கூறுதல் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. அன்று, ஏ - அசைகள் 160*

*தாரை வாலிமேல் வீழ்ந்து புலம்பல்*

***4095. வாலியும் ஏக, யார்க்கும் வரம்பு***
***இலா உலகில் இன்பம்***
***பாலியா, முன்னர் நின்ற பரிதி***
***சேய் செங் கை பற்றி,***
***ஆல் இலைப் பள்ளியானும்,***
***அங்கதனோடும், போனான்;***
***வேல் விழித் தாரை கேட்டாள்;***
***வந்து, அவன் மேனி வீழ்ந்தாள்.***

***வாலியும் ஏக -*** *வாலியும் மேல் உலகத்தை அடைய;* ***யார்க்கும் -*** *எவர்க்கும்;* ***வரம்பு இலா உலகில் இன்பம் பாலியா -*** *எல்லையில்லாத வீடுபேறாகிய இன்பத்தை இனிதின் வழங்கி அருளும்;* ***ஆலிலைப் பள்ளியானும் -*** *(பிரளய காலத்தில்) ஆலின் இலையைப் படுக்கையாகக் கொண்ட (திருமாலின் அவதாரமாகிய) இராமனும்;* ***முன்னர் நின்ற -*** *தன் முன்னர் நின்ற;* ***பரிதி சேய் செங்கை பற்றி*** *- சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவனின் சிவந்த கைகளைப் பற்றிக் கொண்டு;* ***அங்கதனோடும் போனான் -*** *அங்கதனுடன் அவ்விடம் விட்டு அகன்று போனான்;* ***வேல் விழி தாரை கேட்டாள் -*** *வேற்படை போன்ற கண்களை உடைய தாரை வாலி இறந்த செய்தியைக் கேட்டு;* ***வந்து அவன் மேனி வீழ்ந்தாள் -*** *போர் நடைபெற்ற இடத்திற்கு வந்து வாலியின் உடல்மீது விழுந்தாள்.*

*வரம்பு இலா உலகம் - வீடுபேறு, காலம், இடம் என்னும் வரம்பின்றி அழிவின்றி இருப்பது. உலகமெல்லாம் அழியும் ஊழிக்காலத்தும் தான் அழிவின்றி, அவ்வுலகங்கள் எல்லாவற்றையும் தன் வயிற்றில் அடக்கிக் கொண்டு ஆலிலை ஒன்றில் கண் வளரும் திருமாலின் அமிசமாதல் பற்றி இராமனை 'ஆலிலைப் பள்ளியான்' என்றார். இஃது இறைவனின் பரத்துவத்தை விளக்கும். 'தன் காதலன் வைகும் ஆலிலை அன்ன வயிற்றினைப் பெய்வளைத் தளிர்க்கையால் பிசையும்' (1615), ''ஆலமோ ஆலின் அடையா? அடைக் கிடந்த பாலனோ?'' (3683), 'ஆலின் இலைப் பாலகனாய் அன்று உலகம் உண்டவனே' (பெருமாள் திருமொழி 8.7) என்பன ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன.*

*விழியின் கூர்மைக்கும், ஆடவர் மன உறுதியை அழித்து வருத்தும் தன்மைக்கும் வேல்உவமை. 161*

***4096. குங்குமம் கொட்டி என்ன, குவி***
***முலைக் குவட்டுக்கு ஒத்த***
***பொங்கு வெங் குருதி போர்ப்ப,***
***புரி குழல் சிவப்ப, பொன் - தோள்***
***அங்கு அவன் அலங்கல் மார்பில்***
***புரண்டனள் - அகன்ற செக்கர்,***
***வெங்கதிர் விசும்பில் தோன்றும் மின்***
***எனத் திகழும் மெய்யாள்.***

***குவிமுலைக் குவட்டுக்கு ஒத்த -*** *குவிந்த கொங்கை என்னும் மலைச் சிகரத்திற்குப் பொருந்த;* ***குங்குமம் கொட்டி அன்ன -*** *குங்குமக் குழம்பினைக் கொட்டியது போன்று;* ***பொங்கு வெங்குருதி -*** *(வாலியின் மார்பினின்று) பொங்கிப் பெருகிய வெம்மை மிக்க இரத்தப்பெருக்கு;* ***போர்ப்ப -*** *(அம்முலைக் குவடுகளில்) முழுவதும் பரவி மூடவும்;* ***புரிகுழல் சிவப்ப -*** *நெறிப்புடைய கூந்தல் சிவக்கவும்;* ***பொன் தோள் அங்கு அவன் -*** *அழகிய தோள்களையுடையவனாய் அவ்விடத்துக் கிடக்கின்ற வாலியின்;* ***அலங்கல் மார்பில் -*** *மாலை அணிந்த மார்பில்;* ***அகன்ற செக்கர் -*** *பரந்த செவ்வானமாகிய;* ***வெங்கதிர் விசும்பில் -*** *வெப்பமான சூரிய கிரணங்களையுடைய அந்தி வானத்தில்;* ***தோன்றும் மின் என -*** *தோன்றும் மின்னலைப் போல்;* ***திகழும் மெய்யாள் -*** *விளங்கும் மேனியை உடையவளாய்;* ***புரண்டனள் -*** *புரண்டு அழுதாள்.*

*தாரை வாலியின் மார்பில் வீழ்ந்து புரளும்போது, வாலியின் மார்பினின்று பெருகிய குருதி, தாரையின் மார்பு முழுவதும் படிந்த நிலை, இயற்கை அழகு நிறைந்த அக்கொங்கைக் குவடுகளுக்குப் பொருந்துமாறு செயற்கையழகாகக் குங்குமக் குழம்பினைக் கொட்டியது போன்றிருந்தது என்பதாம். இது தற்குறிப்பேற்ற உவமை அணி. அவள் தலைவிரிகோலமாய் அவன்மீது புரண்டு அழுததால் அவளது கருங்குழலும் குருதி படிந்து சிவந்ததால் 'புரிகுழல் சிவப்ப' என்றார். வாலியின் குருதி பொங்கும் மார்பிற்குச் செவ்வானமும், அவன் மார்பில் வீழ்ந்து புரளும் தாரைக்குச் செவ்வானத்தில் தோன்றிய மின்னலும் உவமை. துவளும் தன்மையாலும் ஒளியின் சிறப்பாலும் மின்னல் தாரைக்கு உவமை ஆயிற்று. வான்மீகத்திலும் இந்த உவமையே காணப்படுகிறது.*

*குங்குமம் - குங்குமக் குழம்பு முதலியனவற்றாலான மெய்ப்பூச்சு. அலங்கல் - அழகிற்கென அணிந்த மாலைகளும், போர்ப்பூ மாலையும். 162*

***4097. வேய்ங் குழல், விளரி நல் யாழ்,***
***வீணை, என்று இனைய நாண,***
***ஏங்கினள்; இரங்கி விம்மி உருகினள்;***
***இரு கை கூப்பித்***
***தாங்கினள் தலையில்; சோர்ந்து, சரிந்து***
***தாழ் குழல்கள் தள்ளி,***
***ஓங்கிய குரலால் பன்னி,***
***இனையன உரைக்கலுற்றாள்:***

***வேய்ங்குழல் -*** *புல்லாங்குழலின் ஒலியும்;* ***விளரி நல் யாழ் -*** *விளரி என்னும் இரங்கற் பண்ணில் சிறந்த யாழிசையும்;* ***வீணை -*** *வீணையின் ஒலியும்;* ***என்று இனைய நாண -*** *என்று இத்தன்மையனவான இன்னிசைகளெல்லாம் (தாரையின் குரலினிமைக்கு ஒப்பாகாமல்) வெட்கம் அடையுமாறு;* ***ஏங்கினள் -*** *வருந்தி;* ***இரங்கி விம்மி உருகினள் -*** *புலம்பிப் பெருமூச்சுவிட்டு மனம் உருகி;* ***இரு கை கூப்பித் தலையில் தாங்கினள் -*** *இரண்டு கைகளையும் தலைமீது குவித்து;* ***சோர்ந்து -*** *தளர்வுற்று;* ***சரிந்து தாழ் குழல்கள் தள்ளி -*** *சரிந்து வீழ்கின்ற கூந்தலைத் தள்ளிவிட்டுக் கொண்டு;* ***ஓங்கிய குரலால் -*** *உரத்த குரலினால்;* ***பன்னி -*** *பலவாறு திரும்பத் திரும்பச் சொல்லி;* ***இனையன உரைக்கலுற்றான் -*** *இவ்விதமாகப் புலம்பிக் கூறலானாள்.*

*குழல் - துளைக்கருவி; யாழ், வீணை - நரம்புக் கருவிகள். யாழ்வேறு வீணை வேறு என்பர். காலப்போக்கின் மாறுதலால் இரண்டும் ஒன்றெனக் கருதப்பட்ட நிலையும் உண்டு. விளரி - இரங்கற் பண். குழல், யாழ், வீணையென இனையன நாண என்றதால் தாரையின் குரலில் இனிமை உணர்த்தப்பட்டது. மகளிர்க்குத் தம் கணவன்மார் இறந்த நிலையில் தோன்றும் மெய்ப்பாடுகள் இங்கு நன்கு கூறப் பெற்றமை காண்க. மகளிர் அழுகை ஒலியை "குழல் இனைவது போல அழுதனள்" (புறம் 143 - 15), 'ஆம்பலங்குழலின் ஏங்கிக் கலங்கு அஞர் உறுவோள்' (நற்றிணை 113 - 12); 'குழலினும் இனைகுவள் பெரிதே' (ஐங்குறு நூறு - 306) குழலேங்குமாறு ஏங்கி அழுதார் கோதை மடவாரே' (சீவக - 2945) என இசைக் கருவியோடு இயைபுபடுத்திக் கூறும் இடங்கள் ஒப்புநோக்கத்தக்கன. ஏங்கினள்: முற்றெச்சம். 163*

கலிவிருத்தம்

**4098. 'வரை சேர் தோளிடை நாளும் வைகுவேன்,
கரை சேரா இடர் வேலை காண்கிலேன்;
உரை சேர் ஆர் உயிரே! என் உள்ளமே!
அரைசே! யான் இது காண அஞ்சினேன்.**

**உரை சேர் ஆர் உயிரே** - புகழ் பொருந்திய (என்) அரிய உயிரே! **என் உள்ளமே** - என் மனமே; **அரைசே** - என் அரசனே! **வரைசேர் தோளிடை** - மலையினை ஒத்து விளங்கும் உன் தோள்களைச் சார்ந்து; **நாளும் வைகுவேன்** - எந்நாளும் இனிது வாழும் இயல்பினளாகியயான்; **கரைசேரா இடர்வேலை** - கரை காண முடியாத துன்பக் கடலின் (எல்ை◌யை); **காண்கிலேன்** - காண இயலாதவளாய் உள்ளேன். **யான் இது காண அஞ்சினேன்** - யான் (இப்போது) நீ இறந்து கிடக்கும் இத்துன்பக் காட்சியைக் கண்ணால் காண்பதற்கும் அஞ்சுகின்றேன்.

ஆர் உயிரே, என் உள்ளமே என்றது, வாலியும், தாரையும் ஒரே உயிரினராய், ஒரே மனத்தினராய் ஒன்றியிருந்த சிறப்பை உணர்த்தும். தன்னைப் போற்றிக் காத்த காவலனாக விளங்கியதால் 'என் அரைசே' என்றாள். அரைசே - அரசே என்ற சொல் எதுகை நோக்கிப் போலியாகத் திரிந்தது. துன்பத்தின் கடுமையை விளக்கக் 'கரை சேரா இடர் வேலை' என்றனள். வாலியின் தோளாகிய இன்ப மலையில் வாழ்ந்து வந்த தாரை இப்போது கரை காணாத் துயர்க்கடலைக்

காணவும் இயலாது தவித்தாள் என்பதில் மலை, கடல் என வந்த நயம் காண்க. அங்கதனும் தன் தந்தையை மலர்மென் சேக்கை மலையில் அல்லாது குருதிக் கடலில் கண்டனன் (4081) என்ற இடத்தும் மலை, கடல் இடம் பெற்றமை காண்க. தன் கணவனுக்கு ஏற்பட்ட துயரநிலை, வாயினால் சொல்வதற்கும் ஒண்ணாத பெருந்துன்பமாதலின் 'இது' எனச் சுட்டினாள். தயரதனும் தன் வாயால் சொல்ல முடியாததை 'மற்றையது ஒன்றும் மற' (1522) எனக் கூறியது காண்க.
164

**4099. 'துயராலே தொலையாத என்னையும்,
பயிராயோ? பகையாத பண்பினாய்!
செயிர் தீரா விதி ஆன தெய்வமே!
உயிர் போனால், உடலாரும் உய்வாரோ?**

**பகையாத பண்பினாய்** - (என்னோடு) மாறுபடாத குணத்தை உடையவனே! **துயராலே தொலையாத என்னையும்** - உன்னை இழந்த துன்பத்தால் இறந்து படாத என்னையும்; **பயிராயோ** - (உன்னிடம்) அழைத்துக் கொள்ள மாட்டாயா? **செயிர் தீரா** - (என்னிடத்துச்) சினம் நீங்காத; **விதி ஆன தெய்வமே** - (எனது) விதியின் வடிவமான கடவுளே! **உயிர் போனால்** - உயிர் (உடலைவிட்டுப்) பிரிந்து போனால்; **உடலாரும் உய்வரோ** - உடம்பு மட்டும் அழியாது பிழைத்திருக்க வல்லதோ?

வாலியும் தாரையும் ஒரே உயிரினராய், ஒரே மனத்தினராய் ஒன்றி வாழ்ந்ததால் அவர்களிடையே கருத்து வேறுபட்டால் பகைமை (சண்டை) ஏற்பட்டதில்லை என்பது

*'பகையாத பண்பினாய்' என்ற தொடரால் புலனாகிறது. தான் குற்றமே செய்யினும் அதனைப் பொறுத்துக் கொண்டு தன்னொடு மாறுபடாத பண்பினைக் கொண்டவன் என்பதாலும் 'பகையா பண்பினாய்' என்றனள் எனலாம். வாலியின் உயிர்நீக்கம் கண்டும் தன் உயிர் நீங்காமல் இருத்தலால் 'என்னையும் பயிராயோ' என வேண்டினாள். தன் கணவன் உயிரைப்போக்கி, தன்னைத் துயரத்தில் ஆழ்த்திய விதியின் கொடுமையை நினைத்து 'செயிர் தீரா விதி ஆன தெய்வமே' என விளித்தாள். ஊழ், பாழ், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒரு பொருட் சொற்கள் எனப் பரிமேலழகர் குறித்தமை நினைவு கூர்க. (திருக். ஊழ். முன்னுரை). வாலியை உயிராகவும் தன்னை உடலாகவும் கருதிய தாரையின் மனநிலை காண்க. இங்ஙனமே வாலியும் தாரையை உயிராகக் கருதினான் என்பதை ஐயா! நீ எனது ஆவி என்றதும் பொய்யோ? (4103) என்ற அடியால் அறியலாம். தலைவி; தலைவனை உயிரெனக் கருதும் மரபினை 'வினையே ஆடவர்க்கு உயிரே, வாள்நுதல் மகளிர்க்கு ஆடவர் உயிரென' என்ற குறுந்தொகை (135)யிலும், 'பொருள்தரப் போயினர்ப் பிரிந்த பொய் உடற்கு, உருள்தரு தேர்மிசை உயிர்கொண்டு உய்த்தலான் (4169), என்ற பாடலிலும் காணலாம். உடலார் - ஆர் விகுதி இழிவுப் பொருளில் வந்தது. திணைவழுவமைதி. 165*

### *4100. 'நறிது ஆம் நல் அமிழ்து உண்ண நல்கலின்,*
### *பிறியா இன் உயிர் பெற்ற பெற்றி, தாம்*
### *அறியாரோ நமனார்? அது அன்றுஎனின்,*
### *சிறியாரோ, உபகாரம் சிந்தியார்?*

*__நமனார் -__ (உன் உயிர்கவர்ந்த) யமனார்; __நறிது ஆம் நல் அமிழ்து -__ நறுமணமுடையதாகிய நல்ல அமுதத்தை; __உண்ண நல்கலின் -__ உண்ணும்படி நீ தந்தமையால்; __பிறியா இன் உயிர் -__ உடம்பை விட்டு நீங்காத இனிய உயிரை; __பெற்ற பெற்றி -__ அடைந்துள்ள தன்மையை; __தாம் அறியாரோ -__ தாம் இதுகாறும் அறிந்திலரோ? __அது அன்று எனின் -__ அங்ஙனம் இல்லை என்றால்; __உபகாரம் சிந்தியார் -__ (நீ அமுதளித்ததான) பேருதவியை நினையாதவராகிய; __சிறியாரோ -__ அற்பக்குணம் உடையவரோ?*

*நமனார் - வஞ்சப் புகழ்ச்சியாக 'ஆர்' விகுதி பெற்றது. பிரியா என்பது எதுகை நோக்கிப் 'பிறியா' எனத் திரிந்தது. வாலி கடல் கடைந்து அமரர்க்கு அமுதம் அளித்ததை 'அமரர் யாரும் எஞ்சலர் இருந்தார் உன்னால்' (4086) எனும் அங்கதன் கூற்றிலும் காண்க. தேவர் அனைவரும் வாலிக்குக் கடமைப்பட்டிருக்க, இங்குத் தேவர்களில் ஒருவனான யமனை மட்டும் குறிப்பிடக் காரணம், அவன் வாலியின் உயிரைப் பறித்தமையால் என்க. செய்த உதவியை அறிந்திருந்தும் அதனை நினைவில் கொள்ளாதார் சிறியராவராதலின், யமனின் அற்பக் குணத்தை எண்ணிப்புலம்பினாள். 166*

### *4101. 'அணங்கு ஆர் பாகனை ஆசைதோறும் உற்று,*
### *உணங்கா நாள்மலர் தூய், உள் அன்பினால்*
### *இணங்கா, காலம் இரண்டொடு ஒன்றினும்*
### *வணங்காது, இத் துணை வைக வல்லையோ?*

***ஆசை தோறும் உற்று -*** *திசைகள் தோறும் சென்று;* ***உள் அன்பினால் இணங்கா -*** *உள்ளத்துப் பக்தியோடும் கூடி;* ***உணங்கா நான் மலர் தூய் -*** *வாடாத புதிய மலர்களைத் தூவி;* ***காலம் இரண்டொடு ஒன்றினும் -*** *காலை, மாலை நண்பகல் ஆகிய மூன்று காலங்களிலும்;* ***அணங்கு ஆர் பாகனை -*** *மாதொரு பாகனாகிய சிவபெருமானை;* ***வணங்காது -*** *வழிபடாமல்;* ***இத்துணை -*** *இவ்வளவு நேரம்;* ***வைக வல்லையோ -*** *தங்கியிருக்க வல்லாயோ?*

*வாலி நாள்தொறும் எல்லாத் திசைகளுக்கும் சென்று சிவபிரானை வழிபட்டு வரும் வழக்கமுடையவன் என்பதை 3822, 3825, எண்ணிட்ட பாடல்களிலும் காண்க. 'கோலமா மலரொடு தூபமும் சாந்தமும் கொண்டு போற்றி, வாலியார் வழிபடப் பொருந்தினார்'; நீல மா மணிநிறத் தரக்கனை இருபது கரத்தோடு ஒல்க. வாலினால் கட்டிய வாலி வழிபட வணங்கும் கோயில். என்னும் திருஞானசம்பந்தர் தேவாரமும் (வடகுரங்காடுதுறை : 6,8) ஈண்டுக் காணத்தக்கது. நாள்மலர் - அன்றலர்ந்த மலர்; வாலியின் சிவபூசையைத் தாரை நேரில் அறிந்தவளாதலின் 'வணங்காது இத்துணை வைக வல்லையோ' எனப்புலம்பினாள். 'முப்போதும் திருமேனி தீண்டுவார்' என்று நம்பியாரூரரும் மூன்று காலங்களைக் குறித்துள்ளமை காண்க. திருத்தொண்டத் தொகை. (10.7) 167*

***4102. ' "வரை ஆர் தோள் பொடி ஆட வைகுவாய்!***
***தரை மேலாய்! உறு தன்மை ஈது?" எனக்***
***கரையாதேன் இடு பூசல் கண்டும், ஒன்று***
***உரையாய், என்வயின் ஊனம் யாவதோ?***

***தரை மேலாய் -*** *தரை மீது கிடப்பவனே!* ***வரை ஆர் தோள் -*** *மலைகள் போல் விளங்கும் உனது தோள்கள்;* ***பொடி ஆட வைகுவாய் -*** *புழுதி படியக் கிடப்பவனே!* ***உறு தன்மை ஈது என -*** *நீ அடைந்த கதி இதுவோ என்று;* ***கரையாதேன் -*** *கரைந்துருகப் பெறாதவளாகியயான்;* ***இடு பூசல் கண்டும் -*** *(உன் எதிரில் நின்று) கதறும் அழுகையைப் பார்த்தும்;* ***ஒன்று உரையாய் -*** *(என் துயர் போக்கும் வண்ணம்) மாற்றம் ஒன்றும் கூறினாய் அல்லை.* ***என் வயின் ஊனம் யாவதோ -*** *(இவ்வாறு நீ என்னை வெறுத்தொதுக்க) என்னிடத்தில் உள்ள குற்றம் யாதோ?*

*பொடியாடல் - தூசி படிந்திருத்தல். மலை போன்ற தோளினை "வரை சேர் தோளிடை" (4098) என முன்னரும் கூறியது காண்க. தன் துயர் பொறா வாலி, இப்பொழுது தன் துயர் நீக்கும் வண்ணம் பேசாதிருத்தலை நோக்கித் தாரை 'என்னிடம் உள்ள குற்றம் யாதெனக் கேட்டுப் புலம்பினாள். 'என்னுறு துயர் கண்டும் இடருறும் இவள் என்னீர். பொன்னுறு நறுமேனி பொடியாடிக் கிடப்பதோ' (சிலப்-ஊர்சூழ். வரி39.40) எனப் புலம்பிய கண்ணகியின் துயரம் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. வாலிக்கு ஏற்பட்ட கொடிய நிலையைத் 'தரைமேலாய்' எனும் தொடர்உணர்த்தும். 168*

***4103. 'நையா நின்றனென், நான் இருந்து இங்ஙன்;***
***மெய் வானோர் திரு நாடு மேவினாய்;***
***ஐயா! நீ எனது ஆவி என்றதும்,***
***பொய்யோ? பொய் உரையாத புண்ணியா!***

***பொய் உரையாத புண்ணியா*** - *பொய்ம்மொழி பேசாப் புண்ணி யனே!* ***நான் இங்ஙன் இருந்து*** - *நான் இங்கே இருந்து;* ***நையா நின்றனென்*** - *துயர் உற்று வருந்தி நின்றேனாக;* ***மெய் வானோர் திருநாடு*** - *(நீயோ) வாய்மையில் வழாத தேவர்கள் வாழும் விண்ணுலகை;* ***மேவினாய்*** - *அடைந்தாய்;* ***ஐயா*** - *என் தலைவனே!* ***நீ எனது ஆவி என்றதும்*** - *(நீ என்னை நோக்கி) 'நீயே எனது உயிர்' என்றதும்;* ***பொய்யோ*** - *பொய்தானா?*

*வாலி தாரையை உயிராகக் கருதியது போல், தாரையும் வாலியை உயிராகக் கருதியதை 'உயிர் போனால் உடலாரும் உய்வரோ? (4100) என்ற அடிகள் உணர்த்தும். வாலியும் தாரையும் வாழ்ந்த வாழ்வின் அன்பு நிலையை இதனால் அறியலாம். குடும்பத் தலைவன், தலைவியருள் ஒவ்வொருவரும் தம்மை உடலாகவும், மற்றவரை உயிராகவும் அன்பு காட்டி வாழ்வது இயல்பாகும். எனவே தான் இங்குத் தன் உயிர் துடிக்க, உடல் பிரிதல் இல்லை என்பதால் 'நீ எனது ஆவி என்றதும் பொய்யோ' என்றாள். என்றதும் - உயர்வு சிறப்பும்மை. 'நீ எனது ஆவி' எனச் சொன்னது உண்மையாயின் தன்னை விட்டுப் பிரிந்திருக்கக் கூடாதன்றோ' எனப் புலம்பினாள் பொய் உரைத்துவிட்டு உண்மை பேசும் தேவர்கள் உலகில் எங்ஙனம் செல்ல முடிந்தது என்பதற்கு 'மெய் வானோர்' என்றாள். பொய்யோ - ஐயவினா. 169*

***4104. 'செரு ஆர் தோள! நின்***
***சிந்தை உளேன் எனின்,***
***மருவார் வெஞ் சரம்***
***எனையும் வவ்வுமால்;***
***ஒருவேனுள் உளை***
***ஆகின், உய்தியால்;***
***இருவே முள்***
***இருவேம் இருந்திலேம்.***

***செரு ஆர் தோள*** - *போர்த் தொழில் வல்ல தோள்களை உடை யவனே!* ***நின் சிந்தை உளேன் எனில்*** - *உன்னுடைய மனத்தில் யான் இருப்பது உண்மை என்றால்;* ***மருவார் வெஞ்சர்*** - *பகைவரது கொடிய அம்பு;* ***என்னையும் வவ்வும்*** - *என்னுயிரையும் கொன்றிருக்கும;* ***ஒருவேன் உள் உளை ஆகின்*** - *தனியளாகிய என் நெஞ்சில் நீ நீங்காது இருப்பவனாயின்;* ***உய்தி*** - *நீ இறவாது பிழைத்திருப்பாய்.* ***இருவேம் உள்*** - *(அதனால்) ஒருவர் உள்ளத்தில் ஒருவராக;* ***இருவேம் இருந்திலேம்*** - *நாம் இருவரும் இருந்தோம் அல்லோம்.*

*வாலியும் தாரையும் ஒருவர் உள்ளத்தில் மற்றொருவர் இருந்தனர் எனக் கூறத்தக்க அன்பு வாழ்க்கை நடத்தினர் எனத் தெரிகிறது. 'உன்னடைய மனத்தில் நான் இருந்திருந்தால் உன்னைத் தாக்கிய அம்பு என்னைத் தாக்கியிருக்கும். அல்லது என் மனத்தில் நீ இருபபது உண்மையானால் யான் பிழைத்திருப்பதால் நீயும் பிழைத்திருப்பாய். இவ்விரண்டினுள் எதுவும் நிகழாமையை எண்ணுகையில் ஒருவர் சிந்தையில் மற்றொருவர் இருந்தனம் எனும் மொழி உண்மையாகாது என்ன மற்றன்ன, மடந்தையொடு எம்மிடை நட்பு (குறள் - 1122) என்ற குறள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. 170*

***4105. ''எந்தாய்! நீ அமிழ்து ஈய, யாம் எலாம்
உய்ந்தேம்'' என்று, உபகாரம் உன்னுவார்,
நந்தா நாள்மலர் சிந்தி, நண்பொடும்
வந்தாரா எதிர், வான்உளோர் எலாம்?***

***வான் உளோர் எலாம் -*** *விண்ணுலகில் வாழ்கின்ற தேவர்க ளெல்லாரும்;* ***உபகாரம் உன்னுவார் -*** *நீ செய்த பேருதவியை மறவாது நினைப்பவராய்;* ***'எந்தாய் -*** *'எம் தந்தை போன்றவனே!* ***நீ அமிழ்து ஈய -*** *பாற்கடலைக் கடந்து நீ உண்ணாமல் அமுதத்தை எமக்குக் கொடுக்க;* ***யாம் எலாம் உய்ந்தேம் -*** *நாங்கள் எல்லோரும் அதனை உண்டு இறவா நிலை பெற்றோம்';* ***என்று -*** *என்று உன்னைப் புகழ்ந்து;* ***நந்தா நாள் மலர் சிந்தி -*** *வாடாத அப்பொழுது அலர்ந்த (கற்பகம் முதலிய) மலர்களைத் தூவி;* ***நண்பொடும் -*** *நட்புரிமையோடு;* ***எதிர் வந்தாரா -*** *எதிர் கொண்டழைக்க வந்தார்களோ?*

*முன்பு தேவர்களுள் ஒருவனான யமனை 'உபகாரம் சிந்தியா தான்' (4100) எனப் பழித்த தாரை இப்பொழுது மனம் மாறி ஏனைய தேவர்களின் உபகாரச் சிந்தையை நினைப்பவளானாள். நந்தா நாள் மலர் சந்தனம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்பன. எந்தை எனும் பெயர் விளிவேற்றுமைக் கண் எந்தாய் எனத் திரிந்தது. யாமெலாம் - தேவர்கள் எல்லோரையும் குறித்தது. வந்தாரா - ஐயவினா. 171*

***4106. 'ஓயா வாளி ஒளித்து நின்று எய்துவான்
ஏயா வந்த இராமன் என்று உளான்,
வாயால் ஏயினன்என்னின், வாழ்வு எலாம்
ஈயாயோ? அமிழ்தேயும் ஈகுவாய்!***

***அமிழ்தேயும் ஈகுவாய் -*** *(சாவா மருந்தாகிய) அமுதத்தை வேண்டினும் கொடுப்பவனே!* ***ஓயா வாளி -*** *பகைவன் உயிரைக் கவர்ந்தாலன்றி நீங்கா அம்பை;* ***ஒளித்து நின்று -*** *மறைந்து நின்று;* ***எய்வான் -*** *(உன்மேல்) செலுத்துவதற்காக;* ***ஏயா வந்த -*** *உடன்பட்டு வந்த;* ***இராமன் என்று உளான் -*** *இராமன் என்னும் பெயரில் உள்ளவன்;* ***வாயால் ஏயினன் என்னின் -*** *(உன்னிடம்) தன் வாய்மொழியால் இன்னது வேண்டும் என்று கேட்டிருப்பபனாயின்;* ***வாழ்வு எலாம் ஈயாயோ -*** *உனக்குரிய அரசாட்சி முதலிய வாழ்க்கைச் செல்வங்கள் அனைத்தையும் (சுக்கிரீவனுக்குக்) கொடுக்கமாட்டாயோ?*

*இராமன் என்று உளான்' என இங்குக் குறித்தது சிறப்பில்லாத ஒருவனைக் குறிப்பதாக உள்ளதெனலாம். முன்னரும் 'இராமன் என்பவன்' எனத் தாரை (3964) குறித்தமை காண்க. 'ஓயா வாளி ஒளித்து நின்று ஏயா வந்த' என்றது இராமனது தகுதியற்ற செயலைச் சுட்டியதாகும். வாலியின் வண்மைக் குணத்தை அறிந்து எளிதில் வாய்ச் சொல்லால் பெறக்கூடிய செல்வத்தை, மாசுண்டாகுமாறு மறைந்திருந்து அம்பு எய்து வாலியைக் கொன்று பெற வேண்டுமா? எனத் தாரை புலம்பினாள். தேவர் வாழ அமுதம் அளித்தவன், தன் உயிரையும் வேண்டியிருப்பின் கொடுத்திருப்பன் என்பது கருத்தாகும். 'ஆடினிர் பாடினிர் செலினே, நாடுங் குன்றும் ஒருங்கீயும்மே' (புறம். 109 : 17 - 18), 'பாரியும் பரிசிலர் இரப்பின், வாரேன் என்னான் அவன் வரையன்னே' (புறம் - 108.5-6) என்ற அடிகளை இங்கு ஒப்பு நோக்கலாம். அமிழ்தேயும் - உம்மை உயர்வு சிறப்பும்மை; ஈகுவாய் 'கு' சாரியை. பரிசிலாகப் பெறக்கூடிய பறம்புச் செல்வத்தை*

*வன்பமுறை முற்றுகையால் அடைய நினைந்த மூவேந்தர் செயலை எள்ளிய கபிலர் போல, தாரை பேசினள்என்க.* *172*

***4107. 'சொற்றேன், முந்துற; அன்ன***
***சொல் கொளாய்;***
***''அற்றான், அன்னது***
***செய்கலான்'' எனா,***
***உற்றாய், உம்பியை; ஊழி***
***காணும் நீ,***
***இற்றாய்; நான் உனை***
***என்று காண்கெனோ?***

***முந்துறச் சொற்றேன் -*** *(சுக்கிரீவனுடன் போர் செய்ய வருவதற்கு) முன்னதாகவே (இராமன் சுக்கிரீவனுக்குத் துணையாகப் போரிட வந்துள்ளான் என்ற செய்தியை) நான் சொன்னேன்.* ***அன்ன சொல் கேளாய் -*** *அந்த வார்த்தையைக் ஏற்றுக் கொள்ளாமல்;* ***அற்றான் -*** விருப்பு வெறுப்பற்ற இராமன்; ***அன்னது செய்கலான் -*** அவ்வாறு முறையற்ற செயலைச் செய்யமாட்டான்; ***எனா -*** என்று கூறி; ***உம்பியை உற்றாய் -*** உன் தம்பியை (எதிர்த்துப் போரிட) வந்தாய்; ***ஊழி காணும் நீ -*** ஊழிக் கால முடிவையும் கண்டு வாழவேண்டிய நீ; ***இற்றாய் -*** இறந்துவிட்டாய். ***நான் உனை என்று காண்கெனோ -*** இனி நான் உன்னை எப்பொழுது காண்பேனோ?

*இராமன் துணை பெற்று வந்தான் எனத் தாரை கூறிய மொழிகள் - 3958, 3964ல் காண்க. அன்னது செய்கலான். 3956 முதல் 3965 முடிய உள்ள பாடல்களின் கருத்துக்கள். 'ஊழி காணும் நீ' எனத் தாரை நினைத்தது போல், மண்டோதரியும் 'ஏவர்க்கும் வலியானுக்கு என்று உண்டாம் இறுதி என ஏமாப்புற்றேன்' (9943) என எண்ணியதுகாண்க.* *173*

***4108. 'நீறு ஆம், மேருவும், நீ நெருக்கினால்;***
***மாறு ஓர் வாளி, உன் மார்பை ஈர்வதோ?***
***தேறேன் யான் இது; தேவர் மாயமோ?***
***வேறு ஓர் வாலி கொலாம், விளிந்துளான்?***

***நீ நெருக்கினால் -*** *நீ (உன் மார்பொடு பொருந்த) நெருக்கித் தாக்குவாயானால்;* ***மேருவும் நீறு ஆம் -*** மேருமலையும் பொடியாய் விடும்; ***ஓர் வாளி -*** *(அங்ஙனமிருக்க) ஓர் அம்பு;* ***மாறு -*** *உனக்கு எதிராக;* ***உன் மார்பை ஈர்வதோ -*** உன்னுடைய மார்பைப் பிளந்து விடுவதா? ***யான் இது தேறேன் -*** நான் இதனை உண்மையெனத் தெளிய மாட்டேன். ***தேவர் மாயமோ -*** இது தேவர்கள் செய்த மாயச் செயலோ? ***விளிந்துளான் -*** *(அல்லது) இங்கே இறந்து கிடப்பவன்;* ***வேறு ஓர் வாலி கொலாம் -*** *(நீயன்றி)* வேறொரு *வாலி தானோ?*

மேருமலையினையும் பொடியாக்க வல்ல வாலியின் மார்பின் வலிமையை நன்கு *அறிந்த தாரை, தன் கணவன் அம்பு பட்டு இறந்து கிடப்பதை நேரில் கண்டும் நம்புதற்கு இயலாதவளாய் 'இது தேவர் செய்த மாயமோ? அல்லது இறந்து கிடப்பவன்*

*தன் கணவன் அல்லாத மற்றொரு வாலியோ என ஐயுற்றுக் கலங்கினாள்.*
*174*

### *4109. 'தகை நேர் வண் புகழ் நின்று, தம்பியார்,*
### *பகை நேர்வார் உளர் ஆன பண்பினால்,*
### *உக நேர் சிந்தி உலந்து அழிந்தவால்;*
### *மகனே! கண்டிலையோ, நம் வாழ்வு எலாம்?*

***மகனே*** - *(தாரை, அங்கதனை முன்னிலைப்படுத்தி) மைந்தனே!* ***தம்பியார்*** - *(உன் தந்தைக்குத்) தம்பியரான சுக்கிரீவர்;* ***தகைநேர்*** - *பெருமை பொருந்திய;* ***வண் புகழ் நின்று*** - *(உன் தந்தையின்) சிறந்த புகழுக்கேற்பப் பணிந்து நின்று;* ***பகை நேர்வார் உளர் ஆன பண்பினால்*** - *(பின்பு உறவு நிலைமாறி) அவரோடு பகைமை கொள்பவர் தன்மையினால்;* ***உக*** - *உன் தந்தை இறந்துபடி;* ***நம் வாழ்வு எலாம்*** - *நமது சிறப்பான வாழ்க்கையெல்லாம்;* ***நேர் சிந்தி உலந்து அழிந்த*** - *தகுதி கெட்டு அழிந்துவிட்டன.* ***கண்டிலையோ*** - *இதனை நீ காண வில்லையோ?*

*இஃது அங்கதன் அவ்விடத்து இல்லாவிடினும் அவனை முன்னிலை யாக்கித் தாரை புலம்பியது. தம்பியார் - பன்மை விகுதியில் கூறியது வெறுப்பினால் என்க. வஞ்சப் புகழ்ச்சி. வண்புகழ் நின்று என்பதற்கு (தமையனின்) புகழின் ஒளியிலே நிலைத்து வளர்ந்து எனப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். அழிந்த; பன்மை வினை முற்று. ஆல் - அசை. அழிந்தவால் என்பது பாடமாற்றம். 175*

### *4110. 'அரு மைந்து அற்றம் அகற்றும் வில்லியார்,*
### *ஒரு மைந்தற்கும் அடாதது உன்னினார்;*
### *தருமம் பற்றிய தக்கவர்க்கு எலாம்,*
### *கருமம் கட்டளை என்றல் கட்டதோ?'*

***அருமைந்து*** - *பெறுதற்கரிய வன்மையால்;* ***அற்றம் அகற்றும்*** - *(தன்னையடைந்தவர்களின்) பெருந்துன்பத்தைப் போக்கும்;* ***வில்லியார்*** - *வில்லினையுடைய இராமர்;* ***ஒரு மைந்தற்கும்*** - *எந்த வீரனுக்கும்;* ***அடாதது உன்னினார்*** - *பொருந்தாத முறையற்ற செயலை, நினைத்துச் செய்துவிட்டார்.* ***தருமம் பற்றிய*** - *அறநெறியைக் கடைப்பிடித்தொழுகும்;* ***தக்கவர்க்கு எலாம்*** - *தகுதியுடைய பெரியவர்களுக்கெல்லாம்;* ***கருமம் கட்டளை என்றல்*** - *அவரவர் செய்யும் செயல்களே அவரவர் தகுதியை அளக்கும் உரைகல்லாகும் என்று கூறும் ஆன்றோர் உரை;* ***கட்டு அதோ*** - *(உண்மையோடு பொருந்தாத) புனைந்துரைதானா?*

*வாலியின் உயிரைப் போக்கியது வில்லிலிருந்து தொடுக்கப்பட்ட அம்பு ஆதலின் 'வில்லியார்' எனச் சுட்டினாள். இராமன் பெயர் கூறாது வில்லினை உடையவர் என்று இழிவு தோன்றக் கூறினாள் என்க. அற்றம் அகற்றும் வில் உண்மையில் அற்றம் போக்காது துன்பத்தையே விளைத்தது என்பது குறிப்பு. கருமம் கட்டளையாவதைப் "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம், கருமமே கட்டளைக் கல்" எனக்குறள் (505) உணர்த்துதல் காண்க. கட்டளை- உரைகல்; பொன்னை உரைத்துப் பார்க்கும் கல். கட்டதோ - ஓகாரம் வினா. 176*

***4111. என்றாள், இன்னன பன்னி, இன்னலோடு
ஒன்று ஆனாள்; உணர்வு ஏதும் உற்றிலாள்;
நின்றாள்; அந் நிலை நோக்கி, நீதி சால்,
வன் தாள் மால் வரை அன்ன, மாருதி.***

***என்றாள் -*** *என்று புலம்பினளாய தாரை;* ***இன்னன பன்னி -*** *இத்தன்மையனவான சொற்களை மீண்டும் மீண்டும் சொல்லி;* ***இன்ன லோடு ஒன்று ஆனாள் -*** *துன்பத்தோடு ஒன்று பட்டவளாய்;* ***உணர்வு ஏதும் உற்றிலாள் -*** *தன் உணர்வு சிறிதும் அடையாதவளாய்;* ***நின்றாள் -*** *செயலொழிந்து நின்றாள்;* ***அந்நிலை நோக்கி -*** *(தாரையின்) அந்த நிலைமையைக் கண்டு;* ***நீதி சால் -*** *நீதி நிறைந்தவனும்;* ***வன்தாள் -*** *வலிய முயற்சியுடையவனுமான;* ***மால்வரை அன்ன மாருதி -*** *பெரிய மலையினை ஒத்த தோற்றமுடைய அனுமன். . . .*

*இப்பாடல் அடுத்த இரு பாடல்களோடு குளகமாய் இயைந்து வினை முடிபு கொள்ளம். அனுமன் நீதி நெறியும் வலிய முயற்சியும் உடையவன் என்பதைச் சுக்கிரீவனை இராமனிடம் நட்புக் கொள்ளச் செய்த நிலையிலிருந்தே அறியலாம். மாருதிக்கு மால் வரை உவமை. "பொன் உருக் கொண்ட மேரு, புயத்திற்கும் உவமை போதாத் தன் உருக்கொண்டு நின்றான்" (3781) என்ற உவமை காண்க. 'மேரு மலை போன்ற பொன்மேனியுள்ளவன்' என அனுமன் கூறப்படுவதால் வரை இங்கே மேரு மலை எனலாம். அழித்தற்கு அருமை, அளக்க முடியாத நிலை, தோற்றம், வலிமை, பெருமை ஆகியவற்றால் அனுமனுக்கு மலை உவமைஆயிற்று.* *177*

***4112. மடவாரால், அம் மடந்தை முன்னர் வாழ்
இடம் மேவும்படி ஏவி, வாலிபால்
கடன் யாவும் கடைகண்டு, கண்ணனோடு
உடன் ஆய், உற்றது எலாம் உணர்த்தலும்,***

***மடவாரால் -*** *வானர மகளிரைக் கொண்டு;* ***அம்மடந்தை -*** *அந்தத் தாரையை;* ***முன்னர் வாழ் இடம் -*** *முன்பு (அவள்) வாழ்ந்திருந்த அந்தப்புரத்திற்கு;* ***மேவும்படி ஏவி -*** *செல்லும்படி அனுப்பிவிட்டு;* ***வாலிபால்-*** *வாலியின் பொருட்டு;* ***கடன் யாவும் கடை கண்டு -*** *செய்ய வேண்டிய இறுதிக் கடன்களை எல்லாம் (அங்கதனைக்கொண்டு) செய்து முடிதது;* ***கண்ணனோடு -*** *இராமனோடு;* ***உடன் ஆய் -*** *சென்று சேர்ந்து;* ***உற்றது எலாம் உணர்த்தலும் -*** *நடந்த செய்திகளை எல்லாம் சொன்ன அளவில் . . .*

*புலம்புகின்ற தாரையை அவள் தோழியரான வானர மகளிரைக் கொண்டு அந்தப்புரத்திற்குச் செலச் செய்து அங்கதனைக் கொண்டு ஈமக் கடன்களை நிறைவேற்றியபின் நிகழ்ந்த செய்திகளை அனுமன் இராமனிடம் உரைத்தான் என்பதாம். இங்குக் கரியோன் என்னும் பொருளினதாகிய கண்ணன் என்ற பெயர் கண்ணன் அவதாரத்தைக் குறிக்காமல் திருமாலின் அமிசமாகிய இராமனைக் குறித்தது. இராமனைக் கண்ணன் எனக் குறித்தமை 'யாவர்க்கும் கண்ணன்' என்றே ஓதிய பெயர்' (1068), 'கண்ணன் தன் நிறம் தன் உள்ளக் கருத்தினை நிறைத்து' (1120), சுவண*

*வண்ணனோடு கண்ணன்' (2553), 'கருணை அம் கோயிலுள் இருந்த கண்ணனை' (6411), என்னும் இடங்களிலும் காண்க.*

*வாலியின் ஈமக்கடன் நிகழ்வை மிகச்சுருக்கமாகக் கம்பர் கூறியிருக்க, வான்மீகத்தில் மிக விரிவாக அமைத்திருப்பதைக்காணலாம். 178*

*கதிரவன் மறைவும், இராமன் இராப்பொழுதைக் கழித்த வகையும்*

***4113. அகம் வேர் அற்று உக வீசு அருக்கனார்,***
***புகழ் மேலைக் கிரி புக்க போதினின்,***
***நகமே ஒத்த குரக்கு நாயகன்***
***முகமே ஒத்தது, மூரி மண்டிலம்.***

***அகம் வேர் அற்று உக -** இருளானது வேரோடு அழிந்து போகுமாறு; **வீசு அருக்கனார் -** ஒளி வீசுகின்ற சூரியன்; **புகழ் மேலைக்கிரி -** புகழ் மிக்க மேற்குத் திசையிலுள்ள அத்தமன கிரியை; **புக்க போதினில் -** அடைந்த பொழுதில்; **மூரி மண்டலம் -** சூரிய மண்டலம்; **நகமே ஒத்த -** மலை போன்ற; **குரக்கு நாயகன் -** குரங்கின அரசனான வாலியின்; **முகமே ஒத்தது -** முகத்தையே ஒத்து விளங்கியது.*

*வானுற ஓங்கிய மலையே வாலிக்கு உவமையாகும். வாலியின் முகம் இயல்பில் செந்நிறமுடையதாதலும் அதற்கு மாலைக் காலக் கதிரவன் உவமையாவது இயல்பாகவே பொருந்தக் கூடியது. ஈண்டு - மாலைக் காலச் சூரிய மண்டலத்திற்கு வாலியின் குருதிபட்ட செந்நிற முகம் நிறத்தாலும், மறையும் செயலாலும் உவமையாகிறது. காலையில் உதித்துப் பகல் முழுதும் ஒளி பரப்பி மாலையில் மலையிடத்து மறையும் கதிரவனது செந்நிற ஒளி மண்டிலத்திற்கு, உலகில் தோன்றி, வாழ்நாள் முழுவதும் தன் புகழ் ஒளி பரப்பி, இராமன் அம்பால் உயிர் துறந்து கிடந்த வாலியின் செந்நிற முக ஒளியை உவமை கூறிய நயம் காணத்தக்கது. 'நீ உயிர் நீங்கியிருக்கையிலும் உன் முகம் மகிழ்ச்சி பெற்றது போல, அத்த கிரியை அடைந்த சூரியன் போன்ற நிறமுடையதாய்ப் பிழைத்திருக்கும்போது இருந்தது போலவே காணப்படுகிறது' என்று தாரை புலம்பியதாக வான்மீகத்தில் காணப்படும் செய்திஒப்பு நோக்கி உணர்தற்குரியது. 179*

***4114. மறைந்தான் மாலை அருக்கன்; வள்ளியோன்***
***உறைந்தான், மங்கை திறத்தை உன்னுவான்;***
***குறைந்தான், நெஞ்சு குழைந்து அழுங்குவான்;***
***நிறைந்து ஆர் கங்குலின் வேலை நீந்தினான்.***

***அருக்கன் -** சூரியன்; **மாலை மறைந்தான் -** மாலைப் பொழுதில் மறைந்தான். **வள்ளியோன் -** வண்மைக் குணமுடைய இராமன்; **மங்கை திறத்தை உன்னுவான் -** சீதையின் நிலையைக் கருதுபவனாய்; **உறைந் தான்-** (அங்கு ஓர் இடத்தில்) தங்கி; **குறைந்தான் -** மெலிந்து; **நெஞ்சு குழைந்துஅழுங்குவான் -** மனம் நொந்து வருந்துவானாகி; **நிறைந்து ஆர் கங்குலின்வேலை -** நிறைந்து பரவிய இரவுப் பொழுதாகிய கடலை; **நீந்தினான் -** அரிதில் கடந்தான்.*

மனைவியைப் பிரிந்து வருந்துவார்க்கு இராப்பொழுது நீண்டதாகத் தோன்றுவதாலும் அதனைக் கழித்தல் கடினமாக இருப்பதாலும் 'நிறைந்தார் கங்குலின்

வேலை நீந்திதான்" என்றார். 'இரவரம்பாக நீந்தினமாயின். . . . கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதே" (குறுந்தொகை - 387), 'இந்நாள் நெடிய கழியும் இரா' (குறள். 1168) என்பன ஒப்பு நோக்கத்தக்கன. கங்குலின் - இன் சாரியை. உன்னுவான். குறைந்தான், அழுங்குவான் என்னும் வினை முற்றுக்கள் எச்சப் பொருளில் வந்து முற்றெச்சங்கள். 180

## அரசியல் படலம்

இராமன் சுக்கிரீவனுக்கு அரசியல் பற்றிய அறிவுரைகளைக் கூறும் பகுதியை முதன்மையாகக் கொண்டு விளங்குவதால் இப்படலம் 'அரசியல் படலம்' எனப்பட்டது. பால காண்டத்தில் தசரதனின் ஆட்சியைப் பற்றிக் கூறும் பகுதியும் 'அரசியல் படலம்' எனப் பெயர் கொண்டது.

சுக்கிரீவனுக்கு முடிசூட்ட இராமன் இலக்குவனுக்குக் கட்டளையிட, முடிசூட்டு விழாவிற்கு வேண்டுவன கொணருமாறு இலக்குவன் அனுமனுக்கு உரைத்தனன். அங்ஙனமே அனுமன் கொணர, இலக்குவன் சுக்கிரீவனுக்கு முடி சூட்டினான். நல்லரசு புரிதற்கு வேண்டிய அறிவுரைகளை இராமன் சுக்கிரீவனுக்கு எடுத்துரைத்தான். அவற்றைச் செவிமடுத்த பின் சுக்கிரீவன் இராமனைக் கிட்கிந்தைக்கு அழைக்க, இராமன் மறுத்து, 'நான்கு திங்கள் சென்றபின் படையொடு வருக' எனக் கூறினன். அதனை ஏற்ற சுக்கிரீவனும் விடைபெற்று நீங்கினான். தன்னை வணங்கிய அங்கதனுக்கும் இராமன் அறிவுரை புகன்றான்.

மாருதி இராமனுடன் இருந்து பணி செய்ய விரும்புவதாகக் கூற, அவனையும் கிட்கிந்தை செல்லுமாறு இராமன் பணிக்க, மாருதியும் போனான். இராமலக்குவர் வேறொரு மலையை அடைந்தனர். கிட்கிந்தையில் சுக்கிரீவன் செம்மையாக ஆட்சி புரிந்தான். அங்கதனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டிச் சுக்கிரீவன் இனிதாக வாழ்ந்து வந்தான்.

சுக்கிரீவனுக்கு முடி சூட்டுதல்

கலிவிருத்தம்

**4115. புதல்வன் பொன் மகுடன் பொறுத்தலால்,**
**முதல்வன், பேர் உவகைக்கு முந்துவான்,**
**உதவும் பூமகள் சேர, ஒண் மலர்க்**
**கதவம் செய்ய கரத்தின் நீக்கினான்.**

**புதல்வன் -** தன் மகனான சுக்கிரீவன்; **பொன் மகுடம் பொறுத் தலால்-** (அன்று) பொன்னாலாகிய மணி முடியைத் தரிக்கப் போவதால்; **முதல்வன் -** (தந்தையான) சூரியன்; **பேர் உவகைக்கு முந்துவான் -** (அதைக் கண்டு) பெரிதும் மகிழ்ச்சி அடைவதற்கு முற்பட்டவனாய்; **உதவும் பூமகள் சேர -** (அந்த முடிசூட்டு விழாவிற்கு) உதவியாகின்ற திருமகள் வந்து சேரும்படி; **ஒண்மலர்க் கதவம் -** (அவள் உறைவிட மான) சிறந்த தாமரை மலர்களின்இதழ்களாகிய கதவுகளை; **செய்ய**

**கரத்தில் நீக்கினான் -** தனது சிவந்த கதிர்களாகிய கைகளினால் திறந்து விட்டான்.

இரவு கழியக் கதிரவன் இயற்கையாக உதயமாவதை அன்று தன் மகன் மணிமுடி சூட இருப்பதால் முற்பட்டு வந்ததாகவும். தாமரை இயல்பாக இதழ் விரித்தலை, இரவில் குவிந்திருந்த தாமரை மலருக்குள் இருந்த திருமகள் முடி சூடும் கதிரவன் மகனைச் சேர்தற் பொருட்டு அவள் இருந்த தாமரை மலர் வீட்டின் இதழ்க் கதவுகளைத் தன் சுரங்களால் திறந்துவிட்டதாகவும் கூறியதால் இப்பாடல்

*தற்குறிப்பேற்ற அணி பொருந்தியது. பொழுது புலரும்போது தாமரை விரிந்தது என்ற எளிய செய்தி கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பரின் எழுத்தாணியில் அரிய கற்பனையாகப் புனையா ஓவியமாகத் தீட்டியுள்ள நயம் உணர்க.* 1

### *4116. அது காலத்தில், அருட்கு நாயகன்,*
### *மதி சால் தம்பியை வல்லை ஏவினான் -*
### *'கதிரோன் மைந்தனை, ஐய! கைகளால்,*
### *விதியால் மௌலி மிலைச்சுவாய்' எனா.*

***அது காலத்தில் -*** *அப்பொழுது;* ***அருட்கு நாயகன் -*** *கருணைக்குத் தலைவனான இராமன்;* ***மதி சால் தம்பியை -*** *அறிவு நிறைந்த தன் தம்பி இலக்குவனை (நோக்கி);* ***ஐய -*** *ஐயனே!* ***கதிரோன் மைந்தனை -*** *சூரியன் புதல்வனான சுக்கிரீவனுக்கும்;* ***கைகளால் -*** *உன் கரங்களால்;* ***விதியால் மௌலி மிலைச்சுவாய் -*** *முறைப்படி முடி சூட்டுவாய்;* ***எனா -*** *என்று;* ***வல்லை ஏவினான் -*** *விரைந்து கட்டளையிட்டான்.*

*அருட்கு நாயகன் - இராமன் கருணை நிறைந்தவன் என்பதைக் 'கருணையின் கடல் அணையர்' (3758) 'கருணை ஆம் அமிழ்தம் காலும்' (6497), 'கருணை வள்ளல்' (6501) என்ற இடங்களில் காண்க. மௌலி - வடசொல். நல்ல காரியங்களை உடனே செய்துவிடல் நல்லது ஆதலின் 'வல்லை ஏவினான்' என்றார். விதி - முடிசூட்டுவதற்கு நூல்கள் கூறும் முறைகள். பதினான்கு ஆண்டுகள் தன் தந்தையின் சொல்லைக் காக்க விரதம்மேற்கொண்டிருப்பதால் இராமன் நகருட் செல்ல இயலாது ஆதலின், இலக்குவனையே மணிமுடி சூட்டுமாறு இராமன் கட்டளையிட்டான். பின் வீடணனுக்கும் இவ்வாறே செய்விப்பதும் காண்க.*

*வாலியின் ஈமக்கடன்கள் முடிந்தபிறகு அனுமன் இராமனைக் கிட்கிந்தைக்கு வந்து சுக்கிரீவனுக்கு முடி சூட்டுமாறு வேண்ட, இராமன் மறுத்து அனுமனையே, பிற வானரத் தலைவர்களுடன் அவ்விழாவை நிறைவேற்றப் பணித்துச் சுக்கிரீவன் முடிசூட்டிக் கொள்ளவும், அங்கதன் இளவரசுப்பட்டம் சூட்டிக் கொள்ளவும் சொன்னான் என்பது வான்மீகம். இலக்குவனை ஏவினதாக அந்நூலில் இல்லை. அத்யாத்ம ராமாயணமும், துளசீதாசர் இராமாயணமும் இலக்குவனைக் கொண்டு முடி சூட்டப் பெற்றதாகக்கூறும்.* 2

### *4117. அப்போதே, அருள் நின்ற அண்ணலும்,*
### *மெய்ப் போர் மாருதிதன்னை, 'வீர! நீ,*
### *இப்போதே கொணர், இன்ன செய் வினைக்கு*
### *ஒப்பு ஆம் யாவையும், என்று உணர்த்தலும்,*

***அருள் நின்ற அண்ணலும் -*** *இராமன் கட்டளைப்படி நடக்கும் பெருமையில் சிறந்த இலக்குவனும்;* ***அப்போதே -*** *அப்பொழுதே;* ***மெய்ப்போர் மாருதி தன்னை -*** *அறநெறி தவறாமல் போரைச் செய்ய வல்ல அனுமனைப் பார்த்து;* ***'வீர நீ -*** *வீரனே! நீ;* ***இன்ன செய் வினைக்கு -*** *இந்த (முடிசூட்டு விழாச்) செயலுக்கு;* ***ஒப்பு ஆம் யாவையும் -*** *வேண்டிய எல்லாப் பொருள்களையும்;* ***இப்போதே கொணர் -*** *இப்பொழுதே கொண்டு வந்து சேர்ப்பாய்';* ***என்று உணர்த்தலும் -*** *என்று கூறியவுடன் . . . .*

*அருள் நின்ற - இராமனது அருள்மொழியாகிய ஆணை வழி நின்ற என்க. இதுவும் அடுத்த செய்யுளும குளகம்; 4119 ஆம் செய்யுளில் உள்ள 'சூட்டினான்' என்ற வினை கொண்டு முடியும் 3*

## *4118. மண்ணும் நீர் முதல் மங்கலங்களும்,*
## *எண்ணும் பொன் முடி ஆதி யாவையும்,*
## *நண்ணும் வேலையில், நம்பி தம்பியும்,*
## *திண்ணம் செய்வன செய்து, செம்மலை,*

***மண்ணும் நீர் முதல் மங்கலங்களும் -*** *(சுக்கிரீவனை) நீராட்டுவதற்கு வேண்டிய புண்ணிய தீர்த்தம் முதலான மங்கலப் பொருள்களும்;* ***எண்ணும் பொன்முடி ஆதி யாவையும் -*** *எல்லோராலும் நன்கு மதிக்கப்படும் பொன்னால் செய்த மணிமுடி முதலிய எல்லாப் பொருள்களும்;* ***நண்ணும் வேலையில் -*** *வந்த சேர்ந்த அளவில்;* ***நம்பி தம்பியும் -*** *சிறந்தவனான இராமனின் தம்பி இலக்குவனும்;* ***செம்மலை -*** *பெருமையுடைய சுக்கிரீவனுக்கு;* ***திண்ணம் செய்வன செய்து -*** *(முடிசூட்டும் முன்) தவறாது செய்யவேண்டிய செயல்களைச் செய்து....*

*மண்ணும் நீர் முதல் மங்கலம் - மங்கல நீராடலுக்கு வேண்டிய நீர் முதலியன. செம்மலை - உருபு மயக்கம். 4*

## *4119. மறையோர் ஆசி வழங்க, வானுளோர்*
## *நறை தோய் நாள்மலர் தூவ, நல் நெறிக்கு*
## *இறையோன்தன் இளையோன், அவ் ஏந்தலை,*
## *துறையோர் நூல் முறை மௌலி சூட்டினான்.*

***மறையோர் ஆசி வழங்க -*** *வேதம் அறிந்த அந்தணர்கள் வாழ்த்துக் கூற;* ***வானுளோர் -*** *தேவலோகத்திலுள்ள தேவர்கள்;* ***நறைதோய் நாள்மலர் தூவ -*** *தேன் நிறைந்த அன்றலர்ந்த மலர்களைத் தூவ;* ***நல் நெறிக்கு இறையோன் தன் -*** *சிறந்த ஒழுக்கத்திற்குத் தலைவனான இராமனுடைய;* ***இளையோன் -*** *தம்பியான இலக்குவன்;* ***அவ் ஏந்தலை -***

*பெருமைக்குரிய அந்தச் சுக்கிரீவனுக்கு;* ***துறையோர் நூல்முறை -*** *நெறிமுறைகளில் வல்லவர்கள் கூறிய நூல்களில் கூறிய முறைப்படி;* ***மௌலி சூட்டினான் -*** *முடி சூட்டினான்.*

*இராமன், நல்நெறிக்கு இறையோன் என்பதை நூல் முழுவதிலும் காணலாம். 'தோன்றிய நல்லறம் நிறுத்தத் தோன்றினான்' (1769), 'நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலயம் ஆயினான்' (2429), 'புவிக்கு எலாம் வேதமே அன இராமன்' (1453), 'நின் செய்கை கண்டு நினைந்தனவோ, நீள் மறைகள்? உன் செய்கை அன்னவைதான் சொன்ன ஒழுக்கினவோ?' (3689), 'உண்டு எனும் தருமமே உருவமா உடைய நின் கண்டு கொண்டேன்' (4066), 'அறநெறி நிறுத்த வந்தது' (4073) அறத்தை முற்றும் காவற்குப் புகுந்து நின்றார் காகுத்த வேடம் காட்டி' (7421) என்பன காண்க.*

*வான்மீகத்தில் இந்த முடிசூட்டு விழா மிக விரிவாகக்கூறப்பட்டுள்ளது. 5*

***4120. பொன் மா மௌலி***
***புனைந்து, பொய் இலான்,***
***தன் மானக் கழல்***
***தாழும் வேலையில்,***
***நன் மார்பில்***
***தழுவுற்று, நாயகன்,***
***சொன்னான், முற்றிய***
***சொல்லின் எல்லையான்:***

**பொன் மா மௌலி புனைந்து -** *(சுக்கிரீவன்) பொன்னாலான சிறந்த மணிமுடியைத் தரித்துக்கொண்டு;* **பொய் இலான்தன் -** *பொய்ம்மொழி பேசாதவனான இராமனின்;* **மானக் கழல் தாழும் வேலையில் -** *பெருமை பொருந்திய திருவடிகளில் வீழ்ந்து வணங்கிய பொழுது;* **முற்றிய சொல்லின் எல்லையான் -** *நிறை மொழியின் எல்லையில் நிற்பவனாகிய;* **நாயகன் -** *தலைவனுமான இராமன்;* **நன் மார்பில் தழுவுற்று -** *(அவனைத்) தன் நல்ல மார்போடு அணைத்துக் கொண்டு;* **சொன்னான் -** *(அறிவுரைகளைக்) கூறலானான்.*

*சுக்கிரீவனுக்கு வாக்கு அளித்தவாறு வாலியைக் கொன்று நாட்டாட்சியைக் கொடுத்துத் தான் கூறியதைத் தவறாது நிறைவேற்றி வைப்பவனாதலின் இராமனைப் 'பொய்யிலான்' என்றார். முற்றிய சொல்லின் எல்லையான் என இராமனின் பரத்துவ நிலை குறிக்கப்பட்டது. அயோத்தியில் முடிசூடும் முன் வசிட்டர் இராமனுக்குக் கூறியதையும், சித்திர கூடத்தில் இராமன் பரதனுக்குக் கூறியதையும், இங்குச் சுக்கிரீவனுக்கு இராமன் கூறுவதையும் காண்கையில் முடிசூடும் மன்னனுக்கு ஆன்றோர் அறவுரை பகர்தல் மரபு என்பது புலனாகிறது.* *6*

*ஆசிரிய விருத்தம்*

***4121. 'ஈண்டுநின்று ஏகி, நீ நின்***
***இயல்பு அமை இருக்கை எய்தி,***
***வேண்டுவ மரபின் எண்ணி, விதி***
***முறை இயற்றி, வீர!***
***பூண்ட பேர் அரசுக்கு ஏற்ற***
***யாவையும் புரிந்து, போரில்***
***மாண்டவன் மைந்தனோடும் வாழ்தி,***
***நல் திருவின் வைகி.***

**'வீர -** *வீரனே!* **நீ ஈண்டு நின்று ஏகி -** *நீ இவ்விடத்திலிருந்து சென்று;* **நின் இயல்பு அமை இருக்கை எய்தி -** *உனக்கு இயல்பாக (உரியதாகப்) பொருந்தி இருப்பிடத்தை அடைந்து;* **வேண்டுவ மரபின் எண்ணி -** *புரிய வேண்டிய செயல்களை முறைப்பட ஆராய்ந்து;* **விதிமுறை இயற்றி -** *நூல்களில் விதிப்பட்ட நெறிப்படி செய்து;* **பூண்ட பேர் அரசுக்கு ஏற்ற -** *(நீ) ஏற்றுக் கொண்ட பெரிய அரசாட்சிக்குத் தக்க;* **யாவையும் புரிந்து -**

*எல்லாச் செயல்களையும் செய்து;* ***போரில் மாண்டவன் மைந்தனோடும் -*** *போர்க்களத்தில் இறந்துபட்ட வாலியின் மகன் அங்கதனோடும்;* ***நல் திருவின் வைகி -*** *சிறந்த செல்வ வாழ்க்கையில் நிலைபெற்று;* ***வாழ்தி -*** *வாழ்வாயாக.*

*நல்லமைச்சர்களோடு நன்கு ஆய்ந்து செயல்களை முறைப்படவும் திறம்படவும் செய்ய வேண்டியிருப்பதால் 'வேண்டுவ மரபின் எண்ணி' விதிமுறை இயற்றி' என்றான். 'மாண்டவன் மைந்தனோடும் வாழ்தி' என்றதால் அரசியலில் அங்கதனுக்குச் சுக்கிரீவன் இளவரசுப் பட்டம் கட்டவேண்டும் என்பதை இராமன் குறிப்பாக உணர்த்தினான் எனலாம்.* 7

***4122. 'வாய்மை சால் அறிவின்***
***வாய்த்த மந்திர மாந்தரோடும்,***
***தீமை தீர் ஒழுக்கின் வந்த***
***திறத் தொழில் மறவரோடும்,***
***தூய்மை சால் புணர்ச்சி பேணி, துகள்***
***அறு தொழிலை ஆகி,***
***சேய்மையோடு அணிமை இன்றி,***
***தேவரின் தெரிய நிற்றி.***

***வாய்மை சால் அறிவின் வாய்த்த -*** *வாய்மை நிறைந்த அறிவுத் திறம் வாய்க்கப்பெற்ற;* ***மந்திர மாந்தரோடும் -*** *அமைச்சர் முதலிய அரசியல் அறிஞர்களோடும்;* ***தீமைதீர் ஒழுக்கின் வந்த -*** *குற்றமற்ற நல்லொழுக்க நெறியில் ஒழுகும்;* ***திறத்தொழில் மறவரோடும் -*** *வலி மைக்கேற்ற தொழில்களையுடை வீரர்களோடும்;* ***தூய்மை சால் புணர்ச்சி பேணி -*** *தூய்மை பொருந்திய சேர்க்கையை (அவர்கள் பால்) விரும்பிச் செய்து;* ***துகள் அறு தொழிலை ஆகி -*** *குற்றமற்ற செயல்களைச் செய்பவனாகி;* ***சேய்மையோடு அணிமை இன்றி -*** *பிறரோடு*

*மிகவும் விலகாமலும், மிகவும் நெருங்காமலும்;* ***தேவரின் தெரிய நிற்றி -*** *(பிறர் உன்னைத்) தேவர்கள் போலக் கருதும்படி நிற்பாயாக.*

*அமைச்சர் முதலாயினோர் அரசனை அணுகாது நெடுந்தொலைவில் இருத்தலும், மிக அணுகி நெருக்கமாக இருத்தலும் தவிர்க்க வேண்டுவன. மிக விலகினால் அரசனுக்குப் பயன்படாமலும், மிக நெருங்கினால் அரசன் தன்னை அவதமதித்ததாக நினைக்கவும் கூடுமாதலாலும் அகலலும் அணுகலும் நீக்க வேண்டுவன ஆயின. 'மன்னர் என்பார் எரிஎனற்கு உரியார் என்றே எண்ணுதி. . . . சிற்றடிமை குற்றம் பொறுப்பர் என்று எண்ண வேணடா' (4078) என வாலி சுக்கிரீவனுக்குக் கூறியதையும் 'அகலாது அணுகாது தீக்காய்வார்போல்க இகல் வேந்தர்ச் சேர்ந்தொழுகுவார்' எனக் குறள் (691) குறிப்பதையும் காண்க. தேவரின் தெரிய நிற்றி - அரசன் பிறப்பால் நிலவுலகனே ஆயினும், அவன் செயலால் மக்கட்குத் தெய்வமாகக் கருதப்பட்டதால் தேவர்களைப் போலப் பிறர்க்கு நீ விளங்குவாய் என்றான். "முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறையென்று வைக்கப்படும் என்று குறளும் (388), 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே' (திருவாய்மொழி - 4 - 8 -) என்று ஆழ்வார் பாசுரமும் கூறியமை காண்க. தகுதியல்லாத வழியால் நட்புக் கொள்ளலாகாது என்பதற்குத் 'தூய்மை சால் புணர்ச்சி பேணி' என்றான்.*

*'சேய்மையோடு அணிமை இன்றி' என்ற செய்தி வான்மீகத்தில் வாலி அங்கதனுக்கு அறிவுரை கூறுகையில் 'யாருடனும் அதிக நட்புச் செய்யத்தக்கதன்று; நட்பு இல்லாமையும் செய்யத்தக்கதன்று; இரண்டும் பெரிய குற்றமாம். ஆகையால் இடை நிகராய் ஒழுகவேண்டும்' என்று கூறப்பட்டுள்ளது.* *8*

*இராமன் உணர்த்தும் நல்லரசு*

***4123. "புகை உடைத்து என்னின், உண்டுபொங்கு***
***அனல் அங்கு" என்று உன்னும்***
***மிகை உடைத்து உலகம்;***
***நூலோர் வினையமும் வேண்டற்பாற்றே;***
***பகையுடைச் சிந்தையார்க்கும், பயன்***
***உறு பண்பின் தீரா***
***நகையுடை முகத்தை ஆகி, இன்***
***உரை நல்கு, நாவால்.***

***உலகம் -*** *இந்த உலகம்;* ***புகை உடைத்து என்னின் -*** *(ஓரிடத்தில்) புகை உண்டாயிற்று என்றால்;* ***அங்குப் பொங்கு அனல் உண்டு -*** *அவ்விடத்தில் கிளர்ந்தெழுகின்ற நெருப்பு உண்டு;* ***என்று உன்னும் -*** *என்று யூகித்தறிகின்ற;* ***மிகை உடைத்து -*** *சிறப்பறிவைக் கொண்டுள்ளது.* ***நூலோர் வினையமும் வேண்டற்பாற்றே -*** *(ஆயினும் இந்த அனுமான அறிவோடு) நூல் வல்லோரால் கூறப்படும் சூழ்ச்சியும் (அரசர்க்கு) வேண்டத்தக்கதாகும்;* ***பகையுடைச் சிந்தையார்க்கும் -*** *(உன்னிடம்) பகைமை கொண்ட மனமுடையார்மாட்டும்;* ***பயன் உறு பண்பின் தீரா -*** *(அவரவர் தகுதிக்கேற்பப்) பயன் உண்டாகும்படி இயல்பறிந்து பண்புடன் நடந்து கொள்வதினின்று மாறாமல்;* ***நகையுடை முகத்தை***

***ஆகி -*** *மலர்ச்சி பெற்ற முகமுடையனாகிய;* ***நாவால் இன் உரை நல்கு -*** *நாவினால் இனிமையான சொற்களைச் சொல்வாயாக.*

*மூவகைப் பிரமாணங்களுள் காட்சியை விடுத்து ஏனை அனுமானப் பிரமாணமும் ஆகமப் பிரமாணமும் ஈண்டுக் கூறப்பட்டன. காட்சிப் பிரமாணம் வெளிப்படை யாதலின் கூறவில்லை. இவை உண்மை காணத் துணை செய்வன. மிகை - கண்ணால் கண்டதற்கு மேல், சிறப்பறிவால் ஊகித்தும் அறிவதால் 'மிகை' எனப்பட்டது. நல்லவர்க்கு நல்லவர்களாகவும், அல்லாதார்க்கு அவர்களை ஒடுக்க வேண்டியிருத்தலின் நல்லவர் போன்றவர்களாய் இருக்க வேண்டுமாதலின் 'நூலோர் வினையமும்' எனக் குறித்தான். பகைவரிடமும் இன்முகமும் இன்சொல்லும் கொள்க என்றான். 'மிகச் செய்து தம் எள்ளுவாரை நகச் செய்து, நட்பினுள் சாப்புல்லல் பாற்று', 'பகை நட்பாம் காலம் வருங்கால் முகம்நட்டு அகநட்பு ஒரீஇ விடல்' (குறள். 829, 830) 'பொள்ளென ஆங்கே புறம் வேரார் காலம் பார்த்து உள் வேர்ப்பர் ஒள்ளியவர். (குறள் 487) என்பன ஒப்புநோக்கத்தக்கன. பகையுடைச் சிந்தையார்க்கும் என்ற உம்மையால் யாவரிடமும் இன்முகமும் இன்னுரையும் வேண்டும் என்பது பெறப்பட்டது. பண்பு - எல்லோர் இயல்புகளும் அறிந்து நடத்தல். 'பண்பெனப்படுவது பாடு அறிந்து ஒழுகல்' (கலி. 143 - 8) என்ற கலித்தொகையைக் காண்க. அரசியல் அரங்கில் சூழ்ச்சி வழி பேணுதல் என்றும் உண்டு போலும். அறத்தின் நாயகனாகிய இராமனே பேசுகிறான்*

*என்பதை எண்ண வேண்டியுள்ளது.  பகையுறு சிந்தையாரிடமும் பண்போடு நடக்கச் சொல்லும் பெருமானே நூலோர் வினையம் பேணச் சொல்கிறான்!  9*

***4124.  'தேவரும் வெஃகற்கு ஒத்த செயிர்***
***அறு செல்வம்அஃது உன்***
***காவலுக்கு உரியதுஎன்றால், அன்னது***
***கருதிக் காண்டி;***
***ஏவரும் இனிய நண்பர்,***
***அயலவர், விரவார், என்று இம்***
***மூவகை இயலோர் ஆவர்,***
***முனைவர்க்கும் உலக முன்னே.***

***தேவரும் வெஃகற்கு ஒத்த-*** *தேவர்களும் விரும்பத்தக்க;* ***செயிர் அறு செல்வம் -*** *குற்றமற அரிய செல்வமாய;* ***அஃது -*** *அது;* ***உன் காவலுக்கு உரியது -*** *உனது பாதுகாவலில் அமைந்திருக்கிறது;* ***என்றால் -*** *என்றால்;* ***அன்னது கருதி -*** *அச்செல்வத்தின் அருமையை மனத்தில் எண்ணி;* ***காண்டி-*** *அதைக் காப்பதில் கருத்தாய் இருப்பாய்.*  ***உலகம் முன்னே -*** *உலகத்தின் முன்னிலையில்;* ***முனைவர்க்கும் -*** *முனிவர்களுக்கும்;* ***ஏவரும் -*** *எத்ததகயவராயினும்;* ***இனிய நண்பர் -*** *இனிய நண்பர்கள்;* ***விரவார், அயலவர் -*** *பகைவர்கள், இருவருமல்லா நொது மலர்;* ***என்று இம்மூவகை இயலோர் ஆவர் -*** *என்று மூன்று வகைப்பட்ட தன்மையுடையோராவர்.*

*பற்று நீங்கிய முனிவர்க்கும், உலகில் உள்ளோர் யாவரும் நண்பர், பகைவர், நொதுமலர் என்ற வகையில் அடங்குவர் எனின், பொருளில் திளைக்கும் சுக்கிரீவன்மாட்டுக் கூற வேண்டுவதில்லை என்றவாறு.  அதனால் அரசன் நட்பு, பகைமை, நொதுமல் என்ற வேற்றுமை உணர்ந்து நடந்து கொள்ளவேண்டும்.*

*'தகுதி என ஒன்று நன்றே பகுதியான் பாற்பட்டு ஒழுகப்பெறின்' (குறள் 111) என்றது காண்க.  செயிர் அறு செல்வம் - தூய வழியில் ஈட்டிய செல்வம். பெறுதற்கரிய செல்வம் பெற்றதால் உலகினரின் இயல்பை விழிப்புடன் அறிந்து நடந்து கொள்ளவேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டது.  10*

***4125.  'செய்வன செய்தல், யாண்டும்***
***தீயன சிந்தியாமை,***
***வைவன வந்தபோதும் வசை***
***இல இனிய கூறல்,***
***மெய்யன வழங்கல், யாவும்***
***மேவின வெஃகல் இன்மை,***
***உய்வன ஆக்கித் தம்மோடு***
***உயர்வன:  உவந்து செய்வாய்.***

***யாண்டும் -*** *(மேற் கூறிய நண்பர் பகைவர் நொதுமலர் என்னும் மூவகையோருள்) எவரிடத்தும்;* ***செய்வன செய்தல் -*** *செய்யத்தக்க காரியங்களைச் செய்தல்;* ***தீயன சிந்தியாமை -*** *தீமை பயக்கும் செயல்களைச் செய்யக் கருதாமை;* ***வைவன வந்த***

***போதும் -*** *பிறர் இகழ்ந்து பேசும் தீய சொற்கள் செவியினை அடைந்த போதும்;* ***வசை இல இனிய கூறல் -*** *(அவர்களிடத்தும்) பழிச்சொற்களை நீக்கி இனிய சொற்களைப் பேசுதல்;* ***மெய்யன வழங்கல் -*** *மெய்ம்மையோடு பொருந்திய சொற்களையே பேசுதல்;* ***யாவும் மேவின வெஃகல் இன்மை -*** *பிறரிடத்துப் பொருந்திய பொருள்களை விரும்பாமை, (ஆகிய இத்தகைய செயல்கள்);* ***உய்வன ஆக்கி -*** *தம்மைக் கடைப்பிடிப்பாரை நற்கதி அடையச் செய்து;* ***தம்மோடு உயர்வன -*** *அவ்வுயிர்களோடு தாமும் மேம்பட்டு விளங்குவனவாகும்.* ***உவந்து செய்வாய் -*** *(ஆகவே) இவற்றை நீ உவந்து செய்வாய்.*

*முன் பாடலில் செல்வத்தைப் போற்றிக் காக்க வேண்டும் எனக்கூறப்பட்டது. இப்பாடலில் அச்செல்வம் அழியாமல் காக்கக் கடைப்பிடிக்க வேண்டியன கூறப்படுகிறது. செய்வன செய்தல் - செய்யவேண்டிய நன்மைகளைச் செய்தல் வேண்டும் என்பதைச் 'செயற்பால செய்யாது இவறியான் செல்வம் உயற்பாலதன்றிக் கெடும்' எனக் குறள் (437) கூறுதல் காண்க. தீயன சிந்தியாமை என்றதால் தீயன பேசுதலும், தீயன செய்தலும் தவிர்க்கப்படுகின்றன. வைவன வந்த போதும் வசை இல இனிய கூறல்: "வைததனை இன் சொல்லாக் கொள்வானும்" (திரிகடுகம். 48), வைய வயப்பட்டான் வாளா இருப்பானேல் வைதான் வியத்தக்கான் வாழும் எனின் (நாலடி. 325), "இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன் சொலால் தான் கண்டனைத்து இவ்வுலகு" (குறள் 387) என்பன காண்க. வெஃகல் இன்மை - "வெஃகாமை வேண்டும் பிறன் கைப் பொருள்" (குறள் - 178), 'முன்னிய பல்பொருள் வெஃகும் சிறுமை செல்வம் உடைக்கும் படை" (திரிகடு 38) என்பவையும் காணக. இப்பாடலில் அரசன் கைக்கொள்ளவேண்டிய இயல்புகள் கூறப்பட்டன. இவ் அரசனே வினையம் (சூழ்ச்சி, வஞ்சனை) பேணலும் வேண்டும் என முன்னே கூறப்பட்டது. அரசியல் நெறி எத்துணைச் சிக்கல் உடையது என்பதை எண்ண வேண்டியுள்ளது. இதனைத் துன்பம் அல்லது தொழு தகவு இல்லை என் இளங்கோவடிகள் குறித்தார். (சிலப். 3. 25. 104)*
*11*

***4126. 'சிறியர் என்று இகழ்ந்து நோவு***
***செய்வன செய்யல்; மற்று, இந்***
***நெறி இகழ்ந்து, யான் ஓர் தீமை***
***இழைத்தலால், உணர்ச்சி நீண்டு,***
***குறியது ஆம் மேனி ஆய***
***கூனியால், குவவுத் தோளாய்!***
***வெறியன எய்தி, நொய்தின் வெந்***
***துயர்க் கடலின் வீழ்ந்தேன்.***

***குவவுத் தோளாய் -*** *திரண்ட தோள்களை உடையவனே!* ***சிறியர் என்று -*** *(உருவம், வலிமை, அறிவு போன்றவற்றில்) நம்மைவிடச் சிறியவர் என்று நினைத்து;* ***இகழ்ந்து -*** *இகழ்ச்சி செய்து;* ***நோவு செய்வன செய்யல் -*** *(எவர்க்கும்) துன்பம் செய்யும் காரியங்களைச் செய்ய வேண்டா;* ***இந்நெறி இகழ்ந்து -*** *இந்த நல்ல நெறியினைப் போற்றாது இகழ்ந்து;* ***யான் ஓர் தீமை இழைத்தலால் -*** *நான் ஒரு தீங்கினைச் செய்த காரணத்தால்;* ***உணர்ச்சி நீண்டு -*** *பகைமை உணர்ச்சி வளர்ந்து;* ***குறியது ஆம் மேனி ஆய கூனியால் -*** *குறுகிய உடம்பினை உடையவளான கூனியால்;* ***வெறியன எய்தி-***

*வறுமைகளை அடைந்து;* ***வெந்துயர்க் கடலின் நொய்தின் வீழ்ந்தேன் -*** *கொடிய துன்பமாகிய கடலில் எளிதாக விழுந்தேன்.*

*சிறியர் என இகழ்வதால் தீமை விளையும் என்பதைத் தன் இளம் பருவ நிகழ்ச்சியால் இராமன் எடுத்துக் காட்டினான். 'பண்டை நாள் இராகவன் பாணிவில் உமிழ் உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள்' (1447) என்ற அடிகள் இந்நிகழ்ச்சியை விளக்கும். "அந்தக் கூனி கூன் போக உண்டை தெறித்த போது' (7288) எனப் பின்னரும் கூறப்பெறும். சிறியர் என்று இகழ்தல் தீது என நீதி நூல்கள் உணர்த்தும். 'எள்ளற்க என்றும் எளியரென்று' (நான்மணி 3) என்பன காண்க. 'வெறியன எய்தி' என்றது, இராமன் அனுபவிக்க வேண்டிய இன்பங்கள் பலவற்றை இழக்க நேர்ந்தது என்பதைக் குறிக்கும். வெந்துயர் - சீதையைப் பிரிந்த துயரம். இராமன் கூனியை உண்டை வில்லால் அடித்த செய்தி வான்மீகத்தில் குறிக்கப்படவில்லை. 12*

***4127. "மங்கையர் பொருட்டால் எய்தும்***
***மாந்தர்க்கு மரணம்" என்றல்,***
***சங்கை இன்று உணர்தி; வாலி***
***செய்கையால் சாலும்; இன்னும்,***
***அங்கு அவர் திறத்தினானே,***
***அல்லலும் பழியும் ஆதல்***
***எங்களின் காண்டி அன்றே;***
***இதற்கு வேறு உவமை உண்டோ?***

***மங்கையர் பொருட்டால் -*** *மகளிர் காரணமாக;* ***மாந்தர்க்கும் மரணம் எய்தும் என்றல் -*** *ஆடவர்க்கு மரணம் ஏற்படும் என்று கூறும்*

*உண்மையை;* ***சங்கை இன்று உணர்தி -*** *ஐயமின்றி அறிந்து கொள்வாயாக;* ***வாலி செய்கையால் சாலும் -*** *இந்த உண்மையைத் தெளிதற்கு வாலியின் செய்தியே போதுமானது;* ***இன்னும் -*** *மேலும்;* ***அவர் திறத்தினானே -*** *அந்த மகளிர் காரணமாகவே;* ***அல்லலும் பழியும் ஆதல் -*** *துன்பமும் பழியும் நேர்வதை;* ***எங்களில் காண்டி அன்றே -*** *எங்களிடத்துக் காண்கின்றாய் அல்லவா?* ***இதற்கு வேறு உவமை உண்டோ -*** *இதற்கு வேறு எடுத்துக்காட்டு உள்ளதோ?*

*பிறர் மனைவியை விரும்புவதால் மரணம் ஏற்படும் என்பதை வாலி, சுக்கிரீவன் மனைவியை விரும்பி அதனால் இறக்க நேரிட்டால் அறியலாம். எங்களில் என்றது மனைவி சொல்லைக் கேட்டு உயிர் துறந்த தயரதனையும் உளப்படுத்திக் கூறியதாகும். அல்லலும் பழியும் ஆதல் - தயரதன் கைகேயிக்க வரம் அளித்துத் துன்புற்றுப் பழிக்கஞ்சி இறந்தான். சீதையின் சொல்லைக் கேட்டுப் பொன்மானைத் துரத்திச் சென்றதால் மனைவியைப் பிரிந்து வருந்திப் பிறர் கூறும் பழிக்காளானான் இராமன். "சீதை என்று ஒருத்தியால் உள்ளம் தேம்பிய பேதையேன்" (8772), "எம்பி வாய்மையான் தூயன உறுதிகள் சொன்ன கொல் கொளேன் போயினென்; பெண் உரை மாறாது போகலால் ஆயது. இப்பழியுடை மரணம்" (8773); 'பெண்மேல் வைத்த காதலின் இப்பேறுகள் பெற்றேன்" (8651) என இராமனே பின்னர் வருந்திக் கூறுவன காண்க. இலக்குவனும் சீதை கூறிய பழமொழியால் அஞ்சி இராமனைத் தேடிச்சென்றதால்*

*அல்லல்களே ஏற்பட்டன. எனவே, மகளிர்மாட்டு மிகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும் என்பது உணர்த்தப்பட்டது. "தூமகேது புவிக்கு எனத் தோன்றிய, வாம மேகலை மங்கையரால் வரும், காமம் இல்லை எனின், கடுங்கேடு எனும் நாமம் இல்லை; நரகமும் இல்லையே" (1427) என்பது வசிட்டர் கூறிய அறிவுரை. மாந்தர் என்பது ஆடவர்க்கும் மகளிர்க்கும் பொதுவான சொல்லாயினும் இங்கே ஆடவரைக் குறித்தது, 'பெண்ணிற் பெருந்தக்க யா உள' (குறள் 54) என அறத்துப்பாலில் கூறிய வள்ளுவர், பொருட்பாலில் பெண்வழிச் சேறல் (அதி. 91) என ஓர் அதிகாரமே வகுத்து எச்சரித்துள்ளார். தாரையைப் படைத்த கம்பரே இங்கும் பேசுகிறார் என்பது எண்ணுதற்குரியது. 13*

***4128. " நாயகன் அல்லன்; நம்மை நனி***
***பயந்து எடுத்து நல்கும்***
***தாய்" என, இனிது***
***பேணி, தாங்குதி தாங்குவாரை;***
***ஆயது தன்மையேனும், அற***
***வரம்பு இகவாவண்ணம்,***
***தீயன வந்தபோது,***
***சுடுதியால் தீமையோரை.***

***நாயகன் அல்லன் -*** *(இவன் நமக்கு) அரசன் அல்லன்;* ***நம்மைப் பயந்து எடுத்து -*** *நம்மைப் பெற்றெடுத்து;* ***நனி நல்கும் தாய் என -*** *நன்கு பாதுகாக்கும் தாயே என்று (எண்ணியும் சொல்லியும்);* ***இனிது பேணி -*** *இனிதாக (மக்கள் உன்னை) ஆதரிக்கும்படி;* ***தாங்கு வாரைத் தாங்குதி -*** *பாதுகாத்தற்குரிய குடிமக்களைப் பாது காப்பாயாக;* ***ஆயது***

***தன்மையேனும் -*** *அங்ஙனம் பாதுகாத்தலே அரச இயல்பாயினும்;* ***தீயன வந்த போது -*** *(எவராலேனும்) தீமை பயக்கும் செயல்கள் நேருமாயின்;* ***தீமையோரை அவ்வாறு -*** *தீங்கு செய்தவர்களை;* ***அற வரம்பு இகவா எண்ணம் -*** *தருமத்தின் எல்லையைக் கடவாதபடி;* ***சுடுதி -*** *(காய்ந்து) தண்டிப்பாயாக.*

*குடிமக்களிடத்து அன்பு காட்டி ஒழுகுதலும், அவ்வாறு நடக்கையில் எவரேனும் தவறு செய்தால் குற்றத்திற்கேற்ற படி தண்டித்தலும் அரசர்க்கு ஏற்ற முறையாகும் என்பது கருத்தாம். 'குடிபுறம் காத்தோம்பிக் குற்றம் கடிதல், வடுவன்று வேந்தன் தொழில்', 'கொலையில் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட்டதனொடு நேர்', 'தக்காங்கு நாடித் தலைச் செல்லா வண்ணத்தால், ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து'; 'கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன் அடுமுரண் தேய்க்கும் அரம்' (குறள் 549, 550, 561, 567) என்னும் கருத்துக்கள் இங்குக் காணத்தக்கன.*

*நாயகன் அல்லன் என்ற உண்மையை மறைத்துத் தாய் என மற்றொரு தன்மையை ஏற்றிக் கூறியதால் இப்பாடல் ஒழிப்பணியின்பாற்படும். மன்னனையும் கடவுளையும் தாயெனக் கூறுதல் மரபாகும். 'தாயொக்கும் அன்பில்' (171) 'தாயென உயிர்க்கு நல்கி' (4061); 'அம்மையே அப்பா' (திருவாச. பிடித்த 3) என்பன காண்க. 14*

***4129. 'இறத்தலும் பிறத்தல்தானும் என்பன***
***இரண்டும், யாண்டும்,***

***திறத்துளி நோக்கின், செய்த வினை***
***தரத் தெரிந்த அன்றே?***
***புறத்து இனி உரைப்பது***
***என்னே? பூவின்மேல் புனிதற்கேனும்,***
***அறத்தினது இறுதி, வாழ்நாட்கு இறுதி;***
***அஃது உறுதி, அன்ப!***

***அன்ப!*** *- அன்பனே!* ***திறத்துளி நோக்கின் -*** *செம்மைமான வழியால் பார்க்கு மிடத்து;* ***இறத்தலும் பிறத்தல் தானும் -*** *சாதலும் பிறத்தலும்;* ***என்பன இரண்டும்-*** *என்று சொல்லப்படுவனவாகிய இரண்டு தன்மைகளும்;* ***யாண்டும்-*** *எப்பொழுதும்;* ***செய்த வினை தர -*** *(அவ்வவ் உயிர்கள்) செய்த வினைகள் தருதலால்;* ***தெரிந்த அன்றே -*** *(விளைவன எனத்) தெரிவதாகும் அல்லவா?* ***பூவின்மேல் புனிதற்கேனும் -*** *(திருமாலின் நாபித்) தாமரை மலர்மேல் தோன்றிய தூய பண்புகளை உடைய நான்முகனுக்கே யானாலும்;* ***அறத்தினது இறுதி -*** *அறநெறியிலிருந்து தவறுதல்;* ***வாழ் நாட்கு இறுதி -*** *ஆயுள் முடிவிற்குக் காரணமாம்;* ***அஃது -*** *அறநெறியிலிருந்து தவறாமை;* ***உறுதி என்ப-*** *ஆயுளுக்கு உறுதியைச் செய்வதாம் என்று கூறுவர்;* ***இனி-*** *இதைவிட;* ***புறத்து உரைப்பது என்னே -*** *வேறு சொல்வதற்கு என்ன இருக்கிறது?*

*திறத்து உளி - உளி என்பது மூன்றாம் வேற்றுமைப் பொருள் படுவதோர் இடைச் சொல். அறத்திற்கு மாறாக எவர் நடப்பினும் அதன் பயனை அனுபவிப்பர்*

*என்பது வற்புறுத்தப்பட்டது. சாதலும் பிறத்தலும் வினைப் பயனால் நிகழும் என்பதைச் சிந்தாமணியும் உணர்த்தும், 'சாதலும் பிறத்தல்தானும் தன்வி ைப் பயத்தினாகும்" (சீவக. 269). 'வினைப் போகமே யொரு தேகம் கண்டாய். வினைதான் ஒழிந்தால், தினைப்போதளவும் நில்லாது கண்டாய்' (பட்டினத்-பொது.7). அருள் தருந் திறத்து அறனன்றி வலியது உண்டாமோ" (2962), "அறத்தினூஉங்கு ஆக்கமுமில்லை அதனை, மறத்தலினூங்கு இல்லை கேடு" (குறள்-32) என்பன ஒப்புநோக்கத்தக்கன. 15*

***4130. 'ஆக்கமும், கேடும், தாம் செய்***
***அறத்தொடு பாவம் ஆய***
***போக்கி, வேறு உண்மை தேறார்,***
***பொரு அரும் புலமை நூலோர்;***
***தாக்கின ஒன்றோடு ஒன்று***
***தருக்குறும் செருவில், தக்கோய்!***
***பாக்கியம் அன்றி, என்றும்,***
***பாவத்தைப் பற்றலாமோ?***

***ஆக்கமும் கேடும் -*** *செல்வமும் அதன் அழிவும்;* ***தாம் செய் -*** *அவ்வவ் உயிர்கள் செய்யும்;* ***அறத்தோடு பாவம் ஆய -*** *புண்ணிய, பாவங்களால் அமைவன.* ***போக்கி -*** *அக்காரணங்களை விடுத்து;* ***வேறு உண்மை-*** *பிறிதொரு காரணம் இருப்பதை;* ***பொரு அரும் புலமை நூலோர்-*** *ஒப்பற்ற அரிய புலமையுடைய அறிஞர்கள்;* ***தேறார் -*** *தெளிய மாட்டார்கள்.* ***தக்கோய் -*** *(ஆகவே) தகுதி வாய்ந்தவனே!* ***ஒன்றோடு ஒன்று தாக்கின -*** *(அவ் அறமும் பாவமும்) ஒன்றோடொன்று மோதி;* ***தருக்குறும் செருவில் -***

*செருக்கடைவதற்கான போரில்;* ***பாக்கியம் அன்றி -*** *நன்மைக்குக் காரணமான நல்வினையைச் செய்வதன்றி;* ***பாவத்தை என்றும் பற்றலாமோ -*** *தீமையைத் தரும் தீய காரியத்தை மேற்கொள்ளலாமோ?*

*ஆக்கத்திற்குக் காரணம் அறம். அதன் அழிவிற்குக் காரணம் பாவம். ஆகவே கடைப்பிடிப்பதற்குரிய அறம், விடுதற்குரியது பாவம் எனக் கூறப்பட்டது. 'ஆக்கமும் கேடும் தாம் செய் அறத்தோடு பாவம் ஆய' - என்பதில் நேர்நிரல் நிறையணி அமைந்துள்ளது. அறத்திறனாலே எய்தினை அன்றோ? அது நீயும், புறத்தினாலே பின்னும் இழக்கப் புகுவாயோ' (3246); 'ஏவல் எவ்உலகும் செல்வம் எய்தினார் இசையின், ஏழாய்' பாவமோ? முன் செய்த தருமமோ? தெரியப் பாராய் (5198), 'சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு ஆக்கம் எவனோ உயிர்க்கு' (குறள் - 31) என்பன காண்க. வாலி சுக்கிரீவன் போரில் இராமன் வாலியுடன் சேராமல் சுக்கிரீவனோடு சேர்ந்ததைப் பாடலின் இறுதி அடியொடு ஒப்பிட்டுக்காண்க.* *16*

***4131. "இன்னது தகைமை" என்ப,***
***இயல்புளி மரபின் எண்ணி,***
***மன் அரசு இயற்றி, என் கண்***
***மருவுழி மாரிக் காலம்***
***பின்னுற முறையின், உன்தன்***
***பெருங் கடற் சேனையோடும்***
***துன்னுதி; போதி' என்றான்,***
***சுந்தரன். அவனும் சொல்வான்:***

***இன்னது தகைமை என்ப -*** *மேற்கூறிய இவை (அரசர்க்கு) முறை மையாமென்று (அறிஞர்) கூறுவர்.* ***இயல்புளி -*** *(ஆதலால்) நூல்களில் கூறிய இயல்பின்படி;* ***மரபின் எண்ணி -*** *முறைப்படி ஆராய்ந்து;* ***மன் அரசு இயற்றி -*** *சிறப்பாக ஆட்சியை நடத்தி;* ***மாரிக் காலம் பின்னுற -*** *மழைக்காலம் கழிந்த பின்பு;* ***என் கண் மருவுழி -*** *என்னிடம் வரும் பொழுது;* ***முறையின் -*** *முறைப்படி;* ***உன்தன் பெருங்கடல் சேனையோடும் -*** *உனது பெரிய கடல் போன்ற சேனையோடு;* ***துன்னுதி -*** *(என்னிடம்) வந்து; சேர்வாய்;* ***போதி -*** *இப்பொழுது செல்வாய்;* ***என்றான் சுந்தரன் -*** *என்று கூறினான் அழகான இராமன்;* ***அவனும் சொல்வான் -*** *(அதுகேட்டு) அச்சுக்கிரீவனும் கூறுவான்:*

*இராமன் சுக்கிரீவனுக்குக் கூறிய அரசியலுக்குரிய அறவுரைகளை வசிட்டர் இராமனுக்குக் கூறிய உறுதிப்பொருள்களோடு (1417, 1424) ஒப்பு நோக்குக. இவ்வித அரசியல் அறவுரை சுக்கிரீவன் முதலானோர்க்கு இராமன கூறியதாக வான்மீகத்தில் இல்லை.*

*சீதையைத் தேடுதற்கு மழைக்காலம் வசதியற்றதாக இருக்குமாதலின் 'மாரிக் காலம் பின்னுற' என்றான். தமிழில் ஆவணி, புரட்டாசி மாதங்கள் கார்காலம் என்பர். எனினும், ஆவணிக்கு முன்னரும், புரட்டாசிக்குப் பின்னரும் கார்காலத் தொடர்பு இருப்பதால் இந்நான்கு மாதங்களையும் மாரிக்காலம் என்றே வழங்குவர். வான்மீகத்திலும் இவ்வாறே கொள்ளப்பட்டது. 'சுந்தரன்' என இராமன் குறிக்கப் பெறல் காண்க.* *17*

***4132. "குரங்கு உறை இருக்கை" என்னும்***
***குற்றமே குற்றம் அல்லால்,***
***அரங்கு எழு துறக்க நாட்டுக்கு***
***அரசு எனல் ஆகும் அன்றே,***
***மரம் கிளர் அருவிக் குன்றம்;***
***வள்ளல்! நீ, மனத்தின் எம்மை***
***இரங்கிய பணி யாம் செய்ய,***
***இருத்தியால், சில நாள், எம்பால்.***

***வள்ளல் -*** *வண்மைக் குணம் உடையவனே!* ***மரம்கிளர் அருவிக் குன்றம் -*** *மரங்கள் விளங்குகின்ற அருவிகளை உடைய கிட்கிந்தை மலை;* ***குரங்கு உறை இருக்கை -*** *குரங்குகள் வாழ்கின்ற இடம்;* ***என்னும் குற்றமே குற்றம் அல்லால் -*** *என்று கூறப்படும் ஒரு குற்றத்தை உடையதே அல்லாமல்;* ***அரங்கு எழு துறக்க நாட்டுக்கு -*** *(பிற சிறப்புக்களால்)*

*சபைகள் பொருந்திய தேவர் உலகத்துக்கே;* ***அரசு எனல் ஆகும் அன்றே -*** *தலைமை கொண்டு மேம்பட்டதென்று கூறத்தக்க தல்லவா?* ***நீ -*** *(அதனால்) நீ;* ***மனத்தின் எம்மை இரங்கிய பணி -*** *உன் மனத்தில் எங்கள் பால் இரக்கங் கொண்டு கட்டளையிடும் வேலைகளை;* ***யாம் செய்ய -*** *நாங்கள் செய்ய;* ***சில நாள் எம்பால் இருத்தி -*** *சில நாட்கள் எம்முடன் இருப்பாயாக.*

*அரங்கு - சுதர்மை முதலிய தெய்வ சபைகள். நில, நீர்வளம் பெற்று வாழ்வதற்கு உரிய வசதிகள் கொண்ட இடமாதலின் 'மரம்கிளர் அருவிக் குன்றம்' எனப்பட்டது. வள்ளல் - அண்மை விளி; இழந்த மனைவியையும் அரசினையும் தனக்கு அளித்தது கருதிக் கூறியது. கிட்கிந்தையைக் குரங்குகள் வாழும் இடம் என ஒரு குறை கூறலாமேயன்றி அது சுவர்க்கத்தினும் மேம்பட்டது என்பதால் இராமனை அவ்விடம் தங்குமாறு சுக்கிரீவன் வேண்டினான் என்க.* *18*

***4133. 'அரிந்தம! நின்னை அண்மி,***
***அருளுக்கும் உரியேம் ஆகி,***
***பிரிந்து, வேறு எய்தும் செல்வம்***
***வெறுமையின் பிறிது அன்றாமால்;***
***கருந் தடங் கண்ணினாளை***
***நாடல் ஆம் காலம்காறும்***
***இருந்து, அருள் தருதி, எம்மோடு'***
***என்று, அடி இணையின் வீழ்ந்தான்.***

***அரிந்தம -*** *பகைவர்களை அழிப்பவனே!* ***நின்னை அண்மி -*** *(நாங்கள்) உன்னைப் புகலடைந்து;* ***அருளுக்கும் உரியேம் ஆகி -*** *(உனது) கருணைக்கும் உரியவர்களாயிருந்து;* ***பிரிந்து -*** *(பின்) உன்னை விட்டுப் பிரிந்து;* ***வேறு எய்தும் செல்வம் -*** *தனியே அனுபவிக்கின்ற செல்வம்;* ***வெறுமையின் பிறிது அன்று ஆம் -*** *வறுமையினும்*

*வேறான தன்று; **கருந்தடங் கண்ணினாளை -** (ஆதலால்) கரிய பெரிய கண்களை உடைய பிராட்டியை; **நாடல் ஆம் காலம் காறும் -** தேடுதற்கு ஏற்ற காலம் வருமளவும்; **எம்மோடு இருந்து அருள் தருதி -** (கிட்கிந்தையில்) எங்களோடு இருந்து அருள்புரிவாய்; **என்று -** என்று கூறி; **அடி இணையின் வீழ்ந்தான் -** இராமனின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.*

*வாலியைக் கொன்ற திறம் பற்றி 'அரிந்தம' என அழைத்தான். இராமனைச் சேர்ந்து பெறும் இன்பத்தை நோக்க, தனியே வேறாகப் பெறும் செல்வம் பெற்றும் பெறாதது போலாகும் என்றான். 19*

***4134. ஏந்தலும், இதனைக் கேளா, இன்***
***இள முறுவல் நாற,***
***'வேந்து அமை இருக்கை, எம்போல்***
***விரதியர் விழைதற்கு ஒவ்வா;***
***போந்து அவண் இருப்பின், எம்மைப்***
***போற்றவே பொழுது போமால்;***
***தேர்ந்து, இனிது இயற்றும் உன்தன்***
***அரசியல் தருமம் தீர்தி.***

***ஏந்தலும் -** பெருமையில் சிறந்த இராமனும்; **இதனைக் கேளா -** (சுக்கிரீவன் கூறிய) இவ்வுரையைக் கேட்டு; **இன்இள முறுவல் நாற -** இனிய புன்னகை தோன்ற; **வேந்து அமை இருக்கை -** அரசர்க்குரிய அரண்மனையில் தங்கியிருக்கும்; **எம்போல் விரதியர் -** எம்மைப் போல் விரதம் பூண்டோர்; **விழைதற்கு ஒவ்வா -** விரும்பியிருத்தற்குத் தகாததாகும்; **அவண் போந்து இருப்பின் -** (மேலும்) அவ்விடத்தில் (கிட்கிந்தா நகரத்தினுள்) வந்து வசித்தால்; **எம்மைப் போற்றவே பொழுது போம் -** எம்மை உபசரிப்பதிலேயே (உனக்குப்) பொழுது கழிந்திடும்; **தேர்ந்து இனிது இயற்றும் -** ஆராய்ந்து இனிது நடத்தும்; **உன்தன் அர சியல் தருமம் -** உன் அரசாட்சியின் முறைமையினின்றும்; **தீர்தி -** தவறியவனாவாய்.*

*விரதியர் - தவ வாழ்வினர். 'தாழிரும் சடைகள் தாங்கித் தாங்க அரும் தவம் மேற்கொண்டு' கானகத்தில் வாழவேண்டும் என்பது கைகேயி சொன்ன (1601); அது பழுதாகாமல் தவ வாழ்வினராக இருந்தனர் இராமனும் இளவலும்.*

*முறுவல் - அன்பு பற்றி எழுந்தது. கேளா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் உடன்பாட்டுப் பொருளில் வந்தது. நாற - தோன்ற;*
*20*

***4135. 'ஏழ் - இரண்டு ஆண்டு, யான் போந்து***
***எரி வனத்து இருக்க ஏன்றேன்;***
***வாழியாய்! அரசர் வைகும் வள***
***நகர் வைகல் ஒல்லேன்;***
***பாழி அம் தடந் தோள்***
***வீர! பார்த்திலைபோலும் அன்றே!***

*யாழ் இசை மொழியோடு அன்றி,*
*யான் உறும் இன்பம் என்னோ?*

***வாழியாய்*** *- வாழ்வை உடையவனே!* ***ஏழ் இரண்டு ஆண்டு*** *- பதினான்கு வருட காலம்;* ***யான் போந்து எரி வனத்து இருக்க*** *- நான் சென்று வெம்மை மிக்க காட்டில் வசிப்பதாக;* ***ஏன்றேன்*** *- ஏற்றுக் கொண்டேன்;* ***அரசர் வைகும் வளநகர்*** *- அரசர்கள் வாழும் செல்வ வளம் வாய்ந்த நகரில்;* ***வைகல் ஒல்லேன்*** *- தங்குவதற்கு உடன்படேன்.* ***பாழி அம் தடந்தோள் வீர*** *- (மேலும்) வலிமை வாய்ந்த அழகிய பெரிய புயங்களை உடைய வீரனே!* ***யாழ் இசை மொழியோடு அன்றி*** *- யாழின் இசைபோலும் சொல்லையுடைய சீதையோடு அல்லாமல்;* ***யான் உறும் இன்பம் என்னோ*** *- நான் அடையும் இன்பம் யாதோ?*

***பார்த்திலை போலும்*** *- (நீ இதனை) எண்ணிப் பார்த்தாய் இல்லை போலும்!*

*வாலி இறந்தபிறகு, கிட்கிந்தைக்கு வந்து சுக்கிரீவனுக்கு முடிசூட்ட வேண்டும் என வேண்டியவன் அனுமன் என்கிறது வான்மீகம்; சுக்கிரீவன் அழைப்பதாக அங்குச் செய்தி இல்லை. தந்தை கட்டளையின்படி பதினான்கு ஆண்டுகள் காட்டில் உறைதல் வேண்டும், நகரினுள்ளாவது ஊரினுள்ளாவது புகுதல் தகாது எனக் கூறி சுக்கிரீவன் வேண்டுகோளை மறுக்கிறான், இராமன்.*

*எரிவனம் - வெயிலின் கடுமையால் தீப்போல் சுடுகின்ற காடு. சீதையின் சொல்லுக்கு யாழ் உவமை. 'குறி நரம்பு எறிவுற்று எழுவு தண் தமிழ் யாழினும், இனிய சொல் கிளியே' (2073); 'குழலும் யாழும், கொழும்பாகும் அயிலும் அமுதும் சுவை தீர்த்த மொழி' (3569) என்பன காண்க. இராமனுக்குச் சீதையோடன்றித் தனியே எய்தும் இன்பம் இன்பமாகாது. அன்று ஏ - அசை நிலைகள்.* *21*

*4136. " தேவி வேறு அரக்கன் வைத்த*
*சேமத்துள் இருப்ப, தான் தன்*
*ஆவிபோல் துணைவரோடும் அளவிடற்கு*
*அரிய இன்பம்*
*மேவினான், இராமன்" என்றால், ஐயா!*
*இவ் வெய்ய மாற்றம்,*
*மூவகை உலகம் முற்றும்*
*காலத்தும், முற்ற வற்றோ?*

***தேவி*** *- என் தேவியான சீதை;* ***வேறு*** *- தனியாய்;* ***அரக்கன் வைத்த சேமத்துள் இருப்ப*** *- இராவணன் கொண்டுபோய் வைத்த காவலில் இருக்க;* ***தான் தன்*** *- தான், தன்னுடைய;* ***ஆவிபோல் துணைவரோடும்*** *- உயிர் போன்ற நண்பர்களோடு;* ***அளவிடற்கு அரிய இன்பம்*** *- அளவிடமுடியாத அரிய இன்பத்தை;* ***இராமன் மேவினான்-*** *இராமன் விரும்பினான்;* ***என்றால்-*** *என்று மக்கள் கூற நேர்ந்தால்;* ***ஐய*** *- ஐயனே!* ***இவ்வெய்ய மாற்றம்*** *- இந்தக் கொடிய சொல்;* ***மூவகை உலகம்*** *- (மேல், கீழ், நடு எனும்) மூன்று வகைப்பட்ட உலகங்களும்;* ***முற்றும் காலத்தும்*** *- அழியுங் காலத்திலும்;* ***முற்றவற்றோ*** *- முடிய வல்லதாகுமோ? (அந்தப் பெரும்பழி உலகங்கள் அழிந்தாலும் அழியாது).*

*உலகம் முற்றும் காலம் - ஊழிக்கால முடிவு. அரக்கனது சிறைக் காவலில் இருக்க. இராமன் தன் நண்பர்களோடு இன்பங்களை விழைந்தான் என்று உலகம் கூறும் பழிச்சொற்கு இராமன் அஞ்சினான் என்க. மேவுதல் - விரும்புதல்.*
*22*

***4137. 'இல்லறம் துறந்திலாதோர் இயற்கையை***
***இழந்தும், போரின்***
***வில் அறம் துறந்தும், வாழ்வேற்கு,***
***இன்னன மேன்மை இல்லாச்***
***சில் அறம்; புரிந்து***
***நின்ற தீமைகள் தீருமாறு,***
***நல் அறம் தொடர்ந்த நோன்பின்,***
***நவை அற நோற்பல் நாளும்.***

***இல்லறம் துறந்திலாதோர் -*** *மனை அறத்திற்கு உரிய நெறியைக் கைவிடாதவர்களுடைய;* ***இயற்கையை இழந்தும் -*** *இயல்பினைக் கை விட்டு நீங்கியும்;* ***போரின் வில் அறம் துறந்தும் -*** *போரில் வில் பிடித்து இயற்றும் அறத்தை விடுத்தும்;* ***வாழ்வேற்கு -*** *வாழ்பவனாகிய எனக்கு;* ***இன்னன -*** *இத்தகையன (நகரத்தில் நண்பர்களோடு இனிதாக இருத்தல் போன்றன);* ***மேன்மை இல்லாச் சில் அறம் -*** *சிறப்பில்லாத அற்ப ஒழுக்கங்களாகும;* ***புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு -*** *நான் செய்துள்ள தீமைகள் நீங்குமாறு;* ***நல் அறம் தொடர்ந்த நோன்பின் -*** *நல்ல அறத்தோடு பொருந்திய விரதத்தில் நின்று;* ***நவை அற நாளும் நோற்பல் -*** *குற்றம் நீங்க ஒவ்வொரு நாளும் தவம் செய்வேன்.*

*மனைவியைக் காத்தல் இல்லறத்தின் தருமமாகும். தான் மனைவியைப் பாதுகாவாது விட்டமை பற்றி 'இல்லறந் துறந்திலாதோர் இயற்கையை இழந்தும்' என்றான். தான் பூண்ட மானுட வேடத்திற்கேற்ப நடந்துகொள்வதால், தன் தெய்வத் தன்மையைப் பாராட்டாமல் இராமன் 'புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு நோற்பல்' என்றான். வில்லறம் துறந்தமை, வாலியை மறைந்துநின்று கொன்றதைக் குறித்தது எனலுமாம். இல்லறக் கடமையில் தவறியதோடு வில்லறச் செம்மையும் தன்மாட்டு இல்லையென்பதால் அப்பிழைகள் நீங்க நோன்பு செய்வதாக இராமன் கூறினான்என்க. 23*

*'நான்கு திங்கள் கடந்து படையொடு வருக' என இராமன் கூறுதலும் சுக்கிரீவன் விடைபெறுதலும்*

***4138. 'அரசியற்கு உரிய யாவும்***
***ஆற்றுழி ஆற்றி, ஆன்ற***
***திரை செயற்கு உரிய சேனைக்***
***கடலொடும், திங்கள் நான்கின்***
***விரசுக, என்பால்; நின்னை வேண்டினென்.***
***வீர!' என்றான் -***

***உரை செயற்கு எளிதும் ஆகி,***
***அரிதும் ஆம் ஒழுக்கில் நின்றான்.***

***உரை செயற்கு எளிதும் ஆகி*** - *சொல்லுதல் எளியதாகி;* ***அரிதும் ஆம்*** - *கடைப்பிடித்தற்கு அரியதுமான;* ***ஒழுக்கில் நின்றான்*** - *நல்லொழுக்கத்தில் தளராது நிலை நிற்பவனாகிய இராமன்;* ***வீர*** - *(சுக்கிரீவனை நோக்கி) வீரனே!* ***அரசியற்கு உரிய யாவும்*** - *அரசாட்சிக்கு உரிய செயல்கள் எல்லாவற்றையும்;* ***ஆற்றுழி ஆற்றி*** - *செய்ய வேண்டிய முறைப்படி செய்து;* ***ஆன்ற திரை செயற்கு உரிய*** - *பெரிய அலைகள்*

*வீசுதற்கு இடமான;* ***சேனைக் கடலொடும்*** - *கடல்போன்றசேனையொடும்;* ***திங்கள் நான்கில்*** - *நான்கு மாதங்கள் கழிந்த அளவில்;* ***என்பால் விரசுக*** - *என்னிடம் வந்து சேர்வாயாக;* ***என்றான்*** - *என்றுகூறினான்.*

*ஒழுக்கம் சொல்லுதற்கு எளிதாயினும் கடைப்பிடித்தற்கு அரிது ஆதலின் 'உரை செயற்கு எளிதும் ஆகி அரிது ஆம் ஒழுக்கு' எனப்பட்டது. 'சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம், சொல்லிய வண்ணம் செயல்' (குறள் 664) என்றதும் காண்க. வனத்தில் இருந்து விரதம் காப்பேன் என்று நியமங்கள் பற்றிப் பேசுவது எளிது ஆயினும் அவற்றைக் கடைப்பிடிப்பது கடினம் என்பது இங்கு உணர்த்தப்பட்டது. அவற்றில் தளராது நிலைத்து நிற்கக் கூடியவன் இராமன் என்பதால் 'ஒழுக்கில் நின்றான்' என இராமன் சிறப்பிக்கப்பட்டான்.*

*சேனைக் கடல் - உருவகம் - சேனையில் உள்ளாரது வரிசை ஒழுங்குகைசை் சேனையாகிய கடலுக்கு அலையாகக் கருதுக.* *24*

***4139. 'மறித்து ஒரு மாற்றம் கூறான்,***
***'வான் உயர் தோற்றத்து அன்னான்***
***குறிப்பு அறிந்து ஒழுகல். மாதோ,***
***கோது இலர் ஆதல்' என்னா;***
***நெறிப் பட, கண்கள் பொங்கி***
***நீர் வர, நெடிது தாழ்ந்து,***
***பொறிப்ப அருந் துன்பம் முன்னா,***
***கவி குலத்து அரசன் போனான்.***

***கவிகுலத்து அரசன்*** - *(அம்மொழிகளைக் கேட்டு) குரங்குகளின் கூட்டத்திற்கு அரசனான சுக்கிரீவன்;* ***மறித்து ஒரு மாற்றம் கூறான்*** - *இராமன் சொல்லுக்கு மாற்றாக ஒரு வார்த்தையும் பேச இயலாதவனாய்;* ***'வான் உயர் தோற்றத்து அன்னான்*** - *வான் போல் உயர்ந்த தவவேடத்தையுடைய இராமனின்;* ***குறிப்பு அறிந்து ஒழுகல்*** - *குறிப்பை உணர்ந்து அதன்படி நடத்தலே;* ***கோது இலர் ஆதல் என்னா*** - *குற்ற மில்லாதவர் ஆகுதலால்' என்று எண்ணி;* ***கண்கள் நீர் பொங்கி*** - *கண்களில் நீர் பெருகி;* ***நெறிப்பட வர*** - *முறையாக ஒழுக;* ***நெடிது தாழ்ந்து*** - *நெடிது விழுந்து வணங்கி;* ***பொறிப்ப அருந்துன்பம் முன்னா*** - *கணக்கிட முடியாத பெரிய துன்பத்தை மனத்தில் கொண்டு;* ***போனான்*** - *(கிட்கிந்தா நகரத்தை நோக்கிச்) சென்றான்.*

*சுக்கிரீவன் மறுமாற்றம் கூறாது கிட்கிந்தா நகர் சென்றான் என்பதில் குறிப்பறிந்து நடக்கும் பண்பு அவனிடம் இருப்பதைக் காணலாம். 'வானுயர் தோற்றம்' (குறள் 212) என்பதற்கு 'வான்போல் உயர்ந்த தவவேடம்' என்பர் பரிமேலழகர் வானினம் உயர்ந்த மானக் கொற்றவ' (4067) என்று முன்னரும் குறித்தது காண்க. பொறிப்ப அருந்துன்பம் - சீதை பிரிவால் இராமன் படும் துயர் கண்டு சுக்கிரீவன் வருந்திய வருத்தமும் இராமனைப் பிரிவதால் ஏற்படும் வருத்தமும் பெரிய என்பதாம். நெடிது வீழ்தல் - எட்டு உறுப்புக்களும் பூமியில் படும்படி வீழ்ந்து வணங்கல். மாது, ஓ -அசைகள்.*
*25*

*அங்கதனுக்கு இராமன் அறிவுரை*

***4140. வாலி காதலனும், ஆண்டு,***
***மலர் அடி வணங்கினானை,***
***நீல மா மேகம் அன்ன***
***நெடியவன், அருளின் நோக்கி,***
***'சீலம் நீ உடையை ஆதல்,***
***இவன் சிறு தாதை என்னா,***
***மூலமே தந்த நுந்தை ஆம்***
***என, முறையின் நிற்றி.'***

***ஆண்டு மலரடி வணங்கினானை -** அப்பொழுது தன் மலர் போன்ற திருவடிகளில் வணங்கியவனான; **வாலி காதலனும் -** வாலியின் மகனான அங்கதனையும்; **நீலமாமேகம் அன்ன நெடியவன் -** நீல நிறம் வாய்ந்த சிறந்த மேகத்தையொத்த பெரியவனான இராமன்; **அருளின் நோக்கி -** கருணையோடு பார்த்து; **நீ சீலம் உடையை ஆதல் -** 'நீ ஒழுக்கம் உடையவன் ஆகுக; **இவன் சிறு தாதை என்னா -** இந்தச் சுக்கிரீவனை உன் சிறிய தந்தை என்று கருதாமல்; **மூலமே தநத் நுந்தை ஆம் என -** உன் பிறப்பிற்குக் காரணமாகிய உன் தந்தையாகவே கொண்டு; **முறையின் நிற்றி -** அவன் கட்டளைப்படி நிற்பாயாக!*

*இப்பாடல் அடுத்த பாடலில் உள்ள 'என்றான்' என்பதனோடு இயையும். வணங்கினான் (ஆகிய) வாலி காதலனையும் என உருபு பிரித்துக் கூட்டுக. நீல மேகம் இராமனுக்கு உவமை. நெடியவன் = பெருமைக்குரியவன்; மாவலின் பொருட்டு நீண்டனுமாம். ஆதல் என்பதற்கு ஆதலால் என்றும் பொருள் கொள்ளலாம்.*
*26*

***4141. என்ன, மற்று இனைய கூறி,***
***'ஏகு அவன் - தொடர' என்றான்;***
***பொன் அடி வணங்கி, மற்று***
***அப் புகழுடைக் குரிசில் போனான்;***
***பின்னர், மாருதியை நோக்கி,***
***'பேர் எழில் வீர! நீயும்,***
***அன்னவன் அரசுக்கு ஏற்றது***
***ஆற்றுதி, அறிவின்' என்றான்.***

***என்ன மற்று*** - என்று மேலும்; ***இனைய கூறி*** - இத்தகைய வார்த்தைகளைக் கூறி; ***அவன் - தொடர ஏகு என்றான்*** - 'அந்தச் சுக்கிரீவனைத் தொடர்ந்து செல்வாயாக' என்று கூறினான்; ***மற்று*** - அதன் பின்; ***அப்புகழுடைக் குரிசில்*** - புகழ் பொருந்திய சிறந்த அங்கதன்; ***பொன் அடி வணங்கி*** - (இராமனுடைய) பொன் போன்ற பாதங்களில் வணங்கி; ***போனான்*** - கிட்கிந்தை நகருக்குச் சென்றான்; ***பின் னர்***

***மாருதியை நோக்கி*** - அதற்குப் பிறகு (இராமன்) அனுமனைப் பார்த்து; ***'பேர் எழில் வீர*** - மிக்க அழகையுடைய வீரனே; ***நீயும்*** - நீயும் (சென்று); ***அன்னவன் அரசுக்கு ஏற்றது*** - அச்சுக்கிரீவனது அரசாட்சிக்கு ஏற்ற காரியங்களை; ***அறிவின் ஆற்றுதி*** - உன் அறிவினால் செய்வாயாக; ***என்றான்*** - என்று சொன்னான்.

*அ - பண்டறி சுட்டு; அனுமன் அழகு மிக்கவன் என்பதால் 'பேர் எழில் வீர' என விளித்தான். அனுமனுக்குச் சுந்தரன் என்னும் ஒரு பெயர் உண்டு. உருவ அழகு, வீரம், அறிவு ஆகிய மூன்றிலும் அனுமன் சிறந்தவன் என்பதை இராமன் கூற்றால் அறிய முடியகிறது. 27*

*மாருதி, 'இங்கிருந்து அடிமை செய்வேன்' எனல்*

***4142. பொய்த்தல் இல் உள்ளத்து***
***அன்பு பொழிகின்ற புணர்ச்சியானும்,***
***'இத் தலை இருந்து, நாயேன்,***
***ஏயின எனக்குத் தக்க***
***கைத் தொழில் செய்வேன்' என்று,***
***கழல் இணை வணங்கும் காலை,***
***மெய்த் தலை நின்ற வீரன்,***
***இவ் உரை விளம்பி விட்டான்:***

***பொய்த்தல் இல் உள்ளத்து*** - பொய்ம்மை இல்லாத மனத்தில்; ***அன்பு பொழிகின்ற புணர்ச்சியானும்*** - அன்பைப் பொழிகின்ற நட்பை உடையவனான அனுமனும்; ***நாயேன்*** - (இராமனது நோக்கி) நாய் போன்றவனான அடியேன்; ***இத்தலை இருந்து*** - இவ்விடத்திலேயே தங்கி; ***ஏயின*** - (உன்னால்) ஏவப்பட்டனவும்; ***எனக்குத் தக்க*** - எனது ஆற்றலுக்கு ஏற்றனவுமான; ***கைத்தொழில் செய்வேன் என்று*** - குற்றேவல்களைச் செய்வேன் என்று கூறி; ***கழல் இணை வணங்கும் காலை*** - இராமனது கழலணிந்த இரண்டு திருவடிகளையும் வணங்கிய பொழுது; ***மெய்த்தலை நின்ற வீரன்*** - உண்மையின் கண் நிலைத்து நின்ற வீரனான இராமன்; ***இவ்வுரை விளம்பிவிட்டான்*** - (பின்வரும்) இந்த வார்த்தைகளைக் கூறலானான்.

*பொய் கருதாமை, அன்புடைமை ஆகிய அனுமனின் சிறப்பியல்புகள் இங்குக் கூறப்பட்டன. ''நீதியில் நின்றீர்; வாய்மை அமைந்தீர்'' (4725); 'அண்ணல் அம்மைந்தர்க்கு அன்பு சிறந்தீர்' (4726) என்ற சாம்பன் கூற்றும் ''சொல்லுதி மெய்ம்மை தொடர்ந்தோய்'' (5422) என்ற சீதையின் கூற்றும் காண்க. 'நாயேன்' என்றதனால் அனுமனின் அடிமைத்திறமும், 'ஏயின செய்வேன்' என்றதால் கட்டளை மறுக்காமையும், 'எனக்குத்தக்க கைத்தொழில்' என்றதால் பணியும் கூறப்பட்டன. 'ஆண்டான் அடிமைத் தொழில் ஆற்றலின் ஆற்றல் உண்டே?' (4801), ''யான் அவர்தம்*

*பண்ணைக்கு ஒருவன் எனப் போந்தேன்; ஏவல் கூவல் பணி செய்வேன்." (5341) என்பன அனுமன் கூற்றுக்களாம். கைத்தொழில் - குற்றேவல்; கை = சிறுமை கைங்கரியம் என்ற வடசொல்லின் அமைதி பொருந்துதல் காண்க.* 28

*அனுமனைக் கிட்கிந்தைக்குச் செல்லுமாறு இராமன் வற்புறுத்தல்*

***4143. 'நிரம்பினான் ஒருவன் காத்த நிறை***
***அரசு இறுதி நின்ற***
***வரம்பு இலாததனை, மற்று ஓர்***
***தலைமகன் வலிதின் கொண்டால்,***
***அரும்புவ, நலனும் தீங்கும்;***
***ஆகலின், ஐய! நின்போல்***
***பெரும் பொறை அறிவினோரால்,***
***நிலையினைப் பெறுவது அம்மா.***

***நிரம்பினான் ஒருவன் -*** *அரசர்க்குரிய பண்புகள் நிறைந்த ஒப்பற்ற மன்னன் ஒருவன்;* ***காத்த -*** *பாதுகாத்த;* ***இறுதி நின்ற வரம்பு இலாதது -*** *கடை எல்லை இல்லாததும்;* ***நிறை அரசு அதனை -*** *எல்லாச் செல்வ வளங்களும் நிறைந்ததுமான அரசாட்சியை;* ***மற்று ஓர் தலைமகன் -*** *வேறு ஓர் அரசன்;* ***வலிதின் கொண்டால் -*** *வலியக் கைப்பற்றிக் கொண்டால்;* ***நலனும் தீங்கும் அரும்புவ -*** *(அந்த அரசியலில்) நன்மைகளேயன்றித் தீமைகளும் தோன்றுவனவாம்;* ***ஆகலின் -*** *ஆதலால்;* ***ஐய -*** *ஐயனே;* ***நின்போல் பெரும்பொறை அறிவினோரால் -*** *(அத்தகைய ஆட்சி) உன்னைப் போன்ற பொறுமையும் அறிவும் நிறைந்தவர்களாலேயே;* ***நிலையினைப் பெறுவது -*** *நிலை பெறக் கடவதாகும்.*

*நிரம்பினான்: அரசர்க்கு இன்றியமையாதனவாகக் கூறப்படும் அஞ்சாமை, ஈகை, அறிவு; ஊக்கம், கல்வி, வீரம் முதலிய நற்பண்புகள் நிரம்பப்பெற்றவன். நிறை அரசு - பல்வேறு வளங்களுடன், பல சிறப்புகளுடன் கூடிய அரசு. வள்ளுவர் குறிப்பிடும் 'இறைமாட்சி, நாடு' அதிகாரக் கருத்துக்களை இங்கே கொள்ளலாம். 'நிரம்பினான்' - ஈண்டு வாலியைக் குறித்தது; 'மற்றோர் தலைமகன்' சுக்கிரீவனைக் குறித்தது. இறுதி நின்ற வரம்பு - அழிவு, முன் பாடலில் அனுமனின் பொய்யில் உள்ளத்தையும், அன்பையும் கூறியவன் இப்பாடலில் அவனது பொறுமையினையும், அறிவையும் உரைத்து அரசியலுக்கு அவனது இன்றியாமையினை உணர்த்தினான், "வெஞ்சின் அரக்கர் ஐவர் புலன்கள் ஒத்தார்; அவனும் நல் அறிவை ஒத்தான்" (5664) எனப்பின்னரும் அனுமன் புகழப்படுவதைக் காணலாம.* 29

***4144. 'ஆன்றவர்க்கு உரியது ஆய***
***அரசினை நிறுவி, அப்பால்,***
***ஏன்று எனக்கு உரியது ஆய***
***கருமமும் இயற்றற்கு ஒத்த***
***சான்றவர், நின்னின் இல்லை;***
***ஆதலால், தருமம்தானே***
***போன்ற நீ, யானே வேண்ட,***

***அத் தலை போதி' என்றான்.*** **ஆன்றவற்கு** - *(எல்லாப் பண்புகளும்) நிறைந்தவனான சுக்கிரீவனுக்கு;* **உரியது ஆய அரசினை** - *உரியதான அரசாட்சியை;* **நிறுவி** - *நிலைபெறச் செய்து;* **அப்பால்** - *அதற்குப் பிறகு;* **எனக்கு உரியது ஆய கருமமும்** - *எனக்கு ஆகவேண்டியதான காரியத்தையும்;* **ஏன்று** - *ஏற்றுக் கொண்டு;* **இயற்றற்கு ஒத்த சான்றவர்** - *செய்வதற்குத் தகுந்த பெரியோர்;* **நின்னின் இல்லை** - *உன்னை விட (வேறு எவரும்) இல்லை;* **ஆதலால்** - *ஆதலால்;* **தருமம் தானே போன்ற நீ** - *அறமே உருவெடுத்தாற் போன்ற நீ;* **யானே வேண்ட** - *நான் வேண்டுகின்றபடி;* **அத்தலைபோதி** - *அவ்விடத்திற்குச் (சுக்கிரீவனிடம்) செல்லக் கடவாய்;* **என்றான்** - *என்று உரைத்தான்.*

*முன்னிரு பாடல்களில் அனுமனின் பொய்யாமை, அன்பு, பொறுமை, அறிவு ஆகிய பண்புகள் போற்றப்பட, இப்பாடலில் தருமத்தின் வடிவமென அனுமனைக் குறித்தல் காண்க. 'நல் அற வீரன்' (5541) எனப் பின்னரும் கூறுதல் காண்க. தருமத்தின் வடிவமான இராமனால் 'தருமன் தானே போன்ற நீ' என அனுமன் போற்றப்படல் எண்ணிஇன்புறற்பாலது. 30*

*அனுமன் கிட்கிந்தை செல்ல,இராமலக்குவர் வேறோர் மலையை அடைதல்*

***4145. ஆழியான் அனைய கூற, 'ஆணை***
***ஈது ஆயின், அஃதே,***
***வாழியாய்! புரிவென்' என்று***
***வணங்கி, மாருதியும் போனான்;***
***சூழி மால் யானை அன்ன***
***தம்பியும், தானும் தொல்லை***
***ஊழி நாயகனும், வேறு ஓர்***
***உயர் தடங் குன்றம் உற்றார்.***

**ஆழியான்** - *சுதரிசனம் என்னும் சக்கரப்படையை உடைய திருமாலின் அவதாரமான இராமன்;* **அனைய கூற** - *அத்தகைய வார்த்தைகளைச் சொல்ல;* **மாருதியும்** - *(அது கேட்டு) அனுமனும்;* **வாழி** - *(இராமனை நோக்கி) வாழ்வாயாக!* **ஆணை ஈது ஆயின்** - *உன் கட்டளை இது வாயின்;* **அஃதே புரிவென்** - *நான் அதனையே செய்வேன்;* **என்று வணங்கிப் போனான்** - *என்று சொல்லி வணங்கி கிட்கிந்தையை நோக்கிச் சென்றான்,* **தொல்லை ஊழி நாயகனும்** - *பழமையான பல ஊழிக்காலங்களுக்கும் தலைவனான இராமபிரானும்;* **சூழிமால் யானை அன்ன தம்பியும்** - *முகபடாத்தை உடைய பெரிய யானையை ஒத்த தம்பி இலக்குவனும்;* **தானும்** - *தானுமாக;* **வேறு ஓர் உயர் தடங்குன்றம்** - *உயர்ந்த பெரிய வேறோர் மலையை;* **உற்றார்** - *அடைந்தனர்.*

*அனுமன் இராமன் கட்டளையை ஏற்று விடைபெற்றதும் இராமனும் தம்பியுடன் வேறோர் மலையை அடைந்தான். இந்த மலையைப் பிரசிரவண மலை*

*என்று வான்மீகமும் அத்யாத்ம இராமாயணமும் கூறும். இதற்கு மாலியவான் என்ற பெயருமுண்டு. வாழியாய் - இராமனை 'வாழி' என அனுமன் வாழத்தினான் என்பர். அடியவனாகிய அனுமன் இவ்வாறு வாழ்த்துவது முறையா என்றால், பக்தர்கள் அன்பு மேலீட்டால் அங்ஙனம் வாழ்த்துவது மரபாகும். பெரியாழ்வார் திருமாலுக்குப் பல்லாண்டு கூறியதும், பிள்ளைத்தமிழ்களில் பாட்டுடைத்*

*தலைவனாகிய இறைவனுக்குக் காப்புக் கூறி வாழ்த்துவதும் இம்மரபை ஒட்டியே ஆகும். இறைவனை வாழ்த்துவதால், வாழ்த்துவார் நல் வாழ்வு பெறுவர் என்பதை 'வாழ்த்துவதும் வானவர்கள் தான் வாழ்வான்' (திருவாசகம், திருச்சதகம்-20) என்ற அடியால் உணரலாம். அரசனுடன் பேசுகையில் 'வாழ்க' என வாழ்த்திப் பேசும் மரபை இலக்கியங்களில் காணலாம். 'சூழியானை' என்பது நாட்டு யானையைக் குறிக்கும். காட்டில் திரியும் யானை போலன்றி, ஒரு பாகனுக்கு அடங்கி நடப்பது சூழியானை. அதுபோல் இலக்குவனும் அண்ணன் கட்டளைக்கு அடங்கி நடப்பவன் என்ற கருத்தும் புலனாகிறது. ஊழிநாயகன் தம்பியும் தானும் உற்றான் - தலைமை பற்றி வந்த திணை வழுவமைதி. ஆழியான் என்னும் சொல் கடல் போன்றவன், பாற்கடலில் பள்ளி கொள்பவன் என்னும் பொருள் படும் வகையில் அமைந்துள்ள சிறப்பையும் காணலாம். 31*

*சுக்கிரீவன் அரசு புரிதல்*

***4146. ஆரியன் அருளின் போய்த் தன்***
***அகல் மலை அகத்தன் ஆன***
***சூரியன் மகனும், மானத்***
***துணைவரும், கிளையும், சுற்ற,***
***தாரையை வணங்கி, அன்னாள் தாய்***
***என, தந்தை முந்தைச்***
***சீரியன் சொல்லே என்ன,***
***செவ்விதின் அரசுசெய்தான்.***

***ஆரியன் அருளின் போய் -*** *இராமன் கட்டளைப்படி கிட்கிந்தை சென்று;* ***தன் அகல் மலை அகத்தன் ஆக -*** *தனக்குரிய அகன்ற மலையின் உள்ளிடத்தைச் சேர்ந்தவனான;* ***சூரியன் மகனும் -*** *சூரியன் மகனாகிய சுக்கிரீவனும்;* ***மானத் துணைவரும் -*** *(அரசாட்சிக்குத் துணையாயுள்ள) பெருமை பொருந்திய அமைச்சர் முதலியோரும்;* ***கிளையும் சுற்ற -*** *உறவினர்களும் தன்னைச் சூழ்ந்து நிற்க;* ***தாரையை வணங்கி -*** *(தன் தமையன் மனைவியான) தாரையை வணங்கி;* ***அன்னாள் தாய் என -*** *அவள் தனக்குத் தாய் என்று சொல்லும்படியாகவும்;* ***முந்தைச் சீரியன் சொல்லே -*** *தனக்கு முனபிறந்தவனும் சிறப்புள்ளவனுமான வாலியின் அறிவுரைகளே;* ***தந்தை என்ன -*** *தனக்குத் தந்தை என்று சொல்லும்படியாகவும்;* ***செவ்விதின் அரசு செய்தான் -*** *செம்மையாக அரசாட்சியை நடத்தலானான்.*

*தமையனைத் தந்தையைப் போல மதித்தலும், அவன் மனைவியைத் தாயெனக் கருதுதலும் சான்றோர் நெறியாகும். அவ்வாறே சுக்கிரீவன் தாரையை வணங்கித் தாய் போல மதித்து அவள் சொற்படி நடப்பவனாயினன் என்பதும், வாலி இறந்து விட்டதால் அவன் சொல்லியதைச் செய்தலையே தந்தை சொற்படி*

*ஆட்சி செய்தலாகக் கொண்டனன் என்பதும் பாடலின் இறுதி இரண்டடிகள் உணர்த்துகின்ற செய்திகளாகும். வாலி இறக்கும் நிலையில் சுக்கிரீவனுக்குச் சில அறிவுரைகளைக் கூறியது வாலிவதைப் படலத்தில் கூறப்பட்டது. அவ்வுறுதி மொழிகளைத் தலைமேற்கொண்டு சுக்கிரீவன் ஆட்சி புரிந்தான் என்க.*

மானத்துணைவர் - ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும் மற்றும் மந்திரச் சுற்றத்தாருமாவர். அவர்கள் எல்லாச் சிறந்த பண்புகளும் பெற்றிருந்தமை பற்றி 'மானத்துணைவர்' எனப்பட்டனர். கம்பர் கூறும் அமைச்சர் மாண்புகளை 1318 - 1321 - எண் பாடல்களில் காண்க. அமைச்சர் முதலியோர் உறுதிச்சுற்றம் எனப் படுவராதலால், அவர்கள் உரிய சமயங்களில் வந்து சூழ்ந்து உதவுதலை 'மானத் துணைவர் சுற்ற' என உரைத்தார். 'சூழ்வார் கண்ணாக ஒழுகலான் மன்னவன் சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்' (குறள் - 445) என்றார் வள்ளுவர். சுற்றம் தழுவி வாழ்தல் செல்வம் படைத்ததன் பயனாதலாலும், செல்வம் பெருக்கவும் காக்கவும் வேண்டியிருத்தலானும் 'கிளை சுற்ற' என்றார். சுக்கிரீவனின் பண்பால் சுற்றத்தினார் அவனைத் தழுவி வாழ்ந்தனர் என்க.

வான்மீகத்தில் தாரை சுக்கிரீவனோடு வாழ்ந்தாள் என்று கூறப் பெற்றிருக்க, அவளைத் தாயாகச் சுக்கிரீவன் கருதினான் எனக் கம்பர் கூறியிருப்பது போற்றத் தக்கதாகும். அத்யாத்மராமாயணம், தாரை இராமன் உபதேசம்பெற்று வாலியின் மறைவால் நேர்ந்த மனத்தளர்ச்சி நீங்கி, மெய்ஞ்ஞானம் அடைந்து ஜீவன் முக்தி நிலையடைந்தாள் என்று கூறுகிறது. 32

**4147. வள அரசு எய்தி, மற்றை**
**வானர வீரர் யாரும்**
**கிளைஞரின் உதவ, ஆணை கிளர்**
**திசை அளப்ப, கேளோடு,**
**அளவு இலா ஆற்றல் ஆண்மை**
**அங்கதன், அறம் கொள் செல்வத்து**
**இளவரசு இயற்ற, ஏவி,**
**இனிதினின் இருந்தான், இப்பால்,**

**வள அரசு எய்தி -** எல்லா வளங்களும் பொருந்திய அரசாட்சியை அடைந்து; **மற்றை வானர வீரர் யாரும் -** மற்ற வானர வீரர்கள் யாவரும் **கிளைஞரின் உதவ -** சுற்றத்தார் போல வேண்டுவன செய்ய; **ஆணை கிளர் திசை அளப்ப -** (தனது) அரச ஆணை விளங்குகின்ற திசைகளின் எல்லையை அளாவவும்; **அளவு இலா ஆற்றல் -** அளவற்ற வலிமையும்; **ஆண்மை அங்கதன் -** வீரமும் உடைய அங்கதன்; **கேளோடு -** உறவினரோடு; **அறம் கொள் செல்வத்து -** அறவழியில் ஈட்டப்பட்ட செல்வத்தோடு; **இளவரசு இயற்ற -** இளவரசனாக ஆட்சி புரியுமாறு; **ஏவி -** கட்டளையிட்டு; **இனிதினின் இருந்தான் -** இனிமையாகக் கிட்கிந்தை நகரத்தில் வீற்றிருந்தான். **இப்பால் -** (அஃது அங்ஙனமாகவும்) இப்புறத்தில். .

சுக்கிரீவன் செய்தியை இவ்வாறு கூறி, மேல் இராமன் செய்தியைக் கூறுகின்றார். ஆதலின் வேறுபாடு தோன்ற 'இப்பால்' என்றார். ஆணை கிளர் திசை

அளப்ப - தனது கட்டளை தடையின்றி எங்கும் செல்ல; கிளைஞரின் - இன் ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருளது. கேள் - அரசியல் சுற்றமும் உறவியல் சுற்றமும். இனிதினின் இருந்தான் - அங்கதன் இளவரசனாயிருந்து அரச காரியங்களைக் கவனித்து வரச் சுக்கிரீவன் இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்தான் என்க. 33

## *கார்காலப் படலம்*

*மழைக்கால நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறுவதால் இப்படலம் கார்காலப் படலம் எனப்பட்டது. மழைக்கால வர்ணனை, சீதையின் பிரிவால் வருந்தும் இராமன் நிலை, இராமனை இலக்குவன் ஆற்றுவிக்கும் பாங்கு ஆகியன இப்படலத்தில் இடம் பெறுகின்றன.*

*இராமலக்குவர் கிட்கிந்தை மலைக்கு அருகில் உள்ள பிரசிரவண மலையில் தங்கியிருக்கையில் தெக்கணாயனம் தொடங்கிற்று. கார்மேகங்கள், வஞ்சனை அரக்கர்தம் வடிவென வானமெங்கும் இரண்டு பரவின. இடியும் மின்னலும் தோன்ற, வாடைக்காற்று வீசலாயிற்று. கால மாரி பொழிய, உலர்ந்த மரங்கள் தழைத்தன. இந்திர கோபம் எங்கும் ஊர்ந்து பரவின; காந்தள், கொன்றை, கூதாளம், முல்லை போன்ற மலர்கள் மலர்ந்தன. மான்கள் துள்ளி விளையாடின. நீர் நிலைகளில் அன்னங்கள் படித்தாடக் கரிய மேகங்களைச் சார்ந்து நாரைகளும், கொக்குகளும் வரிசையாய்ப் பறந்தன. நிலமகள் உடல் சிலிர்த்தாற் போன்று பசும் புல் செழித்தன. மயில்கள், கானம் எங்கும் பரப்பிய கண்ணெனத் தோகை விரித்தாடின. குயில்கள் குரல் அடங்கின. பசுக்களின் கால்களால் இடறப்பட்டுக் காளான்கள் செறிதயிர்த்துணடங்களாய்க் காட்சி அளித்தன. நானில மகளிரும் தன் நிலத்திற்குரிய மலர்களைச் சூடி, மகிழ்ந்தனர்.*

*இக்கார்காலத்தில் சீதையை எண்ணி வருந்திய இராமன் மேகம், மயில், கொடி, மான் முதலியன கண்டு அவை தன்னை வருத்துவதாக எண்ணிக் கலங்கினான். சீதையின் பற்களையும் இதழ்களையும் நினைவூட்டிய முல்லை அரும்பையும் இந்திர கோபத்தையும் பார்த்துக் கலக்கம் அடைந்தான். யமன், வாடையாய்த் தன் உருவினை மாற்றி வந்து துன்புறுத்துவதாக மயங்கினான். இங்ஙனம் தன் பெருமை அழிந்து இரங்கும் இராமனை நோக்கி இலக்குவன் "அறவழி நடக்கும் நினக்கன்றி வேறு எவர்க்கு வெற்றி கிட்டும்?" எனப் பல கூறித் தேற்றினான்.*

*நாட்கள் பல கழிய, கதிர்காலம் வந்து எதிர்ந்தது. நீர்நிலைகளில் நீர் நிரம்பிட அன்றிலும் மகன்றிலும் புறம் போக இயலாது தத்தம் துணையோடு உயிர் ஒன்றி உறைந்தன. கதிரவனைக் கண்டு பொழுதறிதல் அரிதாயிற்று. நானில உயிர்களும் குளிர்தாங்காது ஒடுங்கின. யானைகள் மலை போல உறங்காதனவாய் விளங்கின. அன்னப் பறவைகள அகிற்புகையில் குளிர்காய, மந்திகள் குகைகளில் உறங்கக் குரங்குகள் யோகியர் போல் இருந்தன. மகளிர் அருவி ஆடாமையின் அவை மகளிர்தம் கூந்தல் மணம் கமழப் பெறாதன ஆயின; ஊஞ்சல்கள் ஆடுவாரின்றிக் கிடந்தன. இடையர்கள் ஆட்டுக் குட்டிகளுடன் சிற்றிலை மரங்களின் அடியில் ஒதுங்கினர். பேய்களும் முள் எயிறு தின்ற பசியால் வருந்தின.*

*கூதிர்க் காலக் காட்சிகள் இராமனை வருத்தின. 'நான் இன்னும் இறவாமல் உள்ளேனே? கானகம் புக்கு நான் முடித்த காரியம் கண்டு மேல் உலகினர், கீழ் உலகினர் நகுவரே? என் துனப்த்திற்கு ஒரு முடிவு இல்லையா?' எனப் பல*

*கூறிக் கலங்க, இலக்குவன் மேலும் பல தேறுதல் வார்த்தைகளைப் புகன்றான். களவு செய்தவன் உறையுள் காணும் காலம் வந்து சேர்வதாயிற்று என்றும், உற்ற துணையொடு பல்முறை தெளிந்து காலத்தால் செயல்பட்டால் வெற்றி தவறுதல்*

*இல்லையென்றும், தீய வழியில் செல்பவர் பழியும் தோல்வியும் எய்த, நல்வழியில் நடக்கும் இராமனே புகழும் வெற்றியும் பெறுவான் என்றும் இலக்குவன் உரைத்தான்.*

*இலக்குவன் கூறியதை இராமன் உறுதியென உணர்ந்தான். கதிர்ப்பருவமும் ஒருவாறு தேய்ந்து முடிவுற்றது. மேகங்கள் வெண்ணிறம் உற்றன. இருள் நீங்கியது. இடி முழக்கம் ஒழிய, மழைத்துளிகள் நீங்க, மின்னலும் மறைந்தது. அருவிகளில் நீர் குறைந்தது. சந்திரன் ஒளியுடன் வெளிப்பட்டான். அன்னப்பறவைகள் வானத்தில் பறந்தன. தெளிந்த நீர்நிலைகளில் மகளிர் கண்களென மீன்கள் துள்ளின. தாமரை, செங்கிடை அரும்புகள் மலர்ந்தன. தவளைகள் குரல் அடங்க, மயில்களும் ஒடுங்கின. பாக்குக் குலைகள் பழுத்தன. முதலைகள் வெயிலில் இனிமையாக உறங்க, நந்தைகள் சேற்றில் மறைந்தன. நண்டுகள் வளைகளில் புகுந்து வாயிலைச் சேற்றால் அடைத்துக் கொண்டன.*

*இப்படலத்தின் வழி புலனாகும் கம்பரின் இயற்கையைப் பற்றிய நுண்ணறிவும், வருணனைத் திறமும் பெரிதும் பாராட்டுதற்குரியன. கதைப் பகுதியினும் வருணனைப் பகுதி மிக்கிருப்பதும் காணத்தக்கது.*

*கதிரவன தென்திசை ஏகல்*

*கலிவிருத்தம்*

***4148. மா இயல் வட திசைநின்று, வானவன்,***
***ஓவியமே என ஒளிக் கவின் குலாம்***
***தேவியை நாடிய, முந்தி, தென் திசைக்கு***
***ஏவிய தூது என, இரவி ஏகினான்.***

***ஓவியமே என** - ஓவியத்தில் தீட்டிய உருவமே போல; **ஒளிக் கவின் குலாம்** - ஒளி பொருந்திய அழகுடன் விளங்கும்; **தேவியை நாடிய** - (தன் மனைவியான) சீதாதேவியைத் தேடும் பொருட்டு; **முந்தி** - (அனுமன் முதலிய வானரவீரர்களை) அனுப்புவதற்கு முன்னரே; **வானவன்** - தேவர்களுக்கெல்லாம் தேவனான இராமன்; **தென்திசைக்கு ஏவிய** - தெற்குத் திசை நோக்கி அனுப்பிய; **தூது என** - தூதுவன் என்னுமாறு; **இரவி** - கதிரவன்; **மா இயல் வடதிசை நின்று** - பெருமை பொருந்திய வடக்குத் திசையிலிருந்து; **ஏகினான்** - தென்திசை நோக்கிச் சென்றான்.*

*வடதிசையைப் பெரியதிசை, மங்களத்திசை, புண்ணியத் திசை என்று கூறுவதால் 'மாஇயல் வடதிசை' என்றார். சூரியன் தென்திசையாக ஒதுங்கிச் செல்லுதலை தட்சிணாயனம் என்பர். ஆடிமாதம் முதல் மார்கழி ஈறாக உள்ள ஆறு மாதங்களும் இதன்கண் அடங்கும். இங்குக் கார்காலத்திற்குரிய தென்திசை அயனம் தொடங்கியது என்பதாம். தட்சிணாயனத்தில் இயல்பாகவே வடதிசையிலிருந்து தென்திசை செல்லும் சூரியனை, இராமன் தன் தேவியைத் தேடத் தென்திசைக்குத் தூது என ஏவினான் எனக்கூறியது தற்குறிப்பேற்ற அணியாகும். பின்னர் அனுமன் தென்திசை நோக்கிச் செல்வானாதலின், கதிரவன் முந்திச் சென்ற தூது போன்றவனானான்.*

*ஓவியமே என ஒளிக் கவின் குலாம் தேவி எனக் கூறும் கம்பர் 'அனங்க வேள் செய்த ஓவியம்' (5079) என்றும் 'மதனற்கும் எழுத ஒண்ணாச் சீதை' (483) என்றும்*

*பாராட்டுவர். ஓவியமே - ஏகாரம் தேற்றம்; குலவும் என்பது குலாம் எனக் குறைந்து நின்றது; நாடிய - செய்யிய என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்.*
*1*

மேகம் பரவுதல்

***4149. பை அணைப் பல்***
***தலைப் பாந்தள் ஏந்திய***
***மொய் நிலத் தகளியில்,***
***முழங்கு நீர் நெயின்,***
***வெய்யவன் விளக்கமா, மேருப்***
***பொன் திரி,***
***மை எடுத்து ஒத்தது -***
***மழைத்த வானமே.***

***மழைத்த வானமே -*** *கார்கால மேகத்தால் மூடுண்ட வானம்;* ***பை அணைப் பல் தலைப் பாந்தள் -*** *படம் பொருந்திய பல தலைகளை உடைய ஆதிசேடன் என்னும் பாம்பு;* ***ஏந்திய -*** *தாங்குகின்ற;* ***மொய்நிலத் தகளியில் -*** *செறிந்த பூமியாகிய அகலில்;* ***முழங்கு நீர் நெயின் -*** *ஒலிக்கின்ற கடல் நீராகிய நெய்யில்;* ***மேரு பொன் திரி -*** *மேருமலையாகிய அழகிய திரியில்;* ***வெய்யவன் விளக்கமா -*** *கதிரவனை விளக்காகக் கொண்டு;* ***மை எடுத்(த)து ஒத்தது -*** *(மகளிர்) மை எடுத்தற்கு இடனாகும் கலசத்தின் அடிப்பகுதியை ஒத்து விளங்கியது.*

*வானத்தில் கரிய மேகம் பரவியிருந்த காட்சி பூமியாகிய அகலில், கடல் நீராகிய நெய்யில், மேருமலையாகிய திரியில், சூரியனான விளக்கில் வானமாகிய கலயத்தில் மை கூட்டினாற் போல் விளங்கியது என்பதாம். அகலும், நெய்யும், திரியும், விளக்குமாக நிலத்தையும், கடல் நீரையும், மேரு மலையினையும், சூரியனையும் இயைபு உருவமாகக் கூறி 'வானம் மை எடுத்து ஒத்தது' என உவமை அணிபடக் கூறியுள்ளார். வானம் இயல்பாகக் கரிய நிறம் கொண்டிருந்ததைக் கலயத்தில் மை கூட்டினாற் போல என்பதால் தற்குறிப்பேற்ற, உவமை அணிகளாம். 'வையம் தகளியா, வார்கடலே நெய்யாக, வெய்ய கதிரோன் விளக்காக' (முதல் திருவந்தாதி - 1) என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தை இப்பாடல் அடியொற்றியுள்ளது. கடல்நீர் கதிரவன் வெயிலால் ஆவியாகச் சென்று மேகமாகிறது என்ற அறிவியல் கொள்கைக்கு ஏற்ப இவ்வருணனை அமைந்திருத்தலைக் காணலாம்.*

*ஆதிசேடன் ஆயிரந்தலைகளை உடையவனாதலின் 'பல் தலைப் பாந்தள்' என்றும், அவன் நிலவுலகத்தைத் தாங்குவதாகக் கூறப்படும் புராண மரபு பற்றிப் 'பாந்தள் ஏந்திய மொய்நிலம்' என்றும் கூறப்பட்டுள்ளன. மேருமலையைச் சூரியன் வலம் வருவதாகக் கூறும் மரபு பற்றி மேருவாகிய திரியில் பற்றி வலம் சுழல்கின்ற விளக்காகச் சூரியனை உருவகஞ் செய்தார். 'பாந்தள் ஏந்திய' எனக்கூறியதால், நிலத்தைத் தாங்கும் ஆதிசேடனை விளக்கின் தண்டாகக் கொள்ளலாம். வானத்தை மை படி வைக்கும் கலயத்தின் அடிப்பகுதியாகவும், மேகத்தை மையாகவும்*

*கொள்க. 'வேனிலான் புகழைத் தீட்டும் தாரகை எழுந்தொளி சிறந்திட, அணிவான் கூட்டு மையெனச் சிறந்தது கூரிருட்பிழம்பே' (நைடத: மாலை: 11); என்ற அடிகள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன. நெயின் - தொகுத்தல் விகாரம், மழைத்த - மழை என்னும் பகுதி அடியாகப் பிறந்த பெயரெச்சம்.*

*அகலில் எண்ணெய் ஊற்றி, தீயிட்டு எரித்து, அதனால் கரித்திரளைக் கலயத்தின் அடிப்பாகத்தில் படியச் செய்து மை கூட்டும் வழக்கம் இப்பாடலில் குறிக்கப்பட்டது. 2*

***4150. நண்ணுதல் அருங் கடல்***
***நஞ்சம் நுங்கிய***
***கண்ணுதல் கண்டத்தின் காட்சி***
***ஆம் என***
***விண்ணகம் இருண்டது; வெயிலின்***
***வெங் கதிர்***
***தண்ணிய மெலிந்தன;***
***தழைத்த, மேகமே.***

***நண்ணுதல் அருங்கடல் -*** *நெருங்குதற்கு அரிய கடலில் தோன்றிய;* ***நஞ்சம் நுங்கிய -*** *நஞ்சை விழுங்கிய;* ***கண்ணுதல் கண்டத்தின் -*** *நெற்றிக்கண்ணை உடைய சிவபிரான் கழுத்தின்;* ***காட்சி ஆம் என -*** *கரிய நிறக் காட்சி என்னுமாறு;* ***விண்ணகம் இருண்டது -*** *வானம் இருண்டது.* ***வெயிலின் வெங்கதிர் -*** *சூரியனுடைய வெம்மையான கதிர்கள்;* ***தண்ணிய மெலிந்தன -*** *குளிர்ந்தனவாய்த் தம் வலிமை குறைந்தன;* ***மேகம் தழைத்த -*** *கரிய மேகங்கள் நீர் மொண்டு பெருகிப் பரவின.*

*பாற்கடலில் தோன்றிய ஆலகால நஞ்சின் கொடுமை தோன்ற 'நண்ணுதல் அருங்கடல் நஞ்சம்' என்றார். கண்ணுதல் - இலக்கணப்போலி, நெற்றிக் கண்ணை உடைய சிவபிரானைக் குறித்தலின் அன்மொழித் தொகையுமாம். அமுதம் வேண்டி அசுரரும் தேவரும் பாற்கடலைக் கடைய, முதலில் வந்த நஞ்சைச் சிவபிரான் உண்டார் என்பது புராணக் கதையாகும். நஞ்சு கரிய நிறமுடையதாதலின் அதனை உண்ட சிவபிரான் கண்டமும் கரிய நிறமுடையதாயிற்று. 'நீலமணி மிடற்றன்' (புறம் - 91) என்பர் ஔவையார். மெலிந்தன, தழைத்த - முரண் தொடை. சிவபிரான் கண்டத்தின் கருநிறம் போல் வானம் இருண்டது என்றது காட்சிஅணி. 3*

***4151. நஞ்சினின், நளிர் நெடுங் கடலின், நங்கையர்***
***அஞ்சன நயனத்தின், அவிழ்ந்த கூந்தலின்,***
***வஞ்சனை அரக்கர்தம் வடிவின், செய்கையின்,***
***நெஞ்சினின், இருண்டது - நீல வானமே.***

***நீல வானம் -*** *நீல நிறம் வாய்ந்த வானமானது;* ***நஞ்சினின் -*** *விடம் போலவும்;* ***நளிர் நெடுங் கடலின் -*** *குளிர்ந்த பெரிய கடல்*

*போலவும்;* ***நங்கையர் அஞ்சன நயனத்தின் -*** *பெண்களின் மை பூசிய கண்களைப் போலவும்;* ***அவிழ்ந்த கூந்தலின் -*** *(அம்மகளிரின்) அவிழந்த கூந்தலைப் போலவும்;*

***வஞ்சனை அரக்கர்தம் வடிவின் -*** *வஞ்சனைக் குணமுடைய அரக்கர்களின் உடம்பு போலவும்;* ***செய்கையின் -*** *(அவர்களின்) தீச்செயல் போலவும்;* ***நெஞ்சினின் -*** *(அவர்களின்) தீய மனம் போலவும்;* ***இருண்டது -*** *(கரிய மேகங்கள் பரவியதால்) கறுத்துத் தோன்றியது.*

*இயல்பாக நீலநிறம் பொருந்திய வானம் கரியநிறமுடைய மேகங்கள் பரவியதால் கருமையாயிற்று என்பதால் 'நீலவானம் இருண்டது' என்றார். நஞ்சும், கடலும், நங்கையர் நயனமும், கூந்தலும், அரக்கர் வடிவும் செயலும் நெஞ்சமும் கரியவாதலின் அவற்றை வானம் இருண்டமைக்கு உவமையாக்கினார். பல் பொருள் உவமை அணி. கார்காலம் சீதையைப் பிரிந்த இராமனுக்குப் பெருந்துன்பம் விளைத்தலால் அதற்கேற்ப நஞ்சினை முதற்கண் உவமை கூறினார். இதனால் கார்காலம் நஞ்சுபோல் துன்பம் விளைப்பது புலனாகிறது. பிரிந்ததார்க்குத் துயர் விளைப்பதில் இருண்ட கார்காலம் போல நளிர் நெடுங்கடலும் துயர் விளைப்பதால் அதையடுத்துக் கூறினார். கருமை மிகுதியைத் தெரிவிக்க 'அஞ்சன நயனம்' என்றும், மேகத்தின் பரந்து விளங்கும் நிலை தெரிவிக்க 'அவிழ்ந்த கூந்தல்' என்றும் கூறினார். அரக்கர் தம் வடிவு, செயல், நெஞ்சம் இராமனுக்குத் துயர் விளைத்தல் வெளிப்படையாகும். செயலும் நெஞ்சும் அருவப் பொருள்களாயினும் பாவச் செயலும், அதற்குக் காரணமான நெஞ்சையும் கருநிறத்தன எனக்கூறுவது கவி மரபு ஆகும். "வஞ்ச மாக்கள் வல்வினையும், அரன் அஞ்செழுத்தும் உணரா அறிவிலார் நெஞ்சும் என்ன இருண்டது நீண்ட வான்" (பெரிய புரா. தடுத் 159); 'அகங்குன்றி மூக்கில் கரியார் உடைத்து' (குறள் - 277) என்பன ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன.*

*நங்கையர் நயனம், அவிழ்ந்த கூந்தல் எனப் பொதுப்படக் கூறியிருப்பினும் சீதையின் நயனத்தைக் கருமுகிலும், செம்மைப்படுத்தப்படாது விளங்கும் சீதையின் அவிழ்ந்த கூந்தலைத் திரளாகப் பரவிப் படர்ந்த மேகமும் நினைப்பூட்டி வருத்துதற்குரியன என்று குறிப்பால் பெறப்படுகிறது. இராமனை வஞ்சித்த அரக்கர்தம் வடிவமும் செயலும் நெஞ்சும் வானம் இருண்டமைக்கு வமையாயது, கதைத்தொடர்பிற்கேற்றஉவமையாகும்.* *4*

***4152. நாட் களின், நளிர் கடல் நாரம் நா உற***
***வேட்கையின் பருகிய மேகம், மின்னுவ,***
***வாட் கைகள் மயங்கிய செருவின், வார் மதப்***
***பூட்கைகள் நிறுத்த புண் திறப்ப போன்றவே.***

***நாட் களின் -*** *நாட்படு கள்ளைப் பருகுவது போல;* ***நளிர் கடல் நாரம்-*** *குளிர்ந்த கடலின் நீரை;* ***நா உற -*** *நாவினால் மிகுதியாக;* ***வேட்கையின்பருகிய மேகம் -*** *விருப்பத்தோடு குடித்த மேகங்கள்;* ***மின்னுவ -*** *மின்னுபவை;* ***வாட் கைகள் மயங்கிய செருவின் -*** *(வீரர்களின்) வாள்படைகளை ஏந்திய கைகள் ஒன்றோடொன்று கலந்து செய்யும் போரில்;* ***வார்மதப் பூட்கைகள் -*** *ஒழுகுகின்ற மத நீரையு டைய யானைகளன் உடம்பில்;* ***நிறத்த -*** *(அவ்வாட்படைகளால் வெட்டப்பட்டுக்)*

*குருதியால் சிவந்த நிறத்தையுடைய;* ***புண் திறப்ப போன்றவே -*** *புண்கள் வாய் திறப்பனவற்றைப் போன்றன.*

*கரிய மேகங்களிடையே தோன்றும் மின்னல்கள், கரிய யானையின் உடம்பில் தோன்றும் வாளால் பட்ட புண்கள் போலக் காணப்பட்டன என்பதாம். உவமை அணி. நாட் கள் - நாள் பட்ட கள்; 'தேள் கடுப்பன்ன நாட்படு தேறல்' (புறம் - 392) என நாட்பட்ட கள்ளின் கடுப்புக் கூறப்படுகிறது. மேகம் கடல் நீரைப் பருகுவதாகக் கூறுவது கவி மரபு. "நீறணிந்த கடவுள் நிறத்த வான், ஆறு அணிந்து சென்று ஆர்கலி மேய்ந்து' (13) என்று முன்பே கூறினமை காண்க. உயிரினங்கள் நீரில் நாவைத் தோய்த்து விரும்பிப் பருகும் இயல்பை மேகத்தின் மீதேற்றி 'நாவுற' வேட்கையின் பருகிய' என்றார். பூட்கை - புழைக்கை என்பது பூழ்க்கையாய்ப் பின் பூட்கை என மருவியது; துளை பொருந்திய துதிக்கையையுடைய யானை என்பது பொருள். மேகம் மின்னுவ - மின்னுவனவாகிய மேகங்கள் என்ப. 5*

***4153. நீல் நிறப் பெருங் கரி***
***நிரைத்த நீர்த்து என,***
***சூல் நிற முகிற் குலம்,***
***துவன்றி, சூழ் திரை***
***மால் நிற நெடுங் கடல்***
***வாரி, மூரி வான்***
***மேல் நிரைத்துளது என,***
***முழக்கம் மிக்கதே.***

***நீல் நிறப் பெருங்கரி -*** *நீல நிறம் வாய்ந்த பெரிய யானைகளை;* ***நிரைத்த நீர்த்து என -*** *(வானத்தில்) வரிசையாக நிறுத்தி வைத்த தன்மை போல;* ***சூல் நிற முகிற் குலம் -*** *(நீரைப் பருகிய) கருக்கொண்ட கரு நிறமுடைய மேகக்கூட்டம்;* ***துவன்றி -*** *நெருங்கி நின்று;* ***சூழ் திசை -*** *பூமியைச் சூழ்ந்துள்ள;* ***மால் நிற நெடுங்கடல் -*** *கருநிறமுள்ள பெரிய கடலின்;* ***வாரி -*** *தண்ணீர்;* ***மூரிவாள் மேல் -*** *(எழுந்து) பெரிய வானத்தின் மேல்;* ***நிரைத்துளது என -*** *பரவி நின்றாற் போல;* ***முழக்கம் மிக்கது -*** *இடி முழக்கம் மிக்கதாயிற்று.*

*கரிய பெரிய யானைகளை விண்ணில் வரிசையாக நிறுத்தி வைத்தாற் போலச் சூல் கொண்ட கருமேகங்கள் நெருங்கிக் குமுறுவது பெரிய கடல் வானத்தெழுந்து பேரொலி முழக்கியது போலிருந்தது என்பதாம். யானை, கடல் என்னும் இரண்டும் மேகத்திற்குக் கரிய வடிவம், முழக்கம் என்னும் இரண்டிற்கும் ஒப்பாகும். "வீங்கிருள் வேறு இருந்த மால் யானை ஈட்டம் என வந்து பரந்தது அன்றே" (882) என்ற அடிகள் ஒப்பு நோக்கத்தக்கன. 'அகன் குன்றின் மேல் இம்பர் வாரி எழுந்தது போன்றதே' (14) என்பதும் காண்க. நீல் - நீலம்; நீர்த்து - நீர்மை என்ற பண்புப்பெயர் ஈறு கெட்டது; து - பகுதிப் பொருள் விகுதி. 6*

***4154. அரிப் பெரும் பெயரவன் முதலினோர் அணி,***
***விரிப்பவம் ஒத்தன; வெற்பு மீது, தீ***
***எரிப்பவும் ஒத்தன; ஏசு இல் ஆசைகள்***
***சிரிப்பவவும் ஒத்தன; - தெரிந்த மின் எலாம்.***

***தெரிந்த மின் எலாம் -*** *வானத்தில் மேகங்களில் காணப்படுகின்ற மின்னல்களெல்லாம்;* ***அரிப் பெரும் பெயரவன் முதலினோர் -*** *அரி என்னும்*

*பெரும்பெயர்க்கு உரியவனாகிய இந்திரன் முதலிய தேவர் களுடைய;* ***அணி விரிப்பவும் ஒத்தன -*** *அணிகலன்கள் ஒளி வீசுவன வற்றையும் நிகர்த்தன;* ***வெற்பு மீது -*** *மலைகள் மீது;* ***தீ எரிப்பவும் ஒத்தன -*** *நெருப்புப் பற்றிப் பொருள்களை எரிப்பவற்றையும் போன்றன;* ***ஏசு இல் ஆசைகள் -*** *பழித்தல் இல்லாத திசைகள்;* ***சிரிப்பவம் ஒத்தன -*** *சிரிக்கும் தன்மையையும் ஒத்திருந்தன.*

*தேவர்களுடைய அணிகலன்கள் விட்டுவிட்டு ஒளிர்வன போலவும், மலைகளில் மரங்கள் ஒன்றோடொன்று உரசுவதால் ஏற்படும் தீச்சுடர் போலவும், திசைகள் ஒன்றையொன்று பார்ததுச் சிரிக்கும் நகையொளி போலவும் மேகங்களின் மின்னல்கள் விளங்கின என்பதாம். உவமை அணி. இந்திரன் மேகத்தை ஊர்தியாகக் கொண்டவனாதலின், மேகத்திலிருந்து தன் அணிகலன்களை விரித்துப் பார்த்து மகிழ்வதற்கு உரியவன் என்னும் இயைபு நோக்கி அரிப் பெரும் பெயரவன் என்பதற்கு இந்திரன் எனப் பொருள் கொள்ளப்பட்டது. பெரும் பெயர் - புகழ் பெற்ற பெயர்; முதலினோர் - இந்திரன் சுற்றம் என்றும், அட்டதிக்குப் பாலர்கள் என்றும் கொள்வர். அரி- இந்திரன், திருமால், அக்கினி முதலிய பல பொருள் குறிக்கும் வடசொல். ஈண்டு இந்திரனைக் குறித்தது. எதிர் எதிர்த் திசைகளில் மாறி மாறித் தோன்றும் மின்னலுக்கு 'ஆசைகள் சிரிப்பவும் ஒத்தன' என இல்பொருள் உவமை கூறினார். ஏக - முதனிலைத்தொழிற்பெயர். 7*

***4155. மாதிரக் கருமகன், மாரிக்***
***கார் மழை -***
***யாதினும் இருண்ட விண் -***
***இருந்தைக் குப்பையின்,***
***கூதர் வெங் கால் நெடுந்***
***துருத்திக் கோள் அமைத்து,***
***ஊது வெங் கனல்***
***உமிழ் உலையும், ஒத்ததே.***

***யாதினும் இருண்ட விண் -*** *எல்லாப் பொருளைக் காட்டிலும் கறுத்த ஆகாயமானது;* ***மாதிரக் கருமகன் -*** *திசையாகிய கருமான்;* ***மாரிக் கார் மழை -*** *மழைக் காலத்துக் கரிய மேகமாகிய;* ***இருந்தைக் குப்பையின் -*** *கரிக்குவியலில்;* ***வெம் கூதிர்க் கால் -*** *கொடிய வாடைக் காற்றாகிய;* ***நெடுந் துருத்திக் கோள் அமைத்து -*** *பெரிய ஊதுலைத் துருத்தியின் வலிமையைக் கொண்டு;* ***ஊது வெங்கனல் -*** *ஊதி எழுப்பிய வெம்மையான நெருப்புச் சுடர்களை;* ***உமிழ் உலையும் ஒத்ததே -*** *வெளிப்படுத்துகினற உலைக்களத்தை ஒத்து விளங்கியது.*

*திசைகள் கருமானாகவும், கரிய மேகம் கரிக்குவியலாகவும், கூர் துருத்தியாகவும், தீக்கொழுந்துள்ள மின்னலாகவும் உருவகிக்கப்பட்டன. பல பொருள்களைத் தம்முள் இயல்புடையவனாக உருவகித்திருப்பதால் இப்பாடலில் இயைபு உருவக அணி அமைந்துள்ள. செய்யும் முழுவதிலும் உருவகம் காணப்படுவதால் முற்று உருவக அணி எனினும் அமையும். இரும்புத் தொழில் செய்யும் கொல்லரைக் கருமகன் என்பர். கரும்பொன் என்ற இரும்பில் பணி செய்வோன் ஆதலின் 'கருமகன்' எனப்பட்டான் போலும். கருமை வலிமையுமாம்;*

*இருந்தை - கரி; 'இருந்தையின் எழு தீ ஒத்து' (2006) என்றது காண்க.*
*8*

***4156. சூடின மணி முடித்***
***துகள் இல் விஞ்சையர்***
***கூடு உறை நீக்கிய***
***குருதி வாட்களும்,***
***ஆடவர் பெயர்தொறும்***
***ஆசை யானையின்***
***ஓடைகள் ஒளி***
***பிறழ்வனவும், ஒத்ததே.***

***சூடின மணிமுடி** - (மின்னல்கள்) அணிந்த மணிமுடியை உடைய; **துகள் இல் விஞ்சையர்** - குற்றம் இல்லாத வித்தியாதரர்கள்; **கூடு உறை நீக்கிய** - (போர் செய்தல் பொருட்டு) உறையினின்று உருவி எடுத்த; **குருதி வாட்களும்** - (பகைவரின்) குருதி தோய்ந்த வாட்படைகளையும்; **ஆடவர் பெயர்தோறும்** - திக்குகளுக்குரிய திக்குப்பாலகர்கள் இடம்விட்டுச் செல்லுந்தோறும்; **ஆசை யானையின்** - அத்திக்குகளில் உள்ள யானைகளின்; **ஓடைகள் ஒளி பிறழ்வனவும்** - நெற்றிப் பட்டங்கள் அசைந்து ஒளி புரள்வனவற்றையும்; **ஒத்ததே** - போன்று விளங்கின.*

*விஞ்சையர் - வித்தியாதரர். பதினெண் தேவ கணங்களுள் ஒரு வகையினர். அவர்கள் குற்றமற்று விளங்குவதால் 'துகளில் விஞ்சையர்' எனப்பட்டனர். மின்னல்களின் தோற்றம் விண்ணில் விஞ்சையர்கள் சுழற்றிய வாள்களில் தோன்றிய ஒளிபோல் விளங்கின. ஆடவர் - இந்திரன் முதலிய எண்திசைக் காவலர். இவ் வெண்மருக்கும் எட்டு யானைகள் உண்டு. அவை ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வ பௌமம், சுப்பிரதீகம் என்பன. இவ்யானைகள் போர்க்குச் செல்லும் போது அவற்றின் நெற்றிப் பட்டம் ஒளி செய்வது மின்னல் ஒளிர்வதற்கு உவமை. 'கதிர்மணி எறிக்கும் ஓடையால், வில் இடும் முகில் எனப் பொழிந்த வேழமே' (741) என்றதுகாண்க. 9*

***4157. பிரிந்து உறை மகளிரும்,***
***பிலத்த பாந்தளும்,***
***எரிந்து உயிர் நடுங்கிட,***
***இரவியின் கதிர்***
***அரிந்தன ஆம் என,***
***அசனி நா என,***
***விரிந்தன, திசைதொறும் - மிசையின்***
***மின் எலாம்.***

***மிசையின்** - மேலே (வானத்திலே); **திசைதொறும் மின் எலாம்** - எல்லாத் திசைகளிலும் ஒளி விடுகின்ற மின்னல்களெல்லாம்; **பிரிந்து உறை மகளிரும்** - தலைவரைப் பிரிந்து வாழும் மகளிரும்; **பிலத்த பாந்தளும்** - பூமியின் கீழிடத்தில் உள்ள பாம்புகளும்; **எரிந்து உயிர் நடுங்கிட** - தவிர்த்து உயிர் துடிக்கும்படி; **இரவியின் கதிர்** -*

*சூரியனின் ஒளிக்கதிர்களை;* ***அரிந்தன ஆம் என -*** *அறுத்து வைத்தாற் போலவும்;* ***அசனி நா என -*** *இடியின் நாக்கு இவை எனக் கருதுமாறும்;* ***விரிந்தன -*** *விளங்கின.*

*தலைவியைப் பிரிந்து செல்லும் தலைவன் கார்காலத்தில் திரும்பி வருவதாகக் கூறிச் செல்வான். கார்காலம் வந்தும் தலைவியின் துயர் நீங்கத் தலைவன் வரவில்லையெனில், அவள் உயிர் நடுங்கல் இயல்பு. இன்புற்று மகிழும் காலம் கார்காலம்; கார்காலத்துப் பிரிவு, மகளிரை அதிகம் துன்புறுத்தும் என்பதால் 'பிரிந்துறை மகளிர் உயிர் நடுங்கிட' என்றார். பிரிவு இருவர்க்கும் பொதுவாயினும் வருத்தம் பொறுக்கமாட்டாத அவர்கள் மென்மைத் தன்மையை மனத்தில் கொண்டு அவர்களை மட்டுமே கூறினார். பாம்புகள், இடியோசையால் வருந்துதல் போல மின்னல் ஒளிக்கும் வருந்துவதுண்டு. 'விரிநிற நாகம் விடருள தேனும் உருமின் கடுஞ்சினம் சேணின்று முட்கும்' (நாலடி - 164) என்பதால் நாகம் இடியோசைக்கு நடுங்கும் என்பதையும் 'பார்க்கடல் பருகி மேகம் பாம்பினம் பதைப்ப மின்னி' (சீவக சிந்தா - முத்தி - 473) என்பதால் மின்னலுக்கும் பாம்பு பதைக்கும் என்பதும் புலனாகின்றன. இடிக்கும் மின்னலுக்கும் உள்ள ஒற்றுமை பற்றி இரண்டையும் ஒன்றுபடுத்தி உரைத்தார். நெருப்பிற்கு நா இருப்பதாகக் கூறுவது மரபு ஆதலின் நெருப்புமயமான இடிக்கும் நாக்கு உள்ளதாகக் கொண்டு அதனை மின்னலுக்கு உவமை கூறினார். மின்னல்கள் ஒளியுடன் நீண்டு விளங்குவதால் கதிரவனிடமிருந்து அரியப்பெற்ற கதிர்கள் உவமையாயின. மின்னலைக் கண்டு நடுங்கும் இயல்பில் ஒத்திருத்தல் பற்றி மகளிரையும், பாந்தளையும் சேர்த்துக் கூறினார். 'பிரிந்துறை மகளிரும்; பிலத்த பாந்தளும் எரிந்து உயிர் நடுங்கிட' என்பதில் ஒப்புமைக் கூட்ட அணியும் 'இரவியின் கதிர் அரிந்த ஆம் என, அசனி நா என' என்பதில் உவமை அணியும்அமைந்துள்ளன. 10*

***4158. எண் வகை நாகங்கள்,***
***திசைகள் எட்டையும்***
***நண்ணின நா வளைத்தனைய***
***மின் நக;***
***கண்ணுதல் மிடறு எனக்***
***கருகி, கார் விசும்பு***
***உள் நிறை உயிர்ப்பு***
***என, ஊதை ஓடின.***

***எண் வகை நாகங்கள் -*** *எட்டுத் திசைகளிலும் உள்ள எட்டு வகைப் பாம்புகளும்;* ***திசைகள் எட்டையும் -*** *எட்டுத் திசைகளையும்;* ***நண்ணின -*** *(தாமிருக்கும் பாதலத்தை விடுத்துப் பூதலத்தில் வந்து) அடைந்தனவாய்;* ***நா வளைத்தனைய -*** *தம் நாக்குகளை நீட்டித் திசைகளை வளைத்தாற் போன்று;* ***மின் நக -*** *மின்னல்கள் ஒளி வீச;* ***கார் விசும்பு -*** *கரிய மேகங்கள்;* ***கண்ணுதல் மிடறு எனக் கருதி -*** *நெற்றிக் கண்ணையுடைய சிவபிரானின் கழுத்தின் நிறம் போலக் கறுத்து;* ***உள் நிறை உயிர்ப்பு என -*** *தமக்குள் நிறைந்த மூச்சுக் காற்றை வெளியே விடுத்தாற் போல;* ***ஊதை ஆட்டின -*** *வாடைக் காற்றை வீசச் செய்தன.*

*எண்வகை நாகங்கள் - வாசுகி, அநந்தன், தட்சகன், சங்க பாலன, குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடன் என்பன. இவை பூமியின்கீழ், நடுவிலிருந்து பூமியைத் தாங்குகின்ற ஆதிசேடனுக்கு உதவியாய்க் கிழக்கு முதலாய எட்டுத் திக்கிலும் முறையே கீழ் நின்று பூமியைத தாங்குவன. காசியப முனிவரது மனைவியருள் கத்துரு*

*என்பவளிடம் தோன்றிய தெய்வத்தன்மை வாய்ந்தன இப்பாம்புகள். இவற்றைக் கடவுட் பாம்பெனக் குறிப்பிடுவர். அட்ட நாகங்களின் நாக்குகள் போல மின்னல்கள் மின்ன, சூல்கொண்டு கறுத்த மேகங்ளக், சூல் முதிர்ச்சியால் நெடிது உயிர்த்தாற்போலக் குளிர்காற்று வீசியது என்றதால் மின்னல், வாடை இவற்றின் கடுமை புலப்படுத்தப்பட்டது. விசும்பு - ஆகாயம், இங்கே இடவாகுபெயராய் மேகத்தைச் சுட்டியது. 'விசும்பின் துளி' (குறள் 16) என்ற இடத்து மேகத்தின் துளி என உரைப்பர் பரிமேலழகர், 'ஊதை என்பது வழக்கில் ஊதல் எனவும் வழங்கும். 'ஊதை ஊதின' எனப் பன்மையால் கூறியது, பல்வேறிடங்களில் தனித்தனி வீசுதல் பற்றி என்க. "ஊதைகள் சொரிவன உறையுறும் அமுதம்" (82) என முன்னரும் கூறியது காண்க.*
*11*

*ஊதைக் காற்று*

***4159. தலைமையும் கீழ்மையும்***
***தவிர்தல் இன்றியே,***
***மலையினும் மரத்தினும்***
***மற்றும் முற்றினும்,***
***விலை நினைந்து உள***
***வழி விலங்கும் வேசையர்***
***உலைவுறும் மனம் என,***
***உலாய ஊதையே.***

***ஊதையே** - அந்த வாடைக்காற்று; **தலைமையும் கீழ்மையும்** - உயர்ந்த இடத்திலும் தாழ்ந்த இடத்திலும்; **தவிர்தல் இன்றியே** - நீங்குதல் இல்லாமல்; **மலையினும் மரத்தினும்** - மலைகளிலும் மரங்களிலும்; **மற்றும் முற்றினும்** - மற்று எல்லா இடங்களிலும்; **விலை நினைந்து** - (பொருள்) கொடுப்பவருடைய உயர்வு, தாழ்வு கருதாமல் தாம் தரும் இன்பத்திற்கு) விலையாகக் கொடுக்கக்கூடிய பொருளையே கருதி; **உள வழி விலங்கும்** - அப்பொருள் உள்ள இடத்திற்குப் பாய்ந்து செல்லும்;*

***வேசையர்** - விலைமகளிரது; **உலைவுறும் மனம் என** - நிலையின்றிச் சுழலும் மனம் போல; **உலாய** - வீசியது.*

*விலை மகளிர், பொருள் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு மேலோர் கீழோர் என்னும் வேறுபாடு கருதாது பொருள் கொடுப்பாரிடம் தம்மைக் கொடுப்பவராவர். இவர்கள் பொருட் பெண்டிர், வரைவில் மகளிர் எனவும் குறிக்கப்படுவர். "மெய்வரு போகம் ஒக்க உடன் உண்டு விலையும் கொள்ளும் பை அரவு அல்குவார் தம் உள்ளமும்" (495); "நிலையா மன வஞ்சனை நேயம் இலா விலை மாதர்" (3280), 'நிதி வழி நேயம் நீட்டும் மன்றலம் கோதை மாதர் மனம்' (3309) என்று முன்னரும் விலைமகளிர் இயல்பு கூறப்பட்டது. விலங்குதல் - விலகிச்செல்லுதல். 12*

***4160. அழுங்குறு மகளிர், தம்***
***அன்பர்த் தீர்ந்தவர்,***
***புழுங்குறு புணர் முலை***
***கொதிப்பப் புக்க உலாய்,***

***கொழுங் குறைத் தசை என***
***ஈர்ந்து கொண்டு, அது***
***விழுங்குறு பேய் என,***
***வாடை வீங்கிற்றே.***

***வாடை** - வாடைக் காற்று; **தம் அன்பர் தீர்ந்தவர்**- தன் அன்புமிக்க தலைவரைப் பிரிந்தவர்களாய்; **அழுங்குறு மகளிர்** - வருந்துகின்ற பெண்களின்; **புழுங்குறு புணர் முலை** - (மனவேதனையினால்) வெதும்புகின்ற நெருங்கிய கொங்கைகள்; **கொதிப்பப் புக்கு உலாய்** - மேலும் கொதிப்பு அடையுமாறு அவற்றின் மீது சென்று வீசி; **கொழுங் குறைத் தசை என** - (அக்கொங்கையைச்) செழுமையான மாமிசத் துண்டம் என நினைத்து; **ஈர்ந்து கொண்டு** - அரிந்தெடுத்துக் கொண்டு; **அது விழுங்குறு** - அத்தசையை விழுங்க வந்த; **பேய் என** - பேய் போல; **வீங்கிற்று** - ஓங்கி வளர்ந்து வீசியது.*

*கணவரைப் பிரிந்த மகளிரின் கொங்கைகள் மிகக் கொதிக்குமாறு வீசி, அவற்றை மாமிசத்துண்டமென நினைத்து உண்ணவரும் பேய் போல் வாடைக் காற்று வீசியது என அதன் கடுமை கூறப்பட்டது. வடக்கிலிருந்து வீசுவதால் வாடை எனப்பட்டது. பிரிந்துறை மகளிரை வாடை வருத்தும் என்பதை "தழல் வீசி உலா வரு வாடை தழீஇ அழல்வீர்" (5232), 'பனிப்பியல்வாக வுடைய தண்வாடை யிக்காலம் இவ்வூர்ப் பனிப்பியல்வெல் லாந் தவிர்ந்தெரி வீசும்' (திருவிருத்தம் 5) என்ற அடிகள் உணர்த்தும். பேய், பிறர் அஞ்சத்தக்க பெரிய வடிவம் கொண்டாற்போல, வாடையும் விஞ்சியது எனக் கூறவேண்டி, வாடை வீசிற்று என்னாது 'வீங்கிற்று' என்றார். அன்பர்த் தீர்ந்தவர் - இரண்டாம் வேற்றுமைத் தொகை; தசை - இலக்கணப் போலி. 13*

*பருவமழை பெய்தல்*

***4161. ஆர்த்து எழு துகள்***
***விசும்பு அடைத்தலானும், மின்***
***கூர்த்து எழு வாள்***
***எனப் பிறழும் கொட்பினும்,***
***தார்ப் பெரும் பணையின***
***விண் தழங்கு காரினும்,***
***போர்ப் பெருங் களம் எனப்***
***பொலிந்தது - உம்பரே.***

***ஆர்த்து எழு துகள்** - பெரு முழக்கம் செய்துகொண்டு மேலே எழுகின்ற புழுதி; **விசும்பு அடைத்தலானும்** - ஆகாயத்தை மறைத்தலாலும்; **மின்** - மின்னல்கள்; **கூர்ந்து எழு வாள் என** - கூர்மை கொண்டு விளங்குகின்ற வாட்படை போல; **பிறழும் கொட்பினும்** - அசைந்து ஒளி வீசும் சுழற்சியானும்; **விண்** - மேகங்கள்; **தார்ப் பெரும் பணையின்** - மலர் மாலையணிந்த பெரிய முரசங்களைப் போல; **தழங்கு காரினும்** - ஒலிக்கின்ற கார் கால முழக்கினாலும்; **உம்பர்** - ஆகாயமானது; **போர்ப் பெரும் களம் எனப் பொலிந்தது** - பெரிய போர்க்களம் போன்று விளங்கியது.*

*சேனைகள் செல்லும் போது அவற்றின் கால்கள் பட்டு எழும் புழுதி, வானத்தை மறைப்பது போல, இங்குக் காற்று அடித்ததால் தூசி மேல் கிளம்பி வானத்தை*

*மறைத்தது. "கதி கொண்ட சேனை நடவ எழு துகள் ககனம் சுலாவியநிலகதியுற" (வில்லி.பார. பதினாறாம் போர்ச்-73) என்றது காண்க. வீரர்களுக்கு உற்சாகம் ஊட்டும் வகையில் முரசு முழங்குதல் இயல்பு. தார்ப்பெரும்பணை. போர் முரசைத் தெய்வமாகக் கருதி மாலை சூட்டுவது தமிழர் வழக்கமாகும். விண் - இடவாகுபெயராய் மேகத்தைக் குறித்தது. காரணங்காட்டி உவமித்ததனால் ஏது உவமைஅணி. 14*

***4162. இன் நகைச் சனகியைப்***
***பிரிந்த ஏந்தல்மேல்,***
***மன்மதன் மலர்க் கணை***
***வழங்கினான் என,***
***பொன் நெடுங் குன்றின்மேல்***
***பொழிந்த, தாரைகள் -***
***மின்னொடும் துவன்றின***
***மேக ராசியே.***

***இன் நகைச் சனகியை -*** *இனிய புன்முறுவலையுடைய சீதையை;* ***பிரிந்தஏந்தல் மேல் -*** *பிரிந்த இராமன் மேல்;* ***மன்மதன் மலர்க்கணை வழங்கினான் என -*** *மன்மதன் தன் மலர் அம்புகளை எய்தது போல;* ***மின்னொடும் துவன்றின -*** *மின்னல்களுடன் நெருங்கி நிறைந்த;* ***மேக***

***ராசி -*** *மேகக் கூட்டங்கள்;* ***பொன் நெடுங் குன்றின் மேல் -*** *பொன் மயமான பெரிய மலையில் மேல்;* ***தாரைகள் பொழிந்த -*** *மழைத் தாரைகளைச் சொரிந்தன.*

*ஏந்தல் - பெருமையில் சிறந்தவன் இராமன். பிரிந்து நிற்கும் நிலையில் மன்மதன் மலர்க்கணை எய்தல் இயல்பாதலின் 'பிாந்த ஏந்தல் மேல்' என்றார். சீதையின் புன்னகை, இராமன் துயரம் மிக, ஏதுவாயது கருதி, 'இன்னகைச் சனகி' என்றார். தாமரைப்பூ, மாம்பூ, அசோகப்பூ, முல்லைப்பூ, நீலோற்பலப்பூ என்னும் ஐந்தும் மன்மதனின் மலரம்புகளாம். அம்புமாரி எனக் கூறுதல் மரபு ஆதலின் மழைத்தாரைக்கு மன்மதனின் மலர்க்கணை வழங்கல் உவமையாயது. பொறுமை, சலியாமை, பெருமை, வண்மை முதலிய குணங்களை உடைய இராமன். அவ்வியல்புகளை உடைய மலைக்கு உவமையாகத் தக்கவன். பொன்னெடுங் குன்று என்றது, அப்பொழுது இராமன் தங்கியிருந்த பிரசிரவணம் என்னும்மலையை. 15*

***4163. கல்லிடைப் படும் துளித்***
***திவலை, கார் இடு***
***வில்லிடைச் சரம் என,***
***விசையின் வீழ்ந்தன;***
***செல்லிடைப்பிறந்த செங்***
***கனல்கள் சிந்தின,***
***அல்லிடை, மணி சிறந்து,***
***அழல் இயற்றல்போல்.***

***கல்லிடைப் படும்*** - *(அந்த மலையிலுள்ள) கற்களின் இடையே (மேகங்கள்) சொரிகின்ற;* ***துளித்திவலை*** - *மழை நீர்த்துளிகள்;* ***கார் இடு வில்லிடை*** - *மேகங்களில் தோன்றிய இந்திர வில்லிலிருந்து பாய்கின்ற;* ***சரம் என*** - *அம்புகள் போல;* ***விசையின் வீழ்ந்தன*** - *வேகத்தோடு விழுந்தன;* ***செல்லிடைப் பிறந்த*** - *(அம்) மேகங்களிலிருந்து தோன்றிய;* ***செங்கனல்கள்-*** *செந்நிறம் கொண்ட இடியாகிய நெருப்புத் திரள்கள்;* ***மணி அல்லிடைச் சிறந்து*** - *மாணிக்கங்கள் இரவுக் காலத்தில் மிகுதியாக ஒளிவீசி;* ***அழல் இயற்றல் போல் சிந்தின*** - *நெருப்பொளி வீசுதல் போலச் சிந்தின.*

*வில் - இந்திரவில். செல்வது என்ற இயல்பு பற்றி மேகம் 'செல்' எனப்பட்டது போலும். மழைத் தாரைகள் அம்புபோல வீழ, இரவில் மாணிக்க மணிகள் போல ஒளி வீசி இடிகள் சிந்தின என்பதால் நீர், நெருப்பு என இரண்டினையும் மேகம் பெற்றிருந்தமை புலனாகிறது. 16*

***4164. மள்ளர்கள் மறு படை, மான யானைமேல்***
***வெள்ளி வேல் எறிவன போன்ற, மேகங்கள்;***
***தள்ள அரும் துளி பட, தகர்ந்து சாய் கிரி,***
***புள்ளி வெங்கட கரி புரள்வ போன்றவே.***

***மேகங்கள்*** - *மேகங்கள் (பாறைகளின் மேல் மழைத் தாரை பொழிவது);* ***மள்ளர்கள்*** - *வீரர்கள்;* ***மறுபடை மான யானைமேல்*** - *பகைவர் படையிலுள்ள பெருமை வாய்ந்த யானைகளின் மேல்;* ***வெள்ளி வேல் எறிவன போன்ற*** - *வெண்ணிறமான வேல்கள் எறிவதைப் போன்றிருந்தன.* ***தள்ள அரும் துளிபட*** - *விலக்க முடியாத அரிய நீர்த் தாரைகள் விசையுடன் விழுவதால்;* ***தகர்ந்து சாய் கிரி*** - *சிதைந்து சாய்கின்ற மலைகள்;* ***புள்ளி வெங்கட கிரி*** - *புள்ளிகளையுடைய கொடிய மத யானைகள்;* ***புரள்வ போன்ற*** - *(அவ்வேல்கள் படுவதால்) புரண்டு விழுவன போன்றன.*

*மள்ளர்கள் மேகங்களுக்கும், யானைகள் மலைகளுக்கும் வேல்கள் மழைத்தாரைகட்கும் உவமை. 'குன்றத் தன்ன தோர் பெருங்களிறு" (புறநா.140) என்பதும் புறம். யானையின் மத்தகத்துப் புள்ளிகள் இருத்தல் நல்லிலக்கணம் ஆதலின் 'புள்ளி வெங்கடகிரி' என்றார். யானைகள் மீது வேல் எய்தல் பண்டைப் போர் முறையாகும். 'யானை பிழைத்த வேல்' (குறள் 772) 'கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்' (குறள் 774) 'விழித்து மேல் சென்ற வேழம் வேலினால் விலக்கி நிற்பார்' (சீவக. 783) என்று வருவனகாண்க. 17*

***4165. வான் இடு தனு, நெடுங்***
***கருப்பு வில்; மழை,***
***மீன் நெடுங் கொடியவன்;***
***பகழி, வீழ் துளி;***
***தான் நெடுஞ் சார்***
***துணை பிரிந்த தன்மையர்***
***ஊனுடை உடம்பு எலாம்***
***உக்கது ஒத்ததே.***

***மழை*** - *மேகம்;* ***மீன் நெடுங்கொடியவன்*** - *மீனின் வடிவம் எழுதப்பெற்ற உயர்ந்த கொடியை உடைய மன்மதனாக;* ***வான் இடுதனு*** - *அம்மேகத்தில் தோன்றிய இந்திர*

*வில்;* ***நெடும் கருப்பு வில் -*** *நீண்ட கரும்பு வில்லாக;* ***வீழ் துளி -*** *(மேகத்தினின்று) விழுகின்ற மழைத்தாரைகள்;* ***பகழி -*** *(மன்மதன் தொடுக்கும்) அம்புகளாக;* ***நெடுஞ்சார் -*** *நீண்ட மலைச் சாரல்கள்;* ***துணை பிரிந்த தன்மையர் -*** *தத்தம் துணைவர்களைப் பிரிந்த இயல்புடையவராக;* ***ஊன் உடை உடம்பு எலாம் -*** *(மழைத் தாரைகள் மலைச் சாரல்களைத் துளைத்தல் பிரிந்தாரின்) தசையுடன் கூடிய உடல்கள் முழுவதையும்;* ***உக்கது ஒத்தது -*** *ஊடுருவியது போன்றது.*

*மழையை மன்மதனாகவும் இந்திர வில்லைக் கரும்பு வில்லாகவும், வீழ்துளியைப் பகழியாகவும், நெடும் மலைச் சாரலைத் துணை பிரிந்த தன்மையராகவும் பல பொருள்களைத் தம்முள் இயைபு உடையனவாக வைத்து உருவகம் செய்ததால் இயைபு உருவக அணியாகும். இந்திரவில்லைத் தன்னிடம் கொண்ட மேகம், வில்லிலிருந்து செலுத்தும் பகழி போல், மழைத் தாரைகளை மலைகளில் பொழிவது துணை பிரிந்தாருடைய உடம்பில் காமன் அம்புகள் ஊடுருவது*

*போல் உள்ளது என்பதால் இப்பாடல் உருவகத்தை அங்கமாகக் கொண்டு வந்த உவமை அணியாகும். மன்மதன் மீன் எழுதிய கொடி உடையவனாதலின் 'மீனிடு கொடியவன' எனக் காரணப் பெயரால் குறித்தார். வானிடு தனு இந்திர வில், திருவில் என்றும் வழங்கப்பெறும். 'திருவில் அல்லது கொலை வில் அறியார்' (புறநா - 20) என்றது காண்க. பிரிவால் உயிர்போய் ஊன் மட்டுமே உள்ள உடம்பு என்னும் பொருள் தோன்ற 'ஊன் உடை உடம்பு' எனப்பட்டது. சார் - சாரல்; விகாரம்; இம்மையில் மட்டுமன்றி மறுமையிலும் தொடரும் உழுவலன்புடையவர் ஆதலின் 'நெடுஞ்சார் துணை' என்றார். 'பிறப்பால் அடுப்பினும் பின்னும் துன்னத்தகும் பெற்றியரே' (திருக்கோவை 205); "இம்மை மாறி மறுமையாயினும் நீயாகியர் எம் கணவனை, யானாகிய நின் நெஞ்சு நேர்பவளே" (குறுந். 49) என்பனகாண்க. 18*

***4166. 'தீர்த்தனும் கவிகளும் செறிந்து, நம் பகை***
***பேர்த்தனர் இனி' எனப் பேசி, வானவர்***
***ஆர்த்தென, ஆர்த்தன மேகம்; ஆய் மலர்***
***தூர்த்தன ஒத்தன, துள்ளி வெள்ளமே.***

***தீர்த்தனும் கவிகளும் -*** *"தூயவனான இராமனும் வானரங்களும்;* ***செறிந்து -*** *ஒன்று கூடியதால்;* ***இனி நம் பகை பேர்த்தனர் -*** *இனி நமது பகைவராயுள்ள இராவணன் முதலியோர் அழிந்தவராவர்;* ***எனப் பேசி -*** *என்று தங்களுக்குள் பேசிக் கொண்டு;* ***வானவர் ஆர்த்தென -*** *தேவர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரித்தது போல;* ***மேகம் ஆர்த்தன -*** *மேகங்கள் ஆரவாரித்தன;* ***துள்ளி வெள்ளம் -*** *(மேகம் சொரிந்த) மழைத் துளிகளின் தொகுதிகள்;* ***ஆய்மலர் தூர்த்தன ஒத்தன -*** *(அங்ஙனம் மகிழ்ந்த தேவர்கள்) ஆய்ந்தெடுத்த கற்பகம் போன்ற மலர்களை (அவ்விராமன் மீதும் குரங்குகளின் மீதும்) சொரிந்து நிரப்பினால் போன்றன.*

*மேகங்களின் முழக்கம், இராமனும் வானரர்களும் சேர்ந்ததால் பகைவர்கள் அழிந்தனர் என்ற மகிழ்ச்சியால் தேவர்கள் செய்த ஆரவாரம் போலவும் மழைத்துளிகள் தேவர்கள் பெய்த மலர்கள் போலவும் விளங்கின; தற்குறிப்பேற்ற அணி. 'தீர்த்தனும் கவிகளும் பேர்த்தனர்' - உயர்திணையும் அஃறிணையும் விரவிச், சிறப்பினால் உயர்திணை முடிபைப் பெற்றது; திணைவழுவமைதி. பேர்த்தனர் - தெளிவும் விரைவும் பற்றிய கால வழுவமைதி. துள்ளி - துளி என்பதன் விரித்தல் விகாரம்.*

*"துள்ளி தரு வெள்ளம்" (4997) 'துள்ளி வெள்ளி இனம்' (5280) என்பன காண்க. இராமனைத் 'தீர்த்தன்' (3060) என முன்னரும் கூறினார். இராமலக்குவர் செயல்களைக் கண்டு வானவர் மகிழ்ச்சியால் ஆரவாரிப்பதை நூலின் பல இடங்களில் காணலாம். "தூர்த்து அமைந்தனர் வானவர் தூய்மலர் (3060), 'பூ மழை அமரர் சிந்த' (9167) 'தூர்க்கின்ற மலர் மாரி தொடரப் போய்" (9900) என்பன காண்க. ஆர்த்தால் என என்பது ஆர்த்து என நின்றது. இராமனின் அவதாரம் இராவணன் போன்ற அரக்கர்களை அழிப்பதற்கே என்பதை இப்பாடல் உணர்த்தும். 19*

***4167. வண்ண வில் கரதலத்து***
***அரக்கன், வாளினன், விண்ணிடைக் கடிது கொண்டு***
***ஏகும் வேலையில்,***
***பெண்ணினுக்கு அருங் கலம்***
***அனைய பெய்வளை***
***கண் என, பொழிந்தது -***
***கால மாரியே.***

**வண்ண வில் கரதலத்து அரக்கன் -** *அழகிய வில்லை ஏந்திய கையையுடைய இராவணன்;* **வாளினன் -** *வாளாயுதத்தையும் உடைய வன்;* **கொண்டு -** *(சீதையை) எடுத்துக்கொண்டு;* **விண்ணிடை கடிது ஏகும் வேலையில் -** *ஆகாயத்தில் விரைவாகச் செல்கின்ற சமயத்தில்;* **பெண்ணினுக்கு அருங்கலம் அனைய -** *மகளிர்க்கு அரிய அணிகலம் போன்ற;* **பெய் வளை -** *வளையல் அணிந்த சீதையின்;* **கண் என -** *கண்கள் நீர் சொரிந்தாற்போல;* **காலமாரி பொழிந்தது -** *கார்காலத்தில் மழை பொழிந்தது.*

*இராவணன் விண் வழியாகச் சீதையைக் கவர்ந்து சென்றபோது சீதை விடுத்த கண்ணீர்போல மழை பெய்தது எனக் கதை நிகழ்ச்சியே இங்கு உவமையாக்கப்பட்டது. வில்லைக் கொண்டு போர்செய்து பற்றாது, வஞ்சனையால் சீதையைக் கவர்ந்து சென்றதால், வில் கைக்கு வெற்று அலங்காரமாயிற்று என்பதால் இகழ்ச்சி தோன்ற 'வண்ண வில் கரதலத்து' என்றார். இராமன் தொடர்ந்து வந்து விடுவானோ என்ற அச்சத்தால் விரைந்து சென்றான் என்பது தோன்ற 'விண்ணிடைக் கடிது கொண்டு' என்றார். சீதை பெண்மைக்கு அணிகலனாவாள் என்பதால், 'பெண்ணினுக்கு அருங்கலம் அனைய பெய்வளை' என்றார். பெய்வளை - அன்மொழித்தொகை; இராமன் சீதையை 'பெண் அருங்கலலம' (2077) என விளித்தது காண்க. கண் எனக் காலமாரி பொழிந்தது என்பதில் சீதை வடித்த கண்ணீர் மிகுதி புலப்படும். இராவணன் கவர்ந்து செல்கையில் சீதை கண்ணீர் விட்டதை 'மழை பொரு கண் இணை வாரியோடு தன் இழை பொதிந்து இட்டனள்' (3903) என்றதால் அறிக. 20*

***4168. பரஞ்சுடர்ப் பண்ணவன்,***
***பண்டு, விண் தொடர்***
***புரம் சுட விடு***
***சரம் புரையும் மின்இனம்,***
***அரம் கடப் பொறி***
***நிமிர் அயிலின், ஆடவர்***

***உரம் சுட உளைந்தனர்,***
***பிரிந்துளோர் எலாம்.***

***பரஞ்சுடர்ப் பண்ணவன் -*** *பரஞ்சோதியாகிய சிவபிரான்;* ***பண்டு விண்தொடர் புரம் சுட -*** *பண்டைக்காலத்து விண்ணில் தொடர்ந்து இயங்கிய திரிபுரங்களை எரிக்க;* ***விடு சரம் புரையும் -*** *தொடுத்த அம்பு போன்ற;* ***மின் இனம் -*** *மின்னல்கள்;* ***அரம் சுட -*** *அரத்தினால் அராவப்பட்டு;*

***பொறி நிமிர் அயிலின் -*** *ஒளி வீசுகின்ற வேர்ப் படைகள் போல;* ***ஆடவர் உரம் சுட -*** *(தலைவியரைப் பிரிந்த) ஆடவர்களின் நெஞ்சை எரிப்ப;* ***பிரிந்துளோர் எலாம் -*** *பிரிந்தவர்கள் எல்லாம்;* ***உளைந்தனர் -*** *வருந்தினர்.*

*சிவபிரான் புரம் எரிக்க அம்பு போன்ற மின்னல்கள் தலைவியரைப் பிரிந்த ஆடவர்களை வருத்தின. பரஞ்சுடர்ப் பண்ணவன் என்றது சிவபிரானை. விண் தொடர் புரம் - வானில் திரிந்து கொண்டு உயிர்களை அழித்து வந்த திரிபுரங்கள். உரம் - மார்பு, இடவாகு பெயராய் நெஞ்சைக் குறித்தது.* *21*

***4169. பொருள் தரப் போயினர்ப்***
***பிரிந்த பொய் உடற்கு,***
***உருள்தரு தேர்மிசை***
***உயிர்கொண்டு உய்த்தலான்,***
***மருள்தரு பிரிவின் நோய்***
***மாசுணம் கெட,***
***கருடனைப் பொருவின் -***
***கால மாரியே.***

***பொருள் தரப் போயினர் -*** *செல்வம் ஈட்டுதற் பொருட்டு வேற்று நாடுகளுக்குச் சென்ற தலைவரை;* ***பிரிந்த -*** *பிரிந்த;* ***பொய் உடற்கு-*** *(உயிர்த் துணைவரைப் பிரிந்ததால்) உயிர்நீங்கிய உடம்பு மாத்திரமாய் உள்ள தலைவியர்க்கு;* ***உருள்தரு தேர்மிசை -*** *உருளும் தன்மை கொண்ட சக்கரங்களை உடைய தேரின் மேல்;* ***உயிர்கொண்டு -*** *(பிரிந்த தலைவர்களாகிய) உயிர்களை மீட்டு வந்து;* ***உய்த்தலான் -*** *சேர்த்தலால்;* ***கால மாரி -*** *கார் காலத்து மழை மேகங்கள்;* ***மருள்தரு பிரிவின் நோய் -*** *மயக்கத்தைச் செய்கின்ற பிரிவுத் துன்பங்களாகிய;* ***மாசுணம் கெட -*** *பெரிய பாம்புகள் அழியும்படி;* ***கருடனை பொருவின -*** *(வந்த) கருடனை ஒத்தன*

*முன்னோர் ஈட்டிய பொருளில் வாழாது தானே பொருளீட்டி வந்து வாழ்தல் சிறப்பெனக் கருதிப் பண்டைத்தமிழர் வேற்றுநாடுகளுக்குச் சென்றனர். 'ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லெனச் செய்வினை கைம்மிக எண்ணுதி' (குறுந் - 63), 'புணரின் புணராது பொருளே பொருள் வயின், பிரியிற் புணராது புணர்வே' (நற் - 16) என்பன காண்க. பிரிந்த தலைவன் கார்காலத்தே திரும்பி வருவான். அங்ஙனம் பொருள் ஈட்டி, வினை முடித்து மீளும் தலைவன் தேவை விரைந்து செலுத்துமாறு கூறும் செய்திகளை முல்லைத்திணைப் பாடல்களில் காணலாம். கார்காலத்தில் தலைவன் தேர்மீது திரும்புவான் ஆதலின் 'உருள்தரு தேர்மிசை உயிர்கொண்டு உய்த்தலான்' என்றார். தலைவரை உயிராகக் கருதுவதால் தலைவியின் உடம்பு*

*பொய்உடம்பாயிற்று. 'பூண்ட மெய் உயிரே நீ அப்பொய் உயிர் போயே நின்ற ஆண்டகை' (5304) என்றது காண்க. உடம்பினின்று உயிர் பிரிக்கக் கூடியது அன்றாயினும் தலைவன் அல்லது தலைவியை உயிர் எனக் கூறுதல் மரபாகும். 'ஈண்டு நீ இருந்தாய் ஆண்டு அங்கு எவ்வுயிர் விடும் இராமன் (5304) என்பதில் இராமனுக்குச் சீதை உயிர் என்றது காண்க. பாம்பு கருடனால்*

*அழிவது இயல்பு. அதனால் பிரிவு நோயாகிய மாசுணம் அழிய வந்த கருடன்போல் கார் காலமழை விளங்கியது என்றார். இப்பாடலில் ஏது உவமை அணி அமைந்தது. மாரி இடப்பன்மையால் பலவாதல் பற்றிப் பொருவின எனப் பன்மையால் கூறினார். 22*

## *4170. முழங்கின முறை முறை மூரி மேகம், நீர்*
## *வழங்கின, மிடைவன, - மான யானைகள்,*
## *தழங்கின, பொழி மதத் திவலை தாழ்தரப்*
## *புழுங்கின, எதிர் எதிர் பொருவ போன்றவே.*

***மூரி மேகம் -*** *வலிய மேகங்கள்;* ***முறை முறை முழங்கின -*** *மாறி மாறி இடிமுழக்கம் செய்தனவாய்;* ***நீர் வழங்கின -*** *மழையைப் பொழிந்து கொண்டு;* ***மிடைவன -*** *ஒன்றோடொன்று நெருங்குபவை;* ***மான யானைகள் -*** *பெரிய யானைகள்;* ***தழங்கின -*** *பிளிறிக் கொண்டு;* ***பொழி மதத் திவலை தாழ்தர -*** *(தம் கவுள்களிலிருந்து) சொரிகின்ற மதநீர்த் தாரைகள் பெருகி விழ;* ***புழுங்கின -*** *சினங்கொண்டு;* ***எதிர் எதிர் பொருவ -*** *ஒன்றோடொன்று எதிர்த்து நின்று போர் புரிவனவற்றை;* ***போன்ற -*** *ஒத்தன.*

*யானைகள் நிறத்தாலும் வடிவத்தாலும் மேகங்கட்கு உவமை ஆயின. இடி முழக்கத்திற்கு யானைகளின் பிளிறலும், மழை நீர்க்கு அவற்றின் மதநீரும், மேகங்களின் நெருக்கத்திற்கு யானைகள் போரிட நெருங்கும் தன்மையும் உவமையாயின. முழக்கம், நீர் விழுதல், நெருங்குகுல் என்பன மேகம், யானை ஆகிய இரண்டிற்கும் பொதுவாய் அமைவதால் உவம உருபு ஓரிடத்து மட்டும் விரிந்துள்ளமை காணலாம். முழங்கின, வழங்கின, தழங்கின, புழுங்கின என்பன முற்றெச்சங்கள். மிடைவன, பொருவ என்பன வினையாலணையும் பெயர்கள்; போன்ற - முற்று; தாழ்தர - தரதுணைவினை. 23*

## *4171. விசைகொடு மாருதம் மறித்து வீசலால்,*
## *அசைவுறு சிறு துளி அப்பு மாரியின்,*
## *இசைவுற எய்வன இயைவவாய், இருந்*
## *திசையொடு திசை செருச் செய்தல் ஒத்தவே.*

***விசை கொடு -*** *வேகம் கொண்டு;* ***மாருதம் -*** *காற்று;* ***மறித்து வீசலால்-*** *மாறி மாறி வீசுவதால்;* ***அசை வுறு சிறு துளி -*** *(தம்மிடத் திலிருந்து)அசைதல் பொருந்திய சிறிய மழைநீர்த்துளி;* ***அப்பு மாரியின் -*** *அம்புமழைபோல்;* ***இசைவுற எய்வன -*** *எதிர்த்திசையில் பொருந்துமாறு செலுத்துவனவாயும்;* ***இயைவவாய் -*** *எதிர்த் திசை செலுத்தியதை ஏற்பனவுமாய்;* ***இருந் திசையொடு திசை -*** *பெரிய திசையோடு திசை;* ***செருச்செய்தல் ஒத்தவே -*** *போர் செய்வதைப் போன்று விளங்கின.*

*பல திசைகளில் அடிக்கும் காற்றின் வேகத்தால் மேகம் மழை நீர்த் துளிகளை எதிர்எதிரே செலுத்துதல், திசையொடு திசை அம்பு தொடுத்துப் போரிடுவது*

*போல் இருந்தது. இயல்பாகக் காற்றால் அசைவுறும் மழைத் துளிகளைத் திசையொடு திசை எய்யும் அம்புமாரியாகக் கூறியது தற்குறிப்பேற்ற அணி ஆகும். மறித்து வீசல் - அடிக்கடி திசை மாறி வீசுதல், அப்பு - அம்பு வலித்தல் விகாரம், 'அக்கணத்து அடுகளத்து அப்பு மாரியால்' (8991) என்றது காண்க. இருந்திசை பெரிய திசைகள், கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்குஎன்பன. இப்பாடலில் திசைகள் பொருவன போன்ற என வருணித்துள்ளார். 24*

*மரங்கள் பூத்தல்*

***4172. விழைவுற பொருள் தரப்***
***பிரிந்த வேந்தர் வந்து***
***உழை உற, உயிர் உற***
***உயிர்க்கும் மாதரின்,***
***மழை உற, மா முகம்***
***மலர்ந்து தோன்றின,***
***குழை உறப் பொலிந்தன -***
***உலவைக் கொம்பு எலாம்.***

***விழைவுறு பொருள்தர** - யாவராலும் விரும்பப்படுகின்ற பொருளை ஈட்டி வருவதற்காக; **பிரிந்த வேந்தர்** - தம்மை விட்டுப் பிரிந்து (வேற்று நாடுகளுக்குச்) சென்ற தலைவர்; **வந்து உழை உற** - (கார்காலம் வந்த அளவில்) பொருளீட்டி வந்த தம்மை அடைய; **உயிர் உற உயிர்க்கும்** - (அதனால், முன்பு பிரிந்த நிலையில் உயிர் நீங்கியது போன்றிருந்து உடம்பில்) உயிர்பொருந்த மூச்சு விடுகின்ற; **மாதரின்** - மகளிரைப் போல; **உலவைக் கொம்பு எலாம்** - (மழையில்லாமையால்) உலர்ந்து கிடந்த மரங்களின் கிளைகளெல்லாம்; **மழை உற** - மழை பெய்ய; **குழை உறப் பொலிந்தன** - தளிர்கள் பொருந்த விளங்கினவாய்; **மாமுகம் மலர்ந்து** - அழகிய முகம் மலர்ந்து; **தோன்றின** - காணப்பட்டன.*

*பிரிந்த நிலையில் வாடிய மகளிர் தலைவர் வர மகிழ்தல் போல மழையின்றி உலர்ந்த மரங்கள் மழை பெய்த அளவில் தளிரொடு மலர்ந்து தோன்றின என்றார். உவமை அணி. பொருளின் இன்றியமையாமை கருதி அனைவரும் விரும்பும் தன்மைத்தாதலின் 'விழையுறு பொருள்' என்றார். தலைவர் பிரிவால் முக மலர்ச்சியின்றி உயிரற்ற உடம்பினராய் இருப்பர் என்பதைப் 'பொருள்தரப் போயினர்ப் பிரிந்த பொய் உடற்கு' (4169) என முன்னரும் கூறியது காண்க. முகமலர்ச்சி மரங்கள் தழைத்து மலர்ந்ததற்கு உவமை ஆக்கினார். உயிர் அனைய கொழுநர் வர. . . . மெலிவு அகலும் கற்பினார் போல், புண்டரிகம் முகம் மலர அகம் மலர்ந்து பொலிந்தன' (631) என்பன ஒப்பு நோக்கத்தக்கது. காலத்திற்க ஏற்ற வருணனையாக, கார்கால நிகழ்ச்சிகளையே ஒன்றற்கொன்று உவமையாக அமைத்த நயம் காண்க. 25*

*ஆசிரிய விருத்தம்*

***4173. பாடலம் வறுமை கூர,***
***பகலவன் பசுமை கூர,***
***கோடல்கள் பெருமை கூர,***
***குவலயம் சிறுமை கூர,***
***ஆடின மயில்கள்; பேசாது***
***அடங்கின குயில்கள் - அன்பர்***
***கேடுறத் தளர்ந்தார் போன்றும்,***
***திரு உறக் கிளர்ந்தார் போன்றும்.***

*__பாடலும் வறுமை கூர -__ (அக்கார்காலத்தில்) பாதிரி மரங்கள் (மலர்கள் இன்மையால்) வெறுமை நிலையை அடைய; __பகலவன் பசுமை கூர -__ கதிரவன் (கருமேகங்களால் மறைப்புண்டு) குளிர்ச்சி மிக்கதாக; __கோடல்கள் பெருமை கூர -__ வெண் காந்தள் செடிகள் (மலர்களைப் பெற்றிருத்தலால்) பெருமை மிக; __குவலயம் சிறுமை கூர -__ குவளை மலர்கள் குவிந்து வாட்டம் மிக; __மயில்கள் - ; திரு உறக் கிளர்ந்தார் போன்றும் -__ செல்வம் பெற்றதனால் மகிழ்ச்சியுற்றவர் போல(வும்); __ஆடின -__ மகிழ்ந்து ஆடின. __அன்பர் கேடுற -__ தம் அன்பிற்குரியார் துன்பம் அடைய; __தளர்ந்தார் போன்றும் -__ மனம் தளர்ந்தவர்களைப் போல(வும்); __குயில்கள் பேசாது அடங்கின -__ குயில்கள் கூவாது ஒடுங்கின.*

*பாடலம் - வடசொல். பாதிரிமரம். . . . கார்காலமாதலால் வேனிலில் பூக்கும் பாதிரி மரங்கள் மலர்களின்றி வறுமை உற்றன. 'வரிநிறப் பாதிரி வாட. . . . உருமிடி வானமிழிய' (காற் நாற்பது - 3) என்றதும் காண்க. அக்காலத்தில் மேகங்களால் சூழப்படுவதாலும், மழையின் குளிர்ச்சியாலும் கதிரவன் வெப்பம் குறைந்து விடுதலால் குளிர்ந்த தன்மை மிகுதியாகும். 'கடுங்கதிர் நல்கூரக் கார் செல்வம் எய்த' (கார்நாற்பது-2) என்றது காண்க. வெண்காந்தள் மழைக்காலத்தில் மலர்தல் இயல்பு. இது கார்த்திகைப் பூ எனவும் வழங்கப்பெறும். அக்காலத்தில் குவளை மலர்கள் குவிந்திடும் 'கருங்குயில் கையற மாமயில் ஆலப் பெருங்கலி வானம் உரறும்' (கார் நாற்-16) என்றவாறு கார்காலத்தில் மயில்கள் ஆடக்குயில்கள் ஒடுங்கும். அன்பர் கேடுறக் தளர்ந்தார் போன்று குயில்கள் பேசாது அடங்கின; அன்பர் திருவுறக் கிளர்ந்தார் போன்று மயில்கள் ஆடின' என எதிர்நிரல் நிரையாக்கிப் பொருள் கொள்வதால் எதிர்நிரல்நிறை அணியாகும். செய்யுளில் இரு இடங்களில் வரும் போன்றும் என்ற சொற்களில் முதலது எதிரது தழீஇய எச்சவும்மை. பின்னது இறந்தது தழீஇய எச்சவும்மை. இப்பாடல் உவமை அணியை அங்கமாகக் கொண்ட தன்மை நவிற்சி அணி அமைந்தது. மேலும், வறுமை, பசுமை; பெருமை, சிறுமை; ஆட, அடங்கின; தளர்ந்தார், கிளர்ந்தார் என முரண்படத் தொடுத்தமையின் முரண் அணி அமைந்தது என்றலும் தகும். 'அன்பர் கேடுற்த் தளர்ந்தார் போன்றும், திரு உறக்கிளர்ந்தார் போன்றும் என்ற அடிக்குச் சுக்கிரீவன் செல்வம் பெற அவனும் வானரங்களும் மகிழ்ந்தாற் பேல மயில்கள் ஆடின; சீதை துன்பம் அடைய இராம இலக்குவர் வருந்தினாற்போல குயில்கள் பேசாது அடங்கின' எனக் கதையொடு தொடர்புபடுத்தியும் விளக்கம் கூறலாம். மேலும் அன்பர் கேடுறத் தளர்ந்தார் போன்று பாடலம் வறுமை கூர,*

*பகலவன் பசுமை கூர, குவலயம் சிறுமை கூர, குயில்கள் பேசாது அடிங்கின; அன்பர் திருவுறக் கிளர்ந்தார் போன்று கோடல்கள் பெருமை கூர, மயில்கள் ஆடின எனவும் பொருள் கொள்ளலாம். 26*

***4174. நால் நிறச் சுரும்பும், வண்டும்,***
***நவ மணி அணியின் சார,***
***தேன் உக மலர்ந்த சந்தச்***
***சேயிதழ்க் காந்தட் செம் பூ,***
***'வேனிலை வென்றது அம்மா,***
***கார்!' என வியந்து நோக்கி,***
***மா நிலக் கிழத்தி கைகள்***
***மறித்தன போன்ற மன்னோ.***

***நால் நிறக் சுரும்பும்*** *- பல நிறங்களை உடைய சுரும்புகளும்;* ***வண்டும்*** *- வண்டுகளும்;* ***நவமணி அணியின் சார*** *- நவமணிகள் இழைக்கப்பெற்றவளையல், மோதிரம் முதலிய அணிகளைப் பேல மொய்க்க;* ***தேன்உகமலர்ந்த*** *- தேன் ஒழுகும்படி மலர்ந்த;* ***சந்தச் சேயிதழ்*** *- அழகிய சிவந்தஇதழ்களையுடைய;* ***காந்தள் செம்பூ*** *- செங்காந்தள் மலர்கள்;* ***மா நிலக்கிழத்தி*** *- பெரிய நிலமாகிய பெண்;* ***வெனிலை வென்றது அம்மா கார் என*** *- 'வேனிற்காலத்தி வென்று விட்டது கார்காலம் என்று;* ***வியந்து நோக்கி*** *-(கார் கால அழகை) வியந்து பார்த்து;* ***மறித்தன கைகள்*** *- அசைத்தனவாகியகைகளை;* ***போன்ற*** *- ஒத்தன.*

*வண்டும், கரும்பும் வெவ்வேறு இனம் ஆதலால் இரண்டாகக் கூறினார். 'சுரும்புகாள்! வண்டுகாள்! மகிழ்தேனினங்காள்' 'மது உண்டு தேக்கிடும் ஒண்மிஞிறீட்டங்காள்' (சீவக 892) என வண்டின் நால்வகை இனங்கள் சிந்தாமணியுள் சுட்டப்பட்டுள்ளன. காந்தளில் தேன் உண்ண மொய்க்கும் வண்டுகளின் தோற்றம் கையில் அணிந்துள்ள நவமணிகள் இழைக்கப்பெற்ற வளையல், மோதிரம் ஆகிய அணிகலன்களை ஒத்து விளங்கின. 'வளைகள் காந்தளின் பெய்தன அனைய கைம்மயிலே' (2074) எனக் கம்பரே உவமை கூறியிருத்தல் காண்க. காந்தள் மலரில் தும்பி மணிபோல் தோன்றுவதை 'அலங்கு குலைக் காந்தள், நறுந்தாது ஊதும் குறுஞ்சிறைத் தும்பி, பாம்புமிழ் மணியின் தோன்றும்' (குறுந். 239) என்னும் அடிகள் உணர்த்தும. செங்காந்தள் கைக்கு உவமையாவதைக் 'காந்தள் நறுங்குலை அன்ன நலம் பெறு கையினள்' (ஐங்குறு-293), அலர்காந்தள் நுண்ணேர்தண் ஏருருவின் துடுப்பெனப் புரையுநின் திரண்ட நேர் அரி முன்கை (கலி-59) என்னும் இடங்களில் காண்க. வண்டினிம் மொய்த்தலால் காந்தள் மலர் அசையும் தோற்றம், 'வேனிலை வென்றதம்மம கார்' என நிலமகள் வியந்து கையசைத்தது போல் இருந்தது என்பது தற்குறிப்பேற்ற அணியாகும். கையசைத்தல் வியப்பிற்கு அறிகுறி. மழையானது, முதுவேனிற் காலத்தில் உள்ள வெப்பம், வியர்வு, அசதி முதலியவற்றை ஒழித்தமையால் வேனிலைக் கார் வென்றது என்றார். பொதுவாக வேனிற்காலம் பருவங்களுள் சிறந்தது எனப் போற்றப்படுவதால் அதனை வென்ற செயல் 'அம்மா' என்று வியக்கும்படி ஆயிற்று. 'மறித்தன' என்பதற்குத் தடுத்தல் எனக் கொண்டு, வேனிற்காலத்தை இனி வேண்டா*

*எனக் கைகளால் தடுத்தது போலிருந்தன என்றும் பொருள் கொள்வர். மன் ஓ ஈற்றசைகள், அம்மா - வியப்பிடைச் சொல்* *27*

***4175.* வாள் எயிற்று அரவம் போல**
**வான் தலை தோன்ற வார்ந்த**
**தாளுடைக் கோடல் தம்மைத்**
**தழீஇயின, காதல் தங்க**
**மீளல; அவையும் அன்ன**
**விழைவன, உணர்வு வீந்த**
**கோள் அரவு என்னப் பின்னி,**
**அவற்றொடும் குழைந்து சாய்ந்த.**

***வாள் எயிற்று அரவம்*** *- வாள் போன்று கூரிய பற்களை உடைய பாம்புகள்;* ***வான் தலை போல*** *- (தம்முடைய) உயர்ந்த தலையைப் போல;* ***தோன்ற வார்ந்த*** *- தோன்றும்படி நீண்ட;* ***தாளுடைக் கோடல் தம்மை*** *- தண்டினை உடைய வெண்காந்தள் செடிகளை;* ***காதல் தங்கத் தழீஇயின*** *- (தம்மினப் பாம்பென எண்ணிக்) காதல்பொருந்தத் தழுவினவாய்;* ***மீளல*** *- விட்டு நீங்காமல் இருந்தன;* ***அவையும்*** *- அவ்வெண்காந்தள் செடிகளும்;* ***அன்ன விழைவன*** *- அத்தகைய தழுவலில் விருப்பமுடையனவாய்;* ***உணர்வு வீந்த*** *- காமத்தால் உணர்விழந்த;* ***கோள் அரவு என்ன*** *- கொடிய (பெண்) பாம்புகள் போல;* ***அவற்றொடும் பின்னி*** *- அப்பாம்புகளுடன் பின்னிக் கொண்டு;* ***குழைந்து சாய்ந்த*** *- சாய்ந்து கிடந்தன.*

*பாம்புகள் உயர்த்தும் படம்போல் மலர்ந்த வெண் காந்தள் செடிகளைப் பாம்பெண எண்ணி நாகங்கள் தழுவ, அந்தச் செடிகளும் நாகங்கள் ஒப்ப, அவற்றைத் தழுவின என்பதால் வெண்காந்தள் செடிகட்கும் பாம்புகட்கும் (தோற்றத்தில்) வேறுபாடின்மை புலனாம். 'கடிகனைக் கவினிய காந்தளங் குலையினை, அருமணியவிருத்தி அரவு நீர் உணல் செத்து (கலி-45), "அணர்த்தெழு பாம்பின் தலைபோல் புணர்கோடல் பூங்குலை யீன்ற புறவு" (கார்-நாற்-11), "அரவு பைத் தாவித் தன்ன அங்காந்தள் அவிழ்ந்தலர்ந்தது" (சீவக-1651) 'கோடல் அரவீனும்' (சம்பந்-தேவாரம்-3-79-11) "பாம்பாய். . . தண் கோடல் வீந்து" (திணைமாலை-119), "பாம்புபை அவிழ்ந்தது போலக் கூம்பிக் கொண்டலின் தொலைந்த ஒண்செங்காந்தள்" (குறுந்-185) என்பன ஈண்டு ஒப்புநோக்கத்தக்கன.*

*நாகங்கள் ஈருடலும் ஒருடலாகத் தோன்றுமாறு பின்னிப் புணர்தல் அவற்றின் இயல்பாகும். "தோளும் தாளும் பிணைந்துரு வொன்றெய்தி, நாளும் நாகர் நுகர்ச்சி நலத்தரோ" (சீவக 1347), "மாசுண மகிழ்ச்சி மன்ற" (சீவக 189); 'நலத்தகு நாகத்துறைவார் போல இன்ப மகிழ்ச்சியொடு' (பெருங்-4-4-100-101) என்னும் அடிகள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன. இச்செய்யுள் மயக்க அணி. பாம்பின் உணர்வு செடிகட்கும் இருந்ததாகக் கூறியது கற்பனை எனலாம். உற்று உணர்தல் ஓரறிவுயிரான செடிகட்கும் உண்டாதலின் அவை இன்ப உணர்ச்சி உற்றனவாகக் கம்பர் கூறினார் எனவும் கொள்ளலாம்.* *28*

இந்திரகோபப் பூச்சிகள்

***4176. எள் இட இடமும் இன்றி***
***எழுந்தன இலங்கு கோபம்,***
***தள்ளுற, தலைவர்தம்மைப்***
***பிரிந்தவர் தழீஇய தூமக்***
***கள்ளுடை ஓதியார் தம்***
***கலவியில், பலகால் கான்ற***
***வெள்ளடைத் தம்பல் குப்பை***
***சிதர்ந்தென, விரிந்த மாதோ.***

***எள் இட இடமும் இன்றி*** - *ஓர் எள்ளைப் போடுதற்கும் இடம் இல்லாதபடி;* ***எழுந்தன இலங்கு கோபம்*** - *(மிக்கு) எழுந்தனவவகிய இந்திரகோபம் என்னும் பூச்சிகள்;* ***தள்ளுற*** - *(பிரிவாற்றமையால்) தடுமாறும்படி;* ***தம்மைப் பிரிந்தவர் தலைவர்*** - *தம்மைப் பிரிந்தவர்களாகிய தலைவர்கள்;* ***தழீ இய*** - *(கார் காலத்தில் மீண்டு வந்து) தழுவ;* ***தூமக் கள்ளுடை ஓதியார்தம்*** - *வாசனைப்புகையூட்டப் பெற்றதும் (சூடிய மலர்களின்) தேனையுடையதுமான கூந்தலையுடைய மகளிரொடு கொண்ட;* ***கலவியில்*** - *புணர்ச்சியின் முன்னர்;* ***பல்கால் கான்ற*** - *பல முறை உமிழ்ந்த;* ***வெள்ளடைத் தம்பல் குப்பை*** - *வெற்றிலைத் தம்பலங்களின் தொகுதிகள்;* ***சிதர்ந்தென விரிந்த*** - *சிந்திக் கிடந்தாற் போலப் பரந்து கிடந்தன.*

*எள் இட இடமும் என்றதால் தம்பலப் பூச்சிகளின் மிகுதி கூறப்பட்டது. கோபம் - இந்திர கோபம். இது செந்நிறமாதலின் தம்பலத்துக்கு உவமித்தார். தம்பல் - தம்பலம் என்பதன் கடைக்குறை. தூமம் அகில் முதலியவற்றின் புகை. இது கூந்தலுக்கு ஊட்டப் பெறுவது. "பல்லிருங் கூந்தல் சின்மலர் பெய்ம்மார் தண்ணறுந் தகரமுளரி நெருப்பமைத்து, இருங்காழ் அகிலொடு வெள்ளயிர் புகைப்ப" (நெடுநல்-54-55) என்பது காண்க. பிரிவின்கண் அணி செய்யப்பெறாதிருந்த கூந்தல் தலைவர் வருகையால் பூவும் புகையும் பெற்றுப் பொலி வெய்தினமை தோன்றத் "தூமக் கள்ளுடை ஓதியார்" என்றார் அன்புமிகுதியால் தழுவுந்தொறும் தம்பலம் மென்று உமிழ்ந்தமை தோன்றப் பல்கால் கான்ற என்றார். 'எள்ளிட இடமும் இன்றி' என்ற இடத்து இழிவு சிறப்பும்மை பிரித்துக் கூட்டப்பட்டது. மாது ஓ- ஈற்றசை. உவமை அணி அமைந்தபாடல்.* *29*

*மலைஅருவி*

***4177. தீம் கனி நாவல் ஓங்கும்***
***சேண் உயர் குன்றின், செம் பொன்***
***வாங்கின கொண்டு, பாரில்***
***மண்டும் மால் யாறு மான,***
***வேங்கையின் மலரும், கொன்றை***
***விரிந்தன வீயும், ஈர்த்து,***
***தாங்கின கலுழி, சென்று***
***தலைமயக்குறுவ தம்மில்.***

***தீம்கனி நாவல் ஓங்கும்*** - இனிய பழங்களையுடைய நாவல் மரம் வளர்ந்து ஓங்கியிருக்கும்; ***சேண் உயர் குன்றின்*** - வானளாவ உயர்ந்திருந்த மேருமலையினின்று; ***வாங்கின செம்பொன் கொண்டு*** - இழுத்துக் கொண்டு வந்த சிவந்த பொன்னைச் சுமந்து கொண்டு; ***பாரில் மண்டும்*** - பூமியின்கண் பெருகிச் செல்கின்ற; ***மால்யாறு மான*** - பெரிய சம்பூ என்னும் ஆற்றைப் போல; ***வேங்கையின் மலரும்*** - (அம்மலையிலிருந்து) வேங்கை மரத்தின் மலர்களையும்; ***கொன்றை விரிந்தென வீயும்*** - கொன்றை மரங்களில் மலர்ந்தவனாகிய மலர்களையும்; ***ஈர்த்துத் தாங்கின*** - இழுத்துக் கொண்டு சுமந்து வந்தனவாகிய; ***கலுழி*** - அருவி நீர்ப் பெருக்குகள்; ***சென்று*** - பரவி; ***தம்மில் தலை மயக்குறுவ*** - தமக்குள் ஒன்றோடொன்று கலப்பனவாயின.

*மலையருவிகள் பொன்னிற வேங்கை மலரையும், கொன்றை மலரையும் அடித்துக்கொண்டு வருதல் மேருமலையிலுள்ள பொன்னையும், நாவற் பழச் சாற்றால் விளைந்த பொன்னையும் அடித்துக் கொண்டு வரும் சம்பூ எனும் ஆறு போன்று உள்ளது என்பதாம். "மேருமலையின் தெற்கிலுள்ள கந்தமாதனம் என்னும் மலையிலுள்ள நாவற் பழங்களின் சாறு சம்பூ நதியாகப் பெருகுகின்றது. பழச்சாற்றோடு கலந்த மண் காற்றில் உலர்ந்து சாம்பூநதம் என்ற சித்தர்களின் அணியும் செம்பொன் ஆகிறது. நாவல் மரத்தை ஒட்டியே சம்புத் தீவு (நாவலந்தீவு) என்னும் பெயர் உண்டாயிற்று என்று புராணம் கூறும். "பட்டமார்தரு மாகரியளவெனப் பருத்துக், கொட்டை நுண்ணிய நாவலின் கொழுங்கனிச் சாறு, பெட்ட சம்பு மாநதியென வலங்கொடு பெருகி, உட்டெளிந்து பொன் மேருவைச் சுலாயினிதோடும்" "அதிருமப்புனல் அருந்தினர் அருங்கரை யசும்பு, தகையும் வெங்கதிர் காற்றுற உலர்ந்து நற்சாம்பு நதம் எனும் பொனாம் ஆங்கதின் அணி புனை நலத்தோர், இதமில்வெம்பிணி நரை திரையற்று இனிதிருப்பார்" என்ற பாகவதமும் (செவ்வை. பாகவதம் 1219-20) காணத்தக்கது. உவமை அணி. நாவற் பழச்சாற்றின் விளைந்த பொன்னொடு, மேருமலையிலிருந்து பெருகுதலால் அம்மலைப் பொன்னையும் ஈர்த்து வரும் சம்பு நதியைக் கொன்றையினையும் வேங்கை மலரையும் அடித்துவரும் அருவிக்கு உவமை கூறினார். கலுழி - கலங்கல் நீர்; கலங்கிய நீரையுடைய அருவி நீர்ப் பெருக்கு.   30*

*காந்தளில் கொன்றையும் இந்திர கோபமும்*

***4178. நல் நெடுங் காந்தள் போதில்,***
***நறை விரி கடுக்கை மென் பூ,***
***துன்னிய கோபத்தோடும் தோன்றிய***
***தோற்றம் - தும்பி***
***இன் இசை முரல்வ நோக்கி, இரு***
***நில மகள் கை ஏந்தி,***
***பொன்னொடும்காசை நீட்டிக்***
***கொடுப்பதே போன்றது அன்றே!***

***நல்நெடுங் காந்தள் போதில்*** - அழகிய நீண்ட காந்தள் மலரில்; ***நறைவிரி கடுக்கை மென்பூ*** - வாசனை வீசுகின்ற கொன்றையின் மெல்லிய மலர்கள்; ***துன்னிய கோபத்தோடும்*** - (அவற்றிடம்) வந்து பொருந்திய இந்திர கோபத்துடன்; ***தோன்றிய தோற்றம்*** - விளங்குகின்ற காட்சி; ***தும்பி இன் இசை முரல்வ நோக்கி*** - வண்டுகள் இனிய இசை பாடுவதைப் பார்த்து; ***இரு நில மகள்*** - பெரிய பூமியாகிய பெண்; ***கை ஏந்தி*** - தன் கைகளை உயர எடுத்து; ***பொன்னொடும் காசை***

***நீட்டி*** - *பொன்னொடு பவளத்தையும் நீட்டி;* ***கொடுப்பதே போன்றது*** - *கொடுப்பதை ஒத்தது.*

*காந்தளுக்குக் கையும், கொன்றை மலர்க்குப் பொன்னும், இந்திர கோபத்திற்குப் பவளமும் நிறத்தால் உவமையாகும். காந்தளுக்குக் கை, வடிவால் ஒப்பாகும். காந்தள் மலரால் ஏந்துதற்குரிய மென்மையுடைமை தோன்ற 'கடுக்கை மென்பூ' எனப்பட்டது. கொன்றை மரம் உயர்ந்திருத்தலின் அதன் மலர் காந்தள் மலரில் வீழ்தல் இயல்பாயிற்று. காந்தள் மலரில் பொன்னிறக் கொன்றையும் சிவந்த கோபமும் இருக்கும் தோற்றம். வண்டின் இசைகேட்டு மகிழ்ந்த நிலமகள் பொன்னையும், பவளத்தையும் கை நீட்டிக் கொடுத்ததை ஒக்கும் என்றது தற்குறிப்பேற்ற அணி. கொன்றைப்பூவின் நிறம் பொன் போன்றது என்பதை 'முறியிணர்க் கொன்றை நன்பொன் கால' (முல்லைப்பாட்டு-94) 'சுடும்பொன் அன்னகொன்றை சூடி' (ஐங்குறுநூறு-புற-2); 'கொன்றை ஒள்வீ தாஅய்ச் செல்வர் பொன்பேய் பேழை மூய் திறந்தன்ன' (குறுந்-233) என்ற அடிகள் உணர்த்தும். வண்டுகளின் ரீங்காரம் இசையாக அமைவதைக் 'குழல் வண்டு தமிழ்ப்பாட்டிசைக்கும் தாமரையே' (3736) 'யாழிசை இன வண்டார்ப்ப' (முல்லைப்பாட்டு-8), "குழல் இசை தும்பி கொளுத்திக் காட்ட, மழலை வண்டு இனம் நல்யாழ் செய்ய" (மணி-4-3-4), 'தென்னா தெனா என்று வண்டு முரல' (திருவாய்-3-9-1) என்ற அடிகளில் காணலாம். காசு - நவமணிகளின் பொதுப்பெயர். ஈண்டுப் பவளத்தைக் குறித்தது. 'பவழம் சிதறியவை போலக் கோபம் தவழும் தகைய புறவு' (கார்.நாற்-5), 'மணிமிடை பவளம்போல அணிமிகக் காயாம் செம்மல் தாஅய்ப் பலவுடன், ஈயல் மூதாய் ஈர்ப்புறம் வரிப்ப' (அகநா-304) எனப் பவளத்தையே கோபத்திற்கு உவமையாக்கியமை காண்க. அன்றே - ஈற்றசை. 31*

*நாடக அரங்கு*

***4179. கிளைத் துணை மழலை வண்டு***
***கின்னரம் நிகர்த்த; மின்னும்***
***துளிக் குரல் மேகம் வள்***
***வார்த் தூரியம் துவைப்ப போன்ற;***
***வளைக் கையர் போன்ற,***
***மஞ்ஞை; தோன்றிக அரங்கின்மாடே***
***விளக்குஇனம் ஒத்த; காண்போர் விழி***
***ஒத்த, விளையின் மென்பூ,***

***கிளைத் துணை மழலை வண்டு*** - *கைக்கிளை என்னும் இசைக்கு நிகராக ஒலிக்கும் வண்டுகள்;* ***கின்னரம் ஒத்த*** - *யாழை ஒத்தன;* ***மின்னும் துளிக்குரல் மேகம்*** - *மின்னுவனவும், மழைத் துளியையும், இடியோசையையும்*

*உடைய மேகங்கள்;* ***வள்வார்த் தூரியம் துவைப்ப போன்ற*** - *அடர்ந்த தோல் வாரினால் கட்டப்பட்ட மத்தளம் ஒலிப்பதைப் போன்றிருந்தன;* ***மஞ்ஞை*** - *மயில்கள்;* ***வளைக்கையர் போன்ற*** - *வளையலணிந்த கையினையுடைய மகளிரைப் போன்றன;* ***தோன்றிகள்*** - *செங்காந்தள்மலர்கள்;* ***அரங்கின் மாடே*** - *நாட்டியமாடும் இடத்தில்;* ***விளக்கு இனம் ஒத்த*** - *ஏற்றிவைக்கப்பட்ட விளக்குகளின் கூட்டத்தை ஒத்தன;*

***விளையின் மென்பூ -*** *கருவிளையின் மென்மையான மலர்கள்;* ***காண்போர் விழி ஒத்த -*** *பார்ப்பவர்களுடைய கண்களைப் போன்றன.*

*கிளை - ஏழிசைகளில் ஒன்று (பிற - குரல், துத்தம், உழை, இளி, விளரி, தாரம் என்பன) கர்நாடக இசையில் உள்ள சட்சமம முதலிய ஏழிசைகளுள் மூன்றாவதான காந்தரமே இந்தக் கைக்கிளை என்பர். 'மந்தார மாலை மலர் வேய்ந்து மகிழ்ந்து தீந்தேன், கந்தாரம் செய்து களிவண்டு முரன்று பாட' (சீவக. சிந் - 1959) என்றது காண்க. மஞ்ஞை மகளிர்க்குச் சாயலால் உவமை. விளை என்பது கருவிளை என்பதன் முதற்குறையாகும். கருவிளை கண்களுக்கு உவமையாதலைக் 'கரு விளை கண்மலர்போல் பூத்தன' (கார்நாற் - 9); 'கண்ணெனக் கருவிளை மலர' (ஐங்குறு - 464) என்பனவற்றாலும் அறியலாம். நாடக அரங்கிற்கு இயைபுடையவற்றை உவமஞ் செய்தலால் இப்பாடல் இயைபு உவமை அணி பொருந்தியது. ஒவ்வொரு தொடரிலும் உவம உருபு வந்தமையால் பல்வயிற் போலி உவமையுமாம். மஞ்ஞை போன்ற வளைக்கையர் என்றும் விளையைப் போலும் விழி என்றும் கூறாமல் மாற்றிக் கூறியது எதிர்நிலை அணியாகும். 'ஆடமைக்குயின்ற அவிர் துளை மருங்கின், கோடை யவ்வளி குழலிசையாகப், பாடின்னருவிப் பனி நீரின்னிசைத், தோடமை முழவின் துதை குரலாகக், கணக்கலை யிகுக்கும் கடுங்குரல் தூம்போடு, மலைப்பூஞ் சாரல் வண்டு யாழாக, இன்பல் இமிழ் இசை கேட்டுக் கலிசிறந்து, மந்தி நல்லவை மருள்வன நோக்கக், கழைவளர் அடுக்கத்து இயலி ஆடும் மயில், நனவுப்புகு விறலியின் தோன்றும்" (அகநா. 82); 'குழலிசை தும்பி கொளுத்திக்காட்ட, மழலை வண்டினம் நல்யாழ் செய்ய, வெயில் நுழைபு அறியா குயினுழை பொதும்பர், மயிலாடு அரங்கில் மந்தி காண்க காண்' (மணி - 4 - 3 - 6); 'தண்டலை மயில்களாடத் தாமரை விளக்கம் தாங்கக், கொண்டல்கள் முழவினேங்கக் குவளை கண் விழித்து நோக்கத், தெண்டிரை எழினி காட்டத் தேம்பிழி மகர யாழின், வண்டுகள் இனிது பாட மருதம் வீற்றிருக்கும் மாதோ' (35) என்னும் பாடல்கள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன.*
*32*

***4180. பேடையும் ஞிமிறும் பாயப்***
***பெயர்வுழிப் பிறக்கும் ஓசை***
***ஊடுறத் தாக்கும்தோறும் ஒல்***
***ஒலி பிறப்ப, நல்லார்***
***ஆடு இயல் பாணிக்கு ஒக்கும்;***
***ஆரிய அமிழ்தப் பாடல்***
***கோடியர் தாளம் கொட்டல்,***
***மலர்ந்த கூதாளம் ஒத்த.***

***ஞிமிறும் பேடையும் -*** *ஆண் வண்டுகளும் பெண் வண்டுகளும்;* ***பாயப் பெயர்வுழி -*** *ஒன்றன் மீது ஒன்று மோதுவது போல வேகத்தோடு*

*வரும்பொழுது;* ***பிறக்கும் ஓசை -*** *உண்டாகின்ற ஓசையும்;* ***ஊடுறத் தாக்கும் தோறும் -*** *(அவை) ஒன்றையொன்று மோதும் பொழுதெல்லாம்;* ***பிறப்ப ஒல் ஒலி -*** *பிறப்பனவாகிய ஒல் எனும் ஓசையும்;* ***நல்லார் ஆடு இயல் -*** *அம்மலையில் நாடகமகளிர் ஆடும் கூத்தின் இயல்பிற்கேற்ற;* ***பாணிக்கு ஒக்கும் -*** *கைத்தாளத்தை ஒத்திருக்கும்;* ***மலர்ந்த கூதாளம் -*** *மலர்ந்த கூதள மலர்கள்;* ***ஆரிய அமிழ்தப் பாடல் -***

*(அவர்கள் பாடிய) சிறந்த அமுதம் போன்ற பாடல்களுக்கு ஏற்ப;* ***கோடியர் தாளம் கொட்டல் ஒத்த -*** *நட்டுவர் தாளம் கொட்டுவதை ஒத்தன.*

*மிஞிறு - ஞிமிறு - இலக்கணப்போலி; முன்னே பேடை என்றதால் 'மிஞிறு' ஆண் வண்டாயிற்று. முன் செய்யுளில் மயில்கள் ஆடும் நாடக அரங்கைக் காட்டியவர், இப்பாடலில் அவ்வரங்கில் நிகழும் கூத்திற்கேற்ப வண்டுகள் எழுப்பும் ஓசை தாளமாகவும், மலர்ந்த கூதளமலர்கள் தாளம் கொட்டுவதை ஒத்தும் விளங்குவதைக் காட்டுகிறார். இப்பாடல் தற்குறிப்பேற்ற அணி. கூதாளச் செடிகளின் மலர் வடிவம் தாளம் போலிருக்கும் கூதாளி - கூதளம், தாளி, நறுந்தாளி எனவும்படும்.*
*33*

காட்டாறும் கொன்றையும்

***4181. வழை துறு கான யாறு,***
***மா நிலக் கிழத்தி, மக்கட்கு***
***உழை துறு மலை மார்க் கொங்கை***
***சுரந்த பால் ஒழுக்கை ஒத்த;***
***விழைவுறு வேட்கையொடும் வேண்டினர்க்கு***
***உதவ வேண்டி,***
***குழைதொறும் கனகம் தூங்கும்***
***கற்பகம் நிகர்த்த, கொன்றை.***

***வழை துறு -*** *சுரபுன்னை மரங்கள் அடர்ந்த;* ***'கானயாறு -*** *காடுகளில் பெருகிய நதிகள்;* ***மாநிலக் கிழத்தி -*** *நிலமகள்;* ***மக்கட்கு -*** *தன் மக்கள் பொருட்டு;* ***உழை துறு மலை மாக் கொங்கை -*** *புடை பருத்த மலைகளாகிய தன் பெரிய மார்பகத்திலிருந்து;* ***சுரந்த பால் ஒழுக்கை ஒத்த -*** *(அன்பினால்) சுரந்து பெருகவிட்ட பாலின் தாரைகளைப் போன்று இருந்தன;* ***கொன்றை -*** *(பொன் போன்ற மலர்கள் பூக்கும்) கொன்றை மரங்கள்;* ***விழைவுறு வேட்கையோடும் -*** *(பொருட்களை) விரும்பும் ஆசையால்;* ***வேண்டினர்க்கு உதவ வேண்டி -*** *வேண்டியவர்களுக்குக் கொடுக்க வேண்டி;* ***குழைதொறும் கனகம் தூங்கும் -*** *தளிர்கள்தோறும் பொன்னைத் தொங்கவிட்டுக் கொண்டிருக்கும்;* ***கற்பகம் நிகர்த்த -*** *கற்பக மரங்களை ஒத்தன.*

*நிலமகளுக்கு மலைகளைக் கொங்கைகளாகக் கூறும் இலக்கிய மரபு உண்டு. 'பணைத்தோள் மாநில மடந்தை அணிமுலைத் துயல்வரூஉம் ஆரம் போல' (சிறுபாண். 1 - 2);*

*'சோதி மதி வந்து தவழ் சோலை மலையொடு இரண்டாய், மேதினியாள் கொங்கை நிகர் வேங்கடமே' (திருவேங்கடமாலை - 2) 'கொங்கையே பரங்குன்றமும் கொடுங்குன்றும்' (திருவிளை - நகர -2); எனப் பலரும் கூறுதல் காண்க. மக்கட்கு நிலமகளின் கொங்கை சுரந்த பாலொழுக்கை ஆறு ஒக்கும் என்றார். 'சரயு என்பது தாய்மலை அன்னது' (23); "சரையெனும் பெயருடைத் தடங்கொள் வெம்முலைக் குரைபுனல் கன்னிகொண்டு இழிந்த தென்பவே" (சீவக - 39) என்றமை காண்க. இப்பாடல் தற்குறிப்பேற்ற அணி அமைந்தது. மாநிலக் கிழத்தி, மலைமாக் கொங்கை என்பன உருவகங்கள்.* *34*

*மான்கள்*

***4182.* பூ இயல் புறவம் எங்கும்**
**பொறி வரி வண்டு போர்ப்ப,**
**தீவிய களிய ஆகிச்**
**செருக்கின; காமச் செவ்வி,**
**ஓவிய மரன்கள்தோறும் உரைத்து,**
**அற உரிஞ்சி, ஒண் கேழ்**
**நாவிய செவ்வி நாற,**
**கலையொடும் புலந்த நவ்வி.**

***பூ இயல் புறவம் -*** *மலர்கள் பொருந்திய காடுகள்;* ***எங்கும் -*** *எவ்விடத்திலும்;* ***பொறிவரி வண்டு போர்ப்ப -*** *புள்ளிகள் பொருந்திய இசை பாடும் வண்டுகள் மொய்த்து நிறைய;* ***தீவிய களிய ஆகி -*** *(காண்பவர்க்கு) இனிய மகிழ்ச்சியைத் தருவனவாகி;* ***செருக்கின -*** *தழைத்து விளங்கின;* ***காமச் செவ்வி -*** *(ஆண்மான்கள்) தாம் கொண்ட காதல் முதிர்வால்;* ***ஓவிய மரன்கள் தோறும் -*** *சித்திரத்தில் எழுதியது போன்ற மரங்களிலெல்லாம்;* ***உரைத்து அற உரிஞ்சி -*** *உராய்ந்து நன்றாக உடல் தேய்த்து வந்து;* ***ஒண்கேழ் நாவிய செவ்வி நாற -*** *(தம்முடம்பு முழுவதும்) ஒளிமிக்க நிறமும் கத்தூரி நறு மணமும் கமழ;* ***கலையொடும் நவ்வி -*** *(வந்த) அந்த ஆண்மான்களோடு பெண்மான்கள்;* ***புலந்த -*** *(அவற்றை வேற்றினமாகிய கத்தூரி மானோடு கூடிக்கலந்து வந்தவனவாகக் கொண்டு) பிணங்கின.*

*நிலமெங்கும் மலர்கள் நிறைந்திருத்தலால் 'பூ இயல் புறவம்' என்றார். வனத்தை மொய்க்குமாறு அடர்ந்து மொய்க்கின்றமையால் 'போர்த்து' என்றார். வரி - வரிப்பாட்டு; தீவிய - தீம் என்றதன் அடியாகப் பிறந்த பெயரெச்சம். நாவி - கத்தூரி எனும் மணப்பொருள். கத்தூரி வகை மானின் நாபியில் உள்ள கொழுப்பாகும். அதனால் அம்மான் 'மிருகாநாபி' எனவும் வழங்கப்படும். மரங்களில் உராய்ந்து மணம் பெற்று வந்த ஆண்மானைக் கத்தூரிமான்களோடு காதல் கொண்டு சேர்ந்து அவற்றின் மணம் பெற்று வந்தனவாகப் பெண்மான்கள் மயங்கக் கருதி ஊடியதாகக் கூறியதால் மயக்க அணி.* *35*

*குவளை குவிய, முல்லை அரும்புதல்*

*கலித்துறை*

***4183.* தேரில் நல் நெடுந் திசை**
**செலச் செருக்கு அழிந்து ஒடுங்கும்**
**கூர் அயில் தரும் கண்**
**எனக் குவிந்தன குவளை;**
**மாரன் அன்னவர் வரவு**
**கண்டு உவக்கின்ற மகளிர்**
**மூரல் மென் குறு முறுவல்**
**ஒத்து அரும்பின, முல்லை.**

***தேரில் நல்நெடுந்திசை செல*** - *(தன்னைப் பிரிந்த தலைவன்) தேரில் ஏறிப் (பொருளீட்ட) நல்லதாகிய நெடுந்தூரம் செல்ல;* ***செருக்கு அழிந்து ஒடுங்கும்*** - *(பிரிவுத் துன்பத்தால்) மகிழ்ச்சி நீங்கி ஒடுங்கும் (தலைவியின்);* ***கூர் அயில் தரும் கண் என*** - *கூர்மையான வேல் போன்ற கண்களைப் போல;* ***குவளை குவிந்தன*** - *கருங்குவளை மலர்கள் இதழ் குவிந்தன.* ***மாரன் அன்னவர் வரவு கண்டு*** - *மன்மதனை ஒத்த தம் தலைவர் மீண்டு வருதலைப் பார்த்து;* ***உவக்கின்ற மகளிர்*** - *மகிழ்கின்ற மகளிரின்;* ***மென் குறு முறுவல் மூரல் ஒத்து*** - *மெல்லிய புன்சிரிப்பில் தோன்றும் பற்களைப்போல;* ***முல்லை அரும்பின*** - *முல்லைக் கொடிகள் அரும்பின.*

*பிரிந்த மகளிர் விழிகள் போலக் கருங்குவளை குவிய, தலைவர் வரவு கண்டு மகிழ்ந்த மகளிர் புன்முறுவலொத்து முல்லைகள் அரும்பின. உவமை அணி. நிறமும் வடிவும் பற்றிக் கண்களுக்குக் கருங்குவளையும், பற்களுக்கு முல்லை அரும்பும் உவமை ஆயின. துன்பத்தால் கண்கள் மலர்ச்சியின்றி இடுங்குதல் இயல்பு. ஆடவர்க்குத் துன்பம் விளைத்தலால் 'கூர் அயில் தரும் கண்' என்றார். தரும் - உவம உருபு. கார்காலத்தில் குவளை குவிதலும் முல்லை அரும்பலும் இயல்பாகும். 'கோடல்கள் பெருமை கூர, குவலயம் சிறுமை கூர' (4173); என முன்னர் வந்தமை காண்க. பற்கள் சிறிது தோன்ற முறுவலிக்கும். மகளிர் இயல்பு தோன்ற 'மென் குறு முறுவல்' என்றார். 'கண்கள் போன்றன குவளைகள், பற்கள் போன்றன முல்லை அரும்புகள்' என்று வழக்கிலுள்ள உவமைகளை மாற்றிக் கூறியதால் எதிர்நிலை அணியாகும். 36*

*அருவி பெருகலும் தாமரை மலர்தலும்*

***4184. களிக்கும் மஞ்ஞையை, கண்ணுளர்இனம்***
***எனக் கண்ணுற்று,***
***அளிக்கும் மன்னரின், பொன்***
***மழை வழங்கின அருவி;***
***வெளிக்கண் வந்த கார் விருந்து***
***என, விருந்து கண்டு உள்ளம்***
***களிக்கும் மங்கையர் முகம்***
***என, பொலிந்தன, கமலம்.***

***களிக்கும் மஞ்ஞையை*** - *(கார்காலத்தில்) களித்து ஆடும் மயிலி னங்களை;* ***கண்ணுளர் இனம் என*** - *கூத்தர்களின் இனமான விறலியர் என்று கருதி;* ***கண்ணுற்று*** - *(அவை ஆடும் கூத்தைப்) பார்த்து;* ***அளிக்கும் மன்னரின்*** - *(பொன்னைப் பரிசாக) வழங்கும் அரசர்களைப் போல;* ***அருவி*** - *மலையருவிகள்;* ***பொன் மழை வழங்கின*** - *பொன்னை மிகுதியாகச் சொரிந்தன.* ***வெளிக்கண் வந்த கார்*** - *விண்வெளியில் வந்த மேகங்களை;* ***விருந்து என*** - *விருந்தாளிகள் எனக் கருதி;* ***விருந்து கண்டு*** - *விருந்தினரைக் கண்டு;* ***களிக்கும் மங்கையர் முகம் என*** - *மனம் மகிழும் மகளிரின் முகம் போல;* ***கமலம் பொலிந்தன*** - *தாமரை மலர்கள் நீர்நிலைகளில் மலர்ச்சி பெற்றன.*

*கண்ணுளர் - கூத்தர், கண்ணுள் - கூத்து, இனி, கண்ணுளர் - அறுபதடி மூங்கில் கம்பத்தில் ஏறி ஆடும் கூத்தாடிகளுமாம் - கண் - கணு; மூங்கிற்கு ஆகுபெயர். அருவி மலையிலுள்ள பொன்னை அடித்து வரும் இயல்புடையது. 'அவர் மலைப்*

*பொன்னாடிவந்த புதுப்புனல்' (சிலப்.24 - 4), 'தேனளாவியும் செம்பொன் விராவியும். . . . வானவில்லை நிகர்த்தது அவ்வாரியே' (19), "முத்து ஈர்த்துப் பொன் திரட்டி" (4467), என்பன காண்க. காவிரி பொன்னைப் பெற்று வந்தமையால் பொன்னி என்ற பெயர் பெற்றதும் காண்க. இயல்பாகப் பொன்னை அரித்து வரும் அருவியை மயிலாகிய விறலியின் ஆடல் கண்டு பரிசாகப் பொன்னை வழங்கியதாகக் கூறியது தற்குறிப்பேற்றம். வெளியில் விருந்தினரைக் கண்ட போதே மகளிர் முகமலர்ந்து வரவேற்றல் முறையாகும். கண்ட மாத்திரத்து மகிழும் மகளிர் முகம் போலக் கார்காலமழை பெய்த அளவில், தாமரை மலர்ந்ததாக உவமை கூறினார். மகளிர் விருந்தோம்பும் சிறப்பப் பல இலக்கியங்கள் பேசுகின்றன. 'விருந்தினர் முகம் கண்டு, அன்ன விழா அணி விரும்புவாரும்' (46), 'பெருந் தடங்கண் பிறை நுதலார்க்கெல்லாம். . . . . விருந்துமன்றி விளைவன யாவையே' (67) 'விருந்து கண்ட போது என் உறுமோ?' என்று விம்மும்", (5083) 'தொல்லோர் சிறப்பின், விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை' (சிலப் - 16. 73) என்பன காண்க. விருந்தோம்பலின் முதலில் வேண்டப்படுவது இன்முகம் ஆதலால் 'களிக்கும் மங்கையர் முகம்' என உரைத்தார். 'முகம் திரிந்து நோக்கக் குழையும் விருந்து' (குறள் 90) என்றார் வள்ளுவப் பெருந்தகை. 37*

தேனீ

***4185. சரத நாள்மலர் யாவையும்***
***குடைந்தன, தடவிச்***
***சுரத நூல் தெரி விடர்***
***என, தேன் கொண்டு தொகுப்ப,***
***பரத நூல் முறை நாடகம்***
***பயன் உறப் பகுப்பான்,***
***இரதம் ஈட்டுறும் கவிஞரைப்***
***பொருவின - தேனீ.***

***சுரத நூல் தெரி விடர் என -*** *காம நூலை அறிந்த காமுகர் போல;* ***சரத நாள் மலர் யாவையும் -*** *தேனுடன் கூடிய அன்றலர்ந்த மலர்கள் யாவற்றையும்;* ***குடைந்தன தடவி -*** *மூக்கால் குடைந்து தடவி;* ***தேன் கொண்டு -*** *(அவற்றினின்று) தேனைக் கொண்டு சேகரித்து;* ***தொகுப்ப -*** *தொகுப்பவனாகிய;* ***தேனீ -*** *தேனீக்கள்;* ***பரத நூல் முறை -*** *பரத சாத்திரத்தில் கூறிய முறைப்படி;* ***நாடகம் -*** *நாடகத்தை;* ***பயன் உறப் பகுப்பான் -*** *(காண்பவர்கள்) பயன் பெறுமாறு பாகுபாடுகள் அமையச் செய்தல் பொருட்டு;* ***இரதம் ஈட்டுறும் -*** *ஒன்பான் சுவைகளையும் ஒன்றுகூட்டி இயற்றுகின்ற;* ***கவிஞரைப் பொருவின -*** *கவிஞர்களை ஒத்தன.*

*தேன்நிறைந்த புதுமலர்களைக் கோதி தேனைச் சேகரிக்கும் தேனீக்கள் பல மகளிரிடத்து இன்பம் துய்க்கும் காமுகரை ஒத்தன. மேலும் அத்தேனீக்கள் தாம் பெற்ற தேன்துளிகளைத் தேனடையாக அமைப்பது ஒன்பான் சுவைகளைக்கூட்டி நாடகம் இயற்றும் நாடகக் கவிஞன் செயலை ஒத்தது. இஃது உவமை அணி. விடர் - தீய ஒழுக்கமுடைய காமுகர். மாதரை மலராகவும் மைந்தரை வண்டாகவும் கூறுதல் உண்டு. "மாதவி ஈன்ற மணிமேகலை வல்லி, போது அவிழ் செவ்வி பொருந்துதல் விரும்பிய, உதயகுமரனாம் உலகாள் வண்டின்" (மணி - 17 - 25 - 27) "ஒரு தனி ஓங்கிய திருமணிக்காஞ்சி. . . . காமர் செவ்விக் கடிமலர் அவிழ்ந்தது; உதய குமரன் எனும் ஒரு வண்டு உணீஇய" (மணி - 17 - 56 - 60), 'தவழ் மதுக் கோதை மாதர் தாமரைப் பூவதாக,*

*உமிழ்சுடர் வேலினாலும் ஒண்சிறை மணி வண்டொத்தான்' (சீவக - 101)*
*"பெண்டிர்நலம் வெளவித் தண் சாரல் தாதுண்ணும் வண்டின்" (கலி. 10 - 24) என்பன ஒப்பு நோக்கத்தக்கன. பரதம் - பாவம், ராகம், தாளம் ஆகிய மூன்றும் கூடியது பரத நாட்டியம் என்பர். நாடகம் - கதை தழுவி வரும் கூத்து. கவிஞர் - நாடகக் காப்யிம் அமைப்பவர். நாடகம் சுவையுற அமைய ஒன்பான் சுவைகளும் அமையக் காப்பியம் இயற்றுவது கவிஞரின் பணியாகும். உவகை, பெருமிதம், அழுகை, வியப்பு, நகை, அச்சம், இளிவரல், வெகுளி, நடுநிலைமை என்பன ஒன்பான் சுவைகள். ரசம் என்னும் சொல் இரதம் எனத் திரிந்து வந்தது. 38*

*மான்களின் மகிழ்ச்சி*

***4186. "நோக்கினால் நமை நோக்கு அழி***
***கண்ட நுண் மருங்குல்***
***தாக்கு அணங்கு அருஞ் சீதைக்கு,***
***தாங்க அருந் துன்பம்***
***ஆக்கினான் நமது உருவின்" என்று,***
***அரும் பெறல் உவகை***
***வாக்கினால் உரையாம்' என***
***களித்தன - மான்கள்.***

***நோக்கினால் -** "(தனது) பார்வை அழகால்; **நமை -** நம்மை; **நோக்கு அழிகண்ட -** பார்வையின் அழகு கெடுமாறு செய்த; **நுண்மருங் குல் -** நுண்ணிய இடைய உடைய; **தாக்கு அணங்கு -** வருத்தும் தெய்வம் போன்றவளாகிய; **அருஞ்சீதைக்கு -** அரிய சீதைக்கு; **தாங்க அருந்***

***துன்பம் -** பொறுத்தற்கரிய துன்பத்தை; **நமது உருவின் ஆக்கினான் -** (மாரீசன் என்பான்) நம்முடைய மான் வடிவம் கொண்டு செய்தான்; **என்று -** என்று எண்ணியதால்; **அரும்பெறல் உவகை -** பெறுதற்கரிய மகிழ்ச்சியை; **வாக்கினால் உரையாம் -** வாய் திறந்து சொல்லினால் சொல்லக்கடவோம் அல்லோம்; **என -** என்று (பேசாமல் களித்தாற் போல); **மான்கள் களித்தன-** மான்கள் குரல் காட்டாமல் களித்தன.*

*கண்ணழகில் சீதைக்கு நிகராகாமல் தோற்றுப்போய்த் தங்களை அவள் வென்றமைக்குச் சினங்கொண்டு, எதையும் செய்யும் வல்லமை இல்லாதிருந்த மான்கள், மாரீசன் தங்கள் வடிவத்தைக் கொண்டு சீதைக்குப் பெருந்தீங்கு செய்ததால் மகிழ்ச்சி கொண்டு, அம்மகிழ்ச்சியை வாய்விட்டு உரைத்தால் இராமன் தம்மையும் மாரீசனைக் கொன்றதுபோல, அம்பெய்திக் கொன்றுவிடுவான் என்ற அச்சத்தால் பேசாமல், உள்ளுக்குள் களித்து நின்றன என்பது கருத்து. கார்காலத்தில் களிப்படைந்தும் ஆரவாரம் செய்யாமல் இருந்த மான்களின் நிலையை இவ்வாறு கூறியது தற்குறிப்பேற்ற அணியாகும். மதங்க முனிவர் போன்றவர்களின் தவத்திற்கு இடையூறாகுமோ என அஞ்சி மான்கள் ஆரவாரம் செய்யாமல் ஊமை போல் இருத்தல் பற்றியே அம்மலைத்தொடர் 'உருசிய மூகம்' என்னும் பெயர் கொண்டது என்பது இங்குக் கருதத்தக்கது. உருசியம் - மான்; மூகம் - ஊமை. சீதையின் கண்களுக்குத் தோற்ற மான்கள் ஒன்றும் செய்ய முடியாமல் வருந்திப் பின்னர் மாரீசனது*

*மான்வடிவத்தால் தம்பழி தீர்த்துக் கொண்டவனாகக் கருதி மகிழ்ந்தன என்க. மாரீசன் மான் வடிவம் கொண்டது கம்பரின் இந்தக் கற்பனைக்கு காரணமாயிற்று.*

*மகளிர் நோக்கிற்கு மானின் மருண்ட பார்வை உவமையாகும். 'நின்னே போல மா மருண்டு நோக்க' (ஐங்குறு - 492), என்பது ஒப்பு நோக்கத்தக்கது. நோக்கு அழிகண்ட - பார்வையால் வெல்லுதலைக் கண்ட; தாக்கணங்கு - இதனை மோகினி என்றும கொல்லிப்பாவை என்றும் கூறுவர் ஒரு சாரார்.*

*மகிழ்ச்சி மிகுதியினால் வாய் திறந்து ஒன்றும் சொல்ல முடியாதிருத்தல் இயல்பு. "மேக்கு நீங்கிய வெள்ள உவகையால், ஏக்கமுற்று, 'ஒன்று இயம்புவது யாது?' என நோக்கி நோக்கி அரிதென நொந்துளேன்" (9977) எனச் சீதை கூறுவது காண்க.*
*39*

*அன்னம், கொக்கு முதலிய பறவை இனங்கள்*

***4187. நீடு நெஞ்சு உறு நேயத்தால்***
***நெடிது உறப் பிரிந்து***
***வாடுகின்றன, மருளுறு***
***காதலின் மயங்கி,***
***கூடு நல் நதித்***
***தடம்தொறும் குடைந்தன, படிவுற்று***
***ஆடுகின்ற - கொழுநரைப்***
***பொருவின் - அன்னம்.***

***நெடிது உறப் பிரிந்து -*** *(நதிகளை) நெடுநாட்களாகப் பிரிந்திருந்து;* ***நெஞ்சு உறு நீடு நேயத்தால் -*** *உள்ளத்தில் பொருந்திய மிக்க அன்பினால்;* ***வாடுகின்ற -*** *வாட்டம் அடைந்தனவாயிருந்து;* ***மருளுறு***

***காதலின் மயங்கி -*** *(கார்காலம் வந்த அளவில்) மயக்கத்தைத் தரும் காதலோடு மயங்கி;* ***கூடு நல் நதித்தடம் தொறும் -*** *(தாம்) வந்து சேரப்பெற்ற சிறந்த நதிகளின் இடம்தோறும்;* ***குடைந்தன -*** *துளைந்து;* ***படிவுற்று ஆடுகின்றன -*** *நீராடி விளையாடுகின்றனவான;* ***அன்னம் -*** *அன்னப் பறவைகள்;* ***கொழுநரைப் பொருவின -*** *(தலைவியரைச் சேர்ந்த) கணவரைப் போன்றன.*

*கோடை காலத்தில் நீர் வற்றியதால் நீர்நிலைகளைப் பிரிந்து சென்றிருந்தது, கார் காலத்தில் அவற்றில் நீர் நிறைந்தமை உணர்ந்து வந்து அவற்றில் படிந்து குடைந்து ஆடும் அன்னங்கள், பல நாட்கள் பிரிந்து சென்றிருந்தது, கார் காலம் வந்த அளவில் திரும்பி வந்து காதலால் தலைவியரைத் தழுவி மகிழும் தலைவரைப் போன்றன. உவமை அணி. நீடு பிரிந்திருந்து வாடுதலும், கார்காலம் வந்தவுடன் மகிழ்ந்தாடுதலும் அன்னங்களுக்கும் தலைவர்க்கும் ஒத்தலின் 'கொழுநரைப் பொருவின அன்னம்' என்றார். 40*

***4188. கார் எனும் பெயர்க்***
***கரியவன் மார்பினில் கதிர்முத்து -***

***ஆரம் என்னவும் பொலிந்தன -***
***அளப்ப அரும் அளக்கர்***
***நீர் முகந்த மா மேகத்தின்***
***அருகு உற நிரைத்து***
***கூரும் வெண்நிறத் திரை***
***எனப் பறப்பன குரண்டம்.***

***அளப்ப அரும் -*** *அளத்தற்கரிய;* ***அளக்கர் -*** *கடலிலிருந்து;* ***நீர் முகந்த மாமேகத்தின் -*** *நீரைக் கவர்ந்து செல்கின்ற கரிய மேகத்தின்;* ***அருகு உற நிரைத்து -*** *அருகில் பொருந்துமாறு வரிசைப்பட்டு;* ***கூரும் வெண் நிறத்திரை என -*** *மிகுதியான வெண்மை நிறத்தை உடைய அலைகள் போல;* ***பறப்பன குரண்டம் -*** *பறப்பனவாகிய கொக்குகள்;* ***கார் எனும் பெயர்க்கரியவன் -*** *நீலமேகன் என்னும் பெயரை உடைய கரியவனான திருமாலின்;* ***மார்பில் கதிர்முத்து ஆரம் -*** *மார்பில் அணிந்த ஒளி பொருந்திய முத்துக்களாலான ஆரம்;* ***என்னவும் -*** *போலவும்;* ***பொலிந்தன -*** *விளங்கின.*

*கார் - நீலமேகம். அதன் பெயர் கொண்டவன் நீலமேகன். காளமேகம் என்னும் பெயர் கொண்ட திருமால் எனவும் கொள்ளலாம். பாண்டிய நாட்டிலுள்ள திருமோகூர்த் தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாள் பெயர் காளமேகப் பெருமாள் என்பதாம். மாமேகம் - கரிய மேகம், கடல் நீரை முகந்தமையால் கரிதாகிய மேகம்; கருமேகத்தின் அருகில் வெண்ணிறத்திரை போலப் பறக்கும் கொக்குகளின் தோற்றம் திருமால் மார்பில் அணியும் முத்தாரம் எனப் பொலிந்தது என்றது நிறமும் தோற்றமும் பற்றி வந்த உவமை அணியாகும். 'நெடு வேல் மார்பின் ஆரம்போலச் செவ்வாய் வானம் தீண்டி மீனருந்தும், பைங்கால் கொக்கின் நிரைபறையுகப்ப' (அகம் -120) என்பது ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது. மேகம் நீர் முகத்தலைக் 'குணகடல் முகந்த வானம்' (அகம் - 278); 'பாடிமிழ்*

*பனிக்கடல் பருகி வலனேர்பு. கோடு கொண்டெழுந்த கொடுஞ்செல வெழிலி' (முல்லை. 4 - 5) என்ற அடிகளும் உணர்த்தும். 'ஆரம் என்னவும்' என்பதில் உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை.* *41*

***4189. மருவி நீங்கல்செல்லா நெடு***
***மாலைய, வானில்***
***பருவ மேகத்தின் அருகு***
***உறக் குருகுஇனம் பறப்ப,***
***'திருவின் நாயகக் இவன்' எனத்***
***தே மறை தெரிக்கும்***
***ஒருவன் மார்பினின்***
***உத்தரியத்தினை ஒத்த.***

***மருவி நீங்கல் செல்லா -*** *ஒன்று சேர்ந்து ஒன்றைவிட்டு ஒன்று நீங்காமல்;* ***நெடு மாலைய -*** *நீளமாக வரிசைப்பட்டனவாய்;* ***வானில் -*** *வானத்தில்;* ***பருவ மேகத்தின் அருகு உற -*** *கார்கால மேகத்தின் அருகே பொருந்துமாறு;* ***பறப்ப குருகு இனம் -*** *பறப்பனவாகிய நாரையின் கூட்டங்கள்;* ***திருவின் நாயகன் இவன் என -*** *'திருமகளின் கணவன் இவன் என்று';* ***தே மறை தெரிக்கும் -*** *தெய்வத்தன்மை பொருந்திய*

*வேதங்களால் தெளிவிக்கப்படுகின்ற;* ***ஒருவன் மார்பினின் -*** *ஒப்பற்ற திருமாலின் மார்பில் சாத்திய;* ***உத்தரியத்தினை ஒத்த -*** *மேலாடையை ஒத்து விளங்கின.*

*கரியமேகத்தின் அருகில் தொடர்ந்து பறந்த நாரைகளின் வரிசை திருமாலின் மார்பில் சாத்திய வெண்பட்டு உத்தரீயம் போல் விளங்கியது. இதுவும் நிறமும் தோற்றமும் பற்றி வந்த உவமை அணி. நாரையின் காலிலுள்ள சிவப்பு நிறம் மேலாடையின் கரைபோல் விளங்கியது. குருகு - பறவைப் பொதுப்பெயர், இங்கு நாரையைக் குறித்தது. நாரைகள் நெருக்கம் கலையாது வரிசைப்பட்டுச் செல்வதை மருவிநீங்கல் செல்லா நெடு மாலைய' என்றார். 'நீர் செல நிமிர்ந்த மாஅல் போல. . . எழிலி' (முல்லை - 3 - 5) என்ற அடிகளில் மேகத்திற்குத் திருமாலை உவமை கூறியது காண்க. 'மீயோங்கு செம்பொன் முடி ஆயிரம் மின் இமைப்ப, ஓயா அருவித்திரள் உத்தரியத்தை ஒப்ப, தீயோர் உளர் ஆகிய கால், அவர் தீமை தீர்ப்பான், மாயோன் மகரக் கடல் நின்று எழு மாண்பது ஆகி' (4780) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. தே மறை - வேதத்திற்குத் தெய்வத்தன்மை என்பது எப்போதும் ஒரேமாதிரி நிலைத்திருத்தல், இறைவனால் வெளிப்படுத்தப்படல், பொருள்களின் இயல்பை உள்ளபடி அறிவித்தல், அனைவராலும் சிறந்ததாக ஏற்றுக் கொள்ளப்படல்முதலியனவாம். 42*

*பசும்புல் எழுச்சி; மயிலின் அகவல்*

***4190. உற வெதுப்புறும் கொடுந்தொழில்***
***வேனிலான் ஒழிய,***
***திறம் நினைப்ப அருங்கார்***
***எனும் செவ்வியோன் சேர,***
***நிற மனத்து உறு குளிர்ப்பினின்,***
***நெடு நில மடந்தை,***
***புற மயிர்த்தலம் பொடித்தன***
***போன்றன - பசும்புல்.***

***பசும் புல் -*** *பசுமையான புல்லின் தொகுதி;* ***உற வெதுப்புறும் -*** *மிகவும் வெதுமபச் செய்த;* ***கொடுந்தொழில் -*** *கொடிய தொழிலை உடைய;* ***வேனிலான் ஒழிய -*** *வேனிற்காலம் என்னும் கொடுங்கோல் அரசன் நீங்கினானாக;* ***நினைப்ப அரும் திறம் -*** *நினைத்தற்கு அரிய மேன்மையுடைய;* ***காரெனும் செவ்வியோன் -*** *கார்காலம் என்னும் செம்மையான குணங்களையுடையவன்;* ***சேர -*** *(அரசனாய்) வந்து சேர;* ***நெடுநில மடந்தை -*** *பெரிய நிலமாகிய நங்கை;* ***நிற மனத்து உறு -*** *மாட்சிமை பெற்ற மனத்தில் கொண்ட;* ***குளிர்ப்பினின் -*** *மகிழ்ச்சியால்;* ***புறம் பொடித்தன -*** *உடம்பு முழுவதும் சிலிர்த்தனவான;* ***மயிர்த்தலம் போன்றன -*** *மயிர்களைப் போன்றன.*

*வெயிலால் வறண்ட நிலத்தில் மழை பெய்வதலால் புல் முளைத்ததை, நில மங்கை மகிழ்ச்சியால் உடல் சிலிர்த்ததாகக் கூறியதால் இது தற்குறிப்பேற்ற அணி. மயிர் சிலிர்த்தல் - மகிழ்ச்சியாலும் குளிர்ச்சியாலும் ஆவது. காலத்தை அரசனாக உருவகிப்பது கவி மரபாகும். உலகத்தின் ஆக்கல், அழித்தலுக்குத் துணைக் காரணமாகக் காலம் இருப்பதால் அதனை அரசன் என்றார். 'இன் இளவேனில் இளவரசாளன்' (சிலப் - 8.57), 'கார் அரசாளன்' (சிலப்-14.96), 'பனி அரசுயாண்டுளன' (சிலப் - 14.112), 'இன் இளவேனில் யாண்டு உளன்', (சிலப் - 14 - 117) என்றனவும்*

*காண்க. நிலத்தை மடந்தையாக உருவகித்தலைத் "திரை நீர் ஆடை இருநிலமடந்தை" (சிலப் - 4 - 7) என்ற தொடரும் உணர்த்தும். கார் கைம்மாறு கருதாது மழை பொழிந்து நன்மை செய்தலின் 'நினைப்ப அரும்திறம் காரெனும் செவ்வியோன்' என்றார். வெப்பம் கொடுத்து மிகுந்த துன்பம் விளைத்த லால் 'கொடுந்தொழில் வேனிலான்' என்றார். வேனிலின் வெம்மையும் காரின் தன்மையும் ஏற்ற அடைமொழிகளால் உணர்த்தப்பட்டன. மகிழ்ச்சியாலும், குளிர்ச்சியாலும் உடம்பில் மயிர் சிலிர்த்தல் இயல்பாகும். 'இவன், அடித்தலம் தீண்டலின் அவனிக்கு அம்மயிர், பொடித்தன போலும் இப்புல்' என்று உன்னுவாள்' (2750) என இதே கற்பனை முன்னும்வந்தது. 43*

***4191. தேன் அவாம் மலர்த்***
***திசைமுகன் முதலினர் தெளிந்தோர்,***
***ஞான நாயகன் நவை***
***உற, நோக்கினர் நல்க,***
***கானம் யாவையும் பரப்பிய***
***கண் என, சனகன்***
***மானை நாடி நின்று அழைப்பன***
***போன்றன - மஞ்ஞை.***

***தேன் அவாம் மலர்த்திசைமுகன் -*** *வண்டுகள் விரும்புகின்ற தாமரைமலரில் வீற்றிருக்கும் நான்முகன்;* ***முதலினர் தெளிந்தோர் -***

*முதலான தெளிந்த அறிவுடையோர்களெல்லாரும்;* ***ஞான நாயகன் -*** *ஞான நாயகனாக விளங்கும் இராமன்;* ***நவை உற -*** *(சீதையைப் பிரிந்து) துன்பம் அடைய;* ***நோக்கினர் நல்க -*** *(அதைப் போக்குவான் வேண்டி) சீதையைத் தேடித்தர (எண்ணி);* ***கானம் யாவையும் பரப்பிய -*** *காடுகளில் எல்லாம் பரப்பிய;* ***கண் என -*** *கண்கள் போலத் தோன்ற;* ***மஞ்ஞை -*** *மயில்கள் (தோகைக்கண்களைப் பரப்பி);* ***சனகன் மானை -*** *சனகன் மகளான மான் போன்ற பார்வையையுடைய சீதையை;* ***நாடி நின்று -*** *தேடி நின்று;* ***அழைப்பன போன்றன -*** *அழைப்பனவற்றை ஒத்தன.*

*மலர்த்திசை முகன் - திருமாலின் நாபிக்கமலத்தில் எழுந்த நான்முகன் என்றும் உரைக்கலாம். காலமிடையிட்டவற்றையும் தேயமிடையிட்டவற்றையும் அறிய வல்லராதலின் 'தெளிந்தோர்' என்றார். துன்புறும் இராமன் சீதையைத் தேடிக் காணுவதற்கு உதவ விரும்பி நான்முகன் முதலியோர் எங்கணும் கண்களைப் பரப்பி வைத்தது போலக் கானகம் எங்கணும் மயில்(தோகைக்) கண்கள் அமைந்தனவாம். கார்காலத்தில் மயில்கள் தோகை விரித்தாடுதலும், அகவுதலும் இயற்கை. மயில்கள் தமது தோகைக் கண்கள் கொண்டு இராமனுக்கு உதவச் சீதையைத் தேடுவது போலவும், குரல் கொண்டு கூவி அழைப்பது போலவும் நின்றன என்றது தற்குறிப்பேற்ற அணியாகும். 'தேடா நின்ற என்னுயிரைத் தெரியக் கண்டாய். சிந்தையுவந்து, ஆடா நின்றாய்; ஆயிரம் கண்ணுடையாய்க்கு ஒளிக்குமாறு உண்டோ?" (3734) என இராமன் மயிலை நோக்கிக் கூறியது இங்கு நினையத்தகும். 44*

செந்தாமரை மலர்களும் கொடிகளும்

***4192. செஞ் செவ் வேலவர், செறி***
***சிலைக் குரிசிலர், இருண்ட***
***குஞ்சி சேயொளி கதுவுறப்***
***புது நிறம் கொடுக்கும்***
***பஞ்சி போர்த்த மெல் அடி***
***எனப் பொலிந்தன, பதுமம்;***
***வஞ்சி போலியர் மருங்கு***
***என நுடங்கின, வல்லி.***

***செஞ் செவ் வேலவர் -*** *செக்கச் சிவந்த வேலையுடையவரும்;* ***செறி சிலைக் குரிசிலர் -*** *கட்டமைந்த வில்லை ஏந்தியவருமான தலைவர்களின்;* ***இருண்ட குஞ்சி -*** *கருநிறமான தலைமுடி;* ***சேயொளி கதுவுற -*** *சிவந்த ஒளியைப் பற்றிக் கொள்ளுமாறு;* ***புதுநிறம் கொடுக்கும் -*** *(அதற்குப்) புதிய நிறத்தைக் கொடுக்கும்;* ***பஞ்சி போர்த்த மெல்லடி என -*** *செம்பஞ்சுக் குழம்பு மிகுதியாக பூசப்பெற்ற மென்மையான (மகளிரின்) பாதங்கள் போல;* ***பதுமம் பொலிந்தன -*** *தாமரை மலர்கள் விளங்கின.* ***வஞ்சி போலியர் மருங்க என -*** *வஞ்சிக் கொடி போன்ற வடிவுடைய அம்மகளிரின் இடை போன்றது;* ***வல்லி நுடங்கின -*** *பூங்கொடிகள் அசைந்தன.*

*பகைவர்கள் பலரைக் கொன்றதனால் கறைபட்ட குருதியின் மிகுதி காட்ட 'செஞ் செவ் வேலவர்' என இரண்டடை கொடுத்தார். மகளிரின் ஊடல் தீர்க்க, ஆடவர் அம்மகளிரின் கால்களில் பணிதலும், பணிந்த தலைவர்களின் தலையில் அம்மகளிர் கால்படுவதால், பாதத்தில் ஊட்டப் பெற்ற செம்பஞ்சுக்குழம்பு ஆடவரின் கருமையான முடியில் செந்நிறம் படுதலும் உண்டு என்று இலக்கியங்கள் பேசும், 'செஞ்சிலைக் கரத்தர், மாதர் புலவிகள் திருத்திச் சேந்த குஞ்சியர்' (499); 'ஊடலில் கனன்று மறித்த நோக்கியர் மலரடி மஞ்சுளப் பஞ்சி குறித்த கோலங்கள் பொலிந்தில, அரக்கர்தம் குஞ்சி' (4866) என்பன கம்பர் வாக்கு; 'புலந்தவர் கொடியென நடுங்கிப் பொன்னரிச் சிலம்பொடு மேகலை மிழற்றச் சென்னி மேல் அலங்கல்வாய் அடிமலர் அணிந்து. . . . ஏகினாள்' (சிந்தா - 1019) என்ற தேவர் வாக்கும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. புலந்து தலைவர் முடிமீது அடிமலர் வைக்கையல் தலைவியர் இடை நடுங்குவது போலக் கொடிகள் நுடங்கின என்க. தலை முடியின் இயற்கைக் கருநிறம் மாறிச் செந்நிறம் கொண்டு விளங்கும் என்பதைப் 'புதுநிறம் கொடுக்கும்' எனக் குறிப்பிட்டார். நிறம், மென்மை, அழகு ஆகியவற்றால் தாமரை மலர்க்குச் செம்பஞ்சு ஊட்டிய அடிகளும், மெலிவு, நுடக்கம் ஆகியவற்றால் கொடிகட்கு மகளிர் இடையும் உவமம். மகளிர் அடிக்குத் தாமரையும், இடைக்கு வல்லியும் உவமையாக்கப்படுதலின் எதிர்நிலை உவமை அணியாகும். 45*

குயில்கள் குரல் ஒடுங்கின

***4193. 'நீயிர், அன்னவள்***
***குதலையிர்ஆதலின், நேடி,***
***போய தையலைத் தருதிர்'***
***என்று, இராகவன் புகல,***

***தேயம் எங்கணும் திரிந்தன***
***போந்து, இடைத் தேடிக்***
***கூய ஆய், குரல் குறைந்தபோல்***
***குறைந்தன - குயில்கள்.***

***நீயிர்*** - *'நீங்கள்;* ***அன்னவள் குதலையிர் ஆதலின்*** - *அந்தச் சீதை யின் மழலை போன்ற இனிமையான குரலை உடையவர்களாதலால்;* ***போய தையலை*** - *(சூழ்ச்சியால்) என்னைப் பிரிந்த சீதையை;* ***நேடித் தருதிர் என்று***- *தேடித் தருவீர்கள்' என்று;* ***இராகவன் புகல*** - *இராமன் (குயில்களை நோக்கிக்) கூற;* ***குயில்கள்*** - *அக்குயில்கள்;* ***தேயம் எங்கணும்*** - *(அதற்கு இணங்கி) எல்லா இடங்களிலும்;* ***திரிந்தன போந்து*** - *திரிந்து வந்து;* ***இடைத் தேடி*** - *அந்தந்த இடங்களில் அவளைத் தேடி;* ***கூய ஆய்*** - *உரக்கக் கூவி அழைத்தனவாய்;* ***குரல் குறைந்த போல*** - *குரல் கம்மின போல;* ***குறைந்தன***- *(கார்காலத்தில்) குரல் ஒடுங்கின.*

*கார் காலத்தில் குயில் கூவாமை இயல்பு. கார்காலத்தில் குயில் கூவாமை 'ஆடின மயில்கள் பேசாது அடங்கின குயில்கள்' (4173) என முன் கூறியதாலும் 'கருங்குயில் கையற மாமயில் ஆல' (கார்.நாற்.16) என வருதலாலும் அறியலாம். குதலை - குழந்தைப் பருவத்திற்கே உரியதாயினும் மகளிர்க்கு எல்லாப் பருவத்திலும் பொருந்தியதாகக் கூறுதல் கவிஞர் இயல்பு. பறவையிடம் பேசுவதாகக்*

*கூறுவது கவிமரபாகும். குயில்கள் குயில் மொழியாளைத் தேடின என்றதன் நயன் காண்க.* *46*

*ஆம்பியும் பிடவமும்*

***4194. பொழிந்த மா நிலம் புல்***
***தர, குமட்டிய புனிற்றா***
***எழுந்த ஆம்பிகள் இடறின,***
***செறி தயிர் ஏய்ந்த;***
***மொழிந்த தேனுடை முகிழ்***
***முலை ஆய்ச்சியர் முழவில்***
***பிழிந்த பால் வழி நுரையினைப்***
***பொருவின - பிடவம்.***

***பொழிந்த மாநிலம்*** - *மழை பெரியதாகப் பெய்யப் பெற்ற பெரிய பூமி;* ***புல் தர*** - *பசும் புல்லைத் தர;* ***குமட்டிய புனிற்றா*** - *(அவற்றை) மிகுதியாக மேய்ந்து தெவிட்டிய ஈன்றணிமையை உடைய பசுக்களால்;* ***இடறின*** - *இடறப்பட்டனவாய்;* ***எழுந்த ஆம்பிகள்*** - *ஆங்காங்குப் பூத்து எழுந்த காளான்கள்;* ***செறி தயிர் ஏய்ந்த*** - *(அவ்வாறு இடறப் பெற்ற காளான்கள்) கட்டித் தயிரைப் போன்று விளங்கின.* ***பிடவம்*** - *பிடவம் என்னும் செடியின் மலர்கள்;* ***மொழிந்த தேனுடை*** - *பேசுகின்ற தேன் போன்ற இனிய சொற்களை உடைய;* ***முகிழ் முலை ஆய்ச்சியர்*** - *(கோங்கின்) அரும்பு போன்ற முலைகளை உடைய ஆய்ச்சியர்;* ***முழவில் பிழிந்த*** - *குடங்களில் கறந்த;* ***பால் வழி நுரையினை*** - *பாலினின்று மேலே வழிகின்ற நுரையினை;* ***பொருவின*** - *ஒத்து விளங்கின.*

*ஆம்பிகள் கட்டித் தயிர் போலவும், பிடவம் பால் நுரை போலவும் விளங்கின. நிறமும் வடிவும் பற்றி வந்த உவமைகள். முல்லை நிலத்துப் பொருள்களுக்கு அந்நிலத்துப் பொருள்களே உவமை கூறப்பட்டன. வயிறு நிறைய உண்ட பசுக்கள் காளான்களைச் சிதைக்கும் இயல்பின என்பதை 'மாற்றார் குடையெல்லாம் கீழ்மேலாய் ஆஉதை காளாம்பி போன்ற' (களவழி - 36) என்றதால் காண்க. காளானுக்குத் தயிர்த் துணக்குகள் உவமை. 'ஆம்பி வான் முகையன்ன கூம்பு முகிழ் உறையமை தீந்தயிர்' (பெரும்பாண் - 157 - 8) தேன் - உவமை ஆகுபெயராய்ச் சொல்லை உணர்த்தியது. பிடவம் - கார் காலத்தில் மலரும் முல்லை நிலத்து மலர். இதனைக் குட்டிப் பிடவம் என்னும் ஒரு கொடி என்பர் அடியார்க்கு நல்லார். (சிலப் - 13 - 158. உரை) 'சேணாறு பிடவமொடு பைம் புதல் எருக்கி' (முல்லை - 25) என்றது காண்க. பிடவம் ஆகுபெயராய் மலர்களை உணர்த்திற்று. பால் மிகுதி நோக்கிப் 'பிழிந்க' என்றார்.* *47*

நானில மலர்கள்

***4195.* வேங்கை நாறின, கொடிச்சியர் வடிக்**
**குழல்; விரை வண்டு**
**ஏங்க, நாகமும் நாறின,**
**நுளைச்சியர் ஐம்பால்;**
**ஓங்கு நாள்முல்லை நாறின,**
**ஆய்ச்சியர் ஓதி;**
**ஞாங்கர், உற்பலம் உழத்தியர்**
**பித்திகை நாற.**

**கொடிச்சியர் வடிக்குழல் -** *குறிஞ்சி நிலத்துக் குறத்தியரின் திருத் தப்பட்ட கூந்தல்;* **வேங்கை நாறின -** *வேங்கை மலர்களின் மணம் கமழப் பெற்றன.* **நுளைச்சியர் ஐம்பால் -** *நெய்தல் நிலத்தில் வாழும் நுளைச்சியரின் ஐந்து வகையாகப் பிரித்துப் போடப்படும் கூந்தல்;* **விரை வண்டு ஏங்க -** *விரைந்து வரும் இயல்பினதாகிய வண்டுகள் மொய்த்து ஆரவாரிக்க;* **நாகமும் நாறின -** *சுரபுன்னை மலர்களின் மணம் வீசின.* **ஞாங்கர் -** *பக்கத்தில்;* **உழத்தியர் பித்திகை -** *மருதநிலத்து உழவப்பெண்களின் கூந்தல்;* **உற்பலம் நாற -** *செங்கழுநீர் மலர்களால் மணத்தைப் பரப்ப;* **ஆய்ச்சியர் ஓதி -** *முல்லை நிலத்து ஆய்ச்சியரின் கூந்தல்;* **ஓங்கு நாள் முல்லை நாறின -** *சிறந்த அன்றலர்ந்த முல்லை மலர்களால் மணம் கமழ்ந்தன.*

*கிட்கிந்தை மலை நானில வளம் மிக்கது என்பதைக் காட்ட, நானிலக் கருப் பொருள்களான வேங்கை, சுரபுன்னை, முல்லை, செங்கழுநீர் மலர்களைக் கூறினார். கொடிச்சியர், நுளைச்சியர், ஆய்ச்சியர், உழத்தியர் என்போர் நானில மகளிராவர். குழல், ஐம்பால், ஓதி, பித்திகை என்பன கூந்தல் என்ற ஒரு பொருளைக் குறித்த சொற்கள். 'நாறின' என்ற சொல் செய்யுளில் நான்கிடத்தும் ஒரே பொருளில் வந்தமையால் சொற்பொருள் பின்வரு நிலை அணியாம். வேங்கை, நாகம், முல்லை, உற்பலம் என்பன முதலாகு பெயராய் மலர்களைக் குறித்தன. வடிக்குழல் - திருத்தம் செய்யப்பட்ட கூந்தல், வாரி முடித்த கூந்தல் என்பதாம். ஐம்பால் - ஐந்து பகுப்புடையது. முடியை உச்சியில் முடித்தலாகிய முடியும், பக்கத்தில் முடித்தலாகிய கொண்டையும், பின்னே செருகுதலாகிய சுருளும், சுருட்டி முடித் தலாகிய குழலும்,*

*பின்னி விடுதலாகிய பனிச்சையுமாம். ஐம்பால் என்பதற்கு ஐந்து தன்மை உடையது என்றும் உரைப்பர். அவையாவன - மணம், மது, மென்மை, நெய்ப்பு, கருமை என்பன.*

*இப்பாடலுக்கு வேங்கை மலர்கள் கொடிச்சியர் கூந்தல் போல் மணம் வீசின, நாகம் நுளைச்சியர் ஐம்பால் போல் மணம் மிக்கன, முல்லை ஆய்ச்சியர் ஓதி போல நாறின. உற்பலம் உழத்தியர் கூந்தல் போல் மணம் வீசின எனவும் பொருள் கூறுவர்.*
*48*

*இராமன் மன நிலை*

***4196. தேரைக் கொண்ட பேர்***
***அல்குலாள் திருமுகம் காணான்,***
***ஆரைக் கண்டு உயிர் ஆற்றுவான்?***
***நல் உணர்வு அழிந்தான்;***
***மாரற்கு எண் இல் பல்***
***ஆயிரம் மலர்க் கணை வகுத்த***
***காரைக் கண்டனன்; வெந் துயர்க்கு***
***ஒரு கரை காணான்.***

**தேரைக் கொண்ட -** *தேர்த் தட்டை ஒத்த;* **பேர்அல்குலாள் -** *அகன்ற அல்குலை உடைய சீதையின்;* **திருமுகம் காணான் -** *அழகிய முகத்தைக் காணாதவனாகிய இராமன்;* **மாரற்கு -** *மன்மதனுக்கு;* **எண் இல் பல் ஆயிரம்-** *எண்ணற்ற பல ஆயிரக்கணக்கான;* **மலர்க்கணை வகுத்த -** *மலர் அம்புகளைச் செய்து கொடுத்த;* **காரைக் கண்டான் -** *அந்தக் கார்காலத்தைக் கண்டு;* **வெந்துயர்க்கு -** *(தன்) கொடிய துன்பமாகிய கடலுக்கு;* **ஒரு கரை காணான் -** *கரை காணாதவனாய்;* **நல் உணர்வு அழிந்தான் -** *நல்ல அறிவை இழந்தவனானான்.* **ஆரைக்கண்டு உயிர் ஆற்றுவான் -** *இனி யாரைக் கண்டு தன் துயர் குறைத்து உயிரை வைத்துக் கொண்டிருப்பான்?*

*கார் காலத்தில் பல்வேறு மலர்கள் மலர்ந்து இராமனுக்குத் துன்பம் விளைவித்தன. 'எண்ணில் பல்லாயிரம் மலர்க்கணை வகுத்த' என்ற தொடர் கார் காலத்தில் மலர்கள் மிகுந்து மலர்ந்ததைக் குறித்தது. மலர்கள் இயற்கையாக மலரக் கார் காலம் மன்மதனுக்கு மலரம்புகளைத் தந்தது எனக் கூறியது தற்குறிப்பேற்ற அணியாகும். சீதையின் திருமுகத்தைக் காணாமையால் ஏற்படும் துயரத்தை உலகில் வேறொரு பொருளைக் கண்டு ஆற்ற இயலாது ஆதலின் 'ஆரைக் கண்டு உயிர் ஆற்றுவான்' என்றார். கார்காலம் பிரிவுத் துயரை அதிகப்படுத்துவதோடு, மலர் அம்புகளையும் மன்மதனுக்குக் கொடுத்து உதவியது என்பதில் கார்காலம் இராமனுக்குச் செய்யும் கொடுமையின் கடுமை புலப்படுகிறது. காரைக் கண்டனன். . . . . ஒரு கரை காணான் என்ற தொடரில் கண்டனன் காணான் முரண் தொடை நயம் காண்க. கரை காணான் என்றதால் வெந்துயர்க் கடல் என்ற உருவகம் போந்தது. அவ்வாறு பெறவைத்தமையால் இது குறிப்பு உருவகம்.* *49*

***4197. அளவு இல் கார் எனும் அப்***
***பெரும் பருவம் வந்து அணைந்தால்,***
***தளர்வர் என்பது தவம்***

***புரிவோர்கட்கும் தகுமால்;***
***கிளவி தேனினும் அமிழ்தினும்***
***குழைந்தவள் கிளைத்தோள்***
***வளவி உண்டவன், வருந்தும்என்றால்,***
***அது வருத்தோ?***

***அளவு இல் கார் எனும் -*** *எல்லையில்லாத சிறப்பை உடைய கார்காலம் என்கின்ற;* ***அப்பெரும் பருவம்*** *- அந்தப் பெருமைமிக்க காலம்;* ***வந்து அணைந்தால்*** *- வந்து சேர்ந்தால்;* ***தளர்வர் என்பது*** *- மனவுறுதி இழந்து தவிப்பர் என்று கூறுவது;* ***தவம் புரிவோர்கட்கும் தகுமால்*** *- (முற்றும் துறந்து) தவம் செய்யும் முனிவர்களுக்கும் பொருந்தும்*

*ஆதலால்;* ***கிளவி*** *- தன் சொற்களை;* ***தேனினும் அமிழ்தினும்*** *- தேனிலும் அமிழ்தத்திலும்;* ***குழைத்தவள்*** *- குழைத்துப் பேசும் சீதையின்;* ***கிளைத் தோள்*** *- மூங்கில் போன்ற தோள்களை;* ***வளவி உண்டவன்*** *- தழுவி இன்பம் துய்த்த இராமன்;* ***வருந்தும் என்றால்*** *- (கார் காலத்தில்) வருந்துவான் என்றால்;* ***அது வருத்தோ*** *- அவ்வருத்தம் எளிய வருத்தமாக எண்ணப்படுமோ?*

*இலக்கணம் கூறும் ஆறு பெரும்பொழுதுகளில் கார் காலம் ஒன்றாதலின் அதனைப் 'பெரும்பருவம்' என்றார். இக்காலம் பிரிந்தார்க்குப் பெருந்துன்பம் விளைத்து நீண்ட பொழுதாகத் தெரியச் செய்வதால் அளவால் பெரும்பருவம் எனவும் கொள்ளலாம். 'அ' என்பது உலகறி சுட்டு. 'அணைந்தால்'என்ற சொல் பிரிந்தவர்கள் கூடி அணையும் காலம் என்பதைக் குறிப்பால் உணர்த்தல் காண்க. தவம் புரிவோர்கட்கும் என்பதில் உள்ள உம்மை உயர்வு சிறப்பும்மை; சீதையின் மொழிக்குத் தேனும் அமிழ்தும் குழைத்தது உவமை. 'அன்னம் அன்னாள் அமுது உகுத்தனைன செய்ய வாயிடை மழலை இன்சொல்' (3303), 'குழலும் யாழும் அமிழ்தும் குழைத்த நின் மழலைக் கிளவி' (சிலப்-2.58), 'கரும்பும் தேனும் அமுதும் பாலும் கலந்த தீஞ்சொல்' (சிந்தா-2438), 'தேனும் ஆரமுதும் குயிலினின் குரலும் கிளியினின் மொழியும் குழலும் யாழும் குழைத்து இழைத்து' (அரிச்.4-12) என்பன ஒப்பு நோக்கத் தக்கன. கிளைத்தோள் வளவி உண்டவன்-என்பதில் உண்ணுதற்குரியதல்லாத பொருளை உண்டதாகக் கூறினார். 'உண்டற்குரிய அல்லாப் பொருளை உண்டன போலக் கூறலும் மரபே' (தொல்.பொரு.213) என்றது காண்க. 'தோள் நலமுண்டு துறக்கப்பட்டார்' (கலி-23) என்பது கலித்தொகை. 50*

*இராமன் முகில் முதலியவற்றோடு புலம்பல்*

***4198. காவியும், கருங் குவளையும்,***
***நெய்தலும், காயாம் -***
***பூவையும் பொருவான் அவன்,***
***புலம்பினன் தளர்வான்,***
***'ஆவியும் சிறிது உண்டு***
***கொலாம்' என, அயர்ந்தான்,***
***தூவி அன்னம் அன்னாள் திறத்து,***
***இவை இவை சொல்லும்:***

***காவியும் கருங்குவளையும்*** - *காவி மலரையும் கருங் குவளை மலரையும்;* **நெய்தலும் *காயாம்பூவும்*** - *நெய்தல் மலரையும் காயா மலரையும்;* **பொருவான் அவன்** - *(தன் உடல் நிறத்தால்) ஒத்தவனாகிய அந்த இராமன்;* ***புலம்பினன் தளர்வான்*** - *புலம்பித் தளர்ச்சி அடைபவனாய்;* **ஆவியும் சிறிது உண்டு கொலாம் என** - *(இவன் உடம்பில்) சிறிதேனும் உயிர் உள்ளதோ என ஐயுறுமாறு;* ***அயர்ந்தான்*** - *சோர்வுற்றவனாகி;* ***தூவி அன்னம் அன்னாள் திறத்து*** - *மெல்லிய சிறகுகளை உடைய அன்னம் போன்ற சீதை மாட்டு;* **இவை இவை சொல்லும்** -

*(தான் கொண்ட காதல் மிகுதியால்) இந்த இந்தச் சொற்களைச் சொல் பவனானான்.*

*காவி, கருங்குவளை, நெய்தல், காயாம்பூ மலர்கள் இராமன் நிறத்திற்கு உவமை. பல பொருள் உவமை அணி. காவி, கருங்குவளை, நெய்தல் என்பன ஆகுபெயராய் அவற்றின் மலர்களை உணர்த்தின. 'கடலோ? மழையோ? முழுநீலக் கல்லோ? காயா நறும்போதோ? படர்பூங்குவளை நாள் மலரோ? நீலோற்பலமோ, பானலோ? (544),* **'எள்இல் பூவையும்,** *இந்திர நீலமும் அள்ளல் வேலையும், அம்புத சாலமும், விள்ளும் வீயுடைப் பானலும், மேவும் மெய் வள்ளல். (569) என்பன ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன. தளர்ச்சியால் பேச்சு மூச்சற்றவனாய் இராமன் இறந்தவன் போலக் காணப்பட்டான் என்பதை 'ஆவியும் சிறிது உண்டு கொலாம் என அயர்ந்தான்' என்றார். கொல் - ஐயப் பொருளில் வந்தது. 'ஆகம் பூண்ட மெய் உயிரே நீ! அப்பொய் உயிர் போயே நின்ற ஆண்தகை' (5304) என்றதும் காண்க. அன்னம் நடையழகால் உவமை; சீதையின் பிரிவால் இராமன் அடையும் அவத்தைகளாகப் 'புலம்பல், தளர்தல், அயர்தல், மொழி பல கூறல் என்பன இங்கேகூறப்பட்டன. 51*

கலிவிருத்தம்

***4199. வார் ஏர் முலையாளை மறைக்குநர் வாழ்***
***ஊரே அறியேன்; உயிரோடு உழல்வேன்;***
***நீரே உடையாய், அருள் நின் இலையோ?***
***காரே! எனது ஆவி கலக்குதியோ?***

**காரே** - *கார்மேகமே!* **வார் ஏர் முலையாளே** - *கச்சணிந்த அழகிய கொங்கைகளை உடைய சீதையே;* **மறைக்குநர்** - *(கவர்ந்து சென்று) ஒளித்துவைத்திருப்பவராகிய அரக்கர்கள்;* **வாழ் ஊரே அறியேன்** - *வாழ்கின்ற ஊர் இன்ன இடத்தில் உள்ளது எனவும் அறியாதவனாய்;* **உயிரோடு உழல்வேன்** - *உயிரைச் சுமந்து கொண்டு திரிந்து வருகிறேன்;* **நீரே உடையாய்** - *நீ நீரையே கொண்டு இருக்கின்றாய். (நீர்மை உடையையாய் உள்ளாய்);* **அருள் நின் இலையோ** - *(அங்ஙனமிருந்தும்) அருள் உனக்கு என்னிடத்தில் இல்லையா?* **எனது ஆவி கலக்குதியோ** - *எனது உயிரைக் கலங்கச் செய்வாயோ?*

*அரக்கர்கள் வலிமை, படை, உருவம் முதலியவற்றை அறிய முடியாததோடு, அவர்களது ஊரையே அறிய முடியவில்லையே என்ற வருத்தம் புலனாக 'ஊரே அறியேன்' என்றான். ஊரே என்பதில் ஏகாரம் இழிவுப்பொருளில் வந்தது. அரக்கர்களைத் தண்டித்துச் சீதையை மீட்காது வாளா உயிர்வாழ்தற்கு இரங்குவானாய் 'உயிரோடு உழல்வேன்' என்றான். நீர் என்பது தண்ணீர் என்றும் நீர்மை (அருள்) என்றும்*

*பொருள்படும். பெயர்க்கேற்ற பண்பு இல்லையேயெனக் கூறுவானாய் 'நீரே உடையாய்' என்றான். சீதையின் பிரிவால் வருந்தும் தன்னை மேலும் இக்கார்காலம் வருத்துவதால் 'அருள் நின் இலையோ? எனது ஆவி கலக்குதியோ' என இராமன் கார் காலம் நோக்கி வினவினான்.*

*இது முதல் ஏழு பாடல்கள் கலிவிருத்தம். அவ்விருத்தங்கள் இரங்குதலைக் குறிக்கும் புலம்பல் சந்தம் பெற்றன. வருந்துபவர்கள் நீண்ட வாக்கியங்களைப் பேசாமல் சிறுசிறு சொற்றொடராலேயே தம் வருத்தத்தை தெரிவித்தல் இயல்பு*

*என்பதை மனவியலாரும் ஒப்புவர். அதற்கு ஏற்பவே சிறு சிறு தொடர்களால் அமைந்து உள்ளன இக்கலிவிருத்தங்கள், இச்சந்தம், பால காண்டத்தில் சீதை, இராமன் இரங்கற்கும் (1162 - 1181), சுந்தர காண்டத்தில் சீதை இரங்குதற்கும் (5230 - 5236) வருதல் காண்க. நைடதத்திலும் நளன் - தமயந்தி இரங்கல் (1031, 1035, 1050, 1056) இதே கலிவிருத்தத்தில் அமைதல்காண்க. 52*

***4200. 'வெப்பு ஆர் நெடு***
***மின்னின் எயிற்றை; வெகுண்டு,***
***எப் பாலும், விசும்பின்***
***இருண்டு எழுவாய்;***
***அப் பாதக***
***வஞ்ச அரக்கரையே***
***ஒப்பாய்; உயிர் கொண்டு***
***அலது ஓவலையோ?***

***வெப்ப ஆர் -*** *கடுமை நிறைந்த;* ***நெடு மின்னின் எயிற்றை -*** *நீண்ட மின்னல்களாகிய பற்களை உடையாய்!* ***வெகுண்டு -*** *சினங்கொண்டு;* ***விசும்பின் எப்பாலும் இருண்டு -*** *ஆகாயத்தில் எல்லாப் பக்கத்திலும் கருநிறங் கொண்டு;* ***எழுவாய் -*** *தோன்றுகின்றாய்;* ***அப் பாதக வஞ்ச அரக்கரையே ஒப்பாய் -*** *(ஆதலால்) கொடுஞ்செயலை உடைய அந்த வஞ்சனை நிறைந்த அரக்கர்களையே நீ முற்றும் ஒத்து விளங்குகிறாய்;* ***உயிர் கொண்டு அலது -*** *எனது உயிரைக் கவர்ந்து கொண்டன்றி;* ***ஓவலையோ -*** *நீங்கமாட்டாயோ?*

*நெடு மின்னலாகிய பற்களை உடையதாய் வானிடத்து இருண்டு இடியொலிசெய்து வெகுண்டு பரவிஎழுதல் நோக்கி மேகம் அரக்கர்க்கு ஒப்பாயிற்று. மின்னெயிறு உருவகம்.*

*இராமன் அஃறிணைப் பொருளாகிய காரொடு பேசியது வழுவமைதியின் பாற்படும். சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇச், செய்யா மரபில் தொழிற்படுத்தடக்கியும் (தொல் பொருளி - 2), என்றதும் 'ஞாயிறு, திங்கள். . . . . . . சொல்லுந போலவும் கேட்குந போலவும் சொல்லியாங்கமையும் என்மனார் புலவர்' (தொல் - செய் - 200) என்றதும்காண்க. 53*

***4201. 'அயில் ஏய் விழியார்,***
***விளை ஆர் அமுதின்***
***குயில் ஏய் மொழியார்க்***

*கொணரரய்; கொடியாய்!*
*துயிலேன் ஒருவேன் உயிர்*
*சோர்வு உணர்வாய்;*
*மயிலே! எனை நீ*
*வலி ஆடுதியோ?*

***மயிலே** - மயிலே! **அயில் ஏய் விழியார்** - வேலைப் போன்ற கண்களை உடையவரும்; **விளை ஆர் அமுதின்** - பாற்கடலில் தோன்றிய அரிய அமிழ்தினையும்; **குயில் ஏய் மொழியார்** - குயிலின் குரலையும் போன்ற மொழியுடையவளுமான சீதையை; **கொணராய்** - தேடிக் கொண்டு வந்து தரமாட்டாய். **கொடியாய்** - கொடுந் தன்மையுடையாய்! **துயிலேன் ஒருவேன்** - துயில் கொள்ளாதவனாய், தனித்திருப்பவனாகிய எனது; **உயிர் சோர்வு உணர்வாய்** - உயிர் தளர்ச்சி அடைதலை அறிவாய்; **எனை நீ வலி ஆடுதியோ** - (அறிந்திருந்தும்) நீ உன் வலிமை காட்டி என்னை வருத்துவாயோ?*

*மயிலின் தோகையும் சாயலும் சீதையின் கூந்தலையும், சாயலையும் நினைப் பூட்டியதால் இராமன் வருந்தினான். மயிலானது தனக்கு உதவி செய்யா விடினும் வருத்துதலாகிய கொடுமையையாவது செய்யாது தவிர்த்திருக்கலாம். மாறாக, அது சீதையைத் தேடித் தராததோடு துன்பத்தையும் பெருக்கியதால் 'கொடியாய்' என்றான். விழியார், மொழியார் என்பன உயர்த்தற்பொருளில் வந்த பன்மை. அமிழ்தினையும் குயிலையும் ஒத்த மொழி என்க. குயில் ஆகுபெயராய்க் குரலை உணர்த்திற்று. பிரிந்தார்க்கு உறக்கமின்மை இயல்பாகும். சீதையைப் பிரிந்திருக்கும் தனிமையை 'ஒருவேன்' எனும் சொல் உணர்த்தும். ஒருவன் உயிர் சோர்ந்திருக்கையில் வலிமை காட்டுதல் வீரம் அன்று ஆதலால் ''உயிர் சோர்வு உணர்வாய், எனை நீ வலி ஆடுதியோ?' என வினவினான். வலி ஆடுதல் - வன்மை காட்டி வருத்துதல்.*
*54*

*4202. 'மழை வாடையொடு ஆடி,*
*வலிந்து, உயிர்மேல்,*
*நுழைவாய்; மலர்வாய் நொடியாய்*
*- கொடியே! -*
*இழை வாள் நுதலாள்*
*இடைபோல் இடையே*
*குழைவாய்; எனது*
*ஆவி குழைக்குதியோ?*

***கொடியே** - கொடியே! **மழை வாடையொடு ஆடி** - மழைக் காலத்தில் வீசுகின்ற வாடைக்காற்றிற்கு ஏற்ப அசைந்து; **வலிந்து உயிர் மேல் நுழைவாய்** - (அவற்றின் சேர்க்கையால்) வலிமை பெற்று என் உயிரில் நுழைகின்றாய்; **மலர்வாய்** - (நான் வாடியிருக்க) நீ மலர் மலர்ந்து நிற்பாய் (மலர்ச்சியுடன் இருப்பாய்); **இழை வாள் நுதலாள்** - சுட்டி அணிந்த ஒளி பொருந்திய நெற்றியை உடைய சீதையின்; **இடை போல இடையே குழைவாய்** - இடைபோல இடைஇடையே துவண்டு காட்டி; **எனது ஆவி குழைக்குதியோ** - எனது உயிரை தளரச் செய்குவையோ? **நொடியாய்** - சொல்வாய்.*

*மழைக்காலத்தில் வீசிய வாடைக்காற்றோடு பழகி அதன் இயல்பைப் பெற்று, மெல்லியதாய்துவண்டு சீதையின் இடையை நினைப்பூட்டி, உயிர்மேல் நுழைந்து வருந்திய கொடியை நோக்கி இராமன் புலம்பினான். நொந்தவர் உயிர்*

*மேல் நுழைதலும், வருத்தமுற்றார் முன் மலர்தலும் கொடிக்கு இயல்பன்று. எனினும் 'சான்றாண்மை தீயினம் சாரக்கெடும்' (நாலடி - 179) என்றபடி கொடி வாடைக்காற்றோடு சேர்ந்து கொடிதாயிற்று என்பானாய் தாம் சேர்ந்த இனத்தால் இகழப்படுவர்' (நாலடி - 180) என்றபடி வாடைக் காற்றோடு சேர்ந்து நல்லியல்பு இழந்ததால் இராமன் குணம் மாறிய கொடியைப் பழித்தான். பிறர் துன்பம் கண்டு வருந்தாது முகமலர்தல் கொடியோர்க்கே இயல்பாகும். தன் உயிரை வதைத்தும் மலர்ந்தும், அசைவால் சீதையை நினைப்பித்தும் வருத்தியதால் 'குழைவாய் எனது ஆவி குழைக்குதியோ? என்றான்: குழைவாய் குழைக்குதியோ - என்ற இடத்து ஒலி நயம் காண்க. கொடியே என்ற விளி 'கொடுமையை உடையாய்' என்ற பொருளும் தோன்ற நின்றது. சீதை வருந்திக் கூறியதாகப் பின்னர் வரும் 5232 ஆம் பாடலை இங்கு நோக்குக. 55*

***4203. 'விழையேன் விழைவானவை;***
***மெய்ம்மையின் நின்று***
***இழையேன், உணர்வு***
***என்வயின் இன்மையினால்;***
***பிழையேன்; உயிரோடு***
***பிரிந்தனரால்;***
***உழையே! அவர் எவ்***
***உழையார்? உரையாய்!***

*__உழையே__ - மானே! __விழைவானவை விழையேன்__ - விரும்பத் தக்க பொருள்களைக் கூட விரும்பேன்; __மெய்ம்மையின் நின்று இழையேன்__ - உண்மையான நெறியினின்று சிறிதும் பிறழேன்; __உணர்வு என் வயின் இன்மையினால்__ - (ஆயினும்) (நலந்தீங்குகளை) அறியும் அறிவு என்னிடம் இல்லாமல் போய்விட்டதனால்; __பிழையேன்__ - நான் பிழை செய்தவன் ஆனேன்; __உயிரோடு பிரிந்தனர்__ - என்னுடைய உயிரோடு சானகியாரும் என்னை விட்டுப் பிரிந்து சென்று விட்டார்; __அவர் எவ் உழையார்__ - அவர் இப்பொழுது எங்கிருக்கிறார்? __உரையாய்__ - உரைப்பாயாக.*

*பொன்மானைச் சீதை பிடித்துத்தரக் கேட்டபோது, அம் மான் உண்மை மாான, மாயமாான என்று ஆராய்ந்து பார்க்கும் அறிவு இல்லாமல், இலக்குவன் 'மாயை இது' என்று கூறவும் கேட்காமல், அந்த மானைப் பின் தொடர்ந்து சென்றமையே, சீதை தன்னை விட்டுப் பிரிந்து செல்ல நேரிட்டது என நடந்த நிகழ்ச்சியை நினைந்து பார்த்து வருந்திப் பேசியதாகவும் முதல் மூன்றடிகள் உணர்த்தும். இராமன் பிழை புரிந்ததற்கு 'உணர்வு' இன்மையே காரணமாயிற்று. சீதை தன்னை விட்டுப் பிரிந்து, தன் உயிர், உடம்பை விட்டுப் பிரிந்தது போலும் என்பானாய் 'உயிரோடு பிரிந்தனர்' என்றான். 'ஈண்டு நீ இருந்தாய்' ஆண்டு அங்கு எவ் உயிர் விடும் இராமன்? 'பூண்ட மெய் உயிரே நீ' (5304) 'ஓருயிராக உணர்க உடன் கலந்தார்க்கு ஈருயிர் என்பார் இடை தெரியார்' (பு.வெ.மா.262) என்பன காண்க. உழை என்ற சொல் மான், இடம் என்ற இரு வேறு பொருளில் அமைந்த நயம் காண்க. மான் வடிவம் கொண்டவனால் சீதையைப்*

*பிரிந்ததனால் மானையே சீதை உள்ள இடத்தைத் தேடித் தருமாறு இராமன் வேண்டினான் என்க.* *56*

***4204. 'பயில் பாடக மெல் அடி பஞ்சு அனையார்***
***செயிர் ஏதும் இலாரோடு தீருதியோ?***
***அயிராது உடனே அகல்வாய் அலையோ?***
***உயிரே! கெடுவாய்! உறவு ஓர்கிலையோ?***

***உயிரே*** *- என் உயிரே;* ***பயில் பாடக மெல்லடி*** *- பொருந்திய பாடகம் என்னும் அணியை அணிந்த மெல்லிய பாதம்;* ***பஞ்சு அனையார்*** *- பஞ்சுபோல் மென்மையாய் இருக்கப் பெற்றவரும்;* ***செயிர் ஏதும் இலாரொடு*** *- எந்த விதக் குற்றமும் இல்லாதவராகிய சீதையோடு;* ***தீருதியோ*** *- (நீயும்) என்னை விட்டு நீங்கிச் செல்வாயோ?* ***அயிராது*** *- (அங்ஙனம் செல்வதனால்) ஐயம் கொள்ளாமல்;* ***உடனே அகல்வாய் அலையோ*** *- அவருடன் சென்றிருப்பாய் அல்லையோ?* ***கெடுவாய்*** *- கேடு அடைந்ததையோ?* ***உறவு ஓர்கிலையோ*** *- எனக்கும், சீதைக்கும் உள்ள ஒன்றிய உறவை நீ அறியவில்லையோ?*

*பாடகம் - மகளிர் காலில் அணியும் ஒரு வகை அணி. இராவணனால் கவரப்படினும் மாசற்று இருந்தவராதலின் 'செயிர் - ஏதும் இலாரோடு' என்றான். 'எனக்கும் என் உயிராகிய சீதைக்கும் உள்ள உறவை நீ உணராயோ? அங்ஙனம உணர்ந்திருப்பின், அவர் சென்றவன் நீ உடன் சென்றிருப்பாய்' எனக் கூறி, இராமன் புலம்பினான். கார்காலத்தில் சீதையைப் பிரிந்து வருந்தும் துயரத்தை விட, உயிர் பிரிதல் நல்லது எனத் துயரத்தின் மிகுதியை உயிர் மேல் வைத்துப் புலப்படுத்தியதாகும்.*

*இத்தகைய உயிர்த் தொடர்பைச் "செரு ஆர்தோள! நின் சிந்தை உளேன் எனின், மருவார் வெஞ்சரம் எனையும் வவ்வுமால், ஒருவேனுள் உளை ஆகின், உய்தியால்; இருவேமுள் இருவேம் இருந்திலேம்" (4104) என்ற தாரை புலம்பலில் காணலாம்.* *57*

***4205. 'ஒன்றைப் பகராய்,***
***குழலுக்கு உடைவாய்;***
***வன்தைப்புறு நீள்***
***வயிரத்தினையோ! -***
***கொன்றைக் கொடியாய்! -***
***கொணர்கின்றிலையோ!***
***என்றைக்கு உறவு***
***ஆக இருந்தனையோ?***

***கொன்றைக் கொடியாய்*** *- கொன்றை மரமாகிய கொடியவனே!* ***குழலுக்கு உடைவாய்*** *- சீதையின் கூந்தலுக்கு நீ தோற்றாய்;* ***வன்தைப்புறு நீள் வயிரத்தினையோ*** *- அதனால் அவரிடம் மட்டுமன்றி என்னிடத்தும் வலிய நன்கு பதியப் பெற்ற நீண்ட பகையை உடையாயோ?* ***கொணர்கின்றிலையோ*** *- அவரை என்னிடம் கொண்டுவர இயலவில்லையோ?* ***ஒன்றைப் பகராய்*** *- யாதொன்றும் விடை கூறுகின்றாயில்லை;*

***என்றைக்கு உறவாக இருந்தனையோ*** - *நீ என்றைக்குத்தான்உறவாக இருந்தாய்? (ஒரு நாளும் இல்லை).*

*குழலுக்கு கொன்றைக்காய் கருநிறம் பற்றியும் நீட்சி பற்றியும் உவமை. சீதையின் கூந்தலை நினைவுபடுத்தி வருத்தியதால் 'கொடியாய்' என்றான். கொன்றை மரம் சீதையைத் தேடிக் கொணராமைக்குக் காரணம், அது சீதையின் கூந்தலுக்குத் தோற்றமையால் கொண்ட பகைமையினால் என இராமன் காரணம் கற்பித்துக் கூறுகிறான். இங்ஙனம் இராமன் சீதையைப் பிரியாத காலத்தும் அவள் கூந்தலுக்கு தோற்றதால் பகைமை கொண்டும், சீதையைப் பிரிந்த காலத்து அவள் கூந்தலை நினைப்பூட்டி இராமனை வருத்தியும், எதற்கும் விடை கூறாதும் இருத்தலின் 'என்றைக்கு உறவாக இருந்தனையோ?' என வினவினான். கொன்றை, மகளிர் சூடிக் கொள்ளும் மலரன்று ஆதலின் 'நீ என்றைக்கு அவர் கூந்தலோடு உறவாக (தொடர்பு கொண்டு) இருந்தனை எனக் கூறினான் என்க. கொன்றை என்னும் சொல் 'கொனறாய்' என்று பொருள்படுவதால் கொல்லும் இயல்புடையாய் என்பனாய் 'என்றைக்கு உறவாக இருந்தனையோ என்றான் எனவும் நயம்படக் கூறலாம். கொன்றை ஒன்றும் விடை கூறாது இருந்ததால், அதனை வன்மையும், வயிரமும் உடையதாகக் கூறினான். நீள் வயிரம் - நெடுங் காலமாக உள்ள வயிரம், பல நாளாக உள்ள பகைமை இயல்பாகவே வயிரம் பாய்ந்த மரத்திற்கு உறவின்மை காரணமாக வயிரம் (பகைமை) உண்டானதாகக் கற்பித்தான். ஒன்றைப் பகராய் என்பதற்கு 'ஒரு வார்த்தை பேசு' என்று கூறியதாகவும் பொருள் கொள்ளலாம்.* 58

ஆசிரிய விருத்தம்

***4206. 'குரா அரும்பு அனைய கூர் வாள்***
***எயிற்று வெங் குருளை நாகம்***
***விராவு வெங் கடுவின் கொல்லும்***
***மெல் இணர் முல்லை, வெய்தின்***
***உராவ அருந் துயரம் மூட்டி,***
***ஓய்வு அற மலைவது ஒன்றோ?***
***இராவண கோபம் நிற்க,***
***இந்திரகோபம் என்னோ?***

***குரா அரும்பு அனைய*** - *குராமரத்தின் அரும்பையொத்த;* ***கூர் வாய் எயிற்று*** - *கூர்மையான ஒளிபொருந்திய பற்களை உடைய;* ***வெம் குருளை நாகம்*** - *கொடிய பாம்பின் குட்டியிடத்து;* ***விராவு வெங்கடுவின் கொல்லும்*** - *பொருந்திய கொடிய நஞ்சு போலக் கொல்லுகின்ற;* ***மெல் இனர் முல்லை*** - *மெல்லிய கொத்துக்களாய் உள்ள முல்லை அரும்புகள்;* ***வெய்தின் உராவரும் துயரம் மூட்டி*** - *கொடிதாய் பொறுத்தற்கரிய துன்பத்தை வளர்த்து;* ***ஓய்வு அற மலைவது ஒன்றோ*** - *இடைவிடாமல் என்னை எதிர்த்துப் போரிடுவது ஒன்று மட்டும் தானா?* ***இராவணன் கோபம் நிற்க*** - *இராவணனது கோபம் ஒரு புறம் நிற்கையில்;* ***இந்திர கோபம் என்னோ*** - *இந்திர கோபமொன்று என்னை வருத்தத் தொடங்கியது எதற்காகவோ?*

*குரா மரத்தின் அரும்பு வெண்ணிறத்தானும் கூர்மையானும் பாம்பின் பல்லுக்கு உவமையாயது. குருளை இளமைப் பெயர்: 'நாயே, பன்றி, புலி, முயல்*

*நான்கும், ஆயுங்காலைக் குருளை என்ப' (தொல் மரபி.8) என்ற நூற்பாவில் 'ஆயுங்காலை' என்றதனால் 'சிறு வெள்ளரவின் அவ்வரிக் குருளை' என்பதுங் கொள்க என்று உரை வகுத்தது காண்க. இளையதாயினும் பாம்பு கொலை செய்வதில் வல்லது ஆதல்போல முல்லையும் அரும்பு நிலையிலேயே வருத்தும் வன்மையுடையதாயிற்று என்பது புலப்படுத்தக் 'குருளைநாகம்' என்றான். பாம்பு கூர்மையான, வலிய பற்களையுடையதாய்க் கொல்ல, முல்லை அரும்பு மெல்லியதாய் நஞ்சு இல்லாமலேயே கொல்லவல்லது ஆதலின் பாம்புக் குட்டியினும் முல்லை அரும்பு கொடிதாயிற்று வேற்றுமை அணி.*

*இந்திரகோபம் என்பது இந்திரன் கோபம் என்றும் தம்பலப்பூச்சி என்றும் பொருள்படும். கார்காலத்தில் இவை காணப்படும். இந்திரன் ஏவலால் மழைபொழியும் காலத்தில் இவை மிகுதியாகக் காணப்படுதலின் 'இந்திரகோபம்' என்னும் பெயர் பெற்றன. முல்லையும், தம்பலப்பூச்சியும் சீதையின் பற்களையும், வாயிதழையும் நினைவுபடுத்தியதால் அவை தன்னை வருத்தினவாக இராமன் உரைத்தான். பற்களுக்கு முல்லையும் வாய் இதழிற்குத் தம்பலப்பூச்சியும் உவமை ஆயின. சீதையைக் கவர்ந்த இராவணன் தனக்குப் பகைவனாகிவிட்டதால், தன் மீது இராவணன் கோபம் கொள்வது இயற்கையாகிறது. மேலும் சூர்ப்பணகையின் மூக்கறுப்பு நிகழ்ச்சி, இராவணன் சினமாக வளர, அதன் காரணத்தால் சீதையைப் பிரிய நேரிட்டது என உணர்ந்தவனாய் இராவணன் கோபமே சீதையின் பிரிவிற்குக் காரணமாயிற்று என்றான், அதனால் முல்லையும், தம்பலப்பூச்சியும் தன்னை வருத்துவதற்கு இராவணன் கோபமே காரணம் என்பானாய் 'இராவண கோபம் நிற்க' என்றான். இராவணன் கோபத்தால் தான் வருந்திக் கொண்டிருக்க, (இந்திரகோபமும்) தம்பலப்பூச்சிகளும் சீதையின் இதழ்களை நினைவூட்டி வருத்தும் நிலை எதற்காக என மயங்கினான். இராவணன் அரக்கன் ஆதலில் வருத்துதல் இயல்பு ஆனால், தன் மாட்டு நட்புக் கொண்ட இந்திரன் கோபம் கொண்டு வருத்துவது ஏற்புடைய செயல் தானோ என்றும் பொருள் கொள்ள வைத்த நயம்பாராட்டத்தக்கதாம். 59*

***4207. 'ஓடை வாள் நுதலினாளை***
***ஒளிக்கலாம் உபாயம் உன்னி,***
***நாடி, மாரீசனார் ஓர்***
***ஆடக நவ்வி ஆனார்** ; **வாடைஆய், கூற்றினாரும், உருவினை மாற்றி வந்தார்;***
***கேடு சூழ்வார்க்கு வேண்டும் உருக் கொளக் கிடைத்த அன்றே?***

***மாரீசனார்** - (முன்பு) மாரீசனார்; **ஓடை வாள் நுதலினாளை** - (என்னை வருத்த) பொன்பட்டம் அணிதற்குரிய நெற்றியையுடைய சீதையை; **ஒளிக்கலாம் உபாயம் எண்ணி** - வஞ்சனையால் கவர்ந்து மறைப்பதற்குரிய வழியை ஆலோசித்து; **நாடி** - அறிந்து; **ஓர் ஆடக நவ்வி ஆனார்** - பொன் மயமானதொரு மான் வடிவம் கொண்டார்; **கூற்றினாரும்** - (இப்பொழுது) யமனாரும்; **வாடை ஆய்** - (என்னை*

*வருத்த) வாடைக்காற்றாக; **உருவினை மாற்றி வந்தார் -** தன் உருவத்தை மாற்றிக் கொண்டு வந்தார்; **கேடு சூழ்வார்க்கு -** கெடுதி செய்ய நினைப்பார்க்கு; **வேண்டும் உருக்கொளக் கிடைத்த அன்றே -** வேண்டிய வடிவங்களெல்லாம் எடுக்க முடிந்தன அல்லவா? (என்னே கொடுமை என்றவாறு).*

*ஓடை - நெற்றிப்பட்டம். நெற்றி அழகில் கொண்ட ஈடுபாட்டால் 'ஓடை வாள் நுதலினாள்' என்றான். பிரிந்து நின்ற தன்னை வருத்ததுல் நோக்கி வாடையை யமன் என்றான், 'கூதிர் வாடை வெங்கூற்றினை நோக்கினன்' (3555) என முன்னும் வந்தது காண்க. 'கூதிர் உருவில் கூற்றம், காதலர்ப் பிரிந்த எற்குறித்து வருமே' (குறுந் - 197) என்ற கூற்றையும் ஒப்பிட்டுக் காணலாம். மாரீசனார் கூற்றினார் என்ற மரியாதைப் பன்மைகள் சினமும் இகழ்ச்சியும் பற்றி வந்தன. சீதையைக் கவரக் கேடு சூழ்ந்த மாரீசனுக்கும், பிரிந்திருக்கும், தன்னை வருத்தலாகிய கேடு சூழ்ந்த வாடைக்கும் மானுரு எடுக்கவும், யமன் உரு எடுக்கவும் முடிந்ததே என வியப்பானாய் 'வேண்டும் உருக்கொளக்கிடைத்த அன்றே' என்றான். சிறப்பாக ஒன்றைக் கூறி அதனின்று பொதுப்பொருள் ஒன்றும் கூறியமையின் இப் பாடல் வேற்றுப் பொருள்வைப்பணி. 60*

***4208 . 'அருவினை அரக்கர் என்ன,***
***அந்தரம் அதனில் யாரும்***
***வெருவர, முழங்குகின்ற***
***மேகமே! மின்னுகின்றாய்;***
***''தருவல்'' என்று இரங்கினாயோ?***
***தாமரை மறந்த தையல்***
***உருவினைக் காட்டிக் காட்டி,***
***ஒளிக்கின்றாய், ஒளிக்கின்றாயால்!***

***அருவினை அரக்கர் என்ன -*** *பொறுத்தற்கரிய தீய செயல்களைச் செய்யும் அரக்கர்களைப் போல;* ***அந்தரம் அதனில் -*** *ஆகாயத்தில்;* ***யாவரும் வெருவர -*** *எல்லோரும் அஞ்சுமாறு;* ***முழங்குகின்ற மேகமே -*** *ஆரவாரிக்கின்ற மேகமே!* ***மின்னுகின்றாய் -*** *(சீதையின் வடிவம் காட்டி) ஒளிவிடுகின்றாய்;* ***தருவல் என்ற இரங்கினாயோ -*** *'அவளை அளிப்பேன்' என்று என்மாட்டு இரக்கம் காட்டினாயா;* ***தாமரை மறந்த தையல் -*** *தாமரை மலரை மறந்தவளாய் (மிதிலையில் பிறந்த) சீதையின்;* ***உருவினைக் காட்டிக் காட்டி -*** *வடிவத்தைக் காட்டிக் காட்டி;* ***ஒளிக்கின்றாய், ஒளிக்கின்றாய் -*** *மறைக்கின்றாய், மறைக்கின்றாய்.*

*பிறரால் தடுக்க முடியாத கொடிய செயல் செய்பவராதலின் அரக்கரை 'அருவினை அரக்கர்' என்றான். நிறத்தாலும் முழக்கத்தாலும் மேகத்திற்கு அரக்கர் ஒப்பாயினர். 'பகுவாய் முழை திறந்து, ஓர் வார்த்தை உரை செய்தனள். இடிக்கும் மழை அன்னாள்' (371), 'எப்பாலும் விசும்பின் இருண்டு எழுவாய்; அப்பாதக வஞ்ச அரக்கரையே ஒப்பாய்' (4200) என முன்வந்த பாடற்பகுதிகள் ஒப்பு நோக்கத்தக்கன. சீதை திருமகளே ஆதலின் 'தாமரை மறந்த தையல்' என்றான்.*

*சீதையைத் திருமகளாகப் 'போதினை வெறுத்து அரசர் பொன் மனை புகுந்தாள். (1151); 'அவ் அல்லி மலர் புல்லும மங்கை இவளாம்' (1148); 'மையறு மலரின் நீங்கி, யான் செய் மாதவத்தின் வந்து செய்யவள் இருந்தாள்' (480) 'ஐயன் அயோத்தியில் பிறந்த பின்பும், பிரியலள் ஆயினாள்' (1824) அமிழ்மின் வந்த செந்திரு நீர் அல்லீரேல் அவளும் வந்து ஏவல் செய்யும் (7684) என்ற இடங்களிலும் இக்கருத்தைக் குறிப்பிடுதல் காண்க.*

*பெரும்பாலும் மகளிர் இடைக்கு மின்னலை உவமை கூறுவர், இப்பாடலில் சீதைக்கே மின்னலை உவமையாக்கினார். 'சதகோடி மின் சேவிக்க மின் அரசு என்னும்படி நின்றாள்' (510) என முன்னரும் கூறியது காண்க. தருவல் என்று இரங்கினாயோ என்றதற்கு (முழக்கத்தால் அரக்கர் போல் இருப்பினும்) சீதையின் உருவத்தைக் காட்டலால் தன்பால் இரக்கம் காட்டுவதாகக் கொண்டு என்னிடத்து இரக்கம் காடடினாயோ' எனவும் கொள்ளலாம். காட்டிக் காட்டி, ஒளிக்கின்றாய், ஒளிக்கின்றாய் - என்ற அடுக்குகளில் அவலச்சுவை மிகுவதுகாண்க. 61.*

***4209. 'உள் நிறைந்து உயிர்க்கும் வெம்மை***
***உயிர் சுட, உலைவேன் உள்ளம்***
***புண் உற, வாளி தூர்த்தல்***
***பழுது, இனி; போதி; - மார! -***
***எண் உறு கல்வி உள்ளத்து***
***இளையவன், இன்னே, உன்னைக்***
***கண்ணுறும்ஆயின், பின்னை,***
***யார், அவன் சீற்றம் காப்பார்?***

***மார** - மன்மதனே! **உள் நிறைந்து** - உள்ளிடம் எல்லாம் நிரம்பி; **உயிர்க்கும் வெம்மை** - (அங்கு இடமின்றி) வெளிப்படும் (பிரிவால் நிகழ்ந்த) வெப்பம்; **உயிர் சுட** - என் உயிரை எரிக்க; **உள்ளம் உலை வேன்** - மனம் வருந்திக் கொண்டிருக்கிறேன்; **இனி** - இனிமேலும்; **புண் உற வாளி தூர்த்தல்** - புண்படுமாறு உன் மலரம்பெய்தி அழித்தல்; **பழுது** - பயனற்ற செயலாகும்; **போதி**- (ஆதலால்) நீ என்னை விட்டுப் போவாயாக; **எண் உறு கல்வி உள்ளத்து** - மதிக்கத்தக்க கல்வி பயின்ற மனத்தை உடைய; **இளையவன்** - என் தம்பி இலக்குவன்; **இன்னே உன்னைக்கண்ணுறும் ஆயின்** - இப்பொழுதே உன்னைக் காண்பானாயின்; **பின்னை** - பின்பு; **அவன் சீற்றம் காப்பார் யார்** - அவன் கோபத்திற்கு எதிரே நிற்பவர் யாருளர்?*

*பிரிவாற்றாமையாகிய வெம்மையே தன் உயிரைச் சுடுதற்குப் போதுமாதலின், மன்மதனின் மலரம்பு மிகையாகும். தேவையில்லை என்பானாய் 'வாளி தூர்த்தல் பழுது' என்றான். ஏற்கனவே பிரிவுத் துன்பத்தால் உயிர் வாட, மேலும் அம்புகளைச் செலுத்தி வருத்துதல் (போர்நெறிக்குக்) குற்றமாகும் (பழுது) என்றும் பொருள் கொள்ளலாம். தூர்த்தல் என்றமையால் அம்புகளின் மிகுதி புலப்படும். எண்ணுறுகல்வி - புலன் ஐந்தையும் வெல்லும் ஞான நூல் தெளிவைக் குறித்தது. இலக்குவன் பார்த்துச் சினம் கொள்வதற்கு முன்னர் அம்புகள் எய்வதை நிறுத்தி விட்டுச் செல்லுமாறு மன்மதனை இராமன் எச்சரித்தான். அவன் பார்த்து*

*விட்டால், எழக் கூடிய கோபத்தைத் தணிப்பவர் எவரும் இல்லை' என்றனன் இலக்குவனின் அறிவுச் சிறப்பை 'இயைந்த நீதி, வளையா வரும் நல்நெறி நின் அறிவு ஆகும் அன்றே' (1730) என்று இராமனும் "மேதா! இளையோய்" (8689) எனச் சீதையும் குறித்தமை காண்க. குகனைக் கண்டதும் 'உள்ளம் தூயவன், தாயின் நல்லான்' (1964) என மதிப்பிடும் நுட்பமும், மாரீசன் மானாக வந்தபோது அது பொய்ம்மானென அறிந்து கூறிய மதி நுட்பமும் அவனிடம் இருந்தன. இலக்குவன் சீற்றம் தணித்தற்கரியது. 'மூட்டாத காலக் கடைத்தீ என முண்டு எழுந்தான்' (1716), 'அண்ணல் பெரியோன் தனது ஆதியின் மூர்த்தி ஒத்தான்' (1717) என்ற அடிகள் அவன்*

*சினக்கோலத்தை உணர்த்தும். சூர்ப்பணகை மூக்கறுக்கறுப்பட்டது அவன் சினத்தின் விளைவே, ''வான் என்பது என்? வையகம் என்பது என்?. . . . கோன் என்பது ஏன்? - எம்பி கொதித்திடு மேல்'' (7804) என்ற இராமன் கூற்றையும் காண்க. இராமன் கூறியாங்கு வாடைக்காற்று நீங்கிவிடின், பழுதான செயல் செய்யாது தப்புவதுடன் இலக்குவன் சீற்றத்தினின்றும் பிழைக்கலாம் என்று உணர்த்தினான். ''உளைவன இயற்றல்; ஒல்லை உன்னிலை உணருமாகில், இளையவன் முனியும், நங்கை 'ஏகுதி விரைவில்' (2798) எனச் சூர்ப்பணகையை நோக்கி இராமன் கூறியமையும் ஈண்டு நினைவு கூரலாம். இலக்குவன் அறிவுத் திறத்தையும் வீரத்தையும் இராமன் புகழ்ந்ததை இப்பாடலில்காண்கிறோம். 62*

***4210. 'வில்லும், வெங் கணையும், வீரர்,***
***வெஞ் சமத்து அஞ்சினார்மேல்***
***புல்லுந அல்ல; ஆற்றல் போற்றலர்க்***
***குறித்தல் போலாம்; -***
***அல்லும் நன் பகலும் நீங்கா***
***அனங்க! நீ அருளின் தீர்ந்தாய்;***
***''செல்லும்'' என்று, எளிவந்தோர்மேல்,***
***செலுத்தலும் சீர்மைத்து ஆமோ?'***

**வீரர் வில்லும் வெங்கணையும் -** *வீரர்களின் வில்லும் கொடிய அம்பும்;* **வெஞ்சமத்து அஞ்சினார்மேல் -** *கொடிய போரில் அஞ்சிய வர்கள் மேல்;* **புல்லுந அல்ல -** *பாயத்தக்கன அல்ல,* **ஆற்றல் போற் றலர் -** *தம் வலிமையை மதியாதவர்களையே;* **குறித்தல் போலாம் -** *குறியாகக் கொண்டு எய்வதற்கு உரியவை போலும்!* **அல்லும் நன்பக லும் நீங்கா அனங்க! -** *(அங்ஙனமிருக்க) இரவும் பகலும் என்னை விட்டு நீங்காத மன்மதனே!* **நீ அருளின் தீர்ந்தாய் -** *நீ உன் அருட் குணத்திலிருந்தும் நீங்கினாய்.* **'செல்லும்' என்று -** *(நமது வலிமை) இவ்விடத்துப் பலிக்கும் என்று கருதி;* **எளிவந்தோர்மேல் செலுத்துதலும் -** *எளியவர்மீது செலுத்தி வருத்துதலும்;* **சீர்மைத்து ஆமோ -** *சிறப்பிற்குரிய செயல் ஆகுமா?*

*முன் பாடலில் 'போதி மார' என வேண்டியும் தன்னை விட்டு நீங்காத மன்மதனை நோக்கி 'எளியார்மீது போர் செய்தல் சரியன்று, வீரத்தை மதியாதவர்மீது படைக்கல்ம் செலுத்துதல் முறை; அங்ஙனமிருக்க எளிய என்மீது உன் வீரம் காட்டுதல் தகுதியோ?' எனப் பழித்துப் பேசினான். 'அழிகுநர் புறக்கொடை அயில் வாளோச்சாக் கழிதறுகண்மை' என்பது தழிஞ்சி என்னும் புறப்பொருள்*

*துறையாகும். (பு வெ.மா.55) இராவணன் மெலிவு கண்டு 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' (7271) என்ற இராமன் வீரம் காண்க. பகைவர் மெலிவு நோக்கி, அவர்கள் மேல் போர் தொடுக்காதிருத்தல் போராண்மை எனப்படும். அருளால் வருவது ஆதலின் அதனை இழந்த மன்மதனை 'அருளின் தீர்ந்தாய்' என்றான் 'செல்லும்' என்ற காரணத்தால் அம்புகள் தொடுத்து வருத்துதல் புகழ்க்குரிய செயலன்று ஆதலின் 'சீர் மைத்து ஆமோ?' எனப் பழித்தான். இரவுப் போதினும் பகற்காலத்தில் பிரிவுத் துன்பம் குறைதல் நோக்கி 'நன்பகல்' என்றான் எனலாம். 'காலைக்குச் செய்த நன்று என் கொல் எவன்கொல் யான், மாலைக்குச் செய்த பகை' என்பது குறள் (1225). செல்லுதல் - பலித்தல். உன் சாமர்த்தியம் இங்குச் செல்லாது' என்று பொருள்படும்.*

*சிவபிரான் சீற்றத்தால் மன்மதன் உடம்பு எரிந்து விட்டமை பற்றி அவனுக்கு இப்பெயர்ஏற்பட்டது.* *63*

இலக்குவன் இயம்பிய தேறுதல் மொழிகள்

***4211. என்ன இத் தகைய பன்னி,***
***ஈடு அழிந்து, இரங்குகின்ற***
***தன்னை ஒப்பானை நோக்கி,***
***தகை அழிந்து அயர்ந்த தம்பி,***
***'நின்னை எத் தகைமை ஆக***
***நினைந்தனை? - நெடியோய்!' என்ன,***
***சென்னியில் சுமந்த கையன்***
***தேற்றுவான், செப்பலுற்றான்:***

***என்ன இத்தகைய பன்னி*** - *என்று இத்தன்மையவான சொற் களைப் பல முறை சொல்லி;* ***ஈடு அழிந்து இரங்குகின்ற*** - *வலிமை அழிந்து வருந்துகின்ற;* ***தன்னை ஒப்பானை நோக்கி*** - *(தனக்கு உவமை இல்லாதவனாதலின்) தனக்குத் தானே ஒப்பான இராமனை நோக்கி;* ***தகை அழிந்து அயர்ந்த தம்பி*** - *(அவன் துயர் கண்டு) தன் துணிவையும் ஓரளவு இழந்த தம்பி இலக்குவன்;* ***சென்னியில் சுமந்த கையன்*** - *தன் தலைமீது உயர்த்திய கைகளை உடையவனாய்;* ***தேற்றுவான்*** - *(தன் அண்ணனைத்) தேற்றும் பொருட்டு;* ***நெடியோய்*** - *"(அப்பெருந்தகையைப் பார்த்துப்) பெரியவனே!* ***நின்னை எத் தகைமை ஆக நினைந்தனை*** - *உன்னை எத்தன்மை உடையவனாகக் கருதிவிட்டாய்?"* ***என்னா*** - *என்று கூறி;* ***செப்பல் உற்றான்*** - *மேலும் பல சொல்லத் தொடங்கினான்.*

*ஈடு அழிதல் - உடல் வலிமையும் மனவலிமையும் இழத்தல். இராமன் 'தன்னை ஒப்பான்' எனப்பட்டான். இதனைப் பொது நீங்கு உவமை என்பர். "தன் துணை ஒருவரும், தன்னில் வேறு இலான்" (3968) என்றதும் காண்க. தனக்குவமை இல்லாதவன் கடவுளாதலின் இராமனின் தெய்வநிலை உணர்த்தப் பெற்றது. பெருமைக்குரியவன் என்பதைச் சுட்டவே 'நெடியோய்' என விளித்தான். நெடியோய் என்ற விளி இராகவனுடைய இறைத் தன்மையையும் குறிப்பாகக் கூறுவதாகும். இலக்குவனின் அடக்கம் 'சென்னியில் சுமந்த கையன்' என்ற தொடரில் புலனாம். தேற்றுவான் - வானீற்று வினையெச்சம்.* *64*

கலிவிருத்தம்

***4212. ' "காலம் நீளிது, காரும் மாரியும்***
***வந்தது" என்ற கவற்சியோ?***
***நீலமேனி அரக்கர் வீரம்***
***நினைந்து அழுங்கிய நீர்மையோ?***
***வாலி சேனை மடந்தை வைகு இடம்***
***நாட வாரல் இலாமையோ?***

***சாலும் நூல் உணர் கேள்வி வீர! -***
***தளர்ந்தது என்னை? - தவத்தினோய்!***

***சாலும் நூல் உணர் கேள்வி வீர -*** *மிகுதியான நூல்களைக் கற்று உணர்ந்த அறிவையும் கேட்டு அறிந்த அறிவையும் உடைய வீரனே!* ***தவத்தினோர் -*** *தவ ஒழுக்கத்தை மேற்கொண்டவனே!* ***கார் காலமும் நிளிது -*** *'கார்காலம் நீண்ட காலத்தினதாய் உள்ளது;* ***மாரியும் வந்தது -*** *மழையும் வந்துவிட்டது';* ***என்ற கவற்சியோ -*** *என்ற கவலைதானோ?* ***நீலமேனி அரக்கர் வீரம் நினைந்து -*** *கருநிற மேனியராய அரக்கர்களின் வீரத்தை நினைத்து;* ***அழுங்கிய நீர்மையோ -*** *(அவர்களை வெல்ல இயலாதோ என) வருந்திய தன்மை தானோ?* ***மடந்தை வைகு இடம் நாட -*** *சீதை உள்ள இடத்தைத் தேடுவதற்கு;* ***வாலி சேனை வாரல் இலாமையோ -*** *வாலியின் சேனை இன்னும் வரவில்லை என் பதனாலோ?* ***தளர்ந்தது என்னை -*** *நீ மனம் தளர்ச்சி அடைந்ததற்குக் காரணம் யாது?*

*நூலறிவும், கேள்வியறிவும், வீரமும், தவ ஒழுக்கமும் மிக்க இராமன் தளர்ச்சியடைதல் பொருந்தாது என்பானாய்ச் 'சாலும் நூல் உணர் கேள்வி வீர தளர்ந்தது என்னை தவத்தினோய்' என்றான். இராமன் தளர்ச்சிக்குக் காரணம் எதுவெனக் கேட்பான் போல அவனைத் தேற்றினான். சுக்கிரீவனுக்குப் பட்டம் கட்டிய இலக்குவனே இப்பொழுது சுக்கிரீவன் படை என்று கூறாமல் வாலி சேனை என்று கூறுவது சுக்கிரீவனை எந்த அளவிற்கு இலக்குவன் ஏற்றுக் கொள்கிறான் என்பதற்குச் சான்றாகும். 65*

***4213. மறை துளங்கினும், மதி துளங்கினும்,***
***வானும் ஆழ் கடல் வையமும்***
***நிறை துளங்கினும், நிலை துளங்குறு***
***நிலைமை நின்வயின் நிற்குமே?***
***பிறை துளங்குவ அனைய பேர் எயிறு***
***உடைய பேதையர் பெருமை, நின்***
***இறை துளங்குறு புருவ வெஞ் சிலை***
***இடை துளங்குற, இசையுமோ?***

***மறை துளங்கினும் -*** *வேதங்களே பிறழ்ந்தாலும்;* ***மதி துளங்கினும் -*** *சந்திரன் நிலைமாறினாலும்;* ***வானும் ஆழ்கடல் வையமும் -***

*ஆகாயமும், ஆழ்ந்த கடலால் சூழப்பட்ட பூமியும்;* ***நிறை துளங்கினும் -*** *தத்தம் நிலையில் மாறுபடினும்;* ***நிலை துளங்குறு நிலைமை -*** *இயல்பான பெருமை நிலையினின்று மாறுபடும் தன்மை;* ***நின் வயின் நிற்குமோ -*** *நின்னிடத்து நிற்கத் தகுந்ததோ? (அன்று என்றபடி).* ***பிறை துளங்குவ அனைய -*** *பிளைகள் விளங்குவன போன்ற;* ***பேர் எயிறு உடைய -*** *பெரிய பற்களை உடைய;* ***பேதையர் பெருமை -*** *அறிவில்லாத அரக்கர்களுடைய படைவலிப் பெருமையெல்லாம்;* ***நின் இறை துளங்குறு -*** *உன்னுடைய, தலைமை பெற்று விளங்குகின்ற;* ***புருவ வெஞ்சிலை -*** *புருவங்களாகிய கொடிய வில்;* ***இடை துளங்குற -*** *நடுவே சிறிது அசைந்த அளவில்;* ***இசையுமோ -*** *நிற்கக் கூடியனவோ? (நிற்கமாட்டா என்பதாம்)*

*இயற்கையில் நிகழாதன நிகழினும் நிலைகுலையாத பெருமையுடையவன் இராமன் என்பதை உணர்த்தவே 'நிலை துளங்குறு நிலைமை நின்வயின் நிற்குமோ' என்றான். 'வேலை கரையிழந்தால் வேத நெறி பிறழ்ந்தால் ஞால முழுதும் நடு விழந்தால்' (நளவெண்பா 222), வானந்துளங்கிலென், மண் கம்பமாகிலென் '(மூவர் தேவா - தனித்திருவிருத்தம் - 8), பாஅல் புளிப்பினும் பகல் இருளினும், நாஅல் வேத நெறிதிரியினும் திரியாச் சுற்ற மொடு' (புறம் - 2) என்பன ஒப்பு நோக்கத்தக்கன. சந்திரன் தடுமாறலாவது - திசைமாறி உதித்தல், தண்மையன்றி வெம்மையை அளித்தலாம், சந்திரனைக் கூறியதால் இனம் பற்றி ஞாயிறு முதலிய கோள்கள் துளங்குதலும் இங்குக் கொள்ளப்படும். ஆகாயம் நிறை துளங்கலாவது - ஏனைய பூதங்கட்கு இடம் கொடுத்தலும், ஒலியைத்தன் குணமாகவுடைமையும் இல்லாமல் கெடுதலாம். வையம் துளங்கலாவது - வன்மைப் பொருட்கு இடமாதலும், மணத்தை இயல்பாக உடைமையும் தவிர்தலாம். வானத்தையும் வையத்தையும் கூறியதால் மற்றை மூன்று பூதங்களையும் உட்கொண்டு அவற்றின் பிறழ்ச்சியையும் கொள்க.*

*இராமன் பெருமை, வல்லமை இவற்றை அறியாது தீங்கிழைக்க வந்தவராதலின் அரக்கரைப் பேதையர் என்றான். அரக்கர் பெருமையெலாம் அழிய இராமன் தன் புருவமாகிய வில்லைச் சிறிது நெரித்தால்' போதுமானது என்பானாய்ப் 'புருவ மென்சிலை இடை துளங்குற இசையுமோ?' என்றான். புருவமென்சிலை - உருவகம். 'துளங்கினும்' என்றவற்றிலுள்ள உம்மைகள் எண்ணுப் பொருளொடு, துளங்கா என எதிர்மறைப் பொருளையும்சுட்டும். 66*

***4214. 'அனுமன் என்பவன் அளவு அறிந்தனம்;***
***அறிஞ! அங்கதன் ஆதியோர்***
***எனையர் என்பது ஓர் இறுதிகண்டிலம்;***
***எழுபது என்று எணும் இயல்பினார்;***
***வினையின் வெந் துயர் விரவு திங்களும்,***
***விரைவு சென்றன, எளிதின்; நின்***
***தனு எனும் திரு நுதலி வந்தனள்;***
***சரதம்; வன் துயர் தவிர்தியே!***

***அறிஞ** - அறிவில் சிறந்தவனே! **அனுமன் என்பவன்** - அனுமன் என்பவனுடைய; **அளவு அறிந்தனம்** - (அறிவு, வலிமை, பெரிய*

*வடிவம் கொள்ளும் திறன் முதலிய) பல்வேறு திறன்களின் அளவைத் தெரிந்து கொண்டோம்; **அங்கதன் ஆதியோர்** - அங்கதன் முதலோராகிய; **எழுபது என்று எணும் இயல்பினர்** - எழுபது வெள்ளம் என்று எண்ணப்படும் தன்மையரான வானர வீரர்கள்; **எனையர் என்பது ஓர் இறுதி கண்டிலம்** - வலிமையில் எத்தன்மையர் எனக் கூறத்தக்க ஒரு வரையறையை இன்னும் கண்டோம் இல்லை. **வினையின்** - தீவினை யைப் போல; **வெந்துயர் விரவு திங்களும்** - கொடிய துன்பம் தரும் (கார்கால) மாதங்களும்; **விரைவு சென்றன** - விரைவாகக் கழிந்தன. **நின் தனு எனும் திரு நுதலி** - (இனி) உன்னுடைய வில்லென்று சொல்லத்தக்க அழகிய புருவங்களை உடைய சீதை; **எளிதின் வந்தனள்** - எளிதாக வந்து சேர்ந்தவளாவள்; **சரதம்** - (இது) உறுதி; **வன் துயர் தவிர்தி** - கொடிய துன்பம் நீங்கப் பெறுவாயாக.*

*அனுமனோடு முன்னரே புரிந்த உரையாடல்களாலும், அவன் எடுத்த பேருருவாலும், வாலி அவனைப் பற்றிக்கூறிய சொற்களாலும் அவனது திறமையை அறிந்திருந்தனர். ஆதலின் 'அளவு அறிந்தனம்' என்றான். அங்கதனையும் அனுமனுடன் சேர்த்துக் கூற அவன் செயல்கள் ஒன்றையும் அறியாவிடினும் வாலிசேய் என்ற ஒன்றே போதும் என்று இலக்குவன் நினைத்தான். இச்சேனைகளின் வலிமையை எவ்வாறு இலக்குவன் எடை போட்டான் என்ற வினாவிற்கு விடை கூறுபவன் போல வாலி சேனை என்று முன்னரே இலக்குவன் கூறிவிட்டான். சேனை, அனுமன், அங்கதன் ஆகிய மூவரையும் குறிப்பிட்ட இலக்குவன் இவர்கள் தலைவனாகிய சுக்கிரீவனை இங்கும் குறிப்பிடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. எழுபது என்பது ஆகுபெயராய் எழுபது வெள்ளத்தை உணர்த்தியது. காலம் நீளிது என இராமன் வருந்துவானோ என எண்ணி 'வினையின் வெந்துயர் விரவு திங்களும் விரைவு சென்றன' என ஆறுதல் கூறினான். தனு - வில், வளைவுபற்றி நுதலுக்கு வில் உவமையாயது. இராமனே அறிவில் சிறந்தவனாதலின், 'அறிஞ' என விளித்தான். ஏ - ஈற்றசை.* *67*

***4215. 'மறை அறிந்தவர் வரவு கண்டு, ''உமை***
***வலியும் வஞ்சகர் வழியொடும்***
***குறைய வென்று, இடர்களைவென்'' என்றனை;***
***குறை முடிந்தது விதியினால்;***
***இறைவ! அங்கு அவர் இறுதி கண்டு,***
***இனிது இசை புனைந்து, இமையவர்கள்தாம்,***
***உறையும் உம்பரும் உதவி நின்றருள்;***
***உணர்வு அழிந்திடல் உறுதியோ!***

***இறைவ** - தலைவனே! **மறை அறிந்தவர் வரவு கண்டு** - (முன்பு) வேதங்களை உணர்ந்தவர்களாகிய (தண்டகாரணிய) முனிவர்கள் நின்னிடம் வந்து சரண் அடைந்ததை உணர்ந்து; **உமை வலியும் வஞ்சகர் வழியொடும்** - (அவர்களிடம்) ''உங்களை வலிய வருத்துகின்ற வஞ்சனையுடைய அரக்கர்களைச் சந்ததியோடும்; **குறைய வென்று** - அழியும்படி வென்று; **இடர் களைவென என்றனை** - உங்கள் துன்பங்களை*

*நீக்குவேன் என்று வாக்களித்தாய். **விதியினால் குறை முடிந்தது** - (அதற்கேற்ப) நல்ல ஊழ்வயத்தால் அந்தக் குறை முடிந்துவிட்டது. **அங்கு அவர் இறுதி கண்டு** - (ஆதலால்) இனி அரக்கர்கள் வாழும் இடத்திலேயே அவர்களுக்கு அழிவைச் செய்து; **இனிது இசை புனைந்து** - இனிதாகப் புகழைச் சூடிக்கொண்டு; **இமையவர்கள் தாம் உறையும் உம் பரும்** - தேவர்களுக்கு அவர்கள் தங்கும் இடமாகிய விண்ணுல கத்தை; **உதவிநின்று அருள்** - மீட்டுத்தந்து அருள்க; **உணர்வு அழிந்திடல் உறுதியோ** - (அது செய்யாது) மனந்தளர்வது தக்க செயலாகுமா?*

*மறை அறிந்தவர் - தண்டக வனத்து முனிவர்கள்; அவர்களுக்கு இராமன் அபயம் அளித்ததைத் 'தகவுஇல் துன்பம் தவிருதிர் நீர்' (2647), ''ஆர் அறத்தினொடு அன்றி நின்றார் அவர் வேர் அறுப்பென்'', வெருவன்மின் நீர்'' (2652) என்ற அடிகளால் அறியலாம். தனக்குத் தீங்கு செய்யாத அரக்கர்களை அழிப்பதற்கு ஒரு காரணமாகச் சீதையைக் கவர்ந்தமை கிடைத்துவிட்டது என்பதால் 'குறை முடிந்தது விதியினால்' என்றான். சீதை பொருட்டுச் செய்யும் போரால் மாமுனிவர் குறை தீர்த்தலும் தேவர்*

*குறை தீர்த்தலும் நிறைவேறிவிடும் என உணர்த்தினான். புகழ் தரும் செயல் செய்வதை விடுத்துத் தேவியைப் பிரிந்த துன்பத்தால் தளர்வது தகாது என உணர்த்தினான்.* *68*

***4216. 'காது கொற்றம் நினக்கு அலாது***
***பிறர்க்கு எவ்வாறு கலக்குமோ?***
***வேதனைக்கு இடம் ஆதல் வீரதை***
***அன்று; பேதமை ஆம்அரோ;***
***பொது பிற்படல் உண்டு; இது ஓர்***
***பொருள் அன்று; நின்று புணர்த்தியேல்,***
***யாது உனக்கு இயலாதது? எந்தை!***
***வருந்தல்' என்ன இயம்பினான்.***

**எந்தை -** *எம் தந்தை போன்றவனே!* **காது கொற்றம் -** *பகை வரைக் கொல்லுதலால் வரும் வெற்றி;* **நினக்கு அலாது -** *(அற வழியிற் செல்லும்) உனக்குக் கிடைப்பதல்லால்;* **பிறர்க்கு எவ்வாறு கலக்குமோ -** *(அவ்அறத்திற்கு மாறுபட்ட) அயலார்க்கு (அரக்கர்களுக்கு) எவ்வாறு கிட்டும்?* **வேதனைக்கு இடம் ஆதல் -** *வருந்துதற்கு இடம் தந்து மனமழிவது;* **வீரதை அன்று -** *வீரத்தன்மையாகாது.* **பேதமை ஆம் அரோ -** *(அஃது) அறியாமையின் பாற்படும் அல்லவா?* **போது பிற் படல் உண்டு -** *(எடுத்த காரியம்) காலங்காரணமாகப் பிற்படுதலும் இயல்பு;* **இது ஓர் பொருள் அன்று -** *உனக்கு இது ஒரு பொருட்டன்று.* **நின்று புணர்த்தியேல் -** *இப்பொழுதே முனைந்து நின்று முயற்சி செய்வாயாயின்;* **யாது உனக்கு இயலாதது -** *உன்னால் செய்ய இயலாதது யாது இருக்கின்றது?* **வருந்தல் என்ன இயம்பினான் -** *(ஆதலால்) வருந்த வேண்டாம்' என்று சொன்னான்.*

*தமையன் தந்தைக்கு நிகர் ஆதலின் 'எந்தை' என் விளித்தான். 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்பது நியதி ஆதலின் இராமன் வெற்றிபெறல் உறுதி என்பதைக் 'கொற்றம்' நினக்கு அலாது பிறர்க்கு எவ்வாறு கலக்குமோ?' என்றான். வீரதை - வீரம்; போது பிற்படல் - காலத்தாழ்வுநேரல்.* *69*

*கூதிர் காலம்*

***4217. சொற்ற தம்பி உரைக்கு உணர்ந்து, உயிர்***
***சோர்வு ஒடுங்கிய தொல்லையோன்;***
***இற்ற இன்னல் இயக்கம் எய்திட,***
***வைகல் பற்பல ஏக, மேல்***
***உற்று நின்ற வினைக் கொடும் பிணி,***
***ஒன்றின்மேல் உடன் ஒன்று உராய்,***
***மற்றும் வெம் பிணி பற்றினாலென,***
***வந்து எதிர்ந்தது மாரியே.***

**உயிர் சோர்வு ஒடுங்கிய தொல்லையோன் -** *(கார்காலத்தின் பிடியில் உடலும் உள்ளமும் ஒருங்கே ஒடுங்க) உயிர்த்தளர்ச்சியுற்ற பழை யோனாகிய (திருமாலின்*

*கூறான) இராமன்;* **சொற்ற தம்பி** *- தேறுதல் கூறிய தம்பியான இலக்குவனின்;* **உரைக்கு உணர்ந்து -** *சொற்களால் தெளிவு பெற்று;* **இற்ற இன்னல் -** *துன்பம் நீங்கியவனாய்;* **இயக்கம் எய்திட -** *நடமாட்டம் கொள்ள;* **வைகல் பற்பல ஏக -** *(அவ்வாறு) பற்பல நாட்கள் கழிய;* **மேல் -** *பின்பு;* **உற்று நின்ற வினைக் கொடும் பிணி ஒன்றின் மேல் -** *(முன்னமே) உடம்பில் பொருந்தி நின்ற ஊழ்வினை வயத்தால் கொடிதாகிய நோய்;* **உடன் உராய் பற்றினால் என -** *உடன் வந்து பற்றிக் கொண்டது போல;* **மாரி வந்து எதிர்ந்தது -** *கூதிர்காலம் வந்து தோன்றியது.*

*'வெந்துயர் விரவு திங்களும் விரைவு சென்றன' (4214) என இலக்குவன் ஆறுதல் உரையில் கூறினும், பல நாட்கள் கழிந்த பின்னரே கார்காலம் முடிந்தது என்பதை 'வைகல் பற்பல ஏக' என்ற தொடர் உணர்த்திற்று. உரைக்கு - உரையினால் எனக் கொள்க; உருபு மயக்கம்; இராமனின் கடவுட்டன்மையைத் 'தொல்லையோன்' என்ற சொல் உணர்த்தும். உடம்பு பெற்ற அளவில் செய்த வினை தன் பயன் விளைக்க வந்து சேருமாதலின் 'உற்று' என்றார். வினையால் ஏற்பட்ட பிணியாகலின் 'கொடும்பிணி' எனப்பட்டது. ஒரு நோயின் மேல், மற்றொரு நோயும் வந்து பொருந்தியது போல முன்னர்ப் பெய்த மழை இராமனை வருத்தவும், அதற்குமேல் வருத்தம் விளைவிக்கப் பின் மழையும் பெய்யத் தொடங்கியது என்க. உவமை அணி. முன்னர்ப் பெய்த மழை கொடும்பிணி போன்றது ஆகப் பின்னர்ப் பெய்த மழை அக்கொடும்பிணியுடன் மற்றொரு வெம்பிணி சேர்ந்து கொண்டது போன்றது எனக் கூறியதால், முன்னர்ப் பெய்த கார்கால மழையினும், கூதிர் கால மழை அதிக துன்பத்தை அளிக்கும் என உணர்த்தப்பட்டது. 70*

*கலி விருத்தம்*

***4218. நிறைந்தன நெடுங் குளம்;***
***நெருங்கின தரங்கம்;***
***குறைந்தன கருங் குயில்;***
***குளிர்ந்த உயர் குன்றம்;***
***மறைந்தன தடந் திசை;***
***வருந்தினர் பிரிந்தார்;***
***உறைந்தன, மகன்றிலுடன் அன்றில்***
***உயிர் ஒன்றி.***

**நெடுங்குளம் நிறைந்தன -** *பெரிய குளங்கள் நீர் நிரம்பப்பெற்றன;* **தரங்கம் நெருங்கின -** *(அக்குளங்களில்) அலைகள் (ஒன்றன் மேலொன்றாய்) நெருங்கி எழுந்தன;* **கருங்குயில் குறைந்தன -** *கரிய நிறமுள்ள குயில்களும் கூவுதல் ஒழிந்தன;* **உயர் குன்றம் குளிர்ந்த -** *உயர்ந்த குன்றுகள் குளிர்ச்சி அடைந்தன;* **தடந்திசை மறைந்தன -** *பெரிய திசைகள் (கரு மேகங்களால்) மறைப்புண்டன;* **பிரிந்தார் வருந்தினர் -** *தத்தம் துணையைப் பிரிந்தவர்கள் மனம் வருந்தினார்கள்;* **மகன்றிலுடன் அன்றில் -** *(பிரியா இயல்பினவாகிய) மகன்றில் பறவைகளும் அன்றில் பறவைகளும்;* **உயிர் ஒன்றி உறைந்தன -** *(புறத்தே செல்லாமல்) தத்தம் உயிர். போன்ற பெடைகளைத் தழுவி நின்றன.*

*கார்கால மழையால் வேனில் வெப்பம் குறைந்து நீரோடு காணப்பட்ட குளங்கள் கூதிர்கால மழையால் நிரம்பப் பெற்றன. அலைகள் நெருங்கி எழும் அளவில் குளங்கள் நீரால் நிறைந்தன எனக்கூறி, மழை மிகுதியை உணர்த்தினார். மாரிக்காலக் கடுமையால் குயில்களின் ஒலி குறைந்தன என்பதற்குப் 'பேசாது அடங்கின குயில்கள்' கூய ஆய் குரல் குறைந்த போல் குறைந்தன குயில்கள் (4193) எனும் அடிகள் ஒப்பு நோக்கத்தக்கன. மழை மிகுதியால் குன்றுகளும் குளிர்ச்சி பெற்றதைக் 'குளிர்ந்த உயர்குன்றம் என்றார். 'குன்று குளிர்ப்பன்ன கூதிர்' (நெடுநல்வாடை - 12) என்றது காண்க. மேகத்தின் அடர்த்தியால் கதிரவன் தோன்றாது இருள்படர்வதால் திசைகள் தெளிவாகக் காணப்படாது போதலின் 'மறைந்த நெடுந்திசை' என்றார். துணையைப் பிரிந்தவர் கூதிர் கால மழையால் வருந்துவதைக் 'காதலர்ப் பிரிந்தோர் புலம்பப் பெயல் கனைந்து, கூதிர் நின்றன்றாற்போதே' (நெடுநல் - 71) என்ற அடிகளும் உணர்த்தும். மகன்றில் என்பது நீர் வாழ் பறவை; அன்றில் என்பது பனைமரத்து வாழும் பறவை. இவ்விரண்டும் தம் பெடையைவிட்டுப் பிரியாமல் வாழும் இயல்புடையன. மழைக்காலத்தில் பிரிவுக்கஞ்சி இவை தத்தம் பெடையை நன்றாகத் தழுவிக் கொள்ளும் இயல்பின என்பதால் 'உயிர் ஒன்றி உறைந்தன' என்றார். உயிர் - உயிர் போன்ற பேடைகளை; ஒன்றி என்றது உடம்பு ஒன்று என எண்ணுமாறு தழுவி நிற்றலைக் குறிக்கும். 'பூவிடைப் படினும் யாண்டு கழித்தன்ன, நீருறை மகன்றில் புணர்ச்சி போல' (குறுந் - 57); 'குறுங்கால் மகன்றில் அன்ன உடன்புணர் கொள்கைத் காதலோரே' (ஐங்குறு - 381); மகன்றில் நன்னர்ப் புணர்ச்சி' (பரி பாடல் - 8.44) என்பன மகன்றில் பறவையின் இயல்பையும் 'நெருப்பினன்ன செந்தலை அன்றில், இறவினன்ன கொடுவாய்ப் பெடையோடு, தடவினோங்கு சினைக் காட்சியில் பிரிந்தோர், கையற நரலும்' (குறுந் - 160) என்ற அடிகள் அன்றிலின் பிரியா*

*இயல்பையும் உணர்த்துவன. மழைக்காலத்தின் இயல்பைக் கூறுவதால் இப்பாடல் தன்மை நவிற்சி அணி.* 71

***4219. பாசிழை அரம்பையர்,***
***பழிப்பு இல் அகல் அல்குல்***
***தூசு, தொடர் ஊசல், நனி***
***வெம்மை தொடர்வுற்றே***
***வீசியது, வாடை - எரி***
***வெந்த விரி புண் வீழ்***
***ஆசு இல் அயில் வாளி என,***
***ஆசைபுரிவார்மேல்.***

***வாடை -*** *வாடைக்காற்றானது;* ***பாசிழை அரம்பையர் -*** *பசும்பொன்னாலாகிய அணி கலன்களை அணிந்த மகளிரின்;* ***பழிப்பு இல் அகல் அல்குல் -*** *குற்றமற்ற அகன்ற மறைவிடத்தை மறைத்த;* ***தூசு -*** *ஆடையினையும்;* ***தொடர் ஊசல் -*** *சங்கிலிகளால் இணைக்கப்பட்ட ஊஞ்சலினையும்;* ***தொடர்வுற்று -*** *சார்ந்து;* ***ஆசை புரிவார்மேல் -*** *(அவர்கள்மேல்) காதல் கொண்டவர்களான ஆண்கள் மீது;* ***எரிவெந்த விரிபுண் -*** *நெருப்புப் பட்டு வெந்து பரந்த புண்ணில்;* ***வீழ் -*** *விழுந்து தைக்கும்;* ***ஆசுஇல்அயில் வாளி என -*** *குற்றமற்ற கூர்மையான அம்பு போல;* ***நனி வெம்மை வீசியது -*** *மிகுந்த வெப்பம் உண்டாகும்படி வீசிற்று.*

*மகளிர் அழகைக் கண்டு அவர்கள் பால் காதல் கொண்டு தவிக்கின்ற ஆடவர் மேல், அம்மகளிர் அணிந்த ஆடை மீதும், ஆடிய ஊஞ்சலின் மீதும் பட்டு வருகின்ற வாடைக்காற்று வீசி வெம்மை செய்து வருத்தியது. இயல்பாகவே வருந்தி நிற்கும் ஆடவர் மீது வாடைக் காற்று வீசி, மேலும் வருத்தியமைக்கு வெந்த விரி புண்ணின்கண் வேல் கொண்டு நுழைப்பான்போல் காய்ந்த நோய் உழப்பாரைக் கலக்கிய வந்தாயோ" (கலி - 120) 'எறிவேல் பாய்ந்த புண்ணில் ஆம் பெரும் புழையில் கனல் நுழைந்தாலென' (325) என்பன ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன. வாடை காதலருக்கு வெப்பம் பெருக வீசுவதைத் 'தழல் வீசி உலாவரு வாடை தழீஇ' (5232) என்ற அடியும் உணர்த்தும். 72*

***4220. வேலை நிறைவுற்றன;***
***வெயில் கதிர் வெதுப்பும்***
***சீலம் அழிவுற்ற; புனல்***
***உற்று உருவு செப்பின்***
***காலம் அறிவுற்று உணர்தல்,***
***கன்னல் அளவு அல்லால்,***
***மாலை பகல் உற்றது என,***
***ஓர்வு அரிது மாதோ!***

**வேலை நிறைவுற்றன -** *கடல்கள் நீர் நிரம்பப் பெற்றன;* **வெயில் கதிர்-** *கதிரவனின் கதிர்கள்;* **வெதுப்பும் சீலம் அழிவுற்ற -** *வெம்மையால் எரிக்கும் தம் இயல்பை இழந்து மறைந்தன.* **புனல் உற்று உருவு செப்பின் -** *(சிறு துளை வழியாக) நீர் நிரம்பி நேரங்காட்டும் நாழிகை வட்டிலைக் கொண்டு;* **கன்னல் அளவு -** *நாழிகையின் அளவைக் கண்டு;* **காலம் அறிவுற்று உணர்தல் அல்லால் -** *காலம் இன்னதென்று அறிய முயன்று தெரிந்து கொள்வதன்றி;* **மாலை பகல் உற்றது என -** *மாலைப்போதும் காலைப் போதும் வந்தன என்று;* **ஓர்வு அரிது -** *அறிதல் அரிதாயிற்று.*

*மேகங்களிடை ஞாயிறு மறைப்புண்டதால் அதன் இயல்பான வெம்மையால் வெதுப்பும் தன்மை அழிவுற்றதாகக் கூறினார். நடுவில் சிறிய துளையை உடைய வட்டிலை நீர்நிறைந்த பாத்திரத்தில் இட்டால், துளை வழியாக நீர் புகுந்து நிறைய, அவ்வட்டில் நீரில் அமிழ்வது ஒரு நாழிகை எனக் கணக்கிடுவர். "பன்னிரண்டரைப் பலம் எடை உள்ள தாமிரத்தைக் கொண்டு மகத தேசத்தில் ஒரு படி அளவாகச் செய்யப்பட்டதும், இருபது குன்றி மணி எடையுள்ள தாமிரத்தைக் கொண்டு பொன்னினால் நாலங்குலம் அளவாகச் செய்த சலாகை கொள்ளும் அளவாக அடியில் துளையிடப்பட்டதுமான ஒரு பாத்திரத்தைத் தண்ணீரில் இட, அப்பாத்திரம் எவ்வளவு நேரத்தில் தண்ணீரால் நிறையுமோ அவ்வளவு காலம் ஓர் நாழிகை என்று அறியப்படும்" என்ற விஷ்ணுபுராணக் கருத்து இங்கு நோக்கத்தக்கது.*

*'குறுநீர்க் கன்னல் இனைத்தென்றிசைப்ப' (முல்லை - வரி58), குறுநீர்க் கன்னல் எண்ணுநர்' (அகம் - 43) 'குறு நீர்க் கன்னலின் யாமம் கொள்பவர் ஏத்து ஒலி அரவமும்" (மணி - 7 - 64 - 65), என்ற அடிகளில் நாழிகை வட்டிலால் பொழுதறிதல் குறிக்கப்படுதலைக் காணலாம். நாழிகையைக் கணக்கிட்டுக் கூறுவோர் கணக்கர் என்றும் கடிகையார் என்றும் கூறப்பெறுவர். பகல், இரவு வேறுபாடு அறிய முடியாத கூதிர்காலத்து இயல்பை 'மனையுறை புறவின் செங்கால் சேவல், இன்புறு பெடையொடு மன்று தேர்ந்துண்ணாது இரவும் பகலும் மயங்கிக்கையற்று" (நெடுநல் - 45 - 47) என நக்கீரரும் புலப்படுத்தியமை காணலாம். மாது, ஓ அசைகள். 73*

***4221.* நெல் கிழிய நெற்**
**பொதி நிரம்பின, நிரம்பாச்**
**சொற்கு இழிய நல் கிளிகள் ;**
**தோகையவர்,தூ மென்**
**பற்கு இழி மணிப் படர்**
**திரைப் பரதர் முன்றில்,**
**பொற் கிழி விரித்தன,**
**சினைப் பொதுளு புன்னை.***

**தோகையவர் -** *மயிலை ஒத்தவர்களாகிய மகளிரின்;* **நிரம்பாச் சொற்கு-** *(எழுத்து) நிரம்பாத குதலைச் சொற்களுக்கு;* **இழிய -** *(நிகராகப்பேச முடியாமல்) தோல்வியுற்றதனால்;* **நல்கிளிகள் -** *அழகிய கிளிகள்;* **நெல் கிழிய நெல்பொதி -** *நெல் மணிகள்உதிருமாறு நெற்கதிர்ப்*

*போரில்;* **நிரம்பின -** *பதுங்கி நிறைந்தன;* **தூ மென் பற்கு இழி -** *(அம்மகளிரின்) தூயமென்மையான பற்களுக்குத் தோற்ற;* **மணி -** *முத்துக்கள்;* **படர்திரை (நிரம்பின)** *- பரந்த கடல் அலைகளில் (மறைந்து நிறைந்தன);* **பரதர் முன்றில் -** *நெய்தல் நில மக்களின்வீட்டு முன்னிடத்தில்;* **சினை பொதுளு புன்னை -** *கிளைகளில் மலர் நிறையப் பெற்ற புன்னை மரங்கள்;* **பொற்கிழி விரித்தன -** *பொற்கிழியை அவிழ்த்து வைத்தாற் போன்று விளங்கின.*

*இப்பாடலில் கூதிர் காலத்து மருதம், நெய்தல் நிலங்களின் வருணனை கூறப்பெற்றது. கிளிகள் மழைக்கு ஒதுங்கவும், பசிக்கு இரை தேடவும் ஏற்ற இடமாக நெற்கதிர்ப் போர் அமைந்ததால் ஆங்கே பதுங்கின மழையால் அடித்து வரப்படும் முத்துகள் கடல் அலைகளிடை மறைவதும் இயல்பாகும். கிளிகள் மழைக்கு ஒதுங்கிய இயல்பான நிகழ்ச்சியினையும் முத்துக்கள் அலைகளிடை மறைந்த நிகழ்ச்சியினையும் மகளிர் சொற்களுக்கும், பற்களுக்கும் தோற்று அவை பதுங்கியதாகத் தற்குறிப்பேற்றமாகக் கூறியுள்ளார். மயிலின் சாயலும் தோகையும் முறையே மகளிர் சாயலுக்கும் கூந்தலுக்கும் உவமைகள். அதனால் பெண்கள் 'தோகையவர்' எனப்பட்டனர். 'தோகையவர் என்பதை இடைநிலை விளக்கமாகக் கொண்டு பொருள் கொள்ளப்பட்டது. முன்றில் - இலக்கணப் போலி; நெய்தல் நிலத்துப் புன்னையின் அரும்புகள் மலர்வது பொற்கிழியை விரித்தாற்போன்றது என்றமையின் உவமை அணி ஆகும். மருத நிலத்து நெல் அறுவடையும், நெற்போரில் கிளிகள் பதுங்கினமையும், நெய்தல் நிலத்தில் மழைத்துளி ஏற்ற சிப்பிகளில் முத்துக்கள் தோன்றினமையும், புன்னை மலர்ந்தமையும் கூதிர்கால நிகழ்ச்சிகளாகக் கூறப்பட்டன. 74*

***4222.* நிறம் கருகு கங்குல், பகல்,**
**நின்ற நிலை நீவா**
**அறம் கருது சிந்தை**
**முனி அந்தணரின், ஆலிப்**
**பிறங்கு அரு நெடுந் துளி**
**படப் பெயர்வு இல்குன்றில்,***

**உறங்கல, பிறங்கல் அயல்**
**நின்ற, உயர் வேழம்.**

***நிறம் கருகு கங்குல் -*** *நிறம் கறுத்துத் தோன்றுகின்ற இரவுக் காலத்திலும்;* ***பகல் -*** *பகல் வேளையிலும்;* ***நின்ற நிலை நீவா -*** *தாம் நின்ற தவநிலையிலிருந்தும் நீங்காமல்;* ***அறம் கருது சிந்தை -*** *அறத்தையே நினைக்கின்ற சிந்தையுடையவர்களாய்;* ***முனி அந்தணரின் -*** *(எல்லாப் பற்றுக்களையும்) வெறுத்தொதுக்கிய முனிவர்கள்போலவும்.* ***பிறங்கு அரு ஆலி நெடுந்துளி பட -*** *ஆலங்கட்டிகளோடு விளங்குகின்ற அரிய மழையின் பெரிய மழைத்தாரைகள் தம் மேல் பட;* ***பெயர்வுஇல் குன்றில் -*** *அசைதல் இல்லாத குன்று போலவும்;* ***உயர்வேழம் -*** *உயர்ந்த யானைகள்;* ***உறங்கல -*** *உறக்கம் கொள்ளாதனவாய்;* ***பிறங்கல் அயல் நின்ற -*** *மலைப்பக்கங்களில் அசையாது நின்றன.*

*மழைகள் உறங்காமல், அசையாமல் இருந்த யானைகளுக்கு முனிவர்களும், மலையும் உவமை. அந்தணரைப் போல உறங்காமலும், குன்று போல அசையாமலும் என முறையே இயைந்து பொருள்படுதல் பற்றி முறை நிரல் நிறை அணி எனப்படும். பெயர்வு இல் குன்று - 'அசலம்' என மலைக்கு ஒரு பெயராதல் காண்க. மழைக்காலத்து உறங்கா நிலையில் மலையை அடுத்து அசையாது யானைகள் நின்று கொண்டிருந்தன. குறிஞ்சி நிலத்துக் கூதிர்காலக் காட்சி இப் பாடலில்கூறப்பெற்றது. 75*

***4223. சந்தின் அடையின் படலை***
**வேதிகை தடம்தோறு,**
**அந்தி இடு அகில் புகை**
**நுழைந்த, குளிர் அன்னம்;**
**மந்தி துயில் உற்ற, முழை;**
**வன் கடுவன், அங்கத்து**
**இந்தியம் அவித்த தனி**
**யோகியின் இருந்த.**

***குளிர் அன்னம் -*** *(மழை மிகுதியால்) குளிரால் நடுங்கிய அன்னங்கள்;* ***சந்தின் அடையின் படலை -*** *சந்தன மர இலைகளால் வேயப் பெற்றுச் சாலைகளில் (இருந்த);* ***வேதிகை -*** *மேடைகளில் அமைந்த;* ***தடம் தோறு -*** *ஓம குண்டங்கள் தோறும்;* ***அந்தி இடு -*** *காலை, மாலைச் சந்திக் காலங்களில் (முனிவர்கள்) இட்டு எரிக்கின்ற;* ***அகில் புகை நுழைந்த -*** *அகிற் புகையில் புகுந்து குளிர் காய்ந்தன;* ***மந்தி -*** *பெண்குரங்குகள்;* ***முழை துயில் உற்ற -*** *மலைக்குகைகளில் படுத்து உறங்கின;* ***வன் கடுவன் -*** *வலிமையுடைய ஆண் குரங்குகள்;* ***அங்கத்து -*** *(யோக அட்டாங்கங்களுள் ஒன்றான பிரித்தியாகாரம் என்னும்) அங்கத்தினால்;* ***இந்தியம் அவித்த -*** *ஐந்துபொறிகளை அடக்கிய;* ***தனி யோகியின் இருந்த -*** *ஒப்பற்ற யோகியர் போல் (குளிரால்) ஒடுங்கி இருந்தன.*

*சந்தன மர இலைகளால் வேய்ந்த கூரையும், அகிற்புகையும் மலைவளச் சிறப்பைக் குறித்தன. வேதிகை - மேடை; தடம் - ஓமகுண்டம்; இது 'தடவு' என்றும் வழங்கப்படும். அந்தி என்பது இரவு பகலுடன் இணையும் மாலைச் சந்திக்கும், பகல் இரவுடன் சேரும் காலைச் சந்திக்கும் பொதுவாகும் யோகி - இமயம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரித்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எட்டு*

*அங்கங்களுடன் யோகம் செய்பவன் பெருமழையில் குளிரால் ஒடுங்கி நிற்கும் குரங்குகளுக்கு ஐம்பொறிகளை அடக்கி மனத்தை ஒரு நிலைப்படுத்தி நிற்கும் யோகி உவமை. சலிக்கும் மனத்திற்குக் குரங்கு உவமை. அக்குரங்கே அசையாது இருத்தலை எண்ணங்களை அகற்றி ஒரு நிலைப்பட்ட மனத்தையுடைய யோகிக்கு உவமை. கடுவன் மந்தியைப் பிரிந்து தனித்து இருத்தல் இப்பாடலில் கருதத்தக்கது. மந்தியைப்போல் குகையில் சென்று உறங்காமல், ஆண் குரங்குகள் மழையில் நின்ற செயல், அவை துன்பம் கண்டு துவளாதவை என்பதையும் துன்பத்தைத் தாங்கி எதிர் கொள்ளும் ஆற்றல் கொண்டவை என்பதையும் உணர்த்தி நின்றது. இதனால், பின்னர் இராவணனுடன் ஏற்படும் போரில் ஏற்றபடையாகக் குரங்குப்படை*

*விளங்கும் என்பது குறிப்பால் பெறப்படுகிறது. குறும்பு மிக்ககுரங்குகளும் யோகிபோல் ஒடுங்கின என்பதால் மழைக் குளிரச்சியின் கடுமை பெறப்பட்டது. 76*

***4224. ஆசு இல் சுனை வால் அருவி,***
***ஆய் இழையர் ஐம்பால்***
***வாச மணம் நாறல் இல***
***ஆன; மணி வன் கால்***
***ஊசல் வறிது ஆன; இதண்***
***ஒண் மணிகள் விண்மேல்***
***வீசல் இல வான; -***
***நெடு மாரி துளி வீச.***

***நெடு மாரி துளி வீச -*** *(வானம்) பெரிய மழைத் துளிகளைப் பெய்து கொண்டிருப்பதால்;* ***ஆசு இல் சுனை -*** *குற்றமில்லாத மலைச் சுனைகளும்;* ***வால் அருவி -*** *தூய மலை அருவிகளும்;* ***ஆய் இழையர் -*** *ஆய்ந்த அணிகலன்களை அணிந்த மகளிரின்;* ***ஐமபால் வாச மணம் -*** *கூந்தலின் நறுமணம்;* ***நாறல் இல ஆன -*** *(தம்மிடம்) கமழப்பெறாதன ஆயின;* ***மணி வன் கால் ஊசல் -*** *மணிகள் பதிக்கப் பெற்ற வலிமையான கம்பங்களில் அமைக்கப் பெற்ற ஊஞ்சல்கள்;* ***வறிது ஆன -*** *(அம்மகளிர் ஆடாமையால்) ஆடுவார் இல்லாதன வாயின்;* ***இதண் -*** *பரண்கள்;* ***ஒண்மணிகள் விண்மேல் -*** *ஒளி பொருந்திய இரத்தினங்களை வானத்தில்;* ***வீசல் இலவான -*** *(பறவைகளின் மீது) எறிதல் இல்லாதன ஆயின.*

*மழைத்துளி விடாமல் பெய்து கொண்டிருந்ததால் மலையிலுள்ள சுனைகளிலும் அருவிகளிலும் பெண்கள் நீராடாமையால் அவர்கள் கூந்தலின் இயற்கை மணத்தையும், வாசநெய்யாலும், அகிற்புகையாலும் நறுமலராலும் பெறும் செயற்கை மணத்தையும் அச்சுனைகளும் அருவிகளும் பெறாதன ஆயின. வாசமணம் ஒரு பொருட்பன்மொழி. ஆசில் சுனை - பாசி படிதல், சருகு முதலிய குப்பைகளுடன் விளங்கல், படிந்தார்க்கு நோய் விளைத்தல் ஆகிய குற்றங்கள் நீங்கித் தூய நீரைக் கொண்டிருத்தல். ஐம்பால் - ஐந்துவகையாக முடித்தற்குரியது என்பதால் கூந்தல் 'ஐம்பால்' எனக்கூறப்பட்டது. (4195 ஆம் பாடல் உரைவிளக்கம் காண்க) குளிரால் மகளிர் ஊஞ்சலாடுவதையும் தவிர்த்தலால் ஊஞ்சல்கள் ஆடுவாரின்றி வெறுமை ஆயின. மலைவாழ்நரின் செல்வச் சிறப்பு தோன்ற 'மணிவன் கால்' என்றார். குறிஞ்சி நில மகளிர் மணிகள் கொண்டு கவண் எறிந்து பறவைகளை ஓட்டும் இயல்பான*

*நிகழ்ச்சியும் மழையால் தடைப்பட்டது. செல்வ வளத்தால் மகளிர் மணிகளை எறிவர் என்ற செய்தியைப் பட்டினப்பாலை உணர்த்துகிறது. கோழியெறிந்த கொடுங்கால் கனங்குழை (ப.பாலை வரி - 23) என்ற அடி ஈண்டுஒப்புநோக்கத்தக்கது.*
*77*

***4225. கருந் தகைய, தண் சினைய,***
***கைதை மடல், காதல்***
***தரும் தகைய போது***
***கிளையில் புடை தயங்க,***
***பெருந் தகைய பொற் சிறை***
***ஒடுக்கி, உடல் பேராது,***
***இருந்த, குருகின் பெடை -***
***பிரிந்தவர்கள் என்ன.***

***கருந்தகைய -*** *கரிய நிறமுள்ள;* ***தண் சினைய கைதை மடல் -*** *குளிர்ந்த கிளைகளை உடைய தாழை மடல்களின் இடையே;* ***காதல் தரும் தகைய போது -*** *காண்பார்க்கு விருப்பம் விளைக்கும் தன்மையன வாய்த்தோன்றும் தாழை அரும்புகள்;* ***கிளையின் புடை தயங்க -*** *(ஆறுதல் கூறும்) சுற்றத்தாரைப்போலப் பக்கங்களில் சூழ்ந்து விளங்க;* ***குருகின் பெடை -*** *பெண் நாரைகள்;* ***பெருந்தகைய பொன் சிறை ஒடுக்கி -*** *பெருமைக்குரிய அழகிய சிறகுகளை ஒடுக்கிக் கொண்டு;* ***உடல் பேராது -*** *இடம் விட்டுப் பெயராமல்;* ***பிரிந்தவர்கள் என்ன -*** *தலைவரைப் பிரிந்த தலைவியரைப் போல;* ***இருந்து -*** *இருந்தன.*

*மழைக்காலத்தில் தாழை மிகுதியாகப் பூத்தல் இயல்பாகும். காமத்தை மிகுவிக்கும் மலர்களுள் ஒன்றாகத் தாழை மலர் கருதப்படுவவால் 'காதல் தரும் தகைய போது' என்றார். இம்மலர் மன்மதனின் வாளாயுதம் என்பர். தலைவரைப் பிரிந்த தலைவியர்போலப் பெருமழையால் ஒடுங்கியிருக்கும் பெண்நாரைகளைச் சுற்றி மலர்ந்திருக்கும் தாழை அரும்புகள் அவற்றின் சுற்றம் போலக் காணப்பட்டன. தாழை அருமபுகள் நாரையைப் போன்ற தோற்றத்தனவாதலின் சுற்றமாகக் கூறப்பட்டன. தாழை அரும்புகள் குருகுகள் போல் இருத்தலை "கருங்கால் குருகின் கோளுய்ந்து போகிய முடிங்குபுற இறவின் மோவாயேற்றை. . . . தோடுபொதி தாழை வண்டுபடு வான்போது வெறூஉம்", (நற்றிணை - 211), 'அருகு கைதை மலரக் கெண்டை குருகென்றஞ்சும்' (பெரியதிருமொழி 5-2-9) என்பவற்றால் அறியலாம். பிரிந்திருக்கும் தலைவியரைச் சுற்றத்தினர் தேற்றுவதும் தலைவியர் ஆற்றாது வருந்துவதும் இயல்பாகும். 'வருதல் தலைவர் வாய்வது நீ நின், பருவரல் எவ்வம் களை மாயோயெனக் காட்டவும் காட்டவும் காணாள் கலுழ் சிறந்து, பூப்போல் உண்கண் புலம்பு முத்துறைப்ப" (முல்லைப் பாட்டு - 20 - 23) என்பது காண்க. 'குருகு' பால் பகா அஃறிணைப் பெயராதலின் 'இருந்த' என்ற பன்மை முடிபுகொண்டது.*
*78*

***4226. பதங்கள் முகில் ஒத்த, இசை***
***பல் ஞிமிறு பன்ன,***
***விதங்களின் நடித்திடு விகற்ப***
***வழி மேவும்***

***மதங்கியரை ஒத்த, மயில்;***
***வைகு மர மூலத்து***
***ஒதுங்கின, உழைக் குலம்; -***
***மழைக் குலம் முழக்க.***

***பதங்கள்*** - *பறவைகளின் ஒலி;* ***முகில் ஒத்த*** - *மேகத்தின் ஒலியை ஒத்தனவாக விளங்க;* ***பல் ஞிமிறு*** - *பலவகைப்பட்ட வண்டுகளின்;* ***இசை பன்ன*** - *(ரீங்காரம்) இசைப்பாடலாக ஒலிக்க;* ***மயில்*** - *மயில்கள்;* ***விதங்களின் நடித்திடும்*** - *பல வகைத் தாள அமைப்புகளுடன் நடனம் செய்கின்ற;* ***விகற்ப வழி*** - *வெவ்வேறு வகைப்பட்ட நாட்டிய நிலைகளில்;* ***மேவும் மதங்கியரை ஒத்த*** - *பொருந்திக் கூத்தாடும் மகளிரை ஒத்தன;* ***உழைக்குலம்*** - *மான் கூட்டங்கள்;* ***மழைக்குலம் முழக்க*** - *மேகக் கூட்டங்களின் முழக்கத்தால் (கலக்கமுற்று);* ***வைகு மர மூலத்து*** - *(மயில்கள்) தங்கப்பெற்ற மரங்களின் அடியில்;* ***ஒதுங்கின*** - *ஒதுங்கி நின்றன.*

*பதங்கள் - பறவைப் பொதுப்பெயர். இவ்வடசொல் எழுப்பிச் செல்வ தென்று பொருள்படும். மதங்கியர் - இளம்வயதுடைய நாட்டிய மகளிர், பதங்கத்தின் ஒலி முழவாக, வண்டுகளின் ரீங்காரம் பாட்டாக, மயில்கள் மதங்கியரைப் போல ஆட, மான்கள் அந்த ஆட்டத்தைப் பார்த்தன என்க. உழைக்குலம் மழைக்குலம் என்ற இடத்து இணையெதுகை நயம் காண்க.*

*மழைக்காலத்தில் மயில்கள் மகிழ்ந்து ஆடுவதையும் மான்கள் வருந்தி ஒடுங்குவதையும் இச்செய்யுள் புலப்படுத்துகிறது. 79*

*4227.* ***விளக்கு ஒளி அகில் புகை***
***விழுங்கு அமளி, மென் கொம்பு***
***இளைக்கும் இடை மங்கையரும்,***
***மைந்தர்களும், ஏற;***
***தளத் தகு மலர்த் தவிசு***
***இகந்து, நகு சந்தின்***
***துளைத் துயில் உவந்து,***
***துயில்வுற்ற, குளிர் தும்பி.***

***மென் கொம்பு*** - *மெல்லிய பூங்கொம்பும்;* ***இளைக்கும்*** - *(மென்மையால் ஒப்பாகாது) தோற்கும்;* ***இடை மங்கையரும்*** - *இடையை உடைய இளைய மங்கையரும்;* ***மைந்தர்களும்*** - *ஆடவர்களும்;* ***அகில் புகை*** - *அகிற்கட்டைகளின் புகையானது;* ***விளக்கு ஒளி விழுங்கு*** - *விளக்குகளின் ஒளியை மறைக்கின்ற;* ***அமளி ஏற*** - *கட்டிலில் ஏற;* ***குளிர் தும்பி*** - *குளிரால் வருந்திய வண்டுகள்;* ***தளத்தகு மலர்த்தவிசு இகந்து*** - *இதழ்கள் பொருந்திய சிறந்த தாமரை மலராகிய படுக்கையை விட்டு;* ***நகு சந்தின்*** - *மலர்ந்து விளங்குகின்ற சந்தனமரத்தின்;* ***துளைத்துயில் உவந்து*** - *பொந்துகளில் தங்குதலை விரும்பி;* ***துயில்வுற்ற*** - *(அங்குச் சென்று) உறங்கின.*

*குளிரைப்போக்குவதற்கு இட்ட அகிற்புகை விளக்கின் ஒளியையும் விழுங்குமாறு இருந்ததென அகிற்புகையின் மிகுதி கூறினார். மழைக்காலத்தில் மகளிரும் மைந்தரும், குளிர்தீருமாறு ஊட்டப்பெற்ற அகிற்புகை கமழும் கட்டிலில் ஏறினர் என்க. மழைக்காலத்தில் தாமரை மலர்கள் இதழ் குவிந்தும், நீரில் ஆழ்ந்தும் அழிந்தும்*

*போவதால், அம்மலரில் தங்குதலைவிடுத்து வண்டுகள் கரையிலுள்ள உலர்ந்த சந்தனமரப் பொந்துகளில் விருப்பத்தோடு சென்று இனிது உறங்கலாயின.*

*'புதிய மழைத் தாரைகள் அழிக்கப்பட்ட தாதுக்களையுடைய தாமரை மலர்களை விட்டு, வண்டுகள், தாதுக்களோடு கூடிய புதிய கடம்ப மலர்களை மகிழ்ச்சியோடு சேர்கின்றன' என்று வால்மீகி ராமாயணத்தில் கூறியிருப்பது ஈண்டுக் காணத்தக்கது. சிறந்த தாமரை மலரில் துயின்று பழகிய வண்டு, மரங்களிடையேயும் உயர்ந்த சந்தன மரத்தையே நாடிச் சென்ற நயம் காண்க. உயர்திணை மக்கள் வெம்மையை விரும்பியது போல அஃறிணை உயிரான வண்டுகளும் வெம்மையைத் தேடிச் சென்றன என்பதால் குளிரின் மிகுதி கூறப்பட்டது. இப்பாடலில் மருத நிலத்துத் தாமரையில் துயிலும் வண்டு குறிஞ்சி நிலச் சந்தன மரத்திற்குச் சென்றது எனத் திணைமயக்கம் கூறப்பட்டது.* *80*

***4228. தாமரை மலர்த் தவிசு***
***இகந்து, தகை அன்னம்,***
***மாமரம் நிரைத் தொகு***
***பொதும்பருழை வைக;***
***தே மரம் அடுக்கு***
***இதணிடைச் செறி குரம்பை,***
***தூ மருவு எயிற்றியரொடு***
***அன்பர் துயில்வுற்றார்.***

***தகை அன்னம் -*** *அழகிய அன்னப்பறவைகள்;* ***தாமரை மலர்த் தவிசு இகந்து -*** *தாமரை மலராகிய தங்கள் இருப்பிடத்தை விட்டு நீங்கி;* ***மா மரம் நிரைதொகு -*** *பெரிய மரங்கள் வரிசையாகத் திரண்ட;* ***பொதும்பர் உழை வைக -*** *சோலையில் சென்று தங்க;* ***தேமரம் அடுக்கு -*** *நறுமணம் மிக்க மரக்கட்டைகளை அடுக்கியமைத்த;* ***இதணிடை செறி குரம்பை -*** *பரணில் பொருந்திய குடிசையில்;* ***தூ மருவு எயிற்றியரொடு -*** *வெண்ணிறம் பொருந்திய பற்களையுடைய வேட்டுவப் பெண்களுடனே;* ***அன்பர் துயில்வுற்றார் -*** *அவர்களின் அன்புமிக்க கணவர்கள் உறங்கினார்கள்.*

*குளிரால் வருந்திய அன்னம் நீரிலுள்ள தாமரை மலரை விட்டுக் குளிர் இல்லாத உயர்ந்த கிளைகளை உடைய மரங்கள் செறிந்த சோலையில் சென்று தங்கியது; பறவைகள் வாராத மழைக்காலத்தில் தினைப்புனம் காக்கும் வேலையின்மையால் வேட்டுவ மகளிரும் வேடர்களும் குளிர்நீங்கப் பரண் குடிசைகளில் உறங்கினர். தவிசு - ஆசனம், தேமரம் - சந்தனம் முதலிய மரங்கள். வைகத் துயில்வுற்றார் எனக் காரண காரியத்தொடர்பின்றிச் செயவெனெச்சம் வினை கொண்டுமுடிந்தது.* *81*

***4229. வள்ளி புடை சுற்றி உயர்***
***சிற்றலை மரம்தோறு,***
***எள்ள அரு மறிக் குருளொடு***
***அண்டர்கள் இருந்தார்;***
***கள்ளரின் ஒளித்து உழல்***
***நெடுங் கழுது ஒடுங்கி,***

*முள் எயிற தின்று, பசி*
*மூழ்கிட இருந்த.*

***வள்ளி புடை சுற்றி -*** *கொடிகளால் பக்கங்களில் சூழப்பெற்று;* ***உயர் சிற்றிலை -*** *உயர்ந்து வளர்ந்துள்ள சிறிய இலைகளை உடைய;* ***மரம் தோறு -*** *மரங்கள் தோறும்;* ***எள்ள அரு மறிக் குருளொடு -*** *(அவற்றின் கீழ்) இகழாமல் பாதுகாத்தற்குரிய ஆட்டுக்குட்டிளோடு;* ***அண்டர்கள் இருந்தார் -*** *இடையர்கள் தங்கியிருந்தார்கள்;* ***கள்ளரின் ஒளித்து உழல் -*** *திருடர்களைப் போல மறைந்து திரிகின்ற;* ***நெடுங் கழுகு ஒடுங்கி -*** *பெரிய பேய்களும் குளிரால் ஒடுங்கி;* ***முள் எயிறு தின்று -*** *முட்கள் போன்ற தம் பற்களைத் தாமே மென்று தின்று கொண்டு;* ***பசி மூழ்கிட இருந்த -*** *மிக்க பசியுடன் இருந்தன.*

*தன் கீழ் உள்ளார்மேல் நீர்படாமல் காப்பதில் பெரிய இலைகளை உடைய மரத்தினும் சிறிய இலைகளை உடைய மரமே சிறந்ததாதலால் இடையர்கள் கொடிகள் சூழ்ந்த சிற்றிலை மரங்களின் அடியில் தங்கினர். வள்ளி - வள்ளிக் கொடி என்றும், சிற்றிலை - சிற்றிலை மரமென்னும் ஒரு வகை மரம் என்றும் பொருள் கொள்வர். தம்மைத் தாமே பாதுகாத்துக் கொள்ளும் ஆற்றலற்றன என்பதால் ஆட்டுக் குட்டிகள் இகழாமல் பாதுகாத்தற்கு உரியனவாகின்றன. அவற்றை இடையர்கள் உடன் கொண்டு சென்றனர் என்பதால் அவற்றின் அருமை புலனாகும். குருளை என்பது குருள் என விகாரப்பட்டு வந்தது. நெடிதாகிய பேயும் மழையால் ஒடுங்கித் தோன்றிற்று என்பார் '**நெடுங்கழுது** ஒடுங்கி' என்றார். மழையால் பேய்களும் வெளிக்கிளம்ப முடியாது ஒடுங்கிப் பசியில் மூழ்கிப் பற்களைமென்று தின்று கொண்டிருந்தன என மழைமிகுதியை உணர்த்தினார். மழையால் பேய் வருந்துவதைப் 'பெயலு மோவாது **கழுது** கண் பனிப்ப வீசும்' (குறுந் - 161) என்ற தொடர் உணர்த்தும். 'பசிக்கலைந்து பாதி நாக்கும் உதடுகளில் பாதியும் தின்றொறுவாயானேம்' (கலிங். பரணி - 217) என்பது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.*
*82*

*4230.* ***சரம் பயில் நெடுந் துளி***
***நிரந்த புயல் சார,***
***உரம் பெயர்வு இல் வன்***
***கரி கரந்து உற ஒடுங்கா,***
***வரம்பு அகல் நறும் பிரசம்***
***வைகல் பல வைகும்***
***முரம்பினில் நிரம்பல;***
***முழைஞ்சிடை நுழைந்த.***

***நிமிர்ந்த புயல் -*** *(வானத்தில்) உயர்ந்து விளங்கிய மேகங்களிலிருந்து;* ***சரம்பயில் நெடுந்துளி -*** *அம்புகளை ஒத்த பெரிய மழைத் தாரைகள்;* ***சார -*** *தம்மேல் விழுவதால்;* ***உரம் பெயர்வு இல் வன்கரி -*** *மன வலிமை நீங்குதல் இல்லாத உடல் வலிமை மிக்க யானையும்;* ***ஒடுங்கா -*** *(மழையினால்) ஒடுங்கி;* ***வரம்பு அகல் நறும் பிரசம் -*** *அளவற்ற பெரிய தேன்கூடுகள்;* ***பலவைகல் வைகும் -*** *பல நாட்களாக*

*அமையப்பெற்ற;* ***முரம்பினில் -*** *மேட்டு நிலங்களில்;* ***நிரம்பல -*** *(கூட்டமாகத்) தங்க மாட்டாதனவாய்;* ***கரந்து உற -*** *(மழை நீர் தம்மேல்படாதபடி) மறைந்து தங்க;* ***முழைஞ்சிடை நுழைந்த -*** *மலைக்குகைகளில் நுழைந்தன.*

*மழைத் தாரைகள் அம்புகளை ஒத்து விளங்கின என்பதைச் 'சரம்பயில் நெடுந்துளி' என்றறர். 'தண்துளி பளிக்குக்கோல் போல் தாரையாய்ச் சொரிந்து' (சீவக. 508) என்ற அடியைக் காண்க. யானையின் மனவலிமையும் உடல் வலிமையும் 'உரம் பெயர்வு இல் வன் கரி' எனச் சுட்டப்பட்டது. அத்தகைய யானைகளும் தாம் வாழ்ந்த இடங்களை விட்டு ஒடுங்கிக் குகைகளில் நுழைந்தன என்பதால் மழையின் மிகுதியும் குளிரும் உணர்த்தப்பட்டன. பிரசம் - தேன்; இங்குத் தன்கூட்டைக் குறித்தது. உயரத்தில் வந்து எடுப்பவர் இன்மையால் தேன்கூடுகள் பல நாட்களாகக் கற்பாறையாகிய மேட்டு நிலங்களில் கட்டியபடியே அழியாமல் இருந்தனஎன்க.*
*83*

இராமனின் விரகதாபம்

***4231. இத் தகைய மாரியிடை,***
***துன்னி இருள் எய்த,***
***மைத் தகு மணிக் குறு***
***நகைச் சனகன் மான்மேல்***
***உய்த்த உணர்வத்தினன்,***
***நெருப்பிடை உயிர்ப்பான்,***
***வித்தகன், இலக்குவனை***
***முன்னினன், விளம்பும்:***

***இத்தகைய மாரியிடை -*** *இத்தன்மை வாய்ந்த மழைக்காலத்தில்;* ***இருள் துன்னி எய்த -*** *இருந்து செறிந்து வந்தடைய;* ***வித்தகன் -*** *அறிவில் சிறந்த இராமன்;* ***மைத்தக மணி -*** *மணி என்று சொல்லத்தக்க கண்ணின் கருமணியையும்;* ***குறுநகை -*** *புன்சிரிப்பையும் உடைய;* ***சனகன் மான்மேல் -*** *சனகன் பெற்ற மகளான மான் போன்ற பார்வையுடைய சீதை மீது;* ***உய்த்த உணர்வத்தினன் -*** *செலுத்திய உணர்வுகளை உடையவனாய்;* ***நெருப்பிடை உயிர்ப்பான் -*** *நெருப்புப் போன்று இடையிடையே பெருமூச்சு விடுபவனாய்;* ***இலக்குவனை முன்னினன் -*** *இலக்குவனை நோக்கி;* ***விளம்பும் -*** *(சில சொற்களைச்) சொல்லலானான்.*

*சீதையின் கரிய கண்களின் பார்வையிலும், புன்சிரிப்பின் அழகிலும் இராமனுக்கு உள்ள ஈடுபாடு விளங்க 'மைத்தகு மணிக்குறுநகைச் சனகன் மான்' என்றார். இராமனது பிரிவுத்துன்பத்தை 'உய்த்த உணர்வத்தினன், நெருப்பிடை உயிர்ப்பான்' என்னும் தொடர்கள் உணர்த்தும்.*

*வித்தகன் - அறிவில் சிறந்தவன்; ஈண்டு இராமனைக் குறித்தது. "பத்துடை அடியவர்க்கு எளியவேன், பிறர்க்கரிய வித்தகன்" (திருவாய்மொழி - 1 - 3 - 1), 'வித்தகனே இராமாவோ' (பெரியாழ் - 3 - 10 - 6) என்ற அடிகள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன; இராமபிரானையே பெரியாழ்வார் 'வித்தகன்' என்று குறித்தார். அக் குறிப்பு கவிச்சக்கரவர்த்தியின் ஆட்சிக்கு வலிமையும் வனப்பும் சேர்க்கின்றது.*

*சீதையைப் பிரிந்து இராமன் மழைக்காலத்தில் வருந்தியதையும், இலக்குவன் அவ்வப்போது தேற்றுவதையும் முதல் நூலிலும் காணலாம். உணர்வினன் என்பது அத்துச் சாரியை பெற்று 'உணர்வத்தினன்' என ஆயிற்று.* *84*

கலிவிருத்தம்

***4232. 'மழைக் கரு மின்***
***எயிற்று அரக்கன் வஞ்சனை***
***இழைப்ப, அருங்கொங்கையும்***
***எதிர்வுற்று, இன்னலின்***
***உழைத்தனள், உலைந்து உயிர்***
***உலக்கும்; ஒன்றினும்***
***பிழைப்ப அரிது, எனக்கும்;***
***இது என்ன பெற்றியோ?***

***மழைக்கரு மின் எயிற்று -*** *மேகம் போன்ற கருநிறத்தையும் மின்னலைப் போன்ற பற்களையும் உடைய;* ***அரக்கன் -*** *அரக்கனாகிய இராவணன்;* ***வஞ்சனை இழைப்ப -*** *வஞ்சனை செய்ய;* ***அருங் கொங்கையும் -*** *அரிய முலைகளை உடைய சீதையும்;* ***எதிர்வுற்று -*** *(அவ் வஞ்சனைக்கு) இலக்காகி;* ***இன்னலின் உழைத்தனள் -*** *துன்பத்தால் வருந்தியவளாய்;* ***உலைந்து உயிர் உவக்கும்*** *- வாடி உயிர் அழிவாள்;* ***எனக்கும் -*** *(அவளைப் பிரிந்திருக்கும்) எனக்கும்;* ***ஒன்றினும் பிழைப்ப அரிது -*** *எந்த ஒரு வகையிலும் (துன்பத்தினின்று) பிழைத்தல் அரிதாக இருக்கின்றது;* ***இது என்ன பெற்றியோ -*** *இது என்ன தன்மையோ?*

*மேகம் போலக் கரிய நிறமும், மின்னல் போன்ற பற்களையும் உடைய இராவணனது வஞ்சனையில் அகப்பட்டுச் சீதை வருந்தி உயிர் அழிதல் போலத் தானும் கரிய நிறத்தையும் மின்னலையும் உடைய மேகத்தின் கொடுமைக்கு இலக்காகி வருந்துவதாக இராமன் குறிப்பால் உணர்த்தியது நயம் மிக்கதாகும். தம்மை வருத்திய பொருள்களில் உள்ள ஒற்றுமையைக் காட்டி 'இது என்ன இயல்போ?' என இரங்கிக் கூறினான். 'உயிர் உலக்கும்' 'ஒன்றினும் பிழைப்பு அரிது' என்னும் தொடர்கள் பிரிவால் ஏற்படும் பெருந்துன்பத்தை விளக்கி நிற்பன.* *85*

***4233. 'தூ நிறச் சுடு சரம், தூணி தூங்கிட,***
***வான் உறப் பிறங்கிய வைரத் தோளொடும்,***
***யான் உறக் கடவதே இதுவும்? இந் நிலை***
***வேல் நிறுத்து உற்றது ஒத்துழியும், வீகிலேன்.***

***தூ நிறச் சுடு சரம் -*** *தம்முனைகளில் ஊன் படிந்தவனவாய்ப் பகைவர் மார்பைத் துளைக்கவல்ல அம்புகள்;* ***தூணி தூங்கிட -*** *(செயலற்று) அம்பறாத்தூணியில் தூங்கிக் கிடக்க;* ***வான் உறப்பிறங்கிய -*** *வானளாவ உயர்ந்த விளங்கிய;* ***வயிரத் தோளொடும் -*** *உறுதியுள்ள புயங்களுடனே;* ***யான் இதுவும் உறக்கடவதே -*** *நான் இத்தகைய துன்பத்தையும் அனுபவிக்க வேண்டுமோ?* ***இந்நிலை -*** *எனக்கு ஏற்பட்டுள்ள இந்த நிலைமை;* ***வேல் நிறத்து உற்றது ஒத்துழியும் -*** *வேல் என் மார்பகத்துப்*

*பாய்ந்தது போன்றிருக்கவும்;* ***வீகிலேன் -*** *நான் இறவாமல்இருக்கின்றேனே!*

*பகைவர் மார்பில் பட்டு ஊன் தோய்ந்திருத்தல் பற்றித் 'தூநிறச் சரம்' என்றும், பகைவர்ககளச் சுடவல்லது ஆதலின் 'சுடுசரம்' எனவும் சிறப்பித்தார். 'நின்கைச் சுடு சரம் அனைய சொல்லால்' (472) என்றதும் காண்க. தூங்குதல் - தொங்குதல், செயலற்றுக் கிடத்தல் என இரு பொருள்பட அமைந்துள்ளது. பகைவரை வெல்லவல்ல படைவலிமையும் தோள்வலிமையும் பெற்றிருந்தும் தீங்கு செய்தவனைத் தண்டிக்காது துன்பத்தை அனுபவிக்கும் நிலை தனக்கு வருதல் வேண்டுமா என இராமன் கலங்கினான். இந்நிலை தனக்கு வரலாகாது என்பானாய் இதுவும் உறக்கடவதே' என்றான். தன் தோளின் உயர்வும் வலிமையும் தோன்ற 'வானுறப் பிறங்கிய வயிரத் தோள்' என்றான். மார்பில் வேல் பட்டாற்போல் இவ்வளவு துன்பத்தை அனுபவித்துக் கொண்டு வாழ்தலும் வேண்டுமோ, இறத்தலே ஏற்றதன்றோ என இராமன் வருந்தும் நிலையைக் காண்கிறோம். ஒத்துழி - ஒத்த உழி என்பதன் தொகுத்தல் - ஒத்துழியும் - உம்மை இழிவு சிறப்பும்மை.*
*86*

***4234. 'தெரி கணை மலரொடும்***
***திறந்த நெஞ்சோடும்,***
***அரிய வன் துயரொடும்,***
***யானும் வைகுவேன்;***
***எரியும் மின்மினி மணி***
***விளக்கின், இன் துணைக்***
***குரிஇனம், பெடையோடும்***
***துயில்வ, கூட்டினுள்.***

***குரிஇனம் -*** *குருவிக்கூட்டங்கள்;* ***எரியும் மின்மினி -*** *ஒளிவிடுகின்ற மின்மினிப்பூச்சிகளாகிய;* ***மணி விளக்கின் -*** *அழகிய விளக்கின் ஒளியில்;* ***இன்துணைப் பெடையோடும் -*** *தன் இனிய துணையாகிய பெண் குருவிகளோடு;* ***கூட்டினுள் துயில்வ -*** *கூட்டினுள் (இன்பமாய்) உறங்குகின்றன;* ***யானும் -*** *நானும்;* ***தெரிகணை மலரொடும் -*** *மன்மதன் ஆராய்ந்து எய்த மலர்களாகிய அம்புகளால்;* ***திறந்த நெஞ்சொடும் -*** *பிளவுற்ற நெஞ்சத்தோடும்;* ***அரிய வன் துயரொடும் -*** *பொறுத்தற்கரிய கொடிய துன்பத்தோடும்;* ***வைகுவேன் -*** *(சீதையைப் பிரிந்து) காட்டில் தங்கியிருக்கிறேன்.*

*பறவையினத்தைச் சார்ந்த குருவிக்கு அமைந்த இன்ப வாழ்க்கைகூட, உயர்ந்த மானிடப்பிறவில் தோன்றிய தனக்குக் கிடைக்காமல் போய்விட்டதே என இராமன் வருந்திக் கூறியது இப்பாடல். 'கூட்டினுள்' என்று கூறியதற்கேற்பக் 'காட்டில்' என்பதும், 'மின்மினி மணி விளக்கின்' என்பதற்கேற்ப 'இருளில்' என்பதும் கொள்ளவேண்டும். குருவிகள் மின்மினிப் பூச்சிகளின் ஒளியில் தம் கூடுகளில் பெடையொடு துயிலத் தான் இருளில், வனத்தில துணையின்றித் துயிலாது உள்ளேனே எனப் பொருள் விரித்துக் கொள்ளல் வேண்டும்.*

*மின்மினியைக் குருவிகள் (வெளிச்சத்திற்காகத்) தம் கூட்டில் வைத்தல் உண்டு என்பதைத் 'தகைசால் மணி மேட்டு இமைப்பன; 'மின்மினி ஆம்' எனக்*

*கூட்டின் உய்க்கும் குரீஇயின் குழாம்' (58) என்ற அடிகளால் அறியலாம். தம் துணையைப் பிரிந்து வாழ்பவர், துணையொடு வாழும் பிற உயிர்களைக் காண்கையில் பிரிவுத்துயர் மிக்கு மனம் தளர்வடைதல் இயல்பாகும். 'மயிலும் பெடையும் உடன் திரிய, மானும் கலையும் மருவிவர, பயிலும் பிடியும் கடகரியும் வருவ, திரிவ, பார்க்கின்றான்; குயிலும் கரும்பும், செழுந்தேனும், குழலும், யாழும், கொழும்பாகும், அயிலும் அமுதும், சுவை தீர்த்த மொழியைப் பிரிந்தான் அழியானோ? (3569) என்று முன்னரும் கவிச்சக்கரவர்த்தி குறிப்பது காண்க. குரீஇனம் என வரவேண்டியது எதுகை நோக்கி, 'குரிஇனம்' என்று வந்தது. 87*

***4235. 'வானகம் மின்னினும்,***
***மழை முழங்கினும்,***
***யான் அகம் மெலிகுவென்,***
***எயிற்று அரா என;***
***கானகம் புகுந்து யான்***
***முடித்து காரியம்,***
***மேல் நகும், கீழ் நகும்;***
***இனி என் வேண்டுமோ?***

***வானகம் மின்னினும் -** மேகம் மின்னினாலும் (அதனைக் கண்டும்); **மழை முழங்கினும் -** மேகம் இடி முழக்கம் செய்தாலும் (அதைக் கேட்டும்); **எயிற்று அரா என -** நச்சுப் பற்களை உடைய நாகம் (வருந்துவது) போல; **யான் அகம் மெலிகுவேன் -** நான் மனம் வருந்துபவனாவேன்; **யான் கானகம் புகுந்து -** நான் காட்டில் வந்து; **முடித்த காரியம் -** சாதித்த செயலைக் குறித்து; **மேல்நகும் கீழ்நகும் -** மேல் உலகத்தவர் நகைப்பர், கீழ் உலகத்தவரும் நகைப்பர்; **இனி என் வேண்டுமோ -** இனியும் வேறு என்ன இழிவு வரவேண்டும்? (இதுவே போதும் என்றபடி).*

*மின்னலுக்கும் இடிக்கும் அஞ்சி வருந்துவது பாம்பின் இயல்பாகும். பிரிந்திருப்போர் மழைக்காலத்தில் வருந்துதல் இயல்பாதலின் 'யான் அகம் மெலிகுவன்' மனைவியைப் பகைவன் கவர, அவளை மீட்கவும் செய்யாது வருந்தி நிற்கும் நிலையே தான் காட்டில் வந்து சாதித்த காரியம் என்று எண்ணி மனம் நொந்து, தன் நிலை கண்டு மேல், கீழ் உலகங்கள் எள்ளி நகையாடுமே என இராமன் வருந்தினான். "யான் வனம் போந்தது, என்னுடைப் புண்ணியத்தால்" (2648) எனத் தண்டகவனத்து முனிவர்களிடம் கூறிய இராமன் இங்கு 'யான் கானகம் புகுந்து முடித்த காரியம் மேல் நகும், கீழ் நகும்' எனக் கூறியது குறிக்கத்தக்கது. மேல் உலகம், கீழ் உலகம் எனக் கூறியதால் உபலக்கணத்தால் நடு உலகமாகிய இவ்வுலகமும் பெறப்படும். மேல், கீழ் என்பன இடவாகு பெயர்களாய் மேல் உலகினரையும், கீழ் உலகினரையும் குறிக்கும். நகுதல் - இகழ்ச்சிச் சிரிப்பு. 'வான் நகும்; மண்ணும் எல்லாம் நகும்' (7282) என்றதும் காண்க. இனி, இதனினும் இழிநிலை இல்லை யென்பானான், 'இனி என் வேண்டுமோ?' என்றான். 88*

***4236. 'மறந்திருந்து உய்கிலேன்;***
***மாரி ஈதுஎனின், இறந்து விண் சேர்வது***
***சரதம்; இப் பழி,***
***பிறந்து பின் தீர்வலோ?***

*பின்னர், அன்னது*
*துறந்து சென்று உறுவலோ?*
*துயரின் வைகுவேன்!*

***துயரின் வைகுவேன்*** - *துயரத்தில் தங்கியிருப்பேனாகிய நான்;* ***மறந்து இருந்து உய்கிலேன்*** - *சீதையை மறந்து இருந்து உயிர் பிழைக்க வல்லேன் அல்லன்;* ***மாரி ஈது எனின்*** - *கூதிர்க்கால மழை என்னை இவ்வாறு வருத்துமாயின்;* ***இறந்து விண் சேர்வது*** - *நான் இறந்த விண்ணுலகத்தை அடைவது;* ***சரதம்*** - *உறுதியாகும்;* ***இப்பழி*** - *(சீதையை இராவணன் கவர்ந்து சென்றதால் எனக்கேற்பட்டுள்ள) இந்தப் பழிச் சொல்லை;* ***பிறந்து பின் தீர்வலோ*** - *மற்றொரு பிறவியெடுத்து (அவனோடு போர் செய்து) தீர்த்துக் கொள்வேனோ?* ***பின்னர்*** - *(அல்லது) அப்பிறவியில்;* ***துறந்து சென்று*** - *இல்லறத்தைத் துறந்து சென்று;* ***அன்னது உறுவலோ*** - *அப்பழிதீரும் வகையை அடையப் பெறுவேனோ?*

*இராமனுக்குச் சீதை மேலுள்ள அன்பை, 'மறந்திருந்து உய்கிலேன்' என்ற தொடர் உணர்த்தும். பிரிவுத்துன்பத்தை மிகுவிக்கும் வகையில் மழை பெய்யுமாயின் தான் இறப்பது உறுதி எனவும் உரைத்தான். 'மறந்திருந்து உய்கிலேன்' என்ற தொடர் இராமன் இப்பிறவியில் துறக்கமாட்டாமையை உணர்த்தும். இப்பிறவியில் இப்பழி தீரப்பெறுதல் இயலாதோ எனக் கலங்கினான். அடுத்த பிறவியிலும், முன்னைப் பிறவியில் நிகழ்ந்ததை நினைவில் கொண்டு இராவணனை வென்று பழிநீங்கல் இயலுமா என்ற ஐயத்தால் 'பிறந்து பின் தீர்வலோ? என்றான். அல்லது துறவுமேற்கொண்டால், முந்திய பிறவியின் தொடர்புகள் நீங்குமாதலின், பழியும் பகையும் நீங்கிவிடும் என்பதால் 'துறந்து சென்று அன்னது உறுவலோ?' என்றான். இப்பழியைத் தீர்ப்பது எங்ஙனம் என்றே கலங்கினான்இராமன். 89*

*4237. 'ஈண்டு நின்று, அரக்கர்தம்*
*இருக்கை யாம் இனிக்*
*காண்டலின், பற்பல*
*காலம் காண்டுமால்;*
*வேண்டுவது அன்று இது; வீர!*
*''நோய் தெற*
*மாண்டனன் என்றது''*
*மாட்சிப்பாலது ஆம்.*

***வீர*** - *வீரனே!* ***யாம்*** - *நாம்;* ***ஈண்டு நின்று*** - *இவ்விடத்தில் இருந்து கொண்டு;* ***இனி*** - *இனிமேல்;* ***அரக்கர்தம் இருக்கை காண்டலின்*** - *அரக்கர்கள் உள்ள இடத்தைத் தேடிக் காண்பதென்றால்;* ***பற் பல காலம் காண்டும்*** - *பல நாட்கள் கழியக் காண்போம்;* ***இது***

***வேண்டுவது அன்று*** - *(ஆதலால் சீதையைத் தேடும்) இம்முயற்சி வேண்டுவதன்று;* ***நோய்தெற மாண்டனன்*** - *''(சீதையைப் பிரிந்ததால் ஏற்பட்ட) நோய் அழிக்க இராமன் இறந்துபட்டான்'';* ***என்றது*** - *எனப்படுவது;* ***மாட்சிப் பாலது ஆம்*** - *பெருமை தருவதாகும்.*

*சீதையைக் கவர்ந்து சென்ற அரக்கர் இருப்பிடத்தைக் கண்டுபிடிக்கவே நெடுங்காலம் செல்லும். கண்டுபிடித்த பின்னர் அப்பகைவர்களோடு போரிட்டுச் சீதையை மீட்கவும் நெடுங்காலம் ஆகும். எனவே, இம்முயற்சிகளில் ஈடுபடாமல் 'பிரிவுத்துயரால் இராமன் இறந்தான்' எனப் பேசுவதே சிறந்தது, என இராமன் எண்ணினான். துன்பங்களோடு வாழ்வதினும் துன்பம் நீங்க உயிர் போதலே பெருமை தரத்தக்கது என்பதால் 'மாட்சிப் பாலது' என்றான். காலம் என்றது காலத்தின் பெரும் பகுதியைக் குறித்தது. 90*

***4238. 'செப்பு உருக்கு அனைய***
***இம் மாரிச் சீகரம்***
***வெப்புறப் புரம் சுட,***
***வெந்து வீவதோ -***
***அப்பு உருக் கொண்ட வாள்***
***நெடுங் கண் ஆயிழை***
***துப்பு உருக் குமுத வாய்***
***அமுதம் துய்த்த யான்?***

**அப்பு உருக் கொண்ட -** *அம்பின் கூரிய வடிவத்தைக் கொண்ட;* **வாள் நெடுங்கண் -** *ஒளி பொருந்திய நீண்ட கண்களை உடைய;* **ஆயிழை -** *ஆராய்ந்தெடுத்த அணிகலன்களை அணிந்த சீதையின்;* **துப்பு உருக் குமுதவாய் -** *பவளம் ஒத்த நிறமுடையதும், ஆம்பல் மலர் போன்றதுமான வாயிதழின்;* **அமுதம் துய்த்த யான் -** *அமுதத்தைப் பருகி இன்புற்ற நான்;* **இம் மாரிச் சீகரம் -** *இந்த மழைத் துளிகள்;* **செப்பு உருக்கு அனைய -** *செம்பை நெருப்பிலிட்டு உருக்கி, அதனை ஊற்றினாற்போன்ற;* **வெப்பு உற -** *வெம்மை மிகுமாறு;* **புரம்சுட -** *என் உடம்பை எரிக்க;* **வெந்து வீவதோ -** *வெந்து அழிவது தகுமோ?*

*சீதையுடன் இருந்த காலத்தில் பெருமகிழ்வு எய்தியவன், பிரிவுற்ற காலத்தில் மழைத்துளிகள் தன்னை வருதத அழிய வேண்டியதுதான என வருந்திக் கூறினான். அமுதம் உண்டவர் இறத்தல் இல்லையாதலின் சீதையின் குமுதவாய் அமுதம் துய்த்த தான் வீவது பொருந்துமோ என இரங்கினான்.*

*செம்பு, அம்பு என்பன வலித்தல் விகாரங்கள். கண்களின் நீட்சிக்கும் கூர்மைக்கும் அம்பு உவமை ஆயிழை; அன்மொழித்தொகை; துப்பு, வாயின் நிறத்திற்கும் குமுதம் வடிவிற்கும் உவமைகளாகும். 'அப்புருக் கொண்ட வாள்நெடுங் கண், என்பதில் சீதையின் இயற்கை அழகும், ஆயிழை என்பதில் அணிகலன்களால் பெற்ற செயற்கை அழகும் உணர்த்தப்பட்டன. தண்மையை அளிக்கும் மழைத்துளி பிரிந்தார்க்கு வெப்பம் உண்டாக்குதல் எண்ணிப் பார்த்தற்குரியது. 91*

***4239. 'நெய் அடை தீ எதிர் நிறுவி, ''நிற்கு இவள்***
***கையடை'' என்ற அச் சனகன் கட்டுரை***
***பொய் அடை ஆக்கிய பொறி இலேனோடு,***
***மெய் அடையாது; இனி, விளிதல் நன்றுஅரோ.***

**நெய்அடை தீ எதிர்நிறுவி** - நெய் ஊற்றி வளர்க்கப்பெற்ற தீ முன்னர் (சீதையை) நிறுத்தி; **'நிற்கு இவள் கையடை' என்ற** - 'உனக்கு இவள் அடைக்கலப் பொருள்' என்று சொன்ன; **அச்சனகன் கட்டுரை** - அந்தச் சனகரது மொழியை; **பொய் அடை ஆக்கிய** - பொய்யொடு பொருந்திய சொற்களாகச் செய்துவிட்ட; **பொறி இலேனொடு** - நல்வினை இல்லாதவனாகிய என்னிடத்தில்; **மெய் அடையாது** - உண்மை இருக்காது; **இனி விளிதல் நன்று** - (எனவே நான்) இனி இறத்தலே நல்லது.

*ஓமத்தீ வளர்த்து, அத்தீ முன்னர்ச் சீதையை "உனது அடைக்கலப் பொருள்" எனக் கூறிச் சனகர். ஒப்படைத்ததை எண்ணி இராமன் கலங்கினான். "பூமகளும் பொருளும் என நீ என் மாமகள் தன்னொடும் மன்னுதி' என்னா, தாமரை அன்ன தடக்கையின் ஈந்தான்' என்பது கம்பர் கூற்று (1245). இங்ஙனம் ஒப்படைக்கப்பட்ட சீதையைக் கைப்பிடித்தான் இராமன் என்பதைத் 'தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்' (1248); பொற்றொடி கைக்கொடு நல்மனை புக்கான்' (1251) என்ற அடிகள் உணர்த்தும். இதையே இராமன் இங்குக் 'கையடை' என்றனன். சீதையைப் பாதுகாவாது விட்டதால் சனகன் கூறிய கட்டுரை பொய்யாகுமாறு தான் நடந்து கொண்டதாகவும், அதனால் தன்னிடம் வாய்மை நிலைத்தல் இல்லை என்றும் கூறி 'இங்ஙனம் பொய்யனாய் வாழ்தலினும் இறத்தலே சிறந்தது' என்றான். கையடை - அடைக்கலம், தவறாமல் பாதுகாக்கத்தக்க பொருள் என்பது கருத்து. தம்மிடம் ஒப்படைத்ததைப் பாதுகாவாமல் விடுதல் பெரும்பாதகம் ஆதலின் 'பொறியிலேன்' என உரைத்தான். 'தாளினில் அடைந்தவர் தம்மை, தற்கு ஒரு கோள் உற, அஞ்சினன் கொடுத்த பேதையும் (2203) நரகிடை வீழ்வன் என்ற பரதனின் சூளுரை அடைக்கலப் பொருளின் அருமையையும் அதனைக் காக்கத் தவறியவர் நரகடைவர் என்பதையும் உணர்த்தும். 'அடைக்கலம் இழந்தேன் இடைக்குல மாக்காள்' (சிலம்பு - 27 - 75) எனக் கூறி மாதிரி இடையிருள் யாமத்து எரியகம் புக்கது' காண்க. அரோ -அசை. 92*

***4240. 'தேற்றுவாய், நீ உளையாக,***
**தேறி நின்**
**ஆற்றுவேன், நான்**
**உளனாக, ஆய்வளை**
**தோற்றுவாள் அல்லள்; இத்**
**துன்பம் ஆர் இனி**
***மாற்றுவார், துயர்க்கு ஒரு***
***வரம்பு உண்டாகுமோ?***

**தேற்றுவாய் நீ உளையாக** - என்னைத் தேற்றுபவனாக நீ இருக்க; **தேறி நின்று ஆற்றுவேன்** - (அதனால்) ஆறுதல் அடைந்து மனம் தேறிப்

பொறுத்துக் கொள்பவனாய்; **நான் உளனாக** - நான் இருக்க; **ஆய்வளை** - ஆய்ந்த வளையல்களை அணிந்த சீதை; **தோற்றுவாள் அல்லள்** - இங்கு வந்து (நம்முன்) தோன்றுபவள் அல்லள்; **இத்துன்பம் ஆர் இனி மாற்றுவார்** - இத்துன்பத்தை இனி யார் மாற்றுவார்கள்? (எவருமில்லை); **துயர்க்கு ஒரு வரம்பு உண்டாகுமோ** - (யான் அடையும்) துன்பத்திற்கு ஓர் எல்லையும் உண்டோ?

இலக்குவன் தேற்றுதலும் இராமன் ஒருவாறு ஆற்றுதலும் நிகழ்கின்றனவே யன்றிச் சீதையின் தோற்றுதல் நிகழவில்லை. சீதை வராது போயின் இராமன் துயர் நீங்கும் வழியும் இல்லையாதலின் இராமன் அடையும் துயர்க்கு எல்லையும் இல்லை எனவாயிற்று. 'பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை தன் நோய்க்குத் தானே மருந்து' (குறள் - 1102) என்பது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. சீதையைக் கண்டாலன்றி ஆறுதல் மொழிகளால் தன் துயர் நீங்காது எனத் தெளிவுபடுத்தினான் என்க. இலக்குவன் தேறுதல் கூறி இராமன் துன்பத்தைத் தணிவிப்பதைப் பல இடங்களில் காணலாம்.
93

*4241.* **'விட்ட போர் வாளிகள்**
**விரிஞ்சன் விண்ணையும்**
**சுட்டபோது, இமையவர்**
**முதல தொல்லையோர்**
**பட்டபோது, உலகமும் உயிரும்**
**பற்று அறக்**
**கட்டபோது, அல்லது,**
**மயிலைக் காண்டுமோ?**

**விட்ட போர் வாளிகள் -** (யான் இனி) போரில் தொடுக்கின்ற அம்புகள்; **விரிஞ்சன் விண்ணையும் -** பிரமனது சத்திய லோகத்தையும்; **சுட்ட போது (அல்லது) -** எரிப்பதோடல்லாமல்; **இமையவர் முதல தொல்லையோர் -** தேவர்கள் முதலான பழமையானவர்களை; **பட்ட போது (அல்லது)** - ஒழிப்பதோடல்லாமல்; **உலகமும் உயிரும் -** உலகங்களையும் உயிர்களையும்; **பற்று அறக் கட்டபோது அல்லது -** வேரற அழித்துத்தான்; **மயிலைக் காண்டுமோ -** மயில் போன்ற சீதையைக் காண முடியுமோ?

'விட்ட' என்பது விரைவு பற்றி வந்த காலவழுவமைதி. அல்லது என்பது கடைநிலை விளக்காய்ச் சுட்டபோதல்லது, பட்ட போதல்லது என இயையும் சீதையின் மென்சாயல் பற்றி 'மயில்' எனக் கூறினன். மயில் - உவமை ஆகுபெயர்.
94

*4242.* **'தருமம்என்ற ஒரு பொருள்**
**தன்னை அஞ்சி, யான்**
**தெருமருகின்றது; செறுநர்**
**தேவரோடு**
**ஒருமையின் வந்தனரேனும்**
**உய்கலார்; -**
**உரும் என ஒலிபடும்**
**உர விலோய்!' என்றான்.**

**உரும் என ஒலிபடும் -** இடிபோல நாண்ஒலி உண்டாகும்; **உர விலோய் -** வலிமை கொண்ட வில்லை உடையவனே! **யான் தெருமரு கின்றது -** (உலகங்களையும் உயிர்களையும் அழிக்காது) யான் மனம் வருந்திக் கொண்டிருப்பது; **தருமம் என்ற ஒரு பொருள் தன்னை -** தருமம் என்கின்ற ஒரு சிறந்த பொருளுக்கு; **அஞ்சி -**

*அஞ்சுவதாலேயே;* ***செறுநர் -*** பகைவர்கள்; **தேவரோடு ஒருமையின் -** தேவர்களோடு ஒன்று சேர்ந்து; **வந்தனரேனும் -** எனக்கெதிரே வருவராயினும்; ***உய்கலார் -*** *தப்பிப் பிழைக்க மாட்டார்கள்;* ***என்றான்-*** *என்று (இராமன்) கூறினான்.*

*இலக்குவனும் தன்னை ஒத்த வீரனாகையால் 'உரும் என ஒலிபடும் உரவிலோய்' என விளித்தான். சீதையைக் கவர்ந்தவர் அரக்கராயிருக்க அதன் பொருட்டுத் தவறு செய்யாத பிற உயிர்களும், அனைத்து உலகங்களும் அழிதல் அறமன்று என்பதை உணர்ந்தே 'தருமம் என்ற ஒரு பொருள் தன்னை அஞ்சியான் தெருமருகின்றது' என்றான். முன் பாடலில் 'உலகமும் உயிரும் பற்று அறக் கட்ட போது அல்லது மயிலைக் காண்டுமோ?' எனக் கூறிய இராமன் இப்பாடலில் சினம் அடக்கி அறத்தின் வழி நிற்கும் நிலையைக் காண்க. 'தாய் ஆவார் யாவரே? தருமத்தின் தனிமூர்த்தி' (2568); 'எல்லை தீர் நல்லறத்தின் சான்றவனோ? (3682) என்பன காண்க. இராமன் வீரத்தில் சிறிதும் குறைந்தவன் அல்லன் என்பதை, செறுநர் தேவரோடு ஒருமையின் வந்தனரேனும் உய்கலார்' என்ற தொடர் உணர்த்தும். தாண்டக வனத்து முனிவர்களிடம் 'சூர் அறுத்தவனும், சுடர்நேமியும், ஊர் அறுத்த ஒருவனும் ஒம்பினும், ஆர் அறத்தினொடு அன்றி நின்றார் அவர் வேர் அறுப்பென்' (2652) எனக் கூறியது ஈண்டு ஒப்பிடத்தக்கது.* 95

இலக்குவன் மேலும் கூறிய தேறுதல் மொழிகள்

***4243. இளவலும் உரைசெய்வான்,***
***'எண்ணும் நாள் இனும்***
***உள அல; கூதிரும்,***
***இறுதி உற்றதால்;***
***களவு செய்தவன உறை***
***காணும் காலம் வந்து***
***அளவியது; அயர்வது என்?***
***- ஆணை ஆழியாய்!***

**இளவலும் உரை செய்வான் -** *(இராமன் கூறியவற்றைக் கேட்ட)* தம்பியான இலக்குவன் பின்வருமாறு கூறலானான். **ஆணை ஆழியாய் -** ஆணைச் சக்கரத்தை உடையவனே! **எண்ணும் நாள் இனும் உள அல -** *(சுக்கிரீவனுக்குத் தவணையாகக்)* குறிப்பிட்ட நாட்கள் இன்னும் உள்ளன

*அல்ல. (முடிந்து விட்டன);* **கூதிரும் இறுதி உற்றது -** கூதிர்ப்பருவமும் முடிவடைந்தது. **களவு செய்தவன் -** *(சீதையை வஞ்சனையால்)* கவர்ந்து சென்ற இராவணனது; **உறை காணும் -** இருப்பிடத்தைத் தேடிக் காண்பதற்கேற்ற; **காலம் வந்து அளவியது -** காலம் வந்து சேர்ந்தது. **அயர்வது என் -** *(அங்ஙனமிருக்க)* நீ வருந்துவது ஏன்?

எண்ணும் நாள் என்றது முன் சீதையைத் தேடுதற்கு ஏற்றதன்று என்று கருதிய மழை நாள்களைக் குறிக்கும். அவை கார்காலமாகிய ஆவணி, புரட்டாசியும், கூதிர்காலமாகிய ஐப்பசி, கார்த்திகையுமாகிய நான்கு மாதங்கள். இராமன் சுக்கிரீவனிடம் 'என்கண் மருவுழி மாரிக்காலம் பின்னுறு முறையின், உன்தன்

*பெருங்கடல் சேனையோடும் துன்னுதி, போதி' (4131) எனக் கூறியது காண்க. 'உள அல' என்றதும் கூதிரும் இறுதி உற்றது என்றதும் மழைக்காலம் முடிவுறுந தறு வாயில் இருப்பதையே உணர்த்தின. இன்னும் சில நாள்கள் உள்ளன என்பதைக் 'காலம் வந்து அளவியது' என்ற தொடரும் உணர்த்துகிறது. காலம் என்பது மார்கழித் திங்களைக் குறிக்கும். சீதையை வஞ்சித்துக் கவர்ந்தவனாதலின் இராவணனைக் களவு செய்தவன்' என்றான். இராவணனைக் கண்டு பிடித்துச் செயலாற்றும் காலம் வந்துவிட்டதால் இராமன் அயர்வுகொள்ள வேண்டிய நிலை இல்லை என இளவல் ஆறுதல் உரைத்தனன். இராமன் சக்கரவர்த்தித் திருமகனாதலால் 'ஆணை ஆழியாய்' என விளித்தான். எங்கும் செல்லும் இயல்பு பற்றி ஆணையைச் சக்கரம் என்று கூறுதல் மரபாகும்.*

*'உறை' என்பதற்கு வாழ்நாள் என்ற பொருள் இருத்தலால் 'சீதையைக் கவர்ந்த இராவணனுடைய வாழ்நாள் முடிவு காணும் காலம் வந்து நெருங்கியது' என்று பொருள் காணலும் அமையும். 96*

***4244. 'திரைசெய் அத் திண் கடல்,***
***அமிழ்தம் செங் கணான்***
***உரைசெயத் தரினும், அத்***
***தொழில் உவந்திலன்;***
***வரை முதல் கலப்பைகள்***
***மாடு நாட்டி, தன்***
***குரை மலர்த் தடக்***
***கையால் கடைந்து கொண்டனன்.***

***திரைசெய் அத்திண்கடல் -*** *அலைகள் வீசுகின்ற அந்த வலிய பாற்கடல்;* ***அமிழ்தம் -*** *தன்னிடமுள்ள அமிழ்தத்தை;* ***செங்கணான் -*** *சிவந்த கண்களையுடைய திருமால்;* ***உரைசெய -*** *(கொடு என்று) சொன்ன அளவிலே;* ***தரினும் -*** *கொடுக்கக் கடவதாயினும்;* ***அத்தொழில் -*** *அங்ஙனம் ஆணையால் எளிதில் பெறுவதை;* ***உவந்திலன் -*** *விரும்பாதவனாய்;* ***வரை முதல் கலப்பைகள் -*** *மந்தரமலை முதலிய கருவிகளை;* ***மாடுநாட்டி -*** *அக்கடலிடத்து நாட்டி;* ***தன் குரை மலர்த் தடக்கையால் -*** *(தோள் வளை முதலிய) அணிகலன்கள் ஒலிக்கப் பெற்ற செந்தாமரை மலர்போன்ற பெரிய கைகளால்;* ***கடைந்து கொண்டனன் -*** *(அக்கடலைக்) கடந்தே அமிழ்தத்தைப் பெற்றுக் கொண்டான்.*

*திருமால் தன் ஆணைக்கு அடங்கி நடக்கும் பாற்கடலிடத்து எளிதில் அமிழ்தத்தைப் பெறலாம்; எனினும் அங்ஙனம் பெறாது. மத்து முதலிய கருவிகளைக் கொண்டு தன் கையால் கடைந்தே அமிழ்தத்தைப் பெற்றான். அதுபோன்றே இராமன் நினைத்தால் வேறொருவர் துணையின்றியே உலகையும் உயிர்களையும் அழித்துப் பிராட்டியைக் காணும் ஆற்றல் பெற்றவன்; எனினும் வானரப்படைகளின் துணை கொண்டு தேடி முயன்று பகைவரை வென்று சீதையைக் காண்பதே முறையானது என்று இலக்குவன் உரைத்தான். இச்செய்யுள் பிறிது மொழிதலணி. திருமால் பாற்கடல் கடைந்ததை "வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக் கடல் வண்ணன் பண்டொருநாள் கடல்வயிறு கலக்கினையே' (சிலப் - ஆய்ச்சி.32) என்ற அடிகளும் உணர்த்தும். 'பூவிற்குத் தாமரையே' (திருவள்ளுவ மாலை. 38) 'பூவினிற்*

*கருங்கலம் பொங்கு தாமரை' (தேவா. 1182. 2) என்றாராகலின் மலர் இங்கே தாமரையைக் குறித்து நின்றது. அ - பண்டறிசுட்டு. தேவரும் அரக்கரும் பல காலம் கடைந்த கடலாதலின் 'திண்கடல்' எனப்பட்டது. வரை முதல் கலப்பைகள் - மந்தரமலை, வாசுகி, மேரு முதலியன. செங்கணான் - சிவந்த வரிகள் படர்ந்த கண்களை உடையவன். இங்கே திருமாலைக் குறித்தது. 'கண்ணும் திருவடியும் கையும் திருவாயும் செய்ய கரியவனை' என்கிறது சிலப்பதிகாரம் (ஆய்ச்சி. 36) குரைத்தல் - ஒலித்தல் - கடகம், வாகுவலயம் போன்ற அணிகள் ஒலிக்கப்பெறல்; வருந்திக் கடைதற்குப் பொருந்தாத மென்மையான கை என்பதை மலர்க்கை' என்ற தொடர் உணர்த்திற்கு. எத்துணை ஆற்றலுடையராயினும் ஒரு செயலைத் திறம்படப் புரியக் காலமும் கருவியும் இன்றியமையாதன என்பது இப்பாடலில் உணர்த்தப்பட்டது. 'ஞாலம் கருதினும் கைகூடும், காலம் கருதி இடத்தால் செயின்' (குறள் - 484) என்றதுகாண்க. 97*

***4245. 'மனத்தினின் உலகு எலாம்***
***வகுத்து, வாய்ப் பெயும்***
***நினைப்பினன் ஆயினும்,***
***நேமியோன் நெடும்***
***எனைப் பல படைக்கலம்***
***ஏந்தி, யாரையும்,***
***வினைப் பெருஞ் சூழ்ச்சியின்***
***பொருது வெல்லுமால்.***

**நேமியோன் -** *(மற்றும்) அத்திருமால்;* **மனத்தினின் -** திருவுள் ளத்தில் நினைத்த *மாத்திரத்தில்;* **உலகு எலாம் வகுத்து -** உலகங்களை எல்லாம் படைத்து; **வாய்ப் பெயும் -** வாயில் போட்டு உண்ணத்தக்க; **நினைப்பினன் ஆயினும் -** சங்கற்ப வலிமை உடையவனாயினும்; **எனைப்பல நெடும் படைக்கலம் ஏந்தி -** *(அங்ஙனம் செய்யாமல்)* வேறு பல பெரிய ஆயுதங்களைக் கையிற் கொண்டு; **யாரையும் -** *(கொடிய வர்கள்)* அனைவரையும்; **வினைப் பெரும் சூழ்ச்சியின் -** போர்த் தொழிலுக்குரிய சூழ்ச்சிகளோடு; **பொருது வெல்லும் -** போர் செய்தே வெற்றி கொள்வான்.

*தான் பரமபதத்தில் அல்லது பாற்கடலில் இருந்தவாறே தன் மனத்தால் நினைத்த அளவில் சங்கற்ப மாத்திரையில் - அனைவரையும் அழிக்கவல்லவனாயினும், திருமால் அங்ஙனம் செய்யாது பல படைக்கருவிகளைக் கொண்டு*

*பகைவர்கள் உள்ள இடம் சென்று இடத்திற்கேற்பச் சூழ்ச்சித் திறத்தோடு போர் செய்தல் அவதார தத்துவம். சூழ்ச்சி - தந்திரம்; கொடியவர்கள் செய்யும் மாயைகளுக்கு ஏற்ப மாயை செய்து போர்புரிதல்.*

*உலகு - இடத்தையும் உயிர்களையும் உணர்த்திற்று. வகுத்தல் - படைத்தல்; வாய்ப்பெய்தல் - அழித்தல். 'உண்டும் உமிழ்ந்தும் கடந்தும் இடந்தும் கிடந்தும் நின்றும்' (திருவாய் - 4 - 5 - 10) என்றது காண்க. பெயும் - பெய்யும்; தொகுத்தல் விகாரம். நேமியான் - சக்கரபாணி. பிறிதுமொழிதலணி. 98*

*4246. 'கண்ணுடை நுதலினன்,*
*கணிச்சி வானவன்,*
*விண்ணிடைப் புரம் சுட*
*வெகுண்ட மேலைநாள்,*
*எண்ணிய சூழ்ச்சியும்,*
*ஈட்டிக்கொண்டவும், -*
*அண்ணலே! -*
*ஒருவரால் அறியற்பாலதோ?*

***அண்ணலே -*** *பெருமையில் சிறந்தவனே!* ***கண்ணுடை நுதலினன் -*** *(நெருப்புக்) கண் பொருந்திய நெற்றியை உடையவனாகிய;* ***கணிச்சி வானவன் -*** *மழுவேந்திய சிவபிரான்;* ***விண்ணிடைப் புரம் சுட -*** *ஆகாயத்தில் திரியும் திரிபுரங்களை எரித்தற் பொருட்டு;* ***வெகுண்ட மேலை நாள் -*** *சினங்கொண்ட முற்காலத்திலே;* ***எண்ணிய சூழ்ச்சியும் -*** *(அதற்காக) எண்ணிய ஆலோசனைகளும்;* ***ஈட்டிக் கொண்டவும் -*** *சேகரித்துக் கொண்ட தேர் முதலிய கருவிகளும்;* ***ஒருவரால் அறியற்பாலதோ -*** *(ஏன் வேண்டுமென்று) ஒருவரால் அறியத்தகு வனவோ?*

*அனைவர்க்கும் பேரிடர் புரிந்து வந்த திரிபுரங்களை அழிக்க நெற்றிக் கண்ணும், தீத்திறல் கொண்ட மழுவாயுதமுமே அமையும்; எனினும், சிவபிரான் அவற்றைப் பயன்படுத்தாது, பல தேவர்களின் உதவி கொண்டே அவற்றை அழிக்க முதலில் நினைந்தான் என்பது இங்குக் குறிக்கப்பட்டது.*

*பூமியைத் தேராகவும், சூரிய சந்திரர்களைச் சக்கரங்களாகவம், தேவர்களைத் தேர்க்கால்களாகவும், நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைத் தேர்ப்பாகனாகவும், மேருமலையை வில்லாகவும், ஆதிசேடனை நாணாகவும், திருமாலை அம்பாகவும் கொண்டு திரிபுரஙகளை அழிக்கச் சிவபிரான் சென்றான் என்பது புராண வரலாறு. "ஓங்கு மலைப் பெருவில் பாம்பு நாண்கொளீஇ ஒரு கணை கொண்டு மூவெயில் உடற்றிப் பெருவிறல் அமரர்க்கு வென்றிதந்த கறைமிடற் றண்ணல்" (புறம் - 55); என்றது காண்க. நெற்றிக்கண்ணும் மழுப்படையும் சிவபிரானுக்குரிய சிறப்பு அடையாங்களாதலின் "வானவன்" என்ற சொல் - தேவரைக் குறித்த பொதுச் சொல், சிவபிரானைக் குறித்தது. பகைவரை அழிப்பதற்குத் தக்க ஆலோசனையும் கருவிகளும் இன்றியமையாதன என்பது இப்பாடலில் விளக்கப்பட்டது. 'கருவியும், காலமும் செய்கையும் செய்யும் அருவினையும் மாண்ட தமைச்சு' (குறள் - 631) என்றது காண்க. 99*

*4247. 'ஆகுநர் யாரையும் துணைவர் ஆக்கி, பின்*
*ஏகுறு நாளிடை எய்தி, எண்ணுவ*
*சேகு உறப் பல் முறை தெருட்டி, செய்தபின்,*
*வாகை என்று ஒரு பொருள் வழுவற்பாலதோ?*

***ஆகுநர் யாரையும் -*** *(நமது நோக்கத்திற்கு) உதவத்தக்கவர் எல்லோரையும்;* ***துணைவர் ஆக்கி -*** *துணைவர்களாக ஆக்கிக் கொண்டு;* ***எண்ணுவ -*** *ஆலோசிக்க வேண்டிய செய்திகளை;* ***சேகு உறப் -*** *உறுதியாக;* ***பல்முறை தெருட்டி -*** *பலமுறை ஆலோசித்துத் தெளிந்து;* ***பின் -*** *பிறகு;* ***ஏகுறு நாளிடை எய்தி -*** *(செயல்மேல்) செல்லும் நாளில்*

*செயலாற்றுமிடத்தை அடைந்து;* ***செய்தபின் -*** *(செயலைச்) செய்த பிறகு;* ***வாகை என்று ஒரு பொருள் -*** *வெற்றி என்று சொல்லக்கூடிய ஒரு பொருள்;* ***வழுவற்பாலதோ -*** *தவறக்கூடியதோ? (அன்று).*

*உதவத்தக்கவர்களையே துணையாகக் கொள்ள வேண்டுதலின் 'ஆகுநர் யாரையும் துணைவர் ஆக்கி' என்றான். 'தக்கார் இனத்தனாய்த் தானொழுக வல்லானைச் செற்றார் செயக்கிடந்ததில்' என்பது குறள். (எண். 446). 'ஆகுநர் யாரையும் துணைவராக்கி' என்றதால் தனக்கு உதவாதவரை நீக்குதலும் புலப்படுத்தியவாறாயிற்று. அவதார நிகழ்ச்சிப்படி வாலி இராமனக்கு உதவ வேண்டியிருக்க அவன் இராவணனுக்கு நண்பனாகிவிட்டால் இராமன் அவன் நட்பினை நாடாமை அரசியல் சூழ்ச்சிக்கு ஏற்ற செயலே ஆயிற்று. 'பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப் பொருத்தலும் வல்லதமைச்சு' (குறள் - 633) என்றது காண்க. சேக - மரவயிரம்; இங்கு உறுதிக்கு இலக்கணை. பல்முறை தெருட்டி - பலமுறை ஆராய்ந்து தெளிதல்; 'எண்ணித் துணிக கருமம்' என்பது வள்ளுவம். (குறள் 467). காலம் கருதி இடத்தால் செய்ய வேண்டுமாதலின் 'ஏகுறு நாளிடை எய்தி' என்றான். 'தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு அரும் பொருள் 'யாதொன்றும் இல்' (குறள் 462) என்பதால் 'வாகை என்றொரு பொருள் வழுவாற்பாலதோ?' என்றான். வெற்றி பெற்றவர் வாகைப்பூச் சூடுதல் மரபு ஆதலால் வெற்றிக்கு வாகை என்பது பெயராயிற்று. ஒரு செயல் வெற்றி பெறுதற்குரிய வழி இப்பாடலில் கூறப்பட்டது.* *100*

***4248. 'அறத் துறை திறம்பினர்,***
***அரக்கர்; ''ஆற்றலர்***
***மறத் துறை நமக்கு'' என***
***வலிக்கும் வன்மையோர் -***
***திறத்து உறை நல்***
***நெறி திறம்பல் உண்டுஎனின்,***
***புறத்து, இனி யார்***
***திறம் புகழும் வாகையும்?***

***அறத்துறை திறம்பினர் அரக்கர் -*** *அறவழியினின்று மாறுபட்ட வர்களாகிய அரக்கர்கள்;* ***ஆற்றலர் -*** *(உடல், வரம், சேனை இவற்றில்) வலிமை உடையவர்களாய்;* ***மறத்துறை நமக்கு என -*** *'பாவ வழியே*

*நம்மனோர்க்குச் சிறந்தது' என்று;* ***வலிக்கும் வன்மையோர் -*** *உறுதியாக நினைக்கும் வலிமை உடையவர்கள்.* ***திறத்து உறை நல்நெறி -*** *(அவர்கள் அவ்வாறு) நிலைத்த பேறுடைய நல்ல நெறியிலிருந்து;* ***திறம் பல் உண்டு எனின் -*** *தவறுதல் உள்ளது என்றால்;* ***புறத்து இனி -*** *அப்பால்;* ***புகழும் வாகையும் -*** *புகழும் வெற்றியும்;* ***யார் திறம் -*** *யாரிடத்தில் சேரும்? (அறநெறி பிழையாத உன்னையே சேரும்).*

*அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்பது உறுதியாதலின் ஆற்றல் உடையராயினும் அரக்கர்கள் அறநெறி தவறியவர்களாதலின் அவர்கள் பழியையும் தோல்வியையும் பெற்று அழிய, அறவழியில் நடக்கும் இராமனுக்கே புகழும் வெற்றியும் வந்து சேரும் எனக் காரணம் காட்டித் தேறுதல் கூறினான். 'புறத்தினி யார்*

*திறம் புகழும் வாகையும்' என வெற்றியின் உறுதியை வற்புறுத்திக் காட்டினான் இளவல். "பாவம் தோற்றது, தருமமே வென்றது இப்படையால்" (4444), 'வெல்லுமோ தீவினை அறத்தை மெய்ம்மையால்?' (5144) என்பன ஒப்புநோக் கத்தக்கன. "கடஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும், நெடுங் கொடிய நிமிர் தேரும் நெஞ்சுடைய புகன்மறவரும்' என நான்குடன் மாண்டதாயினும் மாண்ட, அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' (புறம் - 55) என்றதும்காண்க. 101*

***4249. 'பைந்தொடிக்கு இடர் களை***
***பருவம் பையவே***
***வந்து அடுத்துளது; இனி,***
***வருத்தம் நீங்குவாய்;***
***அந்தணர்க்கு ஆகும் நாம்,***
***அரக்கர்க்கு ஆகுமோ? -***
***சுந்தரத் தனு வலாய்! -***
***சொல்லு, நீ' என்றான்.***

***பைந்தொடிக்கு இடர்களை பருவம் -*** *பசும்பொன்னாலாகிய தொடியணிந்த பிராட்டிக்கு ஏற்பட்ட துன்பத்தை நீக்குதற்குரிய காலம்;* ***பையவே வந்து அடுத்துளது -*** *மெல்லவே வந்து சேர்ந்துளது;* ***இனி வருத்தம் நீங்குவாய் -*** *(அதனால்) இனிமேல் துன்பத்தைத் தவிர்ப்பாய்.* ***அந்தணர்க்கு ஆகும் நாம் -*** *முனிவர்களுக்கு உதவுவதற்காக வந்துள்ள நாம்;* ***அரக்கர்க்கு ஆகுமோ -*** *அரக்கர்களுக்கு இலக்கு ஆவோமா?* ***சுந் தரத் தனு வலாய் -*** *அழகிய விற்போரில் வல்லவனே!* ***நீ சொல்லு -*** *நீ சொல்வாயாக;* ***என்றான் -*** *என்று (இலக்குவன்) கேட்டான்.*

*கூதிர்ப்பருவத்திற்கு அடுத்து வரும் பருவம் சீதையின் துன்பத்தைத் நீக்கும் பருவமாகும் என்பதால் 'இடர்களை பருவம்' என்றான். இடர் களைதலாவது இராவணைன் கொன்று சீதையை மீட்டலாகும். பருவம் வந்துளது என்னாது பருவம் வந்து அடுத்துளது என்ற நயம் காண்க. அதற்கேற்ப அடுத்த பாடலில் 'அறுதியை அடைந்தது அப்பருவம்' என்றான். "முனிவர்களுக்குத் தீங்கு செய்கிற அரக்கர்களை அழித்து அவர்கட்கு உதவியாக இருக்கவேண்டிய நாம் அரக்கர்கள் செய்யும் துன்பங்களில் ஆழ்ந்துவிடுதல் தகுதியோ? அவ்வாறு துன்பத்தால் சோர்கையில் அந்தணர்களுக்கு உதவவும் இயலாது போய்விடுமன்றோ' எனத் தேறுதல்*

*உரைத்தான். வில்லுக்குச் 'சுந்தரம்' (அழகு) என்றது அறந்தலை நிறுத்தலும், செந்நெறி செலுத்தலும் முதலியன (5885) காண்க. ஆகும் - முன்னது பெயரெச்சம். பின்னது - தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று. "அரக்கரை ஆசு அறக்கொன்று, நல் அறம் புரக்க வந்தனம்' எனும் பெருமை பூண்ட நாம் (6430) "மறந்த புல்லர் வலி தொலையேன் எனின். . . பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ?", ஆர் அறத்தினொடு அன்றி நின்றார் அவர் வேர் அறுப்பென்' (2649, 2652) என்பன ஈண்டு நோக்கத்தக்கன. 102*

*கூதிர்ப்பருவம் நலிந்து தீர்தல்*

***4250. உறுதி அஃதே என***
***உணர்ந்த ஊழியான்,***
***'இறுதி உண்டேகொல் இம்***
***மாரிக்கு?' என்பது ஓர்***
***தெறு துயர் உழந்தனன்***
***தேய, தேய்வு சென்று***
***அறுதியை அடைந்தது, அப்***
***பருவம், ஆண்டு போய்.***

***அஃது உறுதியே என*** - *(இவ்வாறு இலக்குவன் கூறிய உரை களைக் கேட்டு) அவன் கூறியன யாவும் உறுதி பயப்பனவே என;* ***உணர்ந்த ஊழியான்*** - *உணர்ந்த ஊழிக்காலத்தையும் வெல்ல வல்ல இராமன்;* ***இம்மாரிக்க இறுதி உண்டே கொல்*** - *'இம்மழைக் காலத்திற்கு ஒரு முடிவும் உள்ளதோ?'* ***என்பது ஓர் தெறுதுயர்*** - *என்று எண்ணியதாலாகிய ஒப்பற்ற கொடிய துன்பத்தால்;* ***உழந்தனன் தேய*** - *வருந்தி, மெலிந்து நிற்க;* ***அப்பருவம்*** - *அந்தக் கூதிர்காலம்;* ***ஆண்டு போய்*** - *தன் ஆட்சியைச் செய்துவிட்டு;* ***தேய்வு சென்று*** - *சிறிது சிறிதாகத் தன் வலிமை தேய்ந்து;* ***அறுதியை அடைந்தது*** - *முடிவடைந்தது.*

*ஊழிக்காலத்தும் அழியாத கடவுளான இராமபிரான் காலத்திற்க வசப் பட்டு வருந்தியது, தான் கொண்ட மனித உருவிற்கேற்ப பாவனையே என்பது விளங்க 'ஊழியான்' என்றார். தனக்கு இளையவன் தானே எனக் கருதாது இலக்குவன் கருத்தை ஏற்றுக்கொண்டதை 'உறுதி அஃதே என உணர்ந்த ஊழியான்' என்றார். இராமன் தேய அப்பருவமும் உழந்தவன்மீது கொண்ட பரிவால் தேய்வு சென்று அறுதி அடைந்தது என்ற நயம் காண்க. கூதிர்ப்பருவம் தேய்வு செல்லுதலாவது மழை நாளாக நாளாகக் குறைந்து வருதல்; அறுதி அடைதலாவது. மழை இல்லாமல் போவதாகும் முன் பாடலில் 'பைந்தொடிக் கிடர்களை பருவம் வந்து அடுத்துளது' எனக் கூறியதற்கேற்ப சிலநாட்களில் மழைக்காலம் முடிவுற்றது என்று இங்குக்கூறினார். 103*

***4251. மள்கல் இல் பெருங்***
***கொடை மருவி, மண்உளோர்***
***உள்கிய பொருள் எலாம்***
***உதவி, அற்ற போது***
***எள்கல் இல் இரவலர்க்கு***
***ஈவது இன்மையால்,***
***வெள்கிய மாந்தரின்,***
***வெளுத்த - மேகமே.***

***மள்கல் இல் பெருங்கொடை*** - *குறைதல் இல்லாத பெரிய கொடைத் தொழிலை;* ***மருவி*** - *மேற்கொண்டு;* ***மண் உளோர் உள்கிய*** - *உலகத்தில் உள்ளவர் பெறக்கருதிய;* ***பொருள் எலாம் உதவி*** - *பொருள்கள் எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு;* ***அற்றபோது*** - *தம்மிடத்துப் பொருள் இல்லாவிடத்து;* ***எள்கல் இல் இரவலர்க்கு*** - *இகழப் படாத இரப்போர்க்கு;* ***ஈவது இன்மையால்*** - *கொடுக்கவேண்டிய பொருள்களைக் கொடுக்க முடியாமையால்;* ***வெள்கிய மாந்தரின்*** - *வருந்துகின்ற (வெளுத்த) மனிதர்களைப்*

போல; **மேகம் வெளுத்த -** *(தம்மிடமுள்ள நீரை எல்லாம் பெய்துவிட்டமையால்) மேகங்கள் வெளுத்துத் தோன்றின.*

*மக்களுக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் கொடுக்கும் கொடையாதலின் 'மள்கலில் பெருங்கொடை' என்றார். கொடுத்தல் என்பது பிறவிக் குணமாக அமைவதால் 'மருவி' எனக் குறிப்பிட்டார். பிறர் துன்பத்தைக் குறிப்பால் அறிந்து அவர் கேட்பதற்கு முன்பேயே கொடுத்தல் சிறப்பாதலின 'மண் உளோர் உள்கிய பொருள் எலாம் உதவி' என்றார். மண்ணுளோர் எனப் பொதுப்படக் கூறினும் தகுதியுடையார்க்கு உதவுதலே சிறப்புடைத்து. உதவி வரைத்தன்று உதவி உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து" (குறள் - 105), என்றதும் 'பாத்திரமறிந்து பிச்சையிடு' என்ற பழமொழியும் காண்க. இரப்பவரை எள்ளுதல் கூடாது என்பதால் 'எள்கலில் இரவலர்' எனப்பட்டனர். கொடுத்துப் பழிகியவர் தம்மிடம் வந்து கேட்பார்க்குக் கொடுக்கத் தம்மிடம் பொருள் இல்லையெனின் பெரிதும் நாணுவர் என்பதை 'ஈவது இன்மையால் வெள்கிய மாந்தர்' எனக் குறித்தார். "சாதலின் இன்னாதது இல்லை. இனிதுஅதூஉம் ஈதல் இயையாக் கடை" (குறள் - 230); இன்மையுரைத்தார்க்கது நிறைக்கல் ஆற்றாக்கால் தன்மெய் துறப்பான் - (கலி - 43), "இரப்பார்க் கொன்றீயாமை அச்சம்' (நாலடி -145), 'ஈதல் இரந்தார்க் கொன்று ஆற்றாது வாழ்தலின், சாதலும் கூடுமாம்' (கலி. 61); "ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று" (புறம் - 204) என்பவற்றால் கொடுக்கும் இயல்புடையார்; கொடை புரியாமையை இழிவெனக் கருதி, அஞ்சிச் சாதலையும் இனிதென ஏற்பர் என்பதை அறியலாம்.*

*மழை பொழிந்து வெளுத்த மேகத்திற்குக் கொடுத்து வறிதாய வள்ளல்கள் உவமையாயினர். 'உள்ளி உள்ளவெல்லாம் உவந்து ஈயும் அவ்வள்ளியோரின் வழங்கின மேகமே' (15) என முன்னரும் இவ்வுவமை கூறியிருத்தல் காண்க. மாந்தர் தம்மிடம் உள்ள பொருள் அனைத்தும் கொடுத்தே வறியராயினது போல மேகமும் தன்னிடமுள்ள நீரனைத்தையும் பொழிந்தேவெளுத்தது. 104*

**4252. தீவினை, நல்வினை,**
**என்னத் தேற்றிய**
**பேய் வினைப் பொருள்தனை**
**அறிந்து பெற்றது ஓர்**
**ஆய் வினை மெய்யுணர்வு**
**அணுக, ஆசு அறும்**
**மாயையின் மாய்ந்தது -**
**மாரிப் பேர் இருள்**

**தீவினை நல்வினை என்ன -** *பாவச்செயலை நல்ல செயல் என்று எண்ணுமாறு செய்யும்;* **பேய்வினை -** *பேயின் செயல்களைத் தூண்டும்;* **பொருள்தனை -** *செல்வத்தின் தன்மையை;* **அறிந்து -** *உணர்ந்து;* **பெற்றது ஓர் -** *அடையப்பெற்றதான ஒப்பற்ற;* **ஆய் வினை மெய்யுணர்வு -** *ஆராய்தலினால் கிடைக்கின்ற மெய்ஞ்ஞானத்தால்;* **அணுக -** *(பொருட்பற்றை விட்டுப் பரம்பொருளைச்) சார;* **ஆசு அறும் -** *குற்றமற்ற;* **மாயையின் -** *மாயை நீங்குதல் போல;* **மாரிப் பேரிருள் -** *மழைக்காலத்தில் தோன்றிய பெரிய இருள்;* **மாய்ந்தது -** *மறைந்தது.*

*பொருளாசையானது தீவினையை நல்வினை என எண்ணச்செய்யும். மெய் உணர்வால் பொருள் மீதுள்ள பற்றாகிய மாயை நீங்கும். அதுபோல முன்பனிப் பருவம் வந்தவுடன் மழைக்காலத்துச்செறிந்த இருள் நீங்கியது என்பது உவமையின் கருத்து. பணம் பல கேடுகளைச் செய்யும் என்பதால் அதனைப் 'பேய்வினை' என்றார். 'செல்வம் வந்துற்ற காலைத் தெய்வத்தைச் சிறிதும் பேணார்; சொல்வதை அறிந்து சொல்லார்; சுற்றமும துணையும் நோக்கார்" (வில்லி. பாரதம். கிருட்டி - 143); 'இன்னாதே கல்லார்கள் பட்ட திரு' (குறள் - 408) என்றதும் காண்க. மெய்யுணர்வு - தத்துவஞானம் அதாவது இருவினைப் பயன்களையும் பிறப்பு வீடுகளையும் கடவுளின் இயல்பு பற்றியும் ஐயம் திரிபற உள்ளபடி உணர்தலாகும். நல்லாசிரியரிடத்து உபதேசம் கேட்டுத் தெளிந்தே மெய்யுணர்வு பெறலாகும் என்பதால் அதற்கான முயற்சியை 'ஆய் வினை' என்றார். மெய்யுணர்வு தோன்றிய மாத்திரத்தே அவர் மனம் பற்று நீங்கிப் பரம்பொருளைச் சார, அவரிடம் முன்பிருந்த மாயை தானே நீங்கிப்போம். 'இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி, மாசறு காட்டிசியவர்க்கு' என்பது வள்ளுவம். (குறள் - 352) மருள், மயக்கம், அவித்தை, மாயை என்பன ஒரு பொருட் சொற்கள் இச்செய்யுள் குறிப் புருவகம். 105*

***4253. மூள் அமர் தொலைவுற,***
***முரசு அவிந்தபோல்,***
***கோள் அமை கண***
***முகில் குமறல் ஓவின;***
***நீள் அடு கணை***
***எனத் துளியும் நீங்கின;***
***வாள் உறை உற்றென***
***மறைந்த, மின் எலாம்.***

***மூள் அமர் தொலைவுற -*** *(பகைவர் மேல்) மாறுபாட்டால் மூண்டபோர் முடிவுற்ற அளவில்;* ***முரசு அவிந்த போல -*** *போர் முரசுகள் ஒலி அடங்கின போல;* ***கோள் அமை கணமுகில் -*** *கடல்நீரைக்*

*கொள்ளுதல் அமைந்த மேகக் கூட்டங்களின்;* ***குமுறல் ஓவின -*** *இடி முழக்கம் ஒழிந்தன.* ***நீள் அடு கணை என -*** *நீண்டதாய்ப் பகைவரை அழிக்கும் அம்புகள் (போர் முடிந்ததும்) எய்யப்படாமை போல;* ***துளியும் நீங்கின -*** *மழைத்துளிகளும் (வீழ்தல்) ஒழிந்தன.* ***வாள் உறை உற்றென -*** *(போர் முடிந்த அளவில்) வாட்படைகள் உறைகளுள் (செருகப்பட்டு) மறைந்தாற்போல;* ***மின் எலாம் மறைந்த -*** *மின்னல்கள் எல்லாம் மறைந்தன.*

*'மூள்அமர் முற்றுற' என்பதை மூன்று வாக்கியங்களுடன் கூட்டுக. இதனை முதல் நிலைத்தீவக அணி என்பர். போர் முடிந்த அளவில் முரசு ஒலி அடங்கும், அம்பு மழை ஓயும், வாட்கள் உறையிலிடப்பெறும். அவைபோல மழை நீங்கிய அளவில் முகிலின் முழக்கமும், மழைத்தாரைகளும், மின்னல்களும் மறைந்தன. இடிக்கு முரசம் உவமையாதலை 'வென்றி முரசின் இரங்கி யெழில் வானம்' (கார் நாற்பது 35) என்புழிக் காணலாம். 'மன்மதன் மலர்க்கணை வழங்கினால் என, பொன்னெடுங் குன்றின் மேல் பொழிந்த தாரைகள்' (4162); 'துளித்திவலை காரிடு வில்லிடைச் சரம்என, விசையின் வீழ்ந்தன' (4163); 'அசைவுறு சிறுதுளி அப்பு மாரியின்' (4171) என்பன*

*மழைத்துளிகளுக்கு அம்பு உவமையாதலைக் காட்டுவன. மின்னலுக்கு வாள் உவமையாதலை 'மின் கூர்த்து எழு வாள் எனப் பிறழும் கோட்பினும்' (4161). என முன்னரும் கூறியுள்ளமை காண்க. கோள் அமை - கடல் நீரை முகந்து கொள்ளும் தன்மை. முதனிலை நீண்ட தொழிற் பெயர். 106*

***4254. தடுத்த தாள் நெடுந் தடங் கிரிகள் தாழ்வரை***
***அடுத்த நீர் ஒழிந்தன; அருவி தூங்கின;***
***எடுத்த நூல் உத்தரியத்தொடு எய்தி நின்று,***
***உடுத்த வால் நிறத் துகில் ஒழிந்த போன்றவே.***

***தடுத்த தாள் -*** *குறுக்கிட்டுத் தடுப்பன போன்ற அடிப்பகுதியை உடைய;* ***நெடுந்தடங்கிரிகள் -*** *உயர்ந்த பெரிய மலைகள்;* ***தாழ்வரை அடுத்த -*** *அடிவாரத்தைச் சூழ்ந்து நின்ற;* ***நீர் ஒழிந்தன -*** *நீர் நீங்கப் பெற்றனவாய்;* ***அருவி தூங்கின -*** *அருவி மட்டும் ஒழுகப்பெற்றவையாகி;* ***எடுத்த நூல் உத்தரியத்தொடு -*** *தரித்த பூணூலாகிய உத்தரியத்துடன்;* ***எய்தி நின்று -*** *பொருந்தி நின்று;* ***உடுத்த வால் நிறத்துகில் -*** *(தம்மைச்) சுற்றி உடுத்தியிருந்த வெண்ணிறத்தை உடைய ஆடை;* ***ஒழிந்த போன்றவே -*** *நீங்கிய நிலையை ஒத்து விளங்கின.*

*மழைக்காலத்தில் தாழ்வரையைச் சூழ்ந்த வெள்ளநீர் அரையாடையாகவும், மலையிலிருந்து பெருகிவரும் அருவிகள் உத்தரியம் போலவும் விளங்கின. மழை நீங்கியவுடன் மலையடிவாரத்தில் தங்கிய நீர் வடிந்துவிட, அருவிகள் மட்டும் ஒழுகின. அதனால் மலைகள் அரை ஆடையின்றி, மேலாடையையும் நீக்கிவிட்டு உத்தரியத்தை மட்டும் அணிந்திருந்தது போலக் காணப்பட்டது. இல்லறத்தார் அரையில் உடுக்கும் ஆடையோடு மேல் உத்தரியத்தை அணிவது விதி. எப்பொழு தேனும் மேலாடை அணியவில்லையயெனில், அதனால் உளதாகும் குற்றம் நீங்க, இயல்பாக அணியும் இரட்டைப் பூணூலுடன் உத்தரியத்தின் பொருட்டு மற்றொரு பூணூலையும் சேர்த்துத் தரித்துக் கொள்வது உண்டு என்பர். அருவி பெரிதாய்*

*ஒழுகிய போது மேலாடை பூண்டது போல் விளங்கியது; மழை நின்றதும் அருவி நீர் சிறிதாய் ஒழுகியபோது பூணூலாகிய உத்தரியம் தரித்தது போல் காணப்பட்டது என வர்ணித்தார். இது தற்குறிப்பேற்ற உவமை அணி. உத்தரியம் - மேலாடை. 107*

***4255. மேகம் மா மலைகளின்***
***புறத்து வீதலால்,***
***மாக யாறு யாவையும்***
***வாரி அற்றன;***
***ஆகையால், தகவு இழந்து, அழிவு***
***இல் நன் பொருள்***
***போக, ஆறு ஒழுகலான்***
***செல்வம் போன்றவே.***

***மேகம் -*** *கருமேகங்கள்;* ***மா மலைகளின் புறத்து -*** *பெரிய மலைகளின் மேல்புறத்தினின்று;* ***வீதலால் -*** *நீங்கிவிட்டதால்;* ***மாக யாறு யாவையும் -***

*அம்மலைகளின் மேலிடத்தில் பெருகிய ஆறுகளெல்லாம்;* ***வாரி அற்றன -*** *நீர்ப்பெருக்கு அற்றன;* ***ஆகையால் -*** *ஆதலால் அவை;* ***தகவு இழந்து -*** *பெருமை இழந்து;* ***அழிவில் நன்பொருள் போக -*** *தன்னிடத்துள்ள அழியாத நல்லபொருள் அழிந்துபோமாறு;* ***ஆறு ஒழுகலான் -*** *அறநெறியில் ஒழுகாதவனுடைய;* ***செல்வம் போன்ற -*** *செல்வத்தை ஒத்தன.*

*செல்வம் மிகுதியாகப் பெற்றவர்கள் செருக்குக் கொண்டு பெருந்தன்மை இழந்து அறநெறியில் ஒழுகார் எனின் அவர்கள் பெற்ற செல்வம் சிறிது சிறிதாக அவர்களை விட்டு நீங்கல் போல, மழை நீங்க ஆறுகளிலும் நீர்ப் பெருக்கு அற்றுப் போயிற்று. உவமை அணி, "திறத் திறனாலே செய்தவம் முற்றித் திரு உற்றாய் . . . . அறத் திறனாலே எய்தினை அன்றோ? அது நீயும், புறத்திறனாலே பின்னும் இழக்கப் புகுவாயோ?" (3246) என இராவணன் தீநெறியில் ஒழுகிப் பெற்ற செல்வத்தை இழக்கப் போகும் நிலையை மாரீசன் உணர்த்துவது இங்குக் காணத் தக்கது. ஆறு ஒழுகலான் - அறநெறியில் ஒழுகாதவன் என்பதால், தீநெறியில் ஒழுகுபவன் என்பது பெறப்படுகிறது. அழிவில் நன் பொருள் போக என்ற தொடருக்கு அழிவில்லாத நல்ல புண்ணியம் கழிந்துவிட' என்றும் பொருள்கொள்வர். 108*

***4256. கடம் திறந்து எழு களிறு***
***அனைய கார் முகில்***
***இடம் திறந்து ஏகலின்,***
***பொலிந்தது இந்துவும் -***
***நடம் திறன் நவில்வுறு***
***நங்கைமார் முகம்,***
***படம் திறந்து உருவலின்,***
***பொலிவும் பான்மைபோல்.***

***கடம் திறந்து எழுகளிறு அனைய -*** *கன்னங்கள், கபாலங்கள் வழி (மதநீர் சொரிந்து கொண்டு) செல்கின்ற ஆண்யானைகளை ஒத்திருந்த;* ***கார் முகில் -*** *கரிய மேகங்கள்;* ***இடம் திறந்து ஏகலின் -*** *(தாம் கவிந்து கொண்டிருந்த) விண்ணிடத்தை (வெளியாகும்படி) விட்டுச் சென்றமையால்;* ***இந்துவும் -*** *(கார்மேகங்களால் மறைக்கப்பட்டிருந்த) சந்திரனும்;* ***படம் திறந்து உருவலின் -*** *(மறைக்கும்பொருட்டு இடப் பட்ட) திரைச்சீலையை உருவித் திறந்துவிட்டதால்;* ***நடம் திறன் நவில் வுறு -*** *நடனத்தைத் திறம்படச் செய்யும்;* ***நங்கைமார் முகம் -*** *நடன மங்கையரின் முகம்;* ***பொலியும் பான்மைபோல் -*** *விளங்கும் தன்னை போல;* ***பொலிந்தது -*** *விளங்கித் தோன்றிற்று.*

*மழை பொழிந்துவிட்டுச் செல்லும் மேகத்திற்கு மதம் சொரிந்துவிட்டுச் செல்லும் களிறு உவமை. கரிய பெரிய வடிவமும், விரைந்த கதியும், முழக்கமும், மழை பொழிதலும் பற்றி 'கடம் திறந்து எழு களிறு அனைய கார்முகில்' என்றார். மேகங்களின் மறைப்பு நீங்கச் சந்திரன் விளக்கமுறத் தோன்றியமைக்கு, அரங்கில் திரைச்சீலை விலகப் புலனாகும். நடன மங்கையர் முகம் உவமையாயிற்று. படம் - திரைச்சீலை. 109*

***4257. பாசிழை மடந்தையர் பகட்டு வெம் முலை***
***பூசிய சந்தனம், புழுகு, குங்குமம்,***

***மூசின முயங்கு சேறு உலர, மொண்டு உற***
***வீசின, நறும் பொடி விண்டு, வாடையே.***

*__பாசிழை மடந்தையர் -__ பசும் பொன்னாலாகிய அணிகலன்களை அணிந்த மகளிரின்; __பகட்டு வெம் முலை -__ பெரிய விரும்பத்தக்க மார்பகங்களில்; __பூசிய சந்தனம் -__ பூசப்பட்ட சந்தனம்; __புழுகு, குங்குமம் -__ புழுகு, குங்குமப்பூ; __மூசின முயங்கு சேறு -__ (ஆகிய இவை) கலந்ததனாலாகிய கலவை மிகுதி; __உலர -__ உலருமாறு; __வாடை -__ வாடைக்காற்று; __நறும்பொடி விண்டு -__ நறுமணமுள்ள மகரந்தப்பொடி களைச் (மலர்களினின்று) சேகரித்து; __மொண்டு உற வீசின -__ நிறைய முகுந்து கொண்டு வந்து மிகுதியாக வீசிற்று.*

*மகளிர் மார்பில் பூசிய சந்தனம் போன்ற கலவைச் சேறு உலரும்படி வாடைக்காற்று மலர்களின் மகரந்தப் பொடிகளை முகந்து வீசிற்று என்பதாம். முயங்கு சேறு என்றது கலவைச் சாந்தினை. அது குழம்பாக இருத்தலின் அப்பெயர் பெற்றது. வாடை - வடக்கிலிருந்து வீசும் காற்று. 'வாடைக்காற்று' எனப்பட்டது. காற்று மாறி மாறி வெவ்வேறு இடங்களில் வீசுவதால் 'வீசி' எனப்பன்மையில் கூறினார்.*
*110*

***4258. மன்னவன் தலைமகன்***
***வருத்தம் மாற்றவான்,***
***அந் நெறிப் பருவமும்***
***நணுகிற்று ஆதலால்,***
***"பொன்னினை நாடிய***
***போதும்" என்பபோல்,***
***அன்னமும், திசை திசை***
***அகன்ற, விண்ணின்வாய்.***

*__மன்னவன் தலைமகன் -__ தசரத சக்கரவர்த்தியின் முதல் மகனாகிய இராமபிரானின்; __வருத்தம் மாற்றுவான் -__ துன்பத்தை மாற்றுவதற்குரிய; __அந்நெறிப் பருவமும் -__ அந்த நெறிப்பட்ட முன்பனிக் காலமும்; __நணுகிற்று -__ வந்துவிட்டது; __ஆதலால் -__ ஆகையினாலே; __பொன்னினை நாடிய போதும் -__ பிராட்டியைத் தேடிச் செல்வோம் (யாம்); __என்ப போல் -__ என்று சொல்லிப் புறப்பட்டன போல; __அன்னமும் -__ அன்னப்பறவைகளும்; __விண்ணின் வாய் -__ வானத்தில்; __திசை திசை அகன்ற -__ திசைகள் தோறும் பறந்து சென்றன.*

*மழைக் காலத்தில் குளிர் தாங்காது அன்னப் பறவைகள் ஒடுங்கிக் கிடக்கும். தாமரை மலர்த் தவிசு இகந்து தகை அன்னம், மாமரம் நிரைத்தொகு பொதும்பர் உழை வைக' (4228) என அவை நீர்நிலைகளை விடுத்துப் பொதும்பரில் தங்கியமை முன்னர்க் கூறப்பட்டது. மழை நீங்கிய அளவில் அவை விண்ணில் பறந்து தாம் விரும்பிய திசைகளுக்குச் சென்றன. இயல்பாக நிகழும் இச்செயலைச் சீதையைத் தேடுவதற்காகப் புறப்பட்டன என்று கூறியது தற்குறிப்பேற்ற அணி. வானர வீரர்களுக்கு முன்னாகப் பறவைகளும் சீதையைத் தேடிப் புறப்பட்டன என்பது உணர்த்த 'அன்னமும்' என்று உம்மை கொடுத்தார். எல்லா உயிர்களும் இராமபிரான் இன்ப துன்பங்களில் பங்கு கொள்வதாகக் கூறும் கவிநயம் காண்க. வருத்தம் -*

*சீதையின் பிரிவால் ஏற்பட்ட துனபம். பொன் - செல்வத்திற்கு உரிய கடவுளாகிய திருமகளின் அவதாரமான சீதை. அன்னமும் - உம்மை எதிரது தழுவிய எச்சப் பொருளது; திசை திசை - அடுக்குத் தொடர். 111*

***4259. தம் சிறை ஒடுங்கின,***
***தழுவும் இன்னல,***
***நெஞ்சு உறு மம்மரும்***
***நினைப்பும் நீண்டன, -***
***மஞ்சு உறு நெடு மழை***
***பிரிதலால், மயில் -***
***அஞ்சின, மிதிலை நாட்டு***
***அன்னம் என்னவே.***

***மஞ்ச உறு நெடுமழை -*** *மேகங்கள் பொருந்திய பெரிய மழைக் காலம்;* ***பிரிதலால் -*** *அகன்றுவிட்டதால்;* ***மயில் -*** *மயில்கள்;* ***தம் சிறை ஒடுங்கின -*** *தம் சிறகுகளை ஒடுக்கிக் கொண்டனவாய்;* ***தழுவும் இன்னல -*** *பொருந்திய துன்பத்தை உடையனவாய்;* ***நெஞ்சு உறு மம் மரும் -*** *உள்ளத்தில் கொண்ட மயக்கமும்;* ***நினைப்பும் நீண்டன -*** *நினைவும் மிக்கனவாய்;* ***மிதிலை நாட்டு -*** *மிதிலை நாட்டில் பிறந்த;* ***அன் னம் என்னவே -*** *சீதையைப் போல;* ***அஞ்சின -*** *அஞ்சின.*

*இராமனைப் பிரிந்த சீதை தன் உடம்பை ஒடுக்கிக் கொண்டு, இன்னல் நிறைந்தவளாய், மனத்தில் மயக்கமும் நினைவுகளுமாய வருந்தியிருத்தல் போல மயில்களும் மழைக்காலம் பிரிதலால் சிறகுகளை ஒடுக்கிக் கொண்டு, துன்பம் கொண்டனவாய் நினைவும், மயக்கமும் மிக்கனவாய் அஞ்சி ஒடுங்கின என்பதாம். உவமை அணி நினைப்பு - மழைக்காலத்தில் தாம் எய்திய இன்பங்களை நினைத்துப் பார்த்தால். கார் காலம் தொடங்கிய பொழுது 'ஆடின மயில்கள்' (4173) என்றதை நினைவு கொள்ளலாம். கார்காலத்தில் மகிழ்ந்தாடிய மயில்கள், மழை நீங்கியவுடன் துன்புற்று ஒடுங்கும் இயல்பு கூறப்பட்டது. அன்னம் - உவமை ஆகுபெயராய்ச் சீதையை உணர்த்தியது. 112*

***4260. வஞ்சனை, தீவினை, மறந்த மா தவர்***
***நெஞ்சு எனத் தெளிந்த நீர் நிரந்து தோன்றுவ;***
***'பஞ்சு' என, சிவக்கும் மென் பாதப் பேதையர்***
***அஞ்சனக் கண் எனப் பிறழ்ந்த, ஆடல் மீன்.***

***வஞ்சனை தீவினை -*** *தீவினைக்கு இடமான வஞ்சனையை;* ***மறந்த மாதவர் -*** *அறவே நீக்கிய பெருந்தவ முனிவரின்;* ***நெஞ்சு என -*** *மனம் போல;* ***தெளிந்த நீர் -*** *தெளிந்த நீர்;* ***நிரந்து தோன்றுவ -*** *(கலக்கமின் றிப்) பரந்து காணப்படும்;* ***ஆடல் மீன் -*** *(அந்நீரில்) விளையாடும் மீன்கள்;* ***பஞ்சு எனச் சிவக்கும் -*** *செம்பஞ்சுக் குழம்பு போலச் சிவந்து நிற்கும்;* ***மென்பாதப் பேதையர் -*** *மென்மையான பாதங்களை உடைய மகளிரின்;* ***அஞ்சனக் கண் என -*** *மைதீட்டிய கண்கள் பிறழ்வது போல;* ***பிறழ்ந்த -*** *பிறழ்ந்தன.*

*முனிவர்கள் தவம் அன்றிப் பிறவற்றை அறியாராதலின் 'தீவினை மறந்த மாதவர்' என்றார். மனம் கலங்குதற்குக் காரணமான தீவினை நீங்கியதாலும், மனம் தெளிவு*

*பெறுதற்குக் காரணமான கல்வி, கேள்விகளால் தெளிந்த ஞானம் பெற்றமையாலும் அவர்கள் நெஞ்சு தெளிவுடைய நெஞ்சமாயிற்று. மழை நீங்கிய பின்னர் நீர்நிலைகள் தெளிவடைந்த நிலைக்கு மாதவர் மனம் உவமை கூறப்பட்டது. 'தங்கள் நாயகரின் தெய்வம்தான் பிறிது இலை' என்று எண்ணும் மங்கைமார் சிந்தை போலத் தூயது' (408) என்றமை ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.*

*தெளிந்த நீரில் மீன்கள் பிறழ்தலுக்கு மகளிர் கண்கள் பிறழ்தல் உவமை. எதிர்நிலை உவமை அணி.* *113*

***4261. ஊடிய மடந்தையர் வதனம் ஒத்தன,***
***தாள்தொறு மலர்ந்தன, முதிர்ந்த தாமரை;***
***கூடினர் துவர் இதழ்க் கோலம் கொண்டன,***
***சேடு உறு நறு முகை விரிந்த செங்கிடை.***

***தாள்தொறு மலர்ந்தன** - நாளங்கள் தோறும் மலர்ந்தனவாய்; **முதிர்ந்த தாமரை** - முதிர்ச்சி பெற்ற தாமரை மலர்கள்; **ஊடிய மடந்தையர்** - (தலைவரோடு) ஊடல்கொண்ட மகளிரின்; **வதனம் ஒத்தன** - முகத்தைப் போன்ற. (ஒரு புறமாக முகத்தைத் திருப்பிக் கொண்டன என்றபடி); **சேடு உறு நறுமுகை** - அழகு பொருந்திய நறுமணம் மிக்க*

*அரும்புகள்; **விரிந்த செங்கிடை** - மலரப்பெற்ற செங்கிடை மலர்கள்; **கூடினர் துவர் இதழ்** - தலைவரொடு சேர்ந்து மகிழும் மகளிரின் சிவந்த இதழ்கள்போல; **கோலம் கொண்டன** - அழகுடன் விளங்கின.*

*தலைவர்மீது ஊடல் கொள்ளும் மகளிர் சினக்குறியாக முகத்தைத் திருப்பிக் கொள்ளல் இயல்பு. அத்தகு மகளிர் முகம், சில நாட்களுக்கு முன்னர் மலர்ந்து பின்பு முதிர்ந்து ஒரு புறம் சாய்ந்து விடும் தாமரை மலர்க்கு உவமை ஆயிற்று. பனிக்காலத்தில் தாமரை பொலிவிழத்தலைத் "தாமரை முகங்கள் வாட்டும் தண்பனிக் காலந்தன்னில்" (நைடதம். அன்னத்தைக் கண்ணுற்ற -9) என்றதாலும் அறியலாம். செங்கிடை - நீரில் தோன்றும் சிவப்பு நெட்டி. தலைவரொடு கூடிய மகளிர் வாயிதழ் சிவந்திருப்பது போலச் செங்கிடை மலர்கள் செந்நிறமுடையன வாய் மலர்ந்திருந்தன. இருவகை மலர்க்கும் உவமையாக, ஊடிய மகளிர் வதனத்தையும், கூடிய மகளிர் துவர் இதழையும் கூறிய நயம் காண்க. செங்கிடை - ஆகுபெயராய் மலரை உணர்த்திற்று.*
*114*

***4262. கல்வியின் திகழ்***
***கணக்காயர் கம்பலைப்***
***பல் விதச் சிறார் எனப்***
***பகர்வ பல் அரி,***
***செல் இடத்து அல்லது***
***ஒன்று உரைத்தல்செய்கலா***
***நல் அறிவாளரின்,***
***அவிந்த, நா எலாம்.***

***கல்வியின் திகழ் -*** *கல்வியால் விளக்கம் பெற்றுள்ள;* ***கணக்காயர் -*** *பள்ளி ஆசிரியர்;* ***கம்பலை -*** *(பயில்விக்க) ஆரவாரத்தோடு;* ***பல் விதச் சிறார் என -*** *(கல்விகற்கின்ற) பலவகைப்பட்ட சிறுவர்கள் போல;* ***பகர்வ -*** *(மழைக்காலத்தில்) கத்திக் கொண்டிருந்த;* ***பல் அரி எலாம் -*** *பல்வகைப்பட்ட* ***தவளைகள்*** *எல்லாம்;* ***செல் இடத்து அல்லது -*** *(தம்முடைய சொற்கள்) பலிக்கும் இடத்திலன்றி;* ***ஒன்று உரைத்தல் செய்கலா -*** *(பிற இடங்களில்) ஒரு சொல்லையும் சொல்லுதல் செய்யாத;* ***நல் அறிவாளரின் -*** *நல்ல அறிவுடையவர்கள் போல;* ***நா அவிந்த -*** *நா அடங்கின.*

*மழைக் காலத்தில் தவளைகள் மிகுதியாகக் கத்துதலும் மழை நீங்கிய காலத்தில் குரல் ஒடுங்கலும் இயல்பாகும். மழைக் காலத்தில் தவளைகள் எழுப்பும் பேரொலிக்குப் பள்ளியில் ஆசிரியர் பாடம் சொல்ல உடன் சொல்லும் சிறுவர்களின் பேரொலியும், அத்தவளைகள் மழை நீங்கிய காலத்தில் ஓரோர் சமயம் ஒலி எழுப்பிப் பிற சமயங்களில் அடங்கியிருந்த நிலைக்கு, செல்லும் இடங்களில் பேசிப் பிற சமயங்களில் பேசாதிருக்கும் அறிஞர் நிலையும் உவமையாயின. ஆரவாரத்திற்குப் பள்ளிச் சிறுவரையும், நாவடக்கத்திற்கு அறிஞர்களையும் உவமை கூறிய நயம் காண்க. கணக்காயர்- எண்ணும் எழுத்தும் ஆகிய நெடுங்கணக்கை ஆராய்பவர்.*

*இச்செய்யுட் கருத்து வான்மீகத்தும், துளசீதாசர் இராமாயணத்திலும் காணப்படும். 115*

***4263. செறி புனல் பூந் துகில்***
***திரைக் கையால் திரைத்து,***
***உறு துணைக் கால் மடுத்து***
***ஓடி, ஓத நீர்***
***எறுழ் வலிக் கணவனை***
***எய்தி, யாறு எலாம்,***
***முறுவலிக்கின்றன போன்ற,***
***முத்து எலாம்.***

***முத்து எலாம் -*** *சிப்பிகள் ஈன்ற முத்துக்களெல்லாம்;* ***செறி புனல் பூந்துகில் -*** *செறிந்த நீரிடைக் காணப்படும் மலர்களாகிய ஆடையினை;* ***திரைக்கையால் திரைத்து -*** *அலைகளாகிய கரங்களால் தூக்கிக் கொண்டு;* ***உறுதுணைக் கால் -*** *பொருந்திய துணையாயுள்ள கால்களை;* ***மடுத்து ஓடி -*** *பதித்து ஓடிச் சென்று;* ***யாறு எலாம் -*** *யாறுகளாகிய பெண்கள் எல்லாம்;* ***ஓதநீர் -*** *கடல்நீராகிய;* ***எறுழ்வலிக் கணவனை -*** *மிக்க வலிமை பொருந்திய கணவனை;* ***எய்தி -*** *அடைந்து;* ***முறுவலிக்கின்ற போன்ற -*** *புன்முறுவல் செய்வதைப் போன்றிருந்தன.*

*கடலில் சங்கமத் துறைகளில் சிப்பிகளினின்று முத்துக்கள் உண்டாதலும், அலை கூதிர்ப்பருவ இறுதியில் கடலின் அலைகளால் கொழிக்கப்பட்டுக் கடலோரத்தில் விளங்குவன என்பதும் இயல்பாகும். இவ்வியல்பான நிகழ்ச்சியை ஆறுகளாகிய மகளிர் தம் கடலாகிய கணவனைச் சேர்ந்து முத்துக்களாகிய பற்களைக் காட்டிச் சிரித்தன போல் இருந்தது எனக் கூறினார். தற்குறிப்பேற்ற உவமை அணி. ஆற்று நீரில் மிதந்து வரும் மலர்களையே ஆடையாகக் கூறுதல் கவி மரபாகும். 'புண்ணிய நறுமலராடை போர்த்துக் கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கி' (சிலப். 13 - 172 - 173);*

*"மணிப்பூவாடை அது போர்த்து" (சிலப். கானல்வரி - 25) என்பனவும் காண்க. ஓடுகிறவர்கள் தம் ஆடைகள் தடுக்காமலிருக்க அதனைத் தூக்கி மடித்துக் கொள்ளல் இயல்பாதலின் ஆறும் பூந்துகிலைத் 'திரைக் கையால் திரைத்து' ஓடியதாகக் கூறப்பட்டது. ஆறு புறப்படும் இடத்தைத் தலையாகக் கூறுதல் போல, அது கடலோடு கலக்கும் இடத்தைக் காலாகக் கூறும்பொருத்தம் நோக்கிக் 'கால்மடுத்து ஓடி' என்றார். 'மலைத் தலைய கடற்காவிரி' (பட்டினப்பாலை - 6) என்ற இடத்து ஆற்றின் 'தலைப் பகுதி' யைக் காணலாம். ஆற்றுக்கால் என்ற வழக்கும் காண்க. ஆற்றின் அலைகளைக் கரங்களாகக் கூறுவதுண்டு. 'பொன்னி திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும் பொன்னரங்கம்' (திவ்விய பெருமாள் - 1 - 1). எறுழ்வலி - ஒரு பொருட்பன்மொழி. வடிவிலும், வெண்ணிறத்திலும் ஒளியிலும் பற்களுக்கு முத்து உவமையாகும். ஓத நீர்க் கணவன் என்று ஒன்றை உருவகம் செய்து ஆறுகளாகிய மகளிர் என உருவகம் செய்யாதது ஏகதேச உருவகம் எனப்படும். ஆறுகட்குக் கடல் கணவன் என்பது மரபு; அதனால கடலுக்கு நதிபதி என்னும் பெயருண்டு. 116*

***4264. சொல் நிறை கேள்வியின்***
***தொடர்ந்த மாந்தரின்,***
***இல், நிறப் பசலை***
***உற்று இருந்த மாதரின்,***
***தன் நிறம் பயப் பய***
***நீங்கி தள்ள அரும்***
***பொன் நிறம் பொருந்தின,***
***பூகத் தாறு எலாம்.***

***சொல்நிறை** - புகழ் நிறைந்த; **கேள்வியின்** - கேள்வியைப் பெறுதல் பொருட்டு; **தொடர்ந்த மாந்தரின்** - (நல்லாசிரியரை வேண்டி) வேற்று நாட்டிற்குப் பிரிந்து சென்ற தலைவரால்; **பசலை நிறம் உற்று** - பசலை நிறத்தைப் பெற்று; **இல் இருந்த மாதரின்** - இல்லின்கண் இருந்த மகளிரைப் போல; **பூகத்தாறு எலாம்** - பாக்கு மரத்தின் குலை களெல்லாம்; **தன் நிறம் பயப்பய நீங்கி** - தமக்குரியதாக இருந்த பச்சை நிறம் மெல்ல மெல்ல நீங்கப் பெற்று; **தள்ள அரும்** - இகழ்ந்து தள்ள முடியாத (விரும்பத்தக்க); **பொன் நிறம் பொருந்தின** - பொன்னிறம் பொருந்தப் பெற்றன.*

*பாக்கு மரத்தின் குலைகள் முற்றாத போது பசுமைநிறத்துடன் காணப்படும். முதிரும்போது பசுமை நிறம் மாறிப் பழுக்கையில் பொன்னிறம் அடையும். அதற்குக் கேள்வியின் பொருட்டுப் பிரிந்து சென்ற தலைவர்களின் பிரிவாற்றாமையால் பசலை நிறம் அடைந்த மகளிரை உவமை கூறினார். கற்புக்காலத்தில் தலைவன் பிரியும் ஓதற்பிரிவு இங்குக் கூறப்பட்டது. பசலை நிறம் என்பது தலைவரைப் பிரிந்தமையால் தலைவியர்க்கு உளதாகும் நிறவேறுபாடு. நாளுக்கு நாள் இயல்பான பசுமை நிறம் மாறிப் பொன்னிறம் அடையும் இயல்பை உணர்த்தத் 'தன்நிறம்' பயப்பய நீங்கி' என்றார். பொன்னிறத்தின் சிறப்புத் தோன்ற 'தள்ளரும் பொன்நிறம்' என்றார். பூகத்தாறு எலாம் தன் நிறம் பயப்பய - என்பதில் எதுகை நோக்கித் 'தம்நிறம்' என வரவேண்டியது 'தன்னிறம்' என வந்தது ஒருமைப் பன்மை மயக்கம். கூதிர்க்காலத்துக் கமுகின் ககய் பசுங்காயாய் இருக்கும் என்பதைத் 'தெண்ணீர்ப் பசுங்காய சேறுகொள முற்ற' (நெடுநல் - 26) என்ற அடி உணர்த்தும். 117*

***4265. பயின்று உடல் குளிர்ப்பவும்***
***பழனம் நீத்து, அவண்***
***இயன்றன இள வெயில்***
***ஏய்ந்த மெய்யின,***
***வயின்தொறும், வயின்தொறும்,***
***மடித்த வாயின,***
***துயின்றன, இடங்கர்***
***மா, தடங்கள்தோறுமே.***

***இடங்கர் மா*** *- முதலையாகிய விலங்குகள்;* ***பயின்று*** *- (தாம் நெடுநாளாக நீரில்) பொருந்தி;* ***உடல் குளிர்ப்பவும்*** *- உடம்பு குளிர்ச்சி அடைந்ததால்;* ***பழனம் நீத்து*** *- இது காறும் வாழ்ந்துவந்த நீர்நிலைகளை*

*விடுத்து;* ***அவண் இயன்றன*** *- அவ்விடத்திருந்த கரைகளில் வந்து பொருந்தினவாய்;* ***இளவெயில் ஏய்ந்த மெய்யின*** *- இளவெயில் படியும் உடம்புகளை உடையனவாய்;* ***தடங்கள் தோறும்*** *- நீர்நிலைகளின் கரைகளிலெல்லாம்;* ***வயின்தொறும் வயின்தொறும்*** *- இடந்தோறும் இடந்தோறும் (பற்பல இடங்களில்);* ***மடித்த வாயின*** *- மடித் வாய்களை உடையனவாய்;* ***துயின்றன*** *- உறங்கின.*

*மழைக்காலத்தில் நீரில் மூழ்கிக் கிடந்த முதலைகள், மழை நீங்கியதும் நீர் நிலைகளை விட்டுக் கரையில் வந்து வெயிலில் குளிர் காய்வது இயல்பாகும். முதலைகள் தூங்குகையில் வாய் மடித்துத் தூங்கும் இயல்பு உணர்த்த 'மடித்த வாயின துயின்றன' என்றார். இடங்கர் என்பது முதலை வகைகளில் ஒன்று. 'கொடுந்தாள் முதலையும் இடங்கரும் கராமும்' (குறிஞ்சிப் - 257) என்ற இடத்து நச்சினார்க்கினியர் இவை மூன்றும் சாதிவிசேடம் என்றது காண்க. வயின்தொறும் வயின்தொறும் - அடுக்குத்தொடர் பன்மை உணர்த்திற்று.* *118*

***4266. கொஞ்சுறு கிளி நெடுங் குதலை கூடின,***
***அஞ்சிறை அறுபத அளக ஓதிய,***
***எஞ்சல் இல் குழையன, இடை நுடங்குவ -***
***வஞ்சிகள் பொலிந்தன, மகளிர் மானவே.***

***வஞ்சிகள்*** *- வஞ்சிக் கொடிகள்;* ***கொஞ்சுறு கிளி*** *- கொஞ்சிப் பேசுகின்ற கிளிகளின்;* ***நெடுங் குதலை கூடின*** *- நீண்ட மதலைமொழி கள் (தம்மிடத்துப்) பொருந்தப் பெற்றனவாய்;* ***அஞ்சிறை அறுபதம்*** *- (தம்மிடம் மொய்க்கின்ற) அழகிய சிறகுகளை உடைய வண்டுகளாகிய;* ***அளக ஓதிய*** *- கூந்தலின் ஒழுங்கையுடையனவாய்;* ***எஞ்சல் இல் குழை யன*** *- குறைவில்லாத தளிர்களை உடையனவாய் (குறைவில்லாத குழை யெனும் காதணி உடையனவாய்);* ***இடை நுடங்குவ*** *- இடையில் ஒல்கி அசைவனவாய் (இடை, அசைவனவாய்);* ***மகளிர் மான*** *- மகளிரைப் போல;* ***பொலிந்தன*** *- விளங்கின.*

*வஞ்சிக்கொடிகள் மகளிர் போல விளங்கின என்பதாம். வஞ்சிக்கொடியில் கிளிகளின் மொழி மகளிர் குதலை போன்றும், மலரில் மொய்க்கும் வண்டுகள் மகளிர் கூந்தல் போன்றும், அழகு குறையாத குழை (தளிர்) குழையணியாகவும் வஞ்சிக் கொடியின் நடுப்பகுதி துவளுதல் மகளிர் இடை துவளுதல் போலவும் இருந்தன.*

*குழை - தளிர், காதணி என்று இருபொருள்பட நின்றது. இடை - நடுப்பகுதி, மகளிர்இடை என இரு பொருள்பட்டு நின்றது. எனவே, உருவகத் தையும் சிலேடையையும் உறுப்பாகக் கொண்ட உவமை அணியாகும். அறுபதம் - வண்டு, பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. குதலை - மகளிரின் எல்லாப் பருவத்திற்கும் கூறப்படும்மொழிநிலை. 119*

***4267. அளித்தன முத்துஇனம் தோற்ப,***
***மான் அனார்***
***வெளித்து எதிர் விழிக்கவும்***
***வெள்கி, மேன்மையால்***
***ஒளித்தன ஆம் என,***
***ஒடுங்க கண்ணன,***
***குளித்தன, மண்ணிடை -***
***கூனல் நந்து எலாம்.***

***கூனல் நந்து எலாம் -*** *முதுகு வளைந்த நந்தைகளெல்லாம்;* ***அளித் தன முத்து இனம் -*** *தாம் ஈன்றனவாகிய முத்துக்கள்;* ***தோற்ப -*** *(மகளிரின் பற்களுக்க ஒப்பாகாமல்) தோற்றுவிட்டமையால்;* ***மான் அனார் -*** *மான் போன்ற பார்வையை உடைய மகளிர்;* ***எதிர் வெளிப்பட்டு -*** *எதிரில் வெளிப்பட்டு வந்து;* ***விழிக்கவும் வெள்கி -*** *பார்ப்பதற்கும் நாணி;* ***மேன்மையால் -*** *(தம்) மேன்மையான பண்பினால்;* ***ஒளித்தன ஆம் என -*** *ஒளிந்து கொண்டன என்று சொல்லுமாறு;* ***ஒடுங்க கண்ணன் -*** *ஒடுங்கிய கண்களை உடையனவாய்;* ***மண்ணிடைக் குளித்தன -*** *சேற்றில் மூழ்கின.*

*நத்தைகள் இயல்பாக மண்ணில் மறைந்ததற்குத் தாம் ஈன்ற முத்துக்கள் மகளிருடைய பற்களுக்குத் தோற்றதனால், அவர்கள் முன் வெளிப்பட்டுத் தோன்றவும் நாணி மறைந்தன எனக்கூறியது ஏதுத் தற்குறிப்பேற்ற அணி. மேன்மை என்பது மான உணர்வைக் குறித்தது. நத்தைகள் தாம் ஈன்ற முத்துக்களின் தோல்வியைத்தம் தோல்வியாகக் கருதி நாணிய மேன்மையைக் காண்க. முத்துப் பிறக்கும் இடங்களில் ஒன்று நத்தை. 'நத்தின் வயிற்றில் முத்துப் பிறக்கும்' என்பது பழமொழி.*
*120*

***4268. மழை படப் பொதுளிய***
***மருதத் தாமரை***
***தழை படப் பேர் இலைப்***
***புரையில் தங்குவ,***
***விழைபடு பெடையொடும்,***
***மெள்ள, நள்ளிகள்,***
***புழை அடைத்து ஒடுங்கின,***
***வச்சை மாக்கள்போல்.***

***மழை படப் பொதுளிய -*** *மழை பெய்ததால் செழித்த;* ***மருதத் தாமரை -*** *மருத நிலத்திற்குரிய தாமரை;* ***தழை பட -*** *செழித்து வளர;* ***பேர் இலைப் புரையில் தங்குவ -*** *(அவற்றின்) பெரிய இலையின் கீழ்த் தங்குவனவான;* ***நள்ளிகள் -*** *ஆண் நண்டுகள்;*

***விழைபடு பெடையொ டும் -*** *விருப்பம் மிக்க தம் பெண் நண்டுகளுடனே;* ***வச்சை மாக்கள் போல் -*** *உலோபிகள் போல;* ***மெள்ள -*** *மெதுவாக;* ***புழை அடைத்து -*** *தம் வளையின் வாயிலைச் சேற்றால் அடைத்துக் கொண்டு;* ***ஒடுங்கின -*** *அதன் உள்ளே ஒடுங்கிக் கிடந்தன.*

*இரவலர், நண்பர், விருந்தினர், சுற்றத்தினர் என எவரேனும் தம் இல்லத்திற்கு வந்துவிடுவரோ என்று அஞ்சி உலோபிகள் தம் வீட்டுக்கதவை அடைத்துக்*

*கொண்டு தம் மனைவி மக்களுடன் உள்ளிருப்பர் அதுபோல ஆண்நண்டுகள், தன் பெடைகளோடு தாம் வாழும் வளைகளின் வாயிலைச் சேற்றால் அடைத்துக் கொண்டு உள்ளிருந்தன. நண்டுகளுக்கு உலோபிகள் உவமை ஆயினர். உவமை அணி. முன்னர்ப் 'பெடை' எனக்கூறியதால் 'நள்ளி' என்னும் நண்டின் பொதுப் பெயர் ஆண்நண்டைக் குறித்து நின்றது. மருதநிலத்திற்கே சிறப்புடையதாதலின் 'மருதத் தாமரை' என்றார். விலங்கு போன்ற மனிதர் என்ற இழிவு தோன்ற 'வச்சை மாக்கள் போல' என்றார். 121*

## கிட்கிந்தைப் படலம்

*கிட்கிந்தை நகரில் நடந்த செய்திகளைக் கூறுவதால் இப்பெயர் பெற்றது. குறித்த காலத்தில் சுக்கிரீவன் வராமையால் இராமன் சினந்து இலக்குவனை அனுப்புகிறான். கிட்கிந்தைக்கு இலக்குவன் வந்ததைச் சுக்கிரீவனுக்குத் தெரிவிக்கின்றார்கள்; அங்கதன் அனுமன் இருவரும் தாரையின் கோயிலை அடைந்து அவளிடம் பேசுகின்றார்கள். வாயிலைத் தாளிட்டுக் குரங்குகள் போருக்கு ஆயத்தமான நிலையறிந்த இலக்குவன் கதவுகளை உடைத்தெறிகின்றான். அனுமன் கூறியபடியே தாரை இலக்குவன் முன்னாக வருகிறாள்; மகளிரைப் பார்க்க அஞ்சும் இலக்குவனிடம் தாரை பேசுகின்றாள்; இலக்குவன் தன் தாயரை நினைந்து உருகுங்கால் தாரை அவனது சினத்தைத் தணிவிக்கின்றாள். பின்னர் அனுமன் இலக்குவனுக்குச் சமாதானம் கூறுகின்றான்; சினம் தணிந்த இலக்குவனும் அனுமனோடு சுக்கிரீவனைக் காணச் செல்லுகின்றான். சுக்கிரீவன் இலக்குவனைப் பார்த்ததும், தான் மதுவுண்டு மயங்கிக் கிடந்தமைக்கு வருந்துகின்றான். அதனால் இலக்குவனது சீற்றமும் தணிகிறது. அவனது மாளிகை சென்ற இலக்குவன் அரியணையில் அமராமல் கல்தரையில் அமர்கின்றான். பின் அனுமனைச் 'சேனையுடன் வருக' என ஏவிய சுக்கிரீவன் இராமனைக் காணச் செல்ல, இராமனும் சுக்கிரீவனது நலன் உசாவுகின்றான். தன் பிழைக்கு வருந்திய சுக்கிரீவனது குற்றம் நீக்கி இராமன் பாராட்டுகிறான். அனுமன் சேனையுடன் வருவான் என இராமனிடம் சொன்ன சுக்கிரீவனையும், அங்கதனையும் அனுப்பிவிட்டு இராமன் தன் தம்பியுடன் தங்கியிருக்கிறான்.*

*சுக்கிரீவன் வாராமையால் இராமன் சினந்து, இலக்குவனை அனுப்புதல்*

***4269. அன்ன காலம்***
***அகலும் அளவினில்,***
***முன்னை வீரன்,***
***இளவலை, 'மொய்ம்பினோய்!***
***சொன்ன எல்லையின்***
***ஊங்கினும் தூங்கிய***
***மன்னன் வந்திலன்;***
***என் செய்தவாறுஅரோ?***

***அன்ன காலம் -*** *அத்தன்மையுடைய கூதிர்ப்பருவம்;* ***அகலும் அளவினில் -*** *நீங்கும் அளவில்;* ***முன்னை வீரன் -*** *மூத்தவனும் வீரனுமான இராமன்;* ***இளவலை -*** *தன் தம்பியான இலக்குவனை நோக்கி;*

***மொய்ம்பினோய் -*** *வலிமைமிக்கவனே!* ***சொன்ன எல்லையின் ஊங்கினும் -*** *(முன்பு நான்) குறித்த நான்கு மாதத் தவணை கழிந்த பின்பும்;* ***மன்னன் தூங்கினன் வந்திலன் -*** *அச் சுக்கிரீவ அரசன் தாமதப்படுத்துவதை மேற்கொண்டு இங்கு வந்து சேரவில்லை;* ***செய்த ஆறு என் -*** *அவன் செய்த செயல் தான் என்ன?*

*கார்த்திகை மாதத்தில் வருவதாகச் சொன்ன சுக்கிரீவன் வராததால், இராமன் இலக்குவனைநோக்கிச் சுக்கிரீவன் இவ்வாறு வராமல் காலம் தாழ்த்துகிறானே என்றான் என்பது.*

*தூங்குதல் - செயலைத் தாழ்த்துதல், தாமதப்படுத்துதல், 'தூங்குக தூங்கிச் செயற்பால' என்பதில் (குறள் 672) இப்பொருள் அமைதல் காண்க. முன்னை - முன் பிறந்தவன்; முதன்மையான வீரர்களுள் தலைமையுடையவன். மொய்ம்பு - தோள், வலிமை.*
*1*

**4270. 'பெறல் அருந் திருப் பெற்று, உதவிப் பெருந்
திறம் நினைந்திலன்; சீர்மையின் தீர்ந்தனன்;
அறம் மறந்தனன்; அன்பு கிடக்க, நம்
மறன் அறிந்திலன்; வாழ்வின் மயங்கினான்.**

**பெறல் அருந் திருப் பெற்று -** *(அந்தச் சுக்கிரீவன்) பெறுதற்கு அருமையான அரச செல்வத்தை (நம்மால்) அடைந்து;* **உதவிப் பெருந்திறன் -** *(அவனுக்கு) நாம் செய்த உதவியின் பெயருமையை;* **நினைந்திலன் -** *கருதிப் பார்க்கவில்லை;* **சீர்மையின் தீர்ந்தனன் -** *(அவன் தனக்குரிய) ஒழுகலாற்றில் தவறிவிட்டான்;* **அறம் மறந்தனன் -** *(உதவி செய்தவரை மறவாத) நன்றியாகிய அறத்தை மறந்துவிட்டான்;* **அன்பு கிடக்க -** *அவனுக்கு நாம் செய்த அன்புச் செயலை மறந்தது இருக்கட்டும்;* **நம் மறம் அறிந்திலன் -** *அவன் நம்முடைய வீரச் செயல்களையும் நினைவிற் கொண்டானில்லை;* **வாழ்வின் மயங்கினான் -** *(ஆட்சியில் தன்னை மறந்து இன்பம் அனுபவித்து) வளமான வாழ்க்கையில் அழுந்திக் கிடக்கின்றான்.*

*பெறல் அருந் திருப் பெற்று' - யாவராலும் பெறுதற்கியலாத அரச பதவியாகிய செல்வத்தைக் குறிக்கும். நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு (4143) என்று இராமனே இவ்வரசைக் குறிப்பிடுகிறான். 'உதவிப் பெருந்திறன்' - 'செய் யாமற் செய்த உதவிக்கு வையகமும், வானகமும் ஆற்றல் அரிது' (குறள். 101) 'காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது' - (குறள். 102) 'சீர்மையின் தீர்ந்தனன்': எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு' - (குறள். 110) மறம் - மறன்: ஈற்றுப் போலி.* *2*

**4271. 'நன்றி கொன்று, அரு
நட்பினை நார் அறுத்து,
ஒன்றும் மெய்ம்மை சிதைத்து,
உரை பொய்த்துளார்க்
கொன்று நீக்குதல்
குற்றத்தில் தங்குமோ?
சென்று, மற்று அவன்
சிந்தையைத் தேர்குவாய்.**

**நன்றிகொன்று -** *(இப்படி) ஒருவன் தனக்குச் செய்த நன்றியைச் சிதைந்து;* **அருநட்பினை நார் அறுத்து -** *பெறுவதற்கு அருமையான நட்பாம் அன்புக்கயிறுஅற அழித்து;* **ஒன்றும் மெய்ம்மை -** *(எல்லோர்க் கும்) ஏற்றதாகப் பொருந்தி நிற்கும் வாய்மையை;* **சிதைத்து -** *குலைத் துவிட்டு;* **உரைபொய்த்துளான் -** *வாக்குத் தவறியவனை;* **கொன்று நீக்குதல் -** *கொன்று ஒழிப்பது;* **குற்றத்தின் நீங்கும் ஆல் -** *பழிபாவங் களிலிருந்து நீங்கிய செயலேயாகும் (ஆகவே);* **சென்று அவன் சிந்தையை -**

*நீ அங்கே சென்று அச்சுக்கிரீவனது மன நிலையை;* **தேர்குவாய் -** *ஆராய்ந்து அறிந்து வருவாய்;*

*'நட்பு நாரற்றன' - (நாலடி. 12) 'நலத்தின்கண் நாரின்மை' - (குறள் 958) நார் - கயிறு அன்புப் பிணைப்பை உணர்த்திற்று. ஒருவன் செய்த நன்றியை மறந்தவனைக் கொன்றாலும் பழிபாவமில்லை; ஆதலால், அச்சுக்கிரீவனது உண்மையான மனத்தை அறிந்து வருமாறு இலக்குவனிடம் இராமன் கூறினான் என்பது.*
*3*

***4272. ' "வெம்பு கண்டகர் விண்***
***புக வேர் அறுத்து,***
***இம்பர் நல் அறம்***
***செய்ய எடுத்த விற்***
***கொம்பும் உண்டு; அருங்***
***கூற்றமும் உண்டு; உங்கள்***
***அம்பும் உண்டு" என்று***
***சொல்லு, நம் ஆணையே.***

**வெம்புகண்டகர் -** *மனம் கொதிக்கும் கொடியவர்கள்;* **விண்புக வேர் அறுத்து -** *(போரில் மடிந்து) வீர சொர்க்கம் அடையும்படி (அவர்களை) வேரொடு அழித்து;* **இம்பர் நல்லறம் செய்ய -** *இவ்வுலகில் முறையான தருமத்தை நிலைநிறுத்தும் பொருட்டு;* **எடுத்த விற்கொம்பும் -** *(நாம்) கையில் ஏந்திய வில் தடியும்;* **உண்டு -** *(நம்மிடம்) உள்ளது;* **அருங்கூற்றமும் உண்டு-** *(யாராலும் தடுக்கமுடியாத) இயமனும் இருக்கிறான்;* **உங்கள் அம்பும் உண்டு-** *(வானரங்களாகிய) உங்களைக் கொல்லக் கூடிய வாலியைக் கொன்ற அம்பும்(எம்மிடம்) இருக்கின்றது;* **என்று நம் ஆணை -** *என்று நமது கட்டளையாக;* **சொல்லு -** *(சுக்கிரீவனிடம்) சொல்வாய்.*

*விராதன் முதலான அரக்கர்களையும் வாலியையும் கொன்ற வில்லும் அம்பும் கொண்டே சுக்கிரீவனையும், அவனுடைய வானரப் படைகளையும் இயமனுக்கு*

*இரையாக்க முடியுமென்பதைச் சொல்லுமாறு இலக்குவனிடம் இராமன் உரைத்தான் என்பது. கண்டகர் - தீயோர். தீயோரை ஒறுத்து நல்லறம் நாட்டுதல் ஆகிய அவதாரப்பாங்கு இங்கே புலப்படுவது காண்க. 4*

***4273. 'நஞ்சம் அன்னவரை நலிந்தால், அது***
***வஞ்சம் அன்று; மனு வழக்கு ஆதலால்,***
***அஞ்சில், ஐம்பதில், ஒன்று அறியாதவன்***
***நெஞ்சில் நின்று நிலாவ, நிறுத்துவாய்.***

**நஞ்சம் அன்னவரை -** *நஞ்சு போன்ற கொடியவர்களை;* **நலிந்தால் அது வஞ்சமன்று -** *தண்டித்தால் அது கொடுமையாகாது;* **மனு வழக்கு ஆதலால் -** *(அவ்வாறு நலிவது) மனு தர்மத்தில் கூறப்பட்டுள்ள நீதியாதலால்; (இதை);* **அஞ்சில் ஐம்பதில் -** *ஐந்து வயதிலும் ஐம்பது வயதிலும்;* **ஒன்று அறியாதவன் -** *தக்கது தகாதது என்பதனை அறி யாதவனான*

*அச் சுக்கிரீவனது;* ***நெஞ்சில் நின்று நிலாவ -*** *மனத்தில் நன்றாகப் பதிந்து விளங்கும்படி;* ***நிறுத்துவாய் -*** *(சொல்லி) நிலை நிறுத்துவாய்.*

*கொடியவரைக் கொல்லாவிட்டால் உலகம் பலவாறு நலிவுபட்டு வருந்தும்; ஆதலால், நல்லவர்களைப் பாதுகாத்தற்பொருட்டுத் தீயவரை அழித்தல் தருமச் செயலாம் என்பது. அஞ்சில் ஐம்பதில் ஒன்று அறியாதவன் - அஞ்சிலும் (வயது) ஒன்று அறியாதவன்; ஐம்பதிலும் ஒன்று அறியாதவன்; அதாவது இளமையிலும் முதுமையிலும் செய்வது அறியாதவன். 'ஆறிலறியார் நூறிலும் அறியார்'; 'தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டில்' என்னும் பழமொழிகள் இங்கு நினைக்கத் தக்கன. உலக வழக்கு நவிற்சி அணி. அஞ்சு -போலி. 5*

***4274. ' "ஊரும், ஆளும், அரசும், உம் சுற்றமும்,***
***நீரும் ஆளுதிரேஎனின், நேர்ந்த நாள்***
***வாரும்; வாரலிர் ஆம் எனின், வானரப்***
***பேரும் மாளும்" எனும் பொருள் பேசுவாய்.***

***ஊரும் ஆளும் -*** *(உங்கள்) நகரமான கிட்கிந்தையையும், குடி மக் களையும்;* ***அரசும் உம் சுற்றமும் -*** *அரசாட்சியையும் உங்களது உறவினர்களையும்;* ***நீரும் ஆளுதிரே எனின் -*** *நீங்களே அள விரும்பினால்;* ***நேர்ந்த நாள் -*** *(சீதையைத்) தேடுவதற்காக வர ஒப்புக்கொண்ட இக் கார்த்திகை மாதத்தில்;* ***வாரும் -*** *(உடனே புறப்பட்டு) வர வேண்டும்;* ***வாரலிர் எனின் -*** *(அவ்வாறு) வராமல் போவீரானால்;* ***வானரம் பேரும் மாளும் -*** *வானரம் என்னும் பெயரும் (இவ்வுலகில்) இல்லாது ஒழியும்;* ***எனும் பொருள் பேசுவாய் -*** *என்னும் உண்மையை (சுக்கிரீவன்) முதலானவரிடம் நீ உணர்த்துவாய்.*

*நீரும் - உம் இசை நிறை: அசை நிலையுமாம். 6*

***4275. ' "இன்னும் நாடுதும், இங்கு இவர்க்கு வலி***
***துன்னினாரை" எனத் துணிந்தார்எனின்,***
***உன்னை வெல்ல, உலகு ஒரு மூன்றினும்,***
***நின் அலால் பிறர் இன்மை நிகழ்த்துவாய்.***

***இன்னும் இங்கு இவர்க்கும் -*** *இனி வேறாக இப்போது இராம லக்குவராகிய இவர்களைக் காட்டிலும்;* ***வலி துன்னினாரை நாடுதும் -*** *வலிமையுள்ளவரை நாடித் துணையாகக் கொள்வோம்;* ***எனத் துணிந் தார் எனின் -*** *என்று (அச்சுக்கிரீவன் முதலோர்) முடிவெடுத்தார் களென்றால்;* ***உன்னைவெல்ல -*** *உன்னை வெல்வதற்கு;* ***உலகு ஒரு மூன்றினும் -*** *மூன்ற உலகங்களிலும்;* ***நின் அலால் பிறர் இன்மை -*** *உன்னையல்லாமல் வேறு யாரும் இல்லாமையை;* ***நிகழ்த்துவாய் -*** *அவர்களுக்கு (எடுத்துச்) சொல்வாய்.*

*பிறரால் வெல்ல முடியாத பேராற்றலோடு வேண்டுங்காலத்துத் தன்னைத் தானே அடக்கிக் கொள்ளும் வல்லமை மிக்கவன் இலக்குவன் என்பது, 'நின்ன லால் பிறரின்மை' எனவே உவமை நீக்கிய தோன்றல் இலக்குவன் என்பது. 7*

*4276.* ***'நீதி ஆதி நிகழ்த்தினை, நின்று, அது,***
***வேதியாத பொழுது, வெகுண்டு, அவண்***
***சாதியாது, அவர் சொல் தரத் தக்கனை;***
***போதி ஆதி' என்றான் - புகழ்ப் பூணினான்.***

*__நின்று நீதி ஆதி -__ (கோபக்குறி காட்டாமல்) சாந்தமாக இருந்து நீ சொல்வது அரச நீதி முதலான அறங்கள் என்று தோன்றுமாறு; __நிகழ்த்தினை -__ எடுத்துச்சொல்லி; __அது வேதியாதபொழுது -__ அந் நீதி யுரையானது (அவர்களின் மன மாறுபாட்டை) மாற்றாத பொழுது; __வெகுண்டு அவண் சாதியாது -__ நீ கோபித்து அந்த இடத்தில் (அப்போதே அவர்களை) அழிக்காமல்; __அவர்சொல் -__ அவர்கள் கூறும் சொற்களை; __தரத் தக்கனை -__ (என்னிடம்) வந்து சொல்லக் கடமைப் பட்டுள்ளாய்; __போதி ஆதி என்றான் -__ (நீ) செல்க என்று சொல்லி விடை தந்தான்; __புகழ்ப் பூணினான் -__ புகழையே தனக்கு அணிகலனாகக் கொண்ட இராமன்.*

*'புகழ்ப் பூணினான் - புகழைப் பூண்' என்று கூறியமையின் இராமனைப் பொறுத்தமட்டில் இவ்வுலகோர் கூறும் புகழ்ச்சிகள் இன்றியும் தனக்குத்தானே உவமையாக விளங்குபவன் என்பதாம். பிறருக்குப் புகழாகிய பூண் அவர்கள் சிறப்பை மிகுதிப்படுத்தும். இராமனைப் பொறுத்தமட்டில் அவனை அடைந்ததால் அப்பூண் (புகழ்) தான் சிறப்பெய்தியது.*

*இயல்பாகவே, சினம்பொங்கும் தன்மையுள்ள இலக்குவன் மாறுபட்ட செயல் செய்யாதவாறு இராமன் இவ்வாறு கட்டளையிட்டான் என்பது. 8*

*இலக்குவன் கிட்கிந்தை செல்லுதல்*

*4277.* ***ஆணை சூடி, அடி***
***தொழுது, ஆண்டு, இறை***
***பாணியாது, படர்***
***வெரிந் பாழ்படாத்***
***தூணிபூட்டி, தொடு***
***சிலை தொட்டு, அருஞ்***
***சேணின் நீங்கினன் -***
***சிந்தையின் நீங்கலான்.***

*__ஆணைசூடி -__ (இராமனின்) கட்டளையைத் தலைமேற்கொண்டு; __அடிதொழுது -__ அவனது திருவடிகளை வணங்கி; __ஆண்டு இறை பாணியாது -__ அந்த இடத்தில் சிறு நொடியும் தாமதிக்காமல்; __படர் வெரிந் -__ விரிந்த (தனது) முதுகில்; __பாழ்படாத் தூணி பூட்டி -__ (அம்புகள்) குறையாத அம்புப் புட்டிலைக் கட்டிக்கொண்டு; __தொடுசிலை தொட்டு -__ தொடுப்பதில் வல்ல வில்லைக் கையில் பிடித்து; __சிந்தையின் நீங்கலான் -__ மனத்தில் இராமனை நினைந்து கொண்டே; __அருஞ் சேணின் நீங்கினன் -__ செல்வதற்கு அரிய நீண்ட வழியில் சென்றான்.*

*இராமன்பால் இலக்குவன் கொண்ட பக்திச் சிறப்பு இப் பாடலாற் புலனாகிறது. சிந்தையின் நீங்கலான் - இராமனது மனத்திலிருந்து நீங்காத அன்புத்தம்பி என்றும்*

*கூறலாம். சேணின் நீங்கினன் சிந்தையின் நீங்கலான்: முரண்.*
*9*

***4278. மாறு நின்ற மரனும், மலைகளும்,***
***நீறு சென்று நெடு நெறி நீங்கிட,***
***வேறு சென்றனன்; மெய்ம்மையின் ஓங்கிடும்***
***ஆறு சென்றவன் - ஆணையின் ஏகுவான்.***

***மெய்ம்மையின் ஓங்கிடும் ஆறு சென்றவன் -*** *சத்தியத்தால் சிறக்கும் வழியில் இயங்குபவனாகிய இராமபிரானின்;* ***ஆணையின் ஏகு வான் -*** *கட்டளைப்படி செல்பவனாகிய இலக்குவன்;* ***மாறுநின்ற மரனும் -*** *குறுக்கே நின்ற மரங்களும்;* ***மலைகளும் -*** *மலைகளும்;* ***நீறு சென்று -*** *(தான் செல்லும் வேகத்தால்) தூளாகி;* ***நெடுநெறி நீங்கிட -*** *நெடிய வழியில் (நீண்ட தூரத்தில்) சென்று பரவும்படியாக;* ***வேறு சென்றனன் -*** *புதுவழி அமைத்துக்கொண்டு சென்றான்.*

*பழக்கப்பட்ட வழியன்றாதலின் 'வேறு சென்றனன்' என்றார். காற்றில் பறந்து பரவும் துகள் நெடுந்தொலைவு போகுமாதலின் 'நெடுநெறி' என்றார். 10*

***4279. விண் உறத் தொடர்***
***மேருவின் சீர் வரை***
***மண் உறப் புக்கு***
***அழுந்தின, மாதிரம்;***
***கண் உறத் தெரிவுற்றது,***
***கட்செவி -***
***ஒண் நிறக் கழல்***
***சேவடி ஊன்றலால்.***

***ஒண்நிறக் கழல் சேவடி -*** *ஒளிமிக்க நிறமுள்ள வீரக்கழலை யணிந்த (இலக்குவனின்) பாதங்கள்;* ***ஊன்றலால் -*** *அழுந்துவதால்;* ***விண்உறத்தொடர் -*** *வானுலகத்தைத் தொடுமாறு வளர்ந்துள்ள;* ***மேரு வின் சீர்வரை -*** *மேருமலையின்(உயரத்தின்) எல்லையளவாக;* ***மாதிரம் மண்உற -*** *மலைகள் நிலத்திலே பொருந்த;* ***புக்கு அழுந்தின -*** *உள்ளே சென்று அழுந்தின; (அப்பொழுது)* ***கட்செவி கண்உற -*** *(பூமியைத் தாங்கும்) ஆதிசேடனாகிய பாம்பு கண்களுக்கு;* ***தெரிவுற்றது -*** *புலனாயிற்று.*

*கட்செவி - பாம்பு; இங்கே ஆதிசேடனைக் குறித்தது. உயர்வு நவிற்சியணி.*
*11*

***4280. வெம்பு கானிடைப்***
***போகின்ற வேகத்தால்,***
***உம்பர் தோறும் மராமரத்து***
***ஊடு செல்***
***அம்பு போன்றனன், அன்று -***
***அடல் வாலிதன்***

***தம்பிமேல் செலும்***
***மானவன் தம்பியே.***

***அன்று*** *- அப்பொழுது;* ***அடல் வாலியின்*** *- வலிமையுள்ள வாலியின்;* ***தம்பிமேல் செலும்*** *- தம்பியான சுக்கிரீவனிடம் செல்லுகின்ற;* ***மானவன் தம்பி*** *- மனுகுலத் தோன்றலாகிய இராமன் தம்பியான இலக்குவன்;* ***வெம்பு கானிடை*** *- வெப்பம் மிகுந்த காட்டிலே;* ***போகின்ற வேகத்தால்*** *- செல்லும் வேகத்தினால்;* ***உம்பர் தோயும்*** *- வானத்தை அளாவி நின்ற;* ***மராமரத்து ஊடு செல்*** *- ஏழு மராமரங்களின் இடையே துளைத்துச் சென்ற;* ***அம்பு போன்றனன்*** *- (இராம) பாணத்தை ஒத்திருந்தான்.*

*இராம பாணம் ஏழு மராமரங்களைத் துளைத்துச் சென்றதுபோல, இலக்குவன் தான் செல்லும் காட்டு வழியிலுள்ள மரங்களை அழித்துச் சென்றான் என்றபடி. உவமையணி, உம்பர் தோயும் மராமரம் - உயர்வு நவிற்சி.* *12*

***4281. மாடு வென்றி ஓர் மாதிர யானையின்***
***சேடு சென்று கெடில், ஒரு திக்கின் மா***
***நாடுகின்றதும், நண்ணிய கால் பிடித்து***
***ஓடுகின்றதும், ஒத்துளன் ஆயினான்.***

***ஒரு திக்கின் மா*** *- ஒரு திசை யானை;* ***மாடு வென்றி*** *- பக்கத்தி லுள்ள வெற்றி பொருந்திய;* ***ஓர் மாதிர யானையின்*** *- மற்றொரு திசை யானையினுடைய;* ***சேடு சென்று*** *- இளங்கன்று விலகிச் சென்று;* ***கெடில்*** *- வழி தவறிச் சென்று விட்டால்;* ***நாடுகின்றதும்*** *- (அதைத்)*

*தேடுவதாய்;* ***நண்ணிய கால்பிடித்து*** *- (அக்கன்று) சென்ற அடிச்சுவடு களைப் பின்பற்றி;* ***ஓடுகின்றதும்*** *- விரைந்து செல்வதை;* ***ஒத்து உளன் ஆயினான்*** *- (இலக்குவன்) ஒத்தவன் ஆனான்.*

*பக்கத்தில் நின்ற ஒரு திசை யானையின் கன்று விலகிச் சென்று காணாமற் போய் விட்ட போது அதனோடு நட்புக்கொண்ட வேறொரு திசை யானை அதனைத் தேடுவதற்காக அடிச்சுவடுகளைப் பின்பற்றி விரைந்து செல்லும். அவ்வாறு செல்லும் திசையானை போன்றவன் இலக்குவன் என்பது.* *13*

***4282. உருக் கொள் ஒண்***
***கிரி ஒன்றின்நின்று ஒன்றினைப்***
***பொருக்க எய்தினன், பொன்***
***ஒளிர் மேனியான் -***
***அருக்கன் மா உதயத்தின்நின்ற***
***அத்தம் ஆம்***
***பருப்பதத்தினை எய்திய***
***பண்புபோல்.***

***அருக்கன் மா உதயத்தினின்று*** *- சூரியன் பெருமை பொருந்திய உதயமலையிலிருந்து;* ***அத்தம் ஆம் பருப்பதத்தினை-*** *அத்தமன மலையை அடைந்தது*

*போல;* ***பொன் ஒளிர் மேனியான் -*** *பொன்னி றத்தோடு விளங்கும் மேனியையுடைய இலக்குவன்;* ***உருக்கொள் -*** *பெரிய வடிவு கொண்ட;* ***ஒள்கிரி ஒன்றினின்று -*** *ஒளிமிக்க ஒரு மலையிலிருந்து (மாலியவான் மலை);* ***ஒன்றினை -*** *மற்றொரு மலையை (கிட்கிந்தையை);* ***பொருக்க எய்தினன் -*** *விரைவிலே சென்று சேர்ந்தான்.*

*இடையே தங்குதலும், தடங்கலும் இன்றி விரைந்து சென்று சேரும் இயல்பு சூரியனுக்கும், இலக்குவனுக்கும் பொருந்தும்.*

*சூரியன் உவமை, நிறத்திற்கும் மேனி ஒளிக்கும் ஆம். பொருக்க: விரைவுக் குறிப்பு. உதயகிரி - கிழக்கின் கண் உள்ள மலை; அத்தமனகிரி - மேற்கின் கண் உள்ள மலை; பருப்பதம் :மலை 14*

***4283. தன் துணைத் தமையன்***
***தனி வாளியின்***
***சென்று, சேண் உயர்***
***கிட்கிந்தை சேர்ந்தவன்,***
***குன்றின்நின்று ஒரு***
***குன்றினில் குப்புறும்***
***பொன் துளங்கு உளைச்***
***சீயமும் போன்றனன்.***

***தன் துணைத் தமையன் -*** *தனக்கு உற்ற துணைவனும் தமையனுமான இராமனது;* ***தனி வாளியின் சென்று -*** *ஒப்பற்ற அம்பு போல*

*விரைந்து சென்று;* ***சேண் உயர் கிட்கிந்தை -*** *மிக உயர்ந்த கிட்கிந்தை மலையை;* ***சேர்ந்தவன் -*** *அடைந்தவனான இலக்குவன்;* ***குன்றினின்று -*** *ஒரு மலையிலிருந்து;* ***ஒரு குன்றினில் குப்புறும் -*** *மற்றொரு மலையில் தாவிப் பாய்கின்ற;* ***பொன்துளங்கு -*** *பொன்னிறத்தோடு விளங்கும்;* ***உளைச் சீயமும் -*** *பிடரி மயிரினையுடைய ஆண் சிங்கத்தையும்;* ***போன்றனன் -*** *ஒத்து விளங்கினான்.*

*வலிமையிலும், பெருமித நடையிலும் தோற்றத்திலும் சிங்கம் இலக்குவனுக்கு உவமையாகும். தட்டுத்தடங்கல் இல்லாமல் குறித்த இடத்திற்கு விரைந்து சென்று சேர்வதால் இலக்குவனுக்கு இராமபாணம் உவமையாயிற்று. குப்புறுதல் - குதித்தல். சேண் உயர் - ஒரு பொருட்பன்மொழி. 15*

*வானரர் அங்கதனுக்குச் செய்தி அறிவித்தல்*

***4284. கண்ட வானரம்***
***காலனைக் கண்டபோல்***
***மண்டி ஓடின; வாலி***
***மகற்கு, 'அமர்***
***கொண்ட சீற்றத்து***
***இளையோன் குறுகினான்,***

***சண்ட வேகத்தினால்'***
***என்று, சாற்றலும்,***

***கண்ட வானரம் -*** *(கோபத்தோடு இலக்குன் வருவதைப்) பார்த்த வானரங்கள்;* ***காலனைக் கண்டபோல் -*** *இயமனைக் கண்டது போல (அச்சம் கொண்டு);* ***வாலி மகற்கு -*** *வாலி மைந்தனான அங்கதன் இருப்பிடம் நோக்கி;* ***மண்டி ஓடினர் -*** *நெருக்கிக் கொண்டு ஓடி;* ***அமர் கொண்ட சீற்றத்து -*** *போரினை மனங்கொண்ட கோபத்துடன்;* ***இளையோன் சண்ட வேகத்தினால் -*** *இராமன் தம்பியான இலக்குவன் உக்கிரமான வேகத்தோடு;* ***குறுகினான் -*** *வந்து சேர்ந்துள்ளான்;* ***என்று சாற்றலும் -*** *என்று சொன்ன அளவில்.*

*கோபம் கொண்டவனாக மோதவரும் இலக்குவன் காணப்பட்டதால் அவன் 'அமர்கொண்ட சீற்றத்து இளையோன்' எனப்பட்டான். மண்டியோடுதல் - ஒன்றன்மேல் ஒன்றாக விழுந்தடித்துக்கொண்டு ஓடுதல். 16*

*அங்கதன் சுக்கிரீவனிடத்திற்கு போதல்*

***4285. அன்ன தோன்றலும், ஆண்***
***தொழிலான் வரவு***
***இன்னது என்று அறிவான்,***
***மருங்கு எய்தினான்;***
***மன்னன் மைந்தன் மனக்***
***கருத்து உட் கொளா,***
***பொன்னின் வார் கழல்***
***தாதை இல் போயினான்.***

***அன்ன தோன்றலும் -*** *அந்த அங்கதனும்;* ***ஆண்தொழிலான் -*** *வீரமிக்க செயல் செய்யக்கூடிய இலக்குவன்;* ***வரவு இன்னதென்று அறிவான்*** *- வந்த நோக்கம் இன்னதென்று அறியும் பொருட்டு;* ***மருங்கு எய்தினான் -*** *அவ்இலக்குவன் அறியாமல் ஒரு புறமாகப் பக்கத்தில் சென்று;* ***மன்னன் மைந்தன் -*** *தசரத மன்னனின் மகனான இலக்குவனது;* ***மனக்கருத்து உட்கொளா -*** *மனத்தின் கருத்தை (அவனது முகக்குறிப்பால்) அறிந்து;* ***பொன்னின் வார்கழல் தாதை -*** *(பொன்னாலான நெடிய வீரக்கழலையுடைய தன் சிறிய தந்தையாகிய சுக்கிரீவனது;* ***இல் போயினான் -*** *அரண்மனைக்குச் சென்றான்.*

*தாதையில் - ஒரு சொல்லாகக் கொண்டு சிறிய தந்தையிடம் என்றும் பொருள் உரைக்கலாம். இலக்குவனது கோபத்தை அவனது முகக் குறிப்புக் கொண்டே அங்கதன் அறிந்தான் என்பது மருங்கு சென்று என்ற தொடர் இலக்குவன் அங்கதனிடம் பேசினான் என்ற வான்மீகத்தை அடியொற்றிப் பிறந்ததாகும். ஆனால், கம்பன் இவர்களிடையே பேச்சு நடைபெற்றதாகக் கூறவில்லை. அதனால் அங்கதன் மறைவாக இலக்குவன் முகக்குறிப்பைக் காணும் அளவிற்கு அவன் பக்கத்தே சென்றான் என்று பொருள் கூறப்பட்டது.*

*'நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்' என்பது திருக்குறள் (குறள் 706) அறிவான் - வானீற்று வினையெச்சம்.* *17*

*சுக்கிரீவனது நிலை*

***4286. நளன் இயற்றிய நாயகக் கோயிலுள்,***
***தள மலர்த் தகைப் பள்ளியில், தாழ் குரல்***
***இள முலைச்சியர் ஏந்து அடி தைவர,***
***விளை துயிற்கு விருந்து விரும்புவான்.***

***நளன் இயற்றிய** - வானர வீரனாகிய நளனால் உருவாக்கப் பட்ட; **நாயகக் கோயிலுள்** - சிறந்த அரண்மனைக்குள்ளே; **தளமலர் தகைப்பள்ளியில்** - இதழ் நிறைந்த மலர்களைப்பரப்பி அமைக்கப்பட்ட அழகிய படுக்கையில்; **தாழ்குழல் இள முலைச்சியர்** - நீண்ட கூந்தலை யும் இளமையான முலைகளையும் உடைய மகளிர்; **ஏந்து அடி தைவர** - சிறந்த (தன்) கால்களை வருடிப்பிடிக்க; **விளை துயிற்கு** - உண்டாகும் தூக்கத்திற்கு; **விருந்து விரும்புவான்** - (தான்) விருந்தாவதை விரும்புவனும்.*

*புதிதாக ஆட்சியைப் பெற்று அந்தப்புரத்திலே மகளிர் பலர் தன் அடி களை வருட இனிய தூக்கத்தை மேற்கொண்டுள்ளான் சுக்கிரீவன் என்பது. நளன் - தேவ சிற்பியான விசுவகர்மாவின் மகன். ஏந்து அடி - மடியில் வைத்துக் கொண்டுள்ள பாதங்கள் என்றும் உரைக்கலாம். தூங்குவதற்குத் தைவரல் முதலியன துணையாய் இன்பம் பயப்பன. ஆதலால், அவற்றைத் துயிலுக்கு விருந்தென்றார். இதுமுதல் ஐந்து பாடல்கள் குளகச் செய்யுள்கள். விரும்புவான்,*

*விளங்குவான், வைகுவான், மயங்கினான், தயங்குவான் (4286 - 4290) என்ற சொற்கள் கிடந்தனன் (4291) என்ற வினைமுற்றைக் கொண்டு முடியும்.* *18*

***4287. தெள்ளியோர் உதவ, பெருஞ்***
***செல்வம் ஆம்***
***கள்ளினால் அதிகம்***
***களித்தான்; கதிர்ப்***
***புள்ளி மா நெடும் பொன்***
***வரை புக்கது ஓர்***
***வெள்ளி மால் வரை***
***என்ன விளங்குவான்.****

***தெள்ளியோர் உதவ** - தெளிந்த அறிவுடையவரான இராமலக்கு வரால் வழங்கப்பெற்ற; **பெருஞ்செல்வமாம்** - பெரிய அரசாட்சிச் செல்வமாகிய; **கள்ளினால் அதிகம் களித்தான்** - கள்ளைக் குடித்ததனால் மிகுதியாகக் களிப்பில் மிதந்தவனாய்; **கதிர்ப்புள்ளி** - ஒளிக்கற்றைகளின் சேர்க்கையையுடைய; **மாநெடும் பொன் வரை** - மிகப்பெரிய பொன்னிற மாலையில்; **புக்கது** - புகுந்து தங்கக் கூடிய; **ஓர் வெள்ளி மால் வரை என்ன** - ஒரு பெரிய வெள்ளி மலை போல; **விளங்குவான்** - விளங்குபவனும்.*

*களிப்பை உண்டாக்குதல் பற்றிப் பெருஞ்செல்வதைக் 'கள்' என்றார். சுக்கிரீவன், ஆட்சிச் செல்வத்தைத் தானாகப் பெறவில்லை. இராமலக்குவரின் உதவியால் பெற்றான். இதனைத் 'தெள்ளியோர் உதவ' என்றதனால் விளக்கினார். 'செல்வமாம் கள்' - செல்வத்தால் ஆகும் மயக்கம்.*

*வெண்ணிறமுள்ள சுக்கிரீவனுக்கு வெள்ளி மலையையும், பொன்னிறக் கட்டிலுக்கு (அரண்மனை)ப்பொன்மலையையும் உவமையாக்கினார். 'பொன் வரை புக்கதோர் வெள்ளி மால் வரையென்ன விளங்குவான்' - இல்பொருள் உவமை.*
*19*

### *4288. சிந்துவாரத் தரு, நறை, தேக்கு, அகில்,*
### *சந்தம், மா மயிற் சாயலர் தாழ் குழல்*
### *கந்த மா மலர்க் காடுகள், தாவிய*
### *மந்த மாருதம் வந்து உற, வைகுவான்.*

***சிந்துவாரத் தரு-*** *கருநொச்சி மரம்;* **தேக்கு, அகில், *சந்தம்* -** தேக்கு, அகில், சந்தன மரங்கள்; ***மா மயிற் சாயலர் -*** சிறந்த மயில் போன்ற சாயலையுடை பெண்களின்; ***தாழ்குழல் -*** நீண்ட கூந்தல்; ***கந்த மாமலர்க்காடுகள் -*** *(கூந்தலில் சூடிய)* மணமுள்ள மலர்களின் தொகுதி; *(ஆகிய இவற்றில்);* ***தாவிய மந்தமாருதம் -*** தழுவிய மென்காற்று; **வந்து உற வைகுவான் -** வந்து தன்மேல் வீசத் தங்குபவனும்,

*கரு நொச்சி முதலியவற்றில் தோய்ந்து வருவதால் நறுமணம் கொண்ட மென்காற்றுத் தன்மேல் வீசச் சுக்கிரீவன் தங்கியுள்ளான் என்பது. மந்தமாருதம்: இளந்தென்றல். 20*

### *4289. தித்தியாநின்ற செங் கிடை வாய்ச்சியர்*
### *முத்த வாள் நகை முள் எயிற்று ஊறு தேன்,*
### *பித்தும், மாலும், பிறவும், பெருக்கலால்,*
### *மத்த வாரணம் என்ன மயங்கினான்;*

***தித்தியாநின்ற -*** *தித்திக்கின்ற;* ***செங்கிடை வாய்ச்சியர் -*** செங்கிடை போலச் சிவந்த இதழ்களையுடைய பெண்களின்; ***முத்த வாள் நகை -*** முத்துப்போல வெண்ணிறமான புன்னகை செய்கின்ற; ***முள் எயிற்று -*** கூர்மையான பற்களிலிருந்து; ***ஊறுதேன் -*** சுரக்கின்ற தேன்; ***பித்தும் மாலும்-*** பித்தினையும் மயக்கத்தையும்; ***பிறவும் -*** காமம், மதம், மறதி, சோர்வு, துயில்முதலிய தாமசக் குணச் செயல்களையும்; ***பெருக்கலான் -*** மிகுதிப்படுத்துவதனால்; ***மத்த வாரணம் என்ன -*** மதங்கொண்ட யானைபோல; ***மயங்கினான் -*** அறிவு அழிந்தவனும்.

*சுக்கிரீவன், மகளிரின் இதழ் அமுதத்தை என்றைக்கும் சுவை தருவதெனக் கருதி மயங்கிக் கிடந்தான் என்பது. செங்கிடை என்பது சிவந்த நிறம் உடைய ஒருவகை நெட்டி. தேன் - உவமையாகுபெயர். - தித்தியா நின்ற தேன் என இயைக்கவும்.*
*21*

***4290. மகுட குண்டலம் ஏய் முகமண்டலத்து***
***உகு நெடுஞ் சுடர்க் கற்றை உலாவலால்,***
***பகலவன் சுடர் பாய் பனி மால் வரை***
***தக மலர்ந்து, பொலிந்து தயங்குவான்.***

***மகுட குண்டலம் ஏய் -*** *மகுடமும் குண்டலங்களும் பொருந்திய;* ***முக முண்டலத்து -*** *முகமண்டலத்திலிருந்து;* ***உகும் நெடுஞ்சுடர்க் கற்றை -*** *வீசும் மிகுதியான ஒளியின் தொகுதி;* ***உலாவலால் -*** *(வெண்மை யான உடம்பு முழுவதும்) பரவுவதால்;* ***பகலவன் சுடர்பாய் -*** *சூரியனது கதிர்கள் பரவிய;* ***மால்பனி வரை தக -*** *மிக்க பனி படர்ந்த இமய மலையைப்போல;* ***மலர்ந்து பொலிந்து -*** *மலர்ச்சியுற்றுப் பொலிவோடு;* ***தயங்குவான் -*** *விளங்குபவனுமாய்.*

*சூரியனது கதிர்கள் பரவுகின்ற இமயமலையைப் போன்று சுக்கிரீவன் விளங்கினான் என்பது உவமையணி. 22*

*அங்கதன் சுக்கிரீவனைத் துயிலெழுப்புதல்*

***4291. கிடந்தனன் - கிடந்தானைக்***
***கிடைத்து இரு***
***தடங் கை கூப்பினன், தாரை***
***முன்நாள் தநத***
***மடங்கல் வீரன், நல்***
***மாற்றம் விளம்புவான்***
***தொடங்கினான், அவனைத்***
***துயில் நீக்குவான்.***

***கிடந்தனன் -*** *(சுக்கிரீவன்) தூங்கிக் கொண்டிருந்தான்;* ***கிடந் தானை -*** *(அவ்வாறு) படுத்திருந்தவனான அவனை;* ***தாரை முன்நாள் தந்த -*** *தாரை முன்னாளில் பெற்றெடுத்த;* ***மடங்கல் வீரன் -*** *ஆண் சிங்கம் போன்ற வீரமுடைய அங்கதன்;* ***கிடைத்து -*** *நெருங்கிச்சென்று;* ***இரு தடக்கை கூப்பினன் -*** *(தன்னுடைய) பெரிய கைகளைக் குவித்து அஞ்சலி செய்தவாறு;* ***அவனைத்துயில் நீக்குவான் -*** *அந்தச் சுக்கிரீவனைத் தூக்கத்திலிருந்து எழுப்பி;* ***நல் மாற்றம் விளம்புவான் தொடங்கினான் -*** *மனத்திற்கு உகந்த நல்ல வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினான்.*

*கிடந்தனன்: வினைமுற்று: கிடந்தான்: வினையாலணையும் பெயர். 23*

***4292. 'எந்தை! கேள்: அவ்***
***இராமற்கு இளையவன்,***
***சிந்தையுள் நெடுஞ்***
***சீற்றம் திரு முகம்***
***தந்து அளிப்ப, தடுப்ப***
***அரும் வேகத்தன்***

***வந்தனன்; உன் மனக்***
***கருத்து யாது?' என்றான்.***

***எந்தை கேள் -*** *என் தந்தையே! நான் சொல்வதைக் கேட்பாயாக!* ***அவ் இராமற்கு இளையவன் -*** *அந்த இராமனுக்குத் தம்பியான இலக்குவன்;* ***சிந்தையுள் நெடுஞ்சீற்றம் -*** *மனத்திற் படிந்துள்ள பெருங் கோபத்தை;* ***திருமுகம் தந்து அளிப்ப -*** *முகமானது எடுத்துக் காட்ட;* ***தடுப்ப அரும் வேகத்தன் -*** *(யாராலும்) தடுக்க முடியாத வேகத்தோடு;* ***வந்தனன் -*** *வந்து சேர்ந்துள்ளான்;* ***உன் மனக் கருத்து யாது -*** *உனது உள்ளக் கருத்து என்ன;* ***என்றான் -*** *என்று (சுக்கிரீவனிடம் அங்கதன்) கேட்டான்.*

*எந்தை -மரூஉ.* *24*

***4293. இனைய மாற்றம் இசைத்தனன்***
***என்பது ஓர்***
***நினைவு இலான், நெடுஞ்***
***செல்வம் நெருக்கவும்,***
***நனை நறுந் துளி***
***நஞ்சு மயக்கவும்,***
***தனை உணர்ந்திலன், மெல்***
***அணைத் தங்கினான்.***

***நெடுஞ் செல்வம் நெருக்கவும் -*** *அரசாட்சி என்னும் பெரிய செல்வம் மமதையைத் தந்தாலும்;* ***நறு நனை துளி நஞ்சு மயக்கவும் -*** *மணமுள்ள கள்ளின் துளியாகிய நஞ்சு, மயக்கத்தை அளித்ததாலும்;* ***தனை உணர்ந்திலன் -*** *தன்னை உணராமையால் (அச்சுக்கிரீவன் மெய்ம மறந்து);* ***இனைய மாற்றம் இசைத்தனன் -*** *அங்கதன் சொன்ன வார்த்தைகள் இன்னவையென்று;* ***என்பது ஓர் நினைவு இலான் -*** *புரிந்து கொள்ள இயலாத மன நிலையில்;* ***மெல் அணித் தங்கினான் -*** *மென்மையான படுக்கையில் (முன் போலவே) கிடந்தான்.*

*தன்னையுண்டவரை அறிவில்லாதவராக ஆக்குவதால் கள்ளை 'நஞ்சு' என்றார். 'எஞ்ஞான்றும், நஞ்சுண்பார் கள்ளுண்பவர்' (குறள்: 926). நெடுமை: பெருமை. நனி நறுந்துளி நஞ்சு - உருவகம்.* *25*

*அங்கதன் அனுமனிடம் செல்லுதல்*

***4294. ஆதலால், அவ் அரசு இளங்***
***கோள் அரி, -***
***யாதும் முன் நின்று***
***இயற்றுவது இன்மையால்,***
***கோது இல் சிந்தை***
***அனுமனைக் கூவுவான்***
***போதல் மேயினன் -***
***போதகமே அனான்.***

***ஆதலால் -*** *அரசாட்சிச் செருக்காலும், கள்ளின் மயக்கத்தாலும் தன்னை மறந்து சுக்கிரீவன் படுக்கையை விட்டு எழாமல் கிடக்கவே;* ***போதகமே அனான் -*** *யானைக் கன்று போன்றவனும்;* ***அவ் அரசு இளங்கோளரி -*** *இளமையான வலிய ஆண் சிங்கம் போன்றவனுமான அவ் அங்கதன்;* ***முன் நின்று இயற்றுவது -*** *சுக்கிரீவன் முன்னே நின்று செய்யத்தக்கது;* ***யாதும் இன்மையால் -*** *எதுவும் இல்லாததால்;* ***கோது இல் சிந்தை அனுமனை -*** *குற்றமற்ற மனத்தையுடைய அனுமனை;* ***கூவுவான் போதல் மேயினான் -*** *அழைப்பதற்காக (அவனிடம்) செல்ல லானான்.*

*வலிமை, துணிவு, முன்னும் பின்னும் நோக்குதல் இவற்றால் சிங்கமும், நடை, வலிமை, பெருமிதம் ஆகியவற்றால் யானையும் அங்கதனுக்கு உவமையாயின.*
*26*

*அங்கதன் அனுமனுடன் தாரையின் கோயிலை அடைதல்*

***4295. மந்திரத் தனி மாருதி தன்னொடும்,***
***வெந் திறல் படை வீரர் விராய் வர,***
***அந்தரத்தின் வந்து, அன்னைதன் கோயிலை,***
***இந்திரற்கு மகன் மகன் எய்தினான்.***

***இந்திரற்கு மகன் மகன் -*** *இந்திரன் மைந்தனான வாலியின் மகனாகிய அங்கதன்;* ***மந்திரத் தனி மாருதி தன்னொடும் -*** *ஆலோசனை யில் வல்ல ஒப்பற்ற வாயு மகனான அனுமனோடு;* ***வெந்திறல் படை வீரர் -*** *மிக்க வலிமையுள்ள வீரர்கள்;* ***விராய் வர -*** *திரண்டு (தன்னுடன்) வர;* ***அந்தரத்தின் வந்து -*** *(சுக்கிரீவனது அரண்மனையிலிருந்து) வெளிப்போந்து;* ***அன்னைதன் கோயிலை -*** *(தன்) தாயான தாரையின் மாளிகையை;* ***எய்தினான் -*** *அடைந்தான்.*

*இந்திரற்கு மகன் மகன் - இந்திரனுக்குப் பேரன்; அங்கதன் அந்தரத்தின் வந்து - மனக் கலக்கத்தோடு வந்து; வான் வழியாகத் தாவி வந்து - என்றும் உரைக்கலாம். அந்தரம்: வெளிப்புறம், மனக்கலக்கம். 27*

*தாரையின் பேச்சு*

***4296. எய்தி, 'மேல் செயத்தக்கது என்?' என்றலும்,***
***'செய்திர், செய்தற்கு அரு நெடுந் தீயன;***
***நொய்தில் அன்னவை நீக்கவும் நோக்குதிர்;***
***உய்திர் போலும், உதவி கொன்றீர்?' எனா,***

***எய்தி -*** *(அங்கதன் தாரையை அடைந்து);* ***மேல் செயத் தக்கது என் -*** *இனி நாம் செய்யத்தக்க செயல் என்ன;* ***என்றலும் -*** *என்று அவளை வினாவிய அளவில்;* ***செய்தற்கு அரு -*** *(அவள் அவ்வானரர்களை நோக்கி) செய்யத் தகாத;* ***நெடுந்தீயன -*** *பெரிய தீச் செயல்களை;* ***நொய்தில் செய்திர் -*** *எளிதிலே செய்துவிட்டீர்கள்;* ***அன்னவை நீக்கவும் -*** *அச் செயல்களால் வரும் கேடுகளை எளிதில் நீக்கிக் கொள்ளவும்;* ***நோக்குதிர் -*** *வழி தேடுகிறீர்கள்;* ***உதவி கொன்றீர் -*** *செய்ந்நன்றி மறந்தவர்களான நீங்கள்;* ***உய்திர் போலும் -*** *தப்பி வாழ்வீர்கள் போலும்!* ***எனா -*** *என்று சொல்லி. . .*

*விளம்புகின்றாள் என அடுத்த கவியோடு முடியும். 'உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (குறள் 110), உய்ய மாட்டீர் என்பது வலியுறுத்தப்பட்டது. நெடுந்தீயன - மிக்க கொடியன. நோக்குதல் - வழிதேடுதல், ஆலோசித்தல், 'செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென் றறம் பாடிற்றே' என்ற பழம் பாடல் கருத்தினை நினைவு கூர்க. (புறம் 34) 28*

***4297. மீட்டும் ஒன்று***
***விளம்புகின்றாள்: ' "படை***
***கூட்டும்" என்று, உமைக்***
***கொற்றவன், "கூறிய***
***நாள் திறம்பின், உம்***
***நாள் திறம்பும்" எனக்***
***கேட்டிலீர்; இனிக்***
***காண்டிர்; கிடைத்திரால்.***

***மீட்டும் ஒன்று -*** *மேலும் (தாரை) ஒரு வார்த்தை;* ***விளம்புகின்றாள் -*** *சொல்லுகின்றாள்;* ***படை கூட்டும் என்று -*** *சேனைகளைச் சேர்த்துக் கொண்டு வாருங்கள் என்று;* ***உமைக் கொற்றவன் கூறிய -*** *உங்களைப் பார்த்து வெற்றி வீரனான இராமன் குறிப்பிட்ட;* ***நாள் திறம்பின் -*** *தவணை நாள் தவறிவிட்டால்;* ***உம் நாள் திறம்பும் -*** *உங்களுடைய வாழ்நாள் அழிந்து போகும்;* ***எனக் கேட்டிலீர் -*** *என்று (நான் பலமுறை) சொல்லியும் (அதற்கு ஏற்றவாறு) நடக்காமல் போய் வீட்டீர்கள்;* ***இனிக் காண்டிர் -*** *இனிமேல் (அதன் விளைவை) அனுபவத்தால் தெரிந்து கொள்வீர்கள்;* ***கிடைத்திர் -*** *(இப்பொழுது குற்றத்திலே) அகப்பட்டுக் கொண்டீர்கள்.*

*நாள் - வாழ்நாள். இப்பாடலால் தாரை முன்பே பலமுறை எச்சரித்திருக்கிறாள் என்பதுபுலப்படுகிறது. 29*

***4298. 'வாலி ஆர் உயிர் காலனும் வாங்க, விற்***
***கோலி, வாலிய செல்வம் கொடுத்தவர்***
***போலுமால், உம் புறத்து இருப்பார்! இது***
***சாலுமால், உங்கள் தன்மையினோர்க்கு எலாம்.***

***வாலி ஆர் உயிர் -*** *வாலியின் அரிய உயிரை;* ***காலனும் வாங்க -*** *யமனும் கவர்ந்து செல்லுமாறு;* ***விற்கோலி -*** *வில்லை வளைத்து (அம்பு தொடுத்து);* ***வாலிய செல்வம் -*** *புகழ் மிக்க அரசாட்சிச் செல் வத்தை;* ***கொடுத்தவர் -*** *(உங்களுக்குத்) தந்தவர்களாகிய இராமனும் இலக்குவனுமா;* ***உம் புறத்து இருப்பார் போலும் -*** *கிட்கிந்தைக்கு வெளியே சும்மா இருப்பார்கள்;* ***இது உங்கள் தன்மையினோர்க்கு எலாம் சாலும் -*** *(பேருதவி செய்தவர்களை) இப்படிப் புறக்கணிப்பது உங்களைப் போன்றவர்களுக்குப் பொருந்தியது தான்.*

*'பேருதவி செய்தவரும், பேராற்றலுடையவருமானவரை எவ்வளவு மேலாகப் போற்ற வேண்டும்? அதைவிட்டு அவரிடத்திலும் தவறாக நடந்தால் பொறுத்துக் கொண்டிருப்பார்களா?" என்றாள் தாரை. "நீங்கள் தவறு செய்தமையால் அவர்கள் சினம் பொங்கப் பெற்று நீங்கள் அழியுமாறு மோதப் போகிறார்கள்; இந்தத் தண்டனை*

*உங்களுக்குப் பொருத்தமானதே" என்பதாம். போலும் - ஒப்பில் போலி. வாலிய செல்வம் - வாலியினுடைய செல்வம் என்றும் பொருள் கொள்ளலாம்.*

*வாலியார் - இதனை உயர்வுப் பன்மையாகவும் கொள்ள இடமுண்டு. 30*

***4299. 'தேவி நீங்க, அத் தேவரின் சீரியொன்***
***ஆவி நீங்கினன்போல் அயர்வான்** ; **அது பாவியாது, பருகுதிர் போலும், நும் காவி நாள்மலர்க் கண்ணியர் காதல் நீர்.***

***தேவி நீங்க** - (தன்) மனைவியான சீதை பிரிந்திருக்க; **அத் தேவ ரின் சீரியோன்** - (அத்துயரத்தால்) தேவர்களைக் காட்டிலும் சிறப்புள்ளவனான அந்த இராமன்; **ஆவி நீங்கினன் போல் அயர்வான்** - உயிர் நீங்கியவன் போலத் தளர்ந்துள்ளான்; **அது பாவியாது** - அதை (நீங்கள்) மனத்தில் கருதிப் பார்க்காமல்; **நும் நாள் காவி மலர்க் கண்ணியர்** - காலை பூத்த கருங் குவளை போன்ற கண்களையுடைய உங்கள் மனைவியரின்; **காதல் நீர்** - அன்பு வழிப்பட்ட இன்பத் தேனை; **பருகுதிர் போலும்** - குடித்து மகிழ்கின்றீர் போலும்!*

*சிற்றின்ப வயப்பட்டுக் கடமையை மறந்த சுக்கிரீவனது செயலை மனத்திற் கொண்டு தாரை இவ்வாறு பேசலானாள் என்பது. 31*

***4300. 'திறம்பினீர் மெய்;***
***சிதைத்தீர் உதவியை;***
***நிறம் பொலீர்; உங்கள்***
***தீவினை நேர்ந்ததால்,***
***மறம் செய்வான் உறின்,***
***மாளுதிர்; மற்று இனிப்***
***புறஞ்செய்து ஆவது என்?'***
***என்கின்ற போதின்வாய்,***

***மெய் திறம்பினீர்** - சத்தியம் தவறிவிட்டீர்கள்; **உதவியைச் சிதைத் தீர்**- (இராமன் செய்த) உதவியை மறந்தீர்கள்; **நிறம் பொலீர்** - குணத்தால் பொல்லாதவர்கள் ஆனீர்கள்; **உங்கள் தீவினை நேர்ந்ததால்** - உங்களது பாவச் செயல் பயன்தர வந்ததால்; **மறம் செய்வான் உறின்** - (அந்த வீரர் உம்மை எதிர்த்துப்) போர் செய்யத் தொடங்கினால்; **மாளுதிர்** - (அவரால்) மடிவீர்கள்; **இனிப் புறம் செய்து** - இனி மேற்கொண்டு என்ன செய்தும்; **ஆவது என்** - அதனால் விளையக் கூடிய பயன் யாது; **என்கின்ற போதின் வாய்** - என்று (அங்கதன் முதலோரைத் தாரை) கண்டித்துப் பேசும் சமயத்தில். . . .*

*நிறம் பொல்லீர் (பொலீர்); நிறம் - குணம். திறம்புதல்: மாறுபடுதல். 32*

*வாயிலைத் தாளிட்டு வானரங்கள் போருக்குத் தயாராதல்*

***4301. கோள் உறுத்தற்கு அரிய குரக்கினம்,***
***நீள் எழுத் தொடரும் நெடு வாயிலைத்***

***தாள்உறுத்தி, தட வரை தந்தன***
***மூளுறுத்தி அடுக்கின, மொய்ம்பினால்,***

***கோள் உறுத்தற்கு -*** *தடுத்து நிறுத்துவதற்கு;* ***அரிய குரக்கினம் -*** *அரிய (வலிமையுள்ள) குரங்குகளின் கூட்டம்;* ***நீள் எழுத் தொடரும் -*** *நீளமான உழலை மரக்கட்டைகளை உடைய;* ***நெடு வாயிலை -*** *பெரிய நகரத்தின் வாயிற் கதவை;* ***தாள் உறுத்தி -*** *உள்ளே தாளிட்டு;* ***மொய்ம்பினால் -*** *வலிமையால்;* ***தடவரை தந்தன மூளுறுத்தி -*** *பெரிய பாறைகளைக் கொண்டு வந்து சேர்த்து;* ***அடுக்கின -*** *(ஒன்றன் மேல் ஒன்றாக அக் கதவோடு சார்த்தி உள்ளே) அடுக்கி வைத்தன.*

*குரங்குகள், கதவை எளிதில் திறக்க முடியாதபடி பெரிய பாறைகளைக் கொண்டுவந்து அடுக்கி வைத்தன என்பது. குரங்குகள் மூன்று வகைப் பாதுகாப்பைச் செய்தன. 1. வாயிற் கதவைச் சாத்தி உள்ளே தாளிடுதல். 2. உழலை பாய்ச்சுதல். 3. பெரும் பாறைகளை அடுக்கி வைத்தல். வாயில் - ஆகுபெயர். தாள் உறுத்துதல் - தாழ்கோலையிறுக்குதல். 33*

***4302. சிக்குறக் கடை சேமித்த செய்கைய,***
***தொக்குறுத்த மரத்த, துவன்றின;***
***'புக்கு உறுக்கிப் புடைத்தும்' என, புறம்***
***மிக்கு இறுத்தன; வெற்பும் இறுத்தன.***

***கடை சிக்குற -*** *(இவ்வாறு) நகர வாயிலை உறுதியாக;* ***சேமித்த செய்கைய -*** *பத்திரப்படுத்திக் கொண்ட செய்கையுடைய வானரங்கள்;* ***புக்கு உறுக்கி -*** *(இவ் வாயிலைக் கடந்து இலக்குவன் வந்தால்) எதிரே சென்று (அவனை) அச்சுறுத்தி (அதட்டி);* ***புடைத்தும் என -*** *நையப் புடைப்போம் என்று எண்ணி;* ***தொக்குறுத்த மரத்த -*** *(முறித்துக் கையில்) எடுத்துக் கொண்ட மரங்களையுடையனவும்;* ***வெற்பும் இறுத்தன -*** *பெரிய பாறைகளையும் பேர்த்து எடுத்துக் கொண்டனவுமாம்;* ***துவன்றின -*** *(திரண்டு) நெருங்கி;* ***புறம் மிக்கு இறுத்தன -*** *மதில் பக்கத்தில் கூட்டமாகக் கூடி நின்றன.*

*சேமித்தல் - காவல் செய்து வைத்தல். தொக்குறுத்தல் - தொகுத்தல், ஈட்டுதல். இறுத்தல் - தங்குதல். 34*

*இலக்குவன் சினத்தின் விளைவு*

***4303. 'காக்கவோ கருத்து?' என்று, கதத்தினால்***
***பூக்க மூரல், புரவலர் புங்கவன்,***
***தாக்கணங்கு உறை தாமரைத் தாளினால்,***
***நூக்கினான் அக் கதவினை, நொய்தினின்.***

*(வானரங்கள் நகர வாயிலை அடைத்ததைப் பார்த்து)* ***புரவலர் புங்கவன்-*** *அரசரில் மேம்பட்டவனான இலக்குவன்;* ***காக்கவோ கருத்து என்று -*** *(என்னிடமிருந்து தம்மைப்) பாதுகாத்துக் கொள்ளவோ*

*(இவர்கள்) கருதியது என்று எண்ணி;* ***கதத்தினால் மூரல் பூக்க -*** *கடுங்கோபத்தால் எள்ளற் சிரிப்புத் தோன்ற;* ***தாக்கணங்கு உறை -*** *திருமகள் வசிக்கின்ற;* ***தாமரைத் தாளினால் -*** *செந்தாமரை போன்ற தன் திருவடியால்;* ***அக் கதவினை -*** *அவ் வாயிற் கதவை;* ***நொய்தி னில் நூக்கினான் -*** *மிக எளிமையாகத் தள்ளினான்.*

*இலக்குவனின் திருவடிக்கு இலக்குமி உறையும் தாமரை உவமையாகியது. அணங்கு - மகளிரில் சிறந்தவர், பெண் தெய்வம் 'அறம் செய்வோர்பால் அருளினால் பற்றியிருக்கும் திருமகள்' என்று தாக்கு அணங்கு என்பதற்குக் கம்பன் கழகப் பதிப்பு விளக்கம் தருகிறது. தாக்குதல் - பற்றியிருத்தல். 35*

***4304. காவல் மா மதிலும், கதவும், கடி***
***மேவும் வாயில் அடுக்கிய வெற்பொடும்,***
***தேவு சேவடி தீண்டலும், தீண்ட அரும்***
***பாவம் ஆம் என, பற்று அழிந்து இற்றவால்.***

***கதவும் -*** *அந்த வாயிற் கதவும்;* ***கடி மேவும் -*** *காவல் அமைந்த;* ***வாயில் அடுக்கிய -*** *வாயிலில் (வானரங்கள்) அடுக்கி வைத்திருந்த;* ***வெற்பொடும் -*** *பெரிய பாறைகளோடு;* ***காவல் மா மதிலும் -*** *(வாயிலைச் சார்ந்து) கட்டுக் காவல் சூழ்ந்துள்ள பெரிய மதிலும்;* ***தேவு சேவடி தீண்டலும் -*** *தெய்வத்தின் சிவந்த திருவடி பட்ட அளவில்;* ***தீண்ட அரும் -*** *தீர்த்தறகு அரிய;* ***பாவம் ஆம் என -*** *இழிவான தீவினைகளைப் போல;* ***பற்று அழிந்து இற்ற -*** *பற்றுக் கோடு இல்லாமல் முழுவதும் அழிந்துவிட்டன.*

*இலக்குவனின் திருவடி பட்ட அளவிலே வாயில் கதவு முதலியன அழிந்து போனதற்குத் தெய்வத் திருவடியின் தொடர்பால் அடியார்க்குக் கொடிய வினைக் கட்டுக்கள் பற்றற அழிவதை உவமையாக்கினார். உவமையணி. 'சிந்திப்பரியன்' எனத் தொடங்கும் திருவையாற்றுப் பதிகத்தில், 'பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன அந்திப் பிறையணிந்து ஆடும் ஐயாறன் அடித்தலமே' என அப்பர் திருவாக்கில் இக்கருத்து அமைந்துள்ளமை காண்க. தீண்டலும், தீண்டரும் - முரண் தொடை தீண்ட அரும் தீண்டரும் (அகரம் தொக்கது). 36*

*குரங்குகள் அஞ்சி ஓடுதல்*

***4305. நொய்தின் நோன் கதவும், முது வாயிலும்,***
***செய்த கல் மதிலும், திசை, யோசனை***
***ஐ - இரண்டின் அளவு அடி அற்று உக,***
***வெய்தின் நின்ற குரங்கும், வெருக் கொளா,***

***நோன் கதவும் -*** *வலிய அக் கதவும்;* ***முது வாயிலும் -*** *பழமையான அந்த நகரவாயிலும்;* ***கல் செய்த மதிலும் -*** *கற்களால் எழுப்பப் பட்ட மதிலும்;* ***நொய்தின் அடி அற்று -*** *எளிதிலே கட்டுக் குலைந்து;* ***திசை ஐஇரண்டு யோசனையின் அளவு -*** *எல்லாத் திசைகளிலும் பத்து யோசனை தூரம்;* ***உக குரங்கும் -*** *சிதறியதால் (போர் செய்ய நின்ற)*

*வானரங்களும்;* ***வெருக் கொளா -*** *அச்சங் கொண்டு;* ***வெய்தின் நின்ற -*** *(மனங் கொதித்துத்) தவித்தன.*

*வெய்தின் நிற்றல்: கொடிய துன்பம் அடைதல். யோசனை - ஓர் எல்லையளவு. 3, 71/2, கல் தொலைவு என்பர். வெருங் கொளா - செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். நோன்மை: வலிமை. 37*

***4306. பரிய மா மதிலும், படல் வாயிலும்***
***சரிய வீழ்ந்த; தடித்தின் முடித் தலை***
***நெரிய, நெஞ்சு பிளகக, நெடுந் திசை***
***இரியலுற்றன; இற்றில இன் உயிர்,***

*(இவ்வாறு)* ***பரிய மா மதிலும் -*** *பருத்து உயர்ந்த அம் மதிலும்;* ***படல் வாயிலும் -*** *அகன்று நின்ற நகர வாயிலும்;* ***சரிய வீழ்ந்த*** *- சாய்ந்து விழுந்ததால் உண்டாகிய;* ***தடித்தின் முடித்தலை நெரிய -*** *இடியால் (தங்கள்) தலையிடம் நொறுங்கவே;* ***நெஞ்சு பிளப்ப -*** *(அம் மதிலைச் சார்ந்து நின்ற வானரங்கள்) நெஞ்சு உறுதியழிந்து கலங்கி;* ***நெடுந்திசை -*** *திசைகள் தோறும்;* ***இரியல் உற்றன -*** *நெடுந்தூரம் ஓடின;* ***இன்னுயிர் இற்றில -*** *(அதனால்) இனிய உயிர் அழியாதனவாயின. (தப்பிப் பிழைத்தன)*

*மதில்: ஏணி கொண்டும் ஏறமுடியாத உயர்வும், புறத்தே உள்ளவர்க்குத் தோண்டமுடியாதவாறு அடி அகலமும், உள்ளே இருந்து தொழில் செய்வோர்க்குத் தலையகலமும் கொண்டிருக்கவேண்டும். இவ்வியல்புகளை உணர்த்தவே 'பரிய மா மதில்' என்றார். முடித்தலை: மதில்களின் சிகரம். உயர்வு அகலம் திண்மை அருமைஇந் நான்கின் அமைவரண் என்றுரைக்கும் நூல் - (குறள் 743).*
*38*

***4307. பகரவேயும் அரிது; பரிந்து எழும்***
***புகர் இல் வானரம் அஞ்சிய பூசலால்,***
***சிகர மால் வரை சென்று திரிந்துழி***
***மகர வேலையை ஒத்தது, மா நகர்,***

***பகரவேயும் அரிது -*** *(குரங்குகளின் அச்சத்தால் நிகழ்ந்தவற்றைச்) சொல்வதற்கும் அரியது;* ***பரிந்து எழு -*** *கொடிய துன்பப்பட்டு இருப்பிடத்தை விட்டு ஓடிய;* ***புகர் இல் வானரம் -*** *குற்றமற்ற அக் குரங்குகள்;* ***அஞ்சிய பூசலால் -*** *அச்சத்தால் செய்த பேரொலியால்;* ***மா நகர் -*** *சிறந்த அக் கிட்கிந்தை நகரமானது;* ***சிகர மால்வரை சென்று -*** *சிகரங்களையுடைய பெரிய (மத்தாகிய) மந்தர மலை புகுந்து;* ***திரிந்துழி மகர வேலையை ஒத்தது -*** *சுழன்ற பொழுது ஆரவாரித்த மீன்களைக் கொண்ட பாற்கடலைப் போன்றது.*

*பூசல் -ஆரவாரம். 39*

***4308. வானரங்கள் வெருவி, மலை ஒரீஇ,***
***கான் ஒருங்கு படர, அக் கார் வரை,***

***மீ நெருங்கிய வானகம், மீன் எலாம்***
***போன பின், பொலிவு அற்றது போன்றதே.***

***வானரங்கள் வெருவி -*** *குரங்குகள் இவ்வாறு அஞ்சி;* ***மலை ஒரீஇ*** *- அந்தக் கிட்கிந்தை மலையை விட்டு நீங்கி;* ***கான் ஒருங்கு படர -*** *காடுகளில் ஒன்றாகச் சென்று சேர்ந்து விட்டதால்;* ***அக் கார் வரை -*** *மேகங்கள் சூழ்ந்த அந்தக் கிட்கிந்தை மலையானது;* ***மீன் நெருங்கிய வானகம் -*** *நட்சத்திரங்கள் நிறைந்த வானம்;* ***மீன் எலாம் போனபின் -*** *அந் நடசத்திரங்கள் எல்லாம் நீங்கிய பின்பு;* ***பொலிவு அற்றது -*** *பொலிவு இழந்த தன்மையை;* ***போன்றது-*** *ஒத்திருந்தது.*

*கார் வரை - பெரிய மலை என்றும் பொருள் உரைக்கலாம். கிட்கிந்தை மலை நட்சத்திரங்கள் நீங்கப் பெற்ற வானத்தைப் போலப் பொலிவற்றிருந்தது. - உவமையணி.* *40*

*என்ன செய்யலாம் எனத் தாரையை வினவுதல்*

***4309. அன்ன காலையில், ஆண் தகை ஆளியும்,***
***பொன்னின் நல் நகர் வீதியில் புக்கனன்;***
***சொன்ன தாரையைச் சுற்றினர், நின்றவர்,***
***'என்ன செய்குவது? எய்தினன்!' என்றனர்.***

***அன்ன காலையில் -*** *அச் சமயத்தில்;* ***ஆண் தகை ஆளியும் -*** *ஆடவருள் சிங்கம் போன்றவனாகிய இலக்குவன்;* ***பொன்னின் நன்னகர் -*** *அழகும் சிறப்பும் மிக்க அந் நகரத்து;* ***வீதியில் புக்கனன் -*** *வீதியில் புகலானான்;* ***சொன்ன தாரையை -*** *(அதைக் கண்டு அஞ்சி) முன்னர்க் கடிந்து பேசிய தாரையை;* ***சுற்றினர் நின்றவர் -*** *சுற்றி நின்றவர்களான அங்கதன் முதலியோர்;* ***எய்தினன் -*** *(அத்தாரையை நோக்கி) (இலக்குவன்) வந்துவிட்டானே;* ***என்ன செய்குவது -*** *நாம் என்ன செய்வது;* ***என்றனர் -*** *என்று கேட்டார்கள்.*

*ஆண்தகை ஆழியான் எனப்பாடம் கொண்டு பின்வருமாறு நயம் காண்பாரும் உளர். தான் இருந்த இடத்திலேயிருந்து தனது நிலம் முழுவதும் தன் கட்டளையால் நடக்கச் செய்யும் ஆற்றல் மிக்க அரசனைப் போல வல்லமை நிறைந்த இராமன் இலக்குவன் மூலமாகத் தன் கட்டளையை நிறைவேற்றுகின்றான். ஆதலால் இராமனை 'ஆண்டகை' என்றும், 'இலக்குவனை' அவனது ஆழியான் என்றும் கூறதல் பொருந்தும் என்பர். 41*

*அனுமன் உரைத்த வழி*

***4310. அனையன் உள்ளமும் -***
***ஆய்வளையாய்! - அலர்***
***மனையின் வாயில்***
***வழியினை மாற்றினால்,***
***நினையும்; வீரன் அந்***
***நீள் நெறி நோக்கலன்;***

**வினையம் ஈது என்று**
**அனுமன் விளம்பினான்.**

***ஆய்வளையாய் -*** *ஆராய்ந்தெடுத்து அணிந்த வளையல்களை உடையவளே;* ***அலர் மனையின் வாயில் -*** *(நீ சென்று) திறத்துள்ள அரண்மனையின் வாயில்;* ***வழியை மாற்றினால் -*** *வழியை (உள்ளே இலக்குவன் செல்ல முடியாதபடி)த் தடுத்துவிட்டால்;* ***அனையன் உள்ளமும் -*** *அந்த இலக்குவனது மனமும்;* ***நினையும் -*** *(தான் செய்ய முனைந்திருப்பது சரிதானா என்று) எண்ணும்;* ***வீரன் அந் நீள்நெறி நோக்கலன் -*** *இலக்குவன் அந்த நெடு வழியைக் கண்ணால் பார்க்கவும் மாட்டான்;* ***வினையம் ஈது -*** *(வந்த காரியத்தைச் சொல்வான். அதனால் செய்யத்தக்க) தந்திரம் இதுவே;* ***என்று அனுமன் விளம்பினன் -*** *என்று அனுமன் (தாரையை நோக்கிக்) கூறினான்.*

*உள்ளமும்: எச்சவும்மை*

*'இலக்குவனது மனம் மலர் போல் மென்மையானது; பெண்ணாகிய நீ சென்று சுக்கிரீவனது அரண்மனை வாயில் வழியில் நின்றுவிட்டால் பெண்ணைக் கொல்லக் கூடாதென்ற அறத்தையறிந்த அவன் விலகிச் சென்று விடுவான். இதுவே நாம் செய்யத் தக்க தந்திரம்' என்று அனுமன் சொன்னான் என்பது.*

*இப்பாடல் மிகை என்று ஐயரவர்கள் நூலகப் பதிப்பு தெரிவிக்கிறது. சில சுவடிகளில் மட்டும் இப்பாடல் காணப்படுகிறது. 'அரசியற்றுறையில் வாலிக்கும் அறிவுரை கூறக்கூடிய ஆற்றல் சான்றவள் அவள் (தாரை) என்பது.... .... இப்பாடலை நீக்கியதால் கதைத்தொடர்பு கெடாமையும் உய்த்துணர்க' என்று அப்பதிப்பில் காணப்படும் விளக்கம் கருதத்தக்கதாகஉள்ளது. 42*

*தாரை வழியினைத் தடுத்து நிற்றல்*

***4311. 'நீர் எலாம், அயல் நீங்குமின்;நேர்ந்து, யான்,***
***வீரன் உள்ளம் வினவுவல்' என்றலும்,***
***பேர நின்றனர், யாவரும்;பேர்கலாத்***
***தாரை சென்றனள், தாழ் குழலாரொடும்.***

***நீர் எலாம் -*** *(அங்கதன் முதலானவர்களைப் பார்த்த) நீங்கள் எல்லோரும்;* ***அயல் நீங்குமின் -*** *அப்பாலே செல்லுங்கள்;* ***யான் நேர்ந்து*** *- நான் (இலக்குவன் எதிரே) சென்று;* ***வீரன் உள்ளம் -*** *வீரனான அவனது மனக் கருத்தை;* ***வினவுதல் என்றாலும் -*** *வினவி அறிவேன் என்று சொன்ன அளவில்;* ***யாவரும் பேர நின்றனர் -*** *அந்த வானரர்கள் யாவரும் விலகிச் சென்று நின்றார்கள் (உடனே);* ***பேர் கலாத்தாரை -*** *நெறிமுறைகளில் பின்னிடாத தாரை;* ***தாழ் குழலாரொடும் -*** *மலர் சூடிய கூந்தலையுடைய தோழியரோடு;* ***சென்றனள் -*** *புறப்பட்டுச் சென்றாள்.*

*பெண்களை எதிர்க்க மாட்டான் என்பதை 'வீரன்' என்ற சொல் உணர்த்துகின்றது. பேர, பேர்கலா - முரண் தொடை. 43*

***4312. உரைசெய் வானர வீரர் உவந்து உறை***
***அரசர் வீதி கடந்து, அகன் கோயிலைப்***
***புரசை யானை அன்னான் புகலோடும், அவ்***
***விரை செய் வார் குழல் தாரை விலக்கினாள்.***

***உரை செய் வானர வீரர்*** *- சிறப்பித்துச் சொல்லப் படுகின்ற வானர வீரர்கள்;* ***உவந்து உறை*** *- மகிழ்ச்சியோடு வசிக்கும் இடமான;* ***அரசர் வீதி கடந்து*** *- இராச வீதியைக் கடந்து சென்று;* ***புரசை யானை அன்னான்*** *- கழுத்திடு கயிற்றையுடைய யானையைப் போன்ற இலக்குவன்;* ***அகன் கோயிலை*** *- அகன்றுள்ள சுக்கிரீவனது அரண்மனைக்குள்;* ***புகலோடும்*** *- நுழைகின்ற சமயத்தில்;* ***அவ் விரை செய்வார் குழல் தாரை*** *- மணத்தைப் பரப்பும் நீண்ட கூந்தலையுடைய அத் தாரையானவள்;* ***விலக்கினாள்*** *- (இலக்குவனை) வழிமறித்தாள்.*

*யானை மதங்கொண்டு சீறினாலும் கழுத்தின் புரசைக் கயிறு பற்றி அதன் மீது ஏறினவர் உயிர் பிழைத்தல் கூடும். அவ்வாறே இலக்குவன் சினத்தால் சீறினாலம் தருமத்திற்குக் கட்டுப்படும் இயல்புடையவனாதல் பற்றி, அவன் சினத்திற்கு இலக்கானவர் உயிர் பிழைத்தல் கூடும் என்னும் கருத்தில் 'புரசை யானையனான்' என்றார்.*

*மங்கலம் இழந்த தாரையை 'விரைசெய் வார்குழலாள்' என்று குறித்தது ஆழ்ந்த சிந்தனைக்கு உரியது. மணம் (விரை) கொண்ட கூந்தல் என்றதில், மணம் ஒழுக்கச் சிறப்பால் வருவது. கற்புடை மகளிர் மேனியேயன்றிக் கூந்தலும் நன்மணம் கமழ்வது மரபு. 44*

***4313. விலங்கி, மெல் இயல், வெண்***
***நகை, வெள் வளை,***
***இலங்கு நுண் இடை, ஏந்து***
***இள மென் முலை,***
***குலம் கோள் தோகை***
***மகளிர் குழாத்தினால்,***
***வலம் கொள் வீதி***
***நெடு வழி மாற்றினாள்.***

***விலங்கி மெல்லியல்*** *- குறுக்கிட்டு (அப்பால் செல்ல வொட்டாமல் கட்டுப்படுத்துகின்ற) மென்மையான தன்மையையும்;* ***வெண்நகை வெள்வளை*** *- வெண் பற்களையும், வெள்ளைச் சங்கு வளையல்களை யும்;* ***இலங்கு நுண் இடை*** *- விளங்குகின்ற நுண்ணிய இடையையும்;* ***ஏந்து இள மென்முலை*** *- உயர்ந்த இளமையான மெல்லிய முலை களையுமுடைய;* ***குலம்கொள்*** *- சிறந்த குலத்தில் பிறந்த;* ***தோகை மக ளிர்*** *- மயில் போன்ற சாயலுள்ள பெண்களின்;* ***குழாத்தினால்*** *-*

*கூட்டத்தைக் கொண்டு;* ***வலம் கொள்வீதி*** *- மேன்மையான பெரிய அவ் வீதியின்;* ***நெடுவழி மாற்றினாள்*** *- வழியைத் (தாரை) தடுத்தாள்.*

*தாரை தன் தோழியர் கூட்டத்தோடு சென்று இலக்குவன் வந்து கொண்டிருந்த அவ் வீதியின் வழியைத் தடுத்தாள் என்பது.* *45*

***4314. வில்லும், வாளும், அணிதொறும் மின்னிட,***
***மெல் அரிக் குரல் மேகலை ஆர்த்து எழ,***
***பல் வகைப் புருவக் கொடி பம்பிட,***
***வல்லி ஆயம் வலத்தினில் வந்ததே.***

***அணிதொறும் -*** *அணிந்துள்ள அணிகலன்கள் தோறும்;* ***வில்லும் வாளும் மின்னிட -*** *வில்லும் வாளும் ஒளிவிடவும்;* ***மெல் அரிக் குரல் -*** *மெல்லிய பரல்களையுடைய காற்சிலம்புகளின் ஒலியும்;* ***மேகலை ஆர்த்து எழ -*** *இடையணியான மேகலை (பறையொலிபோல) ஆரவாரித்து எழவும்;* ***பல்வகைப் புருவக் கொடி -*** *பலவகைப்பட்ட புருவங்களாகிய கொடிகள்;* ***பம்பிட -*** *நிறைந்திருக்கவும்;* ***வல்லி ஆயம் -*** *மகளிர் கூட்டமாகிய சேனை;* ***வலத்தினில் வந்தது -*** *வலிமையோடு (இலக்குவனை) வளைத்துக் கொண்டது.*

*மகளிர் கூட்டம் இலக்குவனைச் சூழ்ந்து வழிமறித்ததை, ஒரு சேனை வந்து சூழ்ந்ததாக வருணித்தார். மகளிர் இடம் பெயர்ந்து செல்லும்போது அவர்களின் சிலம்பும் மேகலையுமாகிய அணிகள் ஒலிப்பதைப் போர்ப் பறைகளின் ஒலியாக உவமித்தார். அரி: சிலம்பின் உட்பரல். புருவக் கொடி - கொடி போன்ற புருவம். கொடி - புருவக்கொடியையும், போர்க் கொடியையும் குறித்தது. கொடி: படர்கொடியும் துவசமும். சிலேடையை அங்கமாகக் கொண்ட உருவக அணி. மெல்லரி - பண்புத் தொகையன்மொழி (சிலம்பு) வல்லி - (பெண்) உவமையாகுபெயர்.* *46*

*இலக்குவன் மகளிரைப் பார்க்க அஞ்சுதல்*

*ஆசிரிய விருத்தம்*

***4315. ஆர்க்கும் நூபுரங்கள் பேரி, அல்குல்***
***ஆம் தடந் தேர் சுற்ற,***
***வேற் கண் வில் புருவம***
***போர்ப்ப மெல்லியர் வளைந்தபோது,***
***பேர்க்க அருஞ் சீற்றம் பேர,***
***முகம் பெயர்ந்து ஒதுங்கிற்று அல்லால்,***
***பார்க்கவும் அஞ்சினான், அப்***
***பனையினும் பெரிய தோளன்.***

***ஆர்க்கும் நூபுரம் பேரி -*** *ஆரவாரிக்கின்ற காற் சிலம்புகள் பல வகைப் பேரிகைகளாக முழங்க;* ***அல்குல் ஆம் தடந்தேர் -*** *அல்குலாகிய பெரிய தேர்;* ***சுற்ற -*** *கவிந்து கொள்ள;* ***வேற்கண் -*** *கண்கள் வேற்*

*படைகளாகவும்;* ***வெம் புருவப் போர்வில் -*** *கொடிய புருவங்கள் போர் செய்யும் விற்படைகளாகவும் (அமைய);* ***மெல்லியர் வளைந்தபோது -*** *மகளிரது சேனை*

*சூழ்ந்துகொண்ட பொழுது;* ***அப் பனையினும் உயர்ந்த தோளான் -*** *பனையை விட நெடிய தோள்களையுடைய அந்த இலக்குவன்;* ***பேர்க்க அரும் -*** *(யாராலும்) மாற்றமுடியாத;* ***சீற்றம் பேர -*** *கோபம் தணிய;* ***முகம் பெயர்ந்து -*** *முகத்தை ஒரு புறமாகத் திருப்பிக் கொண்டு;* ***ஒதுங்கிற்று அல்லால் -*** *ஒதுங்கி நின்றதேயல்லாமல்;* ***பார்க்கவும் அஞ்சினான் -*** *(அப் பெண்களைக்) கண்ணால் பார்ப்பதற்கும் அச்சமுற்றான்.*

*மகளிர் நேர்பட்ட மாத்திரத்தில் இலக்குவனது முகம் சினம் நீங்கி இயல்பாக ஆனமை தோன்ற 'முகம் பெயர்ந்து' எனத் தன்வினையால் கூறினார். முதல் இரண்டடிகள் - உருவக அணி. 47*

*தாரை இலக்குவனை நோக்கிப் பேசுதல்*

***4316. தாமரை வதனம் சாய்த்து, தனு***
***நெடுந் தரையில் ஊன்றி,***
***மாமியர் குழுவின் வந்தான் ஆம்***
***என, மைந்தன் நிற்ப,***
***பூமியில் அணங்கு அனார்தம்***
***பொதுவிடைப்புகுந்து, பொன் - தோள்***
***தூமன நெடுங் கண் தாரை,***
***நடுங்குவாள், இனைய சொன்னாள்:***

***மைந்தன் -*** *இலக்குவன்;* ***தாமரை வதனம் சாய்த்து -*** *தாமரை போன்ற தனது முகத்தைச் சாய்த்துக் கொண்டு;* ***நெடுந் தன தரையின் -*** *கையில் தாங்கிய நெடிய வில்லை நிலத்திலே;* ***ஊன்றி -*** *ஊன்ற வைத்து;* ***மாமியர் குழுவின் -*** *மாமியர் கூட்டத்தின் நடுவே;* ***வந்தான் ஆம் என -*** *வந்த மருமகனைப் போல;* ***நிற்ப -*** *(கூச்சத்தோடு) நிற்க;* ***பொன் தோள் -*** *அழகிய தோள்களையும்;* ***தூ மனம் -*** *தூய்மையான மணத்தையும்;* ***நெடுங்கண் தாரை-*** *நீண்ட கண்களையுமுடைய தாரை;* ***பூமியில் அணங்கு அனார்தம்-*** *நிலவுலகிற்கு வந்த தேவமகளிர் போன்ற வானரப் பெண்களின்;* ***பொதுவிடைப் புகுந்து -*** *கூட்டத்திடையே புகுந்துசென்று;* ***நடுங்குவாள் இனைய சொன்னான் -*** *நடுங்கிக் கொண்டு இந்தச் சொற்களைச் சொல்லத் தொடங்கினாள்.*

*அன்னியன் எதிரில் வந்து நிற்பதற்குக் கூச்சப்பட்டு மாதர் கூட்டத்திடையே ஒதுங்கி நிற்பவளும், இலக்குவனோடு பேசுவதற்குக் கூசி உள்ளமும் உடலும் நடுங்குபவளுமான தாரையின் குணநலம் உணர்த்தப் பெற்றது. நடுங்குவாள்: முற்றெச்சம்; வினையாலணையும் பெயராக்கியும் பொருள்உரைக்கலாம்.*
*48*

***4317. 'அந்தம் இல் காலம் நோற்ற***
***ஆற்றல் உண்டாயின் அன்றி,***
***இந்திரன் முதலினோரால் எய்தல்***
***ஆம் இயல்பிற்று அன்றே?***
***மைந்த! நின் பாதம் கொண்டு எம்***
***மனை வரப் பெற்று, வாழ்ந்தேம்;***

***உய்ந்தனம்; வினையும் தீர்ந்தேம்; உறுதி***
***வேறு இதனின் உண்டோ?***

***மைந்த*** - *வீரனே;* ***அந்தமில் காலம் நோற்ற ஆற்றல்*** - *அளவில் லாத காலம் தவம் செய்த சிறப்பால் நாங்கள் பெற்ற பயனாகும் நீ வந்தது;* ***உண்டாயின் அன்றி*** - *அதுவல்லாமல்;* ***இந்திரன் முதலினோரால்*** - *இந்திரன் முதலானவர்களாலும்;* ***எய்தலாம் இயல்பிற்று அன்றே*** - *பெறத்தக்க தன்மையுடையதல்லவே; உனது வருகை (அவ்வாறு இருக்க);* ***நின் பாதம் கொண்டு*** - *உன் திருவடிகளை படிய;* ***எம் மனை வரப் பெற்று*** - *எங்கள் இல்லத்திற்கு நீ வந்ததால்;* ***வாழ்ந்தேம்*** - *(நாங்கள்)மேம்பட்டோம்; (ஆகவே)* ***வினையும்*** - *தீவினைகள் அனைத்தும்;* ***தீர்ந்தேம் உய்ந்தனம்*** - *விட்டு நீங்க உயர்கதி அடைந்தோம்;* ***இதனின் உறுதி*** - *இதைவிட (நாங்கள்) அடையக் கூடிய நற்பயன்;* ***வேறு உண்டோ*** - *வேறு உள்ளதோ? (இல்லை)*

*அளவற்ற காலம் தவம் செய்த சிறப்பால் அல்லாமல் உனது வருகை இந்திரன் முதலானவர்களும் அடையத்தகக தன்மையுடையதோ? அவ்வாறிருக்க நீ எம் மனைக்கு வரப் பெற்றது அளவில்லாத காலம் நாங்கள் தவம் செய்த பயனாகும். அதனால் நாங்கள் உயர்கதி அடைந்தோம் என்றாள் தாரை என்பது. நோற்றல்: தவம் புரிதல். பாதம் கொண்டு: 'கொண்டு' - மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு.*
*49*

***4318. 'வெய்தின் நீ வருதல் நோக்கி,***
***வெருவுறும் சேனை, வீர!***
***செய்திதான் உணர்கிலாது; திருவுளம்***
***தெரித்தி' என்றார்;***
***'ஐய! நீ ஆழி வேந்தன்***
***அடி இணை பிரிகலாதாய்;***
***எய்தியது என்னை?' என்றாள்,***
***இசையினும் இனிய சொல்லாள்.***

***இசையினும்*** - *இசையைக் காட்டிலும்;* ***இனிய சொல்லாள்*** - *இனிமையான சொற்களையுடைய தாரை;* ***வீர! நீ வெய்தின்*** - *வீரனே நீ சீற்றத்தோடு;* ***வருதல் நோக்கி*** - *வருவதைப் பார்த்து;* ***சேனை செய்தி தான் உணர்கிலாது*** - *(இந்த) வானர சேனை (நீ) வருகின்ற காரணத்தை (இன்னதென்று) அறியாமல்;* ***வெருவுறும்*** - *அஞ்சும்;* ***திருவுளம் தெரித்தி*** - *(அதன் அச்சம் நீக்குமாறு) உனது மனக் கருத்தை அறிந்து சொல்வாய்;* ***என்றார்*** - *என்று சொன்னார்கள்;* ***ஐய! ஆழி***

***வேந்தன்*** - *ஐயனே! ஆணைச் சக்கரத்தைச் செலுத்தும் மன்னனான இராமனின்;* ***அடி இணை*** - *திருவடிகளை;* ***பிரிகலாதாய் நீ*** - *எப் பொழுதும் பிரியாது உடன் தங்கியிருப்பவனாகிய நீ;* ***எய்தியது என்னை*** - *இங்குத் தனியே வந்த செயல் என்ன என்று கேட்டாள்.*

*'வீரனே! நீ கோபத்தோடு வருவதை அறிந்த காரணம் புரியாது வானரசேனை அஞ்சிக் கலங்கியது; இராமனை என்றும் பிரியாத நீ இன்று தனியே பிரிந்த வந்த காரணம் என்ன' என்று தாரை வினவினாள். 50*

***4319. 'ஆர் கொலோ உரை செய்தார்?' என்று***
***அருள் வர, சீற்றம் அஃக,***
***பார் குலாம் முழு வெண்திங்கள், பகல்***
***வந்த படிவம் போலும்***
***ஏர் குலாம் முகத்தினாளை, இறை***
***முகம் எடுத்து நோக்கி,***
***தார் குலாம் அலங்கல் மார்பன்,***
***தாயரை நினைந்து நைந்தான்.***

***தார்குலாம் -*** *மலர்களால் தொடுக்கப்பெற்ற;* ***அலங்கல் மார்பன் -*** *மாலையை அணிந்துள்ள மார்புடைய இலக்குவன்;* ***அருள் வர -*** *(அவ் வார்த்தையைக் கேட்ட அளவில்) கருணை தோன்ற;* ***சீற்றம் அஃக*** *- கோபம் குறைந்தவனாகி;* ***உரை செய்தார் -*** *(இவ் வார்த்தையை இங்கு)ச் சொன்னவர் யாரோ என்று அறியக் கருதி;* ***குலாம் முழு வெண் திங்கள் -*** *விளங்கும் வெண்மையான முழுநிலவு;* ***பகல் பார் வந்த -*** *பகல் வேளையில் பூமிக்கு வந்த;* ***படிவம் போலும் -*** *தோற்றத்தைப் போன்ற;* ***ஏர் குலாம் முகத்தினாளை -*** *அழகு விளங்கும் முகத்தையுடைய தாரையை;* ***இறை முகம் எடுத்து நோக்கி -*** *சற்றே தனது முகத்தைத் தூக்கி நிமிர்ந்து பார்த்து;* ***தாயரை நினைந்து -*** *சுமித்திரை முதலிய தாயரை நினைவில் கொண்டு;* ***நைந்தான் -*** *வருந்தினான்.*

*பேரழகு வாய்ந்தவளாக விளங்கி அரசனின் மனைவியாய் நெடுங்காலம் வாழ்ந்து பின்பு அம் மணவாளனை இழந்து கைம்பெண்ணாகிக் கண்டவர் இரங்கத் தக்க நிலைமையை அடைந்தது குறித்துத் தாரையைக் கண்டவுடன் தன் தாயர் நினைவிற்கு வந்தமையால் இலக்குவன் வருந்தினான் என்றார். பகலில் வந்த சந்திரன் போன்ற முகத்தை 'ஏர் குலாம் முகம்' என்று சிறப்பித்தது கருதத்தக்கது. இந்த (ஏர்) அழகு ஒழுக்கச் சீர்மையால் வந்தது. திங்கள் பகல் வந்த படிவம் போலும் - இல்பொருள்உவமையணி. 51*

***4320. மங்கல அணியை நீக்கி, மணி***
***அணி துறந்து, வாசக்***
***கொங்கு அலர் கோதை மாற்றி,***
***குங்குமம் சாந்தம் கொட்டாப்***
***பொங்கு வெம் முலைகள், பூகக்***
***கழுத்தோடு மறையப் போர்த்த***
***நங்கையைக் கண்ட வள்ளல்,***
***நயனங்கள் பனிப்ப நைந்தான். ****

***மங்கல அணியை நீக்கி -*** *தாலியை அணியாமல் விடுத்து;* ***மணி அணி துறந்து -*** *இரத்தின மணிகள் போன்ற மற்றைய அணிகலன் களையும் நீக்கிவிட்டு;* ***வாசக் கொங்கு அலர் -*** *மணமிக்க தேன் பெருகுகின்ற மலர்களின்;* ***கோதை மாற்றி -*** *மாலை சூடுவதையும் விட்டு;* ***குங்குமம் சாந்தம் கொட்டா -*** *குங்குமப் பூவின் குழம்பையும், சந்தனக் கலவையையும் பூசாத;* ***பொங்கு வெம் முலைகள் -*** *பருத்துள்ள வெம்மையான*

*முலைகள்;* ***பூகக் கழுத்தோடு மறையப்போர்த்து -*** *பாக்குமரம் போன்ற கழுத்துடன் மறையும்படி (மேலாடையால்) நன்றாகப் போர்த்துள்ள;* ***நங்கையைக் கண்ட வள்ளல் -*** *அத் தாரையைப் பார்த்த அருள்வள்ளலான இலக்குவன்;* ***நயனங்கள் பனிப்ப -*** *(தாரை யின் தோற்றம் கண்டதாலும், தன் தாயரை நினைந்ததாலும்) தன் கண்களில் நீர் துளிக்க;* ***நைந்தான் -*** *வருந்தினான்.*

*தாரையின் கைம்மைக் கோலம் இங்கு விளக்கப் பெறுகின்றது. இலக்குவன் கண்ணீர் மல்கி நைந்துருகுவதற்குக் காரணம் தன்னுடைய தாயரும் இப்படித்தானே கைம்மைக் கோலம் பூண்டிருப்பர் என்ற நினைவினால். மங்கலவணி. 'தாலி'; 'ஈகையரிய இழையணி மகளிர்' - புறம்.127 52*

*இலக்குவன் தாரையிடம் உரைத்தது*

***4321. 'இனையர் ஆம், என்னை ஈன்ற***
***இருவரும்' என்ன வந்த***
***நினைவினால் அயர்ப்புச் சென்ற***
***நெஞ்சினன், நெடிது நின்றான்;***
***'வினவினாட்கு எதிர் ஓர் மாற்றம்***
***விளம்பவும் வேண்டும்' என்று, அப்***
***புனை குழலாட்கு வந்த***
***காரியம் புகல்வது ஆனான்;***

***என்னை ஈன்ற இருவரும் -*** *என்னைப் பெற்றெடுத்த தாய்மார் இருவரும்;* ***இனையர் என்ன -*** *இத் தன்மையராகவே இருப்பார்கள் என்று;* ***வந்த நினைவினால் -*** *மனத்தில் தோன்றிய நினைவால்;* ***அயர்ப்புச் சென்ற-*** *வாட்டம் மிக்க;* ***நெஞ்சினன் -*** *மனத்தையுடைய வனாய்;* ***நெடிது நின்றான்-*** *நீண்ட நேரம் ஒன்றும் தோன்றாமல் அந்த இலக்குவன் திகைத்து நின்றான்;* ***வினவினாட்கு எதிர் -*** *(தன்னிடம்) கேள்வி கேட்டவளுக்கு மறுமொழியாக;* ***ஓர் மாற்றம் விளம்பவும் வேண்டும் -*** *ஒரு வார்த்தை விடையாகச்சொல்லவும் வேண்டும்;* ***என்று -*** *என்று கருதி;* ***அப் புனை குழலாட்கு -*** *அழகிய கூந்தலையுடைய*

*அத் தாரையை நோக்கி;* ***வந்த காரியம் -*** *வந்த செயல் இன்ன தென்று;* ***புகல்வது ஆனான் -*** *சொல்லலானான்.*

*இலக்குவன் தன் தாயரைப் பற்றிய நினைவால் சிறிது நேரம் ஒன்றும் பேசாமல் இருந்தான்; பின்பு தன்னை வினவியவளுக்கு விடையளிக்காமல் இருப்பது தகுதியாகாது என்று தான் வந்த செயலைக் கூற முற்பட்டான் என்பது. தாயர் இருவர்; தன் தாயான சுமித்திரையும், இராமன் தாயான கோசலையும்.*
*53*

***4322. ' "சேனையும் யானும் தேடித்***
***தேவியைத் தருவென்" என்று,***
***மானவற்கு உரைத்த மாற்றம்***
***மறந்தனன், அருக்கன் மைந்தன்;***

***''ஆனவன் அமைதி வல்லை அறி''***
***என, அருளின் வந்தேன்;***
***மேல் நிலை அனையான் செய்கை***
***விளைந்தவா விளம்புக!' என்றான்.***

***சேனையும் யானும்*** - *என் சேனையும் நானும்;* ***தேவியைத் தேடித் தருவென்*** - *சீதையைத் தேடிக் கொண்டு சேர்ப்பேன்;* ***என்று மான வற்கு*** - *என்று மனுகுல மன்னனான இராமனுக்கு;* ***அருக்கன் மைந்தன்*** - *சூரியன் மகனான சுக்கிரீவன்;* ***உரைத்த மாற்றம் மறந்தனன்*** - *தான் சொன்ன வார்த்தையை மறந்துவிட்டான்;* ***ஆனவன் அமைதி*** - *அத்தகைய சுக்கிரீவனின் நிலைமையை;* ***வல்லை அறி என*** - *விரைவில் சென்று நீ அறிந்து வருவாயாக என்று (இராமன் என்னிடம்) சொல்ல;* ***அருளின் வந்தேன்*** - *அந்தக் கட்டளைப்படி நான் இங்கே வந்தேன்;* ***மேல்நிலை அனையான்*** - *மேன்மையான அரசாட்சியைப் பெற்ற அச் சுக்கிரீவனது;* ***செய்கை விளைந்தவா*** - *செயல்முறை நிகழ்ந்த விதத்தை;* ***விளம்புக என்றான்*** - *சொல்லுக என்று (தாரையைப் பார்த்து) இலக்குவன் கூறினான்.*

*சுக்கிரீவன் இராமனிடம் சொன்னபடி வராததால் அவனது செயலை அரிய வந்தேன்; அவனது செயல்தான் என்ன என்று இலக்குவன் தாரையை வினவினான் என்பது. விளைந்தவாறு என்பது ஈறுகெட்டு நின்றது.* *54*

*தாரையின் மறுமொழி*

***4323. சீறுவாய்அல்லை - ஐய! -***
***சிறியவர் தீமை செய்தால்,***
***ஆறுவாய்; நீ அலால், மற்று***
***ஆர் உளர்? அயர்ந்தான் அல்லன்;***
***வேறு வேறு உலகம் எங்கும்***
***தூதரை விடுத்து, அவ் எல்லை***
***ஊறுமா நோக்கித் தாழ்த்தான்; உதவி***
***மாறு உதவி உண்டோ?***

***ஐய! சீறுவாய் அல்லை*** - *ஐயனே! கோபப்படாமல் இருப்பாயாக;* ***சிறியவர் தீமை செய்தால்*** - *(அறிவு முதலியவற்றால் சிறியவர்கள்) தீமைகள் செய்தால்;* ***ஆறுவாய்*** - *பெரியவனான நீ பொறுத்துக் கோபத்தைத் தணித்துக் கொள்வாயாக;* ***நீ அலால் மற்று ஆர் உளர்*** - *(அவ்வாறு இருப்பதற்கு) உன்னைத் தவிர வேறு யார்தான் இருக்கின்றார்கள்?* ***அயர்ந்தான் அல்லன்*** - *சுக்கிரீவன் தான் சொன்ன சொல்லில் தளர்ந்து விடவில்லை;* ***உலகம் எங்கும்*** - *(வானர சேனை களைத் திரட்ட) உலகத்தின் எல்லா இடங்களிலும்;* ***வேறு வேறு தூதரை*** - *தனித் தனியே வானரத் தூதர்களை;* ***விடுத்து*** - *அனுப்பிவைத்து;* ***அவ் எல்லை*** - *அந்த இடங்களிலிருந்து;* ***ஊறுமா நோக்கி*** - *அச் சேனைகள் வந்து சேர்வதை எதிர்பார்த்துக்கொண்டு;* ***தாழ்த்தான்*** - *தாமதித்திருக்கின்றான்;* ***உதவி மாறு உதவி*** - *(நீங்கள் அச் சுக்கிரீ வனுக்குச்) செய்த உதவிக்குக் கைம்மாறு ஒன்று;* ***உண்டோ*** - *செய்வ தற்கு உள்ளதோ (இல்லை).*

*சிறியவர் தீமை செய்தால் அதைப் பொறுப்பது பெரியவர் கடனாகும். சுக்கிரீவன் செல்வ வாழ்க்கை முதலியவற்றால் மயங்கியுள்ளான் என்று கருதுமாறு இருந்தாலும், அவன் உங்களது உதவியை மறக்கவில்லை; அங்கங்கே தூதரை அனுப்பி வானர சேனையின் வருகையை எதிர்பார்த்துள்ளான்; அதனால் தாமதித்து இருக்கின்றான் என்று தாரை சொன்னாள். உதவி மாறு உதவி: 'செய்யா மற் செய்த உதவி', 'காலத்தினாற் செய்த நன்றி' ஊறு: உறுதல் - முன்னிலை நீண்டது. ஊறுமா றுகர ஈறு குறைந்தது. 55*

***4324. 'ஆயிர கோடி தூதர், அரிக்***
***கணம் அழைக்க, ஆணை***
***போயினர்'; புகுதும் நாளும்***
***புகுந்தது; புகல் புக்கோர்க்குத்***
***தாயினும் நல்ல நீரே***
***தணிதிரால்; தருமம் அஃதால்;***
***தீயன செய்யார் ஆயின், யாவரே***
***செறுநர் ஆவார்?***

***ஆயிர கோடி தூதர் -** ஆயிரங் கோடியளவுள்ள எண்ணற்ற தூதர்கள்; **அரிக் கணம் அழைப்ப -** வானரங்களின் கூட்டத்தை அழைத்து வரும் பொருட்டு; **ஆணை போயினர் -** (சுக்கிரீவன்) கட்ட ளைப்படி (உலகெங்கும்) போயிருக்கின்றார்கள்; **புகுதும் நாளும் புகுந்தது -** (அவ் வானர சேனையும்) வந்துசேர வேண்டிய காலமும் நெருங்கியது; **புகல் புக்கோர்க்கு -** சரணம் அடைந்தவர்களுக்கு; **தாயினும் இனிய நீரே -** பெற்ற தாயைக் காட்டிலும் அன்பு காட்டும் நீங்களே; **தணிதிர் -** கோபத்தைத் தணிப்பீராக; **அஃது தருமம் -** அவ்வாறு*

*பொறுத்தருளுவதே தருமமாகும்; **தீயன செய்யாராயின் -** ஒருவர் தீய செயல்களைச் செய்யவில்லையானால்; **செறுநர் ஆவார் யாவரே -** தண்டிப்பதற்குரியவர் எவரோ? ஒருவரும் இல்லையென்றபடி.*

*ஆல் : இரண்டும் அசை. சுக்கிரீவன் வானர சேனையை வரவழைக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துள்ளான்; அச்சேனை வருங் காலமும் நெருங்கிவிட்டது; ஒருகால் அவன் செய்ந்நன்றி மறந்து விட்டான் என்று தோன்றினாலும், உம்மைச் சரணடைந்தவர்க்குத் தாயினும் இனிய நீங்கள் அன்னவனைப் பொறுத் தருளுவவத தருமம் என்றாள்தாரை. 56*

***4325. 'அடைந்தவர்க்கு அபயம் நீவிர்***
***அருளிய அளவில் செல்வம்***
***தொடர்ந்து, நும் பணியின் தீர்ந்தால்,***
***அதுவும் நும் தொழிலே அன்றோ?***
***மடந்தை தன் பொருட்டால் வந்த***
***வாள் அமர்க் களத்து மாண்டு***
***கிடந்திலர் என்னின், பின்னை,***
***நிற்குமோ கேண்மை அம்மா?'***

***நீவிர்*** *- நீங்கள்;* ***அடைந்தவர்க்கு அபயம் அருகிய*** *- உங்களைச் சரணம் அடைந்தவர்களுக்கு அபயம் அருளிக் கொடுத்த;* ***அளவு இல் செல்வம்*** *- அளவில்லாத செல்வம்;* ***தொடர்ந்து*** *- சேர்ந்தமையால் (செருக்குற்று);* ***நும் பணியின் தீர்ந்தால்*** *- உங்களுக்குச் செய்யும் பணியில் இருந்து விலகினால்;* ***அதுவும் நும் தொழிலே அன்றோ*** *- அதுவும் உங்களுடைய செயலாகக் கொள்ளத்தக்கதல்லவோ? (தவிர);* ***மடந்தை தன் பொருட்டால்*** *- பெண்ணின் (சீதை) காரணமாக;* ***வந்த வாள் அமர்க் களத்து*** *- நேரும் கொடிய போர்க் களத்தில்;* ***மாண்டு கிடந்திலர் என்னின்*** *- (நண்பர்க்காகச் சென்று போர் செய்து) இறந்துகிடவாராயினும்;* ***பின்னும்*** *- அதன்பின்பும்;* ***கேண்மை நிற்குமே*** *- (இரு சாரார்க்கும்) நட்பு நிலை பெறுமோ? (பெறாது)*

*ஆல், அம்மா: ஈற்றசைகள். நீங்கள் அருள் கொண்டு தந்த வரம்பற்ற செல்வத்தால் களித்து உங்கள் கட்டளையிலிருந்து தவறினான் என்றே கொண்டாலும் அந்த நிலையும் நீங்கள் அருளிய செல்வத்தால் விளைந்த தருக்குத்தானே? என்று நாகரிகமாக நயவுரை பகர்ந்தாள் தாரை. சுக்கிரீவனுக்கு ஆட்சிச் செல்வத்தோடு மனைவியையும் மீட்டுத் தந்த இராமனுக்கு, அவன் சீதையை மீட்கும் போரில் பக்கத்தே இருந்து உயிரையும் கொடுக்குமாறு போர் செய்தால் நட்பை நிறைவேற்றியதாகும்; இல்லாவிட்டால் உங்களுக்கும் சுக்கிரீவனுக்கும் நட்பு நிற்குமோ என்று தாரை இலக்குவனை நோக்கி வினவினாள் என்பது. பணியில் தீர்தல் - கட்டளையைப் புறக்கணித்து மீறுதல்.* *57*

***4326. 'செம்மை சேர் உள்ளத்தீர்கள் செய்த***
***பேர் உதவி தீரா;***
***வெம்மை சேர் பகையும்***
***மாற்றி, அரசு வீற்றிருக்கவீட்டீர்;***
***உம்மையே இகழ்வர் என்னின்,***
***எளிமையாய் ஒழிவது ஒன்றோ?***
***இம்மையே வறுமை எய்தி,***
***இருமையும் இழப்பர் அன்றே?'***

***செம்மை சேர் உள்ளத்தீர்கள்*** *- நேர்மையான சிறந்த மனத்தை யுடையவர்களான நீங்கள்;* ***செய்த பேருதவி*** *- (சுக்கிரீவனுக்குச்) செய்த பெரிய உதவி;* ***தீரா*** *- (என்றென்றும்) அழியாமல் இருக்கும்படி;* ***வெம்மைசேர் பகையும் மாற்றி*** *- மிகக் கடுமையான பகைவனையும் அழித்து;* ***அரசு வீற்றிருக்கவிட்டீர்*** *- அரசாட்சியைப் பெற்றுச் சிறப்பாக அமரும்படி செய்துவிட்டீர்கள்;* ***உம்மையே*** *- (உங்களால் உதவி பெற்றவர்) உங்களையே;* ***இகழ்வர் என்னின்*** *- புறக்கணிப்பார்களானால்;* ***எளிமையாய்*** *- இழிந்த குணத்தோடு பொருந்தி;* ***ஒழிவது ஒன்றோ*** *- பெருமை குலைவது மாத்திரமோ;* ***இம்மையே வறுமை எய்தி*** *- இப்பிறப்பிலேயே வறுமையடைந்து;* ***இருமையும்*** *- இம்மை மறுமைப் பயன்களாகிய இரண்டையும்;* ***இழப்பர் அன்றே*** *- இழந்துவிடு வார்களன்றோ?*

*செய்த நன்றியை மறந்தவர் இம்மையில் செல்வமும் புகழும் அழிந்து, மறுமையில் நற்கதி பெறாது நரகத்தையும் அடைவர் என்பது. பகை - பண்பாகுபெயர். (இம்மையே - தேற்றேகாரம். வீறு - வேறொருவர்க்கு இல்லாத தனிச் சிறப்பு.*
*58*

***4327. 'ஆண்டு போர் வாலி ஆற்றல்***
***மாற்றியது அம்பு ஒன்று ஆயின்,***
***வேண்டுமோ, துணையும் நும்பால்?***
***வில்லினும் மிக்கது உண்டோ?***
***தேண்டுவார்த் தேடுகின்றீர், தேவியை;***
***அதனைச் செவ்வே***
***பூண்டு நின்று உய்தற்பாலார்,***
***நும் கழல் புகுந்துளோரும்.'***

***ஆண்டு போர் வாலி** - அப்பொழுது போரில் வல்ல வாலியின்; **ஆற்றல் மாற்றியது** - வலிமையை வதைத்தது (வாலியைக் கொன்றது) **அம்பு ஒன்று** - (நீங்கள் ஏவிய) பாணம் ஒன்றே; **ஆயின் துணைவர் வேண்டுமோ** - என்றால், (பகைவரையழிக்க) உங்களுக்கு வேறு துணை வேண்டுமோ? **நும்பால் வில்லினும்** - உங்களிடமுள்ள வில்லைக் காட்டிலும்; **மிக்கது உண்டோ** - சிறந்த ஒரு துணையும் உள்ளதோ? **தேவியைத் தேண்டுவார்** - சீதை இருக்கும் இடத்தைத் தேடிக் காண்பாரை மட்டும்; **தேடுகின்றீர்** - நாடுகின்றீர் (அவ்வளவுதான்); **நும் கழல்** - உங்கள் திருவடிகளை; **புகுந்துளோரும்** - சரணடைந்துள்ளவரான சுக்கிரீவன்*

*முதலானோரும்; **அதனைச் செவ்வே பூண்டு நின்று** - அப் பணியை நல்ல முறையில் ஏற்றுக் கொண்டு செம்மையாகச் செய்து; **உய்தற் பாலார்** - ஈடேறக் கடமைப்பட்டவராவார்.*

*உங்களுக்குச் சீதையுள்ள இடத்தைத் தேடியறியத் துணை வேண்டுமெயல்லாமல் பகை வெல்லத் துணை தேவையில்லை. ஆகவே, அப் பணியைச் செய்து முடிக்கக் கடமைப்பட்டவர் சுக்கிரீவன் முதலியோரே என்றாள் தாரை. தேண்டுவார் - தேடுதல் விரித்தல்விகாரம். 59*

இலக்குவன்பால் அனுமன் வருதல்

***4328. என்று அவள் உரைத்த மாற்றம்***
***யாவையும் இனிது கேட்டு,***
***நன்று உணர் கேள்வியாளன்,***
***அருள்வர, நாண் உட்கொண்டான்,***
***நின்றனன்; நிற்றலொடும், 'நீத்தனன்***
***முனிவு' என்று உன்னி,***
***வன் துணை வயிரத் திண்***
***தோள் மாருதி மருங்கின் வந்தான்.***

***என்று அவள் உரைத்த** - இவ்வாறு அத்தாரை சொன்ன; **மாற்றம் யாவையும்** - வார்த்தைகளையெல்லாம்; **இனிது கேட்டு** - கவனமாகக் கேட்டு; **நன்று உணர்** - தெளிவாக உணர்ந்த; **கேள்வியாளன்** - (வேதக்) கேள்வியறிவுடைய இலக்குவன்; **அருள்வர** - கருணை மேலிட; **நாண் உள்கொண்டான் நின்றனன்** - வெட்கத்தை மனத்தில் கொண்டவனாய் நின்றான்; **நிற்றலோடும் 'முனிவு நீத்தனன்'** - (அவ்வாறு)*

*நின்ற அளவில் 'இவன் கோபத்தை நீக்கிவிட்டான்'; **என்று உன்னா -** என்று கருதி; **வன்துணை -** வலிய போர்த்துணையாகவுள்ள; **வயிரத் திண் தோள் மாருதி -** உறுதியும் பலமும் கொண்ட தோள்களையுடைய அனுமன்; **மருங்கின் -** (இலக்குவன்) அருகிலே; **வந்தான் -** வந்து சேர்ந்தான்.*

*மாற்றம் -சொல்* *60*

*இலக்குவன் வினாவும் அனுமன் விடையும்*

***4329. வந்து அடி வணங்கி நின்ற***
***மாருதி வதனம் நோக்கி,***
***'அந்தம் இல் கேள்வி நீயும்***
***அயர்த்தனை ஆகும் அன்றே,***
***முந்திய செய்கை?' என்றான்.***
***முனிவினும் முளைக்கும் அன்பான்;***
***'எந்தை கேட்டு அருளுக!' என்ன***
***இயம்பினன், இயம்ப வல்லான்:***

*__முனிவினும் முளைக்கும் அன்பான் -__ கோபப்பட்ட நிலையிலும் அன்பு தோன்றும் இயல்பு கொண்ட இலக்குவன்; **வந்து அடிவணங்கி நின்ற -** அருகிலே வந்து தன் திருவடிகளை வணங்கி நின்ற; **மாருதி வதனம் -** அனுமனின் முகத்தை; **நோக்கி -** பார்த்து; **அந்தம் இல் கேள்வி -** அளவில்லாத கேள்வி ஞானமுடைய; **நீயும் -** நீயும்; **முந்தின செய்கை -** முன்பு நடந்தவற்றை; **அயர்த்தனை அன்றோ -** மறந்துவிட்டாயல்லவா; **என்றான் -** என்று கேட்டான்; **இயம்ப வல்லான் -** (அது கேட்டு) சொல்லின் செல்வனான அனுமன்; **எந்தை -** எம் தலைவனே; **கேட்டு அருளுக என்னா-** (நான் சொல்வதைக்) கேட்டருளுக என்று சொல்லி; **இயம்பினன் -** (மேலும்)கூறலானான்.*

*முந்தின செய்கை - மழைக் காலம் கழிந்தவுடன் சுக்கிரீவன் சேனையோடு இராமனுக்கு உதவ வரவேண்டும் என்பது.* *61*

***4330. 'சிதைவு அகல் காதல் தாயை,***
***தந்தையை, குருவை, தெய்வப்***
***பதவி அந்தணரை, ஆவை,***
***பாலரை, பாவைமாரை,***
***வதை புரிகுநர்க்கும் உண்டாம் மாற்றல்***
***ஆம் ஆற்றல்; மாயா***
***உதவி கொன்றார்க்கு ஒன்றானும்***
***ஒழிக்கலாம் உபாயம் உண்டோ?'***

*__சிதைவு அகல் -__ கேடு நீங்கிய; **காதல் தாயை -** அன்புடைய தாயையும்; **தந்தையை, குருவை -** தந்தையையும் குருவையும்; **தெய்வப் பதவி அந்தணரை -** தெய்வத்தின் இடத்திலுள்ள அந்தணர்களையும்; **ஆவை, பாலரை -** பசுக்களையும் குழந்தைகளையும்; **பாவைமாரை -** மகளிரையும்; **வதை புரிகுநர்க்கும் -** கொலை செய்தவர்களுக்கும்; **மாற்றலாம் ஆற்றல் -** (அந்தப் பாவங்களை) நீக்குவதற்குரிய வழிகள்; **உண்டாம் -***

*உள்ளதாம்;* ***மாயா உதவி -*** *(ஆனால்) அழியாத பேருதவியை;* ***கொன்றார்க்கு -*** *மறந்தவர்களுக்கோ;* ***ஒழிக்கலாம் உபாயம் -*** *(அப் பாவத்தைப்) போக்குவதற்குரிய வழி;* ***ஒன்றானும் உண்டோ -*** *ஒன்றாவது உண்டோ? (இல்லை).*

*தாய், தந்தை, குரு, அந்தணர், பசு, குழந்தை, பெண் ஆகியவர்களைக் கொல்லுதல் கொடும் பாதகச் செயலாகும். இருப்பினும் அப்பாவங்களைப் போக்குவதற்குரிய கழுவாய் உண்டு. ஆனால், செந்நன்றி மறத்தலுக்கோ அத்தகைய கழுவாய் இல்லை என்பதாம். 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்றை மகற்கு' (குறள் 110). 'ஒருவன், செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லென அறம் பாடிற்றே' (புறம் 34) என்ற வாக்குகளை ஒப்பிடுக. மாயா உதவி - பயனழியாத உபகாரம், மறக்கத் தகாத நன்றி.* *62*

***4331. 'ஐய! நும்மோடும், எங்கள்அரிக்***
***குலத்து அரசனோடும்,***
***மெய் உறு கேண்மை ஆகி,***
***மேலை நாள் விளைவது ஆன***
***செய்கை, என் செய்கை அன்றோ?***
***அன்னது சிதையும் ஆயின்,***
***உய் வகை எவர்க்கும் உண்டோ?***
***உணர்வு மாசுண்டது அன்றோ?'***

***ஐய -*** *ஐயாவே;* ***நும்மோடும் -*** *உங்களுக்கும்;* ***எங்கள் அரிக் குலத்து அரசனோடும் -*** *வானரக் கூட்டமாகிய எங்கள் அரசனாகிய சுக்கிரீவனுக்கும்;* ***மெய் உறு கேண்மை -*** *(ஒருவரோடு ஒருவர்க்கு) உண்மையான நட்பு;* ***ஆக-*** *உண்டாகும்படி;* ***மேலைநாள் விளைவதாய -*** *முன்னாளில் உண்டான;* ***செய்கை என் செய்கை அன்றோ -*** *செயல் எனது செயல் அல்லவா?* ***அன்னது -*** *அந்த நட்புத் தருமம்;* ***சிதையுமா யின் -*** *அழியுமானால்;* ***உய்வகை எவர்க்கும் உண்டோ? -*** *(அத் தீவினை யிலிருந்து) தப்பும் வழி இந்த உலகில் யாருக்குத்தான் உண்டு (இல்லை);* ***உணர்வு -*** *(அதுவல்லாமல்) எங்கள் அறிவு யாவும்;* ***மாசுண்டது அன்றோ -*** *குற்றம் உடையதாகும் அல்லவா?*

*உங்கள் உதவியைப் பெற்ற நாங்கள் அறிவு கெட்டு இழிவுடைவதா என்றான் அனுமன். மேலைநாள்: முன்னாள்.* *63*

***4332. 'தேவரும், தவமும், செய்யும் நல்***
***அறத் திறமும், மற்றும்***
***யாவையும், நீரே என்பது,***
***என்வயின் கிடந்தது; எந்தாய்!***
***ஆவது நிற்க, சேரும் அரண் உண்டோ?***
***அருள் உண்டு அன்றே***
***மூவகை உலகும் காக்கும் மொய்ம்பினீர்! -***
***முனிவு உண்டானால்?'***

***எந்தாய்* - எம் தலைவனே! *தவமும்* - (முற்பிறப்பிலும் இப் பிறப்பிலும் நாங்கள் செய்த) தவமும்; *செய்யும் நல்லறத் திறமும்* - (நாங்கள்) செய்த சிறந்த தருமச் செயல்களும்; *தேவரும் மற்றும் யாவை யும்* - தேவர்களுள் மற்றுள்ள பொருள்களும்; *நீரே என்பது* - (எங் களுக்கு) நீங்களே என்னும் கருத்து; *என்வயின் கிடந்தது* - என்னிடம் பதிந்துள்ளது; *ஆவது நிற்க* - அது அப்படியே இருக்கட்டும்; *மூவகை உலகும்* - மூன்று வகையான உலகங்களையும்; *காக்கும் மொய்ம்பினீர்* - பாதுகாக்கும் ஆற்றல் உடையவரே!; *முனிவு உண்டானால்* - (உங்களுக்கு) எங்கள் மேல் சீற்றம் உண்டாகுமானால்; *சேரும் அரண்* - (நாங்கள் தப்பிச்சென்று) சேர்ந்து வாழும் பாதுகாவல்; *உண்டோ* - உள்ளதோ (இல்லை); *அருள் உண்டு அன்றே* - (அதற்கும்) உங்களது கருணையே கதியாக உள்ளதன்றோ?***

*உங்களோடு மாறுபட்டவர்க்கும் உங்கள் கருணையேயல்லாமல் கதி வேறில்லை என்றான் அனுமன். மொய்ம்பு: வலிமை, தோள் 64*

***4333. 'மறந்திலன், கவியின் வேந்தன்;<br>வயப் படை வருவிப்பாரைத்<br>திறம் திறம் ஏவி, அன்னார்<br>சேர்வது பார்த்துத் தாழ்த்தான்;<br>அறம் துணை நுமக்கு உற்றான் தன்<br>வாய்மையை அழிக்கும் ஆயின்,<br>பிறந்திலன் அன்றோ? ஒன்றோ?<br>நரகமும் பிழைப்பது அன்றால்.***

***கவியின் வேந்தன்* - வானரங்களுக்கு அரசனான சுக்கிரீவன்; *மறந்திலன்* - (உங்களது ஆணையை) மறக்கவில்லை; *வயப் படை வரு விப்பாரை* - வலிமையுள்ள வானரப் படைகளை அழைத்து வரும் தூது வர்களை; *திறம் திறம் ஏவி* - தொகுதி தொகுதியாக இடமெங்கும் அனுப்பி; *அன்னார் சேர்வது* - அவ் வானர வீரர்கள் வந்து சேர்வதை; *பார்த்துத் தாழ்ந்தான்* - எதிர்பார்த்துக் கொண்டிருப்பதால் சிறிது தாமதித்தாள்; *அறம் துணை நுமக்கு உற்றான்* - (அதுவல்லாமல்) தருமத்திற்குத் துணையாகவுள்ள உங்களை அடைந்த சுக்கிரீவன்; *தன் வாய்மையை அழிக்கும் ஆயின்* - தன் சத்தியநெறியை அழிப்பானாயின்; *பிறந்திலன் அன்றே* - (சுக்கிரீவன் இவ் வுலகில் பிறந்தும்) பிறவாதவனே ஆவான்; *ஒன்றோ* - இது மாத்திரமோ? *நரகமும்* - (அவனுக்கு மறுமையில்) நரகமும்; *பிழைப்பது அன்று* - தவறாது.***

*ஆல்: அசை. 'நீங்கள் தருமத்தைக் காப்பவர்கள். அத்தகைய உங்களிடம் சுக்கிரீவன் உறுதியாகச் சொன்ன சொல் தவறுவானானால் அவனது பிறவி பயனுள்ளதாகாது. அது மட்டுமல்லாமல் அவன் தவறாமல் நரகம் அடைவான்' என்று அனுமன் கூறினான் என்பது. பிறப்பின் பயன் சத்தியம் தவறாமல் ஆன்றோர்க்குத் துணை செய்வதான அறம் புரிவதே என்பது இங்கு வற்புறுத்தப்படுகிறது. 65*

***4334. 'உதவாமல் ஒருவன் செய்த<br>உதவிக்குக் கைம்மாறாக,<br>மத யானை அனைய மைந்த!<br>மற்றும் உண்டாக வற்றோ -***

***சிதையாத செருவில் அன்னான் முன்***
***சென்று, செறுநர் மார்பில்***
***உதையானேல், உதையுண்டு ஆவி***
***உலவானேல், உலகில் மன்னோ?'***

***மதயானை அனைய மைந்த*** - *மதங்கொண்ட யானையைப் போன்ற வீரனே!* ***உதவாமல் ஒருவன் செய்த*** - *(தான் ஒருவனுக்கு) முன்பு எந்த உதவியும் செய்யாமலிருக்க(த் தனக்கு) அவன் செய்த;* ***உதவிக்குக் கைம்மாறு ஆக*** - *உதவிக்கு உதவியாக;* ***சிதையாத செருவில்*** - *கெடுதல் இல்லாத போரில்;* ***அன்னான்முன் சென்று*** - *(அவனுக்குத் துணையாக) முன்னே சென்று;* ***செறுநர் மார்பில்*** - *(அவனுடைய) பகைவர்களின் மார்பில்;* ***உதையானேல்*** - *படைக்கலங்களைச் செலுத் தவில்லையென்றால்;* ***உதையுண்டு*** - *(அப் பகைவரின் படைக்கருவி களால் தான்) அடிபட்டு;* ***ஆவி உலவானேல்*** - *உயிரைப் போர்க்கவில் லையென்றால்;* ***உலகில் மற்றும்*** - *உலகத்தில் வேறு கைம்மாறு;* ***உண் டாகவற்றோ*** - *என்ன உள்ளது? (இல்லை).*

*உதவி செய்தவனுக்காக ஒருவன் போர்க்களம் சென்று அவன் பகைவரை அழிக்கவேண்டும். அவ்வாறு பொருது அழிக்க முடியாவிட்டால் அப் பகைவரின் கையால் தன் உயிரைப் போக்கிக் கொள்ள வேண்டும்; இவை ஒருவாறு ஈடாகலாம். இவையல்லாமல் உலகில் வேறு கைம்மாறு என்பது வேறு என்ன உள்ளது? ஒப்புமை: 'செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றல் அரிது' (குறள்:101) உதைத்தல்: அம்பைச் செலுத்துதல். 66*

***4335. 'ஈண்டு, இனி, நிற்றல் என்பது***
***இனியது ஓர் இயல்பிற்று அன்றால்;***
***வேண்டலர் அறிவரேனும், கேண்மை***
***தீர் வினையிற்ற ஆமால்:***
***ஆண் தகை ஆளி மொய்ம்பின்***
***ஐய! நீர் அளித்த செல்வம்***
***காண்டியால், உன்முன் வந்த***
***கவிக்குலக் கோனொடு' என்றான்.***

***ஆண்தகை*** - *ஆடவருள் சிறந்த;* ***ஆளி மொய்ம்பின் ஐய*** - *சிங்கம் போன்ற வலிமையோடு கூடிய தலைவனே!* ***ஈண்டு இனி*** - *இந்த இடத்தில் இப்போது;* ***நிற்றல் என்பது*** - *(மாறுபாடு கொண்டவன் போல) நிற்பது;* ***இனியது ஓர் இயல்பிற்று அன்று*** - *நன்மை தரும் ஒரு தன்மையுடையதாக ஆகாது;* ***வேண்டலர் அறிவரேல்***- *பகைவர் அறிவாரானால்;* ***நும் கேண்மை***- *உமது நட்பு;* ***தீர் வினையிற்ற ஆம்*** - *கெடுவதற்கான செயலாய் முடியும்;* ***நீர் அளித்த செல்வம்*** - *(வாலியைக் கொன்று) நீங்கள் தந்த செல்வத்தையும்;* ***உன்முன் வந்த*** - *உனக்கு முன்பு பிறந்தவனான;* ***கவிக் குலக் கோனொடு*** - *வானர குல மன்னவனாகிய சுக்கிரீவனையும்;* ***காண்டி*** - *(நீ) உள்ளே வந்து காண்பாயாகா;* ***என்றான்*** - *என்று அனுமன் கூறினான்.*

*ஓர்: அசை. 'வானரங்கள் வாயிலையடைத்துக் குன்றுகளை அடுக்கின. ஏனெனில், உனது சீற்றத்தைக் கண்டு அஞ்சியதேயாகும். ஆனால் நீ அவ்வாறு கருதாமல் உன்னோடு மாறுபாடு கொண்டு செய்ததாகக் கருதி ஓர் அன்னியன் போல இங்கே நிற்கிறாய்! இப்படி நிற்பதைப் பகைவர் பார்த்தால் உனது சீற்றத்தை மேலும் வளரச் செய்து நம் இரு திறத்தார்க்குமுள்ள நட்பைக் கெடுப்பதற்கு*

*முயல்வார்கள். ஆதலால், நீ உள்ளே வந்து நீங்கள் உதவிய செல்வத்தால் சிறப்பும் பெருமையும் பெற்றுள்ள சுக்கிரீவனைப் பார்த்து உன் கோபத்தைத் தணிவிப்பாய்' என்றான் அனுமன். 'உன் தம்முனைச் சார்தி': தம்முன் - தமையன்; சுக்கிரீவன் இலக்குவனால் தமையன் முறையாகக் கருதப்படுபவன். 67*

இலக்குவன் சீற்றம் தணிந்து பேசுதல்

***4336. மாருதி மாற்றம் கேட்ட, மலை***
***புரை வயிரத் தோளான்,***
***தீர்வினை சென்று நின்ற சீற்றத்தான்,***
***சிந்தை செய்தான் -***
***'ஆரியன் அருளின் தீர்ந்தான் அல்லன்;***
***வந்து அடுத்த செல்வம்***
***பேர்வு அரிதாகச் செய்த***
***சிறுமையான்' என்னும் பெற்றி.***

***மாருதி மாற்றம் கேட்ட** - அனுமன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட; **மலை புரை வயிரத் தோளான்** - மலையைப் போன்ற உறுதியான தோள்களையுடைய இலக்குவன்; **தீர்வினை சென்று** - தோன்றி மறைகின்ற; **நின்ற சீற்றத்தான்** - சினத்தின் விடுபட்டு; **ஆரியன் அருளின்** - (இச் சுக்கிரீவன்) இராமனது அருட் பார்வையிலிருந்து; **தீர்ந்தான் அல்லன்** - (உண்மையாக) நீங்கினவனில்லை; **பேர்வு அரிது ஆக** - தன்னை விட்டு நீங்க முடியாததும்; **வந்து அடுத்த செல்வம்** - தன்னை வந்து அடுத்ததும் ஆகிய செல்வம்; **செய்த** - தந்த; **சிறுமையான்** - சிறுமையுடையவன்; **என்னும் பெற்றி** - என்னும் இயல்பை; **சிந்தை செய்தான்** - மனத்தில் நினைந்தான்.*

*'இச் சுக்கிரீவன் எங்களை அவமதித்தான் என்று சொல்ல இயலாது. தவிர, தான் செசன்ன தவணைப்படி வராமல் இராமனது ஆணையை மீறவேண்டுமென்ற எண்ணமும் இவனுக்குச் சிறிதும் இல்லை; புதிதாகக் கிடைத்த செல்வச் செருக்கால் தான் செய்ய வேண்டிய செயலை மறந்ததனால் ஏற்பட்டது இது' என்று அனுமன் வார்த்தையால் தெளிவடைந்த இலக்குவனின் சினம் தணிந்தது. தாரையும் இதே கருத்தைச் சொன்னாள்.(4325) 68*

***4337. அனையது கருதி, பின்னர்,***
***அரிக் குலத்தவனை நோக்கி,***
***'நினை; ஒரு மாற்றம் இன்னே***
***நிகழ்த்துவது உளது, நின்பால்;***
***இனையன உணர்தற்க ஏற்ற;***
***எண்ணிய நீதி' என்னா,***
***வனை கழல் வயிரத் திண் தோள்***
***மன் இளங் குமரன் சொல்வான்:***

***அனையது கருதி** - (இவ்வாறு) அதைப் பற்றிச் சிந்தித்து; **பின்னர்** - பின்பு; **வனை கழல் வயிரத் திண்தோள்**- வீரக் கழல் பூண்ட கால்களையும்,*

*மிக்க வலிமையான தோள்களையும் உடைய;* ***மன் இளங்கும ரன் -*** *இளவரசனான இலக்குவன்;* ***அரிக்குலத்தவனை நோக்கி -*** *வானர குலத்தைச் சேர்ந்த அனுமனைப் பார்த்து;* ***இன்னே நின்பால் -*** *இப்பொழுதே உன்னிடம்;* ***ஒரு மாற்றம் நிகழ்த்துவது உளது -*** *(நான்) ஒன்று கூற வேண்டியுள்ளது;* ***இனையன -*** *கூறும் இந்த வார்த்தைகள்;* ***உணர்தற்கு ஏற்ற-*** *(நீ) உணர்ந்து அறிவதற்குத் தகுதியுடையவை;* ***எண் ணிய நீதி -*** *(இவ்வார்த்தைகள்) எண்ணித் துணிந்த நீதியின்பாற் பட் டவையாகும்;* ***என்னாசொல்வான் -*** *என்று சொல்லத் தொடங்கினான்.*

*அனையது - சுக்கிரீவன் இராமனது ஆணையை மீறாதிருந்தம், அவனுக்குக் கிடைத்த செல்வம் சிறுமை செய்தது என்பது. செல்வம் பெற்றவர்க்குப் பல்வேறு மாறாட்டங்கள் நிகழக் கூடும்; அதனால் பல தீங்குகள் விளைய வாய்ப்புள்ளது. கழல் - தானியாகுபெயர். 69*

***4338. 'தேவியைக் குறித்துச் செற்ற***
***சீற்றமும், மானத் தீயும்,***
***ஆவியைக் குறித்து நின்றது,***
***ஐயனை; அதனைக் கண்டேன்;***
***கோ இயல் தருமம் நீங்க,***
***கொடுமையோடு உறவு கூடி,***
***பாவியர்க்கு ஏற்ற செய்கை***
***கருதுவன்; பழியும் பாரேன்.***

***தேவியைக் குறித்து -*** *சீதையை (இராவணன் கவர்ந்து சென் றதை)க் குறித்து;* ***செற்ற சீற்றமும் -*** *கறுவு கொண்ட சினமும்;* ***மானத் தீயும் -*** *மானமாகிய நெருப்பும்;* ***ஐயனை ஆவியை -*** *இராமனது உயிரை;* ***குறித்து நின்றது -*** *பற்றி வருத்தி நின்றன;* ***அதனைக் கண்டேன் -*** *அவ்வாறு வருத்துவதை (நேரிலே) கண்ட நான்;* ***கோ இயல் தருமம் நீங்க -*** *அரசர்களுக்குரிய தருமம் அழிய;* ***கொடுமையோடு உறவு கூடி -*** *கொடுந்தன்மையோடு உறவு கொண்டாடி;* ***பாவியர்க்கு ஏற்ற செய்கை -*** *கொடிய பாவியர்க்குரிய செயல்களை;* ***கருதுவன் -*** *செய்யக் கருதியுள்ளேன்;* ***பழியும் பாரேன் -*** *(அதனால் எனக்கு வரக் கூடிய) பழியையும் சிறிதும் கருதமாட்டேன்.*

*இராவணன் சீதையைக் கவர்ந்த செயல் இராமனை மிக வருத்தியது. அதனை நேரில் கண்ட இலக்குவன் தனக்கு நேரும் சீற்றத்தையும்; அதன் விளைவுகளையும் எடுத்துரைக்கின்றான். காலம் பார்த்துச் சினம் ஆறியிருத்தல் அரசனுக்குக் கடமையாயிருக்க, இராமனுக்கு நேர்ந்த துன்பங்களைக் கண்டு, ஆற்றாமல் இலக்குவன் 'கோவியல் தருமம் நீங்க... பாவியர்க்கு ஏற்ற செய்கை கருதுவன்' என்றான். 70*

***4339. 'ஆயினும், என்னை யானே ஆற்றி***
***நின்று, ஆவி உற்று,***
***நாயகன்தனையும் தேற்ற நாள்***
***பல கழிந்த; அன்றேல்,***
***தீயும், இவ் உலகம் மூன்றும்;***
***தேவரும் வீவர்; ஒன்றோ?***

***வீயும், நல் அறமும்; போகா***
***விதியை யார் விலக்கற்பாலார்?***

***ஆயினும் -** இருந்தாலும்; **என்னை யானே ஆற்றி நின்று -** எனது சீற்றத்தை நானாகவே தணித்துக் கொண்டு; **ஆவி உற்று -** உயிர் தரித்து; **நாயகன்தனையும் -** இராமனையும்; **தேற்ற -** தேற்றுவதற்கு; **நாள் பல கழிந்த -** பல நாள்கள் கழிந்து விட்டன; **அன்றேல் -** இல்லாவிட்டால் (இராகவன் சினம் தணியாமல் இருந்திருந்தால்); **இவ்வுலகம் மூன்றும் தீயும் -** இந்த மூன்று உலகங்களும் தீய்ந்துபோகும்; **தேவரும் வீவர் -** வானுலகத் தேவர்களும் இறந்தொழிவார்கள்; **ஒன்றோ -** இது மாத்திரந்ததனா? **நல் அறமும் வீயும் -** சிறந்த தருமங்களும் அழிந்து விடும்; **போகா விதியை -** (இவ்வாறெல்லாம் நேரவிடாமல்) நிலைத் திருக்கக் கூடிய விதியை; **விலக்கற்பாலார் யார்? -** போக்குவதற்கு உரியவர் யாவர்?*

*'என் உள்ளத்தில் மூண்டெழுந்த சினத்தை நானே தணிவித்து என் உயிரையும் தரித்திருக்கச் செய்தேன். பின்பு என் அண்ணனான இராமனைத் தேற்றுவிக்கப் பல நாள்கள் கழிந்துவிட்டன. இவ்வாறு நாள்கள் பல கழிந்து எங்கள் கோபமும் தணிந்திராவிட்டால் இவ்வுலகம் மூன்றும், தேவரும், நல்லறமும் அழிந்தே போயிருக்கும். அவற்றின் நல்வினையால் எங்கள் சினமும் துயரும் தணிந்தன' என்று இலக்குவன் உரைத்தவாறு. விதியின் வலிமையை உணர்த்தவே 'போகா விதியை யார் விலக்கற்பாலார்' என்றார். 'ஊழிற் பெருவலி யாவுள' என்பது குறள் (380). 'விதிக்கும் விதியாகும் என் விற்றொழில் காண்டி' (1735) என்று முன் கூறியவன் இவ்இலக்குவன். 71*

***4340. 'உன்னைக் கண்டு, உம் கோன்தன்னை***
***உற்ற இடத்து உதவும் பெற்றி,***
***என்னைக் கண்டனன்போல் கண்டு, இங்கு***
***இத் துணை நெடிது வைகி,***
***தன்னைக் கொண்டு இருந்தே தாழ்ந்தான்;***
***அன்று எனின், தனு ஒன்றாலே***
***மின்னைக் கண்டனையாள்தன்னை***
***நாடுதல் விலக்கற்பாற்றோ?***

***உன்னைக் கண்டு -** (இராமன் முதலில்) உன்னைச் சந்தித்ததனால்; **உற்ற இடத்து உதவும் பெற்றி -** துன்பம் நேர்ந்த காலத்து உதவி செய்யும் தன்மைக்கு; **உம்கோன்தன்னை -** உங்கள் அரசனான சுக்கிரீவனை; **என்னைக் கண்டனன் போல் கண்டு -** என்னைத் தம்பியாகக்*

*கொண்டிருப்பது போலத் தம்பியாகக் கொண்டு; **இங்க இத்துணை -** இம் மலையில் இவ்வளவு (நாள்கள் வரையில்); **நெடிது வைகி -** நீண்ட காலம் தங்கி; **தன்னைக் கொண்டிருந்தே -** தன் உயிரை அரிதாகத் தாங்கிக் கொண்டு; **தாழ்த்தான் -** பொறுத்திருந்தான்; **அன்று எனின் -** இல்லாவிட்டால்; **தனு ஒன்றாலே -** தன் வில்லொன்றால்; **மின்னைக் கண்டனையாள் தன்னை -** மின்னலைப் போன்ற உருவத்தைக் கொண்டவளான சீதையை; **நாடுதல் -** தேடுதல்; **விலக்கற் பாற்றோ -** (மற்றவரால்) தடுக்கக் கூடிய தன்மையுடையதோ? (யாராலும் தடுக்க முடியாது).*

*உன்னைக் கண்டதும் உன்னிடம் அருள் உண்டாக உன்மூலமாக உன் அரசனாகிய சுக்கிரீவனிடம் நட்புக் கொண்டு, இடருற்றபோது அவன் உதவுவான் என்று கருதினான்; என்னிடம் மிக்க பாசம்கொண்டு என்னைப் பாவிப்பது போன்றே அவனையும் உடன் பிறந்தவனாகப் பாவித்து உங்கள் மூலமாக இச் செயலை எளிதில் முடித்துக் கொள்ளலாம் என்று கருதினான், இராமன். அதனால் இதுவரை பொறுத்திருந்தான்; அவன் இவ்வாறு பொறுத்திருந்தது உங்களுக்குப் பெருமையைத் தருவதற்கேயாம்; வல்லமையில்லாமையாலன்று. அவன் நினைந்திருந்தால் தன் வில்லொன்றால் பகைவரை வதைத்துச் சீதையை எளிதிலே மீட்டிருக்கமுடியும் என்று இலக்குவன் அனுமனிடம் கூறினான் என்பது. ஒளியினாலும் (கொடிபோல்) ஒல்கிடும் மென்மையாலும் சீதையை 'மின்னைக் கண்டனையாள்'என்றார். 72*

***4341. 'ஒன்றுமோ, வானம்? அன்றி***
***உலகமும் பதினால் உள்ள***
***வென்றிமா கடலும் ஏழ் ஏழ்***
***மலை உள்ள என்னவேயாய்***
***நின்றது ஓர் அண்டத்துள்ளே எனின்,***
***அது நெடியது ஒன்றோ?***
***அன்று நீர் சொன்ன மாற்றம்***
***தாழ்வித்தல் தருமம் அன்றால்.***

***வானம் ஒன்றுமோ** - ஆகாயம் ஒன்று மட்டுமோ? **அன்றி** - அது வல்லாமல்; **பதினால் உள்ள உலகமும்** - பதினான்காக உள்ளனவாகிய உலகங்களும்; **வென்றி மாக்கடல் ஏழும்** - வெற்றி பொருந்திய பெரிய ஏழு கடல்களும்; **மலை ஏழும்** - ஏழு மலைகளும்; **உள்ள என்னவே ஆய் நின்றது** - இருக்கின்றன என்று சொல்லுமாறு நிற்பதாகிய; **ஓர்அண்டத் துள்ளே** - ஓர் உலகமாகிய உருண்டைக்குள்ளே (ஏதாவதுஓரிடத்தில்); **எனின்** - சீதை இருக்கின்றாள் என்றால்; **அது நெடிது ஒன்றோ-** அந்த இடத்தைத் தேடிக் கண்டுபிடித்து மீட்டு வருவது (இராமனது வில்லுக்கு) பெரிய செயலாகுமோ? **அன்று நீர் சொன்ன** - (இருந்தாலும்) முன்பு நீங்கள் சொன்ன; **மாற்றம் தாழ்வித்தல்** - சொல்லை நிறைவேற்றாமல் தாமதம் செய்வது; **தருமம் அன்று** - (உங்களுக்குத்) தக்க செயல் (தருமம்) ஆகாது.*

*மிகப் பெரிய அண்ட கோளத்திலே எங்கே இருந்தாலும் தன் வில்லாற்றலால் சீதையை மீட்டுவருவது இராமனுக்கு அரிய செயலாகாது. ஆனாலும் நான் இங்கே சீற்றத்தோடு வந்தது, நீங்கள் முன்பு சொன்ன சொற்படி நடவாமல் தருமத்தைச் சிதைத்துத் தாமதம் செய்ததாலேயாகும் என்றான் இலக்குவன்.*

*வென்றி மாக்கடல் - ஊழிக் காலத்தில் பொங்கி எழுந்து உலகை அழிக்கக்கூடியது. 73*

***4342. 'தாழ்வித்தீர் அல்லீர்; பல்***
***நாள் தருக்கிய அரக்கர்தம்மை***
***வாழ்வித்தீர்; இமையோர்க்கு இன்னல்***
***வருவித்தீர்; மரபின் தீராக்***
***கேள்வித் தீயாளர் துன்பம்***

*கிளர்வித்தீர்; பாவம்தன்னை*
*மூள்வித்தீர்; முனியாதானை முனிவித்தீர்,*
*முடிவின்' என்றான்.*

***தாழ்வித்தீர் அல்லீர் -*** *'நீங்கள் கால தாமதம் செய்தவர்கள் மட்டு மில்லை;* ***பல்நாள் தருக்கிய -*** *பலநாட்களாகச் செருக்குக் கொண்டிருந்த;* ***அரக்கர்தம்மை வாழ்வித்தீர் -*** *அரக்கர்களை வாழச் செய்தீர்கள்;* ***இமையோர்க்கு -*** *தேவர்களுக்கு;* ***இனனல் வருவித்தீர் -*** *துன்பத்தைத் தந்தீர்கள்;* ***மரபின் தீராக் கேள்வித் தீயாளர் துன்பம் -*** *மரபு முறையிலிருந்து நீங்காத நூற்கேள்வியும், வேள்வித் தீயுமுடைய முனிவர்களுக்குத் துன்பத்தை;* ***கிளர்வித்தீர் -*** *மிகுதியாக்கினீர்கள்;* ***பாவம் தன்னை -*** *பாவங்களை;* ***மூள்வித்தீர் -*** *மேலும் மேலும் வளரச் செய்தீர்கள்;* ***முடிவின் -*** *முடிவாக;* ***முனியாதானை -*** *ஒருகாலும் கோபிக்காத இராமனையும்;* ***முனிவித்தீர் -*** *கோபம் அடையுமாறு செய்தீர்கள்';* ***என்றான் -*** *என்று (இலக்குவன்) கூறினான்.*

*உங்கள் காலதாமதம் அரக்கர்க்குப் பெருவாழ்வையும், தேவர்க்கும் முனிவர்க்கும் துன்பததையும் உண்டாக்கி; உங்களுக்குப் பாவங்களைச் சேர்த்து; இராமனுக்குச் சினத்தைத் தோற்றுவித்து, உங்களது கேட்டிற்கும் காரணமாகியது என்று இலக்குவன் உரைத்தான் என்பது. 'கேள்வி' என்பது வேதம்; கேள்வித் தீயாளர், வேத வேள்விக்குத் தீ ஓம்பும் வேதியர் மற்றும் முனிவர்கள்.*

*தாழ்வித்தீர், வாழ்வித்தீர், வருவித்தீர், கிளர்வித்தீர், மூள்வித்தீர், முனிவித்தீர் என்று 'வி' விகுதியைச் சேர்த்துப் பிறவினைகளாகவே அமைத்திருப்பது சிந்திக்கத்தக்கது. உங்களால் தான் இவ் விளைவுகள் அனைத்தும் ஏற்பட்டன என்பதை இப் பிறவினைகளால் நன்கு வலியுறுத்துகிறார்கவிஞர்.* *74*

*அனுமன் இலக்குவனைச் சுக்கிரீவனிடம் வருமாறு அழைத்தல்*

*4343.* ***தோன்றல் அஃது உரைத்தலோடும்,***
***மாருதி தொழுது, 'தொல்லை***
***ஆன்ற நூல் அறிஞ! போன***
***பொருள் மனத்து அடைப்பாய் அல்லை;***
***ஏன்றது முடியேம்என்னின், இறத்தும்;***
***இத் திறத்துக்கு எல்லாம்***
***சான்று இனி அறனே; போந்து,***
***உன் தம்முனைச் சார்தி' என்றான்.***

***தோன்றல் -*** *காண்பதற்கு இனியவனான இலக்குவன்;* ***அஃது உரைத்தலோடும் -*** *அவ் வார்த்தைகளைச் சொன்னவுடனே;* ***மாருதி தொழுது -*** *வாயு மைந்தனான அனுமன் (இலக்குவனை) வணங்கி;* ***தொல்லை ஆன்ற நூல் அறிஞ -*** *பழமையான சிறந்த நூல்களை அறிந்தவனே;* ***போன பொருள் -*** *நடந்து முடிந்த செய்திகளை;* ***மனத்து அடைப்பாய் அல்லை -*** *மனத்தில் கொள்ளாதிருப்பாயாக;* ***ஏன்றது முடியேம் என்னின் -*** *(நாங்கள்) ஏற்றுக்கொண்ட பணியைச் செய்யாது விடுத்தோமாயின்;* ***இறத்தும் -*** *உயிர்விடக் கடவோம்;* ***இத் திறத்துக்கு எல்லாம் -*** *இந்த வகைச் செய்திகளுக்கெல்லாம்;* ***இனி அறனே சான்று -*** *இனிச் சாட்சியாக இருப்பது தருமமே;* ***போந்து -*** *உள்ளே வந்து;*

***உன் தம்முனை -*** *உனக்கு அண்ணன் முறையாகும் சுக்கிரீவனிடம்;* ***சார்தி என்றான் -*** *சோர்வாய் என்று சொன்னான்.*

*அனுமன் இலக்குவனது சினத்தைத் தணிக்க விரும்பிச் 'சீதையைத் தேடுதல் முதலான செயல்களைத் தவறாது செய்துமுடிப்போம்; அவ்வாறு முடியாவிட்டால் நாங்கள் இறந்துபடுவோம்; இச் செயலுக்கு தருமமே சாட்சி' என்றான் என்பது.*

*சான்று இனி அறனே: நாங்கள் அறம் திறம்பினோம் என்று நீங்கள் இனியும் எங்களைக் கொல்ல வேண்டா. ஏனென்றால் அறமே எங்களைக் கொன்று விடும். மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின் அறஞ்சூழும் மற்றவன் கேடு (குறள் - 204) ஆன்ற - சான்ற என்பதன் மரூஉ. தோன்றல் - பெருமையாளன். ஆண்பாற் சிறப்புப் பெயர்.*
*75*

இலக்குவன் அனுமனொடு செல்லுதல்

***4344. 'முன்னும், நீ சொல்லிற்று***
***அன்றோ முயன்றது*** *;* ***முயற்றுங்காறும், இன்னும் நீ இசைத்த செய்வான் இயைந்தனம்' எனக் கூறி, அன்னது ஓர் அமைதியான்தன் அருள் சிறிது அறிவான் நோக்கி, பொன்னின் வார் சிலையினானும், மாருதியோடும் போனான்.***

***பொன்னின் வார் சிலையினானும் -*** *பொன்னால் செய்யப் பெற்ற வில்லைத் தாங்கிய இலக்குவனும் (அனுமன் நோக்கி);* ***முன்னும்***

***முயன்றது -*** *'முன்பும் நாங்கள் மேற்கொண்ட முயற்சியும்;* ***நீ சொல்லிற்று அன்றோ -*** *நீ சொல்லியது தானே;* ***இன்னும் -*** *இனிமேலும்;* ***முயற்றுங்காறும் -*** *முயற்சி மேற்கொள்ளுங் காலத்தும்;* ***நீ இசைத்த -*** *நீ சொல்லியதையே;* ***செய்வான் இயைந்தனம் -*** *செய்வதறகு உடன் படுகிறோம்';* ***என்று கூறி -*** *என்று சொல்லி;* ***அன்னது ஓர் அமைதி யான்தன் -*** *(மேலே கூறப்பட்ட) நிலையையுடையவனான சுக்கிரீவனது;* ***அருள் சிறிது அறிவான் நோக்கி -*** *மனநிலையையும் சிறிது தெரிந்து கொள்ளக் கருதி;* ***மாருதியோடும் போனான் -*** *அனுமனுடன் சென்றான்.*

*சுக்கிரீவன் கார்காலம் நீங்கியவுடன் சீதையைத் தேடுவதற்கு முயலாமல் அந்தப்புரத்தில் உறங்கிக்கிடக்கின்றமையால் அவன் 'அன்னது ஓர் அமைதியான்' எனப்பட்டான். அருள் - சுக்கிரீவன் எங்களிடம் அன்பு காட்டும் விதம். பொன்னின் வார்சிலை - அழகானதும் நீண்டதுமான வில் எனினும் அமையும்.*
*76*

தாரை திரும்பிப் போதல்

***4345. அயில் விழி, குமுதச் செவ் வாய்,***
***சிலை நுதல், அன்னப் போக்கின்,***
***மயில் இயல், கொடித் தேர் அல்குல்,***
***மணி நகை, திணி வேய் மென்தோள்***
***குயில்மொழி, கலசக்கொங்கை, மின்இடை,***

**குமிழ் ஏர் மூக்கின்,**
**புயல் இயல் கூந்தல், மாதர்**
**குழாத்தொடும் தாரை போனாள்.**

***தாரை*** *- தாரையானவள்;* ***அயில்விழி*** *- வேல்போன்ற கண்களையும்;* ***குமுதச் செவ்வாய்*** *- செவ்வாம்பல் மலரையொத்த சிவந்த வாயையும்;* ***சிலை நுதல்*** *- வில்லைப் போன்ற புருவத்தையும்;* ***அன்னப் போக்கின்*** *- அன்ன நடையை ஒத்த நடையையும்;* ***மயில் இயல்*** *- மயிலைப் போன்ற சாயலையும்;* ***கொடித் தேர் அல்குல்*** *- கொடிகளை யுடைய தேர்த்தட்டுப் போன்ற அல்குலையும்;* ***மணிநகை*** *- முத்துப் போன்ற பற்களையும்;* ***திணிவேய் மென்தோள்*** *- வலிய மூங்கில் போன்ற மெல்லி தோள்களையும்;* ***குயில் மொழி-*** *குயிலின் குரலையொத்த சொல்லையும்;* ***கலசக் கொங்கை*** *- பொற்கலசத்தைப் போன்ற முலைகளையும்;* ***மின் இடை*** *- மின்னல் போன்ற இடையையும்;* ***குமிழ் ஏர்மூக்கின்*** *- குமிழ மலர்போன்ற எடுப்பான மூக்கையும்;* ***புயல் இயல் கூந்தல்*** *- கருமேகத்தையொத்த கரிய கூந்தலையும் உடைய;* ***மாதர் குழாத்தோடும்*** *- மகளிர் கூட்டத்துடனே;* ***போனாள்*** *- திரும்பிச் சென்றாள்.*

*உவமையணி. தாரையுடன் சென்ற மகளிர்க்கே இவ்வனப்புகள் அனைத்தையும் கூறித் தாரைக்கு ஒன்றும் அடைமொழி கூறாமல் அன்னவளின் கைம்மைக்*

*கோலமும், கற்புநிலையும் உணர்த்தப்படுகின்றன. முத்து, நவமணிகளுள் ஒன்றாதலால் மணி எனப்பட்டது.* *77*

*அங்கதன் இலக்குவனை வணங்கிச் சுக்கிரீவனிடம் செல்லுதல்*

***4346. வல்ல மந்திரியரோடும், வாலி***
**காதலனும், மைந்தன்**
**அல்லி அம் கமலம் அன்ன**
**அடி பணிந்து, அச்சம் தீர்ந்தான்;**
**வில்லியும் அவனை நோக்கி, 'விரைவின்**
**என் வரவு, வீர!**
**சொல்லுதி நுந்தைக்கு' என்றான்;' 'நன்று'**
**என, தொழுது போனான்.**

***வாலி காதலனும்*** *- வாலியின் மகனான அங்கதனும்;* ***வல்ல மந் திரியரோடும்*** *- நீதிமுறைகளிலும் அரசியல் நூல்களிலும் தேர்ச்சி பெற்ற அமைச்சர்களுடன் (வந்து);* ***மைந்தன் அல்லி அம் கமலம் அன்ன*** *- வீரனான இலக்குவனுடைய அகவிதழ் கொண்ட அழகிய செந்தாமரை மலர்போன்ற;* ***அடி பணிந்து*** *- திருவடிகளில் வீழ்ந்து வணங்கி;* ***அச்சம் தீர்ந்தான்*** *- (இலக்குவனால் என்ன நேரிடுமோ என்று எண்ணிய) பயம் நீங்கப் பெற்றான்;* ***வில்லியும் அவனை நோக்கி*** *- வில்வீரனான இலக்குவனும் அந்த அங்கதனைப் பார்த்து;* ***வீர என் வரவு*** *- 'வீரனே! எனது வருகையை;* ***நுந்தைக்கு விரைவின் சொல்லுதி*** *- உன் சிற்றப்பனாகிய சுக்கிரீவனுக்கு விரைந்து சென்று கூறுவாய்;* ***என்றான்*** *- என்று மொழிந்தான் (அது கேட்டு);* ***நன்ற என*** *- நல்லது என்று சொல்லி;* ***தொழுது போனான்*** *-- (அவ் இலக்குவனை) வணங்கிப் போனான்.*
*78*

*இலக்குவன் சினத்திற்குக் காரணம் என்ன எனச்சுக்கிரீவன் வினவுதல்*

***4347. போனபின், தாதை கோயில் புக்கு,***
***அவன் பொலம் கொள் பாதம்***
***தான் உறப் பற்றி, முற்றும்***
***தைவந்து, 'தடக் கை வீர!***
***மானவற்கு இளையோன் வந்து, உன்***
***வாசலின் புறத்தான்; சீற்றம்***
***மீன் உயர் வேலைமேலும் பெரிது;***
***இது விளைந்தது' என்றான்.***

***போனபின்*** *- இலக்குவனைவிட்டு (அங்கதன்) நீங்கிச்சென்ற பிறகு;* ***தாதை கோயில் புக்கு*** *- சிற்றப்பனாகிய சுக்கிரீவனது அரண்மனைக்குள்*

*புகுந்து;* ***அவன் பொலம்கொள் பாதம்*** *- அச் சுக்கிரீவனுடைய பொன்போன்ற (அழகான) பாதகங்களை;* ***தான் உறப் பற்றி*** *- தான் நன்றாகப் பிடித்துக் கொண்டு;* ***முற்றும் தைவந்து*** *- முழுவதும் தடவி (துயிலெழுப்பி);* ***தடக்கை வீர*** *- நீண்ட கைகளையுடைய வீரனே;* ***மானவற்கு இளையோன் வந்து*** *- இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன் வந்து;* ***உன் வாசலின் புறத்தான்*** *- உனது அரண்மனை வாயில் வெளியிலே நிற்கின்றான்;* ***சீற்றம்*** *- (அவன் இப்பொழுது கொண்டுள்ள) சினமானது;* ***மீன் உயர் வேலை மேலும் பெரிது*** *- மீன்கள் நிறைந்துள்ள கடலைக் காட்டிலும் பெரியது;* ***இது விளைந்தது*** *- இது நடந்த செய்தி;* ***என்றான்*** *- என்று கூறினான்.*

*பொலம் - பொன், அழகு. தைவருதல் - தடவுதல். மானவன் - பெருமையுள்ளவன்.*
*79*

***4348. அறிவுற்று, மகளிர் வெள்ளம்***
***அலமரும் அமலை நோக்கிப்***
***பிறிவு உற்ற மயக்கத்தால், முந்து***
***உற்றது ஓர் பெற்றி ஓரான்,***
***'செறி பொன் - தார் அலங்கல்***
***வீர! செய்திலம் குற்றம்*** *;* **நம்மைக் கறுவுற்ற பொருளுக்கு என்னோ காரணம் கண்டது?' என்றான்.**

***மகளிர் வெள்ளம் அழிவுற்று*** *- (அங்கதன்) அங்கு வந்ததைப் பெண்டிர் கூட்டம் அறிந்து;* ***அலமரும் அமலை நோக்கி*** *- கலங்கி ஆர வாரம் இடுதலைக் கண்டு;* ***பிறிவு உற்ற மயக்கத்தால்*** *- தன் மயக்கத்தி லிருந்து விடுதலையடைந்து;* ***முந்து உற்றது ஓர் பெற்றி*** *- முன்பு (அங்க தன் வந்து எழுப்பியது போன்ற) நடந்த நிகழ்ச்சிகளின் தன்மையை;* ***ஓரான்*** *- உணராதவனாய் (அங்கதன் கூறியதற்க விடையாக அவனை நோக்கி);* ***செறிபொன் தார் அலங்கல் வீர*** *- நிறைந்த பொன்மாலையும் மலர் மாலையும் அணிந்த வீரனே!* ***குற்றம் செய்திலம்*** *- 'நாம் எந்தக் குற்றமும் செய்யவில்லையே, (அவ்வாறு இருக்க);* ***நம்மைக் கறுவுற்ற பொருளுக்கு*** *- நம் மீது இலக்குவன் சினம் கொண்டதற்கு;* ***காரணம் கண்டது என்னோ*** *- காரணமாகக் காணப் பட்டது எது';* ***என்றான்*** *- என்று கேட்டான்.*

*அலமரம் - வருந்துதல் எனினும் அமையும் 'அலமரல் தெருமரம் ஆயிரண்டும் சுழற்சி' - (தொல் - சொல் - 314). அமலை - ஆரவாரம். கறுவுறல் - வெகுளல். வெள்ளம் - பேரெண்ணைக் குறிக்கும் (பெருந்திரள்). 80*

*அங்கதன் கூற்று*

***4349. ' "இயைந்த நாள் எந்தை, நீ***
***சென்று எய்தலை; செல்வம் எய்தி***
***வியந்தனை; உதவி கொன்றாய்; மெய்***
***இலை" என்ன வீங்கி,***
***உயர்ந்தது சீற்றம்; மற்று, ஈது***
***உற்றது செய்கை; முற்றும்***
***நயம் தெரி அனுமன்***
***வேண்ட, நல்கினன், நம்மை இன்னும்.***

***எந்தை -** (அப்போது அங்கதன் சுக்கிரீவனை நோக்கி) என் தந்தையே! **இயைந்த நாள் எல்லை -** (படையைத் திரட்டி வருவதாக முன்பு) ஏற்றுக் கொண்ட காலத் தவணையில்; **நீ சென்று எய்தலை -** (படைகளோடு) இராமனிடம் நீ போய்ச் சேரவில்லை; **செல்வம் எய்தி வியந்தனை -** பெருஞ் செல்வத்தைப் பெற்றுச் செருக்குற்றாய்; **உதவி கொன்றாய் -** (அவர்கள் செய்த) பேருதவியை மறந்துவிட்டாய்; **மெய் இலை -** சிறிதும் உண்மையில்லாதவனாக ஆனாய்; **என்னச் சீற்றம் வீங்கி உயர்ந்தது -** என்பதால் (இலக்குவனுக்குக்) கோபம் மிகுதியும் மூண்டது; **ஈறு உற்றது செய்கை -** இதுதான் நடந்தசெயல்; **நயம் தெரி அனுமன் -** பக்குவம் அறிந்த அனுமன்; **வேண்ட -** வேண்டிக் கொண்டதால்; **நம்மை இன்னும் நல்கினன் -** (அந்த இலக்குவன்) நம்மை இன்னும் உயிரோடு இருக்குமாறு அருள்புரிந்துள்ளான்.*

*அனுமன் இலக்குவனை வேண்டியிராவிடில் அப்போதே நாம் அனைவரும் இலக்குவனால் கொல்லப்பட்டிருப்போம் என்றவாறு. முற்றும் நயம்தெரி அனுமன் - முன்பு தாரையைக் கொண்டு இலக்குவனது சினத்தைத் தணித்துப் பின்னர் இனிய சொற்களால் வேண்டிக் கொண்டதைக் குறித்தது. நயம் - பக்குவம்.*
*81*

***4350. 'வருகின்ற வேகம் நோக்கி,***
***வானர வீரர், வானைப்***
***பொருகின்ற நகர வாயில் பொற்***
***கதவு அடைத்து, கற் குன்று***
***அருகு ஒன்றும் இல்லா வண்ணம்***
***வாங்கினர் அடுக்கி, மற்றும்***
***தெரிகின்ற சினத்தீப் பொங்க, செருச்***
***செய்வான் செருக்கி நின்றார்.***

***வானர வீரர் -** வானர வீரர்கள்; **வருகின்ற வேகம் நோக்கி -** இலக்குவன் வரும் வேகத்தைப் பார்த்து; **வானைப் பொருகின்ற -** வானத்தைச் சென்று தொடுகின்ற; **நகர***

***வாயில் -*** *(கிட்கிந்தா) நகரத்தின் வாயிலில் உள்ள;* ***பொன் கதவு அடைத்து -*** *பொன்னாலாகிய கதவுகளைச் சாத்திக் கொண்டு;* ***அருகு ஒன்றும் இல்லா வண்ணம் -*** *பக்கத்தில் ஒரு சிறு குன்றுகூட இல்லாதபடி;* ***கற்குன்று வாங்கினர் அடுக்கி -*** *கல் மலைகளையெல்லாம் எடுத்துவந்து (அவ் வாயிலில்)*

*ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி;* ***மற்றும் -*** *மேலும்;* ***தெரிகின்ற சினத்தீப் பொங்க -*** *வெளிப்படுகின்ற கோபத் தீயானது கொதித்தெழு;* ***செருச் செய்வான் -*** *(இலக்குவனோடு) போர் செய்யும் பொருட்டு;* ***செருக்கி நின்றார்-*** *செருக்குக் கொண்டு நின்றார்கள்.*

*வானர வீரர்கள் நகரவாயிலின் பொற் கதவுகளைத் தாளிட்டு அவற்றின் அருகில் பல் சிறு குன்றுகளை அடுக்கிவைத்த செய்தி முன் கூறப்பட்டது. (4301) அதனை அங்கதன் சுக்கிரீவனுக்குத் தெரிவிக்கிறான். வானைப் பொருகின்ற நகர வாயில் - உயர்வுநவிற்சியணி. 82*

***4351. 'ஆண்தகை, அதனை நோக்கி, அம்***
***மலர்க் கமலத் தாளால்***
***தீண்டினன்; தீண்டாமுன்னம், தெற்கொடு***
***வடக்குச் செல்ல***
***நீண்ட கல் மதிலும், கொற்ற***
***வாயிலும், நிரைத்த குன்றும்,***
***கீண்டன தகர்ந்து, பின்னைப்***
***பொடியொடும் கெழீஇய அன்றே.***

***ஆண்தகை -*** *ஆடவருள் சிறந்தவனான இலக்குவன்;* ***அதனை நோக்கி -*** *வானரர்களின் அந்தச் செயலைப் பார்த்து;* ***அம் கமல மலர்த் தாளால் தீண்டினன் -*** *அழகிய செந்தாமரை மலர் போன்ற தனது காலால் (அடைத்த வாயில் கதவை) உதைத்தான்;* ***தீண்டாமுன்னம் -*** *(அத்திருவடி) படுவதற்கு முன்பே;* ***தெற்கொடு வடக்குச் செல்ல -*** *தென்வடலாகப் பரவி;* ***நீண்ட கல் மதிலும் -*** *நீண்டுள்ள கல்லால் ஆகிய மதில்களும்;* ***கொற்ற வாயிலும் -*** *வெற்றி பொருந்திய நகரவாயிலும்;* ***நிரைத்த குன்றும் -*** *வரிசையாக அடுக்கி வைத்த குன்றுகளும்;* ***தகர்ந்து கீண்டன -*** *உடைந்து சிதறினவாகி;* ***பின்னை -*** *பின்பு;* ***பொடியொடும் கெழீஇய -*** *பொடியுடன் கலந்து ஒன்றாயின.*

*அன்றே - ஈற்றசை; தீண்டாமுன்னம் தகர்ந்து கீண்டன - மிகையுயர்வு நவிற்சியணி. கீண்டன - கிழிந்தன, உடைந்தன, 'தகர்ந்து கீண்டன' என்பதைக் கீண்டு தகர்ந்தன எனப் பிரித்துக் கூட்டிப் பிளந்து உடைந்தன எனவும் பொருள் கொள்ளலாம். பிளப்பது முதலில் தகர்வதுபின்னால். 83*

***4352. 'அந்நிலை கண்ட, திண் தோள்***
***அரிக் குலத்து அனிகம் அம்மா!***
***எந்நிலை நின்றது என்கேன்? யாண்டுப்***
***புக்கு ஒளித்தது என்கேன்?***
***இந் நிலை கண்ட அன்னை,***
***ஏந்து இழை ஆயத்தோடு,***

***மின் நிலை வில்லினானை வழி***
***எதிர் விலக்கி நின்றாள்.*** ***அந் நிலை கண்ட*** *- அவ்வாறு (இலக்குவனால் நேர்ந்த) நிலை மையைப் பார்த்த;* ***திண்தோள் அரிக் குலத்து அனிகம்*** *- வலிய தோள் களையுடைய வானர சேனை;* ***எந் நிலை நின்றது என்கேன்*** *- எந்த நிலைமையில் இருந்ததென்று சொல்வேன்?* ***யாண்டுப் புக்கு*** *- எந்த இடத்தில் புகுந்து;* ***ஒளித்தது என்கேன்*** *- பதுங்கியது என்று சொல்வேன்;* ***இந் நிலை கண்ட அன்னை*** *- (குரக்குச் சேனையின்) இத்தகைய நிலைமையை நேரிலே பார்த்த (என்) தாயான தாரை;* ***ஏந்து இழை ஆயத்தோடு*** *- சிறந்த அணிகளை அணிந்த மகளிர் கூட்டத்துடனே;* ***மீன் நிலை வில்லினானை*** *- மின்னல் போன்று ஒளிரும் வில்லைத் தாங்கிய இலக்குவனை;* ***வழி எதிர் விலக்கி நின்றாள்*** *- வழியிலே எதிரே சென்று வழி மறித்து நின்றாள்.*

*அம்மா - வியப்பிடைச்சொல். இலக்குவனது திருவடி பட்ட அளவில் வாயிற் கதவு முதலியன பொடியாய்விட்டதைக் கண்ட வானரங்கள் அஞ்சி, உயிர் தப்பிக் கலங்கிப் போனதிசை தெரியாமல் ஓடிப் போயின; அப்போது இலக்குவன் சினத்தோடு வர, அவனை மகளிர் கூட்டத்தோடு தாரை எதிர் கொண்டாள் என்பது. அனிகம் -சேனை; அனீகம் என்ற வடசொல்லின் திரிபு. மின் நிலைவில் - நிலைத்தல் என்றும் இல்லாத மின்னல் வில்லிடம் நிலைத்து நின்றது என்பது நயம். 84*

***4353. 'மங்கையர் மேனி நோக்கான்,***
***மைந்தனும், மனத்து வந்து***
***பொங்கிய சீற்றம் பற்றிப்***
***புகல்கிலன்; பொருமி நின்றான்;***
***நங்கையும், இனிது கூறி,***
***''நாயக! நடந்தது என்னோ,***
***எங்கள்பால்?'' என்னச் சொன்னாள்;***
***அண்ணலும் இனைய சொன்னான்.***

***மைந்தனும்*** *- வீரனான இலக்குவனும்;* ***மங்கையர் மேனி நோக்கான்-*** *(இவ்வாறு வழியில் நின்ற தாரை முதலிய) பெண்களின் உரு வத்தை நிமிர்ந்தும் பாராதவனாய்;* ***மனத்து வந்து பொங்கிய*** *- தன் மனத்திலே எழுந்து பொங்கி நின்ற;* ***சீற்றம் பற்றிப் புகல்கிலன்*** *- சினத்தால் ஒன்றும் சொல்ல மாட்டாதவனாய்;* ***பொருமி நின்றான்*** *- விம்மி நின்றான்;* ***நங்கையும்-*** *பெண்களில் சிறந்தவளான (எனது தாயாகிய) தாரையும்;* ***இனிது கூறி*** *- (இலக்குவனது கோபம் தணியுமாறு) இனிய சொற்களைச் சொல்லி (அவனைப்பார்த்து);* ***நாயக-*** *'தலைவனே!* ***எங்கள்பால் நடந்தது என்னோ-*** *(நீஇராமனை விட்டுப் பிரிந்து) எங்களிடம் வந்தது எதற்காக?'* ***என்னச் சொன்னாள்*** *- என்று கேட்டாள்;* ***அண்ணலும்*** *- இளைவனான இலக்குவனும்;* ***இனைய சொன்னான்*** *- வந்த காரணத்தைக் கூறினான்.*

*மங்கையர் மேனி நோக்கான் - அயல் மாதரைக் கண்ணெடுத்துப் பாராத நோன்புடையவன் இலக்குவன் என்பது அறியப்படும். 85*

***4354. 'அது பெரிய அறிந்த அன்னை,***
***அன்னவன் சீற்றம் மாற்றி,***
***''விதி முறை மறந்தான் அல்லன்;***

*வெஞ் சினச் சேனை வெள்ளம்*
*கதுமெனக் கொணரும் தூது கல்*
*அதர் செல்ல ஏவி,*
*எதிர் முறை இருந்தான்'' என்றாள்;*
*இது இங்குப் புகுந்தது' என்றான்.*

***அது -** (இலக்குவன் வந்த) அந்தக் காரணத்தை; **பெரிது அறிந்த அன்னை -** நன்றாக உணர்ந்த என் தாயாகிய தாரை; **அன்னவன் சீற்றம் மாற்றி -** அந்த இலக்குவனது சினத்தைத் தணித்து; (இலக்குவனைப் பார்த்து); **விதிமுறை மறந்தான் அல்லன் -** (சுக்கிரீவன் இராமனது) கட்டளையை மறந்தானில்லை; **வெம் சினச் சேனை வெள்ளம் -** கடுங்கோபத்தையுடைய வானரச் சேனைகளின் பெருந்தொகுதியை; **கதுமெனக் கொணரும் -** விரைவில் கொண்டு வருவதற்குரிய; **தூது -** தூதுவர்களை; **கல் அதர் செல்ல ஏவி -** கற்கள் நிறைந்த மலை வழியில் போகும்படி கட்டளையிட்டு அனுப்பி; **எதிர்முறை இருந்தான் -** (அந்த வானரப் படையின் வருகையை) எதிர் நோக்கியிருந்தான்'; **என்றாள் -** என்று கூறினாள்; **இது இங்குப் புகுந்தது -** இது தான் இப்பொழுது இங்கே நடைபெற்ற செயலாகும்''; **என்றான் -** என்று (சுக்கிரீவனைப் பார்த்து அங்கதன்) சொல்லி முடித்தான்.*

*தூதர்கள் மூலமாக வானரப் படைகளைத் திரட்டக் காலதாமதமாவதற்கான காரணத்தைக் குறிப்பாக உணர்த்த முற்பட்ட தாரை 'கல்லதர் செல்ல ஏவி' என்றாள்.*

*சுக்கிரீவன் வானர சேனைகளை வருவிக்கத் தூதர்களை அனுப்பிய செய்தி மீண்டும் மீண்டும் உரைக்கப் பெறுகிறது. தவிர, அனுமன் சுக்கிரீவனுக்குக் கார் கால முடிவைக் கூறி எச்சரிக்க, அவன் அனுமனையே எல்லாத் திசைகளுக்கும் அனுப்பக் கட்டளையிட்டான் என்றும். அதன் பின்பு அயர்ந்து விட்டான் என்றும் வான்மீகத்தில்கூறப்பெற்றள்ளன. 86*

*'இலக்குவன் வரவை முன்னமே தெரிவியாமை ஏன்' என வினாதல்*

*4355. சொற்றலும், அருக்கன் தோன்றல்*
*சொல்லுவான், 'மண்ணில் விண்ணில்*
*நிற்க உரியார்கள் யாவர்,*
*அனையவர் சினத்தின் நேர்ந்தால்?*
*விற்கு உரியார், இத் தன்மை*
*வெகுளியின் விரைவின் எய்த,*
*எற்கு உரையாது, நீர் ஈது*
*இயற்றியது என்கொல்?' என்றான்.*

***சொற்றலும் -** (அவ்வாறு அங்கதன்) சொன்னவுடனே; **அருக்கன் தோன்றல் -** சூரியன் மகனான சுக்கிரீவன்; **சொல்லுவான் -** (பின்வருமாறு) சொல்லத் தொடங்கினான்; **அனையவர் சினத்தின் நேர்ந்தால் -** 'அந்த இராமலக்குவர் கோபம் கொண்டு எதிர்த்து வந்தால்; **மண்ணில் விண்ணில் -** இந்த நிலவுலகத்திலோ வானுலகத்திலோ; **நிற்க உரியார்கள் யாவர் -** அவர்களை எதிர்த்து நிற்கக் கூடியவர்கள்யார்? **விற்கு உரியார் -** வில் வீரராகிய அந்த இலக்குவன்; **இத் தன்மை வெகுளியின் -** இவ்வாறு கோபத்துடன்; **விரைவின் எய்த -** விரைந்து வரும்படியாக; **எற்கு உரையாது -** (அதனை) எனக்குத் தெரிவிக்காமல்; **நீர் ஈது -** நீங்கள்*

*இவ்வாறு;* ***இயற்றியது என்கொல் -*** *செய்தது என்ன காரணம் பற்றி?'* ***என்றான் -*** *என்று (அங்கதனை) வினவினான்.*

*எவ்வுலகத்திலும் ஈடில்லாத மகாவீரர் இராமலக்குவர் என்பதை அறியாமல் வாயில் அடைத்து இலக்குவனோடு போர் செய்ய நின்றதும், அந்த இலக்குவன் பெருங்சினத்தோடு வந்தபோது தனக்கு முன்னமே தெரிவியாதிருந்ததும் தவறு என்று சுக்கிரீவன் குறிப்பித்தான் என்பது.*

*ஈது இயற்றியது - கதவடைத்துக் கற்கள் அடுக்கியது முதலான செயல்களைக்குறிக்கும்.* *87*

*அங்கதன் மறுமொழி*

***4356. உணர்த்தினேன்முன்னர்; நீ அஃது***
***உணர்ந்திலை; உணர்வின் தீர்ந்தாய்;***
***புணர்ப்பது ஒன்று இன்மை நோக்கி,***
***மாருதிக்கு உரைக்கப் போனேன்;***
***இணர்த் தொகை ஈன்ற பொன் - தார்***
***எறுழ் வலித் தடந் தோள் எந்தாய்!***
***கணத்திடை, அவனை, நீயும்***
***காணுதல் கருமம்' என்றான்.***

***இணர்த் தொகை ஈன்ற -*** *பூங்கொத்தின் தொகுதி கொண்டு தொடுக்கப்பட்ட;* ***பொன்தார் -*** *அழகிய மாலையை அணிந்த;* ***எறுழ் வலித் தடந்தோள் எந்தாய் -*** *மிக்க வலிமை பொருந்திய பெரிய தோள்களையுடைய என் தந்தையே!* ***முன்னர் உணர்த்தினேன் -*** *(இலக்குவன் வருகையை உனக்கு) முன்னமே தெரிவித்தேன்; (ஆனால் அப்பொழுது);* ***நீ உணர்வின் தீர்ந்தாய் -*** *நீ உணர்வு மயங்கியிருந்தாய்;* ***அஃது உணர்ந்திலை -*** *(அதனால் நான் சொன்ன) அதனைத் தெரிந்து கொண்டாயில்லை;* ***புணர்ப்பது ஒன்று இன்மை நோக்கி -*** *(ஆகவே) நான் செய்யக் கூடியது வேறு ஒன்றும் இல்லாததை உணர்ந்து;* ***மாருதிக்கு உரைக்கப் போனேன் -*** *அனுமனுக்குச் சொல்லப் போனேன்;* ***கணத்திடை -*** *ஒரு நெடிப் பொழுதிற்குள்;* ***அவனை -*** *அந்த இலக்குவனை;* ***நீயும் காணுதல் -*** *நீயும் சென்று பார்ப்பது;* ***கருமம் என்றான் -***

*செய்ய வேண்டிய செயலாகும் என்று (சுக்கிரீவனிடம் அங்கதன்)கூறினான்.*

*எறுழ்வலி - ஒரு பொருட் பன்மொழி.* *88*

*போதையால் மயங்கியதற்குச் சுக்கிரீவன் வருந்துதல்*

***4357. உறவுண்ட சிந்தையானும் உரை***
***செய்வான்; 'ஒருவற்கு இன்னம்***
***பெறல் உண்டோ, அவரால் ஈண்டு யான்***
***பெற்ற பேர் உதவி? உற்றது***
***இறல் உண்டோ? என்னின் தீர்வான்***

*இருந்த பேர் இடரை எல்லாம்,*
*நறவு உண்டு மறந்தேன்; காண*
*நாணுவல், மைந்த!' என்றான்.*

***உறவு உண்ட சிந்தையானும் -*** *இராமனிடம் நட்புக் கொண்ட மனத்தையுடையவனாகிய சுக்கிரீவனும்;* ***உரை செய்வான் -*** *(அங்கதனை நோக்கிச்) சொல்வான்;* ***மைந்த -*** *மகனே!* ***அவரால் ஈண்டு -*** *அந்த இராமனால் (இபபோது) இங்கே;* ***யான் பெற்ற -*** *நான் அடைந்துள்ள;* ***பேர் உதவி -*** *பெரிய உதவி;* ***ஒருவற்கு இன்னம் பெறல் உண்டோ -*** *மற்றொருவரால் இனிப் பெற முடியுமோ? (முடியாது);* ***உற்றது இறல் உண்டோ -*** *(நான்) அடைந்த பெருஞ் செல்வத்திற்கு அழிவேனும் உள்ளதோ? (இல்லை);* ***என்னின் தீர்வான் -*** *என்னால நீக்கிக் கொள்ளும்படி;* ***இருந்த பேர் இடரை எல்லாம் -*** *நினைத்திருந்த (இராமனுடைய) பெருந் துன்பங்களையெல்லாம்;* ***நறவு உண்டு மறந்தேன் -*** *மதுவைக் குடித்தால் மறந்து போனேன்; (ஆதலால்)* ***காண -*** *இலக்குவனைப் பார்ப்பதற்கு;* ***நாணுவல் என்றான் -*** *வெட்கப்படுகின்றேன்' என்று சொன்னான்.*

*பிறர் எவராலும் பெறுதற்கு அரியதும், அழிவில்லாததுமான பேருதவியை நான் இராமனிடமிருந்து பெற்றிருந்தும், மது மயக்கத்தால் நன்றியை மறந்து அத் தலைவனுக்குச் செய்ய வேண்டிய உதவி எதையும் செய்யாமல் அவனை வருந்துமாறு விட்டு வைத்ததால் இப்போது இலக்குவனைக் கண்ணாறக் காணுதற்கும் வெட்கப்படுகிறேன் என்றான் சுக்கிரீவன் என்பது.*

*உறவுண்ட சிந்தையான் - மனமொத்த நண்பன். பேரிடர்: சீதையை நாடிப் பெறாமையால் இராமன் மென்மேலும் படுகின்ற துன்பம். 89*

*4358. 'ஏயின இது அலால், மற்று,*
*ஏழைமைப் பாலது என்னோ?*
*"தாய் இவள், மனைவி" என்னும் தெளிவு*
*இன்றேல், தருமம் என் ஆம்?*
*தீவினை ஐந்தின் ஒன்று ஆம்;*
*அன்றியும், திருக்கு நீங்கா*
*மாயையின் மயங்குகின்றாம்; மயக்கின்மேல்*
*மயக்கும் வைத்தாம்!*

***ஏயின இது அலால் -*** *(இப்பொழுது) என்னிடம் பொருந்திய இந்தக் குடிமயக்கம் தவிர;* ***மற்று ஏழைமைப் பாலது என்னோ -*** *வேறு அறியாமையில் சேரும் செயல் என்ன உள்ளது? (இவ்வாறு கள் குடிப்பதால்);* ***தாயிவள் மனைவி என்னும் தெளிவு இன்றேல் -*** *தாயென்றும் மனைவியென்றும் (வேறுபாடு அறியும்) அறிவு இல்லையென்றால்;* ***தருமம் என் ஆம் -*** *மற்றைய தருமங்கள் (கள் குடிப்பவனிடம்) இருந்தும் என்ன பயன்? (இவ்வாறு கள்ளுண்டு மயங்குதல்);* ***தீவினை ஐந்தின் -*** *ஐந்து பெரும் பாதகங்களுள்ளே;* ***ஒன்று ஆம் -*** *ஒன்றாகும்;* ***அன்றியும் -*** *அல்லாமலும்;* ***திருக்கு நீங்கா -*** *வஞ்சனை நீங்காத;* ***மாயையின் மயங்குகின்றாம் -*** *மாயையின் வசப்பட்டு மயங்ககின்ற நாம்; (அந்த மயக்கத்தைப் போக்கும் வல்லமை இல்லாதிருக்க);* ***மயக்கின் மேல் -*** *ஒரு மயக்கத்தின்*

*மேல்;* ***மயக்கும் வைத்தாம் -*** *(மதுவாகிய) மற்றொரு மயக்கத்தை ஊட்டியவர்களானோம்.*

*எவ்வகையிலும் காக்க முடியாத குற்றம் செய்தேனெனச் சுக்கிரீவன் கழிவிரக்கம் கொண்டான். பிறவியும் அதைச் சார்ந்த பிறவும் மாயையின் விளைவுகள் என்பது தத்துவம். இயல்பாகவே பொருந்தியுள்ள அந்த மாயைக்கு மேல் மற்றொரு மாயையாக மதுவருந்தும் மயக்கத்தைக் கைக் கொண்டதாகக் சுக்கிரீவன் வருந்துகின்றான். மது என்பது தன்னைக் குடித்தவனது அறிவைக் கெடுத்து அவனிடத்திலுள்ள பிற தருமங்களையும் கெடுத்துவிடும் என்பதால் தாய் இவள், மனைவி என்னும் தெளிவு இன்றேல் என்றார். ஐம்பெரும் பாதகங்கள்; கொலை, களவு, கள்ளுண்டல், பொய் கூறல், காமம். ஏயின - ஏய் என்ற பகுதியடியாகப் பிறந்தபெயரெச்சம். 90*

***4359. ' "தெளிந்து தீவினையைச் செற்றார்***
***பிறவியின் தீர்வர்" என்னா,***
***விளிந்திலா உணர்வினோரும்,***
***வேதமும், விளம்பவேயும்,***
***நெளிந்து உறை புழுவை நீக்கி,***
***நறவு உண்டு நிறைகின்றேனால் -***
***அளிந்து அகத்து எரியும்***
***தீயை நெய்யினால் அவிக்கின்றாரின்.***

***தெளிந்து தீவினையைச் செற்றார் -*** *மனம் தெளிந்து தீச்செயல்கள் செய்வதை விட்டவர்;* ***பிறவியின் தீர்வர் -*** *பிறவித் துன்பத்திலிருந்து நீங்கினவர் ஆவர்;* ***என்னா -*** *என்று;* ***விளிந்திலா உணர்வினோரும் -*** *அழியாத அறிவுடைய தத்துவ ஞானிகளும்;* ***வேதமும் -*** *நான்மறைகளும்;* ***விளம்பவேயும் -*** *சொல்லியிருக்கவும் (உணர்வில்லாமல்);*

***அகத்து அளிந்து எரியும் தீயை -*** *வீட்டில் கொழுந்து விட்டு எரியும் நெருப்பை;* ***நெய்யினால் அவிக்கின்றாரின் -*** *நெய்யைக் கொண்டு அணைக்கத் தொடங்குகின்றவரைப் போல;* ***நெளிந்து உறை -*** *நெளிந்து கொண்டு அதில் தங்கியுள்ள;* ***புழுவை நீக்கி -*** *புழுக்களை எடுத்தெறிந்து விட்டு;* ***நறவு உண்டு -*** *கள்ளைக் குடித்து;* ***நிறைகின்றேன் -*** *களிப்பில் மூழ்கி வாழ்வில் (போலியான) நிறைவு காணுகின்றேன் நான்.*

*மூண்டெரியும் நெருப்பில் நெய்யைச் சொரிந்தால் அந்த நெருப்பு அவியாது, மேன்மேல் வளருவதுபோல, இயற்கையில் மாயைக்கு வசப்பட்டுத் தீவினையில் உழல்கின்றவர் கட்குடிப்பதையும் மேற்கொள்வது தீவினை வளர்வதற்கே காரணமாய் முடியுமென்பது.*

***'நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால் காமம் நுதுப்போம் எனல்' -*** *(குறள்:1148) 91*

***4360. ' "தன்னைத் தான் உணரத் தீரும்,***
***தகை அறு பிறவி" என்பது***

*என்னத் தான் மறையும் மற்றத்*
*துறைகளும் இசைத்த எல்லாம்,*
*முன்னை, தான் தன்னை ஓரா*
*முழுப் பிணி அழுக்கின் மேலே,*
*பின்னைத் தான் பெறுவது, அம்மா!*
*நறவு உண்டு திகைக்கும் பித்தோ?*

***தன்னைத் தான் உணர** - (ஒருவன்) தன்னைத் தான் உணர்ந்த மாத்திரத்தில்; **தகை அறு பிறவி என்பது தீரும்** - பெருமையற்ற பிறவி என்ற பிணி நீங்கும்; **என்னத்தான்** - என்றே; **மறையும்** - வேதங்களும்; **மற்றத் துறைகளும்** - பிற வேதாங்கம் சாத்திரம் முதலியனவும்; **இசைத்த எல்லாம்** - சொல்லியவற்றையெல்லாம்; **தான் தன்னை ஓரா** - தான் தன்னுடைய உண்மை வடிவை உணராததால் உண்டாகும்; **முழுப் பிணி அழுக்கின் மேலே** - நிறைந்த நோயுடைய அழுக்குடம்பைப் பெற்றிருத்தலோடு; **பின்னை** - மேலும்; **நறவு உண்டு** - கள்ளைக் குடித்து; **முன்னைத் திகைக்கும் பித்து பெறுவது-** முன்னம் மனம் மயங்குகின்ற போதையைப் பெறுதலும் தகுதியாகுமோ?*

*பிறவித் துன்பம் நீங்கத் தன்னை உணர்தல் இன்றியமையாததாயிருக்க, அந்த அறிவின்மையோடு கள் மயக்கத்தையும் பெறுவது என்ன விந்தை எனக் கூறியது. தன்னைத் தானுணர்தல் - மெய்யறிவு பெறல். சுக்கிரீவன் தன்னைத்தான் உள்ளபடி உணராதது முதற்குற்றமென்றும் அதன்மேலும் கள்ளைக் குடித்தது இரண்டாவது குற்றமென்றும்குறித்தான். 92*

*4361. 'அளித்தவர், அஞ்சும் நெஞ்சின்*
*அடைத்தவர், அறிவில் மூழ்கிக்*
*குளித்தவர், இன்ப துன்பம்*
*குறைத்தவர், அன்றி, வேரி*
*ஒளித்தவர் உண்டு, மீண்டு, இவ்*
*உலகு எலாம் உணர ஓடிக்*
*களித்தவர் எய்தி நின்ற கதி*
*ஒன்று கண்டது உண்டோ?*

***அளித்தவர்** - (அபயம் என்று அடைந்தவரைப்) பாதுகாத்தவரும்; **அஞ்சும் நெஞ்சின் அடைத்தவர்** - ஐம்பொறிகளையும் மனத்தில் அடக்கியவர்களும்; **அறிவில் மூழ்கிக் குளித்தவர்** - தத்துவ ஞானத்தில் ஆழ்ந்திருப்பவரும்; **இன்பம் துன்பம் குறைத்தவர்** - இன்ப துன்பங்களில் விருப்பு வெறுப்பு அற்றவரும்; (சுக துக்கங்களைச் சமமாகக் கருதுபவர்); **அன்றி** - ஆகியோரைத் தவிர; **வேரி ஒளித்தவர் உண்டு** - கள்ளை மறைவாகக் குடித்து; **மீண்டு** - பின்பு; **இவ் உலகு எலாம் உணர** - இந்த உலகத்தவர் அனைவரும் அறியும்படி; **ஓடிக்களித்தவர்** - ஓடிக் களிப்புக் கொண்டவர்; **எய்தி நின்ற** - அடைந்துள்ள; **கதி ஒன்று** - ஒரு நற்கதியை; **கண்டது உண்டோ** - (யாரேனும்) பார்த்ததுண்டோ?*

*அஞ்சி வந்து அடைந்தவரை அபயமென்று காத்தலும் ஐம்பொறிகளை வசப்படுத்துதலும், தத்துவ அறிவு நிரம்புதலும், சுக துக்கங்களை ஒரு நிகராகக் கருதுவதும் ஆகிய இவையே நற்கதியடைவதற்குரிய வழிகளாகுமேயல்லாமல், கள்*

*குடித்தலால் ஒருகாலும் நற்கதியுண்டாகாது என்பது. ஐம்பொறிகளை மனத்தில் அடக்குவது: ஐம்பொறிகளைப் புலன்களின்மேல் செல்லவொட்டாது தடுத்து வைத்தல். வேரி: பாளை முதலியவற்றினின்று குடைந்தெடுக்கப்பட்ட மது, அஞ்சு - ஐந்து என்பதன் போலி. 93*

***4362. 'செற்றதும் பகைஞர், நட்டார்***
***செய்த பேர் உதவிதானும்,***
***கற்றதும், கண்கூடாகக்***
***கண்டதும், கலைவலாளர்***
***சொற்றதும், மானம் வந்து***
***தொடர்ந்ததும், படர்ந்த துன்பம்***
***உற்றதும், உணரார்ஆயின், இறுதி***
***வேறு இதனின் உண்டோ?***

***பகைஞர் செற்றதும் -*** *பகைவர் தமக்குப் புரிந்த தீங்கையும்;* ***நட்டார் செய்த -*** *நண்பர்கள் செய்த;* ***பேர் உதவி தானும் -*** *பெரிய நன்றியையும்;* ***கற்றதும் -*** *(தாம்) கற்ற கல்வியையும்;* ***கண் கூடாகக் கண்டதும் -*** *(தாம்) நேரில் பார்த்ததையும்;* ***கலைவலாளர் சொற்றதும் -*** *சாத்திரங்களில் வல்லவர் கூறியதையும்;* ***மானம் வந்து தொடர்ந்ததும் -*** *(தமக்குப்) பெருமை வந்து சேர்ந்த வழியையும்;* ***படர்ந்த துன்பம் -***

*(மனத்தில்) பற்றிய துன்பங்கள்;* ***உற்றதும் -*** *மிகச் சேர்ந்ததையும்;* ***உணரார் ஆயின் -*** *(கள் மயக்கத்தால் ஒருவர்) தெரிந்து கொள்ளாராயின்;* ***இதனின் வேறு உறுதி உண்டோ -*** *(அவர்களுக்கு) இவ்வாறு உணர்வதைக் காட்டிலும் நன்மை தருவது வேறொன்று உளதோ?*

*தன் நண்பராகிய இராமலக்குவர் செய்த பேருதவியை மறவாதிருப்பதே தனக்கு நன்மையெனக் கூறுகிறான் சுக்கிரீவன். பகைஞர் செற்றது முதலியவற்றை மறத்தலால் தீமையும், மறவாது மனத்துக் கொண்டிருத்தலால் நன்மையும் உண்டாம் என்றான். உறுதி பயக்கும் நன்மைகள் யாவற்றையும் மது சிதைத்து விடும் - ஒப்புமைக் கூட்டஅணி. 94*

***4363. 'வஞ்சமும், களவும், பொய்யும், மயக்கமும்,***
***மரபு இல் கொட்பும்,***
***தஞ்சம் என்றாரை நீக்கும்***
***தன்மையும், களிப்பும், தாக்கும்:***
***கஞ்ச மெல் அணங்கும்***
***தீரும், கள்ளினால்; அருந்தினாரை***
***நஞ்சமும் கொல்வது அல்லால்,***
***நரகினை நல்காது அன்றே?***

***கள்ளினால் -*** *கள்ளைக் குடிப்பதால்;* ***வஞ்சமும் களவும் -*** *வஞ் சனையும் திருட்டும்;* ***பொய்யும் மயக்கமும் -*** *பொய் பேசுதலும் அறி யாமையும்;* ***மரபு இல் கொட்பும் -*** *தொன்றுதொட்டு வந்த முறைக்கு மாறான கொள்கையும்;* ***தஞ்சம் என்றாரை -***

*அடைக்கலமாக அடைந்தவரை;* **நீக்கும் தன்மையும் -** *பாதுகாவாது நீக்கும் தீய பண்பும்;* **களிப்பும் -** *செருக்கும்;* **தாக்கும் -** *(சேர்ந்து வந்து) வருத்தும்;* **கஞ்ச மெல் அணங்கும் -** *செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் மென்மை நிரம்பிய திருமகளும்;* **தீரும் -** *நீங்குவாள்;* **நஞ்சமும் -** *நஞ்சும்;* **அருந்தினாரைக் கொல்வது அல்லால் -** *உண்பவரைக் கொல்லுமேயல்லாமல்;* **நரகினை நல்காது -** *(அவர்களுக்கு) நரகத்தைக் கொடுக்காது.*

*தன்னை உண்டவரது உடம்பை மட்டும் நஞ்சு அழிக்கும்; கள்ளோ உடம்பையழித்தலோடு உயிரையும் நரகத்தில் சேர்க்கும் என்பது. உவமானமாகிய நஞ்சைவிட உவமேயமாகிய மதுவுக்கு வேற்றுமை தோன்றக் கூறியது: வேற்றுமையணி. கள்ளினால் - வேற்றுமை மயக்கம். 'துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும் நஞ்சுண்பார் கள்ளுண் பவர்' - (குறள்- 926) என்ற குறட் கருத்தை ஒப்பிட்டுணர்க. குடிவெறியால் கைப்பொருள் அனைத்தும் இழந்து வறியராவர் ஆதலின் கஞ்ச மெல்லணங்கும் தீரும் என்றார். திருக்குறளும் இக்கருத்தினைக் கூறும்: 'இருமனப் பெண்டிரும் கள்ளுங் கவறும் திருநீக்கப் பட்டார் தொடர்பு' (குறள் : 920) 95*

***4364. 'கேட்டெனன், ''நறவால் கேடு வரும்''***
***என்; கிடைத்த அச்சொல்***
***காட்டியது; அனுமன் நீதிக்***
***கல்வியால் கடந்தது அல்லால்,***
***மீட்டு இனி உரைப்பது என்னே?***
***விரைவின், வந்து அடைந்த வீரன்***
***மூட்டிய வெகுளியால் யாம்***
***முடிவதற்கு ஐயம் உண்டோ?***

**நறவால் கேடு வரும் எனக் கேட்டெனன் -** *கள்ளைக் குடிப்பதால் தீங்கு விளையும் என்று (பெரியோர்) சொல்லக்கேட்டிருக்கிறேன்;* **கிடைத்த அச்சொல் காட்டியது -** *(அவ்வாறு) கூறப்படும் அந்தக் கூற்று நேர்முகமாகத் தன் வலிமையைக் காட்டிவிட்டது;* **மீட்டு இனி உரைப்பது என்னே -** *திரும்பவும் இனிமேல்சொல்ல வேண்டுவது என்ன இருக்கின்றது?* **அனுமன் நீதி கல்வியால் கடந்தது -** *அனுமனது நீதிநூல் அறிவால் மூளவிருந்த துன்பத்திலிருந்து நாம் நீங்கியது;* **அல்லால் -** *அல்லாமல்;* **விரைவின் வந்தடைந்த -** *விரைவாக வந்து சேர்ந்த;* **வீரன் மூட்டிய வெகுளியால் -** *வீரனாகிய இலக்குவனது மூட்டப்பட்ட சினத்தால்;* **நாம் முடிவதற்கு -** *நாம் இறந்தொழிவதற்கு;* **ஐயம் உண்டோ -** *ஐயம் உளதாகுமோ?*

*அனுமன் இடத்திற்கேற்பத் தனது நுட்ப உணர்வினால் இலக்குவனது சீற்றத்தைத் தணித்திரா விட்டால் நாம் இறுதி எய்திருப்போம் என்பதில் ஐயமில்லை என்றான் சுக்கிரீவன். 'காட்டியது': நேர்முகமாக வந்து காட்டியது அனுமனது கல்வியையும் நீதியையும் புகழ்ந்து அவனால் தான் தப்பியதை யுணர்ந்து சுக்கிரீவன் கூறியது இது. 96*

***4365. 'ஐய! நான் அஞ்சினேன், இந்***
***நறவினின் அரிய கேடு;***
***கையினால் அன்றியேயும் கருதுதல்***

கருமம் அன்றால்;
வெய்யது ஆம் மதுவை இன்னம்
விரும்பினேன் என்னில், வீரன்
செய்ய தாமரைகள் அன்ன
சேவடி சிதைக்க' என்றான்

**ஐய -** ஐயனே (அங்கதனே); **இந் நறவினின் அரிய கேடு -** இந்த மதுவால் நேரும் பெரிய தீங்கிற்கு; **நான் அஞ்சினேன் -** நான் பயந்தேன்; **கையினால் அன்றியேயும் -** அந்த மதுவைக் கையினால் தீண்டு வதல்லாமல்; **கருதுதலும் கருமம் அன்று -** மனத்தால் நினைத்தலும் செய்யக்கூடிய செயலாகாது; **வெய்யது ஆம் மதுவை -** கொடியதான இந்தக் கள்ளை; **இன்னம் விரும்பினேன் என்னின் -** இனியும் நான் விரும்பினேனானால்; **வீரன் செய்ய தாமரைகள் அன்ன சேவடி -** வீரனான

இராமனுடைய செந்தாமரை போன்று அடிகள்; **சிதைக்க என்றான் -** என்ன அழிப்பனவாக என்று ஆணையிட்டுக் கூறினான்.

இராமனின் திருவடியே சான்றாக மதுவை இனி ஒருக்காலும் விரும்பமாட்டேன் என்று சுக்கிரீவன் சூளுரை செய்தவாறு, மதுவை இடைவிடாது நினைத்தலும், இடையறாது காண்டலும் பின்னர் அதனைப் பருகுவதற்குத் தூண்டுகோல் ஆகுமாதலின் 'கருதுதல் கருமம் அன்று' என்றான். வெய்யதாம் மது: கடும் புளிப்பையுடைய மது; மேன்மேலும் விருப்பத்தை விளைவிக்கும் மது.
97

இலக்குவனைச் சுக்கிரீவன் எதிர்கொள்ளல்

4366. என்று கொண்டு இயம்பி, அண்ணற்கு
எதிர்கொளற்கு இயைந்த எல்லாம்
நன்று கொண்டு, 'இன்னும் நீயே
நணுகு!' என, அவனை ஏவி,
தன் துணைத் தேவிமாரும்,
தமரொடும தழுவ, தானும்
நின்றனன், நெடிய வாயில்
கடைத்தலை, நிறைந்த சீரான்.

**நிறைந்த சீரான் -** மிகுந்த நற்பண்புகளைக் கொண்ட சுக்கிரீவன்; **என்று கொண்டு இயம்பி -** மதுவை இனித் தொடேன் என்று சூளுரை செய்து கொண்டு; **அண்ணற்கு எதிர்கொளற்கு -** இலக்குவனை எதிர் கொள்வதற்கு; **இயைந்த எல்லாம் -** உரிய எல்லாவற்றையும்; **நன்று கொண்டு -** சிறப்பாக எடுத்துக் கொண்டு; **இன்னும் நீயே நணுகு -** இப்போதும் நீயே (அவனிடம்) செல்வாய்; **எனஅவனை ஏவி -** என்று அங்கதனுக்குக் கட்டளையிட்டு; **தன் துணைத் தேவிமாரும் -** தன் வாழ்க்கைத் துணைவியரான மனைவியர்; **தமரொடும் தழுவ -** உறவினருடன் தன்னைச் சூழ்ந்திருக்க; **தானும் -** தானும்; **நெடிய வாயில் கடைத்தலை -** உயர்ந்த பெரிய அரண்மனையின் தலைவாயிலில்; **நின்றனன் -** காத்திருந்தான்.

*அண்ணலை எதிர்கொள்ள இயைந்தவை: கொடி, குடை, சாமரம் முதலியன. அண்ணற்கு வேற்றுமை மயக்கம் அரசனுக்குப் பட்டத்தரசியர் தவிர வேறு மனைவியரும் உண்டாகலின் 'துணைத் தேவிமார்' எனப்பட்டது.*
*98*

***4367. உரைத்த செஞ் சாந்தும், பூவும்,***
***'சுண்ணமும், புகையும், ஊழின்***
***நிரைத்த பொற்குடமும், தீப மாலையும்,***
***நிகர் இல் முத்தும்,***
***குரைத்து எழு விதானத்தோடு***
***தொங்கலும், கொடியும், சங்கும்,***
***இரைத்து இமிழ் முரசும், முற்றும்***
***இயங்கின, வீதி எல்லாம். ****

***உரைத்த செஞ்சாந்தும் -*** *அரைத்த சிவந்த சந்தனக் குழம்பும்;* ***பூவும் சுண்ணமும் -*** *மலர்களும் நறுமணப் பொடிகளும்;* ***புகையும் -*** *(அகில் முதலிவற்றின்) நறும்புகையும்;* ***ஊழின் நிரைத்த பொன் குடமும் -*** *முறையாக வைக்கப் பெற்ற குடங்களும்;* ***தீப மாலையும் -*** *விளக்குகளின் வரிசையும்;* ***நிகர் இல் முத்தும் -*** *ஒப்புமை இல்லாத நல்ல முத்து மாலைகளும்;* ***குரைத்து எழு விதானத்தோடு -*** *ஒலித்து விளங்குகின்ற விதானங்களோடு;* ***தொங்கலும் -*** *பீலிக் குஞ்சங்களும்;* ***கொடியும் சங்கும் -*** *கொடிகளும் சங்குகளும்;* ***இரைத்து இமிழ் முரசும் -*** *இரைந்து ஒலிக்கின்ற முரசங்களும்;* ***முற்றும் -*** *(ஆகிய) இவை யாவும்;* ***வீதி எல்லாம் -*** *(கிட்கிந்தா நகரத்) தெருக்களில் எல்லாம்;* ***இயங்கின -*** *(சென்று) நிறைந்தன.*

*இலக்குவன் வருகையை யுணர்ந்த கிட்கிந்தா நகர மக்கள் மங்கலப் பொருள்களைக் கொண்டு வரவேற்றனர் என்பது. அட்டமங்கலங்கள்: கண்ணாடி, பூரண கும்பம், இடபம், வெண்கவரி, தோட்டி, திருமகள் உருவம், ஸ்வஸ்திகம், விளக்கு என்பன.*
*99*

***4368. தூய திண் பளிங்கின் செய்த***
***சுவர்களின் தலத்தில், சுற்றில்,***
***நாயக மணியின் செய்த நனி***
***நெடுந் தூணின் நாப்பண்,***
***சாயை புக்கு உறலால், கண்டோர்***
***அயர்வுற, 'கை விலோடும்***
***ஆயிரம் மைந்தர் வந்தார் உளர்'***
***எனப் பொலிந்தது அவ் ஊர். ****

***அவ் ஊர் -*** *அந்தக் கிட்கிந்தா நகரமானது;* ***தூய திண் பளிங்கின் செய்த -*** *தூயஉறுதியான படிகக் கற்களால் செய்யப்பட்ட;* ***சுவர்களின் தலத்தில் -*** *சுவர்களின் இடங்களிலும்;* ***சுற்றில் நாயக மணியின் செய்த -*** *சுற்றுப் புறங்களிலும், சிறந்த நவமணிகள் இழைத்துச் செய்த;* ***நனி நெடுந் தூணின் நாப்பண் -*** *மிக உயர்ந்த தூண்களின் இடையிலும்;* ***சாயை புக்கு உறலால் -*** *(இலக்குவனது) நிழல் சென்று*

*பொருந்துவதால்;* ***கண்டோர் அயர்வுற -*** *பார்த்தவர் யாவரும் மாறாக நினைக்கும்படி;* ***கை விலோடும் -*** *கையில் தாங்கிய வில்லுடனே;* ***ஆயிரம் மைந்தர் -*** *ஆயிரம் வீரர்கள்;* ***வந்தார் உளர் என -*** *வந்துள்ளார்கள் என்று கருதும்படி;* ***பொலிந்தது -*** *விளங்கியது.*

*இலக்குவன் செல்லுகின்ற இடங்களிலுள்ள பளிங்குச் சுவர்களிலும், இரத்தினத் தூண்களிலும் அவனது சாயை ஆயிரக் கணக்காகத் தோன்றியதால், பல வீரர் திரண்டு வந்தார்களோ என்று ஐயுறும்படி அந்த ஊர் விளங்கியது என்பது. நாயகம் - தலைமை.தற்குறிப்பேற்றவணி.* *100*

***4369. அங்கதன், பெயர்த்தும் வந்து, ஆண்டு***
***அடி இணை தொழுதான், 'ஐய!***
***எங்கு இருந்தான் நும் கோமான்?'***
***என்றலும், 'எதிர்கோள் எண்ணி,***
***மங்குல் தோய் கோயில் கொற்றக்***
***கடைத்தலை மருங்கு நின்றான் -***
***சிங்க ஏறு அனைய வீர! -***
***செய் தவச் செல்வன்' என்றான்.***

***அங்கதன் -*** *வாலி மைந்தனான அங்கதன்;* ***பெயர்த்தும் வந்து -*** *மறுபடியும் (இலக்குவன் உள்ள இடத்திற்கு) வந்து;* ***ஆண்டு இணை அடி தொழுதான் -*** *அங்கே இலக்குவனுடைய இணை அடிகளை வணங்கி னான் (அப்பொழுது இலக்குவன் அவனை நோக்கி);* ***ஐய நும்கோமான் -*** *ஐயனே உங்கள் தலைவனாகிய சுக்கிரீவன்;* ***எங்கு இருந்தான் -*** *எங்கே இருக்கிறான்;* ***என்றலும் -*** *என்று கேட்ட அளவில் (அங்கதன் இலக்குவனை நோக்கி);* ***சிங்க ஏறு அனைய வீர -*** *'ஆண் சிங்கத்தை ஒத்த வீரனே!* ***செய் தவச் செல்வன் -*** *(முற்பிறப்பில்) செய்த தவமாகிய செல்வத்தையுடைய சுக்கிரீவன்;* ***எதிர்கோள் எண்ணி -*** *(உன்னை) எதிர் கொள்ள நினைந்து;* ***மங்குல் தோய் கோயில் -*** *மேகம் படிகின்ற அரண்மனையினது;* ***கொற்றக் கடைத்தலை மருங்கு -*** *வெற்றியமைந்த தலைவாயில் புறத்து;* ***நின்றான் என்றான் -*** *நிற்கின்றான் என்று சொன்னான்.*

*முற்பிறவியில் சுக்கிரீவன் செய்த தவப்பயனால்தான் உமது நட்பு அவனுக்கு வாய்த்தது என்பான் அவனைச் 'செய்தவச் செல்வன்' என்றான் என்பது. இப் பிறப்பினும், வரும் பிறப்புகளிலும் தவம் உதவும் என்பதால் செய்தவம் என வினைத்தொகையால் குறித்தார். எதிர்கோள் - முதனிலை திரிந்த தொழிற்பெயர்.* *101*

***4370. கண்ணமும் தூசும் வீசி, சூடகத்***
***தொடிக் கைம் மாதர்,***
***கண் அகன் கவரிக் கற்றைக் கால்***
***உற, கலை வெண் திங்கள்***
***விண் உற வளர்ந்தது என்ன***
***வெண் குடை விளங்க, வீர***

***வண்ண வில் கரத்தான் முன்னர்,***
***கவிக் குலத்து அரசன் வந்தான்.***

***சூடகத் தொடிக் கை மாதர் -*** *சூடகத்தையும் தொடியையும் அணிந்த கைகளையுடைய வானரப பெண்கள்;* ***சுண்ணமும் தூசும் வீசி -*** *நறுமணப் பொடிகளையும் ஆடைகளையும் வீசிக் கொண்டு;* ***கண் அகல் கவரிக் கற்றை-*** *விசாலமான வெண்சாமரைத் தொகுதிகளால்;*

***கால் உற -*** *காற்றையுண்டாக்கவும்;* ***கலைவெண்திங்கள் -*** *பதினாறு கலைகளும் நிரம்பிய வெண்ணிறமான சந்திரன்;* ***விண் உற வளர்ந்தது என்ன-*** *வானத்தில் பொருந்தி விளங்குவது போல;* ***வெண்குடை விளங்க -*** *வெண்கொற்றக் குடை விளங்கவும்;* ***வீர வண்ண வில் கரத்தான் முன்னர் -*** *வீரம் நிறைந்த அழகிய வில்லைப் பிடித்த கையையுடைய இலக்குவன் எதிரில்;* ***கவிக் குலத்து அரசன் -*** *வானரத் தலைவனான சுக்கிரீவன்;* ***வந்தான் -*** *வந்தான்.*

*சுண்ணமும் தூசும் வீசுதல் மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் என்பது. சூடகம், தொடி - கைவளையின் வகைகள். சூடகம் - முன்கைவளை. தொடி - தோள்வளை; தோள்வளை இருபாலாரும் அணிவது. குடையும் சாமரமும் அரச சின்னங்களாம்.*
*102*

***4371. அருக்கியம் முதல ஆன***
***அருச்சனைக்கு அமைந்த யாவும்***
***முருக்கு இதழ் மகளிர் ஏந்த,***
***முரசுஇனம் முகிலின் ஆர்ப்ப,***
***இருக்குஇனம் முனிவர் ஓத, இசை***
***திசை அளப்ப, யாணர்த்***
***திருக் கிளர் செல்வம் நோக்கி,***
***தேவரும் மருளச் சென்றான்.***

***முருக்கு இதழ் மகளிர் -*** *கல்யாண முருங்கை மலரையொத்த இதழ்களையுடைய பெண்கள்;* ***அருக்கியம் முதல ஆன -*** *அருக்கியம் முதலாகவுள்ள;* ***அருச்சனைக்கு அமைந்தயாவும் -*** *(இலக்குவனை) வர வேற்று வழிபடுவதற்குரிய பொருள்கள் அனைத்தும்;* ***ஏந்த -*** *கையில் ஏந்தி வரவும்;* ***முரசு இனம் முகிலின் ஆர்ப்ப -*** *பேரிகை முதலிய இசைக் கருவிகளின் தொகுதி மேகம் போன்று ஒலிக்கவும்;* ***முனிவர் இருக்கு இனம் ஓத -*** *முனிவர் இருக்கு முதலியவற்றை ஓதிவரவும்;* ***இசை திசை அளப்ப -*** *இசையொலி எல்லாத் திக்குகளிலும் பரவவும்;* ***யாணர் திருக் கிளர் செல்வம் -*** *புதியதான சிறப்புமிக்க (தனது) செல்வச் சிறப்பை;* ***நோக்கித் தேவரும் மருள -*** *கண்டு தேவர்களும் திகைக்கும்படி;* ***சென்றான் -*** *(சுக்கிரீவன் இலக்குவன் முன்) சென்றான்.*

*அரசன் பிற அரச குலத்தவரானவரை வரவேற்கும் முறை இங்குக் கூறப் பெற்றுள்ளது. அருக்கியம் - கைகழுவ நீர்தருதல் - இது பதினாறு வகை உபசாரங்களான சோடச உபசாரங்களில் ஒன்று. மற்றவை: இருக்கையளித்தல், கால் கழுவ நீர் தருதல், முக்குடி நீர்தருதல், நீராட்டல், ஆடை காத்தல், முப்புரிநூல் தருதல், சந்தனக் குழம்பு பூசுதல், மலர் சூட்டுதல், அட்சதை தூவுதல், நறும்புகையூட்டல்,*

*விளக்கிடல், கர்ப்பூரம் ஏற்றுதல், அமுதம் ஏந்துதல், அடைக்காய் தருதல், மந்திர மலரால் அருச்சித்தல் என்பன. முருக்கு - மரப்பெயர் மலருக்காதலால் முதலாகு பெயர்; முருக்கிதழ் - கலியாண முருங்கை (முள் முருங்கை எனவுங்கூறுவர்).*
*103*

***4372. வெம் முலை மகளிர் வெள்ளம்***
***மீன் என விளங்க, விண்ணில்***
***சும்மை வான் மதியம் குன்றில்***
***தோன்றியது எனவும் தோன்றி,***
***செம்மலை எதிர்கோள் எண்ணி,***
***திருவொடு மலர்ந்த செல்வன்,***
***அம்மலை உதயம் செய்த***
***தாதையும் அனையன் ஆனான்.***

***செம்மலை -** தலைமை பொருந்திய இலக்குவனை; **எதிர்கோள் எண்ணி-** எதிர் கொள்ள நினைந்து; **திருவொடு மலர்ந்த செல்வன் -** அரசச்செல்வத்துடன் விளங்கும் சுக்கிரீவன்; **வெம் முலை மகளிர் வெள்ளம் -** விரும்பப்படும் முலைகளையுடைய வானரப் பெண்களின் கூட்டம்; **மீன் எனவிளங்க -** நட்சத்திரங்களைப் போல் விளங்க (அவர்களின் இடையில்); **விண்ணில் சும்மை வான் மதியம் குன்றில் தோன்றியது எனவும் -** தனக்குரிய ஒளியுடன் வானில் காணப்படும் வெண்மையான சந்திரன் மலையில்தோன்றியது போன்றும்; **தோன்றி -** காணப்பட்டு; **அம்மலை உதயம் செய்த-** அந்த உதயகிரியில் உதித்து ஒளிவீசும்; **தாதையும் அனையன் ஆனான் -** தந்தையாகிய சூரியனையும் ஒத்து விளங்கினான்.*

*சுக்கிரீவனுக்கு அவனது மகிழ்ச்சியின் சிறப்பை விளக்கச் சந்திரனும், அவனது அழகைச் சுட்ட உதயகிரியில் தோன்றி சூரியனும் உவமைகளாம். சும்மை - பேரொலி. கோள் - முதனிலை திரிந்ததொழிற்பெயர். 104*

*சுக்கிரீவனைக் கண்டவுடன் எழுந்த சீற்றத்தை இலக்குவன் ஆற்றிக் கொள்ளுதல்*

*கலிவிருத்தம்*

***4373. தோற்றிய அரிக் குலத்து***
***அரசை, தோன்றலும்,***
***ஏற்று எதிர்நோக்கினன்; எழுந்தது,***
***அவ் வழிச்***
***சீற்றம்; அங்கு; அதுதனை,***
***தெளிந்த சிந்தையால்***
***ஆற்றினன், தருமத்தின்***
***அமைதி உன்னுவான்.***

***தோன்றலும் -** சிறந்தவனான இலக்குவனும்; **தோற்றிய அரிக் குலத்து அரசை -** (எதிரில்) காணப்பட்ட வானர குலத்து அரசனான சுக்கிரீவனை; **ஏற்று எதிர் நோக்கினன்***

*- வரவேற்று எதிரே பார்த்தான்;* ***அவ்வழிச் சீற்றம் எழுந்தது -*** *அப்போது (இலக்குவனுக்குச்)*

*சினம் மூண்டது;* ***தருமத்தின் அமைதி உன்னுவான் -*** *தருமத்தின் நிலைமையைக் கருதுபவனான அந்த இலக்குவன்;* ***அங்கு அதுதனை -*** *அந்த இடத்தில் அந்தச் சினத்தை;* ***தெளிந்த சிந்தையால் -*** *தெளிவான தனது மனத்தினால்;* ***ஆற்றினன் -*** *தணித்துக் கொண்டான்.*

*தங்கள் திறத்தில் குறித்த தவணைப்படி வாராது தவறிய சுக்கிரீவன் எதிர்ப்பட்ட அளவில் இலக்குவனுக்குச் சினம் மூண்டதை இப்பாடல் சுட்டும். தாரை, அனுமன், அங்கதன் ஆகியோரால் இலக்குவனின் சினம் பெரும்பாலும் தணிந்தது என்பதும், அது முற்றிம் நீங்கவில்லை என்பதும் சுக்கிரீவனைக் கண்டதும் தருமத்தின் அமைதி உன்னியும், இராமன் முன்கூறியதை ஒட்டியும் தன் தெளிந்த சிந்தையால் அச்சினத்தை மாற்றினான் என்பதும் இங்கு அறியத் தக்கன. இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும் புணரின் வெகுளாமை நன்று - (குறள் - 308) 'காயும் கதமின்மை நன்று' (நாலடியார் - சினமின்மை: 1) 'நேர்த்தின்னா மற்றவர் செய்தக்கால் தாம் அவரைப் பேர்த்தின்னா செய்யாமை நன்று' - (நாலடி. சினமின்மை: 7) என்பன ஒப்புநோக்கத்தக்கன. 105*

*அனைவரும் மாளிகையை அடைதல்*

***4374. எழுவினும், மலையினும், எழுந்த தோள்களால்,***
***தழுவினர், இருவரும்; தழுவி, தையலார்***
***குழுவொடும், வீரர்தம் குழாத்தினோடும் புக்கு,***
***ஒழிவு இலாப் பொற் குழாத்து உறையுள் எய்தினார்.***

***இருவரும் -*** *(இலக்குவன் சுக்கிரீவன் என்ற) அந்த இருவரும்;* ***எழுவினும் மலையினும் எழுந்த தோள்களால் -*** *இரும்புத் தூண், மலை என்ற இவற்றைக் காட்டிலும் பருத்து ஓங்கிய (தம்) தோள்களால்;* ***தழுவினர் -*** *ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டார்கள்;* ***தழுவி -*** *(அவ்வாறு) தழுவிக் கொண்டு;* ***தையலார் குழுவொடும் -*** *வானர மகளிரின் கூட்டத்துடனும்;* ***வீரர்தம் குழாத்தினோடும் -*** *வீரர் கூட்டத்தோடும்;* ***ஒழிவு இலா -*** *எடுக்க எடுக்கக் குறையாத;* ***பொற்குழாத்து உறையுள் -*** *பொன்திரள் நிறைந்த அரண்மனைக்குள்ளே;* ***புக்கு எய்தினார் -*** *சென்ற சேர்ந்தார்கள்.*

*பொற்குழாத்து உறையுள் - நிதியறை. தோளுக்கு எழுவும் மலையும் உவமைகளாம். எழு - தூண்; இங்கு இரும்புத் தூணைக் குறித்தது. 106*

*அரியணையில் அமர்ந்திட இலக்குவன் இசையாமல் கல்தரையில் இருத்தல்*

***4375. அரியணை அமைந்தது காட்டி, 'ஐய! ஈண்டு***
***இரு' எனக் கவிக் குலத்து அரசன் ஏவலும்,***
***'திருமகள் தலைமகன் புல்லில் சேர, எற்கு***
***உரியதோ இஃது?' என மனத்தின் உன்னுவான்,***

***கவிக்குலத்து அரசன் -*** *வானர குலத்து மன்னனாகிய சுக்கிரீவன்;* ***அமைந்தது அரியணை காட்டி -*** *நன்றாக அமைக்கப்பட்ட ஒரு சிம்மாசனத்தை*

*(இலக்குவனுக்குக்) காண்பித்து;* **ஐய -** *தலைவனே!* **ஈண்டு இரு என-** *இதில் அமர்வாயாக என்று;* **ஏவலும் -** *வேண்டவும்;* **திரு மகள் தலைவன் புல்லில் சேர -** *(இலக்குவன்) இலக்குமி தலைவனாகிய இராமன் புல்தரையில் அமர்ந்திருக்க;* **இஃது எனக்கு உரியதோ -** *இந்தச் சிம்மாசனத்தில் அமர்வது எனக்குப் பொருந்துமோ?* **என மனத்தின் உன்னுவான் -** *என மனத்தில் சிந்திப்பவனாய். . . .*

*இலக்குமி கொழுநனான இராமன் புல்தரையில் இருக்கத் தான்மட்டும் அரியணையில் அமர்வதா என்று கருதினான் இலக்குவன்.* *107*

***4376. 'கல் அணை மனத்தினை***
***யுடைக் கைகேசியால்,***
***எல் அணை மணி முடி***
***துறந்த எம்பிரான்***
***புல் அணை வைக, யான்***
***பொன் செய் பூத் தொடர்***
***மெல் அணை வைகவும்***
***வேண்டுமோ?' என்றான்.***

**கல் அணை மனத்தினை உடை -** *கல்லைப் போன்ற மனத்தையுடைய;* **கைகேசியால் -** *கைகேசி பெற்ற வரத்தின் விளைவாக;* **எல் அணை மணி முடி -** *ஒளி பொருந்திய மணி மகுடத்தை;* **துறந்த எம் பிரான் -** *விட்டு (கானகம்) வந்த எம் தலைவனான இராமன்;* **புல் அணை வைக -** *புல்லாலாகிய படுக்கையிலே தங்க;* **யான் -** *நான்;* **பொன்செய் பூத் தொடர் -** *பொன்னால் செய்யப்பட்டதும் பூக்களால் புனையப் பெற்றதுமான;* **மெல் அணை வைகவும் -** *மென்மையான ஆசனத்தில் தங்குதலும்;* **வேண்டுமோ -** *விரும்பத்தக்கது ஆகுமோ?* **என்றான் -** *என்று கூறினான்.*

*இலக்குவன் கைகேயி செய்த கொடுமையை மறவாமல் இருப்பதைக் 'கைகேசியால் எல் அணை மணி முடி துறந்த எம்பிரான்' என்னும் மொழிகள் குறிக்கின்றன.*
*108*

***4377. என்று அவன் உரைத்தலும்,***
***இரவி காதலன்***
***நின்றனன்; விம்மினன், மலர்க்கண்***
***நீர் உக;***
***குன்று என உயர்ந்த***
***அக் கோயில் குட்டிம***
***வன் தலத்து இருந்தனன்,***
***மனுவின் கோ மகன்.***

**என்று அவன் உரைத்தலும் -** *என்று அந்த இலக்குவன் சொல்லிய அளவில்;* **இரவி காதலன் -** *சூரியன் மகனாகிய சுக்கிரீவன்;* **நின்றனன் -** *(திகைத்து) நின்றான்;* **மலர்க் கண் நீர் உக விம்மினன் -** *தாமரை மலர் போன்ற கண்களில்*

*கண்ணீர் பெருக உள்ளம் பொருமினான் (அப்போது); **மனுவின் கோமகன் -** மனுவின் வழித் தோன்றிய அரசகுமாரனான இலக்குவன்; **குன்று என உயர்ந்த -** மலை போல ஓங்கிய; **அக் கோயில் -** அந்த அரண்மனையினுடைய; **குட்டிம வன்தலத்து -** கல் பரப்பப்பட்ட மேடையில்; **இருந்தனன் -** அமர்ந்தான்.*

*சுக்கிரீவன் கண்ணீர் உகுத்தது இலக்குவனுடைய சொற்களைக் கேட்டும் தான் அந்நிலையில் நில்லாதது கருதியே எனலாம்.*

*குட்டிமம் - வடசொல்: கல் பாவிய வலிய இடம் என்று பொருள்படும்.*
*109*

*கண்டவர் உற்ற வருத்தம்*

***4378. மைந்தரும், முதியரும், மகளிர் வெள்ளமும்***
***அந்தம் இல் நோக்கினர், அழுத கண்ணினர்,***
***இந்தியம் அவித்தவர் என இருந்தனர்;***
***நொந்தனர்; தளர்ந்தனர்; நுவல்வது ஓர்கிலார்.***

*(அப்போதுஅங்குள்ள வானரக் கூட்டத்தில்)*

***மைந்தரும் -** இளையரும்; **முதியரும் -** வயது வந்தோரும்; **மகளிர் வெள்ளமும் -** மாதர்களின் கூட்டமும்; **அந்தம் இல் நோக்கினர் -** பொலிவிழந்த பார்வையினராய்; **அழுத கண்ணினர் -** அழுகின்ற கண்களையுடைவர்களாய்; **நுவல்வது ஓர்கிலார் -** (ஒன்றும்) சொல்லத் தோன்றாதவர்களுமாகி; **நொந்தனர் தளர்ந்தனர் -** மனம் வருந்திச் சோர்வுற்று; **இந்தியம் அவித்தவர் என இருந்தனர் -** ஐந்து புலன்களையும் அடக்கிய முனிவர்போல இருந்தார்கள்.*

*முனிவர்கள் பரமான்மாவை இடைவிடாது நினைந்து ஐம்பொறிகளையும் தம்தம் வழியிற் செல்ல வொட்டாது அடக்கியிருப்பதை, தமக்கேற்பட்ட மிகுந்த துன்பத்தால் வானரங்கள் ஐம்பொறிகளின் தொழில் அடங்கிச் செயலற்றிருத்தலுக்கு உவமை கூறினார்.*

*இலக்குவன் இராமனது நிலையைக் கூறியதைக் கேட்டதாலும், அவன் தரையில் அமர்ந்திருந்ததைக் கண்டதாலும் வானரங்களுக்கு மாற்றொணாத துயரம் ஏற்பட்டது என்பது. நொந்தனர் - முற்றெச்சம் இந்தியம் - இந்திரியம் என்ற வடசொல்லின் மரூஉ. இச்சொல்லாட்சி முன்னும் (2515) வந்தது. 110*

*அமுது உண்ணுமாறு சுக்கிரீவன் கேட்க, இலக்குவன் மறுத்தல்*

***4379. 'மஞ்சன விதிமுறை***
***மரபின் ஆடியே,***
***எஞ்சல் இல் இன் அமுது***
***அருந்தின், யாம் எலாம்***
***உய்ஞ்சனம் இனி' என***

*அரசு உரைத்தலும்,*
*அஞ்சன வண்ணனுக்கு*
*அனுசன் கூறுவான்:*

***அரசு -*** *சுக்கிரீவ மன்னன் (இலக்குவனைப் பார்த்து);* ***விதி முறை மரபின் -*** *'நூல்களில் கூறிய முறைப்படியே;* ***மஞ்சனம் ஆடியே -*** *நீராடி;* ***எஞ்சல் இல் -*** *குறைதல் இல்லாத (சுவையான);* ***இன் அமுது அருந்தின் -*** *இனிய உணவை உண்டால்;* ***யாம் எலாம் -*** *நாங்கள் எல்லாரும்;* ***இனி உய்ஞ்சனம் -*** *நல்வாழ்வு பெற்றவர்களாவோம்;* ***என உரைத்தலும் -*** *என்று சொல்லிய அளவில்;* ***அஞ்சன வண்ணனுக்கு அனுசன் -*** *மையையொத்த கரிய நிறத்தவனான இராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன்;* ***கூறுவான் -*** *சொல்லலானான்.*

*'இலக்குவனே! நீ நீராடி யுணவுண்டால் நாங்கள் உய்வோமெனச் சுக்கிரீவன் முகமன் கூறினான் என்பது. மரபு - இடத்திற்கேற்பது 'அனுசன் - அனுஜன்: பின் பிறந்தவன் எனப் பொருள் தரும் வடசொல். உய்ஞ்சனம் - உய்ந்தனம்: போலி; கால வழுவமைதி. அமுது (உணவு) - உவமையாகு பெயர். 111*

*4380. 'வருத்தமும் பழியுமே வயிறு மீக் கொள,*
*இருத்தும்என்றால், எமக்கு இனியது யாவதோ?*
*அருத்தி உண்டு ஆயினும், அவலம்தான் தழீஇ*
*கருத்து வேறு உற்றபின், அமிர்தும் கைக்குமால்'*

***வருத்தமும் பழியுமே -*** *துன்பமும் பழிச் சொல்லுமே;* ***வயிறு மீக் கொள -*** *வயிற்றில் நிரம்பியிருக்கவும்;* ***இருத்தும் என்றால் -*** *(நாங்கள்) உயிர் பிழைத்திருக்கிறோம் என்றால்;* ***எமக்க இனியது -*** *எங்களுக்கு இனிமை தரக்கூடியது;* ***யாவது? -*** *எதுதான்?* ***அருத்தி உண்டு ஆயினும் -*** *உண்பதற்கு மிகுந்த ஆசை இருப்பினும்;* ***அவலம் தழீஇ -*** *துன்பமடைந்து;* ***கருத்து வேறு உற்றபின் -*** *மனம் மாறுபட்ட காலத்தில்;* ***அமிழ்தும் கைக்கும் -*** *தேவாமுதமும் கசக்குமல்லவா?*

*உலகின் சுவையான பொருளையுண்ண ஒருவனுக்கு விருப்பமிருப்பினும் துன்பத்தால் மனம் சோர்ந்திருக்குங் காலத்துத் தேவாமுதமும் இனிமையாகத் தோன்றாது. அவ்வாறே உயிரைப் போக்கக் கூடிய வருத்தத்தையும் பழியையும் சுமந்து அரிதாக உயிர் பிழைத்திருக்கையில் எதுவும் இப்போது எங்களுக்கு இனிமையாகத் தோன்றாது. ஆதலால் நீ எனக்கு இடும் இனிய உணவு வேண்டா என்று இலக்குவன் கூறினான் என்பது. இங்கே வருத்தமும் பழியும் முறையே சீதையைப் பிரிந்ததாலும், அவளைப் பிறர் கொண்டு சென்றும் மீட்கவில்லையே என்றதனாலும் ஏற்பட்டவை. தான், ஆல் - அசைகள். ஓகாரம்எதிர்மறை. 112*

*4381. 'மூட்டிய பழி எனும் முரங்கு தீ அவித்து,*
*ஆட்டின கங்கை நீர் - அரசன் தேவியைக்*
*காட்டினஎனின் - எமைக் கடலின் ஆர் அமிர்து*
*ஊட்டினையால்; பிறிது உய்வும் இல்லையால்.*

***அரசன் தேவியை*** *- 'இராமன் தேவியாகிய சீதை';* ***காட்டினை எனின்*** *- இருக்குமிடத்தைக் காட்டுவாயானால்;* ***எமை*** *- எங்களைச் சுற்றி;* ***மூட்டிய பழி எனும்*** *- மூண்டுள்ள பழியாகிய;* ***முருங்கு தீ அவித்து*** *- அழிக்கவல்ல நெருப்பைத் தணித்து;* ***கங்கை நீர் ஆட்டினை*** *- கங்கையாற்றின் நீரால் நீராட்டினவனாவாய் (மேலும்); -* ***கடலின் ஆர் அமிழ்து ஊட்டினை*** *- பாற்கடலில் தோன்றிய அரிய அமிழ்தத்தால் எங்களை உண்பித்தவனாவாய்;* ***பிறிது உய்வும் இல்லை*** *- பிறகு எத்துயரமும் எங்களுக்கு இல்லாமற்போகும்.*

*'அமுது அருந்துக' என்ற சுக்கிரீவனுக்கு இலக்குவன் தான் விரும்பும் மஞ்சனைத்தையும் அமிழ்தத்தையும் சுட்டினான் என்பது. நீராடுவதால் வெப்பம் தணிதலும், நீரால் நெருப்பு அவிதலுமாகிய இயல்புகள் இங்குக் கருதத்தக்கன.*

*இலக்குவன் சுக்கிரீவனது கடமையையும், தான் வந்த காரணத்தையும் குறிப்பாகச் சுட்டினான் என்பது. 113*

***4382. 'பச்சிலை, கிழங்க, காய், பரமன் நுங்கிய***
***மிச்சிலே நுகர்வது; வேறு நான் ஒன்றும்***
***நச்சிலேன்; நச்சினேன் ஆயின், நாய் உண்ட***
***எச்சிலே அது; இதற்க ஐயம் இல்லையால்.'***

***பச்சிலை*** *- 'பசிய இலைகளும் (கீரைகளும்);* ***கிழங்கு காய்*** *- கிழங்குகளும் காய்களும் (ஆகிய இவற்றில்);* ***பரமன் நுங்கிய மிச்சிலே*** *- சிறந்தவனான இராமன் அமுது செய்து எஞ்சியதையே;* ***நான்நுகர்வது*** *- நான் உண்பது (அதைத் தவிர);* ***வேறு ஒன்றும் நச்சிலேன்*** *- வேறு எப்பொருளையும் விரும்பமாட்டேன்;* ***நச்சினேன் ஆயின்*** *- ஒருகால் விரும்பினேனானால்;* ***அது நாய் உண்ட எச்சிலே*** *- அது நாய் தின்று போட்ட எச்சிலேயாகும்;* ***இதற்க ஐயம் இல்லை*** *- இதில் ஐயமே யில்லை.'*

*கானகத்தில் இலக்குவன் வாழ்ந்த பாங்கினை விளக்குதற்கு மிக வாய்ப்பான இடமாகக் கம்பர் இந்த சூழலைப் பயன்படுத்தியிருக்கிறார். மெல்லணையில் அமராமல் கல் தரையில் இலக்குவன் அமர்ந்ததைக் கண்டபோது அவன்தன் அன்புநிலை கண்டு அவலம் உற்றனர். நல்லுணவேனும் கொள்ளக் கூடாதா எனற ஆதங்கத்தில் 'நீ அமுது கொண்டால் நாங்கள் உய்ந்தோமாவோம் (4379) என்று சுக்கிரீவன் சொல்லினான். உறங்காவில்லியாகிய இலக்குவனின் கைங்கரியச் செல்வம் புறச்செயல்களால் மட்டும் விளைந்ததன்று. உள்ளார்ந்த / உயிரார்ந்த உணர்விலேயே இராமனின் நலமன்றி வேறு கருதாதவன் இளைய பெருமாள். இராமனுக்குத்தான் தவ வாழ்க்கை என்பது கைகேயியின் நியமனம்; இலக்குவன் அதனை வலிய மேற்கொண்டான். எந்த அளவுக்கு? இராமன் உண்பது கிழங்கும்*

*காயுமே; அவன் உண்டதில் மிச்சம் இருந்தால், அதுவே இலக்குவன் உணவு. அந்த மிச்சில் தவிர வேறு எதனை உண்டாலும் நாய் உண்டு. எஞ்சிய எச்சிலாகவே இலக்குவன் கருதியிருக்கிறான். இலக்குவனின் பெருமிதப்பாங்கு அடுத்த பாடலிலும் தொடர்கிறது. 114*

***4383. 'அன்றியும் ஒன்று உளது;***
***ஐய! யான் இனிச்***

***சென்றெனன் கொணர்ந்து அடை***
***திருத்தினால், அது***
***நுன் துணைக் கோ***
***மகன் நுகர்வது; ஆதலான்,***
***இன்று, இறை தாழ்த்தலும்***
***இனிது அன்றாம்' என்றான்.***

***ஐய*** - *'தலைவனே!* ***அன்றியும் ஒன்று உளது*** - *(இவை) அல்லா மலும் (நான் கூற வேண்டியது) இன்னும் ஒன்று இருக்கின்றது;* ***யான் இனிச் சென்றனென்*** - *நான் இனித் திரும்பிச் சென்று;* ***கொணர்ந்து*** - *கீரை முதலியவற்றைக் கொண்டு வந்து;* ***அடை திருத்தினால்*** - *அந்தக் கீரை முதலியவற்றைப் பக்குவம் செய்தால்;* ***அது நுன் துணைக் கோமகன் நுகர்வது*** - *அதனையே உன் நண்பனும் அரசகுமாரனுமாகிய இராமன் நுகர்வதாகும்;* ***ஆதலான்*** - *ஆதலால்;* ***இன்று இறை தாழ்த்தலும்*** - *இப்பொழுது நான் இங்கே ஒரு கணமும் தாமதித்தல்;* ***இனிது அன்றாம்*** - *இனிமை தருவது ஆகாது;* ***என்றான்*** - *என்று இலக்குவன் சொல்லி முடித்தான்.*

*இராமன் பட்டினியோடு இருக்கையில் நான் இங்கே நொடிப் பொழுது தாமதிப்பதும் இனிதாகாது என்று குறிப்பித்தவாறு. அடை - இலை, கீரை, நுன்- திசைச் சொல்.* *115*

***4384. வானர வேந்தனும்,***
***'இனிதின் வைகுதல்,***
***மானவர் தலைமகன்***
***இடரின் வைகவே,***
***ஆனது, குரக்குஇனத்து எமர்கட்கு***
***ஆம்!' எனா,***
***மேல் நிலை அழிந்து,***
***உயிர் விம்மினான்அரோ.***

***வானர வேந்தனும்*** - *(இவ்வாறு இலக்குவன் கூறக் கேட்டு) குரக் கரசனான சுக்கிரீவனும் (இலக்குவனைப் பார்த்து);* ***மானவர் தலை மகன்*** - *'மனு வம்சத்தில் சிறந்தவனான இராமன்;* ***இடரின் வைக*** - *துன்பத்தில் ஆழ்ந்திருக்கும்போது;* ***இனிதின் வைகுதல் ஆனது*** - *இன்பமாகக் காலத்தைப் போக்குவதென்பது;* ***குரக்கு இனத்து எமர்கட்கு***

***ஆம்*** - *வானர குலத்துப் பிறந்த எங்களைப் போன்றவர்க்கே பொருந்தும்;* ***எனா*** - *என்று கூறி;* ***மேல்நிலை அழிந்து*** - *உடம்பு நிலை குலைந்து;* ***உயிர் விம்மினான்*** - *உயிர் வருந்தினான்.*

*இலக்குவன் சொற்களைக் கேட்ட சுக்கிரீவன் ஆற்றாது உடல்தளர்ந்து உயிர் வருந்தினான் என்பது. மானவத் தலைமகன் - சான்றோர் தலைவன் எனினுமாம். மேல் என்பது புறவுடலாம்; உடல் எழில் குலைதலும் மனம் நோதலும் ஆகும். மேல் என்னும் சொல் இன்னும் தென்தமிழகத்தில் உடல் என்ற பொருளில் வழங்குகிறது.*

*தென்தமிழகத்தில் மேலுக்குக் குளிச்சிட்டு வரேன் என்று பேசுதல்கண்கூடு.*
*116*

*அனுமனைச் சேனையுடன் வருமாறு ஏவிச் சுக்கிரீவன் இராமனிடம்செல்லுதல்*

***4385. எழுந்தனன் பொருக்கென,***
***இரவி காண்முளை;***
***விழுந்த கண்ணீரினன்,***
***வெறுத்த வாழ்வினன்,***
***அழிந்த அயர் சிந்தையன்,***
***அனுமற்கு, ஆண்டு, ஒன்று***
***மொழிந்தனன், வரன்முறை***
***போதல் முன்னுவான்.***

***இரவி கான்முனை -*** *சூரிய குமாரனான சுக்கிரீவன்;* ***பொருக்கென எழுந்தனன் -*** *விரைவாக எழுந்தான்;* ***விழுந்த கண் நீரினன் -*** *பெருகும் கண்ணீரையுடையவனும்;* ***வெறுத்த வாழ்வினன் -*** *செல்வ வாழ்க்கையை வெறுத்தவனும்;* ***அழிந்து அயர் சிந்தையன்*** *- வருந்தித் தளரும் மனமுடையவனுமாகி;* ***வரன் முறை போதல் முன்னுவான் -*** *இராமனிடம் முறைப்படி செல்ல எண்ணியவனாய்;* ***ஆண்டு -*** *அப்பொழுது;* ***அனுமற்கு -*** *அனுமனிடம்;* ***ஒன்று மொழிந்தனன் -*** *ஒரு சொல் சொன்னான்.*

*கான் முளை - ஒரு வம்சத்தில் தோன்றியவன். கால் - வமிசம். விழுந்த கண்ணீர், வெறுத்த வாழ்வு என்று எச்சங்களையடுக்கியதால் சுக்கிரீவன் விழிகளில் பிறரின் துயரம் கண்டு பொறாததால் தானாகப் பெருகிய கண்ணீரும், உண்மையாகவே வாழ்வில் ஏற்பட்ட வருத்தமும் கண்டு தெளியலாம். 117*

***4386. 'போயின தூதரின் புகுதும் சேனையை,***
***நீ உடன் கொணருதி, நெறி வலோய்!' என,***
***ஏயினன், அனுமனை, 'இருத்தி ஈண்டு' எனா,***
***நாயகன் இருந்துழிக் கடிது நண்ணினான்***

***நெறி வலோய் -*** *(சுக்கிரீவன் அனுமனைப் பார்த்து) நீதி நெறிகளில் வல்லவனே;* ***போயின தூதரின் -*** *(முன்பு கட்டளையிட்ட படி)*

*சென்றுள்ள தூதர்களோடு;* ***புகுதும் சேனையை -*** *இனி வரும் வானர சேனையை;* ***நீ உடன் கொணருதி -*** *நீ உன்னோடு அழைத்து வருக;* ***என -*** *எனவும்;* ***ஈண்டு இருத்தி -*** *(அதுவரை நீ) இங்கேயே இருப்பாய்;* ***எனா -*** *எனவும்* ***; அனுமனை ஏயினன் -*** *அனுமனுக்குக் கட்டளை யிட்டவனாய்;* ***நாயகன் இருந்துழி -*** *தலைவனான இராமன் தங்கியிருந்த இடத்திற்கு;* ***கடிது நண்ணினான் -*** *விரைந்து போகலானான்.*

*தூதரின் - உருபு மயக்கம். இருந்த உழி என்பது இருந்துழி எனத் தொக்கு வந்தது. ஏயினன் - முற்றெச்சம். 118*

***4387. அங்கதன் உடன் செல,***
***அரிகள் முன் செல,***
***மங்கையர் உள்ளமும் வழியும்***
***பின் செல,***
***சங்கை இல் இலக்குவன் -***
***தழுவி, தம்முன்னின்,***
***செங் கதிரோன் மகன்***
***கடிது சென்றனன். ****

***செங்கதிரோன் மகன் -*** *சிவந்த ஒளிக்கற்றைகளையுடைய சூரியன் மகனான சுக்கிரீவன்;* ***சங்கை இல் -*** *எப் பொருளிலும் ஐயம் திரிபு இல்லாத (தூய மனமுடைய);* ***இலக்குவன் தழுவி -*** *இலக்குவனைத் தழுவிக் கொண்டு;* ***அங்கதன் உடன்செல -*** *அங்கதன் தன்னுடன் வர வும்;* ***அரிகள் முன் செல -*** *வானரங்கள் முன்னே செல்லவும்;* ***மங்கையர் உள்ளமும் -*** *(அன்புள்ள) வானர மகளிரின் மனமும் பின் தொடர்ந்து வரவும்;* ***வழியும் பின் செல -*** *கடந்தவழிகள் பின்னே தங்கி விடவும்;* ***தம்முனின் -*** *தமையனான இராமனிடம்;* ***கடிது சென்றனன் -*** *விரைந்து சென்றான்.*

*சுக்கிரீவனுடைய காதலுக்கு உரியர் ஆகலின் மகளிர் மனம் அவன் பின் சென்றது என்றார். பின்செல: இரட்டுற மொழிதல் பின் தங்க பின்தொடர என்னும் இருபொருள் தருதலால். தம்முன்: இராமனால் தம்பியாகக் கருதப்பட்டவனாகலின் தம்முன் என்றார். அரசனுக்கு முன்பு வீரர்கள் செல்வது மரபாதலின் 'அரிகள் முன்செல' என்றார். 119*

***4388. ஒன்பதினாயிர கோடி யூகம், தன்***
***முன் செல, பின் செல, மருங்கு மொய்ப்புற,***
***மன் பெருங் கிளைஞரும் மருங்கு சுற்றுற,***
***மின் பொரு பூணினான் செல்லும் வேலையில்,***

***ஒன்பதினாயிர கோடி யூகம் -*** *ஒன்பதினாயிரங் கோடிக் குரக்குச் சேனைகள்;* ***தன் முன்செல பின்செல மருங்க மொய்ப்புற -*** *தனக்கு முன்னும் பின்னும் இருபக்கமும் நெருங்கி வரவும்;* ***மன் பெருங் கிளைஞரும் -*** *மிகச் சிறந்த உறவினர்களாகிய வானரங்களும்;* ***மருங்கு சுற்றுற -*** *அருகில் சூழ்ந்து வரவும்;* ***மின் பொரு பூணினான் -*** *மின்னல் போன்ற ஒளி விடுகின்ற அணிகளை அணிந்த சுக்கிரீவன்;* ***செல்லும் வேலையில் -*** *(இராமன் இருக்கும் இடத்திற்குப்) போகும் சமயத்தில். . .*

*பின்செல மருங்கு மொய்ப்புற என்ற சொற்போக்கினால் சுக்கிரீவனுடன் சென்ற பெரும் பரிவாரத்தின் இயல்பு புலனாகும். மருங்கு - பக்கம், மேல் யூகம் - குரக்குப் படை. 120*

***4389. கொடி வனம் மிடைந்தன; குமுறு பேரியின்***
***இடி வனம் மிடைந்தன; பணிலம் ஏங்கின;***

***தடி வனம் மிடைந்தன, தயங்கு பூண் ஒளி;***
***பொடி வனம் எழுந்தன; வானம் போர்த்தவே.***

***கொடி வனம் மிடைந்தன -*** *கொடிகளின் தொகுதிகள் அடர்ந்து நிறைந்தன;* ***குமுறும் பேரியின் -*** *முழங்குகின்ற பேரிகைக் கருவிகளின்;* ***இடிவனம் மிடைந்தன*** *- இடி போன்ற ஒலித் தொகுதிகள் நிறைந்தன;* ***பணிலம் ஏங்கின -*** *சங்குகள் ஒலித்தன;* ***தயங்கு பூண் ஒளி -*** *விளங்கு கின்ற அணிகளின் ஒளியாகிய;* ***தடி வனம் மிடைந்தன -*** *மின்னலின் தொகுதிகள் நிறைந்தன;* ***பொடி வனம் எழுந்தன -*** *(பூமியிலிருந்து) புழுதித் தொகுதிகள் கிளம்பின;* ***வானம் போர்த்த -*** *இவையெல்லாம் வானத்தை அளாவி மூடின.*

*வனம் - இங்கே தொகுதி, மிகுதி என்னும் பொருளில் வந்துள்ளது.*

*மிடைந்தன என்ற ஒரு சொல் பொருளில் பல முறை வந்தது.*

*தடி - மின்னல்; தடித் என்ற வடசொல்லின் விகாரம் என்பர்.* *121*

***4390. பொன்னினின், முத்தினின், புனை***
***மென் தூசினின்,***
***மின்னின மணியினின்,***
***பளிங்கின், வெள்ளியின்,***
***பின்னின; விசும்பினும்***
***பெரிய; பெட்புறத்***
***துன்னின, சிவிகை; வெண்***
***கவிகை சுற்றின.***

***பொன்னினின் -*** *பொன்னாலும்;* ***முத்தினின் -*** *முத்துக்களாலும்;* ***புனை மெல்தூசினின் -*** *அழகிய மெல்லிய ஆடைகளாலும்;*

***மின்னின மணியினின் -*** *ஒளிவிடுகின்ற மணிகளினாலும்;* ***பளிங்கின் வெள்ளியின் -*** *படிகக் கற்களாலும் வெள்ளியினாலும்;* ***பின்னின சிவிகை -*** *செய்யப்பட்டவனாகிய பல்லக்குகள்;* ***விசும்பினும் பெரிய -*** *ஆகாயத்தைவிட மிக விரிந்தனவாய்;* ***பெட்புறத் துன்னின -*** *யாவரும் விரும்பும்படி நெருங்கிவந்தன;* ***வெண் கவிகை -*** *வெண்கொற்றக் குடைகள்;* ***சுற்றின -*** *சுழன்று வந்துன.*

*குடைகள், அகன்ற ஆகாயம் முழுவதையும் மறைத்தலால் 'விசும்பினும் பெரிய' என்றார். விரிவு அல்லது அகற்சிக்கே விசும்பு உவமையாக்கப் பெறும்.*
*122*

***4391. வீரனுக்கு இளையவன் விளங்கு சேவடி***
***பாரினில் சேறலின், பரிதி மைந்தனும்,***
***தாரினின் பொலங் கழல் தழங்க, தாரணித்***
***தேரினில் சென்றனன், சிவிகை பின் செல.***

***வீரனுக்கு இளையவன் -*** *இராமனுக்குத் தம்பியான இலக்குவனது;* ***விளங்கு சேவடி -*** *ஒளிவிடுகின்ற சிவந்த திருவடிகள்;* ***பாரினில் சேறலின் -*** *நிலத்தில் நடந்து செல்லுவதனால்;* ***பரிதி மைந்தனும் -*** *சூரிய குமாரனான சுக்கிரீவனும்;* ***தாரினில் பொலன் கழல் தழங்க -*** *கிண்கிணி மாலைகள் போலக் காலில் கட்டிய வீரக் கழல்கள் ஒலிக்க; (தானும் காலால் நடந்து);* ***சிவிகை பின் செல-*** *பல்லக்கு தனக்குப் பின்னே வர;* ***தாரணித் தேரினில்-*** *பூமியாகிய தேரின் மேல்;* ***சென்றனன் -*** *சென்றான் (தரையில் நடந்தான்).*

*இலக்குவன் பாதம் வருந்தப் பூமியில் நடந்து செல்லுதலால், சுக்கிரீவனும் சிவிகையேறிச் செல்லாமல் தரையில் நடந்து சென்றான் என்பது. தார் - கிண்கிணிமாலை. இலக்குவனும், சுக்கிரீவனும் ஒரு பொற் சிவிகையிலேறிச் சென்றதாக வான்மீகி கூறுவார். 123*

***4392. எய்தினன், மானவன் இருந்த***
***மால் வரை,***
***நொய்தினின் - சேனை பின்பு***
***ஒழிய, நோன் கழல்***
***ஐய வில் குமரனும்,***
***தானும், அங்கதன்***
***கை துறந்து அயல் செல,***
***காதல் முன் செல.***

***நோன் கழல் -*** *வலிய வீரக் கழலையும்;* ***ஐய வில் குமரனும் -*** *அழகிய வில்லையும் உடைய இலக்குவனும்;* ***தானும் -*** *சுக்கிரீவனும்;* ***சேனை பின்பு ஒழிய -*** *(உடன் வந்த) வானர சேனைகள் பின்னே தங்கவும்;* ***அங்கதன் கைதுறந்து -*** *அங்கதன் பக்கத்தை விட்டு;* ***அயல்***

***செல -*** *ஒரு புறம் வரவும்;* ***காதல் முன்செல -*** *(இராமனைக் காண வேண்டுமென்ற) ஆசை முன்னே செல்லவும்;* ***மானவன் இருந்த -*** *இராமன் தங்கியிருந்த;* ***மால்வரை -*** *பெரிய மலையை;* ***நொய்தினின் எய்தினன் -*** *விரைவாகச் சென்றடைந்தான்.*

*பெரியவரிடத்துச் செல்லும்போது ஆடம்பரத்துடன் செல்லுதல் தகுதியாகாது. ஆதலால் இராமனிடம் செல்லும் சுக்கிரீவன் வானரசேனைகளை விட்டு அங்கதனும் சிறிது அப்பால் வரத் தான் தனியே செல்பவனானான் என்பது. இராமன் தங்கியிருந்த இடத்தை ஆர்வமிகுதியால் சுக்கிரீவன் வேகமாகச் சென்றதனால் வானர வீரரும் அங்கதனும் பின்னிட நேரிட்டது எனவும் கூறலாம். கழலுக்கு நோன்மை - பிறக்கிடாத தன்மை. காதல் முன்செல -இராமனைக் காணு முன்னரே காணவேண்டும் என்ற ஆசை முன் செல என்றவாறு. 'நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏற' (பெ.பு:கண்ணப்ப. 103) எனத் திண்ணனாருக்கு முன் அவர் கொண்ட அன்பு முன்னே சென்றதாகச் சேக்கிழார் குறிப்பிடுதல் இங்கே ஒப்புநோக்கத்தக்கது. 124*

***4393. கண்ணிய கணிப்ப அருஞ்***
***செல்வக் காதல் விட்டு,***

***அண்ணலை அடி தொழ***
***அணையும் அன்பினால்,***
***நண்ணிய கவிக் குலத்து***
***அரசன், நாள்தொறும்***
***புண்ணியன் - தொழு***
***கழல் பரதன் போன்றனன்.***

***கண்ணிய -*** *யாவரும் கருதக் கூடிய;* ***கணிப்ப அருஞ் செல்வம் -*** *அளவிடமுடியாத (மிகப் பெருஞ்) செல்வத்தில்;* ***காதல்விட்டு -*** *ஆசையை நீத்து;* ***அண்ணலை -*** *இராமனின்;* ***அடிதொழ அணையும் -*** *திருவடிகளை வணங்குவதற்குப் பொருந்திய;* ***அன்பினால் நண்ணிய -*** *பக்தியோடு அடைந்த;* ***கவிக் குலத்து அரசன் -*** *வானர குலத்தலைவ னான சுக்கிரீவன்;* ***நாள்தொறும் -*** *தினந்தோறும்;* ***புண்ணியன் கழல் தொழு -*** *புண்ணிய வடிவாகிய இராமனைத் திருவடிகளில் வீழ்ந்து வணங்குகின்ற;* ***பரதன் போன்றனன் -*** *பரதனையொத்து விளங்கினான்.*

*சுக்கிரீவன் இராமனிடம் கொண்ட பக்தி பரதனது பக்தியைப் போலும் என்பது. பரதன் செல்வப் பற்றுச் சிறிதுமின்றி இராமனுடைய பாதுகைகளை நாள்தோறும் வணங்கும் தன்மையன்; அரச போகத்தில் மூழ்கிக் கிடந்திடாமல் இராமனிடம் பக்திகொண்டு அப் பெருமானின் திருவடிகளை வணங்கி வரும் பரதனைச் சுக்கிரீவனுக்கு உவமைகூறினார். 125*

***4394. பிறிவு அருந் தம்பியும் பிரிய, பேர் உலகு***
***இறுதியில் தான் என இருந்த ஏந்தலை,***
***அறை மணித் தாரினோடு, ஆரம் பார் தொட,***
***செறி மலர்ச் சேவடி முடியின் தீண்டினான்.***

***பிறிவு அருந் தம்பியும் -*** *பிரியாது எப்போதும் உடனிருக்கும் தம்பியாகிய இலக்குவனும்;* ***பிரிய -*** *பிரிந்து சென்றதால்;* ***பேருலகு இறுதியில் -*** *பெரிய உலகங்கள் யாவும் அழிந்துபடும் ஊழி இறுதியில்;* ***தான் என இருந்த -*** *(தனித்து நிற்கும்) திருமாலாகிய தன்னைப் போன்று தனிப்பட்டிருந்த;* ***ஏந்தலை -*** *இராமபிரானை; (சுக்கிரீவன்);* ***அறை மணித் தாரினோடு ஆரம் -*** *(தனது மார்பில் பூண்ட) ஒலிக்கின்ற மணி மாலைகளும் முத்து மாலைகளும்;* ***பார் தொட -*** *பூமியில் படும் படி;* ***செறி மலர் சே அடி -*** *அடர்ந்த செந்தாமரை மலர் போன்ற சிவந்த திருவடிகளை;* ***முடியின் தீண்டினான் -*** *தனது தலையினால் தொட்டான் (திருவடிகள் சிரத்தில் படுமாறு வணங்கினான்).*

*பிரளயத்தின் இறுதியில் திருமால் தனியே தன்னைத் தானே பார்த்திருத்தலாகிய உண்மை இங்குக் கூறப்பட்டது. எப்போதும் பிரியாது உடனுறையும் தம்பியாகிய இலக்குவனையும் பிரிந்து தனித்திருக்கும் இராமனுக்கு யுகாந்த காலத்தில் தான்மட்டும் தனித்திருக்கும் திருமாலை உவமைகூறினார். 126*

இராமன் சுக்கிரீவனை நலன் உசாவுதல்

***4395. தீண்டலும், மார்பிடைத்***
***திருவும் நோவுற,***

***நீண்ட பொன் தடக்***
***கையால் நெடிது புல்லினான்;***
***மூண்டுஎழு வெகுளி***
***போய் ஒளிப்ப, முன்புபோல்***
***ஈண்டிய கருணை தந்து,***
***இருக்கை ஏவியே,***

***தீண்டலும்*** *- (சுக்கிரீவன் தன்னை) வணங்கியவுடனே;* ***மார்பிடைத் திருவும் நோவுற*** *- (இராமன் தனது) திருமார்பில் (இடைவிடாது) உறைகின்ற திருமகளும் வருந்தும்படி;* ***நீண்ட பொன் தடக் கையால்*** *- நீண்டு தொங்கும் அழகிய பெரிய கைகளினால்;* ***நெடிது புல்லினான்*** *- அழுந்தத் தழுவியவனாய்;* ***மூண்டு எழு வெகுளி*** *- (சுக்கிரீவன் மேல்) மூண்டெழுந்த கோபமானது;* ***போய் ஒளிப்ப*** *- தணிந்துபோக;* ***முன்புபோல் ஈண்டிய கருணை தந்து*** *- முன்பு போலவே மிக்க அன்பு பாராட்டி;* ***இருக்கை ஏவி*** *- (அந்தச் சுக்கிரீவனை) அமருமாறு பணித்து;*

*இராமனது சினம் கருணையாக மாறியது; சுக்கிரீவனைக் காணும் வரையில் அவன்பால் கொண்டிருந்த சினம் இராமனிடம் குடிகொண்டிருந்தது இங்குக் குறிக்கத்தக்கது. நெடிது புல்லுதல்: காடாலிங்கனமும உயிருறத் தழுவுதலும் ஆகும். 127*

***4396. அயல் இனிது இருத்தி,***
***'நின் அரசும் ஆணையும்***
***இயல்பினின் இயைந்தவே?***
***இனிதின் வைகுமே,***
***புயல் பொரு தடக் கை***
***நீ புரக்கும் பல் உயிர்?***
***வெயில் இலதே, குடை?'***
***என வினாயினான்.***

***அயல் இனிது இருத்தி*** *- (இராமன் சுக்கிரீவனை) அருகில் இனி மையாக இருக்கச் செய்து;* ***நின் அரசும் ஆணையும்*** *- (அவனை நோக்கி) உனது ஆட்சியும் ஆணையும்;* ***இயல்பினில் இயைந்தவே*** *- ஒருவகை இடருமின்றி நூல்கள் கூறிய முறையால் இயல்பாகவே அமைந்துள்ள னவா?* ***புயல் பொரு தடக்கை*** *- மேகம் போன்ற (கைம்மாறு கருதாமல் கொடுக்கவல்ல) நீண்ட கைகளையுடைய;* ***நீ புரக்கும் பல் உயிர்*** *- உன்னால் காக்கப்படுகின்ற பல உயிர்களும்;* ***இனிதின் வைகுமே*** *- இன்பமாக வாழ்ந்து வருகின்றனவா?* ***குடை வெயில் இலதே*** *- உனது வெற்றிக் குடை வெம்மைத் தராமல் இருக்கிறதா?* ***என வினாயினான்*** *- என்று கேட்டான்.*

*இராமனது முதல் வினா சுக்கிரீவனது நன்மையையும், பிற வினாக்கள் குடிகளின் நன்மையையும் கருதி நிகழ்ந்தவை. அரசாட்சி, அரசபாரம் எனப்படுவதாலும், அதைச் செய்யும்போது எங்கும் தன் ஆணை செல்லவேண்டிருயிப்பதாலும் அவை எவ்வித இடையூறுமின்றித் தடைப்படாமல் நடக்கின்றனவா என்பான் 'நின்னரசும் ஆணையும் இயல்பினின் இயைந்தவே' என்றும், அவை எங்கும் தடையின்றிச் சென்றாலும்*

*குடிகளுக்கு இனிமை தருவது இன்றியமையாததாதலால் 'நீ புரக்கும் பல்லுயிர் இனிதின் வைகுமே' என்றும் வினவினான். 128*

*சுக்கிரீவன் தன் பிழைக்கு வருந்தல்*

***4397. பொருளுடை அவ் உரை***
***கேட்டபோழ்து, வான்***
***உருளுடைத் தேரினோன்***
***புதல்வன், 'ஊழியாய்!***
***இருளுடை உலகினுக்கு இரவி***
***அன்ன நின்***
***அருளுடையேற்கு அவை***
***அரியவோ?' என்றான்.***

***பொருளுடை** - சிறப்பான பொருள் பொருந்திய; **அவ் உரை கேட்ட போழ்து** - (இராமனது) அந்தச் சொற்களைக் கேட்ட அளவில்; **வான உருள் உடை** - ஆகாயத்தில் செல்லுகின்ற ஒற்றைச் சக்கரத்தையுடைய;*

***தேரினோன் புதல்வன்** - தேரைக் கொண்டவனான சூரியன் மகனாகிய சுக்கிரீவன்; (இராமனைப் பார்த்து); **ஊழியாய்** - ஊழிக் காலத்தும் அழியாது நிலைத்துள்ளவனே! **இருள் உடை** - இருளையு டைய; **உலகினுக்கு இரவி அன்ன** - உலகத்திற்குக் கதிரவன் போன்ற; **நின் அருளுடையேற்கு** - உனது அருளைப் பெற்ற எனக்கு; **அவை அரியவோ** - அச் செயல்கள் அருமையானவையோ? **என்றான்** - என்று கூறினான்.*

*சுக்கிரீவன் தன் மனைவியைப் பிரிந்து வாலியினால் துரத்தப்பட்டு உருசிய முக மலையில் செய்வது இன்னதென்று தெரியாமல் திகைத்து நின்ற காலத்தில், தன் துயரம் யாவும் ஒருங்கே நீங்குமாறு வந்த இராமனுக்கு, புற இருள் கவிந்து செய்தொழில் அறியாது மயங்கிக் கிடக்கும் இவ்வுலக உயிர்களுக்கு அந்த இருளை நீக்குமாறு தோன்றும் கதிரவனை உவமையாக்கினார். உனது கருணையொன்று தானே எனக்கு எல்லாவற்றையும் இனிது நடத்துகின்றது என்பான் 'நின் அருளுடையேற்கு அவை அரியவோ' என்றான். இத் தொடர்களால், சுக்கிரீவன் இராமனிடம் கொண்ட பக்தியும், நயம்பட உரைக்கும் ஆற்றலும் தெளிவாம். உருள் - ஒற்றைச் சக்கரம். அரியவோ - ஓகாரம் எதிர்மறை. 129*

***4398. பின்னரும் விளம்புவான்,***
***'பெருமையோய்! நின்று***
***இன் அருள் உதவிய***
***செல்வம் எய்தினேன்;***
***மன்னவ! நின் பணி***
***மறுத்து வைகி, என்***
***புல் நிலைக் குரங்கு***
***இயல் புதுக்கினேன்' என்றான்.***

***பின்னரும் -*** *(சுக்கிரீவன் இராமனை நோக்கி) மறுபடியும்;* ***விளம்புவான் -*** *கூறுவான்;* ***'பெருமையோய் -*** *பெருமைக் குணமுடைய வனே!* ***மன்னவ -*** *அரசனே!* ***நினது இன் அருள் -*** *உனது இனிய அருளால்;* ***உதவிய செல்வம் எய்தினேன் -*** *கிடைத்தற் கரிய செல்வத்தை அடைந்தேன்;* ***நின் பணி மறுத்து வைகி -*** *(அவ்வாறு பெற்றிருந்தும்) உனது கட்டளையை மீறி நடந்து;* ***என் புல் நிலை -*** *எனது அற்பமான;* ***குரங்கு இயல் புதுக்கினேன் -*** *குரங்குப் புத்தியைப் புதிதாக வெளிப் படுத்தி விட்டேன்;* ***என்றான் -*** *என்று கூறினான்.*

*உதவி செய்தவர் திறத்தில் செய்ந் நன்றி மறந்து பிழை செய்த தனது இழிகுணத்தைச் சுக்கிரீவன் வெறுத்துக் கூறுகின்றான் என்பது.* *130*

***4399. 'பெருந் திசை அனைத்தையும்***
***பிசைந்து தேடினேன்***
***தரும் தகை அமைந்தும்,***
***அத் தன்மை செய்திலேன்;***
***திருந்திழை திறத்தினால்,***
***தெளிந்த சிந்தை நீ,***
***வருந்தினை இருக்க, யான்***
***வாழ்வின் வைகினேன்.***

*(பின்னும் இராமனை நோக்கிச் சுக்கிரீவன்);* ***பெருந்திசை அனைத் தையும் -*** *பெரிய திக்குகள் எல்லாவற்றையும்;* ***பிசைந்து தேடினேன் -*** *துருவித் தேடிப் பார்த்து;* ***தரும் தகை -*** *சீதையைக் கொண்டுதரக் கூடிய திறமை;* ***அமைந்தும் -*** *(என்னிடம்) இருந்தும்;* ***அத் தன்மை செய்திலேன் -*** *அவ்வாறு செய்யாதவனாய்;* ***திருந்து இழை திறத்தினால் -*** *வேலைப்பாடு மிக்க அணிகளை அணிந்தவளான சீதையின் பொருட்டு;* ***தெளிந்த சிந்தை நீ-*** *இயல்பாகவே கலக்கம் இல்லாமல் தெளிந்த மனமுடைய நீ;* ***வருந்தினை இருக்க -*** *வருந்தி இருக்கவும்;* ***யான் -*** *(அதைச் சிறிதும் எண்ணாமல்) நான்;* ***வாழ்வில் வைகினேன் -*** *இன்ப வாழ்க்கையில் காலங்கழித்தேன்.*

*கலங்காத இராமனது மனம் கலங்கியிருக்க அதைத் தெளிவிக்கும் வல்லமை தனக்கு இருந்தும் அதற்கேற்ற வழிமுறையும் தேடாது இன்ப வாழ்வில் பொழுது போக்கியிருந்த தன் பேதைமையைச் சுக்கிரீவன் வெறுத்துக் கூறுகின்றான் என்பது. திருந்திழை - சீதை: அன்மொழித் தொகை.* *131*

***4400. 'இனையன யானுடை***
***இயல்பும், எண்ணமும்,***
***நினைவும், என்றால், இனி,***
***நின்று யான் செயும்***
***வினையும், நல் ஆண்மையும்,***
***விளம்ப வேண்டுமோ? -***
***வனை கழல், வரி சிலை,***
***வள்ளியோய்!' என்றான்.***

***வனைகழல் -*** *கட்டிய வீரக் கழலையும்;* ***வரிசிலை வள்ளியோய் -*** *கட்டமைந்த வில்லையுமுடைய வள்ளலே!* ***யான் உடை -*** *என்னுடைய;* ***இயல்பும் எண்ணமும் -*** *தன்மையும் மனக்கருத்தும்;* ***நினைவும் -*** *எண்ணங்களும்;* ***இனையன என்றால் -*** *இத் தன்மையனவாக இருந்தால்;* ***இனி யான் -*** *இனிமேல் நான்;* ***நின்று செயும் -*** *துணையாக இருந்து செய்யப் போகின்ற;* ***வினையும் நல்லாண்மையும் -*** *செயலையும் சிறந்த வீரத்தையும்;* ***விளம்ப வேண்டுமோ -*** *சொல்லத் தகுமோ;* ***என்றான் -*** *(இராமனை நோக்கிச் சுக்கிரீவன் மனம் வருந்திக்) கூறினான்.*

*நீ மனத்தில் பெருந் துயரத்தோடு இருக்கவும் நானோ சீதையைத் தேடித்தர வேண்டிய முயற்சி செய்யாமல் இன்ப நுகர்ச்சியில் இதுவரையில் மனம் தோய்ந்திருந்தமையால், இனி அச் செயலை விரைந்து முடிப்பேனென்று எனது செயலாண்மையைக்*

*கூறுவதற்கும் என் நாத் துணியவில்லை என்று சுக்கிரீவன் தன்செயலுக்கு வருந்திக் கூறுகின்றான் என்பது.*

*ஓர் உதவியும் தான் செய்யாதிருந்த போதும் தனது பகையைப் போக்கி, மனைவியைத் தன்னிடம் சேர்த்து அரசபோகத்தையும் அருளிய கருணை நோக்கிச் சுக்கிரீவன் இராமனை 'வள்ளியோய்' என்றான். மதுவுண்டு களிக்கும் குரங்கின் இயல்பும், போகத்திலேயே ஆழ்ந்து கிடக்கும் எண்ணமும், கைம்மாறு செய்வதற்கு விரைந்து நில்லாத நினைவும், என்பான் 'இயல்பும் எண்ணமும் நினைவும்' என்றான். 132*

*இராமன் பாராட்டுதல்*

***4401. திரு உறை மார்பனும்,***
***'தீர்ந்ததேயும் வந்து***
***ஒருவ அருங் காலம்,***
***உன் உரிமையோர் உரை -***
***தரு வினைத்து ஆகையின்,***
***தாழ்விற்று ஆகுமோ?***
***பரதன் நீ!***
***இனையன, பகரற்பாலையோ?'***

***திரு உறை மார்பனும் -*** *திருமகள் எப்பொழுதும் தங்கியுள்ள மார்பையுடைய இராமனும்;* ***ஒருவ அருங்காலம் -*** *எளிதில் கழியாத கார்காலம்;* ***வந்து தீர்ந்ததேயும் -*** *வந்து நீங்கியதாகவும்;* ***உன் உரிமை ஒர் உரை -*** *உன் கடமையை உணர்ந்து பேசுகின்ற சொற்கள்;* ***தரு வினைத்து ஆகையின் -*** *(சீதையைத் தேடித்) தருகின்ற தொழிலைத் தன்னிடம் கொண்டுள்ளமையால்;* ***தாழ்விற்று ஆகுமோ -*** *தாழ்வான தன்மையுடையதாகுமோ?* ***பரதன் நீ -*** *பரதனைப் போன்ற (என்பால் அன்புடைய) நீ;* ***இனையன பகரற்பாலையோ -*** *இத் தன்மையான சொற்களைச் சொல்லத் தகுமா (என்று சுக்கிரீவனை நோக்கிக் கூறினான்).*

*காலங் கழித்து நீ குறித்த தவணை தவறினாய் என்றாலும் சீதையைத் தேடித் தராமையைக் குறித்து இரங்கிக் கூறிய நின் சொற்கள் சீதையைத் தேடித் தரும் உன் உறுதியைத் தெரிவிக்கின்றன. ஆதலால் உனக்கு ஒரு தாழ்வுமில்லை. ஆகவே பரதனைப் போன்று என்னிடம் அன்புபாராட்டும் நீ உன்னைத் தாழ்த்திக் கூறுதல் தகுதியன்று எனச் சுக்கிரீவனை நோக்கி இராமன் கூறினான் என்பது.*

*இங்கே இராமனுடைய பரந்த கருணையும் பிறர் குற்றங்களைப் பொறுத்தாற்றும் பண்பும் வெளிப்படுதலைக் காணலாம். 133*

*அனுமன் எங்கே என இராமன் வினாவ அவன் சேனையுடன் வருவன்என்றல்*

***4402. ஆரியன், பின்னரும் அமைந்து, 'நன்கு உணர்***
***மாருதி எவ் வழி மருவினான்?' என,***
***சூரியன் கான்முளை, 'தோன்றுமால், அவன்***
***நா அரும் பரவையின் நெடிய சேனையான்.'***

***ஆரியன் -** இராமன்; **பின்னரும் அமைந்து -** மறுபடியும் சொல்லத் தொடங்கி (சுக்கிரீவனை நோக்கி); **நன்கு உணர் மாருதி -** (முக் காலத்தையும்) நன்றாக அறியவல்ல காற்றுக் கடவுளின் மகனான அனுமன்; **எவ்வழி மருவினான் என -** எங்கே இருக்கிறான் என்று கேட்க; (அதற்கு); **சூரியன் கான்முளை -** சூரியன் மகனான சுக்கிரீவன்; **அவன் -** அந்த அனுமன்; **நீர் அரும் பரவையின் -** நீர் நிரம்பிய அரிய கடல் போன்ற; **நெடிய சேனையான் -** பெருஞ் சேனையையுடையவனாய்; **தோன்றும் -** வந்து சேருவான்.*

*இராமன் அனுமனைக் குறித்தத் தனியே வினவியதால் அவனிடம் இராமன் வைத்துள்ள பேரருள் தோன்றும். பரவை பரந்திருத்தலின் கடலுக்குக் காரணக் குறியாயிற்று. 134*

***4403. 'கோடி ஒர் ஆயிரம் குறித்த கோது இல் தூது***
***ஓடின நெடும் படை கொணர்தல் உற்றதால்;***
***நாள் தரக் குறித்ததும், இன்று; நாளை, அவ்***
***ஆடல் அம் தானையோடு அவனும் எய்துமால்.***

***கோடி ஒர் ஆயிரம் -** ஓராயிரங் கோடியாக; **குறித்த கோது இல் தூது-** கணக்கிடப்பட்ட குற்றமற்ற தூதர்கள்; **நெடும் படை -** பெரிய வானரசேனைகளை; **கொணர்தல் உற்றது ஓடின -** திரட்டிக் கொண்டு வரும் பொருட்டு(ச் செய்தி செல்ல) விரைந்து சென்றுள்ளார்கள்; (இது வரை வானரப் படைகள் வராததால் அவற்றைத் திரட்டி வருவதற்கு அனுமன் காத்திருக்கிறான்); **தரக் குறித்தது நாளும் உற்றது -** (அவ்வாறு) கொண்டு வருவதற்குக் குறித்த நாளும் வந்து விட்டது; **ஆல் -** ஆதலால்; **இன்று நாளை -** இன்று அல்லது நாளை; **அவ் ஆடல் அம் தானையோடு -** வலிமையுள்ள அந்த வானர சேனையுடன்; **அவனும் எய்தும் -** அந்த அனுமனும் இங்கே வந்துவிடுவான் (என்றான்).*

*ஆல் - இரண்டனுள் முன்னது 'ஆதலால்' என்பதன் விகாரம்; பின்னது ஈற்றசை. அடல் - வலி: இங்கே ஆடல் என நீண்டது. 135*

*4404. 'ஒன்பதினாயிர கோடி உற்றது*
*நின் பெருஞ் சேனை; அந் நெடிய சேனைக்கு*
*நன்கு உறும் அவதி நாள் நாளை; நண்ணிய*
*பின், செயத்தக்கது பேசற்பாற்று' என்றான்.*

**ஒன்பதின் ஆயிரம் கோடி -** *(இப்பொழுது என்னுடனே) ஒன்பதினாயிரங் கோடிக் கணக்கான;* **நின்பெருஞ் சேனை -** *உனது பெரிய வானர சேனை;* **உற்றது -** *வந்துள்ளது;* **அந் நெடிய சேனைக்கும் -** *(இனி வரவேண்டிய) அந்தப் பெரிய சேனைக்கு;* **நன்கு உறும்**

**அவதி நாள் நாளை -** *ஒன்று திரண்டு வந்து சேர்வதற்குரிர நாளும் நாளைக்கே;* **நண்ணிய பின் -** *அந்தச் சேனையும் வந்த பிறகு;* **செயத் தக்கது-** *செய்யவேண்டியதைப் பற்றி;* **பேசற் பாற்று -** *பேசுவது தகுதி யுடையது;* **என்றான் -** *என்று கூறிமுடித்தான்.*

*வானர சேனையுடன் அனுமன் வந்த பிறகே செய்யத்தக்கதைப் பற்றிப் பேசவேண்டுமென்று சுக்கிரீவன் கருதினான் என்பது. தான் இராமனுக்கு அடியவன் என்ற எண்ணத்தால் சுக்கிரீவன் தன் சேனையை 'நின் பெருஞ் சேனை' என்றான்.*

*நெடியசேனை - துணைப்படை. 136*

*4405. விரும்பிய இராமனும், 'வீர!*
*நிற்கு அது ஓர்*
*அரும் பொருள் ஆகுமோ?*
*அமைதி நன்று' எனா,*
*'பெரும் பகல் இறந்தது;*
*பெயர்தி; நின் படை*
*பொருந்துழி வா' என,*
*தொழுது போயினான்.*

**விரும்பிய இராமனும் -** *(சுக்கிரீவனிடம்) அன்புடைய இராமனும்; (அவனை நோக்கி);* **வீர -** *வீரனே!* **நிற்கு அது -** *உனக்கு (ச் சேனை திரட்டி முடித்தலாகிய) அச் செயலானது;* **ஓர் அரும்பொருள் ஆகுமோ -** *அரிய காரியமாகுமோ?* **அமைதி நன்று -** *(உனது) அடக்கமான குணம் சிறந்ததாக உள்ளது;* **எனா -** *என்று சொல்லி;* **பெரும்பகல் இறந்தது -** *(இப்பொழுது) நீண்ட பகலோ கழிந்துவிட் டது;* **பெயர்தி -** *(ஆகவே இன்று புறப்பட்டுச் சென்று;* **நின் படை -** *உனது சேனை;* **பொருந்துழி வா -** *திரண்டு வந்த போது (அவற்றோடு) வருவாய்;* **என -** *என்று இராமன் விடை கொடுக்க;* **தொழுது போயினான் -** *இராமனை வணங்கி (ச் சுக்கிரீவன்) சென்றான்.*

*சுக்கிரீவன் தன் சேனை தங்கியுள்ள பாசறைக்குச் சென்றான் என்பது. பெயர்தி: முற்றெச்சம். 137*

*அங்கதனையும் சுக்கிரீவனுடன் அனுப்பி இராமன், தம்பியுடன் வைகுதல்*

*4406. அங்கதற்கு இனியன அருளி, 'ஐய! போய்த்*
*தங்குதி உந்தையோடு என்று, தாமரைச்*

***செங் கணான், தம்பியும், தானும் சிந்தையின்***
***மங்கையும், அவ் வழி, அன்று வைகினான்.***

***தாமரைச் செங்கணான் -*** *செந்தாமரை மலர்போன்ற சிவந்த கண்களையுடைய இராமன்;* ***அங்கதற்கு இனியன அருளி -*** *அங்கதனுக்கு*

*இனிமையான சொற்களைக் கூறி;* ***ஐய -*** *ஐய;* ***போய் உந்தையோடு தங்குதி -*** *போய் உன் தந்தையாகிய சுக்கிரீவனோடு இருப்பாய்;* ***என்று -*** *என்று விடை தந்து அனுப்பி;* ***தம்பியும் -*** *இலக்குவனும்;* ***சிந்தையின் மங்கையும் -*** *(எப்பொழுதும்) தன் மனத்தே குடியிருக்கும் சீதையும்;* ***தானும் -*** *தானுமாக;* ***அன்று அவ்வழி -*** *அந்த இரவில் அவ் இடத்திலே;* ***வைகினான் -*** *தங்கியிருந்தான்.*

*இராமன் இடைவிடாது சீதையை நினைத்துக் கொண்டேயிருத்தலால் 'சிந்தையின் மங்கை' என்றார்.*

*'தம்பியும் சிந்தையின் மங்கையும் தானும் வைகினான்' - தலைமை பற்றி வந்த பால் வழுவமைதி.* *138*

## *தானை காண் படலம்*

*சுக்கிரீவன் தான் ஒருங்கு திரட்டிய வானரப் படையைக் காட்ட, அதனை இராமலக்குவர் கண்ட செய்தியைக் கூறும் பகுதி இது. சேனைத் தலைவர் தத்தம் படையோடு வந்துசேர்கிறார்கள்; வானர சேனைகளின் ஆற்றலும் சிறப்பும் வெளிப்படுகின்றன; படைத் தலைவர்கள் சுக்கிரீவனை வணங்குகின்றார்கள்; அப் படைகளை இராமன் காணுகன்றான்; சுக்கிரீவன் படைகளை வரன்முறைப்படி காட்டுகிறான்; வானரப் படையின் பெருக்கம் வெளிப்படுகிறது; அப் படையைக் குறித்து இராமலக்குவர் உரையாடுகின்றார்கள்.*

*தானைத் தலைவர் தத்தம் படையுடன் வருதல்*

***4407. அன்று அவண் இறுத்தனர்;***
***அலரி கீழ்த்திசைப்***
***பொன் திணி நெடு***
***வரை பொலிவுறாதமுன்,***
***வன் திறல் தூதுவர்***
***கொணர, வானரக்***
***குன்று உறழ் நெடும்***
***படை அடைதல் கூறுவாம்:***

***அன்று அவண் இறுத்தனர்*** *- அன்றைய இரவு முழுவதும் (இராம லக்குவர்) அந்த இடத்தில் தங்கியிருந்தார்கள்;* ***அலரி கீழ்த் திசை*** *- கதிரவன் கிழக்குத் திசையிலுள்ள;* ***பொன் திணி நெடுவரை*** *- பொன் மயமான பெரிய உதய மலையிலே;* ***பொலிவுறாத முன்*** *- விளங்கித் தோன்றாததற்கு முன்பே (கதிரவன் உதிப்பதற்கு முன்பு);* ***வல் திறல் தூதுவர்*** *- மிக்க வலிமையுடைய தூதர்கள்;* ***கொணர*** *- சென்று அழைக்க;* ***குன்று உறழ் வானர நெடும் படை***- *மலையைப் போன்ற வானர சேனை;* ***அடைதல்*** *- வந்து சேர்ந்த விதத்தை;* ***கூறுவாம்*** *- (இனி) எடுத்துச் சொல்வோம்.*

*அலரி - பரவுகின்ற கதிர்களையுடையவனெனச் சூரியனுக்குக் காரணம் குறியாயிற்று.* *1*

*கலித்துறை*

***4408. ஆனை ஆயிரம் ஆயிரத்து***
***எறுழ் வலி அமைந்த***
***வானராதிபர் ஆயிரர் உடன்***
***வர, வகுத்த***
***கூனல் மாக் குரங்கு***
***ஐ - இரண்டு ஆயிர கோடித்***
***தானையோடும், - அச் சதவலி***
***என்பவன் - சார்ந்தான்.***

***அச்சதவலி என்பவன்*** - *அந்தச் சதவலி என்னும் வானர வீரன்;* ***ஆயிரம் ஆயிரத்து ஆனை*** - *பத்து இலட்சம் யானைகளின்;* ***எறுழ்வலி அமைந்த*** - *மிக்க வன்மையோடு பொருந்திய;* ***வானர அதிபர் ஆயிரர்*** - *வானர சேனைத் தலைவர் ஆயிரம் பேர்;* ***உடன்வர*** - *தன்னைப் பின்தொடர்ந்து வர;* ***வகுத்த*** - *அணிவகுக்கப்பட்ட;* ***கூனல் மா*** - *முதுகு கூனியுள்ள பெரிய;* ***ஐ இரண்டு ஆயிர கோடி*** - *பதினாயிரம் கோடி;* ***குரங்குத் தானையோடு*** - *வானர சேனையோடு;* ***சார்ந்தான்*** - *சுக்கிரீவனிடம் வந்தான்.*

*எறுழ் வலி: ஒரு பொருட் பன்மொழி. சதவலி: முகத்தில் நூறு மடிப்பு களையுடையவன். வான்மீகத்தில் இப்பெயர் 'சதபலி' என்று காணப்படுகிறது.*
*2*

***4409. ஊன்றி மேருவை எடுக்குறும்***
***மிடுக்கினுக்கு உரிய***
***தேன் தெரிந்து உண்டு***
***தெளிவுறு வானரச் சேனை,***
***ஆன்ற பத்து நூறு***
***ஆயிர கோடியோடு அமையத்***
***தோன்றினான், வந்து -***
***சுசேடணன் எனும் பெயர்த் தோன்றல்.***

***சுசேடணன் எனும் பெயர் தோன்றல்*** - *சுசேடணன் என்னும் பெயரையுடைய வானர வீரன்;* ***மேருவை ஊன்றி எடுக்குறும்*** - *மேரு மலையையும் பேர்த்து எடுக்கவல்ல;* ***மிடுக்கினுக்கு உரிய*** - *வலிமையு டையதும்;* ***தேன் தெரிந்து உண்டு*** - *மதுவை ஆராய்ந்து பருகி;* ***தெளிவுறு*** - *மயக்கமின்றித் தெளிவு பெற்றனவுமான;* ***ஆன்ற வானர சேனை பத்து நூறு ஆயிர கோடியோடு*** - *சிறந்த பத்து இலட்சங் கோடி வானர சேனையோடு;* ***அமைய வந்து தோன்றினான்*** - *பொருந்த வந்து சேர்ந்தான்.*

*மேருவையும் பேர்த்து எடுக்கக் கூடிய வல்லமையமைந்த பத்து இலட்சங் கோடி வானர சேனையோடு சுசேடணன் வந்து சேர்ந்தான் என்பது. சுசேடணன்:*

*இவன் வாலியின் மனைவியான தாரைக்குத் தந்தை: வருணதேவன் மைந்தன் என்றும் கூறுவர். தோன்றல்: நல்ல தோற்றமுடையவன் என்று காரணக்குறியாம்.*
*3*

***4410. ஈறு இல் வேலையை***
***இமைப்புறும் அளவினில் கலக்கிச்***
***சேறு காண்குறும் திறல்***
***கெழு வானரச் சேனை***
***ஆறு - எண் ஆயிர கோடியது உடன்***
***வர, - அமிழ்தம்***
***மாறு இலா மொழி உருமையைப்,***
***பயந்தவன் - வந்தான்.***

***அமிழ்தம் மாறு இலாமொழி*** - தேவ அமிழ்தமும் இணையாகாத (இனிய) சொற்களையுடைய; ***உருமையைப் பயந்தவன்*** - சுக்கிரீவன் மனைவியான உருமையைப் பெற்ற தந்தை; ***ஈறு இல் வேலையை*** - முடிவு காணப்படாத கடலையும்; ***இமைப்புறம் அளவினில்*** - கண் இமைக்கும் நேரத்தில்; ***கலக்கிச் சேறு காண்குறும்*** - கலக்கிச் சேறாக்க வல்ல; ***திறல் கெழு*** - வலிமை நிறைந்த; ***வானர சேனை ஆறு எண் ஆயிர கோடியது*** - நாற்பத்தெட்டாயிரங் கோடி வானர சேனை; ***உடன் வர*** - தன்னைத் தொடர்ந்து வர; ***வந்தான்*** - வந்து சேர்ந்தான்.

*உருமையின் தந்தை தாரன் என்பவன்; இவன் தேவகுருவாகிய பிரகஸ்பதியின் மைந்தன். இத் தாரன் கடலையும் கலக்கிச் சேறாக்க வல்ல நாற்பத்தெட்டாயிரங் கோடி வானர சேனையோடு வந்தான் என்பது.*

*கோடியது: (கோடி + அது) - அது பகுதிப் பொருள் விகுதி. 4*

***4411. ஐம்பது ஆய நூறாயிர***
***கோடி எண் அமைந்த,***
***மொய்ம்பு மால் வரை புரை***
***நெடு வானரம் மொய்ப்ப, -***
***இம்பர் ஞாலத்தும் வானத்தும்***
***எழுதிய சீர்த்தி***
***நம்பனைத் தந்த கேசரி -***
***கடல் என நடந்தான்.***

***இம்பர் ஞாலத்தும்*** - இந்த உலகத்திலும்; ***வானத்தும்*** - விண்ணுலகத் திலும்; ***எழுதிய சீர்த்தி*** - பொறித்த பெரும்புகழையுடைய; ***நம்பனைத் தந்த*** - சிறந்தவனான அனுமனைப் பெற்ற; ***கேசரி*** - கேசரி என்னும் வானர வீரன்; ***ஐம்பது ஆய நூறாயிரம் கோடி எண் அமைந்த*** - ஐம்பது இலட்சங் கோடி என்று கணக்கிடப் பெற்ற; ***மால் வரை புரை*** - கைலை மைலையைப் போன்ற; ***மொய்ம்பு நெடு வானரம்*** -

தோள்களையுடைய பெரிய வானர சேனை; ***மொய்ப்ப*** - தன்னை நெருங்கி வர; ***கடல் என நடந்தான்*** - கடல் போன்ற தோற்றத்தோடு வந்தான்.

*சேனையோடு வந்த கேசரிக்கு அலையோடு கூடிய கடல் உவமையாயிற்று. அனுமன், தன் செயலால் மிகப் புகழ் பெற்றானாதலால் அவனை 'இம்பர் ஞாலத்தும் வானத்தும் எழுதிய சீர்த்தி நம்பன்' என்றார். சீர்த்தி நம்பன்; புகழ் உருவாகிய அனுமன். நம்பன்: எல்லாரும் விரும்பும் குணமுடையவன். நம்பன் : சிவன் என்னும் பொருளும் உண்டு; சிவபெருமான் அம்சமாகப் பிறந்தவன் எனவும் கொள்ளலாம். 5*

***4412. மண் கொள் வாள் எயிற்று***
***ஏனத்தின் வலியின, வயிரத்***
***திண் கொள் மால் வரை***
***மயிர்ப் புறத்தன எனத் திரண்ட***
***கண் கொள் ஆயிர***
***கோடியின் இரட்டியின் கணித்த***

***எண்கின் ஈட்டம் கொண்டு, -***
***எறுழ் வலித் தூமிரன் - இறுத்தான்.***

***எறுழ் வலித் தூமிரன் -*** *மிக்க வலிமையுடைய தூமிரன் என்பவன்;* ***மண்கொள் வாள் எயிறு -*** *பூமியைக் குத்தியெடுத்த ஒளியமைந்த பற்களையுடைய;* ***ஏனத்தின் வலியின -*** *(திருமாலின் அவதாரமான) வராகம் (பன்றி) போன்ற வன்மை பெற்றனவாகி;* ***வயிரத் திண் கொள் -*** *உறுதியான வலிமை கொண்ட;* ***மால் வரை -*** *பெரிய மலையும்;* ***மயிர்ப் புறத்தன எனத் திரண்ட -*** *ஒரு மயிர்க் காலிலேயடங்கக் கூடுமென்று சொல்லும்படி உருண்டு பருத்த உருவம் கொண்டனவும்;* ***கண் கொள் ஆயிர கோடியின் இரட்டியில்-*** *இடம் மிகுதியாகக் கொண்ட இரண்டாயிரங் கோடியாக;* ***கணித்த -*** *கணக்கிடப்பட்டவையுமாகிய;* ***எண்கின் ஈட்டம் கொண்டு -*** *கரடிக்கூட்டத்தை உடன் கொண்டு;* ***இறுத்தான் -*** *வந்து சேர்ந்தான்.*

*தூமிரன்: சாம்பவானுக்கு உடன் பிறந்தவன்; ஒரு கரடித் தலைவன். இவனது கரடிப் படையில் ஒவ்வொரு கரடியும் திருமாலின் வராகம்போன்று வலிமையையும், ஒரு மயிர்க் காலில் பெருமலையும் அடங்கக் கூடிய பேருருவத்தையும் உடையன என்பது.* *6*

***4413. முனியும்ஆம் எனின்அருக்கனை***
***முரண் அற முருக்கும்,***
***தனிமை தாங்கிய உலகையும்***
***சலம் வரின் குமைக்கும்,***
***இனிய மாக் குருங்கு ஈர் -***
***இரண்டு ஆயிர கோடி***
***அனிகம் முன் வர, - ஆன் பெயர்க்***
***கண்ணன் - வந்து அடைந்தான்.***

***முனியும் ஆம் எனின் -*** *(தனித்தனியே ஒவ்வொரு குரங்கும்) கோபங் கொள்ளுமாயின்;* ***அருக்கனை முரண் அற முருக்கும் -*** *சூரியனையும் வலிமை கெடும்படி அழிக்கும்;* ***சலம் வரின் -*** *அடங்காத பெருஞ்சினம் வந்தால்;* ***தனிமை -*** *தனித் தனியாகவே;* ***தாங்கிய உலகையும் குமைக்கும் -*** *தங்களைத் தாங்கிக் கொண்டுள்ள உலகத்தையும் குத்தியழிக்கும்;* ***இனிய -*** *மகிழ்ச்சியுடைய;* ***மாக் குரங்கு ஈர் இரண்டு ஆயிர கோடி -*** *நாலாயிரங் கோடி கொண்ட;* ***அனிகம் முன்வர -*** *வானர சேனைகள் தனக்கு முன்னே வர;* ***ஆன் பெயர்க் கண்ணன் -*** *கவாட்சன் என்பவன்;* ***வந்து அடைந்தான்-*** *வந்து சேர்ந்தான்.*

*சினம் கொண்டால் சூரியனையும் தனித் தனியே அழிக்க வல்லனவும், அவ்வாறே பூமியின்மீது சினம் கொண்டாலும், அதையும் குத்தி அழிக்க வல்லனவுமான நாலாயிரங் கோடி வானர சேனையுடனே கவாட்சன் என்பான் வந்தான் என்பது. சலம்: தணியாக் கோபம். அனீகம் : வடசொல் - இங்கே அணிகம் என வந்தது. ஆன் பெயர்க் கண்ணன்: கவாட்சன் என்ற வடமொழிப் பெயரின் தமிழாக்கம். கோ - பசு; அக்ஷி - கண்; கோ + அக்ஷி என்பது வடமொழிச் சந்தியின்படி கவாட்சிஎன்றாயிற்று.* *7*

*4414.* ***தனி வரும் தடங் கிரி***
***எனப் பெரியவன், சலத்தால்***
***நினையும் நெஞ்சு இற***
***உரும்என உறுக்குறு நிலையன்,***
***பனசன் என்பவன் -***
***பன்னிரண்டு ஆயிர கோடிப்***
***புனித வெஞ் சின வானரப்***
***படை கொடு - புகுந்தான்.***

***தனிவரும் -*** *தனித்து வருகின்ற;* ***தடங்கிரி எனப் பெரியவன் -*** *பெரியமலை போன்ற பெருந் தோற்றத்தையுடையவனும்;* ***சலத்தால் -*** *தணியாதகோபத்தால்;* ***நினையும் நெஞ்சு இற -*** *நினைப்பவர்களின் மனம் உடையும்படி;* ***உரும் என உறுக்குறு நிலையன் -*** *இடி போல (க் கண்டவரை) நடுங்கச் செய்கின்ற தன்மையுமான;* ***பனசன் என்பவன் -*** *பனசன் என்ற வானரத் தளபதி;* ***பன்னிரண்டு ஆயிர கோடி -*** *பன்னிரண்டாயிரங் கோடி என்று சொல்லக் கூடிய;* ***புனிதம் வெம் சினம் -*** *தூய கடுங் கோபமுடைய;* ***வானரம் படை கொடு -*** *வானர சேனையோடு;* ***புகுந்தான் -*** *வந்து சேர்ந்தான்.*

*ஒத்தாரோடன்றிப் போர் செய்யாத தன்மையால் சினத்துக்கு வெம்மையுடன் புனிதமும் சேர்த்துக் கூறினார்.* *8*

*4415.* ***இடியும், மாக் கடல் முழக்கமும்***
***வெருக் கொள இசைக்கும்***
***முடிவு இல் பேர் உறுக்கு***
***உடையன, விசையன, முரண,***
***கொடிய கூற்றையும் ஒப்பன,***
***பதிற்றைந்து கோடி***
***நெடிய வானரப் படை கொண்ட***
***புகுந்தனன் - நீலன்.***

***நீலன் -*** *நீலன் என்பவன்;* ***இடியும் மாக் கடல் முழக்கமும் -*** *இடியோசையும் பெரிய கடலின் ஆரவாரமும்;* ***வெருக் கொள -*** *அஞ்சி அடங்கும்படி;* ***இசைக்கும் -*** *ஒலிக்கின்ற;* ***முடிவு இல் பேர் உறுக்கு உடையன -*** *எல்லையற்ற பேராரவாரத்தை உடையனவும்;* ***விசையன -*** *மிக்க வேகத்தையுடையனவும்;* ***முரண -*** *வலிமையுடையனவும்;* ***கொடிய கூற்றையும் ஒப்பன -*** *கொடுமையுள்ள யமனைப் போன்றனவுமாகிய;* ***பதிற்றைந்து கோடி-*** *ஐம்பது கோடி;* ***நெடிய வானரப் படை கொண்டு -*** *பெரிய வானர சேனையை உடன் கொண்டு;* ***புகுந்தனன் -*** *வந்து சேர்ந்தான்.*

*நீலன்: அக்கினியின் மகன்; இவன் வானர சேனைகள் எல்லாவற்றிற்கும் முதல் தலைவன். பத்து + ஐந்து : பதிற்றைந்து - இற்றுச் சாரியை பெற்ற ஐம்பதைக் குறிக்க வந்த பண்புத் தொகை. கொடுமையிலும் உயிர் கவர்வதிலும் கூற்று உவமை.*
*9*

*4416.* ***மா கரந்தன, உரத்தன,***
***வலியன, நிலைய,***
***வேகரத்த, வெங் கண்***
***உமிழ் வெயிலன, மலையின்***
***ஆகரத்தினும் பெரியன,***
***ஆறு - ஐந்து கோடி***
***சாகரத்தோடும் - தரீமுகன்***
***என்பவன் - சார்ந்தான்.***

***தரீமுகன் என்பவன் -*** *தரீமுகன் என்னும் வீரன்;* ***மா கரந்தன -*** *பெரிய கைகளையுடையனவும்;* ***உரத்தன -*** *வலிய மார்பையுடையனவும்;* ***வலியன -*** *தேக வலிமையுடையனவும்;* ***நிலைய -*** *(செயலில்) உறுதியுள்ளனவும்;* ***வேகரத்த -*** *உக்கிரமுடையனவும்;* ***வெம்கண் உமிழ் வெயிலன -*** *கொதிக்கும் கண்களிலிருந்து தெறிக்கின்ற தீப் பொறிகளையுடையனவும்;* ***மலையின் ஆகரத்தினும் பெரியன -*** *மலை யின் வடிவத்தைக் காட்டிலும் பெரிய வடிவமுடையனவுமான;* ***ஆறு ஐந்து கோடி -*** *முப்பது கோடி;* ***சாகரத் தொடும் -*** *வானர சேனைக் கடலோடும்;* ***சார்ந்தான்-*** *வந்து சேர்ந்தான்.*

*தரீமுகன்: குகை போன்ற முகத்தையுடையவன் என்பது பொருள். வேகரம்: கொடுமை, உக்கிரம், சேனைக்குச் சாகரம் பரப்பும் பெருமையும் கொந்தளிப்பும் பற்றி வந்த உவமை.* *10*

*4417.* ***இளைத்து வேறு ஒரு மா***
***நிலம் வேண்டும் என்று இரங்க,***
***முளைத்த முப்பதினாயிர***
***கோடியின் முற்றும்,***
***விளைத்த வெஞ் சினத்து,***
***அரிஇனம் வெருவுற விழிக்கும்***
***அளக்கரோடும், - அக்கயன் எனும்***
***பெயரன் - வந்து அடைந்தான்.***

***அக்கயன் எனும் பெயரன் -*** *அக்கயன் என்னும் பெயரையுடைய வீரனும்;* ***வேறு ஒரு மாநிலம் -*** *(தாம் தங்குவதற்க இந்த நிலவுலகம் போதாமையால்) வேறொரு அகன்ற பூமி;* ***வேண்டும் என்று -*** *வேண்டும் என்று;* ***இளைத்து இரங்க முளைத்த -*** *வருந்தி மனம் இரங்கும்படி தோன்றினவும்;* ***முப்பதினாயிர கோடியின் -*** *முப்பதினாயிரங் கோடி என்ற தொகை கொண்டு;* ***முற்றும் விளைத்த -*** *உலகமெங்கும் பரவி யனவுமான;* ***வெம் சினத்து அரி இனம் -*** *கடுமையான கோபமுடைய சிங்கக் கூட்டங்களும்;* ***வெருவுற விழிக்கும் -*** *அஞ்சுமாறு நோக்குகின்ற;* ***அளக்கரோடும் -*** *வானர சேனைக் கடலோடும்;* ***வந்து அடைந்தான் -*** *வந்து சேர்ந்தான்.*

*ஒவ்வொன்றும் மிகவும் பருத்திருப்பதால் அக்கயனது முப்பதினாயிரங் கோடிச் சேனை தங்குவதற்கு இந்த உலகம் போதாதென்பது கருத்து. அளக்கர்: கடல். சேனைக்கு உவமையாகுபெயர்.* *11*

*4418.* ***ஆயிரத்து அறுநூறு கோடியின்***
***கடை அமைந்த***
***பாயிரப் பெரும படை***
***கொண்டு, பரவையின் திரையின்***
***தாய், உருத்து உடனே வர -***
***தட நெடு வரையை***
***ஏய் உருப் புயச் சாம்பன்***
***என்பவனும், - வந்து இறுத்தான்.***

***தட நெடு வரையை ஏய் -*** *பெரிய உயர்ந்த மலையை ஒத்த;* ***உருப் புயம் -*** *வடிவத்தோடு கூடிய தோள்களையுடை;* ***சாம்பன் என்பவனும் -*** *சாம்பவானும்;* ***பரவையின் திரையின் தாய் -*** *கடலின் அலைகளைப் போலப் பாய்ந்து;* ***உருத்து -*** *வெகுண்டு;* ***உடனே வர -*** *பின்னே தொடர்ந்து வர;* ***ஆயிரத்து அறுநூறு கோடியின் -*** *ஆயிரத்து*

*அறுநூறு கோடி என்னும் கணக்கையுடைய;* ***கடை அமைந்த -*** *இடங் களில் நிரம்பிய;* ***பாயிரப் பெரும்படை கொண்டு -*** *சிறப்பான பெரிய வானரப் படையை உடன்கொண்டு;* ***வந்து இறுத்தான் -*** *வந்து தங்கினான்.*

*பாயிரம் - விருது, சிறப்பு. நூல்களின் முன்னுரையாக அமைந்து நூல் நுவலும் பொருளின் சிறப்பைத் தெளிவுறப் புலப்படுத்தும் பகுதியைப் பாயிரம் என்பர்; அதுபோல சாம்பனின் படைத் திறத்தைத் தெளிவாகப் புலப்படுத்தியதாக தூசிப் படை (முன்னணிப் படை) அமைந்தது என்றும் கொள்ளலாம். சாம்பன் - ஜாம்பவான்; பிரமன் கொட்டாவியிலிருந்து கரடி வடிவத்தில் தோன்றியவன்; திருமாலின் திருவிக்கிர அவதாரத்தின்போது உலகம் முழுவதும் நிரம்பிப் பேருருவம் கொண்டிருந்த அப்பெருமானைப் பதினெட்டு முறை வலம் செய்தவன் என்று இவன் புகழை நூல்கள் கூறும். உறுப் புயச் சாம்பன் என்ற தொடருக்குப் பகைவர்க்கு அச்சம் தரும் தோள்களை உடைய சாம்பன் எனவும் பொருள் கொள்ளலாம். உரு உட்கு (அச்சம்) ஆகும் என்பது தொல்காப்பியம்.* *12*

*4419.* ***வகுத்த தாமரை மலர்***
***அயன், நிசிசரர் வாழ்நாள்***
***உகுத்த தீவினை பொருவரும்***
***பெரு வலி உடையான்,***
***பகுத்த பத்து நூறாயிரப்***
***பத்தினின் இரட்டி***
***தொகுத்த கோடி வெம் படை கொண்டு, -***
***துன்முகன் - தொடர்ந்தான்.***

***வகுத்த தாமரை மலர் அயன் -*** *வாழ்நாள் இவ்வளவே என வரையறுத்த தாமரை யாசனத்தானான நான்முகன;* ***நிசிசரர் வாழ்நாள் உகுத்த தீவினை -*** *அரக்கர்களின் வாழ்நாளை அழித்திடும் தீவினை (ஆகிய இரு பெரும் சக்திகளுக்கு மீறிய);* ***பொருவு அரும் வலி உடை யான் -*** *ஒப்பற்ற வலிமை உடையவனாகிய;* ***துன்முகன் -*** *துன்முகன்*

*என்பவன்;* ***பகுத்த பத்து நூறாயிரப் பத்தினின் இரட்டி -*** *அணி வகுக்கப்பட்ட பத்து லட்சத்தின் இரட்டிப்பு (அதாவது இருபது லட்சம்);* ***தொகுத்த கோடி -*** *கூட்டிய கோடி (அதாவது இருபதுலட்சம் கோடி);* ***வெம்படை கொண்டு -*** *கொடிய படைகளை அழைத்துக் கொண்டு;* ***தொடர்ந்தான் -*** *தொடர்ந்து வந்தான்.*

*துன்முகன் - அழகில்லாத முகத்தினன். நான்முகனால் அரக்கரின் வாழ்நாள் வரையறுக்கப்பட்டுள்ளது; அரக்கர் செய்த தீவினையும் அவர் வாழ்நாளுக்கு இறுதியை உருவாக்கியுள்ளது. இந்த இரண்டு சக்திகளுக்கும் மேலாகத் துன்முகனின் வலிமை அரக்கருக்கு அழிவு செய்தே தீரும் என்பது கருத்து.* *13*

***4420. இயைந்த பத்து நூறாயிரப்***
***பத்து எனும் கோடி***
***உயர்ந்த வெஞ் சின வானரப்***
***படையொடும், ஒருங்கே, -***
***சயம்தனக்கு ஒரு வடிவு எனத்***
***திறல் கொடு தழைத்த***
***மயிந்தன் - மல்***
***கசகோமுகன்தன்னொடும், வந்தான். ****

***சயம் தனக்கு ஒரு வடிவென -*** *வெற்றியே ஓர் உருக் கொண்டது என்று கூறும்படி;* ***திறல் கொடு தழைக்க -*** *போர் வன்மையால் உயர்ந்த;* ***மயிந்தன் -*** *மயிந்தன் என்னும் வீரன்;* ***மல் கச கோமுகன் தன்னொடும் -*** *மற்போரில் சிறந்த கச கோமுகன் என்பவனோடும்;* ***இயைந்த பத்து நூறாயிரம் பத்து எனும் கோடி -*** *பொருந்திய நூறு லட்சங் கோடி என்ற எண்ணுள்ள;* ***உயர்ந்த வெம் சின வானரப் படையொடும் -*** *மிகக் கொடிய சினத்தையுடைய வானர சேனையோடும்;* ***ஒருங்கே வந்தான் -*** *ஒரு சேர வந்தான்.*

*மயிந்தனும் கசகோமுகனும் நூறு லட்சங் கோடி சேனையுடன் வந்தார்கள் என்பது. மயிந்தனும் துமிந்தனும் அசுவினி தேவர்களின் அமிசத்தால் பிறந்த வானரராவர்.*
*14*

***4421. கோடி கோடி நூறாயிரம்***
***எண் எனக் குவிந்த***
***நீடு வெஞ் சினத்து அரிஇனம்***
***இரு புடை நெருங்க,***
***மூடும் உம்பரும், இம்பரும்,***
***பூமியில் மூழ்க, -***
***தோடு இவர்ந்த தார்க்கிரி புரை***
***துமிந்தனும் - தொடர்ந்தான்.***

***தோடு இவர்ந்த தார்க்கிரி புரை -*** *இதழ்கள் அமைந்த மலர் மாலையை அணிந்தவனும் மலையை ஒத்தவனுமான;* ***துமிந்தன் -*** *துமிந்தன் என்னும் வீரனும்;* ***கோடி கோடி நூறு ஆயிரம் எண் எனக் குவிந்த -*** *பல கோடி இலட்சக் கணக்காக*

*நிறைந்த;* ***நீடு வெஞ்சினத்து அரி இனம் -*** *மிகக் கொடிய கோபத்தையுடைய வானரக் கூட்டம்;* ***இரு புடை நெருங்க -*** *இரு பக்கங்களிலும் நெருங்கி வரவும்;* ***மூடும் உம்பரும் -*** *பூமியின்மேல் கவிந்த ஆகாயமும்;* ***இம்பரும் பூமியில் மூழ்க -*** *இவ் வுலகமும் (அச்சேனைகள் வரும் போது எழும்) புழுதியில் மறைந்து விடவும்;* ***தொடர்ந்தான் -*** *பின் வந்தான்.*

*வீடணன் இராமனிடம் சரண்புக வருகையில் அவனை முதன் முதலாக எதிர்கொண்டவர்கள் இவ்விருவருமேயாவர். 15*

***4422. கறங்கு போல்வன, காற்றினும்***
***கூற்றினும் கடிய,***
***பிறங்கு தெண் திரைக்***
***கடல் புடைபெயர்ந்தெனப் பெயர்வ,***
***மறம் கொள் வானரம் ஒன்பது***
***கோடி எண் வகுத்த,***
***திறம் கொள், வெஞ் சினப்***
***படைகொடு, - குமுதனும் - சேர்ந்தான்.***

***குமுதனும் -*** *குமுதன் என்னும் வீரனும்;* ***கறங்கு போல்வன -*** *காற்றாடி போல விரைந்து செல்வனவும்;* ***காற்றினும் கூற்றினும் கடிய -*** *காற்றைக் காட்டிலும் வேகம் உடையனவும், யமனைவிடக் கொடு மையுடையனவும்;* ***பிறங்கு தெண்திரை -*** *விளங்குகின்ற தெளிவான அலைகளையுடைய;* ***கடல் புடை பெயர்ந்து எனப் பெயர்வ -*** *கடல் இடம் விட்டு எழுந்தது போன்று செல்வனவும்;* ***மறம் கொள் வானரம் -*** *வீரம் கொண்ட வானரங்கள்;* ***ஒன்பது கோடி எண் வகுத்த -*** *ஒன்பது கோடியென்று கணக்கிடப்பட்டனவும்;* ***திறம் கோள் வெம்சினப் படை கொடு -*** *மனவலியும் உடல் வன்மையும் கடுமையான கோபமும் கொண்டனவுமான படைகளை உடன் கொண்டு;* ***சேர்ந்தான் -*** *வந்து சேர்ந்தான்.*

*கறங்கு - காற்றாடி; வானத்தில் சுழன்று செல்வதெனக் காரணக் குறியாயிற்று. கடிய - இரட்டுறமொழிதல்: காற்றினும் கூடிய கூற்றினும் கடிய என வேகத்தையும் கொடுமையையும் குறித்தவாறு. 16*

***4423 . ஏழின் ஏழு நூறாயிர***
***கோடி என்று இசைந்த***
***பாழி நல் நெடுந் தோள்***
***கிளர் படை கொண்டு, பரவை***
***ஊழி பேரினும் உலைவில,***
***உலகினில் உயர்ந்த***
***பூமி விண் புக, - பதுமுகன்***
***என்பவன் - புகுந்தான். ****

***ஊழி பரவை பேரினும் -*** *உலக முடிவுக் காலத்தில் கடல் பொங்கி(த் தனது நிலையைவிட்டு)ப் பெயர்ந்து வந்தாலும்;* ***உலைவு இல -*** *அழிவற்றனவாகிய;* ***ஏழின்***

***ஏழு நூறு ஆயிர கோடி என்று இசைந்த -*** *நாற்பத் தொன்பதினாயிரங் கோடி என்ற கணக்கோடு பொருந்திய;* ***பாழி நல் நெடுந்தோள் -*** *வலிமை மிக்க அழகிய நீண்ட தோள்களோடு விளங்குகின்ற;* ***கிளர் படை கொண்டு -*** *வானரப் படையை உடன் கொண்டு;* ***உலகினில் உயர்ந்த பூமி -*** *பூமியிலிருந்து மேலே எழுந்த*

*புழுதி;* ***விண் புக -*** *ஆகாயத்திற்குச் செல்லும்படி;* ***பதுமுகன் என்பவன் -*** *பதுமுகன் என்னும் தலைவன்;* ***புகுந்தான் -*** *வந்துசேர்ந்தான்.*

*ஏழின் ஏழு - பண்புத் தொகை: ஏழினால் பெருக்கிய ஏழு (நாற்பத்தொன்பது). உம்மைத் தொகையாகக் கொள்ளின் ஏழும் ஏழும் - ஏழொடு சேர்ந்த ஏழு - (பதினான்கு) எனப் பொருள்படும். 17*

***4424. ஏழும் ஏழும் என்று***
***உரைக்கின்ற உலகங்கள் எவையும்***
***தாழும் காலத்தும், தாழ்வு இலாத்***
***தட வரைக் குலங்கள்***
***சூழும் தோற்றத்த, வலி***
***கொள் தொள்ளாயிரக்கோடிப்***
***பாழி வெம் புயத்து அரியொடும், -***
***இடபனும் - படர்ந்தான். ****

**இடபனும் -** *இடபன் என்னும் வீரனும்;* **ஏழும் ஏழும் என்று உரைக்கின்ற -** *பதினான்கு என்று சொல்லப்பட்ட;* **உலகங்கள் எவையும் -** *எல்லா உலகங்களும்;* **தாழும் காலத்தும் -** *அழிகின்ற ஊழிக் காலத்திலும்;* **தாழ்வு இலா -** *அழிவில்லாத;* **தடவரைக் குலங்கள்** *- பெரிய மலைகளின் தொகுதிகள்;* **சூழும் தோற்றத்த** *- சூழ்ந்திருப்பது போன்ற தோற்றமுடையனவான;* **வலி கொள் -** *வலிமையைக் கொண்டுள்ள;* **பாழி வெம் புயத்து -** *வன்மை மிக்க கொடிய தோள்களோடு கூடிய;* **தொள்ளாயிரம் கோடி அரியொடும் -** *தொள்ளாயிரங் கோடி என்று கணக்கிட்ட வானர சேனையோடும்;* **படர்ந்தான் -** *வந்து சேர்ந்தான்.*

*உலகம் யாவும் அழியும் பிரளய காலத்திலும் அழியாது நிற்கும் மலைகள் இருப்பின், அம் மலைகளே இந்த வானர சேனைக்கு ஒப்பாகும் என்பது - இல் பொருளுவமையணி. 18*

***4425. தீர்க்கபாதனும், வினதனும்,***
***சரபனும், - திரைக்கும்***
***மால் கருங் கடற்கு உயர்ந்தென***
***மைம் முகத்து அனிகம்***
***ஆர்க்கும் எண்ண அருக் கோடி கொண்டு,***
***அண்டமும் புறமும்***
***போர்க்கும் பூமியில் மறைதர, -***
***முறையினின் புகுந்தார். ****

***தீர்க்க பாதனும்* -** *தீர்க்க பாதனும்;* ***வினதனும் சரபனும்* -** *வினதனும் சரபனும்;* ***திரைக்கும் மால் கருங் கடற்கு உயர்ந்து என* -** *அலையெறிகின்ற பெரிய கரிய கடலைக் காட்டிலும் பெருந் தோற்றத்தையுடையனவான;*

***ஆர்க்கும் எண்ண அரும்* -** *எத் திறமுடையவர்க்கும்எண்ணிக் கணக்கிடமுடியாத;* ***மை முகத்து அனிகம் கோடி கொண்டு* -** *கறுத்த முகமுள்ள கோடிக் கணக்கான வானர சேனையை உடன் கொண்டு;* ***அண்டமும் புறமும்* -** *உலகவுருண்டையின் உள்ளும் புறமும்;* ***போர்க்கும் பூமியின் மறைதர* -** *மேலே எழுந்து மூடிக் கொள்ளும் புழுதியால் மறையும்படி;* ***முறையினில் புகுந்தார்* -** *ஒருவர்பின் ஒருவராக வந்து சேர்ந்தார்கள்.*

*தீர்க்கபாதன்: நீண்ட காதலுடையவன். விநதன்: மிகவும் வணக்கமுடையவன். சரபன்: சரபப் பறவை (எட்டுக்கால் புள்) போன்ற வலிமை வாய்ந்தவன்; இவன் மேகக் கடவுளின் மைந்தன். மைம் முகத்து அனிகம்: கருங்குரங்குகளின் படை.*
*19*

***4426. கை அஞ்சு ஆயுதம் உடைய***
***அக் கடவுளைக் கண்டும்***
***மெய் அஞ்சாதவன், மாதிரம்***
***சிறிது என விரிந்த,***
***வையம் சாய்வரத் திரிதரு***
***வானர சேனை***
***ஐ - அஞ்சு ஆயிரகோடி கொண்டு,***
***அனுமன் வந்து அடைந்தான்.***

***கை அஞ்சு ஆயுதம் உடைய* -** *கிரணங்களாகிய அஞ்சத்தக்க ஆயுதங்களையுடைய;* ***அக் கடவுளைக் கண்டும்* -** *அந்தச் சூரியனைக் கண்டுங்கூட;* ***மெய் அஞ்சாதவன்* -** *சிறிதும் நடுக்கம் கொள்ளாதவனான;* ***அனுனுன்* -** *அனுமன்;* ***மாதிரம் சிறிது என விரிந்த* -** *திக்கெல்லை முழுவதும் அளவில் சிறிய என்று என்னுமாறு பரவியுள்ளதும்;* ***வையம் சாய்வரத் திரிதரு* -** *நிலவுலகம் ஒரு புறமாகச் சாயும்படி உலவுவதுமான;* ***ஐ அஞ்சு ஆயிர கோடி வானர சேனை கொண்டு* -** *இருபத் தையாயிரங்கோடி எண்ணுள்ள வானரப் படையை உடன்கொண்டு;* ***வந்து அடைந்தான்* -** *வந்து சேர்ந்தான்.*

*அனுமன் பிறந்த பொழுதே இளஞ்சூரியனைக் கனிந்த பழமென்று கருதிச் சிறிதும் அஞ்சாது, அதைப் பிடிக்கப் பாய்ந்தவனாதலால அவனை 'அக் கடவுளைக் கண்டு மெய் அஞ்சாதவன்' என்றார்.*

*பூமியின் எந்தப் பகுதியில் இவ் வானர சேனை செல்லுகின்றதோ அந்தப் பகுதி மிக்க பாரத்தால் சாய்வதாயற்று என்பது.*

*சாய்வர; திரிதரு: வர, தரு என்பன துணை வினைகள். 20*

***4427. நொய்தின் கூடிய***
***சேனை, நூறாயிரகோடி***
***எய்த, தேவரும், 'என்கொலோ***

*முடிவு?' என்பது எண்ண,*
*மையல் சிந்தையால் அந்தகன்*
*மறுக்குற்று மயங்க, -*
*தெய்வத் தச்சன் மெய்த் திரு*
*நெடுங்காதலன் - சேர்ந்தான்.*

***தெய்வத் தச்சன் மெய்த்திரு நெடுங் காதலன் -*** *தேவ சிற்பியாகிய விசுவகர்மாவின் பிரதியுருவே எனத்தக்க அழகிய உயர்நத் மகனாகிய நளன் என்பவன்;* ***தேவரும் -*** *தேவர்களும்;* ***என்கொலோ முடிவு -*** *இப் படையின் எல்லையாதோ;* ***என்பது எண்ண -*** *என்று கருதும்படியாக;* ***அந்தகன் மையல் சிந்தையால் -*** *யமனும் இதைக் கண்டதனாலாகிய மயக்கம் கொண்ட மனத்தால்;* ***மயக்குற்று மயங்க -*** *கலங்கித் திகைக்கவும்;* ***நொய்தின் கூடிய -*** *விரைவில் திரண்ட;* ***நூறாயிர கோடி சேனை எய்த -*** *இலட்சக் கோடிக் கணக்கான வானர சேனை தன்னோடு வர;* ***சேர்ந்தான் -*** *வந்தடைந்தான்.*

*அந்தகன்: உயிர்களுக்கு அந்தத்தைச் செய்பவனென யமனுக்குக் காரணக் குறி. நளன்: தெய்வத் தச்சனான விசுவகர்மாவின் மகனாய்ப் பிறந்த ஒரு வானர வீரன்; தன் கையால நீரில் எதைப் போட்டாலும் மிதக்கும்படி வரம் பெற்றவன். திரு நெடு என்றதனால் உடல்வனப்பும் உயரமும் குறிக்கப் பெற்றன. 21*

*4428. கும்பனும், குலச் சங்கனும்,*
*முதலினர், குரங்கின்*
*தம் பெரும் படைத்தலைவர்கள்*
*தர வந்த தானை,*
*இம்பர் நின்றவர்க்கு எண்ண*
*அரிது, இராகவன் ஆவத்து*
*அம்பு எனும் துணைக்கு உரிய;*
*மற்று உரைப்பு அரிது அளவே.*

***கும்பனும் -*** *கும்பன் என்பவனும்;* ***குலச் சங்கனும் -*** *சிறந்த சங் கன் என்னும் வீரனும்;* ***முதலினர் -*** *முதலானவர்களாகிய;* ***தம் பெருங் குரங்கின் படைத்தலைவர்கள் -*** *தம்முடைய பெரிய வானர சேனைத் தலைவர்கள்;* ***தரவந்த -*** *தம்முடன் திரட்டிக் கொண்டு வந்த;* ***தானை -*** *வானர சேனையானது;* ***இம்பர் நின்றவர்க்கு எண்ண அரிது -*** *இவ்வுலக மக்களாலும் கணக்கிட முடியாதது;* ***இராகவன் ஆவத்து அம்பு என்னும் -*** *இராமனின் அம்பறாத் தூணியிலுள்ள அம்புகளின்;* ***துணைக்கு உரிய -*** *அளவாமென்று சொல்லத்தக்க அளவுடையது (அல்லாமல்);* ***அளவு மற்று உரைப்பரிது -*** *அந்தப் படையின் அளவைப் பற்றி வேறு எவ்வகையிலும் சொல்லுவது அரியது.*

*இராமனது அம்புப் புட்டிலில் அம்புகள் அளவில்லாது நிறைந்திருப்பது போலக் கும்பன், சங்கன் ஆகியோரின் சேனைகளிலும் வானரங்கள் அளவற்று நிறைந்திருந்தன. ஆவம் - அம்புப் புட்டில், அம்பறாத்தூணி. 22*

*வானர சேனைகளின் ஆற்றலும் சிறப்பும்*

***4429. தோயின், ஆழி ஓர் ஏழும் நீர்***
***சுவறி வெண் துகள் ஆம்;***
***சாயின், அண்டமும் மேருவும்***
***ஒருங்குடன் சாயும்;***
***ஏயின், மண்டலமும் எள் இட***
***இடம் இன்றி இரியும்;***
***காயின் வெங் கனல்-***
***கடவுளும் இரவியும் கரியும்.***

***தோயின்** - (அங்கே திரண்ட வானர சேனைகள்) படிந்து முழுகினால்; **ஆழி ஓர் ஏழும்** - ஏழு கடல்களும்; **நீர் சுவறி வெண்துகள் ஆம்** - நீர் வற்றி வெள்ளை நிறப் புழுதியாக மாறி விடும்; **சாயின்** - ஒரு பக்கமாகச் சாய்ந்தால்; **அண்டமும் மேருவும்** - பூமி மண்டலமும் மேரு மலையும்; **ஒருங்கு உடன் சாயும்** - ஒரு சேர உடனே (அந்தப் பக்கமாகச்) சாய்ந்து விடும்; **ஏயின்** - எழுந்து உலாவினால்; **மண்தலம்** - இந்தப் பூமி; **எள் இட இடமின்றி இரியும்** - எள் இடுவதற்கும் இடம் இல்லாமற்போகும்; **காயின்** - சினம் கொள்ளுமாயின்; **வெங்கனல் கடவுளும்** - கொடிய அக்கினிதேவனும்; **இரவியும்** - சூரியனும்; **கரியும்** - வெந்து கருகிவிடும்.*

*இச் செய்யுள் வானர சேனையின் மிகுதியையும், பெரு வலிமையையும் குறிக்கிறது. இச் செய்யுள் அடிமறிமாற்றுப் பொருள்கோள் அமைப்புடையது. எந்த அடியை எங்கே கூட்டினும் பொருளும் ஓசையும் வேறுபடா.*

*ஏயின் - எழுந்துஉலாவினால்.* *23*

***4430. எண்ணின், நான்முகர்***
***எழுபதினாயிரர்க்கு இயலா;***
***உண்ணின் அண்டங்கள் ஓர்***
***பிடி உண்ணவும் உதவா;***
***கண்ணின் நோக்கறின், கண்ணுதலானுக்கும்***
***கதுவா, -***
***மண்ணின் மேல் வந்த***
***வானர சேனையின் வரம்பே!***

***மண்ணின்மேல் வந்த** - பூமியின்மேல் ஒருங்கு திரண்டு வந்த; **வானர சேனையின் வரம்பு** - வானரப் படையின் அளவை; **எண்ணின்** - எண்ணத் தொடங்கினால்; **நான்முகர் எழுபதினாயிரர்க்கு** - எழு பதினாயிரம் பிரமர்களுக்கும்; **இயலா** - முடியாது; **உண்ணின்** - (இவ் வானர சேனைகள்) உண்ணத் தொடங்கினால்; **அண்டங்கள்** - அண்டங்களும் யாவும்; **ஓர் பிடி உண்ணவும் உதவா** - ஒவ்வொரு வானரமும்*

*ஒரு பிடியளவாக உண்ணவும் போதாது; **கண்ணின் நோக்குறின்** - கண்ணால் பார்க்க வேண்டுமாயின்; **கண்ணுதலானுக்கும் கதுவா** - நெருப்புக் கண்ணை நெற்றியிலுடையவனாகிய சிவபெருமானாலும் காண இயலாது.*

*இவ்வானரப் படையைப் படைத்த பிரமன் போன்ற எழுபதினாயிரம் பிரமர்கள் ஒருங்கே திரண்டு வந்தாலும் இச் சேனையை அளவிடமுடியாது. இயல்பான இரண்டு கண்களுடன் நெருப்புக் கண்ணையும் நெற்றியில் கொண்ட சிவனாலும் பார்க்கவியலாத பரப்பளவு கொண்டது அவ்வானரப்படை என்பது.*
*24*

***4431. ஒடிக்குமேல், வட மேருவை***
***வேரொடும் ஒடிக்கும்;***
***இடிக்குமேல், நெடு வானக***
***முகட்டையும் இடிக்கும்;***
***பிடிக்குமேல், பெருங் காற்றையும்***
***கூற்றையும் பிடிக்கும்;***
***குடிக்குமேல், கடல் ஏழையும்***
***குடங்கையின் குடிக்கும்.***

***ஒடிக்குமேல் -*** *(அவ்வானர சேனை) ஒடிக்க வேண்டும் என்று கருதினால்;* ***வட மேருவை வேரொடும் ஒடிக்கும் -*** *வடக்கிலுள்ள மேரு மலையையும் அடியோடு ஒடித்துவிடும்;* ***இடிக்குமேல் -*** *இடிக்க வேண்டுமென்று கருதினால்;* ***நெடு வானக முகட்டையும் இடிக்கும் -*** *பெரிய ஆகாயத்தின் மேல் முகட்டையும் இடித்து விடும்;* ***பிடிக்குமேல் -*** *பிடிக்க வேண்டும் என்று விரும்பினால்;* ***பெருங் காற்றையும் -*** *பெரிய காற் றையும்;* ***கூற்றையும் பிடிக்கும் -*** *யமனையும் பிடித்து விடும்;* ***குடிக்கு மேல் -*** *குடிக்க வேண்டும் என்று நினைத்தால்;* ***கடல் ஏழையும் -*** *ஏழு கடல்களையும்;* ***குடங்கையின் குடிக்கும் -*** *உள்ளங்கையால் அள்ளிக் குடித்து விடும்.*

*பிறர் எவராலும் செய்யமுடியாத அரிய பெரிய செயல்களையெல்லாம் எளிதில் செய்து முடிக்கும் இவ் வானரப்படை என்பது.* *25*

***4432. ஆறு பத்து எழு***
***கோடியாம் வானரர்க்கு அதிபர்,***
***கூறு திக்கினுக்கு அப்புறம்***
***குப்புறற்கு உரியார்,***
***மாறு இல் கொற்றவன் நினைத்தன***
***முடிக்குறும் வலியர், -***
***ஊறும் இப் பெருஞ் சேனை***
***கொண்டு - எளிதின் வந்துற்றார்.***

***கூறு திக்கினுக்கு அப்புறம் -*** *(எட்டாகச்) சொல்லப்படும் திசைகளுக்கு அப்பாலும்;* ***குப்புறற்கு உரியார் -*** *தாண்டிக் குதிக்கத்தக்க*

*வல்லமையுள்ளவர்களும்;* ***மாறு இல் கொற்றவன் -*** *இணையற்ற தங்கள் அரசனான சுக்கிரீவன்;* ***நினைத்தன முடிக்குறும் வலியர் -*** *எண்ணிய செயல்களை உடனே செய்து முடிக்கும் மனவுறுதியுடையவர்களுமாகிய;* ***ஆறு பத்து எழுகோடியாம் -*** *அறுபத்தேழு கோடி அளவுள்ள;* ***வானரர்க்கு அதிபர் -*** *வானர சேனைத் தலைவர்;*

**ஊறும் இப் பெருஞ் சேனை கொண்டு -** மேன்மேலும் பெருகுகின்ற இப் பெருஞ் சேனையைத் திரட்டிக் கொண்டு; **எளிதின் வந்துற்றார் -** எளிதில் வந்து சேர்ந்தார்கள்.

இவ்வாறு அறுபத்தேழுகோடி வானரப் படைத் தலைவர்கள் சுக்கிரீவனின் தூதுவர் வந்து சொல்லியவுடனே தம் சேனைகளைத் திரட்டிக் கொண்டு வந்து சேர்ந்தனர் என்பது. குப்புறல் - குதித்தல். *26*

*படைத் தலைவர்கள் சுக்கிரீவனை வணங்குதல்*

***4433. ஏழு மா கடல் பரப்பினும்***
***பரப்பு என இசைப்பச்***
***சூழும் வானரப் படையொடு,***
***அவ் வீரரும் துவன்றி,***
***'ஆழி மா பரித்***
***தேரவன் காதலன் அடிகள்***
***வாழி! வாழி!' என்று உரைத்து,***
***அலர் தூவினா, வணங்கி. ****

**அவ்வீரரும் -** அந்த வானரப் படைத் தலைவர்களும்; **ஏழு மா கடல் பரப்பினும் -** ஏழு பெரிய கடல்களின் பரப்பளவைக் காட்டிலும்; **பரப்பு என இசைப்ப -** விரிந்துள்ளது என்று கூறுமாறு; **சூழும் வானரப் படையொடு -** சூழ்ந்துள்ள வானர சேனையுடனே; **துவன்றி -** நெருங்கிவந்து; **ஆழி மா பரித்தேரவன் காதலன் -** ஒற்றைச் சக்கரத்தையும் சிறந்த குதிரைகளையுமுடைய தேரைச் செலுத்துபவனான சூரியன் மகனாகிய சுக்கிரீவனுடைய; **அடிகள் வாழி வாழி என்று உரைத்து -** திருவடிகள் வாழ்க வாழ்கவென வாழ்த்தி; **வணங்கி -** வழிபட்டு; **அலர் தூவினர் -** மலர்களைத் தூவினார்கள்.

சூரியனது தேர், காலத்தின் வடிவமான ஒற்றைச் சக்கரத்தையும் ஏழு குதிரைகளையும் உடையது என்பது நூற் கொள்கை.

வாழி வாழி - அடுக்கு அன்பின் மிகுதி பற்றியது. *27*

*இராமன் படைகளைக் காணுதல்*

***4434. அனையது ஆகிய சேனை***
***வந்து இறுத்தலும், அருக்கன்***
***தனையன், நொய்தினின் தயரதன்***
***புதல்வனைச் சார்ந்தான்;***
***'நினையும் முன்னம் வந்து அடைந்தது,***
***நின் பெருஞ் சேனை;***
***வினையின் கூற்றுவ, கண்டருள்,***
***நீ என விளம்ப.***

***அனையது ஆகிய சேனை*** *- அப்படிப்பட்ட வானரப் படை;* ***வந்து இறுத்தலும்*** *- வந்து தங்கிய அளவில்;* ***அருக்கன் தனயன்*** *- சூரியன் மகனான சுக்கிரீவன்;* ***தயரதன் புதல்வனை நொய்தினில் சார்ந்தான்*** *- தசரத மன்னனின் மகனாகிய இராமனை விரைவில் சென்றடைந்து;* ***வினையின் கூற்றுவ*** *- தீவினைகளுக்கு இயமன் போன்றவனே!* ***நினையும் முன்னம்*** *- நினைப்பதற்க முன்பே (வெகு விரைவில்);* ***நின் பெருஞ் சேனை*** *- உனது பெரிய சேனையானது;* ***வந்து அடைந்தது*** *- வந்து சேர்ந்தது;* ***கண்டருள் நீ*** *- நீ அதைக் காண வருவாய்;* ***என விளம்ப*** *- எனக் கூற. . . .*

*'வினையின் கூற்றுவ' என்று இராமனை விளித்தது உயிர்களை வாட்டும் வினைகளைப் போக்கிஅவற்றைப் பிறப்பற்றனவாகச் செய்யும் இராமனது அருள் திறம்கருதி. 28*

***4435. ஐயனும் உவந்து அகம்***
***என முகம் மலர்ந்தருளி,***
***தையலாள் வரக் கண்டனன்***
***ஆம் எனத் தளிர்ப்பான்,***
***எய்தினான், அங்கு ஓர் நெடு***
***வரைச் சிகரத்தின் இருக்கை;***
***வெய்யவன் மகன், பெயர்த்தும்,***
***அச் சேனையின் மீண்டான்.***

***ஐயனும் உவந்து*** *- இராமனும் மகிழ்ந்து;* ***அகம் என முகமலர்ந்து அருளி*** *- தன் மனம் போலவே முகமும் மலரப் பெற்று;* ***தையலாள் வரக் கண்டனன் ஆம் என*** *- சீதையே நேரில் வந்திடக் கண்டவன் போன்று;* ***தளிர்ப்பான்*** *- மனக் கிளர்ச்சி கொண்டவனாய்;* ***அங்கு ஓர் நெடுவரை*** *- அங்கே இருந்த உயர்ந்த ஒரு மலையின்;* ***சிகரத்தின் இருக்கை எய்தினான்*** *- உச்சி இடத்தைச் சென்று அடைந்தான்;* ***வெய்யவன் மகன்*** *- சூரியனின் மகனான சுக்கிரீவன்;* ***பெயர்த்தும்*** *- மீண்டும;* ***அச்சேனையின் மீண்டான்*** *- அந்தச் சேனையிடம் திரும்பிச் சென்றடைந்தான்.*

*சேனையைக் கண்ட இராமனுக்குச் சீதையே மீண்டு வந்திடக் கண்டது போன்று மனக் கிளர்ச்சி ஏற்பட்டது என்கிறார். இந்தச் சேனையே கருவியாக இருந்து போர் வெற்றி தந்து சீதையை மீட்கும் காரியம் நிறைவேறிடும் என்ற நம்பிக்கையின் உறுதி இவ்வாறு வெளிப்பட்டது. 'தளிர்ப்பான்' என்ற சொல்லின் குறிப்பு மிகவும் நயமானது. முந்தைய படலங்களில் சீதையைப் பிரிந்ததனால்*

*வாடிய இராமனிடம் புதிய தென்பு பிறந்தது என்பதைக் குறிப்பாகப் புலப்படுத்துகிறது 'தளிர்ப்பான்' என்ற சொல்லாட்சி. தளிரே மரம் செடிகளின் எதிர்கால வளத்தைப் புலப்படுத்துமன்றோ? சேனைப் பரப்பு முழுவதும காண்பதற்கு ஒரு மலைச் சிகரமே பொருந்துமென்பது கவிஞர்குறிப்பு. 29*

***4436. அஞ்சோடு ஐ - இரண்டு யோசனை***
***அகலத்தது ஆகி,***
***செஞ்செவே வட திசைநின்று***
***தென் திசை செல்ல,***

***எஞ்சல் இல் பெருஞ் சேனையை,***
***'எழுக' என ஏவி,***
***வெஞ் சினப் படை வீரரை***
***உடன் கொண்டு மீண்டான் ****

***அஞ்சொடு ஐ இரண்டு யோசனை*** - *பதினைந்து யோசனைப் பரப்பளவு;* ***அகலத்தது ஆகி*** - *அகலம் உடையதாய்;* ***செஞ்சேவே*** - *நேராக;* ***வடதிசை நின்று*** - *வடக்கிலிருந்து;* ***தென்திசை செல்ல*** - *தெற்கு நோக்கிச் செல்வதற்கு;* ***எழுக என*** - *புறப்படுக என்று;* ***எஞ்சல் இல் பெருஞ்சேனையை*** - *குறைவற்ற பெரிய வானரப் படையை;* ***ஏவி*** - *ஏகுமாறு கட்டளையிட்டு;* ***வெஞ்சினப் படை வீரரை உடன் கொண்டு*** - *கொடிய சினம் உள்ள வானரப்படைத் தலைவரைத் தன்னுடன் வருமாறு அழைத்துக் கொண்டு;* ***மீண்டான்*** - *சுக்கிரீவன் இராமனிடம் திரும்பவும் வந்து சேர்ந்தான்.*

*படை நடைபோட்டுச் செல்லும்போது இராமபிரான் ஒரே இடத்திலிருந்து பார்ப்பதற்குச் சுக்கிரீவன் ஏற்பாடு செய்ததை இப்பாடல் புலப்படுத்துகின்றது. எழுக + என = எழுகென: (அகரம்) தொகுத்தல்விகாரம். 30*

*சுக்கிரீவன் இராமனுக்குத் தானையை வரன்முறைப்படி காட்டுதல்*

*4437.* ***மீண்டு, இராமனை அடைந்து,***
***'இகல் வீரருள் வீர!***
***காண்டி, நீ' என்று,***
***வரன்முறை தெரிவுறக் காட்டி,***
***ஆண்டு இருந்தனன்; ஆர்த்து***
***உருத்து எழுந்ததையன்றே,***
***ஈண்டு சேனை, பால் எறி***
***கடல் நெறி படர்ந்தென்ன. ****

*(சுக்கிரீவன்)* ***மீண்டு இராமனை அடைந்து*** - *திரும்பவும் இராம னிடம் வந்து (அவனை நோக்கி);* ***'இகல் வீரருள் வீர*** - *வலிமை பொருந்திய வீரர்களுள்ளே சிறந்த வீரனே!* ***நீ காண்டி என்று*** - *நீ காண்பாய் என்று;* ***வரன் முறை தெரிவுறக் காட்டி*** - *சேனைகளை*

*முறையாகத் தெரியும்படி (அவனுக்குக்) காண்பித்து;* ***ஆண்டு இருந்தனன்*** - *அந்த இடத்தில் இருந்தான் (அப்போது);* ***ஈண்டு சேனை*** - *திரண்ட அந்த வானர சேனையானது;* ***எறி பாற் கடல்*** - *அலை வீசுகின்ற பாற்கடல்;* ***நெறி படர்ந்து என்ன*** - *வழியில் சென்றது போல;* ***ஆர்த்து உருத்து எழுந்தது*** - *பேராரவாரம் செய்து (பிறர்க்கு) அச்சம் உண்டாகப் புறப்பட்டது.*

*சுக்கிரீவன் வானரப் படைகளன் வரலாறுகளை இராமனுக்குச் செம்மையாக விளங்கச் சொன்னான் என்பது.*

*வானரப் படைக்குப் பாற்கடல் உவமை: நிறத்தாலும் ஆரவாரத்தாலும் பாற்கடல் அலைகள் வானர சேனைக்கு உவமையாயின. ஐயரவர்கள் நூலகப் பதிப்பில் இப்பாடல் இடம் பெறவில்லை.* *31*

*வானரப் படையின் பெருக்கம்*

***4438. எட்டுத் திக்கையும், இரு***
***நிலப்பரப்பையும், இமையோர்***
***வட்ட விண்ணையும், மறி***
***கடல் அனைத்தையும், மறையத்***
***தொட்டு மேல் எழுந்து***
***ஓங்கிய தூளியின் பூமி,***
***அட்டிச் செம்மிய நிறை குடம்***
***ஒத்தது, இவ் அண்டம்.***

***எட்டுத் திக்கையும் -*** *எட்டுத் திசைகளையும்;* ***இரு நிலப் பரப்பையும்-*** *பெரிய பூமியின் விரிந்த இடம் முழுவதையும்;* ***இமையோர் வட்டவிண்ணையும் -*** *தேவர்கள் வாழ்கின்ற வட்டவடிவமான மேலுலகத் தையும்;* ***மறிகடல் அனைத்தையும் -*** *அலைகள் வீசும் ஏழு கடல்களையும்;* ***மறைய-*** *மறையும்படி;* ***தொட்டு மேல் எழுந்து ஓங்கிய -*** *தரையிலிருந்து மெலெழுந்து பரந்த;* ***தூளியின் -*** *(படைகளின்) புழுதியால்;* ***இவ் அண்டம் -*** *இந்த அண்ட கோளமானது;* ***பூழி அட்டிச் செம்மிய -*** *புழுதியை இட்டு மூடிய;* ***நிறை குடம் ஒத்தது -*** *நிறை குடத்தை ஒத்திருந்தது.*

*புழுதியால் நிறைந்த நிறைகுடத்தைத் தூளியால் நிரம்பிய அண்ட கோளத்திற்கு உவமையாக்கினார்.*

*தன்மைத் தற்குறிப்பேற்றவுவமையணி.* *32*

***4439. அத்தி ஒப்பு எனின்,***
***அன்னவை உணர்ந்தவர் உளரால்;***
***வித்தகர்க்கு இனி உரைக்கலாம்***
***உவமை வேறு யாதோ?***
***பத்து இரட்டி நன் பகல்***
***இரவு ஒருவலர் பார்ப்பர்,***
***எத் திறத்தினும் நடுவு***
***கண்டிலர், முடிவு எவனோ?***

***அத்தி ஒப்பு எனின் -*** *(இச் சேனைத் தொகுதிக்கு) கடல் நிகராகு மென்று கூறினால்;* ***அன்னவை உணர்ந்தவர் உளர் -*** *அக் கடல்களின் அளவைக் கண்டறிந்தவர்கள் இருக்கின்றார்கள் (இச் சேனையின் பரப் பைக் கண்டவர்கள் இல்லை);* ***இனி வித்தகர்க்கு -*** *இனிமேல் அறிவு டையவரால்;* ***உரைக்கல் ஆம் உவமை -*** *(இச் சேனைக்கு) எடுத்துக் கூறும் உவமை;* ***வேறு யாதோ -*** *வேறு யாது உள்ளது (எதுவுமில்லை);* ***பத்து இரட்டி நன்பகல் இரவு -*** *இருபது நாட்கள் பகலிலும் இரவிலும்;* ***ஒருவலர் பார்ப்பார்-***

*இடைவிடாமல் பார்ப்பவராகிய இராமலக்குவர்;* ***எத் திறத்தினும் -*** *எவ்வகையாலும்;* ***நடுவு கண்டிலர் -*** *(இச் சேனையின்) நடுவையும்காணாதவராயினர்;* ***முடிவு எவனோ -*** *(அவ்வாறானால்) இதன் முடிவெல்லையைக் காண்பது எவ்வாறோ?*

*அறிவாளிகளான இராமஇலக்குவர் இருபது நாள் அல்லும் பகலும் இடை விடாமல் பார்த்து இச் சேனையின் நடுவெல்லைக் கூடக் காணாதவராயினர். அப்படியிருக்க, இனி இதன் முடிவெல்லையை யாரால் காண முடியும் என்றவாறு. அத்தி - கடல்.*
*33*

*படையைக் குறித்து இராமலக்குவர் உரையாடல்*

***4440. விண்ணின் தீம்புனல் உலகத்தின்,***
***நாகரின், வெற்றி***
***எண்ணின், தன் அலது ஒப்பு இலன்***
***என நின்ற இராமன்,***
***கண்ணின், சிந்தையின், கல்வியின்,***
***ஞானத்தின், கருதி,***
***அண்ணல் - தம்பியை நோக்கினன்,***
***உரைசெய்வதானான்:***

***வெற்றி எண்ணில் -*** *வெற்றி பெறுவதைப் பற்றி ஆராய்ந்தால்;* ***தான் அலது -*** *தானே தனக்கு உவமையாவது அல்லாமல்;* ***விண்ணில் -*** *மேலுலகத்திலும்;* ***தீம்புனல் உலகத்தில் -*** *இனிய கடல் சூழ்ந்த உலகத்திலும்;* ***நாகரின் -*** *நாகர்கள் வாழும் பாதாள உலகத்திலும்;* ***ஒப்பு இலன் என -*** *உவமையில்லாதவன் எனச் சொல்லுமாறு;* ***நின்ற இராமன் -*** *(சிறப்போடு) விளங்கும் இராமன்;* ***கண்ணின் -*** *தன் கண்களாலும்;* ***சிந்தையின் -*** *மனத்தினாலும்;* ***கருதி -*** *அந்தச் சேனைப் பாப்பை நன்றாக ஆராய்ந்து;* ***அண்ணல் தம்பியை நோக்கினன் -***

*பெருமை வாய்ந்த இளைய பெருமாளைப் பார்த்து;* ***உரை செய்வதானான் -*** *(அச் சேனைபற்றிக்) கூறத் தொடங்கினான்.*

*நாகர் - தானியாகுபெயர் (பாதாள உலகம்); படமும் வாலும் உடையராய் மனிதர் போன்ற உருவமும் தெய்வத் தன்மையுமுடைய பாம்புச் சாதியார். 'தீம் புனல்': உலகைச் சூழ்ந்து நிற்பது உவர்க் கடலே யெனினும் மக்களுக்க மிக இன்றியமையாத உணவிற்குச் சுவையளிக்கும் உப்பை விளைவித்தலால் 'தீம்புனல்' என்றார். உப்பு என்ற சொல்லுக்கே சுவை என்னும் பொருள் உண்டு. தன்துணை ஒருவரும் தன்னில் வேறு இலான் (3968), கூடடு ஒருவரையும் வேண்டாக் கொற்றவ (4029), துணை இலான் (6226) என்ற தொடர்கள் ஒப்பிட்டு உணரத்தக்கன.* *34*

***4441. 'அடல்கொண்டு ஓங்கிய சேனைக்கு,***
***நாமும் நம் அறிவால்***
***உடல் கண்டோம்: இனி முடிவு***
***உள காணுமாறு உளதோ? -***
***மடல் கொண்டு ஓங்கிய அலங்கலாய்! -***

*மண்ணிடை மாக்கள்,*
*"கடல் கண்டோம்" என்பர்; யாவரே*
*முடிவு உறக் கண்டார்?*

***மடல்கொண்டு ஓங்கிய அலங்கலாய் -*** *இதழ்கள் நிறைந்து சிறந்த மாலையை அணிந்தவனே!* ***நாமும் நம் அறிவால் -*** *நாம் இருவரும் நமது அறிவு கொண்டு;* ***அடல் கொண்டு ஓங்கிய சேனைக்கு -*** *வலிமை பெற்றுச் சிறந்துள்ள இந்த வானரப் படையின்;* ***உடல் கண்டோம் -*** *நடுவிடத்தை ஓரளவு பார்த்தோம் (அல்லாமல்);* ***இனி உள -*** *இனி இதற்குள்ள;* ***முடிவு காணுமாறு உளதோ -*** *முடிவெல்லையைக் காணும் வகை ஏதேனும் உண்டோ?* ***மண் இடை -*** *இந் நிலவுலகத்தில்;* ***மாக்கள் -*** *மனிதர்கள்;* ***கடல் கண்டோம் என்பர் -*** *கடலைப் பார்த்தோம் என்று சொல்வார்கள் (ஆனால்);* ***முடிவு உறக் கண்டார் யாவரே -*** *அக்கடலின் முடிவெல்லையைக் கண்டறிந்தவர் யார்தாம்?*

*கடலைக் காண்பவர் அதன் ஒரு பகுதியை மட்டும் காண்பாரேயல்லாமல் அதன் முடிவெல்லையைக் காணமாட்டார்கள்; அதைப்போல நாமும் இச்சேனைக் கடலின் ஒரு பகுதியை மட்டும் கண்டோமேயல்லாமல் இதன் முடிவெல்லையைக் காணமுடியாதுஎன்பது.*

*சேனைக்கு: உருபு மயக்கம்.* *35*

*4442. 'ஈசன் மேனியை, ஈர் - ஐந்து*
*திசைகளை, ஈண்டுஇவ்*
*ஆசு இல் சேனையை,*
*ஐம்பெரும் பூதத்தை, அறிவை,*
*பேசும் பேச்சினை, சமயங்கள்*
*பிணக்குறும் பிணக்கை, -*
*வாச மாலையாய்! - யாவரே முடிவு*
*எண்ண வல்லார்?*

***வாச மாலையாய் -*** *மணம் நிறைந்த மாலையை அணிந்தவனே!* ***ஈசன் மேனியை -*** *இறைவனின் திருமேனியையும்;* ***ஈர் ஐந்து திசைகளை -*** *பத்துத் திக்குகளையும்;* ***ஐம்பெரும் பூதத்தை -*** *ஐந்த பெரிய பூதங்களையும்;* ***அறிவை -*** *நுட்பமான அறிவையும்;* ***பேசும் பேச்சினை -*** *பேசும் மொழிகளையும்;* ***சமயங்கள் பிணக்குறும் பிணக்கை -*** *தமக்குள் சமயங்கள் மாறுபடுகின்ற மாறுபாட்டையும்;* ***ஈண்டு இவ் ஆசு இல் சேனையை -*** *இங்கே திரண்டுள்ள குற்றமற்ற இவ்வானரப் படையையும்;* ***யாவரே முடிவு எண்ண வல்லார் -*** *எவர்தாம் அவற்றின் முடிவைக் கணக்கிட வல்லவர்?*

*உபமேயமாகிய சேனையையும் உவமானமாகிய ஈசன்மேனி முதலியவற்றையும் ஒருங்கே ஒரு பொதுத் தன்மையைக் கொண்டு முடியுமாறு கூறப்பட்டுள்ளது. இறைவன் எங்குமுள்ளவனாதலால் அவனது திருமேனி அளவிட்டு அறிய முடியாதது; ஐம்பெரும் பூதங்கள் உலக முழுவதும் நிம்பியிருத்தலால் அவற்றிற்கும் ஓர் அளவு இல்லை; புதிது புதிதாகப் பொருள்களை அறியும் அறிவுக்கும் ஓர் எல்லையில்லை; ஒருவர் ஒன்று பேசும்போது அதனைத் தொடர்ந்து பேசு இடம் உண்டாதலால் அதற்கும் ஓர் அளவில்லை. தன் தெய்வம் என் தெய்வம் என்று பேசிச் சழக்கிடும் சமய*

*வாதங்களுக்கும் முடிவில்லை. இவற்றைப் போலவே வானரப் படையின் அளக்கமுடியாத நிலை இங்கே காட்டப்பெற்றுள்ளது.* *36*

***4443. 'இன்ன சேனையை, முடிவுற***
***இருந்து இவண் நோக்கி,***
***பின்னை காரியம் புரிதுமேல்,***
***நாள் பல பெயரும்;***
***உன்னி, செய்கைமேல் ஒருப்படல்***
***உறுவதே உறுதி'***
***என்ன - வீரனைக் கைதொழுது,***
***இளையவன் இயம்பும்:***

***இன்ன சேனையை -*** *இத்தகைய படையை;* ***இவண் இருந்து முடி வுற நோக்கி -*** *இங்கேயிருந்து முழுவதும் நன்றாகப் பார்த்து;* ***பின்னை -*** *அதன் பின்பு;* ***காரியம் புரிதுமேல் -*** *(நமது) செயலைச் செய்யத் தொடங்குவோமானால் (இதைப் பார்த்து முடிவதற்குள்);* ***நாள் பல பெயரும் -*** *பல நாட்கள் கழிந்து விடும்;* ***உன்னி -*** *(ஆகவே இனிச் செய்ய வேண்டியவற்றை) நன்றாக ஆராய்ந்து;* ***செய்கைமேல் ஒருப்படல் உறுவதே உறுதி -*** *செய்யவேண்டிய செயலில் மனம் ஒன்று பட்டுச் செய்ய முற்படுவதே நன்மை தருவதாகும்;* ***என்ன -*** *என்று (இராமன்*

*கூற);* ***இளையவன் -*** *இலக்குவன்;* ***வீரனைக் கை தொழுது இயம்பும் -*** *இராமனை வணங்கிக் கூறலானான்.*

*தோளொடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின் நாள்பல கழியுமால் (7382) என்றும் கும்பகருணனின் உருவத் தோற்றம் வருணிக்கப்பட்டதை இங்கு ஒப்பிட்டுணரலாம்.* *37*

***4444. 'யாவது எவ் உலகத்தினின்,***
***இங்கு, இவர்க்கு இயற்றல்-***
***ஆவது ஆகுவது; அரியது ஒன்று***
***உளது எனல் ஆமே? -***
***தேவ! - தேவியைத் தேடுவது***
***என்பது சிறிதால்;***
***பாவம் தோற்றது, தருமமே***
***வென்றது, இப்படையால்.***

***தேவ -*** *தேவனே!* ***இங்கு இவர்க்கு -*** *இங்குள்ள வானர வீரர்களுக்கு;* ***எவ் உலகத்தினின் -*** *எந்த உலகத்தில்;* ***யாவது இயற்றல் ஆவது -*** *எதைச் செய்து முடிக்கவேண்டியதிருந்தாலும்;* ***ஆகுவது ஆவது -*** *அச்செயல்கள் எளிதில் கைகூடிவிடும்;* ***அரியது ஒன்று -*** *(அவ்வாறாக இவர்களுக்குச் செய்வதற்கு) அரிய செயல்;* ***உளது எனல் ஆமே -*** *உள்ளது என்று சொல்வதற்கு இடமுண்டோ?* ***தேவியைத் தேடுவது என்பது -*** *சீதையைத் தேடிக் கண்டு பிடிப்பதென்பது;* ***சிறிது -*** *(இவர் களது பேராற்றலுக்கு) மிகவும் எளிதான செயலாகும்;* ***இப்படையால் -*** *இந்தச் சேனையால்;*

***பாவம் தோற்றது-*** *பாவம் தோல்வியடைந்தது;* ***தருமமே வென்றது -*** *தருமமே வெற்றிபெற்றது.*

*எந்த உலகத்தில் எச் செயல் செய்யவேண்டுமானாலும் இவர்களுக்கு எளிதில் செய்ய முடியுமென்பது. நல்லறத்தின் வழி நிற்கும் நமக்கு இச் சேனை கிடைத்தது பாவம் அழிவதற்கும் தருமம் தழைப்பதற்கும் ஓர் அறிகுறி என்றான் இலக்குவன்.*
*38*

***4445. 'தரங்க நீர் எழு***
***தாமரை நான்முகன் தந்த***
***வரம் கொள் பேர்***
***உலகத்தினில், மற்றை மன்னுயிர்கள்,***
***உரம் கொள் மால் வரை***
***உயிர் படைத்து எழுந்தன ஒக்கும்***
***குரங்கின் மாப் படைக்கு,***
***உறையிடப் படைத்தனன்கொல்லாம்?***

***தரங்க நீர் எழு -*** *அலைகள வீசும் நீரில் முளைக்கும் இயல்புள்ள;* ***தாமரை நான்முகன் -*** *தாமரை மலரின் உதித்த பிரமன்;* ***தந்த -***

*படைத்த;* ***வரம் கொள் -*** *மேன்மையைப் பெற்ற;* ***பேர் உலகத்தினில் -*** *இப் பெரிய உலகத்திலுள்ள;* ***மற்றை மன் உயிர்கள் -*** *நிலை பெற்ற மற்றைய உயிரினங்களை;* ***உயிர் படைத்து எழுந்தன -*** *உயிர் பெற்று வந்தனவாகிய;* ***உரம் கொள் -*** *வலிமை கொண்ட;* ***மால் வரை ஒக்கும் .*** *பெரிய மலைகளைப் போன்ற;* ***குரங்கின் மா படைக்கு -*** *இந்தப் பெரிய வானர சேனைக்கு;* ***உறை இட -*** *உறையிட்டுக் கணக்கிடுவதற்காகவே;* ***படைத்தனன் கொல் -*** *படைத்தான் போலும்.*

*பிற உயிர்களெல்லாம் இச் சேனையிலுள்ள வானரத் தொகைக்கு உறையிடு வதற்கென்றே படைக்கப்பட்டனபோலும் என்பது.*

*உறை: பெரிய எண்ணைக் குறிப்பிட அடையாளமாக வைக்கும் சிறு பொருள்.*

*'அலருளோன் ஆதியாக ஒழிந்த வேறு உயிர்களெல்லாம் அரக்கருக்கு உறையும் போதா' (4868) 'உறையிடவும் போதார்' - (5344) என்ற இடங்களிலும் இக்கருத்து வந்துளது.* *39*

***4446. 'ஈண்டு, தாழ்க்கின்றது என், இனி -***
***எண் திசை மருங்கும்,***
***தேண்டுவார்களை வல்லையில்***
***செலுத்துவது அல்லால்?***
***நீண்ட நூல்வலாய்!' என்றனன்,***
***இளையவன்; நெடியோன்,***

## பூண்ட தேரவன் காதலற்கு,
## ஒரு மொழி புகலும்:

***நீண்ட நூல் வலாய் -*** *பெருமை வாய்ந்த நூல்களில் வல்லவனே;* ***எண்திசை மருங்கும் -*** *எட்டுத் திசைகளினிடங்களிளெல்லாம்;* ***தேண்டு வார்களை -*** *(சீதையைத்) தேடுவதற்கு உரியவர்களை;* ***வல்லையில் செலுத்துவது அல்லால் -*** *விரைவாக அனுப்புவதல்லாமல்;* ***இனி ஈண்டுத் தாழ்க்கின்றது என் -*** *இனிமேலும் இங்கிருந்து காலதாமதம் செய்வது எதற்காக?* ***என்றனன் இளையவன் -*** *என்று இலக்குவன் கூறினான்.* ***நெடியோன் -*** *பெருமை மிக்கவனான இராமன்;* ***பூண்ட தேரவன் காதலற்கு-*** *ஏழு குதிரைகள் பூட்டப்பெற்ற தேரையுடையவனான சூரியன் மகனாகிய சுக்கிரீவனுக்கு;* ***ஒரு மொழிபுகலும் -*** *ஒரு வார்த்தைசொல்லலானான். 40*

## நாட விட்ட படலம்

இராமபிரான் கட்டளைப்படி சுக்கிரீவன் சீதையைத் தேடும்படி வானரப் படைத் தலைவர்களை எல்லாத் திசைகளிலும் விடுத்த செய்தியையுணர்த்துவதைக் கூறும் படலம் இது.

படையளவு பற்றிச் சுக்கிரீவனும் இராமனும் உரையாடுகின்றார்கள்; இராமன் இனி நடக்க வேண்டுவன குறித்துச் சிந்தனை செய்க என்று சுக்கிரீவனிடம் கூறுகிறான்; அச்சுக்கிரீவன் அனுமனைஅங்கதன் முதலியவர்களுடன் தென்திசைக்கு அனுப்புகிறான்; பிற திசைகளுக்கு மற்றவர்களை அனுப்புகிறான்; ஒரு திங்களுக்குள் தேடித் திரும்பிவருமாறு அவர்களுக்கு ஆணையிடுகிறான்; மேலும் தென்திசை செல்லும் வானர வீரர்க்குச் சுக்கிரீவன் வழி கூறுகிறான்; இராமனோ, அனுமனுக்குச் சீதையின் அங்க அடையாளங்களைக் கூறுகிறான்; இராமன் அனுமனுக்கு உரைத்த அடையாளச் செய்திகள் சுட்டிக் காட்டப்படுகின்றன; பின்னர் இராமன் மோதிரம் அளித்து விடைகொடுத்து அனுமனை அனுப்புகிறான்.

படையின் அளவு பற்றி இராமனும் சுக்கிரீவனும் உரையாடல்

கலிவிருத்தம்

**4447. 'வகையும், மானமும், மாறு
எதிர்ந்து ஆற்றுறும்
பகையும் இன்றி, நிரைந்து
பரந்து எழும்
தகைவு இல் சேனைக்கு,
அலகு சமைந்தது ஓர்
தொகையும் உண்டுகொலோ?'
எனச் சொல்லினன்.**

**'வகையும் -** ஆராய்தலும்; **மானமும் -** ஒப்புமையும்; **மாறு எதிர்ந்து ஆற்றுறும் பகையும் -** எதிர்த்துச் செயல்படக்கூடிய பகைவரும் **இன்றி -** இல்லாமல்; **நிரைந்து -** வரிசையாக அமைந்து; **பரந்து எழும் -** விரிவாகப் பரவி எழுந்துள்ளதும்; **தகைவு இல் சேனைக்கு -** தடுப்பதற்கு எவரும் இல்லாததுமான சேனைக்கு; **அலகு சமைந்தது ஓர் தொகையும் உண்டுகொலோ -** அளவு கொண்டு சொல்லக்கூடிய ஓர் எண்ணிக்கையும் உண்டோ'; **என -** என்று இராமன் வினவ; **சொல்லினன் -** சுக்கிரீவன் பின்வருமாறு சொன்னான்.

தலைவன் இடுகின்ற கட்டளையை நிறைவேற்றுதலன்றி வேறு ஆய்வு மேற் கொள்ளுதல் படைவீரர்களுக்கு இல்லை என்ற கருத்தினை 'வகை. . . இன்றி' என்ற தொடர்பு புலப்படுத்திற்று. வகையும் மானமும் பகையும் இன்றி எனக் கூட்டிப் பொருள் கொள்க. வகைதல் - ஆராய்தல். 'நகர் நீ தவிர்வாய்' எனவும் வகையாது தொடர்ந்து' என்ற தொடரில் 'வகையாது' என்ற சொல் 'ஆராயாமல்' என்ற பொருளில் வந்தது. மானம் - ஒப்புமை. வகையும் மானமும் பகையும் என்ற எண் ணும்மைச்

*சொற்கள் 'இன்றி' என்னும் வினையெச்சம் கொண்டு முடிவதாகப் பாடல் அமைந்துள்ளதுகாண்க.* *1*

***4448. ' ''ஏற்ற வெள்ளம் எழுபதின்***
***இற்ற'' என்று***
***ஆற்றலாளர் அறிவின்***
***அமைந்தது ஓர்***
***மாற்றம் உண்டு; அது***
***அல்லது, மற்றும் ஓர்***
***தோற்றம் என்று இதற்கு***
***எண்ணி முன் சொல்லுமோ?***

*(அதுகேட்ட சுக்கிரீவன் இராமனை நோக்கி);* ***ஏற்ற வெள்ளம் எழுபதின் இற்ற என்று - (**இந்த வானர சேனையின் அளவு) எழுபது வெள்ளம் என்னும் அளவால் அமைந்திருக்கின்றது என்று;* ***ஆற்றலாளர் அறிவின் அமைந்தது -*** *வல்லவருடைய அறிவினால் ஆராய்ந்து கண்ட தாகிய;* ***ஓர் மாற்றம் உண்டு -*** *ஒரு வார்த்தை உள்ளது;* ***அது அல்லது -*** *(அந்த வார்த்தை) அல்லாமல்;* ***இதற்கு -*** *இச் சேனைக்கு;* ***மற்றும் ஓர் தோற்றம் என்று -*** *வேறான ஒரு முடிவெல்லையுண்டு என்று;* ***எண்ணி முன் சொல்லுமோ -*** *ஆராய்ந்து சொல்ல இயலுமோ? (இயலாது).*

*இச் சேனையின் தொகுதி பற்றிப் பெரியோர் எழுபது வெள்ளம் என்று கூறியதை உடன்படிவேண்டும்; மாறாக யாராலும் இவ்வளவென்று கணக்கிட்டுக் கூறுவது எவ்வாற்றாலும் இயலாது என்க.* *2*

***4449. 'ஆறு பத்து எழு கோடி அனீகருக்கு***
***ஏறு கொற்றத் தலைவர், இவர்க்கு முன்***
***கூறு சேனைப் பதி, கொடுங் கூற்றையும்***
***நீறு செய்திடும் நீலன்' என்று ஓதினான்.***

***அனீகருக்கு -*** *இச் சேனையிலுள்ள வானரங்களுக்கு;* ***ஏறு கொற்றத் தலைவர் -*** *சிறந்த வெற்றியையுடைய தலைவர்கள்;* ***ஆறு பத்து எழு கோடி-*** *அறுபத்தேழு கோடிக் கணக்கான;* ***இவர்க்கு முன் கூறு சேனைப்பதி -*** *இப் படைத் தலைவர்களுக்கும் முதலாகச் சொல்லப்பட்ட தலைமைப் படைத்தலைவனானவன்;* ***கொடுங் கூற்றையும் -*** *கொடிய யமனையும்;* ***நீறுசெய்திடும் நீலன் -*** *சாம்பலாக்கவல்ல வலிமையுள்ள*

*நீலனாவன்;* ***என்று ஓதினான் -*** *என்று சுக்கிரீவன் கூறினான்.*

*எழுபது வெள்ளம் வானர வீரர்களுக்கு அறுபத்தேழு கோடி சேனைத் தலைவர் உள்ளனர்; அந்தப் படைத் தலைவர்களுக்கெல்லாம் தலைவன் நீலன் என்பது. கொல்லுதல் தொழிலமைந்த யமனையே கொல்லும் திறம் வாய்ந்த வானென நீலனது சிறப்பு கூறப்பெற்றுள்ளது. அனீகம் - சேனை வகுப்பு; அனீகர் - சேனையிலுள்ளவர்.* *3*

*நடக்க வேண்டுவன குறித்துச் சிந்தனை செய்க என இராமன் கூறுதல்*

***4450.  எனது உரைத்த***
***எரிகதிர் மைந்தனை,***
***வென்றி விற் கை***
***இராமன் விருப்பினால்,***
***'நின்று இனிப் பல***
***பேசி என்னோ? நெறி***
***சென்று இழைப்பன சிந்தனை***
***செய்க' என்றான்.***

***என்று உரைத்த -*** *என்று கூறிய;* ***எரி கதிர் மைந்தனை -*** *வெப்ப மான கதிர்களையுடைய சூரியன் மகனான சுக்கிரீவனை;* ***வென்றி விற்கை இராமன் -*** *வெற்றியைத் தரும் கோதண்டம் என்னும் வில்லைத் தாங்கிய இராமன்;* ***விருப்பினால் -*** *அன்புடன் (நோக்கி);* ***இனி நின்று பல பேசி என்னோ -*** *இப்பொழுது (வீணே காலங் கழியுமாறு) பலபடப் பேசுவதால் வரும் பயன் யாது?* ***நெறி சென்று இழைப்பன -*** *முறையாகச் செயலாற்றும் வழியை மேற்கொண்டு செய்ய வேண்டியவற்றைக் குறித்து;* ***சிந்தனை செய்க -*** *ஆலோசனை செய்க;* ***என்றான் -*** *என்று சொன்னான்.*

*வென்றி விற்கை இராமன்: எப்பொழுதும் வெற்றியே அல்லாமல் தோல்வியையறியாத கோதண்டத்தை ஏந்தியவன்.  எரிகதிர் - வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.  சூரியனைக் குறித்து நின்றது.*
*4*

*சுக்கிரீவன், அனுமனை அங்கதன் முதலிவர்களுடன் தென்திசைக்கு அனுப்புதல்*

***4451.  அவனும் - அண்ணல் அனுமனை, 'ஐய! நீ,***
***புவனம் மூன்றும் நின் தாதையின் புக்கு உழல்***
***தவன வேகத்தை ஓர்கிலை; தாழ்த்தனை;***
***கவன மாக் குரங்கின் செயல் காண்டியோ?***

***அவனும் -*** *அந்தச் சுக்கிரீவனும்;* ***அண்ணல் அனுமனை -*** *பெருமையில் சிறந்த அனுமனை (நோக்கி);* ***ஐய -*** *ஐயனே!* ***நீ -, புவனம் மூன்றும் -*** *மூவலகத்திலும்;* ***நின் தாதையின் -*** *உன் தந்தையாகிய*

*வாயுவைப் போல;* ***புக்கு உழல் -*** *புகுந்து செல்கின்ற;* ***தவன வேகத்தை -*** *(உனது) மிக்க வேகத்தை;* ***ஓர்கிலை -*** *உணரமாட்டாமல்;* ***தாழ்த்தனை*** *- வீணே தாமதிருத்திருக்கின்றாய்;* ***கவன மாக் குரங்கின் -*** *விரைந்து செல்லக்கூடிய பெரிய குரங்குகளின்;* ***செயல் காண்டியோ -*** *ஆற்றல் மிக்க செய்கையைக் காண விரும்புகின்றாயோ?*

*மூவுலகத்திலும் இயங்கும் வல்லமை பெற்றிருந்தும் நீ இப்போது சீதையை நாடிச் செய்தி தெரிந்து வராமல் வீணே நாள் கடத்துவது, மற்றை வானரர்கள் சீதையைத் தேடும் திறத்தில் என்ன செய்கின்றார்கள் என்று காணக் கருதுகிறாய் போலும் எனச் சுக்கிரீவன் அனுமனை நோக்கிக் கூறினான் என்பது,*

*தவன வேகம் - ஒருபொருட் பன்மொழி. வேகத்தை (வேகத்தை உடைய நீ) - முன்னிலை ஒருமைக் குறிப்பு வினைமுற்று .* *5*

***4452. 'ஏகி, ஏந்திழைதன்னை, இருந்துழி,***
***நாகம் நாடுக; நானிலம் நாடுக;***
***போக பூமி புகுந்திட வல்ல நின்***
***வேகம் ஈண்டு வெளிப்பட வேண்டுமால்.***

***ஏகி -*** *(நீ இங்கிருந்து) சென்று;* ***ஏந்திழை இருந்துழி தன்னை -*** *அணிகளையுடையவளாகிய சீதை இருக்கும் இடத்தை;* ***நாகம் நாடுக -*** *நாகர்கள் உறையும் பாதலத்தில் சென்று தேடுவாய்;* ***நானிலம் நாடுக -*** *பூமியிலும் தேடுவாய்;* ***போக பூமி புகுந்திட வல்ல நின் வேகம் -*** *போக பூமியான சொர்க்கலோகத்திற்கும் செல்ல வல்லமையுள்ள உனது வேகமும்;* ***ஈண்டு வெளிப்பட வேண்டும் -*** *இப்போது வெளியாக வேண்டும்.*

*'நீ மூவுலகங்களிலும் சென்று சீதையைத் தேட வேண்டு'மென்று சுக்கிரீவன் அனுமனுக்குக் கூறினான் என்பது. ஏந்திழை: அன்மொழித் தொகை. இருந்துழி: தொகுத்தல் விகாரம். போகபூமி: உயிர்கள் புண்ணிய மிகுதியால் சென்று போகங்களைத் துய்க்கும் சுவர்க்கம்.* *6*

***4453. 'தென் திசைக்கண்,***
***இராவணன் சேண் நகர்***
***என்று இசைக்கின்றது, என்***
***அறிவு, இன்னணம்;***
***வன் திசைக்கு, இனி,***
***மாருதி நீ அலால்,***
***வென்று, இசைக்கு உரியார்***
***பிறர் வேண்டுமோ?***

***இராவணன் சேண் நகர் -*** *இராவணனுடைய நீண்ட பெரிய இலங்காபுரி;* ***தென்திசைக்கண் -*** *தெற்குத் திசையில் (உள்ளது);* ***என்று -*** *என்று;* ***என் அறிவு இன்னணம் இசைக்கின்றது -*** *எனது நினைவு*

*இவ்வாறு உணர்த்துகின்றது;* ***மாருதி -*** *அனுமானே!* ***இனி வன திசைக்கு -*** *இப்போது வலிய அந்தத் திசைக்குச் (சென்று);* ***வென்று -*** *அங்குள்ள அரக்கரை வெற்றி கொண்டு;* ***இசைக்கு உரியார் -*** *புகழ் பெறத் தகுதியுள்ளவர்;* ***நீ அலால் பிறர் வேண்டுமோ -*** *நீ ஒருவனே யல்லாமல் வேறொருவரும் வேண்டுமோ?*

*'இராவணன் நகராகிய இலங்கை தென் திசையிலிருப்பதாக எனக்கு நினைவு; நீ ஒருவனே அத் தென்திசைக்குச் சென்று இராவணனது இலங்கையைக் கண்டு அங்குள்ள அரக்கரை வென்று சீதையின் செய்தியை அறிந்து வந்து சொல்லிப் புகழ் பெறுவதற்குத் தகுதியுடையாய்' என்று சுக்கிரீவன் அனுமனிடம் கூறினான்.*

*இன்னணம் - (இன்னவண்ணம்) தொகுத்தல் விகாரம். எல்லாவுயிர்களையும் கவரும் யமன் திசையானதாலும், வீரம் மிக்க இராவணன் அங்கு ஆட்சி புரிவதாலும் தென்திசை வன்திசைஎனப்பட்டது. 7*

***4454. 'வள்ளல் தேவியை***
***வஞ்சித்து வெளவிய***
***கள்ள வாள் அரக்கன்***
***செலக் கண்டது,***
***தெள்ளியோய்! ''அது தென்***
***திசை என்பது ஓர்***
***உள்ளமும் எனக்கு உண்டு''***
***என உன்னுவாய்.***

***தெள்ளியோய் -*** *தெளிவான அறிவுள்ளவனே!* ***வள்ளல் தேவியை -*** *சிறந்த கொடியாளனான இராமனின் மனைவியாகிய சீதையை;* ***வஞ்சித்து வெளவிய -*** *வஞ்சனையால் கவர்ந்து சென்ற;* ***கள்ள வாள் அரக்கன் -*** *கள்ளத் தன்மையுடைய கொடிய அரக்கனான இராவணன்;* ***செலக் கண்டது அது -*** *போகக் கண்டதான அந்தத் திசை;* ***தென்திசை என்பது -*** *தெற்குத் திக்காகும் என்பதாகிய;* ***ஓர் உள்ளமும் -*** *ஒரு நினைவும்;* ***எனக்கு உண்டு -*** *என்னிடம் தோன்றுகிறது;* ***என உன்னுவாய் -*** *என்று நீ கருதுவாய்.*

*கண்டது - சீதை தன் கலன்களை ஒரு முடிப்பில் பொதிந்து எறிந்ததைக் கண்டது. 8*

***4455. 'தாரை மைந்தனும், சாம்பனும், தாம் முதல்***
***வீரர் யாவரும், மேம்படும் மேன்மையால்***
***சேர்க நின்னொடும்; திண் திறல் சேனையும்,***
***பேர்க வெள்ளம் இரண்டொடும் பெற்றியால்.***

***தாரை மைந்தனும் -*** *தாரையின் மகனான அங்கதனும்;* ***சாம்பனும் -*** *(கரடிகளுக்கு அரசனான) சாம்பவானும்;* ***முதல் வீரர் யாவரும் -***

*முதலாகிய வீரர் பலரும்;* ***மேம்படும் மேன்மையால் -*** *மிகுந்த பெருமையோடு;* ***நின்னொடும் சேர்க -*** *உன்னுடன் வரட்டும்;* ***வெள்ளம் இரண்டொடும் -*** *இரண்டு வெள்ளம் என்னும் அளவுடனே;* ***திண் திறல் சேனைகள் -*** *மிக்க வலிமையுள்ள சேனைகள்;* ***பெற்றியால் பேர்க -*** *பெருமையோடு (உங்களுக்கு உதவியாகப்) புறப்படட்டும் (எனக்கூறி)*

*அங்கதன், சாம்பவான் ஆகியோரோடும், இரண்டு, வெள்ளம் வானர சேனையோடும் புறப்பட்டுச் சீதையைத் தேட நீ தென்திசை செல்வாயெனச் சுக்கிரீவன் அனுமனுக்கு ஆணையிட்டான் என்பது. திண்திறல்: ஒரு பொருட்பன் மொழி. தாம் - அசை. 9*

*ஏனைத் திசைகளுக்கு மற்றவர்களை அனுப்புதல்*

***4456. 'குட திசைக்கண், சுடேணன்;***
***குபேரன் வாழ்***
***வட திசைக்கண்,***
***சதவலி; வாசவன்***
***மிடல் திசைக்கண்,***
***வினதன்; விறல் தரு***
***படையொடு உற்றுப் படர்க'***
***எனப் பன்னினான்.***

***குடதிசைக் கண் -*** *மேற்குத் திசையில்;* ***சுடேணன் -*** *இடபனும்;* ***குபேரன் வாழ் வடதிசைக்கண் -*** *(திக்குப் பாலகனான) குபேரன் வாழுகின்ற வடக்குத் திசையில்;* ***சதவலி -*** *சதவலி என்னும் தலைவ னும்;* ***மிடல் வாசவன் திசைக்கண் -*** *வலிமைக்கொண்ட இந்திரனுக்குரிய கிழக்குத் திக்கில்;* ***வினதன் -*** *வினதனும்;* ***விறல்தரு படையொடு -*** *வலிமை மிக்க சேனையோடு;* ***உற்றுப் படர்க -*** *சேர்ந்து செல்வாராக;* ***எனப் பன்னினான் -*** *என்று கூறினான்.*

*குபேரன்: விச்சிரவசு என்னும் முனிவனுக்கு மூத்த மனைவியான பரத்து வாச மகளிடம் பிறந்த மகனாவான்.*

*வாசவன்: வசுக்களுக்குத் தலைவன். படர்கென - (அகரம்) தொகுத்தல் விகாரம். (படர்க + என)* *10*

*ஒரு திங்களுக்குள் தேடித் திரும்புமாறு சுக்கிரீவன் ஆணையிடல்*

***4457. வெற்றி வானர வெள்ளம் இரண்டொடும்***
***சுற்றி ஓடித் துருவி, ஒரு மதி***
***முற்றுறாதமுன், முற்றுதிர், இவ் இடை;***
***கொற்ற வாகையினீர்!' எனக் கூறினான்.*** *(சுக்கிரீவன் இடபன் முதலான வானர வீரர்களை நோக்கிக்);* ***கொற்ற வாகையினீர் -*** *வெற்றிக்கான வாகைமாலையை அணிவதற்கு உரியவர்களே!* ***வெற்றி வானரம் வெள்ளம் இரண்டொடும் -*** *(நீங்கள்) வெற்றி பெறும் தன்மையுள்ள இரண்டு வெள்ளம் வானர சேனையோடும்;* ***சுற்றி ஓடித்துருவி -*** *(பல இடங்களில்) அலைந்து திரிந்து (சீதையைத்) தேடி;* ***ஒரு மதி முற்றுறாதமுன் -*** *ஒரு திங்கள் கழிவதற்குள்ளே;* ***இவ் இடை முற்றுதிர் -*** *இங்கே திரும்பி வந்து சேருங்கள்;* ***எனக் கூறினான் -*** *எனச் சொல்லினான்.*

*நீங்கள் தனித் தனியே இரண்டு வெள்ளம் வானரப் படையோடு நான் உங்களுக்குக் குறித்த திசைகளுக்குச் சென்று சீதையைத் தேடி ஒரு திங்களுக்குள் இங்கு வந்து சேரவேண்டுமென்று சுக்கிரீவன் ஆணையிட்டான் என்பது. வாகை -ஆகுபெயர்.*
*11*

*தென்திசை செல்லும் வீரர்க்குச் சுக்கிரீவன் வழி கூறுதல்*

***4458. 'ஈண்டுநின்று எழுந்து, ஈர் - ஐந்து நூறு எழில்***
***தூண்டு சோதிக் கொடு முடி தோன்றலால்,***

***நீண்ட நேமி கொலாம் என நேர் தொழ***
***வேண்டும் விந்தமலையினை மேவுவீர்.***

*(தென் திசைக்குச் செல்லும் வானர வீரர்களைப் பார்த்துச் சுக்கிரீவன்);* ***ஈண்டு நின்று எழுந்து -*** *(நீங்கள்) இங்கிருந்து புறப்பட்டு;* ***எழில் தூண்டு சோதி -*** *அழகு மிகுந்து ஒளி வீசுகின்ற;* ***ஈர் ஐந்து நூறு கொடு முடி தோன்றலால் -*** *ஆயிரஞ் சிகரங்கள் காணப்படுவதால்;* ***நீண்ட நேமி கொல் ஆம் என -*** *பெரிய வடிவு கொண்ட திருமால்தானோ என்று;* ***நேர் தொழவேண்டும் -*** *எதிரே சென்று தொழுவதற்குரிய;* ***விந்த மலையினை -*** *விந்திய மலையை;* ***மேவுவீர் -*** *முதலிலே சென்று சேருங்கள்.*

*ஆயிரங் கொடுமுடிகளையுடைய விந்திய மலைக்கு ஆயிரம் முடிகளையுடைய திருமாலை உவமையாக்கினார். நேமி - ஆகுபெயர். 12*

***4459. 'தேடி, அவ் வரை தீர்ந்த பின், தேவரும்***
***ஆடுகின்றது, அறுபதம் ஐந்தினைப்***
***பாடுகின்றது, பல் மணியால் இருள்***
***ஓடுகின்ற நருமதை உன்னுவீர்.***

***அவ்வரை தேடித் தீர்ந்தபின் -*** *அந்த விந்திய மலையில் சீதையைத் தேடி முடித்த பின்பு;* ***தேவரும் ஆடுகின்றது -*** *தேவர்களும் வந்து நீராடப் பெறுவதும்;* ***அறுபதம் ஐந்தினைப் பாடுகின்றது -*** *(வெள்ளத்தால் அடித்து வரப் பெற்ற மலர்களிலுள்ள தேனைப் பருகி அந்தக் களிப்பினால்) வண்டுகள் பஞ்சமம் என்ற சுரத்தைப் பாடப் பெறுவதுமான;* ***பல் மணியால் இருள் ஓடுகின்ற -*** *(அங்குள்ள) பலவகையான*

*இரத்தினங்களின் ஒளியால் இருள் விலகுவதற்குக் காரணமான;* ***நருமதை உன்னுவீர் -*** *நருமதையாற்றைச் சென்று அடைவீர்.*

*நருமதை நதி: கிழக்கிலிருந்து மேற்கு நோக்கிப் பாயும் ஓர் ஆறு; தேவர்கள் நீராடும் தெய்வீகமும் வண்டுகள் இசைபாடும் சூழல் இனிமையும், மணியொளியால் இருள் நீங்கும் செல்வ வளமும் அந்த நருமதை நதிக்கு உள்ளதெனக் கற்பனை செய்தமை நயமானது. ஐந்து - பஞ்சமம்: ஏழு சுரங்களுள் இது ஐந்தாவது. அறுபதம் ஐந்தினைப் பாடுகின்றது - சொல்நயம். 13*

***4460. 'வாம மேகலை வானவர் மங்கையர்,***
***காம ஊசல் களி இசைக் கள்ளினால்,***
***தூம மேனி அசுணம் துயில்வுறும்***
***ஏமகூடம் எனும் மலை எய்துவீர்.***

*(அங்கிருந்து)* ***வாம மேகலை வானவர் மங்கையர் -*** *அழகிய மேகலையணிந்த தேவ மாதர்கள்;* ***காம ஊசல் -*** *விருப்பத்தோடு ஊஞ்சல் ஆடும்போது;* ***களி இசைக் கள்ளினால் -*** *மகிழ்ச்சியால் பாடுகின்ற இசையாகிய மதுவால்;* ***தூம மேனி அசுணம் -*** *புகை போன்ற கரிய நிறமுடைய அசுணமாப் பறவைகள்;* ***துயில்வுறும் -*** *தூங்குவதற்கு இடமான;* ***ஏம கூடம் எனும் மலை எய்துவீர் -*** *ஏமகூடம் என்னும் மலையைப் போய்ச் சேருங்கள்.*

*ஏமகூட மலையில் தேவமாதர்கள் வந்து ஊஞ்சலாடும்போது களிப்பினால் பாடுகினற இசைப் பாடலால் அசுணப் பறவை தூங்கும் என்பது. அசுணம் - இசையுணர்வுடைய பறவை; விலங்கு என்றும் கூறுவர். அரமங்கையர்: மரூஉ. (அமர மங்கையர்). ஏமகூடம் - எட்டுக் குலகிரிகளில் ஒன்று. வாமம் - அழகு.*
*14*

***4461. 'நொய்தின், அம் மலை நீங்கி, நுமரொடும்***
***பொய்கையின் கரை பிற்படப் போதிரால்;***
***செய்ய பெண்ணை, கரிய பெண்ணைச் சில***
***வைகல் தேடி, கடிது வழிக்கொள்வீர்.***

***நொய்தின் -** விரைவாக; **அம்மலை நீங்கி -** அந்த ஏமகூட மலையை விட்டு அகன்று; **நுமரொடும் -** உங்களைச் சேர்ந்த வானரர் களுடனே; **பொய்கையின் கரை -** (அங்குள்ள) தடாகத்தின் கரையானது; **பிற்படப் போதிர் -** பின்னாகும்படி (அதை விட்டு) அப்பாலே செல்லுங்கள்; **செய்ய பெண்ணை -** (மகளிர்க்குரிய) நற் பண்புகளைக் கொண்ட சீதையை; **கரிய பெண்ணை -** கரிய பெண்ணை நதியின் இடங்களில்; **சில வைகல் தேடி -** சில நாட்கள் தேடிப் பார்த்து; **கடிது வழிக்கொள்வீர் -** விரைந்து மேலே செல்லுங்கள்.*

*செய்ய பெண்ணை கரிய பெண்ணை - முரண் தொடை. வைகல் - கழியும் தன்மையுடையது: காரணப்பெயர். நொய்து, கடிது: விரைவுபற்றி வந்த வினையுரிகள்.*
*15*

***4462. 'தாங்கும் ஆர் அகில், தண் நறுஞ் சந்தனம்,***
***வீங்கு வேலி விதர்ப்பமும், மெல்லென***
***நீங்கி, நாடு நெடியன பிற்பட,***
***தேங்குவார் புனல் தண்டகம் சேர்திரால்.***

***தாங்கும் -** நறுமணத்தைக் கொண்ட; **ஆர் அகில் -** ஆத்தியும் அகில் மரங்களும்; **தண் நறுஞ் சந்தனம் -** குளிர்ந்த நறுமணமுள்ள சந் தனமரங்களும் (ஆகியவற்றை); **வீங்கு வேலி -** விரிந்த வேலியாகக் கொண்ட; **விதர்ப்பமும் -** விதர்ப்ப நாட்டையும்; **மெல்லென நீங்கி -** மெதுவாகக் கடந்து; **நெடியன நாடு பிற்பட -** பல காதம் நீண்ட பல நாடுகளும் உங்களுக்குப் பின்னாகுமாறு; **தேங்கு வார்புனல் -** மிக்க நீர் நிறைந்து; **தண்டகம் சேர்திர் -** தண்டகாரணியத்தைச் சென்று அடைவீர்.*

*விதர்ப்ப நாட்டைச் சுற்றி வேலியாக அகில் மரங்களும், சந்தன மரங்களும் நிறைந்திருக்குமென்பது, தேங்குதல் - நிறைதல். 16*

***4463. 'பண்டு அகத்தியன் வைகியதாப் பகர்***
***தண்டகத்தது, தாபதர்தம்மை உள்***
***கண்டு, அகத் துயர் தீர்வது காண்டிரால்,***
***முண்டகத்துறை என்று ஒரு மொய் பொழில்.***

***முண்டகத் துறை என்று -** (அதன் பின்பு) முண்டகத் துறையென்று கூறப்படுகின்ற; **ஒரு மொய் பொழில் -** மரங்கள் அடர்ந்த ஒரு சோலை யானது; **பண்டு அகத்தியன்***

***வைகியதாப் பகர்*** *- பழங்காலத்து அகத்திய முனிவர் வசித்ததாகக் கூறப்படுகின்ற;* ***தண்டகத்தது*** *- தண்ட காரணியத்திலுள்ளது;* ***தாபதர்தம்மை உள் கண்டு*** *- தவஞ்செய்யும் முனிவர்களைத் தம் மனத்திற் காண்பதால்;* ***அகத் துயர் தீர்வது*** *- தங்கள் மனத் துன்பத்தை நீக்குவதற்குக் காரணமாயிருப்பது;* ***காண்டிர்*** *- (அதனைச்) சென்று காணுங்கள்.*

*அகத்தியர் வசிக்கின்ற தண்டகாரணியத்திலுள்ளதும், வழிபட்ட மாத்திரத்தில் அவர்களின் மனத் துன்பத்தை மாற்றும் பெருமை வாய்ந்த முனிவர்கள் நிரம்பியிருக்கப் பெற்றதுமாகிய முண்டகத் துறையைச் சென்று காணுங்கள் என்பது. தாபதர் - தவம் செய்பவர். முண்டகத் துறை: தாமரை நிரம்பிய நீர்நிலை - சோலைக்கு ஆயிற்று அகத்தியர் தண்டக வனத்தும், பொதிய மலையிலும் தென்னாட்டில் பல இடங்களிலும் இருந்ததாக வரலாறு உண்டு. கம்பராமாயணத்தில் 2665, 4477 ஆகிய பிற பாடல்களிலும் அகத்தியர் உறைவிடங்கள் குறிக்கப் பட்டுள்ளன. இப்பாடலில் முன்பு அகத்தியர் இருந்ததாகக் குறிப்பிடுவதும், பொதிகையை 'என்றும் அவன் உறைவிடமாம்' (4477) என்று குறிப்பிடுவதும்கருதத்தக்கன. 17*

***4464. 'ஞாலம் நுங்குறு நல் அறத்தோர் பொருள்***
***போல நின்று பொலிவது, பூம் பொழில்;***
***சீல மங்கையர் வாய் எனத் தீம் கனி***
***காலம் இன்றிக் கனிவது காண்டிரால்.*** **பூம்பொழில்** *- மலர்கள் நிறைந்த (முண்டகத்துறை என்னும்) அச் சோலையானது;* ***ஞாலம் நுங்குறும்*** *- உலகத்தவரால் அனுபவிக்கப் படுகிற;* ***நல் அறத்தோர் பொருள் போல*** *- சிறந்த தரும சிந்தையுள்ள வர்களின் செல்வம் போல;* ***நின்று பொலிவது*** *- நிலைபெற்று விளங்குவது;* ***சீல மங்கையர் வாய் என*** *- நல்லொழுக்கமுடைய மாதர்களின் வாயிதழ் போன்று;* ***தீம் கனி*** *- இனிய பழங்கள்;* ***காலம் இன்றிக் கனிவது*** *- (இன்ன காலமென்று இல்லாது) எந்தக் காலத்திலும் பழுக்கப் பெறுவது;* ***காண்டிர்*** *- (அதனைச்) சென்று காணுங்கள்.*

*இம் முண்டகத்துறைக் கண்ணுள்ள மரங்களெல்லாம் சிறந்த பயன்மரங்கள் என்பதும், எந்தக்காலத்தும் மாறாது இனிய கனி தருவன என்பதும் குறிக்கப் பெற்றன.*

*ஞாலம் - இடவாகுபெயர். சிறந்த அறச் சிந்தனையுள்ளவர்களின் செல்வம் பெருகி உலகத்துள்ளார்க்கும் பயன்படும். கனிபோன்ற வாய் என்னாமல் மகளிர் வாய் போன்ற கனி என்றது எதிர்நிலையணி. 18*

***4465. 'நயனம் நன்கு இமையார்; துயிலார் நனி;***
***அயனம் இல்லை அருக்கனுக்கு அவ் வழி;***
***சயன மாதர் கலவித்தலைத் தரும்***
***பயனும், இன்பமும், நீரும், பயக்குமால். ****

*(அங்குள்ளவர்கள்)* ***நயனம் நன்கு இமையார்*** *- கண்களை நன்றாக இமைக்கமாட்டார்கள்;* ***நனி துயிலார்*** *- நன்றாகத் தூங்கமாட்டார்கள்;* ***அருக்கனுக்கு*** *- சூரியனுக்கு;* ***அவ் வழி அயனம் இல்லை*** *- அவ்விடத் தில் நுழைவதற்குரிய வழி கிடையாது;* ***சயனமாதர் கலவித் தலைதரும் பயனும்*** *- படுக்கையில் மகளிரின் சேர்க்கையால் உண்டாகின்ற போக இன்பத்தையும்;* ***இன்பமும் -***

*பெருமகிழ்ச்சியையும்;* ***நீரும் -*** *நீர்ச் செழிப்பையும்,* ***பயக்கும் -*** *(எப்பொழுதும்) உண்டாக்கும்.*

*ஆல்: அசை. கண்ணிமையாமையும், துயிலாமையும் தேவர்களுக்கு இயல்பு. தேவர்கள் வாழுமிடமாயுள்ளது அப்பொழில். அது சூரியனின் கதிர்களும் உட்புகாதவாறு மரங்களால் செறிந்துள்ளது.* *19*

***4466. ஆண்டு இறந்தபின், அந்தரத்து இந்துவைத்***
***தீண்டுகின்றது, செங் கதிர்ச் செல்வனும்***
***ஈண்டு உறைந்து அலது ஏகலம் என்பது -***
***பாண்டுவின் மலை என்னும் பருப்பதம்.***

***ஆண்டு இறந்தபின் -*** *அந்தப் பொழிலைக் கடந்த பின்பு;* ***அந்தரத்து இந்துவைத் தீண்டுகின்றது -*** *ஆகாயத்தில் மதியைத் தொடுவதும்;* ***செங் கதிர்ச் செல்வனும் -*** *சிவந்த கிரணங்களைச் செல்வமாக வுடைய சூரியனும்;* ***ஈண்டு உறைந்து அலது -*** *இம் மலையில் தங்காமல்;* ***ஏகலம் என்பது -*** *அப்பால் செல்லமாட்டோம் என்று நினைத்தற்கு*

*இடமானதுமாகிய;* ***பாண்டுவின் மலை என்னும் பருப்பதம் -*** *பாண்டு மலை என்னும் மலை(யுள்ளது) (அதைச் சென்றடையுங்கள்.)*

*பாண்டுமலை மிகவுயர்ந்து மிக இனிமையான இடடாயிருத்தலால் கதிரவனும் அங்கே தங்கி அப்பாற் செல்லக் கருதுகின்றான் என்பது. பருப்பதம் - பர்வதம் என்ற வடசொல் திரிபு.* *20*

ஆசிரிய விருத்தம்

***4467. 'முத்து ஈர்த்து, பொன் திரட்டி, மணி உருட்டி,***
***முது நீத்தம் முன்றில் ஆயர்***
***மத்து ஈர்த்து, மரன் ஈர்த்து, மலை ஈர்த்து,***
***மான் ஈர்த்து, வருவது; யார்க்கும்***
***புத்து ஈர்த்திட்டு அலையாமல், புலவர் நாடு***
***உதவுவது; புனிதம் ஆன***
***அத் தீர்த்தம் அகன் கோதாவரி என்பர்;***
***அம் மலையின் அருகிற்று அம்மா!***

***முது நீத்தம் -*** *பழமையான வெள்ளமானது;* ***முத்து ஈர்த்து -*** *முத்துக்களை இழுத்துக் கொண்டும்;* ***பொன் திரட்டி -*** *பொன் துகள் களைச் சேர எடுத்துக் கொண்டும்;* ***மணி உருட்டி -*** *இரத்தினக் கற் களையடித்துக் கொண்டும்;* ***ஆயர் முன்றில் மத்து ஈர்த்து -*** *இடையர் களின் முற்றங்களிலுள்ள மத்துக்களை இழுத்துக்கொண்டும்;* ***மரன் ஈர்த்து -*** *மரங்களையிழுத்துக் கொண்டும்;* ***மலை ஈர்த்து -*** *கற்பாறைகளைப் புரட்டி இழுத்துக் கொண்டும்;* ***மான் ஈர்த்து -*** *மிருகங்களை இழுத்துக் கொண்டும்;* ***வருவது -*** *பெருகிவரும் தன்மையுடையது;* ***யார்க்கும் -*** *(அதில் மூழ்கிய) எல்லோர்க்கும்;* ***புத்து ஈர்த்திட்டு -*** *'புத்' என்னும் நரகம் வராமல் நீங்கி;* ***அலையாமல் -*** *எங்கும் அலைந்து*

*திரியாமல்;* ***புலவர் நாடு உதவுவது -*** *தேவருலகத்தைத் தர வல்லது;* ***புனிதம் ஆன அத் தீர்த்தம் -*** *தூய்மையான அந்தப் புண்ணிய நீரின் பெயர்;* ***அகல் கோதாவரி என்பர் -*** *அகலமான கோதாவரிநதியென்று சொல்லுவர்;* ***அம்மலையின் அருகிற்று -*** *(அந்த நதி) அப் பாண்டு மலையின் பக்கத்தேயுள்ளது.*

*அம்மா: வியப்பிடைச்சொல்.*

*ஏழு புண்ணிய நதிகளில் ஒன்றான கோதாவரியின் பல சிறப்புகளையும் கூறுவது இப்பாடல். முதுநீத்தம்: பழமையும் பெருமையும் வாய்ந்ததால் 'புத்' என்பது பிள்ளைகளைப் பெறாதவர்கள் சென்றடையும் ஒரு நரகம் என்பர். முன்றில்: இலக்கணப் போலி. 'ஈர்த்து' என்ற சொல் ஒரு பொருளிலே பலமுறை வந்தது: சொற்பொருள் பின்வருநிலையணி. 21*

***4468. 'அவ் ஆறு கடந்து அப்பால், அறத்து ஆறே***
***எனத் தெளிந்த அருளின் ஆறும்,***
***வெவ் ஆறு ஆம் எனக் குளிர்ந்து, வெயில் இயங்கா***
***வகை இலங்கும் விரி பூஞ் சோலை,***
***எவ் ஆறும் உறத் துவன்றி, இருள் ஓட***
***மணி இமைப்பது, இமையோர் வேண்ட,***
***தெவ் ஆறு முகத்து ஒருவன், தனிக் கிடந்த***
***கவணத்தைச் சேர்திர் மாதோ!***

***அவ் ஆறு கடந்து -*** *அந்தக் கோதாவரி யாற்றைத் தாண்டி;* ***அப்பால் -*** *பிறகு;* ***அறத்து ஆறே என -*** *தரும நெறியே போலவும்;* ***தெளிந்த அருளின் ஆறும் -*** *தெளிவான அருள் வழியும்;* ***வெவ் ஆறு என -*** *விரும்பத்தக்க நன்னெறியும் போலவும்;* ***குளிர்ந்து -*** *குளிர்ச் சியையடைந்தது;* ***வெயில் இயங்காவகை இலங்கும் -*** *சூரியனுடைய கதிர்கள் தன்னுள் புகாதபடி விளங்குகின்ற;* ***விரி பூஞ்சோலை -*** *மலர்ந்த பூக்கள் நிறைந்த சோலையானது;* ***எவ் ஆறும் உறத் துவன்றி -*** *எந்தப் பக்கங்களிலும் (தன் இரு கரைகளிலும்) மிக நெருங்கி;* ***இருள் ஓட மணி இமைப்பது -*** *(அச் சோலையில் அடர்ந்த) இருளானது அறவே அகலுமாறு இரத்தினங்கள் ஒளிவிடுவதற்கு இடமானதும்;* ***இமையோர் வேண்ட -*** *தேவர்கள் விரும்பியதால்;* ***தெவ் ஆறுமுகத்து ஒருவன் -*** *பகைவரையழிக்கவல்ல ஆறுமுகங்களையுடைய முருகன்;* ***தனிக் கிடந்த கவணத்தை -*** *தனியாக இருந்த கவண நதியை;* ***சேர்திர் -*** *சென்று அடையுங்கள்.*

*மாது, ஓ: ஈற்றசைகள்.*

*சோலையின் தண்மைக்கு அறநெறியையும் அருள் நெறியையும் உவமையாக்கினார். வெகுளிப்பண்பை வெம்மையதாகவும், சாந்த குணத்தைத் தண்ணியதாகவும் கூறுதல் கவிமரபு. சுவணநதியானது தன் இரு கரைகளிலும் சூரியன் கதிர்களும் உள்ளே புகாதவாறு மரங்கள் அடர்ந்த சோலைகள் நிரம்பப் பெற்று, அம் மரங்களின் அடர்த்தியால் செறிந்த இருளைத் தன்னிடமுள்ள இரத்தின ஒளியால் போக்குமென்பது. 22*

***4469. 'சுவணநதி கடந்து, அப்பால், சூரிய காந் -***
***தகம் என்னத் தோன்றி, மாதர்***
***கவண் உமிழ் கல் வெயில் இயங்கும் கன வரையும்***
***சந்திர காந்தகமும், காண்பீர்;***
***அவண் அவை நீத்து ஏகிய பின், அகல் நாடு***
***பல கடந்தால், அனந்தன் என்பான்***
***உவண பதிக்கு ஒளித்து உறையும் கொங்கணமும்,***
***குலிந்தமும், சென்று உறுதிர் மாதோ.***

***சுவணநதி கடந்து*** - *சுவண ஆற்றைத் தாண்டி;* ***அப்பால்*** - *அதன் பிறகு;* ***சூரிய காந்தகம் என்னத் தோன்றி*** - *சூரிய காந்தம் என்று கூறுமாறு புகழ்பெற்று விளங்கி; (அம் மலையிலுள்ள);* ***மாதர் கவண் உமிழ்கல்*** -

*பெண்களால் வீசப்பட்ட கவண்கயிற்றிலிருந்து வெளிப்படும் கற்கள்;* ***வெயில் இயங்கும் கன வரையும்*** - *வெயிலைக் கக்குகின்ற பெரிய மலையையும்;* ***சந்திர காந்தகமும்*** - *சந்திரகாந்த மலையையும்;* ***காண்பீர்*** - *பார்ப்பீர்கள்;* ***அவண் அவை நீத்து ஏகியபின்*** - *அங்குள்ள அம்மலைகளை விட்டு அப்பாலே சென்ற பிறகு;* ***அகல்நாடு பல கடந்தால்*** - *அகன்ற நாடுகள் பலவற்றைத் தாண்டிச் சென்றதால்;* ***அனந்தன் என்பான்*** - *ஆதிசேடன்;* ***உவணபதிக்கு ஒளித்து உறையும்*** - *பறவைகளுக்கு அரசனாகிய கருடனுக்கு அஞ்சி மறைந்து வாழுகின்ற;* ***கொங்கணமும்*** - *கொங்கணதேசத்தையும்;* ***குலிந்தமும்*** - *குலிந்த தேசத்தையும்;* ***சென்று உறுதிர்*** - *போய்ச் சேர்வீர்கள்.*

*மாது, ஓ: அசைகள்.*

*சூரிய காந்தகம் - சூரியன் கதிர்தோன்ற எரிந்து காட்டும் ஒரு கல். இது போன்றே சந்திரன் ஒளியால் நீராக உருகும் கல் சந்திரகாந்தக்கல்.*

*தினை முதலியவற்றின் கதிர்களைக் கிளி முதலான பறவைகள் உண்ணாதவாறு வேட்டுவ மாதர்கள் அருகில் அமைக்கப்பட்ட பரண்களில் காவலாக இருந்து அங்குள்ள கற்களையெடுத்துக் கவண்கயிறு கொண்டு வீசிப் பறவைகளையோட்டுவர். உவணபதி: இருபெயரொட்டு. உவணன்: அழகிய சிறகுகளையுடையவன் என்று பொருள்படும். 23*

***4470. ' "அரன் அதிகன்; உலகு அளந்த அரி அதிகன்"***
***என்று உரைக்கும் அறிவிலோர்க்குப்***
***பர கதி சென்று அடைவு அரிய பரிசேபோல்,***
***புகல் அரிய பண்பிற்று ஆமால்;***
***சுர நதியின் அயலது, வான் தோய் குடுமிச்***
***சுடர்த் தொகைய, தொழுதோர்க்கு எல்லாம்***
***வரன் அதிகம் தரும் தகைய, அருந்ததி ஆம்***
***நெடு மலையை வணங்கி, அப்பால்.***

***அரன் அதிகன் -*** *சிவபிரானே சிறந்த கடவுள்;* ***உலகு அளந்த அரி அதிகன் -*** *உலகங்களை (த்தன் திருவடிகளால்) அளவிட்ட திருமாலே சிறந்த கடவுள்;* ***என்று உரைக்கும் -*** *என்று கூறும்;* ***அறிவு இலோர்க்கு -*** *தத்துவ அறிவு இல்லாத மூடர்களுக்கு;* ***பரகதி சென்று அடைவு அரிய பரிசேபோல் -*** *மேலான கதியைச் சென்று அடைவதற்கு அரிய தன்மைபோல;* ***புகல் அரிய பண்பிற்கு ஆம் -*** *புகுதற்கரிய தன்மை பெற்றதும்;* ***சுரநதியின் அயலது -*** *ஆகாயகங்கையின் அருகில் உள்ளதும்;* ***வான் தோய் குடுமிச் சுடர் தொகைய -*** *வானத்தையளாவிய தன் சிகரங்களில் (கதிர் மதியாகிய) இரண்டு சுடர்களும் சேரக் கூடியதும்;* ***தொழுதோர்க்கு எல்லாம் -*** *தன்னை வணங்கியவர் எல்லோர்க்கும்;* ***அதிகம் வரன் தரும் தகைய -*** *சிறந்த வரங்களைக் கொடுக்கும் பெருமையுடையதுமான;* ***அருந்ததி ஆம் நெடு மலையை -*** *அருந்த தியென்னும் பெரிய மலையை;* ***வணங்கி -*** *(நீங்கள் சென்று) தொழுது;* ***அப்பால் -*** *அதன் பிறகு. . . .*

*கவிஞர்களுக்குக் கடவுளிடத்துள்ள பொதுநோக்கத்தைக் குறிப்பதாகும் இச் செய்யுள். ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்றும் வானத்திலிருந்து விழும் மழைத் தாரைகள் அனைத்தும் கடலையே சென்று சேர்வது போன்று சீவான் மாக்கள் எவ்வெத் தெய்வங்களுக்கு வணக்கம் செலுத்தினும் அவ்வணக்கம் கேசவனையே சாருமென்றும், யாதொரு தெய்வங் கொண்டீர். அத் தெய்வமாகி, யங்கு மாதொருபாகனார்தாம் வருவர், என்றும் கூறப்படுவன காணலாம்.*

*வைணவத்தில் முதலாழ்வார்களின் பாசுரங்களில் சிவபிரானையும், திருமாலையும் ஒன்று படுத்திக் கூறியிருப்பதைக் காணமுடிகிறது. 'அரன்நாரணன் நாமம் ஆன்விடை புள்ளூர்தி' - (முதல் திருவ. 5); 'தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்' (மூன்றாம் திருவ. 63)*

*வசிட்ட முனிவனின் அரிய பத்தினியான அருந்ததியின் பெயர் கொண்ட மலையாதலின் 'அருந்ததி மா நெடுமலை' எனச் சிறப்பித்தான் சுக்கிரீவன். 24*

***4471. 'அஞ்சு வரும் வெஞ் சுரனும், ஆறும், அகன்***
***பெருஞ் சுனையும், அகில் ஓங்கு ஆரம்***
***மஞ்சு இவரும் நெடுங் கிரியும், வள நாடும்***
***பிற்படப் போய்வழிமேல் சென்றால்,***
***நஞ்சு இவரும் மிடற்று அரவுக்கு, அமிர்து நனி***
***கொடுத்து, ஆயைக் கலுழன் நல்கும்***
***எஞ்சு இல் மரகதப் பொருப்பை இறைஞ்சி, அதன்***
***புறம் சார ஏகி மாதோ***

***அஞ்சுவரும் வெஞ்சுரனும் .*** *(எல்லா வுயிர்களும்) அஞ்சக்கூடிய கொடிய பாலைவனமும்;* ***ஆறும் அகல்பெருஞ் சுனையும் -*** *நதிகளும், அகன்ற பெரிய சுனைகளும்;* ***அகில் ஓங்கு ஆரம் மஞ்சு இவரும் நெடுங் கிரியும் -*** *அகில் மரங்களும், உயர்ந்து வளர்ந்த சந்தன மரங்களும் மேகங்கள் வரை பொருந்திய மலைகளும்;* ***வள நாடும் -*** *செழிப்பான தேசங்களும்;* ***பிற்படப் போய் -*** *(உமக்குப் பின்புறத்தவாகுமாறு) அவற்றைக் கடந்து சென்று;* ***வழிமேல் சென்றால் -*** *அப்பாலுள்ள வழியில் சென்றால்;* ***கலுழன் -*** *கருடனானவன்;* ***நஞ்சு இவரும் மிடற்று அரவுக்கு -*** *நஞ்சு பொருந்திய வாயினையுடைய நாகங்களுக்கு;* ***அமிர்து நனி கொடுத்து -*** *அமிழ்தத்தை மிகுதியாகக்*

*கொடுத்து;* ***ஆயை நல்கும் -*** *(தன்) தாயாகிய விநதையை (அடிமைத் தொழிலிலிருந்து) மீட்பதற்கிடமான;* ***எஞ்சு இல் மரகதப் பொருப்பை -*** *எந்தக் குறையுமில்லாத மரகத மலையை;* ***இறைஞ்சி -*** *வணங்கி;* ***அதன் புறம் சார ஏகி -*** *அம் மலையின் பக்கத்து வழியைப் பற்றி அப்பால் சென்று. . . .*

*மாது, ஓ - ஈற்றசைகள்.*

*மலைகள் மேகமண்டலத்தையும் கடந்த உயரத்தன என்பார் 'மஞ்சு இவரும் நெடுங்கிரி' என்றார். அரவு: காசியப முனிவனின் மனைவியான கத்துரு என்பவளது வயிற்றில் பிறந்த வாசுகி முதலிய நாகங்கள். கலுழன்: கருடன் - காசியப முனிவரின் மனைவியான விநதையினிடம் பிறந்தவன். 25*

***4472. 'வட சொற்கும் தென் சொற்கும் வரம்பு ஆகி,***
***நான் மறையும்,மற்றை நூலும்,***
***இடை சொற்ற பொருட்கு எல்லாம் எல்லை ஆய்,***
***நல் அறிவுக்கு ஈறு ஆய், வேறு***
***புடை சுற்றும் துணை இன்றி, புகழ் பொதிந்த***
***மெய்யேபோல் பூத்து நின்ற***
***அடை சுற்றும் தண் சாரல் ஓங்கிய***
***வேங்கடத்தில் சென்று அடைதிர் மாதோ.***

***வடசொற்கும் தென்சொற்கும் வரம்பு ஆகி -*** *வட திசை மொழி களுக்கும் தென்மொழியாகிய தமிழுக்கும் எல்லையாகியும்;* ***நான் மறையும் மற்றை நூலும் -*** *நான்கு வேதங்களும் பிற சாத்திரங்களும்;* ***இடை சொற்ற பொருட்கு எல்லாம் எல்லையாய் -*** *தம்மிடம் குறித்துள்ள எல்லாப் பொருள்களுக்கும் முடிவான பொருளைத் தன்பாற் கொண்டுள்ளதாகியும்;* ***நல் அறிவுக்கு ஈறாய் -*** *நுட்பமான ஞான அறிவுக்கெல்லாம் வரம்பாகியும்;* ***புடை சுற்றும் துணை வேறு இன்றி -*** *பக்கத்தில் பொருந்திய உவமானப் பொருள் வேறொன்றும் இல்லாமல்;* ***புகழ் பொதிந்த மெய்யே போல் -*** *புகழ் நிரம்பிய உடலைப் போல;* ***பூத்து நின்ற -*** *பொலிவுற்று விளங்குகின்ற;* ***அடை சுற்றும் தண் சாரல் -*** *தேன்கூடுகளால் சுற்றிலும் நிரம்பப்பெற்ற குளிர்ந்த தாழ்வரைகளையுடைய;* ***ஓங்கிய வேங்கடத்தில் -*** *உயர்ந்துள்ள திருவேங்கட மலையில்;* ***சென்று அடைதிர் -*** *போய்ச் சேருங்கள்.*

*மாது, ஓ: ஈற்றசைகள்.*

*வடக்கத்திய மொழிகள், தமிழ் மொழி ஆகிய இரண்டும் மிகுதியாக வழங்கும் நிலங்களுக்கு இடையே நின்று எல்லை குறிப்பதனால் திருவேங்கடமலையை 'வட சொற்கும் தென்சொற்கும் வரம்பிற்று' என்றார். 'வேங்கடத்து உம்பர் மொழிபெயர் தேஎம் (அகம். 211) என்ற சங்கப் பாடல் வேங்கடத்துக்கு அப்பால் மொழி வழக்கு வேறுபடுவதைச் சுட்டுகிறது. இம் மலைக்கு உயர்விலும் புகழிலும் ஈடாகக்கூடிய வேறுமலையில்லை என்பார் 'புடை சுற்றும் துணையின்றி' என்றார். இம்மலை திருமாலின் வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டனுள் முதலாவது. வேங்கடம்: வேம் கடம் - தன்னை அடைந்தோரின் பாவங்களை ஒழிப்பது. சாரல் - சார்ந்துள்ள இடம்: தொழிலாகுபெயர். 26*

***4473. 'இருவினையும், இடைவிடா எவ் வினையும்,***
***இயற்றாதே, இமையோர் ஏத்தும்***
***திருவினையும், இடு பதம் தேர் சிறுமையையும்,***
***முறை ஒப்பத் தெளிந்து நோக்கி,***
***''கரு வினையது இப் பிறவிக்கு'' என்று உணர்ந்து,***
***அங்கு அது களை, கடை இல் ஞானத்து,***
***அரு வினையின் பெரும் பகைஞர் ஆண்டு உளர்;***
***ஈண்டு இருந்தும் அடி வணங்கற்பாலார்.*** ***இருவினையும்*** - *(நல்வினை தீவினைகளாகிய) இரண்டு வினை களையும்;* ***இடைவிடா எவ் வினையும்*** - *இடைவிடாமல் தொடர்பு கொண்டுள்ள எந்தக் கருமங்களையும்;* ***இயற்றாதே*** - *செய்யாமல்;* ***இமையோர் ஏத்தும் திருவினையும்*** - *தேவர்களும் புகழும் படியான நிறைந்த செல்வ வாழ்க்கையையும்;* ***இடுபதம் சேர் சிறுமையையும்*** - *(பிச்சையாக) இடும் சோற்றை எதிர்பார்த்திருக்கும் தாழ்வையும்;* ***முறை ஒப்பத் தெளிந்து நோக்கி***- *சமமாகத் தெளிந்த பார்த்து;* ***இப் பிறவிக்குக் கருவினையது என்றுஉணர்ந்து*** - *இந்தப் பிறப்பு உண்டாவதற்கு மூலகாரணம் அந்த இருவினைகளேயாகும் என்று தெளிந்து;* ***அது*** - *அவ் வினையின் தொடர்பை;* ***அங்கு*** - *அந்த இடத்திலேயே;* ***களையும்*** - *நீங்குதற்குரிய;* ***கடை இல் ஞானத்து*** - *எல்லையற்ற தத்துவ அறிவினை யுடைய;* ***அரு வினையின் பெரும்பகைஞர்*** - *(போக்குவதற்கு) அரிய இருவினைகளுக்குப் பெரிய பகைவர்கள்;* ***ஆண்டு உளர்*** - *அம் மலையில் இருக்கின்றார்கள்;* ***ஈண்டு இருந்தும்*** - *அவர்கள் (நேரில் செல்லாமல்) இங்கிருந்த படியும்;* ***அடி வணங்கற் பாலார்*** - *(திசை நோக்கி) தொழுவதற்கு உரியவராவர்.*

*இருவினை - நல்வினை தீவினை. இவ் வினைகளே பிறப்பிற்குக் காரணமாகும் யோக ஞான நெறிகளால் இருவினை கடந்து ஆன்ம பக்குவம் பெற்று வினைகளை வென்ற ஞானியரை வினைப்பகைஞர்என்றார். 27*

***4474. 'சூது அகற்றும் திரு மறையோர் துறை ஆடும்***
***நிறை ஆறும், சுருதித் தொல் நூல்***
***மாதவத்தோர் உறை இடமும், மழை உறங்கும்***
***மணித் தடமும், வான மாதர்***
***கீதம் ஒத்த கின்னரங்கள் இன் நரம்பு***
***வருடுதொறும் கிளக்கும் ஓதை***
***போதகத்தின் மழக் கன்றும் புலிப் பறழும்***
***உறங்கு இடனும், பொருந்திற்று அம்மா!***

***சூது அகற்றும்*** - *வஞ்சனையை ஒழித்து நிற்கும்;* ***திருமறையோர்*** - *மனச் செம்மையுடைய அந்தணர்கள்;* ***ஆடும் துறை*** - *நீராடுகின்ற படித்துறைகள்;* ***நிறை ஆறும்*** - *நிறைந்துள்ள நதிகளையும்;* ***சுருதித் தொல் நூல்*** - *வேதங்களாகிய பழமையான சாத்திரங்களையும் நன்றாக அறிந்த;* ***மா தவத்தோர்*** - *பெருந்தவ முனிவர்கள்;* ***உறை இடமும்*** - *வசிக்கின்ற ஆசிரமங்களையும்;* ***மழை உறங்கும் மணித் தடனும்*** - *மேகங்கள்படிகின்ற இரத்தினங்களைக் கொண்ட இடங்களையும்;* ***வான மாதர்*** - *தேவ மாதரின்;* ***கீதம் ஒத்த*** - *இசைப் பாட்டுக்கு நேரான;* ***கின்னரங்கள்*** - *கின்னரம் என்னும் இசைக் கருவிகளினுடைய;* ***இன் நரம்பு*** - *இனிய நரம்புகளை;* ***வருடு தொறும்***- *தடவும்*

*பொழுதெல்லாம்;* ***கிளக்கும் ஓதை -*** *எழுகின்ற ஓசையால்;* ***போதகத்தின் மழக்கன்றும் -*** *யானைகளின் இளங்கன்றுகளும்;* ***புலிப் பறழும்-*** *புலிக் குட்டிகளும்;*

***உறங்கு இடனும் -*** *(தம்முள் பகையின்றி) ஒருங்கே தூங்ககின்ற இடங்களையும்;* ***பொருந்திற்று -*** *பொருந்தியுள்ளது (அத்திருவேங்கட மலை)*

*அம்மா - வியப்பிடைச் சொல்.*

*அந்த மலையில் தேவ கன்னியர் வந்து கின்னர வாத்தியங்களை இசைக்கின்றார்கள்; அவற்றிலிருந்து எழும் இன்னிசையைக் கேட்டுத் தம்முள் பகை கொள்ளும் இயல்புடைய யானைக் கன்றுகளும் புலிக் குட்டிகளும் பகைமை நீங்கி ஓரிடத்திலே தங்குமென்பது.*

*அந்த மலைச்சிகரங்கள் மேக மண்டலம் வரையில் உயர்ந்துள்ளனவாதலின் 'மழையுறங்கு மணித்தடன்' என்றார். கின்னரம் - ஒருவகை நரம்புக்கருவி; ஒரு வகையாழ். போதகம் - யானைக் கன்று. பகைமையையும் மாற்றவல்ல இசையின் பெருமை கூறப் பெற்றது.      28*

***4475. 'கோடு உறு மால் வரைஅதனைக் குறுகுதிரேல்,***
***உம் நெடிய கொடுமை நீங்கி,***
***வீடு உறுதிர்; ஆதலினால் விலங்குதிர்; அப்***
***புறத்து, நீர் மேவு தொண்டை -***
***நாடு உறுதிர்; உற்று, அதனை நாடுறுதிர்;***
***அதன்பின்னை, நளி நீர்ப் பொன்னிச்***
***சேடு உறு தண் புனல் தெய்வத் திரு நதியின்***
***இரு கரையும் தெரிதிர் மாதோ.***

***கோடு உறு மால் வரை அதனை -*** *சிகரங்கள் பொருந்திய பெரிய அம்மலையை (திருவேங்கட மலை);* ***குறுகுதிரேல் -*** *நெருங்குவீர் களானால்;* ***உம் நெடிய கொடுமை நீங்கி -*** *உங்களுடைய மிகக் கொடிய பாவங்கள் எல்லாம் நீங்க;* ***வீடு உறுதிர் -*** *உடனே முத்தி அடைவீர்கள்;* ***ஆதலினால் -*** *ஆதலால்;* ***விலங்குதிர் -*** *(அதற்குள் புகாமல்) விலகிச் செல்லுங்கள்;* ***அப்புறத்து நீர் மேவு தொண்டை நாடு -*** *அதற்கு அப்பால் நீர் வளம் மிக்க தொண்டை நாட்டை;* ***உறுதிர் -*** *சென்று அடையுங்கள்;* ***உற்று அதனை நாடுறுதிர் -*** *அவ்வாறு சேர்ந்து அந்த நாட்டைத் துருவித் தேடிக் காணுங்கள்;* ***அதன் பின்னை -*** *அதன் பிறகு;* ***நளி நீர்ப்பொன்னி -*** *பெருமையுள்ள நீர் நிறைந்த பொன்னியென்னும் பெயர் கொண்ட;* ***சேடு உறு -*** *உயர்வான தோற்றமுள்ள;* ***தண் புனல் தெய்வத் திருநதியின் -*** *குளிர்ந்த நீர் நிரம்பிய தெய்வத்தன்மை பெற்ற காவிரி நதியின்;* ***இரு கரையும் -*** *இரண்டு கரைகளிலும்;* ***தெரிதிர் -*** *(சீதையை) ஆராய்ந்து தேடுங்கள்.*

*மாது, ஓ: ஈற்றசைகள்.*

*திருவேங்கடமலையில் புகுந்த அளவிலே இருவினைத் தொல்லைகளும் ஒழிந்து நீங்கள் முத்தியடைவீர்கள்; அவ்வாறு நீங்கள் முத்தியடைந்து விட்டால் சீதையைத்*

*தேடும் செயல் நடைபெறாது. ஆதலால், அந்த மலைக்குச் செல்ல வேண்டா என்று சுக்கிரீவன் மறுத்துக் கூறினான் என்பது.*

*பொன்னி நதி: தான் பெருகும் பொழுது பொன்னைக் கொழித்துக் கொண்டு வருவதால் காவிரிக்குப் பொன்னி என்னும் பெயர் பொருந்திற்று. தன்னில் ஒரு கால் மூழ்கியவர்களுக்கும் பிறவிப் பிணியொழித்து நற்கதியளிக்கும் என்ற நம்பிக்கையால் காவிரியைத் தெய்வத் திருநதி என்றார். ஏழு புண்ணிய நதிகளில் காவிரியும் ஒன்று. 29*

***4476. 'துறக்கம் உற்றார் மனம் என்ன, துறை கெழு நீர்ச்***
***சோணாடு கடந்தால், தொல்லை***
***மறக்கம் உற்றார் அதன் அயலே மறைந்து உறைவர்;***
***அவ் வழி நீர் வல்லை ஏகி,***
***உறக்கம் உற்றார் கனவு உற்றார் எனும்***
***உணர்வினொடும் ஒதுங்கி, மணியால் ஓங்கல்***
***பிறக்கம் உற்ற மலை நாடு நாடி, அகன்***
***தமிழ்நாட்டில் பெயர்திர் மாதோ.***

***துறக்கம் உற்றார் மனம் என்ன -*** *சொர்க்கத்தையடைந்தவர்களின் மனம் போல;* ***துறை கெழு நீர்ச் சோணாடு கடந்தால் -*** *(தெளிவாகத்) துறைகளிலே விளங்குகின்ற நீரையுடைய (காவிரியைக் கொண்டுள்ள) சோழ நாட்டைத் தாண்டிச் சென்றால்;* ***அதன் அயலே -*** *அந்த நாட்டின் அருகிலே;* ***தொல்லை மறக்கம் உற்றார் -*** *பழவினைத் துன்பங்களை முற்றும் மறந்த முனிவர்கள் (வினைத் தொல்லைகள் அற்றவர்);* ***மறைந்து உறைவர் -*** *மறைந்து வாழ்வார்கள்;* ***நீர் அவ்வழி வல்லை ஏகி -*** *நீங்கள் அந்த வழியிலே விரைவாகச் சென்று;* ***உறக்கம் உற்றார் கனவு உற்றார் -*** *தூங்கியவர் கனவு வாழ்வையடைந்தவராவர் (ஒரு பயனையும் அடையமாட்டார்கள்);* ***எனும் உணர்வினொடும் ஒதுங்கி -*** *என்ற அறிவோடு சற்று விலக்கிச் சென்று;* ***மணியால் ஓங்கல் பிறக்கம் உற்ற -*** *இரத்தினங்களின் ஒளியால் மலைகள் விளக்கமுற்றுள்ள;* ***மலைநாடு நாடி -*** *மலை நாட்டில் சீதையைத் தேடி;* ***அகன் தமிழ்நாட்டில் பெயர்திர் -*** *(பிறகு) பரந்துள்ள செந்தமிழ் நாடான பாண்டிய நாட்டிற்குச் சென்று சேருங்கள்.*

*மாது, ஓ: ஈற்றசைகள்.*

*சொர்க்கம் அடைந்தவர் துயரத்தால் கலங்காமல் எப்பொழுதும் இன்பத்தால் நிறைந்த மனத்தையுடையவராதல் போலக் காவிரியாறும் நீர்நிரம்பிய துறைகளைப் பெற்றிருக்கும் என்பது. தென்திசை நோக்கிச் சோழநாடு கடந்ததும் பாண்டிய நாட்டிற்குள் உடனே புகுந்து விடாமல் சோழநாட்டின் மேற்கப் பகுதியிலுள்ள மலைநாட்டிலும் தேடவேண்டுமென்ற கருத்தொடு ஒதுங்கி மலைநாட்டில் நாடிப் பிறகு பாண்டிய நாட்டிற் சேருமாறு சுக்கிரீவன் வானர வீரர்களுக்குக் கட் டளையிட்டான் என்பது. துறக்கமுற்றார் மனம் - நீர்த் தெளிவிற்கு உவமை. ஒப்பு: 'காசறு துறவின் மிக்க கடவுளர் சிந்தை போல மாசறு விசும்பின்' - (சீவக சிந். 851) சோணாடு: சோழநாடு என்பதன் மரூஉ. மறக்கம்: தொழிற் பெயர் (மறத்தல்) மலைநாடு: சேரநாடு. 30*

*4477. 'தென் தமிழ் நாட்டு அகன் பொதியில் திரு*
*முனிவன் தமிழ்ச் சங்கம் சேர்கிற்பீரேல்,*
*என்றும் அவன் உறைவிடம் ஆம்; ஆதலினால்,*
*அம்மலையை இறைஞ்சி ஏகி,*
*பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை எனும்*
*திரு நதி பின்பு ஒழிய, நாகக்*
*கன்று வளர் தடஞ் சாரல் மயேந்திர மா*
*நெடு வரையும், கடலும், காண்டிர்.*

**தென் தமிழ்நாட்டு** - *தெற்குத் திசையில் தமிழ்நாடான பாண்டிய நாட்டிலுள்ள;* **அகன் பொதியில்** - *அகன்ற பொதிய மலையிலே நிலை பெற்ற;* **திருமுனிவன்** - *சிறந்த அகத்திய முனிவனது;* **தமிழ்ச்சங்கம் சேர்கிற்பீரேல்** - *தமிழ்ச்சங்கத்தைச் சேர்வீர்களாயின் (அம் மலையா னது);* **என்றும் அவன் உறைவிடம் ஆம்** - *எப்பொழுதும் அம் முனிவன் வாழ்ந்துவரும் இடமாகும்;* **ஆதலினால்** - *ஆதலால்;* **அம் மலையை இறைஞ்சி ஏகி** - *அந்தப் பொதிய மலையை வணங்கி அப்பாலே சென்று;* **பொன் திணிந்த புனல் பெருகும்** - *பொன் நிரம்பிய நீர் பெருகுகின்ற;* **பொருநை எனும் திருநதி பின்பு ஒழிய** - *தாமிரபரணி என்னும் அழகிய ஆறும் பிறபட்டுப் போக;* **நாகக் கன்று வளர்** - *யானைக் கன்றுகள் வாழ்ந்து நிற்கும்;* **தடஞ்சாரல் மயேந்திரமாம் நெடுவரையும்** - *பெரிய தாழ்வரைகளையுடைய மகேந்திரம் என்னும் பெரிய மலையையும்;* **கடலும்** - *தென் கடலையும்;* **காண்டிர்** - *காண்பீர்கள்.*

*தமிழை வளர்த்த அகத்திய முனிவனுக்கு இருப்பிடமாதலால் பொதிய மலையை வணங்கிச் செல்லுமாறு சுக்கிரீவன் கட்டளையிட்டான். சங்கம்: புலவர் கூட்டம். அகத்திய முனிவன் வடதிசையிலிருந்து தமிழை வளர்க்கத் தென்திசை நோக்கி வந்தவனாதலால் அம் முனிவன் இருக்கும் இடத்தில் தமிழறிந்த புலவர் கூட்டம் நிரம்பியிருத்தல் இயல்பே. நாகம்: மலையில் வாழ்வது என யானைக்குக் காரணக்குறி. நாகக்கன்று - யானைக் கன்றுகள்.* *31*

*4478. 'ஆண்டு கடந்து, அப் புறத்தும், இப்புறத்தும்,*
*ஒரு திங்கள் அவதி ஆக,*
*தேண்டி, இவண் வந்து அடைதிர்; விடை கோடிர்,*
*கடிது' என்னச் செப்பும் வேலை,*
*நீண்டவனும், மாருதியை நிறை அருளால் உற*
*நோக்கி, 'நீதி வல்லோய்!*
*காண்டி எனின், குறி கேட்டி!' என, வேறு*
*கொண்டு இருந்து, கழறலுற்றான்;*

**ஆண்டு கடந்து** - *அந்த இடத்தைத் தாண்டிச் சென்று;* **அப்புறத்தும் இப்புறத்தும்** - *அதற்கு அப்பாலும் இந்த இடங்களிலும்;* **ஒரு திங்கள் அவதி ஆகத் தேண்டி** - *ஒரு திங்கள் முழுதும் அலைந்து (சீதையைத்)*

*தேடி;* **இவண் வந்து அடைதிர்** - *இங்கு வந்து சேருங்கள்;* **கடிது விடை கோடிர்** - *விரைவாக விடை பெற்றுச் செல்லுங்கள்;* **என்னச் செப்பும் வேலை** - *என்று*

*(சுக்கிரீவன்) வானரங்களுக்குக் கட்டளை யிட்டபோது;* ***நீண்டவனும் -*** *(திருவிக்கிரம அவதாரத்தில்) திருமாலாகப் பேருருவம் கொண்டவனான இராமனும்;* ***மாருதியை -*** *அனுமனை* ***நிறை அருளால் உற நோக்கி -*** *முழுக் கருணையோடும் உற்று நோக்கி;* ***நீதி வல்லோய் -*** *நீதி நூல்களில் வல்லவனே!;* ***காண்டி எனின் -*** *(சீதையைக்) காண்பாயானால் (இவள்தான் சீதையென்று தெளிவதற் காக);* ***குறிகேட்டி -*** *அவளுடைய அங்க அடையாளங்களை (நான் கூறக்) கேட்பாய்;* ***என -*** *என்று;* ***வேறு கொண்டு இருந்து -*** *(அவனைத்) தனியே அழைத்துச் சென்று ஓரிடத்திலிருந்து;* ***கழறல் உற்றான் -*** *(அந்த அடையாளங்களைச்) சொல்லத் தொடங்கினான்.*

*சுக்கிரீவன் இவனாலேதான் செயல் கைகூடும் என்னும் குறிப்போடு அனுமனையே முதன்மையாகக் கொண்டு இவ்வளவும் கூறியதனாலும், தனக்கும் சுக்கிரீவனுக்கும் முதலில் சொல்வன்மையால் நட்புச் செய்வித்தவன் அனுமனேயாதலாலும், சீதையைத் தேடிக் காணுதலாகிய தொழில் இவனாலேயே நிறைவேறுமென்று கருதி இராமனும் அனுமனைத் தனியிடம் கொண்டு சென்று கூறலாயினான். அவதி: காலவரையறை. கொள்திர் என்பது கோடிர் எனத் திரிந்தது. தேண்டி - தேடி என்பதன் விரித்தல்விகாரம். 32*

*இராமன் அனுமனுக்குச் சீதையின் அங்க அடையாளங்கள் கூறுதல்*

*ஆசிரிய விருத்தம்*

***4479. 'பாற்கடல் பிறந்த செய்ய***
***பவளத்தை, பஞ்சி ஊட்டி,***
***மேற்பட மதியம் சூட்டி,***
***விரகுற நிரைத்த மெய்ய***
***கால் தகை விரல்கள் -***
***ஐய! - கமலமும் பிறவும் எல்லாம்***
***ஏற்பில என்பது அன்றி, இணை***
***அடிக்கு உவமை என்னோ?***

***ஐய -*** *(இராமன் அனுமனைப் பார்த்து) ஐயனே;* ***மெய்ய கால் தகை விரல்கள் -*** *(சீதையின்) செம்மையான கால்களிலுள்ள அழகிய விரல்கள்;* ***பாற்கடல் பிறந்த செய்ய பவளத்தை -*** *பாறகடலில் உண்டான சிவந்த பவளத் துண்டுகளை;* ***பஞ்சி ஊட்டி -*** *செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்து;* ***மேற்பட மதியம் சூட்டி -*** *அவற்றின் மேற்புறத்தில் சந்திரர்களைப் பொருந்தச் செய்து;* ***விரகுற நிரைத்த மெய்ய -*** *திறம்பட ஒழுங்காக அமைக்கப்பட்ட வடிவு கொண்டவை;* ***கமலமும் பிறவும் எல்லாம் -*** *(உலகில் பாதங்களுக்கு உவமை கூறப்படும்) தாமரை மலரும் பிற பொருள்களும் ஆகிய எல்லாம்;* ***ஏற்பில -*** *(சீதையின் பாதங்களுக்கு) உவமையாக மாட்டா;* ***என்பது அன்றி -*** *என்று*

*சொல்லலாமே யல்லாமல்;* ***இணை அடிக்கு உவமை என்னோ -*** *(அவ ளுடைய) இரண்டு பாதங்களுக்கு ஏற்ற உவமைப் பொருள்யாதோ? (எதுவுமில்லை)*

*நகங்களோடு கூடி இயற்கைச் செந்நிறம் அமைந்த சீதையின் கால்விரல்களுக்குச் செம்பஞ்சு ஊட்டிச் சந்திரர்களையணிவித்த தெய்வத் தன்மையுள்ள பவளத் துண்டுகள் ஒப்பாகும் என்பது. தன்மைத் தற்குறிப்பேற்றவணி. பாதங்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பூட்டுதல் மென்மை உண்டாவதற்கும், நிறமுண்டாவதற்கும் ஆகும்.*

*விரல்களையுடைய பாதங்களுக்கு இதழ்களையுடைய கமலம் உவமையாயிற்று: மென்மையும் செந்நிறமும் பற்றி. நகங்களுக்கு வெண்மையான சந்திரர்கள் உவமை. சீதை திருமகளின் திருவவதாரமாதலால் பாதாதிகேசாந்தமாக வருணிக்கத் தொடங்கும் குறிப்பையுணரலாம். இதன்முன் 4467 முதல் வந்தனவும் அறுசீர் விருத்தங்களே; இதுமுதல் 4519 முடிய வருவனவும் அறுசீர் விருத்தங்களே. சீரமைப்பால் முன்னவை ஒருவகை; பின்னரே வேறுவகை.* *33*

***4480. 'நீர்மையால் உணர்தி - ஐய! -***
***நிரை வளை மகளிர்க்கு எல்லாம்***
***வாய்மையால் உவமை ஆக,***
***மதி அறி புலவர் வைத்த***
***ஆமை ஆம் என்ற போதும்,***
***அல்லன சொல்லினாலும்,***
***யாம யாழ் மழலையாள்தன்***
***புறவடிக்கு இழுக்கம் மன்னோ.***

***ஐய -** ஐயனே! **நிரை வளை மகளிர்க்கு எல்லாம் -** வரிசையாக அணிந்த வளையல்களையுடைய பெண்களின்புறவடிகளுக் கெல்லாம்; **உவமை ஆக -** உவமானமாகுமாறு; **மதி அறி புலவர் வாய்மையால் வைத்த -** தமது நுண்ணறிவால் எல்லாவற்றையும்உணரவல்ல புல வர்கள் உறுதியாக அமைத்த; **ஆமை ஆம் என்ற போதும் -** ஆமையென்று சொன்னாலும்; **அல்லன சொல்லினாலும் -** அதுவல்லாத சுவடி முதலியவற்றைக் கூறினாலும்; **யாம யாழ் மழலையாள்தன் -** நள்ளிரவில் மீட்டப்படும் குறிஞ்சி யாழ் போன்ற மழலைச் சொற்களையுடைய சீதையின்; **புற அடிக்கு -** புறவடிக்கு (உவமையாகச் சொல்வது); **இழுக்கம் -** குறைவேயாகும்; **நீர்மையால் உணர்தி-** (இத் தன்மையை) நீ உன் தெளிந்த அறிவால் அறிவாய்.*

*மன், ஓ: ஈற்றசைகள்.*

*யாமயாழ் என்றது குறிஞ்சி யாழை. நள்ளிரவில் மீட்டப்படுவதாகலின் அப்பெயர் பெற்றது. 'யாமயாழ்ப் பெயர்க் குறிஞ்சி யாழும்' என்பது சேந்தன் திவாகரம். மகளிர் புறவடிகளுக்கு உவமையாக ஆமை சுவடி முதலியவற்றைக் கூறுவர். அத்தகைய பொருள்களும் தெய்வத் தன்மையுள்ள சீதையின் புறவடிகளுக்கு ஒப்பாகா என விலக்குவது இச்செய்யுல். எதிர்நிலையணி.*

*புறவடி- அடியினது புறம்: முன்பின்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகை.* *34*

***4481. 'வினைவரால் அரிய கோதைப்***
***பேதை மென கணைக் கால் மெய்யே***

***நினைவரால் அரிய நன்னீர்***
***நேர்பட, புலவர் போற்றும்***
***சினை வரால், பகழி ஆவம்,***
***நெற் சினை, என்னும் செப்பம்***
***எனைவரால் பகரும் ஈட்டம்; யான்***
***உரைத்து இன்பம் என்னோ?***

***வினைவரால் அரிய கோதைப் பேதை -*** *ஓவியர்களால் தீட்டு வதற்கு அரிய கூந்தலையுடைய பேதைமைத் தன்மையுள்ளவளான சீதை யின்;* ***மென் கணைக்கால் -*** *மெல்லிய கணுக்கால்கள்;* ***மெய்யே -*** *உண்மையாகவே;* ***நேர்பட நினைவரால் அரிய நன்னீர் -*** *ஊகித்து உணர்பவராலும் (உவமை கூறுவதற்கு) அரியனவான நல்ல இயல்பு டையன;* ***புலவர் போற்றும் -*** *புலவர் உவமையாகப் பொருந்திக் கூறு கின்ற;* ***சினைவரால் -*** *கருக்கொண்ட வரால் மீனும்;* ***பகழி ஆவம் -*** *அம்பறாத் தூணியும்;* ***சினை நெல் -*** *சூல் கொண்ட நெற் பயிரும்;* ***என்னும் -*** *என்கின்ற;* ***செப்பம் -*** *சொற்கள்;* ***எனைவரால் பகரும் -*** *எல்லோராலும் சொல்லக் கூடிய;* ***ஈட்டம் -*** *தன்மையுடையன (அவற்றையே);* ***யான் உரைத்து இன்பம் என்னோ -*** *திரும்பவும் நான் எடுத்துக் கூறுவதால் வரும் இன்பம் யாதோ?*

*புலவர்கள், மகளிர் கணைக்காலுக்கு உவமையாகக் கூறிவருகின்ற வரால் முதலியவற்றையே சீதையின் கணைக் காலுக்கு நானும் உவமையாக எடுத்துச் சொல்வது சிறிதும் இன்பம் தராது என்பது. எதிர் நிலையணி. வினைவர்: ஓவியம் தீட்டுவோர். வினைவர், நினைவர் - வினையாலணையும் பெயர்கள்.*
*35*

***4482. 'அரம்பை என்று, அளக மாதர்***
***குறங்கினுக்கு அமைந்த ஒப்பின்***
***வரம்பையும் கடந்தபோது, மற்று***
***உரை வகுக்கல் ஆமோ?***
***நரம்பையும், அமிழ்த நாறும்***
***நறவையும், நல்நீர்ப் பண்ணைக்***
***கரும்பையும் கடந்த சொல்லாள், கவாற்கு***
***இது கருது கண்டாய்.***

***அளக மாதர் குறங்கினுக்கு -*** *கூந்தலையுடைய பெண்களின் தொடைகளுக்கு;* ***அரம்பை என்று அமைந்த -*** *வாழைகள் என்று ஏற் பட்ட;* ***ஒப்பின் வரம்பையும் -*** *உவமையின் எல்லையையும்;* ***கடந்த***

***போது -*** *(சீதையின் தொடைகள்) வென்றன என்றபோது;* ***மற்று உரை வகுக்கல் ஆமோ -*** *(அவற்றிற்கு) வேறு உவமைகளை எடுத்துக் கூற இயலுமோ? (இயலாது);* ***நரம்பையும் -*** *நரம்புகளையுடைய யாழினையும்;* ***அமிழ்த நாறும் நறவையும் -*** *அமிழ்தம்போல இனிமை விளங்கும் தேனையும்;* ***நல் நீர்ப்பண்ணைக் கரும்பையும் -*** *நல்ல நீர்வளமுள்ள வயல்களில் விளைந்த கரும்பின் சாற்றையும்;* ***கடந்த சொல்லாள் -*** *வெற்றி கொண்ட சொற்களையுடைய சீதையின்;* ***கவாற்கு -*** *தொடை களுக்கு;* ***இது -***

*(முன்னர்ச் சுட்டிய) வாழைபோன்ற வேறு உவமைகள்;* ***கருது கண்டாய் -*** *(பொருந்தா என்பதை நீ) நினைந்து ஆராய்வாய்.*

*கண்டாய்: முன்னிலையசை; தேற்றமும் ஆகும். பெண்களின் தொடைகளைவிட வாழைகள் அழகில் சிறந்திருக்கும்; அந்த வாழைகளையும் சீதையின் தொடைகள் வென்றன என்றதால் அவற்றிற்கு வேறு உவமானப் பொருள் எடுத்துக் கூறல் அரியதாயிற்று.*

*நரம்பு: யாழுக்குச் சினையாகுபெயர்.*

*கரும்பு: அதன் சாற்றுக்கு இலக்கணை.*

*கவான்-தொடை 36*

***4483. 'வார் ஆழிக் கலசக்***
***கொங்கை வஞ்சிபோல் மருங்குலாள்தன்***
***தார் ஆழி, கலை சார் அல்குல்***
***தடங்கடற்கு உவமை - தக்கோய்! -***
***பார் ஆழிப் பிடரில் தாங்கும்***
***பாந்தளும், பனி வென்று ஓங்கும்***
***ஓர் ஆழித் தேரும் ஒவ்வா,***
***உனக்கு நான் உரைப்பது என்னோ?***

***தக்கோய் -*** *சிறந்தவனே!* ***வார் -*** *கச்சு அணிந்த;* ***ஆழி, கலசக் கொங்கை -*** *சக்கரவாகப் பறவையையும் கலசத்தையும் போன்ற முலை களையும்;* ***வஞ்சிபோல் மருங்குலாள்தன் -*** *வஞ்சிக் கொடி போன்ற இடையையுமுடைய சீதையின்;* ***தார் -*** *ஒழுங்கான;* ***ஆழி -*** *வட்ட வடிவமான;* ***கலைசார் அல்குல் தடங்கடற்கு -*** *மேகலையைச் சார்ந்துள்ள அல்குலாகிய பெரிய கடலுக்கு;* ***உவமை -*** *உவமிக்கக் கூடிய பொருளாக;* ***ஆழி பார் பிடரில் தாங்கும் பாந்தளும் -*** *கடல் சூழ்ந்த இப் பூமியைத்தன் தலையில் தாங்குகின்ற ஆதிசேடனது படமும்;* ***பனி வென்று ஓங்கும் ஓர் ஆழித்தேரும் -*** *பனியை அடக்கி மேலே உயர்ந்து விளங்குகின்ற ஒற்றை உருளையுடைய (சூரியனின்) தேர்த் தட்டும்;* ***ஒவ்வா -*** *பொருந்திவாரா;* ***உனக்கு -*** *(யாவும் தெரிந்த) உனக்கு;* ***நான் உரைப்பது -*** *நான் புதிதாகக் கூற வேண்டுவது;* ***என்னோ -*** *என்ன உள்ளது? (எதுவுமில்லை)*

*ஆதிசேடனது படத்தையும், கதிரவனின் தேர்த்தட்டையுமே சீதையின் அல்குலுக்கு உவமையாகக் கூறினும் பொருந்தா என்பது. சக்கரவாகமும் பொறக்லசமும்*

*தனங்களுக்கு வடிவு பற்றிவந்த உவமைகள். ஓராழித் தேர் - ஒற்றைச் சக்கரமுடைய கதிரவன் ஊரும் தேர். ஆழி என்ற சொல் நான்கடிகளிலும் வந்துள்ளது. சொற் பின்வரு நிலையணி.*

*ஆழி - சக்கரவாகப் பறவை. கலை - ஆடையெனினும் அமையும். 37*

*4484. 'சட்டகம் தன்னை நோக்கி,*
*யாரையும் சமைக்கத் தக்காள்*
*இட்டு இடை இருக்கும் தன்மை*
*இயம்பக் கேட்டு உணர்தி என்னின்,*
*கட்டுரைத்து உவமை காட்ட,*
*கண்பொறி கதுவா; கையில்*
*தொட்ட எற்கு உணரலாம்; மற்று*
*உண்டு எனும் சொல்லும் இல்லை.*

***சட்டகம் தன்னை நோக்கி -*** *(சீதையின்) வடிவ அழகைக் கண்டு;* ***யாரையும் சமைக்கத் தக்காள் -*** *எத்தகைய அழகுள்ள பெண்களையும் (பிரமன்) படைக்கத் தகுந்த பேரழகையுடையவளின்;* ***இட்டு இடை இருக்கும் தன்மை -*** *சின்ன இடை அமைந்துள்ள வகையை;* ***இயம்பக் கேட்டு உணர்தி என்னின் -*** *உவமை சொல்லக் கேட்டு நீ அறிய வேண்டுமென்றால் (அது முடியாது; ஏனென்றால்);* ***கட்டு உரைத்து உவமை காட்ட -*** *உறுதியாக எடுத்துச் சொல்லி உவமானப் பொருளைக் காட்டுவதற்கு;* ***கண் பொறி கதுவா -*** *(அந்த இடையைக்) கண்ணாகிய பொறியால் காணமுடியாது (அந்த இடை கண்ணுக்குப் புலனாகாது);* ***கையில் தொட்ட -*** *கைகளால் தீண்டித் துய்த்த;* ***எற்கு உணரல் ஆம் -*** *என்னால் மாத்திரமே (உண்டென்று) அறியக் கூடும்;* ***மற்று உண்டு எனும் சொல்லும் இல்லை -*** *வேறு வகையில் உண்டு என்று சொல்வதற்கும் வழியில்லை.*

*அழகிய பெண்களைப் படைப்பதற்குப் பிரமன் முன்மாதிரியாகக் கொள்வது சீதையின் வடிவமே என்பது கருத்து. சீதையின் இடை பரிசவுணர்ச்சியின் மூலமாக என்னால் மாத்திரமே உண்டென்று உணரப் படுவது; ஒருவரின் கண்ணுக்குப் புலனாகாதவாறு மிகவும் நுண்ணியது; ஆதலால், அதற்கேற்ற உவமைப் பொருளை எடுத்துச் சொல்லுவது முடியாது என்பது. எத்துணை அழகுள்ள பெண்களைப் படைக்க விரும்பினாலும் பிரமன் இவளது வடிவத்தையே மாதிரியாக வைத்துப் படைக்குமாறு அழகோவியமாக உள்ளாள் சீதையெனச் சீதையின் பேரழகைக் குறித்தவாறு. சட்டகம் - வடிவு* *38*

*4485. 'ஆல் இலை, படிவம் தீட்டும்*
*ஐய நுண் பலகை, நொய்ய*
*பால் நிறத் தட்டம், வட்டக்*
*கண்ணடி, பலவும் இன்ன,*
*போலும் என்று உரைத்த போதும்,*
*புனைந்துரை; பொதுமை பார்க்கின்,*
*ஏலும் என்று இசைக்கின், ஏலா;*
*இது வயிற்று இயற்கை ; இன்னும்,*

***பொதுமை பார்க்கின் -*** *பொதுநோக்காகப் பார்த்தால் (பெண்களின் வயிறு);* ***ஆல் இலை -*** *ஆலிலையையும்;* ***படிவம் தீட்டும் ஐய நுண்பலகை -*** *வடிவம் எழுதிய அழகிய மெல்லிய சித்திரப் பலகையையும்;* ***நொய்ய பால் நிறத் தட்டம் -*** *மிக மென்மையாயும் பால்போல வெண்ணிறமாயும் உள்ள வெள்ளித் தட்டினையும்;* ***வட்டக் கண்ணடி -***

*வட்ட வடிவமான கண்ணாடியையும்;* **இன்ன பலவும் -** *இவை போல்வன பலவற்றையும்;* **போலும் -** *ஒத்திருக்கும்;* **என்று உரைத்த போதும் -** *என்று கூறினாலும்;* **புனைந்துரை -** *(இவையெல்லாம்) இட்டுக் கட்டிச் சொல்லப் பட்டனவேயாகும்;* **ஏலும் என்று இசைக்கின் -** *(சீதையின் வயிற்றுக்கோ முன் கூறிய ஆலிலை முதலியன) பொருந்தும் என்றும் கூறினால்;* **ஏலா -** *அவை சிறிதும் பொருந்தாவாம்;* **இது வயிற்று இயற்கை -** *இது (சீதையினது) வயிற்றின் இயல்பாகும்;* **இன்னும் -** *மேலும். . .*

*மற்றைப் பெண்களின் வயிற்றுக்கு ஆலிலை முதலியவற்றை உவமை கூறினால் புனைந்துரையாகும்; அப்பொருள்களையே இச்சீதையின் வயிற்றுக்கு உவமை கூறினால் அவை உவமையாவதற்கே பொருந்தா என்பது. எதிர்நிலையணி. ஐய - (அழகிய) ஐ என்ற உரிச்சொல்லடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்.*
*39*

***4486. 'சிங்கல் இல் சிறு கூதாளி,***
***நந்தியின் திரட் பூ, சேர்ந்த***
***பொங்கு பொன் - துளை, என்றாலும்***
***புல்லிது; பொதுமைத்து ஆமால்;***
***அங்கு அவள் உந்தி ஒக்கும்***
***சுழி எனக் கணித்தது உண்டால்;***
***கங்கையை நோக்கி சேறி -***
***கடலினும் நெடிது கற்றோய்!***

**கடலினும் நெடிது கற்றோய் -** *கடலைக் காட்டிலும் விரிவாகக் கற்றுணர்ந்தவனே!* **சிங்கல் இல் சிறு கூதாளி -** *(சீதையின் உந்திச் சுழிக்கு) சுருங்காத சிறு கூதாளிச் செடியும்;* **நந்தியின் -** *நந்தியாவட் டையும் (என்ற இவற்றின்);* **திரள் பூ -** *வட்ட வடிவமான மலர்களிலே;* **சேர்ந்த பொங்கு பொன்துளை -** *பொருந்திய பெரிய அழகிய துளைகள்;* **என்றாலும் -** *(உவமையாகும்) என்று கூறினாலும்;* **புல்லிது -** *(அவை) மிக அற்பமானவை;* **பொதுமைத்து ஆம் -** *தவிர, பொதுவகையால் கூறியதும் ஆகும்;* **சுழி -** *(கங்கையின்) நீர்ச் சுழியானது;* **அவள் உந்தி ஒக்கும் -** *அச் சீதையின் உந்தியை ஒத்திருக்கும்;* **என அங்கு -** *என்று அவ்விடத்து;* **கணித்தது உண்டு -** *(கங்கையைக் கண்ட போது) நான் கருதியது உண்டு;* **கங்கையை நோக்கி சேறி -** *(ஆகையால்)*

*கங்கையை மனத்தில் பதித்துக் கொண்டு (அச் சீதையின் உந்தியைஇன்னபடி உள்ளதென்று) எண்ணிச் செல்வாய்;*

*ஆல்: இரண்டும் ஈற்றசைகள்.*

*கங்கையின் நீர்ச் சுழியே சீதையின் உந்திக்கு ஏற்ற உவமையாகும் என்பது கருத்து. சிங்கல் - கெடுதல். அனுமனின் பரந்த கல்வியறிவையும், நுண்மான் நுழை புலத்தையும் பாராட்டிக் கடலினும் நெடிது கற்றோய்' என்றான். 'இல்லாத உலகத்து எங்கும், இங்கு இவன் இசைகள் கூரக் கல்லாத கலையும் வேதக் கடலுமே (3768) என அனுமனின் கல்வித்திறத்தை இராமபிரான் கூறியதை நினைவு கூர்க. சீதையின் உந்திச் சுழிக்குக் கூதாளிமலரின் உள் துளையும் நந்தியாவட்ட மலரின் உள்துளையும் சிறிதும் உவமையாகா; நான் கங்கைவழியே வந்தபோது அந்தக் கங்கைநதியின் நீர்ச் சுழிக்குச்*

*சீதையின் உந்திச் சுழியை உவமையாகக் கருதியதுண்டு. நீயும் அக் கங்கையின் நீர்ச் சுழியும் சீதையின் உந்திச் சுழயும் ஒக்குமெனக் கருதுவாய் என்பது. எதிர்நிலையணி.*

*கூதாளி - கார் காலத்து மலரும் ஒரு வகைச் செடி. 40*

***4487. 'மயிர் ஒழுக்கு என ஒன்று உண்டால்,***
***வல்லி சேர் வயிற்றில்; மற்று என்,***
***உயிர் ஒழுக்கு; அதற்கு வேண்டும்***
***உவமை ஒன்று உரைக்கவேண்டின்,***
***செயிர் இல் சிற்றிடை ஆய் உற்ற***
***சிறு கொடி நுடக்கம் தீர,***
***குயிலுறுத்து அமைய வைத்த கொழுகொம்பு,***
***என்று உணர்ந்து கோடி.***

***வல்லிசேர் வயிற்றின் -*** *கொடி போன்ற சீதையின் வயிற்றிலே;* ***மயிர் ஒழுக்கு என ஒன்று உண்டு -*** *மயிரொழுங்கு என்ற ஒன்று உள்ளது;* ***என் உயிர் ஒழுக்கு -*** *(அஃது) எனது உயிரின் ஒழுக்கேயாகும்;* ***அதற்கு வேண்டும் உவமை ஒன்று -*** *அதற்கு யாவரும் ஒப்புக் கொள்ளத் தக்க ஓர் உவமையை;* ***உரைக்க வேண்டின் -*** *சொல்ல வேண்டுமானால் (அது முடியாது);* ***செயிர் இல் சிறு இடையாய் உற்ற -*** *(ஆயினும்) குற்றமற்ற நுண்ணிய இடையென்று அமைந்த;* ***சிறு கொடி -*** *சிறிய கொடியின்;* ***நுடக்கம் தீர -*** *தளர்ச்சி ஒழிய(ப் படருமாறு);* ***குயிலுறுத்து -*** *நன்றாகப் பதியும்படி;* ***அமைய வைத்த -*** *பொருந்த வைத்த;* ***கொழு கொம்பு என்று*** *- கொழு கொம்பாகு மென்று;* ***உணர்ந்து கோடி -*** *அறிந்து கொள்வாய்.*

*சீதையின் வயிற்றில் நெடுக உள்ளதை உலகத்தவர் மயிரொழுங்கு என்பார்கள்; ஆனால், அது மயிரொழுங்கன்று: எனது உயிரொழுங்காம் என்பது. இடைக்கு மேற்புறத்திலுள்ள அந்த வயிற்றின் மயிரொழுங்கிற்கு உவமைகூற இயலாது; ஆனால் இடையாகிய கொடி துவளாமல் படர்வதற்க நாட்டிய கொழு கொம்பு போன்றது எனலாம் என்றான் இராமன். அவநுதி அங்கமாய தற்குறிப்பேற்றவணி. வல்லி - உவமையாகுபெயர். 41*

***4488. ' "அல்லி ஊன்றிடும்" என்று அஞ்சி,***
***அரவிந்தம் துறந்தாட்கு, அம்பொன்***
***வல்லிமூன்று உளவால், கோல வயிற்றில்;***
***மற்று அவையும் மார -***
***வில்லி, மூன்று உலகின் வாழும்***
***மாதரும், தோற்ற மெய்ம்மை***
***சொல்லி ஊன்றிய ஆம், வெற்றி வரை***
***எனத் தோன்றும் அன்றே!***

***அல்லி ஊன்றிடும் என்று -*** *அகவிதழ்கள் பதிந்து உறுத்துமென்று;* ***அஞ்சி -*** *அச்சங்கொண்டு;* ***அரவிந்தம் துறந்தாட்கு -*** *தாமரையை விட்டு நீங்கிவந்த திருமகளாகிய சீதைக்கு;* ***கோல வயிற்றில் -*** *அழகிய வயிற்றினிடத்தில்;* ***அம்பொன்***

***வல்லி மூன்று உள*** - *அழகிய பொன் னிறமான கொடியின் வடிவமாகிய மூன்று மடிப்புக்கள் உள்ளன;* ***அவையும்*** - *அந்த மடிப்புகளும்;* ***மார வில்லி*** - *மன்மதனாகிய வில் வீரன்;* ***மூன்று உலகினும் வாழும் மாதர்*** - *மூன்றுலகங்களிலும் வசிக்கும் பெண்களெல்லாம்;* ***தோற்ற மெய்ம்மை*** - *(இச் சீதையின் அழகுக்குத்) தோற்றுப்போன உண்மைச் செய்தியை;* ***சொல்லி*** - *எடுத்துச் சொல்லி;* ***ஊன்றிய ஆம்*** - *நிலைநிறுத்தனவாகிய;* ***வெற்றி வரை என*** - *வெற்றிக்கு அடையாளமாகத் தீட்டிய இரேகைபோல;* ***தோன்றும்*** - *விளங்கும்.*

*ஆல், மற்று, அன்று, ஏ: அசைகள். திருமகள் தாமரையைத் துறந்ததற்கு அல்லி யூன்றலைக் காரணமாகக் கற்பித்தது ஏதுத்தற்குறிப்பேற்றவணி. சீதையின் வயிற்று மடிப்புகளை வெற்றியின் அறிகுறிக் கோடுகளாகக் கூறியது தன்மைத் தற்குறிப்பேற்றம். சீதையின் வயிற்றிலுள்ள மூன்று மடிப்புகளை மூவலகிலுள்ள எல்லா மகளிரையும் வென்றதற்கு அறிகுறியாக மன்மதன் நாட்டி வைத்த மூன்று இரேகையாகக் குறித்தான்என்பது.* *42*

***4489. 'செப்பு என்பென்; கலசம் என்பென்;***
***செவ் இளநீரும் தேர்வென்;***
***துப்பு ஒன்று திரள் சூது என்பென்;***
***சொல்லுவென் தும்பிக் கொம்பை;***
***தப்பு இன்றிப் பகலின்***
***வந்த சக்கரவாகம் என்பென்;***
***ஒப்பு ஒன்றும் உலகில் காணேன்;***
***பல நினைந்து உலைவென், இன்னும்.***

***செப்பு என்பென்*** - *(சீதையின் முலை) இரத்தினச் சிமிழ் என்று கூறுவேன்;* ***கலசம் என்பென்*** - *(பொற்) கும்பம் என்று கூறுவேன்;* ***செவ் இளநீரும் தேர்வென்*** - *செவ்விளநீர் என்று ஆராய்வேன்;* ***துப்பு ஒன்று திரள் சூது என்பென்*** - *பவழத்தில் கடைந்து செய்யப்பட்ட*

*சொக்கட்டான் காயென்று கூறுவேன்;* ***தும்பிக் கொம்பைச் சொல்லுவென்*** - *யானையின் தந்தங்களைச் சொல்வேன்;* ***தப்பு இன்றிப் பகலில் வந்த*** - *தவறாமல் பகற்காலத்தில் வெளிப்பட்டுவந்த;* ***சக்கரவாகம் என்பென்*** - *சக்கரவாகமென்று கூறுவேன்;* ***ஒப்பு ஒன்றும் உலகில் காணேன்*** - *(என்றாலும் சீதையின் முலைகளுக்கு ஏற்ற) உவமைப் பொருள் ஒன்றையும் அறியாத நான்;* ***பல நினைந்து*** - *(இவ்வாறு) பலவாறாக நினைந்து (அவற்றும் எதுவும் ஏற்ற உவமைப் பொருளாகாமையால்);* ***இன்னும் உலைவென்*** - *இன்னமும் வருந்துவேன்.*

*சக்கரவாகம்: சூரியக் கதிர்களையருந்தும் இயல்புடைய இணைபிரியாப் பறவை. இராமன் 'ஒப்பொன்றும் காணேன்' என்றமையால் அவற்றிற்கு அவையே ஒப்பு என்று கருதினான் என்பது -பொதுநீங்குவமையணி.* *43*

***4490. 'கரும்பு கண்டாலும், மாலைக்***
***காம்பு கண்டாலும், ஆலி***
***அரும்புகண், தாரை சோர***

*அழுங்குவேன்; அறிவது உண்டோ?*
***கரும்பு கண்டு ஆலும் கோதை***
***தோள் நினைந்து, உவமை சொல்ல,***
***இரும்பு கண்டனைய நெஞ்சம்,***
***எனக்கு இல்லை; இசைப்பது என்னோ?***

***கரும்பு கண்டாலும் -*** *கரும்பைக் கண்ட பொழுதும்;* ***மாலைக் காம்பு கண்டாலும் -*** *வரிசையாகவுள்ள மூங்கிலைக் கண்ட போதும்;* ***கண் அரும்பு -*** *கண்களிலிருந்து;* ***ஆலி தாரை சோர அழுங்குவேன் -*** *மழைத் துளிபோன்ற நீர் தாரையாகப் பெருக மனம் வருந்துவேன்;* ***அறிவது உண்டோ -*** *(இவ்வாறு வருந்துவதல்லாமல்) (அவள் தோள்களுக்கு இணையாக ஏற்ற உவமையைத்) தேர்ந்து அறிதல் உண்டோ? (இல்லை);* ***சுரும்பு கண்டு ஆலும் -*** *வண்டுகள் கண்டு மொய்த்து ஒலிப்பதற்கு இடமான;* ***கோதை தோள் நினைந்து -*** *மாலையைத் தரித்த சீதையின் தோள்களை நினைத்து;* ***உவமை சொல்ல -*** *உவமை சொல்வதற்கு;* ***இரும்பு கண்டனைய நெஞ்சம் -*** *இரும்பு போன்ற வலிய மனம்;* ***எனக்கு இல்லை -*** *எனக்கு இல்லையே;* ***இசைப்பது என்னோ-*** *(நான்) உவமை கூறுவது எவ்வாறு?*

*ஓ - வினாப் பொருளில் வந்தது. சீதையைப் பிரிந்துள்ள இந்த நிலையில் கரும்பையும் மூங்கிலையும் காண நேரும்போதெல்லாம் சீதையின் தோள்கள் நினைவுக்குவரக் கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருக வருந்துவேன்; மிக மெல்லிய அச்சீதையின் தோள்களுக்குக் கடினமான கரும்பையும் மூங்கிலையும் உவமை கூற முடிந்ததே தவிர இன்னும் பொருத்தமான உவமை கூற இரும்புபோன்ற வன்னெஞ்சம் தனக்கு இல்லையே என்று இராமன் கூறினான். கரும்பும் மூங்கிலும்: வடிவமும் வழுவழுப்பும் மினுமினுப்பும்பற்றி அழகிய மகளிர் தோளுக்கு உவமையாயின. கோதை - ஆகுபெயர். ஒப்புடைய பொருள்களைக் கண்டு, பிரிந்தவர்*

*வருந்துவது இயல்பாதலின் 'கண்தாரை சோர அழுங்குவேன்' என்று இராமன் வருந்தினான். 44*

***4491. ' "முன்கையே ஒப்பது ஒன்றும்***
***உண்டு, மூன்று உலகத்துள்ளும்"***
***என்கையே இழுக்கம் அன்றே?***
***இயம்பினும், காந்தள் என்றல்,***
***வன் கை; யாழ் மணிக்கை என்றல்,***
***மற்று ஒன்றை உணர்த்தல் அன்றி,***
***நன்கையாள் தடக்கைக்கு ஆமோ?***
***நலத்தின்மேல் நலம் உண்டாமோ?***

***மூன்று உலகத்துள்ளும் -*** *மூவுலகங்களிலும்;* ***முன் கை ஒப்பது -*** *(சீதையின்) முன்னங்கையைப் போன்றதாகிய;* ***ஒன்றும் உண்டு என் கையே -*** *ஒரு பொருள் உண்டு என்று புகல்வதே;* ***இழுக்கம் அன்றே -*** *குறைவல்லவா?* ***இயம்பினும் -*** *(ஒருகால்) உவமை கூறினாலும்;* ***மணிக்கை -*** *(அவளுடைய) அழகிய முன் கைகளை;* ***காந்தள் என்றல் -*** *காந்தள் மலரென்று கூறுதல்;* ***வன்கை -*** *கொடுமையானது;* ***யாழ் என்றல் -*** *மகரயாழென்று கூறுதல்;* ***மற்று ஒன்றை உணர்த்தல் -*** *வேறொன்றை*

*அறிவுறுத்துவதாகும்;* ***அன்றி -*** *அவ்வாறு அல்லாமல்;* ***நன்கையாள் தடக்கைக்கு ஆமோ -*** *(அக் காந்தளும் யாழும்) சீதையின் அழகிய அகன்ற முன்கைகளுக்கு உவமை ஆகுமோ? (ஆகா);* ***நலத்தின் மேல் நலம் உண்டாமோ -*** *அழகுக்கு மேலான வேறோர் அழகு உண்டோ?*

*சீதையின் முன்கைகளுக்கு உவமையாகப் பேசுவதற்குரிய பொருள் மூவுலகிலும் ஏதேனுமுண்டு என்று சொல்வதற்கு இடமில்லை; ஒருகால் காந்தள் மலரை எடுத்துக் கூறினால் அது அக் கைகளைவிட வன்மையுள்ளதாகையால்; சொல்லுகின்றவர் மனம் கொடுமையானது என்பது புலனாகும்; அல்லாமல், மகரயாழை எடுத்துக் கூறினால் அது ஒரு வகையிலும் ஒப்பாகாமையால் பொருத்தமில்லாத வேறொன்றை எடுத்துக் கூறியதாகும்; ஆகவே, இந்த இரு பொருள்களும் சீதையின் முன் கைக்கு ஒப்பாகமாட்டா; இவ்வாறு அவள் முன்கை உவமையற்றிருப்பதற்குக் காரணம் காந்தள், யாழ் முதலிய உவமைப் பொருள்களுக்கெல்லாம் தாமே உவமையாகுமாறு அம் முன்கைகள் அழகுமிக்குடையனவாகவிருப்பதால் என்க. அவற்றைக் காட்டிலும் சிறந்த வேறொரு உவமைப் பொருள் இல்லை என்பதாம். சிறப்புப் பொருளைப் பொதுப்பொருள் விளக்கி நிற்பதால் இது வேற்றுப் பொருள் வைப்பணியாம். காந்தள் - ஆகுபெயர்; இது பெண்களின் கைக்கு வடி விலும், நிறத்திலும், மென்மையிலும், அழகிலும் உவமமாகும். ஓ - இரண்டும் வினா; ஏ - அசை.*
*45*

***4492. ' ''ஏலக் கோடு ஈன்ற பிண்டி***
***இளந் தளிர் கிடக்க; யாணர்க்***
***கோலக் கற்பகத்தின் காமர் குழை,***
***நறுங் கமல மென் பூ,***
***நூல் ஒக்கும் மருங்குலாள்தன்***
***நூபுரம் புலம்பும் கோலக்***
***காலுக்குத் தொலையும்என்றால், கைக்கு***
***ஒப்பு வைக்கலாமோ?***

***பிண்டி ஏலக்கோடு -*** *அசோகமரத்தின் மணமுள்ள கிளைகள்;* ***ஈன்ற இளந்தளிர் கிடக்க -*** *தோற்றுவித்த இளந்தளிர்கள் ஒரு புறம் இருக்கட்டும்;* ***யாணர்க் கோலக் கற்பகத்தின் காமா குழை -*** *புதிய அழகுள்ள கற்பக மரத்தின் விரும்பத் தக்க தளிர்களும்;* ***கமலம் நறு மென்பூ -*** *தாமரைக் கொடியில் தோன்றுகின்ற மெல்லிய மலர்களும்;* ***நூல் ஒக்கும் மருங்குலாள்தன் -*** *நூலைப் போல நுட்பமான இடையையுடைய சீதையின்;* ***நூபுரம் புலம்பும் கோலக் காலுக்கும் -*** *சிலம்புகள் ஒலிக்கும் அழகிய கால்களுக்கே;* ***தொலையும் என்றால் -*** *தோற்றப் போகுமென்றால்;* ***கைக்கு ஒப்பு வைக்கலாமோ -*** *(அவற்றைக்) கைகளுக்கு உவமை கூறுதல் பொருந்துமோ?*

*ஓ - வினா. கற்பகத்தளிரும், தாமரை மலரும் சீதையின் தாழ்ந்த உறுப்பாகிய கால்களுக்கே இணையாகாமல் தோற்றனவென்றால் மேலான உறுப்பாகிய கைகளுகது ஒப்பாகமல் அவை தோற்குமெனச் சொல்லவும் வேண்டுமோ? சொல்லவே தேவையில்லை என்பது.* *46*

***4493. 'வெள்ளிய முறுவல், செவ் வாய், விளங்கு***
***இழை, இளம் பொற் கொம்பின்***
***வள் உகிர்க்கு, உவமை நம்மால்***
***மயர்வு அற வகுக்கலாமோ?***
***''எள்ளுதில் நீரே மூக்கை'' என்று***
***கொண்டு, இவறி, என்றும்,***
***கிள்ளைகள், முருக்கின் பூவைக்***
***கிழிக்குமேல், உரைக்கலாமோ?***

***வெள்ளிய முறுவல் -*** *வெண்மையான பற்களையும்;* ***செவ்வாய் -*** *சிவந்த வாயையும்;* ***விளங்கு இழை -*** *ஒளி விடுகின்ற அணிகலன் களையுமுடைய;* ***இளம் பொன் கொம்பின் -*** *இளமையான அழகிய பூங்கொம்பு போன்ற சீதையின்;* ***வள் உகிர்க்கு -*** *கூர்மையான நகங்களுக்கு;* ***உவமை -*** *உவமையாகக் கூடிய பொருள்களை;* ***நம்மால் மயர்வு அற வகுக்கலாமோ -*** *நம்மைப் போன்றவர்களால் மயக்கமில் லாமல் (தெளிவாக) எடுத்துக்கூற இயலுமோ? (இயலாது);* ***கிள்ளைகள் -*** *கிளிகள்;* ***நீரே மூக்கை எள்ளுதிர் -*** *(கல்யாண முருங்கைக் மலர்களைப் பார்த்து) நீங்கள் எமது மூக்கை (சீதையின் கைந்நகங்களுக்குப் பொருந்தாமை குறித்து) இகழ்கின்றீர்கள்;* ***என்று கொண்டு -*** *என்று*

*மனத்தில் கொண்டு;* ***இவறி -*** *(அவற்றின்மேல்) கோபங்கொண்டு;* ***முருக்கின் பூவை -*** *அந்தக் கல்யாண முருங்கை மலர்களை (தம்மைப் பழிக்கும் மகளிர் வாயென்றே மயங்கி);* ***எனறும் கிழிக்குமேல் -*** *எப் பொழுதும் கிழிக்குமானால்;* ***உரைக்கலாமோ -*** *(கிளியின் மூக்கைச் சீதையின் கைந்நகங்களுக்கு உவமையாக) எடுத்துச் சொல்லலாமோ?*

*கல்யாண முருக்க மலரை மகளிர் வாய்க்கு உவமையாகக் கூறுதல் மரபு. கிளிகள் முருக்கமலரைத் தமது அலகால் இயல்பாகக் கோதும்; இத்தன்மைகளைக் கொண்டு தமது மூக்கைச் சீதையின் கைந்நகங்களுக்கு ஒப்பாகாது என்று பழிக்கும் பெண்களின் வாயென்று முருக்க மலரைக் கருதிக் கிளிகள் அவற்றிடம் கோபங் கொண்டு அவற்றைக் கோதிக் கிழிக்கின்றன என்றான். வெள்ளிய முறுவல் செவ்வாய்: முரண்தொடை. இவறுதல்: பொறாமையயால் சினங்கொள்ளுதல். இச்செய்யுளில் மயக்கவணியை அங்கமாகக் கொண்ட ஏதுத் தற்குறிப்பேற்றவணியும் எதிர்நிலையணியும் அமைந்துள்ளன.* *47*

***4494. 'அங்கையும் அடியும் கண்டால்,***
***அரவிந்தம் நினையுமாபோல்***
***செங் களி சிதறி, நீலம்***
***செருக்கிய தெய்வ வாட் கண்***
***மங்கைதன் கழுத்தை நோக்கின், வளர்***
***இளங் கமுகும், வாரிச்***
***சங்கமும், நினைதிஆயின், அவை***
***என்று துணிதி; தக்கோய்!***

***தக்கோய்*** - *சிறப்பு வாய்ந்தவனே!* ***அங்கையும் அடியும் கண்டால்*** - *(சீதையின்) அழகிய கைகளையும், பாதங்களையும் பார்த்தால்;* ***அரவிந்தம் நினையுமா போல்*** - *செந்தாமரைப் பூவை நினைப்பது போன்று;* ***செங் களி சிதறி*** - *செம்மையான செவ்வரி படர்ந்து;* ***நீலம் செருக்கிய*** - *நீல நிறம் நிறைந்த;* ***தெய்வ வாள் கண் மங்கைதன்*** - *தெய்வத் தன்மையுள்ள வாள்போன்ற கண்களையுடைய சீதையின்;* ***கழுத்தை நோக்கின்*** - *கழுத்தைப் பார்த்து;* ***வளர் இளங் கமுகும்*** - *வளருந் தன்மையுள்ள பாக்குமரத்தையும்;* ***வாரி சங்கமும்*** - *கடலில் பிறக்கும் சங்கையும்;* ***நினைதி ஆயின்*** - *(அவள் கழுத்துக்கு இணையாகும் என்று) எண்ணுவாயானால்;* ***அவை என்று துணிதி***- *(அந்தக் கமுகும், சங்குமே அச்சீதையின் கழுத்திற்கு) உவமையாகும் என்றுஉறுதி செய்வாய்.*

*செந்தாமரை - கைகளுக்கும், கால்களுக்கும் உவமைகள்; கமுகும் சங்கும் கழுத்துக்கு உவமை. திரட்சியிலும், வழுவழுப்பிலும் கழுத்துக்குக் கமுகு உவமை. குவளைமலர் நிறத்திலும், வாள் வடிவத்திலும், ஒளி செய்வதிலும் கூர்மையிலும், ஆடவரை வருத்துவதிலும் கண்களுக்குஉவமை. 48*

***4495. 'பவளமும், கிடையும், கொவ்வைப்பழனும்,***
***பைங் குமுதப்போதும்,***
***துவள்வுஇல இலவம், கோபம், முருக்கு***
***என்று இத் தொடக்கம், ''சாலத்***
***தவளம்'' என்று உரைக்கும்வண்ணம்***
***சிவந்து, தேன் ததும்பும்ஆயின்,***
***குவளை உண் கண்ணி வண்ண***
***வாய் அது; குறியும் அஃதே.***

***குவளை உண் கண்ணி*** - *கருங்குவளை போன்ற மைதீட்டப்பட்ட கண்களையுடைய சீதையின்;* ***வண்ண வாய் அது*** - *அழகிய வாயானது;* ***பவளமும் கிடையும்*** - *பவளமும் சிவந்த நெட்டியும்;* ***கொவ்வைப் பழனும்*** - *கொவ்வைக்கனியும்;* ***பைங் குமுதப்போதும்*** - *புதிய செவ்வல்லி மலரும்;* ***துவள்வு இல இலவம்*** - *துவண்டுபோகாத இலவமரத்தின் மலரும்;* ***கோபம்*** - *இந்திரக்கோபப் பூச்சியும்;* ***முருக்கு*** - *கல்யாண முருங்கை மலரும்;* ***என்ற இத் தொடக்கம்*** - *என்று கூறும் இவை முதலான உவமப் பொருள்கள்;* ***சாலத் தவளம் என்று உரைக்கும் வண்ணம்*** - *மிகவும் வெண்ணிறமானவை என்று சொல்லுமாறு;* ***சிவந்து*** - *மிகுதியாகச் செந்நிறம் பெற்று;* ***தேன் ததும்பும்*** - *தேன் நிரம்பியிருக்கும்;* ***ஆயின்*** - *என்றால்;* ***குறியும் அஃது*** - *அதற்கு உவமையாகக் கூறத்தக்க பொருளும் அதுவேயாகும்.*

*சீதையின்வாய் பவளம் முதலியவற்றினும் மிகச்சிவந்து தேன் ததும்புவதால், அப் பவளம் முதலியவை சீதையின் வாய்க்கு உவமையாகமாட்டா; அதற்கு அதுவே உவமையாகுமல்லாது வேறு உவமையில்லை என்பது. எதிர்நிலையணியி அங்கமாகக் கொண்டுவந்த இயைபின்மையணி. தேன்: இனிமைக்கு இலக்கணை. இலவ மலர்களின் இதழ்கள் தடித்திருக்குமாதலால் 'துவள்வு இல இலவம்' என்றார். 49*

***4496. 'சிவந்தது ஓர் அமிழ்தம் இல்லை;***
***தேன் இல்லை; உள என்றாலும்,***

***கவர்ந்த போது அன்றி, உள்ளம்***
***நினைப்ப ஓர் களிப்ப நல்கா;***
***பவர்ந்த வாள் நுதலினாள்தன் பவள***
***வாய்க்கு உவமை பாவித்து***
***உவந்தபோது, உவந்த வண்ணம்***
***உரைத்தபோது, உரைத்தது ஆமோ?***

***சிவந்தது -*** *சிவந்த நிறமுடைய;* ***ஓர் அமிழ்தம் இல்லை -*** *அமிழ்தம் என்ற ஒன்று இல்லை;* ***தேன் இல்லை -*** *(செந்நிறமான) தேனும் இல்லை;* ***உள என்றாலும் -*** *(ஒருகால் அவை) உள்ளன என்றாலும்;* ***கவர்ந்தபோது அன்றி -*** *(அவை) எடுத்து உண்ட காலத்திலல்லாமல்;* ***உள்ளம் நினைப்ப -*** *மனத்தால் கருதிய அளவில்;* ***ஓர் களிப்பு நல்கா -*** *ஒப்பற்ற மகிழ்ச்சியைத் தரமாட்டா;* ***பவர்ந்த வாள் நுதலினாள்தன் -*** *செறிந்த ஒளிமிக்க நெற்றியையுடைய சீதையின்;* ***பவள வாய்க்கு -***

*பவளம் போன்று சிவந்த வாய்க்கு;* ***உவமை பாவித்து -*** *(தக்க) உவமைப் பொருளைக் கருதி;* ***உவந்தபோது -*** *தமக்கு மகிழ்ச்சியுண்டான காலத்தில்;* ***உவந்தவண்ணம் உரைத்தபோது -*** *மனத்துக்கு உவந்தவித மாக எடுத்துச் சொன்னால்;* ***உரைத்தது ஆமோ -*** *அவ்வாறு சொன்னது பொருத்தமானதாக ஆகுமோ? (ஆகாது).*

*அமிழ்தம் வெண்ணிறமானது; செந்நிறமுடையதன்று; தேன் செந்நிறமுடையதாயினும் சீதையின் வாய்ப்போலச் செந்நிறமுடையதன்று; மேலும், அவை எடுத்து உண்டால் மாத்திரமே இனிமையைத் தருவன; ஆனால், இச்சீதையின்வாயோ நினைத்தமாத்திரத்தில் இனிமையைத் தருவது. ஆதலால், அப் பொருள்கள் சீதையின் வாய்க்கு உவமையாகாவாம். உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும் கள்ளுக்கு இல், காமத்திற்கு உண்டு (1281) என்ற குறளில் இந்தக் கற்பனைக்கு வித்து அமைத்திருத்தலைக் காணலாம். வேற்றுமையணியை அங்கமாகக் கொண்டுவந்த எதிர்நிலையணி. பவர்தல் - செறிதல். உவந்தபோது உவந்தவண்ணம் உரைத்தல் - தோன்றியபடி உண்மையை ஆராயாமல் வாய்க்க வந்தவாறு உரைத்தல். 50*

***4497. 'முல்லையும் முருந்தும், முத்தும்,***
***முறுவல் என்று உரைத்தபோது,***
***சொல்லையும், அமிழ்தும், பாலும், தேனும்***
***என்று உரைக்கத் தோன்றும்;***
***அல்லது ஒன்று ஆவது இல்லை;***
***அமிர்திற்கும் உவமை உண்டோ?***
***வல்லையேல், அறிந்துகோடி, மாறு இலா***
***ஆறு - சான்றோய்!***

***சான்றோய் -*** *சால்புக் குணம் மிகுந்தவனே!* ***முறுவல் -*** *(சீதையின்) பற்கள்;* ***முல்லையும் -*** *முல்லையரும்புகளையும்;* ***முருந்தும் -*** *மயிலிறகின் அடியையும்;* ***முத்தும் -*** *முத்துக்களையும் (ஒப்பனவாம்);* ***என்று உரைத்தபோது -*** *என்று சொன்ன காலத்தில்;* ***சொல்லையும் -*** *அவள் சொற்களைக் குறித்தும்;* ***அமிழ்தும் -*** *தேவரமிழ்தையும்;* ***பாலும் -*** *பாலையும்* ***தேனும் -*** *தேனையும்; (போலும்);* ***என்று உரைக்கத் தோன்றும் -*** *என்ற*

*உரைக்க (மனத்தில்) எண்ணம் உண்டாகும்;* ***அல்லது -*** *(இவ்வாறு இவற்றிற்கு இவற்றை உவமையாகக் கூறவேண்டும் என்ற முறை) அல்லாமல்;* ***ஆவது ஒன்றும் இல்லை -*** *(அவள் பற்களுக்கு) உவமையாகும் பொருள் ஒன்றும் இல்லை;* ***அமிர்திற்கும் உவமை உண்டோ -*** *தேவாமிர்தத்திற்கும் உவமையாகக் கூறும் (சிறப்புப் பொருள்) உண்டோ?* ***வல்லையேல் -*** *உனக்கு வல்லமை இருந்தால்;* ***மாறு இலா ஆறு -*** *வேறு உவமை இல்லாத தன்மையை;* ***அறிந்து கோடி -*** *(சீதையின் பற்கள் இத் தன்மையன என்று ஊகித்து) அறிந்து கொள்வாய்.*

*அமிழ்தம் முதலியன சொற்களுக்கு உவமையாகாதவாறு போல முல்லை முதலியனவும் பற்களுக்கு உவமையாகா என்பது. மேலும், சீதையின் பற்களுக்கு உவமையாவதற்குப் பொருந்தாத முல்லையரும்பு முதலியவற்றை*

*உவமையாகுமென்றால் அவ்வாறே, அவள் சொற்களுக்க உவமையாகாத தேவாமிர்தம் முதலிய பொருள்களையும் அச் சொற்களுக்கு உவமம் கூறவேண்டிவரும்; உண்மையாகப் பார்த்தால் ஒரு பொருளும் அவற்றிற்கு உவமம் ஆகாது; அமிழ்தம் தான் உவமானமாக அமைவதல்லாமல் உபமேயமாக நின்று தனக்கு வேறு ஓர் உவமையைப் பெறாதவாறு போலச் சீதையின் பற்களும் தாம் உவமானமாக நிற்பதல்லாமல் தமக்கு வேறு ஓர் உவமையைப் பெற என்பது. பிறிது மொழிதலணி.*

*உவமைப் பொருள் உயர்ந்ததாய் அமைய வேண்டியிருத்தலால் சீதையின் பற்களுக்க உவமை கூறத்தக்க பெருமைவாய்ந்த பொருள் ஒன்றுமில்லை என்றான்.*
*51*

***4498. 'ஓதியும், எள்ளும், தொள்ளைக் குமிழும்***
***மூக்கு ஒக்கும் என்றால்,***
***சோதி செம் பொன்னும், மின்னும்,***
***மணியும்போல், துளங்கித் தோன்றா;***
***ஏதுவும் இல்லை; வல்லார்***
***எழுதுவார்க்கு எழுத ஒண்ணா***
***நீதியை நோக்கி, நீயே***
***நினைதியால், - நெடிது காண்பாய்!***

***நெடிது காண்பாய் -*** *(எதிர்காலத்தையும் கணிக்கும்) தொலை நோக்கு உடையவனே;* ***ஓதியும் -*** *பச்சோந்தியையும்;* ***எள்ளும் -*** *எள் மலரையு* ***தொள்ளைக் குமிழும் -*** *தொளையுள்ள குமிழம் பூவையும்;* ***மூக்கு -*** *(சீதையின்) மூக்கானது;* ***ஒக்கும் என்றால் -*** *ஒத்திருக்கும் என்று சொன்னால் (அப்பொருள்கள்);* ***சோதி செய் பொன்னும் -*** *ஒளி வீசுகின்ற பொன்னையும்;* ***மின்னும் மணியும் போல் -*** *ஒளிவிடுகின்ற இரத்தினங்களையும் போல;* ***துளங்கித் தோன்றா -*** *விளங்கிக் காணப்படா;* ***ஏதுவும் இல்லை -*** *(அவ்வாறு ஒளி வீசுதற்குரிய) காரணமும் (அப் பொருள்களிடம்) இல்லை;* ***எழுதுவார் வல்லார்க்கு -*** *(இன்னும்) ஓவியம் தீட்டுவதில் திறமை பெற்றவர்களுக்கும்;* ***எழுத ஒண்ணா -*** *தீட்ட முடியாத;* ***நீதியை நோக்கி -*** *(மூக்கின்) இத் தன்மையை ஆராய்ந்து பார்த்து;* ***நீயே நினைதி -*** *(அதன் அழகை) நீயே உணர்ந்து கொள்வாய்.*

*சீதையின் மூக்கு, பொன் போலவும், இரத்தினம் போலவும் ஒளிவிடுகின்றதே; அவ்வாறிருக்க அம்மூக்கிற்குப் பச்சோந்தி முதலியன எவ்வாறு உவமையாகும்? உவமையாகமாட்டா. மேலும், ஓவியத்தில் எழுதமுடியாதவாறு பேரொளி மிகுந்து அழகு கூடியிருத்தலால் அதன் சிறப்புத் தன்மையை ஊகித்து அறிவாய் என்பது.*

*வேற்றுமையணியை அங்கமாகக் கொண்டு வந்த எதிர்நிலையணி. ஓதி - (ஓந்தி): இடைக்குறை. தொள்ளை - (தொளை) : விரித்தல் விகாரம். ஒளியும் வடிவழகும் பெற்ற சீதையின் மூக்கிற்கு உவமையில்லைஎன்றவாறு. 52*

***4499. 'வள்ளை, கத்திரிகை வாம மயிர்***
***வினைக் கருவி என்ன,***
***பிள்ளைகள் உரைத்த ஒப்பைப் பெரியவர்***
***உரைக்கின் பித்து ஆம்;***
***வெள்ளி வெண் தோடு செய்த***
***விழுத் தவம் விளைந்தது என்றே***
***உள்ளுதி; உலகுக்கு எல்லாம்***
***உவமைக்கும், உவமை உண்டோ?***

***வள்ளை -** (பெண்களின் காதுகளுக்கு) வள்ளைக் கொடியின் இலையும்; **கத்தரிகை -** கத்திரிக் கோலும்; **வாம மயிர் வினைக்கருவி -** அழகிய மயிர் நீக்கும் கருவியும்; **என்ன -** என்று; **பிள்ளைகள் உரைத்த ஒப்பை -** அறிவு நிரம்பாதவர்கள் சொல்லிய உவமைகளை; **பெரியவர் -** அறிவு முதிர்ந்த சான்றோர்; **உரைக்கின் -** (சீதையின் காதுகளுக்கு உவமைகளாகச்) சொன்னால்; **பித்து ஆம் -** (அது) பித்தம் பிடித்தவர் சொல்லாகும் (சிறிதும் பொருந்தாது); **வெள்ளி வெண்தோடு -** (அவள் அணிந்துள்ள) வெள்ளி போன்ற வெண்ணிறமான தோடு என்னும் காதணி; **செய்த -** முன்பு செய்த; **விழுத் தவம் விளைந்தது என்றே -** சிறந்த தவமே (சீதையின் செவிகளாக) வந்தது என்றே; **உள்ளுதி -** நினைவாய்; **உலகுக்கெல்லாம் -** உலகிலுள்ள பொருள்களுக்கெல்லாம்; **உவமைக்கும் -** உவமையாகச் சொல்லுதற்குரிய ஒன்றுக்கும்; **உவமை உண்டோ -** வேறு ஓர் உவமைப் பொருள் கிடைக்குமோ?*

*சீதையின் காதுகள் உலகிலுள்ள அழகிய பெண்களின் காதுகளுக்கும் தாம் உவமையாகுமாறு அழகு மிகுந்திருப்பதால், அவற்றிற்கு வேறு ஓர் உவமானப் பொருள் இல்லை என்பது. பிள்ளைகள்: இளமைத் தன்மையர்; அறிவு நிரம்பாதவர்கள். வள்ளை - முதலாகு பெயர். வேற்றுப்பொருள் வைப்பணி. 53*

***4500. 'பெரிய ஆய், பரவை ஒவ்வா;***
***பிறிது ஒன்று நினைந்து பேச***
***உரிய ஆய், ஒருவர் உள்ளத்து***
***ஒடுங்குவ அல்ல; உண்மை***
***தெரிய, ஆயிரக் கால் நோக்கின்,***
***தேவர்க்கும் தேவன் என்னக்***
***கரிய ஆய், வெளிய ஆகும்,***
***வாள் தடங் கண்கள் அம்மா!***

**தேவர்க்கும் தேவன் என்ன** - தேவர்களுக்கெல்லாம் தேவனான திருமாலைப் போன்று; **கரிய ஆய்** - கருமையாகியும்; **வெளிய ஆகும்** - வெண்மையாகியுமுள்ள; **வாள் தடங் கண்கள்** - ஒளி பொருந்திய பெரிய கண்கள்; **உண்மை தெரிய** - (அவற்றின்) உண்மையான தன்மை

தெரியும் படி; **ஆயிரங் கால் நோக்கின்** - ஆயிரந் தடவை பார்த்தாலும்; **பெரிய ஆய், பரவை ஒவ்வா** - மிகவும் அகன்றதாய்க் கடலையும் உவமையாக ஏற்காவாம் (கடலினு பெரியன); **பிறிது ஒன்று நினைந்து பேச** - வேறு ஓர் உவமானப் பொருளை ஆராய்ந்து கூறுவதற்கு; **உரிய ஆய்** - தகுந்தனவாகி; **ஒருவர் உள்ளத்து** - ஒருவரது மனத்திற்குள்; **ஒடுங்குவ அல்ல** - அடங்கும் இயல்புடையன அல்ல. ( **அம்மா-** வியப்பிடைச் சொல்)

சீதையின் கண்கள் மிகப் பெரியனவாயிருத்தலால் அவற்றின் தன்மையை உள்ளத்தினால் ஊன்றியுணர்வதற்கு ஒருவராலும் இயலாது என்பது. சீதையின் கருவிழிகள் திருமால் போலக் கறுத்தும், அக கருவிழிகளைச் சுற்றிலுமுள்ள பகுதிகள் அத்திருமால் பள்ளி கொள்ளும் பாற்கடல்போல வெளுத்தும் இருக்கும் என்பது. கரியவாய் வெளியவாகும்: தொடைமுரண். 54

**4501. 'கேள் ஒக்கும் அன்றி, ஒன்று**
**கிளத்தினால் கீழ்மைத்து ஆமே;**
**கோள் ஒக்கும்என்னின் அல்லால்,**
**குறி ஒக்கக் கூறாலாமே?**
**வாள் ஒக்கும் வடிக் கணாள்தன்**
**புருவத்துக்கு உவமை வைக்கின்,**
**தாள் ஒக்க வளைந்து நிற்ப**
**இரண்டு இல்லை, அனங்க சாபம்.**

**வாள் ஒக்கும்** - வாள் போன்ற; **வடிக் கணாள்தன் புருவத்துக்கு** - கூர்மையான விழிகளையுடைய சீதையின் புருவங்களுக்கு; **உவமை வைக்கின்** - உவமையெடுத்துப் பொருந்திப் பார்த்தால்; **கேள் ஒக்கும் அன்றி** - உறவாக அமைந்த அவை தாங்களே ஒன்றுக் கொன்ற உவ மையாகுமே அல்லாமல்; **ஒன்று** - வேறொரு பொருளை; **கிளத்தினால்** - உவமையாகக் கூறினால்; **கீழ்மைத்து ஆம்** - இழிந்த உவமையேயாகும் (மற்றும்); **கோள் ஒக்கும் என்னின் அல்லால்** - (பொதுவாகப் பெண்களின் புருவத்திற்கு உவமையாகும் பொருளையெடுத்துத் தன்) மனப் போக்கிற்குப் பொருந்தியுள்ளது என்று (சீதையின் புருவங்களுக்கு) உவமானமாகக் கூறினால் கூறலாமேயல்லாமல்; **குறி ஒக்கக் கூறலாமே** - உவமைக் கருத்துப் பொருந்தக் கூற முடியுமோ? (முடியாது); **தாள் ஒக்க வளைந்து நிற்ப** - (மன்மதன் வில்லை உவமை கூறலாமென்றால்) இரண்டு முனையும் பொருந்துமாறு வளைந்து நிற்பனவாகிய; **இரண்டு அளங்க சாபம்** - மன்மதனுடைய இரண்டு விற்கள்; **இல்லை** - உலகத்தில் இல்லை (ஆதலால், அதுவும் உவமை கூறப் பொருந்தாது).

சீதையின் புருவங்கள் தம்மில் ஒன்றையொன்று ஒக்குமேயல்லாமல் வேறு ஓர் உவமைப் பொருளைப் பெறமாட்டா; ஒரு கால் ஏதாவது உவமானப் பொருளை என மனப்போக்கின்படி கூறுகின்றேன் என்று கூறலாமேயல்லாமல்

*அந்த உவமை அப் புருவங்களுக்குப் பொருந்திய உவமையாகாது; இழிந்த உவமையேயாகும்; இனி, மன்மதனின் வில்லை உவமையாகக் கூறலாமென்றால், முனை வளைந்தனவாகிய இரண்டு விற்கள் மன்மதனிடம் இல்லையாகையால் அம் மன்மதன் வில் உவமை என்பது ஏற்புடைத்தாகாது என்பது.*

*இழிவுவமை: உயர்ந்த பொருளோடு இறப்ப இழிந்ததை உவமையாகக் கூறுவது.*
*55*

***4502. 'நல் நாளும் நளினம் நாணும்***
***நளிரடி நுதலை நாணி,***
***பல் நாளும் பன்னி ஆற்றா***
***மதி எனும் பண்பதாகி,***
***முன் நாளில் முளை வெண்***
***திங்கள் முழுநாளும் குறையே ஆகி,***
***எந் நாளும் வளராதுஎன்னின், இறை***
***ஒக்கும் இயல்பிற்று ஆமே.***

***முன் நாளில் முளை வெண் திங்கள் -*** *வளர்பிறையின் தொடக்கத்தில் தோன்றுகின்ற வெண்ணிறமான சந்திரன்;* ***நல் நாளும் -*** *நல்ல பகற்காலத்தில் கூட;* ***நளினம் நாணும் -*** *தாமரை மலரும் வெட்கப்படுவதற்குக் காரணமாக;* ***நளிர் அடி -*** *தளிர்போன்ற மெல்லிய அடிகளையுடைய சீதையினது;* ***நுதலை -*** *நெற்றியின் அழகிற்கு (பார்த்து);* ***நாணி -*** *வெட்கப்பட்டு;* ***பல் நாளும் பன்னி -*** *பல நாள்களும் (அதனையே) எண்ணியெண்ணி;* ***ஆற்றா -*** *பொறாமல்;* ***மதி எனும் பண்பதாகி -*** *மதியென்று சொல்வதற்கேற்ற சிந்திக்கும் தன்மையுடைதாய்;* ***முழு நாளும் குறையே ஆகி -*** *(பதினாறு கலைகளும் நிரம்பவேண்டிய) பௌர்ணமியன்றும் கலை குறைவாகத் தோன்றி;* ***எந் நாளும் வளராது -*** *எந்த நாளிலும் வளராதிருக்குமானால்;* ***இறை ஒக்கும் -*** *(சீதையின் நெற்றிக்கு) ஒரு சிறிது உவமையாகும்;* ***இயல்பிற்கு ஆம் -*** *தன்மையுடையதாகும்.*

*வளர் பிறையில் முதலில் தோன்றும் பிறைச்சந்திரன் சீதையின் நெற்றியழகை நினைந்து பொறாமைகொண்டு, தான் அதற்கு ஒப்பாகவேண்டுமென்று எண்ணிப் பல நாட்கள் சிந்தித்துப் பதினாறு கலைகளும் நிரம்பவேண்டிய பௌர்ணமியன்றும் தான் அவ்வாறாகாமல் பிறைச் சந்திரனாகவேயிருக்குமானால், அப்பொழுது அது சீதையின் நெற்றிக்கு ஒருபடி ஒப்பாகுமென்பது. முன்னாள் - முதல்நாள். முழுநாள் - பூர்ணிமை.*

*மதி தன் பெயருக்கு இணங்கப் பன்னாள், சீதையின் நுதற்கு உவமையாக வேண்டுமெனச் சிந்தித்தேயாக வேண்டுமெனக் கற்பித்துக் கூறப்பட்டது. ஏ வினாப்பொருளில் வந்தது.* *56*

***4503. 'வனைபவர் இல்லை அன்றே, வனத்துள்***
***நாம் வந்த பின்னர்?***
***அனையன எனினும், தாம் தம்***
***அழகுக்கு ஓர் அழிவு உண்டாகா;***
***வினை செயக் குழன்ற அல்ல;***

*விதி செய விளைந்த; நீலம்*
*புனை மணி அளகம் என்றும்*
*புதுமை ஆம்; உவமை பூணா,*

***நாம் வனத்துள் வந்த பின்னர் -*** *நாங்கள் காட்டிற்கு வந்த பிறகு;* ***வனைபவர் இல்லை அன்றே -*** *(சீதையின் முன் நெற்றிமயிரை ஒதுக்கி வாரி) ஒப்பனை செய்யக்கூடியவர் இல்லையல்லவா?* ***தாம் அனையன எனினும் -*** *தாம் அத்தன்மையனவானாலும் (அவ்வாறு) வாரி அணி செய்யா விட்டாலும்;* ***தம் அழகுக்கு -*** *தமது வனப்புக்கு;* ***ஓர் அழிவு உண்டாகா -*** *ஒரு குறைவு ஏற்படாது;* ***வினை செய -*** *ஒப்பனை செய்வதால்;* ***குழன்ற அல்ல -*** *சுரிந்தனவாக ஆகாமல்;* ***விதி செய விளைந்த -*** *பிரமன் படைத்ததால் இயற்கையாகவே சுரிந்த தான;* ***நீலம் மணி புனை அளகம் -*** *நீல இரத்தினம் போன்ற நெற்றிக்கு மேலுள்ள அந்த மயிர்த் தொகுதி;* ***என்றும் புதுமை ஆம் -*** *எப்பொழுதும் புதுமையாகவே தோன்றும்;* ***உவமை பூணா -*** *எந்த உவமைப் பொருளையும் ஏற்க மாட்டா.*

*வாரிப் புனைதலாகிய தொழில் செய்யாமல் இருக்கும்போதும் இயற்கையாகவே குழன்று அழகு மிகுந்து புதுமையாகத் தோன்றுகின்ற சீதையின் முன் நெற்றி மயிர்த் தொகுதிக்கு ஏற்ற உவமைப் பொருள் எதையும் எடுத்துக்கூற இயலாது என்பது. பேரழகுள்ள பொருள்கள் காணுந்தோறும் விருப்பத்தையுண்டாக்கிப் பின்னுங் காணுமாறு புதிய பொருள்போலத் தோன்றுதல் இயல்பாதல் பற்றி 'என்றும் புதுமையாம்' என்றான்.*

*குழலுதல்: கருமணல் படிந்தாற்போலப் படிப்படியாகச் சுரிந்து அமைதல் அளகம்: முன் நெற்றி மயிர்.* *57*

***4504. 'கொண்டலின் குழவி, ஆம்பல், குனி***
***சிலை, வள்ளை, கொற்றக்***
***கெண்டை, ஒண் தரளம் என்று இக்***
***கேண்மையின் கிடந்த திங்கள் -***
***மண்டலம் வதனம் என்று வைத்தனன்,***
***விதியே; நீ, அப்***
***புண்டரிகத்தை உற்ற பொழுது,***
***அது பொருந்தி ஓர்வாய்.***

***கொண்டலின் குழவி -*** *கருமேகத்தின் கொழுந்தும்;* ***ஆம்பல் -*** *செவ்வல்லி மலரும்;* ***குனி சிலை -*** *வளைந்த விற்களும்;* ***வள்ளை -*** *வள்ளைக் கொடியும்;* ***கொற்றக் கெண்டை -*** *வெற்றி மிகுந்த கெண்டை மீன்களும்;* ***ஒண் தரளம் -*** *ஒளி பொருந்திய முத்துக்களும்;* ***என்ற***

***இக்கேண்மையின் -*** *என்று சொல்லப்பட்ட இத் தன்மையவான பொருள்கள்;* ***கிடந்த -*** *அமையப்பெற்ற;* ***திங்கள் மண்டிலம் -*** *சந்திர மண்டலத்தை;* ***விதியே -*** *பிரமனே;* ***வதனம் என்று வைத்தனன் -*** *சீதையின் முகமெனறு அமைத்து வைத்தான்;* ***நீ அப் புண்டரிகத்தை -*** *நீ (சீதையின்) அந்தத் தாமரை முகத்தை;* ***உற்ற பொழுது -*** *நெருங்க்*

*காணும் பொழுது;* ***அது பொருந்தி ஓர்வாய் -*** *அத் தன்மையை நன்றாக ஆராய்ந்து அறிவாய்.*

*கொண்டல் குழவி அளகத்திற்கும், செவ்வாம்பல் வாய்க்கும், வளைந்த விற்கள் புருவங்களுக்கம் வள்ளையிலை காதுகளுக்கும், கெண்டை மீன்கள் கண்களுக்கும், முத்துக்கள் பற்களுக்கும் உவமையாயின. காண்பதற்கு இனிமையிலும், நிறத்திலும், கண்டோரை மகிழ்வித்தலிலும் முகத்திற்குத் தாமரை மலர் உவமையாயிற்று.*

*சீதையின் முகமென்று பெயரிட்டுக் கொண்டலின் குழவி முதலியவற்றை யுடையதொரு சந்திரமண்டலத்தைப் பிரமதேவன் படைத்தான் என்று கூறியது வஞ்சவொழிப்பணி. கயல் எழுதி வில் எழுதிக் கார் எழுதிக் காமன் செயல் எழுதித் தீர்ந்தமுகம் திங்களோ காணீர் (சிலப். கானல். 11) என்ற சிலப்பதிகார வரிகளில் உள்ள கற்பனை இங்கே நினைவுகூரத் தக்கது. விதி -பிரமன். 58*

***4505. 'காரினைக் கழித்துக் கட்டி,***
***கள்ளினோடு ஆவி காட்டி,***
***பேர் இருட் பிழம்பு தோய்த்து,***
***நெறி உறீஇ, பிறங்குகற்றைச்***
***சோர் குழல் தொகுதி என்று***
***சும்மை செய்தனையது அம்மா! -***
***நேர்மையைப் பருமை செய்த நிறை***
***நறுங் கூந்தல் நீத்தம்!***

***நேர்மையைப் பருமை செய்த -*** *நுண்மையைக் கொண்டு பருமை யாகச் செய்ததான;* ***நிறை நறுங்கூந்தல் நீத்தம் -*** *அடர்ந்த மணங் கமழ் கின்ற (சீதையின்) கூந்தல் தொகுதி;* ***காரினை -*** *கரிய மேகத்தை;* ***கழித்துக் கட்டி -*** *வெட்டிக் கட்டி;* ***கள்ளினோடு ஆவி காட்டி -*** *தேனையும் (அகில் முதலியவற்றின் நறுமணப்) புகையையும் ஏற்றி;* ***பேர் இருட் பிழம்பு தோய்த்து -*** *அடர்ந்த இருட் பிழம்பிலே தோய்த்து;* ***நெறி உறீஇ -*** *(படிப்படியாக) நெரித்தலைச் செய்து;* ***பிறங்கு கற்றை -*** *விளங்குகின்ற கற்றையாகிய;* ***சோர் குழல் தொகுதி என்று -*** *(கீழே) தாழ்ந்து தொங்கும் தன்மையுள்ள குழல்தொகுதி என்று பெயரிட்டு;* ***சும்மை செய்து அனையது -*** *சுமையாக வைத்தது போன்றது.* ***(அம்மா -*** *வியப்பிடைச் சொல்).*

*கரிய மேகத்தைப் பிடித்துச் சீவிக் கட்டி, அதற்குத் தேனையும் எண்ணெயையும் நறுமணத்தையும் ஊட்டி, பின்னும் கருநிறமமையச் செய்து, குழல் தொகுதியென்று பெயரிட்டுப் பெருஞ்சுமையை வைத்தாற் போன்றது சீதையின் கூந்தல் தொகுதியென்பது. தன்மைத் தற்குறிப்பேற்றவணி. மெல்லிய மயிரைத் திரட்டிப்*

*பருமையாகப் பனிச்சைக் கொண்டை முதலியனவாகச் செய்வதாகலின் 'நேர்மையைப் பருமை செய்த' என்றான். நீத்தம்: கூந்தல் தொகுதியைக் குறித்தது. சும்மை - சுமை என்பதன் விரித்தல். ஆவி: நறும்புகை. உறீஇ - உறுவித்து; பிறவினையெச்சம். 59*

*4506. 'புல்லிதழ் கமலத் தெய்வப்*
*பூவிற்கும் உண்டு; பொற்பின்*
*எல்லையின் மதிக்கும் உண்டாம், களங்கம்*
*என்று உரைக்கும் ஏதம்;*
*அல்லவும் சிறிது குற்றம்*
*அகன்றில; அன்னம் அன்ன*
*நல் இயலாளுக்கு, எல்லாம் நலன்*
*அன்றி, பிறிது உண்டாகுமோ? **

***தெய்வக் கமலப் பூவிற்கும் -*** *தெய்வத் தன்மையுள்ள தாமரைப் பூவிற்கும்;* ***புல்லிதழ் உண்டு -*** *பயனற்றதான (அதனை மேலே தழுவியுள்ள) புறவிதழாகிய குற்றமுண்டு;* ***பொற்பின் எல்லையின் மதிக்கும் -*** *அழகின் வரம்பாகிய சந்திரனுக்கும்;* ***களங்கம் என்று உரைக்கும் ஏதம் -*** *களங்கமென்று சொல்லுகின்ற குற்றம்;* ***உண்டாம் -*** *உள்ளதாகும்;* ***அல்லவும் -*** *இவை அல்லாமல் மற்றுமுள்ள சிறந்த பொருள்களும்;* ***சிறிது குற்றம் அகன்றில -*** *சிறிதளவாவது குற்றம் இல்லாமல் இருக்கமாட்டா (ஒவ்வொரு பொருளுக்கும் ஓரளவாவது குற்றம் உண்டு);* ***அன்னம் அன்ன நல் இயலாளுக்கு -*** *அன்னப் பறவை போன்ற அழகிய நடையையுடையவளாகிய சீதைக்கு;* ***எல்லாம் நலன் அன்றி -*** *முழுவதும் நன்மையேயல்லாமல்;* ***பிறிது உண்டாமோ -*** *வேறொன்றாகிய குற்றம் உண்டோ? (இல்லை என்றவாறு).* ***ஆல் -*** *தேற்றம்.*

*தாமரைமலர்க்கும் புறவிதழாகிய குற்றமுள்ள; சந்திரனுக்கும் களங்கமாகிய குற்றம் இருக்கின்றது; இவ்வாறு. பல சிறப்பான குணங்களையுடைய உயர்ந்த பொருள்களிலும் ஏதேனும் குற்றம் இருத்தல் உலகவியல்பு: ஆனால் இச் சீதைக்கோ முழுவதும் குணமேயன்றிக் குற்றம் சிறிதுமில்லை என்பது. எடுத்துக் காட்டுவமையணி. திருமகள் தன்னிடத்தில் தங்குமாறு நிற்றலால் தாமரை மலரை 'கமலத் தெய்வப்பூ' என்றார். புல்லிதழ் - பண்புத் தொகை.*
*60*

*4507. 'மங்கையர்க்கு ஓதி வைத்த*
*இலக்கணம், வண்ண வாசப்*
*பங்கயத் தவட்கும், - ஐயா! -*
*நிரம்பல; பற்றி நோக்கின்,*
*செங் கயல் கருங்கண் செவ்*
*வாய்த் தேவரும் வணங்கும் தெய்வக்*
*கொங்கை அக் குயிலுக்கு ஒன்றும்*
*குறைவு இலை; குறியும் அஃதே.*

***ஐயா -*** *ஐயா!* ***பற்றி நோக்கின் -*** *ஆராய்ந்துபார்த்தால்;* ***மங்கையர்க்கு ஓதி வைத்த இலக்கணம் -*** *பெண்களுக்காகக் (அங்க இலக்கண நூலில்) கூறியுள்ள உத்தமவிலக்கணங்கள்;* ***வண்ண வாசப் பங்கயத்த வட்கும் -*** *மணமுள்ள அழகிய தாமரை மலரில் வாழ்பவளான திரு மகளுக்கும்;* ***நிரம்பல -*** *நிரம்ப அமையவில்லை;* ***செங்கயல் கருங்கண் -*** *கயல்மீன்போன்ற அழகிய கருவிழிகளைக் கொண்ட கண்களையும்;* ***செவ் வாய் -*** *சிவந்த வாயையுமுடைய;* ***தேவரும் வணங்கும் -*** *தேவரும் வணங்குதற்கேற்ற சிறப்பு வாய்ந்த;* ***தெய்வக் கொங்கை அக் குயிலுக்கு -*** *தெய்வத் தன்மை கொண்ட முலைகளோடு கூடிய அந்தக்*

*குயில் போன்ற சீதைக்கு;* ***ஒன்றும் குறைவு இலை -*** *(உத்தமவிலக் கணங்களில்) ஒன்றாவது குறைவுபடவில்லை;* ***குறியும் அஃதே -*** *(நீ அவளை அறிவதற்கு) அடையாளமும் அதுவே.*

*சீதை திருமகளைவிட நல்லிலக்கணம் நிரம்பியவள் என்பதாம். நல்லிலக்கணங்களில் ஒன்றும் குறைவில்லாமல் அவ்விலக்கணம் முழுவதும் நிரம்பியிருத்தலால் சீதை 'தேவரும் வணங்குத் தெய்வக் குயில்' எனப்பட்டாள். செங்கயல் கருங்கண் செவ்வாய்: முரண் தொடை. குயில் - உவமவாகுபெயர். பங்கயத்தவட்கும். தேவரும்: உயர்வுசிறப்பும்மைகள். 61*

***4508. 'குழல் படைத்து, யாழைச் செய்து***
***குயிலொடு கிளியும் கூட்டி***
***மழலையும் பிறவும் தந்து,***
***வடித்ததை, மலரின் மேலான்,***
***இழை பொரும் இடையினாள்தன்***
***இன் சொற்கள் இயையச் செய்தான்;***
***பிழை இலது உவமை காட்டப்***
***பெற்றிலன்; பெறும்கொல் இன்னும்?***

***குழல் படைத்து -*** வேய்ங்குழலையுண்டாக்கியும்; ***யாழைச் செய்து -*** யாழ்க் கருவியை வகுத்தமைத்தும்; ***குயிலொடு கிளியும் கூட்டி -*** குயிலையும் கிளியையும் படைத்தும்; ***மழலையும் பிறவும் தந்து -*** *(எழுத்து நிரம்பாத)* மழலைச் சொல்லையும், இனிய சொற்களுக்கு உவமையாகும் பொருள்களை இயற்றியும்; ***வடித்ததை -*** பழகித் தேர்ந்த நயத்தை; ***மலரின் மேலான் -*** தாமரை மலரில் வாழ்கின்ற பிரமன் *(பின்பு);* ***இழை பொரும் இடையினாள்தன் -*** நூலிழையோடு மாறுபடுகின்ற நுண்ணிய இடையையுடைய சீதையின்; ***இன் சொற்கள் இயையச் செய்தான் -*** இனிய சொற்களுக்கும் பொருந்துமாறு அமைத்தான்; ***பிழை இலது -*** *(ஆனால் அச்சொற்களுக்குக்)* குற்றமற்ற; ***உவமை காட்டப் பெற்றிலன் -*** உவமைப் பொருள் எதையும் உண்டாக்கவில்லை; ***இன்னும் பெறும் கொல் -*** இனிமேலாவது *(அவன்)* படைப்பானோ? *(அறியாம்).*

*பிரமன் சீதையின் இன்சொற்களைப் படைப்பதற்காக முதலில் வேய்ங்குழல் முதலியவற்றைப் படைத்துப் பழகிக் கைதேர்ந்த பிறகே அச்சீதையின் சொற்களைப்*

*படைத்தான்; ஆகவே, அவற்றிற்கேற்ற உவமப் பொருள்களை இதுவரையிலும் பிரமன் படைக்க வில்லை. குழல் முதலியவற்றின் இனிமை முழுவதும் சீதையின் சொற்களில் ஒருங்கே திரண்டுள்ளன என்பது. குழல், யாழ், குயில், கிளி - (ஒலிக்கு) முதலாகு பெயர்கள்.*

*ஒப்பு: 'பளிதமும் பாலும் ஒழுகிய தேனுமா ரமுதும் குயிலினில் குரலும் கிளியினில் மொழியும் மயிலியற் சாயல் வாணுதல் தனக்கு மலரயன் வகுத்த தேன்மொழியாள்' - (அரிச். புரா) 62*

***4509. 'வான் நின்ற உலகம் மூன்றும்***
***வரம்பு இன்றி வளர்ந்தவேனும்,***
***நா நின்ற சுவை மற்ற ஒன்றோ***
***அமிழ்து அன்றி நல்லது இல்லை;***
***மீன் நின்ற கண்ணினாள்தன் மென்***
***மொழிக்கு உவமை வேணடின்,***
***தேன் ஒன்றோ? அமிழ்தம் ஒன்றோ?***
***அவை செவிக்கு இன்பம் செய்யா.***

***வான் நின்ற உலகம் மூன்றும் -*** *சுவர்க்கம் முதலாகப் பொருந்திய மூன்று உலகங்களும்;* ***வரம்பு இன்றி வளர்ந்தவேனும் -*** *எல்லையின்றிப் பரவியுள்ளனவென்றாலும்;* ***நா நின்ற சுவை -*** *(அவற்றுள்) நாவில் தங்கி, சுவை தருகின்ற பொருள்களில்;* ***அமிழ்து அன்றி -*** *மிகச் சிறந்து நிற்கும் அமிழ்தத்தையல்லாமல்;* ***மற்று ஒன்று -*** *இதுவும் ஒன்று என்று சொல்லக் கூடிய;* ***நல்லது இல்லை -*** *நல்ல பொருள் இல்லை;* ***மீன் நின்ற கண்ணினாள் தன் -*** *மீன் போன்ற கண்களையுடையவளான சீதையின்;* ***மென் மொழிக்கு -*** *மெல்லிய சொற்களுக்கு;* ***உவமை வேண்டின் -*** *உவமைப் பொருளையெடுத்துச் சொல்ல விரும்பினால்;* ***தேன் ஒன்றோ -*** *தேன் என்று சொல்வதா;* ***அமிழ்தம் ஒன்றோ -*** *மேலே கூறப்பட்ட அமிழ்தம் என்று சொல்வதா;* ***அவை செவிக்கு இன்பம் செய்யா -*** *அவை இரண்டும் நாவிற்கு இன்பம் செய்யுமே தவிர செவிக்கு இன்பம் நல்கா.*

*மிகவும் பரந்து மூவுலகங்களிலும் தேடித் தேடிப் பார்த்துச் சீதையின் சொற்களுக்கு ஒருபடியாக உவமை காட்டுவோமென்றால் செவிக்கு இனிமை தரும் சீதையின் சொற்களுக்கு, நாவிற்கு மட்டுமே இனிமைதரக் கூடிய தேன், அமிழ்தம் என்ற பொருள்களை உவமை கூறல் எவ்வாறு பொருந்தும் என்பது. எதிர்நிலையணி.*
*63*

***4510. 'பூ வரும் மழலை அன்னம், புனை***
***மடப் பிடி என்று இன்ன;***
***தேவரும் மருளத் தக்க***
***செலவின எனினும் தேறேன்;***
***பா வரும் கிழமைத் தொன்மைப்***
***பருணிதர் தொடுத்த, பத்தி***
***நா அருங் கிளவிச் செவ்வி நடை***
***வரும் நடையள் - நல்லோய்!***

***நல்லோய் -*** *நற்பண்புகளால் சிறந்தவனே!* ***பூ வரும் -*** *தாமரைப் பூவில் வாழும் தன்மையுள்ள;* ***மழலை -*** *மழலைச் சொற்களையுடைய;* ***அன்னம் -*** *அன்னப் பறவையும்;* ***புனை மடப் பிடி -*** *அழகிய இளைய பெண் யானையும்;* ***என்ற இன்ன -*** *என்று சொல்லப்பட்ட இவை;* ***தேவரும் மருளத்தக்க செலவின -*** *தேவர்களும் கண்டு திகைக்கக் கூடிய (சிறந்த) நடையையுடையன;* ***எனினும் -*** *என்றாலும்;* ***தேறேன் -*** *(அவற்றைச் சீதையின் நடைக்கு உவமையாகக் கூறத்) தெளிவு கொள்ளேன்;* ***பா வரும் -*** *செய்யுள் இயற்றுவதில் பொருந்திய;* ***கிழமைத் தொன்மைப்பருணிதர் -*** *உரிமையுடைய*

*பழமையான (புலமை மிக்க) புலவர்கள்;* **தொடுத்த -** *இயற்றிய;* **பத்தி -** *ஒழுங்கான;* **நா அரும் கிளவி -** *நாவில் எழுகின்ற அரிய சொற்களையுடைய;* **செவ்வி நடை வரும் நடையள் -** *காவியங்களின் அழகிய நடையை ஒத்த நடையையு டையவளாவாள்.*

*உலகத்துப் பெண்கள் நடைக்கு உவமையாகக் கூறப்படுகின்ற அன்னப் பறவை முதலியவற்றின் நடையைச் சீதையின் நடைக்கு ஒப்பாகுமென்று நான் சிறிதும் கருதமாட்டேன்; பழைய புலமை மிக்க புலவர்கள் இயற்றியுள்ள காவியங்களின் நடை ஒப்பற்று விளங்குவதுபோல இந்தச் சீதையின் நடையும் ஒப்பற்று விளங்கும் என்பது. நடை வரு நடை - வரு: உவமஉருபு. நூலிலும் நடையுண்டு; பெண்களுக்கும் நடையுண்டு ஆதலால், நூலின் நடை சீதையின் நடைக்கு உவமை கூறப்பட்டது. பருணிதர் - புலவர். 64*

***4511. 'எந் நிறம் உரைக்கேன்? - மாவின்***
***இள நிறம் முதிரும்; மற்றைப்***
***பொன் நிறம் கருகும்; என்றால்,***
***மணி நிறம் உவமை போதா;***
***மின் நிறம் நாணி எங்கும்***
***வெளிப்படா ஒலிக்கும்; வேண்டின்,***
***தன் நிறம் தானே ஒக்கும்;***
***மலர் நிறம் சமழ்க்கும் அன்றே!***

**மாவின் இள நிறம் முதிரும் -** *(சீதையின் மேனி நிறத்திற்கு உவமை வேண்டுமானால்) மாமரத்தின் இளந்தளிரினது நிறம் முதிர்ந்து மாறும் இயல்பினது;* **பொன் நிறம் கருகும் -** *பொன்னின் நிறமும் (இவள் நிறத்துக்கு முன்பு) கறுத்துத் தோன்றும் (ஆகையால் மாந்தளிர் நிறம் முதலியன உவமையாகா; அவ்வாறே);* **மணி நிறம் உவமை போதா -** *இரத்தினங்களின் நிறமும் உவமையாவதற்கு ஏற்ற ஒளியுடையதாகாது;* **மின் நிறம் நாணி -** *மின்னலின் நிறமோ? (சீதையின்*

*நிறத்தைக் கண்டு) வெட்கப்பட்டு;* **எங்கும் வெளிப்படா ஒளிக்கும் -** *எந்த இடத்தும் தலைகாட்டாமல் மறைந்து விடும்;* **மலர் நிறம் சமழ்க்கும் -** *தாமரை மலரின் நிறமும் நாணும்;* **எந்நிறம் உரைக்கேன் -** *(இவ்வாறுள்ளது என்றால்) வேறு எந்த நிறத்தை உவமையாகச் சொல் வேன்?* **வேண்டின் -** *(எப்படியாவது) உவமை கூறியேயாக வேண்டும் என்றால்;* **தன் நிறம் தானே ஒக்கும் -** *(சீதையின்) நிறம் தனக்குத் தானே ஒப்பாகும்.*

*மாந்தளிர், பொன், இரத்திரனங்கள், மின்னல், தாமரை மலர் என்பவற்றை மகளிர் மேனி நிறத்துக்கு உவமை கூறுதல் கவி மரபு. ஆனால் இவற்றினும் சீதையின் மேனி நிறம் அழகில் விஞ்சியிருக்கும் என்பது. ஏதுத் தற்குறிப்பேற்றவணி. அன்றே: ஈற்றசை, தேற்றமும் ஆம்; மற்றை: அசை, மின்னல் இயல்பாகத் தோன்றி மறைவதைச் சீதையின் மேனி நிறத்தைக் கண்டு வெட்கப்பட்டு மறைவதாகக் கூறினான். சமழ்த்தல்: நாணுதல். 65*

***4512. ' ''மங்கையர் இவளை ஒப்பார், மற்று***
***உளார் இல்லர்'' என்னும்***

***சங்கை இல் உள்ளம் தானே சான்று எனக்***
***கொண்டு , - சான்றோய்! -***
***அங்கு அவள் நிலைமை எல்லாம்***
***அளந்து அறிந்து, அருகு சார்ந்து,***
***திங்கள் வாள் முகத்தினாட்கு, செப்பு'***
***எனப் பின்னும் செப்பும்;***

***சான்றோய் -*** *நற்பண்புகள் நிறைந்தவனே!* ***இவளை ஒப்பார் -*** *சீதைக்கு நிகரான;* ***மற்று மங்கையர் உளார்இல்லர்என்னும் -*** *வேறு பெண்கள் எவரும் இல்லை என்னும்படி;* ***சங்கை இல் உள்ளம் தானே -*** *ஐயமில்லாத உனது மனத்தையே;* ***சான்று எனக் கொண்டு*** *- சாட்சி யாகக் கொண்டு;* ***அங்கு -*** *அச் சீதையிருக்கும் இடத்தில்;* ***அவள் நிலைமை எல்லாம் அளந்து அறிந்து -*** *அவளது தன்மை முழுவதையும் தெளிவாக ஆராய்ந்து அறிந்து (துணிந்த பின்பு);* ***அருகு சார்ந்து -*** *அவளுக்குப் பக்கத்தில் போய்;* ***திங்கள் வாள் முகத்தினாட்கு -*** *முழுமதி போன்ற ஒளி நிறைந்த முகத்தையுடைய அச்சீதைக்கு;* ***செப்பு -*** *(நான் கூறும் அடையாள மொழிகளைச்) சொல்வாய்;* ***என -*** *என்று;* ***பின்னும் செப்பும் -*** *மீண்டும் கூறுவான்.*

*அவள் உருவிலக்கணங்களால் உவமை நீங்கியவள் என்பதைக் காட்சியளவையால் மட்டுமல்லாமல் ஐயம் நிகழ்ந்துவிடத்து உள்மனம் எதைத் துணிகின்றதோ அதனையே உறுதியெனக் கொண்டு, கொண்டு தெளிவாய் என்றான் என்பது.*

*சான்றெனக் கொண்டு சான்றோய் - சொல்நயம். 4479 ஆம் பாடல் தொடங்கி 4512 ஆம் பாடல் முடியவுள்ள பாடல்கள்பற்றி மனத்தே தோன்றும் ஒரு கருத்தோட்டத்தைப் புலப்படுத்துவது சரியானதென்றே தோன்றுகிறது. பாதாதிகேச*

*வருணனையும் வேறு சில குறிப்புகளையும் இப் பாடல்களில் காண முடிகிறது. பாதாதி கேச வருணனை தெய்வப் பாத்திரங்களுக்கு உரியது என்ப தொருமரபு உண்டு. அவ்வகையில் இப்பாடல்களைக்கவி மரபாகமட்டும் கொண்டு ஏற்கலாமெனத் தோன்றுகிறது. 4483 ஆம்பாடலுக்கு உரிய விளக்கத்தில், 'இம் மாதிரியான உறுப்பிலக்கண வருணனை மிகையென்று கூறுமவர், சாமுத்திரிக இலக்கணத்தைக் கூறவேண்டுவது சிறந்த கவிஞரின் பொறுப்பென்பதைக் கருத்துட் கொள்க' என்று அமைதி கூறப்பட்டுள்ளது. (ஐயரவர்கள் நூலகப் பதிப்பு - கிட்கிந்தா காண்டம் - பக் 768) உறுப்பு வருணனை - அதுவும் பிராட்டி போன்ற தெய்வத் திறமுடையார் பற்றிய உறுப்பு வருணனையில் ஒருவகை நெறிமுறை வேண்டாவா என்று எழும் எண்ணத்தைத் தவிர்க்க முடியவில்லை. கண்ணகியாரின் உறுப்பு வருணனையில் கோவலன் ஈடுபடுவதாகச் சிலப்பதிகாரம் பேசும். ஆனால், அந்த வருணனை அந்தப்புர வருணனையாய் - வரம்பு கடவாமல் இருப்பது. இளங்கோவடிகள் காலத்துக்குப் பின் செல்வாக்குப் பெற்ற கவி மரபின் கொடுமைக்கு இந்தப் பகுதியை எடுத்துக்காட்டாகக் கொள்ள வேண்டும் போலும். அற்புதக் கற்பனை வளம் செறிந்த வருணனைதான்; என்றாலும், பிறன் ஓர் ஆடவனிடம் பிரித்துரைக்கத் தக்கதோ என்று கலைஞர்களும் ஆய்வாளர்களும் எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளது. பிராட்டியின் பாத்திரப் படைப்பில் உள்ள ஓர் உணர்வு இங்கே நினையத்தக்கது. மனத்தில் எவ்விதக் களங்கமும் இல்லா நிலையில் அனுமன் பிராட்டியை அசோகவனத்திலிருந்து தன் தோளில் சுமந்து செல்ல முன் வந்த போது,*

***வேறும் உண்டு உரை; கேள் அது; மெய்ம்மையோய்! ஏறு சேவகன் மேனி அல்லால், இடை ஆறும் ஐம்பொறி நின்னையும், ''ஆண்'' எனக் கூறும்; இவ் உருத் தீண்டுதல் கூடுமோ?*** *(5363)*

*என்றெழுந்த பிராட்டியின் சொல்லை நினைந்து பார்க்க வேண்டும். இத்துணை மென்மை நாகரிகப் பிராட்டியின் உறுப்பு வருணனை போகும் பாங்கினை எண்ணின், கவி மரபின் பெருங் கொடுமைத் திறம் வேதனை தருகிறது.*

*மற்றொரு குறிப்பு: இப்பாடல்களை விடுத்துப் படித்தாலும் செய்தித் தொடர்பு விடவில்லை என்பதையும் கருதிப் பார்க்கலாம். வான்மீகமும் இந்த வருணனை தரவில்லை. உருப் பொலிவை விட உள்ளப் பண்பின் பொலிவே போற்றத்தக்கது என்ற விருப்பம் கொண்டு கணித்தால் இனிவரும் பாடல்களே நய நாகரிக உணர்வின் இமயமாவதை உணர முடிகிறது. சான்றோர் சிந்தனைக்கு உரிய இடம் இது.*
*66*

*இராமன் புகன்ற அடையாளச் செய்திகள்*

*கலிவிருத்தம்*

***4513. 'முன்னை நாள், முனியொடு,***
***முதிய நீர் மிதிலைவாய்,***
***சென்னி நீள் மாலையான்***
***வேள்வி காணிய செல***
***அன்னம் ஆடும் துறைக்கு***
***அருகு நின்றாளை, அக்***
***கன்னி மாடத்திடைக்***
***கண்டதும், கழறுவாய்.***

***முன்னை நாள் -*** *முன்னாளில்;* ***முனியொடு -*** *விசுவாமித்திர முனிவருடன்;* ***முதிய நீள் மிதிலை வாய் -*** *நீர்வளம் உள்ள பழமையான மிதிலா நகரத்தில்;* ***சென்னி நீள் மாலையான் -*** *தலையில் நீண்ட மாலை புனைந்தவனான சனக மன்னனது;* ***வேள்வி காணிய -*** *யாகத்தைக் காண்பதற்காக;* ***செல -*** *(நான்) சென்றபோது;* ***அன்னம் ஆடும் துறைக்கு அருகு -*** *அன்னப் பறவைகள் (தத்தம் பேடைகளுடன்) விளையாடும் நீர்த்துறைக்கு அருகிலுள்ள;* ***அக் கன்னி மாடத்திடை -*** *அந்தக் கன்னிகா மாடத்தின் உப்பரிகையில்;* ***நின்றாளை -*** *நின்று கொண்டிருந்த சீதையை;* ***கண்டதும் -*** *பார்த்ததையும்;* ***சுழறுவாய் -*** *(நீ) அவளிடம் கூறுவாய்.*

*விசுவாமித்திர முனிவன் இராமஇலக்குவரைத் துணையாக வைத்துக் கொண்டு தனது வேள்வியை முடித்த பின்பு மிதிலையில் சனக மன்னன் செய்யும் யாகத்தைக் காண்பதற்காக அவர்களுடன் சென்றான்; மிதிலையில் புகுந்த பின்பு சனக மன்னனது அரண்மனையைச் சூழ்ந்துள்ள அகழியின் அருகேயுள்ள கன்னி மாடத்தின்மேல் சீதையிருக்க அவளைத் தான் கண்டதை இராமன் அடையாளமாக எடுத்துக் கூறுகின்றான்என்பது.* *67*

*4514. '  ''**வரை செய் தாள் வில்**
**இறுத்தவன், அம் மா முனியொடும்**
**விரசினான் அல்லனேல், விடுவல்**
**யான் உயிர்'' என,**
**கரை செயா வேலையின்**
**பெரிய கற்பினள் தெரிந்து**
**உரைசெய்தாள்; அஃது எலாம்**
**உணர, நீ உரைசெய்வாய்.***

***கரை செயா வேலையின் -** கரை அமைக்க முடியாத கடல் போன்ற; **பெரிய கற்பினள் -** சிறந்த கற்பினையுடைய சீதை; **வரை செய் வில்தாள் இறுத்தவன் -** மலையைப் போன்ற (சிவனுடைய) வில்லை ஒடித்தவன்; **அம் மாமுனியொடும் -** அத் தெய்வத் தன்மை பொருந்திய விசுவாமித்திர முனிவனுடனே; **விரசினான் அல்லனேல் -** வந்தவனாக இல்லாமற் போனால்; **யான் உயிரை விடுதல் என -** நான் எனது உயிரை விட்டுவிடுவேன் என்று; **தெரிந்து உரை செய்தாள் -** ஆராய்ந்து கூறினாள்; **அஃது எலாம் -** அந்தச் செய்திகள் அனைத்தும்; **உணர நீ உரை செய்வாய் -** (அவள்) தெளிவாக அறியுமாறு நீ சொல்வாய்.*

*இராமன் வில்லை முறித்த செய்தியைத் தோழி யொருத்தி சொல்லக் கேட்ட சீதை 'விசுவாமித்திர முனிவனுடன் வந்தவன் இந்த வில்லை இறுத்தவனாக இல்லாவிட்டால் நான் உயிரை மாய்த்துக் கொள்வேன் எனக் கருதியிருந்ததைப் பின்பு*

*இராமனிடம் சொல்லியிருக்கக் கூடுமாதலால் இங்கு அடையாளமாக அது குறிக்கப் பெற்றது.* *68*

*4515. '**சூழி மால் யானையின் துணை**
**மருப்பு இணை எனக்**
**கேழ் இலா வன முலைக்**
**கிரி சுமந்து இடைவது ஓர்**
**வாழி வான் மின் இளங்**
**கொடியின் வந்தாளை, அன்று,**
**ஆழியான் அரசவைக்**
**கண்டதும் அறைகுவாய்.***

***சூழி மால் யானையின் -** முகபடா மணிந்த மதம் பிடித்த ஆண் யானையினது; **துணை மருப்பு இணையென -** ஒன்றோடு ஒன்று ஒத்து விளங்கும் இரண்டு தந்தங்கள் என்று கூறும்படி; **கேழ் இலா -** (அவற்றிற்கு) ஒப்பாகாத; **வனம் முலைக்கிரி -** அழகிய முலைகளாகிய மலைகளை; **சுமந்து -** தாங்கி; **இடைவது -** (பாரத்தைப் பொறுக்க முடியாமல்) ஒடிவதாகிய; **ஓர் வானமின் இளங்கொடியின் -** ஒப்பற்ற வானத்திலுள்ள மின்னலின் இளங்கொடி போல; **வந்தாளை -** வந்த வளாகிய சீதையை; **அன்று -** அக் காலத்தில்; **ஆழியான் அரசவைக் கண்டதும் -** ஆணைச் சக்கரமுடைய சனக மன்னனது சபையில் பார்த்ததையும்; **அறைகுவாய் -** சொல்வாய்.*

*முலைக் கிரியைச் சுமக்கும் மின்னிளங் கொடி சீதைக்கு, இல்பொருளுவமை. சூழி: யானையின் முகத்திடும் அணி. வாழி - அசை. 69*

***4516. 'முன்பு நான் அறிகிலா***
***முளி நெடுங் கானிலே,***
***''என் பினே போதுவான்***
***நினைதியோ, ஏழை நீ?***
***இன்பம் ஆய், ஆர் உயிர்க்கு***
***இனியை ஆயினை, இனித்***
***துன்பம் ஆய் முடிதியோ?''***
***என்றதும் சொல்லுவாய்.***

***ஏழை-*** *மடமைப் பண்பு மிக்கவளே!* ***நீ -*** *நீ;* ***முன்பு நான் அறிகிலா-*** *இதுவரை நான் கண்டறியாத;* ***முளிநெடுங் கானிலே -*** *தீய்ந்து போன பெரிய காட்டிலே;* ***என் பினே போதுவான் -*** *என்னைப் பின் தொடர்ந்து வருமாறு;* ***நினைதியோ -*** *கருதுகின்றாயோ?* ***இன்பம் ஆய் -*** *(இதுவரை நீ எனக்கு) மகிழ்ச்சியைத் தந்தவளாயிருந்து;* ***ஆர் உயிர்க்கு -*** *(எனது) பெறுதற்கு அருமையான உயிருக்கும்;* ***இனியை ஆயினை -***

*இனியவளாக இருந்தாய்;* ***இனி -*** *இனிமேல்;* ***துன்பம் ஆய்முடிதியோ -*** *துன்பத்தைத் தருபவளாக ஆகிவிடுவாயோ?* ***என்றதும் -*** *என்று நான் சீதையிடம் கூறியதையும்;* ***சொல்லுவாய் -*** *(நீ அவளிடம்) சொல்வாய்.*

*கைகேயி விருப்பத்தின்படி இராமன் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழ உடன்பட்டுச் சீதையிடம் சென்று 'நான் பதினான்கு வருடம் வனவாசம் செய்து மீண்டு வருவேன்; நீ இங்கே வருந்தாமல் இரு' என்றான்; அதுகேட்ட சீதை கணவன் காட்டிற்கு செல்லுகின்றான் என்பது குறித்துச் சிறிதும் வருந்தாமல் 'நீ இங்கே வருந்தாமல் இரு' என்று கூறிய சொல்லுக்கு மிக வருந்தி உடன்வருவேனென்று வற்புறுத்திக் கூற, அதற்கு இராமன் 'எல்லையற்ற இடர் தருவாய்' என்றான் என்பது (1832) இங்கு நினைவு கூரத்தக்கது. 70*

***4517. ' ''ஆன பேர் அரசு இழந்து,***
***அடவி சேர்வாய்; உனக்கு***
***யான் அலாதன எலாம்***
***இனியவோ? இனி'' எனா,***
***மீன் உலாம் நெடு மலர்க்***
***கண்கள் நீர் விழ, விழுந்து,***
***ஊன் இலா உயிரின்***
***வெந்து, அயர்வதும், உரைசெய்வாய்.***

***ஆனபேர் அரசு இழந்து -*** *உனக்குரிய பெரிய அரசை விட்டு;* ***அடவி சேர்வாய் -*** *காட்டிற்குச் செல்பவனே!* ***இனி -*** *இனிமேல்;* ***யான் அலாதன எலாம் -*** *என்னைத் தவிர மற்றப் பொருள்கள் யாவும்;* ***உனக்கு இனியவோ -*** *உனக்கு இன்பம் தருவனவோ? (என்னொருத்தியால் மட்டும் உனக்குத் துன்பமோ);* ***எனா -*** *என்று (என்னை நோக்கிக்)*

*கடுமையாகக் கூறி (சீதை);* **மீன் உலாம் -** *மீன்கள்போலப் பிறழ் வனவும்;* **நெடுமலர்க் கண்கள் -** *பெரிய தாமரைமலரை ஒப்பனவுமாகிய கண்களில்;* **நீர் விழ விழுந்து -** *நீர் பெருகக் கண்ணீர் சிந்தி;* **ஊன் இலா உயிரின் -** *உடலில் நில்லாது தவிக்கின்ற உயிர் போல;* **வெந்து அயர்வதும் -** *மிகவும் தளர்ந்து சோர்ந்ததையும்;* **உரை செய்வாய் -** *(நீ அவளிடம்) சொல்வாய்.*

*இராமன் வனவாசஞ்செய்யப் புறப்படுகின்ற நேரத்தில் சீதையிடம், 'நீ என்னோடு வருவாயானால் என் துன்பத்திற்குக் காரணமாவாய்' என்று கூற, அது கேட்டுச் சீதை மிகவும் வருந்தி 'என் துறந்தபின் இன்பம் கொலாம் என்றாள்' (1833) எனக் கூறியதைக் குறிக்கிறான். அயர்வது: காலவழுவமைதி.* *71*

***4518. 'மல்லல் மா நகர் துறந்து***
***ஏகும் நாள், மதி தொடும்***
***கல்லின் மா மதிள்***
***மணிக் கடை கடந்திடுதல்முன்,***
***''எல்லை தீர்வு அரிய வெங்***
***கானம் யாதோ?'' எனச்***
***சொல்லினள்; அஃது எலாம்***
***உணர, நீ சொல்லுவாய்.'***

**மல்லர் மாநகர் -** *வளம் மிகுந்த அயோத்தி நகரத்தை;* **துறந்து ஏகும்நாள் -** *நீங்கி (காட்டுக்கு)ச் சென்ற காலத்தில்;* **மதி தொடும் -** *சந்திரனைத் தீண்டுகின்ற;* **கல்லின் மாமதிள் -** *கற்களாலாகிய பெரிய மதிலின்;* **மணிக்கடை கடந்திடுதல் முன் -** *அழகிய வாயிலைக் கடப்பதற்கு முன்பே;* **எல்லை தீர்வு அரிய வெங்கானம் -** *எல்லையில்லாத கொடிய கானம்;* **யாதோ என -** *எதுவோ என்று;* **சொல்லினாள் -** *கேட்டாள்;* **அஃது எலாம் நீ உணரச் சொல்லுவாய் -** *அவையனைத்தையும்அவள் மனம் கொள்ளுமாறு உரைப்பாய்.*

*'ஆண்ட நகராரையொடு வாயிலகலாமுன் யாண்டையது கானென இசைத்ததும் இசைப்பாய் (5258) என்ற பின்வரும் வரிகளை நினைக. புகார் நகரத்து எல்லையிலேயே 'மதுரை மூதூர் யாது' (சிலப்.நாடுகாண்.41) என்று கேட்ட கண்ணகி வினாவின் எதிரொலியே 'யாண்டையது கான்' என்ற சீதையின் வினா. சீதையின் கேள்வி, கணவன் மனையையன்றி வேறொன்றையும் அறியாத அச்சீதையின் தன்மையையும், மெல்லியல்பையும், பேதைமையையும் வெளிப்படுத்தும்.* *72*

மோதிரம் அளித்து விடைகொடுத்தல்

***4519. இனைய ஆறு உரைசெயா,***
***'இனிதின் ஏகுதி' எனா,***
***வனையம் மா மணி நல்***
***மோதிரம் அளித்து, 'அறிஞ! நின்***
***வினை எலாம் முடிக!' எனா,***
***விடை கொடுத்து உதவலும்,***

**புனையும் வார் கழலினான்**
**அருளொடும், போயினான்.**

***இனைய ஆறு உரைசெயா -*** *(இராமன்) அனுமனிடம் இவ்விதமாக அடையாளங்களைச் சொல்லி;* ***இனிதின் ஏகுதி எனா -*** *இனிதாகச் செல்வாய் என்று கூறி;* ***மா மணி வனையும் -*** *சிறந்த இரத்தினங்கள் பதித்துச் செய்யப்பட்ட;* ***நல் மோதிரம் அளித்து -*** *சிறந்த மோதிரத்தைக் கொடுத்து;* ***அறிஞ -*** *அறிவு மிக்கவனே!* ***நின் வினை எலாம் -*** *நீ மேற்கொண்ட செயல் முழுவதும்;* ***முடிக எனா -*** *(இடை யூறில்லாமல்) இனிது முடிவதாகுக என்று;* ***விடை கொடுத்து உதவலும் -*** *விடைதந்து அனுப்பிய அளவில்;* ***புனையும் வார் கழலினான் -*** *கட்டப்பட்ட நீண்ட வீரக் கழலைப் பூண்டவனான அனுமன்;* ***அருளொடும் போயினான் -*** *இராமனின் கருணையை முன்னிட்டுக் கொண்டு சென்றான்.*

*அடியார்கள் கடவுளின் அருளை முன்னிட்டுக் கொண்டு செய்தொழில் தொடங்குதல் இயல்பாதலின் 'வார்கழலினான் அருளொடும் போயினான்' என்று கருத்தில் கழலினான் என்பது இராமனைக் குறித்ததாகவும் பொருள் கொள்ளலாம். அசோக வனத்துச் சோகத்தாளாகிய நங்கைக்கு நன்னம்பிக்கை தருவதற்கு உரியதாகலின் 'நல்மோதிரம்' என்று கூறப்பெற்றது.* *73*

***4520. அங்கதக் குரிசிலோடு, அடு***
**சினத்து உழவர் ஆம்**
**வெங் கதத் தலைவரும்,**
**விரி கடற் படையொடும்,**
**பொங்கு வில் - தலைவரைத் தொழுது,**
**முன் போயினார் -**
**செங்கதிர்ச் செல்வனைப்**
**பணிவுறும் சென்னியார்.**

***அங்கதக் குரிசிலோடு -*** *அங்கதனாகிய நம்பியினுடனே;* ***அடு சினத்து உழவர் ஆம் -*** *(பகைவரைக்) கொல்லுகின்ற கோபத்தையுடைய வீரரான;* ***வெங் கதத் தலைவரும் -*** *மிக்க வலிமையுள்ள (ஜாம்பவான் முதலான) தளபதிகளும்;* ***செங்கதிர்ச் செல்வனை -*** *சிவந்த கதிர்களை யுடைய சூரியன் மகனான சுக்கிரீவனை;* ***பணிவரும் சென்னியார் -*** *வணங்கும் தலையினராய்;* ***பொங்கு வில் தலைவரைத் தொழுது -*** *சிறந்த வில்வீரர்களான இராமஇலக்குவரையும் வணங்கி;* ***விரிகடற் படையொடும் -*** *பரந்த கடல்போன்ற வானர சேனையுடனே;* ***முன் போயினார் -*** *(தென்திசை நோக்கி) முற்பட்டுச் சென்றார்கள்.*

*அங்கதன் முதலியோர் சுக்கிரீவனையும், இராம இலக்குவரையும் வணங்கித் தமக்கு நியமித்துள்ள தென்திசை நோக்கிப் புறப்பட்டார்களென்பது. உழவர்: வீரர்: பகைவரின் உடம்பாகிய வயல்களில் தம் படைகளாகிய கலப்பைகளைக் கொண்டு உழுது வெற்றியாகிய பயிரை விளைப்பவராதலால் இது வீரரைக் குறிக்கும். - வில்லேருழவர் வாளேருழவர், சொல்லேருழவர் என்றாற்போல.* *74*

## *பிலம் புக்கு நீங்கு படலம்*

*சுக்கிரீவனது கட்டளைப்படி தென்திசை நோக்கிச் சென்ற வானரவீரர்கள் பல இடங்களிலும் சீதையைத் தேடிக்கொண்டு சென்றார்கள்; வழியில் உள்ளதொரு பாலைவனத்திற் புகுந்தார்கள்; அந்த நிலத்தின் வெப்பத்தைத் தாங்கும் ஆற்றல் இல்லாதவராய் அங்குள்ள பிலத்திலே புகுந்து அதன் இருட்செறிவால் வழிதெரியாது திகைத்து, அனுமனின் வாலைப் பற்றிச் சென்று, பின்பு அங்குள்ள நகரத்தில் புகுந்து அங்கு வசித்துவந்த ஒரு தவப் பெண்ணின் உதவியால் யாவரும் அப்பிலத்திலிருந்து வெளிவந்த செய்தியைக் கூறும் பகுதி இது.*

*வானர வீரர் நான்கு திசைகளுக்கும் செல்லுகிறார்கள்; சென்றவர், விந்தமலைப் பக்கங்களில் தேடுகிறார்கள்; நருமதைக் கரையை வானரர் அடைகிறார்கள்; பின்பு ஏமகூட மலையைச் சார்கின்றார்கள்; அம் மலையை இராவணன் மலையென ஐயுறுகின்றார்கள்; ஆனால், அங்குச் சீதையைக் காணாமல் அந்த மலையிலிருந்து இறங்குகிறார்கள். அங்கதன், அவ் வீரர்களைப் பார்த்து, 'பல பகுதியாகப் பிரிந்து தேடி, மயேந்திர மலையில் வந்து சேருங்கள்' என்று கூறுகிறான். பின்னர், மாருதி முதலியோர் ஒரு சுரத்தை அடைகின்றார்கள். அச்சுரமோ வெம்மை மிகுந்தது. அதனால் வருந்திய வானரர் பிலத்திற்குள் புகுகின்றார்கள்; அங்கே, அவர்கள் இருளில் வருந்துகின்றார்கள்; அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க அனுமன் அவர்களை அழகிய நகருக்குக் கொண்டு செல்லுகிறான்; அங்கே மனிதர்களைக் காணாது வாரனரர் திகைக்கின்றார்கள்; அப்போது சாம்பன் கலங்கி வருந்துகிறான்; அச் சாம்பனை மாருதி தேற்றுகின்றான். அச் சமயம் அந் நகரின் நடுவில் சுயம்பிரபையைக் காணுகின்றனர்; அச் சுயம்பிரபையைச் சீதையோ என அவர்கள் ஐயுறுகிறார்கள். அவள் அவர்களை வினாவ அதற்கு அவர்கள் விடையளிக்கின்றார்கள். இராமனைப் பற்றி அச் சுயம்பிரபை வினாவ அனுமன் விடையளிக்கின்றான். பின்னர் அவள் அவர்களுக்கு விருந்தளித்துத் தன் வரலாறு கூறுகிறாள்; அனுமனை, இருளிலிருந்து மீளுவதற்கு ஆவன செய்யுமாறு வானரர் வேண்டுகிறார்கள். அனுமன் பேருருக் கொண்டு பிலத்தைப் பிளந்து வானுற ஓங்கி நிற்கிறான்; அப்பிலத்தின் மேற்பகுதியை மேலை கடலில் எறிகிறான்; பின்பு, சுயம்பிரபை பொன்னுலகம் செல்லுகிறாள்; அவள் சென்றபின், வானரர் பொய்கைக் கரை அடைகின்றார்கள்.*

*வானரவீரர் நான்கு திசையிலும் செல்லுதல்*

*கலிவிருத்தம்*

***4521. போயினார்; போன பின்,***
***புற நெடுந் திசைகள்தோறு,***
***ஏயினான், இரவி காதலனும்;***
***ஏயின பொருட்கு***
***ஆயினார், அவரும்; அங்கு***
***அன்ன நாள் அவதியில்***
***தாயினார் உலகினை, தகை***
***நெடுந் தானையார்.***

***போயினார் -*** *(அங்கதன் முதலிய வானர வீரர்கள் சுக்கிரீவனுடைய கட்டளைப்படி தென் திசை நோக்கிச்) சென்றார்கள்;* ***போயபின் -*** *(அவர்கள் அவ்வாறு) சென்ற பின்பு;* ***இரவி காதலனும் -*** *சூரியன் மகனான சுக்கிரீவனும்;* ***புற நெடுந் திசைகள் தோறும் -*** *(தென்திசைக்குப்) புறம்பான பெரிய பிற திசைகளில் எல்லாம்;* ***ஏயினான் -*** *(விநதன் முதலிய பல வீரர்களை) விடை கொடுத்தனுப்பினான்;* ***ஏயின பொருட்கு -*** *(சுக்கிரீவன்) ஏவின தொழிலாகிய சீதையைத் தேடுவதற்கு;* ***ஆயினார் அவரும் -*** *இசைந்தவரான அந்த வானர வீரரும்;* ***உலகினைத் தகைநெடுந் தானையார்*** *- உலகத்தையே (தமது வன்மையால்) எதிர்த்துத் தடுக்கவல்ல பெருஞ்சேனையை உடையவர்களாய்;* ***அன்ன நாள் அவதியில் -*** *(தம் அரசனான சுக்கிரீவன் குறித்த) அந்த ஒரு மாதத் தவணைக்குள் (தேடித் தருவதற்காக);* ***தாயினார் -*** *விரைந்து சென்றார்கள்.*

*மேற்கு, வடக்கு, கிழக்கு என்ற திசைகளில் இடபன், சதவலி, விநதன் என்ற வீரர்களை அனுப்பினான் என்பது. மூன்றாமடி : முற்றுமோனை. ஆங்கு: அசை.*

*உலகினைத் தகை நெடுந்தானையார்: உலகம் முழுவதும் எதிர்த்துவரினும் தடுத்துப் போர் செய்யவல்ல பேராற்றல் வாய்ந்த வானரவீரர்என்பது. 1*

***4522. குன்று இசைத்தன எனக்***
***குவவு தோள் வலியினார்,***
***மின் திசைத்திடும் இடைக்***
***கொடியை நாடினர் விராய்,***
***வன் திசைப் படரும் ஆறு***
***ஒழிய, வண் தமிழுடைத்***
***தென் திசைச் சென்றுளார்***
***திறன் எடுத்து உரைசெய்வாம்.***

***குன்று இசைத்தன என -*** *மலைகளே பொருந்துமாறு வைக்கப் பட்டுள்ளன வென்னும்படி;* ***குவவுதோள் வலியினார் -*** *அமைந்த திரண்ட தோள்வலிமையுடைய வானரவீரர்கள்;* ***மின் திசைத்திடும் -*** *மின்னலும் திகைக்கும் படியான;* ***இடைக் கொடியை விராய் நாடினர் -*** *இடையையுடைய பூங்கொடிபோன்ற சீதையைத் தேடினவர்களாய்;* ***வன்திசைப்படரும் ஆறு -*** *(கிழக்கு, மேற்கு, வடக்கு என்ற மூன்று) திசைகளிலே செல்லுகின்ற வகை;* ***ஒழிய -*** *தவிர்த்து;* ***வண்தமிழுடைத் தென்திசை -*** *வளமான தமிழ்மொழி வழங்கும் தெற்குத்திசை;* ***சென்றுளார் -***

*சென்றவராகிய வானர வீரர்களின்;* ***திறன் எடுத்து உரை செய்வாம்-*** *செயல்திறனை எடுத்துச் சொல்லுவோம்.*

*மற்றைத் திசைகளிற் சென்ற வானரர் செய்தி கதைப் போக்கிற்கு வேண்டுவதில்லையாதலால் அதைத் தவிர்த்து, இக் கதைக்கு மிக இன்றியமையாததாகிய தென்திசைக்கண் சென்ற வானர வீரர் செயலைக் கூறுகின்றார். என்றுமுள தென்தமிழாதலானும, உலகிலே இலக்கண வரம்பிலா மொழிகள் போலல்லாமல் இலக்கண வளமுடைமையானும், திராவிட மொழிகளான தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு முதலான மொழிகளுக்குத் தாயெனக் கருதப்படுவதாலும், கொல்வளம், பொருள்வளம், இனிமை எளிமை முதலியன*

*உண்மையானும் சமய குரவர்களும் ஆழ்வார்களும் இறைவனைப் பாடிப்பரவியது தமிழ் மொழியே யாதலினாலும் 'வண்டமிழ்' என்றார்.*

*சீதையைக் காண்டற்கியையாததாதலின் தென்திசை யொழிந்த மூன்றையும் 'வன்திசை' யென்றும், இனிய தமிழ் வழங்கும் திசையாதலின் 'தென்திசை' யென்றும் கூறினார்.*

*ஆசிரியர்தம் நாட்டுப்பற்றும், தமிழ்ப்பற்றும் இப்பாடலிற் பொங்கித் ததும்புவதைக்காணலாம். 2*

*விந்தமலைப் பக்கங்களில் தேடுதல்*

***4523. சிந்துராகத்தொடும் திரள் மணிச்***
***சுடர் செறிந்து,***
***அந்தி வானத்தின் நின்று***
***அவிர்தலான், அரவினோடு***
***இந்தி யாறு எய்தலான்,***
***இறைவன் மா மௌலிபோல்***
***விந்த நாகத்தின் மாடு***
***எய்தினார், வெய்தினால்.***

***சிந்துராகத்தோடும் -** சிந்துரமென்னும் செம் பொடியோடும்; **திரள் மணிச்சுடர் செறிந்து -** திரண்ட மாணிக்கங்களின் ஒளி நெருங்கி; **அந்தி வானத்தின் நின்று அவிர்தலான் -** அந்தி வானத்தில் காணப்படும் செவ்வானம்போல விளங்குவதாலும்; **அரவினோடு இந்து யாறு எய்தலான் -** பாம்புகளும், சந்திரனும் வான கங்கையும் பொருந்துவதாலும்; **இறைவன் மா மௌலி போல் -** சிவபெருமானின் பெரிய சடைமுடி போன்ற; **விந்தநாகத்தின் மாடு -** விந்திய மலையின் சாரலை; **வெய்தினால் எய்தினார் -** விரைவாகச் சென்ற அடைந்தார்கள்.*

*சிவபெருமானுக்கும் விந்திய மலைக்கும் ஒப்பு: செம்மொழிச் சிலேடை, சிவபிரான் செஞ்சடை முடியுடையோனானது, தாருக வன முனிவர்களால் ஏவப்பட்டுத் தன்னைக் கொல்ல வந்த நாகங்களை வலியடக்கி அணியாகப் பூண்டது. தக்கனது சாபத்தால் கலை குறைந்த சந்திரனைச் சடைக்கண் தரித்தது. பகீரதனது வேண்டுகோளினால் கங்கையை முடிமீது கொண்டது என்ற இவை சிவபிரான் செய்கைகளாம்.*

*சிந்துரப் பொடியாலும், மாணிக்கங்களாலும் சிவந்திருப்பது, நாகங்களும் நீரருவிகளும் நிறைந்திருப்பது, மலையுச்சியில் சந்திரன் ஒளிர்வது என்ற இவை விந்திய மலையிற் காண்பவை.*

*இந்தியாறு : குற்றியலிகரம். (இந்து + யாறு)*

*ஒப்பு : 'பாணி பிறை கொன்ற பணிசூடி மானேந்தி வேணி யரனைப் பொருவும் வேங்கடம்' (திருவேங்கட மாலை - 5)*

*சிந்துராகம் - சிந்தூர ராகம் என்னும் வடமொழி விகாரம். ராகம் - நிறம். 3*

***4524.* அந் நெடுங் குன்றமொடு,**
**அவிர் மணிச் சிகரமும்,**
**பொன் நெடுங் கொடிமுடிப்**
**புரைகளும், புடைகளும்,**
**நல் நெடுந் தாழ்வரை நாடினார், -**
**நவை இலார் -**
**பல் நெடுங் காலம் ஆம்**
**என்ன, ஓர் பகலிடை.**

**நவை இலார் -** *குற்றமற்ற அந்த வானர வீரர்கள்;* **அந்நெடுங் குன்றமொடு -** *உயர்ந்துள்ள அந்த விந்திய மலையினிடத்தில்;* **அவிர் மணிச் சிகரமும் -** *ஒளிவீசும் இரத்தினங்களையுடைய சிகரங்களையும்;* **பொன் நெடுங்கொடு முடிப் புரைகளும் -** *அழகான நீண்ட அந்தச் சிகரங்களிலுள்ள குகைகளையும்;* **புடைகளும் -** *பக்கங்களையும்;* **நல் நெடுந் தாழ்வரை -** *அழகிய நீண்ட அடிவாரங்களையும்;* **ஓர் பகலிடை -** *ஒரு பகற்பொழுதுக்குள்ளாக;* **பல் நெடுங் காலம் ஆம் என்ன -** *மிகுதியான பல நாள்கள் தேடிக் காண்பது போன்று;* **நாடினார் -** *தேடினார்கள்.*

*வானரர்கள் மிகப் பலராயிருந்ததாலும், செய் தொழிலை மிக்க ஊக்கத்தோடு செய்ததாலும் பலகாலம் செய்யக்கூடிய பணிகளை ஒரு பகற்பொழுதிலேயே செய்துமுடித்தனர் என்பது.*

*குன்றமொடு : வேற்றுமை மயக்கம்.*

*புரை : துளை - இங்கே குகையைக் குறித்தது. 4*

***4525.* மல்லல் மா ஞாலம் ஓர்**
**மறு உறாவகையின், அச்**
**சில் அல் ஓதியை**
**இருந்த உறைவிடம் தேடுவார்,**
**புல்லினார் உலகினை, பொது**
**இலா வகையினால்,**
**எல்லை மா கடல்களே**
**ஆகுமாறு, எய்தினார்.**

**எல்லை மா கடல்களே -** *(பூமியைச் சுற்றிலும்) பெரிய எல்லை யாகவுள்ள கடல்களே;* **ஆகுமாறு எய்தினார் -** *தமக்கு ஒப்பாகும் என்று சொல்லுமாறு சென்ற அந்த வானரவீரர்கள்;* **மல்லல் மா ஞாலம் -** *வளமை மிக்க பெரிய பூமியிலுள்ள உயிர்களுக்கு;* **ஓர் மறு உறா வகையின் -** *எவ்விதத் துன்பமும் உண்டாகாத வகையில்;* **அச்சில் அல் ஓதிஜ -** *அந்தப் பொன்தகட்டையணிந்த இருண்ட கூந்தலையுடைய சீதையை;* **இருந்த உறைவிடம் -** *(அவள்) தங்கியிருந்த இடத்தை;* **தேடுவார் -** *தேடுபவர்களாய்;* **உலகினை -** *(அவ்விந்திய மலையின்) பூமி முழு வதையும்;* **பொது இலா வகையினால் -** *தம்மையல்லாமல் வேறெவர்க்கும் எவ்விதத் தொடர்புமில்லாதபடி;* **எய்தினார் -** *சென்று அடைந்தார்கள்.*

*வானரர்கள் விந்தியமலையில் எந்த இடமும் விட்டுப்போகாதவாறு தாமே பரவிநின்று முழுவதும் சீதையைத் தேடினார்களென்பது. அம்சில் ஓதி - அஞ்சில் ஓதி என விகாரமாகலாம். சில் : மகளிர் தலையிலணியும் தகட்டணி. சில்அல் ஓதி : அன்மொழித் தொகைப் பன்மொழித்தொடர். உலகு : பரந்த பூமியின் ஒரு பகுதி. ஓதியை என்றதில் பொருந்திய இரண்டாம் வேற்றுமை உருபு பிரித்துக் காட்டப்பட்டது. இருந்த உறைவிடம் என்பது இருந்துறைவிடம் எனச் செய்யுட் சந்தம் நோக்கி அகரம் தொகுத்து இயையும். 5*

***4526. விண்டு போய் இழிவர்; மேல்***
***நிமிர்வர்; விண் படர்வர்; வேர்***
***உண்ட மா மரனின், அம்***
***மலையின்வாய், உறையும் நீர்***
***மண்டு பார்அதனின், வாழ்***
***உயிர்கள் அம் மதியினோர்***
***கண்டிலாதன, அயன்***
***கண்டிலாதனகொலம்.***

***அம்மதியினோர் -*** *நல்லறிவுடைய அந்த வானரர்கள்;* ***விண்டு போய -*** *(தனித்தனியே) பிரிந்து சென்று;* ***இழிவர் -*** *(சிலர்) இறங்கிச் செல்வர்;* ***மேல் நிமிர்வர் -*** *(சிலர்) மேலேறிச் செல்வர்;* ***விண் படர்வர் -*** *(சிலர்) வானத்தில் தாவிச் செல்வர்;* ***வேர் உண்ட மா மரனின் -*** *வேர்களால் நீரை உறிஞ்சும் மரங்களினிடத்தும்;* ***அம்மலையன் வாய் -*** *அந்த மலையினிடத்தும்;* ***உறையும் நீர் மண்டு -*** *தங்கிய நீர் நிரம்பப் பெற்ற;* ***பார் அதனின் -*** *பல இடங்களிடத்தும்;* ***வாழ் உயிர்கள் -*** *வாழுகின்ற உயிர்களில்;* ***கண்டிலாதன -*** *(அவ் வானர வீரர்களால்) தேடிக் காணப்படாதன இருக்குமானால் (அவை);* ***அயன் கண்டிலாதன ஆம் -*** *பிரமனால் படைக்கப் படாதவையேயாகும்.*

*மரஞ் செறிந்த இடங்களும் வெற்றிடமும் புனல் நிரம்பிய இடமுமாய் மூன்று பகுப்பாயுள்ள அந்த விந்தியமலை முழுவதிலும் பிரமனது படைப்பிற்கு உட்பட்ட எல்லாவுயிர்களையும் வானரர்கள் தேடிப் பார்த்தார்களென்பது.*

*பிரமன் படைக்காத பொருள்கள் இல்லை; அதுபோன்று இந்த வானர வீரர்கள் காணாத உயிர்களோ பொருள்களோ இல்லை. நீர் மண்டு பார்: ஓடை, சுனை முதலியன.*

*வேறு உரை: விண்டு போய் இழிவ - நிலத்தைத் துளைத்துக் கொண்டு பூமிக்குள் செல்லும் (பாம்பு முதலிய) ஊர்வனவும்; மேல் நிமிர்வ - நிலத்தில் வாழும் விலங்கினங்களும்; விண் படர்வ - ஆகாயத்தில் பறக்கும் பறவைகளுமாய் அம் மலையின் கீழும் மேலும் புடையிலும் உறையும் உயிர்களில் இவர்கள் கண்ணில் படாதன ஒன்றுமேயில்லை எனவும் உரை கூறலாம். 6*

*நருமதைக் கரையில் வானரர்*

*கலிவிருத்தம் (வேறுபட்ட சந்தம்)*

***4527. ஏகினார், யோசனை ஏழொடு ஏழு; பார்***
***சேகு அறத் தென் திசைக் கடிது செல்கின்றார்,***
***மேக மாலையினொடும் விரவி, மேதியின்***
***நாகு சேர் நருமதி யாறு நண்ணினார்.***

***பார் சேகு அற*** *- பூமியின் திண்மை சிதையுமாறு;* ***தெண்திசைக் கடிது செல்கின்றார்*** *- தென்திசையிலே (சீதையைத் தேட) விரைந்து செல்லுகின்ற வானர வீரர்கள்;* ***ஏழொடு ஏழு யோசனை ஏகினார்*** *- பதினான்கு யோசனையளவு சென்று;* ***மேதியின் நாகு சேர்*** *- எருமை இளங் கன்றுகள் சேர்ந்துள்ள;* ***மேக மாலையினொடும் விரவி*** *- கரிய மேகங்களின் வரிசைகளோடு கலந்து;* ***நருமதை யாறு*** *- நருமதையென் னும் நதிக் கரையை;* ***நண்ணினார்*** *- சென்று அடைந்தார்கள்.*

*கடலில் படிந்து மேகங்கள் நீர் பருகமென்று கூறுவது கவி மரபு. நாகு : எருமைக் கன்று*

*அங்குள்ள எருமைக்கன்றுகள் நீருண்ட காளமேகங்களோடு வேறுபாடு தோன்றாதவாறு நருமதை நீரில் படிகின்றன என்பதாம். வானரர்கள் பெருங்கூட்டமாய் இயங்குவதால் நிலத்தின் தண்மை சிதைந்தது என்பதைப் 'பார் சேகு அற' என்ற தொடர் விளக்கிற்று. சேரன் செங்குட்டுவனின் சேனை சென்ற போது நீலகிரி மலையின் முதுகு நெளிந்தது என்று சொல்லும் வருணனையை நினைவு கூர்க. (சிலப். கால்கோள்.82) 7*

***4528. அன்னம் ஆடு இடங்களும், அமரர் நாடியர்***
***துன்னி ஆடும் இடங்களும், துறக்கம் மேயவர்***
***முன்னி ஆடும் இடங்களும், சுரும்பு மூசு தேன்***
***பன்னி ஆடு இடங்களும், பரந்து சுற்றினார்.***

***அன்னம் ஆடு இடங்களும்*** *- அன்னப் பறவைகள் விளையாடும் இடங்களையும்;* ***அமரர் நாடியர்*** *- தேவ மாதர்களான அரம்பை முதலிய பெண்கள்;* ***துன்னி ஆடு இடங்களும்*** *- வந்து நீராடும் இடங்களையும்;* ***துறக்கம் மேயவர்*** *- சொர்க்கலோகத்திலுள்ள வானவர்;* ***முன்னி***

***ஆடு இடங்களும்*** *- வந்து சஞ்சரிக்கும் இடங்களையும்;* ***சுரும்பு மூசு தேன்*** *- சுரும்புகளும், நறுமண மலர்களில் மொய்க்கும் தேன் என்ற வண்டுகளும்;* ***பன்னி ஆடு இடங்களும்*** *- பாடித் திரிகின்ற இடங்களையும்;* ***பரந்து சுற்றினார்*** *- துழாவித் தேடித் திரிந்தார்கள்.*

*நருமதையாற்றின் பெருஞ்சிறப்பாலும், அதனைச் சார்ந்த இடங்களின் மிக்க இனிமையாலும் அங்கே தேவமாதர்களும், தேவர்களும் வரலாயினர் என்பது. சுரும்பு, தேன்: வண்டின் வகைகள். சுரும்பு எனும் வண்டுகள் எல்லாப்பூமணத்திலும் செல்லும் தன்மையன என்றும், தேன் என்னும் வண்டுகள் நறுமண மலரிடத்தே மட்டும் செல்லும் தன்மையன என்றும் கூறுவர். 8*

***4529. பெறல் அருந் தெரிவையை நாடும் பெற்றியார்,***
***அறல் நறுங் கூந்தலும், அளக வண்டு சூழ்***
***நிறை நறுந் தாமரை முகமும், நித்தில***
***முறுவலும், காண்பரால், முழுதும் காண்கிலார்.***

***பெறல் அருந் தெரிவையை -*** *பெறுதற்கு அரிய சீதையை;* ***நாடும் பெற்றியார் -*** *தேடும் தன்மையுடையவர்களான வானரர்கள்;* ***அறல் நறுங் கூந்தலும் -*** *கருமணலாகிய நறுமணமுள்ள அவளது கூந்தலையும்;* ***அளக வண்டுசூழ் நிறை -*** *கூந்தல் போலக் கருநிறமுள்ள வண்டுகள் சூழ்ந்து நிறைந்துள்ள;* ***நறுந்தாமரை முகமும் -*** *தாமரை மலராகிய அவளது முகத்தையும்;* ***நித்தில முறுவலும் -*** *(அலைகளால் கொழிக்கப்படுகின்ற) முத்துக்களாகிய அவளுடைய பற்களையும்;* ***காண்பர் -*** *காண்பார்கள்;* ***முழுதும் காண்கிலார் -*** *(ஆனால்) சீதையின் உருவ முழுவதையும் ஒருசேரக் காணாதவரானார்கள்.* ***ஆல் -*** *அசை.*

*சீதையைத் தேடிச் சென்ற வானர வீரர்கள் நருமதையாற்றின்கரையில் அச் சீதையின் உருவ முழுவதையும் பார்க்கமுடியாமல் அவளது முகத்திற்கும் அந்த முகத்திலுள்ள உறுப்புகளுக்கும் ஒப்பான சில பொருள்களை மட்டுமே கண்டனர்; தாம் தேடிவந்த சீதையின் முழுஉருவத்தையும் நிகர்த்தனவற்றைக் காணவில்லை. போலிகளிலும் முழுமையானவற்றை - சீதைக்கு முழுமையாக ஒப்பு கூறத்தக்கனவற்றை வானரர் காணவில்லை.*

*நருமதையாற்றில் கருமணல் சீதையின் கூந்தலையும், தாமரை மலர்கள் முகத்தையும், அதன் கரையில் கிடக்கும் முத்துக்கள் பற்களையும் ஒக்கும் என்பது. அளக வண்டுசூழ் தாமரைமுகம் - உவமையை அங்கமாகக் கொண்ட உருவகம். அறற் கூந்தல், நித்தில முறுவல் - உருவகம். காண்பரால் முழுதும் காண்கிலார்: முரண்தொடை.* *9*

***4530. செரு மத யாக்கையர், திருக்கு இல் சிந்தையர்,***
***தரும தயா இவை தழுவும் தன்மையர்,***
***பொரு மத யானையும் பிடியும் புக்கு, உழல்***
***நருமதை ஆம் எனும் நதியை நீங்கினார்.***

***செரு மத யாக்கையர் -*** *போர் புரிவதில் எக்களிப்புக் கொண்ட உடம்பினையுடையவர்களும்;* ***திருக்கு இல் சிந்தையர் -*** *மாறுபாடற்ற*

*மனமுடையவர்களும்;* ***தருமம்தயா இவை தழுவும் தன்மையர் -*** *தரும மும் அருளும் இயல்பாக அமைந்த தன்மையுடையவர்களுமாகிய வானரர்கள்;* ***பொரு மத யானையும் -*** *போர் செய்கின்ற மதங் கொண்ட ஆண்யானைகளும்;* ***பிடியும் -*** *பெண் யானைகளும்;* ***புக்கு உழல் -*** *புகுந்து விளையாடுகின்ற;* ***நருமதை ஆம் எனும் நதியை -*** *நருமதை என்னும் பேர் கொண்ட ஆற்றை;* ***நீங்கினார் -*** *கடந்து சென்றார்கள்.*

*யாக்கை : உதிரம் முதலான எழுவகைத் தாதுக்களால் கட்டப்பட்டது என்று உடலுக்குக் காரணக்குறி. திருக்கு இல்சிந்தையர்: (குரங்குத் தன்மையால்) மாறாமல் ஒருபடித்தாய மனமுடையவர். ஆம் :அசை.* *10*

**4531. தாம கூடத் திரைத் தீர்த்த சங்கம் ஆம்,**
**நாம கூடு அப் பெருந் திசையை நல்கிய,**
**வாம கூடச் சுடர் மணி வயங்குறும், -**
**ஏமகூடத் தடங் கிரியை எய்தினார்.**

***தாமகூடத் திரைதீர்த்த சங்கம் ஆம் -*** *ஒளியமைந்த சிகரங்களிலி ருந்து தோன்றுகின்ற அலைகளையுடைய ஆறுகளின் சங்கமம் ஆகிய;* ***நாம கூடு அப்பெருந் திசையை நல்கிய -*** *புகழுடன் கூடியதும் பெரியதும் ஆகிய அத்திசையைப் பாதுகாப்பதாகிய;* ***வாம கூடச் சுடர் மணி வயங்குறும் -*** *அழகிய தொகுதியாகிய ஒளியையுடைய இரத்தினங்கள் விளங்குகின்ற;* ***ஏம கூடத் தடங்கிரியை -*** *ஏமகூடமென்னும் பெரிய மலையை;* ***எய்தினார் -*** *போய் சேர்ந்தார்கள்.*

*பல புண்ணிய ஆறுகளின் சங்கமமும் மிகச் சிறந்த இரத்தினங்களும் நிரம்பப் பெற்றது ஏமகூடமலை என்பது. ஏமகூடம் - எட்டுக் குலகிரிகளில் ஒன்று. மேருவின் தெற்கு இமயத்துக்கப்பால் 9000 யோசனையில் உள்ளது என்ற அபிதான சிந்தாமணி குறிப்பிடுகிறது. தாமம் - ஒளி; நாமம் - புகழ்; வாமம் - அழகு; ஏமம் - பொன். திரிபு என்னும் சொல்லணி இப்பாடலில் வந்துள்ளது. முதலடியில் 'கூடம்' சிகரத்தையும், மூன்றாமடியில் தொகுதியையும் குறித்தது.* *11*

**4532. மாடு உறு கிரிகளும்,**
**மரனும், மற்றவும்,**
**சூடு உறு பொன்**
**எனப் பொலிந்து தோன்றுறப்**
**பாடு உறு சுடர்**
**ஒளி பரப்புகின்றது;**
**வீடு உறும் உலகினும்**
**விளங்கும் மெய்யது;**

***மாடு உறு கிரிகளும் -*** *(அந்த ஏமகூட மலை) பக்கத்திலுள்ள மலைகளும்;* ***மரனும் -*** *மரங்களும்;* ***மற்றவும் -*** *பிற பொருள்களும்;*

***சூடு உறு பொன் என -*** *சுடச்சுடரும் பொன்போல;* ***பொலிந்து தோன்றுற-*** *விளங்கித் தோன்றும்படி;* ***பாடு உறு சுடர் ஒளி பரப்புகின்றது -*** *பெருமை மிக்க ஒளியைப் பரவச் செய்கின்றது;* ***வீடு உறும் உலகினும் -*** *சுவர்க்கலோகத்தைக் காட்டிலும்;* ***விளங்கும் மெய்யது -*** *மிகுதியாக ஒளி விளங்கும் தோற்றத்தையுடையது.*

*பொன் போன்ற நிறமுள்ள அந்த ஏம கூடத்தின் ஒளியால் அதன் பக்கமுள்ள பொருள்களெல்லாம் பொன்னிறமாகக் காணப்பட்டன என்பது அஃதாவது மலைகளும் மரமும் பிறவும் தமது இயற்கை நிறம் மாறி அருகிலுள்ள ஏமகூடத்தின் நிறத்தையடைந்தன, என்றார். இது பிறிதின் குணம் பெறலணி. பாடு: பெருமை. பொன்னுலகென்று அழைக்கப் பெறும் சுவர்க்கலோகத்திலுள்ள பொருள்கள் யாவும் பொன்மயமாக விளங்குமென்பது புராண நூற்கொள்கை.* *12*

*4533.* ***பறவையும், பல் வகை***
***விலங்கும், பாடு அமைந்து***
***உறைவன, கனக நுண்***
***தூறி ஒற்றலான்,***
***நிறை நெடு மேருவைச்***
***சேர்ந்த நீர ஆய்,***
***பொறை நெடும் பொன்***
***ஒளி மிளிரும் பொற்பது.***

***பாடு அமைந்து உறைவன -*** *(அம் மலையானது) தன்னிடம் வந்து வாழுகின்ற;* ***பறவையும் -*** *பறவைகளும்;* ***பல்வகை விலங்கும் -*** *பல வகையான மிருகங்களும்;* ***கனக நுண் தூளி ஒற்றலால் -*** *(அம் மலை யிலுள்ள) நுட்பமான பொன் துகள்கள் ஒட்டிக் கொள்வதால்;* ***நிறை நெடு மேருவை -*** *நிறைந்து ஓங்கியுள்ள பெரிய மேரு மலையை;* ***சேர்ந்த நீர் ஆய்-*** *சேர்ந்த தன்மையுடையன என்று சொல்லுமாறு;* ***பொறை நெடும்பொன் ஒளி-*** *வலிமை மிக்க பொன்னின் ஒளியை;* ***மிளிரும் பொற்பது -*** *(எல்லாப்பொருள்களின் மேலும்) பெய்கின்ற பொலிவுடையது.*

*தன்னிடம் வாழும் பறவைகளும் விலங்குகளும் மேருவைச் சார்ந்த பொருள்கள்போலப் பொன்துளை படியப்பெற்று விளங்குமாறு அப் பொருள்கள் எல்லாவற்றையும் பொன்மயமாகச் செய்வது ஏமகூடமலை என்பது. 'பனிமால் இமயப் பொருப்பகம் சேர்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிறமாய் இருக்கும்' என்ற காரிகைத் தொடர் ஒப்பு நோக்கத் தக்கது. (யாப். காரிகை. 3) கனகம் : பொன்.* *13*

*4534.* ***பரவிய கனக நுண் பராகம் பாடு உற***
***எரி சுடர்ச் செம் மணி ஈட்டத்தோடு இழி***
***அருவிஅம் திரள்களும் அலங்கு தீயிடை***
***உருகு பொன் பாய்வ போன்று, ஒழுகுகின்றது:*** ***பரவிய கனக நுண் பராகம் -*** *பரவியுள்ள பொன்னின் சிறுதுகள்கள்;* ***பாடு உற -*** *தம்மிடத்தில் பொருந்த;* ***எரிசுடர்ச் செம்மணி -*** *விளங்குகின்ற ஒளியையுடைய சிவந்த பதுமராக இரத்தினங்களின்;* ***ஈட்டத்தோடு இழி அம்திரள் -*** *தொகுதியோடு கீழே இறங்குகின்ற;* ***அருவிகளும் -*** *அருவிகளாகிய அழகிய கூட்டங்களும்;* ***அலங்கு தீயிடை -*** *எரிகின்ற நெருப்பிலே;* ***உருகு பொன் -*** *உருகிய பொன்னானது;* ***பாய்வ போன்று -*** *பாய்ந்தோடுவது போல;* ***ஒழுகுகின்றது -*** *ஒழுகப்பெறும் தன்மையது.*

*பொற்கொடிகள் பொருந்திச் செம்மணியின் நிறமமைந்த பெருகுகின்ற நீர்ப் பெருக்கிற்கு, நெருப்பிலுருக்கி ஓடவிட்ட பொன்னை உவமையாகக் குறித்தார்.*

*கனக பராகம்: பொன்துகள்; செம்மணி: மாணிக்கம். செம்மணிகளில் பொன்மயமான அருவிகள் பாய்வது, தீயினிடையில் பொன் உருகுவதுபோலுமென வருணித்தவாறு.* *14*

*4535.* ***விஞ்சையர் பாடலும், விசும்பின்***
***வெள் வளைப்***

***பஞ்சின் மெல் அடியினார்***
***ஆடல் பாணியும்,***
***குஞ்சர முழக்கமும்,***
***குமுறு பேரியின்***
***மஞ்சு இனம் உரற்றலும்,***
***மயங்கும் மாண்பது;***

***விஞ்சையர் பாடலும் -*** *(அங்கு வந்துள்ள) வித்தியாதரர்களின் பாட்டொளியும்;* ***விசும்பின் வெள்வளைப் பஞ்சின் மெல் அடியினார் -*** *தேவலோகத்திலிருந்து வந்தவரான வெண்மையான வளையல்களை யணிந்த பஞ்சுபோன்ற மெல்லிய அடிகளையுடைய தேவமாதர்களின்;* ***ஆடல் பாணியும்-*** *ஆடலோடு இசைந்த தாளங்களின் ஒலியும்;* ***குஞ்சர முழக்கமும் -*** *யானைகளின் பிளிற்றோசையம்;* ***குமுறு பேரியின் -*** *முழங்குகின்ற முரசுபோன்ற;* ***மஞ்சு இனம் உரற்றலும் -*** *(அங்கு வந்து தங்கும்) மேகக்கூட்டங்களின் இடியோசையும்;* ***மயங்கும் -*** *கலந்துள்ள;* ***மாண்பது -*** *பெருமையுடையது.*

*ஆடல்பாணி: நாட்டியத்துக்கேற்ற தாளம். பாணி: கையினால் ஒத்தறுத்துத் தாளம்போடுவது. 15*

*அதனை இராவணன் மலையென ஐயுறுதல்*

***4536. அனையது நோக்கினார், அமிர்த***
***மா மயில்***
***இனைய, வேல் இராவணன்,***
***இருக்கும் வெற்புஎனும்***
***நினைவினர், உவந்து உயர்ந்தும்***
***ஓங்கும் நெஞ்சினர்,***
***சினம் மிகக் கனல் பொறி***
***சிந்தும் செங் கணார்.***

*(வானரர்)* ***அனையது நோக்கினார் -*** *அந்த ஏமகூட மலையைக்கண்டு;* ***அமர்த மாமயில் இனைய -*** *அமிழ்தத்தை ஒத்த பெருமை மிக்க மயில் போல்வாளாகிய சீதை துயருறும் படி;* ***வேல் இராவணன் -*** *கூர்மையான வேலினையுடைய இராவணன்;* ***இருக்கும் வெற்பு ஆம் -*** *தங்கியுள்ள மலையாகும்;* ***எனும் -*** *என்று கருதுகின்ற;* ***நினைவினர் -*** *எண்ணமுடையவர்களாய்;* ***உவந்து உயர்ந்து ஓங்கு நெஞ்சினர் -*** *(அது குறித்து) மகிழ்ந்து பொங்கி வளர்கின்ற மனமுடையவர்களாய்;* ***சினம் மிகக் கனல்பொறி சிந்தும் செங்கணார் -*** *கோபம் அதிகப்படுவதால் தீப்பொறிகளைக் கக்கும் செந்நிறக் கண்களையுடையவர்களுமானார்கள்.*

*வானரர்கள், அம் மலையின் வளத்தைக் கண்டு அதை இராவணனது இருப்பிடமாகக் கருதி, விரைவில் சீதையைக் காணலாம் என்பதனால் மனப் பூரிப்பையும், சீதையைக் கவர்ந்த கொடுஞ் செயலினனான இராவணனது தன்மையை நினைத்ததால் தோன்றிய பெருஞ்சினத்தையும் ஒருங்கே கொண்டனர் என்பது.*

*ஏமகூடத்தையே திரிகூடமென மயங்கினர் வானர வீரர். ஒரே காலத்தில் முரண்படும் இருவகை உணர்ச்சிகள் நிகழ்வதை இப்பாடல் உணர்த்துகிறது. உயர்ந்து ஓங்கு : ஒரு பொருட் பன்மொழி.* *16*

***4537.** **'இம் மலை காணுதும்,***
***ஏழை மானை; அச்***
***செம்மலை நீக்குதும், சிந்தைத்***
***தீது' என***
***விம்மலுற்று உவகையின்***
***விளங்கும் உள்ளத்தார்,***
***அம் மலை ஏறினார்,***
***அச்சம் நீங்கினார்.***

***இம்மலை -** இந்த மலையிலே; **ஏழை மானை -** பேதைமைப் பண்புடைய மான்போன்ற சீதையை; **காணுதும் -** பார்ப்போம் (அதனால்); **அச்செம்மலை -** அந்த இராமனது; **சிந்தைத் தீது -** மனத்துயரை; **நீக்குதும் -** போக்குவோம்; **என -** என்று நினைந்து (வானரர்கள்); **விம்மல் உற்று -** பூரித்து; **உவகையின் விளங்கும் உள்ளத்தார் -** மகிழ்ச்சியால் விளங்குகின்ற உள்ளம் உடையவர்களாய்; **அச்சம் நீங்கினார் -***

*பயம் நீங்கியவர்களாய்; **அம்மலை ஏறினார் -** அந்த மலையில் ஏறினார்கள்.*

*அந்த மலையே இராவணனிருக்கையெனத் தெளிந்து சீதையைக் காண்பது உறுதியென மனத்தில் கருதியவராய், அத் தேவியைக் கண்டு அச்செய்தியை இராமனிடம் அறிவித்து அவனது மனத் துயரத்தைப் போக்குவோமென எண்ணினார் வானரர். இராவணனையும் எதிர்க்க நேரிடினும் கலங்கமாட்டார்கள் என்று குறிப்பாராய் 'அச்சம் நீங்கினார்' என்றார்.* *17*

***4538.** **இரிந்தன, கரிகளும் யாளி ஈட்டமும்;***
***விரிந்த கோள் அரிகளும் வெருவி நீங்கின;***
***திரிந்தனர், எங்கணும் திருவைக் காண்கிலார்,***
***பரிந்தன சிந்தனை பரிகின்றாம் என,***

*(அவ்வாறு மலைமேல் ஏறிய வானரர்களைக் கண்டு) **கரிகளும் -** யானைகளும்; **யாளி ஈட்டமும் -** யாளிகளின் கூட்டமும்; **இரிந்தன -** (பயந்து) விலகியோடின; **விரிந்த கோள் அரிகளும் -** (அம்மலை மேல்) பரந்திருந்த கொல்லுமியல்புள்ள சிங்கங்களும்; **வெருவி நீங்கின -** அஞ்சி நிலைகெட்டு அகன்றன; (அவ்வானரர்கள்) **எங்கணும்திரிந் தனர் -** மலை முழுவதும் தேடிப் பார்த்தவர்களாகி; **திருவைக் காண்கிலார் -** சீதையைக் காணாதவராகி (அதனால்); **பரிந்தன சிந்தனை -** மனம் நொந்தவர்களாய்; **பரிகின்றாம் என -** (இப்பொழுது) மிக வருந்துகின்றோம் என்று (நைந்து).*

*அடுத்த பாடலில் 'தேடினார்' என முடியும். கோள் அரி : சிங்கம்; பிறவற்றின் உயிரைக் கொள்வது.* *18*

*சீதையைக் காணாமல் இறங்குதல்*

***4539. ஐம்பதிற்று இரட்டி***
***காவதத்தினால் அகன்று,***
***உம்பரைத் தொடுவது ஒத்து,***
***உயர்வின் ஓங்கிய,***
***செம் பொன் நல் கிரியை***
***ஓர் பகலில் தேடினார்;***
***கொம்பினைக் கண்டிலர்***
***குப்புற்று ஏகினார்.***

*(வானரர்கள்)* ***ஐம்பதிற்று இரட்டி காவதத்தினால் அகன்று-*** *நூறு காத அளவு அகலமுடையதாய்;* ***உம்பரைத் தொடுவது ஒத்து -*** *வானத்தைத் தீண்டுவது போன்று;* ***உயர்வின் ஓங்கிய -*** *மிகவும் உயர்ந்துள்ள;* ***செம்பொன் நல்கிரியை -*** *செம்பொன் மயமான அழகிய அந்த ஏமகூட மலையில்;* ***ஓர் பகலில் தேடினார் -*** *ஒரு பகல் முழுவதும் தேடிப் பார்த்தனர்;* ***கொம்பினைக் கண்டிலர் -*** *(ஆனால்) பூங்கொம்பு*

*போன்றவர்களாகிய சீதையைக் காணாதவர்களாகி;* ***குப்புற்று ஏகினார் -*** *(அம் மலையிலிருந்து) இறங்கிச் சென்றார்கள்.*

*ஏமகூடத்தைப் புகழ்ந்து அதனைச் செம்பொன் நற்கிரியென்றார். கொம்பு : உவமவாகுபெயர். குப்புறுதல் : கீழிறங்குதல். 19*

*அங்கதன் 'பல பகுதியாகப் பிரிந்து தேடிப் பார்த்தபின் மயேந்திரத்தில் கூடுமின்' எனல்*

***4540. வெள்ளம் ஓர் இரண்டு***
***என விரிந்த சேனையை,***
***'தெள்ளு நீர் உலக எலாம்***
***தெரிந்து தேடி, நீர்***
***எள்ள அரும் மயேந்திரத்து***
***எம்மில் கூடும்' என்று***
***உள்ளினார், உயர் நெடும்***
***ஓங்கல் நீங்கினார்.***

*(அங்கதன் முதலான வானரசேனைத் தலைவர்கள்)* ***வெள்ளம் ஓர் இரண்டு என -*** *இரண்டு வெள்ளம் என்று சொல்லுமாறு;* ***விரிந்த சேனையை -*** *பரவியுள்ள தமது குரங்குச் சேனையை (பார்த்து);* ***நீர் -*** *நீங்கள்;* ***தெள்ளு நீர் உலகு எலாம் -*** *தெளிந்த நீர் சூழ்ந்த (தென்திசை) உலகனைத்திலும் அலைந்து (சீதையைத்) தேடிப்பார்த்து; (பிறகு)* ***எள் அரு மகேந்திரத்து -*** *(தென்கடற்கரையிலுள்ள) இகழ்வதற்கரிய மகேந்திரமலையினிடத்தில்;* ***எம்மில் கூடும் -*** *எங்களோடும் வந்து சேருங்கள்;* ***என்று உள்ளினார் -*** *என்று நினைந்து கட்டளையிட்ட வராகி;* ***உயர் நெடும் ஓங்கல் நீங்கினார் -*** *உயர்ந்து நீண்ட அந்த ஏமகூடத்தை விட்டு அகன்றார்கள்.*

*எல்லோரும் ஒருங்கே சென்று தேடப் புகுந்தால் குறித்த கெடுவுக்குள் எடுத்த செயல் முடியாதெனக் கண்டு தனித்தனித் தொகுதியாகப் பிரிந்து தேடுதல் நல்லது என்று பல*

*பிரிவுகளாகப் பிரித்து விடுத்து அங்கதனும் அவனுடன் சிலரும் தனித்துச் சென்றனர் என்பது இங்குக் குறிக்கப்பட்டது. ஓங்கல்: மலை: காரணக்குறி.* *20*

*அனுமன் முதலியோர் ஒரு சுரத்தையடைதல்*

***4541. மாருதி முதலிய வயிரத் தோள் வயப்***
***போர் கெழு வீரரே குழுமிப் போகின்றார்;***
***நீர் எனும் பெயரும் அந் நெறியின் நீங்கலால்,***
***சூரியன் வெருவும் ஓர் சுரத்தைத் துன்னினார்.***

***மாருதி முதலிய*** *- வாயுவின் மகனாகிய அனுமன் முதலான;* ***வயிரத்தோள்*** *- உறுதியான தோள்களையுடைய;* ***வயப்போர் கெழு வீரரே*** *- வெற்றிதரும் போரில் வன்மையுடன் விளங்கும் வீரர்கள் மட்டும்;*

***குழுமிப் போகின்றார்*** *- திரண்டு செல்பவராய்;* ***அந்நெறியில்*** *- அந்த வழியிலே;* ***நீர் எனும் பெயரும் நீங்கலால்*** *- நீர் என்ற பெயர் கூட இல்லையாதலால்;* ***சூரியன் வெருவும்*** *- வெம்மையான கதிர் களையுடைய சூரியனும் கண்டு அஞ்சத் தகுந்த;* ***ஓர் சுரத்தை*** *- ஒரு பாலைவனத்தை;* ***துன்னினார்*** *- சென்று அடைந்தார்கள்.*

*பூமியிலுள்ள நீரை வற்றச் செய்து உலகையே வெம்மை செய்யும் கதிர்களையுடையனவாய்ப் பாலைக்குரிய தெய்வமாகிய கதிரவனும் கண்டு அஞ்சக்கூடியதாக இருந்தது அந்தப் பாலைவனம் என்றார். நீர் ஒரு சிறிதும் இல்லையென்றதை 'நீர் எனும் பெயரும் நீங்கிட' என்றார். உலகவழக்கு நவிற்சியணி. கண்டு என்ற ஒரு முனிவன் தன் பதினாறு வயது மகன் இறந்தது குறித்துக் கோபித்து இந்த வனத்தை மனிதர் வசிப்பதற்கு ஏற்றதல்லாததும், விலங்குகள், பறவைகள், செடி கொடிகள் முதலியனஅற்றதும் ஆகுமாறு சபித்தனாதலால் இவ் வளமான இடம் பாலைவனமாயிற்று என்பர்.*

*ஒப்பு : 'வான்நீங்கு வைப்பின் வழங்காத் தேர் நீர்க்கவாம்' - (கலித். பாலை. 6) வீரரே - ஏகாரம் பிரிநிலை.* *21*

*பாலையின் வெம்மை*

***4542. புள் அடையா; விலங்கு***
***அரிய; புல்லொடும்***
***கள் அடை மரன் இல;***
***கல்லும் தீந்து உகும்;***
***உள் இடை யாவும்***
***நுண் பொடியொடு ஓடிய;***
***வெள்ளிடை அல்லது ஒன்று***
***அரிது; - அவ் வெஞ் சுரம்.***

***அவ்வெஞ்சுரம்*** *- அந்தக் கொடிய பாலைவனத்தில்;* ***புள் அடையா*** *- பறவைகள் சென்ற தங்கமாட்டா;* ***விலங்கு அரிய*** *- மிருகங்களும் காண்பதற்கு அரியன;* ***புல்லொடும்***

***கள் உடை மரன் இல* -** *புல்லும் தேன் பொதிந்த மலருடை மரங்களும் அடியோடு இல்லை;* ***கல்லும் தீந்து உகும்* -** *கற்களும் எரிந்து சாம்பலாகிவிடும்;* ***உள் இடை யாவும்* -** *தன்னிடம் பொருந்திய எல்லாப் பொருள்களும்;* ***நுண் பொடியொடு ஓடிய* -** *சிறு துகள்களாக மாறிப் பறப்பதால்;* ***வெள்ளிடை அல்லது* -** *வெற்றிடமல்லது;* ***ஒன்று அரியது* -** *வேறொன்றும் அங்குக் காணப்படாது.*

*அந்தப் பாலைவனத்தில் பறவை முதலியன வருவதுமில்லை; மரஞ்செடி கொடிகளும் வளர்வதுமில்லை; கற்களும் கரிந்து தீய்ந்து போகும்; குறிஞ்சி முதலிய வேற்று நிலங்களிலிருந்து எப்பொருள் வந்தாலும் அவை யாவும் துகளாகப் பறக்கின்ற வெப்பம் நிறைந்த வெற்றிடமாகவேயுள்ளது என்ற அப் பாலைவனத்தின் கொடுமை கூறியவாறு. வெள்ளிடை :வெற்றிடம். 22*

***4543. நன் புலன் நடுக்குற,***
***உணர்வு நைந்து அற,***
***பொன் பொலி யாக்கைகள்***
***புழுங்கிப் பொங்குவார்,***
***தென் புலம் தங்கு***
***எரி நரகில் சிந்திய***
***என்பு இல் பல் உயிர்***
***என, வெம்மை எய்தினார்.***

***நன்புலன் நடுக்குற* -** *(அங்கே சென்ற வானர வீரர்கள்) நல்ல ஐம்பொறிகளும் நடுங்கவும்;* ***உணர்வு நைந்து அற* -** *அறிவு தேய்ந்து ஒழியவும்;* ***பொன் பொலியாக்கைகள்*-** *பொன் போல விளங்கும் உடல்கள்;* ***புழுங்கிப் பொங்குவார்* -** *வியர்த்து மனம் கொதிப்பவர்களாய்;* ***தென்புலம் தங்கு* -** *தெற்குத் திசையில் இருக்கின்ற;* ***எரி நரகில்* -** *(எமனது); எரியும் நரகத்தில்;* ***சிந்திய* -** *விழுந்து வருந்துகின்ற;* ***என்பு இல் பல் உயிர் என* -** *(எலும்பில்லாத உடம்பையுடைய) புழு முதலான பல உயிர்த்தொகுதிகளைப் போல;* ***வெம்மை எய்தினார்* -** *கொதிப்பையடைந்தார்கள்.*

*அங்கே சென்ற வானரர்கள் நிலத்தின் வெம்மையைப் பொறுக்க முடியாமல் புழுத்துடிப்பதுபோலத் துடித்தார்கள் என்பது. வானரர்கள் வெயிலில் துடிப்பதற்கு என்பு இல் பல்லுயிர் துன்பப்படுவதை உவமை கூறினார். தென்புலத்தவன்: எமன். என்பு இல் பல் உயிர்: புழுக்கள். 'என்பிலதனை வெயில்போலக்காயுமே' - குறள்: 77 23*

***4544. நீட்டிய நாவினர்; நிலத்தில் தீண்டுதோறு***
***ஊட்டிய வெம்மையால் உலையும் காலினர்;***
***காட்டினும் காய்ந்து, தம் காயம் தீதலால்,***
***சூட்டு அகல்மேல் எழு பொரியின் துள்ளினார்.***

***நீட்டிய நாவினர்* -** *(அந்த வானரர்கள் நீர் வேட்கையால்) வெளியே தொங்கிய நாக்கையுடையவர்களாயினர்;* ***நிலத்தில் தீண்டுதோறு ஊட்டிய* -** *நிலத்தில் அடிவைக்கும் தோறும் கீழிருந்து தாக்கிய;* ***வெம்மையால்* -** *வெப்பத்தால்;* ***உலையும் காலினர்* -** *கொப்புளம் கண்ட அடிகளையுடையவர்களுமாயினர்;* ***காட்டினும் காய்ந்து* -**

*அப் பாலைவனத்தைக் காட்டிலும் மிகுதியாகச் சூடேறி;* ***தம் காயம் தீதலால் -*** *தங்கள் உடம்பு கரிந்து தீய்ந்ததால்;* ***சூட்டுஅகல்மேல் எழு பொரியின் -*** *சூடு கொண்ட சட்டியிலிருந்து மேலெழுகின்ற நெற்பொரிகள் போல;* ***துள்ளினார் -*** *துடித்தார்கள்.*

*மிகுந்த நீர் வேட்கையால் நாவை வெளியே நீட்டுதலும், பொறுக்கமுடியாத மிக்க வெப்பத்தால் கால்கள் கொப்புளித்தலும் இயல்பு. நெருப்பினால்*

*வெம்மையடைந்த சட்டியில் நெல் பொரிந்து மேலெழுவதுபோல வானரவீரர்கள் பாலைவனத்தின் மிக்க வெம்மையால் துடித்தார்கள் என்பதுஉவமையணி. 24*

*துன்புற்ற வானரர் பிலத்தில் புகுதல்*

***4545. ஒதுங்கல் ஆம் நிழல்***
***இறை காண்கிலாது, உயிர்***
***பிதுங்கல் ஆம் உடலினர்,***
***முடிவு இல் பீழையார்,***
***பதங்கள் தீப் பருகிடப்***
***பதைக்கின்றார், பல***
***விதங்களால், நெடும் பில***
***வழியில் மேவினார்.***

*(வானர வீரர்)* ***ஒதுங்கலாம் நிழல் இறை காண்கிலாது -*** *(வெயிலுக்கு) ஒதுங்கக் கூடிய சிறிதளவு நிழலைக்கூடக் காணமாட்டாது;* ***உயிர் பிதுங்கல் ஆம் உடலினர் -*** *உயிர் வெளியேறக் கூடிய உடலையுடையவர்களும்;* ***முடிவு இல் பீழையார் -*** *எல்லையற்றதுன்பத்தையடைந்தவர்களும்;* ***பதங்கள் நீர்ப்பருகிடப் பதைக்கின்றார் -*** *அடிகளில் (அப் பாலைவனத்தின்) சூடு தாக்குவதால் துடிதுடிக்கின்றவர்களுமாய்;* ***பல விதங்களால் -*** *(அந்த வெப்பத்திலிருந்து தப்புவதற்குப்) பல வகையிலும் முயற்சி செய்து முடிவாக;* ***நெடும் பில வழியில் -*** *(அங்கே இருந்த) பெரிய பிலத் துவாரத்தின் வழியை;* ***மேவினார் -*** *அடைந்தார்கள்.*

*வானரவீரர்கள் அந்தப் பாலைவனத்தில் ஒதுங்கித் தப்புவதற்குச் சிறு நிழல் கூட அகப்படாமல் உயிர் நீங்கும் நிலையையடைந்து, முடிவாக அங்கே காணப்பட்ட ஒரு பிலத்தின் வழியைச் சேர்ந்தனர் என்பது. பீழை: துன்பம் பிதுங்கல்: வெளிப்படல். 25*

***4546. ' 'மீச் செல அரிது இனி,***
***விளியின் அல்லது;***
***தீச் செல ஒழியவும்***
***தடுக்கும்; திண் பில -***
***வாய்ச் செலர் நன்று'***
***என, மனத்தின் எண்ணினார்;***

***போய்ச் சில அறிதும்'***
***என்று, அதனில் புக்கனர்.***

***இனி*** - *இனிமேல்;* ***விளியின் அல்லது*** - *இறந்து விடுதலல்லாமல்;* ***மீச்செலவு அரிது*** - *இதைக் கடந்து அப்பால் செல்லுதல் நமக்கு முடியாத செயலாகும்; (ஆகையால்)* ***திண் பிலம் வாய்ச் செலல்*** - *வலிய பிலத்தின் வழியே செல்லுதல்;* ***தீச்செலவு ஒழியவும் தடுக்கும்*** -

*வெப்பமான பாலை நிலத்தில் செல்வதையாவது தடுக்கும்; (ஆகவே)* ***நன்று என*** - *(இப் பிலத்துள செல்வதே) நல்லது என்று;* ***மனத்தின் எண்ணினார்*** - *மனத்திற் கருதியவர்களாய்;* ***போய்ச் சில அறிதும் என்று*** - *(இதனுள்) சென்று அங்குள்ள சிலவற்றை ஆராய்வோமென்று கூறி;* ***அதனில் புக்கனர்*** - *அப்பிலத்தினுள் புகுந்து சென்றார்கள்.*

*இந்தப் பாலைவனத்தில் இனி ஒரு நொடி செல்வதும் உயிரழிவுக்கே காரணமாகும்; ஆகவே, இங்கே காணப்படுகின்ற பில வழியில் சென்றால் அது சீதையிருக்கும் இடமாக இல்லாவிட்டாலுங் கூடப் பாலை நிலத்தின் வெம்மையையாவது தணிக்கும்: ஆதலால், இப்போது இங்கே செல்வதே நாம் செய்யத்தக்கது; மேலும், இதனுள்ளிருக்கும் சில இடங்களிலும் சீதையைத் தேடிப் பார்ப்போ மென்று கருதி வானர வீரர்கள் அப் பிலத்தினுள் புகுந்தனர் என்பது.*

*திண் பிலம் - எளிதில் கடத்தற்கரிய பிலம்.*

*ஒழியவும் - இழிவு சிறப்பும்மை.*

*'ஒழிய' என்னும், செயவென்னெச்சம் தொழிற்பெயர்த் தன்மைத்தாகித் 'தடுத்தல்' தொழிற்குச் செயப்படு பொருளாய் நின்றது. 26*

வானரர் இருளில் வருந்துதல்

*4547.* ***அக் கணத்து, அப்***
***பிலத்து அகணி எய்தினார்,***
***திக்கினொடு உலகு உறச்***
***செறிந்த தேங்கு இருள்,***
***எக்கிய கதிரவற்கு***
***அஞ்சி, ஏமுறப்***
***புக்கதே அனையது ஓர்***
***புரை புக்கு எய்தினார்.***

***அக்கணத்து*** - *(வானர வீரர்கள்) அப்பொழுது;* ***அப்பிலத்து அகணி எய்தினார்*** - *அந்தப் பிலத்தின் உள்ளிடத்தையடைந்தவர்களாய்;* ***திக்கினொடு உலகு உற*** - *நான்கு திசைகளிலும் இவ்வுலகத்தும்;* ***செறிந்த தேங்கு இருள்*** - *மிக நெருங்கி நிறைந்த பேரிருள்;* ***எக்கிய கதிரவற்கு அஞ்சி*** - *(வானத்தில்) ஏறிய சூரியனிடம் அச்சங் கொண்டு;*

***ஏமுறப்புக்கதே அனையது*** *- பாதுகாப்பு அடையப் புகுந்தது போலத் தோன்றுவதாகிய;* ***ஓர்புரை*** *- ஒரு குகையில்;* ***புக்கு எய்தினார்*** *- புகுந்து சென்றார்கள்.*

*வானர வீரர் பிலத்துள் புகுகையில் அதனிடையிலே இருள் செறிந்த ஒரு குகையிலே நுழைந்து செல்லலாயினர் என்பது.*

*அங்கு நிறைந்திருந்த இருளை, தனக்குப் பகைவனான கதிரவனுக்கு அஞ்சிப் பிலத்துள் பதுங்கியிருப்பதாகக் குறித்தது தன்மைத் தற்குறிப்பேற்றவணியாம். எக்கிய - ஏறிய (திசைச் சொல்) அகணி - உள்ளிடம்; புரை: உள்ளறை; (ஏமமுற): ஏமுறு: தொகுத்தல் விகாரம். 27*

***4548. எழுகிலர்; கால் எடுத்து ஏகும் எண் இலர்;***
***வழி உளது ஆம் எனும் உணர்வு மாற்றினார்;***
***இழுகிய நெய் எனும் இருட் பிழம்பினுள்,***
***முழுகிய மெய்யர் ஆய், உயிர்ப்பு முட்டினார். ****

*(அவர்கள்)* ***எழுகிலர்*** *- (அப்பாலே செல்ல) எழுந்து புறப்படாமலும்;* ***கால் எடுத்து ஏகும் எண்இலர்*** *- அடிவைத்துச் செல்லும் கருத்தில்லாமலும்;* ***வழி உளது ஆம் எனும்*** *- அப்பாலே செல்லுவதற்குரிய வழியுள்ளது என்னும்;* ***உணர்வு மாற்றினார்*** *- உணர்வையும் மாற்றிக் கொண்டவர்களாய்;* ***இழுகிய நெய் எனும்*** *- விழுதாக உறைந்த நெய் போன்ற;* ***இருட் பிழம்பினுள்*** *- இருளின் தொகுதியில்;* ***முழுகிய*** *- மூழ்கி விட்ட;* ***மெய்யர் ஆய்*** *- உடம்பையுடைவர்களாய்; (ஒருவர்க்கொருவர் இருப்பிடம் அறிந்து கொள்ள முடியாமல்);* ***உயிர்ப்பு முட்டினார்*** *- (மனத்துயராலும் அச்சத்தாலும்) பெருமூச்செறிந்தார்கள்.*

*வானரவீரர் இருட்பிழம்பினுள் அகப்பட்டுக் கொண்டதால் மேற்கொண்டு செய்யும் செயலில் நாட்டமில்லாது ஒருவரையொருவர் காணமுடியாது திகைத்துப் பெருமூச்சுவிட்டார்கள் என்பது. உயிர்ப்பு முட்டுதல் : மூச்சுமுட்டுதல் என்பது வழக்கு. 28*

*வானரர் வேண்டிக் கொண்டபடி, அனுமன் அவர்களைக் கொண்டு செல்லுதல்*

***4549. நின்றனர், செய்வது ஓர்***
***நிலைமை ஓர்கிலர்,***
***'பொன்றினம் யாம்' எனப்***
***பொருமும் புந்தியர்,***
***'வன் திறல் மாருதி!***
***வல்லையோ எமை***
***இன்று இது காக்க?'***
***என்று, இரந்து கூறினார்.***

***செய்வது ஓர் நிலைமை*** *- (அனுமனைத் தவிர மற்றைய வானர வீரர்கள்) இன்னது செய்யவேண்டும் என்ற செயலையும்;* ***ஓர்கிலர் நின்றனர்*** *- உணரமாட்டாது நின்றவர்களாய்;* ***பொன்றினம் யாம் என*** *- இறந்துவிட்டோம் நாம் என்று;* ***பொருமும்***

***புந்தியர் -*** *வருந்துகின்ற மனமுடையவர்களுமாகி;* ***வன்திறல் மாருதி -*** *(அனுமனை நோக்கி) மிக்க வலிமையுடைய அனுமானே!* ***இன்று -*** *இப்பொழுது;* ***எமை இது காக்க வல்லையோ -*** *எங்களை இத்துயரத்திலிருந்து காப்பதற்கு வல்ல மையுடையையோ என்று முறையிட்டு;* ***இரந்து கூறினார் -*** *வேண்டிக் கொண்டார்கள்.*

*இருள் தொகுதியில் அகப்பட்டுக் கொண்ட அந்த வானரவீரர் தம்மை இறந்து போனவர்களாகவே கருதி வருத்தமுற்று அனுமனை விளித்து, 'இன்று*

*எங்களை இத் துயரத்திலிருந்து காக்கவேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர் என்பது. புந்தி: எண்ணம். ஓர்கலர்: முற்றெச்சம். அல் - எதிர்மறை இடைநிலை.*
*29*

***4550. 'உய்வுறுத்துவென்; மனம் உலையிர்;***
***ஊழின் வால்***
***மெய்யுறப் பற்றுதிர்;***
***விடுகிலீர்' என,***
***ஐயன், அக் கணத்தினில்,***
***அகலும் நீள் நெறி***
***கையினில் தடவி, வெங்***
***காலின் ஏகினான்.***

***உய்வுறுத்துவென் -*** *(மாருதி மற்றவர்களைப் பார்த்து) நீங்கள் பிழைக்க (வேண்டியன) செய்வேன்;* ***மனம் உலையிர் -*** *உள்ளம் வருந்த வேண்டா;* ***ஊழின் -*** *முறையாக (ஒருவர்பின் ஒருவராக நின்று);* ***வால் மெய்யுறப் பற்றுதிர் -*** *(எனது) வாலை உறுதியாகப் பற்றிக் கொள்ளுங்கள்;* ***விடுகிலீர் என -*** *அதனை விட்டு விடாதீர்கள் என்று கட்டளையிட்டு;* ***அக்கணத்தினில் -*** *(அவ் வானரர்கள் தனது வாலைப் பற்றிக் கொண்ட) அப்பொழுதே;* ***ஐயன் -*** *சிறந்தவனான அந்த அனுமன்;* ***அகலும் நீள்நெறி -*** *செல்லவேண்டிய அந்தக் குகையின் வழியில்;* ***கையினில் தடவி -*** *கையால் தடவிக் கொண்டு;* ***வெங்காலின் ஏகினான் -*** *வேகத்தையுடைய காலினால் நடந்து முன்னே சென்றான்.*

*இருட்பிழம்பில் திசை தெரியாமல் திகைத்துத் தம்மைக் காக்குமாறு வேண்டிய வானரர்களுக்கு அனுமன் அபயமளித்துத் தனது நீண்ட வாலைப் பிடித்துக் கொள்ளுமாறு கட்டளையிட்டுக் கைகளால் தடவிக் கொண்டு காலால் முன்னே நடந்து சென்றான் என்பது. காலின் : காற்றுப்போல விரைந்து என்றும் பொருள் கொள்ளலாம். இருளாதலால் அனுமன் தடவிச் சென்றான் என்றார். 30*

***4551. பன்னிரண்டு யோசனை***
***படர்ந்த மெய்யினன்,***
***மின் இரண்டு அனைய***
***குண்டலங்கள் வில் இட,***
***துன் இருள் தொலைந்திட,***
***துரிதத்து ஏகினான் -***

***பொன் நெடுங் கிரி***
***எனப் பொலிந்த தோளினான்.***

***நெடும் பொன்கிரி என*** *- உயர்ந்த மேருமலைபோல;* ***பொலிந்த தோளினான்*** *- விளங்கும் தோள்களையுடைய அனுமான்;* ***பன்னி***

***ரண்டு யோசனை*** *- பன்னிரண்டு யோசனை தூரம்;* ***படர்ந்த மெய்யினன்*** *- வளர்ந்த உடலையுடையவனாய்;* ***மின் இரண்டு அனைய*** *- (தன் காதுகளில் அணிந்துள்ள) இரண்டு மின்னற்கொடி போன்று;* ***குண்டலங்கள் வில் இட*** *- குண்டலங்கள் ஒளியை வீசுவதால்;* ***துன் இருள் தொலைந்திட*** *- அடர்ந்த இருள் அகன்றொழிய;* ***துரிதத்து ஏகினான்*** *- விரைவாகச் சென்றான்.*

*அனுமன் பேருருவமெடுத்துத் தன் குண்டலங்கள் விட்டுவிட்டு ஒளி வீசுவதால் இடையிடையே இருள் விலகிச் செல்ல, அந்தக் குகையின் உட்புறத்தில் சென்றான் என்பது. அனுமன் நினைத்த உருவம் கொள்ளும் ஆற்றல் வாய்ந்தவன்; எதிர்ப்பட்டவர்களையும் கொடிய விலங்குகளையும் அச்சுறுத்துவதற்காக அனுமன் இந்தப் பேருருவைக் கொண்டான் என்பது குறிப்பு. 'அனுமன் நிறமும் பொன்னிறம், வடிவும் பெரிது' என்பது கொண்டு மேருமலையை உவமையாக்கினார்.*
*31*

*வானரர் அழகிய நகர் காணுதல்*

***4552. கண்டனர், கடி நகர்; கமலத்து ஒண் கதிர் -***
***மண்டலம் மறைந்து உறைந்தனைய மாண்பது;***
***விண்தலம் நாணுற விளங்குகின்றது;***
***புண்டரிகத்தவள் வதனம் போன்றது;***

***கடிநகர் கண்டனர்*** *- (அந்தப் பிலத்தின் உட்புறத்தில்) சிறந்த நகர மொன்றை வானரர் கண்டார்கள்;* ***கமலத்து ஒண்கதிர் மண்டிலம்*** *- தாமரையை மலரச் செய்யும் ஒளி மிக்க கதிர்களையுடைய சூரிய மண்டல மானது;* ***மறைந்து உறைந்து அனைய மாண்பது*** *- அந்த இடத்து வந்து மறைந்து தங்கினாற் போன்ற பெருமை வாய்ந்தது;* ***விண்தலம் நாண் உற*** *- வானத்திலுள்ள சொர்க்கலோகமும் வெட்கப்படுமாறு;* ***விளங்குகின்றது*** *- (அதைவிடச் சிறப்பாக) ஒளிபெற்று விளங்குவது;* ***புண்டரிகத்தவள் வதனம் போன்றது*** *- செந்தாமரை மலரில் வாழ்பவளான திருமகளின் முகத்தையொத்து விளங்குவது.*

*பிலத்துள் இருந்த அந்த நகரம் மிகுந்த ஒளி பெற்றமையால் மறைந்துள்ள ஒரு சூரியமண்டலம் போலவும், செல்வச் சிறப்பாலும், பொன்னிறமான பொருள்களையுடைமையாலும் சுவர்க்க லோகமும் நாணுமாறு பொலிவு பெற்றும், மிக்க அழகுள்ளமையால் இலக்குமியின் முகத்தையொத்தும் விளங்கியது என்பது.*
*32*

***4553. கற்பகக் கானது; கமலக் காடது;***
***பொன் பெருங் கோபுரப் புரிசை புக்கது;***

***அற்புதம் அமரரும் எய்தலாவது;***
***சிற்பமும், மயன் மனம் வருந்திச் செய்தது;***

***கற்பகக் கானது*** - *(அந்த நகரம்) கற்பகம் போன்ற மரங்களையுடையது;* ***கமலக் காடது*** - *(தாமரை மலர்களையுடைய) நீர்நிலையையுடையது;*

***பொன் பெருங் கோபுரப் புரிசை புக்கது*** - *பொன்னிறமான உயர்ந்த கோபுரங்களையுடைய மதில்கள் அமையப் பெற்றது;* ***அமரரும் அற்புதம் எய்தல் ஆவது*** - *தேவர்களும் (கண்டு) வியப்படையக் கூடியது;* ***சிற்பமும்*** - *சிற்ப வேலைகளும்;* ***மயன் மனம் வருந்திச் செய்தது*** - *மயன் என்னும் அசுரத் தச்சன் (பலநாள்) மனம் வருந்தித் துன்பப்பட்டு அமைத்தது.*

*இந்த நகரம் பொன்மயமான மரங்களையுடையதென்பதும், பொன்னுலுகில் வாழும் தேவர்களும் கண்டு வியப்படையுமாறு தோற்றச் சிறப்புடையதென்பதும், அசுர சிற்பியான மயனால் அமைக்கப்பட்டதென்பதும் இதிற் குறிக்கப் பெற்றுள்ளன.*

*எல்லாவற்றையும் எளிதில் நினைத்த மாத்திரத்தில் செய்யக்கூடிய மயன் என்னும் அசுரத் தச்சனும் பல நாட்கள் மனத்தால் எண்ணிச் சிந்தித்துச் செய்யப் பெற்றது என்று அந்த நகரத்தின் அருமையும், பெருமையும் கூறினார்.* *33*

***4554. இந்திரன் நகரமும் இணை இலாதது;***
***மந்திர மணியினின், பொன்னின், மண்ணினில்,***
***அந்தரத்து எழு சுடர்அவை இன்று ஆயினும்,***
***உந்த அரும் இருள் துரந்து, ஒளிர நிற்பது;***

***இந்திரன் நகரமும்*** - *(இன்னும் அந்த மாநகரம்) இந்திரன் நகரமாகிய அமராவதியும்;* ***இணை இலாதது*** - *தனக்கு இணையாகப் பெறாத தகுதியுடையது;* ***அந்தரத்து எழு சுடர் அவை*** - *வானத்தில் உதிக்கிற கதிரவன், சந்திரன் என்ற இரண்டு சுடர்களும்;* ***இன்றாயினும்*** - *(அங்கே) தோன்றவில்லை யென்றாலும்;* ***மந்திர மணியினின்*** - *(அந்த நகரத்தின்) மாளிகைகளில் பதிக்கப் பெற்ற மாணிக்கங்களினாலும்;* ***பொன்னின்*** - *பொன்னாலும்;* ***உந்த அரும் இருள்*** - *நீக்குவதற்கு அரிய பேரிருளையும்;* ***துரந்து ஒளிர நிற்பது*** - *அகற்றி ஒளி விளங்கச் செய்வது.*

*அந்தப் பிலத்தின் உட்புறத்திலுள்ள அந்த நகரம் சூரிய சந்திரர்களின் ஒளியைப் பெறுவதற்கு வாய்ப்பில்லாவிட்டாலும் தன்னிடம் நிரம்பியுள்ள மாளிகை இரத்தினங்களாலும், பொன்னாலும் காரிருளையொழித்து விளங்கும் என்பது. மந்திரம் : அரண்மனை.* *34*

***4555. புவி புகழ் சென்னி, பேர்***
***அமலன், தோள் புகழ்***
***கவிகள்தம் மனை என,***
***கனக ராசியும்,***
***சவியுடைத் தூசும், மென்***
***சாந்தும், மாலையும்,***

***அவிர் இழைக் குப்பையும்,***

***அளவு இலாதது;*** ***புவி புகழ் சென்னி -*** *(மேலும் அந்த நகரம்) உலகத்தவரால் பெரிதும் புகழப்படுகின்ற குலோத்துங்க சோழனாகிய;* ***பேர் அமலன் தோள் புகழ் -*** *பெருமையுள்ள குற்றமற்ற அரசனது தோள்வலிமையைப் புகழ்ந்து பாடிய;* ***கவிகள் தம் மனை என -*** *கவிஞர்களின் வீடுகள் போல;* ***கனக ராசியும் -*** *பொற் குவியலும்;* ***சவியுடைத் தூசும் -*** *ஒளி மிக்க பொன்னாடைகளும்;* ***மென் சாந்தும் -*** *மென்மையான கலவைச் சந்தனமும்;* ***மாலையும் -*** *மலர் மாலைகளும்;* ***அவிர் இழைக்குப்பையும் -*** *ஒளிவிட்டு விளங்கும் அணிகலன்களின் குவியல்களும்;* ***அளவு இலாதது -*** *அளவில்லாதபடி நிறையப் பெற்றது.*

*குலோத்துங்க சோழன் தன்னை நாடி வந்து பாடுகின்ற கவிஞர்களுக்குப் பொற்குவியல் முதலியன கணக்கின்றிக் கொடுக்கும் வன்மையுடையவன் என்பதைக் கம்பர் செய்ந்நன்றியுணர்வால் குறித்தார் என்பது சவி: ஒளி. தூசு: ஆடை. இழை. அணிகலன். இழைத்துச் செய்யப்படுவது - காரணக் குறி. இங்கே சோழனது பெருமை உவமான முகத்தால் பாராட்டியுரைக்கப் பெற்றுள்ளது. தம்மைப் புரந்த சடையப்ப வள்ளலை ஆங்காங்கே நினைந்து பாராட்டுவது போலச் சோழ மன்னனையும் இங்கே நினைந்து போற்றுகிறார் கம்பர். 35*

***4556. பயில் குரல் கிண்கிணிப்***
***பதத்த பாவையர்,***
***இயல்புடை மைந்தர், என்று***
***இவர் இலாமையால்,***
***துயில்வுற நோக்கமும்***
***துணைப்பது அன்றியும்,***
***உயிர் இலா, ஓவியம்***
***என்ன ஒப்பது;***

***பயில் குரல் கிண்கிணிப் பதத்த பாவையர் -*** *(இன்னும் அந்த நகரம்) ஒலிக்கின்ற ஓசையுடைய சதங்கை அணிந்த கால்களை உடைய மகளிரும்;* ***இயல்புடை மைந்தர் -*** *நற்பண்புகள் வாய்ந்த ஆண்களும்;* ***என்று இவர் இலாமையால் -*** *என்ற இவர்களுடைய நடமாட்டம் இல் லாததால்;* ***துயில்வுறும் நோக்கமும் துணைப்பது -*** *உறங்கப் போகின் றவர்களை ஒப்பவும்;* ***அன்றியும் -*** *அல்லாமலும்;* ***உயிர் இலா -*** *உயிர் இல்லாமல் இருக்கின்ற;* ***ஓவியம் என்ன -*** *சித்திரம் போன்றது என்று சொல்வதற்கு;* ***ஒப்பது -*** *தகுதியுடையதாகவுள்ளது.*

*மிக வல்லமை வாய்ந்த ஓவியன் ஒருவனால் வரையப்பட்ட சித்திரம் மற்றெவ்வகையிலும் குறைபாடு இல்லாமலிருப்பினும், உயிரில்லாததாகிய ஒரு குறையைக் கொண்டது போலப் பலவகைக் காட்சிகளும் நிரம்பிய இந்த நகரம் வேறு வகையால் குறைபாடில்லாமல் இருந்தாலும் தன் காட்சிகளைக் கண்டு நுகரும் பெண்டிரையும், ஆடவரையும் பெறாத ஒரு பெருங்குறையைக் கொண்டுள்ளது என்பது. துணைப்பது என்னும் சொல்லாட்சி காண்க. (துணை என்ற பெயர்ச் சொல் ஒப்பு என்ற பொருளில்வந்தது). 36*

***4557. அமிழ்து உறழ் அயினியை அடுத்த உண்டியும்,***
***தமிழ் நிகர் நறவமும், தனித் தண் தேறலும்,***
***இமிழ் கனிப் பிறக்கமும், பிறவும், இன்னன***
***கமழ்வுறத் துவன்றிய கணக்கு இல கொட்பது;***

***அமிழ்து உறழ் அயினியை அடுத்த உண்டியும் -*** *(அந்த நகர்) அமிழ்தத்தைப் போன்ற சோறு முதலிய உணவுப் பொருள்களும்;* ***தமிழ் நிகர் நறவமும் -*** *தமிழ்மொழியையொத்த இனிய தேனும்;* ***தனித்தண் தேறலும் -*** *ஒப்பற்ற குளிர்ந்த மதுவும்;* ***இமிழ் கனிப் பிறக்கமும் -*** *இனிய பழங்களின் திரட்சியும்;* ***இன்னன பிறவும் -*** *இவை போன்ற பிற உணவுப் பொருள்களும்;* ***கமழ்வு உறத் துவன்றிய -*** *மணம் வீசுமாறு நிறைந்துள்ள;* ***கணக்கு இல் கொட்பது -*** *எல்லையற்ற பெருமை வாய்ந்தது.*

*உண்டு களித்தற்கு இனிய பலவகைப் பண்டங்களும் நிறைந்துள்ளது அந்த நகரம் என்பது. 'தமிழ் நிகர் நறவமும்' என்ற தொடரால் ஆசிரியரின் மொழிப் பற்றினையுணரலாம்; தொடர்பு கொண்டாரின் அறிவையும் உணர்வையும் கவர்ந்து கொள்ளை கொள்ளுதல் பொதுப்பண்பு. கொட்பு: பெருமை; பிறக்கம்: திரட்சி.(மலை-) இலக்கணை.* *37*

*கலிவிருத்தம் (வேறுசந்தம்)*

***4558. கன்னி நெடு மா நகரம்***
***அன்னது எதிர் கண்டார்;***
***'இந் நகரம் ஆம், இகல்***
***இராவணனது ஊர்' என்று,***
***உன்னி உரையாடினர்;***
***உவந்தனர்; வியந்தார்;***
***பொன்னின் நெடு வாயில்***
***அதனூடு நனி புக்கார்.***

***அன்னது -*** *(அனுமன் முதலிய வானர வீரர்கள்) அத்தன்மை வாய்ந்த;* ***கன்னி நெடு மா நகரம் -*** *என்றும் அழிவில்லாத மிகப் பெரிய நகரத்தை;* ***எதிர் கண்டார் -*** *கண்ணெதிரே கண்டவர்களாய்;* ***இந்நகர் -*** *இந்த நகரமானது;* ***இகல் இராவணனது -*** *பகைமையையுடைய இராவணனது;* ***ஊர்ஆம் என்று உன்னி -*** *நகரமாகுமென்ற மனத்தில் நினைந்து;* ***உரையாடினர்-*** *தமக்குள் பேசிக்கொண்டு;* ***உவந்தனர் வியந்தார் -*** *மகிழ்ச்சியும் வியப்பும்ஒரே சமயத்தில் அடைந்தவர்களாய்;* ***பொன்னின் நெடுவாயில் அதன் ஊடு-*** *பொன் மயமான நீண்டு அகன்ற அந்த நகரத்து வாயிலில்;* ***இனிது புக்கார்-*** *இனிதாக நுழைந்து சென்றார்கள்.*

*அந்த நகரத்தை வானர வீரர் கண்டதும் இராவணனது இலங்கையென்று நினைத்து உடனே சீதையைக் காணலாமென்ற மகிழ்ச்சியோடு உள்ளே*

*நுழைந்தார்கள் என்பது. கன்னி: அழிவின்மை. கண்டார், உரையாடினர், வியந்தார் -முற்றெச்சங்கள்.* *38*

***4559. புக்க நகரத்து இனிது***
***நாடுதல் புரிந்தார்;***
***மக்கள் கடை, தேவர் தலை,***
***வான் உலகின், வையத்து,***
***ஒக்க உறைவோர் உருவம்***
***ஓவியம் அலால், மற்று,***
***எக் குறியின் உள்ளவும்,***
***எதிர்ந்திலர், திரிந்தார்.***

***புக்க நகரத்து** - (வானர வீரர்கள் தாங்கள்) நுழைந்த அந்த நகரத்தில்; **இனிது நாடுதல் புரிந்தார்** - மகிழ்ச்சியோடு தேடத் தொடங்கினார்கள்; **தேவர் தலை** - தேவர்கள் முதலாக; **மக்கள் கடை** - மனிதர்கள் ஈறாக; **வான் உலகின்** - வானுலகத்திலும்; **வையத்து** - நிலவுலகத்திலும்; **ஒக்க உறைவோர் உருவம்** - ஒரு சேரப் பொருந்தி வாழுகின்றவர்களின் உருவங்கள்; **ஓவியம் அலால்** - சித்திர வடிவங்களாக அல்லாமல்; **மற்று எக்குறியின் உள்ளவும்** - வேறு உயிருடைட எந்தப் பொருள்களையும்; **எதிர்ந்திலர்** - காணப் பெறாதவர்களாய்; **திரிந்தார்** - (அந்த நகர் முழுவதும்) சுற்றி அலைந்தார்கள்.*

*தேவர்கள், மனிதர்கள் ஆகியோரின் உருவங்கள் சித்திரவடிவமாகக் காணப்பட்டனவேயல்லாமல் மெய்ம்மையான வடிவமுடை ஓர் உயிராவது அந்த நகரத்தில் காணப்படவில்லை என்பது. மக்கள் தேவர் என்ற முறைக்கேற்ப வையம், வானுலகு என்று நிறுத்தாது மாற்றி நிறுத்தியது எதிர் நிரல் நிறைப் பொருள்கோளாகும். 39*

*மனிதர் எவரையும் காணாது திகைத்தல்*

***4560. வாவி உள; பொய்கை உள;***
***வாச மலர் நாறும்***
***காவும் உள; காவி***
***விழியார்கள் மொழி என்னக்***
***கூவும் இள மென் குயில்கள்,***
***பூவை, கிளி, கோலத்***
***தூவி மட அன்னம்,***
***உள; தோகையர்கள் இல்லை.***

***வாவி உள** - (அந்த நகரத்தில்) நடை வாவிகள் உள்ளன; **பொய்கை உள** - தடாகங்கள் உள்ளன; **வாச மலர் நாறும் காவும் உள** - நறுமணம் கமழும் மலர்களையுடைய சோலைகளும் உள்ளன; **காவி விழியார்கள்** - கருங்குவளை மலர் போன்ற கண்களையுடைய*

*மாதர்களின்; **மொழி என்னக் கூவும்** - இனிய மழலை போலக் கூவு கின்ற; **இள மென்குயில்கள்** - இளமையான மென்மை வாய்ந்த குயில் களும்; **பூவை**- நாகணவாய்ப்பறவைகளும்; **கிளி** - கிளிகளும்; **கோலத்தூவி மட அன்னம்**- அழகான*

*சிறகுகளையுடைய இளமை வாய்ந்த அன்னப் பறவைகளும்;* ***உள-*** *உள்ளன;*
***தோகையர்கள் இல்லை -*** *(ஆனால்) மகளிர் மட்டும் (அங்கே)இல்லை.*

*மகளிர் புனல் விளையாட்டுக்கு வேண்டிய வாவியும் பொய்கையும் பூக்கொய்து விளையாடிப் பூஞ்சோலைகளும் பொழுதை இனிதே கழிக்க உதவும் குயில் முதலிய பறவைகளும் அங்கே நிரம்பியிருந்தாலும் அவற்றைக் கண்டு மகிழ்வதற்கும் அனுபவித்துத் திளைப்பதற்கும் உரிய மகளிர்மட்டும் காணப்பெறவில்லையே என்ற இரக்கக் குறிப்பு உடையது இப்பாடல். தோகையர்: உவமையாகு பெயர்.*
*40*

***4561. ஆய நகரத்தின் இயல்பு***
***உள் உற அறிந்தார்:***
***'மாயைகொல்?' எனக் கருதி,***
***மற்றும் நினைவுற்றார்;***
***'தீய முன் உடற் பிறவி***
***சென்ற அது அன்றோ,***
***தூயது துறக்கம்?' என***
***நெஞ்சு துணிவுற்றார்.***

***ஆய நகரத்தின் இயல்பு -*** *அந்த நகரத்தின் தன்மையினை;* ***உள் உற அறிந்தார் -*** *உள்ளே சென்ற வானர வீரர் அறிந்தனர்;* ***'மாயை கொல்' எனக் கருதி -*** *(அழகும் பயனும் நிறைந்தும்) பயன்கொள்வார் எவரும் இலாத (இந்நகரின் நிலை) ஒரு மாயைத் தோற்றமாக இருக்கக் கூடுமோ என் முதலில் நினைத்து;* ***மற்றும் நினைவு உற்றார் -*** *வேறு வகையாகவும் நினைத்தார்கள்;* ***முன் தீய உடற்பிறவி சென்ற அது அன்றோ -*** *முதலில் (பாவத்) தீமையுடைய உடற் பிறவி கழிந்த பின்னிலை அன்றோ;* ***தூயது துறக்கம் -*** *தூய்மையானதாகிய சுவர்க்கம் காண்பது,* ***என நெஞ்சு துணிவுற்றார் -*** *என்று மனத் துணிவு கொண்டனர்.*

*பிலத்தினுள் புகுந்து இறங்கி வந்ததனால் 'இந்நகரம் நரக உலகத்ததாயிருக்கலாமோ, இப்படி ஒரு மாயத் தோற்றமாய் உள்ளதே' என்று முதலில் நினைந்தனர். ஆனால், அங்குக் காணப்பெற்ற வனப்பும் வசதியும் நிறைந்த நிலையைக் கண்டு, வேறு வகையாக நினைத்தார்கள்; அதாவது, இது சுவர்க்கமாக இருக்கும் என்று நினைத்தனர். ஆனால், உடற்பிறவி நீங்கிய பிறகுதானே சுவர்க்கம் காண முடியும் என்றும் நெஞ்சத்திலே எண்ணம் எழுந்தது. நரகம் அன்று என முதலில் மறுத்ததால் அடுத்து எழுந்த நினைவைத் 'துணிவு' எனக் கவிஞர் குறித்தார். ஆனால், அத்துணிபு பற்றியும் ஐயம் நிகழ்ந்ததை உடற்பிறவி அழிந்தபின் வரும் நிலையன்றோ சுவர்க்கம் என்ற கேள்வி புலப்படுத்திற்று. இக்கேள்வியில் விளைந்த விளக்கத்தைத் தெளிவுறுத்துவது அடுத்த பாடல். 41*

***4562. இறந்திலம்; இதற்கு உரியது***
***எண்ணுகிலம்; ஏதும்***
***மறந்திலம்; அயிர்ப்பினொடு இமைப்பு***
***உள; மயக்கம்***
***பிறந்தவர் செயற்கு உரிய***

***செய்தல் பிழை இன்றால்;***
***திறம் தெரிவது என்?'***
***என இசைத்தனர், திசைத்தார்.***

***இறந்திலம் -*** *(நாம் விண்ணுலகையடைந்து விட்டோமென்றால்) நாம் சாகவில்லையே;* ***இதற்கு உரியது எண்ணுகிலம் -*** *இந்த வானுலகை அடைவதற்குரிய வழிகளையும் கருதினோம் இல்லையே;* ***ஏதும் மறந்திலம் -*** *முன்பு நிகழ்ந்த எதனையும் மறக்கவுமில்லையே;* ***அயிர்ப் பினொடு இமைப்பு உள -*** *ஐயப்படுதலும் இமைப்பதும் நம்மிடம் உள் ளனவே;* ***மயக்கம் பிறந்தவர் -*** *மயக்கமடைந்தவர்கள்;* ***செயற்கு உரிய செய்தல் -*** *செய்வதற்குரிய தவறான செயலை;* ***இன்று -*** *இப்பொழுது நாம் செய்தல்;* ***பிழை -*** *பிழையாகும்;* ***திறம் தெரிவது என் -*** *(நமக்கு நேர்ந்துள்ள) நிலையைக் குறித்து எண்ணித் தெளிவது எவ்வாறு?* ***என் இசைத்தனர் -*** *என்று (வானர வீரர்கள்) தமக்குள் கூறிக் கொண்டவர்களாய்;* ***திசைத்தார் -*** *மனம் மயங்கி நின்றார்கள்.*

*சுவர்க்கமடைந்தவர்களாகத் தம்மை கருதிய வானரவீரர்கள், உடலோடு இருப்பதாலும், சுவர்க்கம் புகுவதற்குரிய வழிகளைச் செய்யாமையாலும், சீதையைத் தேடுதல் முதலான முன்னைய எண்ணங்கள் தொடர்ச்சியாக உண்டாவதனாலும் தெளிவில்லாமல் இருத்தலும் கண்ணிமைத்தலும் மதி மயக்கம் தமக்கு நேராமையாலும் தாம் சொர்க்கத்தையடையவில்லையெனத் துணிந்தனர் என்பது. இசைத்தனர் : முற்றெச்சம். 42*

*சாம்பன் கலக்கம்*

***4563. சாம்பன் அவன் ஒன்று***
***உரைசெய்வான், 'எழு சலத்தால்,***
***காம்பு அனைய தோளியை***
***ஒளித்த படு கள்வன்,***
***நாம் புக அமைத்த பொறி***
***நன்று; முடிவு இன்றால்;***
***ஏம்பல் இனி மேலை***
***விதியால் முடியும்' என்றான்.***

***சாம்பன் அவன் -*** *(அப்பொழுது வீரர்களைப் பார்த்து) சாம்பவான் என்ற கரடிகளுக்கு அரசன்;* ***ஒன்று உரை செய்வான் -*** *ஒன்று சொல்லத் தொடங்கினான்;* ***எழு சலத்தால் -*** *(தன்னிடம் இயல்பாகத்)*

*தோன்றியுள்ள வஞ்சனையால்;* ***காம்பு அனைய தோளியை -*** *இள மூங்கிலைப் போன்ற தோள்களையுடைய சீதையை;* ***ஒளித்த -*** *எடுத்துச் சென்று மறைத்து வைத்த;* ***படு கள்வன் -*** *பெருந் திருடனான இராவணன்;* ***நாம் புக அமைத்த -*** *(சீதையைத் தேடி வரும்) நாம் எல்லோரும் அகப்பட்டுத் தவிக்குமாறு செய்துவைத்த;* ***பொறி நன்று -*** *சூழ்ச்சி நன்றாயிருக்கிறது;* ***முடிவு இன்று -*** *(இதற்கு) ஒரு முடிவுமில்லை;* ***ஏம்பல் -*** *(நமக்குள்ள) ஊக்கமும்;* ***இனி மேலை விதியால் முடியும் -*** *இனிமேல் முற்பிறப்பில் செய்த தீவினையால் நீங்கிவிடும்;* ***என்றான் -*** *என்று வருந்திக் கூறினான்.*

*'சீதையைக் கவர்ந்து சென்ற இராவணன் அச்சீதையைத் தேடிவருபவர் தன்னிடம் வராதபடி வஞ்சனையால் செய்த குழியாகும் இது; நாம் இதில் சிக்கிக் கொண்டமையால் இனி நமக்கு உய்வில்லை; இதில் அழிந்து ஒழிவதே விதி' என்றான் சாம்பான். சலம்: வஞ்சனை. படு கள்வன்: மிகுதியான திறனும் கொடுமையும் வாய்ந்த திருடன். அறிவு இங்கே சூழ்ச்சி என்ற கருத்தில் வந்தது. 43*

*மாருதி சாம்பனைத் தேற்றுதல்*

***4564. 'இன்று, பிலன் இது இடையின்***
***ஏற அரிது எனின், பார்***
***தின்று, சகரர்க்கு அதிகம்***
***ஆகி, நனி சேறும்;***
***அன்று அது எனின்,***
***வஞ்சனை அரக்கரை அடங்கக்***
***கொன்று எழுதும்; அஞ்சல்'***
***என மாருதி கொதித்தான்.***

*(அந்தச் சாம்பனை நோக்கி)* ***மாருதி -*** *அனுமன்;* ***இன்று இடையின் -*** *இப்பொழுது நடுவிலுள்ள;* ***பிலன் ஈது -*** *இந்தப் பிலத்திலிருந்து;* ***ஏற அரிது எனின் -*** *ஏறி அப்பாலே செல்வது முடியாதென்றால்;* ***சகரர்க்கு நனி அதிகம் ஆகி -*** *சகரபுத்திரர்களைக் காட்டிலும் மிக்க வல்லமையுடையவர்களாகி;* ***பார் தின்று சேறும் -*** *நிலத்தைக் குடைந்து கொண்டு (மேற்புறமாக ஏறி) அப்பாலே எளிதாகச் சென்று விடுவோம்;* ***அது அன்று எனின் -*** *அவ்வாறு இல்லையென்றால்;* ***வஞ்சனை அரக்கரை அடங்க -*** *(இப்படி) நம்மை வஞ்சித்த அரக்கர்களை யெல்லாம் முழுவதும்;* ***கொன்று எழுதும் -*** *கொன்றுவிட்டு மேலே எழுந்து செல்வோம்;* ***அஞ்சல் -*** *சற்றும் பயப்படவேண்டா;* ***எனக் கொதித்தான் -*** *என்று மனம் வெந்து கூறினான்.*

*சகரபுத்திரர்களைப் போல நிலத்தைத் தோண்டியாவது, அரக்கர்களையெல்லாம் அடியோடு அழித்து மேலெழுந்தாவது வெளியே செல்வோம் என்று அனுமன் மனங் கொதித்துச் சாம்பவானைத் தேற்றினான் என்பது. யாவரையும் தேற்றவல்ல சாம்பனே கலங்கி விட்டானே என்ற எண்ணத்தால் மாருதி மனம் கொதித்தது. தின்று - தோண்டி (நிலத்தை) சகரர் தோண்டலால் சாகரம் என்று கடலுக்குப் பெயர் வந்தது - தத்திதாந்தநாமம். 44*

*பில நகரின் நடுவில் சுயம்பிரபை*

***4565. மற்றவரும் மற்று அது***
***மனக் கொள வலித்தார்;***
***உற்றனர், புரத்தின் இடை;***
***ஒண் சுடரினுள் ஓர்***
***நல் தவம் அனைத்தும் உரு***
***நண்ணி, ஒளி பெற்ற***

***கற்றை விரி பொன்***
***சடையினாளை எதிர் கண்டார்.***

***மற்றவரும் -*** *(அங்கதன் முதலிய) மற்றை வானர வீரர்களும்;* ***அது மனக் கொள -*** *(அனுமன் கூறிய) அந்தச் சொல் மனத்தில் பதியவே;* ***வலித்தார் -*** *(அவ்வாறே செய்ய) உறுதி கொண்டார்கள்;* ***புரத்தின் இடை உற்றனர் -*** *(யாவரும்) அந்த நகரத்தினிடையே சென்று;* ***ஒண் சுடரினுள் -*** *மிக்க ஒளியையுடைய (அந்நகரின்) நடுவில்;* ***நல்தவம் அனைத்தும் -*** *சிறந்த தவம் முழுவதும்;* ***ஓர் உரு நண்ணி -*** *ஒரு பெண்ணுருவம் பெற்றாற்போல;* ***ஒளி பெற்ற -*** *ஒளி நிறைந்த;* ***கற்றை விரி பொன் சடையினாளை -*** *தொகுதியயக விரிந்த அழகிய சடையையுடையவளான சுயம்பிரபையை;* ***எதிர் கண்டார் -*** *கண்முன்னே கண்டார்கள்.*

*மற்று : அசை. அந்த நகரத்தின் இடையில் தவம் ஓர் உருவம் எடுத்துவந்தாற் போன்ற சுயம்பிரபையை வானரவீரர்கள் கண்டனர் என்பது. 45*

***4566. மருங்கு அலச வற்கலை***
***வரிந்து, வரி வாளம்***
***பொரும், கலசம் ஒக்கும், முலை***
***மாசு புடை பூசி,***
***பெருங் கலை மதித் திரு***
***முகத்த பிறழ் செங் கேழ்க்***
***கருங் கயல்களின் பிறழ் கண்***
***மூக்கின் நுதி காண,***

***மருங்கு அலச வற்கலை வரிந்து -*** *இடையிலே அலையுமாறு மர வுரியைக் கட்டி;* ***வரிவாளம் பொரும் -*** *இரேகைகளையுடைய சக்கரவாகப் பறவையைப் போன்றனவும்;* ***கலசம் ஒக்கும் -*** *பொற்கலசங்களை ஒப்பனவுமான;* ***முலை புடை மாசு பூசி -*** *முலைகளின் மேல் அழுக்குப் படியப்பெற்றும்;* ***பெருங் கலைமதி திருமுகத்த -*** *பெருமை மிக்க பதினாறு கலைகளும் நிரம்பிய முழுமதியை யொத்த அழகிய முகத்தில்;* ***பிறழ் செங்கேழ் -*** *பிறழுகின்ற செந்நிறத்தையுடையனவும்;* ***கருங்கயல்களின் பிறழ்-*** *கருமையான கெண்டை மீன்களைப் போலப்*

*பிறழ்வனவுமான;* ***கண் மூக்கின் நுதி காண -*** *தன் விழிகள் இரண்டும் மூக்கின் நுனியை நோக்கியவாறு இருக்கவும்.*

*சுயம்பிரபை மரவுரி தரித்து நீராடவும் செய்யாமல் தவத்திலேயே மனத்தைச் செலுத்தியிருந்தமையால் முலைகளில் அழுக்குப் படியத் தன் கண்களின் பார்வையை மூக்கின் நுனியிலே செலுத்தியிருந்தாள் என்பது.*

*வற்கலை - பூர்சமென்னும் மரத்திலிருந்து உரித்தெடுக்கப்படும் மெல்லிய பட்டையான ஆடை. இப்பாடலிலுள்ள வரிந்து, பூசி, நாண என்ற வினையெச்சங்களும் அடுத்த மூன்று பாடல்களின் வினையெச்சங்களும் 50 ஆம் பாடலில் வரும் 'இருந்தனள்' என்ற வினை கொண்டு முடியும்.*

*வரிதல் : இறுகவுடுத்தல். வானம்: சக்கரவாளம் என்னும் பறவை; உருண்டை வடிவால் முலைகளுக்கு உவமை. 46*

***4567. தேர் அனைய அல்குல், செறி***
***திண் கதலி செப்பும்***
***ஊருவினொடு ஒப்பு உற***
***ஒடுக்கி, உற ஒல்கும்***
***நேர் இடை சலிப்பு அற***
***நிறுத்தி, நிமிர் கொங்கைப்***
***பாரம் உள் ஒடுங்குற,***
***உயிர்ப்பு இடை பரப்ப,***

***தேர் அனைய அல்குல் -*** *தேர்த்தட்டையொத்த அல்குறை;* ***செறி திண் கதலி செப்பும் -*** *ஒன்றோடு ஒன்று நெருங்கிய வலிய வாழை மரத்தைப் போன்ற;* ***ஊருவினொடு -*** *தொடைகளோடு;* ***ஒப்பு உற ஒடுக்கி -*** *ஒன்றாகப் பொருந்துமாறு அடக்கி வைத்தும்;* ***உயிர்ப்பு இடை பரிப்ப -*** *மூச்சைக் கட்டுவதனால்;* ***உற ஒல்கும் நேர்இடை -*** *மிகவும் அசைகின்ற நுண்ணிய இடையை;* ***சலிப்பு அற நிறுத்தி -*** *சிறிதும் அசையாதவாறு நிறுத்தி;* ***நிமிர் கொங்கைப் பாரம் -*** *சாயாது நிமிர்ந்த முலைச்சுமை;* ***உள் ஒடுக்கு உற -*** *உள்ளே அடங்கி நிற்பவும்.*

*உயிர்ப்பிடை பரித்தல் இடை சலிப்பற நிற்றற்கும், முலைகள் ஒடுங்குவதற்கும் காரணமாகும். இங்குக் கூறப்படுவது யோகமுறையில் வளிநிலை என்பர். இயமம், நியமம், ஆசனம், பிராயாணாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, என்னும் யோகப்பயிற்சி நிலைகளில் இங்கு பிராணாயாமம் குறிக்கப்பட்டது. 'உயிர்ப்பிடை பரித்தல்' என்பதுவே பிராணாயாமம். சலிப்பு: அசைவு, 'ஒடுக்கி', 'ஒடுக்குற', என்ற எச்சங்களும் 50ஆம் செய்யுளில் வரும் 'இருந்தனள்' என்பதனையே கொண்டு முடியும். 47*

***4568. தாமரை மலர்க்கு உவமை சால்புறு தளிர்க் கை,***
***பூ மருவு பொன் செறி குறங்கிடை பொருந்த,***
***காமம் முதல் உற்ற பகை கால் தளர, ஆசை***
***நாமம் அழிய, புலனும் நல் அறிவு புல்ல,*** ***தாமரை மலர்க்கு உவமை -*** *தாமரை மலருககு உவமையாகின்ற;* ***சால்பு உறு -*** *சிறப்பு வாய்ந்த;* ***தளிர்க் கை -*** *தளிர்போன்ற (தன் மெல்லிய) கைகள்;* ***பூ மருவு -*** *அழகு வாய்ந்த;* ***பொன்செறி -*** *பொன்னிறமான ஒன்றோடு ஒன்று நெருங்கிய;* ***குறங்கிடை பொருந்த -*** *தொடைகளிடத்தில் பொருந்தவும்;* ***காமம் முதல் -*** *காமம் முதலாக;* ***உற்ற பகை கால்தளர -*** *பொருந்திய உட்பகைகள் அழிந்தொழியவும்;* ***ஆசை நாமம் அழிய -*** *ஆசை என்னும் பெயரே அழியப்பெறவும்;* ***புலனும் நல்லறிவு புல்ல -*** *ஐம்பொறிகளும் (தீய வழியிற் செல்லாது) நல் லுணர்வைப் பொருந்தவும்.*

*சுயம்பிரபை தன் இரு கைகளையும் இரண்டு தொடைகளின்மேல் வைத்துக் கொண்டு, உட்பகையையொடுக்கிப் பற்றற்று மனத்தை யோகத்திற் செலுத்தியிருந்தாள் என்பது. காமம் முதல் உற்றபகை: காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்ற உட்பகைகள். 'காமம் முதலுற்ற பகை கால் தளர*

*வாசை நாமம் அழிய' என்றதனால் 'பொய் கொலைகளவே காமம் பொருள்நசை இவ்வகை யைந்தும் அடக்கியது இமயம்' என்று சொல்லப்பட்ட இயமமும், 'புலனும் நல்லறிவு புல்ல' என்றதனால் 'பொறியுணர்வெல்லாம் புலத்தின் வழாமல் ஒரு வழிப்படுப்பது தொகைநிலைப் புறனே' என்று கூறப்பெற்ற பிரத்தியாகாரமும் சொல்லப்பட்டவாறு அறியலாம். கால்தளர்தல் - அழிதல். ஒப்பு: 'காமம் வெகுளி மயக்கமிவை மூன்றின் நாமங் கெடுக்கெடும் நோய்' - குறள்:360.* *48*

***4569. நெறிந்து நிமிர் கற்றை நிறை ஓதி நெடு நீலம்***
***செறிந்து சடை உற்றன தலத்தில் நெறிசெல்ல,***
***பறிந்து வினை பற்று அற, மனப் பெரிய பாசம்***
***பிறிந்து பெயர, கருணை கண்வழி பிறங்க,***

**நெறித்து -** *நெறிப்புக் கொண்டு;* **நிமிர் -** *நிமிர்ந்து;* **கற்றை நிறை -** *தொகுதியாக நிறைந்த;* **நெடு நீலம் ஓதி -** *நீண்ட கருமையான கூந் தலானது;* **செறிந்து சடை உற்றன -** *அடர்ந்த சடையாகத் திரண்டு அமைந்ததாகி;* **தலத்தின் நெறி செல்ல -** *பூமியிடத்தில் புரளவும்;* **வினை பறிந்து பற்று அற-** *நல்வினை, தீவினைகள் ஆகிய இரண்டும் அடியோடு நீங்கவும்;* **மனப் பெரிய பாசம் -** *மனத்தில் உண்டாகக் கூடிய பெரிய பாசப்பற்று;* **பிறிந்து பெயர -** *விலகியொழியவும்;* **கருணை கண்வழி பிறங்க -** *அருளானது விழிகளில் தோன்றி விளங்கவும்.*

*வினை முடிபு: செல்ல, பற்றற, பெயர, பிறங்க, என்னும் எச்சங்கள் 50 ஆம் செய்யுளிலுள்ள 'இருந்தனள்' என்பதனையே கொண்டு முடியும். ஞான யோகத்தின்முன் கன்ம வினைகள் தீயின்முன் பஞ்சுபோலாகும் என்பது பற்றி 'வினை பறிந்து பற்றற' எனப்பட்டது. பாசம்: கயிறு - இங்கே உவமையாகு பெயராய் மனத்தைப் பிணிக்கும் பாசமாயிற்று. பூமியிற் கிடந்து புரள்வதெனச் சடைக்கற்றையின் நீளத்தைக் குறித்தார். அருளைக் கண்ணோட்டம் என்பார். ஆதலால், கருணை கண்வழி பிறங்க என்றார். பிறிந்து: அடியோடும் பெயர்க்கப்பட்டு. எதுகை நோக்கிப் 'பிரிந்து' என்ற சொல் 'பிறிந்து' என்றாயது.* *49*

*சுயம்பிரபையைச் சீதையோ என ஐயுறுதல்*

***4570. இருந்தனள் - இருந்தவளை***
***எய்தினர் இறைஞ்சா,***
***அருந்ததி எனத் தகைய***
***சீதை அவளாகப்***
***பரிந்தனர்; பதைத்தனர்; 'பணித்த***
***குறி, பண்பின்***
***தெரிந்து உணர்தி; மற்று***
***இவள்கொல், தேவி?' எனலோடும்,***

**இருந்தனள் -** *(அவ்வாறு) இருந்தாள்;* **இருந்தவளை -** *அப்படி வீற்றிருந்த சுயம்பிரபையை வானரவீரர்கள்;* **எய்தினர் இறைஞ்சா -** *அணுகி வணங்கி;* **அருந்ததி எனத்தகைய சீதை அவளாக -** *அருந்ததி யென்று சொல்லத் தகுந்த கற்புடைய சீதையாகவே நினைத்து;* **பரிந்தனர் -** *(அவளிடம்) அன்பு பூண்டனர்;* **பதைத்தனர் -**

*பரபரப்பு அடைந்தனர்;* **இவள் தேவி கொல் -** *(அனுமனைப் பார்த்து) இவள் சீதைதானா?* **பணித்த குறி -** *(இராமன்) கூறிய அங்க அடையாளங்களைக் கொண்டு;* **பண்பில் தெரிந்து உணர்தி -** *முறையாக ஆராய்ந்து தெளிந்து அறிவாயாக;* **எனலோடும் -** *என்றுகேட்ட அளவில்.*

*மாருதி உரைத்தான் என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும். முன்னர் நகரையும், மாளிகையையும், குகையையும் கண்டு இராவணன் சீதையை ஒளித்த இடம் இவையோயென ஐயுற்ற வீரர்கள் இங்கும் சுயம்பிரபையின் அழகைக் கண்டு அவளைச் சீதையென மயங்கினர் என்பது. சீதையவள்: அவள் - பகுதிப் பொருள் விகுதி. அருந்ததி: வசிட்டரின் மனைவி; கற்புடைப் பெண்களுக்கு உவமை கூறப்படுபவள். இறைஞ்சா: செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்.*
*50*

***4571. 'எக் குறியொடு எக் குணம்***
***எடுத்து இவண் உரைக்கேன்?***
***இக் குறியுடைக் கொடி***
***இராமன் மனையாளோ?***
***அக்கு வடம், முத்தமணி***
***ஆரம்அதன் நேர் நின்று***
***ஒக்கும்எனின், ஒக்கும்' என,***
***மாருதி உரைத்தான்.***

**மாருதி -** *அனுமன் (அந்த வீரர்களை நோக்கி);* **எக்குறியொடு எக்குணம் -** *(சீதைக்குரிய உறுப்பிலக்கணங்களிலும் குணங்களிலும்) எந்த அடையாளத்தை அல்லது எந்தக் குணத்தை;* **இவண் எடுத்து இசைக்கேன் -** *இவளிடம் இருப்பதாக எடுத்துச் சொல்வேன்?* **இக்குறி**

**யுடைக்கொடி -** *இத்தன்மையுடைய கொடிபோன்ற இப்பெண்;* **இராமன் மனையாளோ -** *இராமன் மனைவியாவாளோ? (ஆகமாட்டாள்);* **அக்கு வடம்-** *எலும்பு மாலையானது;* **முத்த மணி ஆரம் -** *(நவமணிகளில் ஒன்றான)முத்தினால் ஆகிய மாலையோடு;* **அதன் நேர் நின்று ஒக்கும் எனின் -** *நேராக இருந்து உவமையாகுமானால்;* **ஒக்கும் -** *(இவளும் அச்சீதையை)ஒத்திருப்பாள்;* **என உரைத்தான் -** *என்று கூறினான்.*

*இராமன் தன்னிடம் கூறிய சீதையின் குணம், குறிகள் ஒன்றும் இவளிடம் இல்லை; ஆதலால், இவள் சீதையில்லையென அனுமன் துணிந்து கூறினான் என்பது. எலும்பு மாலைக்கும், முத்து மாலைக்கும் எந்த அளவு வேறுபாடுண்டோ, அந்த அளவு வேறுபாடு இவளுக்கும் சீதைக்கும் உண்டென்பது. அக்கு வடம்: சங்கு மணி மாலை என்றும் கொள்ளலாம். கொடி: உவமையாகுபெயர். இந்தப் பெண்ணும் சீதையும் ஒப்பாகார் என்பதற்கு அக்குமாலையும் முத்துமாலையும் ஒன்றையொன்று ஒக்குமென்று கூறியதால் பொய்த் தற்குறிப்பணி.* *51*

*சுயம்பிரபையின் வினாவும் வானரர் விடையும்*

*4572.* ***அன்ன பொழுதின்கண் அவ்***
***அணங்கும், அறிவுற்றாள்;***
***முன், அனையர் சேறல் முறை***
***அன்று, என முனிந்தாள்;***
***'துன்ன அரிய பொன்***
***நகரியின் உறைவிர்அல்லீர்;***
***என்ன வரவு? யாவர்?***
***உரைசெய்க!' என இசைத்தாள்.***

***அன்ன பொழுதின்கண் -*** *அச் சமயத்தில்;* ***அவ்அணங்கும் -*** *அந்தச் சுயம்பிரபையும்;* ***அறிவுற்றாள் -*** *(யோக நிலையிலிருந்து நீங்கித்) தன் நினைவு வரப்பெற்றாள் (அவர்களைப் பார்த்து);* ***அனையர் -*** *தனக்கு எதிரில் அவர்கள்;* ***சேறல் முறை அன்று என -*** *வருவது தகாது என்று;* ***முன் முனிந்தாள் -*** *உணர்ச்சி உற்றவுடன் முதலில் கோபங்கொண்டு;* ***துன்ன அறிய -*** *(நீங்கள்) எவரும் அணுக முடியாத;* ***பொன் நகரியின் உறைவிர் அல்லீர் -*** *பொன்மயமான இந்த நகரத்தில் வாழ்வதற்கு உரியவராக இல்லை;* ***வரவு என்ன -*** *(நீங்கள்) இங்கு வரக் காரணம் என்ன;* ***யாவர் -*** *(நீங்கள்) யாவர்?* ***உரை செய்க என -*** *சொல்லுங்கள் என்று;* ***இசைத்தாள் -*** *கேட்டாள்.*

*தவம் செய்யும் பெண்ணாகிய தன்னெதிரில் ஆடவர் பலர் வந்ததால் சுயம்பிரபை கோபித்தாள் என்பது. அறிவுற்றாள்: தன் உணர்வு வரப்பெற்றாள்.*
*52*

*4573.* ***'வேதனை அரக்கர் ஒரு***
***மாயை விளைவித்தார்;***
***சீதையை ஒளித்தனர்; மறைத்த***
***புரை தேர்வுற்று***
***ஏதம் இல் அறத்***
***துறை நிறுத்திய இராமன்***
***தூதர்; உலகில் திரிதும்'***
***என்னும் உரை சொன்னார்.***

***வேதனை அரக்கர் -*** *(உலகத்தார்க்குத்) துன்பமே தரும் அரக்கர்கள்;* ***ஒரு மாயை விளைவித்தார் -*** *ஒரு வஞ்சகச் செயலைச் செய்தனர்;* ***சீதையை ஒளித்தனர் -*** *சீதையை எடுத்துச் சென்று மறைத்துவிட்டார்கள்;* ***ஏதம் இல் -*** *குற்றம் நீங்கிய;* ***அறத்துறை நிறுத்திய -*** *தரும நெறியை நிலைபெறச் செய்த;* ***இராமன் தூதர் -*** *இராமன் தூதுவர்கள் நாங்கள்;* ***மறைத்த புரை தேர்வுற்று -*** *(அந்த அரக்கர்கள் சீதையை) ஒளித்து வைத்துள்ள மறைவிடங்களைத் தேடத்தொடங்கி;* ***உலகில் திரிதும் -*** *உலகில் அலைந்து திரிகின்றோம்;* ***என்னும் -*** *என்கின்ற;* ***உரை சொன்னார் -*** *மறுமொழியைக் கூறினார்.*

*புரை: மறைவான உறைவிடம்.* *53*

*4574.* ***என்றலும், இருந்தவள்***
***எழுந்தனள், இரங்கி,***

***குன்று அனையது ஆயது ஒரு***
***பேர் உவகை கொண்டாள்;***
***நன்று வரவு ஆக!***
***நடனம் புரிவல்' என்னா,***
***நின்றனள்; நெடுங் கண் இணை***
***நீர் கலுழி கொள்ள,***

***என்றலும்*** *- என்று வானரர் கூறியவுடனே;* ***இருந்தவள்*** *- வீற்றிருந்தவளாகிய அந்தச் சுயம்பிரபை;* ***எழுந்தனள்*** *- எழுந்துநின்று;* ***இரங்கி*** *- (அந்த இராமதூதரிடம்) அன்பு கொண்டு;* ***குன்று அனையது ஆயது*** *- மலையையொத்ததாகிய;* ***ஒரு பேர் உவகை கொண்டாள்*** *- ஒப்பற்ற பெரு மகிழ்ச்சியையடைந்தாள்;* ***வரவு நன்று ஆக*** *- (வானரர் களைப் பார்த்து) உங்கள் வரவு நல்வரவு ஆகுக;* ***நடனம் புரிவல்*** *- ஆனந்தக் கூத்தாடுவேன்;* ***என்னா*** *- என்று சொல்லி;* ***நெடுங்கண் இணை*** *- (தன்) நீண்ட இரு கண்களிலிருந்தும்;* ***நீர் கலுழி கொள்ள*** *- ஆனந்தக் கண்ணீர் வெள்ளமாகப் பெருக;* ***நின்றனள்*** *- நின்றாள்.*

*இந்த வானரவீரர்களை இராமதூதர் என்று அறிந்தவுடன் சுயம்பிரபை தனது சாபம் நீங்குங்காலம் நெருங்கியதென்ற காரணத்தால் அவர்கள்மீது அன்பு பாராட்டி, வரவு கேட்டறிந்து கண்களில் ஆனந்தக் கண்ணீர் சொரிய மகிழ்ச்சியால் நடனம் செய்யலானாள் என்பது.*

*மகிழ்ச்சி மிகுதிக்குக் குன்று உவமை; உருவத்திற்குக் கூறப்படும் உவமை இங்கு எல்லையற்ற மகிழ்ச்சியான உணர்ச்சிக்காயிற்று.* *54*

*இராமபிரான் பற்றிச் சுயம்பிரபை கேட்க,அனுமன் விடை பகர்தல்*

***4575. 'எவ் உழை இருந்தனன்***
***இராமன்?' என, யாணர்ச்***
***செவ் உழை நெடுங்***
***கண் அவள் செப்பிடுதலோடும்,***
***அவ் உழை, நிகழ்ந்ததனை***
***ஆதியினொடு அந்தம்,***
***வெவ் விழைவு இல் சிந்தை***
***நெடு மாருதி விரித்தான்.***

***இராமன்*** *- இராமபிரான்;* ***எவ் உழை இருந்தனன்*** *- எவ்விடத்தில் இருக்கின்றான்?* ***என-*** *என்று;* ***யாணர்ச் செவ் உழை*** *- புதுமையான அழகிய மான்போன்ற;* ***நெடுங் கண்ணவள்*** *- நீண்ட கண்களையுடைய அந்தச் சுயம்பிரபை;* ***செப்பிடுதலோடும்*** *- (அனுமனை நோக்கிக்) கேட்டவுடனே;* ***வெவ் விழைவு இல்*** *- கொடிய ஆசையில்லாத;* ***சிந்தை நெடு மாருதி*** *- மனத்தையுடைய பெருமை வாய்ந்த அனுமன்;* ***அவ்உழை நிகழ்ந்ததனை*** *- அங்கு (இராமனிடத்து) நிகழ்ந்த செய்திகளை;* ***ஆதியினொடு அந்தம் விரித்தான்*** *- முதலிலிருந்து முடிவுவரை விரித்துச் சொன்னான்.*

*ஆசையென்பது நல்வழியிற் செல்லவொட்டாது மனத்தைத் தீயவழியிற் புகுத்தலால் 'வெவ் விழைவு' எனப்பட்டது.* *55*

*சுயம்பிரபை தன் வரலாறு கூறுதல்*

***4576. கேட்டு, அவளும், 'என்னுடைய கேடு***
***இல் தவம் இன்னே***
***காட்டியது வீடு!' என விரும்பி,***
***நனி கால் நீர்***
***ஆட்டி, அமிழ்து அன்ன சுவை***
***இன் அடிசில் அன்போடு***
***ஊட்டி, மனன் உள் குளிர,***
***இன் உரை உரைத்தாள்.***

***கேட்டு** - (அனுமன் கூறிய இராமனது வரலாறு முழுவதும்) கேட்டு; **அவளும்** - அந்தச் சுயம்பிரபையும்; **என்னுடைய கேடுஇல் தவம்** - நான் செய்த கெடுதல் இல்லாத தவம்; **இன்னே வீடு காட்டியது** - இப்பொழுதுதான் சாப நீக்கத்தை உண்டாக்கியது; **என** - என்று சொல்லி; **விரும்பி** - அந்த வானரவீரரிடம் அன்பு பூண்டு; **கால் நீர்***

***நனி ஆட்டி** - அவர்களின் கால்களை நீரால் நன்கு கழுவி; **அமிழ்து அன்ன சுவை இன் அடிசில்** - தேவாமிர்தம் போன்ற சுவையுடைய இனிய உணவை; **அன்போடு ஊட்டி** - அன்புடன் உண்ணச் செய்து; **மனன் உள் குளிர** - (அவர்களது) உள்ளம் குளிரும்படி; **இன் உரை உரைத்தாள்** - இனிய சொற்களைச் சொன்னாள்.*

*சுயம்பிரபை அவ் வானரர்களின் காலை நீராட்டி அமுதூட்டினாள் என்பது. விருந்தினரை வரவேற்று அவர்களைத் தெய்வமெனப் பேணுதற்குச் செய்யும் சடங்கு இது. அமிழ்து போன்று இனிய அறுசுவையுண்டியென்பார் இன்னடிசில் என்றார். மோப்பக் குழையும் (90) என்ற திருக்குறள் உரைவிளக்கத்தில் சேய்மைக்கண் கண்டுழி இன்முகமும் அதுபற்றி நண்ணியவழி இன்சொல்லும் அவைபற்றி உடன்பட்டவழி நன்றாற்றலும் விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்று என்பர் பரிமேலழகர். சுயம்பிரபையின் விருந்தோம்பற் பண்பினைப் பரிமேலழகர் உரையுடன் ஒப்பிட்டுணரலாம்.* *56*

***4577. மாருதியும், மற்று அவள்***
***மலர்ச்சரண் வணங்கி,***
***'யார் இந் நகருக்கு இறைவர்?***
***யாது நின் இயற் பேர்?***
***பார் புகழ் தவத்தினை!***
***பணித்தருள்க!' என்றாள்;***
***சோர்குழலும், மற்று அவனொடு,***
***உற்றபடி சொன்னாள்;***

***மாருதியும்*** - *அனுமனும்;* ***அவள் மலர் சரண் வணங்கி*** - *அந்தச் சுயம்பிரபையின் தாமரைமலர் போன்ற அடியிணைகளைத் தொழுது;* ***யார் இந்நகருக்கு இறைவர்*** - *இந்த நகரத்துக்குத் தலைவர் யார்?* ***நின் இயற் பேர் யாது*** - *உனது இயற்கையான பெயர் என்ன?* ***பார் புகழ் தவத்தினை*** - *உலகத்தவர் புகழ்வதற்குக் காரணமான தவம் மேற்கொண்டவளே!* ***பணித்து அருளுக*** - *(இவற்றைச்) சொல்வாயாக;* ***என்றான்*** - *என்று கேட்டான்;* ***சோர்குழலும்*** - *(சடைபட்டுத்) தொங்கும் கூந்தலையுடைய அந்தச் சுயம்பிரபையும்;* ***அவனோடு*** - *அந்த அனுமனிடம்;* ***உற்றபடி சொன்னாள்*** - *நடந்தவற்றை நடந்தபடியே கூறலாயினாள்.*

*பணித்துஅருள்க என்ற தொடரில் அனுமனின் பணிபு புலப்படுதல் காண்க. எல்லார்க்கும் நன்றாம் பணிதல் (125) பணிவுடையன் இன்சொலன் ஆதல் (95) என்ற குறள் தொடர்களுக்கு அனுமன் இலக்கியம் ஆவான். சோர்குழல்: வினைத் தொகையன்மொழி. 'மற்று' இரண்டும்அசைகள்.   57*

***4578. 'நூல்முகம் நுனித்த நெறி***
***நூறு வர, நொய்தா***
***மேல் முகம் நிமிர்த்து,***
***வெயில் காலொடு விழுங்கா,***
***மான் முக நலத்தவன்,***
***மயன், செய்த தவத்தால்,***
***நான்முகன் அளித்துளது, இம்***
***மா நகரம் - நல்லோய்!***

***நல்லோய்*** - *நற்பண்புள்ளவனே!* ***மான்முக நலத்தவன் மயன்*** - *மானின் முகம் போன்ற முகத்தையுடைய சிறந்த பண்பாளனான மயன் என்னும் அசுரத் தச்சன்;* ***நூல்முகம் நுனித்த*** - *யோக நூலில் நுட்பமாகக் குறித்துள்ள;* ***நெறி நூறு வர*** - *கணக்கற்ற வழிகள் தன்னிடம் அமையுமாறு;* ***நொய்தா*** - *எளிதாக;* ***முகம் மேல் நிமிர்த்து*** - *(தனது) முகத்தை மேலே உயர்த்தி (அண்ணாந்து வானத்தை நோக்கியபடி);* ***வெயில் காலொடு விழுங்கா*** - *வெயிலையும் காற்றையும் உணவாக உட்கொண்டு;* ***செய்த தவத்தால்*** - *கடுமையாகச் செய்த தவத்தின் பயனாக;* ***இம்மா நகரம்*** - *இந்தப் பெரிய நகரமானது;* ***நான்முகன் அளித்துளது*** - *நான்கு முகமுடைய பிரமனால் (அம்மயனுக்கு) அளிக்கப்பட்டது.*

*இந்த நகரம் மயனது தவத்தைக் கண்டு மெச்சிய பிரமனால் அவனுக்குக் கொடுக்கப்பட்டதாகும் என்பது. வானத்தை நோக்கி முகத்தை (ஊர்த்துவ முகம்) அமைத்து, வெயிலையும் காற்றையுமே உட்கொண்டு ஒருவகை யோகத் தவம் செய்தான், மயன்; இக்கடுந்தவப் பயனாய் நான்முகனிடமிருந்து இந்நகரத்தை வரமாகப் பெற்றான். மயன்: அசுரச் சிற்பி - மானினது முகம் போன்ற முகமுடையவன். மேல்முகம் நிமிர்த்தல்:யோகமுறை.   58*

***4579. 'அன்னது இது; தானவன்***
***அரம்பையருள், ஆங்கு ஓர்,***
***நல் நுதலினாள் முலை***
***நயந்தனன்; அந் நல்லாள்***
***என் உயிர் ஆனாள்; அவளை***

***யான், இவன் இரப்ப,***
***பொன்னுலகின்நின்று, ஒளிர்***
***பிலத்திடை புணர்த்தேன்.***

***இது அன்னது -*** *இந்த நகரம் அவ்வாறாக அமைக்கப்பட்டது;* ***தானவன்-*** *அந்த மயன் என்ற அசுரத் தச்சன்;* ***அரம்பையருள் ஓர் நல் நுதலினாள் -*** *தேவமாதர்களுள் அழகான நெற்றியையுடைய ஒருத்தியின்;* ***முலை நயந்தனன்-*** *போகத்தை விரும்பினான்;* ***அந்நல்லாள் என உயிர் அனாள் -*** *நல்லஅழகு வாய்ந்த அவள் என் உயிர்போன்ற தோழியாவாள்;* ***அவன் இரப்ப -*** *அந்த அசுரன் (என்னை) மன்றாடிக் கேட்டுக் கொண்டதால்;* ***யான் அவளை-*** *நான் அத் தெய்வப் பெண்ணை;* ***பொன்னுலகின் நின்று -*** *பொன்மயமானதேவலோகத்திலிருந்து;* ***ஒளிர் பிலத்திடை -*** *விளங்குகின்ற இந்தப் பிலத்தில்;* ***புணர்த்தேன் -*** *கொண்டுவந்து சேர்த்தேன்.*

*தானவன்: காசியப முனிவரின் மனைவியருள் தனு என்பவளின்வழி வந்தவன்; தானவர் ஓர் அரக்க இனத்தவராவர். தானவன என்றது மயனையும் நன்னுதலினாள் என்றது ஏமை என்பவளையும் குறிக்கும் வான்மீகம். அசுரத் தச்சனான மயன் தான் புரிந்த தவப்பயனாகப் பிரமனிடமிருந்து அசுரகுருவான சுக்கிராச்சாரியின் பொருள் முழுவதையும் பெற்றுப் பொன்மயமான வனத்தை உருவாக்கினான் என்றும், பின்னர் அது அந்த மயனால் காதலிக்கப்பட்ட தேவமாதுக்கு உரியதாயிற்று என்றும் கூறும். இச்செய்யுள் முதல் 63 முடிய அந்தாதித் தொடையாக அமைந்துள்ளமை காண்க.* 59

***4580. 'புணர்ந்து, அவளும் அன்னவனும்,***
***அன்றில் விழை போகத்து***
***உணர்ந்திலர், நெடும் பகல் இம்***
***மா நகர் உறைந்தார்;***
***கணங் குழையினாளொடு உயர்***
***காதல் ஒருவாது உற்று,***
***இணங்கி வரு பாசமுடையேன்***
***உடன் இருந்தேன்.***

***அவளும் அன்னவனும் -*** *அந்தத் தேவமாதும், அந்த மயனும்;* ***புணர்ந்து -*** *கூடி (இன்பம் துய்த்து);* ***அன்றில் விழை போகத்து -*** *அன்றில் பறவையும் விரும்பும்படியான சிற்றின்பத்தில்;* ***உணர்ந்திலர் -*** *(வேறொன்றையும்) அறியாதவர்களாய்;* ***நெடும்பகல் இம்மாநகர் -*** *பலகாலம் இந்தப் பெரிய நகரத்தில்;* ***உறைந்தார் -*** *வசித்தார்கள்;* ***கணங்குழையினாளொடு -*** *திரண்ட காதணி பூண்ட அப் பெண்ணுடன்;* ***உயர் காதல் ஒருவாது -*** *சிறந்த அன்பு நீங்காது;* ***உற்று இணங்கி வரு -*** *நெருங்கிப் பழகி வருகின்ற;* ***பாசம் உடையேன் -*** *பாசமுடையவளாகிய நான்;* ***உடன் இருந்தேன் -*** *அந்தப் பெண்ணோடு இங்கேயே இருந்துவிட்டேன்.*

*மயனும், தேவமாதும் சிற்றின்பத்தில் மூழ்கி இங்கு வசிக்குங் காலத்தில் என் உயிர்த்தோழியான அவளை விட்டுப் பிரிய மனமில்லாமல் நானும் அவளுடன் இருந்தேன் என்றாள் சுயம்பிரபை. பகல்: நாள்கள் - இலக்கணை. காதல் இருவர்*

*கருத்தொருமித்து ஆதரவுபட்ட இன்பமாதலின் 'உயர் காதல்' எனப்பட்டது.*
*60*

***4581. 'இருந்து பல நாள்***
***கழியும் எல்லையினில், நல்லோய்!***
***திருந்திழையை நாடி***
***வரு தேவர்இறை சீறி,***
***பெருந் திறலினானை உயிர் உண்டு,***
***''பிழை'' என்று, அம்***
***முருந்து நிகர் மூரல்***
***நகையாளையும், முனிந்தான்.***

***நல்லோய் -*** *நல்ல பண்புகள் உடையவனே;* ***இருந்து -*** *(இவ்வாறு அவர்கள் இருவரும்) கூடியிருந்து;* ***பல நாள் கழியும் எல்லையினில் -*** *பலநாள்கள் கழியும் பொழுதில்;* ***திருந்து இழையை நாடி வரு -*** *வேலைப்பாடு மிக்க அணிகளைப் பூண்ட அந்தத் தேவமாதைத் தேடி வருகின்ற;* ***தேவர் இறை -*** *தேவர் தலைவனாகிய இந்திரன்;* ***சீறி -*** *கோபித்து;* ***பெருந் திறலினானை -*** *மிக்க வல்லமை பொருந்திய அந்த மயனை;* ***உயிர் உண்டு -*** *கொன்று;* ***அம்முருந்து நிகர் -*** *அழகான மயிலிறகின் அடிக்குருத்தையொத்த;* ***மூரல் நகையாளையும் -*** *பற்களையும் புன்சிரிப்பையுமுடைய அந்தத் தெய்வப் பெண்ணையும்;* ***பிழை என்று -*** *(நீ செய்தது) தவறான செயலாகும் என்று;* ***முனிந்தான் -*** *சினந்து கூறினான்.*

*இவ்வாறு அவ் விருவரும் இந்த நகரத்தில் இன்பம் நுகர்ந்து பலநாட்கள் கழிக்க, வானுகலத்தில் அத்தேவமாதைக் காணாமையால் அவளைத் தேடி வந்த இந்திரன், அந்த ஏமையைக் கவர்ந்த காரணத்தால் அம் மயனைக் கொன்று, அவனுக்கு இணங்கிய அந்த ஏமையைக் கோபித்தான் என்பது. திருந்திழை: வினைத்தொகையன்மொழி. முருந்து: மயிலிறகின்அடி - பற்களுக்கு உவமை.* *61*

***4582. 'முனிந்து, அவளை, ''உற்ற செயல்***
***முற்றும் மொழிக'' என்ன,***
***கனிந்த துவர் வாயவளும்***
***என்னை, ''இவள்கண் ஆய்,***
***வனைந்து முடிவுற்றது'' என,***
***மன்னனும், இது எல்லாம்***
***நினைந்து, ''இவண் இருத்தி; நகர்***
***காவல் நின்னது'' என்றான்.***

***அவளை முனிந்து -*** *(அந்தத் தேவமாதை இந்திரன்) அவ்வாறு கோபித்து;* ***உற்ற செயல் முற்றும் மொழிக -*** *நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் கூறுக;* ***என்ன -*** *என்று கட்டளையிட;* ***கனிந்த துவர் வாயவளும் -*** *நன்றாக முற்றிய பவழம்போன்ற இதழையுடைய அந்த ஏமையும்;* ***என்னை -*** *என்னைப் பற்றிக் கொண்டு;* ***இவள் கண்ணாய் வனைந்து -*** *இவளால் (இப்பழிப்புச் செயல்) தொடுக்கப்பட்டு;* ***முடிவுற்றது என -*** *முடிந்ததெனத் தெரிவிக்க;* ***மன்னனும் -*** *இந்திரனும்;* ***இது எல்லாம் நினைந்து -*** *இவற்றையெல்லாம் நன்றாக ஆராய்ந்து (என்னைப் பார்த்து);* ***இவண் இருத்தி -*** *இந்த*

*நகரிலேயே (தனியாக) தங்குவாய்;* ***நகர் காவல் நினது -*** *நகரத்தைப் பாதுகாக்கும் வேலை உன்னுடையது;* ***என்றான் -*** *என்று கூறினான்.*

*நடந்த செயலை என் தோழியாலறிந்த இந்திரன் எல்லாவற்றிற்கும் முதற் காரணம் நானே எனத் தெளிந்து என்மீதுள்ள கோபத்தால் ஒருவருமில்லாத இந்த நகரத்தைப் பாதுகாத்துத் தனியே இருக்குமாறு கட்டளையிட்டான் என்பது. மன்னன்: இந்திரன். 'வேந்தன் மேய தீம்புனல் உலகமும்' - தொல். பொருள். 5.62*

***4583. என்றலும்; வணங்கி, ''இருள் ஏகும்***
***நெறி எந் நாள்?***
***ஒன்று உரை, எனக்கு***
***முடிவு'' என்று உரைசெயாமுன்,***
***'வன் திறல் அவ் வானரம்,***
***இராமன் அருள் வந்தால்,***
***அன்று முடிவு ஆகும், இடர்''***
***என்று அவன் அகன்றான்.***

***என்றலும் -*** *என்று இந்திரன் எனக்குக் கட்டளையிட்டவுடனே;* ***வணங்கி -*** *(நான் அந்த இந்திரனைத்) தொழுது;* ***இருள் ஏகும் நெறி எந்நாள்-*** *என்னுடைய இத்துன்பம் நீங்குவதற்குரிய வழி எக்காலத்து உண்டாகும்?* ***எனக்கு முடிவு ஒன்று உரை -*** *என் துன்பத்திற்கு முடிவு காலம் ஒன்றைச்சொல்வாய்;* ***என்று உரை செயாமுன் -*** *என்று கேட்பதற்கு முன்னேயே;* ***அவன் -*** *அவ்இந்திரன்;* ***வன் திறல் அவ்வானரம் -*** *மிக்க வலிமையுடையவானரங்கள்;* ***இராமன் அருள் வந்தால் -*** *இராமனது கட்டளையால் இங்குவந்தால்;* ***அன்று -*** *அக்காலத்தில்;* ***இடர் முடிவு ஆகும் -*** *உனது துன்பம்ஒழியும்;* ***என்று அகன்றான் -*** *என்று சொல்லித் தன் நகருக்குச் சென்றான்.*

*நான் செய்த பிழைக்குத் தண்டனையாக என்னை இங்கே இருக்குமாறு தேவேந்திரன் கட்டளையிட்டவுடன், 'எனது துன்பம் நீங்கும் காலம் எப்போது' என்று நான் அவனைத் தொழுது கேட்டதற்கு அவனும், 'இராம தூதராகிய வானரர்கள் இங்கு வரும்பொழுது உனது துன்பம் நீங்கும்' எனச் சாபவிமோசனம் கூறிச் சென்றான் என்பது. இருள்: துன்பம் - இலக்கணை. 63*

***4584. 'உண்ண உள; பூச உள;***
***சூட உள; ஒன்றோ?***
***வண்ண மணி ஆடை உள;***
***மற்றும் உள பெற்றேன்;***
***அண்ணல்! அவை முற்றும் அற***
***விட்டு, வினை வெல்வான்,***
***எண்ண அரிய பல் பகல்***
***இருந் தவம் இழைத்தேன்.***

***அண்ணல் -*** *பெருமை மிக்க அனுமனே!* ***உண்ண உள -*** *(எனக்கு இங்கே) உண்பதற்குரிய (கனி முதலிய) பொருள்கள் உள்ளன;* ***பூச உள -*** *பூசுவதற்குரிய கலவைச்*

*சாந்து முதலிய பொருள்கள் உளளன;* ***சூட உள -*** *தலையில் சூடுவதற்குரிய மலர்மாலைகள் முதலியன உள்ளன;* ***ஒன்றோ -*** *இவைமட்டுந்தானா?* ***வண்ண மணி ஆடை உள -*** *நல்ல நிறத்தோடு கூடிய அழகிய ஆடைகளும் உள்ளன;* ***மற்றும் உள -***

*(இவையேயல்லாமல்) இன்னும் அணிகள் முதலியன யாவும் உள்ளன;* ***பெற்றேன் -*** *இவையனைத்தையும் நான் அடைந்துள்ளேன்; (என்றாலும்)* ***அவை முற்றும் அற விட்டு -*** *அவற்றைத் துய்க்காமல் எல்லாப் பற்றுக்களையும் நீக்கி;* ***வினை வெல்வான் -*** *(என்) தீவினையை வெல்லும் பொருட்டு;* ***எண்ண அரிய பல்பகல் -*** *எண்ணுவதற்கு அரிய நெடுங்காலமாக;* ***இருந்தவம் இழைத்தேன் -*** *பெருந்தவத்தைச் செய்தேன்.*

*இன்பத்திற்குரிய பல பொருள்கள் இந் நகரில் இருந்தும், எனது சாபம் நீங்குமாறு பல காலமாகப் பெருந்தவம் புரிந்து கொண்டிருந்தேன் என்று சுயம்பிரபை கூறினாள் என்பது. ஓகாரம்: பிரிநிலை. அண்ணல்: அண்மைவிளி.*
*64*

***4585. 'ஐ - இருபது ஓசனை***
***அமைந்த பிலம், ஐயா!***
***மெய் உளது; மேல் உலகம்***
***ஏறும் நெறி காணேன்;***
***உய்யும் நெறி உண்டு,***
***உதவுவீர்எனின்; உபாயம்***
***செய்யும்வகை சிந்தையில்நினைத்திர்,***
***சிறிது' என்றாள்.***

***ஐயா -*** *பெரியவனே!* ***அமைந்த பிலம் -*** *பொருந்திய இக் குகைத் துவாரமானது;* ***ஐ இருபது ஓசனை மெய் உளது -*** *நூறு யோசனை விரிந்த வடிவு கொண்டது;* ***மேல் உலகம் ஏறு நெறி காணேன் -*** *வானுலகத்திற்கு ஏறிச் செல்லும் வழியை அறியேன்;* ***உதவுவீர் எனின் -*** *(நீங்கள் எனக்கு) உதவி செய்வீர்களென்றால்;* ***உய்யும் நெறி உண்டு -*** *(நான்) ஈடேறுவதற்கு வழிஏற்படும்;* ***உபாயம் செய்யும் வகை -*** *அதற்கான உபாயம் செய்யும் விதத்தை;* ***சிந்தையில் சிறிது நினைத்திர் -*** *உங்கள் மனத்தில் சிறிது கருதுங்கள்;* ***என்றாள் -*** *என்று கூறினாள் (சுயம்பிரபை).*

*இந்தப் பிலம் நூறு யோசனை பரப்புள்ளதாய் இருள் அடர்ந்திருப்பதால் மேலே ஏறிச் செல்லும்வழி இதுவென் தெரியாதபடி இந்திரனது சாபம் என்னைத் தடை செய்கிறது; என் சாபவிடைக் காலம் குறுகி உங்கள் வருகையால் நான் ஈடேறும் வகையும் உள்ளது. ஆதலால், அவ்வாறான உபாயத்தைச் செய்ய வேண்டுமென்று அனுமன் முதலியோரைச் சுயம்பிரபை வேண்டினான் என்பது.* *65*

*அனுமன் மறுமொழி*

***4586. அன்னது சுயம்பிரபை***
***கூற, அனுமானும்***
***மன்னு புலன் வென்று***

***வரு மாதுஅவள் மலர்த்தாள்***
***சென்னியின் வணங்கி, 'நனி***
***வானவர்கள் சேரும்***
***பொன்னுலகம் ஈகுவல், நினக்கு'***
***எனல் புகன்றான்.***

***சுயம்பிரபை -*** *சுயம்பிரபை;* ***அன்னது கூற -*** *அவ்வாறான சொற்களைச் சொல்ல;* ***அனுமானும் -*** *அனுமனும்;* ***மன்னு புலன் வென்று வரு -*** *பொருந்திய ஐம்புலன்களையும் வெற்றி கொண்ட;* ***மாதுஅவள் மலர்த்தாள் -*** *அந்தப் பெண்ணின் தாமரை மலர் போன்ற அடிகளை;* ***சென்னியின் வணங்கி-*** *தலையால் வணங்கி;* ***நினக்கு -*** *உனக்கு;* ***வானவர்கள் நனி சேரும் -*** *தேவர்கள் மிகுதியாகக் கூடி நிற்கும்;* ***பொன்னுலகம் ஈகுவல் -*** *பொன்மயமான தேவருலகத்தை அளிப்பேன்;* ***எனல் புகன்றான் -*** *என்று சொன்னான்.*

*மேலுலக நெறியைக் காட்டுமாறு வேண்டிய சுயம்பிரபைக்கு, அவ்வாறே செய்வதாக அனுமன் வாக்களித்தான் என்பது. புலன்களை வென்று தவம் செய்தவாறு அனுமன், அவள் திருவடியை வணங்கினான்.* *66*

*இருளிலிருந்து விடுதலை பெறுவதற்கு உரியதைச் செய்யுமாறு அனுமனை வானரர் வேண்டுதல்*

***4587. 'முழைத்தலை இருட் கடலின்***
***மூழ்கி முடிவேமைப்***
***பிழைத்து உயிர் உயிர்க்க***
***அருள் செய்த பெரியோனே!***
***இழைத்தி, செயல் ஆய***
***வினை' என்றனர் இரந்தார்;***
***வழுத்த அரிய மாருதியும்***
***அன்னது வலிப்பான்,***

***முழைத்தலை -*** *(மற்றைய வானரவீரர் அனுமனை நோக்கி) இந்தப் பிலத்துவாரத்தில்;* ***இருட்கடலில் மூழ்கி -*** *இருளாகிய கடலில் மூழ்கி;* ***முடிவேமை -*** *இறக்க வேண்டிய எங்களை;* ***உயிர் பிழைத்து உயிர்க்க -*** *இறவாமல் தப்பி வாழும்படி;* ***அருள் செய்த -*** *கருணை புரிந்த;* ***பெரியோனை -*** *பெருமைக் குணமுடையவனே!* ***செயல் ஆயவினை -*** *இனிச் செய்யத்தக்க செயலை;* ***இழைத்தி -*** *செய்வாய்;* ***என்றனர் இரந்தார் -*** *என்று பணிந்து வேண்டினார்கள்;* ***வழுத்த அரிய மாருதியும் -*** *புகழ்ந்து கூறமுடியாத (மிக்க நற்குணங்களையுடை) அனுமனும்;* ***அன்னது வலிப்பான் -*** *அவ்வாறே செய்வதற்கு மனத்தினில் உறுதிகொண்டான்.*

*இந்தப் பிலத்துள் சீதைஇல்லையென்பது தெளிவாக விளங்க, இனி இங்கிருப்பதால் எவ்விதப் பயனுமில்லையாதலால் உடனே வெளியே செல்வதற்குரிய செயலை நாடவேண்டுமென்று அனுமனை மற்றை வானரர் வேண்டிக்கொள்ள,*

*அனுமனும் அதற்கு இசைந்தான் என்பது.  எங்களைப் பிலத்தில் பாதுகாத்தது போலவே இந்தச் சுயம்பிரபையும் இப் பிலத்திலிருந்து நற்கதியடையுமாறு பாதுகாக்க வேண்டுமென்று வானரவீரர் அனுமனை வேண்டினர் எனவும் கூறுவர்.*
*67*

*அனுமன் பேருருவம் கொண்டு, பிலத்தைப் பிளந்து, ஓங்கி நிற்றல்*

***4588. 'நடுங்கன்மின்' எனும் சொலை***
***நவின்று, நகை நாற***
***மடங்கலின் எழுந்து, மழை***
***ஏற அரிய வானத்து***
***பெருங்கல் இல் பிலம் தலை***
***திறந்து உலகொடு ஒன்ற,***
***வெருங் கைகள் சுமந்து, நெடு***
***வான் உற நிமிர்ந்தான்.***

***நடுங்கன்மின் எனும் -*** *(அனுமன் மற்றவரை நோக்கி) அஞ்சாதீர் கள் என்ற;* ***சொலை நவின்று -*** *அபயமொழியைக் கூறி;* ***நகை நாற -*** *புன்சிரிப்புத் தோன்ற;* ***மடங்கலின் எழுந்து -*** *ஆண்சிங்கம் போலக் கிளம்பி;* ***மழை ஏற அரிய -*** *மேகங்களும் ஏறிச் செல்லமுடியாத;* ***வானத்து உலகொடு -*** *(அப்பாலுள்ள) வானுலகத்தோடு;* ***ஒடுங்கல் இல் பிலம் -*** *குறுகல் இல்லாத (அகன்ற) குகையானது;* ***தலை திறந்து ஒன்ற -*** *தலையிடம் திறந்து ஒன்றாகிவிட;* ***நெடுங் கைகள் சுமந்து -*** *(தன்னுடைய)நீண்ட கைகளையுயர்த்திக் கொண்டு;* ***நெடு வான் உற -*** *(தனது) பெரிய உருவம் விரிந்த ஆகாய முழுவதும் நிறையும்படி;* ***நிமிர்ந்தான் -*** *மேலோங்கினான்.*

*அனுமன் மற்றவர்க்கு அபயமளித்துச் சிரித்தவாறு ஆண்சிங்கம் போலக் கிளம்பிப் பிலம் முதல் ஆகாயம்வரை ஒரேவழியாகத் திறக்குமாறு தன் கைகளைத் தூக்கிக் கொண்டு பேருருவம் எடுத்து நிமிர்ந்தான் என்பது. நாறுதல்: தோன்றுதல்.  ஆண்சிங்கம் போன்று பேருருக்கொண்டு எழுந்ததிலிருந்து இவன் அரிய செயல்களையும் எளிதாய இயற்ற வல்லவன் என்ற அவனது பெருமை கூறப்பெற்றது.  மடங்கல்: பிடரிமயிர் மடங்கப் பெற்றிருப்பது என்று சிங்கத்திற்குக்காரணக்குறி.*  *68*

***4589. எருத்து உயர் சுடர்ப் புயம்***
***இரண்டும் எயிறு என்ன,***
***மருத்து மகன் இப்படி***
***இடந்து, உற வளர்ந்தான்;***
***கருத்தின் நிமிர் கண்ணின்***
***எதிர் கண்டவர் கலங்க,***
***உருத்து, உலகு எடுத்த***
***கருமாவினையும் ஒத்தான்.***

***மருத்து மகன் -*** *வாயு மகனான அனுமன்;* ***எருத்து உயர் சுடர் புயம் இரண்டும் -*** *பிடரியின் இருபுறமும் உயர்ந்த ஒளியையுடைய கைகள் இரண்டும்;* ***எயிறு என்ன -*** *இரண்டு வளைந்த தந்தம்போல விளங்க;* ***நிமிர் கண்ணின் எதிர் -*** *சிறந்த கண்ணெதிரே;* ***கண்டவர் -*** *நேரில் பார்த்தவர்;* ***கருத்தின் கலங்க -*** *நெஞ்சம் கலங்கும்படி;* ***இப்படி இடந்து உற -*** *இந்தப் பிலத்தின் மேல்தளத்தைப் பிளந்து கொண்டு;* ***வளர்ந்தான் -*** *உயர்ந்தவனாய்;* ***உலகு உருத்து எடுத்து -*** *பூமியை (அந்த நாளில்) சினங்கொண்டு (தன் கோரத் தந்தங்களால்) பாதலத்திலிருந்து தூக்கி வந்த;* ***கரு மாவினையும் -*** *பெரிய வடிவமுடைய கரிய வராகத்தையும்;* ***ஒத்தான் -*** *ஒத்து விளங்கினான்.*

*அனுமன், தன் இரு கைகளும் தந்தம் போல் விளங்க நிலத்துள்ளிருந்த பிலத்திலிருந்து பார்த்தவர் கலங்குமாறு நிலத்தைப் பிளந்து வெளிவந்த தோற்றத்தால், பாதலத்தில் அழுந்திக் கிடந்த பூமியைத் தன் கோரத் தந்தங்களால் குத்தி எடுத்துக் கொண்டு வெளிவந்த திருமாலின் வராக அவதார வடிவத்தைப் போன்றிருந்தான் என்பது. மா: விலங்கின் பொதுப்பெயர்; இங்கே வராகத்தைக் (பன்றி) குறித்தது. உருத்தல்: சினங்கொள்ளுதல்.* *69*

***4590. மா வடிவுடைக் கமல***
***நான்முகன் வகுக்கும்***
***தூ வடிவுடைச் சுடர் கொள்***
***விண் தலை தொளைக்கும்***
***மூஅடி குறித்து முறை***
***ஈர் - அடி முடித்தான் பூ வடிவுடைப் பொரு இல் சேவடி புரைந்தான்.*** *

***மா வடிவுடைக் கமல நான்முகன் -*** *சிறந்த வடிவமுடைய (திருமா லின்) நாபிக் கமலத்தில் உதித்த பிரமன்;* ***வகுக்கும் -*** *படைத்துள்ள;* ***தூ வடிவுடை -*** *தூய்மையான தோற்றமுடைய;* ***சுடர் கொள் விண் -*** *(சூரியன் முதலிய) சுடர்களைத் தன்னிடம் கொண்ட ஆகாயத்தினது;* ***தலை -*** *உச்சிமுகட்டை;* ***தொளைக்கும் -*** *துளைத்து ஊடுருவிச் சென்றதாகிய;* ***மூ அடி குறித்து முறை ஈர்அடி முடித்தான் -*** *(வாமனனாகி மகாபலியிடம்) மூன்றடி மண் இரந்து பெற்று, உடனே முறையாக (வானம் பூமி என்ற இரண்டையும்) தன் இரண்டடிகளால் அளந்து நின்ற (திரிவிக்கிரமனான) திருமாலின்;* ***பூ வடிவுடை -*** *அழகிய வடிவையுடைய;* ***பொருவு இல் சேவடி -*** *ஒப்பற்ற சிவந்த திருவடிகளை;* ***புரைந்தான் -*** *ஒத்து விளங்கினான்.*

*இப்பாட்டில் திருமாலின் திரிவிக்கிரமாவதாரத்தை ஒப்பாகக் கூறினார். மாவலியிடம் மூவடி மண் வேண்டி ஈரடிகளால் மண்ணும் விண்ணும் அளந்த வரலாறு இங்கே குறிக்கப்பட்டுள்ளது. தூவடிவுடைச் சுடர்கொள்விண்: நிர்மலமானதும், சூரிய சந்திரர்களான சுடர்கள் சஞ்சரிக்கப் பெற்றதுமான ஆகாயம். புரைதல்: ஒத்தல். அனுமனுக்குத் 'திருவடி' என்ற பெயர் உண்டாதலால் இங்கு*

*வேறு வகையாகத் திருமாலின் சேவடி போன்றவன் என்று நயம்படி உரைத்தார் என நயம் காண்பர்.* *70*

*பிலத்தின் மேற்பகுதியை மேலைக்கடலில் அனுமன் எறிதல்*

*4591.* ***ஏழ் - இருபது ஓசனை***
***இடந்து, படியின்மேல்***
***ஊழுற எழுந்து, அதனை,***
***உம்பரும் ஒடுங்க,***
***பாழி நெடு வன்***
***பிலனுள்நின்று, படர் மேல்பால்***
***ஆழியின் எறிந்து, அனுமன்***
***மேகம் என ஆர்த்தான்.***

***அனுமன் -*** *அனுமன்;* ***ஏழ்இருபது ஓசனை இடந்து -*** *நூற்று நாற்பது யோசனை தூரம் பிளந்துகொண்டு;* ***பாழி நெடு வன் பிலனுள் நின்று -*** *உள்ளாழ்ந்த நெடிய வலிய பிலத்திலிருந்து;* ***படியினிமல் ஊழ் உற எழுந்து -*** *பூமி மட்டத்திற்கு முறையே எழுந்துவந்து; (பின்பு)* ***அதனை -*** *அந்தப் பில நகரத்தை;* ***உம்பரும் ஒடுங்க -*** *தேவர்களும் அஞ்சி நடுக்கமடைய;* ***படர்மேல்பால் ஆழியின் எறிந்து -*** *பரவிய மேற்குத்திசைக் கடலில் வீசியெறிந்து;* ***ஆழி என ஆர்த்தான் -*** *அலை கடல்போலப் பேராரவாரம் செய்தான்.*

*அனுமன் பிலத்தைப் பிளந்து வெளிவந்து பயனில்லாமல் கிடந்த அந்தப் பிலநகரத்தை மேற்குக் கடலிலெறிந்து ஆரவாரம் செய்தான் என்பது. அனுமனின் அப்பொழுதைய நிலையைக் கண்டு தமக்கு என்ன தீங்குவருமோ என்று தேவர்களும் அஞ்சி நடுங்குவாராயினர் என்றார். ஊழுற எழுந்து: முறையாக வருத்தமில்லாமல் கிளம்பி. 71*

சுயம்பிரபை பொன்னுலகம் செல்லுதல்

*4592.* ***இன்றும் உள மேல் கடல்***
***இயக்கு இல் பில தீவா***
***நின்று, நிலைபெற்றுள்ளது;***
***நீள் நுதலியோடும்,***
***குன்று புரை தோளவர்,***
***எழுந்து நெறி கொண்டார்;***
***பொன் திணி விசும்பினிடை***
***நல் நுதலி போனாள்.***

***இன்றும் உள -*** *(அனுமனால் எறியப்பட்ட அந்தப் பிலநகரம்) இப்பொழுதும் உள்ளதான;* ***மேல்கடல் -*** *மேற்குத்திசைக் கடலில்;*

***இயக்கு இல் பில தீவா -*** *அழிவில்லாத பிலத்தீவென்று பெயருள்ளதாக;* ***நின்று நிலை பெற்றுளது -*** *இப்பொழுதும் உள்ளதாகி நிலைபெற்று விளங்குகின்றது;* ***நீள் நுதலியோடும் -*** *நீண்ட நெற்றியையுடைய சுயம்பிரபையோடும்;* ***குன்று புரை தோளவர் -*** *மலைகளைப் போன்ற தோள்களையுடைய வானர வீரர்கள்;* ***எழுந்து -*** *(அந்தப் பிலத்திலிருந்து) வெளியேறி;* ***நெறி கொண்டார் -*** *(தாம் செல்வதற்கான) வழியை அடைந்தார்கள் (அப்பொழுது;* ***நல் நுதலி -*** *அழகிய நெற்றியைக் கொண்ட அச்*

*சுயம்பிரபை;* ***பொன்திணி விசும்பினிடை போனாள் -*** *பொன்னாலியன்ற தேவலோகத்திற்குச் சென்றாள்.*

*விசும்பு: இடவாகுபெயர். வானர வீரர்கள் சீதையை நாடிச் செல்லும் போது இளைத்துக் களைத்து, நீர்வேட்கை மிக்கவராய், ருட்சபிலம் என்னும் பிலத்துள் புகுந்து மிகவும் வருந்தி உள்ளே சென்று, பொன்மயமான ஒரு வனத்தையடைந்து அங்கிருந்த சுயம்பிரபை யென்னும் தவமுதியவளைக் கண்டு வினவி, அந்தவனம் மயன் என்பவனால் உருவாக்கப்பட்ட தென்றும், அவன் காதலுக்குப் பாத்திரமான ஏமை என்னும் தேவமகளுக்கு உரித்தாயிற்றென்றும் அறிந்தபின், தங்களை அப் பிலத்திலிருந்து வெளியேற்றுமாறு அந்தச் சுயம்பிரபையை வேண்ட அவளோ இவர்களின் கண்களை மூடிக் கொள்ளுமாறு கூறித் தன் தவப் பெருமையால் பிலத்தின் வெளியே கொண்டு வந்து சேர்த்தாள் என்று வான்மீகம் கூறும். வானரர் விடுதலை பெறச் சுயம்பிரபை உதவினாள், என முதல்நூல் கூறியிருப்ப, அவளுக்கும் சேர்ந்து விடுதலை அருளியவன் அனுமனே எனக் கம்பர் மாற்றியிருக்கிறார். மாற்றத்தால் அனுமன் பெருமை மிகுவதை உணர்க. 72*

வானரர் பொய்கைக் கரை அடைதல்

***4593. மாருதி வலித் தகைமை***
***பேசி, மறவோரும்,***
***பாரிடை நடந்து, பகல்***
***எல்லை படரப் போய்***
***நீருடை பொய்கையினின் நீள்***
***கரை அடைந்தார்;***
***தேருடை நெடுந்தகையும் மேலை***
***மலை சென்றான்.***

***மறவோரும் -*** *வலிமையுள்ள வானர வீரர்களும்;* ***மாருதி வலித்த கைமை பேசி -*** *அனுமனது வலிமையின் தன்மையைப் புகழ்ந்து கூறிக் கொண்டு;* ***பகல் எல்லை படர -*** *அன்றைய பகல்முழுவதும்;* ***பாரிடை நடந்துபோய் -*** *பூமியில் நடந்து சென்று;* ***நீருடைய பொய்கையினின் -*** *நீர் நிரம்பிய ஒரு தடாகத்தின்;* ***நீள் கரை அடைந்தார் -*** *நீண்ட கரையை அடைந்து தங்கினார்கள் (அப்பொழுது);* ***தேருடை நெடுந்த கையும் -*** *(வானத்தில் செல்லும்) தேரையுடைய பெருந்தகையான சூரியனும்;* ***மேலை மலை சென்றான் -*** *மேற்குத் திசையிலுள்ள அத்தமனகிரியை அடைந்தான் (மறைந்தான்).*

*பிலத்தில் இருட்பிழம்பிலகப்பட்டுத் திகைத்த போது தங்களுக்கு வழிகாட்டிக் காத்ததனாலும், பின்பு பிலத்தை இடித்துச் சுயம்பிரபைக்கும் தங்களுக்கும் வெளியே செல்லும் வழியைக் காட்டியதாலும் வானர வீரர் அனுமனின் வலிமையைப் புகழ்ந்தார்கள் என்பது. 73*

## ஆறு செல் படலம்

வானர வீரர்கள் பிலத்திலிருந்து வெளிவந்த பின்பு, சுக்கிரீவன் குறிப்பிட்ட வழியை சீதையைத் தேடிச் சென்றதைக் கூறும் படலம். (ஆறு - வழி) பொய்கைக் கரையில் வானரர் உறங்கத் துமிரன் வருகிறான்; அவ் அசுரன் அங்கதனை மார்பிலறைகிறான்; அங்கதனும் திருப்பியறைய, அந்த அசுரன் அலறி வீழ்கிறான். அந்த அசுரனைக் குறித்து அனுமன் வினாவுகிறான்; அதற்கு அங்கதன் விடை கூறுகிறான். பின், சாம்பவான் துமிரனது வரலாறு கூறுகிறான். பின்னர், வானரர் சீதையைத் தேடிப் பெண்ணையாற்றை அடைகிறார்கள்; அதன்பிறகு அவர்கள் தசநவ நாடு அடைகிறார்கள்; விதர்ப்ப நாட்டில் தேடுகிறார்கள்; தண்டக வனத்தில் துருவி, முண்டகத் துறையை அடைகிறார்கள்; பாண்டு மலையின் சிகரத்தை அடைந்து, அங்கிருந்து கோதாவரியைச் சென்றடைகிறார்கள்; பின்னர்ச் சுவணகத் துறையில் அவர்கள் புகுந்து குலிந்த தேசத்தைக் கடக்கின்றார்கள்; கடந்து அருந்ததி மலை, மரகத மலைகளைக் கடந்து வேங்கட மலையைச் சேர்கின்றார்கள்; அங்கிருந்து தொண்டை நாட்டை அடைகின்றார்கள்; பிறகு சோழநாட்டை அடைந்து மலைநாட்டின் வழியாகப் பாண்டிநாடு அடைகின்றார்கள்; முடிவாக, மயேந்திர மலையைச் சென்று அடைகின்றார்கள்.

பொய்கைக் கரையில் வானரர் உறங்கும்போது துமிரன் வருதல்

கலித்துறை

**4594. கண்டார், பொய்கைக் கண் அகல் நல்**
**நீரைக் கரை தாம் உற்று,**
**உண்டார், தேனும் ஒண் கனி**
**காயும்; ஒரு சூழல்,**
**கொண்டார் அன்றோ, இன்துயில்;**
**கொண்ட குறி உன்னி,**
**தண்டா வென்றித் தானவன்**
**வந்தான், தகவு இல்லான்.**

***கண்டார் -*** (அப் பொய்கையைக்) கண்ட வானரவீரர்கள்; ***பொய் கைக் கண் -*** அந்தப் பொய்கையிலுள்ள; ***அகல்நீர்க் கரைதாம் உற்று -*** நீர்வளமுள்ள அகன்ற கரையையடைந்து; ***தேனும் ஒண்கனி காயும் உண்டார் -*** தேனையும் நல்ல பழங்களையும் காய்களையும் தின்றார்கள்; ***ஒரு சூழல் -*** அப் பொய்கையின் ஒரு பக்கத்தில்; ***இன்துயில் கொண்டார் -*** இனிய உறக்கத்தை மேற்கொண்டார்கள்; ***கொண்ட குறி***

***உன்னி -*** (அவ்வாறு வானரர்கள் வந்து) படுத்துறங்குவதை அறிந்து; ***தண்டா வென்றி -*** குறையாத வெற்றியையுடைய; ***தகவு இல்லான் -*** நற்குணமில்லாத ஓர் அசுரன்; ***வந்தான் -*** (அவ் இடத்திற்கு) வரலானான்.

அன்று, ஓ : அசைகள். வானரவீரர்கள் தாங்கள் வந்து சேர்ந்த பொய்கைக் கரையிலே காய் கனி முதலியவற்றைத் தின்று ஆழ்ந்து உறக்கங் கொள்ள, அப்போது ஓர் அசுரன்

*அதனை அறிந்து அங்கு வந்தான் என்பது. தாக்குதற்கு ஏற்ற நேரம் எனக் கருதினான், அவ் அரக்கன். தானவர்: அரக்கரின் வேறான அசுரர். இங்குக் கூறப்பெற்ற அசுரன் துமிரன் என்பவன்.* *1*

***4595. மலையே போல்வான்; மால் கடல்***
***ஒப்பான்; மறம் முற்ற,***
***கொலையே செய்வான்; கூற்றை***
***நிகர்ப்பான்; கொடுமைக்கு ஓர்***
***நிலையே போல்வான்; நீர்மை***
***இலாதான்; நிமிர் திங்கட்***
***கலையே போலும் கால***
***எயிற்றான்; கனல் கண்ணான்;***

*(அந்த அசுரன்)* ***மலையே போல்வான் -*** *(தோற்றத்தில்) மலையைப் போன்றவன்;* ***மால் கடல் ஒப்பான் -*** *(உருவத்தின் நிறத்தாலும் பரப்பாலும்) பெரிய கரிய கடலைப் போன்றவன்;* ***மறம் முற்ற, கொலையே செய்வான் -*** *கொடுமையில் முதிர்ச்சியடைந்து யாவரையும் கொன்று தீர்ப்பவன்;* ***கூற்றை நிகர்ப்பான் -*** *இயமயையேஒத்திருப்பவன்;* ***கொடுமைக்கு -*** *கொடுமையென்னும் குணத்திற்கு;* ***ஓர் நிலையே போல்வான் -*** *ஓர் இருப்பிடமாவான்;* ***நீர்மை இலாதான் -*** *நற்பண்பு சிறிதும் இல்லாதவன்;* ***நிமிர் -*** *(வானில்) எழுந்து விளங்கும்;* ***திங்கட் கலையே போலும் -*** *சந்திரனின் பிறை போல் விளங்கும்;* ***கால எயிற்றான் -*** *நச்சுப்போன்ற பற்களையுடையவன்;* ***கனல் கண்ணான் -*** *(நெருப்புப் போன்று) கனல் கக்கும் கண்களையுடைவன்.*

*அந்த அசுரனின் உருவத்தின் வலிமை உயர்வு முதலியவற்றிற்கு மலையும், நிறம், பெருமை விரிவு முதலியவற்றிற்குக் கடலும் உவமைகளாயின. மால்: கருமை, பெருமைகளை உணர்த்தியது. காலம்: கரியநஞ்சு.* *2*

கலிவிருத்தம்

***4596. கருவி மா மழைகள் கைகள் தாவி மீது***
***உருவி, மேனி சென்று உலவி ஒற்றலால்,***
***பொரு இல் மாரி மேல் ஒழுகு பொற்பினால்,***
***அருவி பாய்தரும் குன்றமே அனான்;*** *(அந்த அசுரன்)* ***கருவி மாமழை -*** *(உலகம் நடைபெறுவதற்கு) முதற்காரணமான பெரிய மேகங்கள்;* ***கைகள் தாவி -*** *அவன் கைகளில் தாவி;* ***மீது உருவி மேனி சென்று -*** *ஊடுருவி அவனது உடலில் சென்று;* ***உலவி -*** *உலாவி;* ***ஒற்றலால் -*** *படிதலாலும்;* ***பொருவு இல்மாரி -*** *ஒப்பில்லாத மழைநீர்;* ***மேல் ஒழுகு பொற்பினால் -*** *அவன் மேல் பெருகி வழிந்த அழகாலும்;* ***அருவி பாய்தரும் -*** *நீரருவிகள் பாய்ந்தோடி வரும்;* ***குன்றமே அனான் -*** *ஒரு மலையையொத்தவனானான்.*

*கருவி: காரணம். மின்னல் இடி முதலியவற்றோடு கூடி வருவதால் கருவி மழை என்பதைத் தொகுதியான பெரிய மேகம் எனவும் கொள்ளலாம். பழைய நூல்களில் இவ்வழக்கு உண்டு. (குறுந். 42, மணி. 17-92) அந்த அசுரனின் தோள்கள்மேலும் உடம்பின் மேலும் மேகங்கள் தவழ்ந்து பெருகுமாறு மழைநீரைப் பொழிவதால்,*

மேகங்கள் தன்மேல் உலாவப் பெற்று நீரருவி பாயும் மலை அவனுக்கேற்ற உவமையாகும். சிலேடையணி. 3

**4597. வானவர்க்கும், மற்று அவர் வலிக்கு நேர்**
**தானவர்க்குமே அரிய தன்மையான்;**
**ஆனவர்க்கு அலால் அவனொடு ஆட, வேறு**
**ஏனவர்க்கும் ஒன்று எண்ண ஒண்ணுமோ?**

**வானவர்க்கும் -** (அந்த அசுரன்) தேவர்களுக்கும்; **அவர் வலிக்கு நேர் தானவர்க்கும் -** அத் தேவரின் வலிமைக்கு ஒப்பான அசுரர்களுக் கும்; **அரிய -** வெல்லமுடியாத; **தன்மையான்-** வலிமையுடையவன்; **ஆனவர்க்கு அலால் -** (ஆகவே) அத்தகைய தேவர், அசுரர்களுக்கே யல்லாமல்; **அவனோடு ஆட -** அந்தக் கொடிய அசுரனை எதிர்த்துப் போரிட; **வேறு ஏனவர்க்கும் -** மற்றுமுள்ள எவராயினும்; **ஒன்று எண்ண ஒண்ணுமோ -** சிறிதேனும் நினைக்க முடியுமோ? (நினைக்க முடியாது).

மற்று: அசை. அந்த அசுரனோடு போர் செய்தல் தேவர்களுக்கும், அசுரர்களுக்குமே முடியாதென்றால் மற்ற யாரால் முடியும்? ஒருவராலும் இவனோடு போர் செய்து வெல்லுவதை நினைக்கவும் முடியாது என்பது. ஏனவர்: பிறர். 4

**4598. பிறங்கு பங்கியான்;**
**பெயரும் பெட்பினில்**
**கறங்கு போன்றுளான்,**
**பிசையும் கையினான்;**
**அறம் கொள் சிந்தையார்,**
**நெறி செல் ஆய்வினால்**
**உறங்குவாரை வந்து,**
**ஒல்லை எய்தினான்.**

**பிறங்கு பங்கியான் -** விளங்கும் செம்பட்டை மயிரையுடையவன்; **பெயரும் பெடபினில் -** (தான் நடந்து) செல்லும் தன்மையில்; **கறங்கு போன்று உளான் -** காற்றாடியை யொத்துள்ளவனாய்; **பிசையும் கையினான்-** (கோபத்தால்) பிசையும் கைகளையுடையவன்; **அறம் கொள் சிந்தையார் -** தரும சிந்தனையுள்வர்களும்; **நெறி செல் ஆய்வினால் -** வழி நடந்துவந்த களைப்பினால்; **உறங்குவாரை -** தூங்குகின்றவர்களுமாகிய அந்த வானர வீரர்களை; **ஒல்லை வந்து எய்தினான் -** விரைவில் வந்து சேர்ந்தான்.

இராமபிரானின் தொண்டில் கருத்தாய்ச் செல்லுவதால் வானரரை 'அறங்கொள் சிந்தையார்' என உயர்த்திக் கூறினார். ஆய்வு: நுணுகுதல் (இளைத்தல்). கை பிசைதல்: கொடுமைக்குறி. பங்கி: ஆண்பால் தலைமயிர். 5

அங்கதன் மார்பில் அசுரன் கையால் அறைதல்

**4599. 'பொய்கை என்னது என்று**
**உணர்ந்தும், புல்லியோர்**
**எய்தினார்கள் யார்? இது**

***எனா?' எனா***
***ஐயன் அங்கதன்***
***அலங்கல் மார்பினில்,***
***கையின் மோதினான்; -***
***காலனே அனான்.***

***காலனே அனான்*** - *யமனைப் போன்றவனாகிய துமிரன் என்ற அந்த அசுரன்;* ***பொய்கை என்னது என்று உணர்ந்தும்*** - *இந்தத் தடாகம் எனக்கு உரியது என்று அறிந்தும்;* ***எய்தினார்கள்*** - *இங்கு வந்து சேர்ந்தவர்களாகிய;* ***புல்லியோர்*** - *அற்பர்கள்;* ***யார்*** - *யாவர்;* ***ஆ இது என்*** - *ஆ இது என்ன வியப்பு!* ***எனா*** - *என்று சொல்லிக் கொண்டு;* ***ஐயன் அங்கதன்*** - *தலைவனான அங்கதனுடைய;* ***அலங்கல் மார்பினில்*** - *மாலையணிந்த மார்பிலே;* ***கையின் மோதினான்*** - *(தன்) கையினால் அறைந்து தாக்கினான்.*

*'இப் பொய்கை எனது என்று யாவருக்கும் தெரிந்திருந்தும் இங்கு வந்து சேர்ந்தவர்கள் அறிவில்லாதவர்களே; இப்படியும் அறிவில்லாதவர்கள் இருக்கின்றார்களே' என்று மிக்க செருக்கினால் கூறிக் கொண்டே ஆழ்ந்து உறங்கும் அங்கதனது மார்பில் ஓங்கியறைந்தனன் துமிரன் என்பது. ஆ - வியப்பிடைச் சொல். இது எனா என்பதிலுள்ள ஆகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.* *6*

*அங்கதன் பதிலுக்கு அறைய, துமிரன் அலறி வீழ்தல்*

***4600. மற்று அம் மைந்தனும்***
***உறக்கம் மாறினான்;***
***'இற்று இவன் கொலாம்***
***இலங்கை வேந்து' எனா,***
***எற்றினானை, நேர்***
***எற்றினான்; அவன்***
***முற்றினான், இகற்கு***
***ஆதி மூர்த்தியான்.***

***மற்று*** - *பிறகு;* ***அம் மைந்தனும்*** - *வலியவனான அந்த அங்கதனும்;* ***உறக்கம் மாறினான்*** - *தூக்கம் கலைந்தான்;* ***இற்று இவன்*** - *இத்தன்மையான இவனே;* ***இலங்கை வேந்து கொல் ஆம் எனா*** - *இலங்கைக்க அரசனான இராவணன் போலும் என்று கருதி;* ***எற்றி னானை*** - *(தன்னைத்) தாக்கியவனான அந்த அசுரனை;* ***நேர் ஏற்றினான்*** - *எதிர்த்து அறைந்தான்;* ***இகற்கு ஆதி மூர்த்தியான் அவன்*** - *போர்த் திறத்திற்குரிய கடவுள் போன்ற அவன்;* ***முற்றினான்*** - *உயிர் முடிவுற்று இறந்தான்.*

*துமிரன் என்ற அவ் அசுரனால் அறையப்பட்ட அங்கதன், தூக்கத்திலிருந்து எழுந்து அவனை இராவணனென்று கருதி, அவனது மார்பிலறைய, அந்த அசுரன் கீழே விழுந்து இறந்தான் என்பது. போர்த்திறம் என்னும் பண்பிற்கே மூல வடிவம் போன்றவனெனத் துமிரனைக் கவிஞர் உயர்த்திக் கூறுகிறார். முற்றுதல் - ஆயுள் முடிந்துஇறத்தல்.* *7*

***4601. இடியுண்டு ஆங்கண் ஓர்***
***ஓங்கல் இற்றது ஒத்து,***
***அடியுண்டான் தளர்ந்து***
***அலறி வீழ்தலும்,***
***தொடியின் தோள் விசைத்து***
***எழுந்து சுற்றினார்,***
***பிடியுண்டார் எனத்***
***துயிலும் பெற்றியார்.***

***ஆங்கண் -*** *அப்பொழுது;* ***ஓர் ஓங்கல் -*** *ஒரு மலை;* ***இடி உண்டு இற்றது ஒத்து -*** *இடியினால் தாக்கப்பட்டுத் தகர்ந்து விழுந்ததுபோல;* ***அடி உண்டான் -*** *அங்கதனால் அடியுண்ட அந்த அசுரன்;* ***தளர்ந்து -*** *சோர்வுற்று;* ***அலறி வீழ்தலும் -*** *வாய்விட்டு அலறிக் கொண்டு கீழே விழுந்ததும்;* ***பிடியுண்டார் என -*** *பேயினால் பிடிக்கப்பட்டார் போல;* ***துயிலும் பெற்றியார் -*** *ஆழ்ந்த தூக்கத்திலிருந்த வானர வீரர்கள்;* ***தொடியின் தோள் விரைந்து -*** *வளையணிந்த தோள்களை வேகமாக வீசிக்கொண்டு;* ***எழுந்து -*** *எழுந்து வந்து;* ***சுற்றினார் -*** *(அந்த அசுரனைச்) சூழ்ந்து கொண்டார்கள்.*

*இடி விழுந்த மலை சரிந்து அழிவதுபோல அங்கதனால் அறையுண்ட அசுரன் தரையில் சாய்ந்து உயிரொடுங்க வானரர்கள் அப்பொழுது எழுந்த ஆரவாரத்தினால் உறக்கம் நீங்கி எழுந்து கீழே விழுந்த அந்த அசுரனைச் சூழ்ந்து கொண்டனர் என்பது. தொடியின் தோள்கள்: வளையணிந்த தோள்கள்; வீரர்கள் தம் தோள்களில் வீர வளையணிதல் மரபு. நயம்: முன்பு அந்த அசுரனை 'மலையே*

*போல்வான்' (4595) என உவமித்ததற்கேற்ப இங்கு அவன் அங்கதனால் அடியுண்டு விழுந்ததை இடியுண்டு விழுந்த மலை என்றார். 8*

*அசுரனைப் பற்றி அனுமன் வினாவும் அங்கதன் விடையும்*

***4602. 'யார் கொலாம் இவன்?***
***இழைத்தது என்?' எனா,***
***தாரை சேயினைத்***
***தனி வினாவினான்.***
***மாருதேயன்; மற்று அவனும்,***
***'வாய்மை சால்***
***ஆரியா! தெரிந்து***
***அறிகிலேன்' என்றான்.***

***மாருதேயன் -*** *வாயுவின் மகனான அனுமன்;* ***தாரை சேயினை -*** *தாரையின் மகனான அங்கதனை நோக்கி;* ***இவன் யார் கொல் ஆம் -*** *(இறந்து கீழே விழுந்து கிடக்கும்) இவன் யார்?* ***இழைத்தது என் -*** *இவன் செய்தது என்ன?* ***எனா -*** *என்று;* ***தனி வினாவினான் -*** *குறிப்பிட்டுக் கேட்டான்;* ***மற்று -*** *பின்பு;* ***அவனும் -*** *அந்த அங்கதனும் (அனுமனை நோக்கி);* ***வாய்மை சால் ஆரியா -*** *வாய்மை நிறைந்த பெரியவனே!* ***தெரிந்து அறிகிலேன் -*** *நான் இவனைப் பற்றி ஒன்றும் அறியேன்;* ***என்றான் -*** *என்று விடை கூறினான்.*

*கொல் - ஐயப்பொருளையும், சால் - மிகுதிப் பொருளையும் உணர்த்திய உரிச் சொற்கள். இவன் என்பது மத்திமதீபம் இடைநிலை விளக்காய் நின்று 'யார் கொலாம்' என்பதையும், 'இழைத்ததென்' என்பதையும் தழுவியது. மாருதேயன்: மருத்தின் புதல்வன் - தத்திதாந்தப் பெயர். வாய்மை, கல்வி முதலியவற்றாலும் ஒழுக்கத்தாலும் சிறந்தவனாதலால் அனுமனை அங்கதன் 'ஆரியா' என்று விளித்தான்.*
*9*

சாம்பவான் துமிரன் வரலாறு கூறுதல்

***4603. 'யான் இவன்தனைத் தெரிய எண்ணினேன்;***
***தூ நிவந்த வேல் துமிரன் என்னும் பே -***
***ரான், இவ் ஆழ் புனல் பொய்கை ஆளும் ஓர்***
***தானவன்' என, சாம்பன் சாற்றினான்.***

*(அது கேட்டுச்)* ***சாம்பன் -*** *(அனுமனை நோக்கி) கரடிகளுக்குத் தலைவனான சாம்பவான்;* ***யான் இவன்தனை -*** *நான் இந்த அசுரனைக் குறித்து;* ***தெரிய எண்ணினேன் -*** *இன்னானென்று தெரிந்து கொள்ளும்படி நினைத்துப் பார்த்தேன்;* ***தூ நிவந்த வேல் -*** *பகைவரது புலால் நிறைந்த வேற்படையைத் தாங்கியுள்ள;* ***துமிரன் என்னும் பேரான் -*** *துமிரன் என்னும் பெயரையுடையவன்;* ***இவ் ஆழ்புனல் பொய்கை ஆளும் -*** *ஆழ்ந்த நீரையுடைய இந்தப் பொய்கையை ஆட்சி செய்கின்ற;* ***ஓர் தானவன் -*** *ஓர் அசுரனாவான்;* ***எனச் சாற்றினான் -*** *என்று கூறினான்.*

*திருமாலின் திரிவிக்கிரமாவதார காலத்தில் அவன் திருவடிகள் உலகில் பரவியதைக் காணுமாறு சாம்பவான் பலமுறை பூமியை வலம் வந்தவனாதலால் உலகத்திலுள்ள பல செய்திகளைத் தெரிந்திருத்தல் பற்றி அவன் இந்த அசுரனைக் குறித்து இன்னானென்று வினவியறிந்திருந்தான் என்பது. தூ நிவந்த வேல்: துமிரனது வேலின் வெற்றிச் சிறப்பைக் கூறுவது. தூ - புலால். அங்கதன் இத் துமிரன் என்னும் அசுரனைக் கொன்ற செய்தி வானரர் பிலம் புகுவதற்குமுன் நிகழ்ந்த்தாகக் கூறும்வான்மீகம். 10*

வானரர் பெண்ணையாற்றை அடைதல்

***4604. 'வேறும் எய்துவார் உளர் கொலாம்' எனா,***
***தேறி, இன் துயில் செலவு தீர்ந்துளார்,***
***வீறு செஞ் சுடர்க் கடவுள் வேலைவாய்***
***நாற, நாள்மலர்ப் பெண்ணை நாடுவார்.***

***வேறும் -*** *இவ் வசுரனையல்லாமல் வேறு சிலரும்;* ***எய்துவார் உளர்கொல் ஆம் எனா -*** *இங்கு போருக்கு வரக் கூடியவர் இருக்கி றார்களோ என்று கருதி;* ***இன்துயில் செலவு தீர்ந்துள்ளார் -*** *(தமது) இனிய தூக்கத்திலிருந்து விழித்தெழுந்து (அவ்வாறு வருபவர்களைச் சிறிதுநேரம் எதிர்நோக்கின் பின்பு);* ***தேறி -*** *இனி எவரும் வாரார் எனத் தெளிந்து;* ***வீறு செஞ்சுடர்க் கடவுள் -*** *பெருமை மிக்க சிவந்த கதிர்களையுடைய சூரியன்;* ***வேலை வாய் நாற -*** *கிழக்குக் கடலிடத்துத் தோன்ற;* ***நாள் மலர்ப் பெண்ணை -***

*புதிதாய் மலர்ந்த மலர்கள் நிறைந்த பெண்ணையாற்றை;* ***நாடுவார் -*** *நோக்கிச் சென்றனர்.*

*வானரவீரர் 'இன்னும் இவன்போன்ற அசுரர் வேறு யாரேனும் போருக்கு வரக் கூடும்' என்று கருதித் தூங்காமல் விழித்திருந்து எதிர்பார்த்த பின்பு, சூரியன் உதிக்கும் வேளையில் சீதையைத் தேடுமாறு அங்கிருந்து புறப்பட்டுப் பெண்ணையாற்றை அடைந்தனர். வேறும் - எச்சவும்மை. வீறு : பிறர்க்கு இல்லாத தனிப் பொலிவு. நாறுதல் : தோன்றுதல். 11*

***4605. புன் நை வெம் முலைப்***
***புளினம், ஏய் தடத்து***
***உண்ண ஆம்பல் இன்***
***அமிழ்தம் ஊறு வாய்,***
***வண்ண வெண் நகைத்***
***தரள வாள் முகப்***
***பெண்ணை நண்ணினார் -***
***பெண்ணை நாடுவார்.***

***பெண்ணை நாடுவார் -*** *சீதையைத் தேடிச் சென்ற அவ்வானர வீரர்கள்;* ***புள் நை -*** *சக்கரவாகப் பறவைகள் (ஒப்பாகாமல்) வருந்துவதற்குக் காரணமான;* ***புளின வெம்முலை -*** *மணற்குன்றுகளாகிய விரும்பத்தக்க*

*முலைகளையும்;* ***தடத்து ஏய் ஆம்பல் -*** *நீர் நிலையில் பொருந் திய செவ்வாம்பல் மலராகிய;* ***உண்ண இன் அமிழ்து ஊறுவாய் -*** *பருகுமிடத்து இனிய அமிழ்தம் சுரக்கின்ற வாயையும்;* ***தரளம் -*** *முத்துக் களாகிய;* ***வண்ண வெண் நகை -*** *அழகான ஒளிமிக்க பற்களையும்;* ***வாள்முகம் -*** *ஒளி பொருந்திய (தாமரை மலர்களாகிய) முகத்தையு முடைய;* ***பெண்ணை -*** *பெண்ணை நதியாகிய ஒரு பெண்ணை;* ***நண்ணினார் -*** *சென்று சேர்ந்தார்கள்.*

*பெண்ணை நதியை ஒரு பெண்ணாக உருவகப்படுத்தினார். பெண்ணை : நதி, பெண்; இச் சொல் நதியைக் குறிக்கும்போது இரண்டாம் வேற்றுமைத் தொகையாகவும் (பெண்ணை - பெண்ணையை), மற்றொரு பொருளான பெண்ணைக் குறிக்கும்போது இரண்டாம் வேற்றுமை விரியாகவும் (பெண் - ஐ) கொள்ள வேண்டும். பெண்ணை நதி: மணற்குன்றுகள், செவ்வாம்பல், முத்துக்கள், தாமரை. பெண்: முலைகள், வாய், பற்கள், முகம். சிலேடையணியை அங்கமாகக் கொண்டுவந்த இயைபுருவகவணி. உவமையாவதற்குரிய சக்கரவாகப் பறவையை உவமேயமாகிய முலைகளிலும் தாழ்த்திக் கூறியது எதிர்நிலையணி. முலைகளுக்குப் புளினம் உயர்ச்சியில் உவமையாம். நயம்: பெண்ணை நாடுவோர் பெண்ணை நண்ணினார். இதில் பெண்ணை என்ற சொல் இரட்டுற மொழிதலாக ஒரு பெண்ணுக்கும் பெண்ணையென்னும் நதிக்கும் அமைத்த நயம்காணத்தக்கது. 12*

***4606. துறையும், தோகை நின்று ஆடு சூழலும்,***
***குறையும், சோலையும், குளிர்ந்த சாரல் நீர்ச்***

***சிறையும், தெள்ளு பூந் தடமும், தெண் பளிக்கு***
***அறையும், தேடினார் - அறிவின் நீடினார்.***

***அறிவின் நீடினார் -*** *அறிவின் எல்லைகளைக் கண்டவர்களான அவ் வானர வீரர்;* ***துறையும் -*** *(அந்த நதியின்) இறங்கு துறைகளிலும்;* ***தோகை நின்று ஆடு சூழலும் -*** *மயில்கள் (களிப்போடு) நின்று கூத்தாடு கின்ற இடங்களிலும்;* ***குறையும் -*** *அந்த ஆற்றின் இடையே இருந்த திட்டுக்களிலும்;* ***சோலையும் -*** *அநத ஆற்றையடுத்த பூஞ்சோலைகளிலும்;* ***குளிர்ந்த சாரல் நீர்ச் சிறையும் -*** *குளிர்ந்த காற்று வீசும் பக்கங்களிலமைந்த நீர்நிலைகளான ஏரி குளங்களிலும்;* ***தெள்ளு பூந் தடமும் -*** *தெளிவான மலர்கள் நிறைந்த தடாகங்களிலும்;* ***தெண் பளிக்கு அறையும் -*** *ஒளியுடன் விளங்கிய பளிங்குப் பாறைகளிலும்;* ***தேடினார் -*** *சீதையைத் தேடினார்கள்.*

*தோகை: சினையாகுபெயராய் மயிலைக் குறித்தது.  குறை: ஆற்றிடைத் திட்டு (தீவு). 13*

***4607.  அணி கொழித்து வந்து, எவரும் ஆடுவார்***
***பிணி கொழித்து, வெம் பிறவி வேரின் வன்***
***துணி கொழித்து, அருஞ் சுழிகள்தோறும், நல்***
***மணி கொழிப்பதன் துறையின் வைகினார்.***

***அணி கொழித்து வந்து -*** *அழகாக அலை வீசிக் கொண்டு வந்தும்;* ***ஆடுவார் எவரும் -*** *(தன்னிடம்) மூழ்கினார் எவராயினும்;* ***பிணி கொழித்து -*** *நோய்கள் நிறைந்த;* ***வெம் பிறவி வேரின் வன்துணி கொழித்து -*** *கொடிய பிறப்புக்களினுடைய வேர்கள் (வினை) வலிய துண்டுகளையடித்துக் கொண்டும்;* ***அருஞ் சுழிகள் தோறும் -*** *(தப்புவதற்கு அரிய) தன் நீர்ச் சுழிகளிலெல்லாம்;* ***நல் மணி கொழிப்பதன் -*** *சிறந்த இரத்தினங்களை வாரிக் கொண்டும் வருகின்ற பெண்ணை நதியின்;* ***துறையின் வைகினார் -*** *ஒரு துறையில் (வானர வீரர்) தங்கியிருந்தார்கள்.*

*தன்னில் மூழ்கியவர் எந்த அளவு பாவியராயிருப்பினும் அவர்களது பிறவிக்குக் காரணமான பாவங்களையெல்லாம் போக்கி, அவர்களுக்கு முத்தியளிக்க வல்ல பெருமையுள்ளதும், நீர்ச் சுழிகளில் இரத்தினங்களை வாரிக்கொண்டு வரும் வளமுள்ளதுமான பெண்ணை நதியின் தென்கரையை அடைந்து வானர வீரர்கள் தங்கினார்கள் என்பது.  பிறவிவேர் - பிறப்புக்குக் காரணமான வினைகள் 'கொழித்தல்' என்னும் வினைச் சொல் வெவ்வேறு பொருளில் பலமுறை வந்தது: சொற்பின்வருநிலையணி.            14*

*தசநவ நாடு அடைதல்*

***4608.  ஆடு பெண்ணை நீர் ஆறும் ஏறினார்;***
***காடு நண்ணினார்; மலை கடந்துளார்;***
***வீடு நண்ணினார் என்ன, வீசும் நீர் -***
***நாடு நண்ணினார் - நாடு நண்ணினார்.***

***நாடு நண்ணினார் -*** *(சீதையைத்) தேடுவதை மேற்கொண்ட அவ் வானர வீரர்கள்;* ***நீர் ஆடு பெண்ணை ஆறும் ஏறினார் -*** *யாவரும் வந்து நீராடும் பெண்ணை நதியைக்*

*கடந்தனர்; **காடு நண்ணினார் -** பல காடுகளையடைந்தனர்; **மலை கடந்து உளார் -** பல மலைகளைத் தாண்டிச் சென்றனர்; **வீடு நண்ணினார் என்ன -** முத்தி உலகத்தை யடைந்தவர்களே போல; **வீசும் நீர் -** அலை வீசும் நீர்வளத்தால் சிறந்த; **நாடு நண்ணினார் -** தசநவ நாட்டையணுகினார்கள்.*

*வானரர்கள் பல காடுகளிலும், மலைகளிலும் அலைந்து திரிந்து இறுதியில் நீர்வளமுள்ள தசநவ நாட்டையடைந்ததற்குப் பல பிறவிகளில் அலைந்து திரிந்தவன் இறுதியில் முத்தியுலகத்தையடைவதை உவமை கூறினார். நாடு - பிந்தியது: முதனிலைத் தொழிற்பெயர். நாடு நண்ணினார் நாடு நண்ணினார் - மடக்கணி.*
*15*

***4609. தசநவப் பெயர்ச் சரள சண்பகத்து,***
***அசந அப் புலத்து அகணி நாடு ஒரீஇ,***
***உசநவப் பெயர்க் கவி உதித்த பேர்***
***இசை விதர்ப்ப நாடு எளிதின் எய்தினார்.***

*   **தசநவப் பெயர் -** (அந்த வானர வீரர்கள்) தசநவம் என்ற பெய ரையுடைய; **சரள சண்பகத்து -** இனிய சண்பக மரங்களையுடையதும்; **அசந அப்புலத்து அகணி -** உணவையுண்டாக்கும் அழகிய விளை நிலங்களைக் கொண்ட மருத நிலங்களையுடையதுமாகிய; **நாடு ஒரீஇ -** வளநாட்டை விட்டு நீங்கி; **உசநவப் பெயர்க் கவி உதித்த -** உசுநஸ் என்னும் பெயரையுடைய சுக்கிரீவன் பிறந்த; **பேர் இசை விதர்ப்ப நாடு -** பெரும்புகழ் வாய்ந்த விதர்ப்பம் என்னும் நாட்டை; **எளிதின் எய்தினார் -** எளிதாகச் சென்று சேர்ந்தார்கள்.*

*தச நவம் (தசார்ணவம்) என்னும் நாடு சண்பகமரத் தொகுதிகளையும், நல்ல விளைச்சலைக் கொண்ட புலங்களையுமுடையது என்பது. சரளம்: இனிமை. அகணி: மருதநிலம். ஒருவி என்ற வினையெச்சம் திரிந்து அளபெடுத்தது. ஒரீஇ - சொல்லிசையளபெடை. உசநவன்: சுக்கிரீவன் பெயர்களுள் ஒன்று.*
*16*

விதர்ப்ப நாட்டில் தேடுதல்

***4610. வைதருப்ப மண்டலனில் வந்து புக்கு,***
***எய்து அருப்பம் அத்தனையும் எய்தினார்;***
***பெய் தருப்பை நூல் பிறழும் மேனியார்,***
***செய் தவத்துளார் வடிவின், தேடினார்.***

***வைதருப்ப மண்டலனில் -** (வானர வீரர்கள்) விதர்ப்பம் என்னும் நாட்டில்; **வந்து புக்கு -** வந்து சேர்ந்து; **எய்து அருப்பம் அத்தனையும் -** (அந்த நாட்டில்) பொருந்தின ஊர்கள் எல்லாவற்றையும்; **எய்தினார் -** அடைந்தனர்; **பெய் தருப்பை நூல் -** பூண்டுள்ள தருப்பைகளினாலும், (மார்பிலணிந்துள்ள) பூணூலினாலும்; **பிறழும் மேனியார் -** விளங்கும் உடம்பையுடையவர்களாகிய; **செய் தவத்துளார் வடிவின் -** தவம் செய்யும் முனிவரது வடிவைக் கொண்டு; **தேடினார் -** சீதையைத் தேடினார்கள்.*

*விதர்ப்ப நாட்டையடைந்த வானர வீரர்கள் முனிவரது வடிவுகொண்டு அங்குள்ள ஒரூரையும்விடாது புகுந்து சென்று சீதையைத் தேடினார்கள் என்பது. மனிதர்கள்*

*வாழும் ஊர்களில் சென்று வானர வடிவுடன் தேடுதல் இயலாதாகையால் விரும்பும் உருவம் கொள்ளும் அவ் வானர வீரர் விதர்ப்ப நாட்டு ஊர்களில் சென்று தேடுகையில் சிறப்பு மிக்கதாய், ஐயத்திற்குச் சிறிதும் இடந்தராத முனிவரது வடிவைக் கொண்டனர் என்பது அறியத் தக்கது. வைதருப்பம்: தத்தி தாந்த நாமம். தருப்பை - தருப்பைப் புல்லால் திரித்த ஒரு கயிறு; - இது முஞ்சி எனப்படும் அந்தணப் பிரமசாரிகள் முஞ்சியும் பூணூலும் தரிப்பர். மண்டலம் - மண்டலன் (மண்தலன்) - ஈற்றுப்போலி. 17*

*தண்டக வனத்தில் தேடிப் பார்த்த பின், முண்டகத் துறையை அடைதல்*

***4611. அன்ன தன்மையால், அறிஞர் நாடி, அச்***
***செந் நெல் வேலி சூழ் திரு நல் நாடு ஒரீஇ,***
***தன்னை எண்ணும் அத் தகை புகுந்துளார்***
***துன்னு, தண்டகம் கடிது துன்னினார்.***

***அறிஞர் -** அறிவாளர்களான அந்த வானர வீரர்; **அன்ன தன் மையால் -** அவ்விதமாக; **நாடி -** சீதையை அங்கே தேடிப் பார்த்து; **அச் செந்நெல் வேலி சூழ் -** செந் நெற் பயிர்கள் விளையும் வயல்கள் சூழ்ந்த; **திரு நல் நாடு ஒரீஇ -** சிறந்த அழகான அந்த விதர்ப்ப நாட்டை விட்டு நீங்கி; **தன்னை எண்ணும் -** சீவான்மாவாகிய உயிரின் இயல்பை அறிந்திருக்கின்ற; **அத்தகை புகுந்துளார் -** அத் தன்மை பொருந்திய வரான முனிவர்கள்; **துன்னு தண்டகம் -** நிறைந்து வாழும் தண்டகா ரணியத்தை; **கடிது துன்னினார் -** விரைவாகச் சென்று சேர்ந்தார்கள்.*

*தன்னையெண்ணும் அத்தகை புகுந்துளார் சீவான்ம சொரூபத்தை உள்ள படியுணர்ந்து காணவல்ல யோகியர். திருநல்நாடு: கணடார் தங்கியிருந்து வாழ விரும்பும் அழகியநாடு. தண்டக வனம்: இட்சுவாகு வம்சத்தில் தோன்றித் தன் தீய நடத்தையால் நாடு கடத்தப் பெற்ற தண்டகன் என்னும் அரசகுமாரனால் தெற்கே அமைக்கப்பெற்று ஆளப்பெற்றதும், பின்பு சுக்கிராச்சாரியார் சாபத்தால் கொடிய வனமானதும் பல முனிவர்கள் தவ நியமத்தில் வாழ்ந்து வந்ததுமான ஓர் இடம். இவ் வனத்திலேதான் இராமன் சீதையோடும், இலக்குவனோடும் பல ஆண்டுகள்தங்கியிருந்தான். 18*

***4612. உண்டு, அகத்துளார், உறையும் ஐம் பொறிக்***
***கண்டகர்க்கு அருங் காலன் ஆயினார்,***
***தண்டகத்தையும் தடவி ஏகினார்;***
***முண்டகத்துறை கடிது முற்றினார்.***

***உண்டு அகத்துள் ஆர் உறையும் -** புலன்களைத் துய்த்துக் கொண்டு உடம்பினுள் பொருந்தி வசிக்கின்ற; **ஐம் பொறிக் கண்ட கர்க்கு -** ஐந்து இந்திரிய உணர்ச்சிகளாகிய (முள் போன்ற) கொடியவர்களுக்கு; **அருங் காலன் ஆயினார் -** கொடிய யமன் போன்றவர்களாகிய முனிவர்கள் வசிக்கின்ற; **தண்டகத்தையும் தடவி -** அந்தத் தண்டக வனத்தையும் தேடிப் பார்த்து; **ஏகினார் -** (அங்கும் சீதையைக் காணாமல்) அந்த இடத்தை விட்டு நீங்கிய அவ் வானர வீரர்கள்; **முண்டகத் துறை -** முண்டகத் துறை யென்னும் இடத்தை; **கடிது முற்றினார் -** விரைவாகச் சென்று சேர்ந்தார்கள்.*

*ஐம்பொறிகள், ஆன்மாவை நற்கதியில் சேரவொட்டாது துன்புறுத்து வதால் அவற்றைக் 'கண்டகர்' என்றார். கண்டகர்: முள்போன்ற கொடியோர். ஐம்பொறிக் கண்டகர்க்கு அருங்காலனாயினார்: ஐம்பொறிகளுக்குக் கூற்றுவன் ஆனவர். அஃதாவது, மனத்தை நல்வழியிற் செல்லவொட்டாது தடுத்து ஐம்புலன்களிற் செல்லுமாறு இழுக்கின்ற ஐம்பொறிகளை அவ்வாறு செய்யவொட்டாது தடுத்துத் தம் வசமாக்கி மனத்தைச் சீவான்மா பரமான்மா தியானங்களில் செலுத்தும் வல்லமையுடையவர்; ஜிதேந்திரியர் எனப்படுவர். முண்டகத் துறை: தாமரை முதலிய பூக்கள் நிறைந்து விளங்கும் நீர்த் துறையையுடைய ஒருசூழல். 19*

***4613. அள்ளல் நீர் எலாம், அமரர் மாதரார்,***
***கொள்ளை மா முலைக் கலவை, கோதையின்***
***கள்ளு, நாறலின், கமல வேலி வாழ்***
***புள்ளும், மீன் உணா, புலவு தீர்தலால்***

***அள்ளல் நீர் எலாம் -** (அந்த முண்டகத் துறையில்) சேற்றோடு கலந்த நீரெல்லாம்; **அமரர் மாதரார் -** அங்கு வந்து நீராடும் தேவ மாதர்களின்; **கொள்ளை மா முலை -** மிகப் பெரிய முலைகளில் பூசப் பட்ட; **கலவை -** மிகுதியான கலவைச் சாந்தும் கலத்தலால்; **கோதை யின் கள்ளு நாறலின் -** மலர் மாலைகளும் நறுமணம் கமழப் பெற்ற மையால்; **கமல வேலி வாழ் -** அந்த முண்டகத் துறையில் வசித்துவந்த; **புள்ளும் -** பறவைகளும்; **புலவு தீர்தலால் -** (மீன்களின் மேலுள்ள) புலால் நாற்றம் நீங்கியதால்; **மீண் உணா-** அம்மீன்களைப் புசிப்ப தில்லை.*

*அந்த முண்டகத் துறையில் வந்து நீராடுகின்ற தேவமாதர்களின் முலைகளில் பூசியிருந்தத கலவைச் சந்தனமும், மலர் மாலைகளும் அந்நீர்த் துறையில்படிதலால், அங்குள்ள மீன்களும் அந்தக் கலவை, மலர்களின் நறுமணத்தை அடைந்து தமது புலால் வாசனை நீங்கப் பெறுகின்றன. அதனால் அங்கு வாழும் நாரை முதலிய நீர்ப் பறவைகள் புலால் மணம் கமழாத அம் மீன்களை உண்ணமாட்டா என்பது. அம் முண்டகத்துறை திரள்திரளாகத் தேவமாதர் பலர் வந்து படியப் பெற்ற சிறப்பு வாய்ந்தது. கொள்ளை - மிகுதி; கமலவேலி - முண்டகத்துறை; 20*

***4614. குஞ்சரம் குடைந்து ஒழுகு கொட்பதால் -***
***விஞ்சை மன்னர்பால் விரக மங்கைமார்,***
***நஞ்சு, வீணையின் நடத்து பாடலான்,***
***அஞ்சுவார், கணீர் அருவி ஆறுஅரோ!***

***விஞ்சை மன்னர்பால் -** வித்தியாதர மன்னரிடத்து; **விரக மங்கை மார்-** தாம் கொண்ட பிரிவுத் துயரால் வேதனைப்படுகின்ற வித்தியாதர மகளிர்; **வீணையின் நடத்து -** வீணைகளைக் கொண்டு பிறர் பாடும்; **பாடலான் -** இசைப் பாட்டினால்; **நஞ்சு அஞ்சுவார் -** மனம் நைந்து நடுங்குவார்கள்; **கண்நீர் அருவி ஆறு -** (அவ்வாறு நடுங்குவதால் அவர்கள் சொரியும்) கண்ணீர்அருவிபோல் பெருகும் ஆற்றில்; **குஞ்சரம் குடைந்து -** யானைகள் அமிழ்ந்துமூழ்கி; **ஒழுகும் கொட்பு அது -** நீராடும் தன்மையுடையது (அந்த முண்டகத்துறை).*

*ஆல், அரோ: ஈற்றசை. தத்தம் கணவரைப் பிரிந்த வித்தியாதர மகளிர், தம்மைப் போலப் பிரிவில்லாத மகளிர் மனக் கிளர்ச்சியோடு வீணைகளைக் கொண்டு பாடும் பாடலைக் கேட்டு வருந்தி விரக வேதனையுற்று மனம் நடுங்கிக் கண்ணீர் சிந்துவார்கள்; அக் கண்ணீர்ப் பெருக்கு யானைகளும் அமிழ்ந்து மூழ்கும் பெரிய நீர்ப் பெருக்காகும் என்பது. தொடர்புயர்வு நவிற்சியணி. விஞ்சை மன்னர்; காமநூல்களைக் கற்றுத் தேர்ந்த வித்தியாதர ஆடவர். கணீர் - இடைக்குறை (கண்ணீர்) 21*

***4615. கமுக வார் நெடுங் கனக ஊசலில்,***
***குமுத வாயினார், குயிலை ஏசுவார்;***
***சமுக வாளியும், தனுவும் வாள் முகத்து***
***அமுத பாடலார், மருவி ஆடுவார்.***

***குமுத வாயினார் -*** *செவ்வாம்பல் மலர் போன்ற வாயையுடை யவர்களும்;* ***குயிலை ஏசுவார் -*** *(தமது குரலால்) குயிலைப் பழிப் பவர்களும்;* ***சமுக வாளியும் -*** *கூட்டமான அம்புகள் போன்ற கண் களையும்;* ***தனுவும் -*** *வில்லைப் போன்ற புருவங்களையும் கொண்ட;* ***வாள் முகத்து -*** *ஒளி பொருந்திய முகங்களையுடைய;* ***அமுத பாடலார் -*** *அமிழ்தம் போன்ற இனிய பாடல்களைப் பாடுகின்றவர்களான மகளிர்;* ***கமுக வார் நெடுங் கனக ஊசலில் -*** *பாக்கு மரங்களில் கட்டப்பட்ட நீண்ட பொன்னூஞ்சல்களில்;* ***மருவி ஆடுவார் -*** *பொருந்தி ஆடி மகிழ்வார்கள்.*

*அங்கே பாக்குமரங்களில் கட்டப்பட்டுள்ள பொன்னூஞ்சல்களில் மகளிர் மனமகிழ்ந்து ஆடுவாரென அந்த இடத்தின் அமைதியான சூழல் வருணிக்கப் பெற்றது. தனு: மகளிர் புருவத்திற்கு வடிவம் தொழிலும் பற்றிய உவமை. வாளி, தனு: உவமவாகு பெயர்கள். உருவக உயர்வுநவிற்சியணி. 22*

***4616. இனைய ஆய ஒண் துறையை எய்தினார்;***
***நினையும் வேலைவாய் நெடிது தேடுவார்;***
***வினைய வார் குழல் திருவை மேவலார்;***
***புனையும் நோயினார், கடிது போயினார்.***

***இனைய ஆய -*** *இத் தன்மையதான;* ***ஒண் துறையை -*** *அழகிய முண்டகத் துறையை;* ***எய்தினார் -*** *அடைந்தனர்;* ***நினையும் வேலை வாய் -*** *நினைக்கும் நேரத்திற்குள்;* ***நெடிது தேடுவார் -*** *வெகுதூரமாகத் தேடினர்;* ***வினைய வார் குழல் திருவை -*** *ஐவகையாக அணி செய்யத் தக்க நீண்ட கூந்தலையுடைய திருமகளான சீதையை;* ***மேவலார் -*** *காணப்பெறாமல்;* ***புனையும் நோயினார் -*** *அதனால் ஏற்பட்ட துன்பத்தையுடையவராய்;* ***கடிது போயினார் -*** *விரைவாக (அப்பால் தேடச்) சென்றார்கள்.*

*முண்டகத் துறை முழுவதும் சீதையைத் தேடி அங்குக் காணாமையால் வானர வீரர்கள் அப்பாற் செல்லலாயினர் என்பது. வினைய வார்குழல்: முடி, குழல், தொங்கல், பனிச்சை, சுருள் ஆகிய ஐவகைத் தொழிலுக்குரிய கூந்தல். வேலை - வேளை என்பதன் திரிபு. 23*

*பாண்டு மலையின் சிகரத்தை வானரர் அடைதல்*

***4617. நீண்ட மேனியான், நெடிய தாளின்நின்று***
***ஈண்டு கங்கை வந்து இழிவது என்னல் ஆம்,***
***பாண்டு அம் மலைப் படர் விசும்பினைத்***
***தீண்டுகின்ற தண் சிகரம் எய்தினார்.*** ***நீண்ட மேனியான் -*** *திருவிக்கிரமனாய் நீண்ட வடிவெடுத்த திரு மாலின்;* ***நெடிய தாளினின்று -*** *பெரிய திருவடியிலிருந்து;* ***ஈண்டு -*** *இவ்விடத்தில்தான்;* ***கங்கை வந்து இழிவது என்னலாம் -*** *ஆகாய கங்கை வந்து விழுகின்றதோ என்று சொல்லும்படியாக;* ***அம் பாண்டு மலை -*** *அழகான பாண்டு மலையினது;* ***படர் விசும்பினை -*** *பரவிய ஆகாயத்தை;* ***தீண்டுகின்ற -*** *தொடுவதாய் உயர்ந்துள்ள;* ***தண் சிகரம் -*** *குளிர்ந்த சிகரத்தை;* ***எய்தினார் -*** *(அவ் வானர வீரர்) போய்ச் சேர்ந்தார்கள்.*

*தனது சிகரம் வானத்தில் படியுமாறு ஓங்கியுள்ள வெண்மையான பாண்டுமலை, காண்பவர்களுக்குத் திருமாலின் திருவடியிலுதித்த வெண்ணிறக் கங்கையாறு வானத்திலிருந்து இங்கேதான் இறங்குகின்றதோ என்று நினைக்குமாறு தோன்றுமென்பது. தற்குறிப்பேற்றவணி. திருமால் உலகளந்த காலத்து மேலே சத்திய லோகத்திற்குச் சென்ற அந்தப் பிரானின் திருவடியைப் பிரமன் தன் கைக் கமண்டல் நீரால் கழுவி விளக்க அந்தப் பாதப் புனிதநீரே கங்கையாகப் பெருகிற்று என்பதுவரலாறு.* *24*

***4618. இருள் உறுத்து மீது எழுந்த தெண் நிலா,***
***மருள் உறுத்து, வண் சுடர் வழங்கலால்,***
***அருள் உறுத்திலா அடல் அரக்கன்மேல்***
***உருள் உறுத்த திண் கயிலை ஒத்ததால்.***

***இருள் உறுத்து -*** *(அந்தப் பாண்டு மலை) (உலகில்) பரவிய இருட்டைத் தாக்கியொழித்து,* ***மீது எழுந்த -*** *வானத்தில் தோன்றிய;* ***தெண் நிலா -*** *தெளிந்த ஒளியையுடைய சந்திரனுக்கு;* ***மருள் உறுத்து -*** *மயக்கத்தை உண்டாக்கி;* ***வண்சுடர் வழங்கலால் -*** *செழுமையான மிக்க ஒளியை வீசுவதால்;* ***அருள் உறுத்திலா -*** *(மனத்தில் சிறிதும்) அருளைக் கொள்ளாத;* ***அடல் அரக்கன்மேல் -*** *வலிய அரக்கனான இராவணன்மீது;* ***உருள் உறுத்த-*** *(அவன் கீழே விழுந்து) உருளுமாறு அழுத்திய;* ***திண் கயிலை -*** *வலியகயிலாய மலையை;* ***ஒத்தது -*** *ஒத்து விளங்கியது.*

*ஆல்: ஈற்றசை. தன் வெண்ணிலவால் உலகத்து இருளைப் போக்கும் சந்திரனுக்கும் மயக்கத்தையுண்டர்க்குவதெனப் பாண்டு மலையின் வெண்ணிறவொளியைச் சிறப்பித்துக் கூறியது. இவ்வாறு வெள்ளொளி மிகுந்திருப்பதால் பாண்டுமலைக்குக் கைலாய மலையை உவமை கூறினார். கயிலைக்கு ஏற்றங் கூறிய ஆசிரியர் வலிய அரக்கனும், இந்தச் சரிதத் தொடர்பான கொடியவனுமான இராவணனைத் தன் கீழே கிடத்தி அழுத்திய மலையெனச் சிறப்பித்த நயங் காணலாம்.* *25*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***4619. விண் உற நிவந்த சோதி***
***வெள்ளிய குன்றம் மேவி,***
***கண்ணுற நோக்கலுற்றார், களி***

***உறக் கனிந்த காமர்***
***பண் உறு கிளவிச் செவ்***
***வாய், படை உறும் நோக்கினாளை,***
***எண்ணுறு திறத்தும் காணார்; இடர்***
***உறும் மனத்தர் எய்த்தார்.***

*(வானர வீரர்)* ***விண் உற நிவந்த*** *- வானத்தைப் பொருந்தும்படி உயர்ந்த;* ***சோதி*** *- ஒளியையுடைய;* ***வெள்ளிய குன்றம் மேவி*** *- வெண்ணிறமான அந்தப் பாண்டுமலையைப் பொருந்தி;* ***கண்ணுற நோக்கலுற்றார்*** *- (அங்கே) சீதையைக் காண்பதற்கு ஆர்வத்தோடு தேடத் தொடங்கியவர்களாகிய;* ***களி உற*** *- மகிழ்ச்சியடையுமாறு;* ***கனிந்த*** *- முற்றிய;* ***காமர் பண் உறு*** *- விரும்பத் தகுந்த இசைப் பாடல் போன்ற;* ***கிறவிச் செவ்வாய்*** *- இனிய சொற்களைப் பேசும் சிவந்த வாயையும்;* ***படை உறும் நோக்கினாளை*** *- வேற்படை போன்ற கண்களையுமுடைய சீதையை;* ***எண்ணுற திறத்தும்*** *- தாம் கருதிப் பார்த்த இடங்களிலெல்லாம்;* ***காணார்*** *- காணவில்லை;* ***இடர் உறு மனத்தர்*** *- துயரம் பொருந்திய மனத்தையுடையவராய்;* ***எய்த்தார்*** *- தளர்வுற்றார்கள்.*

*காமர்: காமம் மரு என்பதன் மரூஉ. உறு: (இங்கே) உவமவுருபு. அந்தப் பாண்டுமலையின் பல இடங்களில் தேடியும் சீதையைக் காணாமையால் அவ் வானரவீரர்கள் தளர்ந்தார்கள் என்பது.                26*

*கோதாவரியை அடைதல்*

***4620. ஊதைபோல் விசையின், வெங் கண்***
***உழுவை போல் வயவர், ஓங்கல்***
***ஆதியை அகன்று செல்வார்;***
***அரக்கனால் வஞ்சிப்புண்ட***
***சீதை  போகின்றாள் கூந்தல் வழீஇ***
***வந்து, புவனம் சேர்ந்த***
***கோதைபோல் கிடந்த கோதாவரியினைக்***
***குறுகிக் சென்றார்.***

***ஊதைபோல் விசையின்*** *- காற்றைப் போல வேகத்தைக் கொண்ட;* ***வெங் கண்*** *- (சினத்தால்) கொடுமையான பார்வையுடைய;* ***உழுவைபோல் வயவர்*** *- புலிபோன்ற வலிமையுள்ள அந்த வானர வீரர்;* ***ஓங்கல் ஆதியை*** *- அந்தப் பாண்டு மலையின் அடிவாரத்தை;* ***அகன்று செல்வார்*** *- நீங்கி அப்பாலே செல்பவர்களாகி;* ***அரக்கனால் வஞ்சிப்பு உண்ட*** *- இராவணனால் வஞ்சித்துக் கவரப்பட்டு;* ***சீதை போகின்றாள்*** *- செல்லுகின்ற சீதையினது;* ***கூந்தல் வழீஇ வந்து*** *-*

*கூந்தலிலிருந்து நழுவி வந்து;* ***புவனம் சேர்ந்த*** *- பூமியையடைந்த;* ***கோதை போல் கிடந்த*** *- மலர்மாலை போல விளங்கிய;* ***கோதாவரியினை*** *- கோதாவரி என்னும் ஆற்றை;* ***குறுகிச் சென்றார்*** *- நெருங்கிச் சேர்ந்தார்கள்.*

*உயரமான இடத்திலேறிக் காண்பவர்க்கு ஆறுகள் வெண்மையான மலர் மாலைபோலத் தோன்றுமாதலால் கோதாவரி நதியை இராவணன் சீதையைக் கவர்ந்து செல்லும்போது அவளது கூந்தலிலிருந்து நழுவிக் கீழே விழுந்த மலர் மாலை போலுமென்று வருணித்தார். ஊதை: சீறி வீசுவதால் வேகத்திற்கு உவமை. வழீஇ: சொல்லிசையளபெடை. 27*

***4621. எழுகின்ற திரையிற்று ஆகி, இழிகின்ற***
***மண நீர் யாறு, -***
***தொழுகின்ற சனகன் வேள்வி***
***தொடங்கிய, சுருதிச் சொல்லால்***
***உழுகின்ற பொழுதின், ஈன்ற ஒரு***
***மகட்கு இரங்கி, ஞாலம்***
***அழுகின்ற கலுழி மாரி ஆம்***
***என - பொலிந்தது அன்றே.***

***எழுகின்ற திரையிற்று ஆகி** - மெலெழுந்து வீசியெறியும் அலை களையுடையதாகி; **இழிகின்ற** - பெருகி வருகின்ற; **மணி நீர் யாறு** - (நீலமணி போல) தெளிந்த நீரையுடைய அந்தக் கோதாவரி நதி; **தொழு கின்ற சனகன்** - யாவராலும் வணங்கப்படுகின்ற பெருமையுள்ள சனக மன்னன்; **வேள்வி தொடங்கி** - யாகத்தைத் தொடங்கிச் செய்யும் பொருட்டு; **சுருதிச் சொல்லால்** - வேத மந்திரங்களைச் சொல்லி; **உழுகின்ற பொழுதின்** - (கலப்பையால்) உழுகின்ற காலத்தில்; **ஈன்ற** - உழுபடைச்சாலின் வழியே (பூமி) பெற்றெடுத்த; **ஒரு மகட்கு** - ஒப்பற்ற அந்தச் சீதைக்காக; **இரங்கி** - (இராவணனால் ஏற்பட்ட துன்பத்திற்கு) மனம் வருந்தி; **ஞாலம்** - (அவளை ஈன்ற தாயான) பூமிதேவி; **அழுகின்ற** - அழுவதாலுண்டான; **கலுழிமாரி ஆம் என** - கலங்கலான கண்ணீர்ப் பெருக்கைப் போல; **பொலிந்தது** - விளங்கியது.*

*அன்று, ஏ: ஈற்றசைகள். நிறைந்து பெருகக் கூடிய கோதாவரிநதியை பூமி தேவி தான் பெற்ற மகளான சீதைக்கு இராவணனால் நேர்ந்த வருத்தத்திற்காக இரக்கப்பட்டுப் பெருக்கும் கண்ணீர்போலுமென வருணித்தார். தன்மைத் தற்குறிப்பேற்றவணி. சனக மன்னன் அறிவிற் சிறந்த ஞானயோகியாதலால், யோகியர்களும், பெரியோர்களும் தொழுவதற்குரிய சிறப்புப் பெற்றவன்; அதனால் 'தொழுகின்ற சனகன்' எனப்பட்டான். யாகம் செய்பவர் முதலில் வேத மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு கலப்பையால் உழுது அங்கு யாகசாலையை அமைப்பது முறையாகும். சீதை : சீதா என்னும் வடசொல் படைச்சால் என்னும் பொருளுடையது; காரணப் பெயர். உழுகின்ற கொழுமுகத்தின் உதிக்கின்ற கதிரின் ஒளி பொழிகின்ற புவிமடந்தை திருமடந்தை வெளிப்பட்டெனத் . . . . தோன்றினாள்*

*(682) என முன்பு கூறியதை நினைவு கூர்க. கலுழி: கலங்கல் நீர். வினை முடிவு: யாறு பொலிந்தது என இயைத்துப் பொருள் முடிவு கொள்ள வேண்டும். 28*

***4622. ஆசு இல் பேர் உலகில்***
***காண்போர் அளவைநூல் எனலும் ஆகி,***
***காசொடு கனகம் தூவி, கவின் உறக்***

***கிடந்த கான் யாறு, -***
***ஏசு இல் போர் அரக்கன்***
***மார்பினிடை பறித்து, எருவை வேந்தன்***
***வீசிய வடக மீக் கோள் ஈது***
***என - விளங்கிற்று அன்றே.***

***காசொடு கனகம் தூவி -*** *இரத்தினங்களொடு பொன்னையும் தன்அலைகளால் கொழித்துக் கொண்டு;* ***கவின் உறக் கிடந்த கான் யாறு -*** *அழகாக ஓடிப் பல காடுகளிடையே செல்லும் அந்த கோதாவரி நதி;* ***ஆசு இல் பேருலகில் -*** *குற்றமற்ற பெரிய இந்த நிலவுலகத்தில்;* ***காண் போர் -*** *அதனைக் காண்பவர்க்கு;* ***அளவை நூல் எனலும் ஆகி -*** *தருக்க சாத்திரம் போல விளங்கி;* ***எருவை வேந்தன் -*** *கழுகுகளுக்கு அரசனான சடாயு;* ***ஏசு இல் போர் அரக்கன் -*** *பழிப்புக்கிடமில்லாத போரில் சிறந்த அரக்கனாகிய இராவணனது;* ***மார்பின் இடை -*** *மார்பிலிருந்து;* ***பறித்து வீசிய -*** *பிடுங்கி அலகால் வீசியெறிந்து;* ***மீக் கோள் வடகம் ஈது என -*** *மேலே அணியப் பெற்ற இரத்தினமாலையோ இது என்று சொல்லத்தக்காய்;* ***விளங்கிற்று -*** *விளங்கியது.*

*அன்று, ஏ: ஈற்றசைகள் கோதாவரி நதி பூமியையளக்கக்கூடிய அளவை நூல் போலவும், கழுகரசனான சடாயு, சீதையைக் கவர்ந்து சென்ற இராவணனோடு போர் செய்கையில் அவனது மார்பிலிருந்து கழற்றியெறிந்த முத்தாரம் போலவும் விளங்கியது என்பது, வடகம் - வடம் என்பதன் விரித்தல் விகாரம். கோதாவரிக்குத் தருக்க நூல் உவமம்: 29*

*சுவணகத் துறை கடந்து குலிந்த நாட்டைக் கடத்தல்*

***4623. அந் நதி முழுதும் நாடி,***
***ஆய் வளை மயிலை, யாண்டும்***
***சந்நிதி உற்றிலாதார், நெடிது***
***பின் தவிரச் சென்றார்;***
***'இன்ன தீதுஇலாத, தீது' என்று***
***யாவையும் எண்ணும் கோளார்,***
***சொன்ன தீவினைகள் தீர்க்கும்***
***சுவணகத் துறையில் புக்கார்.***

***இன்ன தீது இலாத -*** *இன்னது நல்லது; (இன்ன)* ***தீது என்று -*** *இன்னது கெட்டது என்று;* ***யாவையும் எண்ணும் கோளார் -*** *எல்லாவற்றையும்*

*ஆராய்ந்து அறியும் தன்மையுடைய வானரவீரர்;* ***அந் நதி முழுதும் நாடி -*** *அந்தக் கோதாவரி நதிப் பகுதி முழுவதும் தேடிப் பார்த்து;* ***ஆய்வளை மயிலை -*** *சிறந்த வளையல்களையணிந்த மயில் போன்ற சீதையை;* ***யாண்டும் சந்நிதி உற்றிலாதார் -*** *எதிரில் காணப் பெறாத அவர்கள்;* ***நெடிது பின் தவிரச் சென்றார் -*** *நீண்ட வழி பின்னால் கழியுமாறு முன்னேறிச் சென்றவர்களாய்;* ***சொன்ன தீவினைகள் -*** *நூல்களில் கூறிய பாவங்களையெல்லாம்;* ***தீர்க்கும் சுவணகத் துறையில் -*** *(தன்னில் படிவோர்க்குப்) பாவத்தைப் போக்குகின்ற சுவணக (சோணை) நதியிடத்தில்;* ***புக்கார் -*** *சென்று சேர்ந்தார்கள்.*

*ஆய்வளை மயில்: அடையடுத்த உவமையாகுபெயர். சந்நிதி: வடசொல்லின் திரிபு - எதிரேகாணல், சுவணகம்: ஒரு நதி; சோணம், சோணை எனவும் வழங்கப் பெறும்.*
*30*

***4624. சுரும்பொடு தேனும், வண்டும்,***
***அன்னமும், துவன்றி; புள்ளும்,***
***கரும்பொடு செந் நெல் காடும்,***
***கமல வாவிகளும், மல்கி;***
***பெரும் புனல் மருதம் சூழ்ந்த***
***கிடக்கை பின் கிடைக்கச் சென்றார்;***
***குரும்பை நீர் முரஞ்சும் சோலைக்***
***குலிந்தமும், புறத்துக் கொண்டார்.***

***சுரும்பொடு தேனும் வண்டும் -*** *பொன்வண்டு, தேன்வண்டு, கருவண்டு என்னும் பலவகையான வண்டுகளும்;* ***அன்னமும் -*** *அன்னப் பறவைகளும்;* ***துவன்றி -*** *நெருங்கி;* ***புள்ளும் -*** *நாரை முதலான ஏனைய பறவைகளும்;* ***கரும்பொடு -*** *கரும்புகளும்;* ***செந்நெல் காடும் -*** *செந்நெற் பயிர்களும் அடர்ந்த நன்செய் இடங்களும்;* ***கமல வாவிகளும் -*** *தாமரைத் தடாகங்களும்;* ***மல்கி -*** *நிறைந்து;* ***பெரும்புனல் மருதம் சூழ்ந்த -*** *மிக்க நீர்வளங் கொண்ட மருதநிலம் சூழ்ந்துள்ள;* ***கிடக்கை பின் கிடக்க -*** *இடங்கள் தம் பின்னால் கிடக்கும்படி;* ***சென்றார் -*** *அப்பால் கடந்து சென்றனர் அந்த வானரவீரர்கள்;* ***நீர்க் குரும்பை -*** *இளநீர்க் காய்கள்;* ***முரஞ்சும் சோலைக் குலிந்தமும் -*** *நிரம்பிய தென்னஞ்சோலைகளையுடைய குலிந்த நாட்டையும்;* ***புறத்துக் கொண்டார் -*** *(தமது) பின்புறத்ததாகும்படி முன்னேறிச் சென்றார்கள்.*

*மருதநில: அன்னம் முதலிய பறவைகளையும், செந்நெல் முதலிய உணவு வகைகளையும் தாமரை மலர்களையும், பொய்கைகளையும் தன்னிடத்தே கொண்டது; வயலும் வயல் சார்ந்த பகுதிகளும் மருதம் ஆகும். சுரும்பு, தேன், வண்டு: வண்டுகளின் வகைகளைக் குறிக்கும் சொற்கள்; சுரும்பு; எல்லா மணத்திலும் செல்வது எனவும் தேன், வண்டு: நன்மணத்தே செல்வன எனவும் கூறுவர். இச் செய்யுளில் நிலம், நீர், பூ, பறவை, மரம் முதலியவற்றால் குவிந்த நாட்டின் மருத*

*வளம் கூறப் பெற்றது. குரும்பை: தெங்கு, பனை ஆகிய மரங்களின் இளங்காய் குலிந்தம்: இக் குலிந்த நாடு கேரள நாட்டின் வடக்கே மேற்கடற்கரையையடுத்துள்ளதாகவும் பழைய ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்றெனவும்கூறுவர்.* *31*

*அருந்ததி மலை, மரகத மலைகளைக் கடந்து வேங்கட மலை சேர்தல்*

***4625. கொங்கணம் ஏழும் நீங்கி, குட***
***கடல் தரளக் குப்பைச்***
***சங்கு அணி பானல் நெய்தல் -***
***தண் புனல் தவிர ஏகி,***
***திங்களின் கொழுந்து சுற்றும் சிமய***
***நீள் கோட்டுத் தேவர்***

***அங்கைகள் கூப்ப, நின்ற***
***அருந்ததிக்கு அருகர் ஆனார்.***

***கொங்கணம் ஏழும் நீங்கி*** - *(அந்த வானர வீரர்) கொங்கண நாட்டின் ஏழு பிரிவுகளையும் கடந்து;* ***குடகடல்*** - *மேற்குக் கடலில் உண்டான;* ***தரளக் குப்பை*** - *முத்துக் குவியல்கள்;* ***சங்கு*** - *சங்குகள்;* ***அணிபானல்*** - *அழகான கருங்குவளை மலர்கள்;* ***நெய்தல்*** - *நெய்தற் பூக்கள்;* ***தண்புனல் தவிர ஏகி*** - *ஆகியவை நிறைந்த குளிர்ந்த நீர்ப் பகுதிகளையுடைய நெய்தல் நிலத்தை நீங்கிச் சென்று;* ***திங்களின் கொழுந்து சுற்றும்*** - *பிறைச் சந்திரன் சுற்றிச் செல்லக்கூடிய;* ***சிமய நீள் கோடு*** - *சிகரங்களையுடைய உயரமான கொடுமுடிகளைக் கொண்டதும்;* ***தேவர் அங்கைகள் கூப்ப நின்ற*** - *தேவர்கள் தம் அழகிய கைகளைக் குவித்து வணங்கும்படி நிற்பதுமான;* ***அருந்ததிக்கு*** - *அருந்ததி என்னும் மலைக்கு;* ***அருகர் ஆனார்*** - *அருகில் போய்ச் சேர்ந்தார்கள்.*

*வானரவீரர்கள் ஏழு பிரிவுகளையுடைய கொங்கண தேசத்தையும், மேற்குத் திசையிலுள்ள நெய்தல் நிலங்களையும் தாண்டி மிக உயர்ந்துள்ள அருந்ததிமலையைச் சேர்ந்தார்கள் என்பது. கொங்கணம்: மகாராட்டிர மாநிலத்தைச் சேர்ந்த வடகன்னடம் என்னும் மாவட்டத்தது. தேவர் அங்கைகள் கூப்ப நின்ற அருந்ததி: உயர்வு நவிற்சியணி.* *32*

***4626. அருந்ததிக்கு அருகு சென்று, ஆண்டு***
***அழகினுக்கு அழகு செய்தாள்***
***இருந்த திக்கு உணர்ந்திலாதார்***
***ஏகினார்; இடையர் மாதர்***
***பெருந் ததிக்கு அருந் தேன் மாறும்***
***மரகதப் பெருங் குன்று எய்தி,***
***இருந்து, அதின் தீர்ந்து சென்றார்,***
***வேங்கடத்து இறுத்த எல்லை -.***

***அருந்ததிக்கு அருகு சென்று*** - *(அவ் வானர வீரர்) அருந்ததி மலைக்குப் பக்கத்திற் சென்று;* ***ஆண்டு*** - *அந்த இடத்தில்;* ***அழகினுக்கு***

***அழகு செய்தாள்*** - *அழகுக்கும் அழகை உண்டாக்கக் கூடியவளான சீதை;* ***இருந்த திக்கு*** - *இருந்த இடத்தை;* ***உணர்ந்திலாதார்*** - *அறிய முடியாதவர்களாய்;* ***ஏகினார்*** - *அந்த இடம் விட்டுச் சென்று;* ***இடையர் மாதர்*** - *இடைப் பெண்கள்;* ***பெருந் ததிக்கு*** - *(தங்களது) சிறப்பான தயிருக்கு;* ***அருந்தேன் மாறும்*** - *மலைவாணர் சேகரித்த அருமையான மலைத்தேனைப் பண்டமாற்றாகக் கொள்ளும்;* ***பெருங்குன்று எய்தி யிருந்து*** - *மரகதமலையென்னும் பெரிய மலையை அடைந்து அங்கே தங்கியிருந்து;* ***அதில் தீர்ந்து*** - *(அங்கும் சீதையைக் காணாமல்) அதை விட்டு நீங்கி;* ***இறுத்த எல்லை*** - *(தமிழ் நாட்டின்) வரையறுக்கப் பெற்ற வடக்கு எல்லையாகிய;* ***வேங்கடத்து*** - *திருவேங்கட மலையினிடத்து;* ***சென்றார்*** - *சென்று சேர்ந்தார்கள்.*

*அழகினுக்கு அழகு செய்தாள்: இயற்கையில் நற்பண்புகள் மிகுந்து நல்லிலக்கணத்தில் குறைவில்லாத தன்னை அழகு சேர்ந்திருப்பதால் தான் அந்த அழகுக்குச் சிறப்பையுண்டாக்கியிருக்கிறாள் என்பது. மரகதமலைக்குப் பக்கத்தே*

*முல்லை நிலத்து இடைச்சியர் மரகதமலை மேலுள்ள குறிஞ்சி நிலப் பெண்களிடம் தயிரைக் கொடுத்து அதற்கு ஈடாகத் தேனைப் பெற்றுக் கொள்கின்றனர் என்பதில் குறிஞ்சி, முல்லையுமாகிய இரண்டு திணை மயங்கினமை கூறியவாறு காண்க.*
*33*

***4627. முனைவரும், மறை வலோரும்,***
***முந்தைநாள் சிந்தை மூண்ட***
***வினை வரும் நெறியை மாற்றும்***
***மெய் உணர்வோரும், விண்ணோர்***
***எனைவரும், அமரர் மாதர்***
***யாவரும், சித்தர் என்போர்***
***அனைவரும், அருவி நல் நீர்***
***நாளும் வந்து ஆடுகின்றார்.***

***முனைவரும் -*** *(வேங்கடமலையில்) மாமுனிவர்களும்;* ***மறை வலோரும் -*** *வேதமறிந்த அந்தணர்களும்;* ***முந்தை நாள் -*** *முற்பிறப்பிலே;* ***சிந்தை மூண்ட -*** *மனம் மேலிட்டுச்செய்த;* ***வினைவரும் நெறியை மாற்றும் -*** *தீவினைகளின் பயனாகத் தொடர்ந்து வரும் அல் வழியை மாற்றி நல்வழியில் திருப்பவல்ல;* ***மெய் உணர்வோரும் -*** *தத்துவ ஞானிகளும்;* ***விண்ணோர் எனைவரும் -*** *தேவர்கள் எல்லோரும்;* ***அமரர் மாதர் யாவரும் -*** *தெய்வப் பெண்0கள் யாவரும்;* ***சித்தர் என்போர் அனைவரும் -*** *தேவரில் ஒரு வ0கையினரான சித்தர்கள் எல்லோரும்;* ***அருவி நல்நீர் -*** *(அம் மலையிலுள்ள) அருவியின் தூய்மையான புண்ணிய தீர்த்தங்களில்;* ***நாளும் -*** *ஒவ்வொரு நாளும்;* ***வந்து ஆடுகின்றார் -*** *வந்து நீராடுகின்றார்கள்.*

*முனிவர் முதலான இவ்வுலகத்தவரும், தேவகணங்களாகிய மேலுலகத்தவரும் வந்து நீராடுவதற்குரிய பெருமை மிக்க அருவிகளாலாகிய பல புண்ணிய*

*தீர்த்தங்களைக் கொண்டுள்ளது திருவேங்கடமலையென்பது அங்குள்ள தீர்த்தங்கள்: கோனேரி, ஆகாய கங்கை, பாபவிநாசம், பாண்டவ தீர்த்தம், குமாரதாரை, தும்புரு தீர்த்தம், ஆழ்வார் தீர்த்தம் ஆகியன. சித்தர்: பதினெண்கணத்துத் தேவர்களில் ஒரு வகையினர். 34*

*கலிவிருத்தம்*

***4628. பெய்த ஐம் பொறியும்,***
***பெருங் காமமும்,***
***வைத வெஞ் சொலின்,***
***மங்கையர் வாட் கணின்,***
***எய்த வஞ்சக வாளியும்,***
***வென்ற நல்,***
***செய் தவம் பல***
***செய்குநர் தேவரால்.***

*(அந்த மலையில்)* ***தேவர் - தேவர்கள்*** *;* ***பெய்த ஐம்பொறியும்-*** *(தமது உடம்பில்) பொருந்திய மெய் முதலாய ஐந்து பொறிகளையும்;* ***பெருங் காமமும்-*** *ஐம்புலன்களால் விளையும் பெரிய காம உணர்ச்சியையும்;* ***வைத வெஞ்சொலின் -*** *(பிறர் தம்மை) ஏசிய கொடிய சொற்களையும்;* ***மங்கையர் வாட்கணின் -*** *மகளிரின் வாய் போன்ற கொடிய கண்களால்;* ***எய்த -*** *தூண்டிய;* ***வஞ்சக வாளியும் -*** *வஞ்சகத் தன்மையுள்ள பார்வையாகிய அம்புகளையும்;* ***வென்று -*** *(எளிதிலே) வெற்றிகண்டு;* ***செய் நல் தவம் பல-*** *செய்யத்தக்க அரிய தவங்கள் பலவற்றை;* ***செய்குநர்-*** *செய்கின்றார்கள்.*

*ஆல்: ஈற்றசை. தேவர்கள் அந்தத் திருவேங்கட மலைக்கு வந்து ஐம்பொறிகளையும் அடக்கிக் காமவேதனையில்லால் பிறர் தம்மை ஏசினாலும் பழியே பேசினாலும் பொறுத்துப் பெண்களை மனத்தாலுங் கருதாமல் பல தவங்களைச் செய்கின்றார்கள் என்பது. அழிவு நோக்கி வீழ்வதை அறிய முடியாமல் மயக்குதலின் காமப் பார்வையை வஞ்சக வாளிஎன்றார். 35*

***4629. வலம் கொள் நேமி***
***மழை நிற வானவன்***
***அலங்கு தாள் இணை***
***தாங்கிய அம் மலை***
***விலங்கும் வீடு உறுகின்றன;***
***மெய்ந் நெறி***
***புலன் கொள்வார்கட்கு***
***அனையது பொய்க்குமோ?***

***வலம் கொள் நேமி -*** *வெற்றி கொள்ளும் சுதரிசனம் என்ற சக்க ராயுதத்தைக் கையில் கொண்ட;* ***மழை நிற வானவன் -*** *கார் மேகம்*

*போன்ற கருநிறத்தையுடைய கடவுளான திருவேங்கடவனது;* ***அலங்கு தாள் இணை -*** *விளங்குகின்ற இரண்டு திருவடிகளையும்;* ***தாங்கிய -*** *தாங்கி நின்ற;* ***அம்மலை -*** *அத் திருவேங்கடமலையில் வாழ்கின்ற;* ***விலங்கும் -*** *மிருகங்களும்;* ***வீடு உறுகின்றன -*** *மோட்சத்தையடைகின் றன (அவ்வாறானால்);* ***மெய்ந் நெறி புலன் கொள்வார்கட்கு -*** *உண்மை நெறியான தவ நியமங்களில் தன் மனத்தைச் செலுத்தும் யோகியர் முதலோர்க்கு;* ***அனையது -*** *அந்த மோட்சமானது;* ***பொய்க்குமோ-*** *கிடைக்காமல் தவறிப் போகுமோ? (தவறிப் போகாது).*

*மிகப் பெருஞ்சிறப்பு வாய்ந்த அத் திருவேங்கட மலையில் வாழும் மிருகங்களும் வீட்டுலகத்தையடையுமென்றால் தவவொழுக்கங்களில் நடக்கின்ற யோகியர் முதலோர்க்கு அந்த வீட்டுலகம் கிடைப்பது தவறுமோ என்பது. விலங்கும்: உம்மை இழிவுசிறப்பு. திருவேங்கடமலை வீட்டுப் பதவியைத் தவறாது அளிக்கவல்லதாகையால்தான் 'எம்பெருமான் பொன்மலையில் ஏதேனும் ஆவேனே' (பெருமாள் திருமொழி 4 : 10) என்றார் குலசேகராழ்வார்.*
*36*

***4630. ஆய குன்றினை எய்தி, அருந்தவம்***
***மேய செல்வரை மேயினர், மெய்ந் நெறி***

***நாயகன்தனை நாளும் வணங்கிய***
***தூய நல் தவர் பாதங்கள் சூடினார்.***

***ஆய குன்றினை*** *- (வானரவீரர்) அத்தகைய தூய்மையும் சிறப்பும் அமைந்த திருவேங்கடமலையை;* ***எய்தி*** *- அடைந்து;* ***அருந்தவம் மேய செல்வரை*** *- அரிய தவத்தைப்பொருந்திய தவயோகிகளை;* ***மேவினர்*** *- அடைந்து;* ***மெய்ந்நெறி நாயகன்தனை*** *- என்றும் அழியாத மோட்சநிலைக்குத் தலைவனான திருவேங்கடநாதனை;* ***நாளும் வணங்கிய*** *- தினமும் வணங்கி வழிபாடு செய்த;* ***தூய நல்தவர்*** *- தூய்மையான சிறந்த தவத்தையுடைய அப் பெரியவர்களின்;* ***பாதங்கள் சூடினார்*** *- திருவடிகளைத் தம் தலைமேல் சூடி வணங்கினார்கள்.*

*திருவேங்கட நாதனை வணங்குகின்ற பெரும்பேறு பெற்றுள்ளவராதலால் அவர்களை 'அருந்தவமேய செல்வர்', 'தூய நல் தவர்' என்றுகூறினார். 37*

*தொண்டை நாட்டை அடைதல்*

***4631. சூடி, ஆண்டு அச்***
***சுரி சூழல் தோகையைத்***
***தேடி, வார் புனல் தெண்***
***திரைத் தொண்டை நல்***
***நாடு நண்ணுகின்றார்,***
***மறை நாவலர்***
***வேடம் மேயினர், வேண்டு***
***உரு மேவுவார்.***

***வேண்டு உரு மேவுவார்*** *- விரும்பிய வடிவங்களை எடுக்கும் திற மையுடைய வானரர்கள்;* ***சூடி*** *- (தவயோகிகளின் திருவடிகளைத் தம்) தலையில் சூடிய பின்பு;* ***ஆண்டு*** *- அத் திருவேங்கட மலையில்;* ***அச் சுரிகுழல் தோகையை*** *- சுருண்ட கூந்தலையுடைய மயில் போன்ற சீதையை;* ***தேடி*** *- அங்கே தேடிப் பார்த்து(க் காணாமல்);* ***மறைநாவலர் வேடம் மேயினர்*** *- வேதங்களில் வல்ல அந்தணர்களின் வேடத்தைப் பூண்டவர்களாய்;* ***தெண் திரை*** *- தெளிந்த அலைகளையுடைய;* ***வார் புனல்*** *- மிக்க நீர் நிறைந்த;* ***தொண்டைநல் நாடு*** *- சிறந்த தொண்டை நாட்டை;* ***நண்ணுகின்றார்*** *- சேர்பவரானார்கள்.*

*கரிகுழல் தோகை: அடையடுத்த இருமடியாகு பெயர். 'தெண்ணீர் வயல் தொண்டை நன்னாடு சான்றோருடைத்து' என்றவாறு மிகுந்து சான்றோரை மிகுதியாகக் கொண்ட நாடாதலால் 'வார் புனல் தெண்திரைத் தொண்டை நன்னாடு' என்றார்.*
*38*

***4632. குன்று சூழ்ந்த கடத்தொடும், கோவலர்***
***முன்றில் சூழ்ந்த படப்பையும், மொய் புனல்***
***சென்று சூழ்ந்த கிடக்கையும், தெண் திரை***
***மன்று சூழ்ந்த பரப்பும் - மருங்கு எலாம்.***

***மருங்கு எலாம்*** *- (அத் தொண்டை நாட்டின்) இடங்களெல்லாம்;* ***குன்று சூழ்ந்த கடத்தொடும்*** *- மலைகள் சூழ்ந்த சாரல்களும் (குறிஞ்சியும்);* ***கோவலர் மூன்றில் -***

*இடையர்களின் முற்றங்களை;* ***சூழ்ந்த படப்பையும் -*** *சூழ்ந்துள்ள தோட்டங்களும் (முல்லை நிலமும்);* ***மொய் புனல் சென்று சூழ்ந்த -*** *மிக்க நீர்சுற்றிலும் பாய்ந்து நிறைந்துள்ள;* ***கிடக்கையும் -*** *இடங்களான மருத நிலங்களும்;* ***தெண் திரை -*** *தெளிந்த அலைகளையுடைய;* ***மன்று சூழ்ந்த பரப்பும் -*** *மணல் வெளியான இடங்கள் சூழ்ந்த நெய்தல் நிலமும் (உள்ளன).*

*வினை முற்று (உள்ளன) வருவித்து முடிக்கப்பட்டது. இதனால் அத்தொண்டை நாடு நால்வகை நிலங்களும் கொண்டிருத்தலைக் கூறினார். கோவலர்: பசுக்களை மேய்த்துக் காப்பவர். படப்பை : வரகு முதலியன விளைதற்குரிய தோட்டம். மன்று: வெளியான இடம். முன்றில் : இலக்கணப் போலி.* *39*

***4633. சூல் அடிப் பலவின் சுளை தூங்க தேன்,***
***கோல் அடிப்ப வெரீஇ, குல மள்ளர் ஏர்ச்***
***சால் அடித் தரும் சாலியின் வெண் முளை,***
***தோல் அடிக் கிளை அன்னம், துவைப்பன.***

***குல மள்ளர் -*** *வேளாண் குலத்தவராய உழவர்கள்;* ***கோல் அடிப்ப -*** *உழும்போது உழவு எருதுகளைக் கோலினால் அடிக்கையில்;* ***தோல் அடிக் கிளை அன்னம் -*** *தோல் செறிந்த அடிகளையுடைய*

*கூட்டமான அன்னப் பறவைகள்;* ***வெரீஇ -*** *அஞ்சி;* ***சூல் அடிப் பலவின் -*** *கருவை அடியிலே கொண்ட பலாமரத்தினது (வேர்ப்பலாவின்);* ***சுளை தூங்கு தேன் -*** *(பலாச்) சுளையிலிருந்து ஒழுகுகின்ற தேன் (பாய்ந்து);* ***ஏர்ச்சால் அடித்தரும் -*** *உழவுச் சாலின் இடங்களிலே முளைத்துள்ள;* ***சாலியின் வெண்முளை -*** *நெற்பயிரின் வெண்மையான முளைகளை;* ***துவைப்பன -*** *(கால்களால்) மிதித்துத் துவைப்பனவாம்.*

*உழவர்கள் ஏர் உழும் போது உழவு மாடுகளை அடித்துத் துரத்த பக்கத்தேயிருந்த அன்னப் பறவைகள் அதனால் அஞ்சி அண்மையில் பலாச் சுளைகளின் தேன்பாய முளைத்துள்ள வயல்களில் விரைந்தோட, அவற்றின் முளைகள் சிதையும் என்பது கருத்து. சூல்: கருப்பம்; இங்கு வேர் என்னும் பொருளது, சூல் அடிப் பலா: வேர்ப் பலா. கோல்: தாற்றுக் கோல். இச் செய்யுளில் மருத வளம் கூறப்பெற்றுள்ளது.*
*40*

***4634. செருகுறும் கணின் தேம் குவளைக் குலம்***
***அருகு உறங்கும் வயல் மருங்கு, ஆய்ச்சியர்***
***இரு குறங்கு பிறங்கிய வாழையில்***
***குருகு உறங்கும் ; குயிலும் துயிலுமால்.***

***செருகு உறும் கணின் -*** *கூந்தல் வரை நீண்டுள்ள (மகளிரின்) கண் போன்ற;* ***தேம் குவளைக் குலம் -*** *தேனையுடைய குவளைப் பூக்களின் கூட்டம்;* ***அருகு உறங்கும் -*** *பக்கங்களில் உறங்குவது போலக் குவிந்திருக்கும்;* ***வயல் மருங்கு -*** *நீர் நிறைந்த வயலிடங்களில்;* ***ஆய்ச்சியர் -*** *(அந்த நாட்டு) இடைச்சியரின்;* ***இரு குறங்கு பிறங்கிய வாழையில் -*** *இரண்டு தொடைகளைப் போல விளங்கிய வாழை மரங்களிலே;* ***குருகு***

***உறங்கும் -*** *நாரைகள் தூங்கும்;* ***குயிலும் துயிலும் -*** *(அங்கே) குயில்களும் தூங்கிக் கொண்டிருக்கும்.*

*ஆல்: ஈற்றசை. பகற்பொழுதில் குவளைமலர்கள் குவிந்து குறுகியிருக்குமாதலால் அவை மகளிரின் குறுகிய கடை நோக்கிற்கு உவமையாயின. வாழை: மகளிர் தொடைக்கு உவமை; எதிர் நிலையணி: இந்த அணியினால் குவளைமலர், வாழை என்ற இவற்றை விட மகளிரின் கண்ணும், தொடையும் மிகுந்த சிறப்புடையன என்பது பெறப்படும். முடித்துச் செருகப்படுவதால் கூந்தல் 'செருகு' எனப்பட்டது; முதனிலைத் தொழிலாகு பெயர்.* *41*

***4635. தெருவின் ஆர்ப்புறும் பல்***
***இயம் தேர் மயில்***
***கருவி மா மழை***
***என்று களிப்புறா;***
***பொருநர் தண்ணுமைக்கு அன்னமும்***
***போகலா; -***
***மருவினார்க்கும் மயக்கம்***
***உண்டாம்கொலோ?***

***தெருவின் ஆர்ப்புறும் -*** *வீதிகளில் ஆரவாரிக்கின்ற;* ***பல் இயம் -*** *பல வகை இசைக் கருவிகளின் ஒலிகளை;* ***தேர் மயில் -*** *கேட்டுணர்ந்த மயில்கள் (அந்த முழக்கத்தை);* ***கருவி மா மழை என்று*** *- மழைக்கு முதற்காரணமாகிய மேகத்தின் இடியென்ற மயங்கி;* ***களிப்பு உறா -*** *மகிழ்ச்சியடையமாட்டா;* ***அன்னமும் -*** *(அங்குள்ள) அன்னப் பறவைகளும்;* ***பொருநர் தண்ணுமைக்கு -*** *கூத்தர் முழக்கும் மத்தள வோசை கேட்டு (அதை மேகத்தின் இடியென்று மயங்கி);* ***போகலா -*** *(அதற்கு அஞ்சி) விலகிச் செல்லமாட்டா;* ***மருவினார்க்கு -*** *எப்போதும் கலந்து பழகுகின்றவர்களுக்கு;* ***மயக்கும் உண்டாம் கொலோ -*** *மன மயக்கம் உண்டாகுமோ? (உண்டாகாது).*

*மேகத்தின் இடியோசைகேட்டு மகிழ்ச்சியடைதல் மயில்களுக்கும், அஞ்சுதல் அன்னப் பறவைகளுக்கும் இயல்பு. ஆனால், எப்பொழுதும் அத் தொண்டை நாட்டு வீதிகளில் விழா நடப்பதால் பலவகை வாத்திய ஓசைகளைக் கேட்டுப் பழகிய மயில்களுக்கு அந்த ஆரவாரவொலி மகிழ்ச்சியை உண்டாக்குவதில்லை; அங்குள்ள அன்னப் பறவைகளும் அவ்வாத்திய ஒலி கேட்டு அஞ்சி அகல்வதில்லை; இதனால் பழக்கமே அவற்றிற்குத் துணிவைத் தந்தது என்பது. பொருநர்: கூத்தாடுவோர். போர்க்களம் பாடுவோர், ஏர்க்களம் பாடுவோரென இரு வகையினர். பல் இயம்: தோற் கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி, கஞ்சக் கருவி எனப் பலவகைப்படும். வேற்றுப் பொருள் வைப்பணி.* *42*

***4636. தேரை வென்று உயர் தெங்க இளம் பாளையை***
***நாரை என்று இளங் கெண்டை நடுங்குவ;***
***தாரை வன் தலைத் தண் இள ஆம்பலைச்***
***சேரை என்று, புலம்புவ, தேரையே.***

***தேரை வென்று உயர் -*** *தேர்போல உயர்ந்த (விரிந்த) தலையை யுடைய;* ***தெங்கு இளம் பாளையை -*** *தென்னை மரத்தின் இளமையான பாளையை(க் கண்டு);* ***இளங் கெண்டை -*** *கெண்டை மீன் குஞ்சுகள்;* ***நாரை என்று நடுங்குவ -*** *(அது தங்களைக்*

*கொத்தித் தின்ன வரும்) நாரையென்று நினைத்து அஞ்சி நடுங்கும்;* ***தாரை வன் தலை -*** *கூர் மையான வலிய நுனியுள்ள;* ***தண் இள ஆம்பலை -*** *அரும்பைக் கொண்ட குளிர்ந்த இளைய அல்லித் தண்டைக் கண்டு;* ***தேரை -*** *தேரை கள்(தவளைகள்);* ***சேரை என்று-*** *(அவை நம்மை விழுங்க வரும்) சாரைப் பாம்பென்று நினைத்து;* ***புலம்புவ -*** *(அஞ்சி) வாய்விட்டு அலறும்.*

*ஏ: ஈற்றசை. விரியாத தென்னம்பாளைகள் நாரைகளையும், அரும்புகளையுடைய செவ்வல்லித் தண்டுகள் சாரைப் பாம்புகளையும் வடிவத்தால் ஒக்கும்: தென்னம் பாளையை இளங்கெண்டை மீன்கள் நாரையாகவும், செவ்வல்லித் தண்டினைத் தேரைகள் சாரைப் பாம்புகளாகவும் எண்ணி அஞ்சிப் புலம்பியதாகக் கூறியது மயக்கவணி. சேரை என்பது சாரை என வழங்கும். தாரை: கூர்நுனி (தார்க் குச்சி என்ற தொடரில் கூர்மை என்ற பொருளில் வருவது காண்க). 43*

***4637. நள்ளி வாங்கு கடை இள நவ்வியர்,***
***வெள்ளி வால் வளை வீசிய வெண் மணி,***
***'புள்ளி நாரைச் சினை பொரியாத' என்று***
***உள்ளி, ஆமை முதுகின் உடைப்பரால்.***

***நள்ளி வாங்கு -*** *பெண் நண்டுகளைப் பிடிக்கின்ற;* ***இளங் நடை நவ்வியர் -*** *இளமைப் பருவத்து மான்போன்ற உழத்தியர்;* ***வெள்ளி வால் வளை -*** *ஒளியுடைய வெண்ணிறமான சங்குகள்;* ***வீசிய வெண்மணி -*** *ஈன்ற வெண்மையான முத்துக்களை;* ***புள்ளி நாரை -*** *புள்ளிகளையுடைய நாரைகளின்;* ***பொரியாத சினை என்று -*** *பொரிக்கப்படாத முட்டைகளாகுமென்று;* ***உள்ளி -*** *நினைத்து;* ***ஆமை முதுகின் உடைப்பர் -*** *(அந்த முட்டைகளை) அருகிலுள்ள ஆமைகளின் முதுகில் உடைப்பார்கள்.*

*ஆல்: ஈற்றசை, உழத்திப் பெண்கள் வயல்களில் பெண் நண்டு பிடிக்கும் போது அங்கே கிடக்கின்ற சங்குகள் ஈன்ற முத்துக்களை நாரைகளின் முட்டைகள் என்று நினைத்து, அவற்றை ஆமைகளின் முதுகில் உடைப்பார்கள் என்பது. மயக்கவணி. வெள்ளி வால்: ஒருபொருட் பன்மொழி. நள்ளி: பெண்நண்டு: அலவன்; ஆண்நண்டு ஒப்பு: செந்நெல் அரிவார் சினையாமை வன்முதுகில், கூனிரும்பு தீட்டும் குலக் கோசல நாடன்' - (நள:140) 44*

***4638. சேட்டு இளங் கடுவன் சிறு புன் கையில்***
***கோட்ட தேம் பலவின் கனி கூன்சுளை,***
***தோட்டு அமைந்த பொதும்பரில் தூங்கு தேன்***
***ஈட்டம் என்ன சென்று, ஈஇனம் மொய்ப்பன.***

***சேட்டு இளங் கடுவன் -*** *மிக இளமையான ஆண்குரங்கின்;* ***சிறு புன் கையில் -*** *மிகச் சிறிய கையிலேயுள்ள;* ***கோட்ட -*** *கிளைகளிலுண்டான;* ***தேம் பலவின் கனி -*** *இனிய பலாப் பழத்தின்;* ***கூன் சுளை -*** *வளைந்த சுளைகளிலே;* ***தோட்டு அமைந்த பொதும்பரில் தூங்கு -*** *இதழ்களையுடைய மலர்கள் நிறைந்த சோலைகளில் மொய்க்கும்;* ***தேன் ஈட்டம் என்ன -*** *வண்டுகளின் கூட்டம் போல;* ***ஈ இனம் சென்று மொய்ப்பன -*** *ஈக்களின் கூட்டம் மொய்த்துக் கொள்ளும்.*

*ஆண்குரங்குகளின் கையிலேயுள்ள பலாச் சுளையில் ஈக்கள் மொய்ப்பதற்குச் சோலைகளிலுள்ள மலர்களில் வண்டுகள் மொய்த்ததை உவமை கூறினார். சேட்டிளம், சிறுபுன் - ஒருபொருட் பன்மொழிகள். (சேடு + இளம் - சேட்டிளம். தோடு + அமைந்த - தோட்டமைந்த). 45*

*சோழ நாட்டை அடைதல்*

***4439. அன்ன தண்டக நாடு கடந்து, அகன்***
**பொன்னி நாடு பொரு இலர் எய்தினார்;**
**செந்நெலும் கரும்பும் கமுகும் செறிந்து,**
**இன்னல் செய்யும் நெறி அரிது ஏகுவார்.**

***பொரு இலர் -*** *ஒப்பு இல்லாதவராகிய வானரவீரர்;* ***அன்ன -*** *அத் தன்மையான வளங்களையுடைய;* ***தண்டக நாடு கடந்து -*** *சிறந்த தொண்டை நாட்டைத் தாண்டிச் சென்று;* ***அகன் பொன்னி நாடு -*** *அகன்ற காவிரிநதி பாயும் சோழநாட்டை;* ***எய்தினர் -*** *சேர்ந்தவர்களாய்;* ***செந்நெலும் கரும்பும் கமுகும் செறிந்து -*** *செந்நெற் பயிர்களும் கரும்புகளும் பாக்குமரங்களும் எங்கும் நெருங்கி;* ***இன்னல் செய்யும் நெறி -*** *இயங்குவதற்குத் தடையாக நின்று துன்புறுத்தும் வழிகளில்;* ***அரிது ஏகுவார் -*** *சிரமப்பட்டுச் செல்பவரானார்கள்.*

*தொண்டை நாட்டுக்குத் தண்டகநாடு என்பதும் ஒரு பெயர். காஞ்சிப் புராணத்தில் பல இடங்களில் இப்பெயர் ஆளப்படுவதை வை.மு.கோ. எடுத்துக் காட்டியுள்ளார். காவிரிநதி பாயும் வளத்தால் சோழநாடு முழுதும் செந்நெறப்பயிரும் கரும்பும் பாக்கு மரங்களும் எங்கும் நெருங்கி, வருவார் போவாரின் வழியடைத்துத் தடைசெய்து துன்புறுத்தும்என்பது. 46*

***4640. கொடிறு தாங்கிய வாய்க் குழு நாரை வாழ்***
**தடறு தாங்கிய கூன் இளந் தாழையின்**
**மிடறு தாங்கும் விருப்புடைத் தீம் கனி**
**இடறுவார்; நறுந் தேனின் இழுக்குவார்.**

*(வானர வீரர்)* ***கொடிறு தாங்கிய -*** *கீழ்த் தாடை பொருந்திய;* ***வாய் -*** *அலகாகிய வாயினையுடைய;* ***குழுநாரை -*** *கூட்டமான நாரைகள்;* ***வாழ் தடறு -*** *வசிக்கும் நீர்க்கரைகளில்;* ***தாங்கிய -*** *முளைத்து வளர்ந்துள்ள;* ***கூன் இளந் தாழையின் -*** *வளைந்த இளமையான தென்னை மரத்தின்;* ***மிடறு தாங்கும் -*** *கழுத்துப் பக்கம் சுமந்து கொண்டிருக்கின்ற;* ***விருப்பு உடைத் தீம் கனி -*** *(உண்பவர்க்கு) விருப்பத்தையுண்டாக்குகின்ற பழுத்துக் கீழே உதிர்ந்து கிடக்கும் சுவையான தெங்கம் பழங்களால்;* ***இடறுவார் -*** *கால் இடறித் தடுக்கி விழுவார்கள்;* ***நறுந்தேனின் -*** *(அங்குப் பாயும்) சுவையான தேன் பெருக்கினால்;* ***இழுக்குவோர் -*** *வழுக்கிவிழுவார்கள்.*

*வானரவீரர் சோழ நாட்டிற் செல்லும்போது இடைவழியிலே முற்றிக் கீழே வீழ்ந்துள்ள தேங்காய்களினால் காலிடறியும், தேன் பெருக்கால் வழுக்கியும் வருந்திச் சென்றார்கள் என்பது. இச் செய்யுள், தென்னைமர மிகுதியையும், தேன் மிகுதியையும் விளக்குவது. வீறுகோளணி. தாழை -தென்னை. 47*

***4641. குழுவும் மீன் வளர் குட்டம்எனக் கொளா,***
***எழுவு பாடல் இமிழ் கருப்பு ஏந்திரத்து***
***ஒழுகு சாறு அகன் கூனையின் ஊழ் முறை***
***முழுகி, நீர்க் கருங் காக்கை முளைக்குமே.*** ***கரு நீர்க் காக்கை -*** *கரிய நிறமுள்ள நீர்க் காக்கைகள்;* ***குழுவும் மீன் -*** *கூட்டமாகத் திரளும் தன்மையுள்ள மீன்கள்;* ***வளர் -*** *வளர்வதற்கு இடமான;* ***குட்டம் எனக் கொளா -*** *சிறு குட்டையென்று நினைத்து;* ***எழுவு பாடல் -*** *(சுருதி கூட்டுவதற்கு) எழுப்புகின்ற பாடல்போல;* ***இமிழ் கரும்பு எந்திரத்து -*** *ஒலிக்கின்ற கரும்பாலையிலிருந்து;* ***ஒழுகு சாறு -*** *பெருகுகின்ற கரும்புச்சாறு (கரும்புப் பால்) நிறைந்த;* ***அகல் கூனையின் -*** *வாய் அகன்ற மிடாவில்;* ***ஊழ்முறை முழுகி -*** *ஒன்றன் பின் ஒன்றாக மூழ்கி;* ***முளைக்கும் -*** *மேலே கிளம்பும்.*

*ஏ: ஈற்றசை. ஆலையாடிக் கரும்புச் சாறு நிரம்பிய மிடாவை நீர்க் காக்கைகள் மீன்கள் நிரம்பிய குளங்களென்று மயங்கி அவற்றில் தம் உணவாகிய மீன்களைக் கொத்தித் தின்பதற்காக மூழ்கி மூழ்கி இரை பெறாது வெளிக் கிளம்பும் என்பது. சோழநாட்டின் வளம் புலனாகிறது. இதுவும் மயக்கவணி. கூனை: கரும்புச் சாறு காய்ச்சுவதற்குரிய வாயகன்றகலம். 48*

***4642. பூ நெருங்கிய புள் உறு சோலைகள்***
***தேன் ஒருங்கு சொரிதலின், தேர்வு இல,***
***மீன் நெருங்குறும் வெள்ளம் வெரீஇ, பல***
***வானரங்கள் மரங்களின் வைகுமால்.***

***பூ நெருங்கிய -*** *மலர்களில் படிந்து மொய்க்கின்ற;* ***புள் உறு சோலைகள் -*** *வண்டுகள் மிகுதியாகப் பொருந்திய சோலைகள்;* ***தேன் ஒருங்கு சொரிதலின் -*** *தேனை மிகுதியாகப் பொழிவதால் (அந்தத் தேனின் பெருக்கைக் கண்டு);* ***பல வானரங்கள் -*** *(அச் சோலையில் வாழும்) பல குரங்குகள்;* ***தேர்வு இல -*** *(உண்மையை) ஆராயாமல்;* ***மீன் நெருங்குறும் -*** *மீன்கள் நிறைந்துள்ள;* ***வெள்ளம் வெரீஇ -*** *நீர் வெள்ளமென்று அச்சமுற்று;* ***மரங்களின் வைகும் -*** *(கீழே இறங்காமல்) மரக் கிளைகளிலேயே தங்கியிருக்கும்.*

*ஆல்: ஈற்றசை. சோலைகளிலுள்ள மலர்கள் தேனை மிகுதியாகச் சொரிவதால் அந்தத் தேனின்பெருக்கை நீர்வெள்ளமென்று தவறாகக் கருதி அச்சப்பட்டு அங்குள்ள வானரங்கள் யாவும் தரையில் இறங்காமல் மரங்களிலேயே தங்கும் என்பது மயக்கவணி. தேன்மிகுதி பெறப்படுவதால் வீறுகோளணி. வெருவி என்ற எச்சம் வெரீஇ யெனத் திரிந்தது - சொல்லிசையளபெடை. 49*

***4643. தாறு நாறுவ, வாழைகள்; தாழையின்***
***சோறு நாறுவ, தூம்புகள்; மாங்கனி***
***நாறு நாறுவ; நாறு வளர்க்குறும்***
***சேறு நாறுவ, செங்கழுநீர்அரோ. ****

***வாழைகள் -*** *வாழை மரங்கள்;* ***தாறு நாறுவ -*** *குலைகள்தள்ளி மணம் பரப்புவன;* ***தூம்புகள் -*** *மூங்கில்கள்;* ***தாழையின் சோறு -*** *தாழை மலர்களின் சுண்ணப் பொடிகள் படியப் பெற்று;* ***நாறுவ -***

*அந்த மணத்தையே வீசுவன;* ***மாங்கனி -*** *மாம்பழங்களின் நறுமணம்;* ***நாறு நாறுவ -*** *நாற்றுகளில் கமழ்வன;* ***நாறு வளர்க்குறும் சேறு -*** *அந்த நாற்றை வளரச் செய்யும் சேறு;* ***செங்கழு நீர் நாறுவ -*** *(அங்கே மலர்ந்துள்ள) செங்கழு நீர்ப் பூக்களின் நறுமணத்தையே பரப்புவன.*

*அரோ: ஈற்றசை. தாழை மரமும் மூங்கிலும் ஒன்றற்கு ஒன்று பக்கத்திலிருப்பதால் தாழை மலரின் சுண்ணப் பொடிகள் படியப் பெற்று மூங்கில்கள் அந்த மணத்தை வீசுமாறும், நாற்றுகள் நன்றாக வளரப் பெற்ற நாற்றங்கால் செங்கழு நீர்மலரின்நறுமணத்தைப் பெறுமாறும் பெருமை வாய்ந்தது சோழநாடு என்பது.*
*50*

*சோழ நாடும் மலை நாடும் கடந்து பாண்டி நாடு அடைதல்*

***4644. அனைய பொன்னி அகன் புனல் நாடு ஒரீஇ,***
***மனையின் மாட்சி குலாம் மலை மண்டலம்***
***வினையின் நீங்கிய பண்பினர் மேயினார்;***
***இனிய தென் தமிழ் நாடு சென்று எய்தினார்.***

***வினையின் நீங்கிய பண்பினர் -*** *தீவினைகளிலிருந்து நீங்கிய நற் குணமுடைய வானர வீரர்கள்;* ***அனைய -*** *அத்தகைய வளங்கள் நிறைந்த;* ***பொன்னி அகல் புனல் நாடு -*** *காவிரிநதி பாயும் அகன்ற நீர்வளமிக்க சோழநாட்டை;* ***ஒரீஇ -*** *விட்டு நீங்கி;* ***மனையின் மாட்சி குலாம் -*** *இல்லறச் சிறப்புக்கள் மிகுந்து விளங்கும்;* ***மலை மண்டலம் -*** *மலைநாடாகிய சேர நாட்டை;* ***மேயினார் -*** *சேர்ந்தவர்களாகி (அதையும் நீங்கி);* ***இனிய தென் தமிழ்நாடு -*** *இனிமையான தமிழ் வழங்கும் தமிழ் நாடாகிய பாண்டி மண்டலத்தை;* ***சென்று எய்தினார் -*** *போய்ச் சேர்ந்தார்கள்.*

*காவிரியாறு பாய்ந்து செழுமை வாய்த்துள்ளதால் சோழநாடு 'புனல் நாடு' என்ற பெயருடன் விளங்குகிறது. சேர நாட்டவர் இல்லறவொழுக்கத்தில் தவறாது நடப்பவராதலால் அதற்கு 'மனையின் மாட்சி குலாம்' என்று அடைமொழி கொடுக்கப் பெற்றது. மலை மண்டலம்: மலைநாடு; சேரநாடு. செந்தமிழ்நாடு : பாண்டிநாடு.*
*51*

***4645. அத் திருத் தகு நாட்டினை அண்டர்நாடு***
***ஒத்திருக்கும் என்றால், உரை ஒக்குமோ -***
***எத் திறத்தினும் ஏழ் உலகம் புகழ்***
***முத்தும் முத் தமிழும் தந்து, முற்றலால்? ****

***எத் திறத்தினும் -*** *எல்லாவகையாலும்;* ***ஏழ் உலகும் புகழ் -*** *ஏழு உலகத்தவராலும் புகழப்படுகின்ற;* ***முத்தும் -*** *முத்துக்களையும்;* ***முத் தமிழும் -*** *(இயல் இசை நாடகம் என்னும்) மூவகைத் தமிழையும்;* ***தந்து -*** *கொடுத்து;* ***முற்றலால் -*** *பெருமை பெறுவதால்;* ***அத் திருத் தகு நாட்டினை -*** *செல்வ வளம் பெற்ற அந்தப் பாண்டி நாட்டை;* ***அண்டர் நாடு -*** *தேவலோகமானது;* ***ஒத்திருக்கும் என்றால் -*** *ஒத்திருக்குமென்று*

*கூறினால்;* ***உரை ஒக்குமோ -*** *அந்தச் சொல் பொருந்துமோ? (பொருந்தாது).*

*பாண்டி நாடானது முத்துக்களையும், முத்தமிழாகிய மூவகையமிழ்தத்தையும் தருவதால் ஒருவகையமிழ்தத்தை மட்டுமே கொடுக்கின்ற தேவலோகத்தைப் பாண்டி நாட்டிற்கு ஒப்பாகுமென்று சொல்லுதல் சிறிதும் ஒவ்வாது என்பது. ஏதுவணி. பாண்டியநாடு முத்துக் குளிக்கும் கடல்துறையைக் கொண்டுள்ளமையாலும், தமிழ்ச் சங்கங்களைப் பெற்றிருப்பதாலும் 'முத்தும் முத்தமிழும் தந்து முற்றலால்' என்றார். 52*

***4646. என்ற தென் தமிழ் நாட்டினை எங்கணும்***
***சென்று நாடித் திரிந்து, திருந்தினார்,***
***பொன்றுவாரின் பொருந்தினர் போயினார் -***
***துன்று அல் ஓதியைக் கண்டிலர், துன்பினார். ****

***என்ற -*** *மேற்கண்டவாறு சிறப்பித்துக் கூறப்பட்ட;* ***தென் தமிழ் நாட்டினை -*** *பாண்டிய நாட்டை;* ***திருந்தினார் -*** *ஒழுக்கத்தால் சிறந்து விளங்கிய அந்த வானர வீரர்கள்;* ***எங்கணும் திரிந்து சென்று நாடி -*** *எல்லாவிடங்களிலும் அலைந்து தேடிப் பார்த்து;* ***துன்று அல் ஓதியை -*** *அடர்ந்த இருள் போன்ற கூந்தலையுடைய சீதையை;* ***கண்டிலர் -*** *காணாதவர்களாய்;* ***பொன்றுவாரில் -*** *இறக்கும் நிலையில் உள்ளவர் போல;* ***துன்பினார் பொருந்தினர் -*** *மிகத் துன்பமடைந்தவர்களாய்;* ***போயினார் -*** *செல்லலானார்கள்.*

*பாண்டிய நாட்டிற அப்பால் தேடிப் பார்க்கத் தேசம் எதுவுமில்லாமல் கடலேயிருத்தலால், சீதையைத் தேடும் ஊக்கம் குறைந்து வானர வீரர் உயிரற்றவர் போலச் செயலற்றுச் சென்றார்கள் என்பது. அல் ஓதி: உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஓதி: பெண்ணின் கூந்தல்.*
*53*

***4647. வன் திசைக் களிறு அன்ன மயேந்திரக்***
***குன்று இசைத்தது வல்லையில் கூடினார் -***
***தென் திசைக் கடற் சீகர மாருதம்***
***நின்று இசைக்கும் நெடு நெறி நீங்கினார்.***

***தென் திசைக் கடல் -*** *(வானர வீரர்கள்) தெற்குத் திசையிலுள்ள கடலின்;* ***சீகர மாருதம் -*** *நீர்த் திவலைகளோடு கூடிய காற்று;* ***நின்று இசைக்கும் -*** *இடைவிடாது வீசுகின்ற;* ***நெடு நெறி -*** *(அந்தப் பாண்டிய நாட்டின்) பெருவழிகளை;* ***நீங்கினார் -*** *கடந்தவர்களாய்.* ***இசைத்தது -*** *(பலராலும்) சிறப்பித்துக் கூறப்படுவதான;* ***வன் திசைக் களிறு அன்ன -*** *வலிய தென் திசையைத் தாங்கும் யானை போல;* ***மயேந்திரக் குன்று -*** *மயேந்திர மலையை;* ***வல்லையில் கூடினார் -*** *விரைவில் போய்ச் சேர்ந்தார்கள்.*

*பாண்டிய நாட்டிற்குச் சென்ற வானரவீரர் தென் கடற்கரையிலுள்ள மயேந்திர மலையைச் சேர்ந்தார்களென்பது. சீகரம்: நீர்த் திவலை. மயேந்திர மலைக்குத் தென்திசைக் களிறாகிய வாமனம் உவமை; அதன் பெருமையாலும், தோற்றத்தாலும், தென் திசையிலுள்ளதாலும் உவமையாயிற்றுஎனலாம். 54*

## சம்பாதிப் படலம்

இது சம்பாதியின் செய்தியை உணர்த்தும் பகுதியென விரியும். சம்பாதி: இராவணன் சீதையைக் கவர்ந்து சென்ற போது அவனோடு எதிர்த்துப் போர் செய்ய சடாயுவின் தமையன். வானரர் தென்கடலைக் காணுகின்றார்கள்; பின்பு, ஏமகூடத்தில் பிரிந்த யாவரும் மயேந்திரத்தில் ஒன்றாகக் கூடுகின்றார்கள்; அந்த வானரர் சீதையைக் காணாமையினால் வருந்தியுரைக்கின்றார்கள். அங்கதன் தன்னோடு வந்தவரிடம் பேசுகின்றான்; பின்னர்ச் சாம்பவான்பேச அதற்கு அங்கதன் மறுமொழி கூறுகின்றான்; அதுகேட்ட சாம்பவான் அங்கதனுக்கு மறுமொழி கூறுகின்றான். பின்னர் அனுமன் பேசுகிறான். சடாயு மாண்டான் என்ற சொல்லைக் கேட்டுச் சம்பாதி வருந்துகிறான். சடாயுவைக் கொன்றவர் யார் என அவன் வினவுகின்றான்; பின் தன் வரலாற்றை எடுத்துரைக்கின்றான். அவனிடம் அவன் அண்ணன் சடாயு இறந்த விதத்தை அனுமன் உரைக்கிறான். அதைக் கேட்ட சம்பாதி புலம்புகின்றான். சம்பாதி அனுமனை வினவுவதும் அதற்கு அனுமன் விடையளிப்பதும் நிகழ்கின்றன. அதன்பின் சம்பாதி சடாயுவைப் பலவாறாகப் பாராட்டுகிறான். பின்னர்ச் சம்பாதி தன் அண்ணனுக்கு நீர்க் கடன் செய்கிறான். இராம நாமம் கேட்கச் சம்பாதியின் சிறகுகள் வளர்கின்றன; அதைக் கண்டு வியந்த வானரர் அந்தச் சம்பாதியின் முன்னைய வரலாற்றை வினவுகின்றார்கள். சம்பாதியும் தன் முன்னைய வரலாற்றையுரைக்கிறான். சீதையின் இருப்பிடத்தைச் சம்பாதி தெரிவித்து, வானரரிடம் விடைபெற்றுச் செல்லுகிறான்.

வானரர் தென் கடலைக் காணுதல்

கலிவிருத்தம் வேறு

***4648. மழைத்த விண்ணகம் என***
***முழங்கி. வான் உற***
***இழைத்த வெண் திரைக்***
***கரம் எடுத்து, 'இலங்கையாள்,***
***உழைத் தடங் கண்ணி' என்று***
***உரைத்திட்டு, ஊழின் வந்து***
***அழைப்பதே கடுக்கும் அவ்***
***ஆழி நோக்கினார்.***

**மழைத்த -** நீருண்ட மேகத்தையுடைய; **விண்ணகம் என -** வானம் போல; **முழங்கி -** முழக்கம் செய்து கொண்டு; **வான் உற -** வானத்தைப் பொருந்துமாறு; **இழைத்த -** வீசியெறிகின்ற; **வெண்திரைக் கரம்**

**எடுத்து -** வெண்மையான அலைகளாகிய கைகளை மேலே எடுத்து; **உழைத் தடங்கண்ணி -** மான்போன்ற அகன்ற கண்களையுடைய சீதை; **இலங்கையாள் -** இலங்கையில் இருக்கிறாள்; **என்று உரைத்திட்டு -** என்று சொல்லி; **ஊழின் வந்து அழைப்பதே கடுக்கும் -** முறையாக எதிரே வந்து (வானரர்களாகிய தம்மை) அழைப்பதையே ஒத்துள்ள; **அவ்ஆழி -** அந்தத் தென்கடலை; **நோக்கினார் -** (அவர்கள்) கண்டார்கள்.

*கடல் ஆரவாரம் செய்வது - சீதை இலங்கையில் இருக்கிறாள் என்று உரக்கக் கூறுவது போலவும், கடலலைகள் வீசியெறிதல் - வானரர்களுக்குக் குறிப்புக் காட்டுவது போலவும், கடலலை கரையில் செல்வது - அந்த வானரர்களை இங்கே வாருங்களென்று எதிர்சென்று கைகளைத் தூக்கி யழைப்பது போலவும் இருந்ததென்பது. தன்மைத் தற்குறிப்பேற்றவணி. இலங்கையாள்: பெண்பால் குறிப்புமுற்று. உழைக் கண்ணி: உவமைத் தொகை (உழை போன்ற கண்ணி) அலைகளை நீர் நிலைகளின் கைகளாக உவமிப்பது கவிமரபு. மான் கண்களை மகளிர் கண்களுக்கு உவமிப்பது அவை கருமையும் பெருமையும் மருண்ட தன்மையும் கொண்டுள்ளமையால்என்பது. 1*

*ஏமகூடத்தில் பிரிந்த யாவரும் மயேந்திரத்தில் ஒன்று கூடுதல்*

***4649. 'விரிந்து, நீர், எண்***
***திசை மேவி, நாடினீர்,***
***பொருந்துதிர் மயேந்திரத்து'***
***என்று போக்கிய***
***அருந் துணைக் கவிகள்***
***ஆம் அளவு இல்சேனையும்***
***பெருந் திரைக் கடல்***
***எனப் பெரிது கூடிற்றே. ****

***நீர்** - நீங்கள்; **விரிந்து** - பரவி; **எண்திசை மேவி** - எட்டுத் திக்கு களுக்கும் சென்று; **நாடினீர்** - (சீதையைத்) தேடியவர்களாய்; **மயேந் திரத்துப் பொருந்துதிர்** - மகேந்திர மலையில் (எங்களோடு) வந்து கூடுங்கள்; **என்று** - என்று கூறி; **போக்கிய** - (அங்கதன் முதலோர்) முன்பு அனுப்பிய; **அருந்துணை** - அரிய துணையாக வந்த; **கவிகள் ஆம் அளவு இல் சேனையும்** - எண்ணிக்கையற்ற வானர சேனையும்; **பெருந்திரைக் கடல் என** - பெரிய அலைகளையுடைய மற்றொரு கட லைப் போல; **பெரிதும் கூடிற்று** - (அங்கதன் முதலான வானர வீரரிடம்) பெருங் கூட்டமாக வந்து சேர்ந்தது.*

*அனுமன் முதலிய வானரத் தலைவருடன் சுக்கிரீவனால் அனுப்பப்பட்டவர் இரண்டு வெள்ளம் கொண்டு பெருஞ்சேனையர் என்பது. 2*

*சீதையைக் காணாமையால் வானரர் வருந்துதல்*

***4650. யாவரும் அவ் வயின் எளிதின் எய்தினார்;***
***பூ வரு புரி குழல், பொரு இல் கற்புடைத்***
***தேவியைக் காண்கிலார், செய்வது ஓர்கிலார்,***
***நா உறக் குழறிட நவில்கின்றார்அரோ: ****

***யாவரும்** - வானர வீரர் எல்லோரும்; **அவ்வயின் எளிதின் எய் தினார்** - அந்த இடத்திற்கு எளிதாக வந்து சேர்ந்தனர்; **பூ வரு புரிகுழல்** - தாமரை மலரில் தோன்றிய (இலக்குமியின் அவதாரமான) சுருண்ட கூந்தலையும்; **பொருவு இல் கற்புடைய** - ஒப்பில்லாத கற்புத் தன்மையும் கொண்ட; **தேவியைக் காண்கிலார்** - சீதையைக் காணாமல்; **செய்வது ஓர்கிலார்** - இனிமேல் செய்ய வேண்டியது (இன்னதென்று)*

*அறியாதவர்களாய்;* ***நா உறக் குழறிட -*** *நாக்கு மிகவும் குழற;* ***நவில்கின்றார்-*** *பேசலானார்கள்.*

*பூவரு: மலரைச் சூடிய என்றும், பூமியிலிருந்து தோன்றிய என்றும் இருவகையாகப் பொருள் கொள்ளலாம். காண்கிலார், ஓர்கிலார் - எதிர்மறை முற்றெச்சங்கள்.*
*3*

***4651. 'அற்றது நாள் வரை***
***அவதி; காட்சியும்***
***உற்றிலம்; இராகவன்***
***உயிரும் பொன்றுமால்;***
***கொற்றவன் ஆணையும்***
***குறித்து நின்றனம்;***
***இற்றது நம் செயல்,***
***இனி' என்று எண்ணினார்.***

***வரை நாள் அவதி -*** *(அரசன் நமக்கு) குறித்த தவணையும்;* ***அற்றது -*** *முடிந்து விட்டது;* ***காட்சியும் உற்றிலம் -*** *சீதையைக் காணுகின்ற காட்சியையும் நாம் பெறவில்லை;* ***இராகவன் உயிரும் -*** *(இதையறிந்தால்) இராமனது உயிரும்;* ***பொன்றும் -*** *அழிந்துவிடும்;* ***கொற்றவன் ஆணையும் -*** *அரசனது கட்டளையும்;* ***குறித்து நின்றனம் -*** *மனத்திற் குறித்து நின்றோம்;* ***இனி நம் செயல் இற்றது -*** *இனிமேல் நாம் செய்யக் கூடிய செயலும் இல்லை;* ***என்று எண்ணினார் -*** *என்று கூறி (அந்த வானர வீரர்கள்) பலவாறு சிந்தித்தார்கள்.*

*கொற்றவன் ஆணை குறித்தது. முப்பது நாட்கள் கடந்தால் தமக்கு என்ன தண்டனை கிடைக்குமோ என்ற அச்சத்தால் ஆகும்.*

*நம் செயல் இற்றது: தெளிவு பற்றிய காலவழுவமைதி. 4*

***4652. 'அருந் தவம் புரிதுமோ?***
***அன்னது அன்றுஎனின்,***
***மருந்து அரு நெடுங்***
***கடு உண்டு மாய்துமோ?***
***திருந்தியது யாது? அது செய்து***
***தீர்தும்' என்று***
***இருந்தனர் - தம்***
***உயிர்க்கு இறுதி எண்ணுவார்.***

*(கிட்கிந்தைக்கு மீண்டு செல்லாமல் இங்கிருந்தபடியே)* ***அருந்தவம் -*** *செய்தற்கரிய தவத்தை;* ***புரிதுமோ -*** *செய்வோமோ?* ***அன்னது அன்று எனின் -*** *அவ்வாறு செய்ய இயலா விட்டால்;* ***மருந்து அரும் கடு உண்டு -*** *மாற்ற மருந்து எதுவுமில்லாத கொடிய நஞ்சைக் குடித்து;* ***மாய்துமோ -*** *இறந்து அழிவோமோ?* ***திருந்தியது யாது -*** *(இந்த இரண்டில்) தகுதியானது எதுவோ;* ***அது செய்து தீர்தும் -*** *அதைச் செய்து முடிப்போம்;*

***என்று இருந்தனர் -*** *என்ற சொல்லி (அந்த மகேந்திர மலையில்) இருந்தவர்கள் (யாவரென்றால்);* ***தம் உயிர்க்கு -*** *தம் உயிர்களுக்கும்;* ***இறுதி எண்ணுவார் -*** *ஒரு முடிவைக் கருதிய அந்த வானரவீர்கள்.*

*தவணை நாட்கள் கழிந்த பின்பும் சீதையைக் கண்டுபிடித்தலாகிய செயலை நிறைவேற்றாது கடுந்தண்டனைதரவுள்ள சுக்கிரீவனை எதிரில் செல்வதற்கு அஞ்சியவர்களாய் வானரர் இவ்வாறு எண்ணிக் கூறினார்கள் என்பது.*

*மருந்து அரு நெடுங்கடு: முறிவில்லாத நஞ்சு; மாற்று மருந்தில்லாத பெரு நஞ்சு. இராமனின் தொண்டில் ஈடுபட்டும் அப் பணியை நிறைவேற்றாது உயிர் வாழ்வதைவிட, உயிர் விடுவதே மேல் என்று அந்த வானர வீரர்கள் கருதினார்கள் என்பது குறிப்பு. 5*

*உடன்வந்தவரிடம் அங்கதன் உரைத்தல்*

***4653. கரை பொரு கடல் அயல்,***
***கனக மால் வரை***
***நிரை துவன்றிய என***
***நெடிது இருந்தவர்க்கு,***
***'உரைசெயும் பொருள் உளது'***
***என உணர்த்தினான் -***
***அரசு இளங் கோள்***
***அரி, அயரும் சிந்தையான்:***

***அரசு இளங் கோள் அரி -*** *இளவரசனும் சிங்கம் போன்றவனுமான அங்கதன்;* ***அயரும் சிந்தையான் -*** *வருந்திய மனத்தையுடையவனாய்;* ***கரை பொரு கடல் அயல் -*** *கரையை மோதுகின்ற அலை*

*கடலுக்கு அருகிலுள்ள மகேந்திர மலையில்;* ***கனக மால் வரை -*** *பெரிய மேரு மலைகள்;* ***நிரை துவன்றிய என -*** *வரிசையாய் நெருங்கி நின்றன என்று சொல்லும்படி;* ***நெடிது இருந்தவர்க்கு -*** *மிகுதியாக இருந்த வானர வீரர்களுக்கு;* ***உரை செயும் பொருள் -*** *'நான் கூறுவதற்குரிய செய்தி;* ***உளது என -*** *ஒன்று உண்டு' என;* ***உணாத்தினான் -*** *கூறலானான்.*

*ஒவ்வொரு வானரனும் மேருமலை போன்றுள்ளான் என்பது. வானரர்களைக் கனக மால்வரை நிரை துவன்றிய எனக் கூறியது இல்பொருளுவமையாம். கனகமால் வரை உருவத்தால் வானரர்க்கு உவமையாயிற்று. 6*

***4654. ' "நாடி நாம் கொணருதும்,***
***நளினத்தாளை, வான்***
***மூடிய உலகினை முற்றும்***
***முட்டி" என்று***
***ஆடவர் திலகனுக்கு***
***அன்பினார் எனப்***

*பாடவம் விளம்பினம்;*
*பழியில் மூழ்குவோம்.*

***நாம் -*** *(அங்கதன் வானரர்களை நோக்கி) நாம் எல்லோரும்;* ***வான் மூடிய உலகினை -*** *வானத்தினால் கவியப் பட்ட உலகத்தை;* ***முற்றும் முட்டி நாடி -*** *முழுவதும சென்று தேடிப் பார்த்து;* ***நளினத் தாளை -*** *தாமரை மலரில் வாழும் திருமகளான சீதையை;* ***கொணருதும் என்று -*** *மீட்டு வருவதற்குரிய செய்தியைக் கொண்டு வருவோம் என்று;* ***ஆடவர் திலகனுக்கு-*** *ஆண்களில் திலகம் போன்ற இராமனுக்கு;* ***அன்பினார் என -*** *அன்புடையவர் போல;* ***பாடவம் விளம்பினம் -*** *நம் வல்லமையைக் கூறினோம்;* ***பழியில் மூழ்குவாம் -*** *ஆனால் இப்பொழுதோ நாம் தீராப்பழிக்கே உள்ளாகிவிட்டோம்.*

*சீதையைத் தேடுமாறு நம்மை அனுப்பிய காலத்தில் இராமனிடத்துப் பத்தியுடையவர்போல நடித்துச் செயலை முடித்தே தீர்வோமென்று வல்லமையாகக் கூறியது இப்போது நமது பழிப்புக்கே காரணமாம் என அங்கதன் கூறினான் என்பது. ஆடவர் திலகன்: திலகம் நெற்றிக்கு விளக்கத்தைச் செய்வதுபோல ஆடவர்களுக்கு விளக்கம் செய்பவன் இராமன் என்பது குறிப்பு. பாடவம்: வீண் பெருமை, வல்லமை.* *7*

*4655. ' "செய்தும்" என்று அமைந்தது*
*செய்த தீர்ந்திலம்;*
*நொய்து சென்று,*
*உற்றது நுவலகிற்றலம்;*
*"எய்தும் வந்து" என்பது*
*ஓர் இறையும் கண்டிலம்;*
*உய்தும் என்றால், இது*
*ஓர் உரிமைத்து ஆகுமோ?*

***செய்தும் என்று -*** *நாம் செய்வோம் என்று;* ***அமைந்தது -*** *ஏற்றுக் கொண்ட செயலை;* ***செய்து தீர்ந்திலம் -*** *செய்து முடித்தோமல்லோம்;* ***நொய்து சென்று -*** *(குறித்த தவணைக் காலத்திற்குள்) விரைவாகத் திரும்பிச் சென்று;* ***உற்றது நுவலகிற்றிலம் -*** *நிகழ்ந்த வரலாற்றைத் தெரிவிக்கவும் வலியற்றவரானோம்;* ***வந்து எய்தும் என்பது -*** *(தவணை கடந்தாலும்) காரியம் கைகூடும் என்பதை;* ***ஓர் இறையும் கண்டிலம் -*** *ஒரு சிறிதும் அறிந்தோமில்லை (இப்படியிருப்பதால்);* ***உய்தும் என்றால் -*** *உயிரைப் பிடித்துக் கொண்டு நாம் வாழ்வோமென்றால்;* ***இது*** *- அவ்வாறு நாம் உயிர்வாழும் செயல்;* ***ஓர் உரிமைத்து ஆகுமோ -*** *மேற்கொண்ட நட்புக்குத் தகுதியான ஒரு செயலாகுமோ? (ஆகாது).*

*நாம் எண்ணிவந்த செயல் முடிவதற்கு எந்த வகையிலும் சிறிதும் வழியில்லை; தவணைக் காலத்திற்குள் மீண்டு சென்று சேர்தலும் முடியாது; ஆகையால் உயிர்போக்குவதே உறுதியென்று அங்கதன் அறுதியிட்டான் என்பது. நுவலகிற்றிலம்: தன்மைப் பன்மை எதிர்மறை வினைமுற்று; கில் - ஆற்றலையுணர்த்தும் இறந்தகால இடைநிலை. இறை: மிகச்சிறிய.* *8*

*4656. 'எந்தையும் முனியும்; எம்*
*இறை இராமனும்*
*சிந்தனை வருந்தும்; அச்*
*செய்கை காண்குறேன்;*
*நுந்துவென் உயிரினை;*
*நுணங்கு கேள்வியீர்!*
*புந்தியின் உற்றது புகல்விர்*
*ஆம்' என்றான்.*

***எந்தையும் முனியும் -*** *(செயலை முடிக்காமல் தவணை கடந்த பிறகு மீண்டு சென்றால்) என் தந்தையான மன்னனும் நம்மைக் கோபிப்பான்;* ***எம் இறை இராமனும் -*** *நம் தலைவனான இராமனும்;* ***சிந்தனை வருந்தும் -*** *மனம் வருந்துவான்;* ***அச்செய்கை காண்குறேன் -*** *அந்த நிகழ்ச்சிகளைக் கண்ணால் காணும் திறமுடையவனாகேன்;* ***உயிரினை -*** *ஆதலால் நான் என்னுயிரை;* ***நுந்துவென் -*** *வலிதில் மாய்த் துக் கொள்வேன்;* ***நுணங்கு கேள்வியீர் -*** *நுட்பமான நூற்கேள்வியுடைவர்களே!* ***புந்தியின் உற்றது -*** *உங்கள் அறிவில்பட்டதை;* ***புகல்விர் -*** *ஆராய்ந்து கூறுவீர்;* ***என்றான் -*** *என்று (அங்கதன்) சொன்னான்.*

*ஆம்: அசை. சுக்கிரீவன் கடுந்தண்டனைக்கும், இராமனின் பெரு வருத்தத்திற்கும் அஞ்சி அங்கே போகாமல் இங்கேயே உயிர்போக்குவது நல்லது என்று எண்ணுகிறேன்; இதைக் குறித்து உங்கள் கருத்தைச் சொல்லுங்களென்று அங்கதன்*

*மற்றவர்களை வினாவினான் என்பது. நுந்துதல்: வலுவில் உயிர்போக்குதல். 9*

*சாம்பன் உரை*

*4657. 'விழுமியது உரைத்தனை ;-* **விசயம்வீற்றிருந்து, எழுவொடும் மலையொடும் இகலும் தோளினாய்! - அழுதுமோ, இருந்து? நம் அன்பு பாழ்படத் தொழுதுமோ, சென்று?' எனச் சாம்பன் சொல்லினான்:**

***சாம்பன் -*** *(அது கேட்டுச்) சாம்பவான்;* ***விசயம் வீற்றிருந்து -*** *வெற்றிமகன் சிறப்பாக அமைந்திருந்து;* ***எழுவொடும் மலையொடும் இகலும்-*** *(தம் உருவத்தாலும், வலிமையாலும்) தூணையும் மலையையும் பகைக்கும்;* ***தோளினாய்!*** *தோளையுடைய அங்கதனே!* ***விழுமியது உரைத்தனை -*** *சிறப்பான சொற்களைச் கூறினாய் (நீ இறந்து போனால்);* ***இருந்து அழுதுமோ-*** *(நாங்கள்) உயிரோடு இங்கிருந்து அழுது புலம்புவோமோ?* ***நம் அன்புபாழ்பட -*** *நம் அன்பு அடியோடு பாழ்படுமாறு;* ***சென்று தொழுதுமோ -*** *மீண்டுபோய்ச் சுக்கிரீவனிடமும், இராமனிடமும் உனது செய்கையைத் தொழுதுசொல்வோமோ?* ***எனச் சொல்லினான் -*** *என்று கூறினான்.*

*நீ இறந்த பிறகு நாங்கள் அழுதுகொண்டிருத்தலும், இங்கிருந்து சென்று செய்தி கூறுதலும் தகுதியில்லை என்று சாம்பவான் கூறினான் என்பது. நீ இறந்த பின்பு நாங்களும் உடனிறவாமல் சென்று செய்தி கூறுவதென்பது எங்களது அன்பில்லாமையைக் காட்டுமென்பான் 'அன்பு பாழ்படத் தொழுதுமோ' என்றான்.*

*'விசயம் வீற்றிருந்து. . . . . தோளினாய்': இது நீ நல்ல செய்தியோடு வெற்றியுடன் இராமனிடம் போவாய் என்று குறிப்பு சாம்பன் வாயிலிருந்து பிறந்தது எனலாம். அழுதுமோ, தொழுதுமோ என்பவற்றில் உள்ள ஓகார வினாக்கள் எதிர்மறைப் பொருளன.* *10*

***4658. 'மீண்டு இனி ஒன்று நாம்***
***விளம்ப மிக்கது என்?***
***''மாண்டுறுவது நலம்'' என***
***வலித்தனம்; -***
***ஆண் தகை அரசு***
***இளங்குமர! - அன்னது***
***வேண்டலின், நின் உயிர்க்கு***
***உறுதி வேண்டுமால்.'***

***ஆண்தகை அரசு இளங்குமர** - (மேலும் சாம்பவான் அங்கதனை நோக்கி) ஆடவரிற் சிறந்த இளவரசனான அங்கதனே! **மீண்டு** - திரும்பிச் சென்று; **இனி நாம்** - இனிமேல் நாங்கள்; **ஒன்று விளம்ப மிக்கது என்** - சொல்லக் கூடிய செய்தி என்ன உள்ளது? (ஒன்றுமில்லை); **மாண்டு உறுவது** - (ஆதலால்) நாங்கள் இறந்து விடுவதே; **நலம் என வலித்தனம்** - நல்லதென்று உறுதி கொண்டோம்; **அன்னது வேண்டலின்** - அவ்வாறு இறந்து போவதை (நாங்கள்) விரும்பினபடியால்; **நின் உயிர்க்கு உறுதி வேண்டும்** - உனது உயிர் அழியாமல் இருக்க வேண்டும்.*

*சீதையைத் தேடிக் கண்டுபிடிக்க மாட்டாமல் நாங்கள் மீண்டுபோய்ச் சொல்வதற்கும் ஒன்றுமில்லை; ஆதலால், நாங்கள் இறந்து விடுவதே தகுதியென்று தோன்றுகிறது; இளவரசனாயிருப்பதால் நீ உயிருடன் வாழ்வது மிக இன்றிமையாததாகுமென்று சாம்பவான் கூறினான் என்பது. ஆல்: ஈற்றசை.*
*11*

*அங்கதன் மறுமொழி*

***4659. என்று அவன் உரைத்தலும்,***
***இருந்த வாலி சேய்,***
***'குன்று உறழ்ந்தென வளர்***
***குவவுத் தோளினீர்!***
***பொன்றி நீர் மடிய,***
***யான் போவெனேல், அது***
***நன்றதோ? உலகமும்***
***நயக்கற்பாலதோ?***

***என்று அவன் உரைத்தலும்** - இவ்வாறு சாம்பவான் கூறியதும்; **இருந்த வாலி சேய்** - அதனைக் கேட்டிருந்த வாலி மகனான அங்கதன்; **குன்று உறழ்ந்தென** - மலைகள் ஒப்பானவை என்று சொல்லும்படி; **வளர் குவவுத் தோளினீர்** - வளர்ந்துள்ள திரண்டு தோள்களையுடையவர்களே! **நீர் பொன்றி மடிய** - நீங்கள் யாவரும் இங்கே இறந்தொழிய; **யான் போவனேல்** - நான்மட்டும் உயிரோடு தனியே திரும்பிப்*

*போவேனானால்;* ***அது நன்றதோ -*** *அச் செயல் நல்லதாகுமோ?* ***உலகமும் -*** *உலகில் வாழும் சான்றோராலும்;* ***நயக்கற்பாலதோ -*** *விரும்பத் தக்கதாகுமோ? (ஆகாது).*

*நன்றது: 'அது' பகுதிப் பொருள் விகுதி. 'நீங்கள் அனைவரும் மடிய நான் மட்டும் திரும்பிச் செல்வது நல்லதா? அதை உலகத்தவர்தான் விரும்புவார்களோ?' என்று அங்கதன் கேட்டான் என்பது.* *12*

***4660. ' ''சான்றவர் பழி உரைக்கு***
***அஞ்சித் தன் உயிர்***
***போன்றவர் மடிதர,***
***போந்துளான்'' என***
***ஆன்ற பேர் உலகு உளோர்***
***அறைதல் முன்னம், யான்***
***வான் தொடர்குவென்' என***
***மறித்தும் கூறுவான்:***

***சான்றவர் பழியுரைக்கு அஞ்சி -*** *சான்றோர்கள் கூறும் பழிச் சொல்லுக்கு அஞ்சி;* ***தன் உயிர் போன்றவர் -*** *தன் உயிரையொத்த நண்பர்கள் யாவரும்;* ***மடிதர -*** *இறந்துபோகவும்;* ***போந்துளான் என -*** *(இவன் மட்டும் இறவாமல் உயிருடன்) வந்து சேர்ந்துள்ளானென்று;* ***ஆன்ற பேருலகு உளோர் -*** *உயர்ந்த உலகிலுள்ள பெரியோர்;* ***அறைதல் முன்னம் -*** *(பழித்துக்) கூறுவதற்கு முன்பே;* ***யான் வான் தொடர்குவென் -*** *நான் இறந்து மேலுலகம் செல்வேன்;* ***என -*** *என்று சொல்லி;* ***மறித்தும் கூறுவான் -*** *மீண்டும் கூறலாயினான்.*

*மீண்டு சென்றால் வீண்பெருமை கூறி ஏற்றுக் கொண்ட செயலை முடிக்காமல் வெறுங்கையோடு மீண்டார்களே' என்று பெரியோர் கூறும் பழிச் சொல்லுக்கு அஞ்சி உயிர்போன்ற நண்பர் யாவரும் உயிர்விடவும் இவன்மட்டும் அச்சம் சிறிதுமின்றி மீண்டான் என்ற உலகத்தவரின் பழிச் சொல்லுக்குச் சிறிதும் இடமில்லாமல் முன்னரே மாய்ந்தொழிவேன் என்று அங்கதன் கூறினான் என்பது.*

*மடிதரல்: தரல் - துணைவினை. வான் தொடர்குவென்: இறந்தவர் வானுலகம் செல்வர் என்ற மரபுபற்றி வந்த வழக்கு.* *13*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***4661. 'எல்லை நம் இறுதி,***
***யாய்க்கும் எந்தைக்கும், யாவரேனும்***
***சொல்லவும் கூடும்; கேட்டால்,***
***துஞ்சவும் அடுக்கும்; கண்ட***
***வில்லியும் இளைய கோவம் வீவது***
***திண்ணம்; அச் சொல்***
***மல்லல் நீர் அயோத்தி புக்கால்,***
***வாழ்வரோ பரதன் மற்றோர்?***

*(நாம் எல்லோரும் இங்கே இறந்துவிட்டால்)* ***நம் இறுதி எல்லை -*** *இறத்தலாகிய நமது முடிவுச் செய்தியை;* ***யாய்க்கும் -*** *என்தாயாகிய தாரைக்கும்;* ***எந்தைக்கும் -*** *என் சிறிய தந்தையான சுக்கிரீவனுக்கும்;* ***யாவரேனும் -*** *யாரேனும் ஒருவர்;* ***சொல்லவும் கூடும் -*** *போய்ச் சொல்லவும் இடம் ஏற்படும்;* ***கேட்டால் -*** *(அதனைக்) கேட்டறிந்தால்;* ***துஞ்சவும் அடுக்கும் -*** *அவர்கள் மாண்டுபோகவும் கூடும்;* ***கண்ட -*** *(அத்துயர நிகழ்ச்சியை) நேரில் பார்த்த;* ***வில்லியும் -*** *வில் வீரனான இராமபிரானும்;* ***இளைய கோவும் -*** *இளைய பெருமாளான இலக்குவனும்;* ***வீவது திண்ணம் -*** *இறந்துபோவது உறுதி;* ***அச்சொல் -***

*(இராமலக்குவர் இறந்த) அந்தச் செய்தி;* ***மல்லல் நீர் அயோத்தி புக்கால் -*** *வளம் பொருந்திய நீர் நீறைந்த அயோத்தி நகருக்கு எட்டினால்;* ***பர தன் மற்றோர் -*** *பரதனும் அங்குள்ள மற்றவரும்;* ***வாழ்வரோ -*** *உயிர் வாழ்வார்களோ?*

*நமது முடிவைத் தாரையும சுக்கிரீவனும் மற்றவரால் அறிவார்கள். அதனால் அவர்க்கும் இராமலக்குவர்க்கும், பரதன் முதலியோர்க்கும் மரணமுண்டாகலாம் என வருந்தினான் அங்கதன் என்பது.*

*'சாதலை'த் 'துஞ்சுதல்' என்றது மங்கலவழக்கு.* *14*

***4662. 'பரதனும், பின்னுளோனும்,***
***பயந்தெடுத்தவரும், ஊரும்,***
***சரதமே முடிவர்; கெட்டேன்! ''சனகி''***
***என்று உலகம் சாற்றும்***
***விரத மா தவத்தின் மிக்க***
***விளக்கினால், உலகத்து யார்க்கும்***
***கரை தெரிவு இலாத துன்பம்***
***விளைந்தவா!' எனக் கலுழ்ந்தான்.***

***பரதனும் -*** *பரதனும்;* ***பின் உளோனும் -*** *(அவனுக்குப் பின் பிறந்தவனான) சத்துருக்கனனும்;* ***பயந்து எடுத்தவரும் -*** *(இராமன் முதலிய நால்வரையும்) பெற்றெடுத்த தாய்மார் (கோசலை, சுமித்திரை, கைகேயி ஆகிய) மூவரும்;* ***ஊரும் -*** *அந்த அயோத்தி நகர மக்களும்;* ***சரதமே முடிவர் -*** *மெய்யாகவே இறப்பார்கள்;* ***கெட்டேன் -*** *ஆ! கெடுவேன்;* ***சனகி என்று உலகம் சாற்றும் -*** *சீதை என்று உலகத்துச் சான்றோர் பாராட்டிக் கூறும்;* ***விரத மா தவத்தின்மிக்க -*** *விரதத்தோடு கூடிய பெருந்தவத்தால் மேம்பட்ட;* ***விளக்கினார் -*** *விளக்குப் போன்றவளான ஒரு மகளால்;* ***உலகத்து யார்க்கும் -*** *உலகத்திலுள்ள எவர்க்கும்;* ***கரை தெரிவு இலாத துன்பம் -*** *கரைகாண முடியாத பெருந்துன்பம்;* ***விளைந்த ஆ -*** *வந்து சேர்ந்ததே;* ***என -*** *என்று சொல்லி;* ***கலுழ்ந்தான் -*** *(அங்கதன்) கலங்கி வருந்தினான்.*

*ஊர்: இடவாகுபெயர். சீதை பிறந்த குலத்திற்கும் புகுந்த குலத்திற்கும் விளக்கம் செய்பவளாதாலால் அவளை விளக்கு என்றார். கெட்டேன் : இரக்கக் குறிப்பையுணர்த்துவது. ஆ; இங்கே இரக்கத்தையும் வியப்பையும் உணர்த்தி நின்றது.*

*இச் செய்யுள் உணர்த்தும் அவலச் சுவை காண்க.* *15*

*சாம்பவான் அங்கதனை நோக்கிக் கூறல்*

***4663.  பொருப்பு உறழ் வயிரத் திண் தோள்***
***பொரு சினத்து ஆளி போல்வான்***
***தரிப்பு இலாது உரைத்த மாற்றம்,***
***தடுப்ப அருந்தகைத்தது ஆய***
***நெருப்பையே விளைத்த போல,***
***நெஞ்சமும் மறுகக் கேட்டு,***
***விருப்பினால் அவனை நோக்கி,***
***விளம்பினன் எண்கின் வேந்தன்:***

**பொருப்பு உறழ் -** *மலையையொத்த;* **வயிரத் திண் தோள் -** *உறுதியான வலிய தோள்களையுடைய;* **பொரு சினத்து ஆளி போல்வான் -** *போர் புரியும் கடுங்கோபத்தைக் கொண்ட சிங்கம் போன்றவனாகிய அங்கதன் -* **தரிப்பு இலாது -** *மனம்பொறாமல்;* **உரைத்த மாற்றம் -** *சொன்ன சொற்கள்;* **தடுப்ப அருந் தகைத்ததாய -** *தடுக்க முடியாத தன்மை பொருந்திய;* **நெருப்பையே விளைத்த போல -** *பெருந்தீயை மூட்டியது போல;* **நெஞ்சமும் மறுக -** *மனத்தையும் கலங்கச் செய்ய;* **கேட்டு -** *(அதனைக்) கேட்டு;* **எண்கின் வேந்தன் -** *கரடிகளின் அரசனான சாம்பவான்;* **விருப்பினால் அவனை நோக்கி -** *அன்போடு அந்த அங்கதனைப் பார்த்து;* **விளம்பினான் -** *கூறலானான்.*

*யாளி என்பது ஆளி என்றாயிற்று.    16*

*கலிவிருத்தம்*

***4664.  'நீயும் நின் தாதையும் நீங்க, நின் குலத்***
***தாயம் வந்தவரொடும் தனையர் இல்லையால்;***
***ஆயது கருதினம்; அன்னது அன்று எனின்,***
***நாயகர் இறுதியும் நவிலற்பாலதோ?***

***நீயும் நின் தாதையும் நீங்க -*** *நீயும் உன் தந்தையான சுக்கிரீவனும் தவிர;* ***நின்குலத் தாயம் வந்தவரொடும் -*** *உன் குலத்தில் உரிமையுடை யவராய்ப் பிறந்தவர்க்கு;* ***தனையர் இல்லை -*** *வேறு ஒரு மகன் இல்லை;* ***ஆயது கருதினம் -*** *(அது கருதியே) நீ உயிர் நீங்காது சுக்கிரீவனைச் சேர்க என்று கூறினோம்;* ***அன்னது அன்று எனில் -*** *அவ்வாறு இல்லாவிட்டாலும்;* ***நாயகர் இறுதியும் -*** *(நம்) தலைவர்களின் மரணமும்;* ***நவிலற் பாலதோ -*** *(நாம்) பேசத் தக்கது ஆகுமோ? (தகாது).*

*உங்கள் அரச மரபில் இப்போது வேறு புதல்வர் இல்லாததாலும், எங்களைப் போன்ற எளியவரது மரணமின்றி உங்களைப் போன்ற இளவரசர் மரணம் குறித்து வாயினாற் சொல்லுதலும் கூடாதாதலாலும் நீ உயிர்விடுவேன் என்று கூறுவது சிறிதும் தகாது; ஆதலால் நாங்களெல்லாரும் உயிர் நீங்க, நீ சுக்கிரீவனைச் சென்ற சேர்வாய் என்பது. தாயம்: சொத்திலுள்ளஉரிமை.   17*

***4665. 'ஏகு நீ; அவ் வழி***
    ***எய்தி, இவ் வழித்***
***தோகையைக் கண்டிலா வகையும்***
    ***சொல்லி, எம்***
***சாகையும் உணர்த்துதி; தவிர்தி***
    ***சோகம்; - போர்***
***வாகையாய்!' என்றனன் -***
    ***வரம்பு இல் ஆற்றலான்.***

***வரம்பு இல் ஆற்றலான் -*** *எல்லையற்ற ஆற்றல் கொண்ட சாம்பவான் (அங்கதனை நோக்கி);* ***போர் வகையாய் -*** *போரில் வெற்றி வெறும் ஆற்றலுடையவனே!* ***ஏகு நீ -*** *நீ (உயிருடன்) போவாயாக;* ***அவ்வழி எய்தி -*** *(இராமனும் சுக்கிரீவனும் இருக்கின்ற) அந்த இடத்தைச் சேர்ந்து;* ***இவ் வழி -*** *இந்த இடமெங்கும்;* ***தோகையைக் கண்டிலா வகையும் -*** *மயில் போன்ற சீதையை நாம் காணமுடியாத திறத்தையும்;* ***சொல்லி -*** *தெரிவித்து;* ***எம் சாகையும் உணர்த்துதி -*** *எங்களது மரணச் செய்தியையும் தெரிவிப்பாய்;* ***சோகம் தவிர்தி -*** *வருந்துவதை விடு;* ***என்றனன் -*** *என்று கூறினான்.*

*செய் அல்லது செத்துமடி என்பது உண்மை வீரருக்கு இலக்கு; பிராட்டியின் இருப்பிடம் காணவியலாமையால் தாங்கள் உயிர்விடுதலே வீரமாகும். எனவே, 'சோகம் தவிர்தி' என்றான். சாகை - சாவு. தோகை: உவமையாகுபெயர்.*
*18*

*அனுமன் கூற்று*

***4666. அவன் அவை உரைத்தபின்,***
    ***அனுமன் சொல்லுவான்:***
***'புவனம் மூன்றினும் ஒரு***
    ***புடையில் புக்கிலம்;***
***கவனம் மாண்டவர் என,***
    ***கருத்திலார் என,***
***தவன வேகத்தினீர்!***
    ***சலித்திரோ?' என்றான்.***

***அவன் அவை உரைத்தபின் -*** *அந்தச் சாம்பவான் அவ்வாறு உரைத்தபின்னால்;* ***அனுமன் சொல்லுவான் -*** *அனுமன் கூறுவான்;* ***தவன வேகத்தினீர் -*** *சூரியன் போன்ற வேகத்தையுடையவர்களே!* ***புவனம் மூன்றினும் -*** *(நாம் சீதையை) மூன்று உலகங்களிலும்;* ***ஒரு புடையில் புக்கிலம் -*** *ஒரு பக்கத்தில் கூட (நாம்) முழுவதும் போய்த் தேடிப் பார்க்க வில்லை (அப்படியிருக்க);* ***கவனம் மாண்டவர் என -*** *செல்லும் வேகம் குறைந்தவர்போலவும்;* ***கருத்து இலார் என -*** *(நாம் மேற்கொண்ட செயலைப் பற்றி) எண்ணிப்பார்க்கும் திறமில்லாதவர் போலவும்;* ***சலித்திரோ -*** *சலிப்படைந்து விட்டீரோ?* ***என்றான் -*** *என்று கேட்டான்.*

*தேட வேண்டிய இடம் இன்னும் மிகுதியாக இருக்கவும், சிறிது தேடியதும் சீதை கிடைக்காததைக் கொண்டே முழுவதும் திரிந்து அலைந்து சலிபபடைந்தவர் போல நீங்கள் ஒரு சிறிதும் ஆலோசனையில்லாமல் வெறுப்படைந்து உயிர்விடத் துணிவது சிறிதும் தகுதியில்லை என்று அனுமன் கூறினான்.*

*வலிமையிருந்தும் எதிலும் கருத்தில்லையென்றால் உங்கள் வீரத் தன்மைக்கும் நேர்மைக்கும் குறைவாகுமென அனுமன் இடித்துரைத்தான்.*

*கமனம்: செல்கை. தபனன்: வெப்பத்தால் வேகச் செய்பவன், சூரியன் (கமனம், தபனன் என்றவடமொழிச் சொற்கள் இங்கே கவனம், தவனன் எனத் திரிபுற்றன).*
*19*

***4667. பின்னரும் கூறுவான்:***
***'பிலத்தில், வானத்தில்,***
***பொன் வரைக் குடுமியில்,***
***புறத்துள் அண்டத்தில்,***
***நல் நுதல் தேவியைக்***
***காண்டும் நாம் எனின்,***
***சொன்ன நாள் அவதியை***
***இறைவன் சொல்லுமோ?***

***பின்னரும் கூறுவான் -*** *அனுமன் மேலும் சொல்லுவான்;* ***பிலத்தில் -*** *பாதாள உலகத்திலும்;* ***வானத்தில் -*** *தேவருலகத்திலும்;* ***பொன் வரைக் குடுமியில் -*** *பொன்மலையான மேரு மலைச் சிகரத்திலும்;* ***புறத்துள் அண்டத்தில் -*** *மற்றும் அப்பாலுள்ள அண்டங்களிலும்;* ***நன்னுதல் தேவியை-*** *அழகான நெற்றியையுடைய சீதையை;* ***நாம் காண்டும் எனில் -*** *நாம்தேடிக் காண்போமானால்;* ***இறைவன் -*** *(நம்) அரசனான சுக்கிரீவன்;* ***சொன்னநாள் அவதியை -*** *நமக்குக் குறித்த தவணை நாட்களில் எல்லை கடந்ததைப்பற்றி;* ***சொல்லுமோ -*** *குற்றமாக எடுத்துக் கூறுவானோ?*

*ஓ: வினா இடைச் சொல்.*

*சீதையைத் தேடிக் காண்பது இன்றிமையாத தொழிலாதலால் தவணை நாள் கடந்தமைக்குச் சிறிதும் கலங்காது நாம் மேற்கொண்ட செயலில் ஊக்கங்கொள்வதுதான் தக்கது; அவ்வாறு அச் செயலை நாம் சிறப்பாகச் செய்து முடித்தால் சுக்கிரீவன் நம் செயலைப் பாராட்டுவனேயல்லாமல் ஒரு நாளும் கண்டிக்கவே மாட்டான் என்று அவ் வானரர்க்கு அனுமன் எடுத்துரைத்தான்.*
*20*

***4668. 'நாடுதலே நலம் இன்னும்; நாடி, அத்***
***தோடு அலர் குழலிதன் துயரின் சென்று, அமர்***
***வீடிய சடாயுவைப் போல வீடுதல்***
***பாடவம்; அல்லது பழியிற்று ஆம்' என்றான்.***

***இன்னும் நாடுதலே நலம் -*** *இனிமேலும் சீதையைத் தேடிப் பார்த்தலே நற்செயலாகும் (ஆதலால்);* ***நாடி -*** *நாம் தேடியும் (அச்சீதையைக்*

*காணா விட்டால்);* ***அத்தோடு அலர் குழலிதன் -*** *இதழ்களையுடைய பூக்கள் பொலிந்த கூந்தலையுடைய சீதையின்;* ***துயரின் சென்று -*** *(இராவணனால் நேர்ந்த) துன்பத்திற்காக (அவளைக் காக்க) எதிரே போய்;* ***அமர் வீடிய -*** *அதனால் ஏற்பட்ட போரில் உயிர்மாய்ந்த;* ***சடாயுவைப் போல -*** *சடாயுவைப் போல;* ***வீடுதல் -*** *(நாமும் சீதையைத் தேடும் செயலில்) உயிர் விடுதல்;* ***பாடவம் -*** *பெருமையாகும்;* ***அல்லது -*** *அப்படிச் செய்யாது நீங்கள் கருதியபடி இப்போதே உயிரை விடுவது;* ***பழியிற்று ஆம் -*** *பழிக்கு இடமாகும்;* ***என்றான் -*** *என்று கூறினான்.*

*நம்மால் முடிந்தவரை எல்லாவிடங்களிலும் சீதையைத் தேடிப் பார்த்தும் அவள் அகப்படாவிட்டால் அப்போது நாம் உயிர்விடுவது சிறந்ததாகுமேயல்லாமல் இப்பொழுதே உயிர்விடுவோமென்பத தக்கதாகாது என்று அனுமன் அவ் வானரர்களிடம் கூறினான்.*

*தோடலர் குழலி: அன்மொழித் தொகை. பாடவம்: பெருமை. 21*

*'சடாயு மாண்டான்' என்ற அனுமனின் சொற் கேட்டுச் சம்பாதி அங்கு வந்து வருந்துதல்*

***4669. என்றலும், கேட்டனன், எருவை***
***வேந்தன் - தன்***
***பின் துணை ஆகிய***
***பிழைப்பு இல் வாய்மையான்***
***பொன்றினன் என்ற சொல்;***
***புலம்பும் நெஞ்சினன்;***
***குன்று என நடந்து,***
***அவர்க் குறுகல் மேயினான்.***

***என்றலும் -*** *என்று (அனுமன்) கூறியவுடனே;* ***எருவை வேந்தன் -*** *கழுகுகளுக்கு அரசனான சம்பாதி என்பவன்;* ***தன் பின் துணையாகிய -*** *தனக்குப் பின் பிறந்த தம்பியாகிய;* ***பிழைப்பு இல் வாய்மையான் -*** *தவறாத சத்தியத்தைக் கடைப்பிடிப்பவனான சடாயு;* ***பொன்றினன் என்ற சொல் -*** *இறந்தான் என்ற சொல்லை;* ***கேட்டனன் -*** *கேட்டு;* ***புலம்பும் நெஞ்சினன் -*** *சோகத்தால் புலம்பியழும் மனத்தையுடையவனாய்;* ***குன்று என நடந்து -*** *மலை போல நடந்து வந்து;* ***அவர்க்குறுகல் மேயினான் -*** *அந்த வானர வீரர்களையணுகினான்.*

*தன் தம்பி சடாயு இறந்த செய்தியைக் கேட்ட சம்பாதி மிக வருந்தி, அதனுண்மையை வினாவியறிய விரும்பி அந்தத் துயரச் செய்தியைக் கூறிய அனுமனும் மற்ற வானரர்களும் இருக்குமிடத்திற்கு வந்தான் என்பது. சம்பாதியின் பெரிய உருவத்திற்கு மலை உவமை. பின் துணை - இளையவன், தம்பி. குன்றென நடந்து: இறகுகள் எரிந்து அழியப் பெற்றவனாதலால் நடந்து வந்தான் சம்பாதி. மேயினான்: மேவினான் என்ற சொல்லின் திரிபு. 22*

*4670. 'முறையுடை எம்பியார் முடிந்தவா' எனாப்*
***பறையிடு நெஞ்சினன், பதைக்கும் மேனியன்,***
***இறையுடைக் குலிசவேல் எறிதலால், முனம்***
***சிறை அறு மலை எனச் செல்லும் செய்கையான்;***

***முறையுடை எம்பியார் முடிந்த ஆ -*** *நீதிமுறையைத் தனக்கு உரிமையாகவுடைய என் தம்பி சடாயு இறந்தவாறு என்னே!* ***எனா -*** *என்று;* ***பறை இடு நெஞ்சினன் -*** *பறையடிப்பது போலத்துடிக்கின்ற நெஞ்சையுடையவனும்;* ***பதைக்கும் மேனியன் -*** *தவித்துத் துடிக்கும் உடம்பையுடையவனும்;* ***இறையுடைக் குலிசம் வேல் எறிதலால் -*** *தேவேந்திரன் தன் வச்சிரப் படையை வீசியெறிந்ததால்;* ***முனம் சிறை அறும் மலை என -*** *முற்காலத்தில் சிறகுகள் அறுபட்டுப்போன மலையைப் போல;* ***செல்லும் செய்கையான் -*** *செல்லும் செயலையுடையவனானான்.*

*முற்காலத்தில் மலைகள் இறகுள்ளனவாயிருந்து பறந்த மக்களின்மேல் விழுந்து அழித்ததால், இந்திரன் அவற்றின் சிறகுகளை அரிந்தான் என்பது புராணக் கதை. சிறகுகள் அறுபட்ட மலை சிறகுகள் கரிந்துவிட்ட சம்பாதிக்கு ஏற்ற உவமையாம்.*

*எம்பியார் - பால்வழுவமைதி (பாசத்தால் வந்தது); தம்பி இளையவனாதலால் எம்பி என்று இருப்பது முறை; 'ஆர் என்ற மரியாதைப் பன்மை விகுதி சேர்த்து வழு; தம்பியை நினைத்த பாசத்தால் எம்பியார் என அமைந்தது.*
*23*

***4671. 'மிடலுடை எம்பியை வீட்டும் வெஞ் சினப்***
***படையுளர் ஆயினார்' பாரில் யார்?' எனா,***
***உடலினை வழிந்து போய், உவரி நீர் உக,***
***கடலினைப் புரையுறும் அருவிக் கண்ணினான்;***

***மிடலுடை எம்பியை -*** *வலிமையுடைய என்தம்பியை;* ***வீட்டும் -*** *அழிக்கக் கூடிய;* ***வெஞ்சினப் படையுளர் ஆயினார் -*** *கொடிய கோபத்தோடு தாக்கும் படைக்கலங்களைக் கொண்டவர்;* ***பாரில் யார்? -*** *இந்த உலகத்தில் எவர் உள்ளனர்?* ***எனா -*** *என்று சொல்லி வருந்தி;* ***உடலினை வழிந்துபோய் -*** *உடம்பிலிருந்து கீழே விழுந்துபோய்;* ***உவரி நீர் உக -*** *கடலில் சேருமாறு;* ***கடலினைப் புரை உறும் அருவிக் கண்ணினான் -*** *அந்தப் பெரிய கடலைப் போல நீர்ப்பெருக்குடைய கண் களையுடையவனும்.*

*தன் அன்பான தம்பியின் மரணத்தை நினைந்து சம்பாதி கடல்போலக் கண்ணீரைப் பெருக்கினான் என்பது.*

*உடலினை: உருபு மயக்கம்.* *24*

***4672. உழும் கதிர் மணி***
***அணி உமிழும் மின்னினான்; மழுங்கிய நெடுங் கணின்***
***வழங்கும் மாரியான்;***
***புழுங்குவான்,***

***அழுங்கினான; புடவிமீதினில்,***
***முழங்கி, வந்து, இழிவது***
***ஓர் முகிலும் போல்கின்றான்;***

***உழும் கதிர் மணி*** *- சாணை பிடித்த ஒளிபொருந்திய மணிகளைக் கொண்டு செய்த;* ***அணி உமிழும் மின்னினான்*** *- அணிகலன்கள் ஒளிவிடுகின்ற மின்னலையுடையவனும்;* ***மழுங்கிய நெடுங்கணின்*** *- ஒளி மங்கிய தன் நீண்ட கண்களிலிருந்து;* ***வழங்கும் மாரியான்*** *- வழிகின்ற நீர்த்துளிகளையுடையவனும்;* ***புழுங்குவான் அழுங்கினான்*** *- துயரத்தால் மனம் வருந்துபவனாய் வாய்விட்டுக் கதறுபவனும்;* ***புடவி மீதினில்*** *- பூமியின்மேல்;* ***முழங்கிவந்து*** *- குமறிக் கொண்டே வந்து;* ***இழிவது*** *- கீழே இறங்குவதான;* ***ஓர் முகிலும் போல்கின்றான்*** *- ஒரு மேகத்தை ஒத்திருப்பவனும்.*

*மின்னியிடித்து நீரைச் சொரிகின்ற மேகம், இரத்தின அணிகலன்களால் ஒளி வீசிக் கொண்டும், வாயினால் கதறிக் கொண்டும், கண்ணீரைச் சொரிந்து கொண்டுமிருக்கின்ற சம்பாதிக்கு உவமையாம். இல்பொருள் உவமை.*

*சம்பாதி பெரிய உருவத்துடன் பூமியின்மேல் நடந்து வருவதால் பூமியின் மேல் இழியும் மேகம் போன்றான் என்று குறித்தார். 25*

***4673. வள்ளியும் மரங்களும் மலையும்***
***மண் உற,***
***தெள்ளு நுண் பொடிபட,***
***கடிது செல்கின்றான்;***
***தள்ளு வன் கால்***
***பொர, தரணியில் தவழ்***
***வெள்ளி அம் பெரு***
***மலை பொருவு மேனியான்;***

***வள்ளியும்*** *- கொடிகளும்;* ***மரங்களும்*** *- பலவகையான மரங்களும்;* ***மலையும்*** *- மலைகளும்;* ***மண் உற*** *- மண்ணோடு மண்ணாகும் படி;* ***தெள்ளு நுண் பொடிபட*** *- தெள்ளிய நுண்மையான பொடியாகுமாறு;* ***கடிது செல்கின்றான்*** *- விரைவாகச்சென்றான்;* ***தள்ளு வன்கால் பொர*** *- எல்லாவற்றையும் தாக்கித் தள்ளவல்ல வலிய காற்று மோதுவதால்;* ***தரணியில் தவழ்*** *- பூமியில் தவழ்ந்து வருகின்ற;* ***வெள்ளி அம் பெருமலை*** *- அழகிய வெள்ளிமயமான கைலாய மலையை;* ***பொருவும் மேனியான்*** *- ஒத்த உருவமுடையவனும் (ஆகி).*

*சம்பாதி நடந்து வருகையில் வழியிலுள்ள கொடிகளும் மரங்களும் மலைகளும் பொடியாயினவென அவனது வேகத்தையும் வலிமையையும் கூறினார்.*

*தரணியில் தவழ் வெள்ளியம் பெருமலை: இல்பொருளுவமை. சம்பாதிக்கு வெள்ளிமலை உருவின் பெருமையாலும் நிறத்தாலும்உவமையாம். 26*

*சம்பாதியின் வருகையைக் கண்ட அனுமன் செயல்*

***4674. எய்தினன் - இருந்தவர்
இரியல் போயினார்;
ஐயன், அம் மாருதி,
அழலும் கண்ணினான்,
'கைதவ நிசிசர!
கள்ள வேடத்தை!
உய்திகொல் இனி?' எனா
உருத்து, முன் நின்றான்.***

***எய்தினான் -*** *(இவ்வாறு சம்பாதி அந்த வானர வீரர்கள் இருந்த இடத்திற்கு) வந்து சேர்ந்தான்;* ***இருந்தவர் இரியல் போயினார் -*** *(அவனைக் கண்டு) அங்கிருந்த அந்த வானரவீரர்கள் அஞ்சியோடி னார்கள்;* ***ஐயன் அம்மாருதி -*** *அறிவிற் சிறந்தவனான அந்த அனுமன் மட்டும்;* ***அழலும் கண்ணினான் -*** *(கோபத்தால்) நெருப்புப் போல் ஏரியும் கண்களையுடையவனாய் (அந்தச் சம்பாதியை நோக்கி);* ***கை தவநிசிசர -*** *வஞ்சனையுடைய அரக்கனே!* ***கள்ள வேடத்தை -*** *பொய் வேடம் பூண்டவனே!* ***இனி உய்திகொல் எனா -*** *(என்முன் அகப்பட்ட நீ) தப்பிப் பிழைப்பாயோ என்று;* ***உருத்து -*** *கோபித்து;* ***முன் நின்றான் -*** *அவனெதிரில் நின்றான்.*

*சம்பாதியின் பேருருவத்தைக் கண்டு மற்றைய வானர வீரர்கள் அஞ்சியோட, அவனை இராவணன் சார்பினன் என்றே கருதி அனுமன் கோபித்து, 'வஞ்சனை மிக்க அரக்கனே! இவ்வாறு கள்ளத்தனமாகப் பறவை வடிவம் கொண்டு தப்பிப் பிழைக்கப் பார்க்கின்றாயோ' என்று கூறி அவனை எதிர்த்து நின்றான் என்பது.*

*கைதவம்: வஞ்சகம். வேடத்தை: முன்னிலைக் குறிப்பு வினைமுற்று. நிசிசரர்: அரக்கர் (இரவில் சஞ்சரிப்பவர்). எருவை வேந்தன் (22), செய்கையான் (23), கண்ணினான் (24), போல்கின்றான் (25), பொருவு மேனியான் (26), உருத்து முன்னின்றான் என வினை முடிவு கொள்ளுதல் வேண்டும்.*
*27*

***4675. வெங் கதம் வீசிய மனத்தன், விம்மலன்,
பொங்கிய சோரி நீர் பொழியும் கண்ணினன்,
சங்கையில் சழக்கு இலன் என்னும் தன்மையை,
இங்கித வகையினால், எய்த நோக்கினான்.*** *(அனுமன் சம்பாதியை மேலும் நோக்கி)* ***வெங்கதம் வீசிய மனத்தன் -*** *கொடிய கோபத்தை நீக்கிய மனத்தையுடையவனும் ;* ***விம்மலன் -*** *(துக்கத்தால்) பொருமுகின்றவனும்;* ***பொங்கிய சோரி நீர் பொழியும் -*** *பொங்கும் மழைபோல நீரைச் சொரிகின்ற;* ***கண்ணினன் -*** *கண்களையுடையவனுமாயிருக்கின்றான் (ஆதலால், இவன்);* ***சங்கையில் சழக்கு இலன் -*** *மனத்திலே சிறிதும் குற்றம் இல்லாதவன்;* ***என்னும் தன்மையை -*** *என்பதை;* ***இங்கித வகையினால் -*** *முகத்தின் குறிப்புகளினால்;* ***எய்த நோக்கினான் -*** *நன்றாக அறிந்து கொண்டான்.*

*அனுமன், பிறர் முகக் குறிப்பறிந்து உண்மையையுணர்பவனாதலால், சீற்றமில்லாமலும், துயரத்தால கண்ணீரைப் பெருக்கியும் வருகின்ற சம்பாதியைக் கண்டு அவன் குற்றமறறவன் என்பதைத் தெளிந்தான் என்பது.*

*இங்கித வகை: குறிப்பால் உணருந் தன்மை. சங்கை: மனம்; சழக்கு: குற்றம். 28*

*சடாயுவைக் கொன்றவர் யார் எனச் சம்பாதி வினவுதல்*

***4676. நோக்கினன், நின்றனன்,***
***நுணங்கு கேள்வியான்,***
***வாக்கினால் ஒரு***
***மொழி வழங்குறாதமுன்,***
***'தாக்க அருஞ் சடாயுவைத்***
***தருக்கினால் உயிர்***
***நீக்கினர் யார்? அது***
***நிரப்புவீர்!' என்றான்.***

***நோக்கினன் நின்றனன் -*** *(சம்பாதியின் வருகையை) நோக்கி எதிர் நின்றவனும்;* ***நுணங்கு கேள்வியான் -*** *நுட்பமான கல்வி கேள்விகளையுடையவனுமாகிய அனுமன்;* ***வாக்கினால் ஒரு மொழி -*** *தன் வாயினால் ஒரு சொல்;* ***வழங்குறாதமுன் -*** *சொல்வதற்கு முன்னமே (சம்பாதி);* ***தாக்க அருஞ் சடாயுவை -*** *யாரும் எதிர்த்துப் போர் செய்ய முடியாத வலிமையிடைய சடாயுவை;* ***தருக்கினால் -*** *சூரத்தனத்தால்;* ***உயிர் நீக்கினர் யார் -*** *உயிரைப் போக்கியவர் யார்?* ***அது நிரப்புவீர் -*** *அதை விரிவாக எடுத்துக் கூறுங்கள்;* ***என்றான் -*** *என்று கேட்டுக் கொண்டான்.*

*நிரப்புவீர்: அனுமன் ஒருவனை உயர்வு கருதிப் பன்மையில் கூறியது என்றும், அங்கிருந்த மற்ற வானர வீரர்களை உளப்படுத்தியது என்றும் கொள்ளலாம். நிரப்புதல்: குறையின்றி முழுவதும் கூறல். 29*

*சம்பாதி தன் வரலாறு உரைத்தல்*

***4677. 'உன்னை நீ உள்ளவாறு***
***உரைப்பின், உற்றதைப்***
***பின்னை யான் நிரப்புதல்***
***பிழைப்பு இன்றாகுமால்'***
***என்ன, மாருதி எதிர்,***
***எருவை வேந்தனும்,***
***தன்னை ஆம் தன்மையைச்***
***சாற்றல் மேவினான்;***

*(அது கேட்டு)* ***மாருதி -*** *அனுமன்;* ***உன்னை நீ உள்ளவாறு உரைப்பின் -*** *உன்னைப் பற்றி நீ உள்ளபடியே கூறினால்;* ***பின்னை -*** *பிறகு;* ***யான் உற்றதை நிரப்புதல் -*** *நான் நடந்த வரலாற்றை விரிவாகக் கூறுவது;* ***பிழைப்பு இன்றாகும் -*** *தவறு இல்லாததாகும்;* ***என்ன -*** *என்று (சம்பாதியை நோக்கிக்) கூற;* ***எதிர் -*** *எதிரே நின்ற அனுமனிடம்;* ***எருவை வேந்தனும் -*** *கழுகரசனான சம்பாதியும்;* ***தன்னை ஆம் தன்மையை -*** *தன்னைப பற்றிய வரலாற்றை;* ***சாற்றல் மேயினான் -*** *சொல்லத் தொடங்கினான்.*

*ஆல் : ஈற்றசை.*

*பிழைப்பு - தவறு. முதலடி முற்றுமோனையாகவுள்ளது.* *30*

***4678. 'மின் பிறந்தாலென***
***விளங்கு எயிற்றினாய்!***
***என், பிறந்தார்க்கு இடை***
***எய்தலாத? என்***
***பின் பிறந்தான் துணை***
***பிரிந்த பேதையேன்***
***முன் பிறந்தேன்' என***
***முடியக் கூறினான்.***

***மின் பிறந்தாலென** - (சம்பாதி அனுமனை நோக்கி) மின்னல் தோன்றியது போல; **விளங்கு எயிற்றினாய்** - விளங்குகின்ற பற்களை யுடையவனே! **பிறந்தார்க்கு இடை எய்தலாத என்** - உடன் பிறந்தவர் பொருட்டுச் சோர்தல் அடையாத நிலை ஏது? **என் பின்பிறந்தான்** - எனக்குப் பின் பிறந்தவனாகிய; **துணை பிரிந்த** - (என்) சகோதரனைப் பிரிந்த; **பேதையேன்** - எளியவனாகிய நான்; **முன் பிறந்தேன்** - (அந்தச் சடாயுவுக்கு) அண்ணனாகப் பிறந்தேன்; **என** - என்று; **முடியக் கூறினான்** - தன் வரலாற்றை விளங்கக் கூறினான்.*

*சடாயு என்பவன் தன் தம்பி; நான் அவனுக்கு முன் பிறந்தவன் என்பது.*

*'இளையவன் இறக்க மூத்தவனாகிய நான் உயிரோடு இருக்கின்றேனே' என்ற இரக்கம் தோன்றுமாறு 'என் பின் பிறந்தான் துணை பிரிந்த பேதையேன் முன் பிறந்தேன்' என்றான் சம்பாதி. உடன்பிறந்தவர்கள் துன்பமுற நேர்ந்தால் சோர்வடையாத நிலை உண்டோ என்று சம்பாதி கேட்டான். சடாயுவின் மரணத்தால்*

*தனக்கு ஏற்பட்டுள்ள சோர்வைச் சம்பாதி இவ்வாற புலப்படுத்துகிறான். இடை(தல்) - சோர்தல். என்பு: ஆகுபெயர்.* *31*

*அனுமன், சடாயு இறந்தமை உரைத்தல்*

***4679. கூறிய வாசகம் கேட்ட, கோது இலான்***
***ஊறிய துன்பத்தின் உவரியுள் புகா***
***ஏறினன், உணர்த்தினன், 'இகல் இராவணன்***
***வீறிய வாளிடை விளிந்தது ஆம்' என்றான்.***

***கூறிய வாசகம் கேட்ட** - சம்பாதி சொன்னவற்றைக் கேட்ட; **கோது இலான்** - குற்றமற்றவனான அனுமன்; **ஊறிய துன்பத்தின் உவரியுள்புகா** - மிக்க துன்பமாகிய கடலினுள் மூழ்கி; **ஏறினான்** - அதிலிருந்து ஒருவாறு கரையேறினவனாகி; **இகல் இராவணன்** - (சடாயுவோடு) போர் புரிந்த இராவணன்; **வீறிய வாளிடை** - வீசிய வாளினால்; **விளிந்தது ஆம்** - உன் தம்பியின் மரணம் நேர்ந்ததாகும்; **என்றான் உணர்த்தினன்** - என்று தெரிவித்தான்.*

*சம்பாதியின் சொல் மனத்தைக் கரையச் செய்ததால் அதைக் கேட்ட அனுமன் துயர்க் கடலிலே மூழ்கிப்பின் ஒருவாறு தெளிந்தான் என்பது.*

*வீறிய வாள்: இராவணனுக்குச் சிவன் தந்த சந்திரகாசமென்னும் வாள்; எனவே, பிறிதொன்றற்கு இல்லாத சிறப்புடையது.*

*புகா: செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.* *32*

*சம்பாதி புலம்பல்*

***4680. அவ் வுரை கேட்டலும், அசனி ஏற்றினால்***
***தவ்விய கிரி எனத் தரையின் வீழ்ந்தனன்;***
***வெவ் உயிரா உயிர் பதைப்ப, விம்மினான்;***
***இவ் உரை, இவ் உரை, எடுத்து இயம்பினான்:***

***அவ் உரை கேட்டலும் -*** *(அனுமன் கூறிய) அந்தச் சொற்களைக் கேட்டதும் (சம்பாதி);* ***அசனி ஏற்றினால் -*** *பேரிடியினால்;* ***தவ்விய கிரி என-*** *சிதைந்த மலை போல;* ***தரையில் வீழ்ந்தனன் -*** *தரைமீது விழுந்தான்;* ***வெவ் உயிரா -*** *வெப்பமாகப் பெருமூச்சுவிட்டு;* ***உயிர் பதைப்ப -*** *உயிர் துடிக்க;* ***விம்மினான் -*** *தேம்பி வருந்தியவனாகி;* ***இவ்உரை இவ்உரை -*** *இந்த இந்தச் சொற்களை;* ***எடுத்து இயம்பினான் -*** *எடுத்து எடுத்துச் சொல்லிப் புலம்பினான்.*

*ஏறு: சிறந்ததையும், பெரியதையும் 'ஏறு' என்றல் மரபு. கீழே விழுதலும், வெப்பமாகப் பெருமூச் செறிதலும், உயிர் பதைத்தலும், விம்முதலும் துயரத்தின் மெய்ப்பாடுகள். இவ்வுரை இவ்வுரை என்ற அடுக்கு: சோகத்தின் பலவற்றைக் கூறுவதைக் குறிக்கும்.*

*தவ்வுதல்:சிதைதல்.* *33*

*கலிவிருத்தம் (வேறு)*

***4681. 'விளையா நீள் சிறகு இன்றி வெந்து உகத்***
***தளை ஆனேன் உயிர் போதல் தக்கதால்;***
***வளையான் நேமியன் வன்மை சால் வலிக்கு***
***இளையானே! இது என்ன மாயமோ?***

***விளையா நீள் சிறகு இன்றி -*** *(என் தம்பியே) எதற்கும் தடைபடாத என்னுடைய நீண்ட சிறகுகள் இல்லாமல்;* ***வெந்து உக -*** *(சூரியக் கதிர்களால்) அடியோடு வெந்தொழிய;* ***தளை ஆனேன் -*** *(விரும்பியபடி பறந்து செல்ல முடியாமல்) தளைப்படுத்தப்பட்டுள்ள எனது;* ***உயிர் போதல் தக்கது -*** *உயிர் நீங்குதலே தகுதியானது;* ***வளையா நேமியன் -*** *கோணாத ஆணைச் சக்கரத்தையுடைய தசரத மன்னனின்;* ***வன்மை சால் வலிக்கு -*** *மிகந்த உக்கிரமான வலிமைக்கு;* ***இளையோனே -*** *குறையாத ஆற்றலுடையவனே!* ***இது என்ன மாயமோ -*** *(நீ இறந்த) இச் செய்கை என்ன மாயமோ? (அறிய முடியவில்லையே).*

*ஆல்: ஈற்றசை, தேற்றமும் ஆம்.*

*பறவைகளுக்கு மிகத் தேவையான உறுப்பாகிய சிறகுகளை இழந்த பின்பும் ஒரு பயனுமில்லாமல் நான் உயிருடன் வீணே விழுந்து கிடக்கின்றேன்; ஆனால், தசரத மன்னனது வலிமைக்கும் குறையாத வலிமையுள்ள நீ மூத்தவனான எனக்கு முன்னே இறந்தது என்ன மாயம்' என்று சம்பாதி புலம்பினான்.*

*பூமி முழுவதும் வளையாத ஆணைச் சக்கரத்தைச் செலுத்தி ஆட்சி செய்தவனாதலால் தசரதன் 'வளையா நேமியன்' எனப்பட்டான்.*

*ஓகாரம் இரக்கமுணர்த்தும், வளையா நேமியன் என்பதற்குத் திருமால், சூரியன் என்று பொருள் கொண்டவரும் உளர். 34*

***4682. 'மலரோன் நின்றுளன்; மண்ணும்***
***விண்ணும் உண்டு;***
***உலையா நீடு அறம்***
***இன்னும் உண்டுஅரோ;***
***நிலை ஆர் கற்பமும்***
***நின்றது; இன்று நீ***
***இலையானாய்; இது***
***என்ன தன்மையோ?***

***மலரோன் நின்றுளன் -** (திருமாலின் நாபித்) தாமரை மலரில் தோன்றியவனான பிரமன் இன்னும் அழியாது இருக்கின்றான்; **மண்ணும் விண்ணும் உண்டு -** பூமியும் வானமும் உள்ளன; **உலையா நீடு அறம் -** அழியாது வளரும் தருமமும்; **இன்னும் உண்டு -** இன்னும் நிலைபெற்றுள்ளது; **நிலை ஆர் கற்பமும் -** நிலை பொருந்திய பிரமகற்பம் என்ற காலமும்; **நின்றது -** இன்னும் முடிவடையாது உள்ளது*

*(ஆனால்) **இன்று நீ இலை ஆனாய் -** இன்றோ நீ மாத்திரம் இல்லாது அழிந்தாய்; **இது என்ன தன்மையோ -** இது என்ன முறையோ?*

*அரோ: ஈற்றசை*

*நீண்ட ஊழிக் காலம் வரை நிலைத்தற்குரிய நீ இறந்தாயே எனச் சம்பாதி இரங்கியவாறு. பிரமனும், மண்ணும், விண்ணும், அறமும், கற்ப காலமும் அழியுமானால் நீயும் அழிவது நியாயமாகும்; அவை அழியாதிருக்க நீ மட்டும் அழிந்தது முறையாகாது என்பது சம்பாதி கருத்து.*

*ஓகாரம்: எதிர்மறை; ஐயமும் ஆம்.*

*கற்பம்: பிரமகற்பம். 35*

***4683. 'உடனே, அண்டம் இரண்டும்***
***முந்து உயிர்த்து -***

***இடு அந் நாள் வந்து***
***இருவேமும் எய்தி, யான்***
***விட, நீயே தனிச்***
***சென்ற வீரமும்***
***கடனே; - வெங்***
***கலுழற்கும் மேன்மையாய்!***

***வெங் கலுழற்கும் மேன்மையாய் -*** *வலிமை மிக்க கருடனுக்கும் மேம்பட்டவனே!* ***அம் முந்து நாள் -*** *முன்னொரு காலத்தில்;* ***அண்டம் இரண்டும் உயிர்த்திடும் -*** *இரண்டு முட்டைகள் உண்டாக்க;* ***உடனே இருவேமும் வந்து எய்தி -*** *ஒருவர்பின் ஒருவராக நாம் இருவரும் உடன் பிறப்பாகப் பிறந்து;* ***யான் விட -*** *(இப்போது) என்னை விட்டுப் பிரிந்து;* ***நீயே தனிச் சென்ற வீரமும் -*** *நீ மட்டும் தனியாக இறந்து போன வீரச் செயலும்;* ***கடனே -*** *முறையோ?*

*நீ வீரத்தால் இறந்தது சிறந்ததாயினும் என்னைத் தனியே விட்டுச் சென்றது தகுதியாகாது என்பான் 'யான் விட' என்றும், இராவணனுடன் போர் செய்து விழுப்புண் பட்டு இறந்தானாதலால் 'சென்ற வீரமும்' என்றும் கூறினான்.*

*அருணனுக்கு அரம்பை யென்னும் தேவமாதிடம் தோன்றிய இருமுட்டைகளில் பிறந்தவர் சம்பாதியும் சடாயுவும் என்பர்.*

*நீயே - ஏகாரம் பிரிநிலை. கடனே - ஏகாரம் வினாப் பொருளில் வந்தது. அண்டம் - முட்டை.* *36*

***4684. 'ஒன்றா மூன்று உலகத்துளோரையும்***
***வென்றான்என்னினும் வீர! நிற்கு நேர்***
***நின்றானே, அவ் அரக்கன்! நின்னையும்***
***கொன்றானே! இது என்ன கொள்கையோ?'*** ***வீர -*** *வீரனே! (இராவணன்);* ***ஒன்றா -*** *(தனக்கு) இணங்கி வராத;* ***மூன்று உலகத்து உளோரையும் -*** *சுவர்க்கம், பூமி, பாதாளம் என்னும் மூவலகங்களில் உள்ளவர் அனைவரையும்;* ***வென்றான் என்னினும் -*** *வென்றான் என்றாலும்;* ***அவ் அரக்கன் நிற்கு நேர் நின்றானே -*** *(போரில்) அந்த அரக்கனாகிய இராவணன் உனக்கு எதிராக வந்து நின்றானா?* ***நின்னையும் கொன்றானே -*** *உன்னையும் கொன்றானா?* ***இது என்ன கொள்கையோ -*** *இது என்ன வியப்பான நிகழ்ச்சியோ?*

*மூவுலகத்தையும் வென்ற அந்த இராவணனைவிட நீ மிக்க வலியவனாதலால் அவன் உன்னை எதிர்த்தான் என்பதும், கொன்றான் என்பதும் நம்பத்தக்க நிகழ்ச்சிகளாக இல்லையே என்றான் சம்பாதி.*

*நின்றானே கொன்றானே: ஏகாரங்கள் வியப்பொடு வந்த வினாக்கள். கொள்கை: கோட்பாடு, சூழ்ச்சியும் ஆம்.* *37*

***4685. என்று என்று ஏங்கி, இரங்கி, இன்னலால்***
***பொன்றும் தன்மை புகுந்தபோது, அவற்கு***

***ஒன்றும் சொற் கொடு உணர்ச்சி நல்கினான் -***
***வன் திண் தோள் வரை அன்ன மாருதி.***

***என்று என்று*** *- (சம்பாதியானவன்) என்று பலவிதமாகக் கூறி;* ***ஏங்கி இரங்கி*** *- மனம் தளர்ந்த வருந்தி;* ***இன்னலால்*** *- துன்பத்தால்;* ***பொன்றும் தன்மை புகுந்தபோது*** *- இறக்கும் நிலையடைந்த போது;* ***அவற்கு*** *- அந்தச் சம்பாதிக்கு;* ***வன்திண் வரை அன்ன தோள் மாருதி*** *- மிக வலிய மலை போன்ற தோள்களையுடைய அனுமன்;* ***ஒன்றும் சொல்கொடு*** *- ஏற்ற சொற்களைக் கொண்டு;* ***உணர்ச்சி நல்கினான்*** *- தேறுதல் கூறினான்.*

*என்று என்று - அடுக்கு - துயரத்தால் வந்த எண்ணுப் பொருளது. வன் திண்: ஒரு பொருட் பன்மொழி. ஒன்றும் சொல்: துயரத்தைத் தணிப்பதற்கேற்ற சொற்கள். அனுமன் சொல்லின் செல்வனாதலால் ஒன்றும் சொற்கொடு உணர்ச்சி நல்கினான் என்றார். 38*

*சம்பாதியின் வினாவும் அனுமனின் விடையும்*

***4686. தேற்றத் தேறி இருந்த செங்கணான்,***
***'கூற்று ஒப்பான், கொலை வாள் அரக்கனோடு***
***ஏற்று, போர் செய்தது என் நிமித்து?' என,***
***காற்றின் சேய் இது கட்டுரைக்குமால்;***

***தேற்றத் தேறி இருந்த செங்கணான்*** *- (அனுமன்) தேறுதல் மொழி கூறியதனால் மனந் தெளிந்த சிவந்த கண்களையுடைய அந்தச் சம்பாதி;* ***கூற்று ஒப்பான்*** *- யமன் போன்று வலிமையுடைய சடாயு;* ***கொலை வாள் அரக்கனோடு*** *- கொலை புரியும் வாளையுடைய அரக்கனாகிய இராவணனோடு;* ***ஏற்று*** *- எதிர் நின்று;* ***போர் செய்தது*** *- போர்*

*செய்ததற்கு;* ***என் நிமித்து என*** *- காரணம் என்ன என்று வினாவ;* ***காற்றின் சேய்*** *- வாயு குமாரனான அனுமன்;* ***இது கட்டுரைக்கும்*** *- பின்வரும் செய்திகளைக் கூறலானான்.*

*ஆல்: ஈற்றசை.*

*சம்பாதி அனுமன் தேறுதல்மொழியால் மனந் தெளிந்து, சடாயு இராவணனோடு போர் செய்த காணத்தை வினாவ, அனுமன் கூறமுற்பட்டான். நிமிர்ந்து: நிமித்தம் (காரணம்). செங்கணான்: கண்கள் சிவந்தமை துயரத்தால் கலங்கியதாலாகும். 39*

***4687. 'எம் கோமான், அவ் இராமன், இல் உளாள்,***
***செங்கோலன் மகள், சீதை செவ்வியாள்,***
***வெங் கோல் வஞ்சன் விளைத்த மாயையால்,***
***தம் கோனைப் பிரிவுற்ற தன்மையாள்;***

***எம் கோமான் அவ்இராமன் -*** *(அது கேட்ட அனுமன்) எங்கள் தலைவனாகிய அந்த இராமபிரானின்;* ***இல் உளாள் -*** *மனைவியாக இருப்பவளும்;* ***செங்கோலன் மகள் -*** *நீதி தவறாத ஆட்சியையுடைய சனகமன்னன் திருமகளும்;* ***செவ்வியாள் -*** *நல்லிலக்கணங்களும் பண்பும் நிறைந்தவளுமான;* ***சீதை -*** *சீதையானவள்;* ***வெங்கோல் வஞ்சன் -*** *கொடுங்கோலையுடைய வஞ்சகனான இராவணன்;* ***விளைத்த மாயையால் -*** *செய்த சூழ்ச்சியால்;* ***தன் கோனை -*** *தன் நாயகனான அந்த இராமபிரானை;* ***பிரிவுற்ற தன்மையாள் -*** *பிரிந்த தன்மையையுடைவளானாள்.*

*வெங்கோல் வஞ்சன் விளைத்த மாயை: மாயமான் காரணமாக இராம இலக்குவர் சீதையைப் பிரியுமாறு செய்தது.*

*இல் உளான்: வீட்டிலிருந்து கணவனுக்கு வேண்டிய தொழிலைச் செய்பவள்; மனைவி - இடவாகுபெயர்.* *40*

***4688. 'கொண்டு ஏகும் கொலை***
***வாள் அரக்கனைக்***
***கண்டான் நும்பி;***
***அறம் கடக்கலான்,***
***''வண்டு ஆர் கோதையை***
***வைத்து நீங்கு'' எனா,***
***திண் தேரான் எதிர்***
***சென்று சீறினான்.***

***கொண்டு ஏகும் -*** *சீதையைக் கவர்ந்து செல்லும்;* ***கொலை வாள் அரக்கனை -*** *கொலை செய்யும் வாளேந்திய இராவணனை;* ***நும்பி கண்டான்-*** *உன் தம்பி பார்த்தான்;* ***அறம் கடக்கலான் -*** *தருமநெறி*

*தவறாதவனான அவன்;* ***வண்டு ஆர் கோதையை -*** *வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய அச் சீதையை;* ***வைத்து நீங்கு -*** *விட்டுவிட்டு அப்பாலே செல்;* ***எனா -*** *என்று கூறி;* ***திண்தேரான் எதிர் சென்று*** *- வலிய தேரையுடைய அந்த இராவணன் எதிரே சென்று;* ***சீறினான் -*** *மனங் கொதித்து எதிர்த்தான்.*

*அறங் கடக்கலான்: இந்த அடைமொழி பிறர் மனைவியைக் கவர்வதைக் கண்டு மனங்கொதிப்பதற்கு ஏற்றவன் என்ற கருத்தைப் புலப்படுத்தும்.*

*அறங் கடவாத சடாயுவை அறநெறி நின்றுளோர்க் கெலாம் மாணியை' - (3449) என முன்னும் கூறினார். சொல்லிய அறநெறி தொடர்ந்து தோழமை நல்லியல் அருங்கடன் கழித்த நம்பியை' - (3451) என்றதும் காண்க.*

*கண்டான்: முற்றெச்சம்.* *41*

***4689. 'சீறி, தீயவன் ஏறு தேரையும்***
***கீறி, தோள்கள் கிழித்து அழித்த பின்,***

***தேறி, தேவர்கள் தேவன் தெய்வ வாள்***
***வீற, பொன்றினன் மெய்ம்மையோன்' என்றான்.***

***மெய்ம்மையோன் -*** *எப்பொழுதும் அறவழியிலேயே நிற்கும் சடாயு;* ***சீறி -*** *கோபித்து;* ***தீயவன் ஏறு தேரையும் கீறி -*** *கொடியவனான அந்த இராவணன் தேரையும் அழித்து;* ***தோள்கள் கிழித்து -*** *(அவன்) தோள்களையும் பிளந்து;* ***அழித்தபின் -*** *அவனுக்குத் தோல்வியை உண்டாக்கின பிறகு;* ***தேறி -*** *(இராவணன்) சடாயுவை வெல்லும் நெறியைத் துணிந்து;* ***தேவர்கள் தேவன் -*** *தேவர்களுக்கும் தேவனான சிவபெருமான்;* ***தெய்வ வாள் வீற -*** *(தனக்கு அளித்த) தெய்வத் தன்மையுள்ள சந்திரகாசம் என்னும் வாள் வெற்றிபெற;* ***பொன்றினன் -*** *சடாயு (சிறகுகள் அறுபட்டு) உயிர்மாய்ந்தான்;* ***என்றான் -*** *என்று (அனுமன்) கூறி முடித்தான்.*

*சடாயு இராவணனைத் தன் மூக்கினாலும் நகங்களாலும் சிறகுகளாலும் பலவாறு துன்புறுத்தி, இறுதியில் அந்தக் கொடியவனது தெய்வ வாளால் உயிர் மாய்ந்தான் என்றான் அனுமன் என்பது. மும்மூர்த்திகளுள் ஒருவனாதலால் சிவன் 'தேவர்கள் தேவன்' எனப்பட்டான். வீறு என்ற சொல் பிறிதொன்றுக்கும் இல்லாத சிறப்பினைக் குறிக்கும். சிவபெருமான் கொடுத்தருளிய வாள் வீறுபெற (சிறப்பான வெற்றிபெற) என்றது அவ்வாளின் ஒப்பரிய சிறப்பினைப்புலப்படுத்திற்று.* *42*

*சம்பாதி சடாயுவைப் பாராட்டுதல்*

***4690. விளித்தான் அன்னது***
***கேட்டு 'மெய்ம்மையோய்!***
***தெளித்து ஆடத் தகு***
***தீர்த்தன்மாட்டு, உயிர்***
***அளித்தானே! அது நன்று!***
***நன்று!' எனாக்***
***களித்தான் - வாரி***
***கலுழ்ந்த கண்ணினான். ****

***விளித்தான் -*** *(இவ்வாறு) அனுமன் கூறினான்;* ***அன்னது கேட்டு -*** *அச் சொற்களைக் கேட்டு;* ***வாரி கலுழ்ந்த கண்ணினான் -*** *நீரைச் சொரியும் கண்களையுடையவனான சம்பாதி (அனுமனை நோக்கி);* ***மெய்ம்மையோய் -*** *உண்மை நெறியில் நிற்பவனே;* ***தெளித்து ஆடத்தகு -*** *மனந் தெளிந்து அனுபவித்தற்குரிய;* ***தீர்த்தன் மாட்டு -*** *புனிதனாகிய இராமபிரான் பொருட்டு;* ***உயிர் அளித்தானே -*** *(என் தம்பியான சடாயு) உயிரையும் கொடுத்தானே!* ***அது நன்று நன்று -*** *அந்தச் செயல் மிகவும் நல்லது!* ***எனாக் களித்தான் -*** *என்று மனமகிழ்ந்தான்.*

*தெளித்து ஆடத்தகு தீர்த்தன் - முழுமுதற் கடவுள் என்று உறுதிகொண்டு சரணமடைவதற்கு ஏற்ற புண்ணிய மூர்த்தி. தெளிந்து என்ற சொல் எதுகை நோக்கி தெளித்து என வலித்தல் விகாரமாயிற்று.*

*தீர்த்தன்மாட்டு உயிரளித்தான்: சீதையை மீட்டலும் இராம காரியமாகும் என்பது கருதி. அளித்தானே - நன்று நன்று: ஏகாரமும் அடுக்கும் உவகைப் பொருளன.*
*43*

***4691. 'பைந் தார் எங்கள் இராமன் பத்தினி,***
***செந் தாள் வஞ்சி, திறத்து இறந்தவன்,***
***மைந்தா! எம்பி வரம்பு இல் சீர்த்தியோடு***
***உய்ந்தான் அல்லது, உலந்தது உண்மையோ?***

***மைந்தா** - வீரமுள்ளவனே! **பைந்தார் எங்கள் இராமன்** - பசுமையான மலர்மாலயணிந்தவனான எங்கள் இராமனின்; **பத்தினி** - மனைவியும்; **செந்தாள் வஞ்சி திறத்து** - சிவந்த அடிகளையுடைய வஞ்சிக் கொடி போன்றவளுமான சீதையின் பொருட்டு; **இறந்தவன்** - உயிர் நீத்தவனாகிய; **எம்பி** - என் தம்பி சடாயு; **வரம்பு இல் சீர்த்தியோடு** - அளவில்லாத புகழோடு; **உய்ந்தான் அல்லது** - நல்வாழ்வு பெற்றான் என்று கூறாலாமேயல்லாமல்; **உலந்தது** - இறந்து போனான் என்பது; **உண்மையோ**- உண்மைப் பொருளாகுமோ?*

*சீதையை மீட்பதற்குத் தன்னுயிரைக் கொடுத்தவனாதலால் அவனது பூதவுடம்பு அழிந்தும் புகழுடம்பு அழியாது நிலை நிற்கின்றது. ஆதலால், அவன் இறந்தும் இறவாதவனாகவே வாழ்ந்துவருகிறான் என்பது. பசுமை: புதுமை.*

*செந்தாள் வஞ்சி: பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை; அடையடுத்த உவமையாகு பெயருமாம்.*

*'தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு' - (5305) 44*

***4692. அறம் அன்னானுடன் எம்பி அன்பினோடு***
***உறவு உன்னா, உயிர் ஒன்ற ஓவினான்,***
***பெற ஒண்ணாது ஓர் பேறு பெற்றவர்க்கு***
***இறவு என் ஆம்? இதின் இன்பம் யாவதோ?'***

***எம்பி** - என் தம்பியான சடாயு; **அறம் அன்னானுடன்** - அறக் கடவுளான இராமபிரானோடு; **அன்பினோடு உறவு உன்னா** - அன்போடு உறவு கொண்டாடி; **உயிர் ஒன்ற ஓவினான்** - (அவன்திறத்து) தன் உயிரையும் மன நிறைவோடு விட்டான்; **பெற ஒண்ணாதது** - யாரும் அடையமுடியாத; **ஓர் பெற்றி** - ஒப்பற்ற பேற்றை; **பெற்றவர்க்கு** - அடைந்தவர்களுக்கு; **இறவு என் ஆம்** - இறப்பு என்பதுதான் என்ன இழப்பைத் தந்துவிடும்? **இதின் இன்பம் யாவதோ** - இப் பேற்றைக் காட்டிலும் சிறந்த இன்பம் அளிப்பது வேறு என்ன?*

*இராமபிரான் பொருட்டு உயிரைக் கொடுக்க நேர்ந்த இப்பேற்றுக்குமுன் மரணமென்பது இழப்பே அன்று என்பது.*

*தருமமே ஒரு வடிவெடுத்தாற்போல இருப்பதால் இராமனை 'அறமன்னான்' என்றான்.*

*சடாயு தசரதனுக்குப் பல உதவிகள் செய்து அவனுக்கு உயிர்த் தோழனாகி அவனினும் வயது முதிர்ந்த தமையன் முறையிலிருந்து அவன் மக்களான இராமலக்குவரைத் தன் மக்களாக எண்ணி அன்பைப் பொழிந்தார் என்பதுபற்றி 'அன்பினோடு உறவுன்னா' என்றார்.*

*யாவதோ: ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்த வினா. இறவு: இறப்பு - தொழிற்பெயர். 45*

*சம்பாதி நீர்க்கடன் செய்து வானரரை நோக்கி மொழிதல்*

***4693. என்று என்று ஏங்கி, இரங்கி, இன்புனல்***
***சென்று, அங்கு ஆடுதல் செய்து தீர்ந்தபின்,***
***வன் திண்தோள் வலி மாறு இலாதவன்***
***துன்றும் தாரவர்க்கு இன்ன சொல்லினான்: ****

***என்று என்று ஏங்கி இரங்கி** - என்று பலவாறு ஏக்கங் கொண்டு புலம்பி; **இன்புனல் சென்று** - இனிய நீர்நிலைக்குச் சென்று; **அங்கு ஆடுதல் செய்து** - அதில் நீராடுதல் செய்து; **தீர்ந்த பின்** - முடித்த பிறகு; **வல் திண்தோள்வலி** - மிக்க திண்ணிய தோள் வலிமையில்; **மாறு இலாதவன்** - ஒப்பற்றவனாகிய சம்பாதி; **துன்றும் தாரவர்க்கு** - அடர்த்தியான மாலையைத் தரித்த வானர வீரர்களை நோக்கி; **இன்ன சொல்லினான்** - பின் வருமாறு கூறலானான்.*

*சம்பாதி ஒப்பற்ற வலிமையுடையவன் என்பதால் 'தோள்வலி மாறிலாதவன்' என்றார்.*

*என்று என்று - அடுக்கு, துன்பத்தின் மிகுதியைக் காட்டுவது. 46*

***4694. 'வாழ்வித்தீர் எனை; - மைந்தர்! - வந்து, நீர்***
***ஆழ்வித்தீர் அலிர் துன்ப ஆழிவாய்;***
***கேள்வித் தீவினை கீறினீர்; இருள்***
***போழ்வித்தீர்; உரை பொய்யின் நீங்கினீர்.***

***கேள்வித் தீவினை கீறினீர்** - சான்றோரிடம் கேட்டறிந்ததால் பாவச் செயலையொழித்தவர்களும்; **இருள் போழ்வித்தீர்** - அஞ்ஞானமாகிய இருட்டையழித்தவர்களும்; **பொய் உரையின் நீங்கினீர்** - பொய் பேசுவதிலிருந்து நீங்கினவர்களுமாகிய; **மைந்தர்** - வீரர்களே! **நீர் வந்து** - நீங்கள் நானிருக்குமிடம் வந்து; **எனை வாழ்வித்தீர்** - என்னை நல்வாழ்வடைச் செய்தீர்கள்; **துன்ப ஆழிவாய் ஆழ்வித்தீர் அலிர்** - (என் தம்பியின் மரணச் செய்தி கூறி அதனால் என்னைத்) துயர்க் கடலினுள் மூழ்கச் செய்யவில்லை;*

*நல்லறியுடையவர்களும், பொய்யில்லாதவர்களும், அஞ்ஞானத்தை அழித்தவர்களுமாகி இங்கு வந்த நீங்கள் இராமகாரியத்திற்காக என் தம்பி உயிர் துறந்ததைத் தெரிவித்ததால், தம்பியின் மரணத்தை என்னிடம் கூறியதற்காக வருந்த வேண்டா; அவன் இவ்வாறு பேறு பெற்றதை நினைத்து எனக்கு மகிழ்ச்சியேயாயிற்று*

*என்று கூறினான் சம்பாதி என்பது கருத்து. கதிரவனின் வெப்பம் தாக்குதலால் தன் சிறகுகள் கரிந்தொழிய, சம்பாதி மகேந்திர மலையில் விழுந்து, அங்கு வசித்த நிசாகர முனிவரைச் சரணடைய அவர் தமது தவச் சிறப்பால் எதிர்கால வரலாற்றையுணர்ந்து, 'பின்னர் இராமதூதர்களான வானரர் இராம நாமத்தை உச்சரிக்கும் பொழுது உனக்கு முன்பு போலச் சிறகுகள் முளைத்திடும்' என்று தனக்கு வரமளித்ததை நினைந்து இறகு முளைக்குங்காலம் தனக்குக் குறுகியது பற்றி 'எனை வாழ்வித்தீர்' என்றும், 'இருள் போழ்வித்தீர்' என்றும் சம்பாதி மகிழ்ச்சியோடு கூறினான் எனலாம்.*

*இருள் போழ்வித்தீர் - தெளிவுபற்றிய கால வழுவமைதி. கீறுதல்: பிளந்து தீயன நீக்குதல். போழ்தல்: பிளந்து அப்புறப்படுத்துதல். 47*

### *4695. 'எல்லீரும் அவ் இராம நாமமே*
### *சொல்லீர்; சொல்ல, எனக்கு ஓர் சோர்வு இலா*
### *நல் ஈரப் பயன் நண்ணும்; - நல்ல சொல்*
### *வல்லீர்! வாய்மை வளர்க்கும் மாண்பினீர்!'*

***நல்ல சொல் வல்லீர்** - (மேலும், சம்பாதி அந்த வானர வீரர்களை நோக்கி) இன்சொல் கூறுகின்றவரும்; **வாய்மை வளர்க்கும் மாண்பினீர்** - சத்தியத்தை வளர்க்கும் பெருமை பெற்றவர்களுமாகிய வானர வீரர்களே! **எல்லீரும்** - நீங்கள் அனைவரும்; **அவ்இராம நாமமே சொல்லீர்** - அந்த 'இராம' என்னும் திருநாமத்தையே வாயால் உச்சரிப்பீர்களாக! **சொல்ல** - (அவ்வாறு என்னருகில்) சொல்வதனால்; **எனக்கு** - எனக்கு; **ஓர் சோர்வு இலா** - ஒரு சிறிதும் தாழ்வில்லாத; **நல் ஈரப் பயன்** - நல்ல (அந்த இராமனின்) அருளாகிய பயன்; **நண்ணும்** - கைகூடும்.*

*'என்றான்' என்று அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும். இராம நாமம் ஓதியதால் சம்பாதியின் சிறகு முளைத்தது என்னும் செய்தி. கம்பர் படைப்பு; வான்மீகத்தில் இல்லை. 48*

*இராம நாமம் கேட்டுச் சம்பாதியின் சிறை வளர்தல்*

### *4696. என்றான், 'அன்னது காண்டும் யாம்' எனா,*
### *நின்றார் நின்றுழி, நீல மேனியான்*
### *நன்று ஆம் நாமம் நவின்று நல்கினார்,*
### *வன் தோளான் சிறை வானம் தாயவே.*

***என்றான்** - என்று (சம்பாதி) கூறினான் (அதுகேட்ட வானரர்கள்); **யான் அன்னது காண்டும் எனா** - நாங்கள் அதைக் காண்போம் என்று சொல்லி; **நின்றார் நின்றுழி** - நின்றவர் நின்றபடியே; **நீலமேனியான்** - நீலமேனியையுடைய இராமனது; **நன்கு ஆம் நாமம்** - நன்மையை அருளும் 'இராம' என்னும் திருநாமத்தை; **நவின்று நல்கினார்** - உச்சரித்துதவினார்கள் (அதனால்); **வன் தோளான் சிறை** - வலிய தோள்களையுடைய சம்பாதியின் சிறகுகள்; **வானம் தாய** - வானளாவித்தாவி வளர்ந்தன.*

*'ஏ' : ஈற்றசை.*

*இராம கைங்கரியத்தில் துணைபுரிய வேண்டுமென்ற கருத்தினாலேயே சம்பாதிக்கு வெந்த சிறகை முளைத்திட அப்போதே முனிவர் அருள் புரியவில்லை யென்பதும், இந்த வானர வீரரோடு பேச்சு நிகழ்கையில்தான் அந்தச் சம்பாதியின் சிறகு முளைத்தது என்பதும் வான்மீகத்தால் பெறப்படும். நீலமேனியான் நன்றாம் நாமம்: திருமாலின் ஆயிர நாமங்களுள் சிறந்ததான 'இராம நாமம்' என்பதும் பொருந்தும். 49*

***4697. சிறை பெற்றான், திகழ்கின்ற மேனியான்,***
***முறை பெற்று ஆம் உலகு எங்கும் மூடினான் -***
***நிறை பெற்று ஆவி நெருப்பு உயிர்க்கும் வாள்***
***உறை பெற்றால் எனல் ஆம் உறுப்பினான்.***

***ஆவி நெருப்பு உயிர்க்கும் வாள் -*** *புகையோடு கூடிய நெருப்பைக் கக்கும் வாளானது;* ***உறை பெற்றால் எனல் ஆம் -*** *ஓர் உறையைப் பெற்றது என்று சொல்லத் தக்க;* ***உறுப்பினான் -*** *அலகினைப் பெற்றவனாகிய சம்பாதி;* ***திகழ்கின்ற மேனியான் -*** *விளங்கும் உடம்பையுடையவனாய்;* ***முறை பெற்று ஆம் -*** *வரிசையாகப் பொருந்தி;* ***உலகு எங்கும் மூடினான் -*** *உலகங்கள் எல்லாவற்றிலும் பரவித் தன் சிறகுகளால் மூடியவனாய்;* ***நிறை பெற்று -*** *வலிமை பெற்று;* ***சிறை பெற்றான் -*** *(தனது கரிந்துபோன) சிறகுகள் (முன்போல) வளரப் பெற்றான்.*

*கருகிப்போன சிறகுகள் மீண்டும் வளர்ந்தன, உலகையே மூடும் அளவுக்கு பெரிய சிறகுகள வளர்ந்தன என்பதாம். முறை பெற்று ஆம் உலகு- ஒன்றன்பின் ஒன்றான வரிசையில் அமைந்த உலகங்கள்.*

*மூடுதல் - உள்ளடக்கிக் கவிந்து கொள்ளுதல். அங்கம் இங்கே அலகு; வாயிடை இணைந்த அலகுக்கு உறையிட்ட வாள்உவமையாயிற்று. 50*

*சம்பாதியின் முன்னைய வரலாற்றைக் கூறுமாறு வானரர் கேட்டல்****4698.***

***தெருண்டான் மெய்ப் பெயர்***
***செப்பலோடும், வந்து***
***உருண்டான் உற்ற***
***பயத்தை உன்னினார்;***
***மருண்டார்; வானவர்***
***கோனை வாழ்த்தினார்;***
***வெருண்டார்; சிந்தை***
***வியந்து விம்முவார்.***

*(அது கண்ட வானரர்கள்)* ***தெருண்டான் மெய்ப் பெயர் -*** *(ஞானியர்களால் பரம் பொருள் என்று) தெளியப்பட்டவனாகிய இராமனது பயன்தரும் திருநாமத்தை;* ***செப்பலோடும் -*** *(அந்த வானர வீரர்கள்) உச்சரித்த அளவிலே;* ***வந்து உருண்டான் -*** *(முன்பு இறகு இல்லாமல்) உருண்டு வந்தவனாகி சம்பாகி;* ***உற்ற பயத்தை -*** *(அப்போது) அடைந்த (சிறகுகள் பெற்ற) நன்மையை;* ***உன்னினார் -*** *(மனத்தில்) கருதினர்;* ***மருண்டார் -*** *வியப்பால் திகைப்புற்றனர்;* ***வெருண்டார் -*** *அச்சமுற்றனர்;* ***வானவர் கோனை வாழ்த்தினார் -*** *தேவர்களின் தலைவனான திருமாலின் அவதாரமாகிய*

*இராமபிரானை வாழ்த்தித் துதித்தார்கள்;* ***சிந்தை வியந்து விம்முவார் -*** *ஆச்சரியத்தால் மனம் பூரித்தனர்.*

*சம்பாதி இறகில்லாமல் உருண்டு வந்ததையும், இராம நாம உச்சரிப்பால் சிறகுகள் தழைத்ததையும் நேரிலே கண்ட வானரர்கள் அச்சமும் வியப்பும் மருட்சியும் ஒருங்கே கொண்டவர்களாய் அப் பெரும்பயனை விளைக்கும் பெருமை வாய்ந்த இராமனை வாழ்த்தினர் என்பது. மெய்ப் பெயர்: தாரக மந்திரம். பயன்: பயன் தனது திருநாமத்தால் வேண்டிய பயனை விளைத்தது கொண்டு இராமன் மானுடனல்லன்; தேவாதி தேவனான 'முழுமுதற் கடவுளே' என்ற ஞானத்தைப் பெற்ற வானரர்கள், அத் தேவனுடைய முற்றுணர்வு, வரம்பிலாற்றல், யாவரையும் பாதுகாக்கும் திறம், அழியாவியல்பு முதலிய குணங்களைக் கருதி அவற்றில் ஈடுபட்டு ஆழ்ந்து பக்தி வயப்பட்டுத் தம்மையும் மறந்து, இத்திருமேனிக்கு எவ்வாற்றானும் ஒரு குறையும் வராதிருக்க வேண்டும் என்று பரிவால் வாழ்த்துவாராயினர். 51*

***4699. அன்னானைக் கடிது அஞ்சலித்து, 'நீ***
***முன் நாள் உற்றது முற்றும் ஓத' எனச்***
***சொன்னார்; சொற்றது சிந்தை தோய்வுற,***
***தன்னால் உற்றது தான் விளம்புவான்:***

***அன்னானைக் கடிது அஞ்சலித்து -*** *(வானர வீரர்கள்) சிறகு பெற்ற அந்தச் சம்பாதியை விரைந்து கை கூப்பி வணங்கி;* ***முன்னால் உற்றது -*** *முன்காலத்து நடந்த வரலாறு;* ***நீ முற்றும் ஓது -*** *நீ முழுவதையும் கூறுவாய்;* ***எனச் சொன்னார் -*** *என்று வேண்டினார்கள்;* ***சொற்றது சிந்தை தோய்வுற -*** *அவர்கள் கூறியது மனத்தில் பதிய;* ***தன்னால் உற்றது -*** *தனக்கு நேர்ந்ததை (இறகு கரிந்த காரணத்தை);* ***தான் -*** *அந்தச் சம்பாதி;* ***விளம்புவான் -*** *(பின்வருமாறு) சொல்வானாயினான்.*

*சம்பாதியை வானரர்கள் அஞ்சலித்தது - அவன் இராமநாமத்தின் பெருமையைத் தமக்குத் தெரிவித்தவனாதலாலும், இராமனுக்குப் பெரிய தந்தை முறையாகி அவனது திருவருளைப் பெற்றவனாதலாலும், மிகவும் வயது முதிந்தவனாதலாலும் என்பது.*

*தன்னால் - உருபு மயக்கம். 52*

*சம்பாதி தன் முன்னை வரலாறு உரைத்தல்*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்.*

***4700. 'தாய் எனத் தகைய நண்பீர்!***
***சம்பாதி, சடாயு, என்பேம்;***
***சேயொளிச் சிறைய வேகக்***
***கழுகினுக்கு அரசு செய்வேம்;***
***பாய் திரைப் பரவை ஞாலம்***
***படர் இருள் பருகும் பண்பின்***
***ஆய் கதிர்க் கடவுள் தேர்ஊர்***
***அருணனுக்கு அமைந்த மைந்தர்;***

***தாய் எனத்தகைய நண்பீர்*** - *அன்பு காட்டுவதில் தாய் என்று சொல்லத்தக்க நண்பர்களே!* ***பாய்திரைப் பரவை ஞாலம்*** - *வீசும் அலைகளையுடைய கடலால் சூழப் பெற்ற நிலவுலகத்தில்;* ***படல் இருள் பருகும் பண்பின்*** - *பரவிய இருட்டை விழுங்கும் (போக்கும்) தன்மையுடைய;* ***ஆய் கதிர்க் கடவுள்*** - *சிறந்த கதிர்களோடு கூடிய சூரிய தேவனது;* ***தேர் ஊர்*** - *தேரைச் செலுத்தும் சாரதியான;* ***அருணனுக்கு*** - *அருணனுக்கு;* ***அமைந்த மைந்தர்*** - *பிறந்த மக்களாகிய;* ***சம்பாதி சடாயு என்பேம்*** - *சம்பாதி சடாயு என்ற நாங்கள் இருவரும்;* ***சேய் ஒளிச்சிறைய*** - *அழகிய நிறத்தைக் கொண்ட சிறகுகளையுடை;* ***வேகக் கழுகினுக்கு*** - *வேகமாகப் பறக்கும் கழுகுகளுக்கு;* ***அரசு செய்வேம்*** - *அரசராக இருந்து ஆட்சி செய்தவர்கள்.*

*கதிரவனின் சாரதியாகிய அருணனுக்கு மக்களாகப் பிறந்த சம்பாதி சடாயு என்ற நாங்கள் வானத்தில் உயரப் பறக்கும் இயல்புடைய கழுகுகளுக் கெல்லாம் அரசராக விருந்தோம் என்று சம்பாதி கூறினான் என்பது.*

*அருணன்: சூரியனுக்குச் சாரதி; காசியப முனிவன் மனைவியான விநதையின் வயிற்றில் பிறந்தவன்; கருடனுக்குத் தமையன்; இடைக்குக் கீழே உறுப்பில்லாதவன். இச்செய்யுள் முதல் 4706 ஆம் செய்யுள் முடிய உள்ள ஏழு பாடல்களை ஐந்து சீர் கொண்டவையாகப் பிரித்துக் கலித்துறை என்றும் கொள்வர்.*

*நண்பீர்: ஈர் - முன்னிலைப் பன்மை விகுதி.* *53*

***4701. ' "ஆய் உயர் உம்பர் நாடு***
***காண்டும்" என்று அறிவு தள்ள,***
***மீ உயர் விசும்பினூடு மேக்கு***
***உறச் செல்லும் வேலை,***
***காய் கதிர்க் கடவுள்***
***தேரைக் கண்ணுற்றேம்; கண்ணுறாமுன்,***
***தீயையும் தீக்கும் தெய்வச் செங்***
***கதிர்ச் செல்வன் சீறி,***

***ஆய்உயர் உம்பர் நாடு*** - *(நாங்கள் இருவரும்) வானத்திலுள்ள அந்தத் தேவலோகத்தை;* ***காண்டும் என்று அறிவு தள்ள*** - *சென்று காண வேண்டுமென்று எங்கள் அறிவுதூண்ட;* ***மீ உயர் விசும்பின் ஊடு*** - *மேலே உயர்ந்து விளங்கும் ஆகாய வழியே;* ***மேக்கு உறச் செல்லும் வேலை*** - *மேலே மிக உயர்ந்து பறந்து (நாங்கள்) சென்ற போது;* ***காய் கதிர்க் கடவுள்*** - *எரிக்கும் கதிர்களையுடைய சூரிய தேவனது;* ***தேரைக் கண்ணுற்றேம்*** - *தேரினைக் கண்களால் கண்டோம்;* ***கண்ணுறாமுன்*** - *அவ்வாறுநாங்கள் பார்ப்பதற்குள்;* ***தீயையும் தீக்கும்*** - *நெருப்பையும் எரித்து அழிக்கவல்ல;* ***தெய்வச் செங்கதிர்ச் செல்வன்*** - *தெய்வத் தன்மையுள்ள சிவந்த கதிர்களையுடைய அந்தக் கடவுள்;* ***சீறி*** - *கோபங் கொண்டு.*

*நாங்கள் இருவரும் மிக உயரப் பறக்கும் வல்லமை பெற்றிருந்தமையால் வானுலகத்தைக் காணவேண்டுமென்ற பேரார்வத்தால் வானத்தில் பறந்து சூரிய மண்டலத்தைக் குறுகிச் சூரியனைக் காணவிருக்கும்போது, பூலோகத்திலிருந்து நாங்கள் வந்ததால் அக்கடவுள் எங்களைக் கோபித்தான் என்று சம்பாதி கூறினான்*

*என்பது. தீயையும் தீக்கும் தெய்வச் செங்கதிர்ச் செல்வன்: வெம்மையின் மிகுதியை விளக்கும் உயர்வு நவிற்சியணி. அகரச்சுட்டு யகர மெய்பெற்று 'ஆயுயர்' (ஆய்உயர்) என்று வந்தது.*

*மீயுயர்: (மீ உயர்) ஒரு பொருட்பன்மொழி. தீயையும்: உம்மை உயர்வு சிறப்பு. தேர்: ஒற்றைச் சக்கரத் தேர். (கதிரவன் தேருக்குச் சக்கரம் ஒன்று, குதிரைகள் ஏழு என்பது புராண மரபு) 54*

***4702. 'முந்திய எம்பி மேனி முருங்கு***
***அழல் முடுகும் வேலை,***
***''எந்தை! நீ காத்தி'' என்றான்;***
***யான் இரு சிறையும் ஏந்தி***
***வந்தெனன் மறைத்தலொடும், மற்று***
***அவன் மறையப்போனான்;***
***வெந்து மெய், இறகு***
***தீந்து, விழுந்தெனன், விளிகிலாதேன்.***

***முந்திய எம்பி மேனி** - எனக்குமுன் மேலே சென்ற என் தம்பியான சடாயுவின் உடலை; **முருங்கு அழல்** - எரிக்குந் தன்மையுள்ள நெருப்பு; **முடுகும் வேலை** - விரைவாகச் சுட்டெரிக்குங் காலத்தில் (அந்தச் சடாயு என்னை நோக்கி); **எந்தை நீ காத்தி என்றான்** - என் தந்தையே! நீ என்னைக் காப்பாற்று என்று வேண்டினான்; **யான்** - நானும்; **இரு சிறையும் ஏந்தி** - (அவனுக்கு மேலே சென்று) பெரிய என் இரண்டு சிறகுகளையும் பரப்பி; **வந்தனென் மறைத்தலோடும்** - வந்து (அவன்மேல் வெப்பம் தக்காதபடி) மறைக்கவே; **அவன் மறையப் போனான்** - அந்தச் சடாயு (என் சிறகு நிழலில்) மறைந்து சென்றான் (அதனால்); **மெய் வெந்து** - என் உடல் வெந்த; **இறகு தீந்து** - இறகுகள் கருகி; **விளிகிலாதேன்** - என் உயிர் அழியாதவனாக; **விழுந்ததென்** - தரையில் விழுந்தேன்.*

*என்னைவிட உயரமாகப் பறந்து சென்ற சடாயு சூரியதேவன் கோபித்துச் செலுத்திய வெப்பத்தைத் தாங்கமாட்டாமல் தன்னைக் காப்பாற்றுமாறு என்னை வேண்டிக் கொள்ள, அதனால் அவனை என் சிறகின் கீழே வரச் செய்து அவனுக்குமேலே நான் பறந்து செல்ல அவனும் அவ்வாறே வந்து தப்பினான்; நான் அந்தக் கதிரவனது வெப்பத்தைத் தாங்கமுயாமல் இறகு தீய்ந்து கீழே விழுந்தேன் என்று சம்பாதி கூறினான் என்பது. 'தமையன் தந்தையோடொப்பான்' என்பதால் 'எந்தை' என விளிக்கப்பட்டான்.*

*முருங்கு அழல்: சுட்டு அழிக்கும் நெருப்பு: முடுகுதல்: விரைதல் மற்று: அசை. 55*

***4703. 'மண்ணிடை விழுந்த என்னை***
***வானிடை வயங்கு வள்ளல்,***
***கண்ணிடை நோக்கி, உற்ற***
***கருணையான், ''சனகன் காதல்***
***பெண் இடையீட்டின் வந்த***

வானரர் இராமர் பேரை
எண்ணிடை உற்ற காலத்து, இறகு
பெற்று எழுதி'' ' என்றான். **மண்ணிடை விழுந்த என்னை -** *அவ்வாறு தரையில் விழுந்த என்னை;* **வானிடை வயங்கு வள்ளல் -** *வானத்தில் விளங்குகின்ற கதிரவன்;* **கண்ணிடை நோக்கி -** *கண்களால் பார்த்து;* **உற்ற கருணையான் -** *என்மீது கொண்ட இரக்கத்தால்;* **சனகன் காதல் பெண் -** *சனகனின் அன்பு மகளான சீதை;* **இடையீட்டின் வந்த -** *(இராமனைவிட்டுப்) பிரிதலால் அவளைத் தேடிக் காண்பதற்காக வரும்;* **வானரர் -** *வாரர வீரர்கள்;* **இராமன் பேரை -** *இராமபிரான் திருநாமத்தை;* **எண்ணிடை உற்ற காலத்து -** *மனத்தினாற் கருதி உச்சரிக்குங் காலத்தில்;* **இறகு பெற்று எழுதி -** *நீ உன் இறகுகளை மீண்டும் பெற்றுப் பறந்து செல்வாய்;* **என்றான் -** *என்று அருள்புரிந்தான்.*

*தன் வெம்மையான கதிர்களால் சிறகுகள் தீய்ந்து கீழே விழுந்துவிட்ட என்னைக் கண்டு, கதிரவன் இரக்கப்பட்டு 'இராமன் மனைவியான சீதையைத் தேடுவதற்காக வானர வீரர்கள் இங்கு வந்து உன் வேண்டுகோளுக்கிணங்க இராம நாமத்தையுச்சரிக்க, அப்போது இழந்த சிறகுகள் மீண்டும் தளிர்க்கப் பெற்று ஏழுவாய்' என்று அருள் புரிந்தான் எனச் சம்பாதி கூறினான்.*

*மண்ணிடை, வானிடை, கண்ணிடை: இவற்றில் இடையென்பது இடம் என்னும் பொருளது.*

*தனக்கு அருள் புரிந்ததை முன்னிட்டுக் கதிரவனை 'வள்ளல்' என்று குறித்தான். இடையீடு - பிரிவு. 56*

*4704.* **'எம்பியும் இடரின் வீழ்வான்,**
**ஏயது மறுக்க அஞ்சி,**
**அம்பரத்து இயங்கும் யாணர்க்**
**கழுகினுக்கு அரசன் ஆனான்;**
**நம்பிமீர்! ஈது என் தன்மை?**
**நீர் இவண் அடைந்தவாற்றை,**
**உம்பரும் உவக்கத் தக்கீர்!**
**உணர்த்துமின், உணர' என்றான்.**

**உம்பரும் உவக்கத் தக்கீர் -** *தேவர்களும் மகிழத்தக்க தொழிலையுடையவர்களாகிய;* **நம்பிமீர் -** *சிறந்த வானர வீரர்களே!* **இடரின் வீழ்வான் -** *(என் துன்பத்தைக் கண்டு) துயரத்தில் மூழ்கியவனாகிய;* **எம்பியும்-** *என் தம்பியான சடாயுவும்;* **ஏயது மறுக்க அஞ்சி -** *(நான்) ஏவியதைமறுக்க அஞ்சியவனாய்;* **அம்பரத்து இயங்கும் -** *வானத்தில் சஞ்சரிக்கின்ற;* **யாணர்க் கழுகினுக்கு -** *வலிய கழுகுகளுக்கு;* **அரசன் ஆனான் -** *அரசன்ஆயினான்;* **ஈது என் தன்மை -** *இதுவே எனது வரலாறு;* **நீர் இவண்அடைந்த ஆற்றை -** *நீங்கள் இங்கு வந்த வரலாற்றை;* **உணர உணர்த்துமின்-** *(நான்) உணரும்படி கூறுக;* **என்றான் -** *என்று கூறிமுடித்தான்.*

*யாணர்: அழகு (புதுமை). இங்கு 'வலிமை' என்று பொருள்படும். 57*

***4705. என்றலும், இராமன் தன்னை***
***ஏத்தினர் இறைஞ்சி, 'எந்தாய்!***
***''புன் தொழில் அரக்கன் மற்று***
***அத்தேவியைக் கொண்டு போந்தான்,***
***தென் திசை'' என்ன உன்னித்***
***தேடி நாம் வருதும்' என்றார்;***
***'நன்று நீர் வருந்தல் வேண்டா;***
***நான் அது நவில்வென்' என்றான்.***

***என்றலும் -*** *என்ற சம்பாதி வினாவியவுடனே (அவ் வானரர்);* ***இராமன்தன்னை ஏத்தினர் இறைஞ்சி -*** *இராமபிரானைத் துதித்து வணங்கி (சம்பாதியை நோக்கி);* ***எந்தாய் -*** *எம் தந்தை போன்றவனே!* ***புன்தொழில் அரக்கன் -*** *இழிதொழிலைச் செய்யும் அரக்கனாகிய இராவணன்;* ***அத் தேவியை -*** *அந்த இராமபிரான் தேவியான சீதையை;* ***தென் திசை -*** *தென்திசை வழியாக;* ***கொண்டு போந்தான் என்ன -*** *கொண்டு சென்றான் என்று;* ***உன்னி -*** *நினைத்து;* ***நாம் தேடி வருதும் என்றார் -*** *நாங்கள் அச்சீதையைத் தேடிக் கொண்டு வருகிறோம் என்று கூறினர்;* ***நன்று -*** *(அது கேட்ட சம்பாதி) நல்லது;* ***நீர் வருந்தல் வேண்டா -*** *நீங்கள் வருந்தாதீர்கள்;* ***நான் அது நவில்வென் -*** *நான் இதுபற்றி அறிந்துள்ளதைக் கூறுவேன்;* ***என்றான் -*** *என்று கூறத் தொடங்கினான்.*

*பிறர் மனைவியைக் கவரும் தீக்குண முடையவனாதலால் இராவணனைப் 'புன் தொழிலரக்கன்' என்றார்.*

*மற்று: அசை.* *58*

***4706. 'பாகு ஒன்று குதலையாளைப்***
***பாதக அரக்கன் பற்றிப்***
***போகின்ற பொழுது கண்டேன்;***
***புக்கனன் இலங்கை; புக்கு,***
***வேகின்ற உள்ளத்தாளை வெஞ்***
***சிறையகத்து வைத்தான்;***
***ஏகுமின் காண்டிர்; ஆங்கே***
***இருந்தனள் இறைவி, இன்னும்.***

***பாகு ஒன்று குதலையாளை -*** *சர்க்கரைப் பாகு போன்ற மழலைச் சொற்களையுடைய சீதையை;* ***பாதக அரக்கன் -*** *கொடிய அரக்கனான இராவணன்;* ***பற்றிப் போகின்றபொழுது -*** *கவர்ந்து செல்லுகின்ற போது;* ***கண்டேன் -*** *(நான்) பார்த்தேன்;* ***இலங்கை புக்கனன் -*** *(அவன்) இலங்கையிற் போய்ச் சேர்ந்தான்;* ***புக்கு -*** *(அங்குச்)*

*சென்று ;* ***வேகின்ற உள்ளத்தாளை -*** *தவிக்கின்ற மனமுடைய அந்தச் சீதையை;* ***வெஞ்சிறை யகத்து வைத்தான் -*** *கொடிய சிறைக் காவலில் வைத்துவிட்டான்;* ***இறைவி***

*- தலைவியான சீதை;* **இன்னும் ஆங்கே இருந்தனள் -** *இப்பொழுதும் அங்கேதான் இருக்கின்றாள்;* **ஏகுமின் காண்டிர்-** *(நீங்கள்) அங்கே சென்று காணுங்கள்.*

*ஏகுமின் - முற்றெச்சம்.* *59*

***4707. 'ஓசனை ஒரு நூறு உண்டால், ஒலி***
***கடல் இலங்கை; அவ் ஊர்,***
***பாச வெங்கரத்துக் கூற்றும்***
***கட்புலன் பரப்ப அஞ்சும்;***
***நீசன் அவ் அரக்கன் சீற்றம்***
***நெருப்புக்கும் நெருப்பு; நீங்கள்***
***ஏச அருங் குணத்தீர்! சேறல் எப்***
***பரிசு இயைவது?' என்றான்.***

**ஒலி கடல் இலங்கை -** *ஒலிக்கின்ற கடலால் சூழப்பட்ட அந்த இலங்கையானது;* **ஓசனை ஒரு நூறு உண்டு -** *(இங்கிருந்து) நூறு யோசனை தூரத்திலுள்ளது;* **அவ்ஊர் -** *அந்த இலங்கையிடத்து;* **வெம் பாசக் கரத்துக் கூற்றும் -** *கொடிய பாசக்கயிற்றைக் கையில் கொண்டுள்ள யமனும்;* **கட் புலன் பரப்ப அஞ்சும் -** *(தனது) கண்ணால் ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சுவான்;* **நீசன் அவ் அரக்கன் சீற்றம் -** *இழி செயல் செய்யும் அந்த இராவணனது கோபமோ;* **நெருப்புக்கும் நெருப்பு -** *நெருப்பையும் அழிக்க வல்ல ஒரு பெருந்தீயைப் போன்றது;* **ஏசு அறுங் குணத்தீர் -** *பழிப்பற்ற நண்பண்புடையவர்களே!* **நீங்கள் -** *;* **சேறல் -** *(அங்கே) செல்லுவது;* **எப்பரிசு இயைவது -** *எவ்வாறு முடியுமோ?* **என்றான் -** *என்று (சம்பாதி) கூறினான்.*

*ஆல்: ஈற்றசை.*

*இலங்கையின் நிலையைப் பார்த்தால் எவ்வாறு அங்கே சென்று சீதையைக் காண்பது என்று திகைக்கிறான் சம்பாதி.*

*பாசம்: கயிற்று வடிவுடைய படைக்கருவி; யமனுக்கு உரியது.* *60*

***4708. 'நான்முகத்து ஒருவன், மற்றை நாரி***
***ஓர் பாகத்து அண்ணல்,***
***பால்முகப் பரவைப் பள்ளிப்***
***பரம்பரன், பணி என்றாலும்,***
***காலனுக்கேயும், சேறல் அரிது;***
***இது காவல் தன்மை;***
***மேல் உமக்கு உறுவது எண்ணிச்***
***செல்லுமின்; - விளிவு இல் நாளீர்!*** **நான்முகத்து ஒருவன் -** *(நான்கு திசைகளையும் நோக்க) நான்கு முகங்களைக் கொண்ட பிரமதேவன்;* **மற்றை நாரி ஓர் பாகத்து அண்ணல் -** *மற்றொரு மூர்த்தியான பார்வதியை இடப்பாகத்திற் கொண்ட சிவன்;* **பால்முகப் பரவை -** *பாலைத் தன்னிடங் கொண்டுள்ள திருப்பாற் கடலில்;* **பள்ளிப் பரம்பரன் பணி என்றாலும் -** *பாம்புப் படுக்கையில் பள்ளி கொண்டுள்ள சிறந்த*

*திருமால் ஆகியோரின் பொருட்டுச் செய்யும் வேலையை யாயினும்;* ***காலனுக்கேயும் -*** *(அவ்வளவு ஏன்) யமனுங் கூட;* ***சேறல் அரிது -*** *(அந்தப் பணியை நிறைவேற்றிட) உள்ளே புகுந்து செல்லுதல் என்பது முடியாததாகும்;* ***இது காவல் தன்மை -*** *(ஏனெனில்) இது (இலங்கையின்) கட்டுக் காவல் தன்மையாகும்;* ***விளிவு இல் நாளீர் -*** *அழிவில்லாத நீண்ட ஆயுட் காலத்தையுடையவர்களே!* ***மேல் உமக்கு உறுவது -*** *இனிமேல், உங்களுக்கு நேரக் கூடியவற்றை;* ***எண்ணிச் செல்லுமின் -*** *முன்னரே ஆராய்ந்து பார்த்துச் செல்லுங்கள்.*

*மும்மூர்த்திகளின் பொருட்டுச் செய்யும் பணியாக இருப்பினும் அதனைச் செய்து முடிப்பதற்காக இலங்கைக்குள் புகுவது இயமனுக்குக் கூட முடியாது. ஆகவே, இது பற்றி முன்னரே ஆராய்ந்து முடிவெடுத்துத் தக்கவாறு செய்யுங்கள் என்றான் சம்பாதி. 61*

***4709. 'எல்லீரும் சேறல் என்பது எளிது***
***அன்று, அவ்இலங்கை மூதூர்;***
***வல்லீரேல் ஒருவர் ஏகி, மறைந்து***
***அவண் ஒழுகி, வாய்மை***
***சொல்லீரே துயரை நீக்கித்***
***தோகையைத் தெருட்டி, மீள்திர்;***
***அல்லீரேன், என் சொல் தேறி,***
***உணர்த்துமின் அழகற்கு அம்மா!***

***அவ் இலங்கை மூதூர் -*** *பழமையான அந்த இலங்கைக்கு;* ***எல்லீரும் -*** *நீங்கள் எல்லோரும்;* ***சேறல் என்பது -*** *(ஒருமிக்கப்) போய்ச் சேர்வது என்பது;* ***எளிது அன்று -*** *எளிய செயலில்லை;* ***வல்லீரேல் -*** *(ஆனால்) திறமைமிக்கவராக இருந்தால்;* ***ஒருவர் ஏகி -*** *(உங்களுக்குள்) வல்லமையுடைய ஒருவர் மட்டும் (தனித்துச்) சென்று;* ***அவண் மறைந்து ஒழுகி -*** *(அங்குள்ளவர்கள் அறியமுடியாதபடி) அங்கே மறைந்து (சீதையைத் தேடும்) செயல்புரிந்து;* ***வாய்மை சொல்லீரே -*** *இராமன் கூறிய உண்மை மொழிகளைச் சொல்லியவர்களாய்;* ***தோகையைத் தெருட்டித் துயரை நீக்கி -*** *சீதைக்குத் தெளிவூட்டித் துன்பத்தைப் போக்கி;* ***மீள்திர் -*** *திரும்புங்கள்;* ***அல்லீரேல் -*** *இல்லாவிட்டால் (உங்களில் ஒருவர் போகவில்லையென்றால்);* ***என் சொல் தேறி -*** *நான் கூறிய வார்த்தையில் நம்பிக்கை வைத்து;* ***அழகற்கு உணர்த்துமின் -*** *அழகுள்ள அந்த இராமபிரானிடம் (சீதை இலங்கையில் இருப்பதைத்) தெரிவியுங்கள்.*

*அம்மா: அசை.*

*'அம்ம' என்பதன் நீட்டல. எல்லீரும்: முன்னிலைப் பன்மைப் பெயர். சொல்லீர் - முற்றெச்சம். 62*

*வானரரிடம் விடைபெற்றுச் சம்பாதி விசும்பில் செல்லுதல்*

***4710. காக்குநர் இன்மையால், அக்***
***கழுகுஇனம் முழுதும் கன்றி,***
***சேக்கை விட்டு, இரியல்போகித்***

***திரிதரும்; அதனைத் தீர்ப்பான்***
***போக்கு எனக்கு அடுத்த, நண்பீர்!***
***நல்லது புரிமின்' என்னா,***
***மேக்கு உற விசையின் சென்றான்,***
***சிறையினால் விசும்பு போர்ப்பான்.***

***காக்குநர் இன்மையால் -*** *(தம்மைப்) பாதுகாப்பவர் இல்லாமையால்;* ***அக்கழுகு இனம் முழுதும் -*** *அந்தக் கழுகுக் கூட்டங்கள் அனைத்தும்;* ***கன்றி -*** *வருத்தமுற்று;* ***சேக்கை விட்டு -*** *(தம்) இருப்பிடங்களை விட்டு;* ***இரியல் போகி -*** *நிலைகெட்டுத் தடுமாறிப் போய்;* ***திரிதரும் -*** *அலைந்து வாடும்;* ***அதனைத் தீர்ப்பான் -*** *அத் துயரத்தை நீக்கும் பொருட்டு;* ***போக்கு எனக்கு அடுத்த -*** *போவது நான் செய்யத்தக்க செயலாகும்;* ***நண்பீர் -*** *நண்பர்களே!* ***நல்லது புரிமின் -*** *(நான் கூறிய இரண்டனுள்) நன்மைதரக் கூடியதைச் செய்யுங்கள்;* ***என்னா -*** *என்று கூறி;* ***சிறையினால் விசும்பு போர்ப்பான் -*** *(தன்) சிறகுகளால் வானத்தை மறைப்பவனாகிய அச் சம்பாதி;* ***மேக்கு உற -*** *மேலே பொருந்த;* ***விசையில் சென்றான் -*** *விரைவாகப் பறந்து போனான்.*

*'இது வரையில் சடாயுவின் ஆளுகைக்கு உட்பட்டிருந்த கழுகுகள் அச் சடாயு இறந்ததால் பாதுகாப்பாரில்லாமல் எளியவற்றை வலியவை வாட்ட. நிலைகெட்டு வருந்தும்; ஆதலால், அவற்றைப் பாதுகாக்கும் பொருட்டு நான் விரைந்து செல்ல வேண்டியுள்ளது. அதனால்தான் செல்லுகின்றேன்; நீங்கள் நான் சொல்லியவற்றுள் ஏற்றதைச் செய்யுங்கள்' என்று கூறிச் சம்பாதி வான்வழியாகப் பறந்து சென்றான் என்பது.*

*சேக்கை - பறவைகளின் கூடு.* *63*

## *மயேந்திரப் படலம்*

*மயேந்திர மலையை அடைந்த வானரவீரர்களின் செயல்களை விளக்கிக் கூறும் படலாமாகும்.*

*கடலைக் கடப்போர் யாரென வானரர் தமக்குள் பேசிக் கொள்கிறார்கள். நீலன், அங்கதன், சாம்பன் முதலியோர் தம் இயலாமையைக் கூறுகின்றார்கள்; அவ்வமயம் 'அனுமனே தக்கவன்' எனச் சாம்பவன் உரைக்கிறான்; அந்த அனுமனது வீரத்தைச் சாம்பன் புகழ்ந்துரைக்கிறான்; அனுமன் இலங்கை செல்ல உடன்படுகிறான். பின்னர், மயேந்திர மலையின் உச்சிக்குச் செல்லுகிறான்; கடலைத் தாவிச் செல்ல அனுமன் பெருவடிவு கொள்கிறான்.*

*கடலைக் கடப்போர் யாரென வானரர் தமக்குள் பேசிக் கொள்ளுதல்*

*கலித்துறை*

***4711. 'பொய் உரைசெய்யான், புள்அரசு'***
***என்றே புகலுற்றார்,***
***'கை உறை நெல்லித் தன்மையின்***
***எல்லாம் கரை கண்டாம்;***
***உய் உரை பெற்றாம்; நல்லவை***
***எல்லாம் உற எண்ணிச்***
***செய்யுமின் ஒன்றோ, செய்***
***வகை நொய்தின் செய வல்லீர்!***

***புள் அரசு -** கழுகுகளுக்கு அரசனான சம்பாதி; **பொய் உரை செய்யான் என்றே -** பொய் சொல்லமாட்டான் என்று உறுதியாக நினைத்து; **புகலுற்றார் -** சொல்லத் தொடங்கியவர்களாகி; **செய்வகை நொய்தின் செயவல்லீர்! -** செய்ய வேண்டியவற்றை எளிதாகச் செய்து முடிக்க வல்லவர்களே! **கை உறை நெல்லத் தன்மையின் -** உள்ளங் கையில் பொருந்திய நெல்லிக் கனியின் தன்மை போல; **எல்லாம் கரை கண்டாம் -** (சீதை இருக்குமிடம் முதலிய செய்திகள்) முழுவதையும் நன்றாக அறிந்தோம் (ஆகவே); **உய் உரை பெற்றாம் -** (அச் சம்பாதியால்) நாம் வாழ்வதற்குரிய உறுதிமொழிகளையும் அடைந்தோம்; **(ஆகவே) நல்லவை எல்லாம் -** நன்மை தரக்கூடிய எல்லாவற்றையும்; **உற எண்ணி -** தக்கவாறு ஆராய்ந்து; **ஒன்று செய்யுமின் -** (இரண்டில் ஏதேனும்) ஒன்றைச் செய்யுங்கள்.*

*சம்பாதி கூறியவை உண்மையேயாதலால் அவனது சொற்படி ஏதேனும் ஒன்றைச் செய்தலே நன்மையாகும்; நாம் சென்று தேடாமலே சம்பாதி சொன்னதை நம்பி மீண்டும் இராமசுக்கிரீவரையடைந்து சீதை இலங்கையிலிருந்து முதலியவற்றை எடுத்துச் சொன்னாலும் நமது கடமை முடிவுபெறும். இனி, நாம் கடலைக் கடந்து இலங்கை புகுந்து சீதையைக் கண்ணிலே கண்டு வந்து செய்தி தெரிவிக்கலாமென்றால் அது முன்கூறிய அதனைக் காட்டிலும் சிறந்ததேயாம்; ஆனால், அவ்வாறு செய்யக் கடலைக் கடக்கவேண்டுமே! அப்படிக் கடலைக் கடந்து சென்று மீளும் வல்லமையுள்ளவர் யாவர் என்று வானரவீரர் ஆராந்தனர் என்பது. கையுறை*

*நெல்லிக்கனி: மேல் தோற்றத்தைக் கொண்டு உள் விவரம், முழுவதையும் தெளிவாக அறிவதில் உவமம். நெல்லியின் உருவம், கொட்டை, வரைகள், சதைப் பற்று முதலியன தெளிவாய்த் தோற்றுவிப்பன. சீதையைப் பற்றிய செய்தி எதுவும் தமக்குத் தெரியாமையாலும், தவணை கடந்தமையாலும், இனி மீண்டு சென்று அரசனது கோபத்திற்கு இலக்காவதைவிட உயிரை விடுதலே நல்லது' என்று தாம் இறப்பதற்குத் துணிந்த நிலையில், எதிரேவந்து சம்பாதி தெளிவுண்டாக்கியதால் 'உய்யுரை பெற்றாம்' என்றார்.*

*புள்ளரசு பொதுவாகக் கருடாழ்வானைக் குறிப்பது: இங்கே கழுகரசன் என்னும் பொருளது. 1*

***4712. 'சூரியன் வெற்றிக் காதலனோடும்***
***சுடர் விற் கை***
***ஆரியனைச் சென்றே தொழுது,***
***உற்றது அறைகிற்பின்,***
***சீர் நிலை முற்றும்; தேறுதல்***
***கொற்றச் செயல் அம்மா;***
***வாரி கடப்போர் யாவர்?' என***
***தம் வலி சொல்வார்; ****

***சூரியன் -*** *கதிரவனின்;* ***வெற்றிக் காதலனோடும் -*** *வெற்றியோடு விளங்கும் மைந்தனான சுக்கிரீவனோடும்;* ***சுடர் விற்கை ஆரியனை -*** *ஒளிபொருந்திய வில்லைக் கையிற் கொண்டவனான சிறந்த இராமனையும்;* ***சென்று தொழுது -*** *(பணியை முடிக்காமல்) போய் வணங்கி;* ***உற்றது அறைகிற்பின் -*** *நிகழ்ந்த செய்திகளைச் செல்வோமானால்;* ***சீர்நிலை முற்றும் -*** *சிறந்த (நமது) கடமை ஒருவாறு முடிவுபெறும்; (ஆயினும்)* ***தேறுதல் -*** *(நாமே கடல் கடந்து சீதையுள்ள இடத்தைக் கண்டு) தெளிவது;* ***கொற்றச் செயல் -*** *வீரச் செயலாகும்; (ஆதலால்)* ***வாரி கடப்போர் யாவர் -*** *கடலைக் கடக்கின்ற வல்லமையுள்ளவர் நம்மிலே யார் உள்ளார்;* ***என -*** *என்று சொல்லி;* ***தம் வலி சொல்வார் -*** *தத்தம் வலிமையை எடுத்துக் கூறலானார்கள்.*

*சீதையை நேரிலே கண்டு மீண்டு செய்தி தெரிவித்தலே சிறந்த தென்பதைக் குறிக்கும்.*

*வாரி: கடல்; அம்மா : வியப்பிடைச் சொல். ஆரியன்: பெருமைக்குரியவன். இராமபிரானை ஆரியன் என்று குறிப்பது இந்நூலில் பெருவழக்காகும். 2*

*நீலன், அங்கதன், சாம்பன் முதலியோர் தம் இயலாமை கூறல்*

***4713. 'மாள வலித்தேம்; என்றும்***
***இம்மாளா வசையோடும்***
***மீளவும் உற்றேம்; அன்னவை***
***தீரும் வெளி பெற்றேம்;***
***காள நிறத்தோடு ஒப்பவர்***

*மாய, கடல் தாவுற்று,*
*ஆளும் நலத்தீர்! ஆளுமின், எம்*
*ஆர் உயிர் அம்மா!'*

***மாள வலித்தேம் -*** *(தவணை கடந்து விட்டதால்) இறப்பதற்குத் துணிவு கொண்டோம்;* ***என்றும் இம் மாளா வசையொடும் -*** *எப்பொழுதும் அழியாத இந்தப் பெரும்பழியுடனே;* ***மீளவும் உற்றேம் -*** *திரும்பிச் செல்லவும் துணிந்தோம்;* ***அன்னவை தீரும் -*** *(பின்பு) அவ் விரண்டு பிழைச் செயல்களும் நீங்கும்படியான;* ***வெளி பெற்றேம் -*** *(சாதலும் மீண்டும் செல்லுதலுமாகிய அவ் விரண்டும் அற்ற ஒரு நல்ல வழியைச் சம்பாதியின் சொல்லால்) அடைந்தோம்;* ***காள நிறத்தோடு ஒப்பவர் மாய -*** *நஞ்சு போன்ற கரிய நிறத்தையுடைய அரக்கர்களை அழியும்படி;* ***கடல் தாவுற்று -*** *கடலைத் தாவிக் கடந்து;* ***ஆளும் நலத்தீர் -*** *வீரங்காட்ட வல்ல சிறப்புடையவர்களே!* ***எம் ஆருயிர் ஆளுமின் -*** *(அவ்வாறு செய்து) எங்களது அரிய உயிர்களைப் பாதுகாத்து அருளுங்கள் (என்று கூறினார்கள்).*

*மாண்டுறுவது நலமென வலித்தனம்' என்று முதலில் தமது உயிரை விட வானரர் கருதியதால் 'மாள வலித்தேம்' என்றும், அங்கதன் தான் இறக்க மற்றவர் திரும்பிச் செல்லவேண்டுமெனவும், தாம் இறக்க இளவரசன் அங்கதன் திரும்பிச் செல்லுதலே தகுதியெனவும் இவ்வாறு வானர வீரர்களுக்குள் உரையாடல் நிகழ்ந்ததால் 'என்றும் இம் மாளா வசையோடு மீளவுமுற்றேம்' என்றும், அப்போது சம்பாதி வந்து சீதை இருக்கு மிடத்தைத் தெரிவித்துச் செய்ய வேண்டுவனவற்றைத் தெளிவித்தானாதலால் 'அன்னவை தீரும் வெளி பெற்றேம்' என்றும் கூறினர். கடல் கடந்து சென்று சீதையைக் கண்டு மீளா விடின், கடுந்தண்டனையுடைய சுக்கிரீவனது கோபத் தீயிலிருந்து தப்புவது அரிதாதலால், இந்த அரிய செயலைச் செய்து முடித்து எங்களது உயிரைக் காக்க வேண்டுமென்று வானர வீரர் சிலர் வேண்டினர் என்பது, கருத்து; இதனால் தமக்குக் கடல் கடந்து மீளுந் திறமில்லையென்று அவர்கள் வெளியிட்டவாறு.*

*அம்மா : இரக்கத்தையுணர்த்திய இடைச் சொல். 3*

*4714. நீலன் முதல் பேர், போர்*
*கெழு கொற்ற நெடு வீரர்,*
*சால உரைத்தார் வாரி*
*கடக்கும் தகவு இன்மை;*
*'வேலை கடப்பென்; மீள மிடுக்கு*
*இன்று' என விட்டான்,*
*வாலி அளிக்கும் வீர வயப்*
*போர் வசை இல்லான், **

***போர் கொற்றம் கெழு -*** *போரில் வெற்றி பெறுவதற்குரிய;* ***நீலன் முதல் பேர் நெடுவீரர் -*** *நீலன் முதலாகிய சிறந்த வானர வீரர்கள்;* ***வாரி கடக்கும் தகவு இன்மை -*** *கடலைக் கடந்து செல்லும் வலிமை தமக்கு இல்லாததை;* ***சால உரைத்தார் -*** *வெளிப்படையாக எடுத்துக் கூறிவிட்டார்கள்;* ***வாலி அளிக்கும் -*** *வாலி பெற்ற;* ***வீரப் வயப்போர் -*** *வீரத்தையும் வெற்றியையும் காட்டவல்ல போரில்;* ***வசை இல்லான் -*** *பழிப்பில்லாதவனான அங்கதன் (நான்);* ***வேலை கடப்பென் -*** *கடலைக் கடந்து*

*(அக்கரையிலுள்ள இலங்கை) செல்வேன்;* ***மீள மிடுக்கு இன்று -*** *(ஆனால், அங்கிருந்து) மீண்டு வரும் வல்லமை எனக்கில்லை;* ***என விட்டான் -*** *என்று (தன் வலிமையைக்) கூறிமுடித்தான்.*

*சில வானர வீரர்கள் தம்மாலாகாதென்று கூறியதை இச் செய்யுளால் வெளியிடுகின்றார். நீலன் முதலோர் 'எங்களுக்குக் கடல் கடந்து செல்வது அறவே முடியாது' என்று சொல்ல, அங்கதன், 'கடல் கடந்து சென்று சீதையின் செய்தியை உணரவல்ல வல்லமை எனக்கு இருந்தும், சென்ற அளவில் உண்டாகும் இளைப்பால் வலிமை குன்றி மீண்டு வரும் வல்லமையில்லாமையால் நான் சென்றும் பயனில்லை' என்று கூறினான் என்பது. நீலன்: பின்னர் வானரப் படைகளுக்கு ஒரு தலைவனாக இருந்து இலங்கையிற் போர் புரிந்தவன். 4*

***4715. 'வேதம் அனைத்தும் தேர்தர,***
***எட்டா ஒரு மெய்யன்***
***பூதலம் முற்றும் ஓர் - அடி***
***வைத்துப் பொலி போழ்து, யான்***
***மாதிரம் எட்டும் சூழ் பறை***
***வைத்தே வர, மேரு***
***மோத இளத்தே தாள்***
***உலைவுற்றேன் - விறல் மொய்ம்பீர்! ****

***விறல் மொய்ம்பீர் -*** வலிய தோள்களையுடையவர்களே! ***வேதம் அனைத்தும் -*** வேதங்கள் யாவும்; ***தேர்தர எட்டா -*** தேடிப்பார்க்கவும் அகப்படாத; ***ஒரு மெய்யன் -*** ஒப்பற்ற வடிவுடைய திருமால்; ***பூதலம் முற்றும் ஓர் அடி வைத்து -*** *(திரிவிக்கிரமானகப்) பூமி முழுவதும் ஓர் அடியைவைத்து அதனுள் அடங்கச் செய்து;* ***பொலி போழ்து -*** பேருருவம் எடுத்து விளங்கிய காலத்தில்; ***மாதிரம் எட்டும் -*** *(நான்)* எட்டுத் திக்குகளிலும்; ***பறை வைத்தே -*** பறையடித்து அப் பெருமாள் உலகமளக்கும் செய்தியைத் தெரிவித்தபடி; ***சூழ்வர -*** சுற்றிக் கொண்டு அவன்முன்னே செல்லும் போது; ***மேரு மோத -*** மேருமலை இடையே

தாக்கியதால்; ***இளைத்து -*** *(நான்)* வலிமை குன்றி; ***தாள் உலைவுற்றேன் -*** என் கால்கள் வலியெடுத்து வருந்தினேன்;

*திரிவிக்கிரம அவதார காலத்தில் உலகமுழுவதும் நிறைந்த திருமாலின் திருவடியை வணங்கிக் கொண்டே பலமுறை பூமியை வலம் வருகையில் மேருமலை எனது காலிற்பட்டுக் கால் சிறிது ஊனமானதால் இப்போது கடல்கடக்கும் வலிமையில்லாதவன் ஆயினேன் என்று சாம்பவான் கூறினான் என்பது.*

*மொய்ம்பு: தோள்.*

*எட்டு மாதிரங்கள்: கிழக்கு முதலான பெருந்திசைகள் நான்கு; தென்கிழக்கு முதலிய கோணத் திசைகள் நான்கு.*

*ஐந்து, ஆறு ஆகிய ஒரு செய்யுட்களும் ஒரு தொடராய் இயைந்து பொருள் முடிவு கொண்டதால் ஆறாவது செய்யுளின் ஈற்றிலுள்ள 'நாலு முகத்தான் உதவுற்றான்' என்ற தொடர் இங்கு எழுவாயாகக் கொள்ளப்படுதற்குரியது.* 5

***4716. 'ஆதலின், இப் பேர் ஆர்கலி***
***குப்புற்று, அகழ் இஞ்சி***
***மீது கடந்து, அத்***
***தீயவர் உட்கும் வினையோடும்,***
***சீதைதனைத் தேர்ந்து, இங்கு உடன்***
***மீளும் திறன் இன்று' என்று***
***ஓதி இறுத்தான் -***
***நாலுமுகத்தான் உதவுற்றான்.***

***ஆதலின் -** ஆதலால்; **இப்பேர் ஆர்கலி -** இந்தப் பெரிய கடலை; **குப்புற்று -** தாவித் தாண்டி; **அகழ் இஞ்சி மீது -** அகழியைச் சார்ந்த (இலங்கையில்) மதில்கள் மேல்; **கடந்து -** கடந்து சென்று; **தீயவர் உட்கும் வினையோடும் -** கொடியவர்களான அந்த அரக்கர்கள் அஞ்சிநடுங்கும் வீரச் செயலுடனே; **சீதைதனைத் தேர்ந்து -** சீதையைத் தேடிக் கண்டுபிடித்து; **இங்கு உடன் மீளும் -** இங்கே உடனே திரும்பி வரக்கூடிய; **திறன் இன்று என்று -** வலிமை எனக்கு இல்லையென்று; **ஓதி இறுத்தான் -** சொல்லிமுடித்தான்; **நாலு முகத்தான் உதவுற்றான் -** நான்கு முகங்களையுடைய பிரமதேவன் அருளிய சாம்பவான்.*

*ஆர்கலி: நிறைந்த ஓசையையுடைய கடல் - காரணப் பெயர்: வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.*

*குப்புதல்: குதித்தல்; தாண்டிக் கடத்தல். அகழ்: அகழப்படுவது - முதனிலைத் தொழிற் பெயர். இஞ்சி : மதில்.* 6

*அனுமனே தக்கவன் எனச் சாம்பவன் உரைத்தல்*

***4717. 'யாம் இனி இப்போது ஆர் இடர்***
***துய்த்து, இங்கு, "இனி யாரைப்***
***போம் என வைப்பேன்" என்பது***
***புன்மை; புகழ் அன்றே;***
***கோ முதல்வர்க்கு ஏறு ஆகிய***
***கொற்றக் குமரா! நம்***
***நாமம் நிறுத்திப் பேர் இசை***
***வைக்கும் நவை இல்லோன். ****

***கோ முதல்வர்க்கு ஏறு ஆகிய -** வானரத் தலைவர்களில் சிங்கம் போன்ற; **கொற்றக் குமரா -** வெற்றிமிக்க அங்கதனே! **யாம்இனி இப்போது-** இனி (நாம்) இப்பொழுது; **ஆர் இடர் துய்த்து -** பெருந் துன்பத்தில் வருத்திக் கொண்டு; **இங்கு -** இங்கிருந்து - இனி யாரை - வேறு யாரைத்தான்; **போம் என வைப்பேம் -** கடல் கடந்து போய் வருவீர்*

*என்று வேண்டிக் கொள்வோம்?* ***என்பது புன்மை -*** *என்று இவ்வாறு நினைப்பது இழிவாகும்;* ***புகழ் அன்றே -*** *புகழ்வதற்கு உரியதன்று; (ஆதலால்)* ***நம் நாம் நிறுத்தி -*** *நம் பெயரை நிலை நாட்டி;* ***பேர் இசை வைக்கும் -*** *பெரும்புகழை (நமக்கு) உண்டாக்கவல்ல;* ***நவை இல்லோன் -*** *குற்றமற்றவன்; (அனுமனேயாவான்).*

*பெருங்கூட்டமாகத் திரண்டுள்ள நமக்குள் கடல் கடக்கும் வல்லமையுள்ளவர் யாவருமில்லை; ஆதலால், வேறு யாரைக் கடலைக் கடக்குமாறு வேண்டிக் கொள்வது? ஒருவரைத் தேடிப் பெற்றோமென்றாலும், அது நமக்கும் பெரும் பழியாகுமல்லவோ? முதலில் இராம சுக்கிரீவர்களுக்கு நட்பையுண்டாக்கிய இந்த அனுமன் எடுத்த செயலைச் சோர்வில்லாமல் முடிக்கும் திறமுடையவனாதலால் அவனே கடல் கடந்து திரும்பிவந்து நமக்குப் புகழை நிலைநாட்டுவதற்கு உரியவனென்று கூறி, முனிவன் சாபத்தால் தன் வலிமை தனக்குத் தெரியாது சேர்ந்துள்ள அனுமனுக்கு உற்சாகமுண்டாகுமாறு அவனது வல்லமையைத் தெரிவித்தான் சாம்பவான் என்பது.*

*இச்செய்யுளும் (7) அடுத்த செய்யுளும் (8) குளமாக இயைந்து வினைமுடிவு கொள்ளும். அயன் மைந்தன் என்ற எழுவாய் அடுத்த செய்யுளிலிருந்து கொள்ளப்பெற்றது. 7*

***4718. 'ஆரியன் முன்னர்ப் போதுற***
***உற்ற அதனாலும்,***
***காரியம் எண்ணிச் சோர்வு***
***அற முற்றும் கடனாலும்,***
***மாருதி ஒப்பர் வேறு இலை'***
***என்னா, அயன் மைந்தன்***
***சீரியன் மல் தோள் ஆண்மை***
***விரிப்பான், இவை செப்பும்:*** *

***ஆரியன் முன்னர் -*** *(முதலில்) இராமபிரானின் எதிரே சென்று;* ***போதுற உற்ற அதனானும்*** *- (இராமனுக்கும் சுக்கிரீவனுக்கும்) நட்புச் செய்வித்த தன்மையாலும்;* ***காரியம் எண்ணி*** *- (தான்) மேற்கொண்ட செயலை ஆராய்ந்து;* ***சோர்வு அற முற்றும்*** *- சிறிதும் சோர்வில்லாமல் முடிக்கும்;* ***கடனானும்*** *- கடமையைக் கைக் கொண்டமையாலும்;* ***மாருதி ஒப்பார் வேறு இலை என்னா*** *- மாருதியையொப்பவர் வேறெ ஒருவருமில்லை என்று சொல்லி;* ***சீரியன் மல்தோள்*** *- சிறந்தவனான அந்த அனுமனது மற்போருக்கு உரிய தோள்களின்;* ***ஆண்மை தெரிப்பான்*** *- வலிமையைத் தெரிவிக்கும் பொருட்டு;* ***இவை செப்பும்*** *- இவ்வாறான மொழிகளை அனுமனைப் பார்த்து கூறலானான்;* ***அயன் மைந்தன்*** *- பிரமன் புதல்வனான சாம்பவான்.*

*தெரித்தல்: தெரியச் சொல்லுதல் இராமனுக்கும் சுக்கிரீவனுக்கும் நட்பைச் செய்தவனும், தான் மேற்கொண்ட செயலை ஆராய்ந்து சோர்வில்லாமல் முடிக்கவல்லவனுமாகிய அனுமனையொப்பவர் வேறு யாருமில்லையென்றார். 8*

*சாம்பவான் அனுமனது வீரத்தைப் புகழ்தல்*

*4719. 'மேலை விரிஞ்சன் வீயினும்*
*வீயா மிகை நாளிர்;*
*நூலை நயந்து, நுண்ணிது*
*உணர்ந்தீர் நுவல் தக்கீர்;*
*காலனும் அஞ்சும் காய் சின*
*மொய்ம்பீர்; கடன் நின்றீர்;*
*ஆலம் நுகர்ந்தான் ஆம் என*
*வெம் போர் அடர்கிற்பீர்;*

***மேலை விரிஞ்சன்*** - *(சாம்பவான் அனுமனை நோக்கி) யாவரினும் மேம்பட்டவனான பிரமதேவன்;* ***வீயினும்*** - *இறந்து போனாலும்;* ***வீயா*** - *அழியாத;* ***மிகை நாளீர்*** - *மிகுதியான நீண்ட வாழ்நாள்களையுடையவரே!* ***நூலை நயந்து*** - *எல்லாக்கலைகளையும் விரும்பி;* ***நுண்ணிது உணர்ந்தீர்*** - *நுட்பமாக ஆராய்ந்து அறிந்திருக்கிறீர்கள்;* ***நுவல் தக்கீர்*** - *(செய்திகளை) எடுத்துக் கூறத்தக்க சொல்வன்மையுடையவரே;* ***காலனும் அஞ்சும்*** - *யமனும் கண்டு அஞ்சத் தக்க;* ***காய்சின மொய்ம்பீர்*** - *கடுங்கோபத்துடன் கூடிய வலிமையுடையவரே!* ***கடன் நின்றீர்*** - *உமது கடமையில் தவறாது உறுதியுடன் நின்றவராவீர்;* ***ஆலம் நுகர்ந்தான் ஆம் என*** - *ஆலகாலம் என்னும் நஞ்சையுண்ட சிவபிரான்போல;* ***வெம்போர் அடர்கிற்பீர்*** - *கடும்போர் செய்து (யாரையும்) அழிக்கவல்லீர்.*

*முனிவர் சாபத்தால் தனது வல்லமையையுணராது தயங்கி நிற்கும் அனுமனைச் சாம்பவான் கடல் கடக்குமாறு கூறுதற்பொருட்டுத் துதிக்கின்றான் என்பது. முதலடி அனுமனின் சிரஞ்சீவித் தன்மையையும் இரண்டாமடி பெருங்கல்வியால் அவன் சொல்வன்மை பெற்றிருப்பதையும், பின்னிரண்டடிகள் மேற்கொண்ட*

*செயலைப் பின்வாங்காது நின்று போர் செய்தாவது முடிக்கும் ஆற்றல் பெற்றிருப்பதையும் விளக்கும்; இதனால், எவ்வகையாலும் சாவில்லாமல் அரக்கனாகிய இராவணனூர்க்குச் சென்று அவனோடு நயமாகப் பேசி இடையூறு செய்யும் அரக்கர்களையழித்துச் சீதையைக் கண்டு மீளுகின்ற செயலை முடிப்பதற்கு உரியவன் நீயே என்று குறிப்பாக உணர்த்தினான் என்பது. வருணன், யமன், சிவபிரான், பிரமன், மற்ற தேவர்கள், மறையவர், முனிவர் முதலோர் அனுமனுக்கு அழியாத வரத்தை அளித்துள்ளனர். 'பிறர்வாய் நுண்பொருள் காண்பது அறிவு' என்னும் குறள் தொடரை நுண்ணிது உணர்ந்தீர் என்ற தொடர் நினைவூட்டுகிறது. மேலை:ஐ-சாரியை.*
*9*

*4720. 'வெப்புறு செந் தீ,*
*நீர், வளியாலும் விளியாதீர்;*
*செப்புறு தெய்வப் பல்*
*படையாலும் சிதையாதீர்;*
*ஒப்பு உறின், ஒப்பார்*
*நும் இல்லீர்; ஒருகாலே*
*குப்புறின், அண்டத்து அப்*
*புறமேயும் குதிகொள்வீர்;*

***வெப்பு உறு*** - *வெப்பம் பொருந்திய;* ***செந்தீ நீர் வளியாலும்*** - *சிவந்த நெருப்பாலும், நீரினாலும், காற்றினாலும்;* ***விளியாதீர்*** - *இறவாது நிற்பீர்;* ***செப்பு உறு தெய்வம்*** - *சிறப்பாகப் பேசப்படுகின்ற தெய்வத் தன்மையுள்ள;* ***பல்படையாலும் சிதையாதீர்*** - *பலவகைப்பட்ட படைக்கருவிகளாலும் பிளவுற்று அழியாதிருப்பீர்;* ***ஒப்பு உறின்*** - *(உமக்கு) உவமையெடுத்துச் சொல்வதானால்;* ***ஒப்பார் நும் அலது இல்லீர்*** - *உம்மையே அல்லாமல் உவமையாகின்றவர் வேறு ஒருவரையும் பெறாமலிருப்பீர் (உமக்கு நீரே ஒப்பாவீர்);* ***ஒரு காலே குப்புறின்*** - *ஒரு தடவை பாய்ந்து குதிக்கும்போதே;* ***அண்டத்து அப்புறமேயும்*** - *இந்த அண்டத்து அப்புறத்திலும்;* ***குதிகொள்வீர்*** - *பாய்ந்து குதிக்கும் திறமுடையீர்.*

*அனுமன் இளமையில் சூரியனைக் கனிந்த பழமென்று கருதித் தாவிய போது இந்திரன் வச்சிராயுதத்தால் அடித்தான்; அதனால் தன் மகன் கவுள் (கன்னம்) முறிந்து மூர்ச்சையுறற்தால் வாயுதேவன் சினங்கொண்டு, உலகில் காற்றின் இயக்கத்தையே நிறுத்திவிட்டான். அதனால் பிரமன், சிவன் முதலிய தேவர்களெல்லோரும் தோன்றி அந்த வாயுதேவனை மனங்குளிர்விப்பதற்காகத் தம் தம் படைக் கருவிகளால் அனுமன் அழியாதிருக்க வரமளித்தனர் என்பது வரலாறு. 'எவரினும் அதிகம் உயர்ந்தான்' (5509) எனப் பின்னரும் அனுமன் குறிக்கப்படுகிறான். காவிய நாயகனாகிய இராமனை 'உவமை நீங்கிய தோன்றல்' (2661) எனவும், 'ஒப்பு இறையும் பெறலரிய ஒருவன் (2576) எனவும் முன்னே வந்துள்ள தொடர்கள் குறிக்கின்றன. காவிய நாயகனை விளக்கியவாறே அனுமனும் வருணிக்கப்படுவது எண்ணிப் போற்றுதற்கு உரியது. தீ நீர் வளி - உம்மைத் தொகை.* *10*

***4721. 'நல்லவும் ஒன்றோ, தீயவும்***
***நாடி நவை தீரச்***
***சொல்லவும் வல்லீர்; காரியம்***
***நீரே துணிவுற்றீர்;***
***வெல்லவும் வல்லீர்; மீளவும்***
***வல்லீர்; மிடல் உண்டே;***
***கொல்லவும் வல்லீர்; தோள்***
***வலி என்றும் குறையாதீர்;***

***நல்லவும் ஒன்றோ*** - *நல்லவை மட்டுமோ?* ***தீயவும் நாடி*** - *தீயவற்றையும் ஆராய்ந்து பார்த்து;* ***நவை தீரச் சொல்லவும் வல்லீர்*** - *குற்றம் நீங்குமாறு உண்மையை யெடுத்துக் கூறுவதிலும் வல்லமை உடையீர்;* ***காரியம் நீரே துணிவுற்றீர்*** - *செய்யத்தக்க செயல் எது என்பதை நீரே ஆராய்ந்து துணிந்து செய்யும் திறமுடையவராவீர்;* ***வெல்லவும் வல்லீர்*** - *(அரக்கரை) வெல்வதற்கும் வல்லமையுடையீர்;* ***மீளவும் வல்லீர்*** - *(இலங்கையிலிருந்து) இங்கே திரும்பி வரவும் வல்லவராவீர்;* ***மிடல் உண்டே*** - *(அங்கே) பகைவர்கள் வலிமையோடு எதிர்த்துப் போர் புரிவார்களே;* ***கொல்லவும் வல்லீர்*** - *அப் பகைவர்களைக் கொல்லும் திறமுடையவருமாவீர்!* ***தோள் வலி என்றும் குறையாதீர்*** - *அதனால் உம் தோள்வலியில் எப்போதும் குறைவடையமாட்டீர்.*

*நல்லனமட்டுமன்றித் தீயவற்றையும் நாடி, குற்றம் தீரும்வரையில் தீர்வு கூறும் திறம் அனுமனிடம் உண்டு என்பது சாம்பவான் கருத்து. 'மறிந்து உருளப் போர் வாலியை வெல்லும் மதிவல்லீர்' (4723) என இத்திறத்தினைப் பின்வரும் பாடல் உணர்த்துவதை*

*இங்கு இணைத்து நோக்குக. எந்தச் செயலைப் பற்றி ஆராயவேண்டுமானாலும் அதிலுள்ள நன்மையையும் தீமையையும் ஆராய்ந்து குற்றமில்லாது அச் செயல் முடிவுறத் தக்க வழிகளைச் சொல்ல வல்லவன் அனுமன் என்பதைச் சாம்பவான் கூறினான் என்பது. மிடல்: வலிமை.*

*அனுமனிடம் ஒரு சிறந்த அமைச்சனுக்கு உரியனவும், சிறந்த போர் வீரனுக்கு உரியனவுமான அரிய திறன்கள் அமைந்துள்ளமை காட்டப் பெற்றுள்ளது.*
*11*

***4722. 'மேரு கிரிக்கும் மீது உற***
***நிற்கும் பெரு மெய்யீர்;***
***மாரி துளிக்கும் தாரை***
***இடுக்கும், வர வல்லீர்;***
***பாரை எடுக்கும்நோன்மை வலத்தீர்;***
***பழி அற்றீர்;***
***சூரியனைச் சென்று, ஒண்***
***கையகத்தும் தொட வல்லீர்;***

**மேரு கிரிக்கும் மீது உற -** *மேரு மலைக்கும் மேலாக;* **நிற்கும் -** *ஓங்கி நிற்கும்;* **பெரு மெய்யீர் -** *பெரிய உடம்பையுடையீர்;* **மாரி துளிக்கும் தாரை இடுக்கும் -** *மேகங்கள் சொரியும் மழைத்துளிகளின் நடுவிடும்;* **வர வல்லீர் -** *(சிறு வடிவெடுத்து) நுழைந்து வரும் வல்லமையுடையீர்!* **பாரை எடுக்கும் நோன்மை வலத்தீர் -** *இப் பூமியையே பேர்த்தெடுக்கும் மிக்க வலிமையுடையவராவீர்!* **பழி அற்றீர் -** *(பெரு வரங்களைத் தீய வழியில் செலுத்தாததால் சிறிதும்) பழிப்பில்லாத வராவீர்;* **சென்று ஒண் கையகத்தும் -** *மேலே சென்று அழகிய கைகளாலும்;* **சூரியனைத் தொடவல்லீர் -** *சூரிய தேவனைத் தொடவும் வல்லவராவீர்.*

*அனுமன் தன் உடம்பு வளரவேண்டுமென்று நினைத்தால் மேருமலையைக் காட்டிலும் அவனுடம்பு பெரியதாகும்; அந்த உடம்பைச் சிறிதாக ஒடுக்க விரும்பினால் அணுவைக் காட்டிலும் அவனுடம்பு சிறியதாகும் என்பது. இவ்விரண்டும் யோக சித்திகளும் முறையே மகிமா, அணிமா என்னும் சித்திகளாகும். தாரை: நீரொழுக்கு. நோன்மை வலம்: ஒரு பொருட் பன்மொழி. மேரு கிரிக்கும்: உம்மை உயர்வு சிறப்பு. ஒப்பு: 'பிறியா அறத்தின் அனுமன் வளர்ச்சி பெரு மேருவினிற் பெரியனாம்; சிறிதா யொடுக்குமெனின் மேனியற்ப அணுவானதிற் சிறியனாம்' - (உத்தர -அனுமப்.7)* *12*

***4723. 'அறிந்து, திறத்து ஆறு எண்ணி,***
***அறத்து ஆறு அழியாமை***
***மறிந்து உருள, போர் வாலியை***
***வெல்லும் மதி வல்லீர்;***
***பொறிந்து இமையோர் கோன் வச்சிர***
***பாணம் புக மூழ்க***
***எறிந்துழி, இற்றுஓர் புன்***
***மயிரேனும் இழவாதீர்;***

***திறத்து ஆறு*** *- உரிய வழிகளை;* ***எண்ணி அறிந்து*** *- ஆராய்ந்து அறிந்து;* ***அறத்து ஆறு அழியாமை*** *- (அரசர்க்குரிய) அறநெறி தவறாமல்;* ***போர் வாலியை*** *- போர்த் திறமை மிக்க வாலியென்பவனை;* ***மறிந்து உருள வெல்லும்*** *- குப்புற விழுந்து உருளும்படி வெல்லச் செய்த;* ***மதி வல்லீர்*** *- அறிவின் வல்லமையுடையீர்;* ***இமையோர் கோன்*** *- தேவர்களுக்குத் தலைவனான இந்திரன்;* ***பொறிந்து*** *- (கண்களில்) தீப்பொறியைக் கக்கிக் கொண்டு;* ***வச்சிர பாணம் புக மூழ்க எறிந்துழி*** *- வச்சிராயுதத்தை உடம்பில் மூழ்குமாறு எறிந்தபோது;* ***ஓர் புன்மயிரேனும்*** *- ஒரு சிறி மயிர்கூட;* ***இற்று இழவாதீர்*** *- அறுபட்டு இழவாதவரும் ஆவீர்!*

*அறத்தின் வழிக்குச் சிதைவு வராத வகையில் போர்வல்ல வாலியை அழிவிக்கும் அறிவில் வல்லவன் என்று மாருதியைக் குறிப்பிடும் பாங்கு எண்ணுதற்கு உரியது. 'தருமத்தின் தனிமை தீர்ப்பான்' (3781) எனவும். அறத்துக்கு ஆங்கொரு*

*துணை என நின்ற அனுமன் (5803) எனவும் அனுமன் குறிக்கப்பட்ட தொடர்களோடு இச்செய்தியை இணைத்து நோக்க வேண்டும் வாலி வதையில் அறக்கழிவு இல்லை என்பதற்கு அனுமன் தக்க அறிவுரை கூறியிருக்க வேண்டும் என்பதற்கும் இத்தொடர் சான்றாகிறது. அனுமன் இராமனுடனே சுக்கிரீவனை நட்புச் செய்வித்தவுடனே, முதலில் வாலியை வதைசெய்து, பின்பு சீதையைத் தேடுவது மிகவும், நன்மை தருவது என்று கூறினானாதலால் அவனை 'வாலியை வெல்லும் மதிவல்லீர்' என்றும் விளக்கலாம். அனுமன் பிறந்தவுடன் சூரியனை ஒரு கனியெனக் கருதி அதனைப் பற்றியுண்ண வானில் எழுந்தபோது இந்திரன் அவன் மேல் தன் வச்சிரப் படையை ஏவியதை 'இமையோர் கோன் வச்சிரபாணம் புக மூழ்க எறிந்துழி'என்றார். 13*

***4724. 'போர்முன் எதிர்ந்தால் மூ உலகேனும்***
***பொருள் ஆகா;***
***ஓர்வு இல் வலம் கொண்டு, ஒல்கல்***
***இல் வீரத்து உயர் தோளீர்;***
***பார் உலகு எங்கும் பேர்***
***இருள் சீக்கும் பகலோன்முன்,***
***தேர் முன் நடந்தே,***
***ஆரிய நூலும் தெரிவுற்றீர்;***

***மூ உலகேனும்*** *- மூன்று உலகங்களில் உள்ளோர்களும்;* ***போர்முன் எதிர்ந்தால்*** *- போர்க்களத்தில் உம் முன்னே எதிர்த்து வந்தாலும்;* ***பொருள் ஆகா*** *- ஒரு பொருட்டாக;* ***ஓர்வு இல்*** *- பிறரால் உணர்வதற்கரிய;* ***வலம் கொண்டு*** *- பெருவலிமைகொண்டு;* ***ஒல்கல் இல்வீரத்து*** *- தளராத வீரத்தன்மையால்;* ***உயர்தோளீர்*** *- சிறந்து விளங்கும் தோள்களையுடையீர்!* ***பார் உலகு எங்கும்*** *- இந்தப் பூமியோடு மற்ற உலகங்கள் எங்கிலுமுள்ள;* ***பேர் இருள்*** *- மிக்க இருளை;* ***சீக்கும் பகலோன்முன்*** *- ஒழிக்கின்ற சூரியன் எதிரே;* ***தேர்முன் நடந்தே*** *- அவனது தேர்க்கு முன்னே நடந்து கொண்டே;* ***ஆரிய நூலும்*** *- வடமொழி நூல்கள் அனைத்தையும்;* ***தெரிவுற்றீர்*** *- கற்றறிந்து கொண்டீர்.*

*அனுமன் சூரியதேவனிடம் வியாகரணம் முதலிய கலைகளைக் கற்க விரும்ப, அவன் தான் எப்பொழுதும் வானவீதி வழியே உலகங்களைச் சுற்றிச் செல்பவனாதலால், தான் ஓரிடத்திலிருந்து அவனுக்குப் பாடம் சொல்ல இயலாது என்று கூற, அனுமன் அவன் எதிர் முகமாய் நடந்து சென்றே பாடங்கேட்டு நவவியாகரண பண்டிதன் ஆனான்.*

*பாருலகு: பாராகிய உலகு: இருபெயரொட்டுப் பண்புத் தொகை. சீத்தல் : அழித்தல். 14*

***4725. 'நீதியின் நின்றீர்; வாய்மை***
***அமைந்தீர்; நினைவாலும்***
***மாதர் நலம் பேணாது***
***வளர்ந்தீர்; மறை எல்லாம்***
***ஓதி உணர்ந்தீர்; ஊழி***
***கடந்தீர்; உலகு ஈனும்***
***ஆதி அயன்தானே என***
***யாரும் அறைகின்றீர்;***

***நீதியில் நின்றீர் -*** *நீதிநெறியில் நிலை பெற்றுள்ளீர்;* ***வாய்மை அமைந்தீர் -*** *சத்திய நெறியால் பொருந்தியுள்ளீர்;* ***மாதர் நலம் -*** *மகளிர் இன்பத்தை;* ***நினைவாலும் -*** *மனத்தாலும்;* ***பேணாது வளர்ந்தீர் -*** *எண்ணாது வளர்ந்துள்ளீர்;* ***மறை எல்லாம் -*** *வேதங்களையெல்லாம்;* ***ஓதி உணர்ந்தீர் -*** *கற்று அவற்றின் பொருள்களையும் அறிந்துள்ளீர்;* ***ஊழி கடந்தீர் -*** *பிரம கற்பமான ஊழிக் காலத்தையும் கடந்த ஆயுளையுடையீர்;* ***உலகு ஈனும் -*** *உலகங்களைப் படைக்கின்ற;* ***ஆதி அயன்தானே என -*** *முதற் கடவுளான பிரம தேவனே நீரென்று;* ***யாரும் அறைகின்றீர் -*** *யாவரும் சொல்லக் கூடிய சிறப்புடையீர்.*

*அனுமன் நித்தியப் பிரமச்சாரியாதலால் 'நினைவாலு் மாதர்நலம் பேணாது வளர்ந்தீர்' என்றும், சிரஞ்சீவி யாதலால் 'ஊழி கடந்தீர்' என்றும், அடுத்த பிரம பட்டத்தைப் பெறக் கூறியவனாதலால் 'ஆதியயன்தானே யென யாரும் அறைகின்றீர்' என்றும் கூறப் பெற்றான். 'நினைவாலும்' என்றது மற்ற சொல்லாலும், செயலாலும் என்பதை உள்ளடக்கிய உயர்வுகுறித்தது. 15*

***4726. 'அண்ணல் அம் மைந்தர்க்கு***
***அன்பு சிறந்தீர்; அதனானே***
***கண்ணி உணர்ந்தீர் கருமம்;***
***நுமக்கே கடன் என்னத்***
***திண்ணிது அமைந்தீர்; செய்து***
***முடிப்பீர்; சிதைவு இன்றால்;***
***புண்ணியம் ஒன்றே என்றும்***
***நிலைக்கும் பொருள் கொண்டீர்;***

***அண்ணல் அம் மைந்தர்க்கு*** - *பெருமையில் சிறந்த அந்த இராம, இலக்குவரிடத்தில்;* ***அன்பு சிறந்தீர்*** - *பேரன்புடையீர்;* ***அதனானே*** - *அக் காரணத்தால்;* ***கருமம் கண்ணி உணர்ந்தீர்*** - *செய்ய வேண்டிய செயலை ஆராய்ந்து அறிந்திருக்கின்றீர்;* ***நுமக்கே கடன் என்ன*** - *(சீதையைத் தேடிச் செய்தியறிந்து வருவது) உமக்கே கடனாகுமென்று;* ***திண்ணிது அமைந்தீர்*** - *உறுதியாக ஏற்றுக் கொண்டீர்;* ***சிதைவு இன்று*** - *செயல் செய்வதில் அழிவு இல்லை;* ***செய்து முடிப்பீர்*** - *எனவே செயலைச் செய்து முடிப்பீர்;* ***புண்ணியம் ஒன்றே*** - *புண்ணியம் ஒன்றையே;* ***என்றும் நிலைக்கும் பொருள்*** - *எப்பொழுதும் அழியாமல்*

*நிலைக்கக் கூடிய பொருளென்று;* ***கொண்டீர்*** - *(மனத்தில் உறுதியாகக்) கருதியிருக்கின்றீர்.*

*வானரர் யாவரும் இறப்பதாக இருந்த நிலையில் அதனைத் தடுத்து அனுமன் பின்னுந் தேடுமாறு ஆலோசனை கூறும் பொழுது சீதையுள்ள இடம் தெரிந்தனராதலால் 'கண்ணியுணர்ந்தீர் கருமம்' என்றான் சாம்பவான். 'சிதைவின்றிச் செய்து முடிப்பீர்' - நீரே இலங்கையிற் சென்று சீதையின் செய்தியை உணர்ந்து வருந் தொழிலைச் செய்து முடிக்க வேண்டுமென்பது குறிப்பு. 'இன்றி' என்னும் வினையெச்சம் செய்யுளாதலால் 'இன்று' எனத் திரிந்து வந்தது.*
*16*

***4727. 'அடங்கவும் வல்லீர்' காலம்அது***
***அன்றேல்; அமர் வந்தால்,***
***மடங்கல் முனிந்தாலன்ன வலத்தீர்;***
***மதி நாடித்***
***தொடங்கியது ஒன்றோ? முற்றும்***
***முடிக்கும் தொழில் அல்லால்,***
***இடம்கெட, வெவ் வாய்***
***ஊறு கிடைத்தால் இடையாதீர்;***

***காலம் அது அன்றேல்*** - *அது ஏற்ற காலமல்லாவிட்டால்;* ***அடங்கவும் வல்லீர்*** - *அடங்கியிருக்கும் வல்லமையுடையீர்;* ***அமர் வந்தால்*** - *போர் மூளுமானால்;* ***மடங்கல் முனிந்தாலன்ன*** - *ஓர் ஆண் சிங்கம் சினந்து எழுந்தாற்போல;* ***வலத்தீர்*** - *வலிமையுடையவராவீர்;* ***மதி நாடி*** - *அறிவினால் ஆராய்ந்து பார்த்து;* ***தொடங்கியது ஒன்றோ*** - *செய்யத் தொடங்கிய ஒரு செயல்மட்டுமோ;* ***முற்றும் முடிக்கும் தொழில் அல்லல்*** - *அதற்குத் தொடர்பான எல்லாச் செயல்களையும் செய்து முடிக்கும் தொழில்திறமுடையவரேயல்லாமல்;* ***இடம் கெட*** - *பெருமையழியும்படி;* ***வெவ்வாய் ஊறு கிடைத்தால்*** - *கொடிய இடையூறு நேர்ந்தாலும்;* ***இடையாதீர்*** - *(அஞ்சிப்) பின்வாங்காது நிற்பீர்.*

*தொடங்கியதொன்றோ - ஓகாரம் எதிர்மறைப் பொருளது. இடங்கெடல்: சமயத்தில் மாறுபடுதல். ஊறு : துன்பம், தடை - உறு என்னும் முதனிலைத் திரிந்து தொழிற்பெயர்.*

*'ஊக்கமுடையான் ஒடுக்கம் பொருதகர், தாக்கற்குப் பேருந் தகைத்து' (486) 'கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன், குத்தொக்க சீர்த்த விடத்து' (490) 'அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற, இடுக்கண் இடுக்கட் படும்' (625) என்னும் குறட்பாக்களின் கருத்துக்கள் இச் செய்யுளில் பொதிந்துள்ளவாறு காணலாம்.*
*17*

***4728. 'ஈண்டிய கொற்றத்து இந்திரன்***
***என்பான் முதல் யாரும்***
***பூண்டு நடக்கும் நல்***
***நெறியானும் பொறையானும்***
***பாண்டிதர் நீரே; பார்த்து***
***இனிது உய்க்கும்படி வல்லீர்;***
***வேண்டிய போதே வேண்டுவ***
***எய்தும்வினை வல்லீர்.***

***ஈண்டிய கொற்றத்து -** மிக்க வெற்றியையுடைய; **இந்திரன் என்பான் முதல்யாரும் -** இந்திரன் முதலான யாவரும் (இவரது ஒழுக்கமே சிறந்ததென்று); **பூண்டு நடக்கும் -** கடைப்பிடித்து நடக்கத்தக்க; **நல் நெறியானும் -** நல்லொழுக்கத்தாலும்; **பொறையாலும் -** பொறுமைக் குணத்தாலும்; **பாண்டிதர் நீரே -** நீரே தேர்ச்சி பெற்றவராவீர்; **பார்த்து இனிது உய்க்கும்படி -** (எச் செயலையும்) ஆராய்ந்து இனிதாக நடத்தும்; **வல்லீர் -** வல்லமையுடையீர்; **வேண்டியபோதே -** விரும்பிய அப்பொழுதே; **வேண்டுவ எய்தும் -** விரும்பியவற்றையெல்லாம் அடையவல்ல; **வினை வல்லீர் -** தவச் செயலிலும் வல்லவர் ஆவீர்.*

*உமது ஒழுக்கம் இந்திரன் முதலோர்க்கும் வழி காட்டியாக உள்ளது என்பது முதலிரண்டடிகளின் கருத்து. வீரம், வெற்றி முதலிய நற்பண்புகள் நிரம்பியிருப்பினும் அனுமன் அவற்றைச் சிறிதும் பாராட்டாமல் எளிய வானரன்போல இருப்பதால் அக் குணத்தைப் 'பொறையாலும்' என்று சாம்பவான் பாராட்டினான். கடல் கடந்து சீதையைக் கண்டு வரவேண்டுமென்று நினைத்தால் உடனே செய்து முடிக்கும் வல்லமை அனுமனுக்கு உண்டென்பதைப் பின்னிரண்டடிகள் குறிப்பிக்கும். வேண்டிய வேண்டியாங்கு எய்தலால், செய்தவம் ஈண்டு முயலப்படும் (265) என்ற குறளின்படி வேண்டிய போதே வேண்டுவன எய்தும் வினை எனத் தவ ஒழுக்கத்தைக்குறித்தார்.*

*பாண்டிதர் - பண்டிதர் என்ற சொல்லின் முதலெழுத்து நீண்டது - தேர்ச்சியுடையவர் என்பதுபொருள். 18*

***4729. 'ஏகுமின்; ஏகி, எம் உயிர்***
***நல்கி, இசை கொள்ளீர்;***
***ஓகை கொணர்ந்து உம் மன்னையும்***
***இன்னல் குறைவு இல்லாச்***
***சாகரம் முற்றும் தாவிடும் நீர்,***
***இக் கடல் தாவும்***

***வேகம் அமைந்தீர்!' என்று***
***விரிஞ்சன் மகன் விட்டான்.***

***நீர் -*** *நீவிர்;* ***இக்கடல் தாவும் -*** *இந்தக் கடலைக் கடந்து சென்று மீளுவதற்குரிய;* ***வேகம் அமைந்தீர் -*** *வலிமை பொருந்தியுள்ளீர் (ஆதலால்);* ***ஏகுமின் -*** *விரைந்து செல்லுக;* ***ஏகி -*** *அவ்வாறு சென்று;* ***எம் உயிர் நல்கி இசை கொள்ளீர் -*** *எங்களுக்கெல்லாம் உயிரைக் கொடுத்துப் பெரும் புகழையடையுங்கள்;* ***உம் மன்னையும் -*** *உம் தலைவனாகிய இராமபிரானையும்;* ***ஓகை கொணர்ந்து -*** *(சீதை இலங்கையிலுள்ள)*

*மகிழ்ச்சியான நல்ல செய்தியைக் கொண்டுவந்து;* ***இன்னல் குறைவு இல்லாச் சாகரம் -*** *(சீதையின் பிரிவாலான) குறையாத துன்பக் கடல்;* ***முற்றும் தாவிடும் -*** *முழுவதையும் கடந்து கரையேறச் செய்யும்;* ***என்று -*** *என்று கூறி;* ***விரிஞ்சன் மகன் -*** *பிரமகுமாரனான சாம்பவான்;* ***விட்டான் -*** *(கடலைக் கடந்து செல்லுமாறு) அனுமனைத் தூண்டிவிட்டான்.*

*நீர் கடல் கடந்து சென்றால் இராமபிரானையும் துன்பக் கடலிலிருந்து கரையேற்றியவராவீர் என்று சாம்பன் குறிப்பாகப் புலப்படுத்தியிருப்பதை அறியலாம. எம்முயிர் நல்கி இசை கொள்ளீர்: நீர் கடல்கடந்து திரும்பிவந்தால் நாங்களும் இப்போது நினைத்தவாறு இறவாமற் பிழைப்போம்; இவ்வாறு பலரது உயிரைக் காப்பாற்றுவதால் பெரும்புகழும் உமக்குக் கிடைக்கும் என்றவாறு. தவிர, சீதை, இராமபிரான் முதலிய அனைவரின் துயரமும், தேவர் துன்பமும் நீங்கக் காரணமாகிய புகழ் எனலாம். மன் - சுக்கிரீவனைக் குறித்ததாகவும் கொள்ளலாம். ஓகை : உவகை என்ற சொல்லின் திரிபு.* *19*

*அனுமன் இலங்கை செல்ல உடன்படல்*

***4730. சாம்பன் இயம்ப, தாழ்***
***வதனத் தாமரை நாப்பண்***
***ஆம்பல் விரிந்தாலன்ன***
***சிரிப்பன், அறிவாளன்,***
***கூம்பலொடும் சேர் கைக்***
***கமலத்தன், குலம் எல்லாம்***
***ஏம்பல் வர, தன் சிந்தை***
***தெரிப்பான், இவை சொன்னான்: ****

***சாம்பன் இயம்ப -*** *இவ்வாறு சாம்பவான் கூறிமுடிக்க;* ***அறிவாளன் -*** *அறிவிற் சிறந்த அனுமன்;* ***தாழ் வதனத் தாமரை நாப்பண் -*** *தலைகவிழ்ந்த முகமாகிய தாமரை மலரின் நடுவில்;* ***ஆம்பல் விரிந்தால் அன்ன சிரிப்பன் -*** *செவ்வாம்பல் விரிந்தது போன்று சிரிப்பவனும்;* ***கூம்பலொடும் சேர் கைக் கமலத்தன் -*** *குவிந்த தாமரைமலர் போன்ற கூப்பிய கைகளையுடையவனுமாகிய;* ***குலம் எல்லாம் ஏம்பல் வர -*** *(அங்குள்ள) வானரர் யாவர்க்கும் மகிழ்ச்சியுண்டாக;* ***தன் சிந்தை தெரிப்பான் -*** *தன் மனக் கருத்தைத் தெரிவிக்கும் பொருட்டு;* ***இவை சொன்னான் -*** *பின் வருமாறு கூறலானான்.*

*பிறர் தம்மைத் துதித்துப் புகழும்போது தலை கவிழ்தல் பெரியோரியல்பு. ஆதலால், சாம்பவான் தன்னைப் புகழும்போது அனுமன் தாழ்ந்த முகத்தையுடையவனானான் என்பது. இது தற்புகழ்ச்சியை விரும்பாத அனுமனது தன்மையையுணர்த்தியது.*

*அனுமன் முகத்திற்குச் செந்தாமரையும், பற்களுக்கு ஆம்பல் மலரும் முறையே பெருமையாலும் நிறத்தாலும் உவமைகளாயின.*

*அனுமன் சிரிக்கும்போது முகத்தினிடையில் செந்நிறமான வாய் விரிவதற்கும் பற்கள் தெரிவதற்கும் தாமரைப் பூ நடுவில் ஆம்பல் விரிவதை உவமையாகக் குறித்தார். 20*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***4731. ''' இலங்கையை இடந்து வேரோடு இவ்***
***வயின் தருக'' என்றாலும்,***
***''விலங்கினர் தம்மை எல்லாம்***
***வேரொடும் விளிய நூறி,***
***பொலங் குழை மயிலைக் கொண்டு***
***போது'' எனப் புகன்றிட்டாலும்,***
***கலங்கலீர்! உரைத்த மாற்றம்***
***முடிக்குவல் கடிது; காண்டிர்! ****

***இலங்கையை** - (அனுமன் சாம்பவானைப் பார்த்து) இலங்கை நகரை; **வேரோடு இடந்து** - வேரோடு பெயர்த்தெடுத்து; **இவ்வயின் தருக என்றாலும்** - இந்த இடத்திற்குக் கொண்டு வரவேண்டுமென்று (நீங்கள்) கூறினாலும்; **விலங்கினர்தம்மை எல்லாம்** - எதிர்த்துத் தடுப்போரையெல்லாம்; **வேரொடும் விளிய நூறி** - அடியோடு அழியுமாறு பொடிப் பொடியாக்கி; **பொலங் குழை மயிலை** - பொன்னாற் செய்த குழையையணிந்த மயில்போன்ற சாயலையுடைய சீதையை; **கொண்டு போது என** - எடுத்துக் கொண்டுவா என்று; **புகன்றிட்டாலும்** - சொன்னாலும்; **உரைத்த மாற்றம் முடிக்குவல்** - (நீங்கள்) கூறிய சொற்படியே செய்து முடிப்பேன்; **கடிது காண்டிர்** - (அதை) விரைவிலே கண்கூடாகக் காண்பீர்கள்; **கலங்கலீர்** - (ஆகவே) கலங்காதீர்கள்.*

*கடலைக் கடந்து சீதையைக் கண்டு வருதல் எவ்வாறு முடியுமென்ற சிந்தை உங்களுக்குச் சிறிதும் வேண்டா என்ற கருத்துப்படக் 'கலங்கலீர்' என்றார். முடிக்குவல்: தன்மையொருமை எதிர்கால வினைமுற்று. 21*

***4732. 'ஓசனை ஒன்று நூறும் உள்***
***அடி உள்ளது ஆக,***
***ஈசன் மண் அளந்தது ஏய்ப்ப,***
***இருங்கடல் இனிது தாவி,***
***வாசவன் முதலோர் வந்து***
***மலையினும், இலங்கை வாழும்***

***நீசரை எல்லாம் நூறி***
***நினைத்தது முடிப்பல்; பின்னும்,***

***ஈசன் -*** *திருமால்;* ***மண் அளந்தது ஏய்ப்ப -*** *உலகத்தையளந்தது போல;* ***ஓசனை ஒன்று நூறும் -*** *(இங்கிருந்து இலங்கைவரை) நூறு யோசனை தூரப் பரப்பையும்;* ***உள் அடி உள்ளது ஆக -*** *உள்ளங் காலின் ஓரடி வைப்புக்குள் அடங்கும்படியாக;* ***இருங்கடல் இனிது தாவி -*** *பெரிய கடலை மிக எளிதாகத் தாண்டி;* ***வாசவன் முதலோர் -*** *இந்திரன்*

*முதலான தேவர்கள்;* ***வந்து மலையினும் -*** *(அரக்கர்க்கு உதவியாக) வந்து என்னையெதிர்த்துப் போர் செய்தாலும்;* ***இலங்கை வாழும் -*** *அந்த இலங்கை நகரில் வாழுகின்ற;* ***நீசரை எல்லாம் நூறி -*** *இழிவான அரக்கர்களையெல்லாம் வேரோடு அழித்து;* ***நினைத்தது முடிப்பல் -*** *மனத்தில் எண்ணிய காரியத்தை முடித்துவிடுவேன்;* ***பின்னும் -*** *மேலும்;*

*ஒரு தாவலிலேயே நூறுயோசனை தூரமுள்ள கடலைக் கடந்து இலங்கைக்குச் செல்லுமாறு பேருருக் கொள்ளப் போகும் அனுமனுக்கு, உலகம் முழுவதையும் ஓரடியால் அளந்த திரிவிக்கிரமன் உவமையாவான். மலையினும்: வாசவன் முதலோர் வந்து மலையமாட்டார் என்ற பொருளை வற்புறுத்தும். யோசனை: ஓர் எல்லையளவு. ஐயரவர்கள் நூலகப் பதிப்பில் 20, 21, 22 ஆகிய மூன்று பாடல்களும் இடம் பெறவில்லை. 22*

***4733. ' "நீயீரே நினைவின் முன்னம், நெடுந்***
***திரைப் பரவை ஏழும்***
***தாய், உலகு அனைத்தும் வென்று,***
***தையலைத் தருதற்கு ஒத்தீர்;***
***போய், இது புரிது!" என்று புலமை***
***தீர் புன்மை காண்டற்கு***
***ஏயினீர் என்னின், என்னின்***
***பிறந்தவர் யாவர்? இன்னும்.***

***நீயீரே -*** *நீங்கள்;* ***நினைவின் முன்னம் -*** *நினைப்பதற்குமுன்பே (மிக விரைவில்);* ***நெடுந்திரை பரவை ஏழும் தாய் -*** *பெரிய அலை களையுடைய ஏழு கடல்களையும் தாண்டி;* ***உலகு அனைத்தும் வென்று -*** *எல்லாவுலகங்களையும் வெற்றிகண்டு;* ***தையலைத் தருதற்கு ஒத்தீர் -*** *சீதையை மீட்டுக் கொண்டு வருவதற்கு வல்லமையுடையீர் ஆவீர்கள்;* ***போய் இது புரிதி என்று -*** *(அவ்வாறான ஆற்றல் பெற்ற நீங்களே நீ) சென்று இதைச் செய் என்று;* ***புலமை தீர் புன்மை காண்டற்கு -*** *அறிவற்ற எனது தாழ்வினைக் காண்பதற்காக;* ***ஏயினீர் என்னின் -*** *(என்னை இச் செயலில்) ஏவினீர் எனினும்;* ***என்னின் பிறந்தவர் இன்னும் யாவர் -*** *என்னைப் போலப் பிறந்த பயனையடைந்தவர் வேறு யார் உள்ளார்? (ஒருவரு மில்லை; யானே பிறந்த பயனைப் பெற்றேன் என்பது).*

*இந்தச் சிறிய ஒரு கடலையேயல்லாமல் ஏழு கடல்களையும் வெல்ல வேண்டும் மென்றாலும் அவ்வாறே செய்து சீதையை மீட்கும் வல்லமையுடையவர் நீரென்று*

*மற்ற வானரர்களது வலிமை மிகுதியை முதல் மூன்றடிகளால் தெரிவித்தான் அனுமன் என்பது.*

*'ஏயினீரென்னின் என்னிற் பிறந்தவர் யாவரின்னும்' - மிக்க வலியவர்களாய்க் கடல்கடந்து மீண்டு வரும் வல்லமையுள்ளார் பலரிருக்கவும் என்னை ஏவினது எனது பேறென்று பணிவு புலப்படுத்தியவாறு. சாம்பவானே சீதையைத் தேடிக் கண்டுவரும் ஆற்றல் உடையவன் என்பது, தன்னை ஏவியதால் தன் அறிவின்*

*குறைவு இத்தன்மையது என்பதை அறிந்து கொள்ளும் வாய்ப்பு தனக்கு ஏற்பட்டது என்பதும் அனுமன் கருத்து. 23*

***4734. 'முற்றும் நீர் உலகம் முற்றும்***
***விழுங்குவான், முழங்கி முந்நீர்,***
***உற்றதே எனினும், அண்டம்***
***உடைந்துபோய் உயர்ந்ததேனும்,***
***இற்றை நும் அருளும்,***
***எம்கோன் ஏவலும் இரண்டுபாலும்***
***கற்றை வார் சிறைகள் ஆக,***
***கலுழனின்கடப்பல் காண்டீர்!***

**நீர் முற்றும் உலகம் முற்றும்** - *கடலாற் சூழப்பெற்ற உலக முழுவதையும்;* **விழுங்குவான்** - *விழுங்கும்பொருட்டு;* **முழங்கி** - *முழக்க மிட்டுக் கொண்டு;* **முந்நீர் உற்றதே எனினும்** - *கடலானது எதிரிட்டுப் பொங்கிவந்தாலும்;* **அண்டம் உடைந்துபோய்** - *இந்த அண்டகோளமே உடைந்துபோய்;* **உயர்ந்ததேனும்** - *உயர்ந்த வானத்திற் சென்றாலும் (சிறிதும் கலக்கமில்லாமல்);* **இற்றை நும் அருளும்** - *இப்பொழுது உங்களுடைய நல்லாசியும்;* **எம்கோன் ஏவலும்** - *எம் தலைவனான இராமபிரான் எனக்கிட்ட கட்டளையும்;* **இரண்டு பாலும்** - *இரண்டு பக்கங்களிலும்;* **கற்றை வார்சிறைகள் ஆக** - *தொகுதியாக நீண்ட சிறகுகளாய் அமைய;* **கலுழனின்** - *(நான்) கருடனைப் போல;* **கடப்பல்** - *(இக்கடலைக்) கடந்து செல்வேன்;* **காண்டீர்** - *(நீங்கள் இதைக்) காண்பீர்கள்.*

*கடலானது இந்த உலகத்தையழிக்குமாறு பொங்கி வந்தாலும், இந்த அண்டம் உடைந்து வானத்திற் சென்றாலும் நான் சிறிதும் பின்வாங்காமல் உங்களுடைய ஆசியால் இராமனது கட்டளைப்படியே கடல் கடந்து சென்று சீதையைக் கண்டு செய்தியறிந்து மீண்டு வருவேன் என்பது.*

*கருடனுக்குப் பறந்து செல்ல இரு சிறகுகள் இன்றியமையாத உறுப்பாவது போல, நான் கடல் கடப்பதற்கும் உமது அருளும், இராமனது ஏவலுமே இன்றியமையாதனவாயிருந்து மேற்கொண்ட செயலை முற்றுவிக்கும் என்பது பின்னிரண்டடிகளின் கருத்து. உவமையணி.*

*சிறிய திருவடி என்னும் அனுமன், பெரிய திருவடியென்னும் கருடனுக்கு ஒப்பான ஒற்றுமை தோன்றக் கூறப்பெற்ற நயம் காணத்தக்கது. கடப்பல்: தன்மையொருமை எதிர்கால வினை முற்று. 24*

*அனுமன் மயேந்திர மலையின் உச்சிக்குச் செல்லுதல்*

***4735.** **'ஈண்டு இனிது உறைமின், யானே***
***எறி கடல் இலங்கை எய்தி,***
***மீண்டு இவண் வருதல்காறும்; விடை***
***தம்மின், விரைவின்' என்னா***
***ஆண்டு அவர் உவந்து வாழ்த்த,***
***அலர் மழை அமரர் தூவ,***
***சேண் தொடர் சிமயத் தெய்வ***
***மயேந்திரத்து உம்பர்ச் சென்றான்.***

***யான் -** நான்; **எறி கடல் இலங்கை எய்தி -** அலைவீசும் கடலால் சூழப் பெற்ற இலங்கை நகரையடைந்து; **மீண்டு இவண் வருதல் காறும் -** இங்கே திரும்பி வருகின்ற வரையிலும்; **ஈண்டு இனிது உறைமின் -** (நீங்கள்) இந்த இடத்தில் தங்கியிருங்கள்; **விரைவின் விடை தம்மின் -** (எனக்கு விரைவிலே விடை கொடுங்கள்; **என்னா -** என்று சொல்லி; (அனுமன்); **ஆண்டு அவர் உவந்து வாழ்த்த -** அப்பொழுது அந்த வானர வீரர்கள் மகிழ்ந்து வாழ்த்துக் கூறவும்; **அமரர் அலர் மழை தூவ -** தேவர்கள் பூமாரி பொழியவும்; **சேண் தொடர் சிமயத் தெய்வ மயேந்திரத்து -** வானத்தையளாவிய சிகரங்களையுடைய தெய்வத் தன்மையுள்ள மகேந்திரமலையினது; **உம்பர்ச் சென்றான் -** உச்சிக்குப் போய்ச் சேர்ந்தான்.*

*உறைமின், தம்மின்: முன்னிலைப் பன்மை வினை முற்றுக்கள்.     25*

*அனுமன் பெரு வடிவு கொள்ளல்*

***4736.** **பொரு அரு வேலை தாவும்***
***புந்தியான், புவனம் தாய***
***பெரு வடிவு உயர்ந்த மாயோன்***
***மேக்கு உறப் பெயர்ந்த தாள்போல்***
***உரு அறி வடிவின்***
***உம்பர் ஓங்கினன்; உவமையாலும்***
***திருவடி என்னும் தன்மை***
***யாவர்க்கும் தெரிய நின்றான்.***

***பொரு அரு -** ஒப்புக்கூறமுடியாத; **வேலை தாவும் புந்தியான் -** கடலைக் கடக்க வேண்டுமென்ற உறுதி கொண்ட அனுமன்; **புவனம் தாய -** உலகங்களைத் திரிவிக்கிரமனாய்த் தாவியளந்த; **பெரு வடிவு உயர்ந்த மாயோன் -** பெரிய உருவத்தால் உயர்ந்து விளங்கிய திருமாலினுடைய; **மேக்கு உறப் பெயர்ந்த தாள் போல -** மேலிடத்தில் பொருந்து மாறு உயரவெடுத்த திருவடிபோல; **உரு அறி வடிவின் -** (தனது) உருவத்தை யாவரும் அறியக் கூடிய பெரு வடிவத்தோடு; **உம்பர் ஓங்கினன் -** வானத்தையளாவ வளர்ந்தான் (அதனால்); **உவமையாலும் -** உவமைவகையாலும்; **திருவடி என்னும் தன்மை -** திருவடியென்கின்ற தனது திருநாமத்தின் தன்மை; **யாவர்க்கும் தெரிய நின்றான் -** யாவர்க்கும் விளங்கும் படி தோன்றி நின்றான்.*

*வானத்தையளப்பதற்காக உயரவெடுத்த திரிவிக்கிரம அவதாரத்தின் திருவடிபோல, அனுமன் வானத்தையளாவுமாறு பெருவடிவங் கொண்டானென்பது. இராமாவதாரத்தில் திருமாலுக்கு ஊர்தியாயிருந்து உதவியது பற்றிவந்த அனுமனது திருவடியென்ற பெயர்க்கு, இங்குத் திரிவிக்கிரமனது திருவடிபோல வளர்ந்தமையால் அப் பெயருண்டாயிற்று என்ற கருத்துப்படக் கூறியது. பிரிநிலை நவிற்சியணி.*
*26*

***4737. பார் நிழல் பரப்பும்பொன் தேர்***
***வெயில் கதிர்ப் பரிதி மைந்தன்***
***போர் நிழல் பரப்பும் மேலோர்***
***புகழ் என உலகம் புக்கு,***
***தார் நிழல் பரப்பும் தோளான்,***
***தடங் கடல் தாவா முன்னம்,***
***நீர் நிழல் உவரி தாவி***
***இலங்கைமேல் செல்ல, நின்றான்.***

***தார் நிழல் பரப்பும் தோளான் -*** *மாலைகள் நிழல் பரப்பும் தோள் களையுடைய அனுமன்;* ***நிழல் பார் பரப்பும் பொன்தேர் -*** *தனது ஒளியை உலகெங்கும் பரப்புகின்ற அழகான தேரையும்;* ***வெயில் கதிர் -*** *வெப்பமான கதிர்களையுமுடைய;* ***பரிதி மைந்தன் -*** *சிறந்த கதிரவன்;* ***போர் நிழல் பரப்பும் -*** *போரில் தமது வலிமையை வெளிப்படுத்துகின்ற;* ***மேலோர் புகழ் என -*** *மாவீரரின் புகழ் (உலகமெங்கும் பரவுவது) போல;* ***உலகம் புக்கு -*** *உலக முழுவதும் சுற்றி (ஒளி செய்து);* ***தடங்கடல் தாவா முன்னம் -*** *பெரிய மேற்குக் கடலிற் சென்று சேருவதற்குமுன்பே;* ***நீர்நிழல் உவரி தாவி -*** *நீர்மயமான அழகிய இக்கடலைக் கடந்து;* ***இலங்கைமேல் செல்ல -*** *இலங்கை நகருக்குச் சென்று சேரும்படி;* ***நின்றான் -*** *(மகேந்திரமலையில்) ஆயத்தமாக நின்றான்.*

*அனுமன் சூரியன் மறைவதற்குள் இலங்கையிற் சென்று சேரவேண்டுமென்ற கருத்தோடு மகேந்திர மலையின் உச்சியிலேறிப் பேருருவங் கொண்டு சித்தமாக நின்றான் என்பது. சூரியன் தன் கதிர்களால் உலகமுழுவதும் ஒளி செய்வதற்குப் பெருவீரர்புகழ் உலகமெங்கும் பரவுதலை உவமை கூறினார்.*

*உலகம் புக்குத் தாவா முன்னம் செல்ல நின்றான் என இயையும், 27*

***4738. பகு வாய மடங்கல் வைகும்***
***படர் வரை முழுதும் மூழ்க,***
***உகு வாய விடம் கொள் நாகத்து***
***ஒத்த வால் சுற்றி, ஊழின்***
***நெகு வாய சிகர கோடி***
***நெரிவன தெரிய நின்றான்;***
***மக ஆமை முதுகில் தோன்றும்***
***மந்தரம் எனலும் ஆனான்.***

***பகு வாய மடங்கல் வைகும் -*** *திறந்த வாயையுடைய ஆண்சிங்கங்கள் வாழ்கின்ற;* ***படர் வரை முழுதும் -*** *பரந்துள்ள அந்த மகேந்திர மலை முழுவதும்;* ***மூழ்க -*** *(அனுமனது பாரம் அழுத்துதலால்)*

*கீழேயழுந்தவும்;* ***ஊழின் நெகு வாய -*** *வரிசையாகத் தோன்றும் சிதைந்த இடங்களையுடைய;* ***சிகர கோடி -*** *அந்த மலையின் சிகரங்கள் பலவும்;* ***நெரிவன தெரிய -*** *நெரிந்து பொடியாக;* ***விடம் உகுவாய கொள் நாகத்து ஒத்த -*** *நஞ்சைக் கக்குகின்ற வாயையுடைய பாம்பினைப் போன்ற;* ***வால் சுற்றி -*** *வாலினால் (தன்னுடம்பைச் சுற்றிக் கொண்டு);* ***நின்றான் -*** *(பேருருவத்தோடு) நின்றவனாகிய அனுமன்;* ***மக ஆமை முதுகில் தோன்றும் -*** *திருமாலாகிய பெரிய ஆமை முதுகின்மேல் விளங்கித் தோன்றிய;* ***மந்தரம் எனலும் ஆனான் -*** *மந்தரமலை என்று சொல்லத்தக்கவனுமானான்.*

*அனுமன் உடற்சுமையால் தரையில் அழுந்துகின்ற மகேந்திரமலை - கூர்மாவதார ஆமைக்கும் மகேந்திரமலையில் நின்ற அனுமன் - பெரிய கூர்மத்தால் தாங்கப்பெற்ற மந்தரமலைக்கும், அனுமனது உடலைச் சுற்றிய அவனது வால் - மந்தர மலையைச் சுற்றிய வாசுகிக்கும் ஒப்பாயின என்றார்.* *28*

***4739. மின் நெடுங் கொண்டல் தாளின்***
***வீக்கிய கழலின் ஆர்ப்ப,***
***தன் நெடுந் தோற்றம் வானோர்***
***கட்புலத்து எல்லை தாவ,***
***வல் நெடுஞ் சிகர கோடி***
***மயேந்திரம், அண்டம் தாங்கும்***
***பொன் நெடுந் தூணின் பாத***
***சிலை என, பொலிந்து நின்றான்.***

***மின் நெடுங் கொண்டல் -*** *மின்னலோடு கூடிய பெரிய மேகங்கள்;* ***தாளின் வீக்கிய -*** *(தன்) காலில் கட்டப்பெற்ற;* ***கழலின் ஆர்ப்ப -*** *வீரக் கழல்போல ஒலிக்கவும்;* ***தன் நெடுந்தோற்றம் -*** *நீண்டுயர்ந்த தனது பெரிய உருவமானது;* ***வானோர் கட்புலத்து எல்லை தாவ -*** *தேவர்களின் கண்பார்வையாகிய எல்லையைத் தாண்டிச் செல்லவும்;* ***வல் நெடுஞ் சிகர கோடி -*** *வலிய பெரிய சிகரங்களின் தொகுதியையுடைய;* ***மகேந்திரம் -*** *மகேந்திர மலையானது;* ***அண்டம் தாங்கும் பொன் நெடுந் தூணின் -*** *இந்த அண்டகோளத்தைத் தாங்கி நிற்கும் பொன்மயமான பெரிய தூணின்;* ***பாத சிலை என -*** *அடியிலிட்ட கல்லைப் போல விளங்கவும்;* ***பொலிந்து நின்றான்-*** *(அந்த மகேந்திர மலையின் மேல் பேருருவத்துடன்) (அனுமன்) நிமிர்ந்துநின்றான்.*

*அனுமன் உலகைத் தாங்கும் தூண்போல நின்றான் என்பதும், அவன் நின்ற மலை அத் தூணின் அடியிலிட்ட கல்லைப்போல விளங்கிற்று என்பதும் விளங்கும்.*

*தற்குறிப்பேற்றவணி.*

*அனுமன் பேருருவங்கொண்டபோது மேகமண்டலம் அவனது தாளினிடத்து இருந்ததென்பார், 'மின்னெடுங்கொண்டல் தாளின் வீக்கிய கழலினார்ப்ப' என்றார்.*

*மேருமலை இப்பூமியின் இடையே நின்று இந்த அண்டத்தைத் தாங்கும் பொன்தூண் போன்றது என்பது புராண நூல் துணிபு.*

*அனுமன் பொன் நிறத்தாலும், வானுயர்ந்த தோற்றத்தாலும் மேரு மலைக்குஉவமை.* *29*

***மிகைப் பாடல்கள்***

குறிப்புரை

*2. அனுமப் படலம்*

***312. அன்ன ஆம் என வெருவி,***
***அங்கண் நில்லாது, அருகு***
***துன்னு வானரர்களொடு தோம்***
***இலா மேரு நிகர்***
***என்னும் மாமலை முழையில்***
***எய்தினார்; எய்தியபின்,***
***நல் நலம் தெரி மனதின்***
***நாடி மாருதி மொழியும்:***

***முழை -*** *குகை* *2-1*

***313. தாரன், நீலனை, மருவு***
***தாம மாருதியை, முதல்***
***வீரரோடு, இரவிசுதன், மேரு***
***மால் வரையை நிகர்***
***பார மா மலையின் ஒரு***
***பாகம் ஒடுதல் புரிய,***
***ஆர மார்பரும், அதனின்***
***ஆகுமாறு உறல் கருதி,***

***இரவி சுதன் -*** *சூரியன் மகனாகிய சுக்கிரீவன்* *2-2*

***314 . மானை நாடுதல் புரிஞர் -***
***'வாலி ஏவலின் வருதல்***
***ஆனவாறு' என மறுகி, ஆவி***
***சோர் நிலையர், தொடர்*** 
***ஏனைவானரர் சிலரும் ஏக,***
***மா முழையில், முழு***
***ஞான நாதரை, அறிவின்***
***நாடி, மாருதி மொழியும்:***

***மான்*** *- மான்போல்வாளாகிய சீதை;* ***நாடுதல் புரிஞர்*** *- தேடுதலாகிய பணியைச் செய்வோர்.* *2-3*

*315.* ***உலகு தங்கிய பல தொல்***
***உயிர்கள் உயர்ந்திடு பரிசில்***
***இலகும் இங்கிதம் உடையர்;***
***இசையின் இன்புறு சுருதி***
***அலகு இல் விஞ்சைகள் உடையர்;***
***அகிலமும் தொழு கழலர்;***
***விலகு திண் கொடு வினைகள்***
***வெகுளிகொண்டு அடு விறலர்.***

**இங்கிதம்** - *குறிப்பு;* **விஞ்சைகள்** - *வித்தைகள்* *8-1*

*316.* ***சிவனும் அம்புய மலரில்***
***அயனும் இந்திரை கொழுநன்***
***அவனும் வந்திட உதவும் அரி***
***எனும் பிரமம் அது***
***துவளும் அஞ்சன உருவு***
***தொடரு செங்கமல மலர்***
***உவமை கொண்டு இதில் ஒருவன்***
***உலகில் வந்ததுகொல் என.***

**அம்புய மலர்** - *தாமரை மலர்;* **இந்திரை** - *திருமகள்;* **கொழுநன்** - *கணவன்.*
*8-2*

*317 .* ***'மற்றும் இவ் உலகத்து உள்ள***
***முனிவர், வானவர்கள், ஆர், இச்***
***சொல் திறம் உடையார்? மற்று***
***எச் சுருதியின் தொகுதி யாவும்***
***முற்று அறிதரும் இம் மாணி***
***மொழிக்கு எதிர், முதல்வர் ஆய***
***பெற்றியர் மூவர்க்கேயும், பேர்***
***ஆற்றல் அரிது மன்னோ.'***

**சுருதி** - *வேதம் (கேட்கப்படுவது);* **மாணி** - *பிரமசாரி* *19-1*

*318 .* ***இருக்கண் மா மைந்தரான***
***வாலியும், இளவல்தானும்,***
***செருக்கினோடு இருக்கும்காலை, செறுநரின்***
***சீறி வாலி***
***நெருக்குற, வெருவி, இந்த நெடுங்***
***குவட்டு இறுத்தான் தன்பால் -***

***மருக் குலாம் தாரீர்! - வந்தது***
***அவன் செய் மா தவத்தின் அன்றோ?***

**இருக்கண்** - *பிரமன்;* **நெடுங்குவடு** - *பெரிய மலை.* *21-1*

*3. நட்புக் கோட் படலம்*

*319.* ***'பிரிவு இல் கான்***
***அதுதனில், பெரிய சூர்ப்பணகைதன்***
***கரிய மா நகிலொடும்,***
***காதொடும், நாசியை***
***அரியினார்; அவள்***
***சொல, திரிசிராஅவனொடும்,***
***கரனொடும், அவுணரும், காலன்***
***வாய் ஆயினார்.***

**அரியினார்** - *அறுத்தனர* *10-1*

*320.* ***கடுத்து எழு தமத்தைச் சீறும்***
***கதிர்ச் சுடர்க் கடவுள் ஆய்ந்து***
***வடித்த நூல் முழுதும் தான்***
***ஓர்வைகலின், வரம்பு தோன்றப்***
***படித்தவன் வணங்கி, வாழ்த்தி,***
***பருமணிக் கனகத் தோள் மேல்***
***எடுத்தனன், இரண்டுபாலும்***
***இருவரை; ஏகலுற்றான்.***

**நமம்** - *இருள்.* *29-1*

*321.* ***'இவன், உலைந்து உலைந்து,***
***எழு கடல் புறத்து***
***அவனியும் கடந்து,***
***எயில் அடைந்தனன்;***
***கவனம் ஒன்று இலான்,***
***கால் கடாயென,*** *மிகைப் பாடல்கள்* *713*
***அவனி வேலை ஏழ்,***
***அரியின் வாவினான்.***

**உலைந்து** - *தோற்று;* **எயில்** - *மதில் (இங்கே புற அண்டத்து எல்லையிலுள்ள மதில்);*
**கவனம்** - *கலக்கம்;* **கால்** - *காற்று;* **வாவினான்** - *தாவினான்.* *64-1*

*322.* ***'என்று கால்மகன்***
***இயம்ப, ஈசனும்,***
***''நன்று நன்று'' எனா,***
***நனி தொடர்ந்து பின்***
***சென்ற வாலிமுன்***
***சென்ற செம்மல்தான்***
***அன்று வாவுதற்கு***
***அறிந்தனன்கொலாம்?'***

***கால்மகன்*** - வாயு தேவனின் மகன் (அனுமன்); ***ஈசன்*** - (இங்கே) இராமபிரான்.
*64-2*

*323.* ***இனையவா வியந்து***
***இளவல் தன்னொடும்,***
***வனையும் வார் கழல்***
***கருணை வள்ளல், பின்பு,***
***'இனைய வீரர் செய்தமை***
***இயம்பு' என,***
***புனையும் வாகையான்***
***புகறல் மேயினான்:***

***இனையவா(று)*** - இவ்வாறு *64-3*

*324.* ***'நக்கரக் கடல் புறத்து நண்ணும் நாள்,***
***செக்கர் மெய்த் தனிச் சோதி சேர்கலாச்***
***சக்கரப் பொருப்பின் தலைக்கும் அப்***
***பக்கம் உற்று, அவன் கடிது பற்றினான்.***

***நக்கரம்*** - முதலை. *64-4*

*325.* ***'திறத்து மா மறை அயனொடு***
***ஐம்முகன், பிறர், தேடிப்***
***புறத்து அகத்து உணர் அரிய***
***தன் பொலன் அடிக் கமலம்***
***உறச் சிவப்ப இத் தரைமிசை***
***உறல், அறம் ஆக்கல்,***
***மறத்தை வீட்டுதல், அன்றியே,***
***பிறிது மற்று உண்டோ?'***

***ஐம்முகன்*** - சிவபிரான். *70-1*

*326.* ***'நீலகண்டனும், நேமியும்,***
***குலிசனும், மலரின்-***
***மேல் உளானும், வந்து, அவன்***
***உயிர்க்கு உதவினும், வீட்டி***
***ஆலும் உன் அரசு***
***உரிமையோடு அளிக்குவென்; அனலோன்***
***சாலும், இன்று எனது உரைக்கு***
***அருஞ்சான்று' எனச் சமைந்தான்.***

**நீலகண்டன்** - *சிவபிரான்;* **நேமி** - *திருமால்;* **குலிசன்** - *(வச்சிரப் படையான்)இந்திரன்.*
*71-1*

*327.* ***'மண்ணுள் ஓர் அரா முதுகிடை***
***முளைத்த மா மரங்கள்***
***எண்ணில் ஏழ் உள; அவற்றில்***
***ஒன்று உருவ எய்திடுவோன்,***
***விண்ணுள் வாலிதன் ஆர் உயிர்***
***விடுக்கும்' என்ற உலகின்-***
***மண் உளோர்கள்தாம் கழறிடும்***
***கட்டுரை உளதால்.***

**அரா** - *பாம்பு (ஏழு மராமரங்களில் ஒன்றைத் தன் கணையால் துளைப்பவனால் வாலி இறப்பான் என்று உலகில் ஒரு பேச்சு உண்டு என்கிறது செய்யுள்).*

*5.* **.** ***புயலும் வானகமும், அப்***
***புணரியும், புணரி சூழ்***
***அயலும் வீழ் தூளியால்***
***அறிவு அருந்தகையவாம்***
***மயனின் மாமகனும் வாலியும்***
***மறத்து உடலினார்.*** *மிகைப் பாடல்கள் 715*
***இயலும் மா மதியம் ஈர்***
***ஆறும் வந்து எய்தவே.'***

**புயல்** - *மேகம்;* **புணரி** - *கடல்.* *9-1*

*7.* **.** ***பேர்வுற வலிக்கவும் மிடுக்கு***
***இல் பெற்றியார்***
***நோவுற உலந்தனர்; அதனை***
***நோக்கி, யான்***
***ஆர்கலிதனைக் கடைந்து,***
***அமுது கொண்டனென்;***

*போர் வலி அழிந்து போய்,*
*புறம் தந்து ஓடலேன்.*

**பேர்வுற** - *அசைந்திட;* **வலிக்க** - *இழுக்க;* **மிடுக்கு** - *வலிமை;* **ஆர்கலி** - *கடல்.*
*27-1*

*330. ஆற்றலன் வாலிக்கு ஆகி, அருங்*
*கதிர்ப் புதல்வன் மீண்டும்*
*ஏற்றிய சிலை இராமன் இணை*
*அடி இறைஞ்சி வீழ்ந்து,*
*'தோற்றுமுன், ஆவி கொண்டு, இத்தொல்*
*உறை இருந்தேன்; உந்தன்*
*மாற்றமேவலி ஆய்ச் சென்றேன்;*
*உடல்வலி மாய்ந்தது' என்றான்.*

**வாலிக்கு ஆற்றலன் ஆகி** - *வாலியின் வலிமைக்கு எதிரே தாங்கமுடியாதவனாகி;*
**கதிர்ப்புதல்வன்** - *கதிரவன் மகன் (சுக்கிரீவன்).61-1*

*331. என்றலும், இராமன், 'நீங்கள்*
*இருவரும் எதிர்ந்த போரில்,*
*ஒன்றிடும் உடலினாலே உருத்தெரிவு*
*அரியது ஆகி,*
*கொன்றிடு பாணம் ஏவக்*
*குறித்தலேன்; குறியால் செய்த*
*மன்றலர் மாலை சூட்டி*
*ஏவுதும், மறித்தும்' என்றான்.*

*61-2*

*332. இராமன் அஃது உரைப்பக் கேட்டே,*
*இரவி சேய் ஏழது ஆகும்*
*தராதலத்து அதிர ஆர்த்து, தம்*
*முனோன் முன்னர்ச் செல்ல,*
*பராபரம் ஆய மேருப்*
*பருப்பதம் தோற்றிற்று என்ன*
*கராதலம் மடித்து வாலி கனல்-*
*துகள் சிவந்து காட்ட.*

**பருப்பதம்** - *மலை (பர்வதம்);* **கராதலம்** - *கை.* *61-3*

*333. சிவந்த கண்ணுடை வாலியும்,*
*செங்கதிர்ச் சேயும்,*

*வெவந்தபோது, அவர் இருவரும்*
*நோக்கின்ற வேலை,*
*கவந்த தம்பியைக் கையினால்*
*எடுத்து, அவன் உயிரை*
*அவந்த மற்றவன் ஆர்*
*உயிர் அந்தகற்கு அளிப்போன்.*

**வெவந்தபோது** - *பகை வெம்மையால் மோதிய போது;* **அந்தகன்** - *இயமன்.*
*62-1*

*334. வெற்றி வீரனது அடு கணை,*
*அவன் மிடல் உரத்தூடு*
*உற்றது; அப்புறத்து உறாதமுன்,*
*உறு வலிக் கரத்தால்*
*பற்றி, வாலினும் காலினும்*
*பிணித்து, அகப்படுத்தான்;*
*கொற்ற வெங் கொடு*
*மறலியும், சிரதலம் குலைந்தான்.*

**மிடல் உரம்** - *வலிமையான மார்பு;* **உறு வலி** - *மிகுந்த வலிமை.*
*66-1*

*335. ஒன்றாக நின்னோடு உறும் செற்றம் இல்லை;*
*உலகுக்கு நான் செய்தது ஓர் குற்றம் இல்லை;*
*வென்று ஆள்வதே என்னில், வேறு ஒன்றம் இல்லை;*
*வீணே பிடித்து; என்தன்மேல் அம்பு விட்டாய்;*
*தன்தாதை மாதா உடன் கூடி உண்ணத்*
*தண்ணீர் சுமக்கும் தவத்தோனை எய்தான்,*
*நின் தாதை; அன்றேயும், நீயும் பிடித்தாய்;*
*நெறி பட்டவாறு இன்று நேர்பட்டது ஆமே!*



**செற்றம்** - *பகைமை;* **தாதை** - *தந்தை.* *89-1*

*336. மா வலச் சூலியார்*
*வாழ்த்துநர்க்கு உயர் வரம்*
*ஓவல் அற்று உதவல், நின்*
*ஒரு தனிப் பெயர் இயம்பு*
*ஆவலிப்பு உடைமையால் ஆகும்;*
*அப் பொருளை ஆம்*
*தேவ! நிற் கண்ட எற்கு*
*அரிது எனோ, தேரினே?*

**ஆவலிப்பு -** *பெருமிதம்.* *128-1*

***337. இடைக்கலம் அல்லன்; ஏவியது***
***ஓர் பணி***
***கிடைத்த போது, அது***
***செய்யும் இக் கேண்மையன்;***
***படைக்கலக் கைப்பழம் பேர்***
***அருளே! நினது***
***அடைக்கலம் - அடியேன்***
***பெற்ற ஐயனே.***

**இடைக்கலம் -** *இடையே வந்தவன்.* *158-1*

*8. .* ***வள்ளலும், அவண் நின்று ஏகி,***
***மதங்கனது இருக்கை ஆன***
***வெள்ள வான் குடுமிக் குன்றத்து***
***ஒருசிறை மேவி, மெய்ம்மை***
***அள்ளூறு காதல் தம்பி,***
***அன்பினால் அமைக்கப்பட்ட***
***எள்ளல் இல் சாலை எய்தி,***
***இனிதினின் இருந்த காலை,***

**வெள்ள வான் குடுமி -** *நீர்வளம் மிகுந்ததும் உயர்ந்ததுமான சிகரம்;* **ஒரு சிறை -** *ஒருபக்கம்*

*10. .* ***சென்று மாருதிதன்னிடம் சேர்ந்து, அவண்***
***நின்ற தன்மைகள் யாவும் நிகழ்த்தலும்,***
***வென்றி வீரன் வியப்பொடு மேல்வினை***
***ஒன்றுவான் அவன்தன்னை உசாவினான்.***

**வென்றி வீரன் -** *வெற்றி கொள்ளும் வீரன்; இங்கே (அனுமன்);* **மேல் வினை -** *இனிமேல் செய்ய வேண்டிய செயல்கள்;* **அவன் தன்னை -** *அவனை (அங்கதனை).* *25-1*

***340. நீளும் மால் வரையின் நெறிதான் கடந்து,***
***ஊழி காலத்து ஒருமுதல் ஆகிய***
***ஆழிநாதனுக்கு அன்புடைத் தம்பியாம்***
***மீளிதான் வரும் வேகத்துக்க அஞ்சியே.***

**ஆழிநாதன் -** *சக்கரப் படை ஏந்திய தலைவன், திருமால் (இங்கே இராமபிரான்);* **மீளி -** *வலிமையுடையவன்.* *32-1*

*341.* ***மேவினான் கடை சேமித்த மென்மை கண்டு***
***ஒவு இலா மனத்து உன்னினன் -*** **எங்கள்பால் பாவியார்கள்தம் பற்று இதுவோ**
**எனாத் தேவரானும் சினத்தொடு நோக்கியே.**

**சேமித்த மென்மை -** *அடைந்து வைத்த சிறுமை;* **தேவரான் -** *தேவனாகிய இலக்குவன்.* *34-1*

*342.* ***அன்னை போன பின், அங்கதக் காளையை,***
***தன்னை நேர் இல் அச் சமீரணன் காதலன்,***
***'இன்னம் நீ சென்று, இருந் துயில் நீக்கு' என,***
***மன்னன் வைகு இடத்து ஏகினன், மாசு இலான்.***

***அன்னை -*** *தாயாகிய தாரை;* ***மாசு இலான் -*** *குற்றம் இல்லாத அங்கதன்.*
*77-1*

*343.* ***சேய்உயர் கீர்த்தியான்,***
***'கதிரின் செம்மல்பால்***
***போயதும் அவ் வயின்***
***புகுந்த யாவையும்,***
***'ஓய்வுறாது உணர்த்து' என,***
***உணர்த்தினான் அரோ,***
***வாய்மையா - உணர்வுறு***
***வலி கொள் மொய்ம்பினோன்.*** *மிகைப் பாடல்கள்* *719* **சேய் உயர் கீர்த்தியான் -** *நெடிதுயர்ந்த புகழ் கொண்ட இலக்குவன்.*
*137-1*

*11. .* ***அன்று அவண் வானரச் சேனை யாவையும்,***
***வென்றி கொள் தலைவரும், எண்கின் வீரரும்,***
***குன்றுகள் ஒரு வழிக் கூடினாலென,***
***வன் திறல் இராமனை வாழ்த்தி, வந்தவே.***

***எண்கின் வீரர் -*** *கரடி வீரர்கள்.* *1-1*

*345.* ***இன்னது ஆகிய திறத்து அவர்***
***இருக்க, முன் போகச்***
***சொன்ன ஆயிர கோடியில்***
***தூதம் தம் திறத்தால்,***
***பன்ன ஆறு - இரு வெள்ளம் ஆம்***
***கவிப் படை பயில, -***
***பொன்னின் வார் கழல் இடபன் -***
***அக் கிட்கிந்தை புகுந்தான்.***

***அவர் இருக்க*** - *இராம இலக்குவர்கள் காத்திருக்க;* ***ஆறு இரு வெள்ளம்*** - *பன்னிரண்டு வெள்ளம்;* ***கவிப் படை*** - *குரங்குப் படை. 1-2*

*346.* ***'தாமரை பெருந் தவிசு***
***உறை சதுமுகக் கடவுள்***
***ஓம அடங்கியில் உதித்தன,***
***உலப்பு இல கோடி***
***ஆம்' எனப் புகல் வானரத்***
***தானை அங்கு அணித்தா, -***
***மா வயப் புயத்து எறுழ் வலி***
***மயிந்தன் - வந்து அடைந்தான்.***

***தவிசு*** - *இருக்கை (ஆசனம்);* ***சதுமுகக் கடவுள்*** - *நான்கு முகங் கொண்ட பிரமதேவன்;* ***ஓம அங்கி*** - *வேள்வித் தீ;* ***தனை*** - *சேனை. 1-3*

*347.* ***கங்கைசூடிதன் கருணை பெற்றுடைய***
***முன் வாலி***
***பொங்கும் ஆணையின் எண்திசைப்***
***பொருப்பினும் பொலியத்***
***தங்கி வாழ் கவித் தானை***
***அங்கு ஆறு-ஐந்து கோடி***
***வங்க வேலையின் பரந்திட, -***
***வசந்தன் - வந்து அடைந்தான்.***

***கங்கை சூடி*** - *சிவபெருமான்;* ***வங்க வேலை*** - *கப்பல்கள் இயங்கும் கடல். 1-4*

*348.* ***வட்ட விண்ணையும் மண்ணையும்***
***எடுக்குறும் வலிய,***
***நெட்டு அராவினைச் சினத்தொடு***
***பிடுங்குவ நிமிர்வ,***
***அட்ட திக்கையும் மறைப்பன,***
***ஆயிரம் கோடி***
***துட்ட எண்கு வெம்***
***படையொடு தூமிரன் வந்தான்.***

***நெட்டு அரா*** - *நீண்ட பாம்பு (ஆதிசேடன்). 19-1*

*349.* ***ஓங்கு மேருவை வேருடன்***
***பறித்து, ஒரு கையால்***
***வாங்கும் எண் அருங் கோடி***
***மேல் மந்தியின் சேனை***

***பாங்கு சூழ்தர, பரவை அது***
***ஆம் எனப் படியில்***
***ஆங்கு உயர்ந்திடு கபாடனும்***
***அக் கணத்து உற்றான்.***

***பரவை*** - *கடல்;* ***படி*** - *உலகம்.* *19-2*

*350.* ***வீரை ஏழையும் கலக்குறு***
***மிடுக்கினர், விரிந்த***
***பாரை வேரொடும் பறித்திட***
***வேண்டினும் பறிப்பர்,***
***ஈர் - ஐஞ்ஞூற்று எழு கோடி***
***வானரப் படை ஈண்ட,***
***தாரையைத் தந்த ததிமுகன்***
***நொடியினில் சார்ந்தான்.***

***வீரை*** - *கடல்;* ***தாரையைத் தந்த ததிமுகன்*** - *தாரையின் தந்தையாகியததிமுகன்* *19-3*

*மிகைப் பாடல்கள் 721 12.* **.** ***சாரும் வீரர் சதவலி தம்மொடும்***
***கூரும் வீரர்கள் யாவரும் கூடியே,***
***நீரும் நும் பெருஞ் சேனையும் நின்றிடாப்***
***பேரும், பேதையைத் தேடுறும் பெற்றியால்.***

***சதவலி சாரும் வீரர் தம்மொடும்*** - *சதவலி என்ற தலைவனைச் சார்ந்துள்ள வீரர்களோடும்;* ***கூரும்*** - *(வலிமையால்) மிகும்.* *9-1*

*352.* ***குட திசைப் படு பூமி, குபேரன் வாழ்***
***வட திரைப் படு மா நிலம் ஆறும் ஏற்று,***
***இடு திசைப் பரப்பு எங்கணும் ஓர் மதி***
***தொடர உற்றுத் துருவி இங்கு உற்றிரால்.***

***ஓர் மதி தொடர*** - *ஒருமைப்பட்ட அறிவு உடன் தொழிற்பட* *10-1*

*353.* ***குடதிசைக் கண்***
***இடபன் குணதிசைக்***
***கடலின் மிக்க***
***பனசன் சதவலி***
***வடதிசைக்கண் அன்று ஏவினன் -***
***மான மாப்***
***படையின் வெள்ளத்துடன்***
***செலப் பான்மையால்.***

***மான மாப் படை*** - *தன்னிலையில் தாழாத பெரும்படை* *10-2*

*354.* ***என்று கூறி, ஆங்கு ஏவினன்; யாவரும்***
***நின்று வாழ்த்தி விடை கொடு நீங்கினார்***
***அன்று மாருதிஆம் முதல் வீரர்க்குத்***
***துன்று செங்கதிரோன் மகன் சொல்லுவான்:***

***கதிரோன் மகன்*** - *சுக்கிரீவன்* *10-3*

*13.* **.** ***'இந் நெடுங் கிரிகொலோ, எதுகொலோ?' என***
***அந் நெடு மேருவோடு அயிர்க்கலாவது;***
***தொல் நெடு நிலம் எனும் மங்கை சூடிய***
***பொன் நெடு முடி எனப் பொலியும் பொற்பது;*** ***அயிர்க்கலாவது*** -
*ஐயப்படுதற்கு உரியது;* ***அயிர்த்தல்*** - *சந்தேகித்தல்.* *12-1*

*356.* ***வச்சிரமுடைக் குரிசில் வாள்***
***அமரின் மேல் நாள்,***
***மெச்சு அவுணர்***
***யாவரும் விளிந்தனர்களாக,***
***அச்சம் உறு தானவர்கள்***
***கம்மியனும் அஞ்சி,***
***வைச்ச பிலமூடிதன் மறைந்து***
***அயல் இருந்தான்.***

***வச்சிரமுடைக் குரிசில்*** - *இந்திரன்;* ***தானவர் தச்சன்*** - *அசுரத் தச்சனானமயன்.*
*57-1*

*357.* ***மாதுஅவள் உயிர்த்த மகவோர்***
***இருவர்; வாசப்***
***போது உறை நறைக் குழல் ஒருத்தி; -***
***புகழ் மேலோய்! -***
***ஏதம் உறு மைந்தர் தவம்***
***எய்த அயல் போனார்;***
***சீதள முலைச் சிறுமி***
***தாதையொடு சென்றாள்.***

***மாது*** - *சுயம்பிரபையுடன் இருந்த தேவ மாது;* ***போது*** - *விரியும் பக்குவத்திலுள்ள பூ;*
***நறைக் குழல்*** - *மணமுள்ள கூந்தல்.* *61-1*

*358.* ***மத்த நெடு மா களிறு***
***வைத்த குலிசி வன் தாள்***
***சித்தமொடு மான்முகன் வணங்கி,***

***அயல் சென்றான்;***
***வித்தகனும், ஆயிர***
***விலோசனனும், மேன்மேல்,***
***முத்த நகையாளை நனி***
***நோக்கினென், முனிந்தான்.***

***களிறு** - யானை (இங்கே இந்திரனின் ஐராவதம்); **குலிசி** - வச்சிராயுதமுடைய இந்திரன்; **ஆயிர விலோசனன்** - இந்திரன். 61-2*

*359.* ***மேருசவ் வருணி எனும்***
***மென்சொலினள், விஞ்சும்*** *மிகைப் பாடல்கள் 723*
***ஏர் உறு மடந்தை, யுகம்***
***எண்ண அரு தவத்தாள்,***
***சீர் உறு சுயம்பிரபை,***
***ஏமை செறிவு எய்தும்***
***தாருவளர் பொற்றலமிசைக்***
***கடிது சார்ந்தாள்.***

***ஏர்** - அழகு. 71-1*

*360.* ***மேரு வரை மா முலையள்,***
***மென்சொலினள், - விஞ்சு***
***மாருதியினைப் பல உவந்து,***
***மகிழ்வுற்றே, -***
***ஏர் உறு சுயம்பிரபை,***
***ஏமை நெறி எய்த,***
***தாரு வளர் பொன் - தலனிடைக்***
***கடிது சார்ந்தாள்.***

***'மேரு சவ்வருணி'** என்று தொடங்கும் முந்தைய பாடலும் இப்பாடலும் ஒரே செய்தியைச் சொல்லும் மிகைப்பாடல்கள். சொற்களிலே சில மாற்றம். 72-2*

*14. .* ***இருவரும் கதம் எய்தி அங்கையில்***
***செரு மலைந்திடும் பொழுது, திண் திறல்***
***நிருதன் வெஞ்சினம் கதுவ, நின்றது ஓர்***
***பரு மராமரம் பறித்து வீசினான்.***

***இருவரும்** - அங்கதனும் அசுரனும்; **நிருதன்** - அசுரன்; **கதுவ** - சேர்ந்திட 7-1*

*362.* ***வீசு மா மரம் சிந்த, வென்றி சேர்***
***ஆசு இல் அங்கதன் அங்கையால் மலைந்து,***
***ஓசை கொண்டு உறக் குத்தினான் உடல்;***
***கூசுறாத வன் குன்று ஒன்று ஏந்தினான்.***

**ஆசு இல்** - *குற்றம் இல்லாத* *7-2*

*363.* ***குன்று கையிடைக் கொண்டு எழுந்த, முன்***
***நின்ற அங்கதன், நெடு மராமரம்***
***ஒன்று வாங்கி மற்றவன் ஒடிந்திடச்***
***சென்று தாக்கினான், தேவர் வாழ்த்தவே.*** *364.* ***ஆகையால் அங்கு***
***அடைந்தவர் யாவர்க்கும்***
***ஓகையால் அமுது ஊட்டினர்; உண்டு உரம்***
***சோகம் மாறி, பின் தோகையை, அவ் வழி,***
***சேகு சேறு உறத் தேடினர், காண்கிலார்.***

**ஓகை** - *உவகை;* **சேகு** - *திண்மை (இங்கே வலிய நிலம்)* *45-1*

*365.* ***இனைய தண்டக நாட்டினுள் எய்தினார்;***
***அனைய நாட்டின் அருந் தவர் யாவரும்***
***நனி விரும்பி நயந்தனர், நான்மறைப்***
***புனிதர் என்று கொண்டு உள்ளூறும் புந்தியார்.***

**புந்தியார்** - *அறிவுடையார்* *45-2*

*366.* ***'செல்வர்' என்றும், 'வடகலை,***
***தென் தமிழ்ச்***
***சொல், வரம்பினர்'***
***என்றும், 'சுமடரைக்***
***கொல்வர்' என்றும், 'கொடுப்பவர்'***
***என்றும், - அவ்***
***இல் வரம்பினர்க்கு ஈ***
***தேனும் ஈட்டதே.***

**சுமடர்** - *கீழ்மக்கள்* *45-3*

*15. .* ***யாவரும் அவ் வயின்நின்றும், 'மன் இயல்***
***பூ வரும், அருந்ததி பொருவும் கற்புடைத்***
***தேவியை எங்கணும் தேடிக் கண்டிலம்;***
***மேவினம்' என்பது விளம்பினார்அரோ.***

**பூவரும்** - *தாமரை மலரின் வைகும்;* **அருந்ததி பொருவும்** - *அருந்ததியைப் போன்ற*
*3-1*

***368. அன்னதோர் அளவையின் அங்க***
***நாடு ஒரீஇ,***
***தென் மலைநாட்டினைத் தேடிச்***
***சென்று, உடன்***
***இன் இசைத் தலைவரோடு***
***இரண்டு வெள்ளமும்*** *மிகைப் பாடல்கள்* *725*
***மன்று மா மயேந்திரத்***
***தலத்து வந்ததால்.***

**இசை** - *புகழ்* *3-2*

***369. தாழந்த மா தவத்து***
***உலோகசாரங்கன் உறையும் சாரல்***
***வீழ்ந்தனென்; சிறைகள் தீய,***
***வெவ்வுயிர்த்து, உளமும் மெய்யும்***
***போழ்ந்தன துன்பம் ஊன்ற,***
***உயிர்ப்பொறை போற்றகில்லாது,***
***ஆழ்ந்தனென்; ஆழ்ந்த என்னை அருந்***
***தவன் எதிர்ந்து தேற்றி;***

**போழ்ந்தன துன்பம்** - *பிளப்பனவாகிய துன்பம்;* **உயிர்ப்பொறை** - *உயிர்ச்சுமை.*
*56-1*

***370. ' "கற்றிலார் போல உள்ளக்***
***களிப்பினால் அமரர் காப்பூடு***
***உற்றிடக் கருதி, மீப் போய்,***
***ஆதபத்து உனது மேனி முற்று***
***அழல் முருங்க, மண்ணை முயங்கினை;***
***இனி என்? சில் நாள்***
***மற்று நின் உயிரை ஓம்பாது***
***இகழ்வது மாலைத்து அன்றால்.***

**மீ** - *மேலே;* **ஆதபம்** - *வெயில்;* **முருங்க** - *எரிய;* **மாலைத்து அன்று**- *இயல்பு அன்று*
*56-2*

***371. "களித்தவர் கெடுதல் திண்ணம்; சனகியைக்***
***கபடன் வவ்வி, அன்று***
***ஒளித்த வாய் துருவி உற்ற***
***வானரர், இராம நாமம்***

***விளித்திட, சிறை வந்து ஓங்கும்;***
***வெவ்வுயிர்த்து அயரல்" என்று,***
***அளித்தனன்; அதனால் ஆவி***
***ஆற்றினேன் - ஆற்றல் மொய்ம்பீர்!***

***அயரல் -*** *தளராதே;* ***அளித்தனன் -*** *அருளினான்.* *56-3*

*372.* ***'அன்றியும், அலருள் வைகும்***
***அயனைநேர் முனிவர், வாய்மை***
***நன்றிகொள் ஈசற் காண்பான்***
***நணுகலும், வினையேன் உற்றது***
***ஒன்று ஒழிவுறாமல் கேட்டு, அது***
***யோகத்தின் உணர்ச்சி பேணி,***
***"பொன்றுதல் ஒழிமின்; யானே***
***புகல்வது கேண்மின்" என்றான்.***

***அயனை நேர் முனிவன் -*** *நான்முகனை ஒத்த உலோக சாரங்க முனிவன்*
*56-4*

*373.* ***' "தசரத ராமன் தேவர் தவத்தினால்,***
***தாய் சொல் தாங்கி,***
***கச ரத துரகம் இன்றிக்***
***கானிடை இறுத்த காலை,***
***வசை தரும் இலங்கை வேந்தன்***
***வவ்விய திருவை நாடித்***
***திசை திரி கவிகள் உற்றால்,***
***சிறகு பெற்று எழுதி" என்ன,***

***கச, ரத, துரகம் -*** *யானை, தேர், குதிரை;* ***கவிகள் -*** *குரங்குகள் 56-5*

*374.* ***'எனக்கு உணவு இயற்றும் காதல்***
***என் மகன் சுபார்சுபன் பேர்***
***சினக் கொலை அரக்கன்***
***மூதூர் வடதிசைநின்று செல்வான்,***
***நினைக்கு முன் திருவோடு அந்த***
***நீசனை நோக்கி, "எந்தை -***
***மனககு இரை எய்திற்று" என்னா,***
***சிறகினால் தகைந்து கொண்டான்.***

***தகைந்து -*** *மோதி* *58-1*

*375.* ***காமத்தால் நலியப்பட்டு,***
***கனங்குழைதன்னைக் கொண்டு***
***போம்மத்தா! போகல்; எந்தை புன்***
***பசிக்கு அமைந்தாய்'' என்று,***
***தாமத் தார் மௌலி மைந்தன்***
***தடுத்து இடை விலக்க, நீசன்*** *மிகைப் பாடல்கள்* *727*
***நாமத்தால் விரலைக் கவ்வ, நாணி***
***மீண்டு, எனக்குச் சொன்னான்.'***

***மத்தா -*** *உன்மத்தனே;* ***போகல் -*** *போகாதே;* ***நாமத்தால் -*** *அச்சத்தால்*
*58-2*

*376.* ***முன்னர் அந் நிசாகர***
***முனி மொழிந்ததும்,***
***பின்னர் அச் சுபார்சுபன்***
***பெலத்து இராவணன் -***
***தன்னொடும் அமர் பொரச்***
***சமைந்து நின்றதும்,***
***கொன் இயல் சனகியைக்***
***கொண்டு போனதும்,***

***பெலத்து -*** *வலிமையுடைய (பலம்);* ***கொன் இயல் -*** *பெருமைப் பண்பு*
*58-3*

*377.* ***நினைந்து சம்பாதியும், நீதி யாவையும்***
***இனைந்தனன், வானரர் எவரும் கேட்கவே;***
***நினைந்து, கண்ணீர் விழ, நெடிது உயிர்த்தனர்;***
***வினைந்தனர், புரண்டனர்; விதியை நொந்தனர்.***

***இனைந்தனன் -*** *வருந்தினான்* *58-4*

*16. .* ***புள்ளரசு இன்ன வாய்மை சொல்லி***
***விண் போந்த பின்னர்,***
***தெள்ளிதின் உணர்ந்தார் யாரும்; அங்கு***
***அது சாம்பன் சிந்தித்து,***
***உள்ளவர் தன்னில் வல்லார் யார்***
***என உன்னி, யாண்டும்***
***தள்ளரும் புகழோன் வாயுத்***
***தனையனை நோக்கிச் செப்பும்:***

***புள்ளரசு -*** *பறவைகளுக்கு அரசனான சம்பாதி;* ***வாயுத் தனையன் -*** *வாயுவின்*
*மகனாகிய அனுமன்.*

***379. ஆயவன் அங்குப் போகிய***
***பின்னர், அகமீதே***
***நோய் உறு தன்மைத்து***
***ஆகிய வீரர்தமை நோக்கி,***
***தூய மனத்தன் ஆகிய***
***வாலி தரு தொன்மைச்***
***சேயும் அவர்க்கே செப்பினன்,***
***நாடும் செயல் ஓர்வான்.***

**சேய் -** *மகன் (இங்கே அங்கதன்) (இப் படலத்தின் முதற் பாடலாக ஓர் ஏட்டில் 'புள்ளரசு' எனத் தொடங்கும் பாடலும், பிறிதோர் ஏட்டில் 'ஆயவன்' எனத் தொடங்கும் பாடலும் காணப்பட்டது.)*

***380. 'ஆரியன் மின்னின் பேர்***
***எழில்கூறும் அமைவாலும்,***
***''காரியம் உன்னால் முற்றும்''***
***எனச் சொல் கடனாலும்,***
***மாருதி ஒப்பார் வேறு இலை***
***என்னா, மனம் எண்ணி,***
***சீரியன் மல் தோள் ஆண்மை***
***உரைத்தால் செயும், என்றே'***

**மின்னின் -** *மின்னல் போல்வளாகிய சீதை. 8-1*

***381. நாலு மறைக்கும் வேலியும்***
***ஆகி, நடு நிற்கும்***
***சீலம் மிகுந்தீர்! திங்கள்***
***மிலைச்சித் திகழ் வேணி,***
***ஆல மிடற்றான்மேலும் உதித்தீர்!***
***அது போதில்***
***காலின் நிறைக்கோ காலனும்***
***ஆகக் கடிது உற்றீர்.***

**திங்கள் மிலைச்சி -** *சந்திரன் சூடி;* **வேணி -** *சடை;* **ஆலமிடற்றான் -** *நஞ்சினைக் கழுத்திலே கொண்ட சிவபிரான் 18-1*

***382. ஆதியர் இப் புத்தேள்***
***அடிப்பாரித்து அணவு ஆதற்கு***
***ஓது கருத்தில் சால***
***நினைத்திட்டு, ஒழிவு இல்லாப்***
***போது தளத்தில் புக்கிய***

செய்கைத் திறனாலே
சாதல் கெடுத்துத் தான்
அழியாதீர் அதனாலே.

***பாரித்து -*** *விரும்பி;* ***அணவு ஆதற்கு -*** *அணுகுவதற்கு* *18-2*